உ

திருச்சிற்றம்பலம்.

# தொல்காப்பியம்.

## பொருளதிகாரம்.

இஃது

பாரத்துவாசி

நச்சினார்க்கினியார்

இயற்றிய உரையோடும்

பலதேசப்பிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்து

யாழ்ப்பாணம்

சி. வை. தாமோதரம்பிள்ளையால்

பதிப்பிக்கப்பட்டது.

பார்த்திப௵ ஆவணிமீ.



Madras:

PRINTED AT THE SCOTTISH PRESS, BY GRAVES, COOKSON AND CO.

1885.

☞ இதன் அடியிற் குறித்த புத்தகங்கள் சென்னபட்டணத்தில் வித்தியானுபாலனயந்திரசாலையில் ந. க. சதாசிவப்பிள்ளையவர்களிடத்தும், கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் ஊ. புஷ்பரதச்செட்டியாரவர்களிடத்தும், யாழ்ப்பாணத்திற் சுன்னாகம் அ. குமாரசாமிப்பிள்ளையவர்களிடத்தும், வண்ணார்பண்ணை கு. சபாபதிச்செட்டியாரவர்களிடத்தும், தஞ்சாவூரிற் புத்தகவியாபாரம் தா. திருவேங்கடபிள்ளையவர்களிடத்தும், மதுரையில் யாழ்ப்பாணம் ஆ. வைத்தியலிங்கச்செட்டியாரவர்களிடத்தும், திருநெல்வேலியிற் புத்தகவியாபாரம் ந. வ. சொக்கலிங்கபிள்ளையவர்களிடத்தும் வாங்கிக்கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையம் ... | ரூ. ௨ | 0 |
| தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியம்.. | ௬ | 0 |
| தணிகைப்புராணம் ... ... ... ... | ௩ | 0 |
| வீரசோழியம் ... ... ... ... | ௧ | ௮ |
| இறையனார் அகப்பொருள் ... ... ... | ௧ | ௮ |
| கட்டளைக்கலித்துறை ... ... ... | 0 | ௧ |
| நக்ஷத்திரமாலை ... ... ... ... | 0 | ௧ |

சிலகாலத்தின் முன் யான் ஏற்படுத்த முயன்ற "திரவிட பூர்வக் கிரந்த பரிபாலன சபை" கையொப்பக் குறைவினால் நிறைவேறாமற் போய்விட்டது. கையொப்பத்தொகை ரூபா பத்தும் அனுப்பிய கனவான்களுக்கு ஷை புத்தகங்கள் கிரயமின்றி அனுப்பப்படும்.

சி. வை. தா.

சிவமயம்.

# தொல்காப்பியப்

# பதிப்புரை



யானை யானனனைத் தேனிமிர் கடம்பனை
வானமர் குழவியா லோனுறை சடையனை
இமய சிமிலமென் குமரியென் றமையும்
உமையைத் தமியேன் றமமலந் துமிப்பப்
போத சற்குருவாய் மாதொரு பாகன்
வேத வனத்தெழூஉ மேதகு கயிலாய
நாத தேசிகன் பாதவருட் கொடுதொழீஇக்
கற்றறி வில்லாக் கடையனேன் றனக்கு
நற்றமிழ் கொளுத்திய நாவலன் சுன்னை
முத்துக் குமார வித்தக னடியிணை
சித்தத் திருத்திமற் றுத்தம புலவர்
அடிக்கம லங்களென் முடிக்கணி கொடுநின்று
அடியேன் கூறுவது ஒன்றுளது.

உலகிலுள்ள கல்லெல்லாஞ் சாதிரத்தினமாயின், அவை உயர்வுடையனவாமா? இழிந்தனவும் உளவாயினன்றே ஒழிந்தன உயர்வாவது? ஆதலாற் தம் உயர்வு விளங்குதற் பொருட்டாகவாவது என் புன்மொழியையும் பெரியோர் தம் பொன்மொழியினுடனே வைத்தலொழியாரெனத் துணிந்தனன்.

*"வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத் - தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென - வானோரேத்தும் வாய்மொழிப் பல்புக - ழானாப் பெருமை யகத்திய னென்னு - மருந்தவ முனிவனாக்கிய முதனூல்" எனப் புகழ்ப்பெற்ற அகத்தியம், முதற்சங்கத்தார் காலத்திற் தொல்காப்பியத்திற் தலைமைபெற்றும், இடைச்சங்கத்தார் காலத்தில் அதனோடு கூடநின்றுலவியும், கடைச்சங்கத்

* புறப்பொருட் பனனிருபடலம், சிறப்புப்பாயிரம்.

தார் காலத்தில் இறந்துவிட்டது. அதன்பின் இதுவரைக்குந் தமிழு க்குப் பேரிலக்கணமாயுள்ளது தொல்காப்பியமே. இஃது அகத்தி யர்பாற் தமிழ் நன்குணர்ந்த அவர் மாணாக்கர், திரணதூமாக்கினி அதங்கோட்டாசான் துராலிங்கன் செம்பூட்சேய் வையாபிகன் வா ய்ப்பியன் பனம்பாரன் கழாரம்பன் அவினயன் காக்கைபாடினி யன் நற்றத்தன் வாமனன் என்னும் பன்னிருவருள் முதன் மா ணாக்கரென்று தம்மனோரனைவரானுந் துதிக்கப்பட்ட திரணதூமாக் கினியென்னும் இயற்பெயரினையுடைய தொல்காப்பியமுனிவரர் அருளிச்செய்தது.

அகத்தியர் மாணாக்கர் அனைவருள்ளும் இவரே மிகச்சிறந்தவ ரென்பது "தொல்காப் பியன்ற னாணையிற் றமிழறிந் தோர்க்குக் கடன்" எனவும், அகத்தியரிடம் "பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர் நல்லிசை நிறுத்த தொல்காப்பியன்" எனவும் பல்காப் பியத்தும் பன்னிருபடலத்தும் விதந்தோதப்பட்டமையானும், மற் றையோருட் சிறந்து இவரோடொருதலை அகத்தியனார்பொருட்டு முரணிய "அதங்கோட்டாசாற் கரிறபத் தெரித்து" எனப் பனம்பார னாராற் துதிக்கப்பட்டமையானும் உணர்க.

அகத்தியர் உத்தரதிசையினின்று நீங்கித் தெக்ஷணத்தில் வதிந்தபின் தமிழிற்கு இலக்கணஞ் செய்வான் கருதி, இயலிசைநா டகங்களில் ஆங்காங்குத் தமது ஆராய்ச்சியின்கண் எதிர்ந்தவாறே குறிக்கப்பட்ட விதிகளைப் பின்னர் ஒருங்கு திரட்டி அகத்தியமெனப் பெயரிட்டுக் கொடுத்தனர். அது நெறிமுறைமைப்பட இயைக்கப் பட்டிலாது, இயலிசைநாடகத்தமிழ்களும், இயலுள்ளும் எழுத்துச் சொற்பொருள்களும், ஒருங்கு விரவிப் பெரிதும் பரந்து கிடந்த தோர் நூலாயிற்று. அதனை வெவ்வேறு பிரித்து அடைவுபடுத்துத் தொல்காப்பியமுடையார் இயற்றமிழையும், பெருநாரை பெருங்குரு கு முதலிய நூலுடையார் இசைத்தமிழையும், முறுவல் சயந்தங் கு ணநூல் செயிற்றியமென்றிவையுடையார் நாடகத்தமிழையும், வகுத் தும் விரித்தும் மயக்கற முறைகாட்டித் தந்தமநூல் யாத்தனர்.

இவற்றுள்ளும் "முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" "மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி" ஐந்திரநிறைந்தெழுந்த தொல்காப்பியத்தின் மாண்பு, இளங்கதிர்கான்றுதித்த பாலசூரியன் உச்சியடைந்து சொலித்தாற்போல வரவர அதிகரிக்கத், துரோணர்

புக்கவிடத்து முன் குலவி விளங்கிய கிருபாசாரியாஞ்ஞையையொத்து அகத்தியாப்பியாசங் குன்றினமையானுந், தவத்தான் மனந்தூயராய் முக்குணங்களையுங்கடந்து இறைவனருள் பெற்றுடையாராகிய தொல்காப்பியர் ஒருகாலத்துத் தமக்கு அகத்தியனாரால் வந்ததோர் மனத்தாபத்தினிமித்தம் இட்ட சாபத்தின் வலிமையினானும், அகத்தியம் இறந்துபோக நேர்ந்தது. அல்லாக்கால் என்றென்றுஞ் சிரஞ்சீவியாயிருக்கப் பெற்றுள்ள அகத்தியனார் அருளிச்செய்தநூல் சங்கத்தார் காலத்திற்றானே வீழ்ந்துபோகாது. ஆசாரிய வழிபாட்டிற் குறைவில்லாத திரணதூமாக்கினி அவ்வாறு சபித்தறபாலரோ என்பாருமுளர். அதுவன்றே அவர் ஆசாரியரைச் சபியாது அவராற் செய்த நூலைச்சபித்ததென்க. ரிஷரது சாபத்தை ஆசாரியர் தடுக்கவன்மையிலரோவெனில் ரிஷிகள் சாபத்தைக் கடவுளர் தடுக்கும் வன்மையிலரெனின் இது கடாவன்றென மறுக்க.

பராக்கிரம பாண்டியனை வென்று துலுக்கர் முதன் முதல் மதுரையாண்டு எண்ணூற்றைம்பது வருடத்தின்மேலாயிற்று. சங்கத்தார் காலத்திற்கும் பராக்கிரமபாண்டியன் காலத்திற்கும் இடையிலே சோமசுந்தரபாண்டியன் முதலாக நாற்பத்திரண்டு அனுலோம பாண்டியர் அரசுசெய்திருக்கின்றனர். ஆதலாற் கடைச்சங்கம் ஒழிந்தகாலம் இரண்டாயிரம் வருஷத்திற் குறையாது.

முடத்திருமாறன்முதல் உக்கிரப்பெருவழுதியீறாகக் கடைச்சங்கம் இரீஇய நாற்பத்தொன்பதின்மர் பாண்டியர் அரசபுரிந்த காலம் இரண்டாயிரம் வருஷமும், வெண்டேர்ச்செழியன் முதல் முடத்திருமாறனீறாக இடைச்சங்கம் இரீஇய ஐம்பத்தொன்பதின்மர் பாண்டியர் அரசபுரிந்தகாலம் மூவாயிரத்தெழுநூறு வருஷமுந், காய்சினவழுதிமுதற் கடுங்கோன்வழுதியீறாக முதற்சங்கம் இரீஇய எண்பத்தொன்பதின்மர் பாண்டியர் அரசபுரிந்தகாலம் நாலாயிரத்தைஞ்ஞூறு வருஷமுமாம்.

ஆகவே, முதற் சங்கத்திற்கு முன்னரே முதனூல்கண்ட ஆசிரியர் அகத்தியனாரிடந் தமிழ்கற்று, அச்சங்கத்திற் றாமும் உடனிருந்து தமதுநூல் நிலைச்செய்த திரணதூமாக்கினி முனிவரது தொல்காப்பியம் இயற்றியபின் சென்றகாலம் எவ்விதத்தானும் பன்னீராயிரம்வருடத்திற் குறையாது. இக்கால விவரணம் வீரசோழியப் பதிப்புரையில் விரிவாக ஆக்ஷேபசமாதானத்தோடும் எழுதியிருக்கின்றேன். ஆங்குக் கண்டுணர்க.

இவ்வாறு பன்னீராயிர வருஷகாலத்தின் மேற்பட நிலைபெற்றோங்கித் தமிழ்க்கோர் தனிச்சுடர்போலப் பிரகாசித்துவந்த தொல்காப்பியமுந், தற்காலத்து இலக்கணங் கற்போர் அனைவரும் அதன் வழித் தோன்றிய சிற்றிலக்கணங்களையே கற்று அம்மட்டோடு நிறுத்திவிடுதலால், எழுதுவாரும் படிப்பாருமின்றிப், பழம் பிரதிகளெல்லாம் பாணவாய்ப்பட்டுஞ் செல்லுக்கிரையாகியுஞ் சிதைவுபட்டுப்போக, யாவராயினும் ஒருவா வாசிக்க விரும்பியவழியுங் கிடைப்பது அருமையாய் விட்டது. தமிழ் நாடனைத்திலும் உள்ள தொல்காப்பியப் பொருளதிகாரப் பிரதிகள் இப்போது இருபது இருபத்தைந்திற்கு மேற்படா. அவையும் மிக்க ஈனஸ்திதி அடைந்திருப்பதால் இன்னுஞ் சில வருஷத்துள் இறந்து விடுமென்று அஞ்சியே அதனை உலோகோபகாரமாக அச்சிடலானேன்.

இந்நூற்கு உரையெழுதினோர் இளம்பூரணர் கல்லாடர் பேராசிரியர் சேனாவரையர் நச்சினார்க்கினியார் ஐவர். இவருள் வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையர் சொல்லதிகாரம் ஒன்றற்கே மற்றை உரைகளினும் மிகச்சிறந்ததோர் உரையெழுதினர். இளம்பூரணர் பேராசிரியருரைகள் முழுவதும் இப்போது இல்லை. கல்லாடருரை மிகச சுருங்கியது. நச்சினார்க்கினியாருரையே பிற்காலத்தது. பூரணமாகவும் விரிவாகவும் உள்ளதும் பெரும்பாலும் ஓதிவரப் பெற்றதும் அஃதொன்றே.

அது கடைச் சங்கத்தார் காலத்தின்பின் சமணர் தமிழ்ப்பரிபாலனஞ்செய்த காலத்துத் தோன்றியதாதலானும், நச்சினார்க்கினியாரும் பரிமேலழகரும் ஒரேகாலத்தினராதலானும், இற்றைக்கு ஆயிரத்திருநூறு வருஷத்தின் முன்பு எழுதப்பட்டிருத்தல்வேண்டும். அன்றியுந் தமிழிற் சிறந்த இதிகாசங்களாகிய இராமாயணம் பாரதங்களினின்றும் பெருங்காப்பியமாகிய கந்தப்புராணத்தினின்றும் உதாரணங்கள் கொள்ளப்படாமையே இதற்குச் சான்றாகும். இவைகள் எழுதப்பட்டு ஆயிரத்திருநூறு வருஷஞ் சென்றமை யாவராலும் மறுக்கப்படாது.

சென்னபட்டணத்தில் இற்றைக்கு ஐம்பதறுபது வருஷத்தின் முன்னிருந்த வரதப்பமுதலியாரின்பின் எழுத்துஞ் சொல்லுமேயன்றித் தொல்காப்பியப் பொருளதிகாரத்தை உரையுதாரணங்களோடு பாடங்கேட்டவர்கள் மிக அருமை. முற்றாய் இல்லையென்றே சொல்லலாம். வரதப்பமுதலியார் காலத்திலுந் தொல்காப்பியங்

கற்றவர்கள் அருமையென்பது அவர் தந்தையார் வேங்கடாசலமுதலியார் அதனைப் பாடங்கேட்கும் விருப்பமுடையரானபோது பிறையூரிற் றிருவாரூர் வடுகநாததேசிகர் ஒருவரே தொல்காப்பியம் அறிந்தவர் இருக்கிறாரென்று கேள்வியுற்றுத் தமது ஊரைவிட்டு அதிக திரவியச்செலவோடு அவ்விடம்போய் இரண்டுவருஷமிருந்து பாடங்கேட்டு வந்தமையானும், வரதப்பமுதலியார் ஒருவரே பின்பு அதனைத் தந்தைபாற் கேட்டறிந்தவரென்பதனானும், அதுகாரணமாக அவருக்குத் தொல்காப்பியம் வரதப்பமுதலியாரென்று பெயர்வந்தமையானும், பின்பு அவர்காலத்திருந்த வித்துவான்கள் தமக்கு யாதாயினும் இலக்கணசமுசயம் நிகழ்ந்துழி அவரையே வினவி நிவாரணஞ் செய்தமையானும் நிச்சயிக்கலாம்.

பொருளிலக்கண ஆராய்ச்சி குறைவுபட்டது தற்காலத்து மாத்திரமன்று. கடைச்சங்கத்தார் காலத்திலேயே உக்கிரப்பெருவழுதி "நூல்வல்லாரைக் கொணர்கவென்று எல்லாப்பக்கமும் போக்க, எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலேமென்று வந்தார். வர, அரசனும் புடைபடக்கவன்று, என்னை? எழுத்துஞ் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே!! பொருளதிகாரம் பெறேமேயெனின் இவை பெற்றும் பெற்றிலேம், எனச் சொல்லி வருந்தினன்" என்றும், மதுரை ஆலவாயெம்பெருமான் இறைவனார் அகப்பொருட் சூத்திரம் அறுபதும் அருளியவழியும் அவற்றின் பொருள் காண்பாரின்றி வருந்திக் கடவுளையே தன்சங்கத்தாரோடு சென்றிரந்து பொருள்காணவல்லானொருவனைப் பெற்றானென்றுஞ், சங்கப்புலவர் சிகாமணியாகிய நக்கீரர் வாயாற் கூறப்பட்டுக் கிடக்கின்றதே. பின்னை இக்காலத்து அதன் அருமை ஆச்சரியமாமா?

இந்நூலைப் பரிசோதித்து அச்சிட முயன்றபின் தமிழ்நாடுகளில் ஆங்காங்குத் தேடிப் பல பிரதிகள் சம்பாதிப்பது பெரும் பிரயாசையும் நெடுங்கால வேலையுமாயிற்று. இது தமிழ் நாட்டிற்கு ஓர் பேருபகாரமான முயற்சியென்றுகண்டு ஸ்ரீ கைலாசபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மஹாசந்நிதானமுந் தம்மை அடைந்தோர்க்குப் பெருங்கருணைத் திருவுருவமுமாகிய ஸ்ரீ ல ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகளுஞ், சைவசமயாபிமானியுஞ் செந்தமிழ்ப் பரிபாலனருமாகிய ஸ்ரீமத் யாழ்ப்பாணம் ந. க. சதாசிவப்பிள்ளையவர்களும், எனது அதி இஷ்டராகிய திருநெல்வேலித் தாசில்தார் ஸ்ரீ கணிதசிங்கம்

வை. சின்னத்தம்பியாபிள்ளையவர்களும் பல பழைய ஏட்டுப் பிரதிகள் அழைப்பித்துத் தந்தனர். இவர்கள் செய்த நன்றியை எஞ்ஞான்றும் மறக்கற்பாலனல்லேன். இப்பிரதிகளோடு, ஸ்ரீ திருத்தணிகைச் சரவணப்பெருமாளையர் பௌத்திரர் துரைசாமியையர் பிரதியொன்றும், புரசபாக்கம் ஸ்ரீ சாமுவேற்பண்டிதரவர்கள் தமது சொந்தக்கையினாலே எழுதிவைத்திருந்த பிரதியொன்றும், அடியேன் வசமிருந்த தொல்காப்பியம் வரதப்பமுதலியார் பிரதியொன்றும், மதுரைப் பிரதியொன்றுஞ்சேர்த்து, இவற்றுட், திருநெல்வேலிப் பிரதி இரண்டு, மதுரைப் பிரதி இரண்டு, தஞ்சாவூர்ப் பிரதி மூன்று, சென்னபட்டணப் பிரதி மூன்று, யாழ்ப்பாணப்பிரதி இரண்டாகப், பன்னிரண்டுபிரதிகொண்டு பரிசோதித்து என் விருப்பத்தை ஒருவாறு நிறைவேற்றினேன்.

ஆயினும் இஃது இப்போது வழுவறப் பிரசுரஞ்செய்யப்பட்டதென்று கொள்ளற்க. எனக்குச் சந்தேகம் பிறந்துழியெல்லாந், தற்காலத்துப் பெயர்போந்த வித்துவான்களாயுள்ளோர் பலரையும் வினவியும் அயனூற் துணிபுகள் மேற்கோள்களோடு சீர்தூக்கியும் இன்னும் ஐயமறுத்துக்கொள்ளாத இடங்கள் அனேகம் உள. அவைகளைக் கூடிய மாத்திரம் பிரதிகளிலிருந்தவாறு அச்சிடுவித்தனன். ஆயினும் பொருட் தொகுதி, போருட் தொகுதி, பேரர் உட்தொகுதி பேர் அருட் தொகுதி, பேரருட் தேர்குதி, போருட் தேர்குதி, பொருட் தேர்குதி, என்றற் தொடக்கத்தனவாய் இன்னும் பலபாடபேதமாகப் படித்தற்கிடம் பெற்றுப் பொருடடொகுதி யென்றெழுதிக்கிடந்ததொன்றை யான் அவற்றுள் ஒன்றாக என் சிற்றறிவு சென்றவழிக் குறியிட்டுப் பதிப்பித்தமைபற்றி அதுவே பாடமென்று நிச்சயிக்கற்க. சமுசயநிகழ்வுழியெல்லாஞ் சந்தியை மீளவும் இலக்கணப்பிரகாரம் புணர்த்துத் தீர்க்கபேதத்தையும் புள்ளியையும் நீக்கிப் பாடபேதப்படுத்திப் பார்க்குமாறு வேண்டிக்கொள்கின்றேன்.

சம்பளத்திற்காக ஏடெழுதுவோரது சாதாரண கல்வித்திறமையையும், எழுத எழுத வழுக்கள் அதிகப்படும் வீதத்தையும், பழைய காலத்து ஏட்டுப்பிரதிகள் அடைந்திருக்கும் ஈனஸ்திதியையும், பாடங்கேட்டோர் இல்லாத தன்மையையும் நோக்கில், அனேகவித்துவான்களாய் ஒரு சபைசேர்ந்து ஒருவரோடொருவர் தீர்க்க ஆலோசனை செய்து பதிப்பினும் பலவழுக்கள் புகுதற்கிடனுடைய இவ்வரிய நூலை, யான் ஒருவனாய்ப் பரிசோதித்துப் பிரசுரஞ்செய்தமையால் இடமிடந்தோறும் பலபல வழுக்கள் செறிந்திருத்தல் இன்றியமையாமையாம்.

ஐயந்திரிபறத் தீங்கற்றறியாததோர் நூலை இவர் இங்ஙனம் வழுவுற அச்சிடவேண்டியதென்னையென யாரும் வினவுவாராயின், வழுச்செறிந்ததாயினும் அழியோடழிந்து போகின்றநூலை அடியேன் பாதுகாத்தது பேருபகாரமன்றோ என்க. மேலும், இதனை உரையுதாரணங்களோடு பாடங்கேட்டவர் யாராவது உளராயினன்றோ அவரையின்றி யான் செய்தது தவறுவது? யார்செய்யினும் இதுவே முடிவாயின் அடியேன் மேற் குறை கூறுதல் தர்மமன்று.

அன்றியுஞ் சும்மாகிடந்த அம்மையாருக்கு அரைப்பணத் துத்தாலி போதாதா? காண்டற்கும் அரிய நூலைக் கைக்கெட்டப்பண்ணினது கேடாமா? பிரதி கிடைப்பதே மிக அருமையாயுங், கிடைப்பினுங் குறைப்பிரதிகளாகவும், அவை தாமும் ஒரோவொரு வரிக்குப் பலவழுவாக ஆயிரக்கணக்கான வழு உடையனவாகவும் இருக்க, அடியேன் அவ்வழுத்தொகையைக் குறைத்து நூற்றுக் கணக்காக்கி விட்டதா என்மேற் குறையாயிற்று?

அங்ஙனமாயின், இவரினும் வல்லோராய் இன்னும் அனேக வழுக்கள் குறையப் பிரசுரஞ்செய்யத்தக்க வித்துவான்கள் இலரோ வெனின், உளராயின் என் செய்திலரென விடுக்க. பல பெரும்வித்துவான்கள் இந்நூலை அச்சிட விரும்பியதும், முயன்றதும், இரண்டொரு பிரதிகள் தேடிப் பார்வையிட்டதுந், தமக்கு நிகழ்ந்த சந்தேகங்களான் இதனை அச்சிடிற் தம் பெயர்க்குக் குறைவு நேரிடுமென்று தம்முயற்சியைக் கைவிட்டதும் அடியேன் பூரணமாக அறிவேன். ஆதலாற் பண்டிதர் கவிராஜபண்டிதர் மஹாவித்துவான் புலவரொன்றின்னன பெரும் பட்டச்சுமையைத் தலைமேலேற்றிக்கொள்ளாது இன்னும் பலகாலந் தமிழ் படித்தற்குரிமை பூண்டு நிற்கும் என்போலியரோ இதிற்கையிடுவது பேரவசியமாயிற்று.

பஞ்சகாவியம் பஞ்சலக்கியம் அகநானூறு புறநானூறு நற்றிணை கலித்தொகை நெடுந்தொகை குறுந்தொகை திணைமரபு செய்யுட்டொகை கல்லாடம் பதிற்றுப்பத்து ஐங்குறுநூறு பரிபாடல் தகரேயாத்திரை பெருந்தேவனார்பாரதம் பதினெண் கீழ்க்கணக்கு வெண்பாமாலையென்று இன்னோரன்ன இலக்கியங்களும் புறப்பொருட் பன்னிருபடலம் வையாபிகம் வாய்ப்பியம் அவினயம் காக்கைபாடினியம் நற்றத்தம் வாமனம் பல்காயம் பல்காப்பியமென்று இன்னோரன்ன இலக்கணங்களும் முற்றக்கற்று வல்லோரோ இந்நூலைப் பரிசோதித்தற்கு அருகராவர். அப்படிச் சிறந்துளோர் தற்காலத்தில

றென்பது யான் கூறவேண்டியதில்லை. "விடியலவெங்கதிரகாயும வயமலகலறை" என்னும் வாக்கியத்தையும் ஓர் பரிபாடற் செய்யுளையுஞ் சரியாய்ப் பிரித்துணர்தற்கு எத்தனை புலவரிடங்கொண்டு திரிந்தேன்? எத்தனை வித்துவான்களுக்குக் கடிதமெழுதிக் கைசலித்தேன்? எனக்கு வந்த மறுமொழிகளை வெளியிட்டுச் சொன்னால் மிகவும் வெட்கக்கேடென்றறிக. அவை ஸ்ரீ ல ஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான் மகத்துவத்தை நன்கு விளக்கின.

மேலுஞ், சரகத்தைச் சாகமென்றும், அளபை அன்பென்றும், இதரவிதரத்தை இதாவிதாவென்றும், திகந்தாளத்தைத் திகந்தாரளமென்றும், மென்மையை மேன்மையென்றும், தபுதாரநிலையைத் தபுதராநிலையென்றும், மூதலவன் என்பதை முதல்வனென்றும் இன்னும் பலவாறாக மயங்கினோர் பெயர் பெற்ற வித்துவான்களேயாதலின் ஏட்டுப்பிரதியோடு ஊடாடிய சிரேஷ்ட புலவர்கள் அடியேன் தவறுகளைப் பாராட்டாது பொறுத்தருளுவதுமன்றி இன்னும் இம்முயற்சியை வியந்து கொள்வார்களென்பதிற் சந்தேகமில்லை. ஏடு பிடித்து வாசிக்க அறியாத அச்சுப்பிரதி வித்துவான்களுந், தமதகத்து மெய்ப்பெருமையொன்றிலராய்ப் பிறரைக் குறைதூற்றலாற் தாம் நிறைவுடையார் போலத் தோற்றலாமென மயங்கும் போலிவித்துவான்களுமே இவ்வித வழுக்களைக்குறித்து என்னை இகழ்வர். எனக்கு அது குறைவன்று. இவர் கூற்றைப் பெரியோருங் கவனியார்.

குறைகூற இஷ்டமுள்ளவர்கள் இன்னும் அச்சிலே தோற்றாதனவாய், அடியேன் காட்டுங் கிரந்தங்களில் இரண்டொரு ஏட்டையாயினும் எழுத்துப்பிழையற மாத்திரம் வாசித்துக் காட்டுவாராயின் அவர்கள் பாதாம்புயத்தை உச்சிமேற் சூடி அவர்கட்குத் தொண்டுபூண்டொழுகுவேனென்று அறிவாராக. ஏடுகையிற் பிடித்தவுடன் அதன் எழுத்துத் தேகவியோகமான தந்தை கையெழுத்துப்போற் தோன்றிற்றென்று கண்ணீர் பெருக அழுதகதையுமுண்டன்றோ?

காலாந்தரத்தில் நூல்களுஞ் செய்யுட்களும் அடைந்திருக்கும் மாறுபாடு இவ்வளவிற்றெனற்பாலதன்று. கம்பர் சேரதேசத்திலிருந்து வரும் வழியிற், பாலைக்காட்டிலே, சிலர் செய்த இராமாயணப் பிரசங்கத்தைக் கேட்டபோது, தமது பாட்டுக்களும் இடைக்கிடை வருவனவாகச் சொல்லிய கதை கேள்வியுற்றிருக்கலாமே. "அடிசிற்கினியாளே யாக்கஞ்செய் வாளே - படிசொற் கடவாத பாவா - யடிவருடிப் - பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே போதியோ - வெ

ன் றூங்கு மென்கண் ணினி" எனத் திருவள்ளுவநாயனார் சொல்லி யதாக இக்காலத்து வழங்கும் பாட்டிக்கும், நமது உரையாசிரியர் தமது காலத்து வழங்கியபடி எழுதியிருக்கும் "அடிசிற் கினியாளே யன்புடை யாளேப் - படுசொற் பழிநாணு வாளே - யடிவருடிப் - பின் றூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தா - லென் றூங்கு மெ ன்க ணெனக்கு" என்பதற்கும் எவ்வளவு பேதம்!

அடித்தொகை சீர்த்தொகைகள் மாறுபட்டுப் பாவே வேறுப ட்டுப்போயினவும் அனேகம் உள. இப்போது அறுசீரடியாசிரிய விரு த்தமாக வழங்குகின்ற "முன்னைத்தஞ் சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப் பெயர - வன்னைக் குரைப்ப னறிவாய் கடலேயென் றலறிப் பெயருந் - தன்மை மடவார் தணந்துகுத்த வெண்முத்தந் தகைசால் கானற் - புன்னை யரும்பென்னப் போவாரைப் பேதுறுக்கும் புகாரே யெம்மூர்" என்னும் புகார்ச்சிறப்பை ஆசிரியர் மூன்றும் அடி நான்கு சீரேயுடையதாக வேறு பாவின்பாற்படுத்தி உதாரணங் காட்டினர். இவ்வாறு மாறுபட்ட செய்யுட்கள் அனேகம் உரையகத்து ஆங்கா ங்குக் காணப்படும். அவைகள் ஆசிரியர்காலத்திற்கு முன்னர்த்தா னே எத்துணைத் திரிபடைந்தனவோ? இனி இவற்றின் பூர்வசொரு பம் நிச்சயித்தல் யார்க்கும் அரிது. அரிது.

இந்நூலின் இயலடைவுகளேயன்றி அதிகாரத்தொகைதானும் உரையாசிரியர் காலத்திற்கு முன்னரே பிறழ்ந்து போயின. அவை யிற்றை ஆசிரியர் பலவிடத்துங் குறித்த கண்டனைகளானுணர்க.

உரையாசிரியர் காட்டிய உதாரணச் செய்யுட்களிற் றற்கால த்திலுள்ள வில்லங்கத்தைக் குறித்துஞ் சில மொழி சொல்வது யான் அவற்றால் பட்ட பிரயாசத்தை ஒருவாறு விளக்கும்.

*"விண்டுதாங்குதைம் மேலையோன் மால்வரை சென்றான்" எனவும் † "வாம்பெருந்திரை வளாகமென் மொழியசெவ் வழியாழ்"

* விண்டு தாங்குறு மூலமுயி ரமுதமோர் விதலிற்
கொண்டு தாங்குறு குரூஉப்படை கோடியுற் றிடப்
பண்டு தாங்கலர் தரியா ரிரவலர்ப் பாய்ந்த
சென்று தாங்குதைம் மேலையோன் மால்வரைச் சென்றான.
கந்தப்புராணம், கணங்கள்செல்படலம், அ.

† வாம்பெ ருந்திரை வளாகமுன் குடிபயில் வரைப்பிற்
றாம்ப ரப்பிய கயல்களின் விழிக்கயற் றவிடக்
காம்பி னேர்வரு தோளியர் கழிக்கயல் விலைசெய்
தேம்பொ திர்ந்தகின் மதுமலமென் மொழியசெவ் வழியாழ்.
பெரியபுராணம், திருக்குறிப்புத்தொண்டநாயனார் புராணம், கஅ.

எனவும் மோனையுந் தவறாது அடியளவும் விகாரப்படாது இரண்டு உதாரணங் குறிக்கப்படுமாயின், இவற்றை ஒன்றொன்று ஒரோவொரு செய்யுளின் முதலும் ஈறுமென்பது அச்செய்யுட்களைக் கந்தப்புராணத்திலும் பெரியபுராணத்திலுங் கண்டறிந்தோர்க்கன்றி மற்றையோர்க்குப்புலப்படுவதெங்ஙன்? "மண்டமாலோ" "தண்ணறுங் கோங்கமலை" என்பனி "மண்ட மா * * * லோ" "தண்ணறுங் கோங்க * * * மலை" என முன்னையதில் ஓரெழுத்தும் பின்னையதில் இரண்டெழுத்துமே மாத்திரம் அவ்வச்செய்யுளின் ஈற்றெழுத்து எனக் கண்டுபிடிப்பது எந்த ஞானக் காட்சி கொண்டோ ! இவற்றுள் அனேகம் இக்காலத்து இல்லாத நூற்களில் உள்ளனவாயின் யாதுதான் செய்தற்பாலது ? உள்ள நூற்கும் எல்லாவற்றுக்கும் பெயர்குறித்தாரா!

இது மட்டோ ? ஓரோரிடத்தில் ஒன்றினின்று ஒன்றைப் பிரிக்கும் அடைசொல்லாவது குறியாவது இன்றி, முதலும் ஈறும் முதலும் ஈறுமாகப் பல செய்யுட்குறிப்பு ஒருதொடராய் வருவனவும் உள. இவற்றின் அடிமுடி தேடுவது ஸ்ரீஅருணசலேஸ்வரனுடைய அடிமுடி தேடிய பிரம விஷ்ணுக்களின் பிரயாசைச்கு எட்டுணையேனுங் குறையுமா ?

இதனால் உரையாசிரியர்மேற் குற்றஞ் சொல்கின்றேனென்றுகொள்ளற்க. அவர்காலத்து அச்செய்யுட்களும் அவற்றையுடைய கிரந்தங்களும் வழக்கத்துள்ளனவாதலால் அவர் அப்படிச் செய்யலாயிற்று. நமது தேசத்துக் கிரந்தமண்டபங்கள் துலுக்கரால் அக்கினி பகவானுக்கு அளிக்கப்படுமென்றும், தப்பிக்கிடந்தனவும் எழுதுவாரும் படிப்பாருமின்றி ஒன்றொன்றாய் இத்தனை இலேசில் இறந்துவிடுமென்றும் அவர் கனவிலும் நினைத்தவரல்லர். அவை இறந்துபோன இக்காலத்திற்கே இஃதோர் பெருஞ்சங்கடமாயினது. அல்லதூஉம், அவர் குறியீடுகொடுத்துப் பிரித்தும் இருக்கலாமே.

இனிச் செய்யுண்முழுவதுங் காட்டப்பட்டவற்றுள்ளும் இஃது இன்னபா இன்னபாவினமென்று நிச்சயிப்பதும் பலவிடத்து மிக அருமையாயினது. கலியினமான சிலசெய்யுட்களை அடிபிரிப்பதிற் சந்தேகமுற்றுப் பல தக்க பண்டிதரை எழுதிவிசாரித்தபோது அவர்களும் மயங்கி இணைக்குறளாசிரியப்பாவாகப் பிரித்தனுப்பினர். யாதுசெய்யுளைத்தான் இணைக்குறளாசிரியமாகப் பிரிக்கக்கூடாது ?

முதலில் ஒரோசெய்யுளென அடியேன் கொண்டதோர் உதாரணம் பின்னர் அயனூல் உதாரணச்செய்யுட்களால் வெவ்வேறு

நூலிலிருந்து எடுத்துக்காட்டப்பட்ட இரண்டு செய்யுளைக்கண்டு அவ்வாறு மாற்றலாயிற்று. பொருட்சுவையே பெரிதெனக் கொண்டு மோனை எதுகை ஆதிய சிறப்புக்களைப் பாராட்டாத சங்கச் செய்யுட்களைப் பழம் ஏட்டுப்பிரதிகளில் வாசித்து அடிவகுத்தறிந்த பெரியோர்க்கு இதன்பிரயாசை தெரியாதிராது.

இனி, *"இனி 'என்சொற் கொள்ளன் மாதோ' என்பதற்கு என் வார்த்தையைக்கேட்டல் நினக்கு விருப்பமோ? விருப்பமாகில் யான் கூறுகின்றதனைக் கொள்க." என்றாற்போலவும் †"அறுசுவைக்கு முதலாகிய வேம்புங் கடுவும் உப்பும் புளியுங் கரும்பும்போல்வன" என்றாற் போலவுஞ் சொன்முடிவு பொருண்முடிவு பூரணப்படாமல் நின்றுழியும், ஆக்ஷேபவிடைகள் பிறர்கோட்கூறல் தன்மதங்கோடலென்றிவற்றில் ஆசிரியர்மதமிது பிறர்மதமிதுவெனக் காட்டற்கவசியமான அடைகள் சிதைவுற்றுக் கிடந்துழியும், இன்னோரன்ன பிறழ்ச்சி பிற அனுமானிக்கப் பெற்றுழியும், பிரதிகள் அனைத்தும் ஒத்திருப்பனவற்றை எட்டுணையும் யான் மாற்றிலேன். எவ்வகைப் பொருட்டிருத்தமும் யானுகச்செய்ததின்று. துடங்கல் கலிழ்தலாதியவற்றின் ரூபத்தை மாத்திரம் இக்காலத்ததாகத் தொடங்கல் கலுழ்தலென மாற்றியிருக்கின்றேன்.

இலக்கிய இலக்கணங்களில் வல்ல பெரியோர் இப்பதிப்பிலுள்ள குற்றங்களை அடியேனுக்குத் தெரிவிக்கும்படி பலமுறையும் பிரார்த்திக்கின்றேன். அன்னோர் அறிவிக்குந் திருத்தங்களைத் திரட்டி, இன்ன இன்ன வழு இன்ன இன்ன வித்துவான்களால் உணர்த்தப்பட்டனவென்று குறிப்பிட்டுத், தொல்காப்பியப் பதிப்புத்திருத்தமென்றொன்று உடனே அச்சிட்டு வெளியிடக் காத்திருக்கின்றேன். ஐம்பது புதுத் திருத்தங்களுக்கு ஒருபிரதி என் நன்றியறிவிற்கோர் அடையாளமாக அனுப்புவேன். இந்நூல் பிழையற வழங்கச்செய்தல் ஓர் பெரும் லோகோபகாரமென்று உணர்வாராக.

இதனைப் பதிப்பித்ததில் அச்சிற்குங் காகிதத்திற்கும் வந்த செலவினும் பரிசோதனைச்செலவு இருமடங்கிற்கு மேலே சென்றதாகலானும், இப்பெயர்ப்பட்ட அரியநூல்களைப்படிக்க விரும்பி வாங்குவோர் சிலரேயாதலானும், இதுவித முயற்சியிற் கையிடுவது கைம்முதலுக்கே நஷ்டத்தை விளைவிக்கின்றது. ஆதலாற் தமிழ் விருத்தியில் அபிமானமுள்ள பொருட்செல்வர்களாற் சிறிது சகாயம் பெற்

* ௪00-ம் பக்கம், கச-ம் வரி.
† ௭௪௪-ம் „ ௯-ம் „

ருலன்றி இன்னும் இதுபோல அழிகின்ற தன்மையை அடைந்திருக்கும் அரிய கிரந்தங்களைப் பரிசோதித்துப் பதிப்பித்தலில் ஊக்கஞ் செல்லாது. இதுவரையும் அச்சுமணமும் பெறாத பூர்வ கிரந்தங்களையே தேடிப் பதிப்பிக்கும் நோக்கமுடையேற்குக் கல்வியருமை தெரிந்த திரவியசீலர்கள் கைகொடுப்பார்களென்று நம்புகின்றேன்.

ஓரொருவர் ஓரொரு நூலைத் தமது செலவிற் தமக்கு இஷ்டமான வித்துவான்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிடுவிப்பினுந் தமிழ்த் தேசத்திற்கு எவ்வளவு பேருபகாரமாகும்? எத்தனை அரிய நூல்கள் இறவாதொழியும்? அடியேன் வேண்டுகோளின்படி, முன்பு திருவனந்தபுர அரசற்கு மந்திரியாயிருந்த கனம்பொருந்திய ஸ்ரீமத் அ. சேஷைய சாஸ்திரியாரவர்கள் கலித்தொகையையுங், கூடலூர்ப் பிரபுக்களில் ஒருவருந் தர்மசீலருமாகிய ஸ்ரீமத் மஞ்சக்குப்பம் ராஜரத்தின முதலியாரவர்கள் தொல்காப்பியம் சொல்லதிகாரத்தையும், நச்சினார்க்கினியருரையோடு தமது செலவாகப் பரிசோதித்துப் பதிப்பிக்கும்படி உத்தரவுசெய்திருக்கின்றார்கள். இவர்கள் முன்மாதிரியைப் பிறரும் அனுஷ்டிப்பாராக. இதில் முந்திநிற்க வேண்டியவர்கள் மடாதிபதிகள். இவர்கள் கருத்து இதிற்செல்லுமாறு சரஸ்வதி கிருபை புரிவாளாக.

திரவியலாபத்தை எவ்வாற்றானுங் கருதி முயன்றிலேன். கைநஷ்டம் வராதிருப்பதொன்றே எனக்குப் போதும். இதுவரையிற் பதிப்பித்த நூல்களால் எனக்குண்டான நஷ்டங் கொஞ்சமல்ல. இவ்வித முயற்சியிற் கையிடுவோர் நஷ்டமுறாதிருத்தற்பொருட்டுச் சர்வகலாசாலைப் பரீக்ஷையிற் தேறி, ஆங்காங்குப் பெரும் உத்தியோகம் வகித்திருப்போர் தத்தஞ் சொயபாஷையில் அச்சிடப்படும் பூர்வகிரந்தங்களில் ஒருபிரதி வாங்குதல் அவர்கடமையென்றெண்ணுகின்றேன்.

இந்நூலைப் பதிப்பித்தற்கு வேண்டிய காகிதத்திற்காகத் திரவிய சகாயஞ் செய்த கண்ணிய தர்மசீலர் இருவர் உளர். அவர்களுக்கு மிக்கநன்றி கூறுகின்றேன்.

கும்பகோணம்,
பார்த்திப ஞு ஐப்பசி மீ. }

சி. வை. தா.

(1885)

—o o❀o o—

# சூத்திர அகராதி.

# பிழைதிருத்தம்.

பிழைதிருத்தங்கள் தம்மிலே தாமே புலப்படுவனவற்றை ஈண்டுக் காட்டிலம். காட்டியவற்றை நூலை வாசித்தற்கு முன்னே ஆங்காங்குக் குறித்துக்கொள்ளின் மிக உபயோகமாம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| ௬ | ௧௦ | ரத்திரத் | ரத் | ௨௦௩ | ௨௫ | மூண் | முண் |
| ௧௭ | ௫ | ணணிந்த | ணணிந்த | ௨௦௫ | ௮ | பெடுப் | பிருப் |
| ௨௨ | ௩ | மருங் | மருங் | ௨௦௬ | ௨௫ | யேம் | மேம் |
| ௬௮ | ௩௪ | தேவஞெ | தெவஞெ | ௨௦௮ | ௩௩ | ணிஇய | ணிய |
| ௯௮ | ௩௫ | அகனே | அகனோங் | ,, | ,, | ரத்த | ரத்தை |
| ௯௯ | ௧௬ | தித்து | து | ,, | ௩௪ | சேவலன | செல்வர்ந |
| ௧௨௦ | ௪ | நிரை | நிலை | ,, | ,, | யற்கே | ய்தே |
| ௧௩௦ | ௯ | வந்து ஓர் | வந்தோர் | ௨௧௦ | ௧௩ | னென | னோன |
| ,, | ௧௨ | ததி | கதிர் | ௨௧௨ | ௧ | பாரதி | பாராத |
| ௧௩௧ | ௨௩ | கப் | கவப் | ,, | ௨௫ | ர்நோக்கா- | ராணுக்-கா |
| ௧௩௩ | ௩௫ | யினெ | யெ | ௨௩௦ | ௧௯ | வகை | கை |
| ௧௩௪ | ௧௮ | திர்க் | கதிர்க் | ,, | ௨௩ | ,, | ,, |
| ௧௩௫ | ௯ | வும்அன்றி | வாம். இனி | ௨௩௬ | ௬ | பொறை | புறை |
| ,, | ௧௦ | வும் | யாவும் | ௨௩௭ | ௧௩ | ,, | ,, |
| ௧௫௪ | ,, | தர்க் | த | ,, | ௩௧ | ள்யாப் | ளயர்ப் |
| ௧௬௮ | ௨௭ | தோர் | தோர்த் | ௨௩௯ | ௨ | கழ்ந்து | கழாது |
| ௧௭௩ | ௨௩ | பாரத | பார்த்த | ௨௪௦ | ௧ | ராண் | ரரண் |
| ௧௭௫ | ௧௭ | வவ்வுத | வருகுவ | ௨௪௧ | ௨௪ | டித் தென் | டி தன் |
| ௧௮௯ | ௩௧ | டாது | டாதும் | ௨௪௩ | ௯ | வந்துன் | வன்னுன் |
| ௧௯௦ | ௨௧ | யாமங்தொ | யங் தோ | ,, | ௧௪ | வெண்ணை | வெண்ணெ |
| ,, | ௨௫ | வெறு | வேறு | ௨௪௬ | ௩௨ | டெந் | டேந் |
| ௧௯௩ | ௩௧ | முங்தொ | முடைந்து | ௨௪௮ | ௧௮ | பாற் கை | பா றகை |
| ௧௯௪ | ௨ | அதனே | அனே | ,, | ௨௫ | கானலி | காலி |
| ,, | ௯ | ஞெயர்க் | ஞெய | ௨௪௯ | ௧ | யோன் | யன் |
| ,, | ,, | சல்ல | ரகலந் | ௨௫௦ | ௬ | ளவர் | ள்வரப் |
| ௧௯௫ | ௧௭ | வாகை | வகை | ௨௫௧ | ௨ | களவின | கிளவிந |
| ௧௯௬ | ௯ | யெம | யே யெம் | ,, | ௨௧ | டடி | ட்டிக் |
| ௧௯௮ | ௨௯ | பராவற் | பார்வற் | ௨௫௨ | ௭ | மென்க. | என்றதன்பின் உம்மையான் வரையாய்வலெனக் கூறும் இடனும் உளதென்றவாறு எனச்சேர்க்க. |
| ,, | ,, | சாச் | சரச் | | | | |
| ௧௯௯ | ௩௫ | யவா | யவர் | | | | |
| ௨௦௨ | ௨௪ | மணனெ | மன்னெ | | | | |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| ௨௫௫ | ௫ | லாகம் | லாகவம் | ௩௨௯ | ௧௦ | பட | பீட- |
| ,, | ௧௧ | பெரிய | பெயரிய | ௩௩௫ | ௩௧ | விடா | விடாஅ |
| ,, | ,, | காலா | கவா | ௩௪௧ | ௨௫ | -திறப்பட | திறப்பட- |
| ௨௬௨ | ௧௬ | நா ண | நா, ண | ௩௪௨ | ௮ | போலா | போலர் |
| ,, | ௨௯ | சேவீஇ-யர் | செவீஇயர்- | ,, | ௯ | துறி | துறீஇ |
| ,, | ,, | டயர் | டயர | ௩௪௪ | ௨௯ | மேன் | என |
| ௨௬௪ | ௩ | உரைக் | உரைக்கு | ௩௪௫ | ௧௪ | சொற் | சோற் |
| ,, | ௪ | வாழி | வாவாழி | ,, | ௨௩ | ஞொ | ஞோ |
| ,, | ௨௦ | தெறலர் | தேறலர் | ௩௫௨ | ௧௯ | மகளும் | கேளும் |
| ௨௬௯ | ௨௧ | ர்த்த லா | ரத் தலர் | ௩௫௬ | ௮ | நெய் | நோய் |
| ௨௭௧ | ௧ | ரீஇப் | ரீஇய | ,, | ௨௨ | னர்த் | னர் அத் |
| ,, | ௨௪ | கைதை | நுவ்வை | ௩௫௭ | ௨௬ | இஃது | இது துெ |
| ௨௭௨ | ௧௭ | தேக | தேன | ,, | ௨௭ | டெள்ளி | டுள்ளி |
| ௨௮௪ | ௮ | யின், | யின்; | ௩௫௮ | ௩௦ | அவன் | அவள் |
| ௨௮௮ | ௨௬ | முள்ளே | முள்ளெ | ௩௫௯ | ௯ | மறைந் | மறந் |
| ௨௯௧ | ௧௧ | தோழி | ரோழி | ,, | ௨௩ | வலவில் | வல்விெ |
| ௨௯௨ | ௨௩ | மகனே | மகளே | ௩௬௦ | ௧௭ | மெய்யி | மையி |
| ௩௦௨ | ௬ | த் தகை | த்த கை | ,, | ௨௫ | வென்றி | வொள், |
| ௩௦௬ | ௧௫ | மயங்கி | மயங்கிச | ௩௬௧ | ௭ | யணிந் | யணந் |
| ௩௧௨ | ௨௫ | தர்யா | தியா | ௩௬௩ | ௮ | வைஇ | வைஇட |
| ௩௧௩ | ௧௩ | வளமுங் | வனமுங் | ௩௬௭ | ௩௨ | சிறப் | சிறைப் |
| ௩௧௪ | ௮ | இறப்பும் | இறப்ப | ௩௭௧ | ௩௦ | இய | முனைஇ |
| ,, | ௧௯ | மல்லம் | மல்லலம் | ௩௭௨ | ௩௧ | புல்லிசை | புல்லிெ |
| ௩௧௮ | ௨௦ | யிடை | யடை | ௩௭௩ | ௨ | வாய்தன் | வாய்த், |
| ,, | ௨௧ | மறி | பறி | ௩௭௪ | ௮ | அவற் | தவற் |
| ௩௧௯ | ௭ | இனி, "யா | "இனியா | ,, | ௨௫ | லாவென் | ல நின் |
| ௩௨௦ | ௧௯ | மாங் | மரங் | ,, | ௨௭ | தக்காய் | தந்தாய் |
| ௩௨௫ | ௨௧ | னிவளை | னிவளெ | ,, | ,, | எய்தி | ஏந்தி |
| ௩௨௬ | ௭ | தென்னி | னெனி | ,, | ௨௮ | வதறி | வல்; ஓ |
| ,, | ௨௪ | குய | குய் | ,, | ௩௦ | வளை | வுளை |
| ௩௨௭ | ௭ | ஆற்று | அரற்று | ,, | ௩௧ | விய | வியன் |
| ,, | ௧௪ | வாற்ற | வரற்ற | ,, | ௩௩ | லுறுத் | லுத் |
| ,, | ,, | மாற் | மரற் | ௩௭௯ | ௨௩ | யின்ற | யீன்ற |
| ௩௨௮ | ௩ | சாந்தம் | சார்ந்தன | ,, | ௨௮ | பந்திக் | பந்திற் |
| ,, | ,, | போன்ற | மொன்ற | ,, | ௨௯ | கிறும்பு | கிறுபு |
| ,, | ,, | மாமர | யாமாக | ௩௮௦ | ௩௧ | வேடு | வேறு |
| ௩௨௯ | ௯ | மகன்- | மகன் *** | ௩௮௩ | ௩௩ | மருஞ்சி | மஞ்சி |
| ,, | ,, | -திறப் | திறப்- | [illegible] | [illegible] | றுமெம் | றும்பெ |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| ௩௮௬ | ௭ | மெங் | மெம | ௫௩௬ | ௩௧ | னுமப் | னப் |
| ௩௯௨ | ௨௦ | தொட்டி | தோட்டி | ௫௪௧ | ௧௯ | வமும் | வமரும் |
| ௩௯௩ | ௨௪ | கொள் | கோள் | ௫௫௪ | ௨௫ | காபி | காப்பி |
| ,, | ,, | கல்லர | கல்லா | ௫௬௨ | ௧௭ | தூவுஞ் | தூஉஞ் |
| ,, | ௨௫ | தரப் | தாப் | ௫௬௯ | ௭ | யிருஞ் | யிகுஞ் |
| ௩௯௪ | ௧௨ | மறை | மறைக் | ,, | ௯ | சினனே | சின்னே |
| ௩௯௫ | ௩௪ | சேய்வ | செவ்வ | ௫௯௫ | ௩௩ | னேய்தி | னெய்தி |
| ,, | ௩௩ | ர்ம்பற | ர்ம்புற | ௬௦௯ | ௭ | முன்னூ | முந்நூ |
| ௩௯௮ | ௧௯ | கூறுப | கழறுப | ௬௧௦ | ,, | ,, | ,, |
| ௪௦௧ | ௪ | முரிவா | மூரிவா | ,, | ௩௨ | ொா | ரோவொ |
| ,, | ௫ | நல் - | - நல் | ௬௧௨ | ௩௩ | தினு | துநா |
| ,, | ௭ | சிறுவிலே | சிறுவீ | ௬௧௬ | ௧௮ | விராய் | விராஅய் |
| ௪௦௨ | ௩௫ | பூ | பூண் | ௬௨௭ | ௨௬ | டம்மு | டமு |
| ,, | ,, | மன்ன | மன்னன் | ,, | ,, | கால்மு | காலமு |
| ௪௦௩ | ௨௮ | சேர், | சேர | ௬௩௮ | ௫ | கொத்த | கோத்த |
| ௪௦௪ | ௧௨ | அவனைப் | யானை | ௬௪௬ | ௨௯ | யுருமுக் | யுருமு |
| ௪௦௫ | ௧௧ | மிசைந்த | பிசைந்த | ௬௫௨ | ௬ | செற்று | செற்றுக் |
| ,, | ௨ | கரக்கு | காக்கு | ௬௫௭ | ௨௯ | ஞொருஉ | ஞொரூஉ |
| ௪௦௬ | ௧௦ | புறத் தா | புறச் சு | ௬௫௮ | ௧௬ | ஞஞனும் | ஞனும் |
| ௪௦௮ | ௩௨ | மன் | பின் | ௬௬௨ | ௩௦ | ஞேரொ | ஞீரொ |
| ௪௧௫ | ௨௭ | அரக் | அரிக் | ௬௬௭ | ௩ | ண்ப | ணப் |
| ,, | ௩௦ | டாலி | டரிலி | ௬௭௯ | ௩௪ | செயுட் | செய்யுட் |
| ௪௨௦ | ௨௩ | எனை | எனை | ௬௮௩ | ௩௧ | மரர் | மார் |
| ௪௨௧ | ௧௨ | அவர் | அறிவர் | ௬௮௬ | ௨௧ | மலையன் | மலயன் |
| ௪௨௬ | ௧௩ | துணிந்தும் | துணித்தும் | ,, | ௩௩ | பெரு | பொரு |
| ௪௪௪ | ௩௧ | ாந்த | ரர்ந்த | ௬௯௩ | ௯ | நெதிழ் | நெகிழ் |
| ௪௪௯ | ௩ | ர்புற் | ராற் | ,, | ௩௧ | போல | போலத் |
| ,, | ௬ | து * * * | துப் | ௬௯௪ | ௧௯ | ஷின் | நவின் |
| ,, | ,, | வோயு | வோ - யு | ௭௦௪ | ௧௪ | டத் | டைத் |
| ௪௬௪ | ௩௨ | *** மா | மா *** | ௭௦௬ | ௧௭ | நிமர்ந் | நிமிர்ந் |
| ௪௭௧ | ௧௯ | றமை | றைமை | ௭௦௭ | ௨௭ | விக்கு | விக்குப் |
| ,, | ௨௮ | வும் | வும்வரும். | ௭௧௦ | ௪ | துழைத் | துளைத் |
| ௪௭௮ | ௩ | மகள் | மகன் | ௭௧௧ | ௭ | ராச்சி | ராய்ச்சி |
| ௪௯௦ | ௧௯ | நன்று | நந்நா | ௭௧௨ | ௪ | கென்ன | கென்னை |
| ௪௯௭ | ௮ | ,, | ,, | ,, | ௩௬ | குருவ | குருவா |
| ,, | ௨௨ | ,, | ,, | ௭௧௮ | ௧௯ | ன் காணெ | ாகென்ணெ |
| ௫௨௦ | ௬ | உமவ | உவம | ௭௧௭ | ௭ | ளின்றி | ளன்றி |
| ௫௨௯ | ௩ | மறை | மறைப் | ,, | ௨௧ | கொச் | காய் |

ரு. நாண்மீனின் பெயர் நாளுக்குப் பெயராவது.

# தொல்காப்பியம்.

# நச்சினார்க்கினியம்

## பொருளதிகாரம்.

### முதலாவது

### அகத்திணையியல்.

க. கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப.

என்பது சூத்திரம். நிறுத்த முறையானே பொருளினது இலக்கணம் உணர்த்தினமையின் இது பொருளதிகாரமென்னும் பெயர்த்தாயிற்று. இது நாண்மீனின் பெயர் நாளிற்குப் பெயராயினாற்போல்வதோர் ஆகுபெயர். பொருளாவன அறம்பொருளின்பமும், அவற்றது நிலையின்மையும், அவற்றினீங்கிய வீடுபேறுமாம். பொருளெனப் பொதுப்படக் கூறவே, இவற்றின் பகுதியாகிய முதல் கரு உரியுங், காட்சிப்பொருளுங் கருத்துப்பொருளும், அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும்பூதமும், அவற்றின்பகுதியாகிய இயங்குதிணையும் நிலைத்திணையும், பிறவும், பொருளாம்.

எழுத்துஞ்சொல்லும் உணர்த்தி அச்சொற்றொடர்கருவியாக உணரும் பொருள் உணர்த்தலின், மேலதிகாரத்தோடு இயைபுடைத்தாயிற்று. அகத்திணைக்கண் இன்பமும், புறத்திணைக்கண் ஒழிந்த மூன்றுபொருளும் உணர்த்துப. இது வழக்குநூலாதலிற் பெரும்பான்மையும் நால்வகைவருணத்தார்க்கும் உரிய இல்லறம் உணர்த்திப் பின் துறவறமுஞ் சிறுபான்மை கூறுப. அப்பொருள்கள் இவ்வதிகாரத்துட்காண்க. பிரிதனிமித்தங்கூறவே, இன்பநிலையின்மையுங்கூறிக், "காமஞ்சான்ற" என்னுங் கற்பியற்சூத்திரத்தாற் துறவறமுங்கூறினார். வெட்சிமுதலா வாகைமுறுக அறனும் பொருளும்பயக்கும் அரசியல்கூறி, அவற்றதுநிலையின்மை காஞ்சி

யுட்கூறவே, அறனும்பொருளும் அவற்றதுநிலையின்னமையுங் கூறினார் "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்னுஞ் சூத்திரத்தான் இல்லறமுந் துறவறமுங்கூறினார். இந்நிலையாமையானும் இவற்றானும் வீட்டிற்குக் காரணங்கூறினார். இங்ஙனங்கூறவே,' இவ்வாசிரியர் பெரிதும் பயன் தருவதோர் இலக்கணமே கூறினாராயிற்று; இதனாற்செய்த புலனெறிவழக்கினையுணர்ந்தோர் இம்மை மறுமைவழுவாமற் செம்மைநெறியாற் றுறைபோவராதலின்.

இப்பொருளை எட்டுவகையால் ஆராய்ந்தானென்ப; அவை அகத்திணை புறத்திணையென இரண்டுதிணை வகுத்து, அதன்கட் கைக்கிளைமுதற் பெருந்திணையிறுவாயேழும் வெட்சிமுதற் பாடாணடிணையிறுவாயேழுமாகப் பதினான்குபால்வகுத்து, ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலி பரிபாடன் மருட்பாவென அறுவகைச்செய்யுள் வகுத்து, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென நால்வகைநிலனியற்றிச், சிறுபொழுதாறும் பெரும்பொழுதாறுமாகப் பன்னிரண்டுகாலம் வகுத்து, அகத்திணைவழுவேழும் புறத்திணைவழுவேழுமெனப் பதினான்குவழுவமைத்து, நாடகவழக்கும் உலகியல் வழக்குமென இருவகைவழக்குவகுத்து, வழக்கிடமுஞ்செய்யுளிடமுமென இரண்டிடத்தான் ஆராய்ந்தாராதலின். எட்டிறந்த பல்வகையான் ஆராய்ந்தாரென்பார் முதல்கருவுரியுந் திணைதொறுமரீஇயபெயருந் திணைநிலைப்பெயரும் இருவகைக்கைகோளும் பன்னிருவகைக்கூற்றும் பத்துவகைக்கேட்போரும் எட்டுவகைமெய்ப்பாடும் நால்வகையுவமமும் ஐவகைமரபுமென்பர்.

இனி இவ்வோத்து அகத்திணைக்கெல்லாம் பொது இலக்கணமுணர்த்துதலின் அகத்திணையியலென்னும் பெயர்த்தாயிற்று. என்னை? எழுவகையகத்திணையுள் உரிமைவகையால் நிலம்பெறுவன இவையெனவும் அந்நிலத்திடைப் பொதுவகையால் நிகழுவன கைக்கிளை பெருந்திணை பாலையெனவுங் கூறலானும், அவற்றுட் பாலைத்திணை சில்வகையால் நடுவணதெனப்பட்டு நால்வகையொழுக்கம் நிகழாநின்றுழி அந்நான்கனுள்ளும் பிரிதற்பொருட்டாய்த் தான் பொதுவாய் நிற்குமெனக் கூறலானும், முதல்கருவுரிப்பொருளும் உவமங்களும் மரபும் பொதுவகையாற் கூறப்படுதலானும், பிறவும் இன்னோரன்ன பொதுப்பொருண்மைகள் கூறலானுமென்பது. இங்ஙனம் ஓதிய அகத்திணைக்குச் சிறப்பிலக்கணம் ஏனை ஓத்துக்களாற்கூறுப. ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின்பின்னர் அவ்விரு

வரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்த தெனக்கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகமென்றார். எனவே, *அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகுபெயராம். இதனை ஒழிந்தன ஒத்த அன்புடையார்தாமேயன்றி எல்லார்க்குந் துய்த்துணரப்படுதலானும் இவை இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும் ,அவை புறமெனவேபடும். இன்பமேயன்றித் துன்பமும் அகத்தே நிகழுமாலெனின், அதுவும் காமங் கண்ணிற்றேல் இன்பத்துள் அடங்கும். ஒழிந்த துன்பம் புறத்தார்க்குப் புலனாகாமை மறைக்கப்படாமையிற் புறத்திணைப்பாலவாம். காமநிலையின்மையான் வருந் துன்பமுந் தாபதநிலை தபுதாரநிலையென வேறாம். திணையாவது ஒழுக்கம்; இயல் இலக்கணம்; எனவே, அகத்திணையியலென்றது இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக்கணமென்றவாறாயிற்று. இவ்வோத்துக்கள் ஒன்றற்கொன்றியையுடைமை அவ்வவ்வோத்துக்களுட்கூறுதும்.

இனி, இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், கூறக்கருதியபொருளெல்லாந் தொகுத்துணர்த்துதனுதலிற்று. இதன்பொருள். கைக்கிளை முதலா = கைக்கிளையெனப்பட்ட ஒழுக்கம் முதலாக: பெருந்திணை இறுவாய்=பெருந்திணையென்னும் ஒழுக்கத்தினை இறுதியாகவுடைய எழுவையும்: முற்படக் கிளந்த எழுதிணை என்ப= முற்படக் கூறப்பட்ட அகத்திணையேழென்று கூறுவர் ஆசிரியர். என்றவாறு. எனவே, பிற்படக்கூறப்பட்ட புறத்திணையும் எழுளவென்றவாறாயிற்று. எனவே, அப்பதினான்குமல்லது வேறுபொருளின்றென வரையறுத்தாராயிற்று. அகப்புறமும் அவைதம்முட் பகுதியாயிற்று. முதலும் ஈறுங்கூறித் திணையேழெனவே "நடுவணைந்திணை" உளவாதல் பெறுதும்: அவை மேற்கூறுப.

கைக்கிளையென்பது ஒருமருங்கு பற்றிய கேண்மை. இஃது எழாவதன் தொகை. எனவே, ஒருதலைக்காமமாயிற்று. எல்லாவற்றினும் பெரிதாகிய திணையாதலிற் பெருந்திணையாயிற்று: என்னை? எண்வகைமணத்தினுள்ளுங் கைக்கிளைமுதல் ஆறுதிணையும் நான்கு மணம் பெறத், தாமொன்று நான்குமணம்பெற்றுநடத்தலின். பெருந்திணையிறுவாய் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. முற்படக்கிளந்தவென எடுத்தலோசையாற்கூறவே பிற்படக் கிளந்த எழுதிணையுளவாயிற்று. அவை, வெட்சி வஞ்சி உழிஞை தும்பை வாகை காஞ்சி பாடாண்திணை என வரும்.

ஒழிந்தோர் பன்னிரண்டென்றாராதலிற் புறத்திணையேழென்றதென்னையெனின், அகங்கை இரண்டுடையார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாயவாறுபோல, அகத்திணையேழற்குப் புறத்திணையேழென்றலே பொருத்தமுடைத்தாயிற்று. எனவே, அகத்திணைக்குப் புறத்திணை அவ்வந்நிலத்து மக்கள்வகையாற் பிறந்த செய்கைவேற்றுமையாதலின் ஒன்றொன்றற்கு இன்றியமையாதவாறாயிற்று. காந்தை அவ்வேழற்கும் பொதுவாகிய வழுவாதலின், வேறுதிணையாகாது. எண்வகை மணனும் எதிர்சென்றுகூறுவதாகலானும், காமஞ்சாலாவிளமைப்பருவம் அதன் கண்ணதாகலானுங், கைக்கிளையை முற்கூறினார். என்பவென்றது அகத்தியனாரை. இக்குறியீடுகளும் அகத்தியனாரிட்டவென்றுணர்க. (க)

உ. அவற்றுள், நடுவணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே.

இது முற்கூறிய ஏழனுட் டமக்கென நிலம் பெறுவனவும் பெறாதனவுங் கூறுகின்றது. (இ-ள்.) அவற்றுள் = முற்கூறிய ஏழு திணையுள்: நடுவண் ஐந்திணை = கைக்கிளைபெருந்திணைக்கு நடுவுநின்ற ஐந்தொழுக்கத்திணை: படு திரை வையம் பாத்திய பண்பே = ஒலிக்குந் திரைசூழ்ந்த உலகிற்கு ஆசிரியன் பகுத்துக்கொடுத்த இலக்கணத்தை: நடுவணது ஒழிய = நடுவணதாகிய பாலையை அவ்வுலகம்பெறாதேநிற்கும்படியாகச் செய்தார்.—எ-று. எனவே, யானும் அவ்வாறே நூல்செய்வலென்றார்.

உலகத்தைப் படைக்கின்றகாலத்துக் காடும் மலையும் நாடுங் கடற்கரையுமாகப் படைத்து, இந்நால்வகைநிலத்திற்கு ஆசிரியன் தான்படைத்த ஐவகை ஒழுக்கத்திற் பாலையொழிந்தனவற்றைப் பகுத்துக்கொடுத்தான். அப்பாலை ஏனையபோல ஒருபாற்படாது நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறிவழக்கஞ்செய்துவருதல்பற்றிப் பாலைக்கு நடுவணதென்னும்பெயர் ஆட்சியுங் குணனுங் காரணமாகப்பெற்றபெயர். "நடுவுநிலைத்திணையே நண்பகல்வேனில்" என ஆர்ப. புணர்தல் இருத்தல் இரங்கல் ஊடல் என்பவற்றிற்கு இடையே பிரிவுநிகழ்தலானும், நால்வகையுலகத்திற்கிடையிடையே ["முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து - நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப் - பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" என முதற்பொருள்பற்றிப் பாலைநிகழ்தலானும், நடுவணதாகிய நண்பகற்காலந் தனக்குக் காலமாகலானும், புணர்தற்கும் இருத்தற்கும் இடையே பிரிவுவைத்தலானும், உலகியற்பொ

ருள்ளான அறம்பொருளின்பங்களுள் நடுவணதாய பொருட்குத் தான்காரணமாகலானும், நடுவணதெனக் குணங்காரணமாயிற்று.

பாயிரத்துள் எல்லைகூறியதன்றி ஈண்டும் எல்லைகூறினார், புறநாட்டிருந்து தமிழ்ச்செய்யுள்செய்வார்க்கும் இதுவே இலக்கணமாமென்றற்கு.

இவ்விலக்கணம் மக்கள் முதலிய அகனைந்திணைக்கேயாதலின் இன்பமேநிகழுந் தேவர்க்காகா. "காமப் பகுதி கடவுளும் வரையார்" என்பதுபுறம். நடுவணாற்றிணையென்னாது ஐந்திணையென்றார், பாலையும் அவற்றோடொப்பச்சேறற்கு. இத்திணையை மூன்றாக மேற்பகுப்பா. (உ)

ங. முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை.

இது நடுவணைந்திணையைப் பகுக்கின்றது. (இ-ள்.) பாடலுள் பயின்றவை நாடும் காலை = புலனெறிவழக்கிடைப் பயின்ற பொருட்களை ஆராயுங்காலத்து: முதல் கரு உரிப் பொருள் என்ற மூன்றே = முதலுங் கருவும் உரிப்பொருளும் என்றமூன்றேயாம்: நுவலுங் காலை முறை சிறந்தனவே = அவைதாம் செய்யுள் செய்யுங்கால் ஒன்று ஒன்றனிற் சிறந்து வருதலுடைய.—எ - று. இங்ஙனம் பாடலுட்பயின்ற பொருண்முறை மூன்றெனவே, இம்மூன்றும் புறத்திணைக்கும் உரியவென்பது பெறுதும். அது புறத்திணைச் சூத்திரங்களுள் "வெட்சி தானே குறிஞ்சியது புறனே" என்பன முதலியவற்றாற் கூறுப.

முதலிற் கருவுங் கருவில் உரிப்பொருளுஞ் சிறந்துவரும். இம் மூன்றும் பாடலுட் பயின்றுவருமெனவே வழக்கினுள் வேறு வேறு வருவதன்றி ஒருங்கு நிகழாவென்பதூஉம், நாடுங்காலை யெனவே புலனெறிவழக்கிற் பயின்றவாற்றான் இம்மூன்றனையும் வரையறுத்துக் கூறுவதன்றி வழக்குநோக்கி இலக்கணங் கூறப்படாதென்பதூஉம் பெறுதும்; "நல்லுலகத்து, வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்" என்று புகுந்தமையிற் பொருளும் அவ்விரண்டினானும் ஆராய்தல்வேண்டுதலின்.

இஃது இல்லதெனப்படாது, உலகியலேயாம். உலகியலின் றேல், ஆகாயப்பூ நாறிற்றென்றுழி அது சூடக் கருதுவாருமின்றி

மயங்கக்கூறினுனென்று உலகம் இழித்திடப்படுதலின் . இதுவும் இழித்திடப்படும். இச்செய்யுள்வழக்கினை நாடகவழக்கென மேற் கூறினர், எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்பநிகழும் உலகியல் போலாது உள்ளோன் தலைவனாக இல்லதுபுணர்த்தன் முதலாகப் புனைந்துரைவகையாற் கூறும் நாடக இலக்கணம் போல யாதானுமோரோவழி ஒருசாரார்மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமுங் காலமும் நியமித்துச் செய்யுட் செய்த ஒப்புமைநோக்கி. மற்று இல்லோன் தலைவனாக இல்லதுபுணர்க்கும் நாடகவழக்குப்போல் ஈண்டுக்கொள்ளாமை " நாடகவழக்கு" என்னுஞ் சூத்திரத்திரத்துட்கூறுதும்.

"கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன் - குறும்பொறை நாடனல்வய லூரன் - றெண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற் - கடும்பகல் வருந்திக் கையறுமாலை - கொடுங்கழி நெய்தலுங் கூம்புங் - காலை வரினுங் களைஞரோ விலரே." என இவ் ஐங்குறுநூற்றுள் இடம் நியமித்துக்கூறியது செய்யுள்வழக்கு.

இனி அவைமுறையே சிறந்துவருமாறு :—

"முல்லை வைந்நுதி தோன்ற வில்லமொடு - பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ - விரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற் - பரலவ லடைய விரலை தெறிப்ப - மலர்ந்த ஞாலம் புலம்பு புறங் கொடுப்பக் - கருவி வானங் கதழுறை சிதறிக் - கார்செய் தன்றே கவின்பெறு கானங் - குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி - நரம்பார்ப் பன்ன வரங்குவளை பரியப் - பூத்த பொங்கர்த் துணையொடு வதியுந் - தாதுண் பறவை பேதுற லஞ்சி - மணிநா வார்த்த மாண்வினைத் தேரி - னுதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன் - கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது - நெடும்பெருங் குன்றத்த மன்ற காந்தட் - போதவி ழலரி நாறு - மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே." குறித்தகாலம்வந்தது, அவரும்வந்தாரென ஆற்றுவித்தது. இக்களிற்றியானைநிரையுள், முல்லைக்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்திமுடிந்தது.

"இளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு - முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்தி - வாணிற வுருவி னொளிறுபு மின்னிப் - பருவுறைப் பஃறுளி சிதறி வானவின்று - பெருவரை நளிர்சிமை யதிர வட்டித் துப் - புயலே றுரைஇய வியலிரு ணடுநாள் - விறலிழைப் பொலிந்த காண்பின் சாயற் - றடைஇத் திரண்ட நின்றோள்சேர் பல்லதைப்-

படாஅ வாருமெங் கண்ணெனை நீயு - மிருண்மயங் கியாமத் தியவுக் கெட விலங்கி - வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும் - பெருமலை விடரகம் வரவரி தென்னாய் - வரவெளி தாக வெண்ணுதி யதனா - னுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந் - தண்ணிது கமழு நின் மார் பெருநா - ளடைய முயங்கே மாயின் யாமும் - விறலிழை நெகிழச் சாய்த்து மதுவே - யன்னை யறியினு மறிக வலர்வா - யம்பன் மூதூர் கேட்பினுங் கேட்க - வண்டிறை கொண்ட வெரிமரு டோன்ற - லொண்பூ வேங்கை கமழுந் - தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே.'' இஃது இடத்துய்த்துப் பகற்குறிநேர்ந்தவாய்பாட்டான் வரைவுகடாயது. இம் மணிமிடைபவளத்துட், குறிஞ்சிக்கு முதலுங்கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்திமுடிந்தது.

''வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழ - லுருவக் குதிரை மழவ ரோட்டிய - முருக னற்போர் நெடுவே ளாவி - யறுகோட் டியானைப் பொதினி யாங்கட் - சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய - கற்போற் பிரியல மென்ற சொற்றா - மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த - வேய்மருள் பணைத்தோ ணெகிழச் சேய்நாட்டுப் - பொலங்கல் வெறுக்கை தருமார் நிலம்பக - வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி - னிழறேய்ந் துலறிய மரத்த வறைகாய் - பறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி - னுகுநெற் பொறியும் வெம்மைய யாவரும் - வழங்குந ரின்மையின் வௌவுநர் மடியச் - சுரம் புல்லென்ற வாற்ற வலங்குசினை - நாரின் முருங்கை நவிரல் வான்பூச் - சூரலங் கடுவளி யெடுப்ப வாருற் - றுடைதிரைப் பிதிர்விற் பொங்குமுன் - கடல்போ றோன்றல் காடிறந் தோரே.'' இக்களிற்றியானை நிரையுட், பாலைக்கு முதலுங்கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்திமுடிந்தது. இது பிரிவிடையாற்றாது தோழிக்குக்கூறியது.

''சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா - னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து - கூர்முள் வேலி கோட்டினி னீக்கி - நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய - வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை - வண்டூது பனிமல ராரு மூர - யாரை யோநிற் புலக்கேம் வாருற் - றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற் - பிறரு மொருத்தியை யெம்மனைத் தந்து - வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங் - கூறேம் வாழிய ரெந்தை செறுநர் - களிறுடை யிருஞ்சமந் ததைய நூறு - மொளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன் - பிண்ட நெல்லி னள்ளூரன்னவெம் - மொண்டொடி நெகிழினு நெகிழ்க - சென்றீ பெரும நிற் றகைக்குநர் யாரோ.'' இது வாயின்மறுத்தது. இக்களிற்றி

யானைநிரையுண், மருதத்திற்கு முதலுங்கருவும் வந்து உரிப்பொரு ளாற் சிறப்பெய்தி முடிந்தது. வண்டோடு பனிமலரொனவே வைக றையும் வந்தது.

"கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப - நீணிறப் பெருங்கடல் பா டெழுந் தொலிப்ப - மீனார் குருகின் மென்பறைத் தொழுதி - குவையிரும் புன்னைக் குடம்பை சேர - வசைவண் டார்க்கு மல்குறு காலைத் - தாழை தளரத் தூக்கி மாலை - யழிதக வந்த கொண்ட லொடு கழிபடர் - காமர் நெஞ்சங் கையறு பிணையத் - துயரஞ்செ ய்துநம் மருளா ராயினு - மருஅ லியரோ வவருடைக் கேண்மை - யளியின் மையினவ ணுறைவு முனைஇ - வாரற்க தில்ல தோழி கழனி - வெண்ணெல் லரிஞர் பின்றைத் ததும்புந் - தண்ணுமை வெரீஇய தடந்தா ளுரை - செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண் ணை - யகமடற் சேக்குந் துறைவ - னின்றுயின் மார்பிற் சென்றவெ ன் னெஞ்சே." இக் களிற்றியானைநிரையுள், நெய்தற்கு முதலுங் ருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்திமுடிந்தது. இது பொ ருட்பிரிவிடைத் தோழிக்கு உரைத்தது.

இச்சிறப்பானே முதலின்றிச் கருவும் உரிப்பொருளும் பெறு வனவும் முதலுங்கருவுமின்றி உரிப்பொருளே பெறுவனவுங் கொ ள்க. "திருநகர் விளங்கு மாசில் கற்பி - னரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு - நின்னுடைக் கேண்மை யெவனோ முல்லை - யிரும்டல் கூந்த லூற்றமு - முருந்தேர் வெண்ப லொளியுநீ பெறவே" இது பொருள்வயிற்பிரிந்தோன் சுரத்து நினைந்து உரைத்தது. முதற்பொ ருளின்றி வந்த முல்லை.

"கரந்தை விராஇய தண்ணறுங் கண்ணி - யிளைய ரேவ வியங் குபரி கடைஇப் - பகைமுனை வலிக்குந் தேரொடு - வினைமுடித் தனர்நங் காத லோரே." இது வந்தாரொன்று ற்றுவித்தது. முத லுங்கருவுமின்றி வந்த முல்லை.

"நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா - லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற் - பிறையெதிர்ந்த - தாமரை போன்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ - வேமரை போந்தன வீண்டு." இது மதியு டம்படுத்தது. இது முதற்பொருளின்றி வந்த குறிஞ்சி.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே-மலைய னொள் வேற் கண்ணி - முலையும் வாரா முதுக்குறைந் தனளே." இஃது இ ளையள்விளைவிலளென்றது. முதலுங்கருவுமின்றி வந்த குறிஞ்சி.

- நாளு நாளு மாள்வினை யழுங்க - வில்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழெனா - வொண்பொருட் ககல்வர்நங் காதலர் - கண் பனி துடையினித் தோழி நீயே." வற்புறுத்தாற்றியது; இஃது உரிப்பொருளொன்றுமே வந்த பாலை.

"பூங்கொடி மருங்கி னெங்கை கேண்மை - முன்னும் பின்னு மாகி - யின்னும் பாண னெம்வயி னானே." இது வாயின்மறுத்தது. உரிப்பொருளொன்றுமே வந்த மருதம்.

"அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப் - பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி - யேதின் மாக்களு நோவர் தோழி - யொன்று நோவா ரில்லைத் - தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே." கழிபடர். இது பேரானும் உரிப்பொருளானும் நெய்தலாயிற்று. இங்ஙனங் கூறவே உரிப்பொருளின்றேற் பொருட்பயனின்றென் பது பெற்றாம். இதனானே முதல்கருவுரிப் பொருள் கொண்டே வருவது திணையாயிற்று. இவை பாடலுட்பயின்ற வழக்கே இலக் கணமாதலின் இயற்கையாம். அல்லாத சிறுபான்மைவழக்கினைச் செயற்கையென மேற்பகுட்பர். (௩)

௪. முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி-
னியல்பென மொழிப வியல்புணர்ந் தோரே.

இது நிறுத்தமுறையானே முதல் உணர்த்துவான் அதின்பகு தியும் அவற்றுட்சிறப்புடையனவும் இல்லனவுங் கூறுகின்றது.

(இ-ள்.) முதல் எனப்படுவது = முதலெனச் சிறப்பித்துக் கூறப்படு வது: நிலம் பொழுது இரண்டின் இயல்பு என மொழிப = நிலனும் பொழுதும் என்னும் இரண்டினது இயற்கைநிலனும் இயற்கைப் பொழுதுமென்றுகூறுப: இயல்பு உணர்ந்தோரே = இடமுங்காலமும் இயல்பாக உணர்ந்த ஆசிரியர்.—எ - று. ஐந்திணைக்கு வகுத்த பொழுதெல்லாம் இயற்கையாம்; செயற்கைநிலனும் பொழுதும் முன்னர் அறியப்படும். இயற்கையெனவே செயற்கைநிலனுஞ் செ யற்கைப்பொழுதும் உளவாயிற்று. மேற் பாத்திய நான்கு நில னும் இயற்கைநிலனும். முதல் இயற்கையவென்றதனாற் கருப் பொருளும் உரிப்பொருளும் இயற்கையுஞ் செயற்கையுமாகிய சிற ப்புஞ் சிறப்பின்மையும் உடையவாய்ச் சிறுவரவினவென மயக்க வகையாற் கூறுமாறு மேலேகொள்க. இனி நிலத்தொடு காலத்தி னையும் முதலென்றலிற் காலம்பெற்று நிலம்பெறாத பாலைக்கும் அக்காலமே முதலாக அக்காலத்து நிகழுங் கருப்பொருளுங் கொ ள்க. அது முன்னர்க்காட்டிய உதாரணத்துட் காண்க. (௪)

௫. மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.

இது நடுவணது ஒழிந்த நான்கானும் அவ் வையத்தைப் பகுக்கின்றது. (இ - ள்.) மாயோன் மேய காடு உறை உலகமும் சேயோன் மேய மை வரை உலகமும் வேந்தன் மேய தீம் புனல் உலகமும் வருணன் மேய பெரு மணல் உலகமும் = கடல் வண்ணன் காதலித்த காடுறையுலகமுஞ், செங்கேழ்முருகன் காதலித்த வான் தங்கிய வரைசூழுலகமும், இந்திரன் காதலித்த தண்புனனாடுங், கருங்கடற்கடவுள் காதலித்த நெடுங்கோட்டெக் கர்நிலனும்: முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என சொல்லிய முறையான் சொல்லவும் படுமே = முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென ஒழுக்கங் கூறிய முறையானே சொல்லவும்படும். — எ - று. இந்நான்குபெயரும் எண்ணும்மையோடுநின்று எழுவாயாகிச் சொல்லவும்படும் என்னுந் தொழிற்பயனிலை கொண்டன. என்றது இவ்வொழுக்கம் நான்கானும் அந்நான்குநிலத்தையும் நிரனிறைவகையாற் பெயர்கூறப்படுமென்றவாறு. எனவே, ஒழுக்கம் நிகழ்தற்கு நிலம் இடமாயிற்று.

உம்மை எதிர்மறையாகலின், இம்முறையன்றிச் சொல்லவும்படுமென்பது பொருளாயிற்று. அது தொகைகளினுங் கீழ்க்கணக்கினும் இம்முறைமயங்கிவரக் கோத்தவாறு காண்க.

முல்லைநிலத்துக் கோவலர் பல்லா பயன் தருதற்கு மாயோன் ஆகுதி பயக்கும் ஆபல காக்கவெனக் குரவை தழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன்வெளிப்படுமென்றூர். உதாரணம்; "அணிசுபடக் கடந்தட்டு" என்னுமுல்லைக்கலியுட் "பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய - வாடுகொ ணேமியாற் பரவுதும்" எனவரும். "படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும் - பாலொடு கோட்டம் புகின்." என அவன்மகனாகிய காமனும் அந்நிலத்திற்குத் தெய்வமாதல் "அவ்வகை பிறவுங் கருவென மொழிப" என்புழி வகையென்றதனாற்கொள்க.

குறிஞ்சிநிலத்திற்குக் குறவர் முதலியோர் குரீஇ வெறி யயர்தற்கு வேண்டும் பொருள் கொண்டு வெறியயர்பவாகலின் ஆண்டு முருகன் வெளிப்படுமென்றார். அது "அணங்குடை நெடு வரை" என்னும் அகப்பாட்டினுட் "படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை - நெடுவேட் பேணத் தணிகுவ ளிவள்" எனவரும். "சூரர மகளிரொ டுற்ற சூளே" என்புழிச் சூரரமகளிர் அதன்வகை.

இனி ஊடலுங்கூடலுமாகிய காமச்சிறப்பு நிகழ்தற்கு மரு தநிலத்திற்குத் தெய்வமாக "ஆடலும் பாடலு மூடலு முணர்தலும்" உள்ளிட்ட இன்பவிளையாட்டு இனிதினுகரும் இமையோர்க்கும் இன் குரலெழிலிக்கும் இறைவனாகிய இந்திரனை ஆண்டையோர் வி ழவுசெய்து அழைத்தலின் அவன் வெளிப்படுமென்றார். அது "வை யைப் புதுப்புன லாடத் தவிர்ந்தமை - தெய்வத்திற் றேற்றித் தெளிக்கு" என இந்திரனைத் தெய்வமென்றதனானும் இந்திரன் விழவூரொடுத்தகாதையானும் உணர்க.

இனி நெய்தனிலத்தில் நுளையர்க்கு வலைவளந்தப்பின் அம்மக ளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடுநாட்டிப் பரவுக்கடன் கொ டுத்தலின் ஆண்டு வருணன் வெளிப்படுமென்றார். அவை "சினை ச்சுறவின் கொடிநாட்டு மனைச்சேர்த்திய வல்லணங்கினோர்" என வும் "கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கி" எனவும் "அணங் குடைப் பனித்துறை கைதொழு தேத்தி - யாயு மாயமொ டயரும்" எனவும் வரும்.

இனிப் பாலைக்குச் "சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீ கெனச் - கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ" எனவும், "வளிதரு செல்வனை வாழ்த்தவு மியைவதோ" எனவும், ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற் றோன்றிய மழையினையுங் காற்றினையும் அத்தெய்வப்பகுதியாக்கிக் கூறுபவாலெனின், எல்லாத்தெய்வத் திற்கும் அந்தணர் அவிகொடுக்குங்கால் அங்கி ஆதித்தன் கட் கொடுக்குமென்பது வேதமுடிபாகலின் ஆதித்தன் எல்லாநிலத் திற்கும் பொதுவெனமறுக்க. இவ்வாசிரியர் கருப்பொருளாகிய தெய்வத்தினை முதற்பொருளோடுகூட்டிக் கூறியது தெய்வவழி பாட்டுமரபிதுவே ஒழிந்ததுமரபன்றென்றற்கு. எனவே அவ்வவ நிலத்திற் றெய்வங்களே பாலைக்குந் தெய்வமாயிற்று.

உறையுலகென்றார், ஆவும் எருமையும் ஆடும் இன்புறுமாற் றால் நிலைபெறும் அக்காட்டின் கடவுளென்றற்கு. மைவரை என

வே மழையளக் தருவிக்கும் முருகவேளென்றார். இந்திரன் யா ற்றுவளனும் மழைவளனுந் தருமென்றற்குத் தீம்புனலென்றார். இனைபொருது கரைகரையாமல் எக்கர்செய்தல் கடவுட்கருத் தென்றற்குப் பெருமணலென்றார்.

இனி முல்லைகுறிஞ்சிமருதநெய்தல் என்றமுறையென்னை யெனின், இவ்வொழுக்கமெல்லாம் இல்லறம்பற்றிய ஒழுக்கமாத லின், கற்பொடுபொருந்திக் கணவன்சொற்பிழையாது இல்லிரு ந்து நல்லறஞ்செய்தன்மகளிரது இயற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது. எனவே முல்லையென்ற சொற்கும் பொருள் இருத்தலாயிற்று. "முல்லை சான்ற முல்லையம் புறவின்" என்ப வாகலின். புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற பொருட்டாகிய குறிஞ்சியை அதன்பின் வைத்தார். இதற்குதார ணம் இறந்தது. "கருங்காற் குறிஞ்சி சான்றவெற் பணிந்து" என் பது கரு. புணர்ச்சிப்பின் ஊடல் நிகழ்தலின் அதன்பின் மருத த்தைவைத்தார். "மருதஞ் சான்ற மருதத் தண்பணை" என்புழி மருதமென்றது ஊடியுங் கூடியும் போகம் நுகர்தலை. பரத்தை யிற்பிரிவுபோலப் பிரிவொப்புமைநோக்கி நெய்தலை ஈற்றின்கண் வைத்தார். நெய்தற்பறையாவது இரங்கற்பறையாதலின், நெய் தல் இரக்கமாம். "ஐதக லல்குன் மகளிர் - நெய்தல் கொண்மார் நெடுங்கடை யானே" எனவரும்.

இனி இவ்வாறன்றி முல்லை முதலிய பூவாற் பெயர்பெற் றன இவ்வொழுக்கங்களெனின், அவ்வந்நிலங்கட்கு ஏனைப்பூக்க ளும் உரியவாகலின் அவற்றாற் பெயர்கூறலும் உரியவெனக் கடா யினுற்கு விடையின்மை உணர்க.

இதனானே நடுவுநிலைத்திணையொழிந்த நான்கற்கும் பெயரும் முறையுங் கூறினான். இந்நான்கும் உரிப்பொருளாதல் "புணர் தல்பிரிதல்" என்புழிக்கூறுதும். கருப்பொருளாகியதெய்வத்தை முதற்பொருளோடு கூறியது அவை "வந்த நிலத்தின் பயத்த" மயங்குமாறுபோல மயங்காது இதுவென்றற்குங் கருப்பொருளு டைத்தெனப்பட்ட பாலைக்குத் தெய்வத்தை விலக்குதற்குமென் றுணர்க. உம். "வன்புலக்காட்டுநாட்டதுவே" எனவும், "இரும்பு பட் டிருளிய வீட்டருஞ் சிலம்பிற் *** கன்மிசைச் சிறுநெறி" எனவும், "அவ்வயனண்ணிய வளங்கெழுரன்" எனவுங், "கானலுங் கழறாது *** மொழியாது" எனவும், நால்வகையொழுக்கத் திற்கு நால்வகை நிலனும் உரியவாயினவாறு காண்க. (ரு)

௬. காரு மாலையு முல்லை குறிஞ்சி
கூதிர் யாம மென்மனார் புலவர்.

இது முதலிரண்டனுள் நிலங்கூறிக் காலங்கூறுவான் முல்லைக்குங் குறிஞ்சிக்கும் பெரும்பொழுதுஞ் சிறுபொழுதுங் கூறுதனுதலிற்று. (இ - ள்.) காரும் மாலையும் முல்லை = பெரும்பொழுதினுட் கார்காலமுஞ் சிறுபொழுதினுள் அக்காலத்துமாலையும் முல்லையெனப்படும். குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர் = பெரும்பொழுதினுட் கூதிர்க்காலமுஞ் சிறுபொழுதினுள் அதனிடையாமமுங் குறிஞ்சியெனப்படும்.—எ - று. முதல்கருவுரிப்பொருளென்னும் மூன்றுபாலுங்கொண்டு ஓர்திணையாமென்று கூறினாரேனும் ஒருபாலினையுந் திணையென்று அப்பெயரானே கூறினார்; வந்தான் என்பது உயர்திணை என்றாற்போல. இது மேலனவற்றிற்கும் ஒக்கும். இக்காலங்கட்கு விதந்து ஓர்பெயர் கூறாது வாளா கூறினார் அப்பெயர் உலகவழக்கமாய் அப்பொருள் உணரநிற்றலின். காலவுரிமை எய்திய ஞாயிற்றுக்கு உரிய சிங்கவோரைமுதலாகத் தண்மதிக்கு உரிய கற்கடகவோரையீறாக வந்து முடியுந்துணை ஓர் யாண்டாமாதலின் அதனை இம்முறையானே அறுவகைப்படுத்து இரண்டுதிங்கள் ஒருகாலமாககினார். இனி ஒருநாளினைப் படுசுடரமையந் தொடங்கி மாலையெனவும் அதன்பின் இடையாமமெனவும் அதன்பின் வைகறையெனவும் அதன்பின் காலையெனவும் அதன்பின் நண்பகலெனவும் அதன்பின் எற்பாடெனவும் ஆறாகப் பகுத்தார். அவை ஒரோவொன்று பத்துநாழிகையாக இம்முறையே சூத்திரங்களுட் சிறுபொழுது வைப்பர். பின்பனியும் நண்பகலும் பிற்கூறியகாரணம் அச்சூத்திரத்துக் கூறுதும்.

முல்லைக்குக் காரும் மாலையும் உரியவாதற்குக் காரணமென்னையெனின், பிரிந்துமீளுந் தலைவன் திறமெல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறுதலே முல்லைப்பொருளாயும், பிரிந்துபோகின்றான் திறங்கூறுவனவெல்லாம் பாலையாகவும் வருதலின், அம்முல்லைப் பொருளாகிய மீட்சிக்குந் தலைவி இருத்தற்கும் உபகாரப்படுவது கார்காலமாம்; என்னை? வினைவயிற்பிரிந்து மீள்வோன் விரைஇப் பரித்தேரூர்ந்து பாசறையினின்று மாலைக்காலத்து ஊர்வயின் வருஉங் காலம் ஆவணியும் புரட்டாதியும் ஆதலின் அவை வெப்பமுந் தட்பமும் மிகாது இடைநிகர்த்தவாகி ஏவல்செய்துவரும் இளை

யோர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும், அராபதம் மிக்கு நீரும் நி ழலும் பெறுதலிற் களிசிறந்து மாவும் புள்ளுந் துணையோடின் புற்று விளையாடுவன கண்டு தலைவற்குந் தலைவிக்குங் காமக்குறி ப்பு மிகுதலானுமென்பது. புல்லைமேய்ந்து கொல்லேற்றோடே புனிற்றாக் கன்றைநினைந்து மன்றிற்புகுதரவுந் தீங்குழலிசைப்ப வும் பந்தர்முல்லை வந்து மணங் கஞற்றவும் வருகின்ற தலைவற் கும் இருந்த தலைவிக்குங் காமக்குறிப்புச சிறத்தலின் அக்கால த்து மாலைப்பொழுதும் உரித்தாயிற்று.

இனிக் குறிஞ்சியாவது புணர்தற்பொருட்டு. அது இயற் கைப்புணர்ச்சி முதலியனவாம். இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்தபின் களவுநீட்டிப்பக் கருதுந் தலைவற்குக் களவினைச் சிறப்பிக்குங் கால் தலைவி அரியளாகவேண்டுமாகவே அவ்வருமையை ஆக்குவது ஐப்பசியுங் கார்த்திகையுமாகிய கூதிரும் அதின் இடையாமமுமெ ன்பது. என்னை? இருள் தூங்கித் துளிமிகுதலிற் சேறல் அரிதாதலா னும், பானாட் கங்குலிற் பரந்துடன்வழங்காது மாவும் புள்ளுந் துணையுடன் இன்புறுவதிதலிற் காமக்குறிப்புச் சிறியவே பெ ருகுதலானுங், காவன்மிகுதி நோக்காது வருந் தலைவனைக் குறிக் கண்ணெதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம்பெருகுதலின், இந்நில த்திற்குக் கூதிர்காலஞ் சிறந்ததெனப்படும்.

உ-ம்: "விருந்தின் மன்ன ருருங்கலந் தெறுப்ப - வேந்தனும் வெம்பகை தணிந்தனன் றீம்பெயற் - காரு மார்கலி தலையின்று தேரு - மோவத் தன்ன கோபச் செந்நிலம் - வளவர் யாழி யுள் ளுறு புருளக் - கடவிக் காண்குவம் பாக மதவு நடைத் - தாம்பலி சை குழவி வீங்குசுரை மடியக் - கனைய லங்குரல் காற்பரி பயி ற்றிப் - படுமணி மிடற்ற பயனிரை யாயங் - கொடுமடி யுடையர் கொற்கைக் கோவலர் - கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க - மனைமனைப் படரு நனைநகு மாலைத் - தனக்கென வாழாப் பிறர்க் குரி யாளன் - பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப் - புன்கா னெல்லிப் பைங்காய் தின்றவர் - நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி - முகிழ்நிலாத் திகழ்தரு மூவாத் திங்கள் - பொன்னு டைத் தாலிநீ யென்மக னொற்றி - வருகுவை யாயிற் றருகுவென் பாலென - விலங்கமாக் கண்ணள் விரல்விளி பயிற்றித் - திதலை யல்குலெங் காதலி - புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே." இது பாகற்குரைத்தது; இது முல்லைக்கட் காரும் மாலையும் வந் தது. அகம்.

மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே - கொன்முனை யிரவூர் போலச் - சிலவா கொடுமையோ டின்றே - யாமங் கொளவரிற் கனைஇக் காமங் - கடலினு முரைஇக் கரைபொழி யும்மே - யெவன்கொல் வாழி தோழி மயங்கி - யின்னம் மாகவு நன்னர் நெஞ்ச - மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக - விறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற் - குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக் - கான நாடன் வரூஉம் யானைக் - கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி - மாரி வானந் தலைஇ நீர்வார் - பிட்டருங் கண்ண படுகுழி யியவி - னிருளிடை மிதிப்புழி நோக்கியவர் - தளரடித் தாங்கிய சென்ற தின்றே." இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்கு உரைப்பாளாக உரைத்தது: இது குறிஞ்சிக்குக் கூதிரும் யாமமும் வந்தது. அகம்.

நிலனும் பொழுதும் முதலென்றமையிற் கார் முதலாதல் வேண்டும்; வேண்டவே, அதறகிடையின்றிக் கூறிய மாலையும் அதன் சினையாமாதலிற், கார்காலத்து மாலையென்பது பெற்றாம். இது கூதிர்யாமம் என்பதற்கும் ஒக்கும். (சு)

எ. பனியெதிர் பருவமு முரித்தென மொழிப.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி; முற்கூறிய குறிஞ்சிக்கு முன்பனியும் உரித்தென்றலின். (இ-ள்.) பனி எதிர் பருவமும் உரித்து என மொழிப = பனி முற்பட்ட பருவமுங் குறிஞ்சியொன்றற்கு உரித்தென்று கூறுவார் ஆசிரியர். — எ - று. எதிர்தலென்பது முன்னுதல்; எனவே, முன்பனியாயிற்று; அது ஞாயிறுபட்ட அந்திக்கண் வருதலின்.

உரித்தென்றதனாற் கூதிர்பெற்ற யாமமும் முன்பனிபெற்று வரும் எனக்கொள்க. உம். "பனிபடு நின்ற பானாட் கங்குற் - றமியோர் மதுகை தூக்காய் தண்ணெனை - முனிய வலைத்தி முரணில் காலை" என முன்பனியாமங் குறிஞ்சிக்கண்வந்தது. (எ)

அ. வைகுறு விடியன் மருத மெற்பாடு
நெய்த லாதன் மெய்பெறத் தோன்றும்.

இனிச் சிறுபொழுதே பெறுவன கூறுகின்றது. (இ-ள்.) வைகுறு விடியல் மருதம் = வைகறையும் விடியற்காலமும் மருதமாதலும்; எற்பாடு நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும் = எற்

படுகாலம் செய்தலாதலும் பொருள்பெறத் தோன்றும்.—எ-று. வைகுறுதலும் விடியலும் என்னும் உம்மை தொக்குநின்றது.

செவியறிவுறுத்தலைச் செவியறிவுறூஉ என்றாற்போல வைகுறுதலை வைகுறு என்றார். அது மாலையாமமும் இடையாமமுங் கழியுந்துணை அக்கங்குல் வைகுறுதல்; அது கங்குல்வைகிய அறுதியாதனோக்கி வைகறையெனவுங் கூறுப. அதுவும் பாடம். நாள் வெயிற்காலையை விடியலென்றார். "விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறை" என்ப. "விடியல் வைகறை யிடூஉ மூரன்" என்றது விடியற்கு முன்னர்த்தாகிய வைகறையென உருபுதொக்கு மூன் மொழிநிலையலாயிற்று. பரத்தையிற்பிரிந்த தலைவன் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டும் பொழுது கழிப்பிப் பிறர்க்குப் புலனாகாமல் மீளுங் காலம் அதுவாதலானுந், தலைவிக்குக் கங்குல் யாமங் கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமை மிகுதலான் ஊடலுணர்த்தற்கெளிதாவதோர் உபகாரமுடைத்தாதலானும், வைகறைகூறினார். இனித் தலைவி விடியற்காலஞ் சிறுவரைத்தாதலின் இதனாற் பெறும்பயன் இன்றென முனிந்து வாயிலடைத்து ஊடனீட்டிப்பவே அவ்வைகறைவழித்தோன்றிய விடியற்கண்ணும் அவன் மெய்வேறுபாடு விளங்கக்கண்டு வாயில்புகுத்தல் பயத்தலின் விடியல் கூறினார். "வீங்குநீர்" என்னும் மருதக்கலியுள் "அணைமென்றோ ளியாம்வாட வமர்துணைப் புணர்ந்துநீ - மணமனையா யெனவந்த மல்லலின் மாண்பன்றோ - பொதுக்கொண்ட கௌவையிற் பூவணைப் பொலிந்தநின் - வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை." என மருதத்திற்கு வைகறைவந்தது. "விரிகதிர்மண்டிலம்" என்னும் மருதக்கலியுள் "தணந்தனை யெனக்கேட்டுத் தவறோரா தெமக்குநின் - குணங்களைப் பாராட்டுந் தோழனும் வந் தீயான்கொல் - கணங்குழை நல்லவா கதுப்பற லணைத்துஞ்சி - யணங்குபோற் கமழுநின் னலர்மார்பு காணிய." என மருதத்துக் காலைவந்தது. "காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி" என்பதும் அது.

இனி வெஞ்சுடர் வெப்பந் தீரத் தண்ணறுஞ் சோலை தாழ்ந்து நீழற் செய்யவுந், தண்பதம் பட்ட தெண்கழி மேய்ந்து பல்வேறுவகைப்பட்ட புள்ளெல்லாங் குடம்பை நோக்கி உடங்கு பெயரவும், புன்னைமுதலிய பூவினாற்றம் முன்னின்று கஞற்றவும், தெண்டிரையழுவத்து நிலாக்கதிர்பரப்பவுங் காதல்கைமிக்குக் கடற்கானுங் கானற்கானும் நிறைகடந்து வேட்கைபுலப்பட உரைத்தலின், ஆண்டுக் காமக்குறிப்புவெளிப்பட்டு இரங்கற்பொருள் சிறந்

தலின் எற்பாடு நெய்தற்கு வந்தது. உம். "நெடுவெண் மார்பி னா ரம் போலச் - செவ்வாய் வானந் தீண்டி மீனருந்து - பைங்காற் கொக்கின் னிரைபறை யுகப்ப - வெல்லை பைப்பையக் கழிப்பிக் குட வயிற் - கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு - மதரெழின் மழைக் கண் கலுழ விவளே - பெருநா ணணிந்த சிறுமென் சாயல் - மாண லஞ் சிதைய வேங்கி யானு - தழறொடங் கினளே பெரும வதனாற் - கழிச்சுறா வெறிந்த புட்டா ளத்திரி - நெடுநீ ரிருங்கழிப் பரிமலிந் தசைஇ - வல்வில் லிளையரோ டெல்லி செல்லாது - சேர்ந்தனை செ லினே சிதைகுவ துண்டோ - பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை - யன்றி லகவு மாங்கட் - சிறுகுர னெய்தலெம் பெருங்கழி நாட்டே," பகற்குறிக்கண் இடத்துய்த்துத் தலைவனை எதிர்ப்பட்டு உரைத்தது. நெய்தற்கு எற்பாடுவந்தது. அகம். "கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப" என்பதனுண் மாலையும்வந்தது. கலியுண் மா லைக்காலம் நெய்தலின்கண் வந்தவாறுகாண்க. இது மேல் "நிலை னொருங்கு மயங்குத லின்று" என்பதனாற் பெறுதும். இவற்றிற்கு அறுவகை இருதுவும் உரியவென்பதன்றிக் காரும் இளவேனிலும் வேனிலும் பெரும்பொழுதாகக் கொள்ப என்றற்குப் பொருள்பெ றத்தோன்றும் என்றார்.

இனி நெய்தற்கு ஒழிந்த மூன்றுகாலமும் பற்றிவரச் சான் றோர் செய்யுட்செய்திலர், அக்காலத்துத் தலைவி புறம்போந்து வி ளையாடாமையின். அங்ஙனம் வந்த செய்யுளுளவேல் அவற்றையுங் கொள்க. "கழனி மாத்து விளைந்துகு தீம்பழம் - பழனவாளை க தூஉ மூர - னெம்மிற் பெருமொழி கூறித் தம்மிற் - கையுங் கா லுந் தூக்கத் தூக்கு - மாடிப் பாவை போல - மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே." இது குறுந்தொகை. புறனுரைத்தாளெனக் கேட்ட பரத்தை தலைவனை நெருங்கித் தலைவன் பாங்காயினோர் கேட்ப உரைத்தது. இது முதுவேனில்வந்தது. "அரிபெய் சிலம்பி னாம்பலந் தொடலை - யாம்பா ழவ்வளைப் பொலிந்த முன்கை - யி ழையணி பணைத்தோ ளையை தந்தை - மழைவளந் தரூஉ மாவண் டித்தன் - பிண்ட நெல்லி னுறந்தை யாங்கட் - கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங் - குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு - வேழ வெண் புணைதழீஇப் பூழி யாகவ - நாடி யானையின் முகனமர்ந் தாஅங் - கேந்தெழி லாகத்துப் பூந்தார் குழைய - நெருந லா டினை புனலே யின்றுவந் - தாக வனமுலை யரும்பிய சுணங்கின் - மாசில் கற்பின் புதல்வன் றாயென - மாயப் பொய்ம்மொழி சாயினை

பயிற்றியெம் - முதுமை யெள்ளலஃ தமையுந் தில்ல - சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத் - தந்தூம்பு வள்ளை யீர்ங்கொடி மய க்கி - வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய் - முள்ளரைப் பிரம் பின் மூதரிற் செறியும் - பலவெண மத்தி தழாஅ ரன்னவெம்- மிளமை சென்று தவத்தொல் லஃதே - யினியெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்கே." இளவேனில் வந்தது. அகம். பரத் தையொடு புனலாடிவந்தமைகேட்டுத் தலைவிபுலந்தது. ஏனைய வந்தவழிக் காண்க. நாடகவழக்கானன்றி உலகியல்வழக்கானும் அச்சிறுபொழுதும் பெரும்பொழுதிற்குப் பொருந்துமென்றற்குத் தோன்றுமென்றான். இதன்பயன் இவ்விரண்டுநிலத்துக்கு மற் றைமூன்றுகாலமும் பெரும்பான்மை வாராதென்றலாம். (அ)

௯. நடுவுநிலைத் திணையே நணபகல வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே.

இது நிலனுடைய நான்கற்குங் காலங்கூறி அந்நான்கற் கும் பொதுவாகிய பாலைக்குக் காலங்கூறுகின்றது. (இ - ள்.) நடுவு நிலைத்திணையே = பாலைத்திணை: நண்பகல் வேனிலொடு = எற்பாடுங் காலையும் என்னும் இருகூற்றிற்கு நடுவணதாகிய ஒருகூறு தான் கொண்டு வெம்மைசெய்து பெருகிய பெரும்பகலோடும் இளவே னிலும் வேனிலும் என்னும் இரண்டிறுதியும்: முடிவு நிலை மருங் கின் = பிரிவெனப்படுதற்கு முடிவுடைத்தாகிய குறிஞ்சியும் முல் லையுமாகிய ஒருமருங்கின்கண்ணே: முன்னிய நெறித்து = ஆசிரி யன் மனங்கொள்ளப்படும் நெறிமைத்து.—எ - று. நிலையென் றது நிலத்திணை. முடிவுநிலைப்பகுதிக்கண் முன்னப்படுமெனவே அத்துணையாக்கமின்றி ஒழிந்த மருதமும் நெய்தலும் முடியா நிலமாய் அத்துணை முன்னப்படாதாயிற்று இது பாலைக்கென்ப தாம். பிரிவின்கண் முடிய வருவனவெல்லாம் இவ்விரண்டற்கும் முடியவருதலும் ஒழிந்த இரண்டற்கும் அவை குறுகிவருதலும் முறையாற்கொள்க. என்னை? சுரத்தருமை அறியின் இவள் ஆற் றாளாமெனத் தலைவன் செலவழுங்குதலுந் துணிந்துபோதலும் உடன்போவலெனத் தலைவிகூறுதலும் அதனை அவன் விலக்கலும் இருந்திரங்கலும் போல்வன பலவும் முடியவரும் நிலங் குறிஞ்சி யும் முல்லையுமாகலின். சுரத்தருமைமுதலியன நிகழாமையின் மருதமும் நெய்தலும் அப்பொருண்முடிய வாராவாயின.

"நன்றே காதலர் சென்ற வாறே - யணிநிற விரும்புற மீமி சை - மணிநிற வுருவின தோகையு முடைத்தே." இது சுரத்தரு

னைநினைந்து வருந்தினேனென்ற தலைவிக்கு அவ்வருமைநீங்கிக் கார்காலமாயிற்றென்று ஆற்றுவித்தது. இப்பாட்டு முதலிய பத்தும் முல்லையுட்பாலே.

"கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர் - தேர்தரு விருந்திற் றருதல் யாவது - மாற்றருந் தானை நோக்கி - யாற்றவு மிருத்தல் வேந்தனது தொழிலே." இது பருவங்கண்டு ஆற்றளாகிய தலைவி பாசறைச்செய்தி கேட்டு வருந்தியது. இப்பத்தும் முல்லையுட்பாலே.

"கருங்கால் வேங்கை மரத்தகட் டொள்வீ - யிருங்கல் வியலறை வரிப்பத் தாஅய - நன்மலை நாடன் பிரிந்தெனவொண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய்." இவ் ஐங்குறுநூறு குறிஞ்சியுட்பாலே. இது வரைவிடைவைத்துப்பிரிந்துழித் தலைவியாற்றாமை கண்டு தோழிகூறியது.

"எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத் - துவலைத் தண்டுளி வீசிப் - பசலை செய்தன பனிபடு துறையே." இவ் ஐங்குறுநூறு வரைவிடைவைத்துப்பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் துறையின்பமுடைத்தாதலான் வருத்திற்றெனத் தலைவி கூறியது. இது சுரத்தருமை முதலியனவன்றி நெய்தற்குட்பாலைவந்தது. ஏனைய வந்துழிக்காண்க.

முந்நீர்வழக்கஞ் சிறுபான்மையாகலின் நெய்தற்கு முடியவாராதாயிற்று. இக்கருத்தானே பிரிவொழுக்கம் மருதத்திற்கும் நெய்தற்குஞ் சிறுபான்மையாகப் புலனெறிவழக்கஞ்செய்யப்படும்.

எற்பாட்டுக்கு முன்னாத்தாகிய நண்பகலைப் பாலைக்குக்கூற வேண்டிப் பின்னைத்தானேனும் பெரும்பொழுதிற்கு முறைகூறுதலின் ஒருவாற்றாற் சிறுபொழுதாகும் முறையேயைத்தன்றாயிற்று. காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமைகூரச் சோலைதேம்பிக் கூவன் மாறி நீரும் நிழலுமின்றி நிலம்பயந்துறந்து புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம்பெறுவதொரு காலமாதலின், இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிலுஞ் சிறப்புடைத்தாயிற்று.

"நெள்ளறல் யாற்றுத் திரைமணலடைகரை - வண்டுவரிபாடத் தண்பொ தலர்ந்து - தாதுந் தளிரு மேதகத் துவன்றிப் - பன்பூஞ்சோலைப் பன்மலர் நாற்றமொடு - செவ்விதிற் சிறந்த வேனில் விதிற் றூங்க் - குயில்கூஉக் குரலும் பயில, அதனன்மேலும், நிலவுஞ்

சாந்தும் பயில்வுறு மூத்து - மின்பம் விளைக்கு நன்பொருள் பிற வும் பண்டைய போலாது, இன்பம் மிகத்தரும் இளவேனிற்காலத் துப், பொழில்விளையாடியும் புதுப்பூக்கொய்தும் அருவியாடியும் முன்னர் விளையாட்டு நிகழ்ந்தமைபற்றிப் பிரிந்த கிழத்தி 'மெலிந் துணைக்குங் கிளவி பயின்றுவருதலானும், உடன்போக்கின்கண் அக்காலம் இன்பம் பயக்குமாதலானும், இளவேனிலோடு நண்பகல் சிறந்ததெனப்பட்டது. பிரிந்த கிழத்தி இருந்துகூறுவன கார்கா லமன்மையின் 'முல்லையாகா. உம். "கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை - வற்றலங் கோடுநீ ரவலங் கடந்து - புலவுப்புலி துற ந்த கலவுக்கழி கடுமுடை - யிரவுக்குறும் பலற நூறி நிரைவகுத்- திருங்கன் முடிக்கர்த் திற்றி கெண்டுங் - கொலைவி லாடவர் போ லப் பலவுடன் - பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திருக்கு- மருஞ்சுர மிறந்த கொடியோர்க் கல்கலு - மிருங்கழை யிறும்பி லுய்ந்துகொண் டறுத்த - நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரோ - டகவுநர்ப் புணர்ந்த வஃபிற் கழறொடி - நறவுமகி ழிருக் கை நன்னன் வெண்மரன் - வயலை வேலி வியலூ ரன்னநி - னலர் முலை யாகம் புலம்பப் பலநினைந் - தமேஎ லென்றி தோழி யாழ வென் - கண்பனி நிறுத்த லெளிதோ குரவுமலர்ந் - தறல்சிர் நீங் கிய வரும்பவிழ் வேனி - லறலவிர் வார்மண லகல்யாற் றடை கரைத் - துறையணி மருதோ டிகல்கொள வோங்கிக் - கலுழ்தளி ரணிந்த விருஞ்சினை மராஅத் - திணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப் - புகைபுரை யம்மஞ் ஞூர - நுகர்குயி லகவுங் குரல் கேட் போர்க்கே." இது வற்புறுத்துந் தோழிக்குத் தலைவிகூறி யது. இக்களிற்றியானைநிரையுள் இருவகை வேனிலும் பாலைக் கண் வந்தன. நண்பகலோடுவருவன வந்துழிக்காண்க. (கூ)

க0. பின்பனி தானு முரித்தென மொழிப.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி. (இ - ள்.) நடுவுநிலைத்தி ணைக்கு முற்கூறிய வேனிலன்றிப் பின்பனிக்காலமும் உரித்து.— எ - று. இது கூதிரை முன்பனியாகிய மார்கழியுந் தையுந் தொடர்ந்தாற்போல வேனிலாகிய சித்திரைமுதலிய நான்கற்கு முன் பின்பனியாகிய மாசியும் பங்குனியுந் தொடர்ந்ததென்று கூறினர். உம். "பகைவென்று திறைகொண்ட பரித்திண்டோ மிசையவா - வகைகொண்ட செம்மலும் வனப்பார விடுவதோ- புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா - முகைவெ ண்ப னுதிபோரா முற்றிய கடும்பனி." இது தனித்தோர்க்குப்

பின்பனி ஆற்றற்கு அரிது, இஃதெவர்க்கும் ஏதமாம், எனவும் இத னான் இறந்துபடுவேனெனவுங் கூறிற்று. "அம்ம வாழி தோழி காத லர் - நூலறு முத்திற் றண்சித ருறைப்பத் - தாளித் தண்பவர் நாளா மேயும் - பனிபடு நாளே பிரிந்தனர் - பிரியு நாளும் பலவா கவ்வே." தலைவி தோழிக்கு உரைத்தது. இக்குறுந்தொகையும் அது. பின்பனிக்கு நண்பகல் துன்பஞ்செய்யாதென்பதூஉம் அதற்குச் சிறுபொழுது வரைவிலவென்பதூஉங் கூறிற்று. என்னை? சூத் திரத்துத் தானெனத் தனித்து வாங்கிச் கூறினமையின். (கo)

கக. இருவகைப் பிரிவு நிலைபெறத் தோன்றினு முரிய தாகு மென்மனார் புலவர்.

இது பாலைப் பகுதி இரண்டெனவும் அவ்விரண்டற்கும் பின்பனி உரித்தெனவுங் கூறுகின்றது. (இ-ள்.) இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும் = நான்கு வருணத்தார்க்குங் காலிற் பிரிவும் வேளாளர்க்குக் கலத்திற் பிரிவுந் தத்தம் நிலை மைக்கேற்பத் தோன்றினும்: உரியது ஆகும் என்மனார் புலவர் = பின்பனிக்காலம் அவ்விரண்டற்கும் உரிமைபூண்டு நிற்குமென்று கூறுவர் புலவர்.—எ - று. கடலினை நிலமென்னுமையிற் கலத் திற் பிரிவு முன்பகுத்த நிலத்துள் அடங்காதென்று, அதுவும் அடங்குதற்கு, இருவகைப்பிரிவும் என்னும் முற்றும்மைகொடுத் துக், காலிற் பிரிவோடு கூட்டிக் கூறினார். கலத்திற் பிரிவு அந்த ணர்முதலிய செந்தீவாழ்நர்க்கு ஆகாமையின் வேளாளர்க்கே உரித் தென்றார். வேதவணிகரல்லாதார் கலத்திற் பிரிவு வேதநெறி யன்மையின் ஆராய்ச்சியின்று. இக்கருத்தானே இருவகை வே னிலும் நண்பகலும் இருவகைப்பிரிவிற்கும் ஒப்ப உரியவன்றிக், காலிற்பிரிவுக்குச் சிறத்தலுங், கலத்திற்பிரிவிற்கு இளவேனி லொன்றுங் காற்றுமிகாத முற்பக்கத்துச் சிறுவரவிற்றாய் வருத லுங் கொள்க. ஒழிந்த உரிப்பொருள்களினும் பாலை இடைநிகழு மென்றலிற் பிரியவேண்டியவழி அவற்றிற்கு ஓதிய காலங்கள் கலத்திற்பிரிவிற்கும் வந்தால் இழுக்கின்று. என்னை? கார்கா லத்துக் கலத்திற்பிரிவும் உலகியலாய்ப் பாடலுட் பயின்றவா மாயினென்க. தோன்றினுமென்ற உம்மை சிறப்பும்மை; இர ண்டு பிரிவிற்கும் பின்பனி உரித்தென்றலின்.

இனிக் கலத்திற்பிரிவிற்கு உதாரணம்: "உலகு கிளர்ந்தன்ன வுருகெழு வங்கம் - புலவுத்திரைப் பெருங்கடனீரிடை போழ

விரவு மெல்லையு மசைவின் முகி - விரைசெல் லியற்கை வங்க-மூட்டக் - கோயேர் திணிமண லகன்றுறை நீங்கான் - மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய - வாள்வினை புரிந்த காதலர் நாள்பல-சுழியா மையி னழிபட ரகல - வருவர் மன்னற் றோழி தண்பணைப்-பொருபுனல் வைப்பி னம்மூ ராங்கட் - கருவிளை முரணிய தண்புதற் பகன்றைப் - பெருவள மலர வல்லி நீண்டிப் - பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல் - கூதளை முதிலைக் கொடிநிரை தூங்க-வறனின் றிலக்கு மாறு வாடைக் - கடிமனை மாடத்துக கங்குல் வீசத் - திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாஅய - நிரைவளை யூருந் தோளென - வுரையொடி செல்லு மன்பினர்ப் பெறினே."

தோழி தூதுவிடுவது காரணமாக உரைத்தது. இம் மணிமிடை பவளத்துப் பின்பனிவந்தவாறும், நண்பகல்கூறுமையும், அவர் குறித்தகாலம் இதுவென்பது தோன்றியவாறுங் காண்க.

"குன்ற வெண்மண லேறி நின்றுநின் - றின்னுங் காண்கம் வம்மோ தோழி - களிறுங் கந்தும் போலு நளிகடற் - கூம்புங் கலனுந் தோன்றுந - தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே." வருகின்றுனெனக் கேட்ட தலைவி தோழிக்கு உரைத்தது. இது பின்பனிநின்றகாலம் வரைவின்றி வந்தது. கடலிடைக் கலத்தைச் செலுத்துதற்கு உரிய காற்றெழுபட்ட காலம் யாதானுங் கொள்க. ஆகுமென்றதனால் வேதவணிசரும் பொருளின்றி இல்லறம் நிகழாத காலத்தாயிற் செந்திவழிபடுதற்கு உரியோரை காட்டிக் கலத்திற்பிரிதற்கு உரியரென்றுகொள்க. (கக)

கஉ. திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குத லின்றென மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே.

இது உரிப்பொருள் மயங்குமென்றலின் மேலனவற்றிற்குப் புறனடை. (இ - ள்.) திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே="மாயோன்மேய" என்பதனுள் ஒருநிலத்து ஓரொழுக்கம் நிகழுமென நிரனிறுத்துக் கூறிய ஒழுக்கம் அவ்வவநிலத்திற்கே உரித்தாயொழுகாது தம்முண் மயங்கிவருதலும் நீக்கப்படா: நிலன் ஒருங்கு மயங்குதல் இன்று என மொழிப = அங்ஙனம் ஒருநிலத்து இரண்டொழுக்கந் தம்முண் மயங்குதலன்றி இரண்டுநிலம் ஓரோவொழுக்கத்தின்கண் மயங்குதலில்லையென்று கூறுவர்: புலன் நன்கு உணர்ந்த புலமையோர் = அங்ஙனம் நிலனும் ஒழுக்கமும் இயைபு

பழித்துச்செய்யும் புலனெறிவழக்கத்தினை மெய்பெற உணர்ந்த அறிவினையுடையோர்.—எ - று. என்றது ஒருநிலத்தின்கண் இரண்டு உரிப்பொருண் மயங்கிவருமென்பதூஉம் நிலன் இரண்டு மயங்காதெனவே காலம் இரண்டுந் தம்முண்மயங்குமென்பதூஉங் கூறினாராயிற்று. எனவே, ஒருநிலமே மயங்குமாறாயிற்று. உரிப்பொருண்மயக்குறுதல் என்னாது திணைமயக்குறுதலும் என்றான், ஓர் உரிப்பொருளோடு ஓர் உரிப்பொருண் மயங்குதலும், ஓர் உரிப்பொருள் நிற்றற்கு உரிய இடத்து ஓர் உரிப்பொருள் வந்துமயங்குதலும், இவ்வாறே காலம் மயங்குதலுங், கருப்பொருண் மயங்குதலும் பெறுமென்றற்கு; திணையென்றது அம்மூன்றனையுங் கொண்டேநிற்றலின். உம். "அறிவே மல்லே மறிந்தன மாதோ-பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச் - சாந்த நாறு நறியோள்-கூந்த னாறுநின் மார்பேஎ தெய்யோ." இது புறத்தொழுக்கமின்றென்றார்க்குத் தோழிகூறியது. "புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை - வளைவெண் மருப்பிற் சேழல் புரக்கும் - குன்றுகெழு நாடன் மன்றதன் - பொன்போல் புதல்வனோ டென்னீத் தோனே." இது வாயில்களுக்குத் தலைவி கூறியது. "வன்கட் கானவன் மென்சொன் மடமகள் - புன்புல மயக்கத் துழுத வேனற்-பைம்புறச் சிறுகிளி கடியு நாட - பெரிய கூறி நீப்பினும் - பொய்வலைப் படூஉம் பெண்டு தவப்பலவே." இது தலைவன் ஆற்றாமை வாயிலாகப் புணர்ந்துழிப் பள்ளியிடத்துச் சென்ற தோழி கூறியது. இவை குறிஞ்சிக்கண் மருதம் நிகழ்ந்தன, இவை ஓரொழுக்கம் நிகழ்தற்கு உரியவிடத்தே ஓரொழுக்கம் நிகழ்ந்தன.

"அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி - பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணைக் - கொன்னே கடவுதி யாயி னென்னதூஉ - மறிய வாகுமோ மற்றே - முறியிணர்க் கோங்கம் பயந்த மார்பே." இது இவ்வேறுபாடென்னென்ற செவிலிக்குத் தோழி பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல். இது பாலையிற் குறிஞ்சி. இஃது உரிப்பொருளோடு உரிப்பொருண் மயங்கிற்று. மேல் வருவனவற்றிற்கும் இவ்வாறு உய்த்துணர்ந்துகொள்க.

"வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழின் - முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருந - லுற்குறி செய்தனை யென்ப வலரோ - குரவ நீள்சினை யுறையும் - பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே." இது பொழிலிடத்து ஒருத்தியொடு தங்கிவந்தும் யான் பரத்தையை அறியேனென்றாற்குத் தோழி கூறியது.

"வண்சினைக் கோங்கின் றண்கமழ் படலை - யிருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப - நீநயந் துறையப் பட்டோள் - யாவளோ வெம் மறையா தீமே." இதுபரத்தையர்க்குப் பூவணிந்தமை கேட்ட தலைவி அஃதின்றென்றாற்குக் கூறியது. இவை பாலைக் கண் மருதம் நிகழ்ந்தன. "அருந்தவ மாற்றியார்" என்னும் பாலைக்கலியும் அது.

"அன்னை வாழிவெண் டன்னை யுவக்காணேர் - தொடிப்பா சடும்பு பரியவூர் பிழியூஉ - நெய்தன் மயக்கிவந் தன்று நின்மகள் - பூப்போ லுண்கண் மரீஇய - நோய்க்கு மருந்தாகிய கொண்கன் றேரே." இஃது அறத்தொடுநின்றபின் வரைதற்குப்பிரிந்தான் வரைவொடுவந்தமை தோழி செவிலிக்குக் காட்டியது. இது நெய்தலிற் குறிஞ்சி.

"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே - யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென - வெள்ளாங் குருகை வினவு வோளே" "கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே - உறாஅ வறுமுலை மடாஅ - வுண்ணாப் பாவை யூட்டு வோளே." இவை பெதும்பைப் பருவத்தாள் ஓர் தலைவியொடு வேட்கைநிகழ்ந்தமையைத் தலைவி கூறித் தலைவன்குறிப்புணர்ந்தது. "யானெவன் செய்கோ பாண வானாது - மெல்லம் புலம்பன் பிரிந்தெனப் - புல்லென் றனவென் புரிவளைத் தோளே." இது தலைவன் புறத்துப்போன அத்துணைக்கு ஆற்றாயாகுதல் தகாதென்ற பாணற்குத் தலைவிகூறியது. இப்பத்தும் நெய்தற்கண் மருதம். "வெள்ளாங் குருகின் பிள்ளை சேத்தெனக் - காணிய சென்ற மடநடை நாரை - மிதிப்ப நெக்க கண்போ னெய்தல் - கட்கமழ் தாணுத் துறைவர்க்கு - நெக்க நெஞ்ச நேர்கல் லேனே." இது வாயில்வேண்டிய தோழிக்குத் தலைவி வாயின் மறுத்தது. இப்பத்தும் நெய்தற்கண் மருதம்.

"இலங்குவளை தெளிர்ப்ப வலவ ஞட்டி - முகம்புதைத் தழப் பின் னிறைஞ்சினன் ளோளே - புலம்புகொண் மாலை மறைய - நலங்கே ழாக நல்குவ ளெனக்கே." இடந்தலைப்பாட்டிற் தலைவி நிலைகண்டு கூறியது. இது நெய்தலிற் புணர்தனிமித்தம்.

"வேப்புநனை யன்ன நெடுங்கட் களவன் - றன்னக மண்ணளை நிறைய நெல்லி - னிரும்பூ வுறைக்கு மூரற்கிவள் - பெருங்கவி னிழப்ப தெவன்கொ லன்னாய்." இது தோழி அறத்தொடு நின்றது. "பழனக் கம்புள் பயிற்பெடை யகவுங் - கழனி யூரநின்

மொழிவ லென்றும் - தஞ்சுமனை நெகேகர் வருதி - யஞ்சா யோவிவ டந்தைகை வேலே." இது தோழி இரவுக்குறி மறுத்தது. "நெறி மருப் பெருமை நீலவிரும் போத்து - வெறிமலர்ப் பொய்கை யாம் பன் மயக்குங் - கழனி யூரன் மகளிவள் - பழன வெதிரின் கொடிப் பிணை யலளே." இஃது இளையள்விளைவிலளென்றது. "கருங் கோட் டெருமைச் செங்கட் புனிற்றுக் - காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு - நந்தை நும்மூர் வருது - மொண்டொடி மடந்தை நின் னையாம் பெறினே." இது நின் தமர் வாராமையின் எமர் வரைவு நேர்ந்திலரென்று தோழிகூறக் கேட்ட தலைவன் தலைவிக்குக் கூறி யது. இவை மருதத்துக் குறிஞ்சி நிகழ்ந்தன. இக்காட்டியவெல் லாம் ஐங்குறுநூறு. "புனையிழை நோக்கியும்" என்னும் மருதக் கலியும் அது.

"முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு - மூட்டுறு கவரி தூக்கி யன்ன - செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக் - கதிர்மூதா தின்ற லஞ்சிக காவலர் - பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக் - காஞ்சியி னகத்துக் கரும்பருகி யாக்கும் - தீம்புன லூர திறவ தாகக் - குவளை யுண்க ணிவளும் யானுங் - கழனி யாம்பன் முழுநெறிப் பகைத்தழை - காமா ஞாயிற் றுகத் தலைப்பப் - பொய் தல் பாடிப் பொலிகென வந்து - நின்னகா விழைத்த தவறோ பெ ரும - கள்ளுங் கண்ணியுங் கையுறை யாக - நிலைக்கோட்டு வெள்ளை நாலசெவிக் கடாஅ - புலைதுறை கடவுட் குளப்பட வோச்சித் - தணிமருங் கறியாள் யாயழ - மணிமருண் மேனி பொன்னிறங் கொளலே." இது தலைவியைத தோழியிடத்துய்த்துத் தலைவனை வரைவுகடாயது. இவ் அகப்பாட்டும் அது.

இன்னும், மயக்குறுதலும் என்றதனுள் அவ்வவ நிலங் கட்கு உரிய முதலுங் கருவும வந்து உரிப்பொருள் வேறாதலன்றி அவ்வந் நிலங்கட்கு உரித்தல்லாத முதலுங் கருவும் வந்து உரிப் பொருண் மயங்குவனவுங் கொள்க. அது "அழுந்திகழ் நறுவீ கொன்றை" என்னும் நெய்தற் கலியுட் காண்க. இக்கருத்தா னே நக்கீரரும் ஐந்திணையுள்ளுங் களவு நிகழுமென்று கொண்ட வாறுணர்க.

இனிக் காலம் ஒருங்கு மயங்குங்காற் பெரும்பொழுது இர ண்டும் பெரும்பான்மையுஞ் சிறுபொழுதும் மயங்குதலுங் கொள்க. "மழையில் வான மீனணிந் தன்ன - குழையமன் முசுண்டை வா லிய மலர - வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப் - பெரிய

சூடிய கவர்தார்க் கோவல - ரெல்லுப்பெய லுழந்த பல்லா நிரை யொடு - நீர்திகழ் கண்ணிய ரூர்வயிற் பெயர்தர - நனிசேட் பட்ட மாரி தளிசிறந் - தோதரு கடுநீர் தெருவுதொ றொழுகப் - பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக் - கூதிர்நின் றன்றாற் 'பொழு தே காதலர் - நந்நிலை யறியா ராயினுந் தந்நிலை - யறிந்தனர் கொல் லோ தாமே யோங்குநடைக் - காய்சின யானை கங்குற் சூழ்வர - வஞ்சுவர விறுத்த தானை - வெஞ்சின வேந்தன் பாசறை யோ ரே." இது தோழிக்குத் தலைவி கூறியது. இம் மணிமிடைபவ ளத்துண் முல்லையுட் கூதிர் வந்தது.

"மங்குன் மாமழை விண்ணதிர்பு முழங்கித் - துள்ளுப்பெ யல் கழிந்த பின்றைப் புகைப்புறப் - புள்ளிநுண் டுவலை பூவக நிறைபக் - காதலர்ப் பிரிந்த கையறு மகளிர் - நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத் - துய்த்தலைப் பூவின் புதலிவ ரீங்கை - நெய்த் தோய்த் தன்ன நீர்நனை யந்தளி - ரிருவகி ரிருளி னீரிய துயல்வர - வவரைப் பைம்பூப் பயில வகல்வயற் - கதிர்வார் காய்நெற் கட் கினி திறைஞ்சச் - சிதர்சினைத் தூங்குமற் சீர்வரை நாடர் - காய் சின வேந்தன் பாசறை நீடி - நந்நோ யறியா வறனி லாள - ரிந் நிலை களைய வருகுவர் கொல்லென - வாஅது தெறிதரும் வாடை யொடு - நோனேன் றோழியென் றனிமை யானே." பருவ வர வின்கண் வற்புறுத்துந் தோழிக்குத் தலைவிகூறியது. இம் மணி மிடைபவளத்து முல்லையுண் முன்பனி வந்தது. நிலமுங் கருவும் மயங்கிற்று.

"கருங்கால் வேங்கை வீயுகு துறுக - லிரும்புலிக் குருளை யிற் றோன்றுங் காட்டிடை - யெல்லி வருநர் களவிற்கு - நல்லை யல்லை நெடுவெண் ணிலவே." இரா வந்து ஒழுகுங் காலை முன் னிலைப்புற மொழியாக நிலாவிற்கு உரைப்பாளாய் உரைத்தது. இக் குறுந்தொகையுட் குறிஞ்சியுள் வேனில் வந்தது.

"விருந்தின் மன்னர்" என்பது முல்லைக்கண் வேனில் வந் தது. இது கார்காலத்து மீள்கின்றான் முகிழ்நிலாத் திகழ்தற்குச் சிறந்த வேனிலிறுதிக்கட் தலைவிமாட்டு நிகழ்வன கூறி அவை கா ண்டற்குக் கடிது தேரைச் செலுத்தென்றது.

"துஞ்சுவது போல விருளி விண்பக - விமைப்பது போல மின்னி யுறைக்கொண் - டேறுவது போலப் பாடு சிறந்துரைஇ - நிலநெஞ் சுட்க வோவாது சிலைத்தாங் - கார்தனி பொழிந்த வார்

பெய்யற் கடைநா - ளின்றுநா ளூலந்த வாலா வெண்மழை - வான்றோ யுயர்வரை யாடும் வைகறைப் - புதலே ரணிந்த காண்பின் காலைத் - தண்ணறும் படுநீர் மாந்திப் பதவருந்து - வெண்புறக் குடைய திரிமருப் பிரலை - வார்மண லொருசிறைப் பிடவவிழ் கொழுநிழற் - காமர் துணையோ டமர்துயில் வதிய - வரக்குநிற வுருவி னீயன் மூதாய் - பரப்பி யவை போற் பாஅய்ப் பலவுடன் - னீர்வார் மருங்கி னீரணி திகழ - வின்னும் வாரா ராயி னன்னுதல் - யாதுகொன் மற்றவர் நிலையே காதலர் - கருவிக் காரிடி யிரீஇய - பருவ மன்றவர் வருதுமென் றதுவே." பிரிவிடையாற்றாது தோழிக்கு உரைத்தது. இம் மணிமிடைபவளத்து முல்லைக்கண் முன்பனியும் வைகறையும் ஒருங்கு வந்தன.

"தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலி - னல்லார்ந் தலவுற வீன்றவள் கிடக்கைபோற் - பல்பய முதவிய பசுமைதீ ரகன்ஞாலம் - புல்லிய புனிறொரீஇப் புதுநல மேர்தர - வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்கொள - விளையவ ரைம்பால்போ லெக்கர்போழ்ந் தறல்வார - மாவீன்ற தளிர்மிசை மாயவ டிதலைபோ - லாயிதழ்ப் பன்மல ரையகொங் குறைத்தர - மேதக விளவேனி லிறுத்தந்த பொழுதினற்; சேயார்கட் சென்றவென் னெஞ்சினைச் சின்மொழி - நீகூறும் வரைத்தன்றி நிறுப்பென்ம னிறைநில் - வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர்தீண்டி - நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம்; போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடுங் கொள்கையைச் - சூழ்பாங்கே சுடரிழாய் கரப்பென்மற் கைநில் - வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணு மிருந்தும்பி - யாழ்கொண்ட விமிழிசை யியன்மாலை யலைத்தரூஉம்; தொடிநிலை நெகிழ்த்தார்கட் டோயுமென் னாருயிர் - வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவு - நெடுநிலாத் திறந்துண்ண நிரையிதழ் வாய்விட்ட - கடிமலர் கமழ் நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம்; எனவாங்கு, வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப் - பிரிந்துசெய் பொருட்பிணி பின்னோக்கா தெய்திநம் - மருந்துயர் களைஞர் வந்தனர் - திருந்தெயி றிலங்குநின் றேமொழி படர்ந்தே." இதில் வேனிலும் வாடையுங் கங்குலும் மாலையும் வந்தன. வந்தாரொன ஆற்றுவித்தது.

"அம்ம வாழி தோழி சிறியிலைக் - குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய - வாவ லுவக்கு மாலையு - மின்றுகொல் காதலர் சென்ற நாட்டே." இவ் ஐங்குறுநூறு பாலைக்கண் மாலைவந்தது.

"தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற் - கடும்ப சல் வருந்திக் கையறு மாறு - மாலை நெய்தலுங் கூம்பக் - காலை வரினுங் களைஞரோ விலரே." இவ் ஐங்குறுநூறு நெய்தற்கண் மாலை வந்தது. பருவ வரவின்கண் மாலைப்பொழுது கண்டு ஆற்றுளாய தலைவி தோழிக்குக் கூறியது.

"தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற் - பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போ - லெல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய - நல்லாற்றி னெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பி - னல்லது மலைத்திருந் தறநெறி நிறுக்கல்லா - மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர - வெல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை * * * பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழ - லினிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய - தனியவ ரிடும்பைகண் டினைதியோ வெம்போல - வினிய செய் தகன்றானை யுடையையோ நீ" என நெய்தற்கலியுட் கங்குலும் மாலையும் முன்பனியும் வந்தன. ஒழிந்தனவும் மயங்குமாறு வந்துழிக் காண்க.

கங. | உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே.

இஃது எய்தாதெய்துவித்தது. (இ - ள்.) உரிப்பொருள் அல்லன = உரிப்பொருளென்று ஓதப்படும் ஐந்திணையும் அல்லாத கைக்கிளையும் பெருந்திணையும்: மயங்கவும் பெறும் = நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும்.—எ - று. உம்மை எச்சவும்மையாதலின் உரிப்பொருளாக எடுத்த பாலையும் நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும் என்றவாறும். பாலையென்பது ஒன்று பிரிந்து பலவாகிய கூற்றின்மேற்றாதலின் ஒற்றுமைப்பட்டு நிகழ்கின்றார் இருவர் பிரிந்துவரலும் பாலையாமன்றே! அதனால், அதுவுங் குணங் காரணமாய்ச் செம்பால் செம்பாலையாயினாற்போல நின்றது. "ஊர்க்கானிவந்த" என்னுங் குறிஞ்சிக்கலியுள் "ஆய்தூவி யனமென வணிமயிற் பெடையெனத் - தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினல - மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப் - பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ." என்பது நிலம்வரையாது வந்த கைக்கிளை. இதனைக் குறிஞ்சியுட் கோத்தார் புணர்ச்சியெதிர்ப்பாடாகலின்.

"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும் - புல்லாளே வாயர் மகள்" "வளியா வறியா வுயிர்காவல் கொண்டு - நளிவாய் மரு

ப்பூஞ்சு செஞ்சினூர் தோய்தற் - கெளியவோ வாயர்மக டோள்" "முள்ளெயிற் றேள ரிவளைப் பெறுமிதோர் - வெள்ளெயிற்றெருத் தொடுங்கு வான்; ஒள்ளிழை, வாருறு கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற் - காரிகத னஞ்சான்கொள் பவன்." என்றாற்போல ஏறுதழுவினாற்கு உரியள் இவளென வந்த கைக்கிளைகளெல்லாம் முல்லைக்கலி பலவற்றுள்ளுங் காண்க. "முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே" என்பதனான் அவை கைக்கிளையாயின.

இனி "எழின்மருப்பெழில்வேழம்" என்றது முதலிய நான்கு பாட்டும் ஏறிய மடற்றிறமான பெருந்திணை. என்னை? "மாமேலாற்றா மடல்புணையா நீந்துவேன் - றேமொழி மாத நுரூஅ துறீஇய - காமக் கடலகப் பட்டு." என்றாற்போல்வன வருதலின். "புரிவுண்டபுணர்ச்சி" என்றது முதலிய ஆறு பாட்டுந் தேறுதலொழிந்த காமத்து மிகுதிறமாகிய பெருந்திணை. இவற்றை நெய்தலுட் கோத்தார் சாக்காடு குறித்த இரங்கற்பொருட்டாகலின். கூனுங் குறளும் மூங்குஞ் செவிடும் உறழ்ந்துகூறும் பெருந்திணையும் ஊடற்பகுதியவாகலின் மருதத்துட்கோத்தார். "கல்லாப் பொதுவனைநீ மாறு" எனப் பொதுவியர் கூறலும் "ஏடாஅக் கரும் ...ன்றநீ தோளாளைக் காணின் - விடாஅலேம் பென்று ரெமர்." எனப் பொதுவர் கூறலும் மிக்ககாமத்துமிடலாகிய பெருந்திணையாகலின் முல்லையுட் கோத்தார். "நறவினைவைாந்தார" "ஈன்டு நீர்மிசை" என்னுங் கலிகளுங் காமத்து மிகுதிறத்தான் அரசனை நோக்கிச் சென்றோர் கூறியவாகலின் மருதத்துக் கோத்தார்.

இனி "வானமூர்ந்த வயங்கொளி மண்டில - நெருப்பெனச் சிவந்த வுருப்பவிர் காட்டு" எனக் காடுறையுலகத்துப் பாலை வந்தது. "தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக - அடங்காதாரமிடல்சாய வமரர்வந் திரத்தலின் - மடங்கல்போற் சினைஇ மாயஞ்செய வுணரைக் - கடந்தடு முன்பொடு முக்கணான் மூவெயிலு - முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலிற் - சிறப்பருங் கணிச்சியோன் சினவலி னவ்வெயி - லுறுபெற் றுதிர்வன போல் வரைபிளந் தியங்குந - ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை - மறப்பருங் காதலி யவளின் டொழிய - விறப்பத் துணிந்தனிர் கேண்மின் மற்றைஇய." இது மைவரையுலகத்துப் பாலை வந்தது. "மறந்தவர்க்கமையராயினும்" என்னும் அகப்பாட்டுத் தீம்புனலுலகத்துப் பாலை வந்தது. "அருளிலாளர் பொருள்வயி னகறல்" என்னும் அகப்பாட்டினுட் பெருமணலுலகத்துப் பாலை

வந்தது. இன்னும் பிறவுஞ் சான்றோர் செய்யுட்கண்ணே உரிப்பொருள் மயங்கியுங் காலங்கண் மயங்கியும் வருவனவெல்லாம் இதனான் அமைத்துக்கொள்க.

கச. புணர்தல் பிரித லிருத்த லிரங்க
லூட லிவற்றி னிமித்த மென்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.

இதுவும் மேனிறுத்த முறையானன்றியும் அதிகாரப்பட்டமைகொண்டு உரிப்பொருள்கூறுகின்றது ; உரிப்பொருள் உணர்ந்தல்லது உரிப்பொருளல்லன உணரலாகாமையின். (இ-ள்.) புணர்தலும் புணர்தனிமித்தமும் பிரிதலும் பிரிதனிமித்தமும் இருத்தலும் இருத்தனிமித்தமும் இரங்கலும் இரங்கனிமித்தமும் ஊடலும் ஊடனிமித்தமும் என்ற பத்தும் ஆராயுங்காலை ஐந்திணைக்கும் உரிய பொருளாம்.—எ-று. தேருங்காலை என்றதனாற் குறிஞ்சிக்குப் புணர்ச்சியும் பாலைக்குப் பிரிவும் முல்லைக்கு இருத்தலும் நெய்தற்கு இரங்கலும் மருதத்திற்கு ஊடலும் அவ்வவநிமித்தங்களும் உரித்தென்று ஆராய்ந்துணர்க. இக்கருத்தேபற்றி "மாயோன்மேய" என்பதனுள் விரித்துரைத்தவாறுணர்க.

அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அஃது இருவர்க்கும் ஒப்ப நிகழ்தலானும் புணர்ச்சியை முற்கூறிப், புணர்ந்துழியல்லது பிரிவின்மையானும் அது தலைவன்கண்ணதாகிய சிறப்பானுந் தலைவிபிரிவிற்குப் புலனெறிவழக்கின்மையானும் பிரிவினை அதன்பிற்கூறிப், பிரிந்துழித் தலைவி ஆற்றியிருப்பது முல்லையாகலின் இருத்தலை அதன்பிற்கூறி, அங்ஙனம் ஆற்றியிராது தலைவனேவலிற் சிறிது வேறுபட்டிருந்து இரங்கல் பெரும்பான்மை தலைமகளதேயாதலின் அவ்விரங்கற்பொருளை அதன்பிற்கூறி, இந்நான்கு பொருட்கும் பொதுவாதலானுங் காமத்திற்குச் சிறத்தலானும் ஊடலை அதன்பிற்கூறி இங்ஙனம் முறைப்படுத்தினார். நான்குநிலத்தும் புணர்ச்சிநிகழுமேனும் முற்பட்ட புணர்ச்சியே புணர்தற்சிறப்புடைமையிற் குறிஞ்சியென்று அதனை முற்கூறினார். அவை இயற்கைப்புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற்கூட்டமுந் தோழியிற்கூட்டமும் அதன் பகுதியாகிய இருவகைக் குறிக்கண் எதிர்ப்பாடும் போல்வன. தலைவன் தோழியைக் குறையுறும் பகுதியும் ஆண்டுத் தோழிகூறுவனவுங் குறைநேர்தலும் மறுத்தலும் முதலியன புணர்ச்சிநிமித்தம். இனி, ஓதலுந் தூதும்

புகையும் அவற்றின்பகுதியும் பொருட்பிரிவும் உடன்போக்கும் பிரிவு. "ஒன்றாத் தமரினும் பருவத்துஞ் சுரத்துந்" தோழியொடு வலித்தன் முதலியன பிரிதனிமித்தம். பிரிந்தபின் தலைவி வருந்து வனவுந் தோழியாற்றுவித்தனவும் பாலையாதலிற் பின்னொருகாற் பிரிதற்கும் நிமித்தமாம்; அவை பின்னர்ப்பிரியும் பிரிவிற்கு முன் னிகழ்தலின். இனித் தலைவி பிரிவுணர்த்தியவழிப் பிரியானென்றி ருத்தலும் பிரிந்துழிக் குறித்தபருவமன்றென்று தானே கூறுத லும் பருவம் வருந்துணையும் ஆற்றியிருந்தமை பின்னர்க் கூறு வனவும் போல்வன இருத்தல். அப்பருவம் வருதற்கு முன்னர்க் கூறுவன முல்லை சான்ற கற்பன்மையிற் பாலையாம். இனிப் ப ருவங்கண்டு ஆற்றாது தோழிகூறுவனவும் பருவமன்றென்று வற் புறுத்தினவும் வருவனென்று வற்புறுத்தினவுந் தலைவன் பாச றைக்கண் இருந்து உரைத்தனவும் அவைபோல்வனவும் நிமித்த மாதலின் இருத்தனிமித்தமெனப்படும். இனிக் கடலுங் கானலுங் கழியுங் கண்டொறும் இரங்கலுந் தலைவன் எதிர்ப்பட்டு நீங்கிய வழி இரங்கலும் பொழுதும் புணர்துணைப்புள்ளுங் கண்டு இர ங்கலும் போல்வன இரங்கல். அச்சுடல் முதலியனவுந் தலைவன் நீங்குவனவுமெல்லாம் நிமித்தமாம். புலவி முதலியன ஊட லாம். பரத்தையும் பாணனும் முதலியோர் ஊடனிமித்தமாம். ஏனையவும் வழக்கியலான் நால்வகை நிலத்துஞ் சிறுபான்மை வருமேனும் பெரும்பான்மை இவை உரியவென்றற்குத் திணைக்கு ரிப்பொருளே யென்றார்.

உரிமை குணமாதலின் உரிப்பொருள் பண்புத்தொகை.

உ-ம். "கோடலெதிர்முகைப் பசுவீ முல்லை - நாறிணர்க் குவ ளையோ டிடைப்பட விரைஇ - யைதுதொடை மாண்ட கோதை போ ல - நறிய நல்லோண் மேனி - முறியினும் வாயது முயங்கற்கு மினி து." இக்குறுந்தொகை புணர்ந்துழி மகிழ்ந்து கூறியது.

"அல்குபடர் உழந்த வரிமதர் மழைக்கட் - பல்பூம் பகைத் தழை நுடங்கு மல்குற் - றிருமணி புரையு மேனி மடவோ - ளியார் மகள் கொல்லிவ டந்தை வாழியர் - துயர முறீஇயின ளெம்மே யகல்வய - லரிவன ரரிந்துந் தருவனர் பெற்றுந் - தண்சேறு தாய மதனுடை நோன்றாட் - கண்போ னெய்தல் போரவிற் பூக்குந் - திண்டேர்ப் பொறையன் றொண்டித் - தின்டிறம் பெறுகவிவ ளீன்ற தாயே." இந்நற்றிணையும் "முல்லையே முகிழ்முகிழ்த்தனவே" என் னுங் குறுந்தொகையும் புணர்தனிமித்தம்.

“அன்றவ ணொழிந்தன்று மிலையே வந்துநனி - வருந்தினை வா
ழிய னெஞ்சே பருந்திருந் - துயாவிளி பயிற்று மியாஅவுயர் நனந்
தலை - யருமுடி பருளியிற் பொருடெரிந் திசைக்குங் - கடுங்குரற்
குடிஞைய நெடும்பெருங் குன்ற - மெம்மொ டிறத்தலுஞ் சொல்
லாய் நின்னின் - றேழிலையைச் சூழ்ந்தனை யாயிற் றவிராது - செல்
லினிச் சிறக்கநின் னுள்ளம் வல்லே - மறவ லோம்புமதி யெம்
மே நறவின் - சேயித ழனைய வாகிக் குவளை - மாயிதழ் புரையு
மலிர்கொ ளீரிமை - யுள்ளகங் கனல வுள்ளுதொ றுலறிப் - பழங்
கண் கொண்டக விழந்துவீ ழவிரறல் - வெய்ய வுகுதர வெரீஇப்
பையெனச் - சில்வளை சொரிந்த மெல்லிறை முன்கைப் - பூவீ
கொடியிற் புல்லெனப் போகி - யடர்செ யாய்கற் சுடர்துணை யாக-
லியங்காது வதிந்தநங் காதலி - யுயங்குசாய் சிறுபுற முயங்கிய
பின்னே.” இது மறவலோம்புமதியெனப் பிரிவுகூறிற்று.

“அறியாய் வாழி தோழி யிருளற - விசும்புடன் விளக்கும்
விரைசெலற் றிகிரிக் - கடுங்கதி ரெறித்த விடுவாய் நிறைய - நெடு
ங்கான் முருங்கை வெண்பூத் தாஅய - நீரற வறந்த நிரம்பா நீளி
டை - வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு - கள்
ளியங் காட்ட கடத்திடை யுழிஞ்சி - லுள்ளுநன் வாடிய சுரிமூக்கு
நொள்ளை - பொரியரை புதைத்த புலம்புசொ லியவின் - விழுத்
தொடை மறவர் வில்லிடை வீழ்ந்தோ - ரெழுத்துடை நடுகல் லின்
னிழல் வதியு - மருஞ்சுரக் கவலை நீந்தி யென்று - மில்லோர்க்
கில்லென் றியைவது காத்தல் - வல்லோர் நெஞ்சம் வலிப்ப நம்
மினும் - பொருளே காதலர் காத - லருளே காதல ரென்றி
நீயே.” இது பிரிதனிமித்தம். வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி
கூறியது.

“வண்டுபடத் ததைந்த கொடியிண ரிடையிடு - பொன்
செய் புனையிழை கட்டிய மகளிர் - கதுப்பிற் றோன்றும் புதுப்
பூங் கொன்றைக் - கானங் காரெனக் கூறினும் - யானோ தேறே
னவர் பொய்வழங் கலரே.” இது பருவங்கண்டுழியும் பொய்
கூறானென்று ஆற்றியிருந்தது. “அவரோ வாரார் முல்லையும் பூத்
தன - பறியுடைக் கையர் மறியினத் தொழியப் - பாலொடு வந்து
கூழொடு பெயரும் - யாடுடை யிடைமகன் சென்னிச் - சூடிய வெ
ல்லாஞ் சிறுபசு முகையே.” இது பருவங்கண்டாற்றாது கூறியது.
இது முல்லைசான்ற கற்பாயிற்று; அவன் கூறிய பருவம் வருந்து
ணையும் ஆற்றியிருத்தலின்.

"மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை - கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய - பருவம் வாரா வளவை நெரிதரக் - கொம்புசேர் கொடியிணரூழ்த்த - வம்ப மாரியைக் காரென மதித்தே." இது பருவமன்றென்று வற்புறுத்தலின் இருத்தனிமித்தமாயிற்று. "தேம்படு சிமய" என்னுங் களிற்றியானைநிரையும் இருத்தனிமித்தமாம்; இக்காலம்வருந்துணையும் ஆற்றினளெனத் தான் வருந்துதலின்.

"கானலுங் கழறாது கழியுங் கூறாது - தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா - தொருநீ யல்லது பிறிதியாது மிலனே - யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தல் - கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத் - தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து - பறவை கிளருந் துறைவனை நீயே - சொல்லல் வேண்டுமா லலவ பலகாற் - கைதையம் படுசினை யெவ்வமொ டசாஅங் - கடற்சிறு காக்கைக் காமர் பெடையொடு - கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின் - வெள்ளிறாக் கனவு நள்ளென் யாமத்து - நின்னுறு விழுமங் களைந்தோ - டன்னுறு விழும நீந்துமோ வெனவே" இவ் அகப்பாட்டு நெய்தல். இரங்கலுரிப்பொருட்டாயிற்று.

"ஞாயிறு பட்ட வகல்வாய் வானத் - தளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை - யிறையுற வோங்கிய நெறியயன் மராஅத்த - பிள்ளை யுள்வாய்ச் செரீஇய - விரைகொண் டவையும் விரையுமாற் செலவே." இஃது இரங்கனிமித்தம்.

"தருக்கேம் பெருமநின் னல்கல் விருப்புற்றுத் - தாழ்ந்தாய் போல் வந்து தகவில செய்யாது - சூழ்ந்தவை செய்துமற் றெம்மையு முள்ளுவாய் - வீழ்ந்தார் விருப்பறக் கால்." இது ஊடல்.

"புரியுடை நன்மான் பொங்குளை யன்ன - வடைகரை வேழம் வெண்பூப் பகருந் - தண்டுறை யூரன் பெண்டிர் - துஞ்சும் யாமத்துந் துயிலறி யாரோ." இது ஊடனிமித்தம்.

பிறவும் வேறுபட வருவனவெல்லாம் அறிந்து இதன்கண் அடக்கிக்கொள்க. (கச)

கரு. கொண்டுதலைக் கழியினும் பிரிந்தவ ணிரங்கினு
முண்டென மொழிப வோரிடத் தான.

இது முற்கூறிய ஐந்தனுட் பாலைக்கட் குறிஞ்சிமயங்குமாறும் நெய்தன்மயங்குமாறுங் கூறுகின்றது. (இ - ள்.) கொண்டு தலைக்கழியினும் = தலைவன் தலைவியை உடன்கொண்டு அவள் தமரிடத்துநின்று பிரியினும்: பிரிந்து அவண் இரங்கினும் = தலைவன் உடன்கொண்டுபோகாது தானே போதலிற் தலைவி மனையின்கண் இருந்து இரங்கினும்: ஓரிடத்தான = இவ்விரண்டும் ஓரிடத்தின்கண்ணே ஒரொழுக்கமாயின: உண்டென மொழிப = இவ்வொழுக்கந்தான் நான்குவருணத்திலும் வேளாண்வருணத்திற்கு உண்டென்று சொல்லுவர் ஆசிரியர்.—எ - று. கொண்டு தலைக்கழிதலால் இடையூறின்றிப் புணர்ச்சி நிகழுமெனினும், பிரிவு நிகழ்ந்தவாறென்னையெனின், "இடைச்சுர மருங்கி னவட மரெய்திக் - கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்கஞ ரெய்தி" என மேலே கூறுவானாதலிற் தந்தையுந் தன்னையருந் தேடிப் பின் வந்து இவரொழுக்கத்திற்கு இடையூறுசெய்வரொன்னுங் கருத்தே இருவருள்ளத்தும் பெரும்பான்மை நிகழ்தலிற் பிரிவுநிகழ்ந்தவாறாயிற்று. ஆகவே பாலைக்கண்ணே குறிஞ்சி நிகழ்ந்ததாயிற்று.

உ - ம். "வேனிற் பாதிரிக் கூனி மாமலர் - நறைவாய் வாடா நீரறு நாட்சுர - மரியார் சிலம்பிற் சீறடி சிவப்ப - வெம்மொ டொராறு படீஇயர் யாழநின் - பொம்ம லோதி பொதுள வாரி - யரும்பற மலர்ந்த வாய்பூ மராஅத்துச் - சுரும்புகு ழலரி தைஇ வேய்ந்தநின் - றேம்பாய் கூந்தற் குறும்பல மொசிக்கும் - வண்டுகடிந் தோம்ப றேற்று யணிகொள - நுண்கோ லெல்வளை தெளிர்க்கு முன்கை - மெல்லிறைப் பணைத்தோள் விளங்க வீசி - வல்லுவை மன்ற நடையே கள்வர் - பகைமிகு வலைச் சென்னெறிக் காண்மார் - மிகைமரஞ் சேர்த்திய கவைமுறி யாஅத்து - நாரரை மருங்கி னீர்வரப் பொழித்துக் - களிறு சுவைத்திட்ட கோதுடைத் ததரல் - கல்லா வுமணர்க்குத் தீமூட் டாகுந் - துன்புறு தகுந வாங்கட் புன்கோட் - டரிலிவர் புற்றத் தலகினா நசைஇ - வெள்ளரா மிளிர வாங்கும் - பிள்ளை யெண்கின் மலைவயி னானே." இது கொண்டுதலைக்கழிதற்கட் தலைவன் நடையை வியந்தது. அகம். "அழிவில முயலும்" என்பது பாலைக்கட் புணர்ச்சி நிகழ்ந்தது.

இனித் தலைவி பிரிந்திருந்து மிகவும் இரங்குதலின் இரங்கினுமெனச் சூத்திரஞ்செய்தான், அதனானே பாலைப்பொருட்கண் இரங்கற்பொருள் நிகழுமென்றான். உ - ம். "ஓங்குமலைச் சிலம்

பிற் பிடவுடன் மலர்ந்த - வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன - வூன்பொதி யவிழாக் கோட்டுகிர்க் குருளை - மூன்றுடன் னீன்ற முடங்கர் நிகழ்ந்த - துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப் - பொறிகிள ருழுவைப் பேழ்வா யேற்றை - யறுகோட் டுழைமா னாண்குர லோர்க்கு - நெறிபடு கவலை நிரம்பா நீளிடை - வெள்ளி வீதியைப் போல நன்றுஞ் - செலவயர்ந் திசினால் யானே பலபுலந் - துண்ணா வுயக்கமொ டுயிர்செலச் சாஅய்த் - தோளுந் தொல்கவின் றொலைய நாளும் - பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி - மருந்துபிறி தின்மையி னிருந்துவினை யிலனே." இதனுள் வெள்ளிவீதியைப்போலச் செல்லத்துணிந்து யான் பலவற்றிற்கும் புலந்திருந்து பிரிந்து ஓரிடத்தினின்றும் பிரிந்தபெயர்வுக்குத் தோளலந்தொலைய உயிர்செலச் சாஅய் இரங்கிப் பிறிது மருந்தின்மையிற் செயலற்றேனென மிகவும் இரங்கியவாறு மெய்ப்பாடுபற்றியுணர்க. இது அகம். "வானமூர்ந்த" என்னும் அகப்பாட்டினுள் "மெய்புகு வன்ன கைகவர் முயக்க - மவரும் பெறுகுவர் மன்னே' எனக்கூறி, அழுதன் மேவாதாய்க் கண்ணுந் துயிலுமென இரக்கமீக் கூறியவாறுமுணர்க. "குன்றியன்ன" என்னும் அகப்பாட்டும் அது. இவை பாலைக்கண் இரங்கல் நிகழ்ந்தன. இங்ஙனம் இச்சூத்திரவிதி உண்மையிற் சான்றோர் அகத்தினுங் கலியினும் ஐங்குறுநூற்றினும் பாலைக்கண்ணே உடன்போக்கு நிகழ்ந்த செய்யுட்களைக் கோத்தாரொன்றுணர்க.

இல்லிருந்து செந்தியோம்பல் வேளாளர்க்கு இன்மையிற் கொண்டுதலைக்கழிதல் அவர்க்கு உரியதாயிற்று. ஒழிந்த மூன்றுவருணத்தோருந் தமக்கு உரிய பிரிவின்கட் செந்தீயோம்புவாலா நாட்டிப் பிரிப. ஆகலான் அவர்க்கு ஏனைப்பிரிவுகள் அமைந்தன. இதனைக் "கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே" எனக் கற்பியலிற் கரணம் வேறாகக்கூறுமாறு ஆண்டுணர்க. "வேர்முழுதுலறிநின்ற" என்னும் மணிமிடைபவளத்துட் "கூழுடைத் தந்தை யிடனுடை வரைப்பி - னாழடி யொதுக்கிது முயங்கும்" எனவுங் "களியும்பந்தும்" என்னுங் களிற்றியானைநிரையுண் "மல்குபத மிகுத்த கடியுடை வியனகர்" எனவும், நெல்லுடைமை கூறிய அதனானே வேளாண் வருணமென்பது பெற்றாம். (௪௫)

௪௬. கலந்த பொழுதுங் காட்சியு மன்ன.

இதுவும் பாலைக்கட் குறிஞ்சி மயங்குமென்கின்றது. (இ - ள்.) கலந்த பொழுதும் காட்சியும் = இயற்கைப்புணர்ச்சி நிக

ழ்ந்த காலமும் அதன்முன்னர்த்தாகிய வழிநிலைக்காட்சி நிகழ்ந்த காலமும்: அன்ன = முன்னர்ச்சூத்திரத்துட் கொண்டுதலைக்கழிந்த காலத்தை உடைய.—எ - று. என்றது, முன்னர்க் குறிஞ்சி பாலைக்குரிய இருவகை வேனிற்கண் நிகழ்ந்தாற்போல இவையும் இருவகை வேனிற்கண் நிகழுமென்றவாறு. மழைகூர் காலத்துப் புறம்போந்து விளையாடுதலின்மையின் எதிர்ப்பட்டுப் புணர்தல் அரிதாகலானும், அதுதான் இன்பஞ் செய்யாமையானும் இருவகை வேனிற்காலத்தும் இயற்கைப்புணர்ச்சி நிகழுமென்றது இச்சூத்திரம்.

முன்னர்க் கூதிரும் யாமமும் முன்பனியுஞ் சிறந்ததென்றது இயற்கைப்புணர்ச்சிப்பின்னர்க் களவொழுக்கம் நிகழ்தற்குக்காலமென்றுணர்க. அது "பூவொத் தலமருந் தகைய வேயொத் - தெல்லாரு மறிய நோய்செய் தனவே - தேமொழித் திரண்ட மென்றோண் மாமலைப் - பரீஇ வித்திய வேனற் - குரீஇயோப்புவாள் பெருமழைக் கண்ணே." எனவரும். இக் குறுந்தொகையுட் குரீஇயோப்புவாள் கண்ணென வழிநிலைக்காட்சியைப் பாங்கற்குக் கூறினமையின் அத்திணைக்கதிர் முற்றுதற்குஉரிய இளவேனிலும் பகற்பொழுதுங் காட்சிக்கண் வந்தன. "கொங்குதேர்வாழ்க்கை" என்பதும் இளவேனிலாயிற்று; தும்பி கொங்குதேருங் காலம் அதுவாகலின். கலத்தலுங் காட்சியும் உடனிகழுமென்றுணர்க. கலத்தலின்றிக் காட்சிநிகழ்ந்ததேல் உள்ளப்புணர்ச்சியேயாய் மெய்யுறுபுணர்ச்சியின்றி வரைந்துகொள்ளுமென்றுணர்க. (கசு)

கஎ. முதலெனப் படுவ தாயிரு வகைத்தே.

இது முற்கூறிய முதற்பகுதியைத்தொகுத்து எழுதிணையும் இவ்வாற்றானுரியவென்கின்றது. (இ - ள்.) முதல் எனப் படுவது= முதலென்று கூறப்படும் நிலனும் பொழுதும்: அ இரு வகைத்து = அக்கூறியவாற்றான் இருவகைப்படும் யாண்டும்.—எ - று. இது கூறிற்றென்றலென்னும் உத்திவகை. இதன்பயன் முதல் இரண்டு வகை என்றவாறும். தமக்கென நிலனும் பொழுதும் இல்லாத கைக்கிளையும் பெருந்திணையும் நிலனில்லாத பாலையும் பிற முதலோடு மயங்கிற்றேனும் அவை மயங்கிய நிலனும்பொழுதும் அவ்வத்திணைக்கு முதலெனப்படுமென்பதாம். இது முன்னின்ற சூத்திரத்திற்கும் ஒக்கும். (கஎ)

4. இருவகைவேளிர்க் கணிகழ்தல் உடன்
கொண்டு போதல்.

கஅ. தெய்வ முணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
யவ்வகை பிறவுங் கருவென மொழிப.

இது நிறுத்தமுறையானேயன்றி அதிகாரப்பட்டமையின் உரிப்பொருள் கூறி ஒழிந்த கருப்பொருள் கூறுதனுதலிற்று. (இ-ள்.) தெய்வம் உணாவே மா மரம் புள் பறை செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ = எல்லாத்திணைக்குந் தெய்வம் உணா விலங்கு மரம் புள்ளுப் பறை தொழிலென்று இவற்றை யாழின் கூற்றோடேகூட்டி : அவ்வகை பிறவும் கரு என மொழிப = அவைபோல்வன பிறவுங் கருவென்று கூறுவர் ஆசிரியர்.—எ-று. யாழின்பகுதி என்றதனான் மற்றையபோலாது பாலைக்குப் பாலையாழென வேறுவருதல்கொள்க. அவ்வகை பிறவும் என்றதனான் எடுத்தோதிய தெய்வம் ஒழிய அவற்று உட்பகுதியாகிய தெய்வமும் உள. அவை "மாயோன்மேய" என்புழிக் காட்டினாம். இதனானே பாலைக்குத் தெய்வமும் இன்றாயிற்று. இன்னும் அவ்வகை என்றதனானே பாலைக்கு நிலம்பற்றாது காலம்பற்றிக் கருப்பொருள் வருங்காற் றம் இயல்புதிரிய வருவனவும் வருமென்று கொள்க. "எந்நிலமருங்கிற்பூ" என்பதனாற் பூவும் புள்ளும் வரைவின்றி மயங்குமெனவே ஒழிந்த கருவும் மயங்குமென்பது "சூத்திரத்துப்பொருளன்றியும்" என்பதனான் உரையிற்கொள்க. அது "அயந்திகழ் நறுங்கொன்றை" என்னும் நெய்தற்கலியுட் காண்க.

முல்லைக்கு உணா, வரகுஞ் சாமையும் முதிரையும்; மா, உழையும் புல்வாயும் முயலும்; மரம், கொன்றையுங் குருந்தும்; புள், கானக்கோழியுஞ் சிவலும்; பறை, ஏறுகோட்பறை; செய்தி, நிரைமேய்த்தலும் வரகுமுதலியன களைகட்டலுங் கடாவிடுதலும்; யாழ், முல்லையாழ். பிறவுமென்றதனாற், பூ, முல்லையும் பிடவுந் தளவுந் தோன்றியும்; நீர், கான்யாறு; ஊர், பாடியுஞ் சேரியும் பள்ளியும்.

குறிஞ்சிக்கு உணா, ஐவனநெல்லுந் தினையும் மூங்கிலரிசியும்; மா, புலியும் யானையுங் கரடியும் பன்றியும்; மரம், அகிலும் ஆரமுந் தேக்குந் திமிசும் வேங்கையும்; புள், கிளியும் மயிலும்; பறை, முருகியமுந் தொண்டகப்பறையும்; செய்தி, தேன் அழித்தலுங் கிழங்கு அகழ்தலுந் தினைமுதலியன விளைத்தலுங் கிளி

கடிதலும்; யாழ், குறிஞ்சியாழ். பிறவுமென்றதனாற், பூ, காந்தளும் வேங்கையுஞ் சுனைக்குவளையும்; நீர், அருவியுஞ் சுனையும்; ஊர், சிறுகுடியுங் குறிச்சியும்.

மருதத்திற்கு உணா, செந்நெல்லும் வெண்ணெல்லும்; மா, எருமையும் நீர்நாயும்; மரம், வஞ்சியுங் காஞ்சியும் மருதமும்; புள், தாராவும் நீர்க்கோழியும்; பறை, மணமுழவும் நெல்லரிகிணையும்; செய்தி, நடுதலுங் களைகட்டலும் அரிதலுங் கடாவிடுதலும்; யாழ், மருதயாழ். பிறவுமென்றதனாற், பூ, தாமரையுங் கழுநீரும்; நீர், யாற்றுநீரும் மனைக்கிணறும் பொய்கையும்; ஊர், ஊர்களென்பனவேயாம்.

நெய்தற்கு உணா, மீன்விலையும் உப்புவிலையும்; மா, உமண்பகடு போல்வன; முதலையுஞ் சுறவும் மீனாதலின் மாவென்றல் மரபன்று. மரம், புன்னையும் ஞாழலுங் கண்டலும்; புள், அன்னமும் அன்றிலும் முதலியன; பறை, மீன்கோட்பறை; செய்தி, மீன்படுத்தலும் உப்புவிளைத்தலும் அவைவிற்றலும்; யாழ், நெய்தல்யாழ். பிறவுமென்றதனாற், பூ, கைதையும் நெய்தலும்; நீர், மணற்கிணறும் உவர்க்குழியும்; ஊர், பட்டினமும் பாக்கமும்.

இனிப் பாலைக்கு உணா, ஆறலைத்தனவுஞ் சூறைகொண்டனவும், மா, வலியழிந்தயானையும் புலியுஞ் செந்நாயும்; மரம், வற்றின இருப்பையும் ஓமையும் உழிஞையும் ஞெமையும்; புள், கழுகும் பருந்தும் புறவும்; பறை, சூறைகோட்பறையும் நிரைகோட்பறையும்; செய்தி, ஆறலைத்தலுஞ் சூறைகோடலும்; யாழ், பாலையாழ். பிறவுமென்றதனாற், பூ, மராவுங் குராவும் பாதிரியும்; நீர், அறுநீர்க்கூவலுஞ் சுனையும்; ஊர், பறந்தலை.

இன்னும் பிறவுமென்றதனானே இக்கூறியவற்றிற்குரிய மக்கள்பெயருந் தலைமக்கள்பெயருங் கொள்க. அவை "பெயரும் வினையும்" எனனுஞ் சூத்திரத்துட்காட்டுதும். பிறவுமென்றதனாற் கொள்வன சிறுபான்மை திரிவுபடுதலிற் பிறவுமென்று அடக்கினான். (௧௮)

௧௯. எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்.

இது முற்கூறிய கருப்பொருட்குப் புறனடை. (இ-ள்.) எந் நில மருங்கிற் பூவும் புள்ளும் = எழுதிணை நிகழ்ச்சியவாகிய நால் வகைநிலத்துப் பயின்ற பூவும்புள்ளும்: அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும் = தத்தமக்கு உரியவாகக் கூறிய நிலத்தொடுங் கால த்தொடும் நடவாமற் பிறநிலத்தொடுங் காலத்தொடும் நடப்பி னும்: வந்த நிலத்தின் பயத்த ஆகும் = அவை வந்தநிலத்திற்குக் கருப்பொருளாம்.—எ - று. ஒடு அதனோடியைந்த ஒரு வினைக்கிளவி யாதலின் உடன்சேறல் பெரும்பான்மையாயிற்று. வினைசெய்யிட த்தின் நிலத்திற் காலத்தின் என்பதனான் நிலத்தின்பயத்தவாமெ னப் பொழுதினையும் நிலமென்று அடக்கினான். பூவைக் கருவென ஓ திற்றிலனேனும் முற்கூறிய மரத்திற்குச் சினையாய் அடங்கிற்று. ஒ ன்றெனமுடித்தலான் நீர்ப்பூ முதலியனவும் அடங்கிற்று. இங்ங னம்வருமிடஞ் செய்யுளிடமாயிற்று. உம். "தாமரைக் கண்ணியைத் தண்ணறுஞ் சாந்தினை - நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவ ரின்." இது மருதத்துப்பூக் குறிஞ்சிக்கண்வந்தது. "உடையிவ ளுயிர்வாழா ணீநீப்பி னெனப்பல - விடைகொண்டியா மிரப்பவு மெமகொள்ளா யாயினை - கடையிய வாற்றிடை நீர்நீத்த வறுஞ் சுனை - யடையொடு வாடிய வணிமலர் தகைப்பன." இது மருத த்துப்பூப் பாலைக்கண்வந்தது. "கன்மிசை மயிலாலக் கறங்கியூ ர லர்தூற்றத் - தொன்னல நனிசாய நம்மையோ மறந்தைக்க - வொ ன்னுதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற - வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்." இது குறிஞ்சிக் குப் பயின்ற மயில் பாலைக்கண் இளவேனிற்கண் வருதலிற் பொழு தொடு புள்ளு மயங்கிற்று. கபிலர் பாடிய பெருங்குறிஞ்சியில் வரையின்றிப் பூமயங்கியவாறு காண்க. பிறவும் இவ்வாறு மய ங்குதல்காண்க. ஒன்றெனமுடித்தலாற் பிறகருப்பொருண் மயங் குவன உளவேனுங் கொள்க. (௧௯)

௨௦. பெயரும் வினையுமென் றாயிரு வகைய
திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயரே.

இது பிறவுமென்றதனாற் றழுவிய பெயர்ப்பகுதி கூறுகின் றது. (இ-ள்.) திணைதொறும் மரீஇய திணைநிலைப்பெயர் = நால்வகை நிலத்தும் மரீஇப்போந்த குலப்பெயருந் திணைநிலைப்பெயரும் உரிப் பொருளிலே நிற்றலையுடையபெயரும்: பெயரும் வினையுமென்று அ இருவகைய = பெயர்ப்பெயரும் வினைப்பெயருமென்று அவ்விர

ண்டுகூற்றையுடையவாம்.—எ - று. நால்வகைநிலத்தும் மருவிய குலப்பெயராவன :—குறிஞ்சிக்குக் கானவர் வேட்டுவர் இறவுளர் குன்றுவர் வேட்டுவித்தியர் குறத்தியர் குன்றுவித்தியர் ; ஏனைப் பெண்பெயர் வருமேனும் உணர்க. முல்லைக்குக் கோவலர் இடையர் ஆயர் பொதுவர் இடைச்சியர் கோவித்தியர் ஆய்ச்சியர் பொதுவியர். நெய்தற்கு நுளையர் திமிலர் பரதவர் நுளைத்தியர் பரத்தியர் ; ஏனைப் பெண்பெயர்வருமேனும் உணர்க. மருதத்திற்குக் களமர் உழவர் கடையர் உழத்தியர் கடைச்சியர் ; ஏனைப் பெண்பெயர் வருமேனும் உணர்க. முன்னர் "வந்தநிலத்தின்பயத்த" என்புழிக் காலத்தையும் உடன்கோடலின் ஈண்டுந் திணைதொறுமருவுதலும் பொழுதொடுமருவுதலும் பெறப்படுதலிற் பொழுதுமுதலாக வரும் பாலைக்குத் திணைதொறுமரீஇயபெயருந் திணைநிலைப்பெயருங் கொள்க. எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர் எனவும் மீளி விடலை காளை எனவும் வரும். இனி, உரிப்பொருட்குரிய தலைமக்கள்பெயராவன, பெயர்ப்பெயரும் நாடாட்சிபற்றிவரும் பெயருமாம். குறிஞ்சிக்கு வெற்பன் சிலம்பன் பொருப்பன் கொடிச்சி ; இது ஆண்பாற்கேலாத பெயராயினும் நிலையென்றதனாற்கொள்க. முல்லைக்கு அண்ணல் தோன்றல் குறும்பொறைநாடன் மனைவி. நெய்தற்குக் கொண்கன் துறைவன் சேர்ப்பன் மெல்லம்புலம்பன் : தலைவிபெயர் வந்துழிக்காண்க. மருதத்திற்கு மகிழ்நன் ஊரன் மனையோள் எனவரும். இக்காட்டிய இருவகையினும் பெயர்ப்பெயரும் வினைப்பெயரும் பாடலுட் பயின்றவகையாற் பொருணோக்கியுணர்க. ஈண்டுக்கூறிய திணைநிலைப்பெயரை "ஏவன்மரபின்" என்னுஞ் சூத்திரத்து அறுவகையோனைப் பகுக்குமாறு ஆண்டுணர்க. (௨0)

௨௧. ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய
ராவயின் வரூஉங் கிழவரு முளரே.

இது முன்னர்த் திணைதொறுமரீஇய பெயருடையோரினுந் திணைநிலைப்பெயராகிய தலைமக்களாய் வழங்குவாரும் உளரென முல்லைக்குங் குறிஞ்சிக்கும் எய்தாததெய்துவித்தது. (இ - ள்.) ஆடூஉத் திணைப்பெயர் = முற்கூறிய ஆண்மக்களாகிய திணைதொறுமரீஇய பெயர்களுள் : ஆயர் வேட்டுவர் கிழவரும் உளர் = ஆயரிலும் வேட்டுவரிலும் வருங் கிழவரும் உளர் : அவயின் வரூஉங் கிழவியரும் உளர் = அவ்விடத்து வருந் தலைவியரும் உளர். எ - று. ஆயர் வேட்டுவரென்னும் இரண்டுபெயரோ டெடுத்தோதினாரேனும்

ஒன்றெனமுடித்தலான் அந்நிலங்களுக்கு உரிய வினைப்பெயர்களான் வருவனவுங் கொள்க.

"தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந் - தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த - பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் - பாங்கரு முல்லையுந்தாய் பாட்டங்காற் றோழிநாம் - புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா - மொருங்கு விளையாட வவ்வழி வந்த - குருந்தம்பூக் கண்ணிப் பொதுவன் மற்றென்னை - முற்றிழை யேவர் மடநல்லாய் நீயாடுஞ் - சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ - பெற்றேம்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய் - கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய் - தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய - கோதை புனைகோ நினக்கென்றா னெல்லாநீ - யேதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப் - பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா - யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற் - றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர் - செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது - மையலை மாதோ விடுகென்றேன் றையலாய் - சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப - வல்லாந்தான் போலப் பெயர்ந்தா னவனைநீ - யாயர் மகளிரியல்புரைத் தெந்தையும் - யாயு மறிய வுரைத்தீமின் யானுற்ற - நோயுங் களைகுவை மன்." "ஆயர் மகனையுங் காதலை கைம்மிக ஞாயையு மஞ்சுதி யாயி னரிதரோ - நீயுற்ற நோய்க்கு மருந்து" "தோழிநாங் - காரேறை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர - நாணாது சென்று நடுங்கவுரைத் தாங்குக் - கரந்ததூஉங் கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம் - புல்லினத் தாயர் மகன்" என்றாற்போல்வன பிறவுங்கொள்க. இன்னும் "இறங்குகதிரினிறுத்தன" என்னும் அகப்பாட்டினுள் "வானிகர் புறவிற் கானவர் தங்கை" எனவும் "மெய்யிற்றீரா" என்பதனுள் "வேட்டுவற் பெறலோ டமைந்தனை" எனவும் வருவனவும் பிறவுங் கொள்க.

வேட்டு என்னுந்தொழிலுடையானை வேட்டுவனென்றலிற் குறிப்புவினைப்பெயர்.

"குன்றக் குறவன் காதன் மடமகள் - வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி - வளையண் முளைவா ளெயிற்ற - ளிளைய ளாயினு மாரணங் கினளே." இது வருத்தும் பருவத்தளல்லள் என்ற தோழிக்குக் கூறியது. இப்பத்தினுட் "குறவன்மகள்" எனக்கூறுவன பலபாட்டுக்கள் உள; அவையுங்கொள்க. இவ்வா

ற்றூன் இந்நிலத்து மக்கள்பெயரும் பெற்றும். ஏனைப்பெயர்களில் வந்தனவுளவேற் கொள்க. (உக)

உஉ, ஏனோர் பாங்கினு மெண்ணுங் காலை
யாறு வகைய திணைநிலைப் பெயரே.

இது முல்லையுங் குறிஞ்சியும் ஒழிந்தவற்றுட் திணைதொறு மரீஇய பெயருடையோரிலுந் திணைநிலைப்பெயராகிய தலைமக்களாய் வழங்குவாரும் உளரென எய்தாதநெய் துவித்தது. (இ - ள்.) ஏனோர் பாங்கினுந் திணைநிலைப்பெயர் எண்ணுங் காலை = ஒழிந்த பாலைக்கும் நெய்தற்கும் உரியராகக் கூறிய மக்கள்கூற்றினும் வருந் தலைமக்கள்பெயரை ஆராயுங் காலத்து: ஆறு வகைய = அவை பெரும்பான்மையாகிய கூறுபாட்டினையுடைய.—எ - று. உம். “ சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக் - கொலைவி லெயினர் தங்கைநின் முலைய - சுணங்கென நினைத்தி நீயே - யணங்கென நினையுமென் னணங்குறு நெஞ்சே.” இவ் ஐங்குறுநூறு உடன் போகின்றான் நலம்பாராட்டிய கூற்று. “முளவுமா வல்சி யெயினர் தங்கை - யிளமா வெயிற்றிச்கு நின்னிலை யறியச் - சொல்லினே னிரக்கு மளவை - வெல்வேல் விடலை விரையா தீமே.” இவ் ஐங்குறுநூறு கொண்டுபோங் காலத்திற்குக் கொண்டடன்போக் கொருப்படுத்துவலென்றது. “ கணமா தொலைச்சித் தன்னையர் தந்த - நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு - மலமர வெயிற்றி போல நலமிக - நன்னல நயவர வுடையை - யென்றோற் றனையோ மாவின் றளிரோ.” இவ் ஐங்குறுநூறு வரைவிடைவைத்துப் போகின்றான் மாவினைநோக்கிக் கூறியது. ஏனைப்பெயர்களில் வருவன வந்துழிக்காண்க.

“முற்றா மஞ்சட் பசும்புறங் கடுப்பச் - சுற்றிய பிணர்சூழ்கழி யிறவின் - கணங்கொள் குப்பை யுணங்குதிற நோக்கிப் - புன்னையங் கொழுநிழன் முன்னுய்த்துப் பரப்புந் - துறைநனி யிருந்த பாக்கமு முறைநனி - யினிதும னறிதோ தானே துனிதீர்ந் - தகன்ற வல்குலைதமை நுகர்ப்பின் - மீனெறி பரதவர் மடமகண் - மானேர் நோக்கங் காணு வூங்கே.” இது வரைதற் பொருட்டுத் தலைவி வேறுபாட்டிற்கு ஆற்றாத தோழி சிறைப்புறமாகக் கூறியது. “அறிகரி பொய்த்த லான்றோர்க் கில்லைக் - குறுக வோம்புமின் சிறுகுடிச் செலவே - யிதற்கிது மாண்ட தென்று தகற்பட் - டாண்டொழிந் தன்றென மாண்டகை நெஞ்ச - மயிற்க

ணன்ன மாண்முடிப் பாவை - நுண்வலைப் பரதவர் மடமகள்-கண்வலைப் படூஉங் கான லானே." இது சுழறிய பாங்கற்குக் கூறியது. "கடுந்தே ரேறியுங் காலிற் சென்றுங் * * * னென்னென நினையுமீ கொல் பரதவர் மகளே." எனவரும். இது நற்றிணை. "இவளே, கான நண்ணிய" என்னும் நற்றிணைப்பாட்டினுட் "கடுந்தேர்ச் செல்வர் காதன் மகனே." என்று அவனருமை செய்தயர்த்தலின் அவனை இகழ்ச்சிக்குறிப்பாற் தலைமையாகக்கூறினாள். ஏனைப் பெண்பெயாச்கண் வருவன வந்துழிக் காண்க.

ஏனோர் பாங்கினும் எனப் பொதுப்படக் கூறிய அதனான் மருதநிலத்து மக்களிற் தலைமக்கள் உளராகப் புலனெறிவழக்கஞ் செய்தசெய்யுட்கள் வநதன உளவேற் காண்க. (உஉ)

உங. அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினுங்
கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர்.

இது மேல் நால்வகை நிலத்துந் தலைமக்களாகப்பெறுவரொன்றூர், அவரோயன்றி இவருந் தலைமக்களாவர் கைக்கிளைபெருந்திணைக்கணென்கின்றது. (இ - ள்.) அடியோர்பாங்கினும் = பிறர்க்குக் குற்றேவல் செய்வாரிடத்தும்: வினை வல பாங்கினும் = பிறர் ஏவியதொழிலைச் செய்தல் வல்லோரிடத்தும்: கடி வரையில புறத்து என்மனார் புலவர் = தலைமக்களாக நாட்டிச் செய்யுட் செய்தல் நீக்கப்படாது நடுவணைந்திணைப் புறத்து நின்ற கைக்கிளை பெருந்திணைகளுள்.—எ - று. கூன்பாட்டினுள் "நம்மு ளாருநற் றுமஇயா நம்மு-ணுமுசாஅங் கோனடி தொட்டேன" எனவும், "பேயும் பேயுந் துள்ள லுறுமெனக் - கோயிலுட் கண்டோர் நகாமை வேண்டுவல்" எனவும் பெருந்திணைக்கண் அடியோர் தலைவராக வந்தது. என்னை? கோன் அடிதொட்டேன என்றமையானுங் கோயில் என்றமையானும் இவர்கள் குற்றேவன்மாக்களாயிற்று. "எயிஃதொத்தன்" என்னுங் குறிஞ்சிக்கலியுட் "போற்றாய் களைநின் முதுக்குறைமை போற்றிக்கேள் - வேட்டார்க் கினிதாயி னல்லதை நீர்க்கினிதென் - றுண்பவோ நீருண் பவர்." நீக்காமம் இழிந்தோர்க்குரிமையின், இதுவும் அடியோர் தலைவராக வந்த கைக்கிளை. அடியோரெனவே இருபாற் தலைமக்களையும் அடக்கிற்று. கடிவரையில என்றதனான் அவருட் பரத்தையரும் உளரென்று கொள்க: "இகல்வேந்தன்" என்னும் முல்லைக்கலியுள் "மேயு நிரைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ - ராயனை யல்லை பிற

வோ வமரருண் - ஞாயிற்றுப் புத்தேன் மகன்." என்பதனுற் தலை வன் வினைவல பாங்காயினவாறு காண்க. இதனுட் "புனத்துளா னெந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ - வினத்துளா னெந் தைக்குக் கலத்தோடுஞ் செல்வதோ - தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ" என்றவழி எமரோவலான் யாஞ் செய் வதன்றி யாங்கள் ஏவ நின்னெஞ்சம் இத்தொழில்கள் செய்கின் றனவில்லை என்றலின் வினைவலபாங்கினுளாய தலைவிகூற்றாயி றறு. "யாரிவர்" என்னும் முல்லைக்கலியுள் "வழங்காப் பொ ழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல் - வழங்க லறிவா ருளையாரோ லெ ம்மை - யிகழ்ந்தாரோ யன்றோ வெமர்." இதுவும் வினைவலபாங் கினளாய தலைவியை நோக்கி அத்தலைவன் கூறினது: "நலமிக நந்திய" என்னும் முல்லைக்கலியுட் "பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி - லல்க லகலறை யாயமொ டாடி - முல் லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை - யிரவுற்ற தின்னுங் கழிப்பி யரவுற் - றுருமி னதிருங் குரல்போற் பொருமுர - ணல் லேறு நாகொடு நின்றன - பல்லா னின்னிளா நாமுடன் செலற் கே." இது தாழ்த்துப் போதற்குத் தலைமையின்றிக் கடிதிற் போதல்வேண்டுமென்றமையானும், நல்லேறும் நாகும்போல் நா முங் கூடப் போகல் வேண்டுமென்றமையானுந், தலைவன் வினைவ ல பாங்கினனாயிற்று. வினைவல்லானென்றது பாங்கென்றதனுற் றமரேவல்செய்வது பெறுதும். இது அவ்வநிலத்து இழிந்தோ ர்க்கு என்ஞான்றுந் தொழிலேயாய் நிகழுமென்றும், புனங்காவ லும் படுபுள்ளோப்புதலும் இவ்வாறன்றி உயர்ந்தோர் வினையா ட்டாகி இயற்கைப் புணர்ச்சிப்பின்னர்ச் சின்னுளிற் தவிர்வதொ ன்றும் வேறுபாடுணர்க. இதகூறிய இருதிறத்தோருந் தமக் கு உரியரன்மையான் அறம்பொருளின்பம் வழாமை நிகழ்த்துதல் அவர்க்கரிதென்பது பற்றி இவற்றை அகப்புறமென்முர். (உங)

உச. ஏவன் மரபி னேனோரு முரிய
ராகிய நிலைமை யவரு மன்னர்,

இது முன்னர்ப் "பெயரும்வினையும்" என்பதனுட் இணை தொறுமரீஇயபெயருந் திணைநிலைப்பெயருமெனப் பகுத்த இரண் டனுட் திணைதொறுமரீஇயபெயருட் தலைவராதற்குரியாரை அதிகாரப் பட்டமையிற்கூறி, அங்ஙனந் தலைவராதற்குரிமையின் அடியோரை யும் வினைவலபாங்கினோரையும் அதன்பிற்கூறிப், பின்னர்நின்றதிணை நிலைப்பெயராதற்குச் சிறந்தார் அறுவகையாரெனப் பகுக்கின்றது.

(இ-ள்.) மரபின் = வேதநூலுட்கூறிய இலக்கணத்தானே: ஏவல் ஆகிய நிலைமையவரும் = பிறனை ஏவிக்கொள்ளுந் தொழில் தமக் குளதாகிய தன்மையையுடைய அந்தணர் அரசர் வணிகரும்: அன்னர் ஆகிய அவரும் = அம்மூவரையும்போற் பிறனை ஏவிக்கொள்ளுந் தன்மையராகிய குறுநிலமன்னரும் அரசராற் சிறப்புப்பெற்றோரும்: ஏனோரும் = நால்வகை வருணமென்று எண்ணிய வகையினால் ஒழிந்துநின்ற வேளாளரும்: உரியர் = உரிப்பொருட் தலைவராதற்கு உரியர்.—எ-று. ஆகிய என்பதனை ஏவலொடும் அன்னரொடுங் கூட்டுக. எனவே, திணைநிலைப்பெயர் அறுவகையாயிற்று. "வேந்துவிடு தொழிலிற்பொருள்" என்பதனான் வேளாளரோ அரசராற் சிறப்புச் செய்யப்பெறுவரொன்றுணர்க. இனி "வில்லும் வேலுங் கழலு முரிய" என்பதனான் ஏனோருஞ் சிறுபான்மை சிறப்புப்பெறுவரொன்றுணர்க. உரிப்பொருட் தலைவர் இவரோயாதன் மேற் பிரிவிற்குக் கூறுகின்றவாற்றானும் உணர்க.

"தாமரைக் கண்ணியைத் தண்ணறுஞ் சாந்திலை - நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின் - மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ - மணங்கென வஞ்சுவர் சிறுகுடி யோரோ; ஈர்ந்த ணுடையை யெல்லி மாலையை" எனவரும்.

"முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல் - கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக் - குவளை யுண்கண் குய்ப்புகை கமழத் - தான்றுழந் தட்ட தீம்புளிப் பாக - ரினிதெனக் கணவ னுண்டலி - னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே." குறுந்தொகை. இது பார்ப்பாரையும் பார்ப்பினிகளையுந் தலைவராகக் கூறியது. கடிமனைச்சென்ற செவிலிகூற்று. வாயினேர்வித்தலுமாம்.

"வருது மென்ற நாளும் பொய்த்தன - வரியே ருண்க ணீருநில்லா - தணங்கார்க் கின்ற பைங்கொடி முல்லை - யைவாய் வான்முகை யவிழ்ந்த கோதை - பெய்வனப் பிழந்த கதுப்பு முள்ளா - ரருள்கண் மாறலோ மாறுக வந்தில - ரறனஞ் சலரோ யாயிழை நமரெனச் - சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும் - பனிபடு நறுந் தார் குழைய நம்மொடு - துனிதீர் முயக்கம் பெற்றோள் போல - வுவக்குநள் வாழிய நெஞ்சே விசும்பி - னேறெழுந்து முழங்கினு மாறெழுந்து சிலைக்கும் - கடாஅ யானை கொட்கும் பாசறைப் - போர் வேட் டெழுந்த மன்னர் கைய - கூர்வாட் குவிமுகஞ் சிதைய நூறி - மானடி மருங்கிற் பெயர்த்த குருதி - வான மீனின் வயின்வயி

ணிமைப்ப - வமரகத் தட்ட செல்வர் - தமரினிசைந் துரைப்பக் கேட்கு ஞான்றே." மீண்டவன் நெஞ்சிற்கு உரைப்பானாய்ப் பாகற்கு உரைத்தது. இம் மணிமிடைபவளத்து வேந்தன் தலைவனாயினவாறுந் தான் அமரகத்து அட்ட செல்வத்தையே மிக்கசெல்வமாகக் கருதுதற்குரியாள் அரசர்வருணத்திற் தலைவியே என்பதூஉம் உணர்க. "பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர் - வகைகொண்ட செம்மனும் வனப்பார விடுவதோ." இதனுள் வேந்தன் தலைவனாயினவாறும் வகைகொண்டதலைமையின் அழகை நுகரவிரும்பினாள் என்றலிற் தலைவியும் அவ்வருணத்தாளாயவாறும் உணர்க. "உலகுகிளர்ந்தன்ன" என்னும் அகப்பாட்டுள் வணிகன் தலைவனாகவுங் கொள்ளக்கிடத்தலிற் தலைவியும் அவ்வருணமேயாமென்றுணர்க.

"தடமருப் பெருமை மடநடைக் குழவி - தூண்டொறும் யாத்த காண்டகு நல்லிற் - கொடுங்குழை பெய்த செழுஞ்செய் பேழை - சிறுதாட் செறித்த மெல்விரல் சேப்ப - வாளை யீர்ந்தடி வல்லிதின் வகைஇப் - புகையுண் டமர்த்த கண்ண டகைபெறப் - பிறைநுதற் பொறித்த சிறுநுண் பல்வீ - யாந்துகிற் றலையிற் றுடையின ணப்புலந் - தட்டிலோளே யம்மா வரிவை யெமக்கே - வருகதில் விருந்தே சிவப்பா னன்று - சிறியமுள் ளெயிறு தோன்ற - முறுவல் கொண்ட முகங்காண் கம்மே." விருந்தொடு புக்கோன்கூற்று. செவிலிகூற்றுமாம். இந் நற்றிணை வாளையீர்ந்து அடிவகைஇ என்றலின் வேளாண்வருணமாயிற்று.

"மலைமிசைக் குலைஇய வுருகெழு திருவிற் - பணைமுழங் கெழிலி பவ்வம் வாங்கித் - தாழ்பெயற் பெருநீர் வலனேர்பு வளைஇ - மாதிரம் புதையப் பொழிதலிற் காண்வர - விருநிலங் கவினிய வேமுறு காலை - நெருப்பி னன்ன சிறுகட் பன்றி - வயிர்க்கட் படாஅர்த் துஞ்சுபுறம் புதைய - நறுவீ முல்லை நாண்மல ருதிரும் - புறவடைந் திருந்த வருமுனை யியவிற் - சீறூ ரோளே நன்னுதல் யாமே - யெரிபுரை பன்மலர் பிறழ வாங்கி - வரிஞர் யாத்த வலங்குதலைப் பெருஞ்சூடு - கள்ளார் களமர் களந்தொறு மறுகுந் - தண்ணடை தழீஇய கொடிநுடங் காரெயி - லருந்திறை கொடுப்பவுங் கொள்ளான் சினஞ்சிறந்து - வினைவயிற் பெயர்க்குந் தானைப் - புனைதார் வேந்தன் பாசறை யேமே." இது தூதுகண்டு வருந்திக் கூறியது. இக் களிற்றியானைநிரையுட் தன்னூரும் அருமுனையியவிற்சீறூர் என்றலிற் தான் குறுநிலமன்னனென்பது பெற்றாம்.

"அகலிருவிசும்பகம்" என்னும் அகப்பாட்டும் பொருணோக்கினால் இதுவேயாமாறுணர்க.

"இருபெரு வேந்தர் மாறுகொள் வியன்களத் - தொருபடை கொண்டு வருபடை பெயர்க்குஞ் - செல்வ முடையோர்க்கு நின்ற ன்று விறலெனப் - பூக்கோ ளேய தண்ணுமை விலக்கிச் - செல் வே மாத லறியாண் முல்லை - நேர்கான் முதுகொடி குழைப்ப நீர்சொரிந்து - காலை வானத்துக் கடுங்குரற் கொண்மூ - முழங் குந்தொறுங் கையற் றொடுங்கி நப்புலந்து - பழங்கண் கொண்ட பசலை மேனியள் - யாங்கா குவள்கொ றுனே வேங்கை - யூழுறு கிளர்வீ கடுப்பக் கேழ்கொள - வாகத் தரும்பிய மாசறு சுணங்கி - னன்மணல் வியலறை நடந்த - சின்மெல் லொதுக்கினண் மாஅ யோளே." நெஞ்சிற்குரைத்தது. இதனுட் பூக்கோளேய தண் ணுமை விலக்கிச் செல்வேயென்றலின் அரசனாற் சிறப்புப்பெற்ற தலைவனாயிற்று. இன்னுஞ் சான்றோர் செய்யுட்கள் இங்ஙனம் வருவனவற்றை அவற்றின்பொருணோக்கி உணர்க. (உச)

உரு. ஓதல் பகையே தூதிவை பிரிவே.

இத்துணையும் அகத்திற்குப் பொதுவாகிய முதல்கருவுரிப் பொருள் கூறி இனி இருவகைக் கைகோட்கும் பொதுவாகிய பா லைத்திணைகூறிய எழீஇயது. (இ - ள்.) பிரிவே = பாலையென்னும் பிரிதற்பொருண்மை: ஓதல் பகையே தூது இவை = ஓதற்குப்பிரி தலும் பகைமேற்பிரிதலும் பகைவரைச் சந்துசெய்தன் முதலிய தூதுபற்றிப் பிரிதலுமென மூன்றுவகைப்படும்.—எ - று ஒரோ வொன்றே அறமுந் துறக்கமும் பொருளும் பயத்தற்சிறப்புநோக்கி இவற்றை இவையென விதந்தோதினார். இவையென்றதனை எடு த்தலோசையாற்கூறவே அறங்கருதாது அரசரோவலாற தூதிற்பி ரிதலும் போர்த்தொழிற்குப்பிரியாது திறைகோடற்கு இடைநிலத் துப் பிரிதலுஞ் சிறப்பின்மைபெறுதும். அறங்கருதாது பொருள் ஈட்டுதற்குப் பிரிதலும் பொருள்வயிற் பிரிவிற்கு உண்மையின் இவ ற்றொடு ஓதாது பிற்கூறினார். அந்தணர்க்குரிய ஓதலுந் தூதும் உடன்கூறிற்றிலர், பகைபிறந்தவழித் தூதுநிகழ்தலின். (உரு)

உசா. அவற்றுள், ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன.

இது முற்கூறியவற்றுள் அந்தணர் முதலிய மூவர்க்கு இர ண்டுபிரிவு உரித்தென்கின்றது. (இ - ள்.) அவற்றுள் = அம்மூ ன்றனுள்: ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன = ஓதற்பிரிவுக்

தூதிற்பிரிவும் அந்தணர்முதலிய மூவரிடத்தன.—எ - று. எனவே ஒழிந்த பகைவயிற்பிரிவு அரசர்க்கே உரித்தெனை மேலேகூறுப. உயர்ந்தோரெனக் கூறலின் வேளாளரை ஒழித்தாரென்றுணர்க. உம். "அரம்போ ழவ்வளை தோணிலை நெகிழ - நிரம்பா வாழ்க் கை நேர்தல் வேண்டி - யீர்ங்கா ழன்ன வரும்புமுதி ரீங்கை - யாலி யன்ன வால வீதாஅய் - வைவா லோதி மையண லேய்ப்பத் - தாதுறு குவளைப் போது பிணியவிழப் - படாஅப் பைங்கட் பரவ டிக் கயவாய்க் - கடாஅ மாறிய யானை போலப் - பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ - மைதோய் விசும்பின் மாதிரத் திழிதரப் - பனிபட நின்ற பானாட் கங்குற் - றமியோர் மதுகை தூக் காய் தண்ணென - முனிய வலைத்தி முரணில் காலைக் - கைதொழு மரபிற் கடவுளர் சான்ற - செய்வினை மருங்கிற் சென்றோர் வலவ ரின் - விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான் - வெருவரு தானை யொடு வேண்டுபுலத் திறுத்த - பெருவளக் கரிகான் முன்னிலைச் செல்லார் - சூடா வாகைப் பறந்தலை யாடுபெற - வொன்பது கொ டையு நன்பக லொழித்த - பீடின் மன்னர் போல - வோடுவை மன்னல் வாடைநீ யெமக்கே." இதனுட் பலருங் கைதொழும் மாண்பினையுடைய கடவுட்டன்மையமைந்த செய்வினையெனவே ஓதற்பிரிதலென்பது பெற்றாம். "சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே" என்பதினாற் கிழவனுங் கிழத்தியும் இல்லறத்திற் சிறந் தது பயிற்றுக்கால் இறந்ததனாற் பயனின்றாதலின் இல்லறம் நிர ம்பாதென்றற்கு நிரம்பாவாழ்க்கையென்றார். இல்லறம் நிகழ்கின்ற காலத்தே மேல்வருந் துறவறம் நிகழ்த்துதற்காக அவற்றைக்கூறும் நூல்களையுங் கற்று அவற்றின் பின்னர்த் தத்துவங்களையும் உணர் ந்து மெய்யுணர்தல் அந்தணர் முதலிய மூவர்க்கும் வேண்டுத லின் ஓதற்பிரிவு அந்தணர்முதலியோர்க்கே சிறந்ததென்றார். "பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ - மையற்ற படிவத்தான் மறுத்த லொல்வதோ" என்பதும் அது; மையற்றபடி வம் அந்தணர்முதலியோர் கண்ணதாதலின். "விருந்தின்மன்னர்" என்னும் அகப்பாட்டில் வேந்தன் பகைமையைத் தான் தணிவித்த மை கூறலின் அந்தணன் தூதிற்பிரிந்தமை பெற்றாம். "வயலைக் கொடியின் வாடியமருங்குல்" என்னும் புறப்பாட்டில் அந்தணன் தூதுசென்றவாறுணர்க. அரசன் தூதுசேறல் பாரதத்து வாசு தேவன் தூதுசென்றவாற்றானுணர்க. அது "படர்ந்தா ரணமுழுங் கப் பஞ்சவர்க்குத் தூது - நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே" என்பதனானுணர்க. வணிகன்சென்றது வந்துழிக்காண்க. (உசு)

உஎ. தானே சேறலுந் தன்னொடு சிவணிய
வேனோர் சேறலும் வேந்தன் மேற்றே.

இது பகைவயிற் பிரிவு அரசருக்கே உரித்தென்கின்றது. (இ-ள்.) தானே சேறலும் = தன்பகைக்குத் தானே செல்லுதலும் தன்னொடு சிவணிய ஏனோர் சேறலும் = அவனொடு நட்புக்கொண்ட ஒழிந்தோர் அவற்குத் துணையாகிச் செல்லுதலுமாகிய இருபகுதியும்: வேந்தன் மேற்று = அரசன் கண்ணது.—எ-று. எனவே, வணிகர்க்கு உரித்தன்றாயிற்று. தானேயென்று உரிமைகூறிய அதனானே முடியுடைவேந்தர் தாமே சேறலும் ஏனோரெனப் பன்மை கூறிய அதனானே பெரும்பான்மையுங் குறுநிலமன்னர் அவர்க்காகச்சேறலும் முடியுடைவேந்தர் அவர்க்காகச் சிறுபான்மை சேறலும் உணர்க. முடியுடைவேந்தா உள்வழிக் குறுநிலமன்னர் தாமே செல்லாமையுணர்க. இதனை வேந்தர்க்குற்றுழியென்ப. ஏனையோர் அவ்வேந்தர் இல்வழிக் குறுநிலமன்னருந் தாமேசேறல் "வேந்துவினையியற்கை" என்பதன்கட்கூறுப. இதனானே தன்பகைமேலும் பிறர்பகைமேலும் ஒருகாலத்திற் சேறலின்றென்றார்.

"கடும்புனல்கால்பட்டு" என்னும் பாலைக்கலியுள் "மயங்கமர் மாறட்டு மண்வௌவி வருபவா - தயங்கிய களிற்றின்மேற் றகைகாண விடுவதோ" எனவும் "பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்" எனவும் மண்கோடலுந் திறைகோடலும் அரசர்க்கே உரித்தாகக் கூறியது "நீளுயர் கூடனெடுங் கொடி யெழுவே" எனச சுரிதகத்துக் கூறியவாற்றானுணர்க.

"பொருபெரு வேந்தர்க்குப் போர்ப்புணை யாகி - யொருபெருங் காதலர் சென்றார் - வருவது - காணிய வம்மோ கனங்குழை கண்ணேக்கா - ணீணகர் முன்றின்மே னின்று." இது வேந்தர்க்குற்றுழி வேந்தன்பிரிந்தது.

"கொற்கைச் சோழர் கொங்கற் பணீஇயர் - வெண்கோட்டியானைப் போஒர் கிழவோன் - பழையன வேல்வாய்த் தன்னநின் - பிழையா நன்மொழி தேறிய விவட்கே." இது குறுநிலமன்னர் போல்வார் சென்றமைதோன்றக் கூறியது. "மலைமிசைக்குலைஇய" என்பதும் அது.

இனி வேட்டைமேற்சேறலும் நாடுகாணச் சேறன்முதலியனவும் பாலையாகப் புலனெறிவழக்கஞ்செய்யாமை உணர்க.

வேந்தனென்று ஒருமையாற் கூறினர், "மெய்ந்நிலை மயக்கி னஃஅ குரவும்" என்னும் விதிபற்றி. சிவணியவென்பதனை வினையெச்ச மாக்கி நட்பாடல்வேண்டியென்றுமாம்.

உஅ. மேவிய சிறப்பி னேனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல வேண்டியு
மிழைத்த வொணபொருண் முடியவும் பிரிவே.

இது முறையானே தன்பகைமேற்சென்ற அரசன் திறை பெற்ற நாடுகாத்து அதன்கட் தன்னெறிமுறை அடிப்படுத்து தற்குப் பிரிதலும் ஏனைவணிகர் பொருட்குப்பிரிதலுங் கூறுகின் றது. (இ-ள்.) முல்லை முதலாச் சொல்லிய மேவிய சிறப்பின் = தானே சென்ற வேந்தன் தனக்கு முல்லை முதலாக முற்கூறப்ப ட்ட நால்வகைநிலனுந் திறையாகவந்துபொருந்திய தலைமையா னே: பிழைத்தது = முன்னர் ஆள்பவர் கலக்குறுத்த அலைபெற்று நெறிமுறைமை தப்பிய அந்நாடு: முறையாற் பிழையாதாகல் வே ண்டியும் பிரிவே = தனது பழையநாடுகளை ஆளும் நெறிமுறைமை யினாலே தப்பாமல் ஆக்கம்பெறக் காத்தலை விரும்பிப் பிரிதலும் பிரிவே: ஏனோர் படிமைய இழைத்த ஒண் பொருள் முடியவும் பிரிவே = முற்கூறிய அந்தணர் அரசரை ஒழிந்த வணிகர் தம ச்கு விரதங்களுடையவாக வேதநூலிற்கூறிய ஒள்ளிய பொருள் தேடி முடியும்படி பிரிதலும் பிரிவே.—எ-று. பிரிவை இரண்ட ற்குங் கூட்டுக. சிறப்பிற பிரிதலும் எனச் சேர்க்க. சொல்லிய வென்பதும் பிழைத்ததென்பதுந் தொழிற்பெயர். முறையாற் காக்கவென முடிக்க. விரதமாவன கொள்வதூஉம் மிகைகொள் ளாது கொடுப்பதூஉங் குறைகொடாது பலபண்டம் பகர்ந்து ஈதன் முதலியன.

உம். "ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும் - பரிதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்தியு - மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சியு - மேனோன்போ னிற ங்கிளர்பு கஞலிய ஞாழலு - மானேற்றுக் கொடியோன்போ லெ திரிய விலவமு மாங்கத் - தீதுதீர் சிறப்பி னைவர்க ணிலைபோலப்- போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற - நோதக வந்தன் று லிளவேனின் மேதக; பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பரு வத்துத் - தொல்கவின் றொலைந்தவென் றடமென்றோ ளுள்ளுவா -

றொல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி - வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர்; அறல்சாயப் பொழுதோடெம் மணிநுதல் வேறுகித் - திறல்சான்ற பெருவனப் பிழப்பதை யரு ளுவா ரூறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி - யா றின்றிப் பொருள்வெஃகி யகன்றநாட் டுறைபவர்; திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை - வசைதீர்ந்த வென்னலம் வாடுவ தருளுவார் - நசைகொண்டு தந்நிழல் சேர்ந்தாரைத் தாங் கித்த - மிசைபரந் துலகேத்த வேதினாட் டுறைபவர்; எனநீ, தெ ருமரல் வாழி தோழிநங் காதலர் - பொருமுரண் யானையர் போர் மலைந் தெழுந்தவர் - செருமேம் பட்ட வென்றியர் - வருமென வந் தன்றவர் வாய்மொழித் தூதே."

இதனுள் ஒல்குபு நிழல்சேர்ந்தார்க்கெனவே, முன்னர் ஆள் பவர் கலக்குறுத்த அலைபெற்றுப் பின் தன்னை நிழலாகச் சோந் தாரொன்பதூஉம், அவர்க்குப் பின்னர் உலைவு பிறவாமற் பேணிக காத்தானென்பதூஉம், விருந்துநாட்டென்பதனாற் திறைபெற்ற புதிய நாடென்பதூஉம் பெற்றும். ஏனையவற்றிற்கும் இவ்வா றே கூறிக்கொள்க. ஏதினாடு, புதியநாடு. ஆறின்றிப் பகைவர் பொருளை விரும்பின நாட்டென்றும் அவரையகன்ற நாட்டென்றும் பொருள்கூறுக. செருவின் மேம்பட்ட என்றது நாடுகளை. அத னாற்பெற்ற வென்றியெனவே நாடுதிறைபெற்றமை கூறிற்று.

'டைபண்ணிப்புனையவும்'' என்னும் பாலைக்கலியுள் "வல் வினை பயக்குதல் வலித்திமன்'' என்பதற்கு வலியபோர்செய்து பகைவர்தந்நாட்டை விளக்குதற்கு வலித்தியெனவும், "தோற் றஞ்சா ஞெருகுபொருள்'' என்பதற்குத் தோற்றம் அமைந்த திர ண்ட பொருளாவன அந்நாடுகாத்துப் பெற்ற அறம்பொருளின் பம் எனவும், "பகையறு பயவினை'' என்பதற்குப் பகையறுத் தற்குக் காரணமாகிய நாடாகிய பயனைத் தரும் வினையெனவும், "வேட்டபொருள்'' என்பதற்கு அறம்பொருளின்பமெனவும் பொருளுரைத்துக்கொள்க. பிறவும் இவ்வாறு வருவன உய்த் துணர்ந்து பொருள்கூறுக.

இனிக், "கேள்கே ளேன்றவுங் கிளைஞ ராரவுங்-கேடில் கேளிர் கெழீஇன ரொழுகவு - மாள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல் சிறந்து" என வணிகர் பொருள்வயிற் பிரிந்தவாறுணர்க. "நட் டோ ராக்கம் வேண்டியு மொட்டிய - நின்றோ ளணிபெற வரற்கு -

மன்றோ தோழியவர் சென்ற வாறே." என்பதனுள் அணியென்ப து பூணினை. பிறவும் இவ்வாறு வருவன உய்த்துணர்க. (உஅ)

உகூ. மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே.

இஃது எய்தாததெய்துவித்தது. (இ-ள்.) மேலோர் முறைமை = மேல் அதிகாரப்பட்டுநின்ற வணிகர்க்கு ஓதிய அறந்தலைப் பிரியாப் பொருள்செயல்வகை; நால்வர்க்கும் உரித்து = அந்தணர்க்கும் அரசர்க்கும் இருவகை வேளாளர்க்கும் உரித்து.—எ - று. இதற்கு வணிகர்க்கு வேதநூலுள் இழைத்த பொருண்முடிவானே இந்நால்வரும் பொருண்முடிப்பரெனிற் பிரிவொன்றாகி மயங்கக் கூறலென்னுங் குற்றந்தங்குமாகலின் அது கருத்தன்று; இந்நால் வருள் அந்தணர் ஓதலுந் தூதும்பற்றிப் பொருண்முடித்தலும் அரசர் பகைவயிற்பிரிவுபற்றிப் பொருண்முடித்தலும் உயர்ந்த வேளாளர் பகைவயிற்பிரிவுபற்றிப் பொருண்முடித்தலும் உழுதுண்பார் வாணிகத்தாற் பொருண்முடித்தலுங் கருத்து. இவற்றுள் வேள்விக்குப் பிரிந்து சடங்கிற்கு உறுப்பாகியும் அதற்குக் குரவனாகியும் நிற்றல் உரிமையின் ஆண்டு வேள்விசெய்தான் கொடுத்தபொருள் கோடல்வேண்டுதலானும் அறங்கருதித் தூதிற்பிரியினும் அவர்செய்த பூசனை கோடல்வேண்டுமாகலானும் அவை அந்தணர்க்குப் பொருள்வருவாயாயிற்று. வேள்விக்குப்பிரிதல் ஓதற்பிரிவின் பகுதியாயிற்று.

உம். "நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா - மஞ்சிய தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ - லின்றீங் கிளவியாய் வாய் மறை நின்கேள் - புதுவது பன்னாளும் பாராட்ட யானு - மிது வொன் றுடைத்தென வெண்ணி யதுதேர - மாசில்வண் சேக் கை மணந்த புணர்ச்சியுட் - பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோற் - றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்- கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ - விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு - நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்றெஞ்- செய்பொருண் முற்றுமள வென்றனை ராயிழாய் - தாமிடை கொண் டதுவாயிற் றம்மின்றி - யாமுயிர் வாழு மதுகை யிலமாயிற்- றொய்யிற் றுறந்தா ரவரெனத் தம்வயி - னொய்யார் நுவலும் பழி நிற்பத் தம்மொடு - போயின்று சொல்லென் னுயிர்." இதனுள் நடு நின்றென்றதனன் இரு பெரு வேந்தரையுஞ் சந்துசெய்வித்தற்கு பான் நடுவே நிற்பலென்றும், எஞ் செய்பொருள்முற்றுமளவெ

ன்றதனான் அதுமுடித்தபின்னர் யாம்பெறுதற்குரியவாய் அவர் செய்யும் பூசனையாகிய பொருண்முடியுமளவுமென்றும், அந்தணன் பொருள்வயிற் பிரியக்கருதிக் கூறிய கூற்றினை அவன் தலைவி கூறியவாறுணர்க. இதனுட் கடிமனைகாத்தென்றதனை இல்லறமாகவும் ஓம்பவென்றதனைச் செந்தீயோம்பவென்றுங் கொள்க.

இனி "நன்கலங் களிற்றொடு நண்ணார் ஏந்தி - வந்து திறைகொடுத்து வணங்கினர் வழிமொழிந்து" என்புழி, நன்கலந் திறைகொடுத்தோரொன்றலிற் பகைவயிற்பிரிவே பொருள்வருவாயாயிற்று. ஒழிந்தனவும் இவ்வாறே உய்த்துணர்க.

மேலோர்முறைமை ஏனோர்க்குமுரித்தே என்றது நால்வர்க்குமுரித்தே என்றது முற்கூறிய வணிகரையொழிந்த இருவகை வேளாளரையுங் கூட்டியென்றுணர்க. அவர் பொருள்வயிற்பிரிந்தனவுஞ் சான்றோர் செய்யுட்களை நோக்கி உய்த்துணர்ந்துகொள்க. அவர்களுள் உழுதுண்பார்க்குக் கலத்திற்பிரிவும் உரித்து. ஏனையோர்க்குக் காலிற்பிரிவே உரித்தென்றுணர்க. (உகூ)

ங0. மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப.

இஃது இறுதிநின்ற வேளாளர்க்கு இன்னுமோர் பிரிவுவிகற்பங் கூறுகின்றது. (இ-ள்.) மன்னர் பாங்கில் = அரசரைச்சார்ந்து வாழும் பக்கத்தராகிசிற்றல் காரணமாக: பின்னோர் ஆகுப = பின்னோரெனப்பட்ட வேளாளர் வரையறையின்றி வேந்தன் ஏவிய திறமெல்லாவற்றினும் பிரிதற்கு ஆக்கமுடையராப.—எ - று. மன்னர் பின்னோரென்ற பன்மையான் முடியுடையோரும் முடியில்லாதோரும் உழுவித்து உண்போரும் உழுது உண்போருமென மன்னரும் வேளாளரும் பலரொன்றூர். "வேளாண்மாந்தர்க்கு" "வேந்துவிடுதொழிலில்" என்னும் மரபியற் சூத்திரங்களான் வேளாளர் இருவகையரென்ப. அரசரேவுந் திறமாவன பகைவர்மேலும் நாடுகாத்தன்மேலுஞ் சந்துசெய்வித்தன்மேலும் பொருள்வருவாய் மேலுமாம்.

அவருள் உழுவித்துண்போர் மண்டிலமாக்களுந் தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும் அழுந்தூரும் நாங்கூரும் நாவூரும் ஆலஞ்சேரியும் பெருஞ்சிக்கலும் வல்லமுங் கிழாரும் முதலிய பதியிற்றோன்றி வேளெனவும் அரசெனவும் உரிமையெய்தினோரும், பாண்டியநாட்டுக் காவிதிப்பட்டமெய்தினோருங் குறு

முடிகுடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைக்கு உரிய வேளாளராம். "இருங்கோ வேண்மா னருங்கடிப் பிடவூர்" எனவும் "ஆலஞ்சேரி மயிந்த னூருண்கேணி நீரொப்போன்" எனவுஞ் சான்றோர் செய்யுட்செய்தார். உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர்வேளிடை மகட்கோடலும் அவன்மகனாகிய கரிகாற்பெருவளத்தான் நாங்கூர்வேளிடை மகட்கோடலுங் கூறுவார். இதனானே "பகடுபுறந் தருநர் பார மோம்பிக் - குடிபுறந் தருகுவை யாயின்" எனவும் "ஞாலத்துக் - கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக் - குடிபுறந் தருநர் பார மோம்பி" எனவுஞ் சான்றோர் கூறியவாறுணர்க. உம். "வேந்தன் குறைமொழிந்து வேண்டத் தலைப்பிரிந்தார் - தாந்தங் குறிப்பின ரல்லரா - லேந்திழாய் - கண்பனி வாரக் கலங்கல் பிரிவரோ - தண்பனி நாளே தனித்து." எனவரும். (௯௦)

௯௧. உயர்ந்தோர்க் குரிய வோத்தி னான.

இது நான்குவருணத்தோர்க்கும் எய்தாததெய்துவித்தது. (இ-ள்.) ஒத்தின் ஆன = வேதத்தினாற் பிறந்த வடநூல்களுந் தமிழ்நூல்களும்: உயர்ந்தோர்க்கு உரிய = அந்தணர் அரசர் வணிகர்க்கும் உயர்ந்த வேளாளர்க்கும் உரிய.—எ - று. அவை சமய நூல்களும் ஒன்றற்கொன்று மாறுபாடுகூறுந் தருக்கநூல்களுஞ் சோதிடமும் வியாகரணமும் முதலியனவும் அகத்தியம் முதலாகத் தோன்றிய தமிழ்நூல்களுமாம். வேதந் தோன்றிய பின்னர் அது கூறியபொருள்களை இவையும் ஆராய்தலின் ஒத்தினானவென்று அவற்றிற்குப் பெயர்கூறினார், ஒத்தென்பது வேதத்தையேயாதலின். (௯௧)

௯௨. வேந்து வினையியற்கை வேந்தனி னொரீஇய
வேனோர் மருங்கினு மெய்திட னுடைத்தே.

இது மலயமாதவன் நிலங்கடந்த நெடுமுடியண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக் குடிப்பிறந்த வேளிர்க்கும் வேந்தன்றொழில் உரித்தென்கிறது. (இ-ள்.) வேந்து வினை இயற்கை = முடியுடைவேந்தர்க்குரிய தொழிலாகிய இலக்கணங்கள்: வேந்தனின் ஒரீஇய ஏனோர் மருங்கினும் எய்து இடன் உடைத்து = அம்முடியுடைவேந்தரையொழிந்த குறுநிலமன்னரிடத்தும் பொருந்தும் இடனுடையது.—எ-று. அவர்க்குரிய இலக்கணமாவன, தன்பகைவயிற் றானேசேறலுந் தான் திறைபெ

ற்ற நாடுகாக்கப் பிரிதலும் மன்னர்பாங்கிற் பின்னோரெனப்பட்ட வேளாளரை ஏவிக்கொள்ளுஞ் சிறப்புமாம். உ-ம். "விலங்கிருஞ் சிமயக் குன்றத் தும்பர் - வேறுபன் மொழிய தேஎ முன்னி - வினை நசைஇப் பரிக்கு முரண்மலி நெஞ்சமொடு - புனைமா ணெஃகம் வலவயி னேந்திச் - செலன் மாண்புற்ற" என்புழி வேறு பன்மொழிய தேஎத்தைக் கொள்ளக்கருதிப் போர்த்தொழிலைச் செலுத்தும் உரன்மிக்க நெஞ்சமென்றலின், இது குறுநிலமன்னன் தன்பகைவயின் நாடுகொள்ளச் சென்றதாம்; வேந்தனெனப் பெயர்கூறாமையின். "பசைபடுபச்சை நெய்தோய்த்து" என்னும் அகப்பாட்டினுண் "முடிந்தன்றம்மநா முன்னியவினையே" என்றலிற் றானே குறுநிலமன்னன் சென்றதாம். ஏனைய வந்துழிககாண்க. (௩௨)

௩௩. பொருள்வயிற் பிரிதலு மவர்வயி னுரித்தே
யுயர்ந்தோர் பொருள்வயி னொழுக்கத் தான.

இஃது அக் குறுநிலமன்னர்க்குப் பொருள்வயிற்பிரிதலும் ஓதற்பிரிதலும் உரியவென்கின்றது. (இ-ள்.) பொருள் வயினும் = தமக்குரிய திறையாகப்பெறும் பொருளிடத்தும்: உயர்ந்தோர் ஒழுக்கத்து ஆன பொருள் வயினும் = உயர்ந்த நால்வகை வருணத்தார்க்குரிய ஒழுக்கத்திலேயான ஒத்திடத்திலும்: பிரிதல் அவர்வயின் உரித்து = பிரிந்துசேறல் அக் குறுநிலமன்னரிடத்து உரித்து.—எ-று. பொருள்வயிறபிரிதல் பொருள்தேடுகின்ற இடத்தின் கண்ணென வினைசெய்யிடமாய் நின்றது. "உயர்ந்தோர்க்குரிய வோத்தினான" என்று அவ்வோத்தினை அவரொழுக்கத்திலேயான பொருளென்றார். அச் சூத்திரத்திற் கூறிய ஓதற்பிரிதல் இவர்க்கும் உரித்தென்று கொள்க. இவற்றுக்குச் செய்யுளுள்வழிப் பொருள்படுமாறு உய்த்துணர்ந்துகொள்க. (௩௩)

௩௪. முந்நீர் வழக்க மகடூஉவோ டில்லை.

இது முற்கூறிய ஓதல் பகை தூது காவல் பொருள் என்ற ஐந்துட் பகையுங் காவலும் ஒழிந்தவற்றிற்கு ஓரிலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) ஓதலுந் தூதும் பொருளுமாகிய மூன்றுநீர்மையாற்செல்லுஞ் செலவு தலைவியோடு கூடச் சேறலின்று.—எ-று. தலைவியை உடன்கொண்டு செல்லாமை முற்கூறிய உதாரணங்களிலும் ஒழிந்த சான்றோர் செய்யுட்களுள்ளுங் காண்க. இதுவே ஆசிரியர்க்குக் கருத்தாதல் தலைவியோடுகூடச் சென்றாகச் சான்றோர் புலனெறிவழக்கஞ் செய்யாமையான் உணர்க.

இனித், தலைவி கற்பினுட் பிரிவாற்றாது எம்மையும் உடன் கொண்டு சென்மினெனக் கூறுவனவுந் தோழி கூறுவனவுஞ் செலவழுங்குவித்தற்குக் கூறுவனவென்று உணர்க. அக் கூற்றுத் தலைவன் மரபு அன்றென்று மறுப்பன "மரபுநிலை திரியா" என்பதனுள் அமைந்தது.

இனி, இச்சூத்திரத்திற்குப், 'பொருள்வயிற் பிரிவின்கட் கலத்திற்பிரிவு தலைவியுடன் சேறலில்லை ; எனவே, காலிற் பிரிவு தலைவியுடன் சேறல் உண்டு' என்று பொருள்கூறுவாருக்குச் சான்றோர் செய்த புலனெறிவழக்கம் இன்மை உணர்க. இனி, உடன் கொண்டுபோவுழிக் கலத்திற்பிரிவின்று காலிற்பிரிவேயுளதென்பாரும் உளர். (ருச)

ருரு. எத்திணை மருங்கினு மகடூஉ மடன்மேற்
பொற்புடை நெறிமை யின்மை யான.

இஃது இத்துணையும் பாலைக்கு உரிய இலக்கணங் கூறி, மகடூஉ அதிகாரப்படுதலிற் பெருந்திணைக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) எத்திணை மருங்கினும் = கைக்கிளைமுதற் பெருந்திணையிறுவாய் எழன்கண்ணும் : மகடூஉ மடல் மேல் நெறிமை = தலைவி மடலேறினாளாகக் கூறும் புலனெறிவழக்கம் : பொற்புடைமை இன்மையான = பொலிவுடைமையின்று ; ஆதலான் அது கூறப்படாது.—எ-று. "கடலன்ன காம முழந்து மடலேறாப் - பெண்ணிற் பெருந்தக்க தில்" எனவரும். "கடலன்ன காமத்த ராயினும் பெண்டிர் - மடலூரார் மைந்தர்மே லென்ப - மடலூர்தல் - காட்டுகேன் வம்மின் கலிவஞ்சி யார்கோமான் - வேட்டமா மேற்கொண்ட போழ்து." என்றாராலோவெனின், இது மடலேற்றன்று ; ஏறுவலெனக் கூறியதுணையேயாம். (ருரு)

ருசு. தன்னு மவனு மவளுஞ் சுட்டி
மன்னு நிமித்த மொழிப்பொரு டெய்வ
நன்மை தீமை யச்சஞ் சார்தலென்
றன்ன பிறவு மவற்றொடு தொகைஇ
முன்னிய கால மூன்றுடன் விளக்கித்
தோழி தேஎத்துங் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலு
மாகிய கிளவியு மவ்வழி யுரிய.

இது பிரிவிலக்கணம் அதிகாரப்பட்டு வருதலிற் கொண்டுதலைக்கழிந்துழி வருந்துவோர் தாயரென்பதூஉம் அதனது பகுதியுங் கூறுகின்றது. (இ-ள்.) போகிய திறத்து நற்றாய் = தலைவியுந் தலைவனும் உடன்போய காலந் தம் மகட் பயந்த நற்றாய்: தன்னும் அவனும் அவளுஞ் சுட்டிக் காலம் மூன்றுடன் மன்னும் நன்மை தீமை முன்னிய விளக்கிப் புலம்பலும் = தன்னையுந் தலைவனையுந் தன்மகளையுங் குறித்துக் காலம் மூன்றுடன் நிலைபெற்றுவரும் நல்வினை தீவினைக்குரிய காரியங்களைத் தன் நெஞ்சிற்கு விளக்கி வருந்திக் கூறுதலும்: அச்சஞ் சார்தல் என்று அன்ன பிறவும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம் அவற்றொடு தொகைஇப் புலம்பலும் = அச்சஞ்சார்தலென்று கூறப்பட்டவற்றையும் அவை போல்வன பிறவற்றையும் பல்லி முதலிய சொற் குணச்சொற் தெய்வங் கட்டினுங் கழங்கினும் இட்டு உரைக்கும் அத் தெய்வப் பகுதியென்றவற்றொடு கூட்டி வருந்திக்கூறலும்: தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும் புலம்பலும் = தோழியது ஆற்றாமையைக் கண்டுழியுந் தலைவியைத் தேடிப்போய்க் காணாது வந்தாரைக் கண்டுழியும் வருந்திக்கூறலும்: அவ்வழி ஆகிய கிளவியும் = அவ் உடன்போக்கிடத்துச் சான்றோர் புலனெறிவழக்கஞ் செய்தற்குரியவாய் வருங் கிளவிகளும்: உரிய = உடன்போகிய திறத்து உரிய.—எ-று. நற்றாய்புலம்பலுங் கிளவியும் போகிய திறத்த உரியவென முடிக்க. என்றென்பதனையும் புலம்பலென்பதனையும் யாண்டுங் கூட்டுக. இங்ஙனம் உடன்போக்கி வருந்துதல் நோக்கித் தாயை முற்கூறித் தலைவன் கொண்டுபோயினமை நோக்கித் தலைவிமுன்னர் அவனைக்கூறினார். அவளும் அவனும் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

உ-ம். "மள்ளர் கோட்டின் மஞ்ஞை யாலு - முயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச் - சுரநனி யினிய வாருக தில்ல - வறநெறி யிதுவெனத் தெளிந்தவென் - பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே." இதனுள் அறநெறி இதுவெனத் தெளிந்த என்மகளென்று தாய்கூறவே உடன்போக்குத் தருமமென்று மகிழ்ந்து கூறி அங்ஙனங் கூட்டிய நல்வினையைத் தன் நெஞ்சிற்கு விளக்கிப் புலம்பியவாறு காண்க. ஐங்குறு நூறு.

"நாடொறுங் கலுழு மென்னினு மிடைநின்று - காடுபடு தீயிற் கனலிய மாதோ - நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப் -

பூப்புரை யுண்கண் மடவரற் - போக்கிய புணர்ந்த வறனில் பாலே" இது தீவினையை வெகுண்டு புலம்பியவாறு காண்க. பால், பழவினை. இவை ஐங்குறுநூறு.

இனி அச்சம் இருவகைத்து; தலைவி ஆண்டை விலங்கும் புள்ளும் ஆறலைப்போரும் முதலிய கண்டு அஞ்சும் அச்சமுந் தந்தை தன்னையர் பின்சென்றவர் இஃதறமென்றுது தீங்கு செய்கின்றாரோ என்று அஞ்சும் அச்சமுமென. "வினைத்தொறுங் கலுழுமிடும்பை யெய்துக - புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை - மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும் - வெஞ்சுரமென்மக ளுய்த்த - வம்பமை வல்வில் விடலை தாயே" இதுவும் ஐங்குறுநூறு. "கேளாய் வாழியோ மகளைநின் றோழி - திருநகர வரைப்பகம் புலம்ப வவனொடு - பெருமலை யிறந்தது நோவேனோவல் - கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி - முடங்குதாளுகைத்த பொலங்கெழு பூழி - பெரும்புலர் விடியல் விரிந்து வெயி லெறிப்பக் - கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல் - சிறுபுனல் பெடையொடு குடையு மாங்க - ணஞ்சு வரத்தகுங் கானநீந்திக் - கன்று காணாதுபுன் கண்ண செவிசாய்த்து - மன்றுநிறை பைதல் கூரப் பலவுடன் - கறவை தந்த கடுங்கண் மறவர் - கல்லென் சிறூ ரொல்லி னசைஇ - முதுவாய்ப் பெண்டின் செதுகாற் குரம்பை - மடமயி லன்னவென் னடைமெலி பேதை - தோடுணையாகத் துயிற்றத் துஞ்சாள் - வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கட் - சேக்கோ ளறையுந் தண்ணுமை - கேட்குநள் கொல்லெனக் கலுழுமென் னெஞ்சே." அகம். இவை அச்சங்கூறின.

தந்தை தன்னையர் சென்றாரென்று சான்றோர் செய்யுட்செய்திலர், அது புலனெறிவழக்கம் அன்மையின்.

இனிச் சார்தலும் இருவகைத்து, தலைவி சென்று சாரும் இடமும் மீண்டு வந்து சாரும் இடமுமென. உம். "ஏமவெங் காமமியைவ தாயின் - மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர் - கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த - பாக லார்கைப் பறைக்கட் பீலித் - தோகை காவிற் றுள்நாட் டன்ன - வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற் - செறிந்த சேரிச் செம்மன் மூதூ - ரறிந்த மாக்கட் டாகுக தில்ல - தோழி மாரும் யானும் புலம்பச் - சூழி யானைச் சுடர்ப்பூ ணன்னன் - பாழி யன்ன கடியுடை வியனகர்ச் - செறிந்த காப்பிகந் தவனொடு போகி - யத்த விருப்பை யாரா கழல் புதப்பூத் - துய்த்த வாய்துக ணிகலம் பரிப்பக் - கொன்

றைற் யஞ்சினைக் குழற்பழங் கொழுதிய - வன்கை யெண்கின் வய
நிரை பார்க்கு - மின்றுணைப் பிரிந்த கொள்கையொ டொராங்குக் -
குன்ற வேயிற் றிரண்ட - மென்றோண் மஞ்ஞை சென்ற வாறே."

"அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோட் குறுமக - டிருந்து
வேல் விடலையொடு வருமெனத் தாயே - புனைமா ணிஞ்சி பூவ
லூட்டி - மனைமண லடுத்து மாலை நாற்றி - யுவந்தினி தயரு மெ
ன்ப யானு - மான்பிணை நோக்கின் மடநல் லாளை - யீன்ற நட்பிற்
கருளா ளாயினு -மின்னகை முறுவ லேழையைப் பன்னாட் - கூந்தல்
வாரி நுசுப்பிவர்ந் தோம்பிய - நலம்புனை யுதவியோ வுடையேன்
மன்னே - வஃதறி கற்பி னென்றுமற் றில்ல - வறுவை தோயு மொ
ருபெருங் குடுமிச் - சிறுபை நாற்றிய பஃறலைக் கருங்கோ - லா
குவ தறியு முதுவாய் வேல - கூறுக மாதோநின் கழங்கின் றிட்ப -
மாறாது வருபனி கலுழுங் கங்குலி - னாது துயருமென் கண்ணி
னிது படிய - வெம்மனை முந்துறத் தருமோ - தன்மனை யுய்க்குமோ
யாதவன் குறிப்பே." இவ் அகப்பாட்டு இரண்டும் தெய்வத்தொடு
படுத்துப் புலம்பியது.

"இல்லெழும் வயலை யிலையு மூழ்த்தன - செல்வ மாக்க
ளிற் செல்லு மஃகின - மயிலடி யிலைய மாக்குர னொச்சிப் -
பயிலிணர் நறும்பொழிற் பாவையுந் தமிய - ளேதி லாளன் பொ
ய்ப்பப் பொய்மருண்டு - பேதை போயினள் பிறங்குமலை யிறந்
தென - மான்ற மாலை மனையோர் புலம்ப - வீன்ற தாயு மிடும்
பைய ளெனநினைந் - தங்கண் வானத் தகடேர்ந்து திரிதருந் - திங்கட்
கடவு டிரித்துநீ பெயர்த்தலிற் - கடிமலர்க் கொன்றைக் காவலன்
சூடிய - குடுமியஞ் செல்வங் குன்றினுங் குன்றாய் - நன்பொழில்
கவித்த நமனிய வெண்குடை - யொல்புகழ்த் தந்தைக் குறுகி
வேண்டித் - தயங்குநடை முதுமை தாங்கித் தான்றனி - யியங்கு
நடை யிளமை யின்புற் றீந்த - மான்றோ ரன்ன ரேன்றுபுகழ்
போலத் - துளங்கிரு ளிரவினு மன்ற - விளங்குவை மன்றவிவ்
வையகத் தானே." இது தெய்வத்தை நோக்கிக் கூறியது.

"மறுவி றூவிச் சிறுகருங் காக்கை - யன்புடை மரபி
னின்கிளையோ டாரப் - பச்சூன் பெய்த பைநிண வல்சி - பொலம்
புனை கலத்திற் றருகுவென் மாதோ - வெஞ்சின விறல்வேற் காளை
யோ - டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே." இவ் ஐங்குறுநூறு
நிமித்தத்தொடுபடுத்துப் புலம்பியது. நற்சொல்லொடுபடுத்தன வந்
துழிக்காண்க.

இனி அன்னபிறவுமென்றதனால், "ஈன்று புறந்தந்த வே மமூ முள்ளான் - வான்றோ யிஞ்சி நன்னகர் புலம்பத் - தனி மணி யிரட்டுந் தாழுடைக் கடிகை - நுழைநுதி நெடுவேற் குறும் படை மழவர் - முனையர் தந்து முரம்பின் வீழ்த்த - வில்லோர் வாழ்க்கை விழுத்தொடை மறவர் - வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார் - நடுகற் பீலி சூட்டித் துடிபடத் - தொப்பிக் கள் ளொடு துரூஉப்பலி கொடுக்கும் - போக்கருங் கவலைப் புலவுநா றருஞ்சுரந் - துணிந்துபிற ளாயின ளாயினு மணிந்தணிந் - தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇத்தன் - மார்பு துணையாகத் துயிற் றுக தில்ல - துஞ்சா முழவிற் கோவற் கோமா - னெடுந்தேர்க் காரி கொடுங்கா முன்றுறைப் - பெண்ணையம் பெயர்யாற்று நுண் ணறல் கடுக்கு - நெறியிருங் கதுப்பினென் பேதைச் - கறியாத் தேஎத் தாற்றிய துணையே." என்பது தலைவன் மிகவும் அன்பு செய்கவென்று தெய்வத்திற்குப் பராயது. அகம்.

"நீர்நசைக் கூக்கிய வுயவ லியானை - யியம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தஞ் - சென்றனண் மன்றவென் மகளே - பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே." இவ் ஐங்குறுநூறு யாம் இவற்றைக் கண்டு வருந்த இவற்றை எமக்கு ஒழித்துத் தான் நீர் இலா ஆரிடைப் போயினளென்றது.

"என்னு முள்ளினள் கொல்லோ தன்னை - நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொ - டழுங்கன் மூதூ ரலரெழச் - செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே." இஃது என்னை நினைப் பாளோவென்றது.

இன்னும் இதனானே செய்யுட்களுள் இவற்றின் வேறுபட வருவனவெல்லாம் அமைத்துக்கொள்க.

"செல்லிய முயலிற் பாஅ சிறகர் - வாவ லுவக்கு மாலையாம் புலம்பப் - போகிய வவட்கோ நோவென் றேமொழித் - துணையி லள் கலுழு நெஞ்சி - னிணைமெ ருண்க ணிவட்குநோ வதுவே." இது தோழிதேஎத்துப் புலம்பல். இது ஐங்குறுநூறு. தோழி தேஎத்துமெனப் பொதுப்படக்கூறியவதனாற் றோழியை வெகு ண்டு கூறுவனவுங் கொள்க.

"வரியணி பந்தும் வாடிய வயலையு - மயிலடி யன்ன மாக்குர னொச்சியுங் - கடியுடை வியனகர்க் காண்வரத் தோன்றத் - தமி

யேன் கண்டதன் டலையுந் தெறுவர - நோயா கின்றே மகளைநின் றோழி - யெரிசினந் தணிந்த விலையி லஞ்சினை - வரிப்புறப் புறவின் புலம்புகொ டெள்விளி - யுருப்பவி ரமையத்த மாப்புன் றோக்கி - யிலங்கிலை வெள்வேல் விடலையை - விலங்கு மலையாரிடை நலியுங்கொ லெனவே" எனவும் வரும்.

"இதுவென் பாவைக் கினியநன் பாவை - யிதுவென் பைங்கிளி யெடுத்த பைங்கிளி - யிதுவென் பூவைக் கினியசொற் பூவையென் - றலம்வரு நோக்கி னலம்வருஞ் சுடர்நுதல் - காண்டொறுங் காண்டொறுங் கலங்கி - நீங்கின ளோவென் பூங்க ணோளே," இவ் ஐங்குறுநூறு தேடிக்காணாது வந்தாரைக் கண்டு புலம்பியது.

இனி அவ்வழிபாகிய கிளவிகளுட் சில வருமாறு. "ஒருமக ளுடையேன் மன்னே யவளுஞ் - செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு - பெருமலை யருஞ்சுர நெருநற் சென்றன - ளினியே, தாங்குநி னவல மென்றீ ரதுமற் - றியாங்கன மொல்லுமோ வறிவுடை யீரே - யுள்ளி னுள்ளம் வேமே யுண்கண் - மணிவாழ் பாவை நடைகற் றன்னவெ - னணியியற் குறுமக ளாடிய - மணியேர் நொச்சியுந் தெற்றியுங் கண்டே." இந்நற்றிணை தெருட்டும் அயலிலாட்டியர்க் குரைத்தது. "கயந்தலை மடப்பிடி பயம்பிற் பட்டெனக் - களிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ - யொய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி - தாஅதரு மறுகின் மூதூ ராங்க - ணெருமை நல்லான் பெருமுலை மாந்து - நாடுபல விறந்த நன்ன ராட்டிக் - காயமு மணியிழந் தழுங்கின்று தாயு - மீன்றோட் டாரா யிரீஇயவொன் னுயிரெனக் - கன்னுந் துதலு நீவித் தன்னெனத் - தடவுநிலை நொச்சி வரிநிழ லசைஇத் - தாழிக் குவளை வாடுமலர் சூடித் - தருமணற் கிடந்த பாவையென் - மருமக ளேயென முயங்கின ளழுமே." இம் மணிமிடைபவளத்துத் தாய்நிலையும் ஆயத்துநிலையுங் கண்டோர் கூறியவாறுணர்க. "மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த - வன்பி லறனு மருளின்று மன்ற - வெஞ்சுர மிறந்த வஞ்சி லோதி - பெருமட மான்பிணை யலைத்த - சிறுநுதற் குறுமகட் காட்டிய வம்மே." இவ் ஐங்குறுநூறு தலைவி மீண்டு வந்துழித் தாய் சுற்றத்தார்க்குக் காட்டியது. "நம்மனைச் சிலம்பு கழீஇ யயரினு - மெம்மனை வதுவை நன்மணங் கழிகெனச் - சொல்லி னெவனோ மற்றே வென்வேன் - மையற விளங்கிய கழலடிப் - பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே." இவ் ஐங்குறுநூறு தலைவன்மீண்டு தலைவியைத் தன்மனைக்கட் கொண்டுவந்துழி அவ

ன் தாய் சிலம்புகழீஇ நோன்புசெய்கின்றாளெனக் கேட்ட நற்றாய் ஆண்டுநின்றும் வந்தார்க்குக்கூறியது. இன்னுஞ் சான்றோர் செய்யுட்களுள் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க. (கசு)

கஎ. ஏமப் பேரூர்ச் சேரியுஞ் சுரத்துந்
தாமே செல்லுந் தாயரு முளரே.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி. (இ-ள்.) ஏமப்பேரூர்ச்சேரியும் சுரத்தும் = பதியெழுவறியாப் பேரூரிற் தெருவின் கண்ணும் அருவழிக்கண்ணுந்: தாமே செல்லும் தாயரும் உளர் = நற்றையுந் தன்னையரும் உணராமுன்னம் எதிர்ப்பட்டு மீட்டற்குத் தாமே போந் தாயரும் உளர்.—எ-று. உம்மை எண்ணும்மை. தாயரெனப் பன்மைகூறித் தாமேயெனப் பிரித்ததனாற் சேரிசகு நற்றாய் சேறலுஞ் சுரத்திற்குச் செவிலித்தாய் சேறலும் புலனெறிவழக்கிற்குச் சிறந்ததென்றுணர்க. உம் "வெம்மலை யருஞ்சுர நம்பிவ ளொழிய - விருநில முயிர்க்கு மின்னாக் கான - நெருநற் போகிய பெருமடத் தகுவி - யைதக லல்குற் றழையணிக் கூட்டுங் - கூழை நொச்சிக் கீழ தென்மகள் - செப்புடைச சிறுவிரல் வரித்த - வண்டலுங் காணிரோ கண்ணுடை யீரோ." வண்டலைக் காணார் தேளத்து நின்று காணில் ஆற்றீரெனக் கூறினமையின் ஆயத்திற்சென்று இப்புறஞ் சென்று சேரியோர்க்கு உரைத்ததாயிற்று.

"நிலந்தொட்டுப் புகாஅர் வான மேறார் - விறந்திரு முந்நீர்க் காலிற் செல்லார் - நாட்டி னாட்டி னூரி னூரிற் - குடிமுறை குடிமுறை தேரிற் - கெடுநரு முளரோநங் காத லோரே." இது செவிலி தேடத் துணிந்தது. இக் குறுந்தொகையுள் நம்மாற் காதலிக்கப்பட்டாரொன்றது அவ்விருவரையும். தாயருமுளரென்றதனாற் தந்தையுந் தன்னையரும் வந்தால் இன்னது செய்வலென்றலும் உளவென்று கொள்க: "நுமர்வரி னோர்ப்பி னல்ல தமாவரின் - முந்நீர் மண்டில முழுவது மாற்றாது" என்றாறபோலவன. அடி புறத்திடாதாள் புறம்போதலும் பிரிவென்றற்குச் சேரியுங் கூறினார், அஃது எம இல் இருக்கையன்றாதலின். (கஎ)

கஅ. அயலோ ராயினு மகற்சி மேற்றே.

இதுவும் பாலைக்கு ஓர் வேறுபாடு கூறுகின்றது. (இ-ள்.) அயலோர் ஆயினும் = முற்கூறிய சேரியினுஞ் சுரத்தினுமன்றிக

தம் மனைக்கு அயலே பிரிந்தாராயினும்: அகற்சி மேற்று = அதுவும் பிரிவின்கண்ணதாம்.—எ-று. எனவே நற்றாய் தலைவியைத்தேர்ந்து இல்லிற் கூறுவனவுஞ் சேரியிற் கூறுவனவும் பிரிந்தானைப் பின் சென்றதேயாயிற்று. இக்கருத்தான் "எமப்பேரூர்" என்றார். இதனுனே மனையயற்கட்பரத்தையிற்பிரிவும் பாலையென்று உய்த்துணர்க.

௩௯. தலைவரும் விழும நிலையெடுத் துரைப்பினும்
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணு
நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்
வாய்மையும் பொய்மையுங் கண்டோர்ச் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினு
நோய்மிகப் பெருகித் தன்னெஞ்சு கலுழ்ந்தோளை
யழிந்தது களைஇய வொழிந்தது கூறி
வன்புறை நெருங்கி வந்ததன் றிறத்தோ
டென்றிவை யெல்லா மியல்புற நாடி
னொன்றித் தோன்றுந் தோழி மேன.

இது தாயர்க்கு உரியனகூறித் தோழிக்குக் கூற்று நிகழுமா று கூறுகின்றது. (இ-ள்.) தலைவரும் விழுமநிலை எடுத்து உரைப்பினும் = தலைவன் கொண்டு தலைக்கழியாவிடிற் தலைவிக்கட் தோன்றுந் துன்பநிலையைத் தலைவற்குந் தலைவிக்கும் விளங்கக் கூறினும்: போக்கற் கண்ணும் = அதுகேட்டு இருவரும் போக்கொருப்பட்டுழித் தலைவியைப் போகவிடும் இடத்தும்: விடுத்தற்கண்ணும் = தலைவியை அவனோடு கூட்டி விடுக்குங்காற் தலைவர்க்குப் பாதுகாவலாகக் கூறும் இடத்தும்: நீக்கலின் வந்த தம் உறு விழுமமும் = தமரை நீக்குதலாற் தமக்குற்ற வருத்தத்திடத்தும்: வாய்மையும் பொய்மையும் கண்டோர்ச் சுட்டித் தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும் = மெய்யும் பொய்யும் உணர்ந்த அறிவாது தருமநூற்றுணிவும் இதுவெனக் கூறிப் பின்சென்று மீட்டற்கு நினைந்த தாயது நிலைமை அறிந்து அவரை மீளாதபடி அவளை மீட்டுக்கொளினும்: நோய் மிகப் பெருகித் தன் நெஞ்சு கலுழ்ந்தோளை அழிந்தது களைஇய ஒழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தோடு = தலைவி போக்கிற்கு நெஞ்சு மிகப் புண்ணுற்றுத் தமொடுறுந் தாயை அவ் வருத்தந் தீர்த்தல்வேண்டி உழுவலன்பு காரணத்தாற் பிரிந்தாளென்பது உணரக்கூறி அவளை நெருங்கிவந்த ஆற்றுவித்தற் கூற்றோடே: என்று இவை

யெல்லாம் இயல்புற நாடின் ஒன்றித் தோன்றும் தோழி மேன= என்று இச்சொல்லப்பட்டன எல்லாவற்றுக்கண்ணும் இலக்கண வகையான் ஆராயுங் காலத்துத் தான் அவள் என்னும் வேற்றுமையின்றி ஒன்றுபடத் தோன்றுந் தோழி மேன களவி.—எ-று.

உ-ம்: "வெல்போர்க் குரிசினீ வியன்சுர மிறப்பிற் - பல்கா மூல்கு லவ்வரி வாடக் - குழலினு மினைகுவள் பெரிதே - யவிழொலி கூந்தன் மாஅ யோளே." இவ் ஐங்குறுநூற்றுட் குழலினும் இரங்குவளென்று பிரிந்தவள் இரங்குதற்பொருள்படத் தோழி தலைவரும் விழுமந் தலைவற்குக் கூறினாள்.

"உன்னங் கொள்கையோ டுளங்கரந் துறையு - மன்னை சொல்லு முய்க மென்னதூஉ - மீரஞ் சேரா வியல்பில் பொய்ம்மொழிச் - சேரியம் பெண்டிர் சௌவையு மொழிக - நாடுக ணகற்றிய வுதிய னஞ்சொற் - பாடிச் சென்ற பரிசிலர் போல - வுவவினி வாழி தோழி யவரோ - பொம்ம லோதி நம்மொடொ ராங்குச் - செலவயர்ந் தன ராத லின்றே - மலைதொறு மால்சமை மீசைந்த சால்வாய் - கூரோரி மீன்கொள் பரதவர் கொடுஞ்திமி - னளிசுடர் வான்றோய் புணரிமிசைக் கண்டாங்கு - மேவரத் தோன்றும் யாவுயர் நனந்தலை - யுயவல் யானை வெரினுச்சென் றன்ன - கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறி - காடுமீக் கூறுங் கோடேந் தொருத்த - லாறு கடி கொள்ளு மருஞ்சுரம் பணைத்தோ - ணாறைங் கூந்தற் கொம்மை வரிமுலை - நிரையித ழுண்கண் மகளிர்க் - கரிய வாலென வழுங்கின செலவே." இதனுள் அன்னைசொல்லும் பெண்டிர்கௌவையுந் தலைவரும் விழுமமென்று தலைவிக்குக் கூறினாள்.

இனிப் போக்கற்கட் கூறுவன பலவுமுள. "இலங்குவீங் செல்வளை யாய்நுதல் கவின்பெறப் - பொலந்தேர்க் கொண்கனும் வந்தன னினியே - யிலங்கரி நெடுங்க ணனந்தறீர் - நலங்கிளர் பசலையை நருகம் யாமே." இவ் ஐங்குறுநூற்றிற் கண்கள் அனந்தறீர் என்றதனானே தலைவன் உடன்கொண்டுபோதற்கு வந்தானெனப் பாயலுணர்த்திக்கூறிற்று. "வேலும் விளங்கின வினையரு மியன்றனர் - தாருந் ததையின தழையுந் தொடுத்தன - நிலநீரற்ற வெம்மை நீங்கப் - பெயனீர் தலைஇய வுலவை யிலைநீத்துக் - குறுமுறி யீன்றன மானே நறுமலர் - வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன் - றேம்படப் பொதுளின பொழிலே கானமு - நனிநன் றாகிய பனிநீங்கு வழிநாட் - பாலெனப் பாத்தரு நிலவின் மாலை - போக வந்தன்றாற் றாதே நீயுங் - கலங்கா மனத்தை யாகி

வயிற் பிரியாது - வன்கண் செய்து சென்றனள் - புன்கண் செய்தல் புரைவதோ வன்றே." இது தாயை வற்புறுத்தியது.

இயல்புற என்றதனானே தலைவன் கரணவகையால் வரைந்தானாக எதிர்சென்ற தோழிக்கு யான்வரைந்தமை நுமர்க்குணர்த்தல் வேண்டுமென்றாற்கு அவள் உணர்த்தினேனென்றலுந் தலைவி மீண்டுவருழி ஊரது நிலைமைகூறுதலுங் கொள்க.

"கருவிரன் மந்திக் கல்லா விளம்பார்ப் - பிருவெதி ரீர்ங்கழையேறிச் சிறுகோன் - மதிபுடைப் பதுபோற் றோன்று நாட - வரைந்தனை நீயெனக் கேட்டியா - னுரைத்தனெ னல்லனோ வஃதென் யாய்க்கே." "புள்ளு மறியாப் பல்பழம் பழூஉ - மடமா னறியாத் தடநீர் நிலைஇச் - சுரநனி யினிய வாகுக வென்று - நினைத்தொறுங் கலுழு மென்னினு - மிகப்பெரிது ழலங்கின்று தோழிநம மூரே." இன்னும் இதனானே செய்யுட்கண் வேறுபட வருவன வெல்லாம் அமைத்துக்கொள்க.

"ஊஉ ரலரெழச் சேரி கல்லெனா - வானா தலைக்கு மறனி லன்னை - தானே யிருக்கத்தன் மனையே யானே - நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க - வுணலாய்ந் திசினோ லவரொடு சேய்நாட்டு - விண்டொட நிவந்த விலங்கு மலைக்கவாஅற் - கரும்பு நடுபாத்தி யன்ன - பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரோ." இது போக்குநேர்ந்தமை தோழிகூறியது. பிறவுமன்ன. (கூக)

சo. பொழுது மாறு முட்குவரத் தோன்றி
வழுவி னாகிய குற்றங் காட்டலு
மூரது சார்வுஞ் செல்லுந் தேயமு
மார்வ நெஞ்சமொடு செப்பிய கிளவியும்
புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொ
டழிந்தெதிர் கூறி விடுப்பினு மாங்கத்
தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினுஞ்
சேய்நிலைக் ககன்றோர் செலவினும் வரவினுங்
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப.

இது கொண்டுதலைக்கழிந்துழி இடைச்சுரத்துக் கண்டோர் கூறுவன கூறுகின்றது. (இ-ள்.) பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழுவின் ஆகிய குற்றம் காட்டலும் = உடன்போயவழி மாலைக்காலமுஞ் சேறற்கரிய வழியும் அஞ்சுவரக் கூறி அவற்றது நீங்கு காரணமாகப் போகின்றார்க்கு வரும் ஏதம் அறிவித்த

லும்: ஊரது சார்வும் செல்லும் தேயமும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய கிளவியும் = எம்மூர் அணித்தெனவுஞ் செல்லுமூர் சேய்த்தெனவும் அன்புடைநெஞ்சத்தாற் கூறுங் கூற்றுக்களும்: புணர்ந்தோர் பாங்கில் புணர்ந்த நெஞ்சமொடு அழிந்து எதிர் கூறி விடுப்பினும் = புணர்ந்து உடன்போய இருவர்கண்ணுந் தளைவா நெஞ்சினராகி ஆற்றுமை மீதூர ஏற்றுக்கொண்டுநின்று இனி இதின் ஊங்குப் போதற்கரிது நும் பதிவயிற் பெயர்தல் வேண்டுமென்று உரைத்து மீட்டலும்: ஆங்கு அத் தாய்நிலைகண்டு தடுப்பினும் விடுப்பினும் = அவ்விடத்துத் தேடிச்சென்ற அச்செவிலியது நிலைகண்டு அவளைத் தடுத்து மீட்பினும் அவர் இன்னுழிச் செல்வரென விடுத்துப் போக்கினும்: சேய் நிலைக்கு அகன்றோர் செலவினும் = சேய்த்தாகிய நிலைமைக்கண்ணே நீங்கின அவ்விருவருடைய போக்கிடத்தும்: வரவினும் = செவிலியது வரவிடத்தும்: கண்டோர் மொழிதல் கண்டது என்ப = இடைச்சுரத்துக்கண்டோர் கூறுதல் உலகியல்வழக்கினுட் காணப்பட்டதென்று கூறுவர் புலவர்.—எ-று.

"எம்மூ ரல்ல தூர்நணி யில்லை - வெம்முரட் செல்வன் கதிருமூழ்த்தனன் - சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப - விளையன் மெல்லியள் மடந்தை - யரிய சேய பெருங்க லாறே." இதனுட் கதிரும் ஊழ்த்தனனெனவே பொழுதும் பெருங்கலாறெனவே ஆற்றருமையும் பற்றிக் குற்றங் காட்டியவாறு காண்க. "எல்லுமெல்லின்று" என்னுங் குறுந்தொகைப்பாட்டும் அது.

"நில்லோண் மெல்லடி நடையு மாற்று - பல்கதிர்ச் செல்வனசதிரு மூழ்த்தன - னணித்தா றுயரத் தோன்றுவ தெம்மூர் - மணித்தார் மார்ப சேர்ந்தனை சென்மே." இது எம்மூர் அணித்தென்றசுற்ற சார்வும் அதனானே செல்லுந்தேயஞ் சேய்த்தெனவுங் கூறிற்று. மகட்பயந்து வாழ்வோர்க்கு இவளைக் கண்டு அருள்வருதலின் ஆர்வநெஞ்சமென்றார்.

"இதுநம் மூரோ யாவருங் கேளிர் - பொதுவறு சிறப்பின் வதுவையுங் காண்டு - மீன்றோ ரெய்தச் செய்தவம் - யாம்பெற் றனமான் மீண்டனை சென்மே." இஃது அழிந்தெதிர்கூறிவிடுத்தது. இது கொடுப்போரின்றிக் கரணமுண்மை கூறிற்று. மீட்டுழி இன்னதுசெய்ப என்றல் புலனெறிவழக்கன்று.

"பெயர்ந்து போகுதி பெருமூ தாட்டி - சிலம்புகெழு சீறடி சிவப்ப - விலங்குவேற் காளையோ டிறந்தனள் சுரனே." "சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை - நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யும் - தேருங்கா லும்மக ளுமக்குமாங்

கனையளே." "கடன்மேய சங்கங் கழியடைந்த பெண்ணை - மடன் மேய வாழ்குர லன்றில் - கெடலருஞ்சீர் - வாமா நெடுங்கோதை வான்றீண்டு கொல்லிமேற் - றேமாவின் மேய கனி." இவை செவி லியைத் தடுத்தன.

"சிலம்புஞ் சிறுநுதலுஞ் சில்குழலும் பல்வளையு மொருபாற் றோன்ற - வலங்கலந் திண்டோளு மாடெருத்து மொண்குழையு மொருபாற் றோன்ற - விலங்க லருஞ்சுரத்து வேறுருவி னொருடம் பாய் வருவார்க் கண்டே - யலங்க லவிர்சடையெம் மண்ணல் விளையாட்டென் றகன்றேம் பாவம்" இது தெய்வமென யாங்கள் போந்தேம், நுமக்கெய்தச் சேறலாமென்று விடுத்தது. "நெருப் பவிர கனலி யுருப்புச் சினைந்தணியக் - கருங்கால் யாத்த வரிநிழ லசைஇச் - சிறுவரை யிறப்பிற காண்டி செறிதளிர்ப் - பொன் னேர் மேனி மடந்தையொடு - வென்வே லண்ணல் முன்னிய சுரனே." இவ் ஐங்குறுநூறும் அது.

"அஞ்சுடர்நீள் வாண்முகத் தாயிழையு மாவிலா - வெஞ்சுடர் நீள் வேலனும் போதரக்கண் - டஞ்சி - யொருசுடரு மின்றி யுலகுபா ழாக - விருசுடரும் போந்தனவென் றார்." இஃது இடைச்சுரத்துக் கண்டோர் கூறிய வார்த்தையைக் கேட்டோராகச் சிலா கூறியது.

"அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத் - தொலிவ லீந்தி னுலவையங்காட் டாறுசென் - மாக்கள் சென்னி யெறிந்த செம்ம - றுத்த லைய நெய்த்தோர் வல்லியம் - பெருந்தலைக் குருளை மலை மா னேற்கு - மீண்டிவ ரீங்கைய சுரனே வையெயிற் - றையண் மாயண மடந்தை முன்னுற் - றெல்லிடை நீக்கு மிளையோ னுள் ளங் - காலொடு பட்ட மாரி - மால்வரை மிளிர்க்கு முருமினு ம கொடிதே." "காண்பான் வரவினுற் காதலன் காதலிபின் னடவ நிற்ப - நாண்பால னாதலா னன்னுதல் கேள்வன்பின் னடவா நிற்ப - காண்பாண்மை குன்று வயிலியே லவன்றனக்கு மஞ்சொ லாட்கும் - பாண்பாலே வனடினமும் பாட வருஞ்சுரமும் பதி போன் றன்றே." "மடக்கண் டகரக் கூந்தற் பணைத்தோள் - ய ந்த வாலெயிற்றுச் சேர்ந்துசெறி குறங்கிற் - பிணைய லந்தழை தழைஇத் துணையிலள் - விழவுக்களம் பொலிய வந்துநின் றன ளே - யெழுமினோ வெழுமினங் கொழுநற் காக்க - மாரியர் துய ன்றிய பேரிசை முள்ளூர்ப் - பலருடன் கழித்த வொள்வாண் மலை யன - தொருவேற் கோடி யாங்குநம் - பன்மைய தேவனோவில னன்மை தலைப் படினே." இஃது இடைச்சுரத்துக் குறும்பி

னுள்ளோர் இவர்களைக்கண்டு கோள் இழைப்புற்றார்க்கு அவர்பெண்டிர் கூறியது. இவை செலவின்கட் கூறியன. "வில்லோன் காலன கழலே தொடியோள் - மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர் - யார்கொ லளியர் தாமே யாரியர் - கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி - வாகை வெண்ணெற் றொலிக்கும் - வேய்பயி லழுவ முன்னி யோரே." என்பதும் அது.

"கடியான் கதிரெறிப்பக் கல்லலையில் வெம்பியவக் கலங்கற் சின்னீ - ரடியா னுலகளந்த வாழியா னூக்கிய வமிர்தென் றெண்ணிச் - கொடியானன் சொடுப்பக் குடங்கையிடங் கொண்டிருந்து குடித்துச் சென்ற - வடியோர் தடங்கணவ் வஞ்சிக்கொம் பின்னுரிவ் வருவார் போலும்." "நமரோ யவரொனி னன்னினீர் சொன்மி - னமர்விலோ ரவ்வதி யாய்நின் - றமரோ - விளக்கி னனையாதெ தாஞ்சன்றான சண்டேன - களககனி வல்லலை யான்" "அறம்புரி யருமறை நவின்ற நாவிற - றிறம்புரி கொள்கை யந்தணிர் தொழுதலென் - றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே - கண்டனெ மம்ம சுரத்திடை யவளை - யின்றுணை யினிதுபாராட்டக் - குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே." இவை செவிலிவரவின்கட் கூறியன. "எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ - லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலு - நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக் - குறிப்பேவல் செயன்மாலைக் கொளநடை யந்தணீர் - வெவ்விடைச் செலன்மாலை யொழுககத்தீ ரிவ்விடை - யென்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந் - தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சிய - ரன்னா ரிருவரைக் காணிரோ பெரும ; காணோ மல்லேங் கண்டனங் கடத்திடைப் - பூண்ணழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய - மாணிழை மடவர லுயிர் நீர்போதிர் ; பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை - மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யு - நினையுங்கா னும்மக ணுமக்குமாங் கனையளே ; சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை - நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென் செய்யுந் - தேருங்கா னும்மக ணுமக்குமாங் கனையளே ; ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ் - சூழுங்கா னும்மக ணுமக்குமாங் கனையளே ; எனவாங்கு, இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின் - சிறந்தானை வழிபடீஇச் சென்றனள் - அறந்தலை பிரியா வாறு மற்றதுவே." என்னுங் கலியும் அது. இக்கூறியவாறன்றி இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இச்சூத்திரத்து அமைக்க. (௪0)

ஒன்றாத் தமரினும் பருவத்துஞ் சுரத்து
மொன்றிய தோழியொடு வலிப்பினும் விடுப்பினு
மிடைச்சுர மருங்கி னவடம ரெய்திக்
கடைக்கொண்டு பெயர்தலிற் கலங்கஞ ரெய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை யுளப்பட
வப்பாற் பட்ட வொருதிறத் தானு
நாளது சின்மையு மிளமைய தருமையுந்
தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியு
மின்மைய திளிவு முடைமைய துயர்ச்சியு
மன்பின தகலமு மகற்சிய தருமையு
மொன்றாப் பொருள்வயி னூக்கிய பாலினும்
வாயினுங் கையினும் வகுத்த பக்கமோ
டூதியங் கருதிய வொருதிறத் தானும்
புகழு மானமு மெடுத்துவற் புறுத்தலுந்
தூதிடை யிட்ட வகையி னானு
மாகித் தோன்றும் பாங்கோர் பாங்கினு
மூன்றன் பகுதியு மண்டிலத் தருமையுந்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலு முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினுங்
காவற் பாங்கி னாங்கோர் பக்கமும்
பரத்தையி னகற்சியிற் பிரிந்தோர் குறுகி
யிரத்தலுந் தெளித்தலு மெனவிரு வகையோ
டுரைத்திற நாட்டங் கிழவோன் மேன.

இஃது உடன்போக்கினுள் நற்றாயுந் தோழியுங் கண்டோருங் கூறுவன கூறிற் தலைவன் ஆண்டும் பிறாண்டுங் கூறுங் கூற்றுக் கூறுகின்றது. தமர் பருவஞ் சுரமென்னும் மூன்றற்கும் ஒன்றாவென்பதனையும் ஒன்றியவென்பதனையுங் கூட்டி எழனுருபுவிரித்தப பொருளுரைக்க (இ-ள்.) ஒன்றாத் தமரினும் = உடன்போக்கிற்கு ஒன்றாத் தாயாமுதலியோர்கண்ணும்: பருவத்தும் = இற்செறிப்பாற் புறம்போதற்கு ஒன்றாமையானுந் தலைவனொடு கூட்டம்பெறாது ஆற்றியிருக்கும் பருவம் அன்றாகலானும் ஒன்றாப் பருவத்தின்கண்ணும்: சுரத்தும் = அரிய சேய கல்லதர் ஆதலிற் போத

ற்கு ஒன்றாச் சுரத்தின்கண்ணும்: ஒன்றிய தோழியொடு வலிப்பினும் = தலைவி வேண்டியதே தான் வேண்டுதலிற் பின் தமர்கூறுங் கடுஞ்சொற் கேட்டற்கும் ஒருப்பட்டு கொதுமலர் வரைவிற்காற்றாது உடன்போதற்கேலாத கடுங்கோடையெனக் கருதாது கொண்டுதலைக்கழிதற்கு ஒன்றிய தோழியொடு தலைவன் ஆராய்ந்து உடன்போக்கினைத் துணியினும்: விடுப்பினும் = தலைவியை ஆற்றியிருப்பளெனக் கருதி உடன்கொண்டுபோகாது தலைவன் விடுப்பினும்: இடைச் சுர மருங்கின் அவள் தமர் எய்திக் கடைகொண்டு பெயர்த்தலிற் கலங்கு அஞர் எய்திக் கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட அப்பால் பட்ட ஒரு திறத்தானும் = தந்தையுந் தன்னையரும் இடைச்சுரத்திடத்தே பின்சென்று பொருந்தித் தலைவியைப் பெயாத்தல் வேண்டுதலிற் தலைவி மிகவருந்திக் தமர்பாற் பட்டு உரையாடாது தலைவன்பாற் படுதலின் அவள் கற்பொடு புணர்ந்தமை சுற்றத்தாருஞ் சுரத்துக்கண்டோரும் உணர்ந்த வெளிப்பாடு உளப்படக் கொண்டுதலைக்கழிதற் கூற்றின்கட் பட்ட பகுதிக்கண்ணும்:

(கடைக்கொண்டெய்தியென்க. கடை, பின். தமரெனவே, தந்தை தன்னையரை உணர்த்திற்று. முன்னாத் தாய்நிலைகண்டு தடுப்பினுமென்றலின், தாயர்தாமே சென்றமை முன்னத்தாற் தமர் உணர்ந்து வலிதிற்கொண்டு அகன்றாளேயென்று கருதியும் வரைவு மாட்சிமைப்படுத்தற்கும் பின்சென்று அவள் பெயரா மற் கற்பொடுபுணர்ந்தமை உணர்ந்து தலைவன் எடுத்துக்கொண்ட வினைமுடித்தலும் ஒருதலையென்றுணர்ந்து பின்னர் அவரும் போக்குடம்பட்டு மீள்பவென்றுகொள்க. அவ்வெளிப்பாடு கற்பாதலிற் கற்பென்றார். உளப்படவென்றதனால் வலித்தலும் விடுதலும் அகப்படவென்றாராயிற்று.)

நாளது சின்மையும் இளமையது அருமையும் தாளாண்பக்கமும் தகுதியது அமைதியும் இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும் ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும் = வாழ்க்கைநாள் சிலவாதல் ஏதுவாகப் பொருள் செய்தல் குறித்தானை இளமையது அருமை இன்பத்தின்கண்ணே அளந்து ஒன்றாமையும், மடியின்மை ஏதுவாகப் பொருள்செய்தல் குறித்தானை யாதானும் ஓர் ஆற்றாற் பொருள்செய்யலாகாது தத்தநிலைமைக்கேற்பச் செய்யவேண்டுமென்னுந் தகுதியமைதி ஒன்றாமையும், வறுமையான் வரும் இளிவரவு நினைத்துப் பொருள்செய்ய நினைந்தானைப் பொருளுடை

மைக்காலத்து நிகழும் முயற்சி அதற்கு இடையூறாகிப் பொருணசையுள்ளத்தைத் தடுத்து ஒன்றாமையும், பிரிந்துழி நிகழும் அன்பினது அகலங்காரணமாகப் பொருள்செய்யக் குறித்தானைப் பிரிவாற்றாமையிடைநின்று தடுத்து ஒன்றாமையுமாய், ஒன்று ஒன்றனோடு ஒன்றாது வரும் பொருட்டிறத்துப் பிரிதற்குத் தலைவன் உள்ளம் எடுத்த பகுதிக்கண்ணும் :

எனவே, நாளதுசின்மையுந் தாளாண்பக்கமும் இன்மையதிளிவும் அன்பினதகலமும் பொருள்செயல்வகைப்பால ஆதலும் இளமையதருமையுந் தருகியதமைதியும் உடைமையதுயர்ச்சியும் அகற்சியதருமையும் இன்பத்தின்பால ஆதலுங் கூறினார். இவ்வெட்டும் பொருள்செயற்கு ஒன்றாவென்றுமோ எனின், வாழ்நாட் சிறிதென்று உணர்ந்து அதற்குள்ளே பொருள்செய்து அறமும் இன்பமும் பெறுதற்குக்கருதியவழி ஆண்டு முயற்சியும் இன்மையால்வரும் இளிவரவும் அதற்கு ஒருப்படுத்துங் கருவியாதலானும், பொருள் பின்பு அன்பிற்குப் பெருக்கந்தருமாதலானும், இந்நான்கும் பொருள்செய்தற்கு வேண்டுமென மறுக்க. இவ்வெட்டற்குந் தலைவன் கூற்றாக உதாரணம்வருவன உளவேற் காண்க.

"ஈதலுந் துய்த்தலு மில்லோர்க் கில்லெனச் - செய்வினை கைம்மிக வெண்ணுதி யவ்வினைக் - கம்மா வரிவையும் வருமோ - வெம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே." இக் குறுந்தொகையுள் இன்மையதிளிவு நெஞ்சிற்குக் கூறியவாறு காண்க. பகுதியென்றதனானே, தலைவன் பிரிவலெனக் கூறுவனவும் பிறவுங் கொள்க. "இன்றே சென்று வருவது நாளைக் குன்றிழி யருவியின் வரும்" இது குறுந்தொகை. இவை வணிகர்க்கே உரியன.

இனித் தலைவன்கூற்றினைத் தோழியுந் தலைவியுங் கொண்டுகூறுவன பெரும்பான்மை. அவையெல்லாம் "நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே" என்னுஞ் சூத்திரத்துட் காட்டுதும்.

வாயினுங் கையினும் வகுத்த பக்கமோடு ஊதியம் கருதிய ஒரு திறத்தானும் = உண்மைப் பொருளிடத்தும் அதற்கேற்ற ஒழுக்கத்திடத்துங் கூறுபடுத்துக் கூறிய நூல்களாற் பெறும் பயனைக் கருதிய ஒருகூற்றின் கண்ணும் :

என்றது, வீடுபேற்றிற்கு உதவியாக நூல்களை ஓதற்குப் பிரிவுழியுமென்றதாம். இதற்குத் தலைவன்கூற்றாக உதாரணம் வருவன உளவேற் காண்க.

புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும் = போகம்வேண்டிப் பொதுச்சொற் பொறுத்தல் அரசியல்பன்றாதலிற் தமக்கேற்ற புகழும் பெருமையும் எடுத்துக்காட்டி இதனாற் பிரிதுமெனத் தலைவியையுந் தோழியையும் வற்புறுத்தற்கண்ணும் : இதற்குத் தலைவன்கூற்று வந்துழிக் காண்க.

தூது இடையிட்ட வகையினானும் = இருபெரு வேந்தர் பொருவது குறித்துழி இருவரையுஞ் சந்துசெய்வித்தற்பொருட்டுக் கூட்டத்திற்கு இடையிட்ட பிரிதற்பகுதிக்கண்ணும் :

ஒருவனுரை ஒருவன் மாற்றங்கொண்டுரைத்தலிற் றூதாயிற்று. வகையென்றார், வணிகரில் அரசர்க்கும் அரசரில் அந்தணர்க்குந் தூது சிறந்ததென்றற்கும், குறுநிலமன்னர்க்குப் பெரும்பான்மையென்றற்கும், வேந்தர் தம்மின் இழிந்தாருழைத் தூதுசேறல் உரித்தென்றற்கும். இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக்காண்க.

ஆகித்தோன்றும் பாங்கோர் பாங்கினும் = தனக்கு ஆக்கஞ் சிறந்த நட்புடையோராகித் தோன்றும் நட்புடையோர்க்கு உற்றுழி உதவச் சேறற்கண்ணும் :

இதற்கு "மலைமிசைக் குலைஇய" என்பதூஉம் "இருபெரு வேந்தர் மாறுகொள்" என்பதூஉம் முன்னர்க் காட்டினாம். அவற்றை உதாரணமாகக் கூறிக்கொள்க.

மூன்றன் பகுதியும் = அறத்தினாற் பொருளாக்கி அப்பொருளாற் காமநுகர்வலென்று பிரிதற்கண்ணும் : மண்டிலத்து அருமையும் = அங்ஙனம் பொருள்வருவாய்க்கு ஏதுவாகிய வேற்றுப் புலங்களின் அருமைகூறிப் பிரிதற்கண்ணும் : இதற்குத் தலைவன்கூற்று வந்துழிக்காண்க.

தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும் = தோற்றஞ் சான்ற புகழினராகிய வேற்று வேந்தர் தமது மீக்கூற்றங் கருதிப் பிரிதற்கண்ணும் : இதற்குத் தலைவன்கூற்று வந்துழிக்காண்க.

தோன்றல்சான்ற என்றதனாற் தெவ்வர் தன்னின் மிக்காரெனக் கேட்டுழி அழுக்காறு தோன்றலின் அதுவும் பிரிதற்கு ஏதுவாமென்றுணர்க. இஃது அரசர்க்கேயுரித்து.

பாசறைப் புலம்பலும் = தலைவன் பாசறைக்கண் இருந்து தனக்கு வெற்றி தோன்றிய காலத்துந் தான் அவட்குக் கூறிப்

போந்த பருவம் வந்துழியுந் தூது கண்டுழியும் அவள் வருந்துவ ளென நினைத்துத் தனிமைகூறும் இடத்தும் :

இதனைக் "கிழவிநிலை" என்னுஞ் சூத்திரத்தான் விலக்குவ ரெனின், அதற்கு உம்மைவிரித்துக் கிழவிநிலையை வினைசெய்யா நிற்றலாகிய இடத்து நினைந்து கூறினுகைக் கூறுர்; வெற்றி நிக ழுமிடத்துந் தான் குறித்த பருவம் வந்துழியுந் தூது கண்டுழியும் வருத்தம் விளங்கிக் கூற்றுத் தோன்றுமென்று பொருளாமென் றுணர்க.

முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பிய வினைத் திறவகை யினும் = வகையின் வினைத்திறமுமென மாற்றுக: வேந்தன் எடுத் துக்கொண்ட வினை முடிந்த காலத்துத் தான் போகவொருப்பட்டு நின்று பாகனொடு விரும்பிக் கூறிய வகையின்கட் தோன்றிய வே றோர் வினைத்திறத்திடத்தும் :

என்றது அரசனுக்குப் பின்னும் ஓர் பகைமேற் சேறல் உள தாதலை.

காவற்பாங்கின் பக்கமும் = வேந்தனுற் காக்கப்படுவனவாகிய பகுதிகளின் கூற்றிற் பிரியுமிடத்தும் :

பகுதி ஆகுபெயர்; அவை யானை குதிரை முதலியவற்றைக் காத்தலும் அரசர்க்குத் தருமமாகிய வேட்டையிற் சென்று கடுமா கொன்று எனையவற்றைச் காத்தலும் முதலியன.

ஆங்கோர் பக்கமும் = அவன் காத்தற்குரிய பகுதிக்கண்ணே நிற்பார்கூற்றிற் பிரியுமிடத்தும் :

அவர் தாபதர் முதலியோர் பலருமாம்.

பரத்தையின் அகற்சியிற் பரிந்தோட் குறுகி இரத்தலும் தெளித்தலும் என இருவகையோடு = பரத்தையிற் பிரிதல் கார ணத்தாற் புலம்பெய்திய தலைவியை எய்தி இரத்தலும் இரந்த பின்னர் ஊடலும் என்ற இருபகுதியோடே : உரைத்திற நாட்டம் கிழவோன் மேன = முற்கூறிய இடங்களிற் கூற்றுநிகழுங் கூறு பாட்டை நிலைபெறுத்துதல் தலைமகனிடத்தனவாம்.—எ - று.

உம். "ஆறுசெல் வருத்தஞ் சீறடி சிவப்பவுஞ் - சினைநீங்கு தளிரின் வண்ணம் வாடவுந் - தான்வர றுணிந்த விலளினு மிவ ளுடன் - வேய்பயி லழுவ முவக்கும் - பேதை நெஞ்சம் பெருந்தக வுடைத்தே" இது தோழியொடு வலித்தது.

அப்பாற்பட்ட ஒருதிறத்தானும் எனவே, தலைவியிடத்துத் தலைவன் கூறுவனபலவுங்கொள்க. உம். "வாள்வரி வயமான் கோளுகி ரன்ன - செம்முகை யவிழ்ந்த முண்முதிர் முருக்கின் - சிதரார் செம்ம லுரீஇய் மதவொழின் - மாணிழை மகளிர் பூணுடை முலையின் - முகைபிணி யவிழ்ந்த கோங்கமொ டைசைஇனே - யதிரல் பரந்த வந்தண் பாதிரி - முதிர்வீ யஞ்சினை தாஅ யெதிர்வீ - மராஅ மல ரொடு விராஅய்ப் பராஅ - யணங்குடை நகரின் மணந்த பூவி - னன்றே கான நயவரு மம்ம - கண்டிசின் வாழியர் குறுமக ளுந்தை - யடுகளம் பயந்த தொடிசெறி மருப்பிற் - பிடிமிடை களிற்றிற் றோன்றுங் - குறுநெடுந் துணைய குன்றமு முடைத்தே." இவ் அகப்பாட்டுத் தலைவியை மருட்டிக் கூறியது.

"உயர்கரைக் கானியாற் றவிரற லகன்றுறை - வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத் - தொடலை தைஇய மடவரன் மகளே - கண்ணினுங் கதவநின் முலையே - முலையினுங் கதவநின் றடமென் றோளே." இவ் ஐங்குறுநூறு உடன்போயவழித் தலைவன்புகழ்ச்சிக்கு நாணித் தலைவி கண்புதைத்துழி அவன் கூறியது.

"அழிவிலா முயலு மார்வ மாக்கள் - வழிபடு தெய்வங் கட்கண் டாஅங் - கலமரல் வருத்தந் தீர யாழநின் - நலமென் பணைத்தோ ளெய்தின மாயிற் - பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி - சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி - நிழல்கா ண்டோறு நெடிது வைகி - மணல்காண் டோறும் வண்டறைஇ - வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே - மாநனை கொழுதி மகிழ்குயி லாலு - நறுந்தண் பொழில கானங் - குறும்ப லூரயாஞ் செல்லு மாறே." எனவரும்: இது புணர்ச்சிமகிழ்ந்தபின் வழி வந்த நன்மைகூறி வருந்தாது ஏகென்றது. நற்றிணை. பிறவும் வேறுபடவருவனவெல்லாம் இதனான் அமைக்க.

"இரும்புலிக் கிரிந்த கருங்கட் செந்நாகு - நாட்டயிர் கவைக்குரன் கேட்டொறும் வெரூஉ - மாநிலைப் பள்ளி யல்க நம்மொடு - மானுண் கண்ணியும் வருமெனின் - வாரா ராயரோ பெருங்க லாறே." இது விடுத்தற்கட் கூறியது.

"வினையமை பாவையி னியலி நுந்தை - மனைவரை யிறந்து வந்தனை யாயிற் - றலைநாட் கெதிரிய தண்பத வெழிலி - யணிமிகு கானத் தண்புறப் பரந்த - கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டு - மீவிளை யாடுக சிறிதே யானே - மழகளி றுரிஞ்சிய பரோ

வேங்கை - மணலிடு மருங்கி னிரும்புறம் பொருந்தி - யமர்வரி னஞ்சேன் பெயர்க்குவ - னுமர்வரின் மறைகுவன் மாஅ யோளே." இது நற்றிணை. "நுமர்வரி னோர்ப்பி னல்ல தமர்வரின் - முந்நீர் மண்டில முழுவது மாற்று - தெரிகணை விடுதலோ விலனே - யரிமதர் மழைக்கண் கலுழ்வகை யெவனே." இவை தமர்வருவரென ஐயுற்றுக் கூறியன. அவர் வந்து கற்பொடு புணர்ந்தன வந்துழிக் காண்க.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும் - பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும் - புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப் - பிரிவெண்ணிப் பொருள்வயிற் பெயர்ந்தநங் காதலர் - வருவர்கொல் வயங்கிழாய் வலிப்பல்யான் கேளினி." இதனுள் எனவென்றதனாற் றலைவன்கூற்றுப் பெற்றாம். இது மூன்றன் பகுதி.

"புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத் - துறந்து வந்தனையே யருந்தொழிற் கட்டேர் - நல்லேறு தழீஇய நாகுபெயர் காலை - யுள்ளுதொறுங் கலுழு நெஞ்சம் - வல்லே யெம்மையும் வரவழைத் தனையே." இது பகைவயிற் பிரிந்தோன் பருவங்கண்டு தலைவியை நினைந்து நெஞ்சமொடு புலம்பியது.

"முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள - நல்ல காண்குவ மாஅ யோளே - பாசறை யருந்தொழி லுதவிநங் - காதன னாட்டுப் போதரும் பொழுதே." இது வேந்தர்க்குற்றுழிப்பிரிந்தோன் பருவவரவின்கண் உருவுவெளிப்பட்டுழிப் புலம்பியது. உதவியென்றலின் வேந்தர்க்குற்றுழியாயிற்று.

"வந்தாற்றான் செல்லாமோ வாரிடையாய் வார்கதிரால் - வெந்தாற்போற் றோன்றுநீர் வெய்தரத் - தந்தாய் - தசரக் குழல் புரளத் தாழ்துகில்கை யேந்தி - மகரக் குழைமறித்த நோக்கு" இது உருவுவெளிப்பாடு. நின்னொடு போதுவேனென்று அவளை ஆற்றுவித்தது. திணை பாலையிற்பாலை.

"நனிசேய்த் தென்னாது நற்றேறோறிச்சென் - றிலங்கு நிலவி னிளம்பிறை போலக் - காண்குவேந் தில்லவள் கவின் பெறு சுடர்நுதல் - விண்ணுய ரரண்பல வௌவிய - மண்ணுறு முரசின் வேந்துதொழில் விடினே." இது வேந்தர்க்குற்றுழிப் பிரிந்தோன் குறித்தபருவத்து வினைமுடியாமையிற் புலம்பியது.

"முழங்கு குரன்முரசங் காலை யியம்பக் - கடுஞ்சின வேந்தன் றொழிலெதிர்ந் தனனே - மெல்லவண் மருங்கின் முல்லை பூப்பப்-

பொங்குபெயற் கனைதுளி காரெதிர்ந் தன்றே - யஞ்சி லோதியை யுள்ளுதொறுந் - துஞ்சா தலம்வர லுமெதிர்ந் தன்றே." இது வேந்தர்க்குற்றுழிப்பிரிந்தோன் பருவம்வந்துழி மீளப்பெறாது அரசன்செய்தியும் பருவத்தின் செய்தியுந் தன்செய்தியுங் கூறிப் புலம்பியது. இப் பாசறைப் புலம்பல் பத்தினும் வேறுபடுகொண்க. தூதிற்பிரிந்துழிப் புலம்பின வந்துழிக்காண்க.

"நீடின மென்று கொடுமை தூற்றி - வாடிய நுதல ளாகிப் பிறிது நினைத் - தியாமவெங் காதலி னோய்மிகச்சாஅயச் - சொல்லிய துனைமதி நீயே - முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே." இது தூதுகண்டு அவள் கூறிய திறங்கூறெனக் கேட்டது.

"பனிமலர் நெடுங்கண் பசலை பாயத் - துனிமலி துயரமொ டரும்பட ருழப்போள் - கையறு நெஞ்சத் துயவுத்துணை யாகச் - சிறுவரைத் தங்குவை யாயிற் - காண்குவை மன்றாற் பாணவெந் தேரே." இது தலைவிமாட்டுப் பாணனைத் தூதாக விடுத்த தலைவன் கூறியது.

"படுந்தடங்கட் பல்பணைபோல் வான்முழங்கு மேலுங் - கொடுந்தடங்கட் கூற்றமின் றாக - நெடுந்தடங்க - ணீர்நின்ற நோக்கி னெடும்பணைமென் றோளாட்குத் - தேர்நின்ற தென்றோய்நீ சென்று." இஃது இளையோரைத் தூதுவிட்டது.

"ஐய வாயின செய்யோள் கிளவி - கார்நா ளுருமொடு கையறப் பிரிந்தென - நோய்நன்கு செய்தன் றெமக்கே - யாமுறு துயரமவ ளறியினோ ரன்றே." இது வினைமுடியாமையிற் பருவங்கண்டு மீளப்பெறாத தலைவன் தூதர் வார்த்தை கேட்டு வருந்தியது. பிறவும் வேறுபடவருவன கொள்க.

"முரம்புகண் ணுடையத் திரியுந் திகிரியொடு - பணைநிலை முனைஇய வயமாப் புணர்ந்து - திண்ணிதின் மாண்டன்று தேரே - யொண்ணுதற் காண்குவம் வேந்துவினை விடினே." இது வேந்தன் திறைகொண்டு மீள்வுழித் தானுஞ் சமைந்த தேரை அழைத்ததுகண்டு திண்ணிதின் மாண்டன்று தேரெனப் பாகனொடு கூறியவழி அவ்வேந்தன் திறைவாங்காது வினைமேற் சென்றானாகப் பாகனை நோக்கிக் கூறியது. இவை ஐங்குறுநூறு. "மலைமிசைக் குலைஇய" என்னும் அகப்பாட்டும் அது. கலித்தொகையுட் "புத்தியானை வந்தது காண்பான்யான் றங்கினேன்" என்பன முதலி

யவற்றான் யானைமுதலியவற்றையுங் கடவுட்பாட்டாற் றாபதனாயுங் காத்தற்குப் பிரிந்தேனெனக் கூறினானென்பது பெற்றாம்.

"ஒரூஉக், கொடியிய னல்லார் குரனாற்றத் துற்ற - முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத் - தொடீஇய வெமக்குநீ யாரை பெரியார்க் - கடியரோ வாற்றா தவர்; கடியர்தமக், கியார்சொல்லத் தக்கரா மற்று. வினைக்கெட்டு, வாயல்லா வெண்மை யுரையாது கூறுநின் - மாய மருள்வா ரகத்து; ஆயிழாய், நின்கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா - வென்க ணெவனோ தவறு; இஃதொத்தன், புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம்போல் - வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவு - மொள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியு நல்லார் - சிரறுபு சீறச் சிவந்தநின் மார்பு - தவறாதல் சாலாவோ கூறு; அதுதக்கது, வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை - தேற்றக்கண் டியாய் தெளிக்கு; இனித் தேற்றேம் யாம், தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார் - தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி - நீயுறும் பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி - யார்மேல் விளியுமோ கூறு." இதனுள் இரத்தலுந் தெளித்தலும் வந்தவாறுகாண்க. பிறவும் இவ்வாறு வருவன கொள்க. (சக)

சஉ. எஞ்சி யோர்க்கு மெஞ்சுத லிலவே.

இது முன்னர்க் கூற்றிற்கு உரியரெனக் கூறாதோர்க்குங் கூற்று விதித்தலின் எய்தாததெய்துவித்தது. (இ - ள்.) எஞ்சியோர்க்கும் = முன்னர்க் கூறாதுநின்ற செவிலிக்குந் தலைவிக்கும் ஆயத்தோர்க்கும் அயலோர்க்கும்: எஞ்சுதல் இலவே = கூற்றொழிதலின்று.—எ - று.

செவிலிகூற்று நிகழுமாறு; "இளியும் பந்துங் கழங்கும் வெய்யோ - ளளியு மன்புஞ் சாயலு மியல்பு - முன்னாட் போலா ளிறீஇயரென் னுயிரெனக் - கொடுந்தொடைக் குழவியின் வயின்மரத் தியாத்த - கடுங்கட் கறவையிற் சிறுபுற நோக்கிக் - குறுக வந்து குவவு நுதனீவி - மெல்லெனத் தழீஇயினே னாக வென்மக - ளன்னாகத் திடைமுலை வியர்ப்பப் - பன்மாண் முயங்கினள் மன்னே யன்னோ - விறன்மிகு நெடுந்தகை பலபா ராட்ட - வறனிழலசைஇ வான்புலந்து வருந்திய - மடமான் சாயினந் திரங்குமாற் சுவைக்கும் - காடுடன் கழிதல் லறியிற் றந்தை - மல்குபத மிகுத்த கடியுடை வியனகர்ச் - செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழற்

போலக் - கோதை யாயமோ டோரை தழீஇத் - தோடமை யரிச்சிலம் பொலிப்பவவ - ளாடுவழி யாடுவழி யகலேன் மனனே.' இவ் அகப்பாட்டு உடன்போன தலைவியை நினைத்துச் செவிலி மனையின்கண் மயங்கியது. "அத்த நீளிடை யவனொடு போகிய - முத்தேர் வெண்பன் முகிழ்நகை மடவர - ளுய வொன்னும் பெயரொ ண வல்லா - றெடுத்தேன் மன்ற யானே - கொடுத்தோர் மன்றவவ ளாயத் தோரே." இவ் ஐங்குறுநூறு செவிலி தெருட்டுவார்க்குக் கூறியது. "முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின" என்னும் அகப்பாட்டு மகட்போக்கிய செவிலித்தாய் சுரத்திடைப் பின்சென்று நவ்விப் பிணையைக் கண்டு சொற்றது. செவிலி கானவர் மகளைக்கண்டு கூறியதுமாம். "காலே பரிதப் பின வென் கண்ணே - நோக்கி நோக்கி வாளிழந் தனவே - யகலிரு விசும்பின் மீனினும் - பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே." இது குறுந்தொகை. செவிலி கடத்திடைத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. "இடிதுடிக் கம்பலையு மின்னாத வோசையு மிசையினு ராக் - கடுவினை யாளர் கடற்றிடைப் பைங்குரவே கவன்று நின்றாய் - கொடுவினை மேற்செய்த வெம்மேபோ னீயும் - படுசினைப் பாவை பறித்துக்கோட் பட்டாயோ பையக் கூறாய்." இது செவிலி குரவொடு புலம்பியது. "தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப - வீன்றாய்நீ பாவை யிருங்குரவே - யீன்றாள் - மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற - வழிகாட்டா யீதென்று வந்து." இது குரவே வழிகாட்டென்றது. "குடம்புகாக் கூவல் குடிகாக்குஞ் சின்னீ - ரிடம்பெற மாதிரியு மேறாநீரத்த - முடம்புணர் காத லுவப்ப விறந்த - தடம்பெருங் கண்ணிக்கு யான்றாயை கண்டீர்." இது நீயாரென்று வினாவினார்க்குச் செவிலி கூறியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதனுள் அமைக்க.

இனித் தலைவிகூற்று நிகழுமாறு: "பையயப் பசந்தன்று நுதலுஞ் சாஅ - யைதா கின்றென் றளிர்புரை மேனியும் - பலரு மறியத் திகழ்தரு மலல - மூயிர்கொண்டு கழியின னல்லதை நினையி - னெவனோ வாழி தோழி பொரிகாற் - பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற - வாலி யொப்பின் றூம்புடைத் திரள்வீ - யாறுசெல வம்பலர் நீளிடை யழுங்க - வீன வெண்கி னிருங்கிளை கவருஞ் - சுரம்பல கழிந்தோர்க் கிரங்குப வென்னு தெளவை மேவல ராகி யிவ்வூர் - நிரையப் பெண்டிர் நின்று

கூறுவ - புரைய வல்லவென் மகட்கெனப் பரைஇ - நம்முனார்ந் தறிய கொள்கை - யன்னை முன்னர்யா மென்னிதற் படலே." இது போக்குடன்பட்டமை தலைவி தோழிக்குரைத்தது. அகம். "அளிதோ தானே நாணே நம்மொடு - நனிநீ டுழந்தன்று மனனே யினியே - வான்பூங் கரும்பி னோங்குமணற் சிறுசிறை - தீம்புன னெரிதர வீந்துக் காங்குத் - தாங்கு மளவை தாங்கிக் - காம நெரிதரக் கைநில் லாதே." குறுந்தொகை. நாண் நீங்கினமை கூறியது. "சிலரும் பலருங் கடைக்க ணோக்கி - மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி - மறுகிற் பெண்டி ரம்ப றூற்றச் - சிறு கோல் வலத்த ளன்னை யலைப்ப - வலந்தனென் வாழி தோழி கா னற் - புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவற் - கடுமான் பூண்ட நெடுந்தேர் கடைஇ - நடுநாள் வரூஉ மியறேர்க் கொண்கனொடு - செலவயர்ந் திசினால் யானே - யலர்சுமந் தொழிகவில் வழுங்க லூரே." இந் நற்றிணை அலர் அச்சம் நீங்கினமை கூறியது. "சேட்புல முன்னிய வசைநடை யந்தணிர் - நும்மோன் றிரந்த னென் மொழிய லெம்மூர்த் - தாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின்பெற - வாரிடை யிறந்தன ளென்மி - னேரிறை முன்கையெ ன்னாயத் தோர்க்கே." இஃது ஐங்குறுநூறு. யான்போகின்றமை ஆயத்திற்கு உரைமின் என்றது. "கடுங்கட் காளையொடு நெடு ந்தே ரேறிக் - கோள்வல் வேங்கை யமலை பிறக்கொழிய - வேரன் மலருஞ் சுரமிறந் தனளெனக் - கூறுமின் வாழியோ வாறுசென் மாக்க - ணற்றோ ணயந்துபா ராட்டி - யெற்கெடுத் திருந்த வற னில் யாய்க்கே." இவ் ஐங்குறுநூறு இன்று யான் தேரேறி வரு த்தமின்றிப் போகின்றமை யாய்க்கு உரைமின் என்றது. "கவிழ் மயி ரெருத்திற் செந்நா யேற்றை - குருளைப் பன்றி கொள்ளாது கழியுஞ் - சுரநனி வாரா நின்றன ளென்பது - முன்னுற விரைந்த நீ ருரைமி - னின்னகை முறுவலென் னாயத் தோர்க்கே." இவ் ஐங் குறுநூறு மீள்கின்றாளென ஆயத்தார்க்குக் கூறுமின் என்றது. "வேய்வனப் பிழந்த தோளும் வெயிற்றெற - வாய்கவின் றொலை ந்த நுதலு நோக்கிப் - பரியல் வாழி தோழி பரியி - னெல்லையி லிடு ம்பை தரூஉ - நல்வரை நாடனொடு வந்த வாறே." இவ் ஐங்குறு நூறு மீண்டு வந்த தலைவி வழிவரல் வருத்தங் கண்டு வருந்திய தோழிக்குக் கூறியது. "அன்னாய் வாழிவெண் டன்னைநம் படப் பைத் - தேன்மயங்கு பாலினு மினியவவர் - நாட்டு வலைக்கூ வற்கீழ் - மானுண் டெஞ்சிய கலுழி நீரே" இது உடன்போய்மீண்ட தலைவி சென்ற நாட்டு நீர் இனியவல்ல எங்ஙனம் நுகர்ந்தாயென்ற

தோழிக்குக் கூறியது. "அறஞ்சா லியரோ வறஞ்சா லியரோ - வறனுண் டாயினு மறஞ்சா லியரோ - வாள் வனப்புற்ற வருவிக் - கோள்வரு மென்னையை மறைத்த குன்றே." இவ் ஐங்குறுநூறு நின் ஐயன்மார் வந்துழி நிகழ்ந்தது என்னென்ற தோழிக்குத் தலைவி தலைவனை மறைத்த மலையை வாழ்த்தியது. பிறவும் வேறு பட வருவன வெல்லாம் இதனான் அமைக்க.

இனி ஆயத்தார் கூற்று நிகழுமாறு: "மானதர் மயங் கிய மலைமுதற் சிறுநெறி - தான்வரு மென்ப தடமென் றோளி - யஞ்சின ளஞ்சின ளொதுங்கிப் - பஞ்சி மெல்லடி பரல்வடுக் கொளவே."

இனி அயலோர்கூற்று நிகழுமாறு; "துறந்ததற் கொண்டுந் துயரடச் சாஅ - யறம்புலந்து பழிக்கு மயற்க ணாட்டி - யெவ்வ நெஞ்சிற் கேம மாக - வந்தன ளோநின் மடமகள் - வெந்திற வெள்வேல் விடலைமுந் துறவே."

செய்யுளியலுட் "பார்ப்பான்பாங்கன்" "பாணன்கூத்தன்" என்னுஞ் சூத்திரங்களாற் பார்ப்பான் கூறுமாறு உணர்க. (சஉ)

சஙு. நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்.

இதுவும் பாலையாவதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ - ள்.) முன்னர் நிகழ்ந்ததோர் நிகழ்ச்சி பின்னர் நினைத்தற்கு ரிய நிமித்தமாம்—எ - று. என்றது முன்னர்த் தலைவன்கண் நிகழ் ந்ததோர் நிகழ்ச்சி பின்னர்த் தலைவி நினைத்தற்கும் ஏதுவாம். முன்னர்த் தலைவிக்கண் நிகழ்ந்ததோர் நிகழ்ச்சி பின்னர்த் தலை வன் நினைத்தற்கும் ஏதுவாமென்றவாறும். உம்மை எச்சவும்மை யாதலிற் கூறுதற்குமாம் என்றுகொள்க.

உ-ம். "நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங் - கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென் - னொண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவ - ரெண்ணுவ தெவன்கொ லறியே னெ ன்னும்." இது தலைவன்கண் நிகழ்ந்த மிக்க தலையளி வஞ்சமெ ன்று தலைவி உட்கொண்டு பிரியுங் கொல்லென நினைத்தற்கு நிமி த்தமாயிற்று. இதனானே தலைவன் செய்திகளாய்ப் பின்னர்த் தலைவி கூறுவனவற்றிற்கெல்லாம் இதுவே ஓத்தாக அமைத் துக்கொள்க. இனி "அளிநிலை பெறாஅ தமரிய முகத்தள் - விளி நிலை கொளாஅ டமியண் மென்மெ - னலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக் - குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற - வறிதகத் தெழூ

ந்த வாயண் முறுவலள் - கண்ணிய துணரா வளவை யொண்ணு தல் - வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன் - முளிந்த வோமை முதையலங் காட்டுப் - பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி - மோட் டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப - வுதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன் - மாய்த்த போல மழுகுநுனைத் தோற்றிப் - பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல் - விரனுதி சிதைக்கு நிரைநிலை யதரயில் - பரன்முரம் பாகிய பயமில் கான - மிறப்ப வெண்ணுதி ராயி னற த்தா - றன்றெனை மொழிந்த தொன்றுபடு கிளவி - யன்ன வாக வென்னுநள் போல - முன்னங் காட்டி முகத்தி னுரையா - வோ வச் செய்தியி னொன்றுநினைந் தொற்றிப் - பாவை மாய்த்த பனி நீர் நோக்கமொ - டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத் - தூநீர் பயந்த துணையமை பிணையன் - மோயின ளுயிர்த்த காலை மாமலர் - மணியுரு விழந்த வணியிழை தோற்றங் - கண்டே தடிந்தனஞ் செலவே யொண்டொடி - யுழைய மாகவு மினை வோள் - பிழையலன் மாதோ பிரிதுநா மெனினே." "இருங்கழி முதலை மேந்தோ லன்ன" இவை அகம். "வேர்பிணி வெதிர்த் துக் கால்பொரு நரலிசை - கந்துபிணி யானை யயர்வுயிர்த் தாஅ ங் - சென்றாழ் நீடிய வேப்பயி லழுவத்துக் - குன்றூர் மதிய நோக்கி நின்றுநினைந் - துள்ளினெ னல்லனோ யானே முள்ளெ யிற்றுத் - திலகந் தைஇய தேங்கமழ் திருநுத - லெமது முண்டோ மதிநாட் டிங்க - ளுரறுகுரல் வெவ்வளி யெடுப்ப நிழற்பல - வுல வை யாகிய மரத்த - கல்பிறங்கு மாமலை யும்பரஃ தெனவே." இது நற்றிணை. இவை தலைவிக்கண் நிகழ்ந்தனவும் அவடன்மை யும் பின்னர்த் தலைவன் நினைந்து செலவழுங்குதற்கு நிமித்த மாயவாறு காண்க. "அறியாய் வாழி தோழி யிருளற" என் பது தலைவன்கண் நிகழ்ந்தது தலைவி நினைந்து தோழிக்குக் கூறியது. "நெஞ்சு நடுக்குற" என்னுங்கலியும் அது. "உறலியா மொளிவாட வுயர்ந்தவன் விழவினுள் - விறலிழை யவரொடும் விளையாடு வான்மன்னோ - பெறலரும் பொழுதொடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந் - தறலாரும் வையையென் றறைகுந ருளராயின்." இதுவும் அது. "ஈன்பருந் துயவும் வான்பெரு நெடுஞ்சினை - பொரியமை வேயின் புள்ளி நீழற் - கட்டளை யன்ன விட்டரங் கிழைத்துக் - கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும் - வில்லே ருழ வர் வெம்முனைச் சீறூர்ச் - சுரன்முதல் வந்த வனமா மாலை - யுள் ளினெ னல்லனோ யானே யுள்ளிய - வினைமுடித் தன்ன வினி யோள் - மனைமாண் சுடரொடு படர்பொழ்ந் தனவே." என்னும்

நற்றிணையும் அது. இவ்வாறன்றி வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க. (சரு)

சச. நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே.

இது "ஒன்றாத்தமரினும்" என்னுஞ் சூத்திரத்திற்கோர் புறனடை கூறுகின்றது. (இ-ள்.) நிகழ்ந்தது கூறி = ஒன்றாத்தமரினும் என்னுஞ் சூத்திரத்துத் தலைவன்கண் நிகழ்ந்த கூற்றினைத் தலைவியுந் தோழியுங் கூறி: நிலையலுந் திணையே = அதன்கண்ணே நிலைபெற்று நிற்றலும் பாலைத்திணையாம்.—எ - று.

உ-ம். "அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப் - பிரிந்திறை சூழாதி யைய விரும்பிநீ - மென்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின் - மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண் - சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவா - தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லா - ளிளமையுங் காமமு மோராங்குப் பெற்றார் - வளமை விழைதக்க துண்டோ வுளநா - ளொரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை - யொன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினு - மொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ - சென்ற விளமை தரற்கு." இதனுள் 'உளநாள், என்றது நாளதுசின்மை; 'அரிதரோ சென்ற இளமை தரற்கு' என்றது இளமையதருமை; 'உள்ளந் துரப்ப' என்றது உள்ளத்தான் உஞற்றுதலாற் தாளாண்பக்கம்; 'சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது' என்றது தகுதியது அமைதி; தத்தம நிலைமைக்கேற்பப் பொருள்செய்ய வேண்டுதலின், அது பாணிக்குமெனறலின். 'ஒரோஒகைதம்முட்டழீஇ ஒரோஒகை ஒன்றன்கூறாடை உடுப்பவரேயாயினும்' என்றது இன்மையதிளிவு; 'விழைதக்கதுண்டோ' என்றது உடைமையதுயர்ச்சி; 'பிரிந்திறை சூழாதி ஐய' என்றது அன்பினதகலம்; 'பிரிந்துறைந் தன்பு பெருக்க வேண்டா தம்முளொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை' என்றலின். 'தொய்யிலுஞ் சுணங்கு நினைத்துக்காண்' என்றது அகற்சியதருமை. இவ் எட்டுந் தாமேகூறல் வேண்டினமையின் முன்னொருகாற் தலைவன் கூறக்கேட்டுத் தோழியுந் தலைவியும் உணர்ந்தவாறு காண்க.

"பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ - மையற்ற படிவத்தான் மறுத்தலொல்வதோ" என்பது ஓதற்குப் பிரிவலெனக் கேட்ட தோழி கூறியது. "நோற்றோர் மன்ற தாமே கூற்றங் - கோளுற விளியார்பிறர் கோள்விளிந் தோரெனத் - தாள்

வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர் - நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந் - தாழல் வாழி தோழி தாழா - துருமெனச் சிலைக்கு மூக்கமொடு பைங்கால் - வரிமா னெண்ணான் வார்சிலைக் கொளீஇ - யரிநிறத் தழுத்திய வம்பினர் பலருட - னண்ணல் யானை வெண்கோடு கொண்டு - நறவுநொடை நெல்லி னாண்மகி ழயருங் - கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான் - மழபுலம் வணக்கிய மாவண் புல்லி - விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும் - பழகுவ ராதலோ வரிதே முனாது - முழவுறழ் திணிதோ ணெடுவே ளாவி - பொன்னுடை நெடுநகர்ப் பொதுனி யன்னநின் - னொண்கேழ் வனமுலைப் பொலிந்த - நுண்பூ ணாகம் பொருந்துதன் மறந்தே." இவ் அகப்பாட்டின் மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தாரோ துறக்கம் பெறுவரெனத் தன் சாதிக்கேற்பத் தலைவன் புகழும் மானமும் எடுத்துவற்புறுத்தலைத் தோழி கூறினாள். "வேந்தன் குறைமொழிந்து வேண்டத் தலைப்பிரிந்தார் - தாந்தங் குறிப்பின ரல்லரா - லேந்திழாய் - கண்பனி வாரக் கலங்கல் பிரிவரோ - தண்பனி நாளே தனித்து." இது குறைமொழிந்து வேண்டினமை தலைவன் கூறக்கேட்ட தோழி கூறியது. "அரிதாயவறனெய்தி" என்றது மூன்றன்பகுதி தலைவன் கூறக்கேட்ட தோழிகூறியது.

"யானெவன் செய்கோ தோழி பொறிவரி - வானம் வாழ்த்திப் பாடவு மருளா - துறைதுறந் தெழிலி நீங்கலிற் பறையுடன் - மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை - யரம்போழ் நுதிய வாளி யம்பி - னிரம்பா நோக்கி னிரையங் கொண்மார் - நெல்லி நீளிடை யெல்லி மண்டி - நல்லமர்க் கடந்த நாணுடை மறவர் - பெயரும் பீடு மெழுதி யதர்தொறும் - பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் - வேலூன்று பலகை வேற்றுமுனை தடுக்கு - மொழிபெயர் தேஎந் தருமார் மன்னர் - கழிப்பிணிக் கறைத்தோ னிரைகண் டன்ன - வுவலிடு பதுக்கை யாளுகு பறந்தலை - யுருவில் பேஎ யூராத் தேரொடு - நிலம்படு மின்மினி போலப் பலவுட - னிலங்குபர லிமைக்கு மென்பநம் - மலந்துறந் துறைஞர் சென்ற வாறே." இது மண்டிலத்தருமை தலைவன் கூறக்கேட்ட தோழி கூறியது.

"நுங்நிலை யறியா ராயினுந் தந்நிலை - யறிந்தனர் கொல்லோ தாமே யோங்குநடைக் - காய்சின யானை கங்குற் சூழ - வஞ்சுவர விறுத்த தானை - வெஞ்சின வேந்தன் பாசறை யோரே." இது தலைவன் பாசறைப் புலம்பினமை கூறக்கேட்ட தலைவி நந்நிலை

அறியாராயினும் எனக்கூறினாள். "திசை திசை தேனார்க்குந் திருமருத முன்றுறை" என்பது காவற் பாங்கின்கட் தலைவன் கூறியது கேட்ட தலைவி கூறியது. பிறவும் வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

சரு. மரபுநிலை திரியா மாட்சிய வாகி
விரவும் பொருளும் விரவு மென்ப.

இது மரபியலுட் கூறப்படும் மரபன்றி அகத்திணைக்கு உரிய மரபுகள் கூறுகின்றது. (இ-ள்.) மரபு நிலை திரியா மாட்சிய ஆகி = புலனெறிவழக்கஞ் செய்துவருகின்ற வரலாற்றுமுறைமை திரியாத மாட்சியவாய்: விரவும் பொருளும் விரவும் என்ப = பாலைத்திணைக்குங் கைக்கிளை பெருந்திணைக்கும் உரியவாய் விரவும் பொருளும் ஏனைத் திணைக்கு உரியவாய் விரவும் பொருளும் விரவிவருமென்று கூறுவர் புலவர்.—எ-று. அவை தலைவி ஆற்றாமை கண்டுழிப், பிரிந்த தலைவன் மீண்டுவந்தானெனத் தோழி கூறுவனவும், வரைவிடை வைத்துப் பிரிந்தோன் தலைவியை நினைந்து வருந்துவனவும், இடைச்சுரத்துத் தலைவன் செலவு கண்டோர் கூறுவனவும், மீட்சிகண்டோர் கூறுவனவும், ஊரின்கட் கண்டோர் கூறுவனவும், பிறவுமாம். அவை பாலைத்திணைக்கு விரவும் பொருளாமென்றுணர்க.

உ-ம். "கோடுயர் பன்மலை யிறந்தன ராயினு - நீட விடுமோ மற்றே நீடுநினைந்து - துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி - யுடைத்தரு வெள்ள மாகிய கண்ணே." இவ் ஐங்குறுநூறு தலைவன் மீண்டானென்றது. "பாடின்றிப் பசந்தகண்" என்பதும் அது.

"வளைபடு முத்தம் பரதவர் பகருங் - கடல்கெழு கொண்கன் காதன் மடமகள் - கெடலருந் துயர நல்கிப் - படலின் பாயல் வௌவி யோளே." இவ் ஐங்குறுநூறு வரைவிடைவைத்துப்பிரிந்தோன் தனிமைக்கு வருந்திக் கூறியது. "புறந்தாழ் பிருண்ட கூந்தற் போதி - னிறம்பெறு மீரிதழ்ப் பொலிந்த வுண்க - ணுள்ளம் பிணிக்கொண் டோள்வயி னெஞ்சஞ் - செல்ல றீர்க்குஞ் செல்வா மென்னுஞ் - செய்வினை முடியா தெவ்வஞ் செய்த - லெய்யாமையோ டிளிவுதலைத் தருமென - வுறுதி தூக்காத் தூங்கி யறிவே - சிறிதுநனி விரைய லென்னு மாயிடை - யொளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய - தேய்புரிப் பழங்கயிறு போல - வீவது கொல்லென் வருந்திய வுடம்பே." இந்நற்றிணையும் அது.

"கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ - வேனி லதிரலொடு விரைஇக் காண்வரச் - சில்லையங் கூந்த லழுத்தி மெல்லிணர்த் - தேம்பாய் மராஅ மிடைச்சி வான்கோ - லிலங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச் - சின்மெல் லொதுக்கமொடு மென்மெல வியலிநின் - னணிமாஅண் சிறுபுறங் காண்டுஞ் சிறுநனி - யே கென வேக நாணி யொய்யென - மாகோ ளோக்கமொடு மடங் கொளச் சாஅய் - நின்றுதலை யிறைஞ்சி யோளே யதுகண் - டியா மூந் துறுதல் செல்லே மாயிடை - யருஞ்சுரத் தல்கி யேமே யிரு ம்புலி - களிறட்டுக் குழுமு மோசையுங் களிபட்டு - வில்லோர் குறும்பிற் றதும்பும் - வல்வாய்க் கடுந்துடிப் பாணியுங் கேட் டே." இது மீண்டுவந்தோன் தோழிக்கு உரைத்தது.

"திருந்திழை யரிவை நின்னல முள்ளி - யருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச் - சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச் - சிறுகண் யானை திரிதரு - நெறிவிலங் கதர கானத் தானே." இவ் ஐங்குறுநூறு பெற்றபொருள்கொ ண்டு நின்னலம் நயந்துவந்தேன் என்றது.

"அளிதோ தானே நாணே யாள்வினை - யெளிதன லோம் பன்மி னறிவுடை யீரோ - கான்செழு செலவின் னெஞ்சுபின் வாங் கத் - தான்சென் றனனே தமிய னதாஅன் - றென்று வதுகொ ருனே பொன்னுடை - மனைமாண் டங்கிய கற்பிற் - புனையீ ரோதி புலம்புறு நிலையே." செலவுகண்டோர் கூறியது.

"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத் - தலந்தலை ஞெமி யத் திருந்த குடிஞை - பொன்செய் கலனி னினிய தெளிர்ப்பப் - பெய்மணி யார்க்கும் பிழைகிளர் நெடுந்தேர் - வன்பரன் முரம்பி னேமினி யெதிரச் - சென்றிசின் வாழியோ பனிகடி கேனே - யிடைச்சுரத் தெழிலி யுறைத்தன மார்பிற் - குறும்பொறிக் கொ ண்ட சாந்தமொடு - நறுந்தண் ணியன்கொ ளேகோ யானே." இந் நற்றிணை வரவுகண்டோர் கூறியது.

"இனைந்துநொந் தழுதன ணினைந்துநீ டுயிர்த்தன - ளெல் லையு மிரவுங் கழிந்தன வென்றெண்ணி - யெல்லிரா நல்கிய கே ள்வ னிவன்மன்ற - மெல்ல மணியிற் பிறந்தநீர் போலத் - துணி வாங், கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக் - கலங்கிய நீர்போற் றெளிந்து நலம்பெற்று - ணல்லெழின் மார்பனைச் சார் ந்து." இது பெருந்திணைக்கட் கண்டோர் கூறியது.

"குரவை தழீஇயர் மரபுளி பாடித் - தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுது - மாசில்வான் முந்நீர் வளைஇய தொன்னில - மாளுங் கிழமையொடு புணர்ந்த - வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே." இச்சுரிதகத்துக் குரவையாடல் ஏறுகோடற்கைக்கிளை யுள் விராய்வந்தவாறுங் குரவைக்குரிய தெய்வத்தையன்றி, அர சனை வாழ்த்திய வாழ்த்து விராய்வந்தவாறுங் கொள்க. விர வும்பொருள் விரவுமெனவே ஆய்ச்சியர் குரவைக்கூத்தல்லது வேட்டுவர்க்குரிய வெறியாட்டு விரவாதென்றுணர்க. இஃது எண் வகைச் சுவையான் வரும் மெய்ப்பாடுங் கூத்தோடும் படுதலின் அச்சுவைபற்றிவரும் மெய்ப்பாட்டிற்கும் உரித்தாயிற்று.

இனிக் காவற்பாங்கின் ஆங்கோர் பக்கத்திற் றலைவன் கூறியவற்றைக் கற்பியலுட், தலைவன் பகுதியினீங்கிய தகு திக்கட், தலைவி பரத்தையராகக் கூறுவனவும் இச்சூத்திரத்தான் அமைக்க. அவை மருதக்கலியுட் கடவுட்பாட்டுமுதலியன. அவற் றை ஆண்டுக் கண்டுணர்க.

இனித் தலைவி கற்பினுட் பிரிவாற்றாது எம்மையும் உடன் கொண்டு சென்மினென்பனவும் அவன் அவட்கு மறுத்துக்கூறு வனவும் இதனான் அமைக்க. உம். "மரையா மரல்கவர மாரி வறப்ப - வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர் - சுரை யம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த - முண்ணீர் வறப்பப் புலர் வாடு நாவிற்குத் - தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங் - கண் ணீர் நனைக்குங் கடுமைய காடென்று - லென்னீ ரறியாதீர் போல விவைகூறி - னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு - மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு - துன்பந் துணையாக நாடினது வல்ல - தின்பமு முண்டோ வெமக்கு." இக்கலி எம்மையும் உட ன் கொண்டு சென்மினென்றது.

"செருமிகுசினவேந்தன்." என்னும் பாலைக்கலியுள் "எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின் - மெல்லியன் மேவந்த சீறடித் தா மரை - யல்லிசே ராயித ழரக்குத்தோய்ந் தவைபோலக் - கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ." இது தலைவிக்குத் தலைவன் உடன் போக்கு மறுத்துக் கூறியது. இதன் சுரிதகத்து "அனையவை காதலர் கூறலின் வினைவயிற் - பிரிகுவ ரெனப்பெரி தழியாதி", என வினைவயிற்பிரிவு கூறலின் இது கற்பிற்குக் கூறியதாயிற்று.

இன்னும் இச்சூத்திரத்தான் அமைத்தற்குரிய கிளவிகளாய் வருவனவெல்லாம் அமைத்துக்கொள்க. (சரு)

௪௬. உள்ளுறை யுவம மேனை யுவமமெனத்
தள்ளா தாகுந் திணையுணர் வகையே.

இஃது உவமவியலுள் அகத்திணைக் கைகோள் இரண்டிற்கும் பொதுவகையான் உரியதொன்று கூறுகின்றது : (இ-ள்.) உள்ளுறை உவமம் ஏனை உவமம் என = மேற்கூறும் உள்ளுறையுவமந் தான் ஏனையுவமமென்று கூறும்படி உவமையும் உவமிக்கப்படும் பொருளுமாய் நின்றது : திணை உணர் வகை தள்ளாது ஆகும் = அகத்திணை உணர்தற்குக் கருவியாகிய உள்ளுறை உவமம்போல எல்லாத் திணையையும் உணருங் கூற்றைத் தள்ளாதாய்வரும் நல்லிசைப்புலவர் செய்யுட்செய்யின்.—எ-று. எனவே ஏனையோர் செய்யிற் தானுணரும் வகைத்தாய் நிற்கும் என்றவாறும்.

உ-ம். "விரிகதிர் மண்டிலம் வியல்விசும் பூர்தரப் - புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி - வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு பொய்கையுட் - டுனிசிறந் திழிதருங் கண்ணுநீ ரறல் வார - வினிதமர் காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு - நனிவிளாந் தளித்தலி னகுபவண் முகம்போலப் - பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத் - தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர" என்பது விரியுங் கதிரையுடைய இளஞாயிறு விசும்பிலே பரக்கின்ற விடியற்காலத்தே இதழ்கண்முறுக்குண்ட தலைகள் அம்முறுக்கு நெகிழ்ந்த செவ்விப்பூவிடத்துக் கள்ளை வண்டு நுகர்ந்து விளையாடி அதனானும் அமையாது பின்னும் நுகர்தற்கு அவ்விடத்தைச் சூழ்ந்து திரியும் அச்செவ்விமிக்க பொய்கையுட் பசிய இலைக்குள்ளே நின்ற தாமரைத்தனிமலர் தனக்கு வருத்தஞ் செய்யும் பனி ஒரு கூற்றிலே வடியாநிற்கத் தான் மிக்க செவ்வியின்றி அலருந் துறையினையுடைய ஊர என்றவாறு. இதனுள் வைகறைக்காலத்து மனைவயிற் செல்லாது இளைய செவ்வியையுடைய பரத்தையரைப் புணர்ந்து விளையாடி அதனானும் அமையாது பின்னும் அவரைப் புணர்தற்குச் சூழ்ந்து திரிகின்ற இவ்வூரிடத்தே நின்னைப் பெறாது சுற்றத்திடத்தேயிருந்து கண்ணீர் வாராநிற்க நீ ஒருகால் அளித்தலிற் சிறிது செவ்விபெற்றாளாயிருக்கும்படி வைத்த தலைவியைப்போலே எம்மையும் வைக்கின்றாயென்று காமக்கிழத்தி உள்ளுறையுவமங் கூறினாள். துனிமிகுதலாலே பெருக்குமாறாது வீழ்கின்ற கண்ணீர் காமத்தீயாற் சுவறி அறுதலை உடைத்தாயொழுக அவ்வருத்தத்தைக் கண்டு விரைந்து கணவன் அருளுதலிற் சிறிது மகிழ்பவள் முகம்போல என்ற ஏனையுவமந் தாமரைமலர்

பனிவாரத் தலைவிடுமென்ற உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்து நின்றது. இஃது "உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக் - கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே" என்ற பொருளியற்சூத்திரத்திற் சிறப்பென்ற உள்ளு றை. இவ் வேனையுவமமும் உள்ளுறையுவமத்திற்குச் சிறப்புக்கொ டுத்து உள்ளுறையுவமம்போலத் திணையுணர்தலைத் தள்ளாது நின்றவாறுகாண்க. இஃது "இனிதுறு கிளவியுந் துனியுறு கிள வியு - முவம மருங்கிற் றோன்று மென்ப" என உவமப்போலிக்குக் கூறுதலின் அவ்விரண்டுந் தோன்றிநின்றது. "ஏனோர்க் கெல்லா மிடம்வரை வின்றே" என்று உவமப்போலியிற் கூறுதலாற் காமக் கிழத்தியும் உள்ளுறையுவமங்கூறினாள். குறிஞ்சியிலும் மருதத் திலும் நெய்தலிலும் இவ்வாறு வருங் கலிகளும் "யானே யீண்டை யேனே யென்னல - னேனல் காவலர் கவணொடு வெரீஇக் - கான யானை கைவிடு பசுங்கழை - மீனெறி தூண்டிலி னிவக்கும் - கானக நாடனொ டாண்டொழிந் தன்றே." என்னும் இக் குறுந்தொகை போல வருவனவும் இச்சூத்திரத்தான் அமைக்க. பேராசிரியரும் இப்பாட்டின் மீனெறிதூண்டிலென்றதனை ஏனையுவமமென்றார்.

இனித் தள்ளாதென்றதனானே, "பாஅலஞ்செவி" என்னும் பாலைக்கலியுட் டாழிசை மூன்றும் ஏனையுவமமாய் நின்று கருப்பொ ருளொடு கூடிச் சிறப்பியாது தானே திணைப்பொருள் தோற்றுவித்து நிற்பன போல்வனவுங், "கரைசேர்வேழங் கரும்பிற்பூக்குந் துறை கெழூரன்" என்றாற்போலக் கருப்பொருள் தானே உவமமாய்நின்று உள்ளுறைப்பொருள் தருவனவும், பிறவும் வேறுபடவருவனவும், இ தனான் அமைக்க. இது புறத்திற்கும் பொது. இதனான் உள்ளுறை யுவமமும் ஏனையுவமமுமென இரண்டேயென்பது கூறினார். (சசு)

சஎ. உள்ளுறை தெய்வ மொழிந்ததை நிலனெனக்
கொள்ளு மென்ப குறியறிந் தோரே.

இது முறையே உள்ளுறையுவமங் கூறுகின்றது. (இ - ள்.) உள்ளுறை = உள்ளுறையெனப்பட்டஉவமம்: தெய்வம் ஒழிந்ததை நிலன் எனக் கொள்ளும் என்ப = தெய்வமுதலிய கருப்பொருளுட் தெய்வத்தை ஒழித்து ஒழிந்த கருப்பொருள்களை தனக்குத் தோன்று நிலனாகக் கொண்டு புலப்படுமென்று கூறுப : குறி அறி ந்தோரோ = இலக்கணம் அறிந்தோர்.—எ - று. எனவே உணவுமு தலிய பற்றிய அப்பொருணிகழ்ச்சி பிறிதொன்றற்கு உவமையா கச்செய்தல் உள்ளுறையுவமமாயிற்று.

உ-ம். "ஒன்றே னல்லே னொன்றுவென் குன்றத்துப் - பொரு களிறு மிதித்த நெரிதாள் வேங்கை - குறவர் மகளிர் கூந்தற் பெய் மார் - நின்றுகொய் மலையக நாடனோ - டொன்றேன் றோழி யொன் றிசி னானே." இக் குறுந்தொகை பிறிதொன்றின் பொருட்டுப் பொருகின்ற யானையான் மிதிப்புண்ட வேங்கை நசையற உணங் காது மலர்கொய்வார்க்கு எளிதாகி நின்று பூக்கும் நாடனென்றத னானே தலைவன் நுகருங் காரணத்தானன்றி வந்து எதிர்ப்பட்டுப் புணர்ந்து நீங்குவான் எம்மை இறந்துபாடு செய்வியாது ஆற்றுவி த்துப் போயினானெனவும், அதனானே நாமும் உயிர்தாங்கி யிருந்து பலராலும் அலைப்புண்ணாநின்றனம் வேங்கைமரம்போல் எனவும், உள்ளத்தான் உவமங்கொள்ள வைத்தவாறு காண்க. ஒழிந்தன வும் வந்துழிக்காண்க. இனி அஃது உள்ளத்தான் உய்த்துணரவே ண்டுமென மேற்கூறுகின்றான். (சஎ)

சஅ. உள்ளுறுத் திதனோ டொத்துப்பொருண் முடிகென
வுள்ளுறுத் துறுவதை யுள்ளுறை யுவமம்.

இதுவும் அங்ஙனம் பிறந்த உள்ளுறையுவமத்தினைப் பொருட்கு உபகாரம்பட உவமங்கொள்ளுமாறு கூறுகின்றது. (இ-ள்.) இத னோடு ஒத்துப் பொருள் முடிகென உள்ளுறுத்து = யான் புலப்ப டக் கூறுகின்ற இவ்வுவமத்தோடே புலப்படக்கூறாது உவமிக்கப் படும் பொருள் ஒத்துமுடிவதாகவென்று புலவன் தன் உள்ளத்தே கருதி: உள்ளுறுத்து உறுவதை உள்ளுறை உவமம் = தான் அங்ங னங் கருதும் மாத்திரையேயன்றிக் கேட்டோர் மனத்தின்கண் ணும் அவ்வாறே நிகழ்த்துவித்து அங்ஙனம் உணர்த்துதற்கு உறு ப்பாகிய சொல்லெல்லாம் நிறையக்கொண்டு முடிவது உள்ளுறை யுவமம்.—எ-று. இதனானே புலவன் தான் கருதியது கூறாதவழி யுங் கேட்டோர் இவன் கருதிய பொருள் ஈதென்றாராய்ந்து கோ டற்குக் கருவியாகிய சிலசொற் கிடப்பச் செய்தல் வேண்டுமென் பது கருத்தாயிற்று. அது "வீங்குநீர் வீழ்நீலம் பகர்பவர் வயற் கொண்ட - ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண் - டோங் குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்ற - மாங்கவை விருந் தாற்றப் பகலல்கிக் கங்குலான் - வீங்கிறை வடுச்கொள வீழுநர்ப் புணர்ந்தவர் - தேங்கமழ் கதுப்பினு ளரும்பவிழ் நறுமுல்லை - பாய் ந்தூதிப் படர்தீர்ந்து பண்டோ மரீஇய - பூம்பொய்கை மறந்துள் ளாப் புனலணி நல்லூர," இதனுள், வீங்குநீர் பரத்தையர்சேரியா கவும், அதன்கண் வீழ்ந்த நீலப்பூக் காமச்செவ்வி நிகழும் பரத்தை

யராகவும், பகர்பவர் பரத்தையனாத் தேரோற்றிக்கொண்டு வரும் பாணர்முதலிய வாயில்களாகவும், அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாகவும், யானைக்கடாத்தை ஆண்டுறைந்த வண்டுகள் வந்த வண்டிற்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப் பரத்தையர் தமதுநலத்தைத் தலைவனை நுகர்வித்தலாகவுங், கங்குலின் வண்டு முல்லையை ஊதுதலிற் பரத்தையருடன் இரவுதுயிலுதலாகவும், பண்டுமருவிய பொய்கையை மறத்தல் தலைவியை மறத்தலாகவும், பொருள் தந்து ஆண்டுறைந்த வண்டுகள் புலப்படக் கூறிய கருப்பொருள்கள் புலப்படக்கூறாத மருதத்திணைப் பொருட்கு உவமமாய்க் கேட்டோனுள்ளத்தே விளக்கிநின்றவாறு காண்க. பிறவும் இவ்வாறு வருவனவும் இதனான் அமைக்க. இங்ஙனங் கோடலருமைநோக்கித் "துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே" என்றான். (சஅ)

சகூ. ஏனை யுவமந் தானுணர் வகைத்தே.

இஃது ஒழிந்த உவமங் கூறுகின்றது. (இ - ள்.) ஒழிந்த உவமம் உள்ளத்தான் உணரவேண்டாது சொல்லிய சொற்றொடரோ பற்றுக்கோடாகத் தானே உணரநிற்குங் கூறுபாட்டிற்று.—எ - று. பவளம்போலும் வாய் என்றவழிப் பவளமே கூறி வாய் கூறாவிடின் உள்ளுறையுவமமாம். அவ்வாறின்றி உவமிக்கப்படும் பொருளாகிய வாயினையும் புலப்படக் கூறலின் ஏனையுவமமாயிற்று. அகத்திணைக்கு உரித்தல்லாத இதனையும் உடன்கூறினான், உவமம் இரண்டல்லதில்லையென வரையறுத்தற்கும் இதுதான் உள்ளுறைதழீஇ அகத்திணைக்குப் பயம்பட்டு வருமென்றற்கும். (சகூ)

ருO. காமஞ் சாலா விளமை யோள்வயி
னேமஞ் சாலா விடும்பை யெய்தி
நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற்
றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே.

இது முன்னர் அகத்திணை எழென நிறீஇ, அவற்றுள் நானற்கு நிலங்கூறிப், பாலையும் நான்கு நிலத்தும் வருமென்று கூறி, உரிப்பொருளல்லாக் கைக்கிளை பெருந்திணையும் அந்நிலத்து மயங்கும் மயக்கமுங் கூறிக், கருப்பொருட்பகுதியுங் கூறிப், பின்னும் பாலைப்பொருளாகிய பிரிவெல்லாங் கூறி, அப்பகுதியாகிய கொ

ன் டுதலைக்கழிவின்கட் கண்ட கூற்றுப்பகுதியுங் கூறி, அதனோடொத்த இலக்கணம்பற்றி முல்லைமுதலியவற்றிற்கு மரபுகூறி, எல்லாத்திணைக்கும் உவமம்பற்றிப் பொருள் அறியப்படுதலின் அவ்வுவமப்பகுதியுங் கூறி, இனிக் கைக்கிளையும் பெருந்திணையும் இப்பெற்றியவென்பான் இச்சூத்திரத்தானே கைக்கிளைக்குச் சிறந்த பொருள் இதுவென்பது உணர்த்துகின்றான். (இ - ள்.) காமம் சாலா இளமையோள் வயின் = காமக்குறிப்பிற்கு அமைதியில்லாத இளமைப்பிராயத்தாள் ஒருத்திக்கண்ணே : ஏமஞ்சாலா இடும்பை எய்தி = ஒருதலைவன் இவள் எனக்கு மனைக்கிழத்தியாக யான் கோடல்வேண்டுமெனக் கருதி மருந்துபிறிதில்லாப் பெருந்துயரெய்தி : நன்மையும் தீமையும் என்று இருதிறத்தால் தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்து=நன்மையுந் தீமையுமென்கின்ற இரண்டுகூற்றான் மிகப்பெருக்கிய சொற்களைத் தன்னோடும் அவளோடுங்கூட்டிச் சொல்லி ; சொல் எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல் = அச்சொல்லிற்கு எதிர்மொழி பெறாதே பின்னுந் தான் சொல்லி இன்புறுதல் : புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே = பொருந்தித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பு.—எ - று. அவளுந் தமருந் தீங்குசெய்தாராக அவளோடு தீங்கைப் புணர்த்துந் தான் ஏதஞ்செய்யாது தீங்குபட்டானாகத் தன்னோடு நன்மையைப் புணர்த்துமென நிரனிறையாக உரைக்க. இருதிறத்தாற் தருக்கிய எனக்கூட்டுக.

உ-ம். "வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட் - பேரெழின் மலருண்கட் பிணையெழின் மானோக்கிற் - காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற் - கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரை நுசுப்பினாய் - நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடி வீசினை - யாருயிர் வெளவிக்கொண் டறிந்தியா திறப்பாய்கேள்; உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக - விளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங் - களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம் - வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்; நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய் - மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு - மிடைநில்லா தெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம் - முடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்; அல்லல்கூர்ந் தழிபுக வணங்காகி யடருநோய் - சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானு - மொல்லையே யுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ் - செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்; எனவாங்கு, ஒறுப்பின்யா னொறுப்பது நும

ையான் மற்றிந்நோய் - பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் புனையிழாய் - மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி - நிறுக்குவென் போல்வன்யா னீபடு பழியே." எனத் தான் உயிர்கொடுத்தாகுதத் தனது நன்மைகூறி அவளது தீங்கெல்லாங் கூறுவான் மடலேறுவேன்போலுமென்று ஐயுற்றுக் கூறியவாறு காண்க. அவளைச் சொல்லுதலே தனக்கின்பமாதலிற் சொல்லியின்புறலென்றான். இது புல்லித்தோன்றுங் கைக்கிளையெனவே காமஞ்சான்ற இளமையோள்கண் நிகழுங் கைக்கிளை இத்துணைச் சிறப்பின்றாயிற்று. அது "எல்லா விஃதொத்தன்" என்னுங்கலியுள் "இவடந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள் - யாதுநீ வேண்டி யது; பேதாஅய், பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ - மருளின் மடநோக்கி நின்றோழி யென்னை - யருளியல் வேண்டுவ லியான்." எனவரும். இது கைகோளிரண்டினுங் கூறத்தகாத வாய்பாட்டாற் கூறலிற் கைக்கிளையென்றார். குறிப்பென்றதனாற் சொல்லியின்புறினுந் தலைவன்றன் குறிப்பின் நிகழ்ந்தது புறத்தார்க்குப் புலனாகாவென்பதூஉம் அகத்து நிகழ்ச்சி அறியும் மனைவியர்க்காயின் புலனாமென்பதூஉங்கொள்க. அது "கிழவோள் பிறள்குணம்" என்னும் பொருளியற்சூத்திரத்து ஓதுதும். காமஞ்சாலா இளமையோள்வயினெனப் பொதுப்படக் கூறிய அதனால் வினைவலபாங்காயினோர்கண்ணும் இவ்விதிகொள்க. இதனைக் "காரரரப் பெய்த கடிகொள் வியன்புலத்து" என்னும் முல்லைக்கலியான் உணர்க. (ரு௦)

ருக. ஏறிய மடற்றிற மிளமை தீர்திறந்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிற
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.

இது முறையானே இறுதிநின்ற பெருந்திணையிலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) ஏறிய மடற் திறம் = மடன்மாகூறுதலன்றி மடலேறுதலும்: இளமை தீர் திறம் = தலைவற்கு இளையளாகாது ஒத்தபருவத்தாளாதலும்: தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறம் = இருபத்துநான்காம் மெய்ப்பாட்டில் நிகழ்ந்து ஏழாம் அவதிமுதலாக வரும் அறிவழிகுணன் உடையளாதலும்: மிக்க காமத்து மிடலொடு தொகைஇ = காமமிகுதியானே எதிர்ப்பட்டுழி வலிதிற்புணர்ந்த இன்பத்தோடே கூட்டப்பட்டு: செப்பியநான்கும் = கந்தருவத்துட்பட்டு வழீஇயிற்றாகச் செப்பிய இந்நான்கும்; பெருந்திணைக் குறிப்பே = பெருந்திணைக் கருத்து.—எ-று. மடன்

மாகூறுதல் கைக்கிளையாம். மடற் திறமென்றதனன் அதன் திறமாகிய வரைபாய்தலுங் கொள்க. இளமைதீர்திறம் என்றதனற் தலைவன் முதிர்ச்சியும், இருவரும் முதிர்ந்தபருவத்துந் துறவிற் சேறலன்றிக் காமநுகர்தலுங் கொள்க. இவை கந்தருவத்துட் பட்டு வழீஇயின. இவற்றுள் ஏறிய மடற் திறமுங் காமத்து மிகுதிறமும் புணர்ச்சிப் பின் நிகழ்வனவாம்; அது "மடன் மா கூறு மிடனுமா ருண்டே" என்பதனல் ஏறுவலெனக்கூறி விடாது ஏறுதலுமாம்.

உம். "சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும் - பிறர் நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல் - சான்றவர்க் கெல்லாங் கடனறு லிவ்விருந்த - சான்றீர் நுமக்கொன் றறிவுறுப் பென் மான்ற - துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி - யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென் - னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டு துஞ்சே - னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின் - பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப - வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தே னெவ்வநோய் - தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக - வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது - பாடுவேன் பாய்மா நிறுத்து; யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப - மாமேலே னின்று மடல்புணையா நீந்துவேன் - றேமொழி மாத ருறாஅ துறீஇய - காமக் கடலகப் பட்டு; உய்யா வருநோய்க் குயவாகு மைய - லுறீஇயா ளீத்தவிம் மா; காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தே - னுணொழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு - மாணிழை மாதரா ளேஎனக் காமன - தாணையால் வந்த படை; காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம - மெழினுத லீத்தவிம் மா; அகையெரி யானுதென் னுருயி ரொஞ்சும் - வகையினு லுள்ளஞ் சுடுதரு மன்னே - முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர் - தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு; அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற - நேரிழை யீத்தவிம் மா; ஆங்கதை, யறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ - மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ - ருள்ளிடப் பட்ட வரசினைப் பெயர்த்தவ - ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென் - றுயர்நிலை தீர்த்த லுந்தலைக் கடனே." இஃது ஏறிய மடற்றிறம்.

"உக்கத்துமேலு நடுவுயர்ந்து வாழுவாய் - கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான் - புக்ககலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி - னக்குளூத்துப் புல்லலு மாற்றே னருளீமோ - பக்கத்துப் புல்லச் சிறிது." இதனுட், கொக்குரித்தன்ன வென்

பதனுற் தோல் திரைந்தமை கூறலின் இளமை தீர்திறமாயிற்று. "உளைத்தவர் கூறு முறையெல்லா நிற்க - மூளைத்த முறுவலார்க் கெல்லாம் - விளைத்த - பழங்கள் ளனைத்தாய்ப் படுகளி செய்யு - முழங்கு புனலூரன் மூப்பு." "அரும்பிற்கு முண்டோ வலரது நாற்றம் - பெருந்தோள் விறலி பிணங்கல் - சுரும்போ - டதிரும் புனலூரற் காரமிர்த மன்றே - முதிரு முலையாண் முயக்கு" என்பனவும் அது.

"புரிவுண்ட புணர்ச்சி" என்னும் நெய்தற்பாட்டுக் காமத்து மிகுதிறம். இதனைப் பொருளியலுட் காட்டுதும். ஆண்டோதும் இலக்கணங்களுந் தோன்ற இதனுட் டெளிந்து கூறுவனவும் ஆண்டுக்காண்க.

"ஏஎ யிஃதொத்த ஞணிலன் றன்னெடு - மேமேமென் பாவையு மேவினன் கைப்பற்று - மேவினு மேவாக் கடையு மவை யெல்லா - நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற - மெல்லிணா செல்லாக் கொடியன்னுய் நின்னையான் - புல்லினி தாகலிற் புல் லினே னெல்லா - தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னு - செய்வது நன்றாமோ மற்று." இது மிக்க காமத்துமிடல்.

செப்பிய நான்கெனவே செப்பாதனவாய் அத்துணைக்கந் தருவமாகக் கூறுகின்ற "பின்னர் நான்கும் பெருந்திணை பெறும்" என்ற பெருந்திணை நான்கு உளதென்று உணர்க. குறிப்பென்றதனன் அந்நான்கும் பெருந்திணைக்குச் சிறந்தவெனவும், ஈண்டுக் கூறியன கைக்கிளைக்குச் சிறந்தவெனவுங் கொள்க. (ருக)

ருஉ. முன்னைய நான்கு முன்னதற் கென்ப.

இது "முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே" எனக் களவியலுட் கூறுஞ் சிறப்பில்லாக் கைக்கிளைபோலன்றிக் காமஞ் சாலா இளமையோள்வயிற் கைக்கிளைபோல் இவையுஞ் சிறந்தன எனவே எய்தாததெய்துவித்தது. (இ - ள்.) இயற்கைப்புணர்ச்சிக்கு முன்னிகழ்ந்த காட்சியும் ஐயமுந் தெரிதலுந் தேறலும் என்ற குறிப்புநான்கும் நற்காமத்துக்கு இன்றியமையாது வருதலின் முற்கூறிய சிறப்புடைக் கைக்கிளையாதற்கு உரியவென்று கூறுவர் ஆசிரியர்.—எ - று. களவியலிற் கூறுங் கைக்கிளை சிறப்பின்மையின் முன்னதற்குரியவெனச் சிறப்பெய்துவித்தார். களவியலுள் "ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப" என்றது முதலாக இந்நான்குங் கூறுமாறு ஆண்டுணர்க. இது தலைவி வேட்கைக் குறிப்புத் தன் மேனிகழ்வதனைத் தலைவன் அறிதற்குமுன்னே தன் காதன்மிகுதி

யாற் கூறுவனவாதலிற் கைக்கிளையாயிற்று. இது தலைவற்கே உரியவென்பது "சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப" எனனுஞ் சூத்திரத்திற்கூறுதும். இவை புணர்ச்சி நிமித்தமாய்க் குறிஞ்சியா காவோவெனின், காட்சிப்பின் தோன்றிய ஐயமும் ஆராய்ச்சியுந் துணிவும் நன்றெனக் கோடற்கும் அன்றெனக் கோடற்கும் பொதுவாகலின் இவை ஒருதலையாக நிமித்தமாகா, வழிநிலைக்காட்சியே நிமித்தமாமென்றுணர்க. (ருஉ)

ருரு. நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கங்
கலியே பரிபாட் டாயிரு பாங்கினு
முரிய தாகு மென்மனார் புலவர்.

இது புலனெறிவழக்கம் இன்னதென்பதூஉம், அது நடுவணைந்திணைக்கு உரிமையுடைத்தென்பதூஉம் இன்னசெய்யுட்கு உரித்தென்பதூஉம் உணர்த்துதனுதலிற்று. (இ - ள்.) நாடகவழக்கினும் உலகியல் வழக்கினும் = புனைந்துரைவகையானும் உலகவழக்கத்தானும் புலவராற் பாடுதற்கமைந்த புலவராற்றுவழக்கம்: கலியே பரிபாட்டு அ இரு பாங்கினும் உரியது ஆகும் என்மனார்புலவர் = கலியும் பரிபாடலுமென்கின்ற அவ்விரண்டு கூற்றுச் செய்யுளிடத்தும் நடத்தற்கு உரியதாமென்று கூறுவர் புலவர்.—எ - று. இவற்றிற்கு உரித்தெனவே அங்ஙனம் உரித்தன்றிப் புலனெறி வழக்கம் ஒழிந்த பாட்டிற்கும் வருதலும் புலனெறிவழக்கம் அல்லாத பொருள் இவ்விரண்டிற்கும் வாராமையுங் கூறிற்று. இவை தேவபாணிக்கு வருதலுங் கொச்சகக் கலிப்பொருள் வேறுபடுதலுஞ் செய்யுளியலுள் வரைந்து ஓதுதும். மக்களுதலிய அகனைந்திணையுமென மேல்வரும் அதிகாரத்தானும் இதனை அகத்திணையியலுள் வைத்தமையானும் அகனைந்திணையாகிய காமப்பொருளே புலனெறிவழக்கிற்குப் பொருளென்றுணர்க. பாடல் சான்ற என்றதனாற் பாடலுள் அமைந்தனவெனவே பாடலுள் அமையாதனவும் உளவென்று கொள்ளவைத்தமையிற் கைக்கிளையும் பெருந்திணையும் பெரும்பான்மையும் உலகியல் பற்றிய புலனெறி வழக்காய்ச் சிறுபான்மை வருமென்று கொள்க. செய்யுளியலுட் கூறிய முறைமையின்றி ஈண்டுக் கலியை முன்னோதியது கலியெல்லாம் ஐந்திணைப்பொருளாய புலனெறிவழக்கிற் காமமுங் கைக்கிளை பெருந்திணையாகிய உலகியலே பற்றிய புலனெறிவழக்கிற் காமமும்பற்றி வருமென்றற்கும், பரிபாடல் தெய்வ

வாழ்த்து உட்படக் காமப்பொருள் குறித்து உலகியலேபற்றி வரு மென்றற்கும் என்றுணர்க. ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம்புறமென்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடு ந்தொகையும் புறமுங் கீழ்க்கணக்கும் மதுரைக்காஞ்சியும் பட்டி னப்பாலையும் என்பனவற்றுட்காண்க. மருட்பாத் "தானிதுவென் னுந் தனிநிலை" இன்மையின் வரைநிலையின்று. "மனைநெடு வயலை வேழஞ் சுற்றுந் - துறைகெ ழூரன் கொடுமை நாணி - நல்ல னென் றும் யாமே - யல்ல னென்னுமென் றடமென் றோளே." இதனுண் முதல்கருவுரிப்பொருளென்ற மூன்றுங் கூறலின் நாடக வழக்குந், தலைவனைத் தலைவி கொடுமைகூறல் உலகியலாகலின் உலகியல்வழக்கும் உடன்கூறிற்று. இவ்விரண்டுங் கூடிவருதலே பாடலுட் பயின்ற புலனெறிவழக்கமெனப்படும். இவ்விரண்டி னும் உலகியல் சிறத்தல் "உயர்ந்தோர்கிளவி" என்னும் பொரு ளியற் சூத்திரத்தானும் மரபியலானும் பெறுதும். "முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல் - கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக் - குவளை யுண்கண் குய்ப்புகை கமழத் - தான்றுழந் தட்ட தீம்புளிப் பாக - ரினிதெனக் கணவ னுண்டலி - னுண்ணிதின் மகிழ்ந் தன் றொண்ணுதன் முகனே." இது உலகியலே வந்தது. இனி அவ் வவ நிலத்துமக்களே தலைவராயக்கால் அவை உலகியலேயாம்.

இனிக் கைக்கிளையுள் அசுரமாகிய ஏறுகோடற் கைக்கிளை காமப்பொருளாகிய புலனெறிவழக்கின் வருங்கால் முல்லைநிலத்து ஆயரும் ஆய்ச்சியருங் கந்தருவமாகிய களவொழுக்கம் ஒழுகி வரை யுங்காலத்து அந்நிலத்தியல்புபற்றி ஏறுதழுவி வரைந்துகொள்வ ரெனப் புலனெறிவழக்காகச்செய்தல் இக்கலிக்குரித்தென்று கோ டலும் பாடலுள் அமையாதன என்றதனாற்கொள்க. அது "மலி திரையூர்ந்து" என்னும் முல்லைக்கலியுள் "ஆங்க ணயர்வர் தழூஉ" என்னுந்துணையும் ஏறுதழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக்காட் டிக் கூறிப், "பாடுகம் வம்மின்" என்பதனாற் தலைவனைப் பாடுகம் வாவென்றாட்கு, அவளும் "நெற்றிச் சிவலை * * * மகள்" "ஒருக் குநா மாடு * * * மகன்" என்பனவற்றான் அலரச்சம் நீங்கினவா றும், அவன்றான் வருத்தியவாறுங் கூறிப் பாடியபின்னர்த், தோழி "கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக் - காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே - யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரொடுத்த - வூரானா யுச்சி மிதித்து" என எமர் கொடைநேர்ந்தாரெனக் கூறிய வாறுங் காண்க. இவ்வாறே இம்முல்லைநிலத்து அகப்பொருளோடு கலந்துவருங் கைக்கிளை பிறவுமுள. அவையெல்லாம் இதனுள் அமை

த்துக்கொள்க. புனைந்துரைவகையாற் கூறுபவென்றலிற் புலவர் இல்லனவுங் கூறுபவாலோவெனின், உலகத்தோர்க்கு நன்மைபயத்தற்கு நல்லோர்க்குள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக்கருதி நல்லோர்க்குள்ளனவற்றிற் சிறிது இல்லனவுங்கூறுதலன்றி யாண்டும் எஞ்ஞான்றும் இல்லன கூறுமென்றற்கன்றே நாடகமென்னாது வழக்கென்பாராயிற்றென்பது. இவ்வதிகாரத்து நாடகவழக்கென்பன, புணர்ச்சி உலகிற்குப் பொதுவாயினும், மலைசார்ந்து நிகழுமென்றுங் காலம் வரைந்தும் உயர்ந்தோர் காமத்திற்குரியன வரைந்தும் மெய்ப்பாடுதோன்றப் பிறவாறுங் கூறுஞ்செய்யுள்வழக்கம். இக்கருத்தானே "முதல்கரு வுரிப்பொருளென்ற மூன்றே - நுவலுங் காலை" என்று புகுந்தான் இவ்வாசிரியன்.

இப்புலனெறிவழக்கினை இல்லதினியது புலவரானாட்டப்பட்டதென்னுமோவெனின், இல்லதென்று கேட்டோர்க்கு மெய்ப்பாடு பிறந்து இன்பஞ்செய்யாதாகலானும் உடன்கூறிய உலகியல்வழக்கத்தினை ஒழித்தல்வேண்டுமாகலானும் அதுபொருந்தாது. அல்லதூஉம் அங்ஙனங்கொண்ட இறையனார்களவியலுள்ளும் "வேந்துவினை யியற்கை பார்ப்பார்க் குரித்தே - யரசரல்லா வேனை யோர்க்கும் - புரைவ தென்ப வோரிடத் தான." எனவும், "வேந்தற் குற்றுழிப் பொருட்பிணிப் பிரிவென் - றாங்க விரண்டு மிழிந்தோர்க் குரிய." எனவும் நான்குவருணமுங் கூறி நால்வகைத்தலைமக்களையும் உணர்த்தலின் இல்லதென்பது தொல்லாசிரியர் தமிழ்வழக்கன்றென மறுக்க. இக்கருத்தானே மேலும் "மக்க ணுதலிய வகனைந் திணையும்" என்பது. (௫௩)

௫௪. மக்க ணுதலிய வகனைந் திணையுஞ்
சுட்டி யொருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்.

இது முற்கூறிய புலனெறிவழக்குச் சிறந்த ஐந்திணைக்காவதோர் வரையறை கூறுகின்றது. (இ - ள்.) மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும் = மக்களே தலைமக்களாக வருதற்குரிய நடுவணைந்திணைக்கண்ணும்: சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறார் = திணைப்பெயராற்கூறினன்றி ஒருவனையும் ஒருத்தியையும் விதந்து கூறி அவரது இயற்பெயர்கொள்ளப்பெறார்.—எ - று. இது நாடகவழக்குப்பற்றி விலக்கியது. அவை வெற்பன் துறைவன் கொடிச்சி கிழத்தியெனவரும். மக்கள் நுதலிய என்பதனானே மக்களல்லாத தேவரும் நரகருந் தலைவராகக் கூறப்படாரெனவும் அகனை

திணையும் என்றதனானே கைக்கிளையும் பெருந்திணையுஞ் சுட்டி ஒருவர் பெயர்கொண்டுங் கொள்ளாதும் வருமெனவுங் கொள்க. அகனைந்திணையெனவே அகமென்பது நடுவுநின்ற ஐந்திணையாதலிற் கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் புறத்துநிற்றலின் அகப்புறமென்று பெயர்பெறுதலும் பெற்றாம்.

இனி அவை வரையறையுடைமை மேலைச் சூத்திரத்தான் அறிக. "கன்று முண்ணாது கலத்தினும் படாது - நல்லான் றீம்பா னிலத்துச் * * * கவினே." இது வெள்ளிவீதியார் பாட்டு. "மள்ளர் குழீஇய விழவி னானும் * * * மகளே" இது காதலிற்கெடுத்த ஆதிமந்தி பாட்டு. இவை தத்தம்பெயர்கூறிற் புறமாமென்றஞ்சி வாளாது கூறினார். ஆதிமந்தி தன்பெயராலுங் காதலனாகிய வாட்டனத்திபெயராலுங் கூறின காஞ்சிப்பாற்படும். "ஆதி மந்தி போல - வேதஞ் சொல்லிப் பேது பெரிதுறலே" எனவும், "வெள்ளிவீதியைப் போல - நன்றுஞ் செலவயர்ந் திசினால் யானே" எனவும், அகத்திணைக்கட் சார்த்துவகையான் வந்தன அன்றித் தலைமைவகையாக வந்தில என்பது. வருகின்றசூத்திரத்துப் "பொருந்தின்" என்னும் இலேசானே இச்சார்த்துவகை கோடும். இது பெயரெனப்பட்ட கருப்பொருளாதலிற் கூற்றிற்கு உரிய தோழியும் பாங்கனும் முதலிய வாயிலோரையும் பொதுப்பெயரானன்றி இயற்பெயர்த்தொடக்கத்தனகூறப் பெறாதென்றுகொள்க.

உ-ம். "முகிழ்முகிழ்த் தேலா வாயினு முலையே - யரவெயிற் றொடுக்கமொ டஞ்சுதக் கனவே - களவறி வாரா வாயினுங் கண்ணே - நுழைநுதி வேலி னேக்கரி யவ்வே - யிளைய ளாயினு மணங்குதக் கிவளே - முளையிள நெருப்பின் முதுக்குறைந் தனளே - யதனு, னேயில ளாருக தில்ல - சாயிறைப் பணைத்தோ ளீன்ற தாயே." சுட்டி ஒருவர் பெயர்கொள்ளாக் கைக்கிளை. "ஆள்வினை முடித்த வருந்தவ முனிவன் - வேள்வி போற்றிய விராம னவனோ - மிதிலை மூது ரெய்திய ஞான்றை - மதியுடம் பட்ட மக்கட்சீதை - கடிவிசை வின்னா ணிடியொலி கேளாக் - கேட்ட பாம்பின் வாட்டமெய்தித் - துயிலெழுந்து மயங்கின ளதாஅன்று" இது சுட்டி ஒருவர்பெயர் கொண்டகைக்கிளை. இது அசுரமாகலின், முன்னையு மூன்றுங் கைக்கிளையென்றதனாற் கோடும். "யாமேத்து மெல்லையும்" என்றது சுட்டி ஒருவர் பெயர்கொள்ளாப் பெருந்திணை.

"பூண்டாழ் மார்பிற் பொருப்பிற் கோமான் - பாண்டியன் மடமகள் பணைமுலைச் சாந்தம் - வேறு தொடங்கிய விசய னெஞ்

சத் - தாரழ லாற்ரு ரைதஇ யோகியிற் - பொதியிற் சாந்த மெல்லாம் பொருதிளா - மூத்தினு முழங்கற் செந்தீப் - பொத்துவது போலும் புலம்புமுந் துறுத்தே.'' இது சுட்டி ஒருவர்பெயர்கொண்ட பெருந் திணை. இவை சான்றோர் செய்யுளுட் பெருவரவிற்றின்மையினன்றே முற்சூத்திரத்து முன்னும் பின்னும் இவற்றை வைத்ததென்பது.

"முட்காற் காரா முதுகனி மெய்ப்பத் - தெறிப்ப விளைந்த திங்காட் டார - நிறுத்த வாயந் தலைச்செல வுண்டு - பச்சுன் றின்று பைநிணம் பெருத்த - வெச்சி லீர்ங்கை விற்புறந் திமிரிப் - புலம்புக் கனனே புல்லணற் காளை - யொருமுறை யுண்ணு வளா வைப் பெருநிரை - யூர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்கும் - தொ டுத வோம்புமதி முதுகட் சாடி - யாதரக் கழுமிய துகளன - காய்தலு முண்டக் களவெய் யோனே'' இது வெட்சித்திணை பெ யர்கொள்ளாது வந்தது.

"முலைபொழி தீம்பான் மண்சேறு படுப்ப - மலர்தலை யுலக மோம்பு மென்ப - பரிசிலைத் தொண்டைப் பல்லவ ஞணையின் - வெட்சித் தாயத்து வில்லே ருழவர் - பொருந்தா வடுகர் முனைச் சுரங் - கடந்து கொண்ட பல்லா நிரையே.'' இது வேந்துவிடு தொழிற்கண் வேந்தனைப் பெயர்கூறிற்று. ஒழிந்தனவும் புறத் திணையியலுட் காண்க. (௫௪)

௫௫. புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல
தகத்திணை மருங்கி னளவுத லிலவே.

இது புறத்திணைக்குத் தலைவர் ஒருவராதலும் பலராதலும் உரிப்பொருட்குத் தலைவர் பலராகாமையுங் கூறலின் எய்தாததெ ய்துவித்து எய்தியதுவிலக்கிற்று. (இ - ள்.) அகத்திணைமருங்கிற் பொருந்தின் = ஒருவனையும் ஒருத்தியையும் வியந்துகூறும் இயற் பெயர் அகத்திணைக்கண்ணே வந்து பொருந்துமாயின்: புறத்திணை அளவுதல் மருங்கின் அல்லது இல = ஆண்டும் புறத்திணை கலத்த விடத்தின் அல்லது வருதலில்லை.—எ - று. எனவே, புறத்திணைக் குக் கருப்பொருளாயும், அது தான் உவமமாயும், அகத்திணையுட் கல க்குமென்பதூஉம் இதனானே விரித்தானாயிற்று. அளவுமெனவே ஒருசெய்யுட்கண் அப்புறத்திணையாகிய இயற்பெயர்களுஞ் சிறப் புப்பெயர்களும் ஒன்றேயன்றிப் பல வருதலுங் கொள்க. ஒருவ னென்பது அதிகாரப்பட்டமையின் அகத்திற்குவரும் உரிப்பொருட் பெயர் ஒன்றாதல்கொள்க.

உம். "வண்டுபடத் ததைந்த" என்னும் அகப்பாட்டினுண் "முருக னற்போர் நெடுவே ளாவி * * * யாங்கண்" எனவே புறத்திணைத்தலைவன் இயற்பெயர் ஒன்றே வந்தவாறும் அவன் நிலங் கருப்பொருளாய் அகத்திற்கு வந்தவாறும் உரிப்பொருட்டலைவன் ஒருவனேயானவாறுங் காண்க. "எல்வளை யிழந்த வறுமை • போலப் - புல்லென்று" என்பது கருப்பொருளுவமமாய் வந்தது.

"கேள்கே ளேன்றவும்" என்னும் அகப்பாட்டுப் புறத்திணைத் தலைவர் பலராய் அகத்திணைக்கண் அளவிவந்தது. புறத்திணைக்கண் இயற்பெயர் அளவிவரும் என்பதனானே "முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவும்" என்னும் புறப்பாட்டு "எழுவர் மாய்ந்த பின்றை" எனப் புறத்திணைத் தலைவர் பலராய் வந்தது. பிறவும் அவ்வாறு வருவன இதனான் அமைக்க.

இன்னும் இதனானே அகப்புறமாகிய கைக்கிளைபெருந்திணைக்கும் இப்பன்மை சிறுபான்மைகொள்க. உம் "ஏறும் வருந்தினவாயரும் புன்கூர்ந்தார் - நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு - முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ - டெல்லாம் புணர்குறிக் கொண்டு."

பொருந்தின் எனவே தானுந் தன்னொடு பொருந்துவதூஉம் என இரண்டாக்கிச் சார்த்துவகையான் வரும் பெயர்க்குங் கொள்க. நாடகவழக்கினுள் அது முன்னர்ச் சூத்திரத்துட் காட்டினும்.

பெயர் பலவாதலின் இலவெனப் பன்மைகூறினன். (௫௫)

அகத்திணையியன் முற்றிற்று.

—•◦ ◦—

இரண்டாவது

# புறத்திணையியல்.

—o-o-o—

௫௯. அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
யுட்குவரத் தோன்று மீரேழ் துறைத்தே.

இவ் ஓத்து முற்கூறிய அகத்திணை எழிற்கும் புறனாகிய புறத்திணையிலக்கணம் உணர்த்தினமையிற் புறத்திணையியலென்னும் பெயர்த்தாயிற்று. புறமாகியதிணையெனப் பண்புத்தொகையாம். அதனை முற்படக் கிளந்தவென்புழிப் பிற்படக் கிளந்தனவும் உள வெனத் தோற்றுவாய்செய்து போந்து அவற்றது இலக்கணங்களும் பெயரும் முறையுந் தொகையும் வருகின்ற சூத்திரங்களாற் திறப்படக் கூறுவல் என்றலின் மேலதனோடு இயைபுடைத்தாயிற்று. இச் சூத்திரம் முற்கூறிய குறிஞ்சித்திணைக்குப் புறன் வெட்சித்திணை என்பதூஉம் அது தான் இப்பகுதித்தென்பதூஉம் உணர்த்துதனுதலிற்று. (இ - ள்.) அகத்திணை மருங்கின் அரில் தப உணர்ந்தோர் புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின் = அகத்திணையென்னும் பொருட்கட் பிணக்கற அறிந்தோர் கூறிய புறத்திணையது இலக்கணத்தைக் கூறுபட ஆராய்ந்து கூறின்: வெட்சிதானே குறிஞ்சியது புறனே=வெட்சியெனப்பட்ட புறத்திணை குறிஞ்சியெனப்பட்ட அகத்திணைக்குப் புறனாம்: உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே = அதுதான் அஞ்சுதகத் தோன்றும் பதினான்கு துறையினையுடைத்து.—எ - று. அகத்திணைக்கண் முதல்கருவுரிப்பொருள் கூறிய குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்பனவற்றிற்கு வெட்சி வஞ்சி உழிஞை தும்பை யென்பன அவ்விலக்கணங்களோடு ஒருபுடையொப்புமைபற்றிச் சார்புடையவாதலும் நிலமில்லாத பாலை பெருந்திணை கைக்கிளை யென்பனவற்றிற்கு வாகையுங் காஞ்சியும் பாடாண்டிணையும் பெற்ற இலக்கணத்தோடு ஒருபுடையொப்புமைபற்றிச் சார்புடையவாதலுங் கூறுதற்கு அரிறபவுணர்ந்தோரென்றான். ஒன்று ஒன்றற்குச் சார்பாமாறு அவ்வச்சூத்திரங்களுட் கூறுதும். தானேயென்றான் புறத்திணை பலவற்றுள் ஒன்றை வாங்குதலின். பாடாண்டிணை

ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். களவொழுக்கமுங் கங்குற் காலமுங் காவலர் கடுகினுந் தான் கருதிய பொருளை இரவின்கண் முடித்து மீடலும் போல்வன ஒத்தலின் வெட்சி குறிஞ்சிக்குப் புறனென்றார். வெட்சித்திணையாவது களவின்கண் நிரைகொள்ளும் ஒழுக்கம்: இதற்கு அப்பூச் சூடுதலும் உரித்தென்றுகொள்க. வேற்றுப்புலத்து வாழும் பார்ப்பார்முதலியோர் அஞ்சி அரண்சேர்வதோர் உபாயமாதலின் உட்குவரத்தோன்றுமென்றான். மக்களும் மாவும் முதலியன சென்று நீருண்ணுந் துறைபோலப் பலவகைப்பட்ட பொருளும் ஒருவகைப்பட்டு இயங்குதற்கு மார்க்கமாமாதலிற் துறையென்றார்; எல்லாவழியுமென்பதனை எல்லாத்துறையுங் காவல்போற்றினார் என்பவாகலின். எனவே, திணையுந் துறையுஞ் சொண்டாராயிற்று. அகத்திணைக்குத் துறையுட் பகுதிகளெல்லாம் விரித்துக்கூறிப் பின்னும் பன்முறையாற் பரந்துபட்டு வரம்பிகந்தனவற்றையுந் தொகுத்துத் துறைப்படுத்துக் கிளவி கூறுக என்றற்குச் செய்யுளியலுட் துறையென்பது உறுப்பாகக் கூறினார். புறத்திணைக்கு அங்ஙனம் பரந்துபட விரித்தோதாது தொகுத்து இலக்கணஞ் செய்தாராயினும் அவையும் அவ்வாறே பலபொருட்பகுதியும் உடையவென்பது உணர்த்துதற்குத் துறையெனப் பெயராகக் கொடுத்தார். இதனானே அகப்பொருட்பகுதி பலவாயினும் ஒருசெய்யுட் பலபொருள் விராய் வரினும் ஒருதுறையாயினாற்போலப் புறத்திணைக்கும் அவ்வவபொருட்பகுதியும் ஒருதுறையாதலும் ஒருசெய்யுட் பலதுறை ஒருங்குவருதலும் ஒருதுறைப்படுதலுங் கொள்க. இன்னும் இதனானே அகத்திணைக்கு உரியனவெல்லாம் புறத்திணைக்குங் கொள்க. (௧)

௫எ. வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவி
னாதந் தோம்பன் மேவற் றாகும்.

இது வெட்சியெனக் கூறிய புறத்திணைக்குப் பொது இலக்கணங் கூறுகின்றது. (இ - ள்.) வேந்து விடு முனைஞர்=வேந்தனால் விடப்பட்டு முனைப்புலங் காத்திருந்த தண்டத்தலைவர் : வேற்றுப் புலக்களவின் = பகைநிலத்தே சென்று களவினாலே : ஆதந்தோம்பல் மேவற்றாகும் = ஆநிரையைக் கொண்டுபோந்து பாதுகாத்தலைப் பொருந்துதலையுடைத்தாகும் வெட்சித்திணை.—எ - று. களவுநிகழ்கின்ற குறிஞ்சிப்பொருளாகிய கந்தருவமணம் வேதவிதியானே இல்லறமாயினாற்போல இருபெருவேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர்நாட்டு வாழும் அந்தணரும் ஆவும் முதலியன

இங்குசெய்யத் தகாத சாதிகளை ஆண்டுநின்றும் அகற்றல்வேண்டிப் போதருகவெனப் புகறலும் அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினற் றாமே கொண்டுவந்து பாதுகாத்தலுந் தீதெனப்படாது அறமேயாம் என்றற்கு ஆதந்தோம்பலென்முன். அது "ஆவு மானியற் பார்ப்பன மாக்களும் - பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித் - தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் - பொன்போற் புதல்வற் பெருஅ தீரு - மெம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென - வறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்" எனச் சான்றோர் கூறியவாற்றுனுணர்க. மன்னுயிர் காக்கும் அன்புடை வேந்தற்கு மறத்துறையினும் அறமேநிகழும் என்றற்கு மேவற்றுகுமென்முன். அகநாட்டின்றிப் புறஞ்சிறைப்பாடியில் ஆநிரை காக்குங் காவலரைக் கொன்றே நிரைகொள்ள வேண்டுதலின் ஊர் கொலையுங் கூறினுர். வேந்துவிடுவினைஞர் என்றது முனைஞர் என்றதனுனே முனைப்புலங் காத்திருந்தோர் தாமே சென்று நிரைகோடலுங் குறுநிலமன்னர் நிரைகோடலும் ஏனைமறவர் முதலியோர் நிரைகோடலுமாகிய வேத்தியல் அல்லாத பொதுவியலுங் கொள்க. முன்னர் வெட்சி குறிஞ்சிக்குப்புறனெனக் களவுகூறிய அதனுனே அகத்திற்கு ஏனைத்திணைக்கண்ணுங் களவுநிகழ்ந்தாற்போலப் புறத்திணையேழற்குங் களவுநிகழுங்கொலென்று ஐயுற்றமாணுக்கற்கு வெட்சிக்கே களவு உள்ளதென்று துணிவுறுத்தற்கு மீட்டுங் களவினென்று இத்திணைக்கே களவு உளதாக வரைந்தோதினுன். வேந்துவிடுமுனைஞர் என்றதனுன் இருபெருவேந்தருந் தண்டத்தலைவரை ஏவிவிடுவரென்றும், ஆதந்தோம்பும் என்றதனுற் களவின்கட்சொண்ட ஆவினை மீட்டுந் தந்தோம்புமென்றும், பொருள் கூடுமாறு சூத்திரஞ்செய்தானுகலின் இருபெருவேந்தர் தண்டத்தலைவரும் அவரேவலான் நிரைகோடற்கும் மீட்டற்கும் உரியராயினுர்; ஆகவே இருவர்க்குங் கோடற்றொழில் உளதாயிற்றுதலின் அடித்துக் கோடலும் மீட்டுக் கோடலும் வெட்சியாயின. ஆயின் "மீட்டல் கரந்தை" என்பரால் எனின், அதனையும் இச்சூத்திரத்தானும் வருகின்ற சூத்திரத்தானும் வெட்சியென்றே ஆசிரியன் கொண்டான். மீட்டலை வெட்சிக்கரந்தை என்பாரும் உளர். மீட்டலைக் கரந்தையென்பார்க்கு அதுதிணையாயிற் குறிஞ்சிக்குப்புறனுகாமை உணர்க. களவினென்பதற்குக் களவினுனெனவுங் களவின்கணெனவும் இருபொருட்டாகக் கூறல் உய்த்துக்கொண்டுணர்தலென்னும் உத்தியாம். புறப்பொருட்குரிய அறனும்பொருளுங் கூறத் தொடங்கி ஈண்டு அறத்தாற் பொருளீட்டுமாறுங் கூறினுன். (உ)

௫அ. படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட
வொற்றி னாகிய வேயே வேய்ப்புற
முற்றி னாகிய புறத்திறை முற்றிய
வூர்கொலை யாகோள் பூசன் மாற்றே
நோயின் றுய்த்த னுவலுழித் தோற்றந்
தந்துநிறை பாதீ டுண்டாட்டுக் கொடையென
வந்த வீரேழ் வகையிற் றாகும்.

இது முன் ஈரேழாமென்ற துறை இருவகைப்பட்டு இருபத்தெட்டாமென்கின்றது. (இ-ள்.) படை இயங்கு அரவம் = நிரைகோடற்கு எழுந்த படை பாடிப்புறத்துப் பொருந்தும் அரவமும், நிரைமீட்டற்கு எழுந்த படை விரைந்து செல்லும் அரவமும்: உ-ம். "வெவ்வாய் மறவர் மிலைச்சிய வெட்சியாற் - செவ்வானஞ் செல்வது போற் செல்கின்றா - ரெவ்வாயு - மார்க்குங் கழலொலி யாங்கட் படாலியரோ - போர்க்குந் துடியொடு புக்கு." "அடியதி ரார்ப்பின ராபெயர்த்தற் கன்னாய் - கடிய மறவர் கதழ்ந்தார் - மடிநிரை - மீளாது மீளார் விறல்வெய்யோர் யாதாங்கொல் - வாளார் துடியர் வளம்." இவை கண்டோர்கூற்று.

பாக்கத்து விரிச்சி = நிரைகோடற்கு எழுந்தோர் போந்துவிட்ட பாக்கத்துக் கங்குலின் அல்வாய்ப்புட்கேட்டலும், நிரைமீட்டற்கு எழுந்தோர் இடைப்புலத்துப் புறம்போந்தோர் கூறியவற்றை வாய்ப்புள்ளாகக் கோடலும்: உ-ம். "நிரைகவுள் வெள்வாய்த் திரிந்துவீழ் தாடி - நரைமுதியோ னின்றுரைத்த நற்சொ - னிரையன்றி - யெல்லைநீர் வைய மிறையோர்க் களிக்குமால் - வல்லைநீர் சென்மின் வழி." "வந்தநீர் காண்மினென் றாபெயர்ப்போர் மாட்டிசைத்த - பைந்தொடியார் கூறும் பறவாப்பு - ளாய்ந்த - நிரையளவைத் தன்றியு நீர்சூழ் கிடக்கை - வரையளவைத் தாவதா மண்." இவை விரிச்சியை வியந்தன.

புடைகெடப் போகிய செலவே = நிரைகோடற்கு எழுந்தோர் ஊன்றிநின்று மீண்டுபோய்ப் பற்றார் புலத்து ஒற்றர் உணராமற் பிறரை ஞான்று சேறலும், நிரைமீட்டற்கு எழுந்தோர் ஆண்டு ஒற்றப்படாமற் சேறலும்: உ-ம். "பிறர்புல மென்னார்தாந் தம்புல மென்னார் - விறல்வெய்யோ ராயிருட்கட் சென்றார் - நிறையுங் -

கடாஅஞ் செருக்குங் கடுங்களி யானைப் - படாஅ முகம்படுத் தாங்கு." "கங்கை பரந்தாங்குக் கானப் பெருங்கவலை - யெங்கு மறவ ரிரைத்தெழுந்தார் - தங்கிளைக்கண் - மன்றுகாண் வேட்கை மடிசுரப்பத் தோன்றுவ - கன்றுகாண் மெய்குளிர்மீர் கண்டு." இவை கண்டோர் கூற்று.

புடைகெட ஒற்றின் ஆகிய வேயே = நிரைகோடற்கு எழுந் தோர் பகைப்புலத்து ஒற்றர் உணராமற் சென்று ஒற்றி அவ்வொற் றுவகையான் அவர் உணர்த்திய குறிச்சொல்லும், நிரைமீட்டற் கு எழுந்தோர் அங்ஙனம் ஒற்றிய ஒற்றுவகையான் வந்து ஓதிய குறிச்சொல்லும்: உம் "ஒருவ ரொருவ ருணராமற் சென்றாங் - கிருவரு மொப்ப விசைந்தார் - வெருவர - வீக்குங் கழற்கால் விறல் வெய்யோர் வில்லோடு - கோக்குஞ் சரந்தெரிந்து கொண்டு." "நெடுநிலையா யத்து நிரைசுவ டொற்றிப் - படுமணி யாயம் பகர்ந் தோய் - கொடிது - மனக்குரிய காதல் வயவேந்த னென்று - நினக் குரிய வாக நிரை." இவை கண்டோர்கூற்று.

வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத்திறை = நிரைகோடற் கு எழுந்தோர் வேயுரைத்தோரிடத்துச் செய்யுஞ் சிறப்புக்கள் முடிந்தபின்னர் உளதாகிய நிரைப்புறத்து ஒடுங்கிய இருக்கைப்பகு தியும், நிரைமீட்டற்கு எழுந்தோர் தமது நிரைப்புறத்துச் சென்று வினைவொழிந்து இருக்கின்ற இருக்கையும்: உம். "கரந்தியல் காட்டுத்தீப் போலப் பெரிது - பரந்துசென் மள்ளர் பதிந்தா - ரரந் தை - விரிந்தவியு மாறுபோல் விண்டோயத் தோன்றி - யெரிந்த வியும் போலுமிவ் வூர்." இதுகண்டோர்கூற்று. "இருநில மருங்கி னெப்பிறப் பாயினு - மருவின மாலையோ யினிதே யிரவி - ளுகோ ண் மள்ளரு மருள்வரக் கானத்து - நாம்புறத் திறுத்தன மாகத் தாந்தங் - கன்றுகுரல் கேட்டன போல - நின்றுசெவி யோர்த்த ன சென்றுபடு நிரையே." இது மறவர்கூற்று.

முற்றிய வூர்கொலை = நிரைகோடற்கு எழுந்தோர் அவர்புற ஞ்சேரியை வளைந்துகொண்டு ஆண்டுநின்ற நிரைகாவலரைக் கொ ன்று பகையறுத்தலும், நிரைமீட்டற்கு எழுந்தோர் அவ்வூரை விட் டுச் சிற்றூரைக் காத்துக்கோறலும்: உம். "அரவூர்மதியிற் கரி துர வீம - யிரவூ ரெரிகொளீஇக் கொன்று - நிரைநின்ற - பல்லான் றொழுவும் பகற்காண்மார் போர்கண்டோர் - கொல்வார்ப் பெருஅ கொதித்து." "சென்ற நிரைப்புறத்துச் சீறூர்த் தொடை கொண்டு - நின்ற மறவர் நிலஞ்சேர்ந்தார் - கொன்றாண் - டிகலு

பூந்த வல்வில் விளையோர்புண் டீரத் - துகளெழுங்கொல் பல்லான் றொழு." இவை கண்டோர்கூற்று.

ஆகோள் = நிரைகோடற்கு எழுந்தோர் எதிர்விலங்குவோர் இலராக நிரையகப்படுத்தி மீட்டலும், நிரைமீட்டற்கு எழுந்தோர் தமது நிரையை அற்றமின்றி மீட்டலும்: உம். "கொடுவரி கூடிக் குழுஉக்கொண் டனைத்தாய் - நெடுவரை நீள்வேய் நரலு - நடுவூர்க் கணநிரை கைக்கொண்டு கையகலா நின்ற - நிணநிரை வேலோர் நிலே." கடல்புக்கு மண்ணெடுத்த காரோனக் கோட்டின் - மிடல் பெரி தெய்தின மாதோ - தொடலைக் - கரந்தை மறவர் கருதார் குழாஅந் - துரந்து நிரைமீட்ட தோள்." இவை கண்டோர் கூற்று. தொடலைக்கரந்தையெனக் கரந்தை சூடினமை கூறினார், தன்னுறுதொழிலான் நிரைமீட்டலின். இது பொதுவியற்கரந்தையிற் கூறுதும்.

பூசன்மாற்று = நிரை கொண்டுபோகின்றார் தம்பின்னே உளைத்தற்குரலோடு தொடர்ந்துசென்று ஆற்றிடைப் போர்செய்தோனை மீண்டு பூசலைமாற்றுதலும், நிரையை மீட்டுக்கொண்டு போகின்றோர் தம்பின்னர்வந்து போர்செய்தோரை மீண்டு நின்று பூசலைமாற்றுதலும்: உம். "ஒத்த வயவ ரொருங்கவிய நாண் படரத் - தத்த மொலியுந் தயிர்த்தன - வைத்தகன்றார் - தம்பூசன் மாற்றி நிரைகொள்வான் றாக்கினார் - வெம்பூசன் மாற்றிய வில்.", "ஆவூ ரறிந்து நிரையொடு பெயர்ந்த - வெட்சி மறவர் வீழவு முட்காது - கயிறியல் பாவை போல வயிறிரித் - துளைக்குரற் குணர்ந்த வளைப்புலி போல - முற்படு பூசல் கேட்டனர் பிற்பட - நிணமிசை யிழுக்காது தமர்பிண மிடறி - நிலங்கெடக் கிடந்த கருந்தலை நடுவண் - மாக்கட னெருப்புப் போல நோக்குபு - வெஞ் சிலை விடலை வீழ்ந்தன - னஞ்சுநக் கன்றாற் செஞ்சோற்று நிலையே." இவை கண்டோர்கூற்று. வெட்சிமறவர் வீழ்ந்தமை கேட்டு விடாது பின்வந்தோன் பாடுகூறினமையிற் பூசன்மாற்றாயிற்று.

நோய் இன்று உய்த்தல் = நிரைகொண்டோர் அங்ஙனம் நின்றுநின்று சிலர் பூசன்மாற்றத் தாங்கொண்ட நிரையினை இன்புறுத்திக் கொண்டுபோதலும், மீட்டோரும் அங்ஙனம் நின்று நின்று சிலர் பூசன்மாற்றத் தாம் மீட்டநிரையினை இன்புறுத்திக் கொண்டுபோதலும்: உம். "புன்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும் - வின்மே லசைஇயகை வெல்கழலான் - றன்மேற் - கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டு - நெடுவரை நீழ னிரை."

"கல்கெழு சீறூர்க் கடைகாண் விருப்பினன் - மெல்ல நடவா விரையு நிரையன்றோ - தெள்ளறற் கான்யாற்றுத் தீநீர் பருகவு - மள்ளர் நடாஅ வகை." இவை கண்டோர்கூற்று.

நிலவுழித் தோற்றம் = பாடிவீட்டுள்ளோர் மகிழ்ந்துரைத் தற்குக் காரணமான நிரைகொண்டோர் வரவும், ஊரிலுள்ளோர் கண்டு மகிழ்ந்துரைத்தற்குக் காரணமான நிரைமீட்டோர் வரவும்: உம். "மொய்யண லானிரை முன்செல்லப் பின்செல்லு - மைய ணற் காளை மகிழ்துடி - கையணல் - வைத்த வெயிற்றியர் வாட்க ணிடறுடை - வுய்த்தன் றுவகை யொருங்கு." "காட்டகஞ் சென்று யிர் போற்றான் கடுஞ்சுரையா - மீட்ட மகனை வினவுழ - றேட் டந்து - தன்னெதிர் தோன்றும் புனிற்றாத் தழீஇக்கலுழு - மென் னெதிர்ப் பட்டாயோ வென்று." இவை கண்டோர் கூற்று.

தந்து நிறை = நிரைகொண்டோர் தாங்கொண்ட நிரையைத் தம்மூர்ப்புறத்துத் தந்துநிறுத்தலும், நிரைமீட்டோர் தாம் மீட்ட நிரையினைத் தந்துநிறுத்தலும்: உம் "குளிறு குரன்முரசங் கோட்டின் வெரூஉங் - களிறொடுதேர் காண்டலு மாற்றா - நளி மணி - நல்லா னினநிரை நம்மூர்ப் புறங்கான - மெல்லாம் பெறுக விடம்." "கழுவொடு பாகர் கலங்காமல் யாத்துத் - தொழுவிடை யாயர் தொகுமி - னெழுவொழித்தாற் - போமே யிவையிவற்றைப் போற்றுமின் புல்லொடுநீர் - தாமேய் புலம்போலத் தந்து." இவை கண்டோர்கூற்று.

பாதீடு = ஈத்தலும் ஈதலும் போலப் பாத்தலும் பாதலும் ஒன்றாதலிற் பாதீடாயிற்று. வேந்தனேவலாற் தாங்கொண்ட நிரையைப் பகுத்துக்கோடலும், மீட்டோருந் தத்தநிரையைப் பகு த்துக்கோடலும் நிரையை இறந்தோர்க்குப் பகுத்துக்கொடுத்த லும்: உம். "ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க் கும் - புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் - விள்வாரை - மா றட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற் - கூறிட்டார் கொண்ட நிரை." "யாமே பகுத்திடல் வேண்டா வினநிரை - தாமே தமரை யறிந் தனகொ - லேமுற - வன்றீன்ற தம்மை யறிந்துகொள் கன்றேய்ப் பச் - சென்றீண்டு மாங்கவர்பாற் சேர்ந்து." இவற்றுள் முன் னையது கண்டோர்கூற்று, ஏனையது மறவர்கூற்று.

உண்டாட்டு = நிரைகொண்டார் தாங்கொண்ட நிரையைப் பாத்துத் தாங்கொண்ட மகிழ்ச்சியாற் சுற்றத்தொடு கள்ளுண்டு

மகிழ்ந்து விளையாடுதலும் நிரைமீட்டார் வென்று நிரைமீட்ட கொற்றத்தான் உண்டாடுதலுமாம்: உம். "நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்-பாசுவ லிட்ட பைங்காற் பந்தர்ப் - புனறரு மிளமணல் நிறையப் பெய்ம்மின் - ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று - நிரையொடு வரூஉ மென்னைக் - குழையோர் தம்மினும் பெருஞ்சாயலரே." இது புறம். "பகைவர் கொண்ட படுமணி யாய-மீட்டிவ ணடைந்த வாட்டிறற் குரிசின் - முழவுத் துயின்மறந்த மூதூ ராங்கண் - விழவுத் தலைக்கொண்ட விளையாட் டாயத் - தூன்சுடு கொழும்புகைக் கருங்கொடி யும்பர் - மீன்சுடு புகையின் விசும்புவாய்த் தன்றே; கைவல் கம்மியர் பலகூட் டாரமொடு - நெய்பிழி நறுவிரை நிலம்பரந் தன்றே; காவிற காவிற் கணங்கொள் வண்டெனப் - பூவிலை மகளிர் புலம்படர்ந் தன்றே; சந்தியுஞ் சதுக்கமும் பந்தர் போகிய - வாடு நறவின் சாடி தோறுங் - கொள்வினை மாறாக் கொடையொடு - கள்விலை யாட்டியுங் கைதூ வாளே." இவை கண்டோர் கூற்று.

கொடை = தாங்கொண்ட நிரையை இரவலர்க்கு வரையாது கொடுத்து மனமகிழ்தலும், நிரைமீட்டோர்க்கு வெறிப்பொருள் விளைந்த கொடைப்பகுதியும்: உம். "இளமா வெயிற்றி யிவை காணினையர் - தலைநாளை வேட்டத்துத் தந்த நல்லானிரைகள் - கொல்லன் றுடியன் கிளைபுணர் சீர்வல்ல - நல்லியாழ்ப் பாணர்தம் முன்றில்." "கொடைதமெதாழி லெல்லாங் குறைவின்றிப் பண்டே-முடித்தன னன்றிருந்த மூத்தோன் - கொடைக்கு - வரம்பில னென்றேற மருண்டாரா கொண்ட - கரந்தையங் கண்ணியா ரான்டு." இவை கண்டோர் கூற்று.

என ஈரேழ் வகையிற்றாகும் = என்று கூறப்பட்ட பதினான்கும் மீட்டுமொருகால் வந்த இருகூற்றையுடைத்தாய வெட்சித்திணை. எ-று. எனவே ஒன்று இரண்டாய் இருபத்தெட்டாயிற்று.

இனித் துறையென முற்கூறினமையின் இதுகாரியமாக இதற்குக் காரணமாயினவெல்லாம் படையியங்கரவமெனவேபடும்; அவை இருபெருவேந்தரும் போர்தொடங்குங்காற் பூக்கோளேவி நிரைகோடல் குறித்தோன் படைத்தலைவனைத் தருகவென்றலும் அவர்வருதலும் அவர்வந்துழி இன்னது செப்பவென்றலும் அவர் வேந்தர்க்கு உரைத்தலும் அவர் படையைக் கூட்டி அறிவித்தலும் படைச்செருக்கும் அதைக் கண்டோர் கூறலும் அவ்வகைப்புலக் கேட்டிற்கு இரங்கிவருந்தலும் நாட்கோடலும் அவ

கொற்றவைக்குப் பரவுக்கடன் பூண்டலும் பிறவுமாம். களவிற செல்வோர்க்கும் அரவங்கூறினர், அவர் பாக்கத்தே தங்கி விரிச்சிபெற்றுப் போதுதலின்.

அவற்றுட் சில வருமாறு: "கடிமனைச் சீறூர்க கடுங்கட் கறவ்வ - வடிநவில் வேலோன் மறுத்தோம்பல் வேட்டோ - னடிபணை தோலி னரண்சேர்ந்து மள்ளர் - வருகமன் வாயிற் கடை." இதுபடைத்தலைவர் படையாளரைக்கூயினது. "வாள்வலம் பெற்ற வயவேந்த னேவலா - லாள்வ லிளையவர் தாஞ் செல்லினர் - நாளைக் - கணைகுர லல்லாஅக் கன்றுள்ளப் பாலா - னனைவது போலுநம் மூர்." இதுபடைச்செருக்குக் கண்டோர் கூறியது. "வந்த நிரையி னிருப்பு மணியுட - னெந்தலை நின்றலை யாந்தருது - முந்துநீ - மற றவை பெற்று வயவேந்தன் கோலோங்கக் - கொற்றவை கொற றங் கொடு." இது தெய்வத்திற்குப் பராயது; பிறவும் வருவன வெல்லாம் இதனான் அடக்குக.

இனிப் பாக்கத்து விரிச்சிக்குக் காரணங்களாவன, பாக்கத்துச் சென்றுழி இருப்புவகுத்தலும் பண்டத்தொடு வல்சி ஏற்றிச் சென்றோரை விடுத்தலும் விரிச்சி வேண்டாவென விலக்கிய வீரக்குறிப்பும் விரிச்சிக்கு வேண்டும் நெல்லும் மலரும் முதலியன தருதலும் பிற நிமித்தப் பகுதிகளும் அவை அறிந்தார்க்குச் சிறப்புச்செய்தலும் பிறவுமாம். உம். "நாளும் புள்ளுங் கேளா ஊக்கமொ - டெங்கோ னேயின னாதலின் யாமத்துச் - செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய் - மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப - விரிச்சி யோர்த்தல் வேண்டா - வெயிற்புறந் தருதும் பகைப்புல நிரையே." இது விரிச்சி விலக்கிய வீரக்குறிப்பு; பிறவும் வந்துழிக் காண்க. அரசன் ஏவலாற் போந்தோரும் விரிச்சி கேட்டார், இன்னதொன்று வினை வாய்க்குமென்று அறிதற்கு. இனி வேய்க்குக் காரணங்களாவன வேய்கூறினார்க்குச் சிறப்புச்செய்தல் போல்வன. உம் "மாற்றருந் துப்பின் வயவேந்த னல்லனே - லேற்ற பெருஞ்சிறப் பென்றீதும் - வேற்றாரிற - புலவேய் குரம்பைப் புறஞ்சிறைவாய் நின்றெற்றி - நல்வே யுரைத்தார்க்கு நாம்." எனவரும்.

இனி ஏனைய ஒன்று பலவாய்த் துறைப்பாற் படுவன வந்துழிக் காண்க. இங்ஙனம் புறத்திணைக்குச் சிறுவரவினதலின் அன்றோ பாடல் சான்ற புலனெறிவழக்கமென்று அகத்திற்குக் கூறியது. நிரை மீட்குங்கால் அறிந்தார் அறிந்த ஒற்றன் விரைந்து சென்று மீட்பாராதலின் அரசனை உணர்த்தாதே மீட்டல் பெறுதும்; இவற்றிற்குந் துறைப்பகுதி கொள்க. (ரு)

ருக. மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையு மத்திணைப் புறனே.

இவையும் வெட்சித்திணையாமென்கின்றது. (இ-ள்.) மறங் கடைக் கூட்டிய துடிநிலை = போர்க்களத்து மறவரது மறத்தினைக கடைக்கூட்டிய துடிநிலையும்: சிறந்த கொற்றவை நிலையும் = அத் தொழிற்குச் சிறந்த கொற்றவைக்குப் பரவுக்கடன் கொடுக்குங் கால் அவளது நிலைமை கூறுதலும்: அத்திணைப்புறனே = அவ்விரு வகை வெட்சிக்கும் புறனடையாம்.—எ-று. "நித்திலஞ்செய் பட டமு நெற்றித் திலதமு - மொத்திலங்க மெய்பூசி யோர்கதும இத் - தத்தந் - துடியரோ பேர்ப்புறஞ் சூழ்ந்தார் மறவர் - குடிநிலை பாராட்டிக் கொண்டு." இது இருவகை வெட்சிக்கும் பொது. நிரைகொண்டோர்க்கும் மீட்டோர்க்குந் துடிகொட்டிச் செறிவை த்தலின். "அருமைத் தலைத்தரு மாநிரையு ளையை-யெருமைப் படலி கோ ளியைந்தா - ளரசனும் - வேந்தன்மேற் செல்வான் விடல வஞ்சி சூடானென் - றியாந்தன்மேற் சீறுமலின்று." இதனுட் வருகின்ற வஞ்சித்திணைக்குக் கொற்றவைநிலை காரணமாயிற்று. தோற்றோர்க்குங் கொற்றம்வேண்டியும் வென்றோர்க்கும் மேற்செ லலுங்காற் கொற்றம் வேண்டியும் வழிபடுவராதலின். இனிக்கொ ற்றவை நிலைப்பகுதியுட் சில வருமாறு: "உச்சிலைவேற் காளிக்கு காளியே கொற்றவை - கைச்சிலை நல்கும்யாங் காணேங்கொல - .நிச்சில்கூர் - வாளின்வாய்த் தீண்டாத வார்குருதி மெய்க [illegible] வாளின்வாய் வீழ்த்தான் றலை." இது உயிர்ப்பலி. இத [illegible] வகையான் இருவகைவெட்சிக்கும் வஞ்சிக்கும் பொது. "[illegible] [illegible] யளவிற்றிக் கொற்றவை - பாடியுட் பாடி [illegible] தாடிய - தோளொடுமலை யாடுவேன் றோளிணுந் தூக்கமை [illegible] மலை யாடுவேன் றுன்." இது குருதிப்பலி; [illegible] இரு வகை வெட்சிக்கும் வஞ்சிக்கும் பொது.

கா0. வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளு முறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி யேந்துபுகழ்ப்
போந்தை வேம்பே யாரென வரூஉ
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவ ரேத்திய
வோடாக் கழனிலை யுளப்பட வோடா
வுடல்வேந் தடுக்கிய வுன்ன நிலையு

மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
றுவா விழுப்புகழ்ப் பூவை நிலையு
மாரம ரோட்டலு மாபெயாத்துத் தருதலுஞ்
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத் துரைத்தலுந்
தலைத்தா ணெடுமொழி தன்னொடு புணாததலு
மனைக்குரி மரபினது கரந்தை யன்றியும்
வருதாா தாங்கல் வாள்வாய்த்துக் கவிழதலென்
றிருவகைப் பட்ட பிள்ளை நிலையும்
வாண்மலைந் தெழுந்தோனை மகிழ்ந்து பறைதூங்க
நாடவற் கருளிய பிள்ளை யாட்டுங்
காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்
சீர்த்தகு மரபிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று வகையிற் கல்லொடு புணரச்
சொல்லப் பட்ட வெழுமூன்று துறைத்தே.

இது முன் இருபெருவேந்தர்க்கும் போர்செயத் தொடங்கு தற்குரிய பொதுநிலைமை கூறிய அதிகாரத்தானே புறத்திணைக் கெல்லாம் பொதுவாகிய வழுவேழும் உணர்த்துகின்றது: இவை வேத்தியலின் வழீஇத் தன்னுறு தொழிலாய் வருதலின் வழுவா யின. இவை அகத்திற்கும் புறத்திற்கும் உரியவாய் வருவன வும் புறத்திற்கெல்லாம் பொதுவாய் வருவனவுமாதலிற் பொது வியலுமாயின. (இ-ள்.) வெறி அறி சிறப்பின் = தெய்வத்திறகுச செய்யுங் கடன்களை அறியுஞ் சிறப்பினையும்: வெவ்வாய் வேலன் = உயிர்க்கொலை கூறலின வெவ்வாயினையும் உடையனாகிய வேலன் வெறியாடடு அயாநத காந்தளும் = தெயவ வெறியாடுதலைச் செய தகாந்தளும்:

செவ்வேள்வேலைத் தான் ஏநதிநிற்றலின் வேலனென்றா. சார்தள்சூடி ஆடுதலிற் காநதளென்றார். வேலனைக் கூறினமை யிற் கணிக்காரிகையுங் கொள்க, காந்தளையுடைமையானும் மக ளிரை வருத்துதலானும் பனந்தோடுடைமையானும். வேலனை வெ றியாட்டயாநத என்றதனுன் வேலன் ஆடுதலே பெரும்பான்மை, ஒழிந்தோர் ஆடுதல் சிறுபான்மையெனறுணர்க. உம். "அமரகத் துத் தன்னை மறந்தாடி யாங்குத் - தமரகத்துத் தன்மறந் தாடுங் - குமரன்முன் - கார்க்காடு நாறுங் களனிழைத்துக் காரிகையா-போர்க்காடுங் காளை யிவன்." இது சிறப்புப்பற்றியாடும் மகளிராதலிற்

புறனாயிற்று. வேலனாடுதல் அகத்திணைக்குச் சிறந்தது. உம். "அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதருங் - கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்-மணங்கமழ் விபன்மார் பணங்கிய செல்ல-லிது வென வறியாண் மறுவரற் பொழுதிற்- படிபோர்த் தேய்த்த பல் புகழ்த் தடக்கை - நெடுவேட் பேணத் தணிகுவ ளிவளென - முது வாய்ப் பெண்டி ரதுவாய்க் கூறக் - களனன் கிழைத்துக் கண்ணி சூட்டி - வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத் - துருவச் செந் தினை குருதியொடு தூஉய்-முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநா- ளார நாற வருவிடர்த் ததைந்த - சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்- களிற்றிரை தெரீஇப் பார்வ லொதுக்கி - னொளித்தியங்கு மரபின் வயப்புலி போல - நன்மனை நெடுநகர்க் காவல ரறியாமைத் - தன் னசை யுள்ளத்து நன்னசை வாய்ப்ப - வின்னுயிர் குழைய முய ங்குதொறு மெய்ம்மலிந்து - நக்கனெ னல்லெனோ யானே மெய் த்த - நோய்தணி காதலர் வரவீண் - டேதில் வேலற் குவந்தமை க ண்டே." "பனிவரை நிவந்த" என்னும் பாட்டும் அது. இவையகம் இவற்றுட் சேயோன் கருப்பொருளாக மைவரையுலகத்துக் கூதிர் யாமம் பொழுதாகச் சிறப்பறியும் வேலன் ஆடுதலின் வெறியாடி ய காந்தள் அகத்திற்கு வந்தது. இது வேத்தியற்கூத்தன்றிக் கரு ங்கூத்தாதலின் வழுவுமாய் அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவா தலிற் பொதுவியலுமாயிற்று. "வேலன் றைஇய வெறியயர் கள னும்" என்றாற் போல்வன சிறப்புப்பற்றியும் வேலன் தானே ஆடு தலுஞ் சிறுபான்மை புறத்திற்குங் கொள்க.

**மா**வரும் புகழ் ஏந்தும் பெருந் தானையர் = மா முதலியன வற்றாற் றமக்கு வரும் புகழைத் தாங்கும் மூவேந்தருடைய பெ ரும்படையாளர்; உறு பகை வேந்திடை தெரிதல் வேண்டிப் போந் தை வேம்பே ஆர் என மலைந்த பூவும் = அப்புகழ்தான் உறும்பகை யிடத்து இன்ன வேந்தன் படையாளர் வென்றார் என்பதற்கு ஓர் அறிகுறி வேண்டிப் போந்தை வெம்பு ஆரென்று கூறிச் சூடின பூவும்: இதன்கருத்து. ஏழகத்தகரும் யானையும் நாயுங் கோழியும் பூழும் வட்டும் வல்லுஞ் சொல்லியவாற்றாற் றமக்குவரும் வெற் றிப்புகழைத் தாம் எய்துதற்குத் தத்தம் வேந்தர் அறியாமற் படைத்தலைவர் தம்முண் மாறாய் வென்று ஆடுங்கால் இன்ன அர சன்படையாளர் வென்றாரென்றற்கு அவரவர்சூடி ஆடுவர் என்ப தூஉம், அக்கூத்தும் வேத்தியற் கூத்தின் வழீஇயின கருங்கூத் தென்பதூஉம், அது தன்னுறுதொழிலென்பதூஉம் உணர்த்திய தாம். இதனை இங்ஙனந் தன்னுறுதொழிலாக்காமல் வேந்துறு தொழிலாக்கின் அது தும்பையாம். புகழ்ந்துகூறிற்றெனிற் பாடா

ணடிணையாம். ஆசிரியர் வெறிக்கூத்திற்கும் வள்ளிக்கூத்திற்கும் இடையே இதனைவைத்தது இக்கருத்தென்றுணர்க. உம். "ஏழக மேறகொண் டிளையோ னிகல்வென்றான் - வேழ மிவனேற வேந் துளவோ - வேழுலகுந் - தாந்தயங்கு நாகந் தலைதயங்க வாடா மேழ - போந்தையங் கண்ணி புனைந்து." இது போந்தை மலைந் தாடியது. "குறும்பூழ்ப்போர் கையறிந்து கொற்றம் பெறுத- லிறும்பூதென் றியாமாடல் வேண்டா - செறுந்தோள் - குலமதி கரு மாற்றியபின் கொற்றவன் வேம்பு - தலைமலைபற் பாலதூஉ மன்று." இது வேம்பு தலைமலைந்தாடியது. "ஆர்வேய்ந்த கோ லத்தோ டாடுவர் பாடுவர் - போர்வேந்தர் பெற்றநாள் போன் றுவப்பர் - சீர்சால் - பறைகெழு வாரணப்போர் பணடிகழ்ந்தோ ரின்று - சிறைகெழு வாரணப்போர் செய்து." இது ஆர்மலைந்தா டியது. இவை தன்னுறுதொழிலாயவாறு காண்க.

வாடா வள்ளி = வாடுங் கொடியல்லாதவள்ளிக்கூத்தும்: அது இழிந்தோர் காணுங்கூத்து. உம் "மண்டமர் அட்ட மறவர் குழாத் திடைக் - கண்ட முருகனுங் கண்களித்தான் - பண்டே - குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப் - பிறமக ளென்றாள் பெரிது." இது டெண்பாற்குப் பெருவரவிற்று. இதனைப் பிற்கூறினார் வெறி யாடல் சிறப்புடைமையானும் ஆண்பாற்கும் பெண்பாற்கும் பொது வாதல்லது அகத்திணைக்கணவந்து பொதுவாகாமையும் பற்றி.

வயவர் ஏத்திய ஓடாக் கழனிலை உளப்பட = முன்பு கழல் கட்டாத வீரர் மழலைபருவத்தானொருவன களத்திடை ஓடாது நின்றமைகண்டு அவனைபுகழ்ந்து அவற்குக் கட்டிய கழனிலைக் கூத்து: ஓடாமைபாற் கட்டின கழல, ஏத்திட நிலையாற் கட்டின கழல, இது வள்ளிப்பின் வைத்தலின் இருபாலாரும் ஆடுதல்கொ ள்க. கொடிமுதலியன அவனை வியந்துகொடுத்தல் அத்துறைப் பகுதியாம். உம். "மீளாது பெற்ற விறற்கழலான் வாளாட்டின் வாளாடு கூத்திவர் தாடினள் - வாளாட்டின் - மண்ணுளு மங் ஙனோ பெண்ணுவார் வண்மைக்குப் - பெணணுடின் யாதாம் பிற."

ஓடா உடல் வேந்து அடுக்கிய உன்னநிலையும் = பிறக்கடி யிடா உடன்ற வேந்தனை உன்னமரத்துடன் அடுக்கிக் கூறப்பட்ட உன்னநிலையும்: என்றது, வேந்தன் கருத்தானன்றி அவன் மறவன் வேந்தற்கு நீ வென்றிகொடுத்தால் யான் நினக்கு இன்னது செய் வலெனப் பரவுதலும், எம்வேந்தற்கு ஆக்கம் உளதெனின் அக் கோடு பொதுள்க எனவும் பகைவேந்தர்க்கு ஆக்கம் உளதெனின்

அக்கோடு படுவதாக எனவும் நிமித்தங்கோடலும் எனவிருவ கைத் தெய்வத்தன்மை அஃதுடைமையான் அடுக்கிய உன்ன மென்றார். உம். "துயிலின் கூந்தற் றேளிணைப் பேதை - வெயி னிழ லொழிய வெஞ்சுரம் படர்ந்து - செய்பொருட் டிறவீ ராயினு மவையி - னெனக்கொன்று மொழியின ளாகத் தனக்கே யருநகை தோன்றிய வழுங்குரற் கிளவியள் - கலுழ்கண் கரட தன டானே யினியே - மன்னவற் பராஅய் முன்னியது முடித் தோ - ருன்னஞ் சிறக்கு மொள்வினை நினைஇத் - தலைசாய்த் திருந்த சிலைவலம் போற்றி - வேந்து வழக்கறுத்த கான - நீந்த லொல்லுமோ பூந்தொடி யொழிந்தே." "மன்னவற்பராஅய்முன் னியது முடித்தோ-ருன்னஞ் சிறக்கு மொள்வினை நினைஇ" என் றது வேந்தனைப் பரவுக் கடனாக அடுக்கிய உன்னநிலை. "முன் னங் குழையவுங் கோடேலா மொய்தளி - ருன்னங் குழையொ லித் தோங்குவாய் - மன்னரைக் - கொன்று களங்கொள்ளுங் கொல்யானை வேந்தனை - வென்றுகளங் கொள்ளுமேல் வேந்து" இவை மறவர் செய்தலிற் றன்னுறுதொழிலாம். "பொன்னன்ன பூவிற் சிறிய விலைப்புன்கா - லுன்னப் பகைவனெங் கோன்" என் பதும் அது. இரண்டு நிலையாற் பொதுவுமாயிற்று. மன்னவன் வெற்றியே கருதாது இங்ஙனம் இருநிலைமையுங் கருதலின் வழுவு மாயிற்று.

மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற் றாவா விழுப்புகழ்ப் பூவைநிலையும் என்றது; மாயோன் விழுப்புகழ் = மாயவனுடைய காத்தற்புகழையும்; மேய பெருஞ் சிறப்பிற் றாவா விழுப்புகழ் = ஏனோர்க்கு உரியவாய் மேவிய பெரியதலைமையிற் கெடாத படைத்தல் அழித்தலென்னும் புகழ்களையும்: மன்பூவைநிலையும் = மன்னர் தொழிலுக்கு உவமையாகக் கூறும் பூவைநிலையும்: என்றது, ஒன்றனை ஒன்றுபோற் கூறுந்துறை. மன் எனப் பொதுப்படக் கூறியவதனான் நெடுநிலமன்னர்க்குங் குறுநிலமன்னர் முதலியோ ர்க்குங் கொள்க. பெருஞ்சிறப்பு என்றதனாற் படைத்தலுங் காத் தலும் அழித்தலுமன்றி அவரவர் தாமாகக் கூறலும் முருகன் இந் திரன் முதலியோராகக் கூறுதலுங் கொள்க. உம். "ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை - மாற்றருங் கணிச்சி மணிமிடற் றேனும் - கடல்வளர் புரிவளை புரையு மேனி - யடல்வெந் நாஞ் சிற் பனைக்கொடி யோனும் - மண்ணுறு திருமணி புரையு மேனி - விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும் - மணிமயி லுயரிய மாறா வென்றிப் - பிணிமுக வூர்தி யொண்செ யோனுமென்-ஞா

லங் காக்குங் கால முன்பிற் - றேலா நல்லிசை நால்வ ருள்
ளுங் - கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம் - வலியொத் தீயே
வாலி யோனைப் - புகழொத் தீயே யிகழுந ரடுநனை - முரு
கொத் தீயே முன்னியது முடித்தலி - னாங்காங் கவரவ ரொத்த
லின் - யாங்கு மரியவு முளவோ நினக்கே." என இதனுள் அங்
ஙனம் உவமித்தவாறு காண்க.

"குருந்த மொசித்தஞான் றுண்டா லதனைக் - கரந்த வடி
வெமக்குக் காட்டாய் - மரம்பெறு - போர்பிற் குருகுறங்கும் பூம்
புனனீர் நாட - மார்பிற் கிடந்த மறு." இது சோழனை மாயோ
னாகக் கூறிற்று. "ஏற்றூர்தி யானு மிகல்வெம்போர் வானவனு-
மாற்றலு மாள்வினையு மொத்தொன்றி னெவ்வாறோ - கூற்றக்
கணிச்சியோன் கண்மூன் றிரண்டேயா - மாற்றல்சால் வான
வன் கண்." இது சேரனை அரனாகக் கூறியது. "இந்திர னெ
ன்னி னிரண்டேக ணேறூர்ந்த - வந்தரத்தா னென்னிற் பிறை
யில்லை - யந்தரத்திற் - கோழியா னென்னின் முகனொன்றே
கோதையை - யாழியா னென்றுணரற் பாற்று." இது சேரனைப்
பலதேவராகக் கூறியது. "கோவா மலையாரங் கோத்துமுந்
நீர்புக்கு மூவாத *** பொன்னிமையக் கோட்டுப் புலி." என்
பதும் அது. "தாமரைக் கண்ணியை ** சிறுகுடி யேனோ."
இது உரிப்பொருட் டலைவனை முருகனாகக் கூறியது. இங்ஙனம்
புறத்தும் அகத்தும் வருதலிற் பொதுவாயிற்று. இறப்ப உயர்ந்த
தேவரை மக்கட்கு உவமையாகக் கூறலின் வழுவுமாயிற்று.

தாவா என்றதனானே அரசர்புகழைக் காட்டுவாழ்வோர்க்
குக் கூறலும் அவரை அரசர்பெயராற் கூறுவனவுங் கொள்க.
"விசும்புசெலற் பருதி வெவ்வெயி லெறித்தலி - னோங்க னோ
க்கா தாங்கு நீபோ - யரசுறுகம் பூண்ட பின்னர் நீண்மலை-
முரசுடை வேந்தர் முகந்திரிந் தனரோ - யஃதான் - றுவவுமதி
நோக்குநர் போலப் பாணரொடு - வயிரியர் பொருநர்நின் பதி
நோக் கினரோ - யதனு - னதனுங் கோடு முதலிய கூட்டுண்-
டுகலி னிசைமேஎந் தொன்றிப் - பலவா கியநில நீபெறு நாளே."
இது முடியுங் குடையும் ஒழித்து அரசர்க்குரியன கூறி இழித்
துக்கூறியும் புகழ்மிகுத்தது. "பல்லிதழ் மென்மலர்" என்னும்
அகப்பாட்டினுள் "அறனில்வேந்த னாளும் - வறனுறு குன்றம் பல
விலங் கினவே" எனக் காட்டுத் தலைவனை நாட்டுத் தலைவன் பெ
யராற் கூறினர்.

ஆர் அமர் ஓட்டலும் = குறுநிலமன்னரும் காட்டகத்து வாழும் மறவரும் போர்த்தொழில் வேந்தனைப் பொருது புறங்காண்டலும்: உம். "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின் - மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ் - நன்மை நிறைந்த நயவரு பாண - சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம் - வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே - வேந்துடன் றெறிந்த வேலே யென்னை - சார்ந்தா ரகல முளங்கிழிந் தன்றே - யுளங்கிழி சுடர்ப்படை யேந் திநம் பெருவிற - லோச்சினன் றுரந்த காலை மற்றவன் - புன்றலை மடப்பிடி நாணக் - குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே." இது சீறூர் மன்னன் வேந்தனைப் புறங்கண்டது. "கள்ளின் வாழ்த்திக் கள்ளின்வாழ்த்திக் - காட்டொடு மிடைந்த சீயா முன்றி - னாட்செருக் கனந்தரத் துஞ்சுவோனே - யவனெம் மிறைவ னியாமவன் பாணர் - நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன் - னிரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக் - கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மீதுகொண் - டீவ திலாள னென்னாது நீயும் - வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக் - கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச் - சென்றுவாய் சிவந்து மேல்வருக - சிறுகண் யானை வேந்துவிழு முறவே." இது மறவன் ஆரமரோட்டல் கூறியது. இது தன்னுறு தொழில் கூறியது. இவை புறம்.

ஆரமரோட்டலென்பது பொதுப்படக் கூறவே வேந்தர்க்கு உதவியாகச் செலவோரையுங் கொள்க. உம். "வெருக்குவிடை யன்ன வெருள்நோக்குக் கயந்தலைப் - புள்ளூன் றின்ற புலவுநாறு கயவாய் - வெள்வாய் வேட்டுவன் வீழ்துணை மகாஅர் - சிறியிலை யுடையின் சுரையுடை வாளி - முள்ளுறுத் தன்ன நுண்கோற் செறித்த வம்பின - வலாஅர் வல்விற் குலாவரக் கோலிப் - பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும் - புன்புலந் தழீஇய வங்குடிச் சீறூர்க் - குமிழுண் வெள்ளை மறுகுவாய்ப் பெயர்த்த - வெண்காழ் தாய வண்காற் பந்த - ரிடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப் - பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை - வலம்படு தானை வேந்தற் - குலந்துழி யுலக்கு நெஞ்சறி துணையே." இது புறம். வேந்தற்குத் துணையாகச் செல்வோனைக்கூறியது. "முனைப்படைத் தானை யரசோடுறினுங் - கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பி - னெருத்துவலிய வெறுழ்நோக் கிரலை - மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி - யுருத்த கடுஞ்சினத் தோடா மறவர்" என அகத்தும் வந்தது. "வயங்குமணி பொருத" என்னும் அகப்பாட்டினுள் "செருக்குவங் கொல்லோ நெஞ்சே சுரத்தெறிந் - ததர்சுட் டுண்ணு மணங்

குடைப் பகழி- கொடுவி லாடவர்'' எனச் சரத்தெறிதலும் அது. இங்ஙனம் பொதுவாதலிற் பொதுவியலாயிற்று. வேந்தரொடு பொருதலின் வழுவுமாயிற்று.

ஆ பெயர்த்துத் தருதலும்=வெட்சிமறவர் கொண்ட நிரையைக் குறுநிலமன்னராயினுங் காட்டகத்து வாழும் மறவராயினும் மீட்டுத்தருதலும்: உம். "ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயரா - திலைபுதை பெருங்காட்டுத் தலைக்கரந் திருந்த-வல்வினை மறவரொடுக்கங் காணாய் - செல்லல் செல்லல் சிறக்குநின் னுள்ள - முருகு மேம்பட்ட புலைத்தி போலத்-தாவுபு தெறிக்கு மான் மேற்- புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே." இது குறுநில மன்னர் நிரைமீட்டல் கண்டோர் கூறியது. "வளரத் தொடினும் வவ்வுபு திரிந்து - விளரி யுறுதருந் தீந்தொடை நினையாத் - தளரு நெஞ்சந் தலைஇ மனையோ-ளுளரும் கூந்த னோக்கி நோக்கிக்-களர்கள்ளிநீழற் கடவுள் வாழ்த்திப்-பசிபடு மருங்குலைக் கசிபுகைதொழாஅக்-காணலென் கொலலென வினவினை வருஉம்-பாண கேணமதி யாணரது நிலையே-புரவுத்தொடுத் துண்குவை யாயினு மிரவெழுந் - தெவ்வங் கொள்குவை யாயினு மிரண்டுங் - கையுள போலுங் கடிதண் மையவே - முன்னூர்ப் பூசலிற் றோன்றித் தன்னூர் - நெடுவெறி தழீஇய மீளி யாளர் - விடுகணை நீத்தந் துடிபுணை யாக - வென்றி தந்து தோன்றுகொளா விடுத்து - வையகம் புலம்ப வளைஇய பாம்பின - வைஎயிற் றுய்ந்த மதியின் மறவர் - கையகத் துய்ந்த கன்றுடைப் பல்லா - னிரையொடு வந்த வுரையனாகி - யுரிதனை யாவின மானத் தானே - யரிதுசெ லுலகிற் சென்றன னுடம்பே - கானச் சிற்றியாற் றருங்கரைக் காலுறக் - கம்பமொடு துளங்கிய விலக்கம் போல - வம்பொடு துளங்க யானைடொழிந் தன்றே - யுயிரிசை வெறுப்பத் தோன்றிப் பெயரே மடஞ்சான் மஞ்ஞை யணிமயிற் சூட்டி - யிடம்பிறர் கொள்ளாச சிறுநெறிப் - படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே." இதனுட் தன்னூரொன்றலிற் குறுநிலமன்னன் நிரைமீட்டுப் பட்ட நிலையைப் பாணர் கையற்றுக் கூறியது. ஏனைய வந்துழிக் காண்க.

இனிக் கண்டோரும் மறவருங் கூத்தரும் பாணரும் விறலியருங் கூறினும் அவர் தாங் கையற்றுக் கூறினும் அத்துறைப்பாற் படும். உம். "பெருங்களிற்றடியிற் றோன்றுமொருமகன்" எனவும் புறப்பாட்டினுட் கண்டோர் கையற்றுக் கூறியவாறு காண்க "விசும்புறநிவந்த" என்னும் அகப்பாட்டும் அது. இதனுள் "மறவர் காளா வுய்த்த" என வேந்துறு தொழில் அல்லாத

வெட்சித்திணையும் பொதுவியற் கரந்தைக்கண்ணே கொள்க, இஃது ஏழற்கும் பொதுவாகலின்.

தருதலென்ற மிகையானே நிரையல்லாத கோடலும் அத்துறைப்பாற்படும். "வலஞ்சுரிமராஅத்து" என்னுங் களிற்றியானைநிரையுட் "கறையடி மடப்பிடி கானத் தலறக்-களிற்றுக்கன் றொழித்த வுவகையர் கலிசிறந்து - கருங்கான் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து - பெரும்பொளி வெண்ணா ரழுந்துபடப் பூட்டி-நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்- நறவுநொடை நெல்லிற் புதவுமுதற் பிணிக்குங்- கல்லா விளையர் பெருமகன் புல்லி" என யானைக்கன்றைக் கவர்ந்தவாறு காண்க. இதுவும் வேத்தியலின், வழுவியவாறு காண்க.

வேந்தன் சீர் சால் சிறப்பு எடுத்து உரைத்தலும் = வேந்தற்கு உரிய புகழ் அமைந்த தலைமைகளை ஒருவற்கு உரியவாக அவன்றன் படையாளரும் பிறருங் கூறலும்: இதுவும் வழு, வேந்தற்குரிய புகழைப் பிறர்க்குக் கூறினமையின். "அத்தநண்ணிய நாடுகெழு பெருவிறல் - கைப்பொருள் யாதொன்றுமிலனே நச்சிக் - காணிய சென்ற விரவன் மாக்கள் - களிற்றொடு நெடுந்தேர் வேண்டினுங் கடல - வுப்போய் சாகாட்டுமணர் காட்டக் - கழிமுரி குன்றத் தற்றே - யெள்ளமை வின்றவனுள்ளிய பொருளே." இது புறம். படையாளர் கூற்று. இதற்கு முடியுடைவேந்தன் சிறப்பெடுத்துரைத்தலென்று கூறின் அது பொதுவியலிற் கூறலாகாதென்றுணர்க.

தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும் = தன்னிடத்துளதாகிய போர்த்தொழிலுண் முயற்சியாலே வஞ்சினங்களைத் தன்னொடுகூட்டிக் கூறலும்: உம். "தானால் விலங்காற்றணித்தாற் பிறன்வரைத்தால் - யானை யெறித லிளிவரவால்- யானை - யொருகை யுடைய தெறிவலோ யானு - மிருகை சுமந்து வாழ்வேன்" எனவரும். "பெருநீர் மேவற் றண்ணடை யெருமை - யிருமருப் புறமு நெடுமா நெற்றிற் - பைம்பய றுதிர்த்த கோதின் கோலணைக் - கன்றுடை மனையா துஞ்சுஞ் சீறூர்க்- கோளிவண் வேண்டேம் புரவே நாரி - நனைமுதிர் சாடி நறவின் வாழ்த்தித் - துறைநணி கெழீஇக் கம்பு ளீனுந் - தண்ணடை பெறதலு முரித்தே வைந்நுதி - நெடுவேல் பாய்ந்த மார்பின் - மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே." மடல்வன் போந்தைபோல் நிற்பலென நெடுமொழி தன்னொடு புணர்த்தவாறுகாண்க

நறும்பூங் கரந்தை - விரகறி யாளன் மரபிற் சூட்ட - நிரையிவட் டந்து" என்றவாறு காண்க.

அது அன்றி = அக் கரந்தையே அன்றி: காட்சி = கல்கெழு சுரத்திற் சென்று கற்காண்டலும், அதுகொணர்ந்து செய்வனசெய்து நாட்டிப், பின்னர்க் கற்காண்டலும் என இருவகையாம்: உம். "தாழி கவிப்பத் தவஞ்செய்வர் மண்ணுக - வாழிய நோற்றனை மாலைவரை - யாழிசூழ் - மண்டில மாற்று மறப்புகழோன் சீர்பொறிப்பக் - கண்டனை னின்மாட்டோர் கல்." இது கல் ஆராய நின்றார் காட்சி. "ஊர் நனியிறந்த பார்முதிர் பறந்தலை - யோங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீ - போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்து - பல்லான் கோவலர் படலை சூட்டக் - கல்லா யினையோ கடுமான் றோன்றல் - வானேறு புரையுநின் றணிழல் வாழ்க்கைப் - பரிசிலர் செல்வ மன்றியும் விரிதார்க் - கடும்பகட் டியானை வேந்த - ரொடுங்கா வென்றியு நின்னொடு செலவே." இது கோவலர் படலைசூட்ட என்றலிற் கடவுளாகியபின் கண்டது. "கல்லாயு மெற்றெரிந்து காண்டற் கெளிவந்த - வல்லாண் படலைக்கு வம்மினோ - வெல்புகழாற் - சீரியல் பாடல் சிதையாமல் யாம்பாடத் - தூரிய மெல்லாந் தொட."' என்பதும் அது.

கால்கோள் = கல் அறுத்து இட, அதற்குக் கால்கோடலும், நாட்டிய பின்னர் அவனை ஆண்டு உருதற்குக் கால்கோடலும் என இருவகையாம். உம். "வரையறை சூழ்கி - கைகை மாத்தாட் பெருங்கல் - வரையறை செய்யிய வம்மோ - வரையறை - வாராப் பெரும்புகழ் வன்கல் விடலைக்கு - மோரறூஉற் செய்வ துடைத்து." வரையறைசெய்யிய வம்மோ என ஒருவனைத் தெய்வமாக்கி நிறுத்துதற்கு இடங்கோர் பட்டமையானும் அவ்விடத்துக் காலகோடலானும் கால்கோள். "கான் புறால் யாத்துக் கடிகமழ நீராட்டி - பூப்பலி பெய்து புகைகொளீஇ - மீப்படர்ந்த - காளை நடுகற் சிறப்பயர்ந்து சால்கொணமி - லூனை வரக்கடவகாள." இது நட்டுக்கால் கொண்டது. "இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப் - புடைநடு கல்லி னாட்பலி யூட்டி - நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇ - மங்குன் மாப்புகை மறுகுடன் கமழு - மருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற் - றரவுறை புற்றத் தற்றே நாளும் - புரவலர் புன்கணோக்கா திரவலர் - கருதா தீயும்

வண்மை-யுளாசா னெடுந்தகை யோம்பு மூரோ." இதன்கண்ணும் அது வந்தவாறு காண்க.

நீர்ப்படை = கண்டு கால்கொண்ட கல்லினை நீர்ப்படுத்துத் தூய்மைசெய்தலும், பின்னர்ப் பெயரும் பீடும் எழுதி நாட்டிய வழி நீராட்டுதலுமென இருவகையவாம்: உம். "வாளமர் வீழ்ந்த மறவோன்க லீர்த்தொழுக்கிக் - கேளி ரடையக் கிளர்ந்தெழுந்து - நீள்விசும்பிற் - கார்ப்படுத்த வல்லேறு போலக் கழலோன்க - னீர்ப்படுத்தார் கண்ணீரினின்று." இது நீர்ப்படை. "பல்லா பெயர்த்து நல்வழிப் படர்ந்தோர் - கல்சொரிந் தாட்டிய நீரோ தொல்லை - வான்வழங்கு நீரினுந் தூய்தே யதனுற் - கண்ணீ ரருவியுங் கழீஇத்-தெண்ணீ ராடுமின் தீர்த்தமா யதுவே." இது நாட்டி நீராடியது.

நடுகல் = கல்லினை நடுதலும், அக்கல்லின்கண் மறவனை நடுதலுமென விருவகையாம்: உம். "சீர்த்த துகளிற்றுய்த் தெய்வச் சிறப்பெய்த - நீர்ப்படுத் தற்கு நிலைகுறித்துப் - போர்க்களத்து- மன்னட்ட வென்றி மறவோன் பெயர்பொறித்துக் - கன்னட்டார் கல்சூழ் கடத்து." இது கல் நாட்டியது. "கோள்வாய்த்த சீயம்போற் கொற்றவர்தம் மாவெறிந்து - வாள்வாய்த்து வீழ்ந்த மறவலோய் - நாள்வாய்த் - திடைகொள லின்றி யெழுத்துடைக் கல்வாய் - மடைகொளல் வேண்டு மகிழ்ந்து." இது மறவனை நாட்டியது.

சீர்த்தகு மரபிற் பெரும்படை = அவன்செய்த புகழைத் தரும்படி பொறித்தலும், அக்கல்லைத் தெய்வமாக்கி அதற்குப் பெருஞ்சிறப்புக்களைப் படைத்தலுமென இருவகையாம்: உம். "கைவினை மாக்கள் கலுழிக்க ணைக்கிழந்து - செய்வினை வாய்ப்பவே செய்தமைத்தார் - மொய்போர் - மறவர் பிணம்பிறக்கி வாள் வாய்த்து வீழ்ந்தோன் - பிறபெயர்சூழ் கன்மேற் பெரிது." இது பெயர்முதலியன பொறித்தது. "அன்றுகொ ளாபெயர்த் தாரமரில் வீழ்ந்தோன்கற் - கின்றுகொள் பல்லா னினமெல்லாங்- குன்றுமற் - செய்மினோ சீர்ப்பச் சிறப்பாகத் தீபங்கள் - வைமினோ பீடம் வகுத்து." இது அதற்குச் சிறப்புப் படைத்தது.

வாழ்த்தல் = கால்கொள்ளுங்காற் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்து வாழ்த்தலும், பின்னர் நடப்பட்ட கல்லினைத் தெய்வமாக்கி வாழ்த்தலுமென இருவகையவாகும்: உம். "ஆவாழ்

குழக்கன்றாய் வித்துக் களத்தவிந்த - நீவாழி வாழிய நின்னடுகே- லோவாத - விற்கோட்ட நீண்டதோள் வேந்தன் புலிபொறித்த- பொற்கோட் டிமயமே போன்று.'' இது கல்வாழ்த்து. ''பெருங் களிற்றடியில்'' என்னும் புறப்பாட்டிற் தோழர் அதனைக் கழிந லோம்புமதி என வாழ்த்தியவாறு காண்க.

என்று இருமூன்றுவகையிற் கல்லொடு புணர = என்று முன னர்க் கூறப்பட்ட அறுவகை இலக்கணத்தையுடைய கல்லொடு பின்னரும் அறுவகை இலக்கணத்தையுடைய கற்கூட: சொல்லப் பட்ட = இக்கூறப்பட்ட பொதுவியல்: ஏழூமூன்று துறைத்து = இருபத்தொரு துறையினையுடைத்து.—எ - று. ஆரமரோட்டன் முதலிய எழுதுறைக்குரிய மரபினையுடைய காந்தையுங் காந்தை யேயன்றி முற்கூறிய கல்லோடே பிற்கூறிய கல்லுக் கூடக் காந் தளும் பூவும் வள்ளியுங் கழனிலையும் உன்னநிலையும் பூவைநிலை யும் உளப்பட இச்சொல்லப்பட்ட பொதுவியல் இருபத்தொரு துறையினையுடைத்தெனக் கொள்க. மாயோனிறம்போலும் பூவை ப்பூநிறமென்று பொருவுதல் பூவைநிலையென்றால் ஏனையோர் நிற த்தொடு பொருந்தும் பூக்களையும் பொருவுதல் கூறல்வேண்டும், ஆசிரியர் அவைகூறாமையின் அதுபுலனெறிவழக்கமன்மையுணர்க. இதனுட் காந்தைப்பகுதி ஏழும் வேறுகூறினார், காட்டகத்து மறவர்க்குங் குறுநிலமன்னர்க்கும் அரசன்படையாளர் தாமே செய்தற்கும் உரிமையின். கற்பகுதி வேத்தியற்புறத்திணைக்கும் பொதுவாகலின் வேறுகூறினார். ஏனைய அகத்திற்கும் புறத்திற் கும் பொதுவாகலின் வேறுகூறினார்.

இனித் துறையென்றதனால் ஒன்றும் பலவாம். அவை:— கற்காணச்சேறலும் இடைப்புலத்துச் சொல்லுவனவுங் கண்டுழி யிரங்குவனவுங் கையறுநிலையும் பாணர்கூத்தர் முதலியோர்க் குரைப்பனவும் அவர் தமக்குரைப்பனவும் போல்வன கற்காண்ட லின் பகுதியாய் அடங்கும்; கால்கொள்ளுங் காலத்து மாலையும் மதுவுஞ் சாந்தும் முதலியனகொடுத்தலும் அனையோர்க்கு இனை யகற் தகுமென்றலுந் தமர் பரிந்திரங்கலும் முதலியன கால்கோ ளின் பகுதியாய் அடங்கும்; நீர்ப்படுக்குங்கால் ஈர்த்துக்கொண் டொழுக்கலும் ஏற்றிய கடத்தினின்று இழிந்தவழி ஆர்த்தலும் அவர்தாயக்கூறலும் முதலியன நீர்ப்படையாய் அடங்கும்; நடு தற்கண் மடையும் மலரும் மதுவும் முதலியன கொடுத்துப் பீலித்தொடையலும் மாலையும் நாற்றிப் பல்லியம் இயம்ப விழவுச்

செய்யுஞ் சிறப்பெல்லாம் நடுதலாய் அடங்கும்; பெயரும் பீடும் எழுதுங்காலும் இப்பகுதிகள்கொள்க; நாட்டப்படுங் கல்லிற்குக் கோயிலும் மதிலும் வாயிலும் ஏனைச்சிறப்புக்களும் படைத்தல் படைப்பகுதியாய் அடங்கும்; வாழ்த்தற்கண்ணும் இதுதான் நெடிதுவாழ்கவெனவும் இதன்கண்ணே அவனின்று நிலவுகவென வும் பிறவுங் கூறுவனவெல்லாம் வாழ்த்துதலாய் அடங்கும்; ஏனையவற்றிற்கும் இவ்வாறே துறைப்பகுதிகூறிக்கொளக.

இனிப் "பரலுடை மருங்கிற் பதுக்கை" என்னும் புறப் பாட்டினுள் "அணிமயிற்பீலிசூட்டிப் பெயர்பொறித்தினிதினட் டனரோ கல்லும்" எனக் கன்னாட்டுதல் பெரும்படைக்குப்பின்னு கக் கூறிற்றாலெனின், நீர்ப்படுத்தபின்னர்க் கற்படுத்துப் பெயர் பொறித்துநாட்டுதல் காட்டு முறைமையென்பது சீர்த்தகு மர பின் என்பதனாற்கொள்க. "பெயரும் பீடு மெழுதி யதர்தொறும் பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" என அகத்திற்கும் வருதலிற் பொதுவியலாயிற்று: இவை ஒருசெய்யுட்கண் ஒன்றும் பல வும் வருதலும் அகத்தின்கண் வருதலுஞ் சுட்டி யொருவர்பெயர் கோடலுங் கொள்ளாமையும் உடையவென்று உணர்க. இப் பொதுவியலின்பின் வஞ்சி வைத்தார் வஞ்சிக்கண்ணும் பொது வியல்பாய் வருவனவுள என்றற்கு. அது "வேந்துவினைமுடித்த நான்" என்னும் அகப்பாட்டினுட் சுட்டி யொருவர்பெயர்கூறு வஞ்சி பொதுவியலாய் வந்தவாற்றாற் காண்க. (ரு)

சுக. வஞ்சி தானே முல்லையது புறனே.

இது தம்முண் மாறுபாடு கருதி வெட்சித்திணையை நிகழ்த் திய இருபெருவேந்தருட் டோற்றோனொருவன் ஒருவன்மேற் செல்லும் வஞ்சித்திணை அகத்திணையுள் இன்னதற்குப் புறனு மென்கின்றது: வஞ்சியென்றது ஒருவர்மேலொருவர்சேறலை: அதற்கு வஞ்சி சூடிச் சேறலும் உலகியல். (இ-ள்.) வஞ்சி தா னே = வஞ்சியெனப்பட்டபுறத்திணை; முல்லையது புறனே = முல் லையெனப்பட்ட அகத்திணைக்குப்புறனும்.—எ-று. ஏனை உழிஞை முதலியவற்றினின்று பிரித்தலின் ஏகாரம் பிரிநிலை. பாடாண் டிணைக்குப் பிரித்தலின்மையிற் பாடாண்பகுதி கைக்கிளைப்புற னே என்ப. ஏனைய பிரித்துக்கூறுவர். முதலெனப்பட்ட காடு றையுலகமுங் கார்காலமும் அந்நிலத்திற்கேற்ற கருப்பொருளும் அரசர் பாசறைக்கட் டலைவியைப்பிரிந்து இருத்தலும் அவன்ற

பொருளின் றுய்த்த பேராண் பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
வொருவன் றாங்கிய பெருமை யானும்
பிண்ட மேய பெருஞ்சோற்று நிலையும்
வென்றோர் விளக்கமுந் தோற்றோர் தேய்வுங்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையு
மழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பிற் றுறைபதின் மூன்றே.

இது முற்கூறிய வஞ்சித்திணை பதின்மூன்று துறைத்தென்கின்றது. (இ-ள்.) இயங்கு படை அரவம் = இயங்குகின்ற படையெழுச்சியின் ஆர்ப்பரவமும்: உம். "விண்ணசைஇச் செல்கின்ற வேலினையா ரார்ப்பெடுப்ப - மண்ணசைஇச் செல்கின்றான் வாள்வேந்த - னெண்ண - மொருபாற் படாதார்க்கண் டொன்றூர்த மூள்ள - மிருபாற் படுவ தேவன்." "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்" என்னும் புறப்பாட்டும் அது. "இறும்பூதாற் பெரிதே கொடித்தே ரண்ணல் - வடிமணி யணைத்த பணைமரு ணோன்றாட் - கடிமரத் தாற்களி றணைத்து நெடுநீர்த்துறை - கலங்க மூழ்த் திறுத்த வியன்றா னையொடு - புலங்கெட நெரிதரும் வரம்பில் வெள்ளம் - வாண்மதி லாக வேன்மிளை யுயிர்த்து - வில்விசை யுமிழ்ந்த வைமுள் ளம்பிற் - செவ்வா யெஃகம் வளைஇய வகழிற் - காரிடி யுருமி னுரறு முரசிற் - கால்வழங் காரெயில் கருதிற் - போரொதிர் வேந்தர் பொருஉப நின்னே." இப்பதிற்றுப் பத்தும் அது. "போர்ப்படை யார்ப்பப் பொடியா யெழுமரோ - பார்ப்புர வென்னுன்கொல் பார்வேந்த - னூர்ப்புறத்து - நில்லாத தானை நிலனெளிய நீளிடைப் - புல்லார்மேற் செல்லும் பொழுது." இது எதிர்செல்வோன் படையரவம்.

எரிபரந்து எடுத்தல் = இருவகைப் படையாளரும் இருவகைப் பகைப்புலத்துப் பரந்துசென்று எரியை எடுத்துச் சுடுதலும்: இவ்விரண்டற்கும் உம்மை விரிக்க. உம்: "வினைமாட்சிய விரைபுரவியொடு - மழையுருவின தோல்பரப்பி - முனைமுருங்கத் தலைச்சென்றவர் - விளைவயல் கவர்பூட்டி - மனைமரம் விறகாகக் - கடிதுறை நீர்க்களிறு - படீஇயெல்லுப் படவிட்ட - சுடுதீவிளக்கு - செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப் - புலங்கெட

விறுக்கும் வரம்பி ருனே." எனவுங், "களிறு கடைஇய தாட்கழ லுரீஇய - திருந்தடிக் கணைக்கால் பொருதகவி வண்கையால்" என் னும்புறப்பாட்டினுள் "எல்லையு மிரவு மெண்ணாய் பகைவ - ரூர் சுடு விளக்கத் தழூவிளிக் கம்பலைக் - கொள்ளை மேவலை யாகலின்" எனவும் வரும். இவை கொற்றவள்ளைப் பொருண்மையவேனும் உட்பகுதி பலவுந் துறையாய் வருதலின் எரிபரந்தெடுத்தற்கும் உதாரணமாயின.

வியங்க லெய்திய பெருமையானும் = ஒருவர் ஒருவர்மேற் செல்லுங்காற் பிறவேந்தர் தத்தந் தானையோடு அவர்க்குத் துணை யாயவழி அவர் விளக்கமுற்ற பெருமையும்: உம். "மேற்செல் லுங் காலைத் துணைவந்த வேந்தர்தன் - பாற்செல்லச் செல்லும் பரிசினு - னூற்கடல்சூழ் - மண்மகிழுங் காட்சியான் மீன்பூத்த வானத்து - வெண்மதிபோன் மேம்பட்டான் வேந்து" எனவரும். இஃது இருவர்க்கும் பொது.

கொடுத்தல் எய்திய கொடைமையானும் = மேற்செல்லும் வேந்தர் தத்தம் படையாளர்க்குப் படைக்கலமுதலியன கொடுத் தலும் பரிசிலர்க்கு அளித்தலும் ஆகிய கொடுத்தலைப் பொருந்திய கொடைத்தொழிலும்: உம். வேத்தமர் செய்தற்கு மேற்செல் வான் மீண்டுவந் - தேத்துநர்க் கீதுமென் றெண்ணுமோ - பாத் தி - யுடைக்கலி மான்றே ருடனீந்தா னீந்த - படைக்கலத்திற் சாலப் பல." எனவரும். "சிறுஅர் துடியர் பாடு வன்மகாஅர் - தூவெள் ளறுவை மாயோற் குறுகி - யிரும்புட் பூச லோம்புமின் யானும் - விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவ - னெம்போற், பெருவிதுப் புறுக வேந்தே கொன்னுஞ் - சார்தல் வெய்யோற்குத் தன்றலை மணிமருண் - மாலை சூட்டி யவன்றலை - யொருகாழ் மாலை தான்மலைந் தனனே." என்பதும் அது.

அடுத்தூர்ந்து அட்ட கொற்றத்தானும் = எடுத்துச் சென்ற இருபெருவேந்தர் படையாளர் வரவறியாமல் இரவும் பக லும் பலகாலும் ஏறி அந்நாட்டைக் காவல்புரிந்தோரைக் கொன்ற கொற்றமும்: உம். "நீணில வேந்தர் காட்செல் விருப்பத்துத் - தோன்சுமந் திருந்த வாற்று ளாள்வினைக் - கொண்டி மாக்க ளுண்டியின் முனிந்து - முனைப்புல மருங்கி னினைப்பருஞ் செய் வினை - வென்றியது முடித்தனர் மாதோ - யாங்குள கொல்லினி பூங்குப்பெறுஞ் செருவே." எனவரும். "யாண்டு தலைப்பெயர வே ண்டுபுலத் திறுத்து - முனைபெரி பரப்பிய துன்னருஞ் சீற்ற

மொடு - மழைதவழ்பு தலைஇய மதின்மர முருக்கி - நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம் - பரந்தாடு வழங்குவழி மனமருங் கறுப்பச் - கொடிவிடு குரூஉப்புகை பிசிரக் கால்பொர - வழல்கவர் மருங்கி னுருவறக் கெடுத்துத் - தொல்கவி னழிந்த கண்ணகன் வைப்பின் - வெண்பூ வேளையொடு பைஞ்சுரை கலித்துப் - பீரிவர்பு பரந்த நீரறு நிரைமுதற் - சிவந்த காந்தண் முதல்சிதை மூதிற் - புலவுவில் லுழவிற் புல்லாள் வழங்கும் - புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பி - னறியா மையின் மறந்துதுப் பெதிர்ந்த நின் - பகைவர் நாடுங் கண்டுவந் திசினே - கடலவுங் கல்லவும் யாற்றவும் பிறவும் - வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு - விழவறு பறியா முழவிமிழ் மூதூர." என்னும் பதிற்றுப்பத்து அறிவுகூறிய இடம் அப்பாற்படும்.

மாராயம் பெற்ற நெடுமொழியானும் = வேந்தனாற் சிறப்பெய்திய அதனாற் றானேயாயினும் பிறரேயாயினுங் கூறும் மீக்கூற்றுச் சொல்லும்: சிறப்பாவன ஏனாதி காவிதி முதலிய பட்டங்களும் நாடும் ஊரும் முதலியனவும் பெறுதலுமாம். முற்கூறியது படைவேண்டியவாறு செய்க என்றது. இஃது அப்படைகளு ஒருவனைத் தலைவனாக்கி அவன்கூறியவே செய்க அப்படை என்று வரையறை செய்தது: உம்: " போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக் - கார்க்கடல் பெற்ற கரையன்றோ - போர்கெல்லாந் - தானாதி யாகிய தாரவேந்தன் மோதிரஞ்சே - ரேனாதிப் பட்டத் திவன்." பிறர் கூறிய நெடுமொழி. " துடியெறியும் புலையா வெறிகோல் கொள்ளு - மிழிசின் கால மாரியி னம்பு - தைப்பினும் வயற்கெண்டை யினவேல் பிறழினும் - பொலம்புனை யோடை யண்ணல் யானை - யிலங்குவான் மருப்பி னுதிமடுத் தூன்றினு - மோடல் செல்லாப் பீடுடை யாளர - நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை - நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளுந் - தண்ணடை பெறுதல் யாவது படினே - மாசின் மகளிர் மன்னன் கன்று - முயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால் - வம்ப வேந்தன் றானை - யிம்பர் நின்றுங் காண்டிரோ வரவே." இது தண்ணடை பெற்று நின்றது. இதிற் சுவர்க்கம் பெறுதல் நன்றென்று நெடுமொழி கூறியது. போர்க்களம் புக்கு நெடுமொழி கூறலும் ஈண்டு அடக்குக.

பொருளின்று உய்த்த பேராண் பக்கமும் = பகைவேந்தனை பொருளாக மதியாது படையினைச் செலுத்தின பேராண்

மை செய்யும் பகுதியும்: உம். "மெய்ம்மலி மனத்தி னம்மெதிர் நின்றோ - னடர்வினைப் பொலிந்த சுடர்விடு பாண்டிற் - கையிகந் தமருந் தையணற் புரவித் - தலையவிழ் கண்ணி யிளையோன் சீறின் - விண்ணுயர் நெடுவரை வீழ்புயல் கடுப்பத் - தண்ணறுங் கடாஅ மிழிதரு வெண்கோட்-டண்ணல் யானை யெறிதலொன்றோ- மெய்ம்மலி யுவகைய னம்மருங்கு வருதல் - கடியமை கள்ளுண் கைவல காட்சித் - துடியனெய் துன்க ணுக்கிச் சிறிய - குலை மொழி மின்னுச்சிதர்ந் தனையதன் - வேறிரித் திட்டு நகுதலு நகு மே." இது அதிகமானுற் சிறப்பெய்திய பெரும்பாக்கனை மதி யாது சேரமான் முனைப்படை நின்றானைக் கண்டு அரிசில்கிழார் கூறியது. "பல்சான் றீரே பல்சான் றீரே - குமரி மகளிர் கூந்தல் புரைய - வமரி னிட்ட வருமுள் வேலிக் - கல்லென் பாசறைப் பல்சான் றீரே - முரசு முழங்கு தானைநும் மரசு - மோம் புமி னொளிறேந்து மருப்பினுங் களிறும் - போற்றுமின் னெனை நாட் டாங்குநும் போரே - யனைநா ளெறியா றெறிதல் யாவண- தெறிந்தோ ரெதிர்சென் றெறிதலுஞ் செல்லா - னதனு லறிந் தோர் யாரவன் கண்ணிய - பொருளே பலமென் றிகழ்தலோம் புமி - னுதுக்கா ணிலனளப் பன்ன நில்லாக் குறுநெறி - வண்ப ரிப் புரவிப் பண்புபா ராட்டி - வெல்லிடைப் படர்தந் தோனே கல்லென் - வேந்தூர் யானைக் கல்ல - தேந்துவன் போலான்ற னிலங்கிலை வேலே." இதுவுமது.

வருவிசைப் புனலைக்கற்சிறை போல ஒருவன் தாங்கிய பெருமையானும் = தன்படை நிலையாற்றாது பெயர்ந்தவழி விசை யோடும் வரும் பெருநீரைக் கல்லணை தாங்கினாற்போலத் தன் மேல் வரும் படையினைத் தானே தடுத்த பெருமையும்: உம்: "கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன் - னூர்ப்பறழி யேர்தரு தோளோக்கித் - தாரப்பின்னர் - ஞாட்பினுள் யானைக் கணநோக்கி யாளைப்பின் - றேர்க்குழா நோக்கித்தன் மாநோக்கிக்- கூர்த்த - கணைவரவு நோக்கித்தன் வேனோக்கிப் பின்னைக் - கிளை யை நோக்கி நகும்." எனவரும். இது பொன்முடியார் ஆங்க வனைக் கண்டு கூறியது. "வேர்துவைந் தாலை முனைகெட வெ றிதலின் - னேந்துவாள் வலத்த னொருவ னாகித் - தன்னிறந்து வாரா மை விலக்கலிற் பெருங்கடற் - காழி யனையன் மாதோ வென் றும் - பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரி - புரவிற் காற்றாச் சீறூர்த் - தொன்மை சுட்டிய வண்மை யோனே." என்பதும்

னோன் யாமத்தும் பள்ளி கொள்ளான் - சிலரொடு திரிதரு வேந்தன் - பலரொடு முரணிய பாசறைத் தொழிலே." இதுவும் அது.

கழிபெருஞ் சிறப்பிற் றுறை பதின்மூன்றே=மிகப்பெருஞ் சிறப்பினையுடையவாகிய துறை பதின்மூன்றும்.—எ-று. வென்றோர்விளக்கம் முதலிய மூன்றும் ஒழிந்தனவெல்லாம் இருவர்க்கும் பொதுவாய்வருமென்பது தோன்றக் கழிபெருஞ்சிறப்பென்றார். இனி இயங்குபடையரவமெனவே இயங்காத வின்ஞாணொலி முதலியனவுங் கொள்க. இத்திணைக்குப் பலபொருள் ஒருங்கு வந்து ஒருதுறைப்படுதலுங்கொள்க. அவை;—கொற்றவைநிலையும் குடைநாட்கோளும் வாணாட்கோளும் படையெழுச்சி கண்டோர் கூறுவனவும் பகைப்புலத்தார் இகழ்வும் இவைபோல்வன பிறவும் இயங்குபடையரவமாய் அடங்கும். நிரைகோடற்கு ஏவிய அரசருள் நிரைகொண்டோர்க்கும் நிரைகொள்ளப்பட்டோர்க்கும் விரைந்து ஏகவேண்டுதலிற் குடைநாட்கோளும் வாணாட்கோளும் இன்றியமையாதன அன்மையின் ஈண்டுக்கூறாராயினார். அவை உழிஞைக்குக்கூறுவது அதற்கு இன்றியமையாமையின். இனித் துணைவந்த வேந்தருந் தாமும் பொலிவெய்திய பாசறைநிலை கூறலும் அவர் வேற்றுப் புலத்திறுத்தலின் ஆண்டுவாழ்வோர் பூசலிழைத்தலின் இரிந்தோடப் புக்கிருந்த நல்லிசைவஞ்சி முதலியனவும் வயங்கலெய்திய பெருமைப்பாற்படும். துணைவேண்டாச் செருவென்றி நாடகவழக்கு; துணைவேண்டுதல் உலகியல்வழக்கு. "நீயே புறவினல்லல் லன்றியும் பிறவும்" என்னும் புறப்பாட்டும் "வள்ளியோர்ப்படர்ந்த" என்னும் புறப்பாட்டும் முதலியன துணைவஞ்சி என்பார்க்கு அவை மேற்செலவின்கண் அடங்காமையிற் பாடாண்டிணையெனப்படுமென்றுரைக்க. இனி மேற்செல்வான் மீண்டு வந்து பரிசில் தருமென்றல் வேத்தியலன்றாகலிற் பரிசிலர்க்குக் கொடுத்தலும் படைக்கலமுதலியவற்றோடு கூறினார். இனிக் கடிமரந்தடிதலுங்களிறும் மாவுந் துறைப்படிவனவற்றைக் கோறலும் புறஞ்சேரியைச்சுடுதலும் முதலியனவும் அடுத்தூர்ந்தட்ட கொற்றத்தின்பாற்படும். அது கருவூரிடைச் சேரமான் யானையெறிந்தாற்போல்வன. இனிப் புண்பட்டோரை முன்னர்ச்செய்த படைவலங்கூறி அரசராயினும் உழையராயினும் புகழ்வனபோல்வனவுந் தழிஞ்சிப்பாற்படும். இதனை முதுமொழிவஞ்சி என்பர். ஆண்டுக் கொடுத்தலுமுற்கூறிய கொடையாம். இத்தழிஞ்சியை அழியுநர் புறக்கொடை அயில்வாளோச்சாமையினெனின் அது ஒருவன்றாங்கிய பெருமைப்பாற்படுமென்றுணர்க. இச்சூத்திரத்து

ஆன் எல்லாம் இடைச்சொல். இது செவ்வெண்ணினும்மை எண்ணினை இடையிட்டுக்கொண்டது. இனி ஏனையவற்றிற்கும் ஆன் உருபுகொடுத்து அதற்கேற்பப் பொருள்கூறலும் ஒன்று. (அ)

௬௪. உழிஞை தானே மருதத்துப் புறனே.

இது உழிஞைத்திணை அகத்திணையுண் மருதத்திற்குப் புறமாமென்கின்றது. (இ-ள்.) உழிஞை தானே = உழிஞையென்று கூறப்பட்ட புறத்திணை: மருதத்துப் புறனே = மருதமென்று கூறப்பட்ட அகத்திணைக்குப் புறனும்.—ஏ-று. இருபெருவேந்தர் தம்முண் மாறுகொண்டவழி எதிர்செலற்காற்றாது போய் மதிலகத்திருந்த வேந்தன் மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்ததாகலானும், அம்மதிலை முற்றுவோனும் அந்நிலத்திருத்தலானும், ஒருவன் வாயில்வேண்டத் திறவாது அடைத்திருந்த ஒப்புமையானும், உள்ளிருந்தவனும் புறப்பட விரும்புதலானும், மருதம்போல் இதற்கும் பெரும்பொழுது வரைவின்மையானுஞ், சிறுபொழுதும் விடியற்காலமே போர்செய்தற்குக் காலமாதலானும் உழிஞை மருதத்திற்குப் புறனாயிற்று. மருதநிலத்து மதிலாதல் "அகனுடு புக்கவ ரருப்பம் வெளவி" யெனப் புறப்பாட்டிற் கூறியவாற்றானும், "பிலங்கு திர்க்கழனி நாப்ப ணேமுற் - றுணங்க லாழியிற்றோன்ற மோரெயின் மன்னன்" என்றதனானுங் "கொளற்கரிதாய்க கொண்டகூழத் தாகி யகத்தார்- நிலைக்கெளிதா நீர தரண்." என்றதனானுமுணர்க. மற்று மேற்சென்றானை வஞ்சிவேந்தன என்னுமெனின் அது இருவருந் தத்தம் எல்லைக்கண் எதிர்சென்றூட்டப்பொன்றலின் வஞ்சியாகாதாயிற்று. (க)

௬௫. முழுமுத லரண முற்றலுங் கோடலு
மனைநெறி மரபிற் றாகு மென்ப.

இது மேற்கூறிய உழிஞைத்திணையது பொதுவிலக்கணம் உணர்த்துகின்றது. (இ-ள்.) முழுமுதல அரணம் = வேற்றுவேந்தன் குலத்துக்கெல்லாம் எஞ்சாது முதலாய் வருகின்ற முழுஅரணை: முற்றலும் கோடலும் = சென்ற வேந்தன் வளைத்தலும் இருந்த வேந்தன் கைக்கொண்டு காத்தலுமாகிய: அனைநெறி மரபிற்று ஆகும் என்ப = இரண்டு வழியாகிய இலக்கணத்தை உடைத்து அவ்வுழிஞைத்திணை என்றுகூறுவர் புலவர்.—ஏ-று. முழுவரணாவது, மலையுங் காடும் நீருமல்லாத அகநாட்டுச் செய்த அருமதில். அது வஞ்சனை பலவும் வாய்த்துத், தோட்டி முண் முதலி

யன பதித்த காவற்காடும் அதனுள்ளே இடங்கர் முதலியன உள்ளுடைத்தாகிய கிடங்கும் புறஞ்சூழ்ந்து, யவனர் இயற்றிய பலபொறிகளு மேனைப் பொறிகளும் பதணமும் மெய்ப்புழைஞாயிலும் ஏனைய பிறவும் அமைந்து, எழுவுஞ் சீப்பு முதலியவற்றால் வழுவின்றமைந்த வாயிற் கோபுரமும் பிறவெந்திரங்களும் பொருந்த இயற்றப்பட்டதாம். இனி மலையரணும் நிலவரணுஞ் சென்று சூழ்ந்து நேர்தலில்லாது வார்ந்து அமைந்தனவும் இடத்தியற்றிய மதில்போல் வடிச்சிலம்பின் அரணமைந்தனவும் மீதிருந்துகணை சொரியுமிடமும் பிறவெந்திரங்களும் அமைந்தனவும் அன்றிக் காட்டரணும் நீரரணும் அவ்வாறு வேண்டுவனவும் அமைந்தனவாம். இங்ஙனம் அடைத்திருத்தலும் அவனைச்சூழ்ந்தழித்தலுங் கலியூழிதோறும் பிறந்தன சிறப்பில்லா அரசியலாதலின் இவை வஞ்சமுடைத்தாயிற்று. சிறப்புடை அரசியலாவன மடிந்த உள்ளத்தோனையும் மகப்பெறுதோனையும் மயிர்குலைந்தோனையும் அடிபிறக்கிட்டோனையும் பெண்பெயரோனையும் படையிழந்தோனையும் ஒத்தபடையெடாதோனையும் பிறவும் இத்தன்மையுடையோரையுங் கொல்லாது விடுதலுங் கூறிப்பொருதலும் முதலியனவாம். இனி ஆகுமென்றதனன் எதிர்சென்ற வேந்தன் பொருது தோற்றுச் சென்று அடைத்திருத்தலும் உழிஞையாம். மற்றைவேந்தன் வலியாது மீளில் அவனடைத்தது உழிஞையாகாதென்றுணர்க. (கO)

கசு. அதுவே தானு மிருநால் வகைத்தே.

இது முற்கூறிய முற்றலுங் கோடலும் ஒருவன் தொழிலன்றென்பதூஉம் முற்கூறியபோல் ஒருதுறை இருவர்க்கு முரியவாகாது, ஒருவர்க்கு நான்குநான்காக எட்டாமென்பதூஉங் கூறுகின்றது. (இ-ள்.) அதுவே தானும் = அவ்வுழிஞைத்துறைதானும்: இருநால் வகைத்து = மதில் முற்றிய வேந்தன் கூறு நான்கும் அகத்தோன்கூறு நான்குமென எட்டுவகைத்து.—எ-று அது மேற்கூறுப.

கள. கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமு
முள்ளிய து முடிக்கும் வேந்தனது சிறப்புந்
தொல்லெயிற் கிவர்தலுந் தோலின் பெருக்கமு
மகத்தோன் செல்வமு மன்றி முரணிய
புறத்தோ னணங்கிய பக்கமுந் திறப்பட
வொருதான் மண்டிய குறுமையு முடன்றோர்

வருபகை பேணா ராரெயி லுளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே.

இது முற்கூறிய நாலிருதுறைக்கும் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது. (இ-ள்.) கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும் = பகைவர் நாட்டினைத் தான் கொள்வதற்கு முன்னேயுங் கொண்டானபோல வேண்டியோர்க்குக் கொடுத்தலைக்குறித்த வெற்றியும்: தன்னை இகழ்ந்தோரையுந் தான் இகழ்ந்தோரையுங் கொள்ளாரென்ப உம். "மாறறுப் புலந்தோன்று மண்டில மாக்கள்சொல - வேறுபுல வேந்தர் வேலவேந்தர்க் - கேற்ற - படையொலியிற் பாணொலி பலகினரு லொனனு- ருடையன தாம் பெற் றுவந்து." எனவரும் "கழிந்தது பொழிந்தென" என்னும் புறப்பாட்டினுள் "ஒன்னா ராரெயி லவர்கட் டாகவு - நுமதெனப் பாண்கட னிறுக்கும் வள்ளியோய்" என்பதும் அது. "ஆனுவினை யடுபோர்" என்னும் புறப்பாட்டும் அது. இராமன் இலங்கை கொள்வதன்முன் வீடணற்குக் கொடுத்த துறையும் அது.

உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும் = அவ்வாறு குறித்த குறிப்பினை முடிக்கின்ற வேந்தனது சிறப்பினை அவன்படைத் தலைவன் முதலியோரும் வேற்று வேந்தன்பாற் றூதுசெல்வோரும் எடுத்துரைத்தலும்: உம். "மழுவாண் முனைமொய் மதிலானகழ்தூர்ந் - தெழுவாள னேறறுண் டெல்லா - மிழுமென - மட்டவிழ் கண்ணி மழவேந்தன் சீற்றத்தீ - விடடெரியா விட்டமிகை" எனவரும், "மலையகழக்குவனே கடறூர்க்குவனே - வான் வீழ்க்குவனே வளிமாறறுவனெனத் - தானமுனணிய துறைபோகலின்" என்பதும் அது, மாறறூர் மதிலும் அகமுஞ் சுட்டிக்கூறலின். "அடுநை யாயினும் விடுநை யாயினும் - நீயளந் தறிதி நின்புரை மைவார் - கோற்செறி யரிச்சிலம்பிற் குறுந்தொடி மகளிர் - பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடுந் - தண்ணார் பொருநை வெண்மணற் சிதையக் - கருங்கைக் கொல்ல னரஞ்செய் நெடுவாய - நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து - வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறுங் - கடிமரந் தடியு மோசை தன்னூர் - நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப - வாங்கினி திருந்த வேந்தனொ டீங்குநின் - சிலைத்தார் முரசங் கறங்க - மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே." இது புறத்துழிஞையோன்கட் டூதன் அவன்சிறப்பு எடுத்துரைத்தது. "வயலைக் கொடியின் வாடிய மருங்கு - லுயவ லூர்திப் பயலைப் பார்ப்பா - னெல்லி வந்து நின்

லாது புக்குச் - சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே - யேணி யுஞ் சீப்பு மாற்றி - மாணவினை யானையு மணிகளொந் தனவே." இது தூதரைக்கேட்ட அகத்துழிஞையோன் திறங் கண்டோர் கூறியது. இவை புறம்.

தொல் எயிற்கு இவர்தலும் = ஒருகாலத்தும் அழிவில்லாத மதிலை இற்றைப்பகல அழித்துமென்றுகூறி அழித்தற்கு விருப்பஞ் செய்தலும்: உம். "இற்றைப் பகலு ளெயிலகம் புக்கன்றிப் பொற்றாரான் போனகங்கைக் கொள்ளானு - லெற்றுங்கொ - லா ஞுத வெம்பசித்தீ யாற வுயிர்பருகி - மாறு மறலி வயிறு." எனவ ரும். | "மறனுடை மறவர்க் கேறவிட னின்றி - நெய்யோ டையவி யப்பி யெவ்வாயு - மெந்திரப பாவை யியற்றின நிரீஇக் - கல்லுங் கவணுங் கடிவிசைப் பொறியும் - வில்லுங் கணையும் பலபடப் பர ப்பிப் - பந்தும் பாவையும் பசிவரிய புட்டிலு - மென்றிவை பல வுஞ் சென்றுசென் றெறியு - முகலித மகளிரை யியற்றிப் பின்னை யெய்பெரும் பகழி வாயிற ரூகசிச - சுட்டல போயின் ருயினும் வட்டத் - தீப்பாய் மகளிர் திகழ்கலம் பேர - நோக்குநர் நோக்குநர் நொகதுகை விதிர்க்குந் - தாக்கருந் தானை யிரும்பறை - பூக்கோட் டணனுமை கேட்டொறுங் கலுழ்ந்தே." இப் பொன்முடியார் பாட்டும் அது. இதனுற் பூசகுடுதல பெற்றும்.

தோலின் பெருக்கமும் = அங்ஙனம் மதின்மேற் சென்றுழி மதிலகத்தோர் அப்புமாரி விலக்குதற்குக் கிடுகுங் கேடகமும் பரிசையும் பலகையும் மிடையக் கொண்டுசேறலும்: உம். "இரு சுடர் வழங்காப் பெருமூ திலங்கை - நெடுந்தோ ளிராமன் கடந்த ஞான்றை - யெண்கிடை மிடைந்த பைங்கட் சேனையிற் - பச்சை போர்த்த பல்புறத் தண்டை - யெச்சார் மருங்கினு மெயிற்புறத் திறுத்தலிற் - கடல்சூ ழரணம் போன்ற - துடலசின வேந்தன் முற்றிய வூரே." எனவரும். "கினற புகழொழிய நிலலா வுயி ரோம்பி - யின்றுநாம் வைக லிளிவர - வென்றெளிரும் - பாண்டி னிரைத்தோர் பணியார் பகையரணம் - வேண்டிலெளி தென்னு னவ் வேந்து." இதுவும் அது. அரணத்தோர் தத்தம் பதணத்து நிற்றலிற் தோல் கூறிற்றிலர். இந்நான்கும் முற்றுவோர்க்கே உரியவெனக்கொள்க.

அகத்தோன் செல்வமும் = அகத்து உழிஞையோன் குறை வில்லாத பெருஞ்செல்வங் கூறுதலும்: படை படை குடி கூழ் அமைச்சு நட்பும் நீரிலையும் எயிற்பொருளும் | ஏமப்பட்டமைக்கது

முதலியவாம். உம். “பொருசின மாறாப் புலிப்போத் தறையு - மருவரை கண்டார்போ லஞ்சி - யொருவருஞ் - செல்லா மதிலகத்து வீற்றிருந்தான் றோர்வேந்த - னெல்லார்க்கு மெல்லாங் கொடுத்து.” “அளிதோ தானே பாரியது பறம்பே - நளிகொண் முரசின் மூவிரு முற்றினு-முழவரு முழாதன நான்குபய னுடைத்தே- யொன்றே, செறியிலை வெதிரின நெல்விளை யும்மே - இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே - மூன்றே, கொழுங்கொடி வள்ளியின் கிழங்குவீழ்க் கும்மே - நான்கே, அணிநிற வருடை பாய்தலின் மீதழிந்து - திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே- வான்க ணத்தன மலையே வானத்து - மீன்க ணத்தன சுனையே யாங்க - மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும் - புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினுந் - தாளிற் கொள்ளலிர் வாளிற் றாக்கலிர் - யானறி குவனது கொள்ளு மாறே - சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி - விரையொலி கூந்தனும் விறலியர் பின்பட- வாடினிர் பாடினிர் செலினே - நாடுங் குன்று மொருங்கீ யும்மே.” என்னும் புறப்பாட்டும் அது.

அன்றிமுரணிய புறத்தோன் அணங்கிய பக்கமும் = மாறுபட்ட புறத்தோனை அகத்தோன் செல்வத்தான் அன்றிய போர்த்தொழிலான் வருத்தியது கூறலும்: உம். “கலையெனப் பாய்ந்த மாவு மலையென - மயங்கம ருழந்த யானையு மியம்படச் - சிலையலைத் துலந்த வயவரு மென்றிவை - பலபுறங் கண்டோர் முன்னா ளினியே - யமர்புறங் கண்ட பசும்பூண் வேந்தே - மாக்களி றுதைத்த கணைசேர் பைந்தலை - மூங்கறு நுங்கிற றூற்றயற் கிடப்பக் - கணையாக் கழற்காற் கருங்க ணடவ - குருகெழு வெகுளியர் செறுத்தன ரார்ப்ப - மினையேறு போயின்று காளை நுமே - யுயிர்மிசை கொண்ட மயிர்க்கட - டருமுரசிரங்க லூர்கொள் குவமே.” என வரும். இது சேரமான் பொன்முடியாரையும் அரிசில்கிழாரையும் நோக்கித் தன்படைப்பட்டார் தன்மை கேட்டோர்க்கு அவர் கூறியது.

திறப்பட ஒரு தான் மண்டிய குறுமையும் = அகத்திருந்தோன் தன்னரணழிவு தோன்றியவழிப் புறத்துப் போர்செய்யுஞ் சிறுமையும்: உம். “வருகதில் வல்லே வருகதில் வல்லென - வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப - நூலரி மாலை சூடிக் காலிற் - றமியன் வந்த மூதி லாளன் - அருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த - வொருகை யிரும்பிணைத் தெயிறு மிறைபடையாகத் - திரிந்த வாய்வா டிருத்தாத் [illegible] தானை பெயர்புற நகுமே.” எனவரும்.

உடன்றோர் வருபகை பேணார் ஆர் எயில் உளப்பட = புறத்தோன் அகத்தோன்மேல் வந்துழி அவன்பகையினைப் போற்றாது அகத்தோன் இகழ்ந்திருத்தற்கு அமைந்த மதிலரண் கூறுதலுளப்பட: உம். "மொய்வேற் கையர் முரண்சிறந் தொய்யென- வையக மறிய வலிதலைக் கொண்ட - தெவ்வழி யென்றி யியறார் மார்ப - வெவ்வழி யாயினு மவ்வழித் தோன்றித் - திண்கூ ரெஃகின் வயவர்க் காணிற் - புண்கூர் மெய்யி னுராஅய்ப் பகைவர்- பைந்தலை யுதைத்த மைந்துமலி தடக்கை - யாண்டகை மறவர் மலிந்துபிறர் - தீண்ட றகாது வெநதுறை யானே." இது அகத்தோன் செலவம் போற்றுதற்கு ஏதுவாகிய முழுவரண கூறுதலிற் செல்வத்துள் அடங்காதாயிற்று. இது பொன்முடியார் தகரேரின் தன்மை கூறியது.

சொல்லப்பட்ட நாலிரு வகைத்தே = மேலிரு நால்வகைத்தென்று சொலலப்பட்ட இருநான்கு பகுதியதாம் உழிஞைத்திணை.—எ - று. முற்கூறிய தொகையேயன்றி ஈண்டுந் தொகை கூறினார் அநநாலிரண்டுமேயன்றி அவைபோல்வனவும் நாலிரண்டு துறை தோன்றுமென்றற்கு அவை புறத்துவேநதன் தன்துணையாகிய அரசனையாயினுந தன்படைத்தலைவனையாயினும் ஏவி அகத்துவேந்தற்குத் துணையாகிய அரசாது முழுமுதலரண் முற்றலும் அவன் தனைக் காவலகோடலும் நிகழநதவிடத்தும் இவ்விருநான்குவகையும் இருவர்க்குமுளவாதலாம். உம். முற்காட்டியவே வேறுவேறுகாட்டினும் அமையும். இத்திணைக்குப் படையியங்கரவமுதலியனவும் அதிகாரத்தாற் கொளக. அது "இலங்குதொடி மருப்பிற் கடாஅம் வார்த்து - நிலம்புடையூ வெழுதரும் வலம்படு குஞ்சர - மெரியவிர்ந் தன்ன விரியுளை சூட்டிக் - காலகிளர்ந் தன்ன கடுஞ்செல லிவுளி - கோனமுனைக் கொடியின் விரவா வல்லோ - டௌவினை கடுக்குந் தோன்றல பெரிதெழுக - தருவியினொலிக்கும் வரிபுனை நெடுநேர் - கணவேட டனவே முரசங் கண்ணுற்றுத் - தழுவு மாதிரங் கலலென வொலிப்பக் - கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப - நெடுமதி னிரைஞாயிற் கடிமிளைக் குண்டு கிடங்கின் புடையா ரரண்காப் புடைத்தேஎ - நெஞ்சபுக லழிந்து நிலைதளர் பொரீஇ - யொல்லா மன்னர் நடுங்க- நல்ல மன்றவிவ ணீங்கிய செலவே." எனவரும். இனித் தேவர்க்குரியவாகிய உழிஞைத்துறைகள் பலவுங் கூறுவராலெனின் அவை உலகியலாகிய அரசியலாய் எஞ்ஞான்றும் நிகழ்வின்றி ஒருகால் ஒருவர் வேண்டியவாறு செய்வனவாகலின் தமிழ்கூறு நல்லு

லகத்தன அல்லவென மறுக்க. இனி முரசவுழிஞை வேண்டுவா ருளரெனின் முரசவஞ்சியுங் கோடல்வேண்டுமென மறுக்க. இனி ஆரெயிலுழிஞை முழுமுதலரணம் என்றதன்கண் அடங்கும். இனி விகற்பிப்பனவெல்லாந் துறைப்பாற் படுத்திக்கொள்க. (கஉ)

கூஅ. குடையும் வாளு நாள்கோ ளன்றி
மடையமை யேணிமிசை மயக்கமுங் கடைஇச்
சுற்றம ரொழிய வென்று கைக்கொண்டு
முற்றிய முதிர்வு மன்றி முற்றிய
வகத்தோன் வீழ்ந்த நொச்சியு மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானு
நீர்ச்செரு வீழ்ந்த பாசியு மதாஅன்
றூர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனு
மதிலிசைக் கிவர்ந்தோன் பக்கமு மிகன்மதிற்
குடுமி கொண்ட மண்ணு மங்கலமும்
வென்ற வாளின் மண்ணோ டொன்றத்
தொகைநிலை யென்னுந் துறையொடு தொகைஇ
வகைநான் மூன்றே துறையென மொழிப

இது எய்தாதது எய்துவித்தது; உழிஞைத்திணையுள் இருபெருவேந்தர்க்கும் ஒன்றாய்ச்சென்று உரியவான துறை இதற்கு முன்னர்க் கூறுமையின். (இ-ள்.) குடையும் வாளும் நாள்கோள் அன்றி = தன் ஆக்கங்கருதிக் குடிபுறங்காத்து ஓம்புறசெடுத்த குடைநாட்கொள்ளுதலும் அன்றிப் பிறன்கேடு கருதி வாணாட்கொள்ளுதலும் அன்றி: புறத்தோன் புதிதாக அகத்தே புகுதற்கு நாட்கொள்ளுமென்க, தன்னூட்டினின்றும் புறப்படுதற்கு நாட்கோடல் உழிஞையெனப்படாதாகலின். அகத்தோனும் முற்றுவிடல்வேண்டி மற்றொரு வேந்தனை வருவழித் தானும் புறத்துப் போதருதற்கு நாட்கொள்ளும். நாட்கோடலாவது நாளும் ஓரையுந் தனக்கேற்பக்கொண்டு செலவுழி அக்காலத்திற்கு இடையூறு தோன்றியவழித் தனக்கு இனியமையாதனவற்றை அத்திசை நோக்கி அக்காலத்தே முன்னே செலவிடுதல்: உம் "பகைவெதிப்ப தென்கொலோ பான்மதியென் றஞ்சி - இகலரணத் துள்ளவெல்லா - மகளிய-விண்டஞ்ச மென்ன விரித்த குடைநாட்கோள் - கண்டஞ்சிச் சிம்பினித்தார் கண்." இது புறத்தோன் குடைநாட்கோள். "குன்றுயர் திக்கின்போற் கெழுற்றக் குடையொன்று,

நின்றுயர் வாயிற் புறநிவப்ப-வொன்ஞர் - விளங்குருவப் பல்குடை விண்மீன்போற் ஞேன்றித் - துளங்கினவே தோற்றங் குலைந்து." இது அகத்தோன் குடைநாட்கோள். "தொழுது விழாக்குறைக் குந் தொல்கடவுட் பேணி - யழுது விழாக்கொள்வ ரன்ஞே - முழு தளிப்போன் - வாணுட்கோள் கேட்ட மடந்தையர் தம்மகிழ் - நீணு ட்கோ ளென்று நினைந்து." இது புறத்தோன் வாணுட்கோள். "முற்றரண மென்னு முகிலுருமுப் போற்ஞேனறக் - கொற்றவன் கொற்றவா ணுட்கொணடான - புற்றிழிந்த - நாகக் குழாம்போ னடுங்கின வென்ணுங்கொல - வேகக் குழாக்களிற்று வேந்து." இது அகத்தோன் வாணுட்கோள.

முடையமை ஏணிமிசை மயக்கமும் = மீதிடுபலகையோடும் அடுத்துச்செய்யப்பட்ட ஏணிமிசைநின்று புறத்தோரும் அகத்தோரும் போர்செய்தலும்: உம். "சேணுயர் ஞாயிற திணிதோளா னேற்றவு - மேணி தவிரப்பாய்ந் தேறவுறுப் - பாணியாப் - புளளிற் பரந்து புகலவேட்டார் போர்த்தொழிலோர் - கொள்ளற் கரிய குறும்பு." இது புறத்தோர் ஏணிமயக்கம். "இடையெழுவிற் போர்விலக்கும் யானையோர் போனு - மடையமை யேணி மயக் கிற் - படையமைந்த - ஞாயில் பிணம்பிறக்கித் தூர்த்தார் நகரோர் க்கு - வாயி லெவனுங்கொல் மற்று." இது அகத்தோர் ஏணிமயக் கம். இனி இரண்டும் ஒருங்கு வருதலுங்கொளக; உம். "பொரு வரு மூதூரிற் போர்வேட டொருவர - கொருவ னுடன்றெழுந்த காலை - யிருவரு - மண்ணொடு சார்த்தி மதில்சார்த் தியவேணி- விண்ணொடு சார்த்தி விடும்." எனவரும்.

கடைஇச் சுற்று அமர் ஒழிய வென்று கைக்கொண்டு முற்றிய முதிர்வும் = புறத்தோன் தனபடையைச் செலுத்திப் புறமதிலிற் செய்யும் போரின்றுக அகத்தோன்படையை வென்று அப்புறமதி லைக் கைக்கொண்டு உண்மதிலை வளைத்த வினைமுதிர்ச்சியும், அகத் தோன் தன்படையைச் செலுத்திப் புறமதிலிற்செய்யும் போரின் றுகப் புறத்தோன் படையைத் தள்ளி வென்று அப்புறத்துமதிலைக் கைக்கொண்டு வளைத்த வினைமுதிர்ச்சியும்: உம். "கடலபரந்து மேருச்சூழ் காலம்போற் சென்றோர் - கொடிமதிலைக் காத்தோ ரைக் கொல்லக் - கடலெதிர் - தோன்றுப் புலிபோ லரண்மறவர் தொக்கடைத்தார் - மான்றேரான் மூதூர் வரைப்பு." இது புறத் தோன் முற்றிய முதிர்வு. "ஊர்சூழ் புரிசை புடன்சூழ் படைமா யக் - கார்சூழ்குன் றன்ன கடைகடந்து - போர்மறவர் - மேகமே

போலெயில் சூழ்ந்தார் விலங்ககன் - ஞுகஞ்சேர் தோள்கொட்டி யார்த்து." இது அகத்தோன் முற்றிய முதிர்வு.

அன்றி முற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் = புறமதிலன்றி உண்மதிற்கட் புறத்தோன முற்றப்பட்ட அகத்தோன் விரும்பின மதில்காவலும், அவன் காத்தலன்றித் தான் சூழப்பட்ட இடத்திருந்த புறத்தோன் போர்செய்தலை விரும்பிய உளத்தைக் காத்தலும் : நொச்சியாவது காவல்; இதற்கு நொச்சி ஆண்டுச் சூடுதலுங்கொள்க. அது மதிலைக்காத்தலும் உள்ளத்தைக்காத்தலுமென இருவர்க்குமாயிற்று. இக்கருத்தானே "நொச்சிவேலித் தித்தனுறந்தை" என்றார் சான்றோரும். உம். "இருகன்றினொன்றிழந்த வீற்றுப்போற் சீறி - யொருதன் பதிசுற்றொழியப் - புரிசையின் - வேற்றரணங் காத்தான் விறல்வெய்யோன் வெஞ்சினத்துக் - கூற்றரணம் புக்கதுபோற் கொன்று." இது அகத்துழிஞையோன் எயில்காத்த நொச்சி. "தாய்வாங்கு கின்ற மகனைத் தனக்கென்று - பேய்வாங்கி யன்னதோர பெற்றித்தே - வாய்வாங்கு - வெல்படை வேந்தன் விரும்பாதாரூர்முற்றிக் - கொல்படை வீட்டுங் குறிப்பு" இது புறத்தோன் மனங்காத்த நொச்சி. "மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சிப் - போதுவிரி பன்மா னுள்ளுஞ் சிறந்த - காதனன்மா நீமற் - றிசினே - கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த - தொடியணி மகளி ரல்குலொடு டைத்திக் - காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலி - னூர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை - பீடுகெழு சென்னிக் கிழமையு நினைதே." இது சூடின நொச்சியைப் புகழ்ந்தது.

மற்று அதன் புறத்தோன் வீழ்ந்த புதுமையானும் = இடைமதிலைக் காக்கின்ற அகத்துழிஞையோன நின்ற இடத்தினைப் பின்னை அம்மதிலின் புறத்திருந்தோன் விரும்பிக்கொண்ட புதுக்கோளும், அங்ஙனம் புறத்தோன் கொண்ட அவ்விடத்தினைப் பின்னையகத்தோன் தான் விரும்பிக்கொண்ட புதுக்கோளும் : பிற்பட்டதுறைக்குப் புறத்தோன் அதனையென மாற்றிப் பொருள்கொள்க. முன்னர்ப் புறமதிலைப் போர்போல இடைமதிலும் போர் கூறினார். உம். "வெஞ்சின வேந்த னெயிலகோள் விரும்பியக்கா - லஞ்சி யொதுங்காதார் யாரியாவர் - மஞ்சுசூழ் - வான்றோய் புரிசை பொதியு மடங்கின - வான்றோ ரடக்கம்போ லாங்கு." இது புறத்தோன் வீழ்ந்த புதுமை. "தாக்கற்குப் பேருந் தகர்போன் மதிலகத் - தூக்க முடையோ ரொதுங்கியும் - தார்க்கெ

ணிடிபுறப் பட்டாங் கெதிரோற்றார் மாற்று-ரடிபிறக் கீடு மரிது. இது அகத்தோன் வீழ்ந்த புதுமை.

நீரிச் செரு வீழ்ந்த பாசியும்=கொண்ட மதிலகத்தை விட்டுப் போகாத புறத்தோரும் அவரைக் கழியத் தாக்கல் ஆற்றாத அகத்தோரும் எயிற்புறத்து அகழின் இருகரையும்பற்றி நீரிடைப் படர்ந்த நீர்ப்பாசி போன்று அக்கிடங்கின்கட் போரைவிரும்பின பாசியும்: பாசிபோல் நீங்காமல் நிற்றலிற் பாசியென்றார். உம். "பொலஞ்செய் கருவிப் பொறைமீப் பிணனும் - நிலந்திடர் பட்டதின் றுயிற் - கலங்கமர்மேல் - வைத்தமர் செய்யும் விரகென்னும் வேன்மறவர் - நீத்துநீர்ப் பாய்புலிபோ னின்று." இது இருவர்க்கும் ஒக்கும். வேறு வேறு வருமெனினுங் காண்க.

அதான்று ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்=அம்மதிற்புறத்தன்றி ஊரகத்துப் போரை விரும்பிய அப்பாசிமறனும்: பாசியென்றார், நீரிற் பாசிபோல இருவரும் ஒதுங்கியுந் தூர்ந்தும் பொருதலின். உம். "மறநாட்டுந் தங்கணவர் மைந்தறியு மாதர்-பிறநாட்டுப் பெண்டிர்க்கு நொந்தா - ரறிதொறும்போய் - நீர்ச்செறி பாசிபோ னீங்காது தங்கோமா - னூர்ச்செரு வுற்றானைக் கண்டு." இது புறத்தோன் பாசிமறம். "தாந்தங் கடைதோறுஞ் சாய்ப்பவு மேலவிழுந்த - வேந்தன் படைபிணதது வீழ்தலானுங்கு - மதுக்கமழுந் தார்மன்னர்க் குள்ளூர் மறுகிற் - பதுக்கையும் வேண்டாதாம் பற்று." இஃது அகத்தோன பாசிமறம்.

அகமிசைக்கு இவர்ந்தோன பக்கமும்=புறஞ்சேரிமதிலும் ஊர்மதிலும் அல்லாத கோயிற் புரிசைமிசை ஏறிநின்று போர் செய்தற்குப் பரந்துசென்ற கூறுபாடும்: உம். "வாயிற் கிடங்கொடுக்கி மாற்றினார் தம்பிணத்தாற் - கோயிற கிடங்கொடுக்கிக் கோண்மறவர் - ஞாயிற் - கொடுமுடிமேற் குப்புற்றார் கோவேகதர்க் காக - நெடுமுடிதாங் கோட னினைந்து." இது புறத்தோன அகமிசைக்கிவர்தல். "புற்றுறை பாம்பின் விடநோக்கம் போலேகவிக் - கொற்றுறை வாய்த்த கொலைவேலோர் - கொற்றவனெயில்மேற் றோன்றினா ரகதரத்துக் கூடாத - போரெயின்மேல் வாழுணர் போன்று." இது அகத்தோன் அகமிசைக்கிவர்தல்.

இகன் மதிற் குடுமி கொண்ட மண்ணும் மங்கலமும்=அங்ஙனம் இகல்செய்த மதிற்கண் ஒருவர் ஒருவரைக்கொன்று அவர் முடிக்கலம் முதலியன கொண்டு, பட்ட வேந்தன் பெயரானே முடிபுனைந்து நீராடும் மங்கலமும்: உம். "மழுவாளான் மன்னர்

மருங்கறுத்த மால்போ - லெழுவாளங் கைக்கொண்ட போழ்தி - னெழின்முடி - சூடாச்சீர்க் கொற்றவனுஞ் சூடினன் கோடியர்க் கே - கூடார்நா டெல்லாங் கொடுத்து." இது புறத்தோன் மண்ணும் மங்கலம். "வென்றி பெறவந்த வேந்தை யிகன்மதில்வாய்க் - கொன்று குடுமி கொளக்கண்டு - தன்பால் - விருந்தினர் வந்தார்க்கு விண்விருந்து செய்தான்-பெருந்தகையென் றூர்த்தார் பிறர்." இது அகத்தோன் மண்ணும் மங்கலம்.

வென்ற வாளின் மண்ணோடு ஒன்ற = இருபெருவேந்தருள் ஒருவன் ஒருவனை வென்றுழி அங்ஙனம் வென்ற கொற்றவாளினைக் கொற்றவை மேனிறுத்தி நீராட்டுதலோடே கூட: உம். "செற்றவர் செங்குருதி யாடற்கு வாள்சேர்ந்த - கொற்றவை மற்றிவையுங் கொள்ளுங்கொ னெ - முற்றியோன் - பூவொடு சாந்தும் புகையவி நெய்ந்நறைத்த - தேவொடு செய்தான் சிறப்பு." இது புறத்தோன வாண்மங்கலம். "வருபெரு வேந்தற்கு வான்கொடுத்து மற்றை - யொருபெரு வேந்தற்கூ ரீந்தா - னொருவன்பா- லிவ்வுலகிற் பெற்ற விகற்கலையேற் றார்திவா ளவ்வுலகிற் போய்ப்பெறுங்கொ லாங்கு." இது அகத்தோன் வாண்மஙகலம். ஒன்றென முடித்தலான் இருவர்வேற்குஞ் சிறுபான்மை மண்ணுதல் கொள்க. "பிறர்வேல் போலா தாகி யிவ்வூர் - மறவன் வேலே பெருந்தகை யுடைத்தே - யிரும்புற நீரு மாடிக் கலந்திடைக் - குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கு - மங்கல மகளிரொடு மாலை சூட்டி - யின்குர லிரும்பை யாழெடுத் தியம்பத் - தெண்ணீர்ப் படிவினுந் தெருவினுந் திரிந்து - மண்முழு தழுங்கச் செல்லினுஞ் செல்லுமாங் - கிருங்கடற் றானை வேந்தர் - பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னுதே." எனவரும்.

தொகை நிலை என்னுந் துறையொடு தொகைஇ = அவ்வாண்மங்கலம் நிகழ்நத பின்னர் இருவருள் ஒருவர் பரந்து பட்ட படைக்கெல்லாஞ் சிறப்புச் செய்வான் ஒருங்கு வருகெனத் தொகுத்தல் என்னுந் துறையோடு முற்கூறியவற்றைத் தொகுத்து: உம். "கதிர்சுருக்கி யப்புறம்போங் காய்கதிர்போல் வேந்தை- யெதிர்சுருக்கி யேகதெயிலபா பூக்கிப் - பதியிற் - பெயர்வானை ரொருத்த படைத்துகளாற் பின்னு - முயர்வான குறித்த துலகு." இது புறத்தோன் தொகைநிலை. "தலைவன் மதில்சூழ்ந்த தார் வேந்தர்க் கொன்று - வலையன் வலைசுருக்கி யாங்கு - நிலையிருந்த- தண்டத் தலைவர் தலைக்கூட வீற்றிருந்தா - னுண்டற்ற சோற்றே டொழிந்து." இது அகத்தோன் தொகைநிலை.

வகைநால் மூன்றே துறை என மொழிப = அந்நால் ஒன்று இருவகைப்பட வந்து பன்னிரண்டேயாம் உழிஞைத்துறை என்று கூறுவர் ஆசிரியர்.—எ-று. முற்றலையுங் கோடலையும் இருவகையென்றார். துறையென்றதனான் அவற்றின் பகுதியாய் வருவனவும் அத்துறைப்பாற் படுத்துக: உழையரை அழைத்து நாட்கொள்க என்றலும் அவர் அரசர்க்கு உரைப்பனவுங் குடைச் சிறப்புக் கூறுவனவும் முரசு முதலியன நாட்கோடலும் பிறவுங் குடைநாட் கோடலாய் அடங்கும். இது வாணாட்கோடற்கும் ஒக்கும். பொருவார்க்கும் அல்லுழிப்போவார்க்குங் குடை பொதுவாகலின் முற்கூறி மேல்வருகின்ற போர்த்தொழிற்கே சிறத்தலின் வாளினைப் பிற்கூறினார். இவை போர்த்தொழிற்கு ஏதுவாகலின் முற்கூறினார். எயிலுட் போதலும் புட்போல உட்பாய்தலும் ஆண்டுப் பட்டோர் துறக்கம் புகுதலும் பிறவும் பாசிமறத்தின்பாற் படும். ஏறுந் தோட்டியுங் கதவும் முதலியன கோடல் அகமிசைக்கு இவர்ந்தோன் பக்கத்தினபாற்படும். படிவம் முதலியன கூறல குடுமிகொண்ட மண்ணுமங்கலத்தின்பாற்படும். புறத்தோன் இருப்பிற தொகைநிலைபாற்படும். "துறையென மொழிப" என எல்லாவற்றையுந் துறையென்று கூறுகின்றவர் தொகைநிலையென்றுந் துறையெனத் தொகைநிலையை விதந்தோதினார், அது பலவாகாது இரண்டு துறைப்பட்டு வேறுவேறு துறையாம் என்றற்கு. அது தும்பைத்தொகைநிலைபோல இருபெருவேந்தரும் உடன்வீழ்தலுஞ் சிறுபான்மை உளதாமெனற்கு ஆக. எதிர்மதிலாதலைத் திருந்தோன் புறப்பட்டுப்பட்டல சிறுபான்மையாதலின இதனையும் வேறோர் துறையாக்கிப் பதின்மூன்றென்றாயினார். உம். "அறத்துறைபோகிய வேட்டவரசர் - மறத்துறையு மின்றுது மணப்ப - நிறைசுடர்க் - கொன்றி யுவாப் பகலவா யொக்க வொளிர்தேய்ந்தாங்கு - இனறிவர் வீழ்ந்தா ரெதிர்ந்து" என வரும். இது வேறுவேறு படுதலுஞ் சிறுபான்மையின்றுக துறையெனறதனனே புறத்தோன் கவடிவித்ததும் தொகைநிலைபாற்படும் அகத்தோன் கருச செல்லாமை கோளகத்து "மதியே ! வெண்குடை" என்னும் புறப்பாட்டுள் "வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும் - வைகல் உழவ வாழிய பெரிதெனச் சென்றியா னின்றனெனாக" என வரும். ஒன்றெனறதனனே அகத்தோன் வாள்மண்ணுதல் சிறுபான்மையென்றுகொள்க. இவ்வகன்மறத்தோன் மதிலை முற்றுதல் மகட்பாற்காஞ்சிக்கண் அடங்கும். யானையுங் குதிரையும் மதிற்போர்க்குச் சிறந்தில அவையை

யிற் கொள்ளாராயினர்: "ஈரடியிகந்து பிறக்கடியிடுதலுங் கேடு" என்பதனானும் உணர்க. (கரு)

சுகூ. தும்பை தானே நெய்தலது புறனே.

இது தும்பைத்திணை அகத்திணையுள் இன்னதற்குப் புறனாமென்கின்றது. இதுவும் மைந்துபொருளாகப் பொருதலின் மண்ணிடையீடாகப் பொரும் வஞ்சிக்கும் மதிலிடையீடாகப் பொரும் உழிஞைக்கும் பிற்கூறினர். (இ-ள்.) தும்பைதானே நெய்தலது புறனே = தும்பையென்னும் புறத்திணை நெய்தலெனப்பட்ட அகத்திணைக்குப் புறனாம். எ—று. தும்பையெனபது சூடும் பூவினாற் பெற்றபெயர். நெய்தற்குரிய பெருமணலுலகம்போலக் காடும் மலையுங் கழனியுமல்லாத களரும் மணலும் பொருகளமாக வேண்டுதலானும் பெரும்பொழுது வரைவின்மையானும் எற்பாடு போர்த்தொழில் முடியுங் காலமாதலானும் இரக்கமுந தலைமகட்கே பெரும்பான்மை உளதாயவாறுபோலக் கணவனை இழந்தார்க்கன்றி வீரர்கு இரக்கமின்மையானும் அவ்வீரக்குறிப்பின் அருள்பற்றி ஒருவர் ஒருவரைநோக்கிப் போரின்கண இரங்குபவாகலானும் ஒருவரும் ஒழியாமற் படுமிழிக் கண்டார் இரங்குபவாகலானும் பிறகாரணங்களானும் நெய்தற்குத தும்பை புறனாயிற்று. (கசு)

எo. மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப.

இது அத்தும்பைக்குப் பொதுவிலக்கணங கூறுகின்றது. (இ-ள்.) மைநது பொருளாக வந்த வேநதனை = தனது வலியினை உலகம் மீக்கூறுதலே தனக்குப் பெறுபொருளாகக் கருதி மேற்சென்ற வேநதனை: சென்று தலையழிக்குஞ் சிறப்பிற்றென்ப = அங்ஙனம் ஆற்றும் வேந்தனும் அவனை கருதிய மைந்தே தான் பெறு பொருளாக எதிர்சென்று அவனைத தலைமைதீர்க்குஞ் சிறப்பினையுடைதது அத்தும்பைத்திணை என்றுசொல்லுவர் ஆசிரியர். —எ-று. வரல் செலவாதல "செலவினும் வரவினும்" என்பதன் பொதுவிதியாற் கொள்க. மைநதுபொருளாக என்பதனை வந்த என்பதற்குஞ் சென்று என்பதற்குங் கூட்டுக, அஃது இருவர்க்கும் ஒத்தலின். எனவே, இருவரும் ஒருகளத்தே பொருவாராயிற்று. இது வேந்தனைத் தலைமையாற் கூறினானும் ஏனையோர்க்குங் கொள்க, அவரும் அதற்குரியராதலின். இதனைச் சிறப்பிற்றென்றதனான் அறத்திற் றிரிந்து வஞ்சனையாற் கொல்

வனவுந் தேவராற் பெற்ற வரங்களாற் கொல்வனவுங் கடையூழிக் கட் தோன்றிய ஆதலிற் சிறப்பிலவாம்; அவையுஞ் சிறுபான்மை கொள்க. (கரு)

எக. கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற்
சென்ற வுயிரி னின்ற யாக்கை
யிருநிலந் தீண்டா வருநிலை வகையோ
டிருபாற் பட்ட வொருசிறப் பின்றே.

இது தும்பைக்காவதோர் இலக்கணங் கூறுதலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது. (இ-ள்.) கணையும் வேலுந் துணையுற மொய்த்தலின்=பலரும் ஒருவனை அணுகிப் பொருதற்கஞ்சி அகல நின்று அம்பானெய்தும் வேல்கொணடெறிந்தும் போர் செய்ய அவ்வம்பும் வேலும் ஒன்றோடொன்று துணையாகத் தீண்டுமாறு செறிதலின்: சென்ற உயிரின் நின்ற யாக்கை=சிறிதொழியத் தேய்ந்த உயிரானே துளங்காது நிலைநின்ற உடம்பு: இருநிலந் தீண்டா யாக்கை அருநிலை வகையோடு=வாளுந திகிரியு முதலியவற்றால் ஏறுண்ட தலையேயாயினும் உடலேயாயினும் பெரிய நிலத்தைத் தீண்டாதெழுந்து ஆடும் உடம்பினது பெறற்கரும் நிலையுடைத்தாகிய கூறுபாட்டோடே கூடி: இருபாற்பட்ட ஒருசிறப்பின்று=இரண்டு கூறுபட்ட ஒரு சிறப்பிலக்கணத்தை யுடைத்து முற்கூறிய தும்பைத்திணை.—எ-று. எனவே, முற்கூறிய மைந்துபொருளாகப் பொருதலினும் நின்றயாக்கை சிறத்தலும் இருநிலந் தீண்டா யாக்கை அதனிற் சிறத்தலுங் கூறினார். இது திணைச்சிறப்புக் கூறியது. மொய்த்தலினென்றது யாக்கையற்றுடவேண்டுதலிற் கணையும் வேலுமன்றி வாள்முதலியன ஏதுவாகக்கொள்க. பிறகூறியதற்கு அட்டை அற்றுழியும் ஊருமாறுபோல் அலைகனிற அற்றுழியும் உடம்பாடுதலின அட்டையாடலெனவும் இதனைக்கூறுப. இனி மேற்றுறை கூறுகின்றது மைந்துபொருளாக வந்ததுஞ் சென்றதுமாகிய பொது இலக்கணத்திறகே என்றுணர்க. நிரைகொள்ளப்பட்டான் பொருகளங் குறித்துப் போர்செய்தலும் அவன்களங்குறித்தது பொருது நிரைகொண்டானுங் களங்குறித்துப் போர்செய்தலும் வெட்சிப புறத்துத் தும்பையாம். வஞ்சியுளாரும் விழுப்புண்பட்ட வீரரை நோக்கி வேந்தற்குப் பொருமை நிகழ்ந்து நறக்கம் வேண்டிழி நிகழ்ந்த தும்பையும் வஞ்சிப்புறத்துத் தும்பையாம். முற்றப்

பட்டோனை முற்றுவிடுத்தற்கு வேறோர்வேந்தன்வந்துழி அவன் புறம்போந்து களங்குறித்துப் போர்செய்யக் கருதுதலும் அவன் களங்குறித்துழிப் புறத்தோனும் களங்குறித்துப் போர்செய்யக் கருதுதலும் உழிஞைப்புறத்துத் தும்பையாம். இவையெல்லாம் மண்ணசையும் அரணகோடலுமன்றி மைந்துபொருளாகச் சென்று துறக்கம் வேட்டுப் பொருந் தும்பைச்சிறப்புக் கூறிற்று. மேற்காட்டுந் துறைகளெல்லாம் இச்சூத்திரத்துக் கூறிய இரண்டற்குமன்றி மைந்துபொருளாயதற்கேயாமென்றுணர்க. உம். "நெடுவேல் பாய்ந்த மார்பின் - அடல்வன் போநதையி னிற்கு மோர்க்கே" "எய்போற் கிடந்தா னென்னேறு" எனவருவன கணையும் வேலும் மொய்த்துநின்றன. கிடந்தானென்புழி நிலந் தீண்டாவகையின் நின்ற யாக்கையாயிற்று. "வான்றுறக்கம் வேட்டெழுந்தார் வாணமறவ ரென்பதற்குச் - சான்றுரைப்ப போன்றன தங்குறை - மான்றேர்மேல் - வேந்து தலைபணிப்ப விட்ட வுயிர்விடாப்- பாய்ந்தன மேல்மேற் பல." இது வஞ்சிப்புறத்துத் தும்பையாய் இருநிலந் தீண்டாவகை. "பருதிவேன் மன்னர் பலர்காணப் பற்றுப் - குருதிவாள் கூறிரண்டு செய்ய - வொருதுணி - கண்ணிமையா முன்னங் கடிமதிலுள் வீழ்ந்ததே - மண்ணதே மண்ணதே யென்று." இது உழிஞைப்புறத்துத் தும்பையாய் இருநிலந் தீண்டாவகை. இது திணைகட்கெல்லாம் பொது அன்மையிற் றிணையெனவும் படாது; திணைக்கே சிறப்பிலக்கணமாதலிற் றுறையெனவும் படாது; ஆயினுந் துறைப்பொருள் நிகழ்ந்து கழிந்தபிற் கூறியதாமென்றுணர்க. (கரு)

எஉ. தானை யானை குதிரை யென்ற
நோனா ருட்கு மூவகை நிலையும்
வென்றிமிகு வேந்தனை மொய்த்தவழி யொருவன்
றான்மீண் டெறிந்த தார்நிலை யன்றியு
மிருவர் தலைவர் தபுதிப் பக்கமு
மொருவ னொருவனை யுடைபடை புக்குக்
கூழை தாங்கிய வெருமையும் படையறுத்துப்
பாழி கொள்ளு மேமத் தானுங்
களிறெறிந் தெதிர்ந்தோர் பாடுங் களிற்றொடு
பட்ட வேந்தனை யட்ட வேந்தன்
வாளோ ராடு மமலையும் வாள்வாய்த்

திருபெரு வேந்தர் தாமுஞ் சுற்றமு
மொருவரு மொழியாத் தொகைநிலைக் கண்ணுஞ்
செருவகத் திறைவன் வீழ்ந்தெனச் சினைஇ
யொருவன் மண்டிய நல்லிசை நிலையும்
பல்படை யொருவற் குடைதலின் மற்றவ
னொள்வாள் வீசிய நூழிலு முளப்படப்
புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே.

இது மைந்துபொருளாகிய தும்பைத்திணைக்குத் துறை இனைத்தென்கின்றது. (இ-ள்.) தானை யானை குதிரை என்ற நோனார் உட்கும் மூவகை நிலையும் = தானைநிலை யானைநிலை குதிரைநிலை என்றுசொல்லப்பட்ட போர்செய்தற்கு ஆற்றா அரசர் தலைபனிக்கும் மூன்றுகூறுபாட்டின்கண்ணும்: நோனார் உட்குவரெனவே நோன்றார் உட்காது நிற்பாராயிற்று. அவர் போர்கண்டு சிறப்புச்செய்பவர் தேவரும் பிணந்தின் பெண்டிரும் படையாளர்தாயரும் அவர் மனைவியரும் கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியருங் கண்டோரும் பிறருமென்று கொள்க. துறக்கம்புகு வேட்கையுடைமையிற் காலாளை முற்கூறிப், பின்னை மதத்தாற் கதஞ்சிறந்து தானும் போர்செய்யும் யானையைப் பிற்கூறி, மதஞ்சிறவாமையிற் கதஞ் சிறவாத குதிரையை அதன்பிற் கூறினார். குதிரையானன்றித் தேர் தானே செலலாமையிற் தேர்க்கு மறமின்றென்று அது கூறாராயினார். நிலையென்றது வகையென்றதனான் அம்மூன்று நிலையுந் தாமே மறஞ்சிறப்பப் பொருதுவீழ்தலும் அரசனேவலிற் தானை பொருதுவீழ்தலும் யானையுங் குதிரையும் ஊர்ந்தாரேவலிற் பொருதலும் படையாளர் ஒருவரொருவர் நிலைகூறலும் அவர்க்கு தவலுமென இப்பகுதியெல்லாங் கொள்க. இனி இவைதாமே கறுவுகொண்டு பொருவுழித் தானைமறம் யானைமறங் குதிரைமறமென்று வெவ்வேறுபெயர்பெறுமென்று கொள்க. இனித் தாயர் கூறுவன மூதின் முல்லையாம்; மனைவியர் கூறுவன இல்லாண்முல்லையாம்; கண்டோர் கூறுவன வல்லாண்முல்லையாம்; பாணர் கூறுவன பாண்பாட்டாம். இவை கூறி ஏனைக்கூத்தர் முதலியோர் கூறுவன கூறார்; மனநெகிழ்ந்து பொருவாருமுளர், அவை ஓரோர் துறையாக முதனூற்கண் வழங்காமையினானும் அவற்றிற்கு வரையறையின்மையானும் இவர் தானைநிலையென அடக்கினார். இச்சிறப்பான் இதனை முற்கூறினார். அத்தானை சூடிய

பூக்கூறலும் அதனெழுச்சியும் அரவமும் அதற்கரசன் செய்யுஞ் சிறப்பும் அதனைக்கண்டு இடைநின்றோர் போரைவிலக்கலும் அவன் அதற்குடம்படாமைப் போர்துணிதலும் அத்தானையுள் ஒன்றற் கிரங்கலும் அதற்குத் தலைவரைவகுத்தலும் வேந்தன்சுற்றத்தா ரையுந் துணைவந்த அரசரையும் ஏத்துவனவும் நம்போர் ஏனைநாட் டென்றலும் இருபெருவேந்தரும் இன்னவாறு பொருதுமென்று கையெறிதலும் போல்வனவெல்லாம் இத்துறைப்பாற்படும். உம். "கார்கருதி நின்றதிருங் கௌவை விழுப்பணையான் - சோர்குருதி சூழா நிலனனைப்பப் - போர்கருதித் - துப்புடைத் தும்பை மலைந் தான் றுகளறுசீர் - வெப்புடைத் தானையெம் வேந்து." இதுபூக் கூறியது ; இதனைத் திணைப்பாட்டுமென்ப. "வெலபொறியு நாடும் விழுப்பொருளுந் தணணடையுங் - கொல்களிறு மாவுங் கொடுத்த ளித்தான் - பல்புரவி - நன்மணித் திண்டேர் நயவார் தலைபனி ப்பப் - பன்மணிப் பூணான் படைக்கு." இது சிறப்புச்செய்தது. "வயிர்மேல் வளைநரல வைவேலும் வாளுஞ் - செயிர்மேற் கனல் விழிப்பச் சீறி - யுயிர்மேற் - பலகழியு மேனும் பரிமான்றேர் மன் னர்க் - குலகழியு மோர்ந்து செயின்." இது விலக்கவும் போர் துணிந்தது. "மின்னார் சினஞ்சொரிவேன் மீளிக் கடற்றானை - யொன்னார் நடுங்க வுலாய்நிமிரி - னென்னாங்கொ - லாழித்தேர் வெல்புரவி யண்ணன் மதயானைப்-பாழித்தோண் மன்னா படை." இது இரண்டனுள் ஒன்றற்கு இரங்கியது. "கங்கை சிறுவனுங் காய்கதிரோன் செம்மலு- மிங்கிருவர் வேண்டா வெனவெள்ளிக்- கங்கை - சிறுவன் படைக்காவல் பூண்டான செயிர்த்தார் - மறுவ ந்தார் தத்த மனம்." இது பெருந்தேவனார்பாட்டு ; குருக்கள் தமக்குப் படைத்தலைவரை வகுத்தது.

இனிப் போர்த்தொழிலாற் றானை நிலை வருமாறு. "குழாக் களிற் றரசர் குறித்தெழு கொலைக்களம் - விழாக்களம் போல மெய்ம்மலி யுவகைய - ராண்மை யுள்ளங் கேண்மையிற் றூத் தலி - னழுந்துபடப் புல்லி விழுந்துகளம் படுநரு - நீர்ப்பெயற் பிறந்த மொக்குள் போலத் - தாக்கிய விசையிற் சிதர்ந்து நிலம் படுநருந் - தகருந் தகருந் தாக்கிய தாக்கின் - முகமுகஞ் சிதர முட்டு வோரு - முட்டியின் முறைமுறை குத்து வோருங் - கட்டிய கையொடு காறடக் குநருங் - கிட்டினர் கையறத் தொ ட்டுநிற் போருஞ் - சுட்டிய பெயரற விட்டழிப் போருஞ் - சக் கரம் போலச் சுழன்றிட் டெறிநருஞ் - சிலைப்புடை முரசிற் றலைப்

புடைக் குநரு - மல்லிற் பிடித்தும் வில்லி னெற்றியு - மூக்கியு முரப்பியு நோக்கியு நுவன்றும் - போக்கியும் புழுங்கியு நாக்கடை கவ்வியு - மெயிறுடன் றிருகியுங் கயிறுபல வீசியு - மினைய செய்தியின் முனைமயங் குநரும் - பிறப்பும் பெருமையுஞ் சிறப்புஞ் செய்கையு - மரசறி பெருமையு முறைசொ லாண்மையு - முடையோராகிப் படைகொண மாக்கள் - சென்றுபுகு முலக மொன்றேயாதலி - னொன்றுபடு மனத்தொடு கொன்றுகொன் றுவப்பச் - செஞ்சோற்று நிலையுந் தீர்ந்துதம் மனைவியர் - தம்பிணர்ந் தழீஇ நொந்துகலுழ்ந் திரங்கவும் - புதுவது வந்த மகளிர்க்கு - வதுவை சூட்ட வானடார்ந் தோரே." எனவும், "சென்ற வுயிர்போலத் தோன்று துடலசிதைந்தோ - ளின்ற வடிபெயரா நின்றவை - மன்ற - லரமகளிர் மங்கலத்திற் காங்காங்கு வைத்த - மரவடியே போன்றன வந்து." எனவும் வரும். "வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக் - கண்கூ டிறுத்த கடன்மருள் பாசறைக் - குமரிப்படை தழீஇக் கூற்றுவினை யாடவர் - தமர்பிற ரறியா வமர்மயங் கழுவத் - திறையும் பெயருந் தோற்றினு மருணுண் - முறைதபுத் தீர வம்மி னீங்கெனப் - போர்மலைந் தொருசிறை நிற்ப யாவரு - மரவுமிழ் மணியிற் குறுகார் - நிரைதார் மார்பநின் கேழ்வனைப் பிறரே." "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் - மெய்வேல் பறியா நகும்." "நறவின் துறந்த நண்வெண் கூர்த - லிரங்கா முன்ன திரங்குகண வறுமுலைச - செம்முது பெண்டின் காதலஞ் சிறுஅன - குடப்பாற சில்லுறை போலப் - படைக்கு நோயெல்லாந் தானா யினனே." "தற்கொல பெருவிறல் வேந்துவப்பத் தானவற - கொற்கத் துலந்தானு மாகுமாம் பிற்பிற் - பலர்புகழ் செல்வந் தருமாற் பலர்தொழ - வானக வாழ்க்கையு மீயுமா லன்னதோர் - மேன்மை யிழப்பப் பழிவருவ செய்பவோ - தானேயும் போகு முயிர்க்கு." எனவரும். "கோட்டங் கண்ணியுங் கொடுதிரை யாடையும் - வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலு மொத்தன் றாதோ விவற்கே செற்றிய - திணிநிலை யலறக் கூவை போழ்ந்துதன் - வடிமா ணெஃகங் கடிமுகத் தேந்தி - யோம்புமி னோம்புமி னிவணென வோம்பாது - தொடர்கொள் யானையிற் குடர்கா றட்பக் - கன்றமர் கறவை மான - முன்சமத் தெதிர்ந்ததன் றோழற்கு வருமே." இது உதவியது.

இனி யானைநிலைக்குங் குதிரைநிலைக்குந் துறைப்பகுதியாற் கூறுவனவுங்கொள்க. அது அரசர்மேலும் படைத்தலைவர்மேலும்

ஏனையோர்மேலும் யானைசேறலுங் களிற்றின்மேலுந் தேரின் மேலுங் குதிரைசேறலுந் தம்மேலிருந்து பட்டோருடலை மோந் து நிற்றலும் பிறவுமாம். உம். "மாயத்தாற் றுக்கு மலையு மலையும்போற் - காயத்து றஞ்சாக் களிற்றெருடும்போய்ச் - சா யுகு - தொலைவறியா வாடவருந தோன்றினர் வான்மேன் - மலை யுறையுந தெய்வம்போல் வநது." "கையது கையோ டொரு துணி கோட்டது - மொய்யிலைவேன் மன்னா முடித்தலை - யைய - வுயர்பொய்கை நீராட்டிச் செல்லுமே யெங்கோ - வய வெம்போர் மாறன களிறு." இவை யானைநிலை. "பல்லுருவக் காரி பரியுருவத் தாக்கித்தன் - றெல்லை யுருவிழநத தோற்றம் போ - லெலலா - மொருகணைத்துத தாக்கி யுநவிழந்த பாய்மா - பொருகளத்து வீழ்ந்து புரண்டு." "எல்லா மாவும் வநதன வெம் மிற் - புல்லுளைக் குடுமிப் புதலவற் றந்த - செல்வ னூரு மாவ ராதே - யிருபே ரியாற்ற வொருபெருங் கூடல - விலங்கிடு பெரு மரம் போல - வுலநதினறு கொலலவன் மலைந்த மாவே." "பரு த்தி வேலிச் சீறூர் மன்ன - னுழுதத நுணட வோய்நடைப் பு ரவி - கடன்மண்டு தோணியிற படைமுகம் போழ - நெய்ம்மிதி யரு நதிய கொய்சுவ லெருத்திற்-றலைக்குடை மன்னர் தாருடைக் கலி மா - வணக்குடை முருகனகோட டதநுக் - கலங்கொடா மக ளிரி னிகழ்ந்துநிற் றவ்வே." இவை குதிரைநிலை; "நிலம்பிறக் கிடுவதுபோல" எனனும் பட்டபாட்டுமது. இவை தனித்துவா ராது தொடர்ச்சியா செய்யுட்களை வரும்; அவை தகடூர்யாத்தி ரையிலும் பாரதத்திலுங் காண்க. பாரதனூற்றுள் தனித்து வருவனவுங் கொள்க.

வென்றிமிகு வேந்தனை மெய்யத்தவழி ஒருவனை தானே மீண் டெதிர்ந்த தார்நிலை = தன்படை மேற்செய்கின்றமை கண்டு த னும் படையாளர்க்கு முனமே சென்று போர்செய்து வென்றிமிகுகின்ற வேந்தன்மேற் பொருதுழி அதுகண்டு வே றொரிடத்தே பொருகின்ற தன்றானைத்தலைவனுயினும் தனக்குத் துணைவந்த அரசருயினும் போரைக் கைவிட்டுவந்து வேந்தனை மாறுகின்றோன எதிர்ந்த தார்நிலைக்கணணும்: தாரென்பது முந் தற்றப் பொருபடையாதலின் இது தார்நிலையாயிற்று. உம். "வெய்யோ னெழாமுன்னம் வீங்கிருள் கையகலச் - செய்யோ னொளிதிகழுஞ் செம்மற்றே - கையின்று - போர்தாங்கு மன்ன னெதிர்முன் புக்குப் புகழ்வெய்யோன் - றூர்தாங்கி நின்ற தகை."

என வரும். "நிரப்பாது கொடுக்கும்" என்னும் புறப்பாட்டினுள், "இறையுறு விழுமந் தாங்கி" என்பதும் அது. "இவர்க்கீத் துண், மதிகளே சினப்போ-ரினககளிற் றியானை யியறேர்க் குரிசி-னுந் தை தந்தைக் கிவன்றந்தை தந்தை - யெடுத்தெறி ஞாட்பி னிமை யான் றச்ச - னடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனு - முறைப்புழி யோலை போல - மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே." இது வும அதன்பாற்படும்.

அன்றியும் இருவர் தலைவர் தபுதிப்பக்கமும் = இருபெருவேந்தர் தானைத்தலைவருந் தத்தம் வேந்தர்க்காகித் தாந்தாங்குதலையன்றி அத்தலைவருந் தம்மிற்பொருது வீழ்தற்கண்ணும்: பக்கமென்றதனான் அவருளொருவரொருவர வீழ்தலுங்கொள்க. உ-ம். "ஆதி சான்ற மேதகு வேட்கையி - னானுங் கோளு மயங்கிய ஞாட்பின் - மதியமு ஞாயிறும் பொருவது போல - வொருத்தி வேட்கையி னுடல்வயிற் றிருவர் - செருக்கூர் தண்டி னெருக்குறு மொனவு - மரவணி கொடியோற் கிளையோன் சிறுவனும் - பெரு விறல் வீமற் கிளையோன் சிறுவனு-முடன்றமர் தொடங்கிய காலை யடங்கா - ருடங்குவருஞ் சீற்றத்துக் கைப்படை வழங்கி - யிழந்த வை சொடாஅர் கிடந்தன வாங்கிக் - தோமிசைத் தமியர் தோன்றுர் பார்மிசை - நின்றுசுடர் நோக்கியு மொன்றுபடத் திருகியும் - தும்பியடி பிணங்கு மன்னணித் தோற்றமொடு - கொடிகொடி பிணங்கி வீழ்வன போல - வொருவயின் வீழ்ந்தது காலை-யிருபெரு வேந்தரும் பெரிதுவந் தனரே." இப்பாரதப்பாட்டினுள் அவ்வாருதல் கண்டுகொள்க. இனித் தலைவரையன்றிப் பிறரும் அவ்வாறு பொரினும் அப்பாற் படுத்துக.

உடைபடை ஒருவன் பக்கு ஒருவனைக் கூழைதாங்கிய எருமையும் = தனது உடைந்த படைக்கண்ணே ஒரு படைத்தலைவன் சென்றுநின்று அங்ஙனம் கெடுக்கு மாற்றுவேந்தன் படைத்தலைவனை அவன்கொண்டு நின்ற பின்னணியோடே தாங்கினை கடாப்போலச் சிறக்கணித்து நிற்குநிலைமைக்கண்ணும்: ஒருவனொருவனைத் தாங்கின எருமையென முடிக்க: உ-ம். "ஓறாங் கனற்றச் சிறக் கணித்துச் செல்லுங்கா - லேற்றெருமை போன்ற னிகல்வெய் யோன் - மாற்றான் - படைவரவு காத்துத்தன பல்படையைப் பின்காத் - திடைவருங்காற் பின்வருவார் யார்." எனவரும்.

படையறுத்துப் பாழிகொள்ளும் ஏமத்தானும் = கைப்படையை நூறிக்கி மெய்யாற் போர்செய்யும் மயக்கத்தின் கண்ணும்: பாழி, வலி; இது ஆகுபெயர்; உம். "கொல்லேறு பாய்ந்தழிந்த கோடுபோற் றண்டிறுத்து - மல்லேறு தோள்வீமன் மாமனைப் - புல்லிக்கொண் - டாருத போர்மலைந்தா ரங்கரசர் கண்டார்த் - தா - ரோருட லாய வொன." என்னும் பாரதப்பாட்டுக்கொள்க. "நீலக் கச்சைப் பூவா ராடைப் - பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன் - மேல்வருங் களிற்றொடு வேறுறந்தினியே - தன்னுந் துறக்குவன் போலு மெனணு - ரொஃகுடை வலத்த மாரொடு பரதர்க் - கையின் வாங்கித் தழீஇ - மொய்ம்பி னூக்கி மெய்க கொண் டனனே." எனபதும் அது.

களிறெறிந் தெதிர்ந்தோர் பாடும் = மாற்றுவேந்தன் ஊர்ந்து வந்த களிற்றைக் கையெறிந்தானுங் கடுக்கொணடெறிந்தானும் விலக்கியவனையும் அக்களிற்றையும் போர்செய்தோர் பெருமைக் கண்ணும்: உம். "இடியா னிடிமுகிலு மேறண்ணு மென்னும் - படியாற் பகடொன்று மீட்டு - வடிவே - லெறிந்தார்த்தார் மள்ள ரிமையாத கண்கொண் - டறிந்தார்த்தார் வானோரு மாங்கு." எனவரும். "வானவர் போரிற் றானவர்க் கடந்த - மான வேந்தன் யானையிற் றனது - பல்படை நெரிவ தொல்லான வீமன் - பிறக் கிடாக் கொடாணறன் முகத்தெறிந் தார்த்துத் - தானெதிர் மலைந்த காலை யாங்கதன் - கோடுழக் கிழிந்த மார்பொடு நிலஞ்சோர்ந்து - போர்க்கொள வளாகந் தேர்த்துக ளனைத்திறு - மிடை கொள லின்றிப் புடைபெயர்ந்து புரண்டு - வருந்தா வுள்ளமொடு பெயர்ந்தனன் - பெருந்தகை யாண்மையொடு பெயர்த்தலோ வரிதே." இப்பாரதப்பாட்டும் அப்பாற்படும். இது களிறெறிந் தான் பெருமைகூறுதலின் யானை நிலையுள் அடங்காதாயிற்று.

களிற்றொடுபட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலையும் = அங்ஙனம் நின்று களிற்றொடுபட்ட வேந்தனைக் கொன்ற வேந்தன் படையாளர் வியந்து பட்டோனைச் சூழ்ந்துநின்று ஆடுந் திரட்சிக்கண்ணும்: அமலுதல் நெருக்குதலாதலின் அமலை யென்பதூஉம் அப்பொருட்டாயிற்று: உம். "ஆளுங் குரிசி லுவகைக் களவென்னுங் - கேளன்றிக் கொன்றுகோ கேளாகி - வாளை வீசி - யாடினா ராரத்தா ரடிதோய்ந்த மணவாங்கிச் - சூடினார் வீழ்ந்தானைச் சூழ்ந்து." எனவரும். "நான்மருப் பில்லாக் கானவில் யானை - வீமன் வீழ்த்திய துடனெறிந் தாங்கு - மாமுது

மதுரை மணிநிறப் பாகனே - டாடமர் தொலைத்த லாற்றன் றேரொடு - மைத்துனன் பணியின் வலமுறை வந்து - கைத்தலங் கதிர்முடி யேற்றி நிற்றந் - திறைஞ்சின னேவர்க் கிடையோ னதுகண்டு - மறந்தீர் மன்னனு மிறைஞ்சித் தனுது - வேழம் விலக்கி வினைமடிந திருப்பச் - சூர்மருங் கறுத்த நெடுவேள் போல - மலைபுரை யானையுந் தலைவனுங் கழிய - வாளுகு களத்து வாள்பல வீசி - யொன்று மன்னரு மாடினர் துவன்றி - யின்று வின்ப மெய்தித் - தன்னமர் கேளிரு முன்னூர்த் தனரோ." இப்பாரதப் பாட்டும் அது.

**வா**ள்வாய்த்து இருபெருவேந்தர் தாமுஞ் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக்கண்ணும் = இருபெருவேந்தர் தாமும் அவர்க்குத் துணையாகிய வேநதருந் தானைத்தலைவருந் தானையும் வாட்டொழின்முற்றி ஒருவரும் ஒழியாமற் களத்துவீழ்ந்த தொகைநிலைக்கண்ணும்: உம். "வருதார் தாங்கிய மரபிகல் யாவது - பொருதாண் டொழிந்த மைந்தர்புண் டொட்டுக் - குருதிச் செங் கைக் கூந்த நீட்டி - நிறங்கிளர் ருருவிற் பேஎய்ப் பெண்டி - ரொடுத் தெறி யனந்தர்ப பறைச்சீர் தூங்கப் - பருந்தரு துற்ற தானை யொடு செருமுனிந்து - மறத்தின் மண்டிய விறற்போர் வேந்தர் - தேர்மாய்ந தனரோ குடைதுளங் கினவே - யுரைசால் சிறப்பின் முரசொழிந் தனவே - பன்னூ றடுக்கிய வெறுபடு பஞில - மிடங் கெட வீண்டிய வியன்கட் பாசறைக் - களங்கொளற் குரியோ ரின்றித் தெருமர - வுடன்வீழுந தன்று லமரோ பெண்டிரும் - பாக டகு மிசையார் பனிநீர் மூழ்கார் - மார்பகம் பொருநதி யாங்கமைந் தனரோ - வாடாப் பூவி னிமையா நாட்டத்து - நாற்ற வுணவி னோரு மாற்ற - வரும்பெற லுலக நிறைய - விருநதுபெற் றனரால பொலிகநும் புகழே." எனவரும்.

**செ**ருவகத்து இறைவன் வீழ்ந்தெனச் சினைஇ ஒருவன் மண்டிய நல்லிசை நிலையும் = போரிடத்தே தன்வேந்தன் வஞ்சத்தாற் பட்டானாகச் சினங்கொண்ட மனத்தனாய்ப் பெரும்படைத்தலைவன தலைமயங்கிப் பொருத நல்லபுகழைப் பெற்ற நிலைமைக்கண்ணும் : அது குருகுலவேந்தனைக் குறங்கறுத்தஞான்று இராஆறொறிந்து பாஞ்சாலரையும் பஞ்சவர்மக்களைவரையுங் கொன்று வென்றிகொண்ட அச்சுவத்தாமாவின் போர்த்தொழிலபோல்வன. தன்னரசன் அறப்போரிற் படாது வஞ்சனையாற் படுதலின் அவனுக்குச் சினஞ்சிறந்தது. இச்சிறப்பில்லாத தும்பையும் இக்கலிப்பூழிக்கா

தும்பைத்திணை என்றும் பொருள்கொள்க. பொருள் இடமாகத் துறை இடத்தியல் பொருளாங்கால் ஏனைத் திணைக்கட் கூறினாற் போல ஒன்று நிகழ்ந்தபின் ஒன்றுநிகழாது இரண்டுபடைக்கும் ஒருகாலத்து இத்திணை நிகழுமென்றற்குப் புல்லித்தோன்றும் என்றார். பலபெருங் காதமாகிய நெடுநெறியிடைத் துணிந்த இடத்தையும் உலகந் துறையென்பதுபோல இச்சூத்திரத்துத் துறையைத் தொகுதியுடன் இறுதி காட்டிற்றென்றுணர்க. இவ்விலக்கணம் மேலவருகின்ற திணைகட்கும் ஒக்கும். (கஎ)

எரு. வாகை தானே பாலைய து புறனே.

இது வாகைத்திணை பாலையெனப்பட்ட அகத்திணைக்குப் புறனுமென்கின்றது. (இ-ள்) வாகை தானே = இனிக் கூறுகின்ற புறத்திணையுள் வாகையெனப்பட்டது தானே: பாலையது புறனே = பாலையெனனும் அகத்திணைக்குப் புறனும். எ-று. என்னை? பாலைக்குப் புணர்ச்சியின் நீங்கி இல்லறநிகழத்திப் புகழெய்துதற்குப் பிரியுமாறுபோலச சுற்றத்தொடர்ச்சியின் நீங்கி அறப்போர் செய்து துறக்கம்பெறுங் கருத்தினாற் சேறலானும் வாளினுந் தாளினும் நிறையினும் பொறையினும் வென்றியெய்துவோரும் ஏனையோரை நீங்கிச் சேறலானும் பிரிவுளதாயிற்று. பாலை தனக்கென ஓர்நிலமின்றி நால்வகை நிலத்தும் நிகழுமாறுபோல முற்கூறிய புறத்திணைநான்கும் இடமாக வாகைத்திணை நிகழ்தலிற தனக்கு நிலமினறாயிற்று. "நாளு நாளு மாள்வினை யழுங்க-வில்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழ்" என ஆள்வினைச் சிறப்புககூறிப் பிரியுமாறுபோல இதற்குந் துறக்கமே எய்தும் ஆள்வினைச் சிறப்புக்கூறலுங் கொள்க. பாலை பெருவரவிற்றாய்த் தொகைகளுள் வருமாறுபோல வாகையும் பெருவரவிற்றாய் வருதலுங்கொள்க. (கஅ)

எச. தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்த லென்ப.

அவ்வாகைத்திணைக்குப் பொதுவிலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) தாவில் கொள்கைத் தத்தங் கூற்றை = வலியும் வருத்தமுமின்றி இயல்பாகிய ஒழுக்கத்தானே நான்கு வருணத்தோரும் அறிவருந் தாபதர் முதலியோருந் தம்முடைய கூறுபாடுகளை: பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப = இருவகைப்பட்ட மிகுதிப்படு

த்தலென்று கூறுவர் ஆசிரியர். எ-று. இருவகையாவன, தன்னைத் தானே மிகுதிப்படுத்தலும் பிறர் மீக்கூறுபடுத்தலுமாம். இனி இருவகை உறழ்ச்சியாற் பெற்ற வென்றியை வாகையெனவும் இயல்பாகப் பெற்றவென்றியை முல்லையெனவுங் கூறுவர். படு த்தலென்னாது படுத்தலெனப் பிறவினையாற் கூறினார், அவர் தம்மி னுறழாதவழியும் ஒருவன் அவரை உறழ்ந்து உயர்ந்தோன் இவனெ ன்றுயர்த்தலும் வாகையென்றற்கு; ஒன்றனோடு ஒப்பு ஒரீஇக் காணாது மாணிக்கத்தினை நன்றென்றாற்போல உலகமுழுதும் அறியும் உயர்ச்சியுடைமையும் அது. தாவில்கொள்கையெனவே இரணியனைப்போல வலியானும் வருத்தத்தானுங் கூறுவித்துக் கோடல் வாகையன்றாயிற்று. (கக)

எரு. அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமு
மைவகை மரபி னரசர் பக்கமு
மிருமூன்று மரபி னேனோர் பக்கமு
மறுவில் செய்தி மூவகைக் காலமு
நெறியி னாற்றிய வறிவன் றேயமும்
நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்
பாலறி மரபிற் பொருநர் கண்ணு
மனைநிலை வகையோ டாங்கெழு வகையிற்
றொகைநிலை பெற்ற தென்மனார் புலவர்.

இது வாகைத்திணைக்குப் பொதுவிலக்கணங் கூறினார், இன் னும் அதற்கேயாவதோர் சிறப்பிலக்கணம் பொதுவகையாற் கூறு கின்றது; மேற்கூறிவருகின்றாற்போலத் துறைப்படுத்திக் கூறுதற் கேலாதுபரப்புடைச் செய்கை பலவற்றையுந் தொகுத்து ஒரோ வொன்றாக்கி எழுவகைப் படுத்திக் கூறலின். (இ-ள்.) அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும் = ஆறு கூற்றினுட் பட்ட பார்ப்பியற் கூறும்: ஆறு பார்ப்பியலென்னாது வகையென்றதனான் அவை தலை இடை கடையென ஒன்று மும்மூன்றாய்ப் பதினெட்டாம் என்று கொள்க; அவை ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித் தல் கொடுத்தல் கோடல் என ஆறும். இருக்கும் எசுரும் சாமமும் இவை தலையாய ஓத்து; இவை வேள்விமுதலியவற்றை விதித் தலின் இலக்கணமுமாய், வியாகரணத்தாற் காரியப்படுதலின் இலக்கியமுமாயின. அதர்வமும் ஆறங்கமுந் தருமநூலும் இடை யாய ஓத்து; அதர்வம் வேள்விமுதலிய ஒழுக்கங்கூறாது பெரும்

பான்மையும் உயிர்கட்கு ஆக்கமேயன்றிக் கேடுசூழும் மந்திரங்க
ளும் பயிறலின் அவற்றோடு கூறப்படாதாயிற்று. ஆறங்கமாவன,
உலகியற்சொல்லை ஒழித்து வைதிகச்சொல்லை ஆராயும் நிருத்
தமும், அவ்விரண்டையும் உடனாராயும் ஐந்திரியத்தொடக்கத்து
வியாகரணமும், போதாயனீயம் பாரத்துவாசம் ஆபத்தம்பம் ஆத்
திரையம் முதலிய கற்பங்களும், நாராயணீயம் வாராகம் முதலிய
கணிதங்களும், எழுத்தாராய்ச்சியாகிய பிரமமும், செய்யுளிலக்
கணமாகிய சந்தமுமாம். தருமநூலாவன, உலகியல்பற்றி வரும்
மனுமுதலிய பதினெட்டும்; இவை வேதத்திற்கு அங்கமானமை
யின் வேறாயின. இனி இதிகாச புராணமும் வேதத்திற்கு மாறு
படுவாரை மறுக்கும் உறழ்ச்சிநூலும் அவரவா அதற்கு மாறுபடக்
கூறும் நூல்களும் கடையாய ஓத்து. எழுத்துஞ் சொல்லும் பொ
ருளும் ஆராய்ந்து இம்மைப்பயன் தருதலின் அகத்தியந் தொல்
காப்பியம் முதலிய தமிழ்நூல்களும் இடையாய ஓத்தாமென்று
ணர்க; இவையெல்லாம் இலக்கணம். இராமாயணமும் பாரதமும்
போல்வன இலக்கியம். இனித் தமிழ்ச்செய்யுட்கண்ணும் இறைய
னாரும் அகத்தியனாரும் மார்க்கண்டேயனாரும் வான்மீகனாருங் கவு
தமனாரும் போல்வார் செய்தன தலையும், இடைச்சங்கத்தார் செய்
தன இடையுங், கடைச்சங்கத்தார் செய்தன கடையுமாகக்கொ
ள்க. இங்ஙனம் ஓத்தினையும் மூன்றாகப் பகுத்தது, அவற்றின்
சிறப்புஞ் சிறப்பின்மையும் அறிவித்தற்கு. இவற்றுட் டருக்க
மூங் கணிதமும் வேளாளர்க்கும் உரித்தாம். இனி ஓதுவிப்பனவும்
இவையேயாகலின் அவைக்கும் இப்பகுதிமூன்றும் ஒக்கும். ஓது
வித்தலாவது கொள்வோனுணர்வுவகை அறிந்து அவன் கொளவ
ரச் கொடுக்கும் ஈவோன்றன்மையும் ஈதலியற்கையுமாம். வேட்ட
லாவது, ஐந்தீயாயினும் முத்தீயாயினும் உலகியற்றீயாயினும் ஒன்
றுபற்றி மங்கல மரபினாற் கொடைச்சிறப்புத்தோன்ற அவிமுத
லியவற்றை மந்திரவிதியாற் கொடுத்துச் செய்யுஞ்செய்தி. வே
ளாண்மைபற்றி வேள்வியாயிற்று. வேட்பித்தலாவது, வேள்வியா
சிரியர்க்கோதிய இலக்கணமெல்லாம் உடையனாய் மாணாக்கர்க்கு
அவன் செய்த வேள்விகளாற் பெறும்பயனைத் தரவல்லவனாதல்;
இவை மூன்று பகுதியவாதல் போதாயனீயம் முதலியவற்றானு
ணர்க. கொடுத்தலாவது, வேள்வியாசானும் அதற்குத்துணையாயி
னாரும் ஆண்டுவந்தோரும் இன்புறுமாற்றான் வேளாண்மையைச்
செய்தல். கோடலாவது, கொள்ளத்தகும்பொருள்களை அறிந்து
கொள்ளுதல். உலகுகொடுப்பினும் ஊன்கொடுப்பினும் ஒப்பநிக

ழும் உள்ளம் பற்றியுந், தாஞ் செய்வித்த வேள்விபற்றியுங், கொடுக்கின்றான் உவகைபற்றியுங், கொள்பொருளின் ஏற்றிழிவுபற்றியுந், தலை இடை கடையென்பனவுங்கொள்க. இனி வேட்பித்தன்றித் தனக்கு ஒத்தினாற்கோடலுங் கொடுப்பித்துக் கோடலுந் தானே வேட்டற்குக் கோடலுந் தாயமின்றி இறந்தோர் பொருள் கோடலும் இழந்தோர் பொருள் கோடலும் அரசு கோடலுந் துரோணாசாரியனைப் போல்வார் படைக்கலங் காட்டிக்கோடலும் பிறவுங் கோடற்பகுதியாம். பார்ப்பியலென்றது பக்கமென்பதனானே பார்ப்பார் வினை வருணத்துக்கட்கொண்ட பெண்பாலகட் தோன்றின வருணத்தார்க்குஞ் சிகையும் நூலும் உளதேனும் அவர் இவற்றிற்கெல்லாம் உரியரன்றிச் சிலதொழிற்கு உரியரென்பதுகொள்க. உ-ம். "ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்த - லீத லேற்றலென் றாறுபுரிந் தொழுகு - மறம்புரி யந்தணர் வழிமொழி யொழுக்கம்." இஃது அந்தணர்க்குக் கூறிய பொது. "முறையோதி னன்றி முளரியோ னல்லன் - மறையோதி னிதுவே வாய்மை - யறிமினோ - வீன்றாள் வயிற்றிருந்தே யெம் மறையு மோதினான் - சான்றான் மகனொருவன் றான்." இது ஓதல். இனி ஓதற்சிறப்பும் ஓதினாற்கு உளதாஞ் சிறப்புங் கூறுதலுங்கொள்க. "இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற் - றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றா - லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன் - மம்ம ரறுக்கு மருந்து." "ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார் - நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு - வேற்றுநா டாகா தமவேயா மாதலா - லாற்றுணா வேண்டுவ தில்." "ஒத்த முயற்சியா னொத்து வெளிப்படினு - நித்திய மாக நிரம்பிற்றே - யெத்திசையுந் - தாவாத வந்தணர் தாம்பயிற்றிக் காவிரிநாட் - டோவாத வோத்தி னொலி." இது ஓதுவித்தல். "எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய் - நுண்பொருள் காண்ப தறிவு." இஃது ஓதுவித்தற்சிறப்பு. "நன்றாய்ந்த நீணிமிர் சடைமுது முதல்வன்வாய் - போகா தொன்று புரிந்த வீரிரண்டி - னாறுணர்ந்த வொருமுதுநூ லிகல் கண்டோர் மிகல்சாய்மார் - மெய்யன்ன பொய்யுணர்ந்து பொய் யோராது மெய்கொளீஇ - மூவேழ் துறையு முட்டின்று போகிய - வுரைசால் சிறப்பி னுரவோன் மருக - வினைக்கு வேண்டிநீ பூண்டபுலப் புல்வாய்க் - கலைப்பச்சைச் சுவற்பூண் ஞாண்மிசைப் பொலிய - மறங்கடிந்த வருங்கற்பி னறம்புகழ்ந்த வலைசூடிச் - சிறுநுதற் பேரகல்குற் சில்சொல்லிற் பல்கூந்த - னினக்கொத்தநின்

றுணைத்துணைவியர் தமக்கமைந்த தொழில்கேட்பக் - காஅ டென்று நாடென்றுங் கிரொழி - னீடமுட் டாஅது நீர்நாண நெய்வழங்கியு - மெண்ணுணப் பலவேட்டு மண்ணுணப் புகழ்பரப்பியு - மருங்கடிப் பெருங்காலை விருந்துற்றநின் றிருந்தேந்துநிலை - யென்றுங் காண்கதில் லம்மயாமே கொடாஅது - பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற் - பூவிரி புதுநீர்க் காவிரி புரக்குந் - தண்புனற் படப்பை யெம்மூ ராங்க - ணுண்டுந் தின்று மூர்ந்து மாடுகஞ் - செல்வ லத்தை யானே செல்லாது - மழையண் ணாப்ப நீடிய நெடுவரைக் - கழைவள ரிமயம் போல - நிலீய ரத்தைநீ நிலமிசை யானே." இதனுள் வேட்டவாறும் ஈந்தவாறுங் காண்க. "ஈன்ற வுலகளிப்ப வேதிலரைக் காட்டாது - வாங்கியதா யொத்தானம் மாதவத்தோ - னீந்த - மழுவா ணெடியோன் வயக்கஞ்சால் வென்றி - வழுவாமற் காட்டிய வாறு." இது பரசிராமனைக் காசிபன் வேட்பித்த பாட்டு. "நளிகட லிருங்குட்டத்து" என்னும் புறப்பாட்டினுள் அந்தணன் வேட்பித்தலும் அரசன் வேட்டலும் வந்தது. "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல் - குலனுடையான் கண்ணே யுள." இது ஈதல். "ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை - வைத்திழக்கும் வன்க ணவர்." இது ஈதற் சிறப்பு. "நிலம் பொறை யாற்றா நிதிபல கொண்டுங் - குலம்பெறு தீங் கந்தணர் கொள்ளார் - நலங்கிளர் - தீவா ய்விசொரியத் தீ விளங்கு மாறுபோற் - றூவா தொளிசிறந்த தாம்" இது ஏற்றல். "தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால் - வான்சிறிதாப் போர்த்து விடும்." இது ஏற்றற் சிறப்பு. ஓதுவித்தலும் வேட்பித்தலும் ஏற்றலும் அந்தணர்க்கே உரிய.

ஐவகை மரபின் அரசர் பக்கமும் = ஓதல் வேட்டல் ஈதல் காத்தல் தண்டஞ்செய்தல் என்னும் ஐவகையிலக்கணத்தையுடைய அரசியற்கூறும்: வகையென்றதனன் முற்கூறியமூன்றும் பொதுவும் பிற்கூறுமிரண்டுஞ் சிறப்புமாதல்கொள்க. பார்ப்பார்க்குரியவாக விதந்த வேள்வியொழிந்த வேள்விகளுள் இராசசூயமுந் துரங்கவேள்வியும்போல்வன அரசர்க்குரிய வேள்வியாம். கலிங்கங் கழுத்து யாத்துக் குளம்புங் கோடும் பொன்னணிந்த புனிற்றாவினையுங் கழுகுமுதலியன செறிந்த படப்பைசூழ்ந்த மனையுந் தண்ணடையுங் கன்னியரும் பிறவுங் கொடுத்தலும் மழுவாணெடியோனைப்ப உலகுமுதலியன கொடுத்தலும் போல்வன அவர்க்குரிய ஈதலாம். படைக்கலங்களானும் காற்படையானுங் கொ

டைத்தொழிலானும் பிறவாற்றானும் அறத்தின்வழாமற் காத்தல் அவர்க்குரிய காப்பாம். அங்ஙனங் காக்கப்படும் உயிர்க்கு ஏதஞ் செய்யும் மக்களையாயினும் விலங்கையாயினும் பகைத்திறத்தை யாயினும் அறஞ்செய்யா அரசையாயினும் விதிவழியாற் றண்டித்தல் அவர்க்குரிய தண்டமாம். இஃது அரசர்க்கு அறமும் பொருளும் இன்பமும் பயக்கும். வகையென்றதனானே களவுசெய்தோரிருக்கையிற் பொருள்கோடலும் ஆறிலொன்றுகோடலுஞ் சுங்கங்கோடலும் அந்தணர்க்கு இறையிலி கொடுக்குங்கால் இத்துணைப்பொருள் நும்மிடத்து யான்கொள்வலெனக் கூறிக்கொண்டு அதுகோடலும் அறம்பொருளாகப் பகைவர்நாடு கோடலுந் தமரும் அந்தணரும் இல்வழிப் பிறன்மனைக் கோடலும் பொருளில வழி வாணிகஞ் செய்துகோடலும் அறத்திற் றிரிந்தாரைத் தண்டத்திறக்குமாறு பொருள்கோடலும் போல்வனகொள்க. அரசியலென்றது பக்கமென்றதனான் அரசர் எனைவருணத்தார்கட் கொண்ட பெண்பால்கட் டோன்றிய வருணத்துப்பகுதியோருஞ் சில தொழிற்குரியர் என்றுகொள்க. உ-ம். "சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென் - றைந்துடன் போற்றி யவைதுணை யாக - வெவ்வஞ் சூழாது விளங்கிய கொள்கை - காலை யன்ன சீர்சால் வாய்மொழி - யுருகெழு மரபிற் கடவுட் பேணியர் - கொண்டதீயின் சுடரொழுந் தோறும் - விசும்புமெய் பரந்த பெரும்பெயராவுதி" எனவும், "கேள்வி கேட்டுப் படிவ மொடியாது - வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்பச் - சாயறல் கடுக்குந் தாழிருங் கூந்தல் - வேறுபடு திருவினின் வாழி வாழியர் - கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம் - பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம் - வரையக நண்ணிக் குறும்பொறை நாடித் - தெரியுண் கொண்ட சிற்றடைப் பல்பொறிக் - கவைமரங் கடுக்குங் கவலைய மருப்பிற் - புள்ளியிரலைத் தோலூ னுதிர்த்துத் - தீதுகளைந் தொசிய திகழ்விடு பாண்டில் - பரிதி போகிய படைகிளை கட்டி - யெஃகுடை யிரும்பினுள்ளமைத்து வல்லோன் - சூடுநிலை யுற்ற சுடர்விடு தோற்றம் - விசும்பாடு மரபிற் பருந்துா றளப்ப - நலம்பெறு திருமணி கூட்டுநற் றோ - ளொடுங்கி ரோதி யொண்ணுதல் கருவி - னெண்ணியன் முற்றி யீரறிவு புரிந்து - சால்புஞ் செம்மையு முளப்படப் பிறவும் - காவற் கமைந்த வரசுதுறை போகிய - வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க் - கருங்கட னிறுத்த செருப்புகன் மொய்ம்ப - வன்னவை மருண்டனெ னல்லே னின்வயின் - முழுதுணர்ந் தொழுகு நரைமூ தாளனை - வண்மையு மாண்பும் வளனும் மெச்சமும் -

தெய்வமும் யாவதுந் தலைமுடை யோர்க்கென - வேறுபுல னனந்தலை பெயரக் - கூறுவை பெருமநின் படிமை யோனே." எனவும் வருவனவற்றுள் ஓதியவாறும் வேட்டவாறுங்காண்க. ‖" ஒருமழுவாள் வேந்த னொருமூஉ வெழுகா - லரசடு வென்றி யளவோ - வுரைசான்ற - வீட்டமாம் பல்பெருந்தா ணெங்கும் பசுப்படுத்து. வேட்டநாள் பெற்ற மிகை." இதுவும் வேட்டல். ‖" விசையந்தப்பிய" என்னும் பதிற்றுப்பத்து ஈகை கூறிற்று. "ஆபயங் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர் - காவலன் காவா னெனின்." இது காவல்கூறிற்று. ‖" கடுங்கண்ண கொல்களிற்றான்" என்னும் புறப்பாட்டுட் படைக்கலங் கூறியவதனாற் காத்தல்கூறியவாறுங் காண்க. "தொறுத்தரு நீள்வய லாரல் பிறழ்நவு - மேறுபொருதசெறு வுழாதுவித் துநவும் - கரும்பின் பாத்திப் பூத்த நெய்த - லிருங்க ணெருமை யிருநிரை தடுக்குநவும் - கலிகெழு துணங்கை யாடிய மருங்கின் - வளைதலை மூதா வாம்ப லார்நவு - மொலிதெங் கிமிழ்மருதிற் புனல்வாயிற் பூம்பொய்கைப் - பாடல் சான்ற பயங்கெழு வைப்பி - னாடுகவி னழிய நாமந் தோற்றிக - கூற்றடூஉ நின்ற யாக்கை போல - நீசிவந் திறுத்த நீரழி பாக்கம் - விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத் - திரிகாய் விடத்தரொடு காருடை போகிக் - கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க - வூரிய நெருஞ்சி னீருகு பறந்தலைத் - தாதெரு மறுத்த கலியழி மன்றத் - துள்ளங் கழியப் பூக்குர் மிடறபுத் - துள்ளுநர் பனிக்கும் பாழா யினவெங் - காடே கடவுள் மேன புறவே - யொள்ளிழை மகளிரொடு மள்ளர்மேன யாறே - யவ்வனை தவ்வினைத் தன்றியு ஞாலத்துக் - கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக் - குடிபுறந் தருநர் பார மோம்பி - யழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது - மழைவேண்டு புலத்து மாறி நிற்ப - நோயொடு பசியிகந் தொரீஇப் - பூத்தன்று பெருமநீ காத்த நாடே." இதனுள் மறத்திற் சென்று நாட்டை அழித்தவாறும் அறத்திற் றிரிந்த வேந்தனையழித்து அவன் நாட்டைக் குடியோம்பிக் காத்தவாறுங் கூறிற்று. "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் - களைகட் டதனொடு நேர்." இது தண்டம்.

‖இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் = ஓதலும் வேட்டலும் ஈதலும் உழவும் நிரையோம்பலும் வாணிகமுமாகிய ‖ அறுவகை இலக்கணத்தையுடைய வணிகர்பக்கமும், வேதம் ஒழிந்தன ஓதலும் ஈதலும் உழவும் நிரையோம்பலும் வாணிகமும் வழி

பாடமாகிய அறுவகை இலக்கணத்தையுடைய வேளாளர் பக்கமும்: வாணிகரையும் வேளாளரையும் வேறுகூறாது இருமூன்று மரபினென்றேனக் கூட்டவோதினர் வழிபாடும் வேள்வியும் ஒழிந்த தொழில் இருவர்க்குமொத்தலின். இனி வேளாளர்க்கு வழிபாடு கொள்ளாது பெண்கோடல்பற்றி வேட்டல் உளதென்று வேட்டலைக்கூட்டி ஆறென்பாருமுளர். வழிபாடு இருவகை வேளாளர்க்கும் உரித்து. இனி வேட்டலைக் கூட்டுவார் அரசராற் சிறப்பெய்தாத வேளாளர்க்கே வழிபாடு உரித்தென்பர். பக்கமென்பதனான் வாணிகர்க்கு வேளாளர் கன்னியர்கட் டோன்றினரையும் அடக்குக. ஈண்டுப் பக்கத்தாராகிய குலத்தோர்க்குந் தொழில்வரையறை அவர்நிலைகளான் வேறுவேறுபடுதல்பற்றி அவர்தொழில்கூறாது இங்ஙனம் பக்கமென்பதனான் அடக்கினர். இவை ஆண்பால்பற்றி உயர்ச்சிகொண்டன. உம். "ஈட்டிய தெல்லா மிதன்பொருட் டென்பதே - காட்டிய கைவண்மை காட்டினார் - வேட்டொறுங் - காமருதார்ச் சென்னி கடல்சூழ் புகார்வணிகர் - தாமரையுஞ் சங்கும்போற் றந்து." இது வணிகரீகை. "உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும் - பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே - பிறப்போ ரன்ன வுடல்வயிற் றுள்ளுஞ் - சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியு - மொருகுடிப் பிறந்த பல்லோருள்ளும் - மூத்தோன் வருக வென்னா தவரு - ளறிவுடை யோனா றரசுஞ் செல்லும் - வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங் - கீழ்ப்பா லொருவன் கற்பின் - மேற்பா லொருவனு மவன்கட் படுமே." இது வேளாளர் ஓதலின்சிறப்புக் கூறியது. "ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை - வைத்திழக்கும் வன்கணவர்." இது இருவர்க்கும் ஈதற்சிறப்புக் கூறிற்று. "போர்வாகை வாய்த்த புரவலரின் மேதக்கா - ரோர்வாழ்க வென்பதற் கேதுவாஞ் - சீர்சா - லுரைசாக்கு மன்னர்க் கொளிபெருகத் தாந்த - நிரைகாத்துத் தந்த நிதி." இது வேளாளர் நிரைகாத்தது. "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந் - தொழுதுண்டு பின்செல் பவர்." இது உழவுத்தொழிற்சிறப்பு இருவர்க்குங் கூறியது. "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப் - பிறவுந் தமபோற் செயின்." இது வாணிகச்சிறப்பு இருவர்க்குங்கூறியது. "இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை - விடுப்ப வொழிதலோ டின்ன - குடிப்பிறந்தார் - குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ - டொன்றா வுணரற்பாற் றன்று." இது வழிபாடுகூறியது; ஏனைய வந்துழிக்காண்க.

மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும் = காமம் வெகுளி மயக்கமில்லாத ஒழுகலாற்றினை இறப்பெதிர்வுநிகழ்வென்னும் மூவகைக் காலத்தினும் வழங்கும் நெறியான் அமைத்த முழுதுணர்வுடையோன் பக்கமும் : தேயத்தைக் "கிழவோ டேஎத்து" என்றாற்போலக் கொள்க. உம். "வாய்மை வாழ்நர் மூதறி வாள - நீயே யொருதனித் தோன்ற லுறைபதி - யாருமி லொருசிறை யானே தேரி - னவ்வழி வந்தநின் னுணர்வுமுதற் றங்குந் - தொன்னெறி மரபினு மூவகை நின்றன - காலமு நின்னொடு வேறென் - பாரோவு பெருமநிற் றேர்கு வோரே." எனவரும். "வாடாப் போதி மரகதப் பாசடை - மரநிழ லமர்ந்தோ னெஞ்சம் யார்க்கு - மருளின் நீங்கே னிறைந்துகனி ஞெகிழ்ந்து - மலரினு மெல்லி தென்ப வதனைக் - காமர் செவ்வி மாரன் மகளிர் - நெடுமா மழைக்கண் விலங்கிநிமிர்ந் தெடுத்த - வாளும் போழ்ந்தில வாயின் - யாதோ மற்றது மெல்லிய வாறே." இதுவும் அது. கலசயோனியாகிய அகத்தியன் முதலியோரும் அறிவனென்றுணர்க.

நாலிருவழக்கிற் றாபதப் பக்கமும் = அவ்வறிவர்கூறிய ஆகமத்தின்வழிநின்று வீடுபெற முயல்வார்க்கு உரியவாகிய எண்வகை மார்க்கத்துத் தவம்புரியுங்கூறும் : வழக்கென்றதனான் அந்நாலிரண்டுந் தவம்புரிவார்க்கு உரியனவுந் தவஞ்செய்து யோகஞ்செய்வார்க்கு உரியனவுமென இருவகையவென்றுகொள்க. அவற்றுட் தவஞ்செய்வார்க்கு உரியன ஊணசையின்மை நீர்நசையின்மை வெப்பம் பொறுத்தல் தட்பம்பொறுத்தல் இடம்வரையறுத்தல் ஆசனம் வரையறுத்தல் இடையிட்டுமொழிதல் வாய்வாளாமை என எட்டும்; இவற்றிற்கு உணவினும் நீரினுஞ்சென்ற மனத்தைத்தடுத்தலும், ஐந்தீநாப்பணும் நீர்நிலையினும் நிற்றலுங், கடலுங் காடும் மலையும் முதலியவற்றில் நிற்றலுந், தாமரையும் ஆம்பலும் யாமையும் முதலிய ஆசனத்திருத்தலும், உண்டற்காலை உரையாடாமையுந், துறந்தகாற்றொட்டு வாய்வாளாமையும் பொருளென்றுணர்க. இனி யோகஞ்செய்வார்க்குரியன, இயமம் நியமம் ஆசனம் வளிநிலை தொகைநிலை பொறைநிலை நினைதல் சமாதி என எட்டும்; இவற்றைப் "பொய்கொலை களவே காமம் பொருணசை - யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்." "பெற்றதற் குவத்தல் பிழம்புணி யுளர்த்தல் - கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை - பூசனைப் பெரும்பய மாசாற் றளித்தலொடு - நயனுடை மரபி னியம மைம

ந்தே." "நிற்ற லிருத்தல் கிடத்தல் நடத்தலென் - றுரைத்த நா
ன்கி னொல்கா நிலைமையோ - டின்பம் பயக்குஞ் சமய முதலிய -
வந்தழில் சிறப்பி னாசன மாகும்." "உந்தியொடு புணர்ந்த விரு
வகை வளியுந் - தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை." "பொறியு
ணர் வெல்லாம் புலத்தின் வழாம - லொருவழிப் படுப்பது தொ
கைநிலைப் புறனே." "மனத்தினை யொருவழி நிறுப்பது பொ
றையே." "நிறுத்திய வம்மன நிலைதிரியாமற் - குறித்த பொரு
ளொடு கொளுத்த னினைவே." "ஆங்ஙனம் குறித்த வம்முதற்
பொருளொடு - தான்பிற னாகாத் தகையது சமாதி." என்னும்
உரைச்சூத்திரங்களானுணர்க. பக்கமென்றதனன், முட்டின்றி
முடிப்போர் முயல்வோர் என்பனவும், "நீர்பலகான் மூழ்கி நில
த்தசைஇத் தோலுடையாச் - சோர்சடை தாழச் சுடரோம்பி -
யூரடையார் - கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல் - வான
கத் துய்க்கும் வழி." என்பனவுங் கொள்க. "ஓவத் தன்ன விடனு
டை வரைப்பிற - பாவை யன்ன குறுந்தொடி மகளி - ரிழைநிலை
நெகிழ்ந்த மள்ளர்க் கண்டிகும் - கழைக்க ணெடுவரை யருவி யா
டிக் - கான யானை தந்த விறகிற் - கடும்புகைச் செந்தீ மாட்டிப் -
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே." எனவும், "வைததனை
யின்சொலாக் கொள்வானு நெய்பெய்த - சோறென்று கூழை மதி
ப்பானு நூறிய - கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர் -
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்." எனவும், "ஒருமையு ளாமை
போ லைந்தடக்க லாற்றி - னெழுமையு மேமாப் புடைத்து." என
வும், "ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே - பேரா வியற்
கை தரும்." எனவும், "நீஇ ராட னிலக்கிடை கோட - லோஒ
வுடுத்த லுரல்லெரி யோம்ப - லூரடை யாமை யுடுசடை
புனைதல் - காட்டி லுணவு கடவுட் பூசை - யேற்ற தவத்தி னிய
ல்பென மொழிப." எனவும் வரும். ஏனைய வந்துழிக்காண்க.

அறிமரபிற் பொருநர்கட் பாலும் = தாந்தாம் அறியும் இலக்க
ணங்களாலே போர்செய்வாரிடத்துக் கூறுபாடும்: அவை சொல்
லானும் பாட்டானுங் கூத்தானும் மல்லானுஞ் சூதானும் பிறவா
ற்றானும் வேறலாம். உம். "விரைந்து தொழில்கேட்கு ஞால நி
தினிது - சொல்லுதல் வல்லார்ப் பெறின்." இது சொல்வென்றி.
"வண்டுறையுங் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள் - வெண்டுறை
யுஞ் செந்துறையும் வேற்றுமையாற் - பண்டங்கு - இன்னாம் போ
ல் [illegible] தொடையா - முர்காம்பு மஞ்சவையு மாய்

ர்து." இது பாடல்வென்றி. "கைகால் புருவங்கண் பாணி நடை தூக்குக் - கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு - பெய்பூப் - படுகளிவண் டார்ப்பப் பயில்வளை நின் றாடுந் - தொடுகழன் மன்னன் றுடி." இது ஆடல்வென்றி. "இன்கடுங் கள்ளி னுழூ ராங்கண் - மைந்துடை மல்லன் மதவலி முருக்கி - யொருகான் மார்பொதுங் கின்றே யொருகால் - வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே - நல்கி னுந்நல் காஅ னாயினும் - வெல்போர் பொருதீத்தன் காண் கதி லம்ம - பசித்துப்பணை முயலும் யானை போல - வொருதலை யொசிய வொற்றிக் - களம்புகு மள்ளர்க் கந்தடு நிலையே." இது மல்வென்றி. "கழகத் தியலுங் கவற்றி னிலையு - மழகத் திரு நுதலா ளாய்ந்து - கழகத்துப் - பாய வகையாற் பணிதம் பலவெ ன்று - ளாய வகையு மறிந்து." இது சூதுவென்றி.

அனைநிலை வகையோடு ஆங்கு எழுவகையிற் றொகைநிலை பெற்றது என்மனார் புலவர் = அக்கூறப்பட்ட ஆறுபகுதியும் நிலைக் களமாக அவற்றுக்கட் தோன்றி வேறுபட்ட கூறுபாட்டோடு முன்னைய ஆறுங் கூட்டி அவ்வெழுகூற்றாற் றுறைபல திரண்ட தொகை பெற்றது அவ்வாகைத்திணை என்று கூறுவாராசிரியர். - எ-று. அனையென்றது சுட்டுநிலை. நிலைக்களம் நிலையதுவகை. ஆங்கென்றதனை அனை நிலைவகையென்பதன்கண் வகைக்குமுன் னே கூட்டுக. ஓடு எண்ணிடைச்சொலாதலின் முன்னெண்ணிய வற்றொடுகூட்டி ஏழாயிற்று.

இனிப் பார்ப்பனப்பக்கத்து வகையாவன பார்ப்பார்க்குட் பார்ப்பனக் கன்னியிடத்துக் கற்புநிகழ்வதற்குமுன்னே களவிற் றோன்றினும், அவள் பிறர்க்குரியளாகிய காலத்துக் களவிற் றோன்றினும், அவள் கணவனை இழந்திருந்துழித் தோன்றின னும், ஒழிந்த மூவகை வருணத்துப் பெண்பாற்கண்ணும் இவ் வாறே தோன்றினும், அவரவர்மக்கட்கண் அவ்வாறே பிறழத் தோன்றினுமாகிய சாதிகளாம். இன்னோருந் தத்தந் தொ ழில்வகையாற் பாகுபட மிகுதிப்படுத்தல் வாகைத்திணையாம் ஒழிந்த பகுதியைந்தற்கும் இஃதொக்கும். இன்னும் பெண்பாலு யர்ந்து ஆண்பாலிழிந்தவழிப் பிறந்த சாதிகளும் அனைநிலைவகைப் பாற்படும். யோகிகளாய் உபாயங்களான் முக்காலமுமுணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன்றேயத்து அனைநிலைவகையோரா வர்; அவர்க்கு மாணாக்கராகித் தவஞ்செய்வோர் தாபதப்பக்கத் தாராவர்; தகர்வென்றி பூழ்வென்றி கோழிவென்றிமுதலியவ

பாலறிமரபிற் பொருநர்கண் அனைநிலைவகையாம். ஒருவரையறைப்படாது பலதுறைப்படுவனவற்றையெல்லாந் தொகைநிலையெனத் தொகுத்து ஒரோவொன்றுக்கிக் கூறினர், தொகுத்துக் கூறலெனும் உத்திவகையான். பார்ப்பனவாகை அரசவாகையென்றோதினவை அவற்றின்பகுதி அடங்காமையிற் குன்றக்கூறலாமாதலின் இங்ஙனமோதினர். காட்டாதனவற்றிற்கு உதாரணங்கள் வந்துழி வந்துழிக்காண்க. (௨௦)

எசு. கூதிர் வேனி லென்றிரு பாசறைக்
காதலி னொன்றிக் கண்ணிய மரபினு
மேரோர் களவழி யன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியுந் தேரோர்
வென்ற கோமான் முன்றேர்க் குரவையு
மொன்றிய மரபிற் பின்றேர்க் குரவையும்
பெரும்பகை தாங்கும் வேலி னானு
மரும்பகை தாங்கு மாற்ற லானும்
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமு
மொல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையி னொன்றொடு புணர்ந்து
தொல்லுயிர் வழங்கிய வவிப்பலி யானு
மொல்லா ரிடவயிற் புல்லிய பாங்கினும்
பகட்டி னானு மாவி னானுந்
துகட்டபு சிறப்பிற் சான்றோர் பக்கமுங்
கட்டி னீத்த பாலி னானு
மெட்டுவகை நுதலிய வவையத் தானுங்
கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானு
மிடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
பிழைத்தோர் தாங்குங் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானு
மருளொடு புணர்ந்த வகற்சி யானுங்
காம நீத்த பாலி னானுமென்
றிருபாற் பட்ட வொன்பதிற் றுத் துறைத்தே.

இது மேற் தொகுத்துக் கூறிய எழுவகைத்திணையுள் அடங் காதவற்றிற்கு முற்கூறிய துறைகள்போலத் தொடர்நிலைப்படுத் தாது மறத்திற்கு ஒன்பதும் அறத்திற்கு ஒன்பதுமாக இருவகைப் படுத்துத் துறைகூறுகின்றது. (இ-ள்.) கூதிர் வேனில் என்று இரு பாசறைக் காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும் = கூதிரொடு வும் வேனிலெனவும் பெயர்பெற்ற இருவகைப் பாசறைக்கண் ணும் காதலாற் திரிவில்லாத மனத்தனாகி ஆண்டு நிகழ்த்தும் போ ர்த்தொழில் கருதிய மரபானும்: கூதிர், வேனில், ஆகுபெயர். அக்காலங்களிற் சென்றிருக்கும் பாசறையாவது தண்மைக்கும் வெம்மைக்குந் தலைமைபெற்ற காலத்துப் போகத்திற் பற்றற்று வேற்றுப்புலத்துப் போர்திருத்தல். இக்காலங்களிற் பிரிதல் வன்மையின் இது வெற்றியாயிற்று. தலைவிமேற் காதலின்றிப் போரின்மேற் காதல்சேறலின் ஒன்றியென்றார். இக்காலத்துச் சிறப்புப்பற்றி இரண்டையும் ஓதினாரேனும் ஓர்யாண்டை எல்லை இருப்பினும் அவற்றுவழித்தோன்றிய ஏனைக் காலங்களும் இரண் டாகி அவற்றுள் அடங்குமென்பது ஆசிரியர் கருத்தாயிற்று. "வி னைவயிற் பெயர்க்குந் தானைப் - புனைதார் வேந்தன் பாசறை யேமே" எனத் தலைவியை நினைவன வாகைக்கு வழுவாம். அகத்திற்கு வழுவன்றென்றற்கு மரபென்றார். ஏனைக்காலங்களாற் பாசறைப் பெயர் இன்றென்றற்கு இரண்டானும் பெயர்கூறினார். இங்ஙனங் கூறவே முற்கூறிய துறைபோலத் தொடர்நிலைப் படுதலின்றாய் இதனானே பலவாகி ஒருதுறைப்படுதலும் இன்றாயிற்று. இனி இருத்தற்பொருண் முல்லையென்பதேபற்றிப் பாசறைக்கண் இரு த்தலாற் பாசறைமுல்லையெனப் பெயர்கூறுவாரும் உளர். உ-ம். "மூதில்வாய்த் தங்கிய முல்லைசால் கற்புடை - மாதர்பாற் பெற்ற வலியளவோ - கூதிரின் - வெங்கண் விறல்வேந்தன் பாசறையுள் வேனிலா - னைங்கணை தோற்ற வழிவு." எனவும், "கவலை மறுகிற் கடுங்கண் மறவ - ருவலைசெல் கூரை யொடுங்கத் - தவலைசெல் - கூதிர் நலியவு முள்ளான் கொடித்தேரான் - மூதின் மடவரிண் முயக்கு." எனவும் வரும்.

ஏரோர் களவழித் தேரோர் தோற்றிய வென்றியன்றிக் கள வழித் தேரோர் தோற்றிய வென்றியும் = வேளாண்மாக்கள் விளை யுட்காலத்துக் களத்துச் செய்யுஞ் செய்கைகளைத் தேரேறி வந்த இணைப்பொருநர் முதலியோர் போர்க்களத்தே தோற்றுவித்த வெ ன்றியன்றிக் களவழிச் செய்யுளைத் தேரேறி வந்த புலவர் தோற் றுவித்த வென்றியானும்; என்றது, நெற்கதிரைக்கொன்று களத்

கடு

திற் குவித்துப் போர் அழித்து | அதரிதிரித்துச் சுற்றத்தொடு நுகர்வதற்கு முன்னே |கட்வுட்பலி கொடுத்துப் பின்னர்ப் |பரிசிலர் முகந்து கொள்ள வரிசையின் அளிக்குமாறுபோல அரசனும் நாற்படையையுங் கொன்று |களத்திற் குவித்து எருது களிறாக |வாண்மீடல் ஓச்சி |அதரி திரித்துப் பிணக்குவையை நிணச்சேற்றோடு உதிரப் பேருலைக்கண் ஏற்றி | ஈனுவெண்மான் இடந்துழந்தட்ட கூழ்ப்பலியைப் பலிகொடுத்து எஞ்சிநின்ற யானை குதிரைகளையும் ஆண்டுப் பெற்றன பலவற்றையும் பரிசிலர் முகந்துகொள்ளக் கொடுத்தலாம். உம். "இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற் - கருங்கை யானை கொண்மூ வாக - நீண்மொழி மறவ ரெறியினை ருயர்த்த - வாண்மின் னாக வயங்குகடிப் படைந்த - குருதிப் பல்லிய முரசுமுழக் காக - வரசாரப் பணிக்கு மணங்குறு பொழுதின் - வெவ்விசைப் புரவி வீசுவளி யாக - விசைப்புறு வல்வில் வீங்குநா ணுதைத்த - கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை - யீரச் செறுவிற் றேரோ ராக - விடியல் புக்கு நெடிய நீட்டின் - செருப்படை மிளிர்த்த திருத்துறு செஞ்சாற் - பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி - விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ் - பேஎய்பற் றியபிணம் பிறங்குபல் போர்புகாக் - கான நரியொடு கழுதுகளம் படுப்பப் - பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப் - பாடுநர்க் கிருந்த பீடுடை யாள - தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி - வேய்வை காணு விருந்திற் போர்வை - யரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப் - பாடி வந்திசிற் பெரும பாடேன் - றெழிலி தோயு மிமிழிசை யருவிப் - பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன - வோடை நுதல வொல்குத லறியாத் - துடியடிக் குழவிப் பிடியிடை மிடைந்த - வேழ முகவை நல்குமதி - தாழா வீகைத் தகைவெய் யோயே." எனவரும். |"களிகடலிருங்குட்டத்து" என்னும் புறப் பாட்டுப் பலிகொடுத்தது. | களவழிநாற்பது புலவர் களவழியைத் தோற்றுவித்தது. | "ஓஒ வுவமை யுறழ்வின்றி யொத்ததே - காவிரி நாடன் | கழுமலங் கொண்டநாண் - மாவுதைப்ப மாற்றார் குடையெல்லாங் கீழ்மேலா - யாவுதை காளாம்பி போன்ற புனனாடன் - மேவாரை யட்ட களத்து." எனவரும்.

தேரோர்வென்ற கோமான் முன்தேர்க் குரவையும் = தேரின்கண் வந்த அரசர்பலரையும் வென்ற வேந்தன் வெற்றிக்களிப்பாலே |தேர்த்தட்டிலேநின்று போர்த்தலைவரோடு கைபிணைந்தாடுங் குரவையும் : உம். | "சூடிய பொன்முடியும் பூணு மொளிதுளங்க - வாடிய கூத்தரின்வேந் தாடினான் - வீடிக் - குறையாடல் கண்டு

வந்து கொற்றப்போர் வாய்த்த - விறையாட வாடாதார் யார்."
"விழவு வீற்றிருந்த வியலு ளாங்கட் - கொடிவார் முழவின் முன்ன ராட - வல்லா னல்லன் வாழ்க வன்கண்ணி - வல்லே, வலம்பெறு முரசந் துவைப்ப வாளுயர்த் - திலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன் - மடங்காப் பெருமைய னுடன்றுமேல் வந்த - வேந்து மெய் மறந்தபு வீழ்ச்சியின் மகிழ்ந்து - வியந்தகு போர்க்களத் தாடுங் கோவே." எனவரும்.

ஒன்றிய மரபிற் பின்தேர்க் குரவையும் = தேரோரைவென்ற கோமாற்கே பொருந்திய இலக்கணத்ததாகிய தேரின்பின்னே கூழுண்ட கொற்றவை கூளிச்சுற்றமாடுங் குரவையானும்: உம். "வென்று களங்கொண்ட வேந்தன்றேர் சென்றதற்பின் - கொன்ற பிணகிணக்கூழ் கொற்றவை - நின்றளிப்ப - வுண்டாடும் பேய்கண் டுவந்தனவே போர்ப்பரிசில் - கொண்டா டினகுரவைக் கூத்து." எனவரும். "களிற்றுக் கோட்டன்ன வாலெயி றழுத்தி - விழுக்கொடு விராஇய வெண்ணிணச் சுவையினள் - குடர்த்தலை தூயல்வரச் சூடிப் புணர்த்தின - வாறைப் பெருவளஞ் செய்தோன் வானத்து - வயங்குபன் மீனினும் வாழிய பலவென - வுருகெழு பேய்மக ளயரக் - குருதித் துகளாடிய களங்கிழ வோயே." என்பதும் அது.

பெரும்பகை தாங்கும் வேலினானும் = போர்க்கணன்றியும் பெரியோராகிய பகைவரை அத்தொழிற்சிறப்பான் அஞ்சுவித்துத் தடுக்கும் வேற்றொழில் வன்மையானும்: காத்தற்றொழிலன்றி அழித்தற்றொழில் பூண்ட முக்கட்கடவுட்குச் சூலவேல் படையாதலானும் முருகற்கு வேல் படையாதலானுஞ் சான்றோர் வேற்படையே சிறப்பப் பெரும்பான்மை கூறலானும் வேலைக்கூறி ஏனைப்படைகளெல்லாம் "மொழிந்தபொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல்" என்னும் உத்தியாற் பெறவைத்தார். உம். "குன்று துகளாக்குங் கூர்ங்கணையாவ வேலெறிந் - தன்று திருநெடுமா லாடினு - னென்றும் - பணிச்சென்று மூளாத பல்கதிரோன் சேயோ - டினிச்சென் றமர்பொரா யென்று." இது பாரதம். "இரும்பு முகஞ்சிதைய நூறி யொன்னாருருஞ்சமங் கடத்த லேனோர்க்கு மெளிதே - நல்லரா வுறையும் புற்றம் போலவுங் - கொல்லேறு திரிதரு மன்றம் போலவு - மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை - யுளனென வருஉ மோரொளி - வல்லுயர் நெடுவே லென்னைகண் ணதுவே." என்பதும் அது. "இவ்வேல் பீலியணிந்து" என்னும் புறப்பாட்டும் அது.

அரும்பகை தாங்கும் ஆற்றலானும் = வெலற்கரும் பகைவர் மிகையை நன்குமதியாது எதிரேற்றுக்கொள்ளும் அமைதியானும்: உம். "எருது காலுறா திளையர் கொன்ற - சில்வினை வரகின் புல்லென் குப்பை - தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில் - பசித்த பாண ருண்டுகடை தப்பலின் - ஒக்க லொற்கஞ் சொலிய தன்னூர்ச் - சிறுபுல் லாளர் முகத்தவை கூறி - வரகுகட னிரக்கு நெடுந்தகை - யரசுவரிற் றுங்கும் வல்லா ளன்னே." எனவரும். "களம்புகலோம்புமின்" என்னும் புறப்பாட்டும் அது.

வாழ்க்கை புல்லா வல்லாண் பக்கமும் = உயிர்வாழ்க்கையைப் பொருந்தாத வலிய ஆண்பாலின் கூறுபாட்டானும்: பக்கமென்றதனாற் தாபதப்பக்கமல்லாத போர்த்தொழிலாகிய வல்லாண்மையே கொள்க. உம். "கலிவர்வாழூழியின் வாழ்க்கை கடிந்து - மலிபுகழ் வேண்டு மனத்த - ரொலிகடல்சூழ் - மண்ணகலம் வேண்டாது வான்வேண்டி யீண்டினார் - புண்ணகலாப் போர்க்களத்துப் போந்து." இப்பாரதத்துட் காண்க.

ஒல்லார்நாணப் பெரியவர்க் கண்ணிச் சொல்லிய வகையின் ஒன்றொடுபுணர்ந்து தொல்லுயிர் வழங்கிய அவிப்பலியானும் = பகைவர்நாணும்படியாக உயர்ந்தோரான் நன்குமதித்தலைக் கருதி இன்னது செய்யேனாயின் இன்னது செய்வலெனத் தான்கூறிய பகுதியிரண்டனுள் ஒன்றனோடே பொருந்திப் பலபிறப்பினும் பழகிவருகின்ற உயிரை அங்கியங்கடவுட்குக் கொடுத்த அவிப்பலியானும்: நாணுதலாவது நம்மை அவன் செய்யாதே நாம் அவனை அறப்போர் செய்யாத வஞ்சனையால் வென்றமையில் அவன் தன்னுயிரை அவிப்பலிகொடுத்தானென நாணுதல். உம். "எம்பியை -ட்டுத வெம்மனைக்கா யான்படுதல் - வெம்பகலின் முன்விளைப்பனென்றெழுந்தான் - றம்பி - புறவோரிற் பாணிப்பப் பொங்கெரிவாய் வீழ்ந்தா - னறவோன் மறமிருந்த வாறு." இப்பாரதத்துள் ஒருவன் இன்னது செய்வலென்று அது செய்யமுடியாமையின் அவிப்பலி கொடுத்தவாறுகாண்க. "இழைத்த திகவாமற் சாவாரை யாரே - பிழைத்த தொறுக்கிற் பவர்." இதுவும் அது.

ஒல்லாரிடவயிற் புல்லியபாங்கினும் = பகைவராயினும் அவர் சுற்றமாயினும் வந்து உயிரும் உடம்பும் உறுப்பும்போல்வன வேண்டியக்கால் அவர்க்கவை மனமகிழ்ந்து கொடுத்து கட்புச்செய்தலானும்: உம். இந்திரன் மைந்த னுயிர்வேட் டிரந்திரவி - மைந்தனை வெல்வான் வரங்கொண்டான் - றந்தா - னோர்ந்திலவேன்

மன்னனே யன்றி யிதற்குவந்த-வேந்தனும் பெற்றான் மிகை." இப் பாரதத்துப் பகைவறைற் படுதலறிந்துந் தன்கவசகுண்டலங் கொடுத்தமை கூறினமையிற் புல்லியபாங்காயிற்று. அது வீரம்பற்றிய கருணையாகலின் வாகை. இத்துணையும் மறத்திற்குக் கூறியன.

பகட்டினானும் மாவினானும் துகட்டபு சிறப்பிற் சான்றோர் பக்கமும் = எருதும் எருமையுமாகிய பகட்டினானும் யானையுங் குதிரையு மெனப்படும் மாவினானுங் குற்றத்தினீங்குஞ் சிறப்பினால் அமைந்தோரது கூறுபாட்டானும்: இவற்றான் உழவஞ்சாமையும் பகையஞ்சாமையுமாகிய வெற்றி கூறினார். பக்கமென்றதனாற புனிற்றாவுங் காலாளுந் தேருங்கொள்க. உம், "யானை நிரையுடைய தேரோ ரினுஞ்சிறந்தோ - ரேனை நிரையுடைய வேர்வாழ்நர் - யானைப் - படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டே - ருடையோர்க் கரசரோ வொப்பு." "எனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறைய - னென்றனி ராயி னாறுசெல வம்பலிர் - மன்பதை மருள வரசுகளத் தவியக் - கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை- மீபிணத் துருண்ட தேயவார் பாழிப் - பண்ணமை தேரு மாவு மாக்களு - மெண்ணற் கருமையி னெண்ணின்றோ விலனே - கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி -யுகக்கும் பருந்தி னிலத்து நிழல்சாடிச் - செம்பரன் முரம்பி னீர்படக் கொங்கர்ப் - பரந்தன்ன செலவிற் பல்யானை - காணப் பல வன்றனே யானே." என்பதும் அது.

கட்டில் நீத்த பாலினானும் = அரசன் அரசவுரிமையைக் கைவிட்ட பகுதியானும் அது பரதனும் பாரதனும் போல்வார் அரசு துறந்த வென்றி. உம். "கடலு மலையுந் தேர்படக் கிடந்த- மண்ணக வளாக நுண்வெயிற் றுகளினு-நொய்தா லம்ம தானே யிஃதெவன்- குறித்தன னெடியான் கொல்லோ மொய்தவன்- வாங்குசிலை யிராமன் றம்பி யாங்கவ-னடிபொறை யாற்றி னல்லது- முடிபொறை யாற்றலன் படிபொறை குறித்தே." இது அரசு கட்டினீத்தபால். "பரிதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநில- மொருபக லெழுவ ரெய்தி யற்றே - வையமுந் தவமுந் தூக்கிற் றவத்திற் - கையவி யனைத்து மாற்றா தாதலிற் - கைவிட் டனரோ காதல ரதனால் - விட்டோரை விடாஅ டிருவே - விடாஅ தோரிவள் விடப்பட் டோரே." என்பதும் அது.

எட்டுவகை நுதலிய அவையத்தானும் = எண்வகைக் குணத்தினைக் கருதின அவையத்தாரது நிலைமையானும்: அவை குடிப்பிறப்புக் கல்வி ஒழுக்கம் வாய்மை தூய்மை நடுவுநிலைமை

அழுக்காறின்மை அவாவின்மை எனவிவையுடையார் அவைக்கண் முந்தியிருப்பதோர் வெற்றிகூறுதல். உ-ம். "குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி - விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற-வாய்மை வாய்மடுத்து மாந்தித் தூய்மையிற் - காத லின்பத்துத் தூங்கித் தீதறு - நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலு - மழுக்கா றின்மை யவாஅ வின்மையென - விருபெரு நிதியமு மொருதா மீட்டுந் - தோலா நாவின் மேலோர் பேரவை-யுடனம ரிருக்கை யொருநாட் பெறுமெனிற் - பெறுகதி லம்ம யாமே வரன்முறைத் - தோன்று வழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து - நின்றுழி நின்றுழி ஞாங்கர் நில்லாது- நிலையழி யாக்கை வாய்ப்பவிம் - மலாதலை யுலகத்துக் கொட்கும் பிறப்பே." என இதனுள் எட்டும் வந்தன.

கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும் = வேதமுதலிய வற்றுற் கட்டுதலமைந்த ஒழுக்கத்தோடு பொருந்திய காட்சியானும்: கண்ணுதன்மை கண்மையெனப்படுதலின் அதனைக் கண்ணுமையென உகரங்கொடுத்தார், எண்மை வன்மை வல்லோர் என்பது எளுமை வலுமை வல்லுவோர் என்றாற்போல. இவை மனத்தான் இவ்வொழுக்கங்களைக் குறிக்கொண்டு ஐம்பொறியினை வென்று தடுத்தலாம். அவை இல்லறத்திற்கு உரியவாக நான்கு வருணத்தார்க்குங் கூறிய அடக்கமுடைமை ஒழுக்கமுடைமை நடுவுநிலைமை பிறர்மனைநயவாமை வெஃகாமை புறங்கூறாமை தீவினையச்சம் அழுக்காறாமை பொறையுடைமை முதலியனவாம். உ-ம். "ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி - னெழுமையு மேமாப் புடைத்து." "ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க- முயிரினு மோம்பப் படும்." "சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற் - கோடாமை சான்றோர்க் கணி." "பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க் - கறனொன்றோ வான்ற வொழுக்கு." "படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்- நடுவன்மை நாணு பவர்." "அறங்கூறா னல்ல செயினு மொருவன்- புறங்கூறா னென்ற லினிது." "தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்- தீவினை யென்னுஞ் செருக்கு." "ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத் - தழுக்கா றிலாத வியல்பு." "மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந் - தகுதியான் வென்று விடல்." பிறவும் இந்நிகரனவெல்லாங் கொள்க. "விழையா வுள்ளம் விழையு மாயினுங் - கேட்டவை கோட்டி யாக மீட்டாங் - கறனும் பொருளும் வழாமை நாடித் - தற்றக வுடைமை நோக்கி மற்றதன் - பின்னா குமமே முன்னிய முடித்த - லினைய பெரியோ ரோ

ழுக்க மதனு - லரிய பெரியோர்த் தெரியுங் காலே." என இது தொகுத்துக் கூறியது.

இடையில் வண்புகழ்க் கொடைமையானும் = இடையீடில்லாத வண்புகழைப் பயக்குங் கொடைமையானும்: உலகமுழுதும் பிராபுகழ் வாராமைத் தன்புகழ் பரத்தலின் இடையிலென்றார். வண்புகழ் வள்ளிதாகிய புகழ்; அது ஊனுடையதென விரியும். இக்கொடைபபுகழுடையான் மூப்புப் பிணி சாக்காட்டுக்கு அஞ்சாமையின் அது வாகையாம். உம். "மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர் - தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரோ - துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வ - ரின்மையி னிரப்போர்க் கீஇ யாமையிற் - றொன்மை மாக்களிற் றொடர்பறி யலரோ - தாடாழ் படுமணியிரட்டும் பூநுத - லாடியல் யானை பாடுநர்க் கருதாக் - கேடினல்லிசை வயமான் றோன்றலைப் - பாடி நின்றனெ னாகக் கொண்டே - பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென் - னாடிழந் ததனினு நனியின் னாதென - வாடீ தெனனே தலையெமக் கீயாது - தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையி- னாடுமலி யுவகையின் வவ்வுத - லோடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே." எனவரும். இது புறம்.

பிழைத்தோர்த் தாங்குங் காவலானும் = தம்மைப் பிழைத்தோரைப் பொறுக்கும் பாதுகாவலானும்: காவலாவது இம்மையும் மறுமையும் அவர்க்கு ஏதம் வாராமற் காத்தலாதலால் இஃது ஏனையோரின் வெற்றியாயிற்று. உம். "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற் - றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா - லும்மை - யெரிவாய் நிரயத்துள் வீழ்வர்கொ லென்று- பரிவதூஉஞ் சான்றோர் கடன்." "அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை - யிகழ்வார்ப் பொறுத்த றலை." எனவரும்.

பொருளொடு புணர்ந்த பக்கத்தானும் = அரசர்க்குரியவாகிய படை குடி கூழ் அமைச்சு நட்பு முதலியனவும் புதல்வரைப் பெறுவனவுமாகிய பொருட்டிறத்துப்பட்ட வாகைப்பகுதியானும்: பக்கமென்றதனுன் மெய்ப்பொருளுணர்தலுங் கொள்க. உம். "படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு - முடையா னரசரு ளேறு." காடு அரண் முதலாகக் கூறுவனவெல்லாந் திருவள்ளுவப்பயனிற் காண்க. "படைப்புப் பலபடைத்துப் பல்லோரோ டுண்ணு - முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக் - குறுகுறு நடந்து சிறுகை நீட்டி - யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழ

ந்து - நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து - மயக்கு மக்களை யிலலோர்க்குப் - பயக்குறை யிலலை தாம்வாழு நாளே." "கேளவி கேட்டுப் படிவமொடியாது" என்னும் பதிற்றுப்பத்தும் அது. "ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே - மெய்யுணர் விலலா தவர்க்கு." எனவரும்.

அருளொடு புணர்ந்த அகற்சியானும் = அருளுடைமையோடு பொருந்திய துறவுறததானும்: அருளொடுபுணர்தலாவது ஒருயிர்க்கு இடாவநதுழித் தனனுயிரைக் கொடுத்துக் காததலும் அதன் வருத்தந தனதாக வருநதுதலும் பொய்யாமை கள்ளாமை முதலி யனவுமாம். இக்கருத்து நிகழநதபின்னர்த் துறவுள்ளம் பிறத்தலின் இதுவும் அறவெற்றியாயிறறு. உம். "புனிறறுப் பசியுழநத புலிபபிணவு தனது- முலைமறுக் குழவி வாஙகி வாய்மடுத்- திரையெனக் கவர்வுற நோக்கி யாஙக - வளரிளங குழவியினை முனசென று காணைக் - கூருகிர் வயமான புலவுவேட்டுத் தொடங்கிய - வாளெயிறறுக் கொள்ளையிற றங்கினன கதுவப் - பாசிலைப போதி மாதவன் பெருநதகை - யாருயிர் காவல பூண்ட - பேரருட புணாசசியி னகலு மாறே." "தன்னுயிர்க் கினனாமை தானறிவா னென்கொலோ - மனனுயிர்க் கினனா செயல." "வாய்மையெனப்படுவ தியாதெனின் யாதொனறுந - தீமை யிலாத சொலல." "களவெனனுங காரறி வாண்மை யளவென்னு - மாறறல புரிந்தார்க ணில." "யாதனின யாதனி னீஙகியா னோதலதனி னதனி னிலன்." எனையவும் இதனகண அடக்குக.

காமம் நீத்த பாலினானும் = அங்ஙனம் பிறந்தபின்னர் எப்பொருளகளினும் பறறற்ற பகுதியானும்: "உம். காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி - னாமங் கெடக்கெடு நோய்" எனவரும். பாலென்றதனால உலகியலுணின்றே காமத்தினைக் கைவிட்ட பகுதியுங்கொள்க. "இளையர் முதிய ரெனவிருபால பற்றி - விளையு மறிவென்ன வேண்டா - விளையனுத் - தனருதை காம நுகாதற்குத் தான்காம - மொாறு நீத்தா னுளன்." எனவரும்.

என்று இருபாற்பட்ட ஒன்பதிற்றுத் துறைத்து = முன்னர் ஒன்பானும் பின்னர் ஒன்பானுமாக இரணடுகூறுபட்ட ஒன்பதாகிய பதினெட்டுத் துறையினையுடைதது வாகை—எ-று. இதனுள் ஏதுவிரியாதனவற்றிற்கும் ஏதுவிரித்தமையிற் றான இருபாற்பட்ட பதினெட்டாதலுடைத்தென முடிக்க. (உக)

எஎ. காஞ்சி தானே பெருந்திணைப் புறனே.

இத்துணையும் உரிப்பொருள்பெற்ற அகத்திணைக்குப் புறங் கூறி இஃது உரிப்பொருளல்லாத பெருந்திணைக்குப் புறனிதுவெ ன்கின்றது. இது வாகைக்குப் பின்வைத்தார், வீரக்குறிப்பு நிலை யாமைக் குறிப்போடு உறவுடைத்து என்றற்கு. (இ - ள்.) காஞ்சி தானே பெருந்திணைப்புறனே = எழுதிணையுட் காஞ்சிதானேயெனப் பிரிக்கப்பட்ட புறத்திணை பெருந்திணைக்குப் புறனும்.—எ - று. அத ற்கு இது புறனாயவாறு என்னையெனின், எண்வகைமணத்தினும் நான்குமணம்பெற்ற பெருந்திணைபோல இக்காஞ்சியும் அறமுதலா கிய மும்முதற்பொருளும் அவற்றது நிலையின்மையுமாகிய ஆறனு ள்ளும் நிலையின்மை மூன்றற்கும் உரித்தாய் எல்லாத்திணைகட்கும் ஒத்த மரபிற்றாகலானும், "பின்னர்நான்கும் பெருந்திணைபெறு ம்" என்ற நான்குஞ் சான்றோர் இகழ்ந்தாற்போல அறம் முதலிய வற்றது நிலையின்மையுணர்ந்து அவற்றை அவர் இகழ்தலானும், ஏ றிய மடற்றிறமுதலிய நான்குந் தீயகாமமாயினவாறுபோல உல கியனோக்கி நிலையாமையும் நற்பொருளன்றாகலானும், உரிப்பொ ருள் இடமயங்கிவருதலன்றித் தனக்கு நிலமில்லாத பெருந் திணைபோல அறம்பொருளின்பமபற்றியன்றி வேறுவேறு நிலையா மையென்பதோர் பொருளின்றாதல் ஒப்புமையானும், பெருந்தி ணைக்குக் காஞ்சி புறனாயிற்று. கைக்கிளைமுதற் பெருந்திணையி றுவாய் எழுணையும் அகமென்றலின் அவ்வகத்திற்கு இது புற னவதன்றிப் புறப்புறமென்றல் ஆகாமையுணர்க. இது மேலவ தற்கும் ஒக்கும். (உஉ)

எஅ. பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானு
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே.

இது முற்கூறிய காஞ்சிக்குப் பொது இலக்கணங் கூறுகின் றது. (இ - ள்.) பாங்கருஞ் சிறப்பின் = தனக்குத் துணையில்லாத வீட்டின்பம் ஏதுவாக: பல்லாற்றானும் = அறம் பொருள் இன்ப மாகிய பொருட்பகுதியானும் அவற்றுப் பகுதியாகிய உயிரும் யாக்கையுஞ் செல்வமும் இளமையும் முதலியவற்றானும்: நில்லா உலகம் புல்லிய நெறித்து = நிலைபேறில்லா உலகியற்கையைப் பொருந்திய நன்னெறியினையுடைத்துக் காஞ்சி.—எ - று. எனவே, வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான்றோர் சாற்றுங் குறிப்பினது காஞ்சியாயிற்று. பாங்கு, துணை. உல கிற்கு நிலையாமை கூறுங்கால் அறமுதலிய பொருட்பகுதி ஏது வாகக் கூறினன்றி உலகென்பதற்கு வடிவு வேறின்மையிற் பல்

லாற்றானுமென்று ஆன் உருபு கொடுத்தார். கெடுங்காற் கணந்தோறுங் கெடுவனவுங் கற்பந்தோறுங் கெடுவனவுமாமென்றற்கு ஆறென்றார். நிலைபெற்ற வீட்டினான் இவற்றின் நிலையாமையுணர்தலின் வீடு ஏதுவாயிற்று. பல்லாற்றானுமென்றதனாற் சில்லாற்றானும் வீடேதுவாகலின்றி நிலையாமைக்குறிப்பு ஏதுவாகலுங் கொள்க. இஃது அறிவன் தேயமுந் தாபதப்பக்கமும்பற்றி நிலையின்மைக் குறிப்புப் பெற்றும். உம். "மயங்கிருங் கருவிய விசும்பு முகனக - வியங்கிய விருசுடர் கண்ணெனப் பெயரிய - வழியிடை வழுங்கா வழக்கரு நீத்தம் - வயிரக் குறட்டின் வயங்குமணி யார்த்துப் - பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப் - பொருநர்க் காணாச் செருமிகு மொய்ம்பின் - முன்னோர் செல்லவுஞ் செல்லா தின்னும் - விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற - வுளனென வாழியர் யானெனப் பழைமா - ணிலமக ளழுத காஞ்சியு - முண்டென வுரைப்பரா லுணர்ந்திசி னோரே." இதனுள் உண்டென உரைப்பார் உணர்ந்தோரென்றலின் வீடுபேறு ஏதுவாகத் தாபதர்போல்வார் நில்லா உலகம் புல்லியதாயிற்று. வீடுபேறு நிமித்தமாகச் சான்றோர் பல்வேறு நிலையாமையை அறைந்த மதுரைக்காஞ்சி இதற்கு உதாரணமாம். (உ௩)

எக. மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையுங்
கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியு மறத்தி னானு
மேமச் சுற்ற மின்றிப் புண்ணோற்
பேஎ யோம்பிய பேஎய்ப் பக்கமு
மின்னனென் றிரங்கிய மன்னை யானு
மின்னது பிழைப்பி னிதுவா கியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானு
மின்னகை மனைவி பேஎய்ப் புண்ணோற்
றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியு
நீத்த கணவற் றீர்த்த வேலிற்
பேஎத்த மனைவி காஞ்சி யானு
நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட்பா லானு
முலையு முகனுஞ் சேர்த்திக் கொண்டோன்

றலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
யீரைந் தாகு மென்ப பேரிசை
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்ற
மாய்ந்த பூசன் மயக்கத் தானுந்
தாமே யேங்கிய தாங்கரும் பையுளுங்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமு
நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையுங்
கழிந்தோர் தேஎத் தழிபட ருறீஇ
யொழிந்தோர் புலம்பிய கையறு நிலையுங்
காதலி யிழந்த தபுதார நிலையுங்
காதல னிழந்த தாபத நிலையு
நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையு
மாய்பெருஞ் சிறப்பிற் சிறுவற் பெயரத்
தாய்தப வரூஉந் தலைப்பெய னிலையு
மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பிற் றுறையிரண் டுடைத்தே.

இது முற்கூறிய காஞ்சித்திணை வீடேதுவாகவன்றி வாளா து நிலையின்மை தோன்றக் கூறும்பகுதி கூறுகின்றது. இதுவும் வாகையைத் தொகுத்தோதிய பொதுச்சூத்திரம்போலத் துறையொடு படாது நிலையின்மைப்பொருளை வகுத்தோதிய சூத்திரமென்றுணர்க. (இ-ள்.) மாறருங் கூற்றம் சாற்றிய பெருமையும் = பிறரால் தடுத்தற்கரிய கூற்றம் வருமெனச் சான்றோர் சாற்றிய பெருங்காஞ்சியானும்: கூற்றாவது, வாழ்நாள் இடையறாது செல்லுங் காலத்தினைப் பொருள்வகையாற் கூறுபடுததுங் கடவுள்; அதனைத்தான் பேரூர்க் கூற்றம்போலக் கொள்க. கூற்றத்திற்குக் காலமென்பது வேறன்மையிற் காலம் உலகமென முன்னே கூறினார். உ-ம். "பல்சான் றீரே - பல்சான் றீரே - கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட் - பயனின் மூப்பிற் பல்சான் றீரே - கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன் - பிணிக்குங் காலை யிரங்

குவிர் மாதோ - நல்லது செய்த லாற்றீ ராயினு - மல்லது செய்த லோம்புமி னதுதா - னெல்லாரு முவப்ப தன்றியு - நல்லாற்றுப் படூஉ நெறியுமற் றதுவே." இது வீடேதுவாகவன்றி வீடுபேற்று நெறிக்கட் செல்லும் நெறியேதுவாகக் கூறியது. "இருங்கட லுடுத்த" என்னும் புறப்பாட்டும் அது.

கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும் = இளமைத்தன்மை கழிந்து அறிவுமிக்கோர் இளமைகழியாத அறிவின் மாக்கட்குக் காட்டிய முதுகாஞ்சியானும்: முதுமை மூப்பாதலான் அது காட்சிப்பொருளாக இளமைநிலையாமை கூறிற்றும். உம். "இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற் - செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத் - தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து - தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி - மறையெனவறியா மாயமி லாயமொ - டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்த - நீர்நணிப் படுகோ டேறிச் சீர்மிகக் - கரையவர் மருளத் திரையகம் பிதிர - நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து - குளித்து மணற்கொண்ட கல்லா விளமை - யளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ - தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற் - றிரும் விடை மிடைந்த சில்சொற் - பெருமூ தாளரோ மாகிய வெமக்கே." இது வீடுபெறுதற்கு வழிகூறியது.

பண்புறவருஉம் பகுதி நோக்கிப் புண்கிழித்து முடியும் மறத்தினாலும் = நன்முகிய குணம் உறுவிலையாகப் பெறுகின்ற பகுதியாராய்ந்து பெறுதற்குப் பட்ட விழுப்புண் தீர்ந்து வாழும் வாழ்க்கை நிலையின்மையின் அதனை வேண்டாது புண்ணைக் கிழித்து இறக்கும் மறக்காஞ்சியானும்: இது யாக்கைநிலையின்மையை நோக்கிப் புகழ்பெறுதல் குறித்தது. இதனை வாகைத்திணைப்பின்னர் வைத்தார், இக்காஞ்சியும் வாகையொடு மயங்கியுங் காஞ்சியாதல்பற்றி. உம். "பொருது வடுப்பட்ட யாக்கை நாணிக் - கொன்று முகந்தேய்ந்த வெல்கந் தாங்கிச் - சென்று களம்புக்க தானை தன்னொடு - முன்மலைந்து மடிந்த வோடா விடலை - நடுகனெடுநிலை நோக்கி யாங்குத்தன் - புண்வாய் கிழித்தனன் புகழோனந்நிலைச் - சென்றுழிச் செல்க மாதோ வெண்குடை - யரசுமலைந்து தாங்கிய களிறுமடி பறந்தலை - முரண்கெழு தெவ்வர் காண்க - வினன்போ லந்நிலை பெறுக யானெனவே." இது போர் முடிந்தபின் களம்புக்கு நடுகல் ஆயினானைக் கண்டு உடம்பினது நிலையின்மையினையும் பண்புறவருதலையும் நோக்கி இறந்தமை கூறலிற் காஞ்சியாயிற்று.

ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோற் பேஎய் ஓம்பிய பேஎய்ப பக்கமும் = கங்குல் யாமத்துக் காத்தற்குரிய சுற்றக்குழாமின்மையின் அருகுவந்து புண்பட்டோனைப் பேய்தானே காத்த பேய்க் காஞ்சியானும்: பேய் காத்ததென்றலின் ஏமம் இரவில் யாமமாயிற்று. ஏமம் காப்புமாம். ஓம்புதலாவது அவனுயிர்போந்துணையும் ஓரியும் பேயும் நரியுங் கடிந்து அவன் தசையைக் கோடலஞ்சிப் பாதுகாத்தலாம். இது சுற்றத்தாரின்மைகூறலிற் செல்வநிலையாமையாயிற்று. பக்கமென்றதனாற் பெண்டிர் போல்வார் காத்தலும் பேயோம்பாத பக்கமுங்கொள்க. உம். "புண்ணொந்த ருற்றானைப் போற்றுந ரின்மையிற் - கண்ணொந்த ரில்லாப்பேய் காத்தனவே - யுண்ணு - முளையோரி யுட்க வுணர்வொடுசா யாத - வினையோன் கிடந்த விடத்து." எனவரும். ஏனைய வந்துழிக்காண்க.

இன்னன் என்று இரங்கிய மன்னையானும் = ஒருவன் இறந்துழி அவன் இத்தன்மையனென்று ஏனையோர் இரங்கிய கழிவு பொருட்கண்வந்த மன்னைக்காஞ்சியானும்: இது பலவற்றின் நிலையாமைகூறி இரங்குதலின் மன்னைக்காஞ்சியென வேறுபெயர்கொடுத்தார். இது பெரும்பான்மை மன் என்னும் இடைச்சொற் பற்றியே வருமென்றற்கு மன்கூறினார். மன்னையெனத் திரிந்து அது காஞ்சியென்பதனோடொட்டு நின்றது. இது உடம்பொடு புணர்த்தல. "சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே - பெரிய கட், பெறினேயாம் பாடத்தான் மகிழ்ந்துண்ணு மன்னே - சிறு சோற், றானு நனிபல கலத்தன மன்னே-பெருஞ்சோற், றானு நனி பல கலத்தன மன்னே-யென்பொடு, தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே- யம்பொடு, வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே" என இப்புறப்பாட்டு மன் அடுத்து அப்பொருடந்தது. "பாடுநர்க் கீத்த பலபுக ழினனே - யாடுநர்க் கீத்த பேரன் பினனே-யறவோர் புகழ்ந்த வாய்செல் லினனே-திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே - மகளிர் சாயன் மைந்தர்க்கு மைந்து - துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கி- லனைய னென்னு தந்தக் கோனை-நினையாக் கூற்ற மின்னுயி ருய்த்தன்று - பைத லொக்க றழீஇ யதனை-வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர் - னனந்தலை யுலக மரந்தை தூங்கக்- கெடுவி னல்லிசை சூடி - நடுக லாயினன் புரவல னெனவே." இது மன் அடாது அப்பொருடந்தது. "செற்றன்றாயினும்" என்னும் புறப்பாட்டுமுதலியனவும் அன்ன. இதனை ஆண்பாற் கையறு நிலையெனினும் அமையும்.

துன்னருஞ் சிறப்பின் இன்னது பிழைப்பின் இதுவாகிய வென வஞ்சினத்தானும் = இத்தன்மையதொன்றினைச் செய்த காற்றேனாயின் இன்னவாறாகக் கடவனெனக் கூறிய வஞ்சினக் காஞ்சியானும்: அது தான்செய்யக் கருதியது பொய்த்துத் தனக்குவருங் குற்றத்தால் உயிர்முதலியன துறப்பனென்றல். சிறப்பு வீடுபேறன்றி உலகியலிற் பெருஞ்சிறப்பு. உம். "மெல்ல வந்து நல்லடி பொருந்தி - யீயென விரக்குவி ராயிற் சீருடை - முரசுகெழு தாயத் தரசே தஞ்ச - மென்னுயி ராயினுங் கொடுக் குவெ னின்னிலத் - தாற்ற லுடையோ ராற்றல் போற்றா - தென் னுள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற் - றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல - வுய்ந்தனன் பெயர்தலோ வரிதே மைந்து டைக் - கழைதின் யானைக் காலகப் பட்ட - வன்றிணி நீண் முளை போலச் சென்றவண் - வருந்தப் பொரேஎ னாயிற் பொருந் திய - தீதி னெஞ்சத்துக் காதல கொள்ளாப - பலலிருங் கூந் தன் மகளி - ரொல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே." "நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்" "மடங்கலிற் சினை இய" என் னும் புறப்பாட்டுக்கள் உயிருஞ் செலவமும் போல்வன நிலையும் பொருளென நினையாது வஞ்சினஞ்செய்தன.

இன்னகை மனைவி பேஎய்ப் புண்ணோற் றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும் = இனியதாகிய நகையினையுடைய மனைவி தன்கணவன் புண்ணுற்றோனைப் பேய்தீண்டுதலை நீக்கித் தானுந் தீண்டாத காஞ்சியானும்: எனறது, நகையாடுங் காதலுடையாள அவனைக்காத்து விடிவளவுஞ் சுற்றுதலன்றி முயங்குதற்கு உளளம் பிறவாதபடி அவன் நிலையாமை எய்தினுனென்றவாறு. இதுவும் ஆண்பாற்காஞ்சியாம். இக்காஞ்சியென்பதனை முன்னும்பினனுங் கூட்டுக. "தீங்கனி யரவமொடு வெம்புமனை செரீஇய - வாய்மரு மருப் பியாழொடு பலலியங் கறங்கப் - பையப பெயர்த்து மை விழுதிழுகி - யையவி சிதறி யாம்ப லூதி - யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி - நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக் - காக்கம் வம்மோ காதலந் தோழி - வேந்துறு விழுமந் தாங்கிய-பூம்பொறி யுடைய நெடுந்தகை புண்ணே." எனவரும்.

நீத்த கணவற் றீர்த்த வேலிற் பேஎத்த மனைவி காஞ்சியானு ம் = உயிர்நீத்த கணவனைத் தன்னுறவை நீக்கின வேல்வெலாலே மனைவி அஞ்சின ஆஞ்சிக்காஞ்சியானும்: எஞ்ஞான்றும் இன்பஞ் செய்த கணவனுடம்பு அறிகுறி தெரியாமற் புண்பட்டு அச்சகிசழ்

தலின் யாக்கை நிலையாமை கூறியதாம். பேஎத்த என்பது உரிச்சொன்முதனிலையாகப் பிறந்த பெயரெச்சம். அஞ்சினகாஞ்சியென நின்றது; "இன்ப முடம்புகொண் டெய்துவிர் காண்மினோ-வன்பி னுயிர்புரக்கு மாரணங்கு - தன்கணவ - னல்லாமை யுட்கொள்ளு மச்சம் பயந்ததே- புல்லாரவேன மெய்சிதைத்த புண்." எனவரும். இனி வேலிறபெயாதத மனைவியென்று பாடமோதி, அவ்வேலான் உயிரைப்போக்கின மனைவியென்று கூறி, அதற்குக் "கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை- வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோ - னவ்வேலே-யம்பிற் பிறழுந் தடங்கணவன்காதற்-கொம்பிற்கு மாயிற்றே கூற்று." என்பது காட்டுப.

நிகாத்து மேலவந்த வேந்தனொடு முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட்பாலானும் = பெண்கோளொழுக்கத்தினொத்தும் மறுத்தல பறறிப் பகைவனாய் வலிந்துகோடற்கு எடுத்துவந்த அரசனோடு முதுகுடித்தலைவராகிய வாணிகரும் வேளாளருந் தத்தம் மகளிரைப படுத்தற்கு அஞ்சிய மகட்பாற்காஞ்சியானும்; வேந்தியலாவது உயிர்போற்றாது வாழ்தலின் அவரது நிலையின்மை நோக்கி அவர் ஒத்தும் மகளிரைப் படுத்தற்கஞ்சி மறுப்பாராதலின் அஞ்சியென்றும் மேல்வந்தவென்றுங் கூறினார். அம்முதுகுடிகள் தாம் பொருதுபடக்கருதுதலின் உயிரதுநிலையாமை உணர்ந்த காஞ்சியாயிற்று. பாலென்றதனான் முதுகுடிகளேயன்றி அனைநிலைவகையெனப்பட்டார் கண்ணும் இத்துறைநிகழ்தல்கொள்க. உம். "நுதிவேல் கொண்டு நுதல்வெயர் துடையாக் - கடிய கூறும் வேந்தே தந்தையு - நெடிய வல்லது பணிந்துமொழி யலனே - யிஃதிவர் படிவ மாயின் வையெயிற்-றரிமதர் மழைக்க ணம்மா வரிவை - மரம்படு சிறுதீப் போல - வணங்கா யினடான் பிறந்த வூர்க்கே." எனவரும். "களிறணைப்பக் கலங்கின காவு - தேரோடத் துகள்கெழுமின- தெருவு, மாவழங்கலின் மயங்குற்றன- வழி, கலங்கழாலிற், றுறை, கலக்குற்றன - செறன்மறவ ரிறைகூர்தலிற் - பொறைமலிந்து நிலனெளிய - வந்தோர்பலரே வம்பவேந்தர் - பிடியுயிர்ப் பன்ன கைகவரிரும்பி - னோவுறழிரும்புறங் காவல்கண்ணிக் - கருங்கண்கொண்ட நெருங்கலவெம்முலை - மையனோக்கிற் றையனயந்தோ - ரளியர்தாமே யிவ டன்னைமாரோ - செல்வம் வேண்டார் செருப்புகல்வேண்டி - நிரலல் லோர்க்குத் தரலோவில்லெனக் - கழிப்பிணிப்பலகை யாத்துவாய்வாளர் - குழாஅங்கொண்ட குருதியம்புலவொடு - கழாஅத்தலைய கருங்கடைநெடுவேலின்ன மறவர்க் காயினு மன்றோ - வென்னவதுகொ லறனே

பன்னல் வேலிப் பணைநல் லூரே." இதனுள் நிரலல்லோர்க்குத் தரலோவில்லென என்றலின் அரசர்க்கு மகட்கொடைக்குரியரல்லாத அனைநிலைவகையோர் பாற்பட்டது.

முலையும் முகனுஞ் சேர்த்திக் கொண்டோன் தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ ஈரைந்தாகுமென்ப = தன்கணவன்றலையைத் தன்முகத்தினும் முலையினுஞ் சேர்த்திக்கொண்டு அத்தலையான் மனைவியிறந்த நிலைமையானுந் தொகைபெற்றுக் காஞ்சி பத்துவகைப்படுமென்று கூறுவராசிரியர். எ-று. தலை அவள் இறத்தற்கேதுவாகலின் அது வினைமுதலாயிற்று. மேற் றுறை இரண்டெனப் பாராகலின் இவைபத்தும் ஒருதுறையாமென்றற்கும் இவை ஆண்பாற்குரியவென்றற்கும் ஈரைந்தென வேறோர் தொகை கொடுத்தார். அவன் தலையல்லது உடம்பினை அவள்பெறாமையின் அவன் யாக்கைக்கு நிலையின்மையெய்தாதலின் இதுவும் ஆண்பாற்கே சிறந்ததாம். மனைவி இறந்துபாடும் அதனோடெய்துதலின் மேல்வருகின்ற பெண்பாற்கும் இயைபுபடப் பின்வைத்தார். இதற்கியைபுபடத் தொடாக்காஞ்சியும் ஆஞ்சிக்காஞ்சியும் பெண்பாலோடுபட்ட ஆண்பாற் காஞ்சியாதலின் இதன்முன் வைத்தார். இவை ஒருவகையாற் பெண்பாற்கண்ணு நிலையின்மையுடையவாயினும் இரண்டிடத்தும் ஓதிச் சூத்திரம் பலகாமற் சிறப்புடைய ஆண்மகற்கே ஓதிப் பெண்பாற்பகுதியுந் தழீஇயினாரென்றுணர்க. இனிவருகின்ற பத்தும் பெண்பாற்கேயுரிமையின் அவற்றிற்கும் ஈரைந்தென்பதனைக் கூட்டிமுடிக்க. உ-ம். "நிலையி னுயிரிழத்தற் கஞ்சிக் கணவன் - றலையொழிய மெய்பெறாள் சாய்ந்தா - டலையி னுலை-வண்ணம் படைத்தான் முழுமெய்யு மற்றத்து-னின்ற தன்றே வுயிர்." எனவரும்.

பேரிசை மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் | ஆய்ந்த பூசன் மயக்கத்தானும் = பெரும்புகழுடையனாகி மாய்ந்தானொருவனைச் சுற்றிய பெண்ணினைச்சுற்றங் குரலகுறைவுபட்ட | கூப்பீட்டு மயக்கத்தானும்: என்றது, சுற்றத்தார் அழுகைக்குரல் விரவியெழுந்த ஓசையை. | ஆய்ந்தவென்பது உள்ளத் தினுணுக்கம். மாய்ந்தபூசன்மயக்கமென்று பாடமாயிற் சுற்றம் ஒருங்கு மாய்ந்தவழிப் பிறரழுத பூசன்மயக்கமென்று கொள்ளினும் அமையும். ஈண்டு மாய்ந்தமகனென்றதூஉஞ் சுற்றப்படுவானை அறிவித்தற்கே; ஆண்பாலும் உடன்கூறியதன்று. மேலனவற்றிற்கும் இஃதொக்கும். உ-ம். "இரவலர் வம்மி னெனவிசைத்த வின்றிப் - புரவலன்

மாய்ந்துழியும் பொங்கு - முனைமயங்க - வேற்கண் ணியரழுத வெம் பூசல் சேட்டடங்கா - தோற்சண்ண போலுந் துடி." எனவரும். "மீனுண் கொக்கின்" என்னும் புறப்பாட்டும் அது.

**தா**மே எங்கிய தாங்கரும் பையுளும் = அச்சுற்றத்தாருமின்றி மனைவியர் தாமே தத்தங் கொழுநனைத் தழீஇயிருந்து அழுதது கண்டோர் பொறுத்தற்கரிய நோயானும்: தாமேயெனப் பன்மை கூறினர், ஒருவர்க்குத் தலைவியர் பலரொன்றற்கு. ஏகாரஞ் சுற்றத்திற் பிரித்தலிற் பிரிநிலை. இது செல்வமும் இன்பமும் ஒருங்கு நிலையாமை கூறியது. "மழைகூர் பானாட் கழைபிணங் கடுக்கத்துப் - புலிவழங் கதரிடைப் பாம்புதூங் கிறுவரை - யிருள்புக்குத் துணிந்த வெண்குவாற் கல்லளை - யொருதனி வைகிய தனைத்தே பெருவளத்து - வேனின் மூதூர்ப் பூநாறு நறும்பக - லழுதுசுவர் மாடத்துக் கிளையுடை யொருசிறை - யவரின்று நிகழ்தரு முறவே யதனை - லழுதுபனி கலுழ்ந்தவெங் கண்ணே யவ்வழி - நீர்நீந்து பாவை யசைவது நோக்கிச் - சேணிடை யகன்ற துயிலே யதுவினி - யவருடைக் கனவோ டிவ்வழி யொருநாள் - வாரா தாயினும் யாதாங் கொல்லோ - மெலிந்து மெலியுமென் யாக்கையிற் - கழிந்து கழியுமென் னுருயிர் நிலையே." எனவரும். "கதிர்மூக் காரல் கீழ்ச்சேற்று" என்னும் புறப்பாட்டும் அது. தாமே யேங்கிய என்பதற்குச் சிறைப்பட்டார் தாமே தனித்திருந்ததென்றுகூறிக் "குழவி யிறப்பினு மூன்றடி யிறப்பினு - மான னன்றென்று வாளிற் றப்பார் - தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படத் திரீஇக் - கேளல் கேளிர் கேளில்வேளாண் சிறுபத - மதுகை யின்றி வயிற்றுத் தீத் தணீஇயர் - தாமிரந் துண்ணு மளவையி - ஞமரோவிவ் வுலகத் தானே." என்னும் புறப்பாட்டுக் காட்டுவாரும் உளர்.

**க**ணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தமும்: மனைவி தன்கணவன் முடிந்தபொழுதே உடன் முடிந்துபோகிய செலவுநினைந்து கண்டோர் பிறர்க்குணர்த்திய மூதானந்தத்தானும்: ஆனந்தஞ் சாக்காடு. முதுமைகூறினர், உழுவலன்புபற்றி. இப்படியிறத்தலின் இஃது யாக்கை நிலையின்மை. உ-ம். "ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க் - கீருயி ரென்ப ரிடைதெரியார் - போரின் - விடனேந்தும் வேலாற்கும் வெள்வளையினாட்கு - முடனே யுலந்த துயிர்." எனவரும்.

**நனி**மிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முதுபாலையும் = மிகுதிமிக்க அருநிலத்தே தன்கணவனை

இழந்து தனித்த மகள் தன்தனிமை வெளிப்படுத்தின முதுபாலையானும்: புலம்பியெனவே அழுதல் வெளிப்படுத்தல் கூறிற்று. பாலையென்பது பிரிவாகலின் இது பெரும்பிரிவாதல் நோக்கி முதுபாலையென்றார் கனிமிகு சுரமென்று இருகால் அதனருமைகூறவே பின்பனி பிரிவிற்குச் சிறந்ததன்றாயிற்று. இதுவும் இன்பமுஞ் செல்வமும் ஒருங்கு நிலையின்மை கூறிற்று. "இளையரு முதியரும் வேறுபுலம் படர - வெடுப்ப வெழாஅய் மார்பமண் புல்ல - விடைச்சுரத் திறுத்த மள்ளர் விளர்த்த - வளையில் வறுங்கை யோர்ச்சிக் கிளையு - ளின்ன ளாயின ளிளையோ ளென்று - நின்னுணர் சொல்லு மாயின் மற்று - முன்னூர்ப் பழுநிய கோளியா லத்துப் - புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன் - வளனுஞ் செம்மலு மெமக் கென நாளு - மானுது புகழு மன்னை - யாங்கா குவள்கொ லளியள் டாளே." எனவரும்.

கழிந்தோர் தேஎத்து அழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும் = கணவனோடு மனைவியர் கழிந்துழி அவர்கட்பட்ட அழிவுபொருளெல்லாம் பிறர்க்கு அறிவுறுத்தித் தாம் இறந்துபடாதொழிந்த ஆயத்தாரும் பரிசில்பெறும் விறலியருந் தனிப்படருழந்த செயலறு நிலைமையானும்: ஒழிந்தோரென வாளாது கூறினமையிற் கழிந்தோராற் புரக்கப்படும் அவ்விருதிறத்தாரையும் உடன்கொள்க. கழிந்தோரொன்ற பன்மையால் ஆண்பாலுந் தழீஇயினர், கையறுநிலை அவளையின்றி அமையாமையின். ஆண்பாற் கையறுநிலை மன்னைக்காஞ்சியுள் அடங்கும். அழிவாவன புனல்விளையாட்டும் பொழில்விளையாட்டுந் தலைவன்வென்றியும் போல்வன. உம். "தேரோன் மகன்பட்ட செங்களத்து ளிவ்வுடம்பிற் - றீராத பண்பிற் றிருமடந்தை - வாரா - வுலகத் துடம்பிற் கொழிந்தாள்கொல் லோஒ - வலகற்ற கற்பி னவள்." எனவரும்.

காதலி இழந்த தபுதார நிலையும் = தன்மனைவியைக் கணவனிழந்த தபுதார நிலையானும்: என்றது தாரமிழந்தநிலை. தன்காதலியை இழந்தபின் வழிமுறைத்தாரம் வேண்டின் அது காஞ்சிக் குறிப்பன்று என்றற்கும், எஞ்ஞான்றும் மனைவியில்லாதானுந் தபுதாரநிலைக்கு உரியனாயினும் அது காஞ்சியாகாதென்றற்கும், தபுதார நிலையென்றே பெயர்பெறுதன் மரபென்றற்கும், காதலியிழந்த நிலையுமென்றே ஒழியாது பின்னுந் தபுதாரநிலையுமென்றார். தலைவர் வழிமுறைத்தாரமும் எய்துவாராகலின் அவர்க்கு நிலையாமை சிறப்பின்மையின் ஆண்பாற் காஞ்சியன்றாயிற்று. இது யாக்கையும் உயிரும் ஒருங்குநிலையின்மையாம். உம் "யாங்குப்

பெரிதாயினு நோயள வனைத்தே - யுயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையிற் - கள்ளி போகிய களரியம் பறந்தலை - வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத் - தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி - ஞாங்கர் மாய்ந்தனண் மடந்தை - யின்னும் வாழ்வ லென்னிதன் பண்பே." எனவரும்.

காதலன் இழந்த தாபதநிலையும் = காதலனையிழந்த மனைவி தவம்புரிந்தொழுகிய நிலைமையானும்: இருவரும் ஒருயிராய் நிகழ்ந்தமையின் உயிரும் உடம்பும் இன்பமுஞ் செல்வமும் ஒருங்கிழந்தாள் தலைவியேயாம். இதனை இல்லறம் இழத்தலின் அறநிலையின் அமையுமென்ப. உம். "அளிய தாமே சிறுவெள் ளாம்ப - லிளைய மாகத் தழையா யினவே - யினியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத் - தின்னா வைக லுண்ணு - மல்லிப் படூஉம் புல்லா யினவே." எனவரும்.

நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச் சொல்லிடையிட்ட பாலைநிலையும் = கற்புடைமனைவி தன்கணவன் இறந்துழி அவனோடு எரிபுகுதல் வேண்டி எரியை விலக்கினாரோடு உறழ்ந்துகூறிய புறங்காட்டு நிலையானும்: எல்லாநிலத்தும் உளதாகி வேறுதனக்குநிலனின்றி வருதலானும் நண்பகல்போல் வெங்கனலான் வெதுப்புதலானும் புறங்காட்டைப் பாலையென்றார்; பாலைத்தன்மை எய்திற்று என்றற்கு நிலையென்றார். உம். "பல்சான் றீரே பல்சான் றீரே - செல்கெனச் செல்லா தொழிகென விலக்கும் - பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே - யணில்வரிக் கொடுங்காய் வாள் போழ்ந் திட்ட - காழ்போ லாநல் விளர்நறு நெய்தீண்டா - தடையிடை மிடைந்த கைபிழி பிண்டம் - வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட - வேளை வெந்தை வல்சி யாகப் - பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு - முயவற் பெண்டிரே மல்லே மாதோ - பெருங் கோட்டுப் பண்ணிய கருங்கோட் டீம - நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம் - பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற - வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை - நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே." எனவரும்.

மாய்பெருஞ் சிறப்பிற் சிறுவற் பெயரத் தாய் தபவரூஉந் தலைப்பெயல் நிலையும் = பொருகளத்துப் பொருதுமாயும் பெருஞ்சிறப்பிற் றீர்ந்து தன்மகன் புறங்கொடுத்துப் போந்தானாக, அதுகேட்டுத் தாய் சாக்காடு துணிந்து சென்று மகனைக்கூடுங் கூட்டமொன்றானும்: இனி அவன் பிறர்சிறப்பு மாய்த்தற்குக் காரண

மாகிய பெருஞ்சிறப்பொடு களப்பட்டுத் துறக்கத்துப் போயவழி அவனோடு இறந்துபடவருந் தாயது தலைப்பெயனிலைமையொன்று னும் : இவ்விருகூறும் உய்த்துக்கொண்டுணர்தலென்னும் உத்தி. நிலையென்றதனால் அவள் இறந்துபடாது மீடலுஞ் சிறுபான்மை காஞ்சியென்றுகொள்க. அஃது அன்பிற்கு நிலையின்மையாம். உம். "வாதுவல் வயிறே வாதுவல் வயிறே - நோவே னத்தை நின்னீன் றனனே - பொருந்தா மன்ன ரருஞ்சம முருக்கி - யக்க ளத் தொழிதல் செல்லாய் மிக்க - புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃகே - மதன்முகத் தொழிய நீபோந் தனையே - யதனால், லெம்மில் செய்யாப் பெரும்பழி செய்த - கல்லாக் காளையை யீன்ற வயி றே." இத்தகரோயாத்திணை களியிடை வேலொழியப் போந்ததற்குத் தாய்தபவந்த தலைப்பெயனிலை. "எற்கண் டறிகோ வெற்கண் டறிகோ - வென்மக ளுதை லெற்கண் டறிகோ - கண்ணே கணைமூழ் கினவே தலையின் - வண்ண மாலையும் வாளிவிடக் குறைந்தன - வாயே, பொங்குநுனைப் பகழி மூழ்கலிற் புலர்வழித் - தாவ நா திகை யம்புசெறித் தற்றே - நெஞ்சே வெஞ்சரங் கடந்தன குற ங்கே - நிறங்கரந்து பலசர நிரைத்தன வதனால் - லவிழ்பூ வப்ப ணைக கிடந்தோன் - கமழ்பூங் கழற்றீங் காய்போன் றனனே." இத்தகரேர்யாத்திணை துறகத்துப்பெயர்ந்த நெடுங்கோளன் தாய் இறந்துபட்ட தலைப்பெயனிலை. "நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள் - முளரி மருங்கின் முதியோள் சிறுவன் - படையழி ந்து மாறின னென்றுபலர் கூற - மண்டமாச் குடைந்தன னாயி னுண்டவென் - முலை யறுத்திடுவன் யானெனச் சினைஇக் - கொண்ட வாளொடு படுபிணம் பெயராச் - செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய - படுமகன் கிடக்கை காணூஉ - வீன்ற ஞான்றினும் பெரி துவந் தனளே." இப் புறப்பாட்டு மீண்டது. "ஈன்றுபுறந்தரு தல்" என்னும் புறப்பாட்டும் அது.

மலர்தலை உலகத்து மரபு நன்கறியப் பலர்செலச் செல்லாக் காடுவாழ்த்தொடு = அகன்ற இடத்தினையுடைய உலகங்களிடத்து வரலாற்று முறைமையினைப் பலரும் பெரிதுணரும்படியாகப் பிற ந்தோரெல்லாரும் இறந்துபோகவும் எஞ்ஞான்றும் இறப்பின்றி நிலைபெற்ற புறங்காட்டினை வாழ்த்துதலானும் : உம். "உலகு பொதியுருவந் தன்னுருவ மாகப் - பலர்பரவத் தக்க பறந்தலை நன் காடு - புலவுங்கொ லென்போல் புலவுக் களத்தோ - டிகனெடு வே லானை யிழந்து." எனவரும். "களரி பரந்து கள்ளி போங்கிப் - பகலுங் கூஉங் கூகையொடு பிறழ்பல் - ஈம விளக்கிற் பேஎ மகளி

ரொ - டஞ்சுவந் தன்றி மஞ்சுபடு முதுகாடு - நெஞ்சமர் காதல ரழுத கண்ணீ - ரென்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப - வெல்லாப் புறனுந் தான்கண் டுலகத்து - மன்பதைக் கெல்லாந் தானாய்த் - தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.'' இதுவும் அது.

தொகைஇ ஈரைந்து ஆகுமென்ப = தொகைபெற்றுக் காஞ்சி பத்துவகைப்படுமென்று கூறுவர் ஆசிரியர்: நிறையருஞ் சிறப்பிற் றுறை இரண்டு உடைத்தே = ஆதலான் அக்காஞ்சி நிறுத்தற்கு எதிர்பொருளில்லாத பெரிய சிறப்பினையுடைய ஆண்பாற்றுறையும் பெண்பாற்றுறையுமாகிய இரண்டு துறையினையுடைத்து.—எ-று. எனவே முற்கூறிய பத்தும் இப்பத்துமாக இருபதென்பதுங் கூறினாராயிற்று. நிறையருஞ் சிறப்பென்றதனானே மக்கட்கும் தேவர்கட்கும் உள்ள நிலையாமையே காஞ்சிச்சிறப்புடைத்தாகக் கூறப்படுவது; ஏனை அஃறிணைப்பகுதிக்கண்ணுள்ள நிலையாமை காஞ்சிச் சிறப்பன்று என்றுணர்க. (உச)

அ௦. பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே.

இது மேற் ''புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்'' என்புழிக் கிடக்கைமுறை கூறிய முறையான் இறுதிநின்ற பாடாண்டிணைக்குப் பொதுவிலக்கணம் உணர்த்துவான் அதற்குப் பெயர் இன்னதெனவும் அது கைக்கிளைப்புறனெனவும் அஃது இத்துணைப்பொருளுடைத்தெனவுங் கூறுகின்றது. (இ-ள்.) பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே = பாடாணெனப்பட்ட புறத்திணையது கூறு கைக்கிளையென்று கூறப்பட்ட அகத்திணைக்குப் புறனாம்: நாடுங் காலை நாலிரண்டு உடைத்து = தலைவனை நாடிச் சொல்லுவார் செய்யுளுள் முடிக்கும்பொருள் பாடாணாகவே நிறுப நாடுங்காலத்து எண்வகைப் பொருளுடைத்து.—எ-று. பாடாணென்பது பாடுதல் வினையையும் பாடப்படும் ஆண்மகனையும் நோக்காது அவனதொழுகலாறாகிய திணையுணர்த்தினமையின் வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஒருதலைவனைப் பரவலும் புகழ்ச்சியும் வேண்டி ஒருபுலவன் வீடுபேறு முதலிய பரிசில் வேண்டலின் அவை தம்மின்வேறாகிய ஒருதலைக்காமமாகிய கைக்கிளையோடொத்தலிற் பாடாண்டிணை கைக்கிளைப்புறனாயிற்று. வெட்சிமுதலிய திணைகளுஞ் சுட்டியொருவர்பெயர் கொடுத்துங் கொடாது பாடப்படுதலிற் பாடாண்டிணையாயினும் ஒருவனை ஒன்று நச்சிக் கூறாமையின் அவர் பெறுபுகழ் பிறரைவேண்டிப் பெறுவதன்றித் தாமே த

லைவராகப் பெறுதலின் அவை கைக்கிளைப்புறன் ஆகாமை உணர்க. இவ்விருகூறுந் தோன்றப் பகுதியென்றார். புகழை விரும்பிச் சென்றோ வெட்சிமுதலியவற்றைப் பாடின் அவை கைக்கிளைப் புறன் ஆகாதென உணர்க. இதனானே புறத்திணை ஏழற்கும் பெரும் முறையும் ஒருவாற்றாற் கூறினாராயிற்று. நாலிரண்டாவன இப்பாடாண்டிணைக்கு ஓதுகின்ற பொருட்பகுதி பலவுங் கூட்டி ஒன்றும் இருவகைவெட்சியும் பொதுவியலும் வஞ்சியும் உழிஞையுந் தும்பையும் வாகையுங் காஞ்சியுமாகிய பொருள்கள் ஏழுமாகிய எட்டுமாம். இனி முற்கூறிய ஏழுதிணையும் பாடாண்டிணைப் பொருளாமாறு காட்டுங்கால் எல்லாத்திணையும் ஒத்ததாயினும் அவை பெரும்பான்மையுஞ் சிறுபான்மையுமாகி வருதலும் அவை இரண்டும் பலவும் ஒருங்குவருதலும் பாடாண்டிணைக்கு மேற்கூறும் பொருளும் விராய்வருதலுமாமென்று உணர்க. உம். "முனைப்புலத்துக் கஃதுண்ட முசநிரைபோல் வேந்தர் - முனைப்புலத்து முன்னிரையும் வீசி - மபலைப்புலத்துச் - சென்றது நின்சீர்த்தி தேர்வளவ தெவ்வர்போ - னன்றுமுனை டாக நமக்கு." இது கூற்றுவகையானன்றிக் குறிப்புவகையான் ஒன்று பயப்பானாக நினைத்துரைத்தலின் வெட்சியும் வாகையும் வந்த பாடாண்டிணையாம். "அவலெறிந்த வுலக்கை வாழைச் சேர்த்தி - வளைக்கை மகளிர் வள்ளை கொய்யு - முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த - தடந்தாணாரை யிரிய வயிரைக்-கொழுமீ னார்க யாமந்தொறுங் குழறலின்- வெண்ணகை மகளிர் வெண்குருகோப்பு-மழியா விழவி னிழியாத் திவவின - வயிரியர் மாக்கள் பண்ணமைத் தெழீஇய - மன்ற நண்ணி மறுகு சிறைபாடு - மகன்கண் வைப்பி னாடு மன்னிய- விரவுவெறு கூலமொடு குருதி வேட்ட - மயிர்புதை மாக்கண் கடிய கழற - வமர்கோள் தெரிதரு தாரெயில் கடக்கும் - பெருமலை யானைக் குட்டுவன்-வரம்பி றானை பரவா லூங்கே." இதில் இமையவரம்பன் றம்பி பலயானைச் செலகெழு குட்டுவனைப் பாலைகௌதமனார் துறக்கம் வேண்டினானென்பது குறிப்புவகையாற் கொள்ள வைத்தலின் இது வஞ்சிப்பொருள வந்த பாடாணாயிற்று. | "இலங்கு தொடிமருப்பின்" என்னும் பதிற்றுப்பத்து உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பாகிய உழிஞையாயினும் பதின்றுலாம் பொன்பரிசில் பெற்றமையிற் பாடாணாயிற்று. | "பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே - பணியா வுள்ளமோ டணிவரக் கெழீஇ- நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே-வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகல - மகளிர்க் கல்லது மலைப்பறி யலையே - நிலந்திறம் பெயருங் காலை யாயினுங்-கிளந்த சொன்னீ பொய்பறி யலை

நூஉந் - துகளில் கற்பின் மகளிரொடு விளங்கி - முழுமதிக் குடையி னமுதுபொதி நீழ - லெழுபொழில் வளர்க்கும் புகழ்சால் வளவன் - பிறந்து பாரகத்துப் பிறர்வாய்ப் பரவநின் - னறங்கெழு சேவடி காப்ப வுறந்தையோ-டூழி யூழி வாழி-யாழி மாநில மாழியிற் புரந்தே." இது கடவுள்வாழ்த்தி ஒழியாது தனக்குப் பயன்படுவோன் ஒருவனையுங் கூட்டி வாழ்த்தலின் புறநீர்காமம் புல்லிய வகையாயிற்று. (உசு)

அஉ. வழங்கியன் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியுங் கருதிய பாங்கினு
முன்னோர் கூறிய குறிப்பினுஞ் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே.

இது மேல் "ஒன்றன் பகுதி" என ஒழித்துத் தோற்றுவாய் செய்த இருபகுதியுள் மக்கட்பகுதி கூறுகின்றது. (இ-ள்.) பரவலும் புகழ்ச்சியுங் கருதிய பாங்கினும் = ஒருதலைவன் தன்னைப் பிறர் வாழ்த்துதலும் புகழ்ந்துரைத்தலுங் கருதிய பக்கத்தின்கண்ணும்: வகைபட முன்னோர் கூறிய குறிப்பினும் = அறம்பொருளின்பங்களின் கூறுபாடு தோன்ற முன்னுள்ளோர் கூறிய குறிப்புப்பொருளின் கண்ணும்: செந்துறை நிலைஇ = செவ்வன் கூறுந்துறை நிலைபெற்று: வழங்கியன் மருங்கின் = வழங்குதல் இயலுமிடத்து ஆங்கு வண்ணப் பகுதி வரைவின்று = அச்செந்துறைக்கண் தேவர்களின் கூறுபாடு நிகழ்ந்ததனை நீக்கு நிலைமையின்று—எ-று.

பரவல் முன்னிலைக்கண்ணே பெரும்பான்மை வரும். பரவலும் புகழ்ச்சியுந் தலைவன்கண்ணவேயாயினும் பரிசில் பெறுதல் பாடுவான் கண்ணதாகலின் ஒருதலைக் காமமாகிய கைக்கிளைக்குப் புறனாயிற்று. முன்னோர் கூறிய குறிப்பும் பாடப்படுவோன்கண் வேட்கையின்மையிற் கைக்கிளையாம். குறிப்பொருள், அறம் பொருள் இன்பம் பயப்பச் செய்த செய்யுளைக் கேட்டோர்க்கும் அஃது உறுதிபயத்தலைக் குறித்துச் செய்தலின். செந்துறையாவது விகாரவகையான் அமரராக்கிச் செய்யும் அறுமுறைவாழ்த்தினைப் போலாது உலகினுள் இயற்கைவகையான் இயன்ற மக்களைப் பாடுதல். இது செந்துறைப் பாடாண்பாட்டெனப்படும். "வண்ணமுந் தொடையு மொரீஇ யெண்ணாது" என்பவாகலானும் ஐவகை நிறத்தினையும் வண்ணமென்பவாகலானும் வண்ணமென்பது இயற்சொல், வர்ணமென்பது வடமொழித்திரிபு. ஆங்கு வண்ணப்பகுதி வரைவின்றெனவே வருகின்ற காமப்பகுதியிடத்து வண்ணப்பகுதி வரையப்

படுமாயிற்று; கைக்கிளைக் கிழத்தியை உயர்ந்தோன் வருணத்துப்ப டுத்துக்கூறுதது அதனை நிலைவருணத்துப் படுத்துத் தோன்றக்கூ றலின். உம். "நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி - னளப்பரி யையே நாள்கோ டிங்கள் - ஞாயிறு கனையழ லைந்தொருங்கு புணர்ந்த- விளக்கத் தனையை போர்தலை மிகுத்த- வீரைம் பதின்ம ரொடு துப்புறை போகிய - துணிவுடை யாண்மை யக்குர னனைய- கைவண் மையையே யமர்கடந்து மலைந்த-தும்பைப் பகைவர் போ ர்பீ டழித்த- செருப்புகன் முன்ப கூற்று வெகுண்டு- வரினு மாற று மாற்றலையே - யெழுமுடி கெழீஇய திருஞெமர்க் கலலத்து- நோன்புரி தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை - வானுறை மகளிர் நல னிகல் கொள்ளும் - வயங்கிழை கரந்த வடுப்படு துப்பி - னெடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ - பலகளிற்றுத் தொகுதியொடு வெல்கொடி நுடங்கும் - படையே ருழவ பாடினி வேந்தே - யிலங் குமணி மிடைந்த பொலங்கலத் திகிரி - கடலக வரைப்பினிப் பொ ழின்முழு தாண்டநின் - முன்றிணை முதல்வர் போல நின் று - நீகெடா நல்லிசை நிலைஇத்-தவாலிய ரோவிவ் வுலகமோ டுட னே." பரவற்கண் வந்த செந்துறைப்பாடாண்பாட்டு; இதனை வா ழ்த்தியலென்பா. "வரைபுரையு மழகளிற்றின் மிசை - வானுறு டைக்குந் தகைசொ- லவிர்வுருவின் கொடிநுடங்கும்- வியன்றானை விறல்வேந்தே - நீ, புனருக்காகலும் வாயெரிதவழ - நீ, நயந்து நோக்கும் வாய்பொன் பூப்பச் - செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்- வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்-வேண்டியது விளைக்கு மா ற்றலை - யாகலின், நின்னிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த- வெம்மள வெவனோ மற்றே யிருநிலம் - பொலம்பூங் காவி னன்னாட்டோ ருஞ் - செய்வினை மருங்கி னெய்த லல்லதை - யுடையோ ரீதலு மில்லோ ரிரத்தலுங் - கடவ தன்மையிற் கையற வுடைத்தென - வ ணடுசெய னுகர்ச்சி யீண்டுங் கூடலி- னின்னா டுள்ளுவர் பரிசில ரொன்னார் தேஎத்து நின்னுடைத் தெனவே" இது புகழ்ச்சிக் கண்வந்த செந்துறைப் பாடாண்பாட்டு; இதனை இயன்மொழி யென் பதும் அது. "உண்டா லம்மவிவ் வுலக மிந்திர - ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத் - தமிய ருண்டலு மிலரே முனிவிலர் - துஞ் சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப் - புகழெனி னுயிருங் கொடுக்கு வர் பழியெனி - னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்விலர் - ரன்ன மாட்சி யனைய ராகித் - தமக்கென முயலா நோன்றாட் - பிறர்க் கென முயலுந ருண்மை யானே." இது வகைபட முன்னோர் கூறிய குறிப்பின்கண்வந்த செந்துறைப் பாடாண்பாட்டு. இது முனிவர் கூறுமாறுபோலக் கூறிப் பரவலும் புகழ்ச்சியுங் கூறாது

மறுமைப்பயன் பிறர்க்குறுதி பயப்பக் கூறலிற் கைக்கிளைப் புறனாய்ப் பாடாணாயிற்று. இவை செந்துறை மார்க்கத்து வண்ணப்பகுதியாகிய பாடலபற்றி வருமென்பதூஉம் வெண்டுறை மார்க்கமாகிய நாடகத்துள் அவிநயத்துக்குரியவாகி வருமென்பதூஉங் கூறின் அவை ஈண்டுக்கூறல மயங்கக் கூறலாம். அன்றியும் ஏனை அறுவகைத்திணைக்கும் இங்ஙனங் கூறாது இத்திணைக்கே உரித்தாகக் கூறுதற்கோர் காரணமின்மையானும் அங்ஙனங் கூறாரென்ப. பரவலும் புகழ்ச்சியும் அவ்வப்பொருண்மை கருதினானாதலைவராகவுடைமையானும், ஏனையது அக்குறிப்பிற்றன்றாகலானும், அதற்குப் பாட்டுடைத்தலைவர் பலராயினும் ஒருவராயினும் பெயர்கொடுத்துங் கொடாதுங் கூறலானும் வேறுவைத்தாரென்க. இத்துணை வேறுபாடுடையதனைப் பரவல்புகழ்ச்சியோடு கூட்டிவைத்தார், அவைமுன்னோர் கூறிய குறிப்பினுள்ளும் விராய்வரும் என்றற்கு. இன்னும் அதனானே பாடாண்டிணைப் பொருண்மை மயங்கிவரினும் முடிந்தபொருளாற் பெயர்பெறு மென்றுகொள்க. "நிலமிசை வாழ்நர்" எனனும் புறப்பாட்டுப் புலவன் அரசனை நாடிநனைகுளாததல. அது இயற்கைவாகையன்றிச் செயற்கைவாகையாகப் பரவலும் புகழ்ச்சியுந் தொடர்ந்த முன்னோர்கூறிய குறிப்பு. இன்னும் மயங்கி வருவனவெல்லாம் இதனான் அமைக்க. (உஎ)

அஅ. காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினு மென்மனார் புலவர்.

இது முற்கூறிய கடவுட்கும் மக்கட்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது. (இ-ள்) காமப்பகுதி = முன்னாப் புணர்ச்சி காமமென்றதனுட் புகுதாத புணர்ச்சிவேட்கை: கடவுளாட்டின்கண்ணும் வரையார் = கடவுளிடத்தும் நீக்கார்: ஏனோர் பாங்கினும் வரையார் என்மனார் புலவர் = மக்களிடத்தும் நீக்காரென்று கூறுவர் புலவர்.—எ-று. பகுதி ஆகுபெயர். அது கடவுண்மாட்டுக் கடவுட்பெண்டிர் நயப்பனவும், அவர்மாட்டு மானிடப்பெண்டிர் நயப்பனவும், கடவுள் மானிடப்பெண்டிரை நயப்பனவும் பிறவுமாம். இன்னும் பகுதியென்றதனானே எழுதிணைக்குரிய காமமுங் காமஞ்சாலா இளமையோள்வயிற் காமமுமன்றி இது வேறோர் காமமென்றுகொள்க. எ-ம். "நல்கெனி னாமிசைப் பானென்னுஞ் சேயடிமே - லொல்கெனி னுச்சியா னென்னும் - மல்கிருள் - மாட லமர்ந்தாற் கரிதா லுமையாளை - யூடல் தணிர்த்தலைதோ ராறு." "பலவேறுற பரிகலத்துப் பலிவேறன் மேலிட்டு - வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருகிரால் - வல்

லேற்ற முலைமகளிர் மனமேற்ப நீரோறுங் - கொல்லேற்றுக் கறு ழிடினுங் கொள்ளுமோ கொள்ளாதோ." "குடுமிப் பருவத்தே கோதை புனைந்தே- யிடுமுத்தப் பூத விருப்பப்-படுமுத்தம்-புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையாக் - கென்ன முறைய ளிவள்." எனவரும். "களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை - யளியா னளிப்பனே போன்றான் - றெளியாது - செங்காந்தண் மெல் விரலாற் சேக்கை தடவந்தே - னென்கண்பே னென்னலால் யான்." "அணியாய செம்பழுக்காய் வெள்ளிலையோ டேந்திப்- பணியா யெமபெருமா னென்று - கணியார்வாய்க் - கோணலங் கேட்பதூஉங் கொண்கர் பெருமானாய் - தோணலஞ் சேர்தற் பொருட்டு." எனவரும். "அடியனை தொடுகழன் மையணற் காளைக் கென் - றொடிகழித் திடுதல்யான யாயஞ் சுவலே - யடுதோண் முயங்க லவைநா ணுவலே - யெம்போற் பெருவிதுப் புறுக வென்று - மொருபாற் படாஅ தாகி - யிருபாற் பட்ட விம்மய லூரே." இது பெருங்கோழி நாயகனொருவன ஒதத அன்பினாற் காமமுறாத வழியுங் குணச்சிறப்பின்றித் தானே காமமுற்றுக் கூறியது. இன்னும் ஏனோர்பாங்கினும் என்பதனானே இளவித்தலைவனல லாத பாட்டுடைத்தலைவனைக் கிளவித்தலைவனாகக் கூறுவனவுங் கொள்க. உம். "கார்முற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட மலர் வேய்ந்து - சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலந் - தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைத - னீர்முற்றி மதி ற்பொரூஉம் பகையல்லா னேராதார் - போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூர." இது குறிப்பினாற் பாட்டுடைத்தலைவனைக் கிளவித்தலைவனாகக் கூறியது. "மீளிவேற் றானையர் புகுதந்தார் நீளுயர் - கூட னெடுங்கொடி யெழவே" எனபதும் அது. இவ் வாறு வருவதெல்லாம் இதனான் அமைக்க. (உஅ)

அச. குழவி மருங்கினுங் கிழவ தாகும்.

இது முன்னிற் சூத்திரத்திற் பக்குநின்ற காமத்திற்கன்றிப் புறைதிர் காமத்திற்குப் புறனடை கூறுகின்றது. (இ-ள்.) குழவி மருங்கினும் கிழவ தாகும் = குழவிபபருவத்துங் காமப்ப குதி உரியதாகும்.—எ - று. மருங்கெனறதனை மக்கட்குழவியா கிய ஒருமருங்கே கொள்க, தெய்வக்குழவியின்மையின். இதனை மேலவற்றோடுடன் கூறாது வேறுகூறினார், தந்தையரிடத்தன்றி ஒருதிக்கனைக் குழவியைப்பற்றிக் கடவுள்காக்க என்றுகூறுதலா னும் பாராட்டுமிடத்துச் செங்கீரையுந் தாலுஞ் சப்பாணியும் முத் தமும் வாரனைத்தலும் அம்புலியுஞ் சிற்றிலுஞ் சிறுதேருஞ் சிறு

யுறையுமெனப் பெயரிட்டு வழங்குதலானு மென்பது. இப்பகுதிக ளெலலாம் "வழக்கொடு சிவணிய" என்னுஞ் சூத்திரத்தாற் பெறு தும். இப்பருவத்துக்கு உயர்ந்தவெல்லை மூவகை வருணத்தாரும் இருபிறப்பாளராகின்ற பருவமாம். வேளாளர்க்கு மூவகையோர்க்குரிய பருவமேகொள்க. குழவிப்பருவங் கழிந்தோர் அது வேண்டியக்காலும் அக்குழவிப்பருவமே கருதிப் பாடுக வென்றற்குக் கிழவதாகுமென்றார். இதற்குப் பரிசிலவேட்கை அக்குழவிக்கணன்றி அவன் தமர்க்கண்ணுமாமெனவுணர்க. உம். "அன்று விளைருவ னந்தரத்தானென்றான்-முன்ன மொருகான் மொழியினை- பின்றுங்- கலிகெழு கூடலிற் கண்ணீடி வந்து - புலியாய்ப் [illegible]வான் புகும்." அந்தரத்தானென்றமை அப்புலிவேறாயும் ஒரு காலத்தே விளையாட்டு நிகழ்த்துமென. இது மதுரையிற பிட்டு வாணிச்சிமகற்கு மங்கலக்குறிப்பாற் சான்றோர் கூறியது. (உ௬)

அ௫. ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப.

இது புறத்திணை காமத்திற்கன்றிப பக்குநின்ற காமத்திற்குப் புறனடை கூறுகின்றது. (இ-ள்.) பக்குநின்ற காமம் ஊரிற் பொதுமகளிரொடு கூடிவந்த விளக்கமும் பாடாணடிணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர்.—எ-று. தோற்றமுமென்றது அக்காமந் தேவரிடத்தும் மக்களிடத்தும் விளங்கும் விளக்கத்தை. அது பின்னுள்ளோர் ஏழுபருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட்டாகச் செய்கின்ற உலாச்செய்யுளாம். இச்சூத்திரத்திற்குத் தலைவர் பிறந்த ஊரும் அவர்பிறப்புமென்று பொருள்கூறின் மரபியற்கண்ணே "ஊரும் பெயரும்" என்னுஞ் சூத்திரத்து ஊர்பெறுதலானும் முன்னர் "வண்ணப்பகுதி" என்பதனுற் பிறப்புப்பெறுதலானும் இது கூறியதுகூறலாமெனவுணர்க. (௩0)

அ௬. வழக்கொடு சிவணிய வகைமை யான.

இது அமரர்கண் முடியும் என்னுஞ் சூத்திரமுதலியவற்றுக்கெல்லாம் புறனடை (இ-ள்.) வழக்கொடு சிவணிய வகைமையான = கடவுள்வாழ்த்தும் அறுமுறைவாழ்த்தும் முதலாக ஊரொடுதோற்றமீறாகக் கிடந்தனவெல்லாஞ் சான்றோர் செய்த புலனெறிவழக்கோடே பொருந்திவந்த பகுதிக்கண்ணேயான பொருள்களாம்.—எ-று. எனவே, புலனெறிவழக்கின் வேறுபடச் செய்யற்க என்பது கருத்து. கடவுள்வாழ்த்துப் பாடுங்கால் முன்னுள்ளோர் பாடியவாறன்றி முப்பத்துமூவருட் சிலரை விதந்துவாழ்த்திப் பாடப்பெறுது. இனி அறுமுறைவாழ்த்துப் பாடுங்கால் முன்

னுள்ளோர் கூறியவாறன்றி ஆவிற்கினமாகிய எருமை முதலியன
வும் வாழ்த்தப்படா. இனிப் புரைதீர்காமம் புல்லியவகையும் ஒரு
வன்றொழுங் குலதெய்வத்தை நோக்கியன்றி வரைவின்றிக் கூற
ப்படாது. இனிச் செந்துறைப் பாடாண்பாட்டு முன்னுள்ளோர்
கூறியவாறன்றி இறப்ப இழித்தும் இறப்ப உயர்த்துங் கூறப்
படாது. இனிக் காமப்பகுதி கடவுளரைக் கூறுங்காலும் பெண்டெ
ய்வத்தோடு இயல்புடையாரைக் கூறினன்றி எண்வகை வசுக்கள்
போல்வாரையும் புத்தர் சமணர் முதலியோரையுங் கூறப்படாது.
இனி மக்களுள் ஒருவனைத் தெய்வப்பெண்பால் காதலித்தமை
கூறுங்காலும் மக்கட்பெண்பாற்குக் காதல்கூறுங்காலும் முன்
னோர் கூறியவாறன்றிக் கூறப்படாது. இனிக் குழவிப்பருவத்
துக் காமங் கூறுங்காலும் முன்னர்க்காட்டும் பின்னர் ஏனையவுமாக
முன்னுள்ளோர் கூறியவாறன்றிக் கூறப்படாது. இனி ஊரொடு
தோற்றமும் பரத்தையர்க்கன்றிக் குலமகளிர்க்குக் கூறப்படாது
இன்னுஞ் சிவணிய வகையென்றதனானே முற்கூறியவற்றொடு
நாடும் ஊரும் மலையும் யாறும் படையுங் கொடியுங் குடையும்
முரசும் நடைநவில்புரவியுங் களிறுந் தேருந் தாரும் பிறவும் வரு
வன வெல்லாங்கொள்க. உ-ம். "முற்பற்றி னானை முறைசெய்யி
னென்னைக் - கைப்பற்றாக் கண்டோர் சனவிழுப் - பெற்றித்
தன்னை தனக்குக் குறைபடத் தானெய்யும் - பொன்னாம் பய
னுடையார் கோ." "வரியு மேற்றத்தி னுளும் பிறர்நாடு - வாரி சுர
க்கும் வளமெல்லாந் - தேரின் அரிதாளின் கீழ்கூடு மநெல்லோ சா
லுங் - கரிகாலன் காவிரிசூழ் நாடு." இவை நாடும் யாறும் ஆய்ந்
துவந்தன. "மலிதேரான் கச்சியு மாகடலுந் தம்மு - ளொலியும்
பெருமையு மொக்கு - மலிதேரான் - கச்சி படுவ கடல்படா கச்சி-
கடல்படுவ தெல்லாம் படும்." இது ஊர் ஆய்ந்துவந்தது. "மதி
யிற் செருப்பிற புழியர் கோவே - குவிவிற கண்ணி மறவர்
மே மறவை - பைந்தலைப் பயங் கெழுநெடுந் தோட்டு - கிற்றல
மருங்குவழிப் படாது பமைய - பராவற் கொக்கின பரிவேட் பஞ்
சாச் - சிறுடைத் தேளக்த முனைகெட விலங்கிய நேருயர் நெடுவ
ரைப் பொருந." இது மலைபடுத்தது. "ஆபஞ்சேர்ந்த புறத்தைத்
தேர்மீசை சாபநோன்ஞாண் வடுக்கொள் வழங்கவும்" இது படை
படுத்தது. "பூங்க ணெடுமுடிப் பூவைப்பூ மேனியான் - பாம்புண்
பறவைக் கொடிபோல - வோங்குக - பல்யானை மன்னர் பணி
யப் பனிமலர்த்தார்க் - கோல்யானை மன்னவன் கொடி." இது கொ
டிபடுத்தது. "வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின் - மா
லை வெண்குடை போர்க்குமா லெனவே." இது குடைபடுத்

து. "முரசு முழங்குதானை மூவருங் கூடி - யரசவை யிருந்த தோற்றம் போல" இது முரசடுத்தது. "சாலியரி சூட்டான் மடையடுக்கு நீர்நாடன் - மாலு மழைத்தடக்கை மாவளவன் - காலியன்மா - மன்னர் முடியுதைத்து மார்பகத்துப் பூணுழக்கிப் - பொன்னுரைகற் போன்ற குளம்பு." இது புரவியடுத்தது. "அயிற் கதவம் பாய்ந்துழக்கி யாழித்தேர் குத்தி - எயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற - பனிக்கடலுட் - பாய்செய்த நாவாய்போற் றோன்றுமே யெங்கோமான் - காய்சினவேற் கோதை களிறு." இது களிறடுத்தது. "நீயே, யலங்குளைப் பரவிப பொலந்தேர் மிசைப் - பொலிவு தோன்றி மாக்கடனிவந் - தெழுதரு செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ." இது தேரடுத்தது. "மன்னர் மலைத்தல போகிய சிலைத் தார் மார்ப." இது தாரடுத்தது. இவற்றுட் சிலவற்றை வரைந்து கொண்டு சின்னப்பூவென்று பெயரிட்டு இக்காலத்தார் கூறுமாறுமுணர்க. (கூக)

அஎ. மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே.

இது கூடி ஒருவர்ப்பெயர்கொள்ளும் பாடாண்டிணைக்குரிய மெய்ப்பெயர்களிடமாகவும் அகத்திணை நிகழுமென்கின்றது. (இ-ள்) மெய்ப்பெயர் மருங்கின் = புறத்திணைக்குரிய மெய்ப்பெயர்களின் மருங்கே: வழி வைத்தனர் = புறத்திணை தோன்றுதற்கு வழியாகிய அகத்திணையை வைத்தார் முதனூலாசிரியர்.—எ-று. என்றது எனக்கும் அதுவே கருத்தென்பதாம். வழியென்பது ஆகுபெயர். மெய்ப்பெயராவன புறத்திணைக்குரிய பாட்டுடைத்தலைவர் குடியும் ஊரும் முதலியனவாம். இதனை கருத்துச் "சுட்டியொருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்" என அகத்திணையியலுட் கூறியமையின் அகத்தலைவர்ப்பெயரை மெய்ப்பெயராகக் கொள்ளாது இவை புறத்திணையாமெனக் கொண்டு மெய்ப்பெயரிடம்பற்றி அகத்திணைப் பொருணிகழுமென்பதாம். உம். "அரிபெய சிலம்பின" என்னும் அகப்பாட்டினுள் திதியனைப் பாட்டுடைத்தலைவன் பெயரும், பிண்டநெல்லின் நாடும், உறந்தையென ஊரும், காவிரியாடினையென யாறுங் கூறிப்பின்னர் அகப்பொருள் நிகழ்த்தவாறுங்கொள்க. மருங்கென்றதனால் பாட்டுடைத்தலைவன்பெயர்கூறிய பின்னர் காரிமுதலியன கூறுமாறுமென்றுகொள்க. அதுவும் உக செய்யுளாற் பெற்றும். "இலம்பூத்த மயிலை நிமிர்பாலுங் குயிலொலி - கலம்பூத்த கிளஞ்சாய கம்மையோ மறந்தைக்க - கலம்பூத்த வணியவர் காரிகை மகிழ்செய்யப் - புலம்பூத்துப் புகழ்பாணுக் கூடலு முன்னார்சொல்." இதனுட் கூடலிடத்துத் தலை

கண்படை கண்ணிய கண்படை நிலையுங்
கபிலை கண்ணிய வேள்வி நிலையும்
வேலை நோக்கிய விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்துஞ் செவியறி வுறூஉ
மாவயின் வரூஉம் புறநிலை வாழ்த்துங்
கைக்கிளை வகையோ டுளப்படத் தொகைஇத்
தொக்க நான்கு முளவென மொழிப.

இது முன்னிற் சூத்திரத்து அதிகாரப்பட்டுநின்ற மக்கட்பாடாண்டிணைக்குரிய துறைகூறுகின்றது. (இ-ள்.) கொடுப்போர் ஏத்திக்கொடாஅர்ப் பழித்தலும் = பிறர்க்கு ஈவோரைப் பிறரினுயர்த்துக்கூறிப் பிறர்க்கீயாதாரை இழித்துக்கூறலும்: சான்றோர்க்குப் பிறரையிழித்துக் கூறற்கண்ணது தக்கதன்றேனும் நன்மக்கள் பயன்பட வாழ்தலுந் தீயோர் பயன்படாமல் [illegible]லுங் கூறக்கேட்டு ஏனையோரும் பயன்பட வாழ்தலை விரும்புவரென்பது பயப்பக்கூறலின் இவர்க்கு இங்ஙனங்கூறுதல் தக்கதாயிற்று. இதனை ஏத்தலும் பழித்தலும் ஏத்திடப்பழித்தலுமென மூவகையாகக்கொள்க. உ-ம். "தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன் - மடவன் மன்ற - செந்நாப் புலவீர் - வளைக்கை விறலியர் படப்பை கொய்த - அடகின் கண்ணுறை யாகி யாஞ்சில - அரிசி வேண்டின மாகத் தான்பிற - வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி - யிருங்கடறு வளைஇய - குன்றத் தன்னதோர் - பெருங்களிறு நல்கி யோனே யன்னதோர் - ம்தமரு வீகையு முளதுகொல் - போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே" இது கொடுப்போர் ஏத்தியது. "பாரி பாரியென்றுபல வேத்தி-யொருவர்ப் புகழ்வர் செந்நாப் புலவர் - பாரி யொருவனு மல்லன்- மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே." என்பதும் அது. "ஒல்லுவ தொல்லு மென்றலு மியாவர்க்கு - மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு - மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே-யொல்லா தொல்லு மென்றலு மொல்லுவ-தொல்லுவ தில்லென மறுத்தலு மிரண்டும் - வல்லே யிரப்போர் வாட்ட லன்றியும்-புரப்போர் புகழ்குறை படூஉமா லத்தை - யனைத்தா குவாயின், துவே யெனைத்துஞ் - சேய்த்து காணாது கண்டன மதனா - னோயில ராகநின் புதல்வர் யானும் - வெயிலென முனியேன் பனியென மடியேன் - கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை-நாணல தில்லாக் கற்பின் வாணுதன் - மெல்லியற் குறுமக ளுள்ளிச் - செல்வ லத்தைச் சிறக்கநின் னாளே." "புகழ்பட வாழா தார் தந்நோவார் தம்மை - யிகழ்வாரை நோவ தெவன்." இவை

கொடார்ப்பழித்தல். "களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியா ழுப் - பாடின் பனுவற் பாண ருய்த்தெனக் - களிறில வாகிய புல லனை நெடுவேளிற் - கான மஞ்ஞை கண்ணொடு சேப்ப - வீகை யரிய விழையணி மகளிரொடு - சாயின றெனப வாஅய கோயிற - சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில - பிறர்க்கீ வின்றித தம் வயி றருத்தி - யுளைசா லோங்குபகழ் வொரீஇய - முரசுகெழு செல்வர் நகர்போ லாதே." இது ஆயைப்புகழ்நது ஏனைச்செல வரைப் பழிததது. "மின்னுச தமனியமும் வெற்றிரும்பு[illegible] - பொன்னின் பெயாபடைத்தாற் போலாதே - கொன்னே - யொளிப்பாரு மக்களா யொல்லுவ தாங்கே - யளிப்பாரு மக்[illegible] மாறு." இதுவும் அது.

ஊர்ந்து அடுத்து ஏத்திய இயன்மொழி வாழத்தும் = தலை னெதிர்சென்று ஏ[illegible]வன் செய்தியையும் அவன்குலததோர் செ ய்தியையும் அவன்மேலே ஏற்றிப் புகழ்நத இயன்மொழி வாழ்த் தும்: என்றது, இககுடிப்பிறந்தோர்க்கெல்லாம் இக்குணங்கள் இயல்பென்றும், அவற்றை நீயும் இயலபாக உடையையென்றும், அன்னோர்போல எமககு நீயும் இயலபாக ஈயென்றும் உயாநதோர் கூறி அவனை வாழத்துதலின் இயன்மொழி வாழததாயிற்று இதனை உம்மைததொகையாக்கி இயன்மொழியும் வாழததுமென இரண்டாக்கிக்கொளக. இது ஒருவர் செய்தியாகிய இயலபு கூறலாலும் வண்ணப்பகுதியின்மையாலும் பரவலின்வேறாயிற்று உம். "மாசற விசித்த வார்வுறு வளப்பின் - மைபடு மருங்கு போ லிய மஞ்ஞை - யொலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார் - பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக் - குருதி வேட கை யுருகெழு முரச - மண்ணிவாரா வளவை யெண்ணிணுரை முக ந்த - தன்ன மென்பூஞ் சேக்கை யறியா - தேறிய வென்னைத் தெ றுவா யிருபாற் - படுக்கு நின்றெ டிவர வொழித்ததை - யதூஉஞ் சாலுமற் றமிழ்முழு தறித - லதனொடு மமையா தணுக வந்துநி ன்-மதனுடை முழவுததோ ளோசசித் தண்ணென-வீசி யோயே வி யலிடங் கமழ - விவணிசை யுடையோர்க் கல்ல தவண - துயர்நிலை யுலகத் துறையு ளின்மை - விளங்கக் கேட்ட மாறுகொல் - வல ம்படு குரிசினீ யீங்கிது செயலே." இவைபோல்வனவெலலாம் இயன்மொழி. "மலையுறை யானை வான்றோய் வெல்கொடி- வரை மிசை யருவியின் வயின்வயி னுடங்கக் - கடல்போ றானைக் கடுங்கு ரன் முரசங்-காலுறு கடலிற் கடியவுற வெறிந்து- சிதைந்த வாணி லை திரிந்தவேல் பாய்ந்தமா - வாய்ந்து தெரிந்த புகன்ம றவரொடு-

படுபிணம் பிறங்க நூறிப் பகைவர் - கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே - நின்போ லசைவி லாத கொள்கைய - ராகலி னசையா தாண்டோர் மன்றவிம் - மணங்கெழு ஞால நிலம்பயம் பொழியச் - சுடர்சினந் தணியப் பயங்கெழு வெள்ளி-யானிய நிற்ப விசும்பு மைய கலம் - வேய்பொர வெதிர்மலை நரல வேறு - நனந்தலை யோரா ங்கு நந்தலை - விலங்குகதிர்த் திகிரிநின் முந்திசி னோரே." இது முன்னுள்ளோர்க்கும் இயல்பென்பதுபடக் கூறிய இயன்மொழிவாழ்த்து. "முரசுகடிப் பெடுப்பவும் வால்வளை துவைப்பவு - மரசுடன் பொருத வண்ண னெடுவரைக் - கறங்குவெள் ளருவிக் கல்லலைத் தொழுகும் - பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமி சைக் - கொல்லி யாண்ட வல்வில லோரியுங் - காரி யூர்ந்து பேர மர் கடந்த - மாரி யீகை மறப்போர் மலையனு - மூரா தேந்திய குதிரைக் கூர்வேற் - கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழிலியு - மிருந்தண் சிலம்பி னிருடேங்கு நளிமுழை - யருந்திறற் கடவுள் கா க்குமுயர் சிமயப் - பெருங்க லடுன் பேகனுந் திருந்துமொழி - மோசி பாடிய வாயு மார்வமுற - ருள்ளி வருந ருலைவுநனி தீரத் - தள்ளா தீயுந் தகைசால் வண்மைக் - கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங் - கெழுவர் மாய்ந்த பின்றை யொழிவறப் - பாடி வருநரும் பிறருங் கூடி - யிரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவ - ணுள்ளி வந்தனென் யானே விசும்புறக் - கழைவளர் சிலம்பின் வாழையொடு நீடி - யாசினி கவினிய பலவி னார்வுற்று - முட்புற முதிர்கனி பெற்ற கடுவன் - றுய்த்தலை மந்தியைக் கையிடூஉட் பயிரு - மதிரா யாணர் முதிரத்துக் கிழவ - விவண்விளங்கு சிறப் பி னியறேர்க் குமண - விசைமேந் தோன்றிய வண்மையொடு - பகைவெம் படுக்கீ யேந்திய வேலே." இது இன்னோர்போல எம க்கு ஈயென்ற இயன்மொழிவாழ்த்து. "இன்று செலினுந் தரு மே சிறுவரை - நின்று செலினுந் தருமே பின்னு - முன்னே தந்த னெனென்னாது துன்னி - வைகலுஞ் செலினும் பொய்யல னாகி - யாம்வேண்டி யாங்கெம் வறுங்கல நிறைப்போன் - றான்வேண்டி யாங்குத் தன்னிறை யுவப்ப - வருந்தொழின் முடியரோ திருந் துவேற் கொற்றநின் - மலிகதச் சேக்கன் றேடு வேண்டினுங் - களமலி நெல்லின் குப்பை வேண்டினு - மருங்கலங் களிற்றொடு வேண்டினும் பெருந்தகை - பிறர்க்கு மன்ன னறத்தகை யன்னே - யன்னனாகலி னெந்தை யுள்ளடி - முள்ளு நோவ வுறற்க தில்ல - வீவோ ரரிய விவ் வுலகத்து - வாழ்வோர் வாழ்கவவன் றாள்வா ழியவே." இது படர்க்கையாகிய இயன்மொழி வாழ்த்து. "இ

'மைச் செய்தது மறுமைக் காமெனு - மறவினை வாணிகனு மல்லன பிறருஞ் - சான்றோர் சென்ற நெறியென - வாங்கப் பட்டன் றவன்கை வண்மையே." இது பிறருஞ் சான்றோர் சென்ற நெறியென்றமையின் அயலோரையும் அடுத்தூர்ந்தேத்தியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

சேய்வரல் வருத்தம் வீட வாயில் காவலற்கு உரைத்த கடைநிலையானும் = சான்றோர் சேணிடை வருதலாற் பிறந்த வருத்தந் தீர வாயில் காக்கின்றவனுக்கு என்வரவினை இசையெனக்கூறிக் கடைக்கணின்ற கடைநிலையும்: இது வாயிலோனுக்குக் கூறிற்றேனும் அவ்வருத்தந் தீர்க்கும் பாடாண்டலைவனதே துறையென்பது பெற்றாம். இழிந்தோரெல்லாந் தத்தம் இயங்களை இயக்கிக் கடைக்கணிற்றல் "பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்" எனப்புறக் கூறுதலின் இஃது உயர்ந்தோர்க்கே கூறியதாம். உம். "வேற்றுச் சுரத்தொடு வேந்தா... வெம்மையு - மாற்றற்கு வந்தேனெம் வாயிலோய் - வேற்றார் - திறைமயக்கு முற்றத்துச் சேணுங்கு கோயி - லிறைமகற்கெம் மாற்ற மிசை." எனவரும். "வாயிலோயே வாயி லோயே - வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தா - முள்ளியது முடிக்கு முரனுடை யுள்ளத்து - வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப் - பரிசிலர்க் கடையா வாயிலோயே - கடுமான் றோன்ற னெடுமா னஞ்சித் - தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொ - லறிவும் புகழு முடையோர் மாய்ந்தென - வறுந்தலை யுலகமு மன்றே யதனாற் - காயி னேங்கலனே தருக்கினென் கலப்பை - மரங்கொ றச்சன் கைவல சிறாஅ - மழுவுடைக் காட்டகத் தற்றே - யெத்திசைச் செல்லினு மத்திசைச் சோறே." இது தலைவனை எதிர்ப்பட்டுக் கூறாது வாயிலோனை நோக்கிக் கூறலிற் பரிசில கடாயதின்றாம். ஆன, அசை; ஏழுனுருபாக்கி எல்லாவற்றிற்கும் விரித்தலுமொன்று.

கண்படை கண்ணிய கண்படை நிலையும் = அரசரும் அரசரைப்போல்வாரும் அவைக்கண் நெடிது வைகியவழி மருத்துவரும் அமைச்சரும் முதலியோர் அவர்க்குக் கண்டுயில்கோடலைக் கருதிக் கூறிய கண்படை நிலையும்; கண்படை கண்ணிய என்றார், கண்படை முடிபொருளாக இடைநின்ற உண்டி முதலியனவும் அடக்குதற்கு. உம். "வாய்வாட் டானை வயங்குபுகழ்ச் சென்னி நின் - னோவாயீகையி னுயிர்ப்பிடம் பெறாஅர் - களிறுகவர் முயற்சியிற் பெரிது வருந்தினரோ - புலைக் காவலர் பலர்விழித் திருப்ப - வறி...

யில்கோடல் வேண்டுநின் - பரிசின் மாக்களுந் துயில்கமா சிறி தே." எனவரும்.

கபிலை கண்ணிய வேள்வி நிலையும்=சேதாவினைக் கொடுக்கக் கருதிய கொடைநிலை கூறுதலும்: இது வரையா ஈகையன்றி இன்னதுற்றாற் கொடுக்கவென உயர்ந்தோர் கூறுநாட் காலையிலே கொடுப்பதாமாதலின் வேறுகூறினார். கண்ணிய என்றதனாற் கன்னியர் முதலோரைக் கொடுத்தலுங் கொள்க. "பொன்னிறைந்த பொற்கோட்டுப் பொற்குளம்பிற் கற்றாதந் - தின்மகிழா னந்தணரை யின்புறப்பச் - சென்னிதன் - மாநிலமே யானுலகம் போன்றது வான்றுகள்போர்த் - தானுலக மண்ணுலகா மன்று." எனவரும்.

வேலின் ஒக்கிய விளக்கு நிலையும்=வேலும் வேற்றலையும் விலங்காதோங்கிய வாறுபோலக் கோலோடு விளக்கும் ஒன்றுபட்டோங்குமாறு ஓங்குவித்த விளக்குநிலையும்: இன் உவமப்பொருள்: இது கார்த்திகைத் திங்களிற் கார்த்திகை நாளின் ஏற்றிய விளக்குக் கீழுமேலும் வலமுமிடமுந் திரிபரந்து சுடர்ஒங்கிக் கொழுந்துவிட்டெழுந்ததென்று அறிவோராக்கம் கூறப்படுவதாம். உம். "மைமிசை யின்றி மணிவிளக்குப் போலோங்கிச் - செம்மையி னின்றிலங்குந் தீபிகை - தெம்முனையுள் - வேலினுங் கோடாது வேந்தன் மனைவிளங்கக் - கோலினுங் கோடா கொழுந்து." எனவரும். வேலின் வெற்றியை நோக்கின்ற விளக்கு நிலையெனப் பொருள்கூறி, "வளிதுரந்தக் கண்ணும் வலந்திரியா பொங்கி - யொளிசிறந் தோங்கி வரலா - னளிசிறந்து - நன்னெறியே காட்டு நயத்தெரி கோலற்கு - மெய்ந்நெறி காட்டும் விளக்கு." என்பது காட்டுவாரும் உளர். அவர் இதனை நிச்சம் இடுகின்ற விளக்கென்பர்.

வாயுறை வாழ்த்தும்="வாயுறை வாழ்த்தே *** வேம்புங் கடுவும்" என்னுஞ் செய்யுளியற் சூத்திரப்பொருளே உரைக்க. இதற்கு ஒருதலைவன் வேண்டானாயினும் அவற்கு உறுதிபயத்தலைச் சான்றோர் வேண்டி வாய்மொழி மருக்கினுன் அவனை வாழ்ச்சிப்படுத்தலின் இதுவுங் கைக்கிளைப்புறனாகிய பாடாணாயிற்று. செவியுறைக்கும் இஃதொக்கும். உம். "எருமை யன்ன கருங்க லடைதோ - றானிற் பரக்கும் யானைய மொய்ம்பிற் - கானக நாடனை நீயோ பெரும - நீயோ ராகலி னின்னொன்று மொழிவ - லருளு மன்பு நீக்கி நீங்கா - நிரயங் கொள்வாரோ டொன்றாது காவல்

சொலியா நகுசின் வெகுளிவா லிழைமங்கை - துணித்த வாண்மு கத் தெதிரோ யாங்க - வென்றி யெல்லாம் வென்றகத் தடக்கிய - தண்டா வீகைத் தகைமாண் குடுமி - தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுட - ரொண்கதிர் ஞாயிறு போலவு - மன்னுக பெருமநீ நிலமிசை யானே." இதனுள் இயல்பாகிய குணங்கூறி அவற் றோடு செவியுறையுங் கூறினன், செவியுறைப்பொருள் சிறப்பு டைத்தென்று அவன்கருதி வாழ்தல்வேண்டி.

ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும் = தெய்வவழிபாடு உடைத்தாயினும் மக்கள்கண்ணதேயாகித் தோன்றும் பாட்டுடை த்தலைவன் முன்னிலையாகத் தெய்வம் படர்க்கையாக வாழ்த்தும் வாழ்த்தும் : தெய்வஞ் சிறந்ததேனும் மக்கள் அதிகாரப்படுதலின் அவர்கண்ணதேயாதற்கு ஆவயின்வரூஉம் என்றார். இதற்கு "வழி படுதெய்வம்" என்னுஞ் செய்யுளியற் சூத்திரப்பொருளை யுரைக்க. இதுவுந் தலைவன்குறிப்பின்றித் தெய்வத்... அவனை வாழ்விக் கும் ஆற்றலுடையார் கண்ணதாகலிற் கைக்கிளைப்புறனாயிற்று. உம். "கண்ணுதலோன் காப்பக் கடன்மேனி மால்காப்ப - வெண் ணிருதோ ளேந்திழையா டான்காப்பப் - பண்ணியநூற் - சென்னி யாக் கனிக்குந் தெய்வநீ - மன்னுக நாளுமிம் மண்மிசை யானே." எனவரும்.

கைக்கிளை வகையோடு உளப்படத் தொகைஇ = மேற் காம ப்பகுதியென்ற கைக்கிளையல்லாத கைக்கிளையின் பகுதியோடே வாயுறைவாழ்த்துஞ் செவியறிவுறூஉம் புறநிலைவாழ்த்துங் கூட நான்காகிய தொகைபெற்ற நான்கும்: வாயுறை வாழ்த்து முதலிய மூன்றுந் தத்தம் இலக்கணத்திற் றிரிவுபடா, இக்கைக்கிளை திரிவு படுமென்றற்கு எண்ணும்மையான் உடனோதாது உளப்படவென வேறுபடுத்தோதினார். அகத்திணையியலுள் இருபாற்குங் கூறிய கைக்கிளையுங் "காமஞ்சாலா இளமையோள்வயிற்" கைக்கிளையும் "முன்னைய நான்கும்" என்றகைக்கிளையுங் "காமப்பகுதி" என்ற கைக்கிளையுங் களவியலுள் "முன்னையமூன்றும்" என்றகைக்கி ளையும் போலாது எஞ்ஞான்றும் பெண்பாலார் கூறுதலின்றி இடை நின்ற சான்றோராயினும் பிறராயினுங் கூறுதற்கு உரித்தாய் முதற் காலத்து ஒத்த அன்பினராகிக் கடைநிலைக்காலத்து ஒருவன் ஒரு த்தியைத் துறந்ததனும் துறந்த பெண்பாற் கைக்கிளையாதலிற் றிரிபுடைத்தாயிற்று. இது முதனிலைக்காலத்துத் தான்குறித் தது முடித்துப் பின்னர் அவளை வருத்தஞ்செய்து இன்பமின்றி

பொழிதலான் ஒருதலைக்காமமாயிற்று. உம். "அருளா யாகலோ கொடிதே மருளவாய்ச் - சிறியாழ் செவ்வழி பண்ணி யாழநின் - காஅனெதிர் கானம் பாடினே மாக - நின்று நெய்தலிற் பொலிந்த வுண்கண் கலுழ்ந்து - வாரரி பயன்முலைப் பூணக நனைப்ப - வினைத லாளு ளாக வினையோய் - இளையை மன்னனெங் கேள்வெய் யோற் கென - யாந்தற் றொழுதெ‌ன வினவக் காந்தண் - முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா - யாமவன் கிளைஞரோ மல்லேங் கேளினி - யெம் போ லொருத்தி நலநயந் தென்றும் - வரூஉ மெனப வயங்குபுகழ்ப பேக - னொல்லென வொலிக்குந் தேரொடு - முல்லை வேலி நலலூ ரானே." இது கண்ணகி காரணமாக வையகோப் பெரும்பேக னைப் பாணர்பாடிய கைக்கிளைவகைப் பாடாண்பாட்டு. இளையை மன்ன னெங்கேள் வெய்யோற்கென வினவ, யாங் கிளையலலேம் முல்லை வேலி நல்லூர் கண்ணே வருமென்று சொலவானெனக் கூறுதலின் அஃது ஏனைக் கைக்கிளைகளின் வேறாயிற்று. "கன முகை யருவி" யென்னும் புறப்பாட்டும் அது.

தொக்க நான்கும் உள என மொழிப = அந்நான்கும் முற் கூறிய ஆறனோடே தொக்கு பத்தாய்ப் பாடாண்டகுதிக்கணனே உளவாய்வருமென்று கூறுவர் ஆசிரியர்.—எ-று. தொக்க நான் கென்றதனான் இந்நான்கும் வெண்பாவும் ஆசிரியமும் தொக்கு நின்ற மருட்பாவாலும் வருமென்பதூஉங் கொள்க. இவற்றை மேல்வருகின்றவற்றோடு உடன்கூறாராயினார் அவை இழிந்தோர் கூறுங் கூற்றாகலின். (உகூ)

கக. தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்குச
சூத ரேத்திய துயிலெடை நிலையுங்
கூதசரும் பாணரும் பொருநரும் விறலியு
மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெறற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமுஞ்
சிறந்த நாளணி செற்ற நீக்கிப்
பிறந்த நாள்வயிற் பெருமங் கலமுஞ்
சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமு
நடைமிகுத் தேத்திய குடைநிழன் மரபு
மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமு
மன்னெயி லழித்த மண்ணுமங் கலமும்

பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்
பெற்ற பின்னரும் பெருவள னேத்தி
நடைவயிற் றோன்று மிருவகை விடையு
மச்சமு முவகையு மெச்ச மின்றி
நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமுங்
காலங் கண்ணிய வோம்படை யுளப்பட
ஞாலத்து வரூஉ நடக்கையது குறிப்பிற்
கால மூன்றொடு கண்ணிய வருமே.

இதுவும் அது. (இ-ள்.) தாவில் கிடந்தோர்க்கு நல்லிசை கருதிய சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் = தமது வலியாலே பாசறைக்கண் ஒரு மனக்கவற்சியின்றித் துயின்ற அரசர்க்கு நல்லபுகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் அத்துயிலெடுட்பின் ஏத்தின துயிலெடை நிலையும்: கிடந்தோர்க்கெனப் பன்மைகூறவே, அவர் துயிலெடுப்புத் தொன்றுதொட்டு வருமென்பதூஉஞ், சூதர் மாகதர் வேதாளிகர் வந்திகர் முதலாயினோருட் சூதரே இங்ஙனம் வீரத்தாற் றுயின்றாரைத் துயிலெடுப்புவரென்பதூஉம், யாணையும் முன்னுள்ளோரையும் பிறரையுங் கூறப்படுமென்பதூஉங் கொள்க. அவர் அங்ஙனந் துயின்றமை பிறர்க்கும் புலப்படப் புகழ்தல் அவர் கருத்தாகலின் ஒருதலைக் காமம் உளதாயிற்று. உ-ம்.

"கானம் பொருந்திய கயவாய் மகளிரின் - பாலுறுந் துயர கற்றிய பாறு - விமையாக் கண்ணோ டமையாக் காந்தனின் - மூதின் முதல்வா றுயில்கொண் டாங்குப் - போற்று மன்னா வெள்ளிச சிறிதுமீ - சேக்கை வளர்ந்தனை பெரும தாக்கிய - வண்கை யவுணர் துயில் ; செல வாங்கவ - னென்றுணர்த் தாக்கு வென்றி பேய - வாடா வஞ்சி மலைந்த சென்னிப் - போரடு தானைப் பொலந்தே . . . நின்றுயி லெழுமதி நீயே - பொன்று . . . யேந்தர் ம . . னைறுதுயி . . . பொறவே." எனவரும்.

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் பெற்ற பெருவளம் பெறார்க்கு அறிவுறீஇச் சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும் = ஆடன்மாந்தரும் பாடற்பாணரும் கருவிப்பொருநரும் இவருட் பெண்பாலாகிய விறலியுமென்னும் நாற்பாலாருந் தாம்பெற்ற பெருஞ்செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச்சென்று தாம்பெற்றவையெல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடும்: கூத்தராயிற் பாரசைவரும் வேளாளரும் பிற

நின்னினும் புல்லியே மனனே யினியே - யின்னே மாயினை மன்
னே யென்று - முடாஅ பொராஅ வாகுத லறிந்தும் - படாஅ மஞ்
ஞைக் கீத்த வெங்கோக் - கடாஅ யானைக் கலிமான் பேக - னெ
த்துணை யாயினு மீத்த னென்றென்று - மறுமை நோக்கின்றோ
வன்றேபிறர் - வறுமை நோக்கின் றவன்கை வண்மையே.''
''மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை'' இவை பாணாற்
றுப்படை. ''சிலையுலா நிமிர்ந்த சாந்துபடு மார்பி - னொலிகதிர்க்
கழனி வெண்குடைக் கிழவோன் - வலிதுஞ்சு தடக்கை வாய்வாட்
குட்டுவன் - வள்ளிய னாதல் வையகம் புகழினு - முள்ள லோம்
புமி னுயர்மொழிப் புலவீர் - யானு, மிருணிலாக் கழித்த பகல்
செய் வைகறை - யொருகணை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்-
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை - வாடா வஞ்சி பாடினே னாக-
வகமலி யுவகையொ டணுகல் வேண்டிக் - கொன்றுசினந் தணி
யாப் புலவுநாறு மருப்பின் - வெஞ்சின வேழ நல்கின னஞ்சி - யா
னது வெயர்த்தனெ னாகத் தானது - சிறிதென வுணர்ந்தமை நா
ணிப் பிறிதுமோர் - பெருங்களிறு நல்கி யோனே யதற்கொண்-
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினுந் - துன்னரும் பரிசி றரு
மென - வென்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாடே.'' ''அறாஅ
யாண ரகன்றலைப் பேரூர்ச் - சாறுகழி வழி நாட'' இவை பொ
ருநராற்றுப்படை. ''சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி - தட
வுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை - வண்டுபடு புதுமலர்த் தண
சிதர் கலாவப் - பெய்யினும் பெய்யா தாயினு மருவிகொ - ணுழு
வியன் புலத்துழை கா லாக - மால்புடை நெடுவரைக் கோ
டுதோ றிழிதரு - நீரினு மினிய சாயற் - பாரி வேள்பாற் பாடினை
செலினே.'' ''மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியின்'' இவை
விறலியாற்றுப்படை. கூத்தராற்றுப்படை தம்மொழிதொழிலாகா
மற் கூத்தரை ஆற்றுப்படுத்தனவென விரிக்க. மலைபடும் அன்ன.
முருகாற்றுப்படையுட் 'புலம்பிரிந் துறையுஞ் சேவடி' யெனக் கந்
தழிகூறி, 'நின்னெஞ்சத் தின்னசை வாய்ப்பப் பெறுதி' யெனவும்
கூறி, அவனுறையும் இடங்களும் கூறி ஆண்டுச்சென்றால் அவன்
'விழுமிய பெறலரும் பரிசி னல்கும்' எனவுங்கூறி, ஆண்டுத் தான்
பெற்ற பெருவளம் அவனும்பெறக் கூறியவாறு காண்க. இதனைப்
புலவராற்றுப்படை என்று உய்த்துணர்ந்து பெயர்கூறுவார்க்கு
முருகாற்றுப்படையென்னும் பெயரன்றி அப்பெயர் வழங்காமை
யான் மறுக்க. இனி முருகாற்றுப்படையென்பதற்கு முருகன்
பால் வீடுபெறுதற்குச் சமைந்தான் ஒரிரவலனை ஆற்றுப்படுத்ததெ

லமும்: இதனைப் பிறந்தநாளின் பின்வைத்தார் பொன்முடி புனைந்தநான்று தொடங்கி யாண்டுதோறும் இதுவருமென்றற்கு. குறுநிலமன்னர்க்காயின் அவர்க்குரிய பட்டத்தோடு கூடிய மண்ணுமங்கலமுங்கொள்க. உம். "அளிமுடியாக் கண்குடையா ளுருதிநாள் வேய்ந்த - வொளிமுடி பொன்மலையே யொக்கு - மொளிமுடிமேன் - மந்திரத்தா லந்தணர் வாக்கியநீ ரம்மலைமே - லந்தரத்துக் கங்கை யனைத்து." எனவரும். இதனானே யாண்டு இத்துணைச் சென்றதென்று எழுதும் நாண்மங்கலமும் பெறுதும்.

நடை மிகுத்து ஏத்திய|குடைநிழன் மரபும் = உலகவொழுக்கத்தை இறப்ப உயர்த்துப் புகழ்ந்து கூறப்பட்ட குடைநிழலதிலக்கணமும்: இங்ஙனம் புனைந்துரைத்தற்கு ஏதுவாயது நிழலாம்; என்னை? அந்நிழல உலகுடனிழற்றியதாகக் கூறுதலும்பட்டுக் குடிபுறங்காத்தற்குக் குறியாகக் குடைகொண்டேனென்று அக்கொற்றவன் குறிக்கவும் படுதலின். மரபென்றதனாற் செங்கோலுந் திகிரியும் போல்வனவற்றைப் புனைந்துரையாக்கலுங் கொள்க. உம். "மந்தரங் காம்பா மணிவிசும் போலையாத் - திங்க ளதற்கோர் திலதமா - வெங்கனு - முற்றுநீர் வைய முழுது நிழற்றுமே - கொற்றப்போர்க் கிள்ளி குடை." எனவரும். "அறநீர்மை தாங்கி யளப்பரிதாய் வானப் - புறநீர்போன் முற்றும் பொதியும் - பிறரொவ்வா மூவேந்த ருள்ளு முதல்வேந்தன் முத்தமிழ்க்குக் - கோவேந்தன் கண்டன் குடை." இதுவும் "ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ-மாக விசும்பி னடுவுநின் றாங்குக்-கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை-வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே-வருந்திய குடிமறைப் பதுவே வளவ." எனவும், "திங்களைப்போற்றுதுந் திங்களை போற்றுதும் - கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ் - வங்க ணுலகளித்த லான்." எனவும், "திங்கள் மாலை வெண்குடையான் சென்னி செங்கோலதுவோச்சிக் - கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி" "ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதும் - காவிர்நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு - மேருவலந் திரித லான்" இவை செங்கோலையுந் திகிரியையும் புனைந்தன.

மாணார்ச் சுட்டிய|வாண்மங்கலமும் = பகைவரைக் குறித்த வென்றியாற் பசிப்பிணி தீர்ந்த பேய்ச்சுற்றமும் பிறரும் வாழ்த்தும் வாண்மங்கலமும். இது பிறர்வாழ்த்தப்படு கொற்றவையைப் பரவும் வென்றவாளின் மண்ணென்பது வேறுயிற்று. புகழ்ச்சிக்கட் பகைவரை இகழ்ந்து புகழ்

லின் மாணூர்ச்சூடிய என்றார். உம். "ஆளி மதுகை யடல்வெய்யோன் வாள்பாடிக் - கூளிகள் வம்மினோ கூத்தாடக் - காளிக்குத் - தீராத வெம்பசி தீர்த்துநாஞ் செங்குருதி - நீராட்டி யுண்டனைம்." எனவரும். "அரும்பவிழ்தார்க் கிள்ளி யரசெறிந்த வொள்வாட் - கரும்புலவுஞ் செஞ்சாந்து நாறிச் - சுரும்பொடு - கொண்டாடும் பக்கமு முண்டு குறுநரி - யுண்டாடும் பக்கமு முண்டு." இது பிறர்கூறியது. இது பாணியிற் பயின்றுவரும்.

மன்னெயில் அழித்த மண்ணு மங்கலமும் = மாற்றரசன் வாழ்ந்த மதிலையழித்துக் கழுதையேரான் உழுது வெள்ளைவரகுங் கொள்ளும் வித்தி மங்கலமல்லாதன செய்தவன் மங்கலமாக நீராடுமங்கலமும்: அழித்ததனுள் மண்ணுமங்கலம். உம். "கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்-வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்-பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்" என எயிலழித்தவாறு "கூறி வீயாச்சிறப்பின் வேள்விமுற்றி யூபநாட்டி" எனவே ஒருவாற்றான் மண்ணியவாறுங் கூறியவாறு காண்க. குடுமி கொண்ட மண்ணுமங்கலம் எயிலழித்தல் கூறாமையின் இதனின் வேறாயிற்று.

பரிசில் கடைஇய நிலையும் = பரிசிலனை நீங்குதலமையாது நெடிதுகொண்டு ஒழுகிய தலைவற்குப் பரிசில்வேட்டோன் தன்கடும்பினது இடும்பைமுதலியன கூறித் தான்குறித்த பொருண்மையினைச் செலுத்திக் கடாவின நிலையும்: கடைக்கூட்டுநிலையும் = வாயிலிடத்தே நின்று தான்தொடங்கிய கருமத்தினை முடிக்கும் நிலையும்: இதுவும் இழிந்தோர் கூற்றாயிற்று, இருத்தலே அன்றிக் கடாவுதலின். நிலையென்றதனானே பரிசில்பெறப் போகல்வேண்டுமென்னுங் குறிப்பும் பரிசினிலையும் பல்வகையாற் கூறுதல்கொள்க. உம். "ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பி - னாம்பி பூப்பத் தேம்புபசி யுழவர்ட்-பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி-யில்லி தூர்ந்த பொல்லா வறுமுலை - சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி-நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்க- ணேமமனையோ ளெவ்வ நோக்கி- நினைஇ, நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண - வென்னிலையறிந்தனை யாயி னிந்நிலை - கொடுத்துங் கொள்ளா தமையல னடுக்கிய- புண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்- மண்ணார் முழவின் வயிரிய-ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே." இது பரிசில்கடாநிலை. "மதியேர் வெண்குடை வதியர் கோமான் - கொடும்பூணெழிலி நெடுங்கடை நின்றியான் - பசலை நிலவின் பனிபடு விடி

யற் - பொருகளிற் றடிவழி யன்ன வென்கை - யோருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ - வுருகெழு மன்ன ராரெயில் கடந்து - நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத் - தணங்குடை மரபி னிருங்களந் தோறும் - வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி - வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும் - வைக லுழவ வாழிய பெரிதெனச் - சென்றியா னின்றனெ னாக வன்றே - யூருண் கேணிப் பகட்டிலைப் பாசி - வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை - நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத் - தேட்கடுப் பன்ன நாட்படு தேறல் - கோண்மீ னன்ன பொலங்கலந் தலைஇ - யூண்முறை விடுத்த லின்றியுங் கோன்முறை - விருந்திறை நல்கி யோனே யந்தரத் - தரும்பெற லமிர்த மன்ன - கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே." கடைநிலை. "நல்யா மூகுளி பதலையொடு சுருக்கிச் - செல்லா மோதில் சில்வளை விறலி - களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை - விசும்பா டெருவைப் பசுந்தடி தடுப்பப் - பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற் - குடிமிக் கோமாற் கண்டு - நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே." இது போகல்வேண்டுங் குறிப்பு. "ஒன்று மூன்று முனையி னின்றிதெனப் - பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவு - மளவுபு கலந்து மெல்லியது பருகி - விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாகச் - சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென - யாந்த னறியுந மாகத் தான்பெரி - தன்புடை மையி னெம்பிரி வஞ்சித் - துணரியது கொளா வாகிப்பழ மூழ்த்துப் - பயம்பகர் வறியா மயங்கரின் முதுபாழ்ப் - பெயல்பெய் தன்ன செல்வத் தாங்க - வீயா மன்னர் புறங்கடைத் தோன்றிச் - சிதார வளபிற் சிதார்ப்புறத் தடாரி - யூனுகிர் வலந்த தெண்கணொற்றி - விரல்விசை தவிர்க்கு மாலைப் பாணியி - னிலம்பா டகற்றல் யாவது புலம்பொடு - தெருமர லுயக்கமுந் தீர்க்குவெ னதனா - னிருநிலங் கூல மாறிக் கொண்ட - வருமழை முழக்கிடைக் கேயடிய பின்றைச் - சேயை யாயினு மிவணை யாயினு - மிதற்கொண் டறிநை வாழியோ கிணைவ - சிறுநனி யோரும் வழிப்படாக் கொன்றுனென - வெந்தையொலி வெள்ளருவி வேங்கட நாடனு - முறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு - மறத்துறை யம்பியின் மாணப் பிறப்பின் - திருங்கோ ளீராஅப் பூட்கைக் - கரும்ப னூரன் காதன் மகனே." இது மேலும் இக்காலத்தும் இங்ஙனந் தருவலென்றானெனக் கூறினமையின் அவன் பரிசினிலை கூறிற்று. "குன்றுமலையும் பலபின் னொழிய - வந்தனன் பரிசில் கொண்டனன் செலற்கென - நின்ற வென்னயந் தருளி யிதுகொண் - டியாங்கு

னஞ் செல்கா தானென வென்னை - யாங்கறிந் தனனோ தாங்க ருங் காவலன் - காணு நீத்த விப்பொருட் கியானோர் - வாணிகப் ப ரிசில னல்லேன் பேணித் - தினையனைத் தாயினு மினிக்கவர - றுணையள வறிந்தவா நல்கின விடினே." என்னும் புறப்பாட்டும் அப்பரிசினிலையே கூறியது காண்க.

பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி நடைவயின் தோன் றும் இருவகை விடையும் = அங்ஙனம் பரிசில்பெற்றபின் அவனும் அவன்கொடுத்த பெருவளனை உயாத்துக்கூறி உலகவழக்கியலாற் றோன்றும் இரண்டுவகைப்பட்ட விடையும்: இருவகையாவன தலை வன் தானே விடுத்தலும் பரிசிலன் தானே போகல்வேண்டுமெனக் கூறிவிடுத்தலுமாம். உம். "தென்பர தவர்மிடல்சாய் வடவடுக வாளோட்டிய - தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக் - கடுமா கடைஇய விடுபரி வடிம்பி - னற்றூர்க் கள்ளின் சோழன் கோயிற் - புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப் - பனிக்க யத் தன்ன நீணகர் நின்றே - னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி - யெஞ்சா மரபின் வஞ்சி பாட - வெமக்கென வகுத்த வல்ல மிக ப பல - மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை - தாங்காது பொழி தந் தோனே யதுகண் - டிலம்பா டுழந்தவெ னிரும்பே ரொக்கல் - விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ் - செவித்தொடை மரபின விரற்செறிக் குநரு - மரைக்கமை மரபின மிடற்றியாக் குநரு - மிடற்றமை மரபின வரைக்கியாக குநருங் - கடுந்தே ரிராம னுடன்புணர் சீதையை - வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை - நிலஞ்சேர் மதாணி கண்ட குரங்கின் - செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாங்கு - மாறா வருந்தகை யினிது பெற் றிகுமே - யிருங்கிளைத் தலைமை யெய்தி - யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே." இது தானே போவென விடுத்தபின் அவ ன்கொடுத்த வளனை உயர்த்துக்கூறியது. "உயிர்ப்பிடம் பெறாஅ தூண்மூனிந் தொருநாட் - செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய - செல்வ சேறுமேந் தொல்பதிப் பெயர்ந்தென - மெல் லெனக் கிளர்தனெ மாக வல்லே - யகறி ரோவெம் மாயம் விட் டெனச் - சிறிய வன்போர்ச் செயிர்த்த நோக்கமொடு - துடிபுரை யடிய தூங்குநடைக் குழவியொடு - பிடிபுணர் வேழமொடு பெட் டவை கொள்கெனத் - தன்னறி யளவையிற் றரத்தர யானு - மெ ன்னறி யளவையின் வேண்டுவ - முகந்தே னின்மை தீரவந் தன னே." இது யான் போகல்வேண்டுமெனக் கூறி விடுத்தபின்

அவன் தந்த வளனை உயர்த்துக்கூறியது. நடைவயிற் றோன்றுமெ ன்றதனாற் சான்றோர் புலனெறிவழக்கஞ்செய்துவரும் விடைகள் பலவுங்கொள்க. அவை பரிசில் சிறிதென்று போகலும், பிறர்பாற் சென்று பரிசில்பெற்றுவந்து காட்டிப் போகலும், இடைநிலத்துப் பெற்ற பரிசிலை இடைநிலத்துக் கண்டார்க்குக் கூறுவனவும், மனை விக்கு மகிழ்ந்து கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவெல் லாங்கொள்க. உம். "ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப் - பலரும் வருவர் பரிசின் மாக்கள் - வரிசை யறிதலோ வரிதே பெ ரிது - மீத லெளிதே மாவண் டோன்றல - லதுநன் கறிந்தனை யாயிற் - பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே." இது சிறிதென்ற விடை. "இரவலர் புரவல னீயு மல்லை - புரவல ரிரவலர்க் கில் லையு மல்ல - ரிரவல ருண்மையுங் காணினி யிரவலர்க் - கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க் - கடிமரம் வருந்தத் தந்தியான் பிணித்த - நெடுநல் யானையெம் பரிசில் - கடுமான் றோன்றல் செ ல்வல் யானே." இது பிறன்பாற் பெரிதுபெற்றுச் சிறிதுதந்தவ ற்குக் காட்டிய விடை. "வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி" என்னும் புறப்பாட்டு இடைநிலத்திற் பரிசுபெற்றமை கண்டார்க் குக் கூறியது. "நின்னயந் துறைநர்க்கு நீயந்து துறைநர்க்கும் - பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும் - கடும்பின் கடும்பசி தீர யாழநின் - னெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கு - மின் னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது - வல்லாங்கு வாழ்வ லென் னாது நீயு - மெல்லார்க்குங் கொடுமதி மனைகிழ வோயே - பழந் தூங்கு முதிரத்துக் கிழவன் - றிருந்துவேற் குமண னல்கிய வள னே." இது மனைக்குக் கூறியது.

|நாளும்|புள்ளும் பிறவற்று நிமித்தமும் அச்சமும் உவகை யும் எச்சமின்றிக் காலங் கண்ணிய ஓம்படை உளப்பட = நாணி மித்தத்தானும் புண்ணிமித்தத்தானும் பிறவற்றினிமித்தத்தா னும் பாடாண்டலைவர்கருத் தோன்றிய தீங்குகண்டு அஞ்சிய அ ச்சமும் அது பிறத்தற்குக் காரணமாகிய அன்பும் ஒழிவின்றிப் பரிசிலர்க்கு நிகழ்தலின் அவர்தலைவர் உயிர்வாழுங் காலத் தைக் கருதிய பாதுகாவன் முற்கூறியவற்றோடேகூட: ஒருவன் பிறந்தநாள்வயின் ஏனைநாள்பற்றிப் பொருந்தாமை பிறத்தலும் அவன் பிறந்த|நாண்மீனிடைக் கோண்மீன் கூடியவழி அவன்நாண் மீனிடைத் தீதுபிறத்தலும்| வீழ்மீன் தீண்டியவழி அதன்கண் ஒரு வேறுபாடு பிறத்தலும் போல்வன நாளின்கட் தோன்றிய நிமித்

தம்; புதுப்புள் வருதலும் பழம்புட் போதலும் பொழுதன்றிக் கூகை குழறலும் போல்வன புள்ளின்கட் தோன்றிய நிமித்தம்; ஓர்த்து நின்றுழிக் கேட்ட வாய்ப்புள்ளும் ஓரிக்குரலுள்ளிட்டனவுங் கழுதுடன்குழீஇய குரல்பற்றலும் வெஞ்சுடர்மண்டிலத்துக் கவந்தம் வீழ்தலும் அதன்கட் துளைதோன்றுதலுந் தண்சுடர் மண்டிலம் பகல் நிலவெறித்தலும் போல்வன பிறவற்றுக்கட் தோன்றிய நிமித்தம். உவகை, அன்பு. இந்நிமித்தங்கள் பிறந்துழித் தான் அன்பு நிகழ்த்தினன் ஒருபாடாண்டலைவனது வாழ்க்கை நாளிற்கு ஏதம்வருங்கொலென்று அஞ்சி அவற்குத் தீங்கினருகவென்று ஓம்படைகூறுதலின் அது காலங்கண்ணிய ஓம்படையாயிற்று. 'எஞ்ஞான்றுந் தன் சுற்றத்து இடும்பை தீர்த்தானொருவற்கு இன்றுநங்கு வந்துழிக் கூறுதலின் இறைஞான்று பரிசிலின்றேனும் முன்னர்ப்பெற்ற பரிசிலை நினைந்து கூறினுமாகவே கைக்கிளைக்குப் புறனாயிற்று இவன் இறத்தலான் உலகுபடுந்துயரமும் உளதாகக் கூறலிற் சிறந்தபுகழுங் கூறிற்று. "செல்லரியுமிருந்தொழுவர்" என்னும் புறப்பாட்டினுள் "நின்றுநிலைஇயர் நின்னுண்மீன்" என அவருளிற்கு முறைகூறியவாற்றான் ஒரிடையூறு கண்டு அஞ்சாமை அன்பால் அஞ்சி ஓம்படை கூறியது. உம். "ஆடிய லழற்குட்டத் தாரிரு ளரையிரவின் - முடப்பனை வேர்முதலாக் கடைக் குளத்துக் - கயங்காயப் பங்குனி யுயரழு வத்துத - தலைநாண்மீ னிலைதிரிய நிலைநாண்மீ னதனெதிர - ரோதரத் தொன்னாண் மீன்றுறை படியப் - பாசிச் செல்லா தூசி முன்னா - தளக்கார்த்திணை விளக்கா கக்கனை - யெரிபரப் பக்கால் பிதிர்வு பொங்கி - யொருமீன் வீழ்ந்தன்றால் விசும்பி னானே - யதுகண், டியாமும் பிறரும் பல்வே றிரவலம் - பறையிசை யருவி நன்னாட்டுப் பொருந - னோயில னாயி னன்றுமற் றில்லென - வழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப - வஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே - மைந்துடை யானை கைவைத் துறங்கவுந் - திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவுங் - காவல் வெண்குடை கால்பரிந் துலறவுங் - காலியற் கலிமாக் கதியின்றி வைகவு - மேலோ ருலக மெய்தின னாகலி - னொண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித் - தன்றுணை யாயம் மறந்தனன் கொல்லோ - பகைவர்ப் பிணிக்கு மாற்ற னசைவர்க் - களந்து கொடையறியா வீகை - மணிவரை யன்ன மாஅ யோனே." இதனுட் பாடாண்டலைவனது நாண்மீனை வீழ்மீன் நலிந்தமைபற்றிக் கூறியது. "இருமுந்நீர்க் குட்டமும் வியன்ஞாலத் தகலமும் - வளிவழங்கு திசையும் வறிது நிலைஇய - காயமு மென்றாங் கவை

யளந் தறியினு-மளத்தற் கரியை யறிவு மீரமும்- பெருங்கண் ணோட்டமுஞ் சோறு படுக்குந் - தீயோடு செஞ்ஞா யிற்றுத்தெற லல்லது- பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே - திருவி லல்லது பகைவ ருண்ணா - வருமண் ணினையே யம்பு துஞ்சுங் -கடியரணா லறந்துஞ்சுஞ் செங்கோ லையே - புதுப்புள் வரினும் பழம்புட் போகினும் - விதுப்புற வறியா வேமக் காப்பினை- யனையை யாகன் மாறே - மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே." இப்புறப்பாட்டும் அது. புதுப்புள் வந்ததும் பழம்புட் போயதுங் கண்டதீங்கின் பயனின்மேல் வாராமல் விதுப்புறவறியா ஏமக்காப்பினையாக என்று ஓம்படை கூறியது. அது மேல் நின்னஞ்சுமென்று அச்சங்கூறி வெளிப்படுத்ததனான் உணர்க. "மண்டிணிந்த நிலனு நிலன்கதிய விசும்பும்- விசும்பு தைவரும் வளியும் வளித்தலைஇய - தீயுந்தீ முரணிய நீரு மென்றாங்- கைம்பெரும் பூதத் தியற்கை போலப் - போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்- வலியுரு தேறலு மளியு முடையோய் - நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின் - வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும் - யாணர் வைப்பினன் னாட்டுப் பொருந - வான வரம்பனை நீயோ பெரும - வலங்குளைப் புரவி யைவரொடு சினைஇய- ரிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை - யீரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப் - பெருஞ்சோற்று மிருபதம் வரையாது கொடுத்தோய்- பாஅல் புளிப்பி னும்பக லிருளினு-நாஅல் வேதநெறி திரியினுந் திரியாச் - சுற்றமொடு முழுதுகேண் விளங்கி -நடுக்கின்றி நிலியரோ வத்தை யடுக்கத்துச் - சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை-யந்தி யந்தணரருங்கட னிறுக்கு- முத்தீ விளக்கிற் றுஞ்சும்- பொற்கோட் டிமயப் பொருப்பகம் போன்றே." என்னும் புறப்பாட்டுப் பகைநிலத்தரசற்குப் பயந்தவாறு கூறிப் பின்னர்த் திரியாச் சுற்றமொடு விளங்கி நடுக்கின்றி நிற்பாயென அச்சந்தோன்றக் கூறி ஓம்படுத்தலின் ஓம்படை வாழ்த்தாயிற்று. "காலனுங் காலம்" என்னும் புறப்பாட்டும் அது.

ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற் கால மூன்றொடு கண்ணிய வருமே = உலகத்துத் தோன்றும் வழக்கினது கருத்தினானே மூன்று காலத்தோடும் பொருந்தக் கருதுமாற்றான் வரும் மேற்கூறிவருகின்ற பாடாண்டிணை.—எ-று. என்றது, இவ்வழக்கியல் காலவேற்றுமைபற்றி வேறுபடுமாயின் அவையும் இப்பொருள்களின் வேறுபடா என்பதுணர்த்தியவாறு. அவை, பகை

வர்நாட்டுப் பார்ப்பார்முதலியோரை ஆண்டுநின்றும் அகற்றிப் பொருதல் தலையாய அறம்; அதுவன்றிப் பொருள்கருதாது பாதுகாவாதான் நிரையைத் தான்கொண்டு பாதுகாத்தல் அதனிணிழிந்த இடையாய அறம்; அதுவன்றிப் பிறர்க்கு அளித்தற்கு நிரைகோடல் நிகழினும் அது அதனினுமிழிந்த கடையாய அறமெனப்படும். இனிப் பகைவன் போற்றாத நாட்டைக் கைக்கொண்டு தான் போற்றச்சேறலும் பொருள் வருவாய்பற்றிச் சேறலும் வஞ்சித்துச் சேறலும் போல்வன ஒன்றனின் ஒன்றிழிந்த ஞாலத்து நடக்கைக்குறிப்பு; மாற்றரசன் முற்றியவழி ஆற்றுதோன் அடைத்திருத்தலும் அரசியலாயினும் அவன் வென்றியுள்ளமொடு வீற்றிருத்தலும் தனக்கு உதவிவரவேண்டியிருத்தலும் ஆற்றலன்றி ஆக்கங்கருதாது காத்தேயிருத்தலும் ஒன்றனினொன்றிழிந்த நடக்கைக்குறிப்பு. இனி வாகைக்குப் பார்ப்பன ஒழுக்கமுதலியன நான்கற்கும் வேறுபட வருதலுங்கொள்க. காஞ்சிக்கும் அவரவர் அறிவிற்கேற்ற நிலையாமைகொள்க, உயிரும் உடம்பும் பொருளுமென்ற மூன்றும்பற்றி. இது பாடாண்டிணையுட் கூறினார், எல்லாத்திணைக்கும் புறனடையாதல் வேண்டி. இனிக் கடவுள்வாழ்த்திற்குத் தலை இடை கடை கோடலும் அறமுறை வாழ்த்திற்கும் அவற்றின் ஏற்றிழிவுபற்றிக் கோடலும் பிறவுஞ் சான்றோர் செய்யுட்கண் வேறுபட வருவனவெல்லாம் இதனுன் அமைக்க. முற்கூறியனவெல்லாம் ஓம்படையுள்பட்டக் கண்ணியவருமென்பது. (௩௬)

புறத்திணையியன் முற்றிற்று.

# களவியல்.

கூ௨. இன்பமும் பொருளு மறனு மென்றாங்
கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் லெட்டனுட்
டுறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே.

இவ் ஓத்துக் களவு கற்பென்னுங் கைகோள் இரண்டினுட் களவு உணர்த்தினமையிற் களவியலென்னும் பெயர்த்தாயிற்று: பிறர்க்குரித்தென்று இருமுது குரவராற் கொடைபெதிர்ந்த தலைவியை அவர்கொடுப்பக் கொள்ளாது இருவருங் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த களவாதலின் இது பிறர்க்குரிய பொருளை மறையிற்கொள்ளுங் களவன்றாயிற்று. இது வேதத்தை மறைநூலென்றாற் போலக்கொள்க. "களவெனப் படுவ தியாதென வினவின் - வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தன்- முளையெயிற் றமர்நகை மடநல் லோளொடு - தளையவிழ் தண்டார்க் காமனன்னோன் - விளையாட் டிடமென வேறுமலைச் சாரன்- மானினங் குருவியொடு கடிந்து விளையாடு - மாயமுந் தோழியு மருவிநன் கறியா - மாயப் புணர்ச்சி யென்மனார் புலவர்." இக்களவைக் "காமப்புணர்ச்சியும்" என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்திற் கூறிய நான்குவகையாலும் மேற்கூறுமாறு உணர்க. இன்பத்திற்குப் பொதுவிலக்கணம் அகத்திணையியலுட்கூறி அதற்கினமாகிய பொருளும் அறனுங்கூறும் புறத்திணையை அதன் புறத்து நிகழ்தலிற் புறத்திணையியலுட் கூறி ஈண்டு அவ்வின்பத்தினை விரித்துச் சிறப்பிலக்கணங் கூறுதலின் இது அகத்திணையியலோடு இயைபுடைத்தாயிற்று. வழக்குநாடி என்றலின் இது உலகியலெனப்படும், உலகத்து மன்றலாவது குரவர் கொடுப்பதற்குமுன்னர் ஒருவற்கும் ஒருத்திக்குங் கண்ணும் மனமுந் தம்முள் இயைவதேயென வேதமுங் கூறிற்றாதலின். இச்சூத்திரங் களவெனப்பட்ட ஒழுக்கம் உலகத்துப் பொருள் பலவற்றுள்ளும் இன்பம்பற்றித் தோன்றுமெனவும் அஃது இன்னதாமெனவுங் கூறுகின்றது. (இ-ள்.) இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு = இன்பமும் பொருளும் அறனுமென்று முற்கூறிய மூவகைப்பொருள்களுள்: அன்பொடு

புணர்ந்த ஐந்திணை மருங்கின் [illegible] ஒருத்தியிடைத் தோன்றிய அன்போடு கூடிய இ[illegible]தன் பகுதியாகிய புணர்தன் முதலிய ஐவகை ஒழுக்கத்தினுள்: காமக் கூட்டங் காணுங் காலை=புணர்தலும் புணர்தனிமித்தமுமெனப்பட்ட காமப்புணர்ச்சியை ஆராயுங்காலத்து: மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்=வேதம் ஓரிடத்துக்கூறிய மணமெட்டனுள்: துறைஅமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பு=துறை அமைந்த நல்யாழினையுடைய பிரிவின்மையோரது தன்மை.—எ-று.

அன்பாவது "அமரர் துஞ்சுதோ ளாடவ ரு மாய்ந்தபமணிப் பைம்பூ ணவருந் - தமோதிக் - கண்ணெதிர் நோக்கொத்த காரிகையிற் கைகலந் - துண்ணெகிழச் சேர்வதா மன்பு." மன்றல் எட்டாவன:—பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. அவற்றுட் பிரமமாவது:—ஒத்த கோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னிராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது. "கயலேரமருண்கட் கன்னிபூப் பெய்தி - யயல்பே ரணிகலன்கள் சேர்த்தி - யியலி - னிரலொத்த வந்தணற்கு நீரிற் கொடுத்தல் - பிரமமண மென்னும் பெயர்த்து." பிராசாபத்தியமாவது:—மகட்கோடற்கு உரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டி தம் மகட்கு ஈந்து கொடுப்பது. "அரிமத ருண்க ணயிழை யெய்துதற் -குரியவன் கொடுத்த வொண்பொரு ளிரட்டி- திரிவின் றந்தை தின்னிதிற் சேர்த்தி - யரியதன் கிளையோ டமைவரக் கொடுத்தல்-பிரித லில்லாப் பிராசா பத்தியம்." ஆரிடமாவது:—தக்கான் ஒருவற்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன் அணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது. "தனக்கொத்த வொண்பொரு டன்மகளைச் சேர்த்தி - மனைக்கொத்த மாண்புடையாற் பேணி - யினக்கொத்த - வீரிடத் தாவை நிறீஇயினி திவதே - யாரிடத்தார் கண்டமண மாம்." தெய்வமாவது:—பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் ஒருவற்கு அவ்வேள்வித்தீமுன்னர்த் தக்கணையாகக் கொடுப்பது. "நீளி நெடுநகர் நெய்பெய்து பாரித்த- வேள்வி விளங்கழன் முன்னிறீஇக் - கேள்வியாற்கைவைத்தாம் பூணுளைக் காமுற்றுற் கீவதே - தெய்வ மணத்தார் திறம்." அசுரமாவது:—கொல்லேறுகோடல் திரிபுன்றியெய்

தல் வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல். "முகைய விழ் கோதையை முள்ளெயிற் றரிவையைத் - தகைநலங் கருதுந் தருக்கினி ருளரொனி - னிவையிவை செய்தாற் கெளியண்மற் றிவ ளெனத் - தொகைநிலை யுரைத்த பின்றைப் பகைவலித் - தன் னவை யாற்றிய வளவையிற் - றுன்னிலை யசுரந் துணிந்த வாறே." இராக்கதமாவது :—தலைமகடன்னினுந் தமரினும் பெ றாது வலிதிற் கொள்வது. "மலிபொற்பைம் பூணோனை மாலுற்ற மைந்தர் - வலிதிற்கொண் டாள்வதே யென்ப - வலிதிற் - பராக் கதஞ் செய்துழலும் பாழி நிமிர்தோ - ளிராக்கதத்தார் மன்ற லியல்பு." பைசாசமாவது :—மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும் இழிந்தோரை மணஞ்செய்தலும் ஆடைமாறுதலும் பிறவுமாம். "எச்சார்க் கெளிய ரியைந்த காவலர் - பொச்சாப் பெய்திய பொழுதுகொ ளமையத்து - மெய்ச்சார் பெய்திய மிகு புகழ் நம்பி - னுசாவார்க் குதவாக் கேண்மைப் - பிசாசர் பே ணிய பெருமைசா லியல்பே." "இடைமயக்கஞ் செய்யா வியல் பினி னீங்கி - யுடைமயக்கி யுட்கறுத்த லென்ப - வுடைய - துசா வார்க் குதவாத வூனிலா யாக்கைப் - பிசாசத்தார் கண்டமணப் பேறு." இனிக் கந்தருவமாவது : கந்தருவ குமாரருங் கன்னியருந் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்ததுபோலத் தலைவனுந் தலை வியும் எதிர்ப்பட்டுப் புணர்வது. "அதிர்ப்பில்பைம் பூணரு மாட வருந் தம்மு - ளெதிர்ப்பட்டுக் கண்டியைத லென்ப - கதிர்ப்பொ ன்யாழ் - முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக் - கந்தருவர் கண்ட கலப்பு." என இவற்றானுணர்க.

களவொழுக்கம் பொதுவாகலின் நான்குவருணத்தார்க்கும் ஆயர்முதலியோர்க்கும் உரித்து. மாலைசூட்டுதலும் இதன்பாற் படும். வில்லேற்றுதன் முதலியன பெரும்பான்மை அரசர்க்குரி த்து. அவற்றுள் ஏறுதழுவுதல் ஆயர்க்கே சிறந்தது. இராக்க தம் அந்தணரொழிந்தோர்க்கு உரித்து ; வலிதிற் பற்றிப் புணர்த லின் அரசர்க்கு இது பெருவரவிற்றன்று. பேய் இழிந்தோர்க்கே உரித்து. கந்தருவரின் மக்கள் சிறிது திரிபுடைமையிற் சேட்ப டை முதலியன உளவாமென்றுணர்க. அறத்தினாற் பொருளாக்கி அப்பொருளான் இன்பநுகர்தற் சிறப்பானும் அதனன் இல்லறங் கூறலானும் இன்பம் முற்கூறினர். அறனும் இன்பமும் பொரு ளாற் பெறப்படுதலின் அதனை இடைவைத்தார். போகமும் வீடு மென இரண்டுஞ் சிறத்தலிற் போகம் ஈண்டுக்கூறி வீடுபெறுதற் குக் காரணம் முற்கூறினர். ஒழிந்த மணங் கைக்கிளையும் பெருந்

திணையுமாய் அடங்குதலின் இதனை அன்பொடென்றார். பொருளாற் கொள்ளும் மணமும் இருவர்சுற்றமும் இயைந்துழித் தாமும் இயைதலிற் கந்தருவப்பாற்படும். ஐந்திணைப் புறத்தவாகிய வெட்சிமுதலியவற்றிற்கும் அன்பொடு புணர்தலுங் கொள்ளப்படும். "அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார் - மறத்திற்கு மஃதே துணை." என்றலின். கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும். ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாதென்றற்குத் துறையமை என்றார்.

கூ௩. ஒன்றே வேறே யென்றிரு பால்வயி
னொன்றி யுயர்ந்த பால தாணையி
னொத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப
மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே.

இது முற்கூறிய காமக்கூட்டத்திற்கு உரிய கிழவனுங் கிழத்தியும் எதிர்ப்படும் நிலனும் அவ்வெதிர்ப்பாட்டிற்குக் காரணமும் அங்ஙனம் எதிர்ப்படுதற்கு உரியோர் பெற்றியுங் கூறுகின்றது. (இ-ள்.) ஒன்றே வேறே என்று இரு பால் வயின் = இருவர்க்கும் ஓரிடமும் வேற்றிடமும் என்று கூறப்பட்ட இருவகை நிலத்தின் கண்ணும் : ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின் = உம்மைக்காலத்து எல்லாப்பிறப்பினும் இன்றியமையாது உயிரொன்றி ஒருகாலைக்கொருகால் அன்புமுதலியன சிறத்தற்கு ஏதுவாகிய பால்வரை தெய்வத்தின் ஆணையாலே : ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப = பிறப்பு முதலியன பத்தும் ஒத்த தலைவனுந் தலைவியும் எதிர்ப்படுப : மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே = அங்ஙனம் எவ்வாற்றானும் ஒவ்வாது தலைவன் உயர்ந்தோனாயினுங் கடியப்படா.—எ-று. என்றிருபால்வயிற்காண்ப எனப் பால் வன்பால் மென்பால்போல நின்றது. உயர்ந்தபாலை நோய்தீர்ந்த மருந்துபோற் கொள்க. ஒருநிலம் ஆதலை முற்கூறினார், இவ்வொழுக்கத்திற்கு ஓதியது குறிஞ்சிநிலமொன்றுமே ஆதற்சிறப்பு நோக்கி. வேறுநிலம் ஆதலைப் பிற்கூறினார், குறிஞ்சிதன்னுள்ளும் இருவர்க்கும் மலையும் ஊரும் வேறுதலுமன்றித் திணைமயக்கத்தான் மருதம் நெய்தலென்னும் நிலப்பகுதியுள் ஒருத்தி அரிதின் நீங்கிவந்து எதிர்ப்படுதல் உளவாதலுமென வேறுபட்ட பகுதி பலவும் உடன்கோடற்கு. ஒருநிலத்துக் காமப்புணர்ச்சிப் பருவத்தாளாயினாளை ஆயத்தின் நீங்கித் தனித்து ஓரிடத்து எளிதிற் காணடல் அரிதென்றற்குப் பாலதணையிற்காண்ப என்றார். எனவே, வேற்றுநிலத்திற்

காயின் வேட்டைமேலிட்டுத் திரிவான் அங்ஙனந் தனித்துக் காணு ங்காட்சி அருமையாற் பாலதாணை வேண்டுமாயிற்று. உம். "இவ ளிவ ளோம்பால் பற்றவு மவளிவன் - புன்றலை யோரி வாங்குநள் பரியவும் - காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா - தேதில் சிறு செரு வுறுப மன்னோ - நல்லைமன் றம்ம பாலே மெல்லியற் - றுணை மலர்ப் பிணைய லன்னவிவர் - மணமகி ழியற்கை காட்டி யோ யே." இது ஒருநர் என்றதாம். "காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" என்றது என் நிலத்து வண்டாதலின் எனச்சாதக கூறுதே சொல் என்றலிற் குறிஞ்சிநிலம் ஒன்றாயிற்று. "இலங்கு மருவித் திலங்கு மருவித்து - வானி னிலங்கு மருவித்தே தானு, ற்ற - சூள்பேணான் பொய்த்தான் மலை." என்புழிப் பொய்த்தவன் மலையும் இலங்கும் அருவித்தென வியந்துகூறித் தமது மலைக்கு நன்றி இயல்பென்றலிற் குறிஞ்சியுள்ளும் மலை வேறாயிற்று. "செ வ்விரல் சிவப்பூரச் சேட்சென்று யென்றவன் - பௌவநீர்ச் சாய் க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ - கௌவைநோ யுற்றவர் காணாது கடுத்தசொல் - லொவ்வாதென் றுணராய்நீ யொருநிலை யே யுரைத்ததை." இது மருதத்துத் தலைவி களவொழுக்கங் கூறுவாள் பௌவநீர்ச் சாய்ப்பாவை தந்தான் ஒருவனென நெய் தனிலத்து எதிர்ப்பட்டமை கூறியது. ஆணைவிதி கைகோளின் முதற்கட் கூறுதலிற் கற்பின்கானும் ஒன்றும் வேறுஞ் செல்லும் பாலது. ஆணையும் அவ்வாறும்.

மிகுதலாவது:—குலங் கல்வி பிராயம் முதலியவற்றான் மிகு தல். எனவே, அந்தணர் அரசர்முதலிய வருணத்துப் பெண்கோ டற்கண் உயர்தலும் அரசர்முதலியோரும் அம்முறை உயர்தலுங் கொள்க. இதனானே அந்தணர் முதலியோர் அங்ஙனம் பெண்கோ டறகட் பிறந்தோர்க்கும் இவ்வொழுக்கம் உரித்தென்று கொள்க. சடி, மிகுதி. அவர் அங்ஙனங் கோடற்கண் ஒத்தமகளிர் பெற்ற பு தல்வரோடு ஒழிந்த மகளிர் பெற்ற புதல்வர் ஒவ்வாரென்பது உணர்த்தற்குப் பெரிதும் வரையப்படாதென்றார். பதினாறுதொ டங்கி இருபத்துநான்கு ஈறாகக்கிடந்த யாணடொன்பதும் ஒரு பெண்கோடற்கு மூன்றியாண்டாக அந்தணன் உயருங் கந்தருவ மணத்து; ஒழிந்தோராயின் அத்துணை உயரார். இருபத்துநான்கி ரட்டி நாற்பத்தெட்டாதல் பிரமமுதலியவற்றான் உணர்க. வல் லெழுத்து மிகுதல் என்றாற்போல மிகுதலைக் கொள்ளவே பிரா யம் இரட்டியாயிற்று. கிழத்தி மிகுதல் அறக்கழிவாம். கிழவன் கிழத்தி எனவே பலபிறப்பினும் ஒருவர்க்கு ஒருவர் உரிமை எய்தி

ற்று. இங்ஙனம் ஒருமை கூறிற்றேனும் "ஒருபாற்கிளவி" என்னுஞ் சூத்திரத்தான் நால்வகை நிலத்து நான்குவருணத்தோர்கண்ணும் ஆயர் வேட்டுவர் முதலியோர்கண்ணுங்கொள்க. இச்சூத்திரம் "முன்னைய நான்கும்" எனக்கூறிய காட்சிக்கு இலக்கணங் கூறிற்றென்றுணர்க. உ-ம். "கருந்தடங்கண் வண்டாகச் செவ்வாய் தளிரா - வரும்பிவர் மென்முலை தொத்தாப் - பெரும்பணைத் தோட் - பெண்டகைப் பொலிந்த பூங்கொடி - கண்டேங் காண்டலுங் களித்தவெங் கண்ணே." இக்காட்சிக்கட் தலைவனைப்போற் தலைவி வியந்துகூறுதல் புலனெறிவழக்கன்மை உணர்க. (உ)

கூச. சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப
இழிந்துழி யிழிபே சுட்ட லான.

இஃது எய்தாததெய்துவித்து எய்தியது விலக்கிற்று, முன்னைய நான்கும் என்றதனாற் கூறிய ஐயந் தலைவன்கண்ணதே எனவுந் தலைவிக்கு நிகழுமோ என்னும் ஐயத்தை விலக்குதலுங் கூறலின். (இ - ள்.) சிறந்துழி ஐயம் சிறந்தது என்ப = அங்ஙனம் எதிர்ப்பாட்டின் இருவருள்ளுஞ் சிறந்த தலைவன்கண்ணே ஐயம் நிகழ்தல் சிறந்ததென்று கூறுவார் ஆசிரியர்: இழிந்துழி இழிபே சுட்டலான = அத்தலைவனின் இழிந்த தலைவிக்கண் ஐயம் நிகழுமாயின் இன்பத்திற்கு இழிவே அவள்கருதும் ஆதலான்.—எ - று. தலைவற்குத் தெய்வமோ அல்லளோவென நிகழ்ந்த ஐயம் நான்முதலியவற்றால் நீக்கித் தெய்வமன்மை உணர்தற்கு அறிவுடையனாதலுந், தலைவிக்கு முருகனோ இயக்கனோ மகனோவென ஐயம் நிகழின் அதனை நீக்கி உணர்தற்குக் கருவியிலள் ஆகலானும் இங்ஙனங் கூறினார். தலைவிக்கு ஐயம் நிகழின் அச்சமேயன்றிக் காமக்குறிப்பு நிகழாதாம். மகடூஉவின் ஆடூஉச்சிறத்தல் பற்றிச் சிறந்துழி என்றார். உ-ம். "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை - மாதர்கொன் மாலுமென் னெஞ்சு," எனவரும். (௩)

கூச. வண்டே யிழையே வள்ளி பூவே
கண்ணே யலமர லிமைப்பே யச்சமென்
றன்னவை பிறவு மாங்கவ ணிகழ
நின்றவை களையுங் கருவி யென்ப.

இஃது ஐயுற்றுத் தெளியுங்கால் இடையது ஆராய்ச்சியாதலின் ஆராயுங் கருவி கூறுகின்றது. வண்டு முதலியன வானகத்தனவன்றி மண்ணகத்தனவாதல் நூற்கேள்வியானும் உய்த்துணர்

ச்சியானும் தலைமக்கள் உணர்ப. (இ-ள்.) வண்டே = பயின்றதன் மேலல்லது செல்லாத தாது ஊதும் வண்டு: இழையே = ஒருவரால் இழைக்கப்பட்ட அணிகலன்கள்: வள்ளி = முலையினுந் தோளினும் எழுதுந் தொய்யிற்கொடி: பூவே = கைக்கொண்டு மோந்து உயிர்க்குங் கழுநீர்ப்பூ: கண்ணே = வான்கண்ணல்லாத ஊன்கண்: அலமரல் = கண்டு அறியாத வடிவுகண்ட அச்சத்தாற் பிறந்த தடுமாற்றம்: இமைப்பே = அக்கண்ணின் இதழ் இமைத்தல்: அச்சம் = ஆண்மகனைக் கண்டுழி மனத்திற் பிறக்கும் அச்சம்: என்று அன்னவை பிறவும் = என்று அவ்வெண்வகைப்பொருளும் அவை போல்வன பிறவும்: அவண் நிகழ நின்றவை = ஆவயின் எதிர்ப்பாட்டின்கட் டான் முன்பு கண்ட வரையரமகள் முதலிய பிழம்புகளாய் எண்டுத தன்மனத்து நிகழ்கின்ற அப்பிழம்புகளை: ஐயங்களையும் கருவி என்ப = முந்துறாற்கண்ணே அவ்வையம் நீக்குங் கருவியாமென்று கூறுவர் ஆசிரியர்.—எ-று. எனவே, எனக்கும் அது கருத்தென்றார். இவையெல்லாம் மக்கட்குரியனவாய் நிகழவே தெய்வப்பகுதிமேற் சென்ற ஐயம் நீங்கித் துணியும் உள்ளம் பிறத்தலிற் துணிவும் உடன்கூறிற்றேயாயிற்று. இனி அன்னபிற ஆவன கால் நிலந்தோய்தலும் நிழலீடும் வியர்த்தலும் முதலியன. "இருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடு - மிருநிலஞ் சேவடியுந் தோயு - மரிபரந்த - போகிதழுண்கணு மிமைக்கு - மாகு மற்றவளகலிடத் தணங்கே." எனவரும். இக்காட்சி முதலிய நான்கும் அகனைந்திணைக்குச் சிறப்புடைமையும் இவை கைக்கிளையாமாறும் "முன்னையநான்கும்" என்புழிக் கூறினும். இங்ஙனம் ஐயந்தீர்ந்துழித் தலைவியை வியந்துகூறுதலுங் கொள்க. (ச)

சுசு. நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்.

இஃது அங்ஙனம் மக்களுளளாளெனத் துணிந்துநின்ற தலைவன் பின்னர்ப் புணர்ச்சி வேட்கை நிகழ்ந்துழித் தலைவியைக் கூடற்குக் கருதி உரைநிகழ்த்துங்காற் கூற்றுமொழியான் அன்றிக் கண்ணான் உரைநிகழ்த்துமென்பதூஉம் அது கண்டு தலைவியும் அக்கண்ணானே தனது வேட்கை புலப்படுத்திக் கூறுமென்பதூஉங் கூறுகின்றது; எனவே, இது புணர்ச்சி நிமித்தமாகிய வழிநிலைக்காட்சி கூறுகின்றதாயிற்று. (இ-ள்.) அறிவு = தலைவன் அங்ஙனம் மக்களுள்ளாளென்று அறிந்த அறிவானே: உடம்படுத்தற்கு = தலைவியைக் கூட்டத்திற்கு உடம்படுத்தற்கு: நாட்டம் இர

ண்டும் கூட்டி உரைக்கும்=தன்னுடைய நோக்கம் இரண்டானுங் கூட்டி வார்த்தைசொல்லும்: குறிப்புரை நாட்டம் இரண்டும் ஆகும்=அவ்வேட்கை கண்டு தலைவி தனது வேட்கை புலப்படுத்திக் கூறுங் கூற்றுந் தன்னுடைய நோக்கம் இரண்டானுமாம்.—எ-று. நாட்டம் இரண்டிடத்துங் கூட்டுக. உம்மை விரிக்க. இங்ஙனம் இதற்குப் பொருள்கூறல் ஆசிரியர்க்குக் கருத்தாதல் "புகுமுகம் புரிதல்" என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்தானுணர்க. அதற்குப் பேராசிரியர் கூறிய உரையானுமுணர்க. ஒன்று ஒன்றை ஊன்றி நோக்குதலின் நாட்டமென்றார். நாட்டுதலும் நாட்டமும் ஒக்கும். உம். "நோக்கினா ணோக்கெதிர் நோக்குத றாக்கணங்கு-தானைக்கொண் டன்ன துடைத்து." எனவரும். இது புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடு கூறியது. (௫)

௩௭. குறிப்பே குறித்தது கொள்ளு மாயி
னாங்கவை நிகழு மென்மனார் புலவர்.

இது புணர்ச்சியமைதி கூறுகின்றது. (இ-ள்.) குறித்தது=தலைவன் குறித்த புணர்ச்சி வேட்கையையே: குறிப்புக் கொள்ளுமாயின்=தலைவி கருத்துத் திரிவுபடாமற் கொள்ளவற்றாயின்: ஆங்கு=அக்குறிப்பைக் கொண்டகாலத்து: அவை நிகழும் எனமனார் புலவர்=புகுமுகம் புரிதன் முதலாய் இருவகையுமெடுத்தல் ஈறாகக்கிடந்த மெய்ப்பாடு பன்னிரண்டனுட் பொறிநுதல் வெயர்த்தல் முதலிய பதினொன்றும் முறையே நிகழுமென்று கூறுவர் புலவர்.—எ-று. அங்கவையும் பாடம். பன்னிரண்டாம் மெய்ப்பாடாகிய இருவகையுமெடுத்தல் கூறவே முயக்கமும் உய்த்துணரக் கூறியவாறுகாண்க. அம்மெய்ப்பாட்டியலுட் கூறிய மூன்று சூத்திரத்தையும் ஈண்டுக் கூறியுணர்க. உம். "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கொண் - டென்ன பயனுமில." "கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற் - செம்பாக மன்று பெரிது." எனவரும். இதனை நான்குவருணம் ஒழிந்தோர்க்குங் கொள்க. உம். "பானலந் தண்கழிப் பாடறிந்து தன்னைமார் - நூனல நுண்வலையா னொண்டெடுத்த- கானற் - படுபுலால் காப்பாள் படைநெடுங்க ணோக்கம் - கடிபொல்லா வென்னையே காப்பு." எனவரும். இனி முயங்கி மகிழ்ந்து கூறுவன. "கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை-நாறிதழ்க் குவளையோ டிடைப்பட விரைஇ - யைதுதொடை மாண்ட கோதை போல - நறிய நல்லோண் மேனி - முறியினும் வாயது முயங்கற்கு மினிதே."

"தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்று - லம்மா வரிவை முய க்கு." எனவரும். உரையிற் கோடலான் மொழிகேட்க விரும்புத லுங் கூட்டிய தெய்வத்தை வியந்து கூறுதலும் வந்துழிக்காண்க.

கூஅ. பெருமையு முரனு மாடூஉ மேன.

இத்துணை மெய்யுறுபுணர்ச்சிக்கு உரியனவே கூறி இனி உள்ளப்புணர்ச்சியே நிகழ்ந்து விடும் பக்கமும் உண்டென்பதூஉம் இவ்விருவகைப் புணர்ச்சிப்பின்னர்க் களவின்றி வரைந்துகோடல் கடிதில நிகழ்தலுண்டென்பதூஉம் உணர்த்துகின்றது. (இ-ள்.) பெருமையும்=அறிவும் ஆற்றலும் புகழுங் கொடையும் ஆராய்த லும் பண்பும் நண்பும் பழிபாவமஞ்சுதலும் முதலியனவாய் மேற் படும் பெருமைப்பகுதியும்: உரனும்=கடைப்பிடியும் நிறையுங் கல ங்காது துணிதலும் முதலிய வலியின்பகுதியும்: ஆடூஉ மேன=தலை வன்கண்ணது.—எ-று. இதனானே உள்ளப்புணர்ச்சியே நிகழ்ந்து வரைந்துகொள்ளும் உலகவழக்கும் மெய்யுறுபுணர்ச்சி நிகழ்ந்துழி யுங் களவு நீட்டியாது வரைந்துகோடலும் உள்ளஞ் சென்றுழியெ ல்லாம் நெகிழ்ந்தோடாது ஆராய்ந்து ஒன்றுசெய்தலும் மெலிந்த உள்ளத்தானுந் தோன்றுமன் மறைத்தலுந் தீவினையாற்றிய பகு தியிற் சென்ற உள்ளம் மீட்டலுந் தலைவற்கு உரியவென்று கொ ள்க. உ-ம். "சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ-நன்றின் பாலுய்ப்ப தறிவு." எனவரும். பெருமை நிமித்தமாக உரன் பிறக் கும், அவ்வுரனன் மெய்யுறுபுணர்ச்சி இலனாதலும் உரியனென இதுவும் ஓர் விதி கூறிற்று. தலைவிக்கு மெய்யுறுபுணர்ச்சி நடக் கும் வேட்கை நிகழாமைக்குக் காரணம் மேற்கூறுப. இனி இயற் கைப்புணர்ச்சி இடையீடு பட்டுழி இடந்தலைப்பாட்டின்கண் வேட் கை தணியாது நின்று கூறுபவென்றும் ஆண்டு இடையீடு பட்டு ழிப் பாங்கனாற் கூடுபவென்றும் உரைப்போரும் உளர்; அவர் அறி யாராயினர்; என்னை? அவ்விரண்டிடத்தும் இயற்கைப்புணர்ச் சிக்கு உரியமெய்ப்பாடுகள் நிகழ்ந்தே கூடவேண்டுதலின் அவற் றையும் இயற்கைப்புணர்ச்சியெனப் பெயர்கூறலன்றிக் காமப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கொடுதழாஅலும் என ஆசி ரியர் வேறுவேறுபெயர் கூறுரொன்றுணர்க. (எ)

கூகூ. அச்சமு நாணு மடனுமுந் துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப.

இது மேலதே போல்வதோர் விதியை உள்ளப்புணர்ச்சி பற்றித் தலைவிக்குக் கூறுகின்றது. (இ-ள்) அச்சமும்= அன்பு காரணத்திற் தோன்றிய உட்கும்: நாணும்= காமக்குறிப்பு நிகழ்ந்த வழிப் படுவதோர் உள்ளவொடுக்கமும்: மடனும்= செவிலியர் கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமையும்: முந்துறுத்த= இம்மூன்றும் முதலியன: நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப= எஞ்ஞான்றும் பெண்பாலார்க்கு உரியவென்று கூறுவர் ஆசிரியர். —எ-று. முந்துறுத்த என்றதனாற் கண்டறியாதன கண்டுழி மனங் கொள்ளாத பயிர்ப்பும், செயத்தகுவது அறியாத பேதைமையும், நிறுப்பதற்கு நெஞ்சுண்டாம் நிறையுங் கொள்க. மடன குடிப்பிறந்தோர் செய்கையாதலின் அச்சமும் நாணும்போல மெய்யுறுபுணர்ச்சியை விலக்குவதாம். தலைவி உடையளெனவே தலைவன் பெருமையும் உரனும் உடையனாய் வேட்கைமீதூரவும் பெறுமாயிற்று. இவை இவட்கு என்றும் உரியவாயின் இயற்கைப்புணர்ச்சிக்கு உரியளல்லளாமாயினும் இவ்விலக்கணத்திற் திரியாது நின்றேயும் புணர்ச்சிக்கு உரியளாமென்றற்குப் பனிரண்டு மெய்ப்பாடுங் கூறினார். இவற்றானே புணர்ச்சிப்பின்னர்ப் பெறுதுமெனத் தலைவனைப்போல ஆற்றுவாளாயிற்று. இருவர் கண்ணுற்றுக் காதல்கூர்ந்தவழியெல்லாங் கந்தருவமென்பது வேதமுடிபாதலின் இவ்வுள்ளப்புணர்ச்சியுங் கந்தருவமாம். ஆதலான் அதற்கு ஏதுவாகிய பெருமையும் உரனும் அச்சமும் நாணும் போல்வன கூறினார். இச்சூத்திரம் இரண்டும் நாடகவழக்கன்றிப் பெரும்பான்மை உலகியலவழக்கே கூறலின் இக்கந்தருவம் இக்களவியற்குச் சிறப்பின்று, இனிக் கூறுவன மெய்யுறுபுணர்ச்சிபற்றிய களவொழுக்கமாதலின். (அ)

க00. வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித
லாக்கஞ் செப்ப னாணுவரை யிறத்த
னோக்குவ வெல்லா மவையே போறன்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.

இதுமுதலாகக் களவிலக்கணங் கூறுவார் இதனான் இயற்கைப்புணர்ச்சிமுதற் களவு வெளிப்படுந்துணையும் இருவர்க்கும் உளவாம் இலக்கணம் இவ்வொன்பதுமெனப் பொதுவிலக்கணங் கூறுகின்றார். (இ-ள்.) ஒருதலைவேட்கை= புணராதமுன்னும் புண

நீந்தபின்னும் இருவர்க்கும் இடைவிட்டு நிகழாது ஒருதன்மைத்தாகி நிலைபெறும் வேட்கை: ஒருதலை உள்ளுதல் = இடைவிடாது ஒருவர் ஒருவரைச் சிந்தியாநிற்றல்: மெலிதல் = அங்ஙனம் உள்ளுதல் காரணத்தான் உடம்புவாடுதல்: ஆக்கஞ் செப்பல் = யாதானும் ஓர் இடையூறு கேட்டவழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக் கூறிக் கோடல்: நாணுவரையிறத்தல் = ஆற்றுந் துணையும் நாணி அல்லாதவழி அதன்வரையிறத்தல்: நோக்குவ எல்லாம் அவையே போறல் = பிறர் தம்மை நோக்கிய நோக்கெல்லாந் தம் மனத்துக் கரந்து ஒழுகுகின்றவற்றை அறிந்து நோக்குகின்றாரெனத் திரிபக்கோடல்: மறத்தல் = விளையாட்டு முதலியவற்றை மறத்தல: மயக்கம் = செய்திறன் அறியாது கையற்றுப் புள்ளும் மாவும் முதலியவற்றோடு கூறல்: சாக்காடு = மடலேறுதலும் வரைபாய்தலும்போல்வன கூறல்' என்று அச் சிறப்பு உடை மரபினவை களவு என மொழிப = என்று சொல்லப்பட்ட அந்தச் சிறப்புடைத் தானமுறைமையினையுடைய ஒன்பதுங் களவொழுக்கமென்று கூறு. —எ-று. இயற்கைப்புணர்ச்சிக்கு இயைபுடைமையின் வேட்கை முற்கூறினார்.

சேட்படுத்தவழித் தலைவன் அதனை அன்பென்று கோடலும் இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கியவழித் தலைவி அதனை அன்பென்று கோடலும் போல்வன ஆக்கஞ்செப்பல. தலைவன் பாங்கற்குந் தோழிக்கும் உரைத்தலுந் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலும் போல்வன நாணுவரையிறத்தல். களவதிகாரமாதலின் அவையென்னுஞ் சுட்டுக் களவை உணர்த்தும். கையுறைபுனைதலும் வேட்டைமேலிட்டுக் காட்டுத்திரிதலுந் தலைவற்கு மறத்தல்; கிளியும் பந்தும் முதலியனகொண்டு விளையாடுதலைத் தவிர்ந்தது தலைவிக்கு மறத்தல். சாக்காடாவன:—"அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து - மணிக்கே ழன்ன மாநீர்ச் சேர்ப்ப - யிம்மை மாறி மறுமை யாயினு - நீயா கியரெங் கணவனை - யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே." "நிறைந்தோர்த் தேருநெஞ்சமொடு குறைந்தோர்ப் - பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉ - நயனின் மாக்கள் போல வண்டினஞ் - சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர - மையன் மானின மருளப் பையென - வெந்தாறு பொன்னி னந்தி பூப்ப - வையறி வகற்றுங் கையறு படரோ - டகலிரு வானமம்ம மஞ்சினம் - பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலைக் - காதலர்ப் பிரிந்த புலம்பி னோதக - வாரளு ருறுந ரருநிறஞ் சுட்டிக் - கூரெஃ கெறிஞரி னலைத்த லானா - தெள்ளற வியற்றிய நிழல்கா

ன் மண்டிலத் - துள்ளுதர வீயிற் பையய நுணங்கி - மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந் - திதுகொல் வாழி தோழி யென்னுயிர் - விலங்குவேங் கடவெளி யெடுப்பத் - துலங்குமாப் புள்ளிற் றுறக்குமப் பொழுதே.'' இவை தலைவி சாக்காடாயின. மடலேறுவலெனக் கூறுதன் மாத்திரையே தலைவற்குச் சாக்காடு. இவை சிறப்புடையவெனவே களவு சிறப்புடைத்தாம். இவை கற்பிற்கு ஆகா. இருவர்க்கும் இவை தடுமாறி வருதலின் மரபினவை யெனப் பன்மைகூறினார். (௬)

௧௦௧. முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்த
னன்னய முரைத்த னகைநனி யுறூஉ
தந்நிலை யறிதன் மெலிவுவிளக் குறுத்த
றந்நிலை யுரைத்த றெளிவகப் படுத்தலென்
றின்னவை நிகழு மென்மனார் புலவர்.

இது இன்பமும் இன்பநிலையின்மையுமாகிய புணர்தல் பிரிதல் கூறிய முறையானே இயற்கைப்புணர்ச்சி முற்கூறி அதன் பின்னர்ப் பிரிதலும் பிரிதனிமித்தமுமாய் அத்துறைப்படுவன வெல்லாந் தொகுத்துத் தலைவற்கு உரியவென்கின்றது. (இ-ள்.) முன்னிலையாக்கல்=முன்னிலையாகாத வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக்கோடல்; சொல்வழிப்படுத்தல்=அச்சொல்லாதவற்றைச் சொல்லுவனபோலக் கூறுதல்; நன்னயம் உரைத்தல்=அவை சொல்லுவனவாக அவற்றிற்குத் தன் கழிபெருங்காதல் கூறுவானாய்த் தன்னயப்புணர்த்துதல்; நகைநனி உறூஉது அந்நிலை அறிதல்=தலைவி மகிழ்ச்சி மிகவும் எய்தாமற் புணர்ச்சிக்கினமாகிய பிரிவுநிலைகூறி அவள் ஆற்றுந்தன்மை அறிதல்; மெலிவு விளக்குறுத்தல்=இப்பிரிவாற் றனக்குள்ள வருத்தத்தைத் தலைவி மனங்கொள்ளக் கூறுதலுந் தலைவி வருத்தங் குறிப்பான் உணர்ந்து அது தீரக் கூறுதலும்; தம்நிலை உரைத்தல்=நின்னொடு பட்ட தொடர்ச்சி எழுமையும் வருகின்றதெனத் தமதுநிலை உரைத்தல்; தெளிவு அகப்படுத்தல்=நின்னிற்பிரியேன் பிரியின் ஆற்றேன் பிரியின் அறனல்லது செய்கேனுவலெனத் தலைவி மனத்துத் தேற்றம்படக் கூறுதல்; என்று இன்னவை நிகழும் என்மனார் புலவர்=என்று இக்கூறிய ஏழும் பயின்றுவரும் இயற்கைப்புணர்ச்சிப்பின் தலைவற்கு.—எ-று. முற்கூறிய மூன்றும் நயப்பின்கூறு. இது அறிவழிந்து கூறுது தலைவி கேட்பது காரியமாக வண்டு

முதலியவற்றிற்கு உவகைபற்றிக் கூறுவது. நன்னயம் எனவே எவரினுந் தான் காதலனாக உணர்த்தும். இதன்பயன் புணர்ச்சியெய்தியின்றுட்கு இவன் எவ்விடத்தான்கொல்லோ இன்னும் இது கூடுங்கொல்லோ இவன் அன்புடையன்கொல்லோ எனநிகழும் ஐயநீங்குதல். இது பிரிதனிமித்தம். இவன் பிரியாவிடின் இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாம் ஆண்டு யாம் இறந்துபடுதலின் இவனும் இறந்துபடுவனெனக் கருதப், பிரிவென்பதும் ஒன்று உண்டெனத் தலைவன் கூறுதல் அவட்கு மகிழ்ச்சியின்றென்பது தோன்ற நகை நனி யுறுதென்றார். "புணர்தல் பிரிதல்" எனக்கூறிய சூத்திரத்திற் புணர்தலை முற்கூறி ஏனைப் பிரிவை அந்நிலையென்று ஈண்டுச் சுட்டிக்கூறினார். இதனாற் தலைவிக்குப் பிரிவச்சங்கூறினார். தண்ணீர் வேட்டு அதனை உண்டு உயிர்பெற்றான் இதனான் உயிர்பெற்றேமெனக் கருதி அதன்மாட்டு வேட்கை நீங்காதவாறுபோலத், தலைவிமாட்டு வேட்கையெய்தி அவளை அரிதிற்கூடி உயிர்பெற்றானாதலின், இவளான் உயிர்பெற்றேமென்றுணர்ந்து, அவண்மேல் நிகழ்கின்ற அன்புடனே பிரியுமாதலிற் தலைவற்கும் பிரிவச்சம் உளதாயிற்று. இங்ஙனம் அன்பு நிகழவும் பிறர் அறியாமற் பிரிகின்றேனென்பதனைத் தலைவிக்கு மனங்கொள்ளக் கூறுமென்றற்கு விளக்குறுத்தலென்றார். இதனானே வற்புறுத்தல் பெற்றாம். அது அணித்து எம்மிடமென்றும் பிறவாற்றானும் வற்புறுத்தலாம். மேலனவும் பிரிதனிமித்தம்.

உ-ம். "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி - காமஞ் செப்பாது கண்டது மொழிமோ-பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற் - செறியெயிற் றரிவை கூந்தலி - னறியவு முளவோநீ யறியும் பூவே." இதனுட் தும்பி என்றது முன்னிலையாக்கல்; கண்டதுமொழிமோ என்றது சொல்வழிப்படுத்தல்; கூந்தலின் நறியவும் உளவோ என்றது நன்னயமுரைத்தல்; காமஞ் செப்பாது என்றது என்னிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறாது மெய்கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின் இடமணித்தென்றது; பயிலியது நட்பு என்றது தந்நிலையுரைத்தல். "பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன - நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப் - பிரிவரி தாகிய தண்டாக் காமமோ - டுடனுயிர் போகுக தில்ல கடனறிந் - திருவே மாகிய வுலகத் - தொருவே மாகிய புன்மைநா முயற்கே." முற்பிறப்பில் இருவேமாய்க் கூடிப் போந்தனம், இவ்வுலகிலே இப்புணர்ச்சிக்குமுன்னர் யாம் வெவ்வேறாயு

ற்ற துன்பத்து இன்று நாமே நீங்குதற்கெய்திய பிரிவரிதாகிய கா மத்துடனே இருவர்க்கும் உயிர்போவதாக, இஃதெனக்கு விருப்ப மென்றான்; என்பதனாற் தங்நிலையுரைத்தலும் பிரிவச்சமுங் கூறி ற்று. "குவளை நாறுங் குவையிருங் கூந்த - லாம்ப னாறுந தேம் பொதி துவர்வாய்க்- குண்டுநீர்த் தாமரைக் கொங்கி னன்ன-நுண் பஃ றுத்தி மாஅ யோயே - நீயே, அஞ்ச லென்ற வென்சொலஞ் சலையே - யானே, குறுங்கா லன்னங் குவவுமணற் சேக்கும்-கடல் சூழ் மண்டிலம் பெறினும் - விடல்சூ ழிலன்யா னின்னுடை நட் பே," இது நயப்பும் பிரிவச்சமும் வன்பொறையுங் கூறிற்று. "யாயும் யாயும் யாரா கியரோ-வெந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர் - யானு நீயு மெவ்வழி யறிதுஞ் - செம்புலப் பெயனீர் போல - வன்புடை நெஞ்சந் தான்கலந் தனவே." இது பிரிவொ னக் கருதிய தலைவி குறிப்புணர்ந்து தலைவன் கூறியது. "மெல் லிய லரிவைநின் னல்லகம் புலம்ப - னிற்றுறந் தமைகுவெ னாயி னெற்றுறந் - திரவலர் வாரா வைகல்- பலவா குகயான் செலவுறு தகவே," "அறத்தா றன்றெனை மொழிந்த தொன்றுபடு கிளவி- யன்ன வாக வென்னுளம் போல." இவை தெளிவகப்படுத்தல். "அம்மெல் லோதி விம்முற் றழுங்க - லெம்மலை வாழ்ந ரிரும்பு னம் படுக்கிய - வரந்தி னவியறுத் துறுத்த சாந்தநும் - பரந்தேந் தல்குற் றிருந்துதழை யுதவும் - பண்பிற் றென்ப வண்மை யத னாற் - பல்கால் வந்துநம் பருவர றீர - வல்கலும் பொருந்துவ மா கலி - னெல்கா வாழ்க்கைத் தாகுமென் னுயிரே." இதுவும் அணி த்து எம்மிடமென ஆற்றுவித்தது. பயின்றெனவே பயிலாது வரும் ஆயத்துய்த்தலும் யான்போவலெனக் கூறுதலும் மறை ந்து அவட்காண்டலுங் கண்டுநின்று அவணிலை கூறுவனவும் அவ ளருமை யறிந்து கூறுவனவும் போல்வன பிறவுங்கொள்க. "யா ன்றற்காண்டொறும்" என்னுஞ் செய்யுளுள் "நீயறிந் திலையா னெஞ்சே - யானறிந் தேனது வாயா குதலே." என மறைந்து அவட்கண்டுநின்று தலைவன் அவளொடு நிகழ்ந்தது நினைஇ நெஞ் சிற்குக் கூறியது. "காணு மரபிற் றுயிரென மொழிவோர்- நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே - யாஅங் காண்டும்மே யரும்பெற லுயிரே - சொல்லு மாடு மென்மெல வியலும் - கணை க்கா னுணுகிய நுசுப்பின் - மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோ ட்டே." ஆயத்தொடு போகின்றாளைக் கண்டு கூறியது. இதன்கண் ஆயத்துய்த்தமையும் பெற்றாம். இனி "வேட்கை யொருதலை" என் னுஞ் சூத்திரத்திற் கூறியவற்றை மெய்யுறுபுணர்ச்சி மேல்

நிகழ்த்துதற்கு அவத்தை கூறினுரென்றும் இச்சூத்திரத்தைத் தலைவியை நோக்கி முன்னிலையாக்கல் முதலியன கூறிப் பின்னர் இயற்கைப்புணர்ச்சி புணருமென்றுங் கூறுவாரும் உளர். அவர் அறியார்; என்னை? ஈண்டு அவத்தை கூறிப் பின்னாப் புணர்ச்சிநிகழு மெனின ஆண்டுக் கூறிய மெய்ப்பாடு பன்னிரண்டும் வேண்டா வாம். அன்றியும், ஆறும் அவதி கடநது வருவன அகமன்மை மெய்ப்பாட்டியலிற் கூறலிற் பத்தாம் அவத்தையாகிய சாக்காடெய்தி மெய்யுறுபுணர்ச்சி நடத்தல் பொருந்தாமையுணர்க. இனித் தலைவியை முன்னிலையாக்கல் முதலியன கூறிய பின்னர்ப் புணருமெனின் முன்னர்க் "கூட்டியுளாகுங் குறிப்புரையாகும்" எனக் கண்ணுற் கூறிக் கூடுமென்றலும் "இருகையுமெடுத்தல்" எனப பின்பு கூறுதலும் பொருந்தாதாம். அன்றியும் நயப்பும் பிரிவச்சமும் வன்பொறையும் கூறிப் பிரியவேண்டுதலானும் அதுபொருந்தாதாம். (௧௦)

௧௦௨. மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅ லிடையூறு கிளத்த
னீடுநினைந் திரங்கல் கூடுத லுறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்ற முளப்படத் தொகைஇப்
போராச் சிறப்பி னிருநான்கு கிளவியும்
பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலு
நிற்பவை நினைஇ நிகழ்பவை யுரைப்பினுங்
குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்
பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினு
மூரும் பேருங் கெடுதியும் பிறவு
நீரிற் குறிப்பி னிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியுந் தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலுந்
தண்டா திரப்பினு மற்றைய வழியுஞ்
சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினு
மறிந்தோள் யாப்பி னவ்வழி மருங்கிற்
கேடும் பீடுங் கூறலுந் தோழி

நீக்கலி னாகிய நிலைமையு நோக்கி
மடன்மா கூறு மிடனுமா ருண்டே.

இது மேல் இயற்கைப்புணர்ச்சிப் பகுதியெல்லாங் கூறி அதன்வழித் தோன்றும் இடந்தலைப்பாடும் அதன்வழித் தோன்றும் பாங்கற்கூட்டமும் அவற்றுவழித்தோன்றுந் தோழியிற்கூட்டமும் நிகழுமிடத்துத் தலைவன் கூற்று நிகழ்த்துமாறும் ஆற்றாமை கையிகந்து கலங்கியவழி அவன் மடன்மா கூறுமாறுங் கூறுகின்றது. இதனுள் இருநான்குகிளவியும் என்னுந் துணையும் இடந்தலைப்பாடும் வாயில்பெட்பினும் என்னுந் துணையும் பாங்கற்கூட்டமும் ஒழிந்தன தோழியிற்கூட்டமுமாம். (இ-ள்.) மெய்தொட்டுப்பயிறல் = தலைவன் தலைவியை மெய்யைத்தீண்டிப் பயிலாநிற்குநிலைமை: என்றால் இயற்கைப்புணர்ச்சிப்பின்னர்ப் பெருநாணினளாகிய தலைமகள் எதிர்நிற்குமோவெனின் தான் பிறந்தகுடிக்குச் சிறந்தவொழுக்கத்திற்குத் தகாதது செய்தாளாதலின் மறையிற்றப்பா மறையோனொருவனை மறையிற் றப்பிய மறையோன் போலவும் வேட்கைமிகுதியான் வெய்துண்டு புன்கூர்ந்தார் போலவும் நெஞ்சம் நிறையுநதமோறி இனிச் செயற்பாலதியாதென்றும் ஆயத்துள்ளே வருவான்கொல என்னும் அச்சங்கூரவும் வாரான்கொல் என்னுங் காதலகூரவும் புலையன் றீம்பால் போன் மனங்கொள்ளா அனந்தருள்ளம் உடையளாய் நாணு மறந்து காதலீர்ப்பச் செல்லும்; சென்றுநின்றாளைத் தலைவன் இவ்வொழுக்கம் புறத்தார் இகழப் புலனாய் வேறுபட்டாள் கொலலோ எனவும் அங்ஙனம் மறைபுலப்படுதலின் இதனினூங்கு வரைந்துகொள்ளினன்றி இம்மறைக்கு உடம்படாளோவெனவுங் கருதுமாறு முன்புபோல் நின்ற தலைவியை மெய்யுறத் தீண்டி நின்று குறிப்பறியுமென்றற்குத் தொடுமென்னாது பயிறலென்றார்.

பொய் பாராட்டல் = அங்ஙனந் தீண்டிநின்றுழித் தலைவி குறிப்பறிந்து அவளை ஓதியும் நுதலும் நீவிப் பொய்செய்யாநின்று புனைந்துரைத்தல்: சிதைவின்றேனுஞ் சிதைந்தனபோற் றிருத்தலிற் பொய்யென்றார்.

இடம்பெற்றுத் தழாஅல் = அவ்விரண்டானுந் தலைவியை முகம்பெற்றவன் அவளைக்கிய நோக்கினைத் தன்னிடத்திலே சேர்த்திக்கொண்டு கூறல்: இடையூறு கிளத்தல் = அவள் பெருநாணினளாதலின் இங்ஙனங் கூறக் கேட்டுக் கூட்டத்திற்கு இடையூறாகச் சில நிகழ்த்தி அவற்றைத் தலைவன் கூறல்; அவை கண்பு

தைத்தலுங் கொம்பானுங் கொடியானுஞ் சார்தலுமாம் ; நீடுநினைந்திரங்கல் = புணர்ச்சிநிகழ்ந்து பொழுது நீண்டதற்கு இரங்கி இரக்கந்தோன்றக் கூறல் ; கூடுதல் உறுதல் = நீடித்ததென்று இரங்கினனென்பது அறிந்தோள் இவன் ஆற்றானாகி இறந்துபடுவனெனப் பெருநாணுக் கடிதுநீங்குதல் ; சொல்லிய நுகர்ச்சி வல்லேபெற்றுழி = தலைவன் தான் முற்கூறிய நுகர்ச்சியை விரையப் பெற்றவழி ; பெற்றவழி என்பதனைப் பெறுதலெனப் பெயர்ப்படுத்தல் அக்கருத்தாற் பெறுதும். தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇ = எஞ்ஞான்றும் பிரியாமைக்குக் காரணமாகிய சூளுறுதல் அகப்படத் தொகுத்து : புணர்ச்சிநிகழ்ந்துழியல்லது தேற்றங்கூறல் ஆகாதென்றற்கு வல்லே பெற்றுழித் தீராத் தேற்றமென்றார். முன்றெளிவகப்படுத்தபின் நிகழ்ந்த ஆற்றாமை தீர்தற்குத்தெய்வத்தொடுசார்த்திச் சூளுறுதலின் இத்தேற்றமும் வேண்டிற்று.

பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும் = குறையாச் சிறப்பினவாகிய இவ்வெட்டும் : தாமேகூடும் இடந்தலைப்பாடும் பாங்கனாற் குறிதலைப்பெய்யும் இடந்தலைப்பாடும் ஒத்த சிறப்பினவாதற்குப் பேராச்சிறப்பினென்றார். எனவே இடந்தலைப்பாடு இரண்டாயிற்று. தோழியிற்கூட்டம்போலப் பாங்கன் உரையாடி இடைநின்று கூட்டாமையிற் பாங்கற்கூட்டம் என்றதனைத் தலைமகன் பாங்கனைக் கூடுங் கூட்டமென்று கொள்க. உ-ம். "உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக் - கமிழ்தி னியன்றன தோள்." இது என் கைசென்றுறுந்தோறும் இன் னுயிர் தளிர்க்கும்படி யான் தீண்டப்படுதலினெனப் பொருள்கூறவே மெய்தீண்டலாயிற்று. "தீண்டலு மியைவது கொல்லோ மாண்ட - வில்லுடை யிளையர் கல்லிடு பெடுத்த - நனந்தலைக் கானத் தினந்தலைப் பிரிந்த-புன்கண் மடமா னேர்பட நசைஇச் - சிலைமாண் கடுவிசை தலைநிறத் தழுத்திக் - குருதியொடு பறித்த செங்கோல் வாளி - மாறுகொண் டன்ன வுண்க - ணாறிருங் கூந்தற் கொடிச்சி தோளே." கழறிய பாங்கற்குக் கூறுந் தலைவன் இவளை இக்குறை முடியாது, நெருநல் இடந்தலைப்பாட்டிற் கூடியாங்குக் கூடுவல், அது கூடுங்கொலென்று கூறுவான் அற்றைஞான்று மெய்தொட்டுப்பயின்றதே கூறினன். "சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாயாழநின் - திருமுக மிறைஞ்சி நாணுதி கதுமெனக் - காமங் கைமிகிற் றாங்குத லெளிதோ - கொடுங்கே ழிரும்புற நடுங்கக் குத்திப் - புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின் - றலைமருப் பேய்

ட்பக் கடைமணி சிவந்தநின்-கண்ணே கதுவ வல்ல நண்ணா-ராண்டலை மதில ராகவு முரசுகொண்-டோம்பரண் கடந்த வடுபோர்ச் செழியன் - பெரும்பெயர்க் கூட லன்னநின் - கரும்புடைத் தோளு முடையவா லணங்கே." இது அங்ஙனம் மெய்தீண்டி நின்றவன் யான் தழீஇக்கொண்டு கூறில் அதனை ஏற்றுக்கொள்ளாயாய் இறைஞ்சி நின்று நாணத்தாற் கண்ணைப் புதைத்தியென இடையூறுகிளத்தல் கூறிக் காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோவென நீடுநினைந்திரங்கல் கூறிப் புலியிடைத் தோய்ந்து சிவந்த கோடு போல என்னிடைத் தோய்ந்து காமக்குறிப்பினாற் சிவந்த கண்ணைனக் கூடுதலுங் கூறிற்று. இனித் தனியேவந்தன. "கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் னைய -ருடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயு - மிடல்புக் கடங்காத வெம்முலையோ பார - மிடைபுக் கிடுகு மிடையிழிவல் கண்டாய்." இது பொய்பாராட்டல். "கோல்யானை வெண்மருப்புங் கொல்வல் புலியதளு - நல்யாணர் நின்னையர் கூட்டுண்டு - செல்வார்தா - மோரம்பி னாலெய்து போக்குவர்யான் போகாமை-யீரம்பி னாலெய்தா யின்று." இது இடம்பெற்றுத்தழாஅல். "இலங்கு வளைதெளிர்ப்ப வலவ னூட்டி-முகம்புதைத் தப்பி னிறைஞ்சிநின் றோளே-புலம்புகொண் மாலை மறைய-நலங்கே ழாக நல்குவ ளெனக்கே." இது கூடுதலுறுதல். "வேட்ட பொழுதி னவையவை போலுமே - தோட்டார் கதுப்பினாடோள்." இது நுகர்ச்சிபெற்றது. "எம்மணங் கினவே மகிழ்நனை முறிய - நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல் - வேலன் புனைந்த வெறியயர் களந்தொறுஞ் - செந்நெல் வான்பொரி சிதறி யன்ன - வெக்கர் நண்ணிய வெம்மூர் வியன்றுறை - நேரிறை முன்கை பற்றிச்-சூரர மகளிரொ டுற்ற சூளே." இதனுட் டீராத் தேற்றத்தைப் பின்னொருகாற் றலைவி தேர்ந்து தெளிவொழித்துக் கூறியவாறு காண்க. இயற்கைப்புணர்ச்சிக்கட் டலைவி கருத்தெல்லாம் உணர்ந்தானாயினுங் காவன்மிகுதியானுங் கரவுள்ளத்தானும் இரண்டாங் கூட்டத்தினும் அவள்நிலை தெளியாது ஐயுறுதலுங் கூறி மூன்றாவதாய் மேல் நிகழும் பாங்கற்கூட்டத்தின்பின் நிகழும் இடந்தலைப்பாட்டினும் ஐயுறவு உரித்தென்று மெய்தொட்டுப்பயிறன் முதலியன அதற்குங் கூறினார். அன்றியும் மக்களெல்லாம் முதல் இடை கடையென மூவகைப்படுதலின் அவர்க்கெல்லாம் இது பொதுவிதியாகலானும் அமையும். "எண்ணிய திணையா தாங்கொல் கண்ணி - யவ்வுறு மரபி னுகர்ச்சி பெறுகென- வரிவண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த- வண்ணல் யானை யெண்

ணருஞ் சோலை - விண்ணுயர் வெற்பினெம் மருளி நின்னி - னகலி னகலுமெ னுயிரெனத் தவலி - வருந்துய ரவலமொ டணித்தெம் மிடமெனப்-பிரிந்துறை வமைந்தவெம் புலம்புநனி நோக்கிக்-கவர் வுறு நெஞ்சமொடு கவலுங் கொல்லோ-வாய நாப்பண் வருகுவன் கொல்லென - வுயவுமென் னுள்ளந் தயர்வுமிக லானே." இது வருவான் கொலென்னும் அச்சமும் வாரான்கொலென்னுங் காத லுங் கூர்ந்து தலைவி கூறியது. இனிச் சொல்லியவென்றதனு னே இன்னும் இப்புணர்ச்சி கூடுங்கொலெனக் கூறுவனவும் இன் னுந் தெய்வந்தருமெனக் கூறுவனவுந் தலைவியை எதிர்ப்பட்ட இடங்கண்டுழி அவளாகக் கூறுவனவுங் காட்சிக்கு நிமித்தமாகிய கிள்ளையைவாழ்த்துவனவுந் தலைவி தனித்த நிலைமை கண்டு வியப் பனவும் முன்னர்த் தான் நீங்கிய வழிப் பிறந்த வருத்தங் கூறு வனவும் அணியணிந்து விடுத்தலும் இவைபோல்வன பிறவும் இட ந்தலைப்பாட்டிற்குக் கொள்க. உம். "வெள்ள வரம்பி னூழி போ கியுங் - கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை - யிரும்பல கூந்தற் கொடிச்சி-பெருந்தோட் காவல் காட்டிய வம்மே." இது கிள்ளை வாழ்த்து. "நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்-தீயா ண்டுப் பெற்ற ளிவள்." இது நீங்கியவழிப் பிறந்த வருத்தங் கூறி யது. "அல்குபட ருழந்த வரிமதர் மழைக்கட் - பல்பூம் பகைத் தழை நுடங்கு மல்குற் - றிருமணி புரையு மேனி மடவோள்-யார் மகள் கொல்லிவ டந்தை வாழியர் - துயர முறீஇயின ளெம்மே யகல்வய - லரிவன ரரிந்துந் தருவன பெற்றுந் - தண்சேறு தாய மதனுடை நோன்றாட் - கணபோ னெய்தல் பொரவிற் பூக்குந்- திண்டேர்ப் பொறையன் றொண்டித் - தென்றிறம் பெருகவிவ ளீன்ற தாயே." என்பதும் அது. ஏனையவற்றிற்குச் சான்றோர் செய்யுட்கள் வருவன உளவேற் காண்க.

பெற்றவழி மகிழ்ச்சியும் = சொல்லிய நுகர்ச்சி வல்லே பெ ற்றுழி அவன் மனம் மகிழும் மகிழ்ச்சியும்: பேராச் சிறப்பினெ ன்றதனாற் பாங்கனால் நிகழும் இடந்தலைப்பாட்டிற்கும் இதுகொ ள்க. உம். "ஒடுங்கீ ரோதி யொண்ணுதற் குறுமக - ணறுந்த ணீர ளாரணங் கினளே - யினைய ளென்றவட் புனைய ளவறியேன்- சிலமெல் லியவே கிளவி - யணைமெல் லியள்யா முயங்குங் கா லே." எனவரும்.

பிரிந்தவழிக் கலங்கலும் = அங்ஙனம் புணர்ந்து பிரிந்துழி அன்புமிகுதியாற் றான் மறைந்து அவட் காணுங்கால் ஆயத்திடை

யுஞ் சிறாரிடையுங் கண்டு இனிக் கூடுதல் அரிதென இரங்கலும் உம். "குணகடற் றிரையது பறைதபு நாரை- திண்டேர்ப் பொறையன்றொண்டி முன்றுறை- யயிரை யாரிரைக் கணவந் தாங்குச்-சேய ளரியோட் படாதி - நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே." "இல்லோ னின்பங் காமுற் றாஅங் - கரிதுவேட் டனையா னெஞ்சே காதலி - நல்ல ளாகுத லறிந்தாங்- கரிய ளாகுத லறியா தோயே." எனவரும். வழியென்றதனாற் பிரியலுறுவான் கூறுவனவுங் கொள்க. "வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத - லதற்கன்ன ளிங்கு மிடத்து." இது மூன்றுங் கூட்டத்தினையுங் கருதலின் ஈண்டு வைத்தார். இது முதலாகப் பாங்கற்கூட்டமாம். கலங்கலுமெனவே அக்கலக்கத்தான் நிகழ்வனவெல்லாங் கொள்க. அவை தலைவன் பாங்கனை நினைத்தலும் அக்கலக்கங் கண்டு பாங்கன் வினுவுனவும் அதுவே பற்றுக்கோடாக உற்றதுரைத்தலும் பிறவுமாம். உம். "பண்டையை யல்லைநீ யின்று பரிவொன்று - கொண்ட மனத்தை யெனவுணர்வல் - கண்டாயா - னின்னுற்ற தெல்லா மறிய வுரைத்தியாற் - பின்னுற்ற நண்பினுய் போர்த்து." எனவும், "வஞ்சமே யென்னும் வகைத்தாலோர் மாவினுய்த் - தஞ்சந் தமியேனுய்ச் சென்றவெ- னெஞ்ச - நலங்கொண்டார் பூங்குழலா ணல்லாயத் துன்றி - வலங்கொண்டாள் கொண்டா ளிடம்." எனவும், "எலுவ சிறாஅ ரேமமுறு நண்ப - புலவ தோழ கேளா யததை - மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப் - பசுவெண் டிங்க டோன்றி யாங்குக் - கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல் - புதுக்கோள் யானையிற் பிணித்தற் றெம்மே." எனவும் வரும்.

நிற்பவை நினை இ நிகழ்பவை உரைப்பினும்=நிற்பவை நினை இ உரைப்பினும் நிகழ்பவை உரைப்பினும் என உரைப்பினென்பதனை முன்னுங் கூட்டுக; அது கேட்ட பாங்கன் உலகத்து நிலைநிற்கின்ற நற்குணங்களை அவனை நினைப்பித்துக் கழறிக் கூறினும், அக்கழறியவற்றை மறுத்துத் தன் நெஞ்சின் நிகழும் வருத்தங்களை அவற்குக் கூறினும்: உம். "குன்ற முருளிற் கொடித்தேரோய் குன்றியு - மொன்று மொழிவ துளதாமோ - நன்றறிந்து - தாமுறையே செய்வார் தகவிலவே செய்தக்கால் - யார்முறை செய்பவோ மற்று." எனவும், "தெரோன் றெறுகதிர் மழுங்கினுந் திங்க- டீரா வெம்மையொடு திசைநடுக் குறுப்பினும் - பெயராப் பெற்றியிற் றிரியாச் சீர்சால் - குலத்திற் றிரியாக் கொள்கையுங் கொள்கையொடு - நலத்திற் றிரியா நாட்டமு முடையோய் - கண்டத

ளளவையிற் கலங்குதி யெனினிம் - மண்டிணி கிடக்கை மாநில-முண்டெனக் கருதி யுரைலன் யானே." எனவும் இவை நிற்ப வை நினைஇக் கழறின. "காமங் காம மென்ப காம - மணங்கும் பிணியு மன்றே நினைப்பின் - முதைச்சுவற் கலித்த மூற்றா வி ளம்புன - மூதா தைவந் தாங்கு - விருந்தே காமம் பெருந்தோ ளோயே." இதுவும் அது. "நயனு நண்பு நாணுநன் குடைமையும் பயனும் பண்பும் பாடறிந் தொழுகலு - நும்மினு மறிகுவென் மன் னே கம்மென - வெதிர்த்த தித்தி யேரிள வனமுலை - விதிர்த்து விட்டன்ன வந்துண் சுணங்கி - னம்பால் வகுத்த கூந்தற் செம் பொற் - றிருநுதற் பொலிந்த தேம்பா யோதி - முதுநீ ரிலஞ்சிப் பூத்த குவளை - யெதிர்மலரப் பிணைய லன்னவிவ - ளரிமதர் மழை க்கண் காணு வூங்கே." "இடிக்குங் கேளிர் நுங்குறை யாக - நிறு க்க லாற்றினோ நன்றுமற் றில்ல - ஞாயிறு காயும் வெவ்வறை மரு ங்கிற் - கையி லூமன் கண்ணிற் காக்கும் - வெண்ணெ யுணங்கல் போலப் - பரந்தன் றிந்நோய் நொண்டுகொளற் கரிதே." இவை நிகழ்பவை உரைத்தன. இப்பன்மையான் வேறுபட வருவனவெ ல்லாங் கொள்க.

குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்=அங்ஙனந் தலைவற்கு நிகழுங் குற்றங்களை வெளிப்படக் காட்டிய பாங்கன் அவன் ஆற்று மை மிகுதி கண்டு அதனை நீக்குதற்கு விரும்பினும்: அது நின் உ ளாற் காணப்பட்ட உரு எவ்விடத்து எத்தன்மைத்து எனவினு வும். உம். "பங்கயமோ துங்கப் பனிதங்கு மால்வரையோ - வங் கண் விசும்போ வலைகடலோ - வெங்கோவிச் - செவ்வண்ண மால் வரையே போலுந் திருமேனி - யிவ்வண்ணஞ் செய்தார்க் கிடம்." எனவரும். அதுகேட்டுத் தலைவன் கழியுவகை மீதூர்ந்து இன்ன உ விடத்து இத்தன்மைத்து என்னும். "கழைபா டிரங்கப் பல்லியங் கறங்க-வாடுமக ளடந்த கொடும்புரி நோன்கயிற்-றதவத் தீங்கனி யன்னசெம்முகத் - துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக் - கழைக்க ணிரும்பொறை யேறி நின்று - குறக்குறு மாக்க டாளங் கொட்டு மக்-குன்றகத் ததுவே குழுமிளைச் சீறூர்-சீறூ ரோளே நாறுமயிர் க் கொடிச்சி-கொடிச்சி கையகத் ததுவேபிறர்-விடுத்தற் காகாது பிணித்தவென் னெஞ்சே." இது இடங்கூறிற்று. "கேளிர் வாழி யோ கேளிர் நாளுமென்- னெஞ்சு பிணிக்கொண்ட வஞ்சி லோதி-பெருநா ணணிந்த சிறுமெல் லாக - மொருநாள் புணரப் புணரி-னரைநாள் வாழ்க்கையும் வேண்டலன் யானே." இ -

கூறிற்று. மீட்டுங் குற்றங் காட்டிய என்றதனானே இக்கூட்டத் திற்குரிய கூற்றாகிச் சான்றோர் செய்யுட்கண் வேறுபடவருவன வெல்லாங் கொள்க. "காயா வீன்ற கணைவீ நாறற - மாயா முனை யில் வருவளி தூரக்கு - மாகோள வாழ்நா சிறுகுடி யாடடி - வே றியோர் மென்றோள் விலக்குநர் - யாரோ வாழிநீ யவ்வயிற் செலி னே." இது பாங்கனை நீ யாண்டுச் செலலவேணடுமென்றது. "என்னுறுநோய் தீர்த்தற் கிருபிறப்பி ஞனமறையோனை - நின னுறுநோய் போலத தளர்கின்று - னின்னினிய - சுற்றத்திற் றீ ரசுடரிழையைச் செவ்வியாற் - றெற்றெனக் கணணுறுங்கொ லென்று." இது குறிவழிச் சென்ற பாஙகனை அவ்விடத்துக் கா ணுங்கொலென்று ஐயுற்றது. "அளிதோ தானே யருண்மிக வுடைத்தே - களிவாய் வண்டினங் கவர்நதுண் டாடு - மொளிதார் மார்பி னோங்கெழிற் குரிசிலை - பிரியாத் துயரமொடு பேதுயிர்ந் தகன்ற - இளியோ மழலைக் கேழ்கிளர் மாத - ரார்நத சுற்றமொடு தமரி னீக்கத் - தானே தமியள் காட்டிய - வானோர் தெய்வம் வணங்குவல் யானே." இது குறிவழிச் சென்ற பாங்கன் தலைவியை எளிதிற் காட்டிய தெய்வத்தை வணங்கியது. "கண்ணென மலருங் குவளையு மடியெனத் - தண்ணெனும் தடமலர் தயங்கு தாமரையு - முலையென முரணிய கோங்கமும் வகையெழின் - மினனென நுடங்கு மருங்குலு மணியென - வயின்வயி னிமைக்கும் பாங்குபல் லுருவிற் - காண்டரு கமழ்கொடி போலுமென் - றொண்டகை யண்ணலை யறிவுதொலைத் ததுவே." இது இவள்போலும் இறைவனை வருத்தினாளெனப் பாஙகன் ஐயுற்றது. "கண்ணே, கண்ணயற் பிறநத கவுளழி கடாஅத்த - வண்ணல் யானை யரியர்ப பணித்த - விறற்போர் வானவன் கொல்லி மீமிசை - யறைக்கான மாச்சுனை யவிழ்ந்த நீலம் - பல்லே, பல்லரண் கடநத பசும்பூட் பாண்டியன் - மல்குநீர் வரைப்பிற் கொற்கை முன்றுறை - யூதை யீட்டிய வுயர்மண லடைகரை - யோத வெண்டிரை யுதைத்த முத்த - நிறனே, திறல்விளங் கவுணர் தூஙகெயி லெறிந்த - விறல் மிகு முரசின் வெல்போர்ச் சோழ - னனைனி யரங்கிற் போகிய மாவி - னுருவ நீள்சினை யொழுகிய தளிரே - யென்றவை பயந தமை யறியார் நன்று - மடவர் மன்றவிக் குறவர் மக்க - டேம் பொழி கிளவி யிவளை - யாம்பயந் தேமெம் மகளென் போரே." இது தலைவியை வியநதது. "பண்ணாது பணமேற்றென் பாடுங் கழிக்கான - லெண்ணாது கண்டாருக் கேரணங்கா - மெண்ணாது - சாவார்சான் றாண்மை திரிந்திலார் மற்றிவனைக் - காவார் கயிறுரீஇ

விட்டு.'' பாங்கன் தலைவனை வியந்தது. "பூந்த ணிரும்புனத்துப் பூசல் பிரியாது பூழி யாடிக்- காந்தட் கமழ்குலையாற் காதன் மடப்பிடிதன் கவுள்வண் டோப்ப - வேந்தன்போ னின்ற விறற் களிற்றை விலலிஞற் கடிவார் தங்கை - யேந்தெழி லாக மியையா தியைந்தநோ யியையும் போலும்.'' இது தலைவற்கு வருத்தந தருமென அவனை வியந்தது. "வெம்முறு துயரமொடு'' என்னுஞ்செய்யுளுங் கொள்க. இனிப் பாங்கன் தலைவிதன்மை தலைவற்குக் கூறுவனவும் இடங்காட்டுவனவுஞ் சான்றோர்செய்யுளுள் வரும்வழிக் காணக. ஆண்டுச் சென்ற தலைவன் இடந்தலைப்பாட்டிற் கூறியவாற்றானே கூடுதல்கொள்க. அங்ஙனங் கூடி நின்று அவன் மகிழ்ந்துகூறுவனவும் பிறவுங் கொள்க. "வேட்ட பொழுதினவையவை போலுமே - தோட்டார் கதுப்பினா டோள்.'' "எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோ- ளொண்ணுத லரிவையொடு மென்மெல வியலி - வந்திசின் வாழியோ மடந்தை - தொண்டியன்ன நின் பண்புபல கொண்டே.'' இது பாங்கற்கூட்டங் கூடி நீங்கும் தலைவன் நீ வருமிடத்து நின்தோழியோடும் வரல்வேண்டுமெனத் தலைவிக்குக் கூறியது. "நெய்வளை ணைம்பா னேரிழை மாதரை-மெய்ந்நிலை திரியா மேதகு சுற்றமொ- டெய்துத லரிதென்றின்னண மிரங்கிக் - கையறு நெஞ்சமொடு கவன்றுநனி பெயர்ந்தவென் - பைத லுள்ளம் பரிவு நீக்கித் - தெய்வத் தன்ன தெரியிழை மென்றோ - ளெய்தத் தந்த வேந்தலொ டென்னிடை - நற்பாற் கேண்மை நாடொறு மெய்த - வப்பாற் பிறப்பினும் பெறுகமற் றெமக்கே.'' அங்ஙனங் கூடிநின்று தலைவன் பாங்கனை உண்மகிழ்ந்து உரைத்தது. இவன் பெரும்பான்மை பார்ப்பானும். இத்துணையும் பாங்கற்கூட்டம்.

பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுப்பினும் = அங்ஙனம் அவனைப் புணைபெற்றுநின்ற தலைவன் தலைவிக்கு வாயிலாதற்கு உரியாளை யாராய்ந்து பலருள்ளுந் தலைவியாற் பேணப்பட்டாள் தனக்கு வாயிலாந் தன்மையையுடைய தோழியை அவள் குறிப்பினான் வாயிலாகப் பெற்று இவனை இரந்துபின்னிற்பலென வலிப்பினும்: மறைந்து தலைவியைக் கண்டு நின்றான் அவட்கு அவள் இன்றியமையாமை கண்டு அவளை வாயிலெனத் துணியும். உம். "தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளுங் - கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்-புணைகை விட்டுப் புனலோ டொழுகி- னாண்டும் வருகுவள் போலு மாண்ட- மாரிப் பித்திகத்து நீ

வார் கொழுமுகைச் - செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக் கட்-டுளிதலைத் தலைஇய தளிரன் னோளே." இது தலைவி அவட்கு இனையளென்று கருதி அவளை 'வாயிலாகத் துணிந்தது. அன்றித் தோழி கூற்றெனிற் தலைவியை அருமைகூறினன்றி இக்குறை முடிப்பலென ஏற்றுக்கொளளாள் தனக்கு ஏதமாமென்று அஞ்சி; அன்றியுந் தானே குறையுறுகின்றார்கு இதுகூறிப் பயநதனூஉமின்று "மருந்திற் றீரா மண்ணி ஞகா - தருநதவம்" என்னுஞ் செய்யுள் இரவுவலியுற்றது.

ஊரும் பெயரும் கெடுதியும் பிறவும் நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித் தோழியைக் குறையுறும் பகுதியும் = தோழியை இரந்து பின்னிற்றலை வலித்த தலைவன், தலைவியுந தோழியும் ஒருங்கு தலைப்பெய்த செவ்வி பார்த்தாயினுந, தோழி தனித்துழியாயினும், நும்பதியும் பெயரும் யாவையெனவும் ஈண்டு யான் கெடுத்தவை காட்டுமினெனவும் அனையன பிறவற்றையும், அகத்தெழுந்ததோர் இன்னீர்மை தோன்றும் இக்கூற்று வேறோர் கருத்து உடைத்தென அவள் கருதுமாற்றானும் அமையச் சொல்லித், தோழியைத் தன் குறையறிவிக்குங் கூறுபாடும் : வினவுவான் ஏதிலர்போல ஊரினை முன் வினயச் சிறிது உறவு தோன்றப் பெயரினைப் பின் வினய் அவ்விரண்டினும் மாற்றம் பெறாதான் ஒன்று கெடுத்தாகவும் அதனை அவர் கண்டார் போலவும் கூறினன். இவன் என்னினையதோர் குறையுடையனென்று அவள் கருதக் கூறுமென்பார் நிரம்ப வென்றார். கெடுதியாவன யானை புலி முதலியனவும் நெஞ்சும் உணர்வும் இழந்தேன் அவை கண்டீரோவெனவும் வினவுவன பலவுமாம். பிறவுமென்றதனால் வழிவினாதலுந் தன்னொடு அவரிடை உறவு தோன்றற்பாலனவுங் கூறுதலுங் கொள்க. உம். "அருவி யார்க்கும் பெருவரை நண்ணிக் - கன்றுகால் யாத்த மன்றப் பலவின் - வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும் பழங் - குழவிச் சேதா மாந்தி யயலது - வேப்பயி லிறும்பி னுமுறல் பருகும் - பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச் - சொல்லவுஞ் சொல்லீ ராயிற் கல்லெனக் - கருவி மாமழை வீழ்ந்தெனவெழுந்த-செங்கே ழாடிய செழுங்குரற் சிறுதினைக்- கொய்புனங் காவலு நுமதோ - கோடெந் தல்கு னீரோ ளீரோ." ஊரும் பிறவும் வினயது. "கல்லுற்ற நோய்வருத்தக் காலு நடையற்றே-னெல்லிற் றியானும் வருந்தினேன் - விலலுற்ற - பூங்க ணிமைக் கும் புருவ மதிமுகத்தீ-ரீங்கிதுவோ நும்முடைய வூர்." இது ஊர்

வினயது. "செறிகுர லேனற் சிறுகிளி காப்பீ - ரறிகுவே னும்மை வினஅ - யறிபறவை - யன்ன சிகாக்குஞ்சி ராடமை மென்றோளி - ரென்ன பெயரிரோ நீர்." இது பெயர்வினயது. "நறை பரந்த சாந்த மறவெறிந்து நாளா - லுறையெதிர்ந்து வித்தியவூழேனற் - பிறையெதிர்ந்த - தாமரைபோல வாண்முகத்துத் தாழ்குழலீர் காணிரோ - வேமரை போந்தன வீண்டு" "தங்குறிப்பி ஞேருந தலைச்சென்று கண்டக்கா - லெங்குறிப்பி ஞேமென் றிகழ்ந்திரார் - நுங்குறிப்பின் - வென்றி படர்நெடுங்கண் வேய்த்தோளீர் கூறீரோ-வன்றி படர்ந்த வழி." எனறி, டனறி. "தண்டு புனை கதிர்த் தாழ்குரம் செந்தினை - மண்டு புகவரு மாண்டகிளி மாற்று - மொண்டொடிப் டணைத்தோ ளோணனுத லினையீர் - கண்டனி ராயிற் கரவா துரைமின் - கொண்டன குழூவி னீங்கி மண்டிய - வுள்ளழி பகழியோ டெங்கியோா - புள்ளி மான்கலை போகிய நெறியே." இவை கெடுதிவினயின. "மெல்லிலைப் பரப்பின்விருந்துண் டியானுமிக்-கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனே." எனவும், "இல்லுடைக் கிழமை யெம்மொடு புணரிற - றீதுமுண்டோ மாதரீரோ." எனவும் வருவன பிறவுமென்றதனுற் கொள்க. குறையுறூஉம்பகுதி குறையுறுபகுதி எனவுமாம்; எனவே, குறையுறுவார் சொல்லுமாற்றுனே கணணி முதலிய கையுறையோடு சேறலுங் கொள்க. பகுதியென வரையாது கூறலிற் றனித்துழிப் பகுதி முதலியனவும் இருவருமுள்வழி இவன்றலைப்பெய்தியுடையன் எனத் தோழி உணருமாறும் வினவுதல கொள்க. இவை குறையுறவுணர்தலும் இருவருமுள்வழி அவன் வரவுணர்தலுமாம். முன்னுறவுணர்தல் "நாற்றமுந் தோற்றமும்" என்புழிக் கூறுப. மதியுடம்பாடு மூவகையவென மேற் கூறுப.

தோழி குறை அவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்=தோழி இவன் கூறுகின்ற குறை தலைவியிடத்தேயாய் இருந்ததென்று அவண்மேலே சேர்த்தி அதனை உண்மையென்று உணரத் தலைவன் கூறுதலும்: உம். "கருங்கட லுட்கலங்க நுண்வலை வீசி - யொருங்குடன் றன்னைமார் தந்த கொழுமீ - னுணங்கல்புள் ளோப்பு மொளியிழை மாத-ரணங்காகு மாற்ற வெமக்கு." "பண்பும் பாயலுங் கொண்டன டொண்டித் - தண்கமழ் புதுமலர் நாறு மொண்டொடி - யைதமர்ந் தகன்ற வல்குற்-கொய்தளிர் மேனி கூறுமதி தவறே." இவை வெளிப்பட்டன. இவற்றின் வேறுபாடு உணர்க.

"குன்ற நாடன் குன்றத்துக் கவாஅற்- பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையு - மஞ்சி லோதி யசையியற் கொடிச்சி - கண்போன் மலர்த லரிதிவ - டன்போல் சாயன் மஞ்ஞைக்கு மரிதே." இது இருவரும் உள்வழி வந்த தலைவன் தலைவிதன்மை கூறவே இவளைக் கண்ணது இவன் வேட்கையென்று தோழி குறிப்பான் உணரக் கூறியது. குன்றநாடன், முருகன்; அவள் தந்தையுமாம். "உள்ளிற் காண்பென் போல்வன் முள்ளெயிற் - றமிழ்த மூறுஞ் செவ்வாய்க் கமழகி - லார நாறு மறல்போல் கூந்தற் - பேரமர் மழைக்கண் மடந்தை - மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே." இதுவும் அது. இதுமுதலியவற்றைத் தலைவன் கூற்றாகவே கூறுது தோழி கூறினளாகக் கூறி அவ்விடத்துத் தலைவன் மடன்மா கூறுமென்று பொருள்கூறின "நாற்றமுந் தோற்றமும்" என்னுஞ் சூத்திரத்துத் தோழி இவற்றையே கூறினளென்றல வேண்டாவாம், அது கூறியது கூறலாமாகலின்.

தண்டாது இரப்பினும் = இடந்தலைப்பாடு முதலிய கூட்டங்களான் அமையாது பின்னும் பகற்குறியையும் இரவுக்குறியையும் வேண்டினும்: உம். "கொண்டல் மாமழை கொட்குபு குழைத்த- சிறுகோ லிணர பெருந்தண் சாந்தம் - வகைசேர மாம்பாற் கை பெற வாரிப - புலர்விடத் துதிர்த்த துகள்படு கூழைப் - பெருமைக் கண்ணைய மூவப்பத் தந்தை - நெடுந்தேர் வழங்கு நிலவுமணன் முற்றத்துப் - பந்தொடு பெயரும் பரிவி லாட்டி - யருளினு மருளாளாயினும் பெரிதழிந்து - பின்னிலை முனியன்மா நெஞ்சே யென்னதூஉ - மருந்துய ரவலந் தீர்க்கு - மருந்துபிறி தில்லை யானுற்ற நோய்க்கே." பரிவிலாட்டியையென இரண்டாவது விரிக்க. "கடுந்தே ரேறியுங் கானலிற் சென்றுங் - கொடுங்கழி மருங்கி னடும்ப மலர் கொய்துங் - கைதை தூக்கியு நெய்தல் குற்றும் - புணர்ந்தாம் போல வுணர்ந்த நெஞ்சமொடு - வைகலு மினைய மாகவுஞ் செய்தார்ப் - பசும்பூண் வேந்த ரழிந்த பாசறை - யொளிறுவே லழுவத்துக் களிறுபடப் பொருத - பெரும்புண் ணுறுநர்க்குப் பேஎய் போலப் - பின்னிலை முனியா நம்வயி - னென்னென நினையுங் கொல் பரதவர் மகளே." தோழீ நம்வயிற் பரதவர் மகளையென்னென நினையுங்கொலென்க. "பாலொத்த வெள்ளருவி பாய்ந்தாடிப் பல்பூப்பெய் - தாலொத்த வைவனங் காப்பாள்கண் - வேலொத்த - நெஞ்சம்வாய்ப் புக்கொழிவு காண்பா ளெவன்கொலோ - வஞ்சாயற் கேனோவல் யான்." இவை பகற்குறி இரந்தன.

யெனச் - சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய- கயலெனவமர்த் த வுண்கட் புயலெனப்-புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பான்- மின்னேர் மருங்குற் குறுமகள் - பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே." எனவும், "மாய்கதில் வாழிய நெஞ்சே நாளு - மெல லியற் குறுமக ளல்லகு நகைஇ- யரவினை தேரு மஞ்சுவரு சிறு நெறி - யிரவென நீயும் பெறாஅ யருளவர் - புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத் - துள்ளவர்க் கெல்லாம் பெருநகை யாகக்- காமங் கைமிக வுறுதர-வானா வரும்படர் தலைத்தந் தோயே." எனவும் வருவன, தன்னெஞ்சினை இரவு விலக்கியன.

௧. சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினும்=தான் வருந் திக் கூறுகின்ற கூற்றினைத் தலைவியைச் சார்த்தித் தலைவன் கூற லின் இவ்வாறு ஆற்றுளாய் இங்ஙனங் கூறினானென்று அஞ்சித் தோழி உணராமற் தலைவிதானே கூடிய பகுதியினும்: "களஞ் சுட்டுக் கிளவி கிழவியதாகும்" என்பதனாற் தலைவியாற் குறிபெற் றுந் தோழியை இரக்கும். உம். "அயத்து வளர்பைஞ் சாய்மு ருந்தி னன்ன - நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வா- யாகத் தரும்பிய முலையள் பணைத்தோண்-மாத்தாட் குவளை மலர் பிணைத் தன்ன - மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு - பேயு மறியா மறையமை புணர்ச்சி - பூசற் றுடியிற் புணர்வுபிரிந் திசை ப்பக் - காய்ந்த காப்பொடு நாஞ்செலற் கருமையிற் - கடும்புனன் மலிந்த காவிரிப்பேர் யாற்று - நெடுஞ்சுழி நீத்த மண்ணுநள் போல - நடுங்களுர் பெதிர முயங்கி நெருந - லாக மடைதந் தோ ளே வென்வேற் - களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி- யொளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக் - கடவு ளெழுதிய பாவையின் - மடவது மாண்ட மாஅ யோளே." "அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன - மணங்கமழ் பொழிற்குறி நல் கின னுணங்குழைப் - பொலங்கரி பரந்த வுண்க - ணங்கலுழ் மேனி யசையிய வெமக்கே." எனவரும். வகையென்றதனானே இதனின் வேறுபட வருவனவுங் கொள்க. "தளிர்சேர் தண்டழை தைஇ நுந்தை - குளிர்வாய் வியனபுனத் தெற்பட வருகோ - குறுஞ்சு னைக் குவளை யடைச்சிநாம் புணரிய - நறுந்தண் கான லாடுகம் வருகோ - வின்சொன் மேவலைப் பட்டவெ னெஞ்சுணக் - கூறினி மடந்தைநின் கூரெயி றுண்கென- யான்றன் மொழிதலின் மொழி யெதிர் வந்து - தான்செய் குறிநிலை யினிய கூறி-யேறுபிரி மடப் பிணை போல வேறுபட் - டுறுகழை நிவப்பிற் சிறுகுடி பெயருங்-

கொடிச்சி செல்புற நோக்கி - விடுத்த நெஞ்சம் விடலொல் லா
வே." "இரண்டறி களவினங் காத லோளே-முரணகொ டேட்பிற
செவ்வேன மலையன் - முள்ளூர்க் கான நாற வந்து - நள்ளென்
கங்கு னம்மோ ரன்னள்- கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்-
சாந்துளா ஈறுநகதுப் பெண்ணெய் நீவி - பமரா முகத்த ளாகித-
தமரோ ரனனள் வைகறை யானே." எனவரும்.

அறிந்தோள் அயர்பபின் அவ்வழி மருங்கிற் கேடும் பீடுங் கூறலும்=மதியுடம்பட்ட தோழி நீர் கூறிய குறையை யான
மறந்தேனெனக் கூறுமாயின் அவ்விடத்துத் தன்னொடு கூடாமை
யாற் தலைவிமருங்கிற் பிறநத கேடடையும் அவள் அதனை ஆற்
றியிருநத பெருமையையுங் கூறுதலும்: உம். "ஒள்ளிழை மகளி
ரோ டோரையு மாடாய் - வள்ளிதழ் நெய்தற் றொடலையும் புனை
யாய் - விரிபூங் கான லொருசிறை நின்றோய் - யாரை யோநிற்
றொழுதனம் வினவுதுங் - கணடார் தண்டா நலத்தைத் தெண்டி
ரைப் - பெருநகடற் பரப்பி னமாந்துறை யணங்கோ - விருங்கழி
மருங்கி னிலைபெற் றனையோ - சொலலினி மடந்தை யென்றனெ
னதனெதிர் - முள்ளெயிற்று முறுவலுந் திறநதன - பல்லித ழுண்
கணும் பரநதவாற் பனியே." "தண்டழை செரீஇயுந் தண்ணென
வுயிர்த்தும - கணகலுழ் முத்தங் கதிர்முலை யுறைத்து - மாற்றின
ளென்பது கேட்டன மாற்று - வென்னினு மவளினு மிகநத - வின்
னு மாக்க டிநன்ன ரூேோ." "தோளுங் கூநதலும் பலபா ராட்டி - வாழ்த லொலலுமோ மற்றே செங்கோற் - குட்டுவன் றொ
ண்டி யன்னவெற் - கண்டு நயநதுநீ நல்காக் காலே." என
வரும். அயர்த்தது அவள் அருமை தோன்றுதற்கு.

தோழி நீக்கலினாகிய நிலைமையும் நோக்கி=தோழி இவ்விட
த்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலிற் தனக்கு
உண்டாகிய வருத்தத்தையம் பார்த்து: உம்மை, சிறப்பு. இதுவே
மடன்மா கூறுதற்கு ஏதுவாயிற்று. "நல்லுரை யிகந்து புல்லுரைத்
தாஅய்ப் - பயநீர்க் கேற்ற பசுங்கலம் போல - வுள்ளந் தாங்கா
வெள்ள நீந்தி - யரிதயர் வுற்றனை நெஞ்சே யென்றும் - பெரிதா
லம்மநின் பூசலுயர் கோட்டு - மகவுடை மந்தி போல - வகனுறத்
தழீஇக் கேட்குநர்ப் பெறினே." "பணைத்தோட் குறுமகள் பாவை
தைஇயும்- பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து மற்றிவ- ளுருத்தெழு வண்
முலை யொளிபெற வெழுதிய - தொய்யில் காப்போ ரறிதலு மறி
யார் - முறையுடை யரசன் செங்கோல் வையத்-தியான்றற் கடை

னின் யாங்கா வதுகொல் - பெரிதும் பேதை மன்ற - வளிதோ டானேயிவ் வழுங்க லூரே." "உரைத்திசிற் றோழியது புரைத் தோ வன்றே- துருக்கங் கமழு மென்றோ - நறப வென்றி யிரீஇ யினனுயிரோ." எனவரும்.

மடன்மாக் கூறு மிடனுமா ருண்டே = அச்சேட்பட்டையான மடலேறுவலெனக் கூறும் இடனும் உண்டு, எ - று. நோக்கி மடன்மா கூறுமென்க. உம். "விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல் - மணியணி பெருந்தார் மார்பிற் பூட்டி - வெள்ளென் பணிந்துபிற ரெள்ளத் தோன்றி - யொருநாண் மருங்கிற் பெருநா ணீக்கித் - தெருவி னியலவுந் தருவது கொல்லோ - கலிங்கவி ரசைநடைப் பேதை - மெலிந்தில ளாம்விடற் கமைந்த தூதே" இது நெஞ்சொடு கிளத்தல். "நாணுக் நாறு நனைகுழலா ளல்கத் தன்- பூணுக நோவளவும் போகாது - பூணுக- மொரனறேன திரண் டாவ துணடோ மடன்மாமே - னின்றேன் மறுகிடையே நோ ந்து." இது தோழிக்குக் கூறியது. இவை சாக்காடு குறித்தன. 'மாவென மடலு மூர்ப பூவெனக் - குவிமுகி ழெருக்கங் கண்ணி யுஞ் சூடுப - மறுகி னார்க்கவும் படுப - பிறிது மாகுப காமங்கா ழ்க்கொளினே." இதனுட் பிறிதுமாகுப என்றது வரைபாய்தலை. இடனென்றதனாற் தோழி பெரியோர்க்குத் தகாதென்றவழித் தலைவன் மறுத்துக் கூறுவனவும் பிறவும் வேறுபட வருவனவுங் கொள்க. "நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடை யேன் - காமுற்றோ ரேறு மடல்." எனவரும். இனி இடனுமென்ற மையைப் பிரித்து நீரீஇ இருநான்கு கிளவியும் மகிழ்ச்சியுங் கல ங்கலுங் கூறும் இடனும் உண்டு, உடைபினும் பெடபினு முவப் பினு மிரப்பினும் வகையினுங் கூறும் இடனும் உண்டு, பகுதிக்க ணணும் மற்றைய வழிக்கணனுங் கூறும் இடனும் உண்டு, மெய்யு ற்கூறலும் பீடுங்கூறலும் உண்டென முடிக்க. (௧௧)

௧௦௫. பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினு
மன்புற் றகினு மவட்பெற்று மலியினு
மாற்றிடை யுறுதலு மவ்வினைக் கியல்பே.

இதுவும் இறந்துபின்னிற்புழித் தலைவன் கூற்று நிகழுமாறு கூறுகின்றது. (இ-ள்.) பண்பிற் பெயர்ப்பினும் = தோழி தலைவிய து இளமை முதலிய பண்புகூறி அவ்வேட்கையை மீட்பினும்: உம். 'குன்றக் குறவன் காதன் மடமகள் - வண்டுபடு கூந்தற் றண்டழைக்

கொடிச்சி - வளையணி முன்கை வாலெயிற் றரிவை - யிளைய ளாயினு மாரணங் கினளே." இது இளையளெனப் பெயர்த்துழித் தலைவன் கூறியது.

பரிவுற்று மெலியினும் = இருவகைக் குறியிடத்துந் தலைவியை எதிர்ப்படு ஞான்றும் எதிர்ப்பட்ட ஞான்றும் எதிர்ப்படாதின்ற ஞான்றும் பலவாபவழி அவன் பரிந்த உள்ளத்தனாய் மெலியினும் : உம். "ஆனா நோயொ டழிபடர் கலங்கிக் - காமங் கைமிக்க் கையறு துயரங் - காணவு நல்கா யாயிற் பாணர் - பரிசில் பெற்ற விரியுளை நன்மான் - கவிகுளம்பு பொருத கன்மிசைச் சிறுநெறி - யிரவலர் மெலியா தேறும் பொறைய - னுரைசா லுயர்வரைக் கொல்லிக் குடவயி - னகலிலைக் காந்த ளலங்குகுலைப் பாய்ந்து - பறவை யிழைத்த பல்க ணிறாஅற் - றேனுடை நெடுவரைத் தெய்வ மெழுதிய - வினைமாண் பாவை யன்னோள் - கொலைசூழ்ந் தனளா னோகோ யானே." இது பகற்குறியிற் பரிவுற்றது. "ஓதமு மொலியோ வின்றே யூதையுந் - தாதுளர் கானற் றபவென் றன்றே - மணன்மலி மூதா ரகனெடுந் தெருவிற் - கூகைச் சேவல் குராலோ டேறி - யாரிருஞ் சதுக்கத் தஞ்சுவரக் குழறு - மணங்கு கால்கிளரு மயங்கிரு ணடுநாட் - பாவை யன்ன பலராய் வனப்பிற் - றடமென் பணைத்தோண் மடமிகு குறுமகள் - சுணங்கணி வனமுலை முயங்க லுள்ளி - மீன்கண் டுஞ்சும் பொழுதும் - யான்கண் டுஞ்சேன் யாதுகொ னிலையே." இது இரவுக்குறியிற் பரிவுற்றது. "மழைவர வறியா மஞ்ஞை யாலு-மடுக்க லல்லூ ரசைநடைக் கொடிச்சி - தானெம் மருளா ளாயினும் - யான்ற னுள்ளுபு மறந்தறி யேனே." எனவும், "களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்-வெளிப்படுந் தோறு மினிது." எனவும்வரும். இன்னும் பரிவுற்றுமெலியினும் என்றதனானே புணர்ந்து நீங்குந்தலைவன் ஆற்றாது கூறுவனவும், வறும் புனங் கண்டு கூறுவனவும், இற்செறிப்பறிவுறுப்ப ஆற்றானாய்க் கூறுவனவுந், தோழி இற்புணர்ச்சிக்கட் தன்னிலைக்கொளீஇக் கூறுவனவும், இரவுக்குறிக்கண் வருகின்றான் தலைவியை ஐயுற்றுப் பாங்கற்குக் கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அமைக்க. "என்று மினிய ளாயினும் பிரித-லொன்று மின்னா ளன்றே நெஞ்சம் - பனிமருந்து விளைக்கும் பரூஉக்க ணிளமுலைப் - படுசாந்து சிதைய முயங்குஞ் - சிறுகுடிக் கானவன் பெருமட மகளே." "கோடாப் புகழ்மாறன் கூட லனையாளை - யாடா வடகினுளுங் காணேன் போர் - வாடாக் - கருங்கோல்வேன் மன்னர் கலம்பூக்க கொல்

லோ - மருங்குல்கொம் பன்னோண் மயிர்." "பெறுவ தியையா தா யினு முறுவதொன் - றுண்டுமன் வாழிய நெஞ்சே திண்டேர்க் - கைவள ரோரி கானந் தீண்டி - யெறிவளி கமழு நெறிபடு கூந்தன் - மைஇ யீஇ ரோதி மாஅயோள் - வயினிறை யன்ன நட்பி னின்னே - யிறுமுறை யெனவொன் றின்றி - மறுமை யுலகத்து மன்னுதல் பெறினே." "நோயு நெகிழ்ச்சியும் விடச்சிறந் தனவே - வேய் வனப் புற்ற தோளை நீயே - யென்னுள் வருதியோ வெழினடைக் கொடிச்சி - முருகுபுணர்ந் தியன்ற வள்ளி போலநின் - னுருவுகண ணெறிப்ப நோக்காற் றலனே - போகிய நாகப் போக்கருங் கவலைச் - சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தல் - சேறு டிரும்புற நீறொடு சிவண - வெள்வசிப் படீஇய மொய்த்தவென்ப வழீஇக் - கோனாய் கொண்ட கொள்ளைக் - கானவர் பெயர்ந்தார்தஞ் சிறுகுடி யானே." "மயில்கொன் மடவாளகொன் மாநீர்த் திரையுட் - பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர் - குயில்பயிலுங் - கண்ணி யிளஞாழற் பூம்பொழி னோக்கிய - கண்ணின் வருந்துமென் னெஞ்சு." எனவரும்.

அன்பு உற்று நகினும் = தோழி குறைமறுப்புழி அன்புதோன்ற நகினும் : உம். "நயனின் மையிற் பயனிது வென்னாது - பூம்பொறிப் பொலிந்த வழலுமிழ் மகன்லைப் - பாம்புயி ரணங்கி யாங்கு மீங்கிது - தகாஅது வாழியோ குறுமக ணகாஅ - துனைமதி யுடையுமென் னுள்ளஞ் சாரற் - கொடுவிற் கானவன் கோட்டுமா தொலைச்சிப் - பச்சூன் பெய்த பகழி போலச் - சேயரி பரந்த மாயிதழ் மழைக்க - ணுறாஅ நோக்க முற்றவென் - பைத னெஞ்சமுய்யு மாறே." இது அன்புற்று நக்குழித் தலைவன் கூறியது.

அவட் பெற்று மலியினும் = தோழி உடம்பாடுபெற்று மனம் மகிழினும் : உம். "எமக்குநயந் தருளினை யாயிற் பணைத்தோ - ளொண்ணுத லரிவையொடு மென்மெல வியலி - வந்திசின் வாழியோ மடந்தை - தொண்டி யன்னநின் பண்புபல கொண்டே." இது அவட்பெற்று மலிந்து தலைவன் கூறியது. இன்னும் அவட் பெற்று மலியினும் என்றதற்கு இரட்டுறமொழிதலென் றதனாற் தலைவியைப் பகற்குறியினும் இரவுக்குறியினும் பெற்று மகிழினும் என்று பொருளுரைக்க. "நன்றே செய்த வுதவி நன்றுதெரிந் - தியாமெவன் செய்குவ நெஞ்சே காமர் - மெல்லியற் கொடிச்சி காப்பப் - பல்குர லேனற் பாத்தருங் கிளியே." இது கிளி புனத்தின்கட் படிகின்றதென்று தலைவியைக் காக்க ஏவியதனை அறிந்த தலைவன் அவளைப் பெற்றேமென மகிழ்ந்துகூறியது. "கானிற் குவ

ளை கவிழ்ந்து நிலனோக்கு - மாணிழை கண்ணோவ்வே மென்று." இது பகற்குறிக்கண் அவட்பெற்று மலிந்தது. "கூறுவங் கொல்லோ கூறலேங் கொல்லெனக் - கரந்த காமங் கைநிறுக் கல்லாது-நயந்து நாம்விட்ட நன்மொழி நம்பி - யரைநாள் யாமத்து விழுமிழை கரந்து - கார்விரை கமழுங் கூந்த றூவினை- நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பி - னிளமழை சூழ்ந்த மடமயில் போல - வண்டு வழிப்படரத் தண்மலர் வேய்ந்து - வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூ - லஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து - துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோ - ளான்ற கற்பிற் சான்ற பேரிய- லம்மா வரிவையோ வல்ல டெனாஅ - தாய்ந்த நன்னாட் டணைங்குடைச் சிலம்பிற் - கவிரம் பெரிய வுருகெழு காலாஅ - னோர்மலர் நிறைச்சுனை யுறையுஞ் - சூர்மகண் மாதோ வென்னுமென்னெஞ்சே." எனவரும். "விண்ணகம் விளக்கல் வேண்டி நம்மிற்பிரியினும் பிரியுமோ பெருந்தோட் கொடிச்சி - வானஞ் சூடிய திலகம் போல- வோங்கிரு விசும்பினுங் காண்டு- மீங்குங் காண்டு மிவள்சிறு நுதலே." இதுவும் அது.

ஆற்றிடை உறுதலும் = தலைவன் செல்லும் நெறிக்கண் இடையூறு தோன்றின இடத்தும்: என்றது, தலைவியுந் தோழியும் வருவழியருமை கூறியவழித் தலைவன்கூற்று நிகழுமென்றவாறு: உம். "குருதி வேட்கை யுருகெழு வயமான்- வலிமிகு முன்பின் மழகளிறு பார்க்கு- மரம்பயில் சோலை மலியப் பூழிய-ருருவத்துருவி னண்மேய லாரு-மாரி யெண்கின் மலிதரு நீளிடை-நீநயந்து வருத லெவனெனப் பலபுலந் - தழுதனை யுறையு மம்மா வரிவை - பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப் - பூதம் புணர்த்த புதிதியல் பாவை - விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின்-னாய்நல முள்ளி வரினெமக் - கேம மாகு மலைமுத லாறே." எனத் தலைவி ஆற்றினதருமை கூறியதற்குத் தலைவன் கூறியது. இரட்டுறமொழிதலென்பதனான் ஆற்றிடையுறுதற்கு வரைவிடைவைத்துப் பிரிந்தான் ஆற்றிடை வருத்தமுற்றுக் கூறுவனவுங் கொள்க. அது போகின்றான் கூறுவனவும் மீண்டவன் பாங்கற்குக் கூறுவனவுமாம். "ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின் - றூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிக்- கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி-மரையின மாரு முன்றிற் - புல்வேய் குரம்பை நல்லோ ளூரே." "நவலை கெண்டிய வகல்வாய்ச் சிறுகுழி - கொன்றை பொன்வீ தாஅய்ச் செல்வர் - பொன்செய் பேழை மூய்திறந் தன்ன - காரொதிர் புறவினது வேயுயர்ந் தோர்க்கு - நீரொடு சொரிந்த மிச்சில்

யாவர்க்கும் - வரைகோ ளறியாச் சொன்றி - நிரைகோற் குறுந் தொடி தந்தை யூரே." எனவரும்.

அவ்வினைக்கு இயல்பே = அத்தோழியிற் கூட்டத்திடத்துத் தலைவன்கூற்று நிகழ்வதாகிய இலக்கணமாம். எ-று. (௪௨)

௧௦௪. பாங்க னிமித்தம் பன்னிரண் டென்ப.

இது மேற் பாங்கிநிமித்தங் கூறிய அதிகாரத்தானே பாங்க னிமித்தங் கூறுகின்றார். வாயில்பெட்பினுமென்ற பாங்கனிமித் தம் போலாது இது வேறுபடக்கூறலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது; என்னை? பாங்கன் தலைவியை எதிர்ப்பட்டு வந்த தலைவற்கு உரைத்தலன்றிக் காளையரொடு கன்னியரை உலகியலாற் புணர்க்குமாறு புணர்க்குந் துணையாகலின். (இ-ள்.) அகனைந்திணையும் அல்லாதவழிப் பாங்கன்கண்ணவாகிய நிமித்தம் பன்னிருபகுதியவாம். எ - று. எண்வகை மணத்தினும் இடைநின்று புணர்க்கும் பார்ப்பான் இருவகைக் கோத்திரம் முதலியனவுந் தானறிந்து இடைநின்று புணர்த்தல் வன்மை அவர்புணர்தற்கு நிமித்தமாதலின் அவை அவன்கண்ணவெனப்படும். இவனைப் பிராசாபதியென்ப. நிமித்தமுங் காரணமும் ஒன்று. காரணம் பன்னிரண்டெனவே காரியமும் பன்னிரண்டாம்: அவை எண்வகை மணனுமாதலின் அவற்றைக் கைக்கிளை முதலிய ஏழு திணைக்கும் இன்னவாறு உரியவென வருகின்ற சூத்திரங்களாற் பன்னிருபகுதியும் அடங்கக் கூறுப. அவ்வாற்றானே பிரமம் பிராசாபத்தியம் ஆரிடந் தெய்வம் எனவும், முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் எனவும், அசுரம் இராக்கதம் பேய் எனவும் பன்னிரண்டாம். பிரமம் முதலிய நான்கற்கும் பாங்கன் ஏதுவாகலின் இவ்வாறு பிரமசரியங் காத்தானெனவும், இவன் இன்ன கோத்திரத்தான் ஆகலின் இவட்கு உரியனெனவும், இவளை இன்னவாற்றாற் கொடுக்கத் தகுமெனவும், இன்னானை ஆசாரியனாகக் கொண்டு வேள்விசெய்து மற்றிக்கன்னியைக் கொடுக்கத் தகுமெனவுஞ் சொல்லிப் புணர்க்குமென்பது. இனி யாழோர் கூட்டத்துள் ஐந்திணையுமாயிற் பாடலுட் பயின்ற வகையானே முதல் கரு உரிப்பொருள் வரையறைபற்றி முறைசிறந்து வருதலும் பெயர்கொளப் பெறுமையும் உடையவன்றே, அவ்வாறன்றி ஈண்டுக் கொள்கின்ற யாழோர்கூட்டத்து ஐந்திணையுமாயின் அவ்வவநிலத் தியல்பானும் பிறபாடையொழுக்கத்தானும் வேறுபட்ட வேறுபாடுபற்றியுஞ் சுட்டியொருவர்ப் பெயர்கொடுத்தும் வழங்குகின்ற

உலகியலான் எல்லாரும் இடைநின்று புணர்ப்பாருள்வழி அவ்வநிமித்தங்களும் வேறுவேறாகி வரும் பாங்கன் நிமித்தங்களையுடைய எனப்பட்டன. இங்ஙனம் ஐந்திணைப்பகுதியும் பாங்கனிமித்தமாங்கால் வேறுபடுமெனவே புலனெறிவழக்கிற்பட்ட இருவகைக் கைகோளும் போலா இவையென்பதூஉம், அவ்வவநிலத்தின் மக்கட்குத் தக்க மன்றலும் வேறாகலின் அவர்க்கும் பாங்கர் உளரென்பதூஉம், இவ்வாற்றான் எணவகைமணனும் உடனோதவே இவையும் ஒழிந்த எழுவகைமணனும்போல அகப்புறமெனப்படுமென்பதூஉங் கொள்க. இனி அசுரத்தன்மையாளைக் குரவர் இன்னவாறு கொடுப்பர் நீயுஞ் சேறியென்று ஒருவன் பாங்குபடக் கூறலும், இவளை அவட்குக் காட்டி இவன் இன்னனென்று ஒருவன் இடைநின்று கூறலும் உண்மையின் அதுவும் பாங்கனிமித்தமுடைத்து. இராக்கதத்திற்கும் இத்தன்மையாள் இன்னுழி இருந்தாளென்று பாங்காயினார் கூறக்கேட்டு ஒருவன் வலிதிற்பற்றிக் கோடலின் இதுவும் பாஙகனிமித்தமுடைத்து. பேய்க்கும் பொருந்துவது அறியாதான இடைநின்று புணர்ப்பின் அதற்கும் அது நிமித்தமாம். இப்பன்னிரண்டிற் றொன்மையுந் தோலுமென்ற வனப்பினுள வருவன. (கரு)

கoரு. முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே
பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே.

மேற் பன்னிரண்டெனப்பட்ட எண்வகை மணத்தினுள் ஏழனை எழுதிணையுள் இன்னதிணைப்பாற்படும் என்கின்றது. (இ-ள்.) முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே = இதற்கு முன் நின்ற அசுரமும் இராக்கதமும் பைசாசமுங் கைக்கிளையென்றற்குச் சிறந்திலவேனுங் கைக்கிளையெனச் சுட்டப்படும்: பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே = பின்னர் நின்ற பிரமம் பிராசாபத்தியம் ஆரிடந் தெய்வமென்னும் நான்கினையும் பெருந்திணை தனக்கு இயலபாகவே பெறுமெனவுங் கூறப்படும். எ-று. மன்றல் எட்டு என்றவரலாற்று முறைபானே வாளாது பன்னிரண்டென்றார் என்பதே பற்றி ஈண்டும் அம்முறையானே இடவகையான் முன்னைய மூன்றும் பின்னர் நான்குமென்றார்; எனவே, இனிக் கூறும் யாழோர் மேனை ஐந்தும் ஒன்றாக அவ்விரண்டற்கும் இடையதெனப்படுவதாயிற்று. வில்லேற்றியாயினுங் கொல்லேறுதழீஇயாயினுங் கொள்வலென்னும் உள்ளத்தனுவான் தலைவனேயாதலின் அதனை முற்படப்பிறந்த அன்புமுறைபற்றி ஒருதலைக்காமமாகிய கைக்கிளை

யென்றார். இராக்கதம் வலிதின் மணஞ்செய்தலாதலின் அதுவும் அப்பாற்படும்; பேயும் அப்பாற்படும். இவை முன்னைய மூன்றுங் கைக்கிளையாயவாறு. காமஞ்சாலா இளமையோள்வயிற் கைக்கிளை சிறப்புடைத்தென்றற்குப் புல்லித்தோன்றுமெனக் கூறி இதனை வாளாது குறிப்பென்றார்; ஆண்டுப் பிற்காலத்தன்றிக் காட்சிக்கண் மணம் அதற்கின்மையின் ஈண்டு மணங் கூறும்வழிக் கூறாது அகத்திணையியலுட் கூறினார். ஏறிய மடன்மா முதலியவற்றைப் பெருந்திணைக்குறிப்பேயெனக் கூறி ஈண்டுப் பெருந்திணை பெறுமேயென்றார், அவை சிறப்பில இவை சிறப்புடையவென்றற்கு. இந்நான்கும் ஒருதலைக்காமம்பற்றி நிகழாமையானும் ஒருவனொடொருத்தியை எதிர்நிறீஇ அவருடம்பாட்டோடு புணர்க்குங் கந்தருவமன்மையானும் அவற்றின் வேறாகிய பெருந்திணையாம். (௧௪)

௧௦௫. முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பி னைந்நிலம் பெறுமே.

இது அப்பன்னிரண்டனுள் இடையதாய் ஒழிந்த ஐந்துங் கூறுகின்றது. (இ-ள்.) முதலொடு புணர்ந்த யாழோர் மேன = மேற்கூறிய நடுவணைந்திணையுந் தமக்குமுதலாக அவற்றோடு பொருந்திவருங் கந்தருவமார்க்கம் ஐந்தும்: தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே = கெடலருஞ் சிறப்பொடு பொருந்திய ஐவகை நிலனும் பெறுதலின் அவை ஐந்தெனப்படும். எ-று. எனவே, முதற்கந்தருவம் ஐந்துமேயன்றி அவற்றோடு பொருத்தமுடைய கந்தருவம் இவ்வைந்துமென வேறுபடுத்தினார். இவை அப்பன்னிரண்டனுட் கூறுநின்ற ஐந்தும் முதலொடு புணர்ந்தவென்றே ஒழியாது பின்னும் யாழோர்மேன வென்றார் இவையுங் கந்தருவமே என்றற்கு. இவையும் ஒருவன் ஒருத்தியெதிர்நின்று உடம்படுத்தலொப்புமையுடைய கெடலருஞ் சிறப்பெனவே முதல் கரு உரிப்பொருளானுங் களவென்னுங் கைகோளானும் பாங்கி புணர்த்தலின்மையானும் இலக்கணங் குறைப்பட்டதேனுஞ் சுட்டியொருவர்ப் பெயர்கொள்ளப்பட்டுக் கற்பியலாகிய இல்வாழ்க்கையும் பெற்றுவருதற் சிறப்புடைய இவையும் ஐந்நிலம் பெறுதலேயன்றி யென்றானும். இது புலனெறியன்றி உலகியலாகலின் உலகியலாற் பாலைநிலனும் ஆண்டுவாழ்வார்க்கு மன்றலும் உளதாகலிற் பாலையுங் கூறினார். எனவே, ஐம்புலத்து வாழ்வார் மணமுஞ் செய்யுளுட் பாடியக்கால் இழுக்கின்றென்றார். (௧௫)

௧௦௬. இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்துங்
காணா வகையிற் பொழுதுநனி யிகப்பினுந்
தானகம் புகாஅன் பெயர்த லின்மையிற்
காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி
வேட்கையின் மயங்கிய கையறு பொழுதினும்
புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்
வேளா ணெதிரும் விருந்தின் கண்ணும்
வாளா ணெதிரும் பிரிவி னானும்
நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்
வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய வெதிரும்
வரைவுடன் படுதலு மாங்கதன் புறத்துப்
புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇக்
கிழவோன் மேன வென்மனார் புலவர்.

இது மேற் தலைவற்குரிய கிளவிகூறிப் பாங்கனிமித்தம் அவன்கண் நிகழும் பகுதியுங் கூறி அம்முறையானே தலைவிக்குரிய கிளவி கூறுகின்றது. (இ-ள்) இருவகைக்குறி பிழைப்பு ஆகிய இடத்தும் = இரவுக்குறியும் பகற்குறியும் பிழைத்தவிடத்தும் உம். "முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக் - கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக் - கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல் - வயவுப்பெடை யகவும் பானாட் கங்குன் - மன்றம் போழு மினமணி நெடுந்தேர் - வாரா தாயினும் வருவது போலச் - செவிமுத லிசைக்கு மரவமொடு - துயிறுறந் தனவாற் றோழியென் கண்ணே." "கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே - யெம்மி லயல தேழி லும்பர் - மயிலடி யிலைய மாக்குர னொச்சி - யணிமிகு மென்கொம் பூழ்த்த - மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே." "ஏறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறுன் - மாறினே னெனக்கூறி மனங்கொள்ளுந் தானென்ப - கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரனொச்சிப் - பாடோர்க்குஞ் செவியோடு பைதலேன் யானக." எனவரும். "இருள்வீ நெய்த லிதழகம் பொருந்திக் - கழுதுகண் படுக்கும் பானாட் கங்கு - லெம்மினு முயவுதி செந்தலை யன்றில் - கானலஞ் சேர்ப்பன் போல நின்பூ - நெற்றிச் சேவலும் பொய்த்தன்றோ குறியே." இது தன்னுட்கையா

றெய்திடுகிளவி. "புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணே போற் - றுன்ப முழவாய் துயிலப் பெறுதியா - லின்களவாய் நெய்தானீ யெய்துங் கனவினுள் - வன்கணுர் கானல் வரக்கண் டறிதியோ." எனவும் இவை குறிபிழைத்துழித் தன்வயினுரிமையும் அவன்வயிற் பரத்தைமையும்படக் கூறியனவாம். குறிபிழைத்தலாவது புனலொலிப்படுத்தலும் புள்ளெடுப்புதலும் முதலியன. குறியெனக் குறித்தவழி அவனுனன்றி அவை வேறோர் காரணத்தானே நிகழ்ந்துழி அதனைக் குறியென நினைந்துசென்று அவை அவன் குறியன்மையின் அகன்றுமாறுதலாம். பகற்குறிக்கு உதாரணம் வந்துழிக்காண்க.

காணு வகையிற் பொழுது நனி இகப்பினும் = குறிவழிச் செல்லுந் தலைவனை இற்றைஞான்றிற் காணடல் அரிதென்று கையறுவதோராற்றுற் பொழுது சேட்கழியினும்: என்றது, தாய் துஞ்சாமை ஊர்துஞ்சாமை காவலர்கடுகுதல் நிலவுவெளிப்படுதல் நாய்துஞ்சாமை போல்வனவற்றுற் தலைவன்குறியின்கண் தலைவி வரப்பெறுமல் நீட்டித்தலாம். உம். "இரும்பிழி மகாஅரிவ் வழுங்கன் மூதூர் - விழவின் றாயினுந் துஞ்சா தாகு - மல்லலாவண மறுகுடன் மடியின் - வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள் - பிணிகொ ளருஞ்சிறை யன்னை துஞ்சிற் - றுஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவ - ரிலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று - வலஞ்சுரித் தோகை ஞாளி மருளு - மரவவாய் ஞமலி குரையாது மடியிற் - பகலுரு வுறழ நிலவுகான்று விசும்பி - னகல்வாய் மண்டில நின்றுவிரி யும்மே- திங்க ளகல்சேர்பு கனையிருண் மடியி- னில்லெலி வல்சி வல்வாய்க் கூகை-கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும் - வளைகட் சேவல் வாளாது மடியின் - மனைச்செறி கோழி மாண்குர லியம்பு - மெல்லா மடிந்த காலத் தொருநா- ணில்லா நெஞ்சத் தவர்வா ரலரோ - யதனல், அரிபெய் புட்டிலார்ப்பப் பரிசிறந் - தாதி போகிய பாய்பரி நன்மா - நொச்சி வேலித் தித்த னுறந்தைக் - கன்முதிர் புறங்காட் டன்ன - பன்முட் டின்றாற் றோழிநங் களவே." "கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்- லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை - யெல்லி வருநர் களவிற்கு - நல்லை யல்லை நெடுவெண் ணிலவே." "வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்- கேள்வரும் போழ்தி லெழாஅல்வாழி வெண்டிங்காள் - கேள்வரும் போழ்தி லெழாதாய்க் குறுஅலியரோ - நீள்வரி நாகத் தெயிறேவாழி வெண்டிங்காள்" இதுவும் அது.

தானகம் புகாஅன் பெயர்தலின்மையிற் காட்சி ஆசையிற் களம்புக்குக் கலங்கி வேட்கையின் மயங்கிய கையறு பொழுதினும் = அங்ஙனங் காணுவகையிற் பொழுது நனியிகந்து தலைவி குறிதப்பியக்காலுந் தலைவன் குறியிடம் புகுந்தல்லது பெயரானென்பது தான் அறியுமாதலின் ஆண்டுப் புகுந்தவன் தான் வந்து நீங்கினமை அறிதற்கு ஓர் குறி செய்தன்றி வாளாது பெயரானன்றே அக்குறிகாணுங் காட்சிவிருப்பினாற் தலைவி பிற்றைஞான்று விடியலிற்சென்று ஆண்டைக் குறிகண்டு கலங்கி அவனை எதிர்ப்படுதல் வேட்கையளாகிச் செய்வதறியாது மயக்கத்தோடு கையறவு எய்தும்பொழுதின்கண்ணும்: தான் என்றது தலைவனை. இரவுக்குறியினை அகமென்றார், இரவுக்குறி எயிலகத்தது என்பதனால். குறியிற்சென்று நீங்குவனெனவே காட்சி அவன்மேற்றன்றிக் குறிமேற்றாம். குறி மோதிரம் மாலை முத்தம் முதலியன கோட்டினுங் கொடியினும் இட்டுவைத்தனவாம்; இவை வருத்தத்திற்கு ஏதுவாம். இது விடியல் நிகழுமெனறற்குப் பொழுதென்றான்; எனவே காண்பன விடியலிற் காணுமென்றார். மயங்கும் என்றதனாற் தோழியும் உடன்மயங்கும். அது "இக்காந்தண மென்முகைமேல் வண்டன்றஃ திம்முகையிற் - கைக்காந்தண் மெல்விரலாய் காணிதோ - புக்குச்-செறிந்ததுபோற் றோன்றுந் தொடுபொறி யாம்பண் - டறிந்ததொன் றன்ன துடைத்து."

புகாஅக் காலைப் புக்கு எதிர்ப்பட்டுழிப் பகாஅ விருந்தின் பகுதிக்கண்ணும் = உண்டிக்காலத்துத் தலைவியில்லத்துத் தலைவன் புக்கெதிர்ப்பட்டவழி நீக்கி நிறுத்தாத விருந்து ஏற்றுக்கொள்ளும் பகுதிக்கண்ணும்: எனவே, மனையகம் புகுதற்கு ஒவ்வாதமிக்க தலைவன் புகுந்தால் இஃதொன்றுடைத்தெனத் தேராது தாய் அவனை விருந்தேற்று நீக்கி நிறுத்தற்பகுதியுந் தழீஇயினவாறாயிற்று. "புகாக்காலமாதலிற் பகாவிருந்தென்றான்; விடியற்காலமாயிற் தலைவன் புகானெனவும் புகாக்காலத்துப் புக்கஞான்றாயின அவர் விருந்தேற்றுக்கோடல் ஒருதலையென்று புகுமென்றுங் கொள்க. தலைவி காட்சியாசையிற் கலங்கிய அதற்கேற்பத் தலைவற்குங் காட்சியாசை கூறிற்று; அது "சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினாடு - மணற்சிற்றில் காலிற் சிதையா வடர்ச்சிய - கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி - நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோநா - ளன்னையும் யானு மிருந்தேமா வில்லிலே - யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை-யடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழா-யுண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்-தன்னை யறி

யாது சென்றேன்மற் றென்னை-வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்-டன்னா யிவனொருவன் செய்தது காணென்றேனா-வன்னை யலறிப் படர்தரத் தன்னையா - னுண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்- தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்-கடைக்கண்ணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ் - செய்தானக் கள்வன் மகன்." இது புகாக்காலத்துப் புக்கானை விருந்தேற்றுக் கொண்டமை இன்னொருகாலத்துத் தலைவி தோழிக்குக் கூறிய வாறு காண்க. "அன்னை வாழ்க பலவே தெண்ணீ - ரிருங்கடல் வேட்ட மெந்தை புக்கெனத் - தார்மணி நெடுநதேர் நீவி யானுமோ - ரொல்லமை விருந்தினே னென்ற - மெல்லம் புலம்பனைத் தங்கென் றோளே." இது தோழிகூற்றுமாம். ஒன்றிய தோழி யென்றதனாற் தோழிகூற்று வந்துழிக் காண்க. "மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை-புன்றலை பசுங்காய் தின்றதன் றப்பிற்-கொன்பதிற் றொன்பது களிற்றோ டவணிறை - பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான் - பெண்கொலை புரிந்த நன்னன் போல - வரையா நிரயத்துச் செலியரோ வன்னை - யொருநாள் நகைமுக விருந்தினன் வந்தெனப் - பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே." இது புகாக்காலத்துத் தலைமைமிக்க தலைவன் புக்க தற்கு விருந்தேலாது செவிலி இரவுந் துயிலாதாளைத் தலைவி முனிந்து கூறியது.

வேளாண் எதிரும் விருந்தின்கண்ணும் = அங்ஙனம் விருந்தாதலேயன்றித் தலைவி வேளாண்மைசெய்ய எதிர்கொள்ளக் கருதுதல் காரணத்தாற் தோழி அவனை விருந்தேற்றுக் கோடற்கண்ணும்: என்றது, தலைவி அவற்கு உபகாரஞ்செய்யக் கருதி அதனைக் குறிப்பாற் கூறத் தோழி அவனை விருந்தாய்த் தங்கென்னும். உம். "நாள்வலை முகந்த கோள்வல பரதவர் - நுணங்குமண லாங்க ணுணங்கப் பெய்மார் - பறிகொள் கொள்ளையர் மறுக வுக்க-மீனார் குருகின் கானலம் பெருந்துறை - யெல்லை தண்பொழிற் சென்றெனச் சேஎஇ-யாதோ பூட்டயர் வேஎயார் கோஒற்-செறி தொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்- செல்லினி மடநதைநின் றோழியொடு மனையெனச் - சொல்லிய வளவைத் தான்பெரிது கலிழ்ந்து - தீங்கா யினளிவ ளாவயிற் றங்காது - நொதுமலர் போலப் பிரியிற் கதுமெனப் - பிறிதொன் றாகலு மஞ்சுவ லதனாற்-சேணின வருவோய் போலப் பேணுப் - பெருங்கலி யாணரொடு சிறுகுடித் தோன்றினர் - வல்லெதிர் கொண்டு மெல்லிதின் வினைஇத் - துறையுமா றன்று பொழுதே சுறவு - மோதமலி கடலின்

மாறு யினவே - யெல்லின்று தோன்றல் செல்லா திமென-வெமர் குறை கூறத் தங்கி யேமுற - விளையரும் புரவியு மின்புற நீயு-மில்லுறை நல்விருந் தாகுத- லொல்லுதும் பெருமநீ நல்குதல் பெறினே." இதனுட் டான்பெரிது கலுழ்ந்து தீங்காயினளெனவே அக்குறிப்புத் தலைவன் போகாமற் தடுப்பக் கூறியதென்று உணர்ந்து தோழி கூறினாள்.

வாளாண் எதிரும் பிரிவினானும் = வாளாண்மை செய்தற்கு ஒத்த பிரிவு தோன்றியவழியும்: ஆண்டுத் தலைவிமேற்றுக் களவி மூவகைப்பிரிவினும் பகைவயிற்பிரிவை விதந்தோதி அதிகாரப் பட்டு வருகின்ற களவினுள் அவை நிகழப்பெறு இதுவாயின் வரைவிடைவைத்துப் பிரியவும்பெறும் அரசர்க்கு இன்றியமையாத பிரிவாகலின் என்பது கருத்து. ஓதலுந் தூதும் வரைவிடைவைத்துப் பிரிவிற்குச் சிறந்திலவென்றுணும். இப்பிரிவு அரசர்க்கு உரித்தென்பது தானே சேறலும் என்னுஞ் சூத்திரத்தாற் பெறுதும். வாளாண்மைக்கு ஏற்ற பிரிவெனவே முடியுடை வேந்தரேவலிற் பிரியும் அரசர்கண்ணது இப்பிரிவென்க. சிறுபான்மை அவ்வேந்தற்கு உரித்து, "வெளிப்படை தானே" என்பதனுள் இப்பிரிவில்லை என்பராதலின். அது "பகைவென்று திறைகொண்ட டாய்திண்டேர் மிசையவர் - வகைகொண்ட செம்மனும் வனப்பார விடுவதோ- புகையெனப புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா-முகை வெண்ப னுதிபொரா முற்றிய கடும்பனி." இதனுட் பனியெதிர் பருவங் குறிஞ்சியாகலிற களவிற் பிரிந்தான் வாளாணெதிரும் வென்றி தோழிக்குத் தலைவி கூறியவாறு. இது அவன்வயிற் பரத்தைமை கருதாதது.

நாணு நெஞ்சு அலைப்ப விடுத்தற்கண்ணும் = தலைவிக்கு இன்றியமையாத நாணுத்தான் அவள் நெஞ்சினை அலைத்தலின் அவள் அந்நாணினைக் கைவிடுதற்கண்ணும்: அது உடன்போக்கினும் வரைவுகடாவும் வழியும் வேட்கை மீதூர்ந்து நாண்துறந்துரைத்தல் போல்வன. "அளிதோ தானே நாணே நம்மொடு - நனிநீ டுழந்தன்று மன்னே யினியே - வான்பூங் கரும்பி னோங்குமணற் சிறுசிறை - தீம்புன னெரிதர வீந்துக் காங்குத் - தாங்கு மளவை தாங்கிக் - காம நெரிதரக் கைநில் லாதே." இது உடன்போக்கு வலித்தமையின் நாண்துறந்து கூறியது.

வரைதல் வேண்டித் தோழி செப்பிய புரைதீர் களவி புல்லிய எதிரும் = வரைதல்விரும்பினள் தோழி தலைவற்கு வரைவு

கடாய்க் கூறிய புரைதீர் கிளவியைத் தலைவி பொருந்திநின்றே இயற்பழித்தற்கு மறுத்தாள்போல் நிற்கும் எதிர்மறையையும்: புரைதீர்கிளவி தலைவனுயர்பிற்கு ஏலாது இயற்பழித்து உரைக்குங்கிளவி. அது, "பாடுகம் வாழிதோழி" என்னுங் குறிஞ்சிக்கலியுள் "இலங்கு மருவித் திலங்கு மருவித்து - வானி னிலங்கு மருவித்தே தானுற்ற - சூள்பேணான் பொய்த்தான் மலை." எனத் தோழி இயற்பழித்து வாய்பட்டான் வரைவுகடாவ அதனை உடம்பட்டுப் பழித்தற்கு உடம்படாதாள் "பொய்த்தற் குரியனோ பொய்த்தற் குரியனோ - வஞ்சலோம் பென்றானைப் பொய்த்தற் குரியனோ - குன்றக நன்னாடன் வாய்மையிற் பொய்தோன்றிற் - றிங்களுட் டீத்தோன்றி யற்று." எனத் தலைவி இயற்படமொழிந்து எதிர் மறுத்தவாறு காண்க. "அருவி வேங்கைப் பெருவரை நாடற்-கியானெவன் செய்கோ வென்றி யானது - நகையென வுணரேனாயி - னென்னகுவை கொன்னுதலீயே." இதுவும் இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்படமொழிந்தது.

வரைவு உடன்படுதலும் = தலைவற்குத் தலைவி தமர்வரைவுடம்பட்டதனைத் தலைவி விரும்புதலையும்: உம். "இலையமர் தண்குளவி வேய்ந்த பொதும்பிற் - குலையுடைக் காந்த ளினவண் டிமிரு-மலையக நாடனும் வந்தான்மற றன்னை - யலையு மலைபோயிற் றின்று." "ஒறுப்ப வோவலர் மறப்பத் தெறலர் - தமிய ருறங்குங் கௌவை யின்று-யினியது கேட்டின் புறுகவிவ் வூரே முனாஅதியானையுண் குருகின் கானலம்-பெருந்தோட்ட மள்ளரார்ப்பிசை வெரூஉங் - குட்டுவன் மாந்தை யன்னவெம் - குழைவிளங் காய்நுதற் கிழவனு மவனே." தமரான் ஒறுக்கப்பட்டு ஓவாராய்த் துயருழத்தல் ஆகாதென ஆற்றுவிக்குஞ் சொற்களான் மறத்துரைப்பவுந் தேறுராய்த் தனித்து இருப்பார் உறக்கங் காரணமாக எழுந்த கௌவை கேளாது வரைந்தெய்திய மாற்றங் கேட்டு இவ்வூரும் இன்புறுக என்பதாம்.

ஆங்கதன் புறத்துப் புரைபடவந்த மறுத்தலொடு தொகைஇ = அவன் வரைவுவேண்டினவிடத்து அவ்வரைவு புறத்ததாகியவழித் தலைவி தன்னுயர்பு உண்டாகத் தோன்றியது மறுத்தலோடே முற்கூறியவற்றைத் தொகுத்து: அதன்புறமெனவே அதற்கு அயலாகிய நொதுமலர் வரைவாயிற்று. தலைவி தன்குடிப்பிறப்புங் கற்பும் முதலிய உயர்ச்சிக்கு ஏற்ப அதனை மறுத்துத் தலைவன் வரையுமாறு கூறுமெனத் தோழிக்குக் கூறுமென்றற்குப் புரைபட வந்த மறுத்தலென்றார். "வாரி நெறிப்பட்

டிரும்புறந் தாழ்ந்த - வோரிப் புதல்வ னழுதன னென்பவோ வோரும் புதுவ மலர்தைஇ யெமரொன் பெயரால் - வதுவை யயர்வாரைக் கண்டு விலக்கி மதியறியா - வேழையை யென்றகல நக்குவந் தீயாய்நீ- தோழி யவனுழைச் சென்று ; சென்றியா னறிவேன் கூறுக மற்றி னிச் - சொல்லறியாப் பேதை மடவை மற்றெல்லா - நினக்கொரூஉ மற்றென் னகல்; அகலநீ டின்று நினக்கும் - வருதரக் காண்பா யனைத்தாகச் சொல்லிய - சொல்லும் வியன்கொளக் கூறு; தருமணற் றாழப்பெய் தில்பூவ லூட்டி - யெருமைப் பெடையோ டெமரீங் கயரும் - பெருமண மெல்லாந் தனித்தே யொழிய - வரிம ணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த - திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த - வொருமணந் தானறியு மாயி னெனைத்துந் - தெருமரல் கைவிட் டிருக்கோ வலர்ந்த - விரிநீ ருடுக்கை யுலகம் பெறினு - மரு நெறி யாயர் மகளிர்க் - கிருமணங் கூடுத லில்லியல் பன்றே." என வரும். "மள்ளர்குழீஇயவிழவு" என்பதுமாம் இச்சூத்திரத்து உருபும் எச்சமுமாயவற்றைக் கிழவோண்மேன என்பதனோடு முடித்து முற்பிறகுக் கிளவியென ஒருபெயர் வெளிப்படுத்து முடிக்க. புல்லிய எதிரையும் உடன்படுதலையும் மறுத்தலுடன் தொகுத்தது.

கிழவோள் மேன என்மனார் புலவர் = தலைவியிடத்தன கிளவியென்று கூறுவர் புலவர்—எ-று. (கஎ)

க0அ. காமத் திணையிற் கண்ணின்று வரூஉ
நாணு மடனும் பெண்மைய வாதலிற்
குறிப்பினு மிடத்தினு மல்லது வேட்கை
நெறிப்பட வாரா வவள்வயி னான.

இஃது உள்ளப்புணர்ச்சிக்கு உரியவாறு மெய்யுறுபுணர்ச்சிக் கண்ணும் நிகழுமென்ற நாணும் மடனுங் குறிப்பினும் இடத்தினும் வருமெனக் கூறுதலின் "அச்சமு நாணும்" என்பதற்குப் புறனடையாயிற்று. இதனை ஈண்டுக் கூறினான், இடத்தின்கண்வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவருமென்பதூஉம் அது கூற்றின்கண் வருமென்பதூஉங் கூற்று நிகழ்கின்ற இவ்விடத்தே கூறவேண்டுதலின். எனவே, இதுமுதலிய சூத்திரம் மூன்றும் முன்னர்த் தலைவிக்குக் கூற்றுநிகழுமென்றற்குக் கூற்றுநிகழுங்கால் நாணும் மடனும் நீங்கிக் கூறும் என்று அக்கூற்றிற்கு இலக்கணங் கூறினவேயாயிற்று. (இ-ள்.) அவள்வயின் ஆன நாணும் மடனும் பெண்மைய ஆதலின் = தலைவியிடத்து உளவாகிய நாணும் மட

னும் பெண்மைப்பருவத்தே தோன்றுதலையுடையவாதலின் : காமத் திணையிற் கண்ணின்று குறிப்பினும் வரூஉம் = அப்பருவத்தே தோன்றிய காமவொழுக்கங் காரணமாக அவை கண்ணின்கணின்று குறிப்பினும் வரும் : வேட்கை நெறிப்பட இடத்தினும் வரூஉம் = அன்றி வேட்கை தன்றன்மை திரியாது வழிப்படுதலாலே களவொழுக்கத்திற் கருமநிகழ்ச்சிக்கண்ணும் வரும் : அல்லது வாரா = அவ்விரிடத்துமல்லது அவை வாரா.—எ-று. இயற்கைப்புணர்ச்சிக்கண் உரியவாகக் கூறும் பன்னிரண்டு மெய்ப்பாட்டானுங் குறிப்பின்கண் நாணும் மடனும் நிகழ்ந்தவாறுணர்க. "ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங் - கருமநிகழ்ச்சி யிடமென மொழிப." என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தான் இடமென்றதனைக் கருமநிகழ்ச்சி என்றுணர்க. அஃதாவது இடந்தலைப்பாடும் பாங்கொடுதழாஅலுந் தோழியிற்புணர்வுமாம். இவற்றின்கண்ணும் நாணும் மடனும் நிகழுமென்றான், இனித் தோழியிற்புணர்வின்கண்வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவருமென மேலிற் சூத்திரத்தாற் கூறுகின்றான். (௧௭)

௧௦௯. காமஞ் சொல்லா நாட்ட மின்மையி
னேமுற விரண்டு முளவென மொழிப.

இது கருமநிகழ்ச்சிக்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவருமென்கின்றது. (இ-ள்.) சொல்லாக் காமம் இன்மையின் = கருமநிகழ்ச்சியிடத்துக் கூற்று நிகழாத காமம் புலனெறிவழக்கின்கணின்மையின் : இரண்டும் ஏமுற நாட்டம் உளவெனமொழிப = முற்கூறிய நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவரநாட்டுதல் உளவென்று கூறுவர் புலவர்.—எ-று. என்றது, தோழியிற் கூட்டத்துத் தலைவி கூற்று நிகழ்த்துவளென்பதூஉம் நிகழுங்கால் நாணும் மடனும் பெரும்பான்மை கெட்டு அக்கூற்று நிகழுமென்பதூஉம் அங்ஙனங் கெடுதலையும் முந்துநூற்கண் ஆசிரியர் நாட்டுதல் உளவென்பதூஉங் கூறியவாறாயிற்று. "தேரோ முற் றன்று நின்னினும் பெரிதே - பேரேமுற் றாய்போல முன்னின்று விலக்குவாய்" என்றாற்போல மயக்கம் உணர்த்திற்று. இனி நாணும் மடனுங் கெட்டகூற்றுத் தோழியை நோக்கிக் கூறுமென மேற்கூறுகின்றான்.

௧௧௦. சொல்லெதிர் மொழித லருமைத் தாகலி
னல்ல கூற்றுமொழி யவள்வயி னான.

இது நாணும் மடனும் பெரும்பான்மை நிகழாத கூற்றுத் தோழிக்குத் தலைவி கூறுமென்கின்றது. (இ-ள்.) எதிர் சொல் =

அங்ஙனம் நாணும் மடனும் நீங்கிய சொல்லை : அவள் வயின் மொழிதல் அருமைத்து அல்ல ஆகலின் = தோழியிடத்துக்கூறுதல் அருமையுடைத்தல்லவாகையினாலே : கூற்றுமொழி ஆன = குறிப்பானன்றிக் கூற்றாற் கூறும் மொழி தலைவிக்குப் பொருந்தின—எ-று. எதிர்தல் தன்றன்மை மாறுபடுதல். "ஒன்றிய தோழியொடு" என அகத்திணையிற் கூறுதலானுந் "தாயத்தி னடையா" எனப் பொருளியலிற் கூறுதலானும் அவள்வயின் நாணும் மடனும் நீங்கிய சொல்லைக் கூறுதலும் பொருந்துமென்றான் : அவை முற்காட்டிய உதாரணங்களுட் "கூடுதல்வேட்கையாற் குறிபார்த்து" எனவும், "வளைமுன்கை பற்றி நலியத தெருமந்திட்டு" எனவும், "காமநெரிதரக் கைநில்லாதே" எனவுங் கூறியவாற்றானும் மேற்கூறுகின்ற உதாரணங்களானும் நாணும் மடனும் நீங்கிக் கூற்றுநிகழ்ந்தவாறுணர்க. "சூத்திரத் துப்பொரு ளின்றியும * * * படுமே" என்பதனான் இவ்விலக்கணம் பெறுதற்கு இம்மூன்று சூத்திரத்திற்கும் மாட்டுறுப்புப்படப் பொருள் கூறினும். இனிக் கூற்று நிகழுங்கால் நாணும் மடனும் பெண்மையவாதலிற் குறிப்பினும் இடத்தினுமன்றி வேட்கைநெறிப்பட வாராவென்று பொருள்கூறிற் காட்டிய உதாரணங்கட்கு மாறுபாடாகலானுஞ் சான்றோர் செய்யுட்களெல்லாங் குறிப்பும் இடனுமன்றிப் பெரும்பான்மை கூற்றாய் வருதலானும் ஆசிரியர் தலைவன்கூற்றுந் தலைவிகூற்றுந் தோழிகூற்றுஞ் செவிலிகூற்றுமெனக் கூற்றுஞ் சேர்த்து நூல்செய்தலானும் அது பொருளன்மையுணர்க. (கக)

ககக. மறைந்தவற் காண்ட றற்காட் டுறுத
னிறைந்த காதலிற் சொல்லெதிர் மழுங்கல்
வழிபாடு மறுத்தன் மறுத்தெதிர் கோடல்
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்
கைப்பட்டுக் கலங்கினு நாணுமிக வரினு
மிட்டுப்பிரி விரங்கினு மருமைசெய் தயர்ப்பினும்
வந்தவழி யெள்ளினும் விட்டுயிர்த் தழுங்கினு
நொந்துதெளி வொழிப்பினு மச்ச நீடினும்
பிரிந்தவழிக் கலங்கினும் பெற்றவழி மலியினும
வருந்தொழிற் கருமை வாயில் கூறினுங்
கூறிய வாயில் கொள்ளாக் காலையு
மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு
நினைத்தல் சான்ற வருமறை யுயிர்த்தலு

முயிராக் காலத் துயிர்த்தலு முயிர்செல
வேற்றுவரைவு வரினது மாற்றுதற் கண்ணு
நெறிபடு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்
பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி
யொருமைக் கேண்மையி னுறுகுறை தெளிந்தோ
ளருமை சான்ற நாலிரண்டு வகையிற்
பெருமை சான்ற வியல்பின் கண்ணும்
பொய்தலை யடுத்த மடலின் கண்ணுங்
கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்
வெறியாட் டிடத்து வெருவின் கண்ணுங்
குறியி னொப்புமை மருடற் கண்ணும
வரைவுதலை வரினுங் களவறி வுறினுந்
தமரதற் காத்த காரண மருங்கினுந
தன்குறி தள்ளிய தெருளாக் காலை
வந்தவன் பெயர்ந்த வறுங்கள னோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும
வழுவின்று நிலைஇய வியற்படு பொருளினும
பொழுது மாறும் புரைவ தன்மையி
னழிவுதலை வந்த சிந்தைக் கண்ணுங்
காமஞ் சிறப்பினு மவனளி சிறப்பினு
மேமஞ் சான்ற வுவகைக் கண்ணுந்
தன்வயி னுரிமையு மவன்வயிற் பரத்தையு
மன்னவு முளவே யோரிடத் தான.

இதனுட் தலைவிகூற்று நிகழ்த்துமாறு கூறுகின்றான் சில கூற்றுக்களுட் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும்பட நிகழ்த்தவும் பெறுமென்கின்றான். அவன்வயினெனவே தன்னென்றது தலைவியையாம், உரிமை, களவிலே கற்புக்கடம்பூண்டொழுகல்; எனவே, புலவியுள்ளத்தாளாகவும் பெறுங் களவினென்பது கருதிப் பரத்தையுமுள என்றான்; ஊடலும் உணர்த்தலும் வெளிப்பட நிகழாமையின் இவை புலவிப்போலி. பரத்தை, அயன்மை. அவன்கட் பரத்தைமையின்றேனுங் காதன்மிகுதியான் அங்ஙனங் கருதுதல் பெண்டன்மை. உம்மை எதிர்மறையாகலின் இவ்விரண்டும் இலவாதலே பெரும்பான்மை. (இ-ள்.) மறைந்து

அவற் காண்டல் = தலைவன் புணர்ந்து நீங்குங்காற் தன்காதன்மிகுதியால் அவன்மறையுந்துணையும் நோக்கிநின்று அங்ஙனம் மறைந்தவனைக் காண்டற்கண்ணுந் தோழிக்குக் கூற்றுக் கூறுதலுள : உம். "கழிப்பூக் குற்றுங் கானலல்கியும் - வண்டற் பாவை வரிமணலயர்ந்து - மின்புறப் புணர்ந்து மிலிவரப் பணித்துந் - தன்றுயர் வெளிப்பட லுறீஇ நந்துய - ரறியா மையி னயர்ந்த நெஞ்சமொடு - செல்லு மன்னோ மெல்லம் புலம்பன் - செல்வோன் பெயாபுறத் திரங்கி முன்னின்று - தகைஇய சென்றவெ னிறையினெஞ்ச - மெய்தின்று கொல்லோ தானே யெய்தியுங் - காமஞ்செப்ப நாணின்று கொல்லோ - வுதுவ காண வருகுவ தேரோ - குப்பை வெண்மணற் குவவுமிசை யானு - மெக்கர்த் தாழை மடல்வயி னானு - மாய்கொடிப் பாசடம்பு பரியவூர் பிழிபு - சிறுகுடிப் பரதவர் பெருங்கடன் மடுத்த - கடுஞ்செலற் கொடுந்திமில் போல - நிவந்துபடு தோற்றமொ டிகந்துமா யும்மே." அறியாமையின் அயர்ந்தநெஞ்சமொடு என்பது தன்வயினுரிமை ; இகந்துமாயும் என்பது அவன்வயிற் பரத்தைமை.

தற்காட்டுறுதல் = தன்னை அவன் காணாவகை நாணான் மறைந்து ஒழுகினுந் தன்பொலிவழிவினை அவற்குக் காட்டல் வேண்டுதற்கண்ணும் : அது "இன்ன ளாயின ளன்னுத லென்றவர்த் துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே - நன்றுமன் வாழி தோழி நம் படப்பை - நீர்வார் பைம்புதற் கலித்த - மாரிப் பீர்த்த லாசில கொண்டே." இன்னளாயினளென்றது தற்காட்டுறுதல். செப்புநர்ப் பெறினேயென்பதனாற் களவாயிற்று, கற்பிற்கு வாயில்கள் செப்புவார் உளராதலின். இதற்கு இரண்டும் உள.

நிறைந்த காதலிற் சொல் எதிர் மழுங்கல் = தலைவி காதன் மிகுதியாற் தலைவன் பரத்தைமையை எதிர்கூற நினைந்து கூற்றெய்தாது குறைபடுதற்கண்ணும் : உம். "பிறைவனப் பிழந்த நுதலும் யாழநி - னிறைவளை நில்லா வளையு மறையா - தூரலர் தூற்றுங் கௌவையு நாணிட் - டுரையவர்க் குரையா வாயினு மிரைவேட்டுக் - கடுஞ்சூல் வயவொடு கானலெய் தாது - கழனி யொழிந்த கொடுவாய்ப் பெடைக்கு - முடமுதிர் நாரை கடன்மீ னெய்யு - மெல்லம் புலம்பற் கண்டுநிலை செல்லாக் - கரப்பவுங் காப்பவுங் கைமிக் - குரைத்த தோழி யுண்கணீரோ." இது யாம் உரையாமாயினுங் கண் உரைத்தன என்றலின் இரண்டுங் கூறினாள்.

வழிபாடு மறுத்தல் = வருத்தமிகுதியாற் தலைவனை வழிபடுதலை மறுத்துக் கூறுமிடத்தும்: உம். "என்ன ராயினு மினிநினை வொழிக - வன்ன வாக வுரையற் றோழியா - மின்ன மாகத் துறந்தோர் நட்பென - மானு ருடுக்கை மலையுறை குறவ - ரறியா தறுத்த சிறியிலைச் சாந்தம் - வறனுற ருர முருக்கிப் பையென - மரம்வறி தாகச் சோர்ந்துக் காங்கெ - னறிவு முள்ளமு மவர்வயிற் சென்றென - வறிதா யிகுலையென் யாக்கை யினியவர் - வரினு நோய் மருந் தல்லார் வாரா - தவண ராகுக காதல ரிவணங் - காமம் படரட வருந்திய - நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே." "உள்ளி னுள்ளம் வேமே யுள்ளா - திருப்பினெம் மளவைத் தன்றே வருத்தி - வான்றோய் வற்றே காமஞ் - சான்றோ ரல்லா யாமரீஇ யோரே." எனவரும். "நீயுடம் படுதலின் யான்றர வந்து - குறிநின் றனனே குன்ற நாட - னின்றை யளவை சென்றைக்க சென்றி - கையுங் காலு மோய்வன வொழுகத் - தீயுறு தளிரி னடுங்கி - யாது மில்லையான் செயற்குரி யதுவே." இத்தோழி கூற்றே சென்றைக்கவெனறதனாற் தலைவி மறுத்தமை பெற்றும்.

மறுத்து எதிர்கோடல் = அங்ஙனம் வழிபாடு மறுத்த தலைவியே அவனை ஏற்றுக்கோடலை விரும்பியக்கண்ணும்: அது "கௌவை யஞ்சிற் காம மெய்க்கு - மெள்ளற விடினே யுள்ளது நாணே - பெருங்களிறு வாங்க முரிந்து நிலம்படர் - நாணுடை யொசிய லற்றே-கண்டிசிற் றோழியவ ருண்டவெ னலனே." இது நாணேயுள்ளது கற்புப்போமென்றலின் மறுத்தெதிர்கோடலாம்.

பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல் = தன்கற்பிறகு வரும் பழிதீர்ந்த தன்மையாற தன்கட் தோன்றிய மகிழ்ச்சியைச சிறிதே தோழிக்குத தோற்றுவித்தற்கண்ணும்: தலைவனாற் தோன்றிய நோயும் பசலையும் முருகனாற் தீர்நததென்று அவன் கேட்பிற் கற்பிற்குப் பழியாமாதலிற் பழியென்றார். உம். "அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதருங் - கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன் - மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்ல - லிதுவென வறியான் மறுவரற் பொழுதிற் - படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை - நெடுவேட் பேணத் தணிகுவ ளிவளென - முதுவாய்ப் பெண்டி ரதுவாய்க் கூறக் - களனன கிழைத்துக் கண்ணி சூடி - வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத் - துருவச் செந்தினை குருதியொடு தூஉய் - முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநா - ளார நாற வருவிடர்த் ததைந்த - சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக் - களிற்றிரை

சேரீஇப் பார்வ லொடுதூக்கி - னேறிந்தியங்கு மரபின் வயப்புலி போல - நன்மனை நெடுநகர்க் காவல ரறியாமைத் - தன்னசை யுள்ளத்து நன்னசை வாய்ப்ப - வின்றுயி லமுதெய்தி முயங்குதொறு மெய்ம்மலிந்து - நக்கனெ னல்லனோ யானே யெய்த்த - நோய்தணி காதலர் வரவீண் - டேதில் பெலற்குவந்தமை கண்டே." இதனுட் பழிதீர அவர் வந்து உயிர்தளிர்ப்ப முயங்கி நக்கனலை யைத் தோழிக்குத் தலைவி கூறியவாறு காண்க.

**கைபட்டுக் கலங்கினும்** = தலைவிகுறிப்பினறி எதிர்ப்பட்ட தலைவன் ஒருவழி அவளை அகப்படுத்துழிக் காட்சிவிருப் பினளாயினும் அப்பொழுது அவள்கலங்கினும்: எனவே, காட்சி விருப்பினை மீதூர்ந்து கலக்கம் புலப்பட்டது, தலைவன்வயிற் பரத்தைமைகருதி. "கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப் - பொடியழற் புறந்தந்த பூவாப்பூம் பொலங்கோதைத் - தொடி செறி யாப்பமை யரி" என்னுங் குறிஞ்சிக்கலியுள் "அதனால் லல்ல களைந்தனன் றோழி" எனக் கைபட்டுக் கலங்கிய வருத்தத்தைக் களைந்தனனென்று தலைவியுரையெனத் தோழிக்கு உரைத்த தறகட் கூறியவாறு காண்க. இவ்வுதாரணம் ஆண்டுக்காட்டு தும். "உறுகழி மருங்கி னோதமொடு மலர்ந்த" என்னும் பாட்டுத் தலைவன் இரந்தனைக் கூறியது.

**நாணு மிக வரினும்** = தலைவனை எதிர்ப்பட்ட தலைவி தன் பெருநாணுடைமை கூறித் தலைவனை யேற்றுக்கொள்ளாது நிற்பி னும்: உம். "விளையாட் டாயமொடு வெண்மணல் லழுத்தி - மறந் தனந் துறந்த காழ்முளை யகைய - நெய்பெய் தீம்பால் பெய்தினி துவளர்த்தது - நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென் - றன்னை கூறினள் புன்னையது சிறப்பே - யம்ம நாணுது நும்மொடு நகையே - விருந்திறு பாணர் விளரிசை கடுப்ப - வலம்புரி வான் கோடு நரலு மிலங்குநீர்த் - துறைகெழு கொண்கநீ நல்கி - னிறை படு நீழல் பிறவுமா ருளவே." இதனுள் அம்ம நாணுதுமெனப் புதிதுவந்ததோர் நாணுமிகுதி தோன்ற மறுத்துரைத்தலிற் தன் வயினுரிமையும் அவன்வயிற்பரத்தைமையுங் கூறினாள்.

**இட்டுப் பிரிவு இரங்கினும்** = சேணிடையின்றி இட்டிதாகப் பிரிந்துழித் தலைவி இரங்கினும்: கற்பினுட் சொல்லாத பிரிதலை யும் இட்டுப்பிரிவென்ப, களவுபோல நிகழ்பொருள் உணர்த்திப்பிரி தலருமையின். உம். "யானே யீண்டை யேனே யென்னலனே - யானே நோயொடு கான லஃதே - துறைவன் றம்மூ ரானே - மறை

யல ராகி மன்றத் தஃதே." தம்மூரானென்றலின் ஓதன்முதலிய பிரிவின்றி அணித்தாயவழிப் பிரிந்தானென அவ்விரண்டும் பயப்பக் கூறியவாறு காண்க. "சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பெருந்தோட் - டெறிதிரைத் துவலை யீரம்புற நனைப்பப் - பனிபுலந் துறையும் பல்பூங் கானல் - விரிநீர்ச் சேர்ப்ப னீப்பி னொருநம் - மின்னுயி ரல்லது பிறிதொன் - றெவனோ தோழி நாமிழப் பதுவே." இதுவும் அது. இவை களவினுட் புலவிப்போலியாம்.

அருமை செய்து அயர்ப்பினும் = முற்கூறிய இட்டப்பிரிவே யன்றித் தலைவன் தன்னை அரியனாகச் செய்துகொண்டு தம்மை மறப்பினும்: அது தண்டா திரத்தலை முனிந்த மற்றையவழித் தலைவன் தானும் அரியனாய் மறந்தான் போன்று காட்டினும் அவ்விரண்டுங் கூறுதலாம். உம். "தீமை கண்டோர் திறத்தும் பெரியோர் - தாமறிந் துணர்க வென்ப மாதோ - வழுவப் பிண்ட நாப்ட ணேமுற் - றிருவெதி ரீன்ற வேற்றலைக் கொழுமுளை - சூன்முதிர் மடப்பிடி நாண்மெய லாரு - மலைகெழு நாடன் கேண்மை பலவின - மாச்சினை துறந்த கோண்முதிர் பெரும் பழம் - விடரளை வீழ்ந்துக் கான்குத் தொடர்பறச் - சேணுஞ் சென்றுக்கன்றே யறியா - தேகலம்பிக்கத் திருண்முகை யிருந்த - குறிஞ்சி நல்லூர்ப் பெண்டி - ரின்னு மோவா ரொன்றிறத் தலரே." தீங்குசெய்தாரையும் பொறுக்கிற்பார் நம்மைத் துறந்தலின் நாம் அரியேமாகியது பற்றித் தாமும் அரியராயினார்போலுமென அவ்விரண்டுங் கூறினாள். "நெய்தற படுவி னிறைகழித் தண்சேர்ப்பன் - கைதைசூழ் கானலிற் கண்டநாட் போலானாற் - செய்த குறியும்பொய் யாயினவாற் சேயிழா - யையகொ லான்றூர் தொடர்பு." இதுவும் அது.

வந்தவழி எள்ளினும் = பெரிதாகிய இடையீட்டினுள் அரிதாகத் தலைவன் வந்தஞான்றும் பெறுதஞான்றைத் துன்பமிகுதியாற் பெற்றதனையுங் கனவுபோன்று கொண்டு இகழ்ந்திருப்பினும்: உம். "மானடி யன்ன கவட்டிலை யடம்பின் - மணி யன்ன வொண்பூக் கொழுதி - யொண்டொடி மகளிர் வண்ட லயரும் - புள்ளிமிழ் பெருங்கடற் சேர்ப்பனை - யுள்ளேன் றோழி படியரொன் கணணே." "வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை-யாரஞ ருற்றன கண்." "இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும் - புன்கணுடைத்தாற் புணர்வு." வரிற் துஞ்சாவெனவும் புன்கணுடைத்தெனவும் வரவும் பிரிவும் அஞ்சி இரண்டும் நிகழக்கூறினாள். இது முன்னிலைப் புறமொழி. "கண்டிரண் முத்தம் பயக்கு மிருமுந்

நீர்ப் - பண்டங்கொ ணுவாய் வழங்குந் துறைவனை - முண்டகக் கானலுட் கண்டே னெனத்தெளிந்தே - னின்ற வுணர்விலா தேன்.'' இது முன்பு இன்பந் தருவனென உணர்ந்து நின்ற உணர்வு ஈண்டில்லாத யான் புணர்ச்சிவருத்தந் தருமென்று தெளிந்தேனென்றாளென்க.

விட்டு உயிர்த்து அழுங்கினும் = கரந்த மறையினைத் தலைவி தமர்க்கு உரைத்தற்குத் தோழிக்கு வாய்விட்டுக்கூறி அக்கூறியதனையே தமர்கேட்பக்கூறாது தவிரினும் : உயிர்த்தல், கூறுதல். உம். ''வலந்த வள்ளி மரனோங்கு சாரற் - கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப் - பொன்னேர் புதுமலர் வேண்டிய மகளி - ரின்றாவிசைய பூசல் பயிற்றலி - னேக வடுக்கத் திருளளைச் சிலம்பி - னாகொள் வயப்புலி யாகுமஃ தெனத்த - மலைகெழு சீறூர் சிலம்பக கல்லெனச் - சிலையுடை யிடத்தர் பெயர்தரு நாட - னெஞ்சாவியன்மார் புடைத்தென வன்னைக் - கறிவிப் பேங்கொ லறிவியேங் கொல்லென - விருபாற் பட்ட சூழ்ச்சி யொருபாற் - சேர்ந்தன்று வாழி தோழி யாக்கை - யின்னுயிர் கழிவ தாயினு நின்மக - ளாய்மல ருண்கட் பசலை - காம நோயெனச் செப்பா தீமே.'' இது சிறைப்புறம்.

நொந்து தெளிவு ஒழிப்பினும் = வரைவு நீட்டித்துத் தலைவன் சூளுற்றவழி அதற்கு நொந்து தெளிவிடை விலங்கினும் : உம். ''மன்றத் துறுகற் கருங்கண் முசுவுகளுங் - குன்றக நாடன் றெளித்த தெளிவினை - நன்றென்று தேறித் தெளிந்தேன் றலையளி - யென்றுமற் றென்று மனைத்து.'' எனவரும். ''எம்மணங்கினவே'' என்பது தலைவிகூறக் கேட்டுத் தோழி கூறியது. அதுவும் இதனாற் கொள்க.

அச்சம் நீடினும் = தெய்வம் அச்சுறுவிற்கு அவனை வருத்துமென்றுந் தந்தை தன்னையர் அறிகின்றாரோவென்றுங் கூட்டமுண்மை உணர்ந்த தோழிக்கும் உண்மை கூறுதற்கும் அஞ்சிய அச்சம் நீட்டிப்பினும் : உம். ''மன்ற மரா அத்த பேஎமுதிர் கடவுள் - கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதுங் - கொடிய ரல்லரெங் குன்றுகெழு நாடர் - பசைஇப் பசந்தன்று நுதலே - ஞெகிழி ஞெகிழ்ந்தன்று தடமென் றோளே.'' ''மென்றினை மேய்ந்த சிறுகட் பன்றி - வன்கல் லடுக்கத்துத் துஞ்சு நாட - னெந்தை யறிதலஞ்சிக்கொ - லதுவே தெய்வ வாரா மையே.'' ''புனையிழை நோக்கியும் புனலாட்டப் புறஞ்சூழ்ந்து - மணிவரி தைஇயு மில்வந்து

வணங்கியு - நினையுபு வருந்துமிந் நெடுந்தகை திறத்திவ் வூ - ரினையளென் றெடுத்தோதற் கனையையோ நீயென - வினவுதி யாயின் விளங்கிழாய் கேளினி; செவ்விரல் சிவப்பூர * * * உரைத்தனை ; ஒடுங்கியாம் புகலொல்லேம் பெயர்தர வவன் கண்டு - நெடுங்கய மலர்வாங்கி நெறித்துத்தந் தலைத்தற்கோ - விடுத்தவர் விரகின்றி யெடுத்தசொற் பொய்யோடக் - கடிந்ததூஉ மிலையாய்நீ கழறிய வந்ததை ; வரிதேற்றாய் நீயென வணங்கிறை யவன்பற்றித் - தெரிவேய்த்தோட் கரும்பெழுதித் தொய்யில்செய் தனைத்தற்கோ - புரியுநம் மாயத்தார் பொய்யாக வெடுத்தசொ - லுரித்தென வுணராய்நீ யுலமந்தாய் போன்றதை ; எனவாங்கு, அரிதினி யாயிழா யதுதேற்றல் புரிபொருங் - கன்றூநம் வதுவையுணமர்செய்வ தின்றீங்கே - தானயந் திருந்ததிவ் வூராயி னெவன்கொலோ - நாஞ்செயற் பால தினி." எனவரும்.

பிரிந்தவழிக் கலங்கினும் = களவு அலராகாமல் யான் பிரிந்துழித் தலைவி கலங்குவளென்று அஞ்சித் தலைவன் பிரியாது உறைதலிற் பிரிவைக் கருதப்பெறாத தலைவி அவ்வாறன்றிப் பிரிந்துழிக் கலங்கினும்: உம். "மின்னுச்செய் கருவிப் பெயன்மழை தூங்க - விசும்பா டன்ன பறைநிவந் தாங்குப் - பொலம்படைப் பொலிந்த வொண்டே ரேறிக் - கலங்குகடற் றுவலை யாழி நனைப்ப - வினிச் சென் றனனே யிடுமணற் சேர்ப்பன் - யாங்கறிந் தன்றுகொ றோழியென் - றேங்கமழ் திருநுத லூரும் பசப்பே." "குறுங்கைக் குரவின் சிறுநனை நறுவீ - வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக் - கண்களி பெறூஉங் கவின்பெறு காலை - யெல்வளை ஞெகிழ்த் தோர்க் கல்ல லுறீஇயர் - சென்ற நெஞ்சஞ் செய்வினைக் கசாவா - வொருங்குவா னசையொடு வருந்துங் கொல்லோ - வருளா னாதலி னழிந்திவண் வந்து - தொன்னல னிழந்தவென் பொன்னிற நோக்கி - யேதி லாட்டி யிவளெனப் - போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே." "வருவது கொல்லோ தானே வாரா - தவணுறை மேவலி னமைவது கொல்லோ - புனவர்கொ ளளியிற் கலவ மஞ்ஞை - யிருவி யிருந்த குருவி வெருவுறப் - பந்தாடு மகளிரிற் படர்தருங் - குன்றுகெழு நாடனொடு சென்றவென் னெஞ்சே." "பொரிப்புறப் புல்லிச் சினையீன்ற புன்னை - வரிப்புற வார்மணன்மே லேறித் - தெரிப்புறத் - தாழ்கடற் றண்சேர்ப்பன் றூரகல நல்குமே - லாழியாற் காணுமோ யாம்." எனவரும்.

பெற்றவழி மலியினும் = தலைவி இடையீடின்றித் தலைவனை எதிர்ப்படப் பெற்றஞான்று புதுவது மலியினும் : வரைவு நீட்டித்த

காலத்துப் பெற்றவழிமலிவை வெளிப்படக் கூறுதலும் வரைவு
நீட்டியாதவழிப் பெற்றவழிமலிவை வெளிப்படுத்தாமையும் உரை
ாக. உ-ம். "இன்னிசை யுருமொடு கனைதுளி தலைஇ - மன்னு
யிர மடிந்த பானாட் கங்குற் - காடுதொடு வட்டத்து விளிவிடம்
பெறாது - வரியதட் படுத்த சேக்கைத் தெரியிழைத் - தேனுறு
கதுப்பிற் கொடிச்சியர் தந்தை - கூதிரிற் செறியுங் குன்ற நாட -
வனைந்துவா ரிளமுலை ஞெமுங்கப் புல்லூஉ - விளங்குதொடி
முன்கை வளைந்துபுறஞ் சுற்ற - நின்மார் படைதலி னினிதா
கின்றே - நும்மில் புலம்பா னுள்ளுதொறு நலியுந் - தண்வர
லசைஇய பண்பில் வாடை - பதம்பெறு கல்லா திடம்பார்த்து
நீடிய - மலைமர மொசிய வொற்றிப் - பலர்மடி கங்குனெடும்புற
நிலையே." முயக்கம் இனிதெனமகிழ்ந்து கூறுவாள் நும்மில் புல
ம்பால் வாடைக்கு வருந்தினேனென்றலின் இரண்டுங் கூறினாள்.
"அம்ம வாழி தோழி நலமிக - நல்ல வாயின வளியமென் றோள்
கண் - மல்ல லிருங்கழி மலரும் - மெல்லம் புலம்பன் வந்த வாறே."
"அம்ம வாழி தோழி பன்மா - ணுண்மணலடைகரை நம்மோ
டாடிய - தண்ணந் துறைவன் மரீஇ - யன்னை யருங்கடி வந்து
நின் றோனே." எனவரும். இவை தோழிக்குக் கூறியன. பெ
ற்றவழி மலியினுமெனப் பெறுபொருள் இன்னதெனவும் இன்னார்
க்குக் கூறுவதெனவும் வரையாது கூறவே பிறபெற்று மலிந்து
பிறர்க்குக் கூறுவனவுங் கொள்க. "அம்ம வாழி தோழி யன்
னைக் - குயர்நிலை யுலகமுஞ் சிறிதா லவர்மலை - மாலைப் பெய்த
மணங்கமழ் முந்தியொடு - காலை வந்த முழுமுதற் காந்தள் - மெல்
விரல் குழைய முயங்கலு - மில்லுய்த்து நடுகலுங் கடியா தோட்
கே." இது பெற்றவழி மகிழ்ந்து தோழிக்கு உரைத்தது. இத
ற்கும் இரண்டுங் கூறினாள்.

வரும் தொழிற்கு அருமை வாயில் கூறினும் = தலைவன்
இடைவிடாது வருதற்கு ஆண்டு நிகழும் ஏதம் பலவாற்றானும்
உளதாம் அருமையை வாயிலாகிய தோழி கூறினுந் தலைவிக்
குச் கூற்று நிகழ்தலுள : அது "நள்ளென் றன்றே யாமஞ் சொல்
லவிந் - தினிதடங் கினரோ மாக்கண் முனிவின்று - நனந்தலை
யுலகமுந் துஞ்சு - மோர்யான் மன்ற துஞ்சா தேனே." இத
னுட் பொழுது சென்றதில்லையென்றும் மாக்கள் இன்னுந்
துயின்றிலரென்றும் அருமையை வாயில் கூறியவழித் தலைவி யா
மமும் நள்ளென்றும் மாக்களுந் துயின்றும் வந்திலரென வருந்திக்
கூறியவாறு காண்க. நாம் ஏவிய தொழில் ஏற்றுக்கொண்டு

வருகின்றவன் ஓர் காரணத்தானன்றி வாராதொழியுமோவென்று தலைவி கொள்ளுமாறு கூறுமென்றற்குத் தோழியென்றார்.

கூறிய வாயில் கொள்ளாக் காலையும் = தலைவற்குக் குறைநேர்ந்து வாயிலாகிக் குறைநயப்பக் கூறியவழியும் பிறவழியுந் தோழிகூற்றினைத் தலைவி ஏற்றுக் கொள்ளாத காலத்துக்கண்ணும்: வாயில், தோழி. உம். "தெருவின்கட், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டிநீ - வாரண வாசிப் பதம்பெயர லேதில - நீநின்மேற் கொள்வ தெவன்." எனத் தோழிகூற்றினை மறுத்தது. "தோளே தொடிநெகிழ்ந் தனவே கண்ணே - வாளீர் வடிவின் வடிவிழந் தனவே - நுதலும் பசலை பாயின்று திதலைச் - சில்பொறி யணிந்த பல்கா ழல்குன் - மணியே யைம்பான் மாயோட் கென்று - வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வை தூற்ற - நாமுறு துயரஞ் செய்யில ரென்னுங் - காமுறு தோழி காதலங் கிளவி - யிரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த - தோய்மடற் சின்னீர் போல - நோய்மலி நெஞ்சிற் கேமமாஞ் சிறிதே." இது தோழிகூற்றினை நன்குமதியாது கூறினாள்.

மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு நீனைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும் = காப்புமிகுதிக்கண் மனையகப்பட்டுக் கலங்கி உணர்வு அழிந்தவழித் தலைவி ஆராய்ச்சியுடைத்தாகிய அருமறையினைத் தோழிக்குக் கூறுதலும் உள. உம். "கேளா யல்லை தோழி யல்கல் - வேணவா நலிய வெய்ய வுயிரா - வேமான் பிணையின் வருந்தினெ னாகத் - துயர்மருங் கறிந்தாள் போல வன்னை - துஞ்சா யோவென் குறுமக ளென்றலிற் - சொல்வெளிப் படாமை மெல்லவெ னெஞ்சிற் - படுமழை பொழிந்த பாறை மருங்கிற் - சிரல்வா யுற்ற தளவிற் பாலவற் - கான்கெழு நாடற் படர்ந்தோர்க்குக் - கண்ணும் படுமோ வென்றிசின் யானே." இதனுட் துஞ்சாயோவெனத் தாய் கூறியவழி மனைப்பட்டுக் கலங்கியவாறும் படர்ந்தோர்க்கென மறையுயிர்த்தவாறுங் கண்படாக் கொடுமை செய்தானெனப் பரத்தைமை கூறியவாறுங் காண்க. "பொழுது மெல்லின்று பெயலு மோவாது - கழுது கண் பனிப்ப வீசு மதன்றலைப் - புலிப்பற் றாலிப் புதல்வர்ப் புல்லி - யன்னா யென்னு மன்னையு மன்னோ - வென்மலைந் தனன்கொ றோனே தன்மலை - யார நாறு மார்பினன் - மாரி யானையின் வந்து நின் றனனே." "பலவின் பழம்பெற்ற பைங்கட் கடுவ - னிலவென் றிினையயிரு மெக்கல்சூழ் வெற்பன் - புலவுங்கொ றோழி புணர்

வறிந் தன்னை - செலவுங் கடிந்தாள் புனத்து.” இவையும் அது இன்னும் மனைப்பட்டுக கலங்கியென்றதனாற் காப்புச்சிறைமிகக கையறுகிளவிகளுங் கொள்க. “சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங் குருகே - துறைபோ கறுவைத் தூமடி யன்ன - நிறங்கிளா தூவிச் சிறுவெள்ளாங் குருகே - யெம்மூர் வந்தெ மொண்டுறைத் துழைஇச் - சினைக்கெளிற் றார்கையை யவரூர்ப் பெயர்தி - யனைய பண்பினையோ பெருமற வியையோ - வாங்கட் டீம்புன லீங்கட் பரக்கும் - கழனி நல்லூர் மகிழ்நற்கென் - னிழைநெகிழ் பருவரல் செப்பா தோயே.” “கூர்வாய்ச் சிறுகுருகே குண்டுநீ ருட்கிடந்த - வார லிரைகருதி நித்தலு நிற்றியா - னேரிணர்ப் புன்னைக்கீழ்க் கொண்கன் வருமெனப் - பேருண்க ணீர்மல்க நின்றாண்மற் றென் றாயோ.” “ஒண்டேவி நாராய்நின் சேவலு நீயுமாய் - வண்டேது பூங்கானல் வைகலுஞ் சேறிராற் - பெண்டேது வந்தே மென வுரைத்துக் காதலனைக் - கண்டீர் கழறியக்காற் கானல் கடிப வோ.” இவை காப்புச்சிறைமிக்க கையறுகிளவி.

உயிராக் காலத்து உயிர்த்தலும் = தலைவனோடு தன்றிறத்து ஒருவரும் ஒன்று உரையாதவழித் தனதாற்றாமையாற் றன்னோடும் அவனோடும் பட்டன சிலமாற்றந் தலைவிதானே கூறுதலும் உள : தோழி மறைவெளிப்படுத்துக் கோடற்கு வாளாது இருந்துழித் தலைவன் தன்மேற் றவறிழைத்தவழி இரண்டும்படக் கேட்போரின்றியுங் கூறுதலாம். உம். “உறைபதி யன்றித் துறைகெழு சிறுகுடிக் - கானலஞ் சேர்ப்பன் கொடுமை யேற்றி - யானுத் துயரமொடு வருந்திப் பானாட் - டுஞ்சா துறைநரொ டுசாவாத் - துயிற்கண் மாக்களொடு நெட்டிரா வுடைத்தே.” “தழையணி யல்குறுங்கல் செல்லா - நுழைசிறு நுசுப்பிற் கெவ்வ மாக - வம்மெல் லாக நிறைய வீங்கிய - கொம்மை வருமுலை செப்புட னெதிரின - யாங்கா குவள்கொல் பூங்குழை யென்னு - மவல நெஞ்சமொடு சாவாக் - கவலை மாக்கட்டிப் பேதை யூரே.” எனவரும். உயிராதாள் தோழியாயினள்; அவள் தலைவிகூறுவன கேட்டற்குப் பொய்த்துயில்கொள்ளும். உயிர்த்தலுமெனப் பொதுப்படக் கூறியவதனாற் றோழிக்குக் கூறுவனவுங் கொள்க. “பேணுப பேணார் பெரியோ ரென்பது - நாணுத தக்கன்றது காணுங் காலே - யுயிரோ ரன்ன செயிர்தீர் நட்பி - னினக்கியான் மறைத்தல் யாவது மிகப்பெரி - தழிதக் கன்றாற் றானே கொண்கன் - யான் யா யஞ்சுவ லெனினுந் தானே - பிரிதல் சூழான் மன்னே யினியே - கான லாய மறியினு மானு - தலர்வ தன்றுகொ லென்னு

மரனூற் - புலர்வது கொல்லவர் நட்பெண - வஞ்சுவ ரோழியென் னெஞ்சத் தானே." எனவரும்.

உயிர்செல் வேற்று வரைவு வரின் அது மாற்றுதற்கண்ணும் = இறந்துபாடு பயக்குமாற்றாற் றன்றிறத்து நொதுமலர் வரையக் கருதியஞான்று அதனை மாற்றுதற்கண்ணும்: உம். "அன்னை வாழிவெண் டன்னை புன்னை - பொன்னிறம் விரியும் பூக் கெழு துறைவனை - யென்னை யென்றும் யாமே யிவ்வூர் - பிறிதொன் றாகக் கூறு - மாங்கு மாக்குமோ வாழிய பாலே." "பலவிற் சேர்ந்த பழந்தி னினக்கலை - சிலையிற் கானவன் செந்தொடை வெரீஇச் - செருவுறு குதிரையிற் பொங்கிச் சார - லிருவெதிர் நீடமை தயங்கப் பாயும் - பெருவரை யடுக்கத்துக் கிழவோ னென்று - மன்றை யன்ன நட்பினன் - புதுவோர்த் தம்மவிப் பழங்கே ளூரோ." எனவரும்.

நெறிபடு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும் = தோழி கூட்டமுண்மை வழக்கியலால் நாடுகின்ற காலத்துக் கண்சிவப்பும் நுதல்வேறுபாடும் முதலிய மெய்வேறுபாடு நிகழ்ந்துழி அவற்றைத் தோழி அறியாமலுஞ் செவிலி அறியாமலுந் தலைவிதான் மறைப்பினும்: உம். "கண்ணுந் தோளுந் தண்ணறுங் கதுப்பு - மொண்டொடி மகளிர் தண்டழை யல்குலுங் - காண்டொறுங் கவினை யென்றி யதுமற் - றீண்டு மறந்தனையாற் பெரிதே வேண்டாய் - நீயெவன் மயங்கினை தோழி - யாயினுஞ் சிறந்தன்று நோய் பெரி துழந்தே." காதன்மிகுதியாற் கவினையெனற் பாலாய் வேறுபட்டனையென்று எற்றுக்கு மயங்கினையெனத் தலைவி தன்வருத்தம் மறைத்தாள். "துறைவன் றுறந்தெனத் துறையிருந் தழுதவென் - மம்மர் வாண்முக நோக்கி யன்னைநி - னவல முரையென் றனளே கடலென் - பஞ்சாய்ப் பாவை கொண்டு - வண்டலஞ் சிறுமனை சிதைத்ததென் றேனே." இது செயிலிக்கு மறைத்தது.

பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி ஒருமைக் கேண்மையின் உறுகுறை தெளிந்தோள் = தான் அவளென்னும் வேற்றுமையில்லாத நட்பினலே தோழி தனக்கு வந்து கூறிய குறையே பொறியினேக்கித் தெளிந்தோள், முன்னர்த் தெய்வப்புணர்ச்சி நிகழ்ந்தமை நோக்கி அதுகாரணத்தான் முடிப்பதாகத் தெளிந்த தலைவி; அருமை சான்ற நால் இருவகை = தான் முன் அருமை அமைந்துநின்ற நிலையாற் தலைவன் தன்கண் நிகழ்த்திய மெய்தொட்டுப்

பயிறன் முதலிய எட்டினுலே: பெருமை சான்ற இயல்பின்கண்ணும் = தனக்கு உள தாம் பெருமை கூறுதற்கு அமைந்ததோர் இயல்பின்கண்ணும்: என்றது, தலைவன் இத்துணை இளிவந்தன செய்யவும் யான் நாணும் மடனும் நீங்கிற்றிலேனென்று தன்பெருமை தோழிக்குக் கூறுதலாம். உம். "மின்னொளி ரவிரற லிடைபோழும் பெயலேபோற் - பொன்னகைத் தகைவகிர் வகைநெறி வயங்கிட்டுப் - பொழிலிடை யிட்ட கமழ்நறும் பூங்கோதை - யின்னகை யிலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய் - நன்னுதா னினக் கொன்று நவிலுவாங் கேளினி; நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து - நுதலு முகனுந் தோளுங் கண்ணு - மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ - ஐயதேய்ந் தன்று பிறையு மன்று - மைதீர்ந் தன்று மதியு மன்று - வேயமன் றன்று மலையு மன்று - பூவமன் றன்று சுனையு மன்று - மெல்ல வியலு மயிலு மன்று - சொல்லத் தளருங் கிளியு மன்று; எனவாங், கனையன பலபா ராட்டிப் பையென - வலையர் போலச் சோர்பத னொற்றியென் - னெஞ்சு நெகிழ்ந்த செவ்வி காணூஉப் - புலையர் போலப் புன்க ணோக்கித் - தொழலுந் தொழுதான் றொடலுந் தொட்டான் - காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன் - றொழூஉந் தொடூஉ மவன்றன்மை - யேழைத் தன்மையோ வில்லை தோழி." இதனுட் பாராட்டியெனப் பொய்பாராட்டலுஞ், சோர்பதனொற்றியென நெஞ்சு நெகிழ்ந்த செவ்வி கூறுதலிற் கூடுதலுறுதலும், புலையர்போல நோக்கியென நீடுநினைந்திரங்கலும், தொழலுந் தொழுதானென இடம்பெற்றுத்தழாலுந், தொடலுந் தொட்டானென மெய்தொட்டுப்பயிறலும், அவனிகழ்த்திய வாறுங் கூறி, மதத்தாற் பரிக்கோலெல்லையில் நில்லாத களிறுபோல வேட்கை மிகுதியான் அறிவினெல்லையில் நில்லாதவனெனத் தீராத் தோற்றமும் ஒருவாற்றாற்கூறித், தனக்குப் பெருமைசான்ற இயல்பைப் பின்னொருகாற் றோழிக்குக் கூறியவாறு காண்க.

இனித் தலைவற்குப் பெருமை அமைந்தன எட்டுக்குணமென்று கூறி, அவற்றை "இளமையும் வனப்பு மில்லொடு வரவும் - வளமையுந் தறுகணும் வரம்பில் கல்வியுந் - தேசத் தமைதியும் மாசில் சூழ்ச்சியும்" எனப் பொருள்கூறின், "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்னுஞ் சூத்திரத்திற் கூறிய எண்கள் அவை கூறிய வடநூல்களில் வேறே எண்ணுதற்கு உரியன சில இல்லாமல் எண்ணினாற்போல ஈண்டும் இளமைமுதலிய எட்டும் ஒழிய வேறெண்ணுதற்கு உரியன எட்டுத் தலைவற்கின்றாகக் கூறல்வேண்டும்; ஈண்டு அவ்வாறின்றித் தலைவற்கு உரியனவாகப் பலவகைகளான் எவ்வெட்டுள

வாகக் கூறக்கிடந்தமையின் அங்ஙனம் ஆசிரியர் இலக்கணங்கூறு ரொன மறுக்க. அன்றியும் எட்டும் எடுத்து ஓதுபவென்றும் உதாரணமின்றென்றும் மறுக்க. இனி முட்டுவயிற்கழறன், முனிவு மெய்ந்நிறுத்தல், அச்சத்தினகறல், அவன்புணர்வுமறுத்தல், தூது முனிவின்மை, துஞ்சிசசேர்தல், காதல்கைமிகல், கட்டுரையின்மை என்பன எட்டுமென்று அவற்றை ஈண்டுக்கொணர்ந்து பொருள்கூறிற், கூற்றுக் கூறுகின்றவிடத்து மெய்ப்பாடு கூறின் ஏனை மெய்ப்பாடுகளுங் கூற்றுக் கூறுகின்றவிடத்தே கொணர்ந்து கூற்றினுள் அடங்கக் கூறல்வேண்டுமென்று மறுக்க.

பொய்தலை அடுத்த மடலின்கண்ணும் = பொய்யினைத் தலைக்கீடாகவுடைய மடலின்கண்ணும்: அது மடன்மா கூறியவழி அம்மடலினை மெய்யெனக் கொண்டாள் அதனைப் பொய்யெனக் கோடலாம். உம். "வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே - யவையினும் பலவே சிறுகருங் காக்கை - யவையினு மவையினும் பலவே குவிமட - லோங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த - தூங்கணங் குரீஇக் கூட்டுள சினையே." இது மடன்மா கொள்ளக் குறித்தோனைப் பறவைக்குழாந் தம்மை மடலூர விடாவெனவிளையாட்டுவகையாற் பொய்யென்று இகழ்ந்தது.

கையறு தோழி கண்ணீர் துடைப்பினும் = தலைவியை ஆற்றுவித்துக் கையற்ற தோழி தலைவிகண்ணீரைத் துடைப்பினும்: உம். "யாமெங் காமந் தாங்கவுந் தாந்தம் - கெழுதகைமையி னழுதன தோழி - கன்முற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர் - மன்ற வேங்கை மலர்பத நோக்கி - யேறா திட்ட வேமப் பூசல் - விண்டோய் விடரகத் தியம்புங் - குன்ற நாடற் கண்டவெங் கண்ணே." தன் ஆற்றாமைக்கு ஆற்றாத தோழியை ஆற்றுவிக்கின்றாள் அவவிரண்டுங் கூறியது.

வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும் = தலைவி வேறுபாடு எற்றினானாயிற்றென்று வேலனை வினாய் வெறியாட்டு எடுத்துழித் தலைவி அஞ்சும் அச்சத்தின்கண்ணும்: அது பண்டேயுந் தன்பரத்தைமையான் நெகிழ்ந்தொழுகுவான் இன்று நம் ஆற்றாமைக்கு மருந்து பிறிதுமுண்டென்றறியின் வரைவு நீடுமென்று அஞ்சுதல். உம். "பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅற் - றுனியில் கொள்கையொ டவர்நமக் குவந்த - வினிய வுள்ள மின்னு வாக்கி - முளித்த நிறுத்த நல்க லெவ்வஞ் - சூருறை வெற்பன் மார்புறத் தணித - லறிந்தன ளல்ல ளன்னை வார்கோற் - செறிந்திலங் கெல்வளை நெகிழ்பத நோக்கிக் - கையறு நெஞ்சினள் வினவலின்

முதுவாய்ப் - பொய்வல பெண்டிர் பிரப்புளா விரீஇ - முருக ஞா ணங் கென்றவி னதுசெத் - தோவத் தன்ன விணைபுனை நல்லிற் - பாவை யன்ன பலராய் மாண்கவின் - பண்டையிற் சிறக்கவென் மகட்கெனப் பரைஇக் - கூடுகொ ளின்னியங் கறங்கக் களனி ழைத் - தாடணி யயர்ந்த வான்பெரும் பந்தர் - வெண்போழ் கடம்பொடு சூடி யின்சீ - ரைதமை பாணி யிரீஇக்கை பெயராச் - செல்வன் பெரும்பெய ரேத்தி வேலன் - வெறியயா வெங்களம் பொற்ப வல்லோள் - பொறியமை பாவையிற் றூங்கல் வேணடி - னென்னுங் கொல்லோ தோழி மயங்கிய - மையற் பெண்டிர்க்கு நொவ்வ லாக - வாடிய பின்னும் வாடிய மேனி - பண்டையிற் சிறவா தாயி னிம்மறை - யலரா காமையோ வரிதே யதாஅன் - றறிவரு ருறுவி லல்லல்கண் டருளி - வெறிகமழ் நடுவே ணல்குவ னெனினே - செறிதொடி யுற்ற செல்லல் பிறிதெனக் - கான் கெழு நாடன் கேட்பின் - யானுயிர் வாழ்த லதனினு மரிதே.'' இன்னுவாக்கி நிறுத்த எவ்வமென்பது அவன்வயிற் பரத்தைமை, உயிர்வாழ்தல் அரிதென்பது தன்வயினுரிமை. அவை வெறியஞ் சியவழி நிகழ்ந்தன.

குறியின் ஒப்புமை மருடற் கண்ணும் = இரவுக்குறி வருந் தலைவன் செய்யுங்குறி பிறிதொன்றனுன் நிகழ்ந்து தலைவன்குறி யை ஒத்தவழி அதனை மெய்யாக உணர்ந்து தலைவி மயங்கியவழி யும்: புனலொலிப்படுத்தன் முதலிய அவன் செயற்கையானன்றி இயற்கையான் நிகழ்ந்துழிக் குறியினொப்புமையாம். உம். "மெய் யோ வாழி தோழி சாரன் - மைபட் டன்ன மாமுக முசுக்கலை - யாற்றப் பாயாத் தப்ப லேற்ற - கோட்டொடு போகி யாங்கு நாடன் - றான்குறி வாராத் தப்பற்குத் - தாம்பசந் தனவென் றடமென் றோளே." கோடு ஆற்றப் பாயாது வேண்டியவாறு பாய்ந்து அதனை முறித்த முசுப்போல நாங் குறிபெறுங் காலத்து வாராது புட்டாமே வெறித்து இயம்புந்துணையும் நீட்டித்துப் பின்பு வரு தலிற் குறிவாயாத்தப்பு அவன்மேல் ஏற்றி அதற்குத் தோள் பசந் தனவென்று பின்னொருநாள் அவன்வந்துழித் தோழியை நோக்கி இவ்வரவு மெய்யோவெனவே அவ்விரண்டும் பெற்றும். "அணி கடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமா பூண்ட - மணியரவ மென்றெழு ந்து போந்தேன் - கணிவிரும்பு - புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னொளியிழா - யுள்ளுருகு நெஞ்சினேன் யான்." இதுவும் அது.

வரைவு தலைவரினும் = வெளிப்பட்ட பின்னராயினும் முன்ன ராயினும் வரைந்தெய்துதற் செய்கை தலைவன்கண் நிகழினும்;

ஆண்டு முற்காலத்து நிகழ்ந்த ஆற்றுமைபற்றி ¹⁄ அவ்விரண்டுங் கூறும். உம். "நன்னாட் டலைவரு மெல்லைம் மாட்டிலைத் - தந்நாண் டாந் தாங்குவா ரென்னோற் றனர்கொ ; புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றி - னனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றே; நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே - கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றே." என நாண்தாங்கி ஆற்றுவாரும் உளரோ வெனவுங் கனவிற் புணர்ச்சி கடிதுமெனவும் இரண்டுங் கூறினாள். "கொல்லைப் புனத்த வகில்சுமந்து கல்பாய்ந்து - வானினருவி ததும்பக் கவினிய - நாட னயனுடைய னென்பதனு னிப்பினும் - வாடன் மறந்தன தோள்." நயனுடையன் என்பதனால் வரைவு தலைவர்தமையும் நீப்பினுமென்பதனால் அவன்வயிற் பரத்தைமையுங் கூறினாள்.

களவு அறிவுறினும் = தம் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகத் தலைவன் ஒழுகினும் : ஆண்டும் அவ்விரண்டுங் கூறும். உம். 'நாண்மழை தலைஇய நன்னெடுங் குன்றத்து - மால்கடற் றிரையி னிழிதரு மருவி - யகலிருங் கானத் தகலணி நோக்கித் - தாங்கவுந் தகைவரை நில்லா நீர்சுழல் - போதெழின் மழைக்கண் கலுழ்தலி னன்னை - யெவன்செய் தனையோநின் னிலங்கெயி றுண்கென - மெல்லிய லினிய கூறலின் வல்விரைந் - துயிரினுஞ் சிறந்த நாணு மறந் துரைத்த - லுய்ந்தனென் வாழி தோழி சாரற் - காந்த ளூதிய மணிநிறத் தும்பி - தீந்தொடை நரம்பி னிமிரும் - வான் றோய் வெற்பன் மார்பணங் கெனவே." யான் அவனை எதிர்ப்பட்ட இடங்கண்டு அழுதேனாக அதனைக்கண்டு நீ எவன் செய்தனை யென வினாய அன்னைக்கு இம்மறையினைக் கூறலுற்றுத் தவிர்ந்தேனெனத் தாய் களவறிவுற்றவாறு கூறக் கருதி அவன்வயிற் பரத்தைமை கூறிற்று.

தமர் தற் காத்த காரண மருங்கினும் = அங்ஙனங் களவறிவுற்ற அதன்றலைச் செவிலிமுதலிய சுற்றத்தார் தலைவியைக் காத்தற்கு ஏதுவாகிய காரணப்பகுதிக்கண்ணும் : ஆண்டுந் தமரை நொந்துரையாது அவன்வயிற் பரத்தைமைகூறும். காரணமாவன தலைவி தோற்றப்பொலிவும் வருத்தமும் அயலார் கூறும் அலருமாம். உம். "அடம்பி னைம்மலர் விரைஇ நெய்த - னெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்த - லோரை மகளி ரஞ்சியீர் ஞெண்டு - கட லிற் பரிக்குந் துறைவனொ டொருநா - ணக்கு விளையாடலுங் கடிதன் - றைதேமக் கம்ம மெய்தோய் நட்பே." இது வேறுபாடு கண்டு இற்செறித்தமை தன்னுள்ளே கூறியது. பெருநீ ரழுவத்தெ

ர்தைத் தந்த - கொழுமீ னுணங்கற் படுபுள் ளோப்பி - யெக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇச் - செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி - ஞாழ லோங்குசினைத் தொடுத்த கொடுங்கழித் - தாழை வீழ்கயிற் றூச றூங்கிக் - கொண்ட லிடுமணற் குரவை முனையின் - வெண்டலைப் புணரி யாயமொ டாடி - மணிப்பூம் பைந்தழை தைஇ யணித்தகைப் - பல்பூங் கான லல்கினம் வருதல் - கௌவை நல்லணங் குற்ற விவ்வூர்க் - கொடிதறீஇப் பெண்டிர் சொற் கொண் டன்னை - கடிகொண் டனளே தோழி பெருந்துறை - யெல்லையு மிரவு மென்னு குதலெனை - வலவ னாய்ந்த வண்பரி - நிலவு மணற் கொட்குமோர் தேருண் டெனவே." "பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை - களிற்றுச் செவியன்ன பாசடை மயக்கிய - பனிக்கழி துழவும் பானாட் டனித்தோர் - தேர்வந்து பெயருமென்ப வதற்கொண் - டோரு மலைக்கு மன்னை பிறரும் - பின்னுவிடுத்துப்பின் மின்னிழை மகளி - ரிளையரு முதியரு முளரோ - யலையாத் தாயரொடு நற்பா லோரே." இவை பிறர்கூற்றுற் றமர் காத்தன. "முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின - தலைமுடி சான்ற" என்றன தோற்றப் பொலிவாற் காத்தன. இதற்கும் அவ்விரண்டும் உள.

தன்குறி தள்ளிய தெருளாக் காலை வந்தனன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன் பிழைப்பாகத் தழீஇத் தேறலும் = தலைவி தன்னாற் செய்யப்பட்ட குறியிடங்கள் இற்செறிப்பு முதலிய காரணங்களான் இழக்கப்பட்டனவற்றை இவை இழக்குமென முந்துறவே உணராத காலத்து முற்கூறிய குறியிடமே இடமாக வந்து தலைவன் கூடாது பெயர்தலாற் றமக்குப் பயம்படாத வறுங்களத்தை நினைந்து அதனைத் தலைவற்கு முந்துறவே குறிபெயர்த்திடப் பெறாத தவறு தன்மேல் ஏற்றிக்கொண்டு தோழியையும் அதுகூறிற்றிலளெனத் தன்னொடு தழீஇக்கொண்டு தலைவி தெளிதற்கண்ணும்: ஆகவே, அவன்தவற்றைத் தன்தவறு ஆக்கினளாம். தழீஇ, தோழியைத் தழீஇ. அத்தவறு அவன்கட் செல்லாமற் றனதாகத் தேறினள். உம். "விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன் - றெரியிதழ்க் குவளைத் தேம்பாய் தார - னஞ்சிலை யிடவ தாக வெஞ்செலற் - கணைவலந் தெரிந்து துணைபடர்ந் துள்ளி - வருதல் வாய்வது வான்றோய் வெற்பன் - வந்தன னாயி னந்தளிர்ச் செயலைக் - காவி லோங்குசினைத் தொடுத்த வீழ்கயிற் - றூசன் மாறிய மருங்கும் பாய்புடை - நாடா மையிற் கலுழ்பில தேறி - நீடிதழ்த் தலைஇய கவின்பெறு நீலங் - கண்ணெனை மலர்ந்த சுனையும் வண்

பறை - மடக்கிளி யெடுத்தல் செல்லாத் தடங்குரற் - குவவுப் பொறை யிறுத்த கோற்றலை யிருவிக் - கொய்தொழி புனமு நோக்கி நெடிதுநினைந்து - பைதலன் பெயர்குவன் கொல்லோ வைதே - கயவெள் ளருவி சூடிய வுயாவரைக் - கூஉங் கண்ண தெம் மூரென - வாங்கதை யறிவுநன் மறந்திசின் யானே." இத னுள் ஊசன் மாறுதலும் புனமுந் தன்குறி தள்ளிய இடன்; மறந்திசின் என்றது தெருளாககாலை; கூஉங்கண்ணது ஊரென உணர்த்தாமையின், இடையீடு படுவதன்றி அவன்கட் தவறுண் டோவெனத் தன் பிழைப்பாகத் தழீஇயினாள். இது சிறைப்புற மாக வரைவுகடாயது.

வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும் = வழுப்படுத்த லின்றி நின்ற இயற்பட மொழிதற் பொருண்மைக் கண்ணும். வழு வின்றி நிலைஇய என்றதனாற் தோழி இயற்பழித்துழியே இயற் பட மொழிவதென்க. தலைவன் வழுவைத் தோழி கூறியதற்குப் பொருது தான் இயற்பட மொழிந்ததல்லது தன் மனத்து அவன் பரத்தைமை கருதுதலுடைமையிற பொருள் வேறுகுறித்தாளாம். உம். "அடம்பமா நெடுங்கொடி யுள்புதைந் தொளிப்ப - வெண்ம ணல் விரிக்குந் தண்ணந் துறைவன் - கொடிய னுயினு மாக - வவ னே தோழியென் னுயிர்கா வலனே." "தொடி நடந் திழியச் சாஅ யத் தோளவர் - கொடுமை கூறின வாயினுங் கொடுமை - நல்வரை நாடற் கில்லை தோழிபென் - னொருசிற் பிரிந்ததூஉ மிலரோ தங்கு றை - நோக்கங் கடிந்ததூஉ மிலரோ!! - நிலத்தினும் பெரிதே நேர்ந்த வர் நட்பே." எனவரும். அகன்று உயர்ந்து தாழ்ந்தவற்றுட் பெரி தாகிய நட்புடையவன் எனககூறியது. ஒருகாலைக்கு ஒருகாற் பெ ருகுமென்றுங் கூறினாளாயினும் நமது நட்புப்போல் ஒருகாலே பெருத்ததில்லையென இரண்டுங் கூறினாள்.

பொழுதும் ஆறும் புரைவது அன்மையின் அழிவு தலைவந்தசி ந்தைக்கண்ணும் = தலைவியுந் தோழியுந் தலைவன் இரவுக்குறி வருங் காற் பொழுதாயினும் நெறியாயினும் இடையூறுகிப் பொருந்துத லின்மையின் அழிவு தலைத்தலை சிறப்ப வந்த ஆராய்ச்சிக்கண்ணும்: ஆண்டும் அவ்விரண்டும் நிகழும். உம். "மன்றுபா டவிந்து மனை மடிந் தன்றே - கொன்மூ ரன்ன கொடுமையோ டின்றே - யாமங் கொளவரிற் கனைஇக் காமங் - கடலினு முரைஇக் * * * சென்ற தின்றே." காமங் கரைபொழியாநிற்கவுமென்ன நன்றிகருதி இரு வரொடுஞ் சூழாது சென்றது நெஞ்சென இரண்டுங் கூறினாள். மனைமடிந்தன்றென்பது பொழுது, சிறுநெறியென்பது ஆற்றின்னு

மை ; இதனைப் பொருளியலுட் கூறாது தன்வயினுரிமையும் அவன்வயிற் பரத்தைமையும்பற்றி ஈண்டுக் கூறினான். "குறையொன்றுடையேமாற் றோழி நிறையில்லா - மன்னுயிர்க் கேமஞ்செயல வேண்டு மின்னே - யரவழுங்கு நீள்சோலை நாடனை வெற்பி - லீரவரா லென்ப துணை." "வளைவாய்ச் சிறுகிளி" என்னுங் குறுந்தொகையும் அது.

காமஞ் சிறப்பினும் = தலைவி காமஞ்சிறந்து தோன்றினும், உம். "ஒலியவிந் தடங்கி யாம நள்ளெனக் - கலிகெழு பாக்கந் துயின்மடிந் தன்றே - தொன்றுறை கடவுள் சேர்ந்த பராரை - மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத் - துணைபுண ரன்றி லுயவுக்குரல் கேட்டொறுந் - துஞ்சாக் கண்ண டுயரடச் சாஅய் - நம்வயின் வருந்து நன்னுத லென்ப - துண்டுகொல் வாழி தோழி தெண்கடல் - வன்கைப் பரதவ ரிட்ட செங்கோற் - கொடுமுடி யவ்வலை பரியப் போக்கிக் - கடுமுர ணெறிசுறா வழங்கு - நெடுநீர்ச் சேர்ப்பன்ற னெஞ்சத் தானே." "ஞாயிறு பட்ட வகல்வாய் வானத் - தளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை - யிறையுற வோங்கிய நெறியயன் மராஅத்த - பிள்ளை யுள்வாய்ச் செரீஇய - விரைகொண்டவையும் விரையுமாற் செலவே." "கொடுந்தா ளலவ குறையா மிரப்பே - மொடுங்கா வொலிகடற்சேர்ப்ப - னெடுந்தேர் - கடந்த வழியையெங் கண்ணுரக் காண - நடந்து சிதையாதி நீ." "முடமுதிர் புன்னைப் படுகோட் டிருந்த - மடமுடை நாரைக் குரைந்தேன் - கடனறிந்து - பாய்திரைச் சேர்ப்பன் பரித்தேர் வரக்கண்டு - நீதகா தென்றே திறத்து." எனவரும்.

அவன் அளி சிறப்பினும் = தலைவிக்குக் காமமிக்க கழிபடா சிறந்தாற் போல்வது தலைவன்கட் சிறந்துழி அதுகாரணத்தால் அவன் அளி சிறந்து தோன்றினும் : இவ்வாறு அரிதின்வருகின்றான் வரைகின்றலனென அவ்விரண்டுந் தோன்றும். உம். "இருள்கிழிப்பதுபோன் மின்னி வானந் - துளிதலைக் கொண்ட நளிபெய னடுநாண் - மின்மினி மொய்த்த முரிவுவாய்ப் புற்றம் - பொன்னெறி பிதிரிற் சுடர வாங்கிக் - குரும்பி கெண்டு பெருங்கை யேற்றை - யிரும்புசெய் கொல்லரிற் றோன்று மாங்க - ணாறே யருமர பினவே யாறே - சுட்டுநோப் பனிக்குஞ் சூருடை முதலை - கழைமாய் நீத்தங் கல்பொரு திரங்க - லஞ்சுவந் தமிய மென்னாது மஞ்சு சுமந் - தாடுகழை நரலு மணங்குடைக் கவாஅ - னீருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய - விருங்களி றட்ட பெருஞ்சின வுழுவை - நாமநல்லரா கதிர்பட வுமிழ்ந்த - மெய்மணி விளக்கிற் புலாஅ வீர்க்கும்

வாணடந் தன்ன வழக்கருங் கவலை - யுள்ளுந ருட்கும் கல்லடர் சிறுநெறி - யருள்புரி நெஞ்சமோ டெஃகு துணையாக - வந்தோன் கொடியனு மல்லன் றந்த - நீதவ றுடையையு மல்லை நின்வயி - னானா வரும்படர் செய்த - யானே தோழி தவறுடை யேனே." வந்தோனென்பது அவனளி சிறத்தல், தவறுடையேனென்பது தன்வயினுரிமை, கொடியனுமல்லனென்பது அவன்வயிற் பரத்தைமை. "சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி - வான மீனின் வயின்வயி னிமைக்கு - மோங்குமலை நாடன் சாந்துபுல ரகல - முள்ளி னுண்ணோய் மல்கும் - புல்லின் மாய்வ தெவன்கொ லன்னாய்." இதுவும் அது.

ஏமஞ் சான்ற உவகைக் கண்ணும் = நால்வகைப் புணர்ச்சியால் நிகழுங் களவின்கண் எஞ்ஞான்றும் இடையீடுபடாமற் தலைவன் வந்து கூடுதல் இன்பத்திற்குப் பாதுகாவல் அமைந்த உவகையினைத் தலைவி எய்தியக்கண்ணும்: அது எஞ்ஞான்றுங் கூட்டம் பெற்றமையான் மகிழ்ந்து கூறுதலாம். உம். "நோயலைக் கலங்கிய மதனழி பொழுதிற் - காமஞ் செப்ப லாண்மகற் கமையும் - யானென், பெண்மை தட்ப நுண்ணிதிற் றாங்கிக் - கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ - மண்ணுப் பசுமுத் தேய்ப்பக் குவியிணர்ப் - புன்னை யரும்பிய புலவுநீர்ச் சேர்ப்ப - னென்ன மகன்கொன்றோழி தன்வயி - னார்வ முடைய ராகி - மார்பணங் குறுநரை யறியா தோனே." மண்ணுப் பசுமுத்தேய்ப்ப நுண்ணிதிற் றாங்கிப் பெண்மை தட்பவென மாறிக் கழுவாத பசியமுத்தந் தனது மிக்க ஒளியை மறைத்துக் காட்டினாற்போல யாமும் புணர்ச்சியால் நிகழ்ந்த மிக்க நலனைப் புலப்படாமல் அரிதாகத் தாங்கிப் பெண்மையாற் தகைத்துக் கொள்ளும்படியாகத் தன்மார்பால் வருத்தமுற்றாரைக் கண்டு அறியாதோனாகிய சேர்ப்பனை என்னமகனென்று சொல்லப்படுமென மகிழ்ந்து கூறினாள். ஆர்வமுடையராக வேண்டி மார்பணங்குறுநரை அறியாதோனென்க. அலராமற் குவிந்த கொத்தையுடைய புன்னைக்கண்ணே புலானாற்றத்தையுடைய நீர் தெறித்தரும்பிய சேர்ப்பனென்றதனாற் புன்னையிடத்துத் தோன்றிய புலானாற்றத்தைப் பூவிரிந்து கெடுக்குமாறுபோல வரைந்து கொண்டு களவின்கண் வந்தகுற்றம் வழிகெட ஒழுகுவனென்பது உள்ளுறை. "இரண்டறி களவி" என்னும் பாட்டினுட் தோற்றப் பொலிவை மறைப்பனெனத் தலைவன் கூறியவாறும் உணர்க.

மறைந்தவற்காண்டல் முதலிய ஆறற்கும் உம்மையும் உருபும் விரித்து ஏனையவற்றிற்கு உம்மைவிரிக்க; உம்மை விரிக்க வே

ண்டுவனவற்றிற்கு உம்மையும், இரண்டும் விரிக்க வேண்டுவனவற்றிற்கு இரண்டும் விரித்து, அவற்றிற்கும் எனை வினையெச்சங்கட்கும் கூற்று நிகழ்தலுளவென முடிக்க. கூற்று அதிகாரத்தான் வரும். உயிராக்காலத்து உயிர்த்தலுமுளவென முடிக்க.

ஓரிடத்தான தன்வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தையும் உள = இக்கூற்று முப்பத்தாறனுள் ஒரோவிடங்களிலே தன்னிடத்து அன்பிற்கு உரிமையுண்டாகவும் அவனிடத்து அயன்மை உண்டாகவும் கூற்று நிகழ்தலுள: ஆன் ஆனவென ஈறு திரிந்தது.

அன்னவும் உள = அவைபோல்வன பிறவும் உள. எ - று. அன்னபிறவென்றதனுன் இன்னுந் தலைவிகூற்றாய் இவற்றின் வேறுபட வருவனவெல்லாம் இதனுன் அமைக்க. "பிணி நிறந் தீர்ந்து பெரும்பணைத்தோள் வீங்க - வணிமலை நாடன் வருவான்கொ ரேழி - கணிநிற வேங்கை கமழ்ந்துவண் டார்க்கு - மணிநிற மாலைப் பொழுது." இது தலைவி இரவுக்குறி நயந்து கூறியது. "பெயல்கான் மறைத்தலின் விசும்புகா ணலரோ - நீர்பரந் தொழுகலி னிலங்கா ணலரோ - யெல்லை சேறலி னிருள்பெரிது பட்டன்று - பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல் - யாங்குவந்தனையோ வோங்கல் வெற்ப - வேங்கை கமழுமெஞ் சிறுகுடி - யாங்கறிந் தனையோ நோகோ யானே." இது இரவுக்குறி வந்த தலைவனை நோக்கிக் கூறியது. "கொடுங்குரல் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி - யஞ்ச லோம்பி யார்பதங் கொண்டு - நின்குறை முடித்த பின்றை யென்குறை - சொல்ல வேண்டுமோர் கைதொழு திரப்பல் - பல்கோட் பலவின் சாரலவர் நாட்டு - நின்கிளை மருங்கிற் சேறியாயி - னம்மலை கிழவோற் குணாமதி யிம்மலை - கானக் குறவர் மடமக - ளேனல் காவ லாயின ளெனவே." எனவும், "ஓங்கற் றுறுவரைமேற் காந்தள் கடிகவினப் - பாம்பென வோடியுருமிடித்துக் கண்டிரங்கும் - பூங்குன்ற நாடன் புணர்ந்தவந் நாட்போல - நீங்கி நெகிழ்ந்த வளை." எனவும், "மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழ - முண்டுவந்து மந்தி முலைவருடக - கன்றமர்ந் - தூர்மா சுரக்கு மணிமலை நாடனை - யாமாப் பிரித லிலம்." எனவும் வரும். "அவருடை நாட்ட வாயினு மவர்போற் - பிரித றேற்றாப் பேரன் பினவே - யுவக்கா ணென்று முள்ளேவ போலச் - செந்தார்ச் சிறுபெடை தழீஇப் - பைங்குர லேனற் படர்தரும் கிளியே." பகற்குறிக்கட் தலைவனீட ஆற்றாது தோழிக்குக் கூறியது. (உ0)

கக௨. வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்
வரைய நாளிடை வந்தோன் முட்டினு
முரையெனத் தோழிக் குரைத்தற் கண்ணுந்
தானே கூறுங் காலமு முளவே.

இதுவும் அதிகாரத்தாற் தலைவிகூற்று இன்னவாறுமாம் என்கின்றது. (இ-ள்.) வரைவிடைவைத்த காலத்து வருந்தினும் = வரைவுமாட்சிமைப்படாநிற்கவும் பொருள்காரணத்தான் அதற்கு இடையீடாகத் தலைவன் நீக்கிவைத்துப் பிரிந்த காலத்துத் தலைவி வருத்தமெய்தினும்: ஆண்டுத் தோழி வினவாமலுந் தானே கூறு மென்றான், ஆற்றுவித்துப் பிரிதல் களவிற்குப் பெரும்பான்மை இன்மையின். வைத்தவென்றது நீக்கப்பொருட்டு. வருந்துதல் ஆற்றுவிப்பாரின்மையின் வருத்தமிகுதலாம்.

வரையா நாளிடை வந்தோன் முட்டினும் = வரையாதொழுகுந் தலைவன் ஒருஞான்று தோழியையானும் ஆயத்தையானுஞ் செவிலியையானுங் கதுமென எதிர்ப்பினும்: உரையெனத் தோழிக்கு உரைத்தற்கண்ணும் = நொதுமலர் வரைவிற்கு மணமுரசியம்பியவழியானும் பிறாண்டானுந் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக் கூறி அதனை நமரறியக் கூறல்வேண்டுமென்றுந் தலைவற்கு நம் வருத்தமறியக் கூறல்வேண்டுமென்றுங் கூறுதற் கண்ணும்: தானே கூறுங் காலமும் உளவே = இம்மூன்று பகுதியினுந் தோழி வினவாமற் தலைவி தானே கூறுங் காலமும் உள. எ-று. உம்மையாற் தோழி வினவிய இடத்துக் கூறலே வலியுடைத்து. உம். "அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை - மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை - பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன் - றகாஅன் போலத் தான்றீது மொழியினுந் - தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே - முத்துநிரை யொத்த முள்ளெயிற்றுத் துவர்வாய் - வரையாடு வன்பறழ்த் தந்தைக் - கடுவனு மறியுமக் கொடியோ னையே" "யாரு மில்லைத் தானே கள்வன் - றானது பொய்ப்பின் யானெவன் செய்கோ - தினைத்தா ளன்ன சிறு பசுங்கால - வொழுகுநீ ராரல் பார்க்குங் - குருகு முண்டுதா மணந்த ஞான்றே." இவற்றுட் றுறந்தான்போலவும் மறந்தான்போலவுங் கருதித் தான் றீதுமொழியினுமெனவும் யானெவன் செய்கோ வெனவுந் தோழி வினவாக்காலத்து அவன்றவற்றை வரைவிடை வைத்தலின் ஆற்றாமைக்கு அறிவித்தாள். "பகலெரி சுடரின் மேனி சாயவும் - பாம்பூர் மதியி னுதலொளி கரப்பவு - மெனக்

குகீ யுளையா யாயினே நினக்கியா - னுயிர்பகுத் தன்ன மாண்பினெ ளுதலி - னதுகண டிசினல் யானே யென்றுநனி - யழுத லான் றிசி னுயிழை யொலிகுர - லேனல் காவலி னிடையுற் றொருவன் - கண்ணியன் கழலன் றாரன் றண்ணெனச் - சிறுபுறங் கவையின ளுக வநற்கொள - டல்தே நினைந்த நெஞ்சமொ - டிம்பரா இன றியா றுறற நோயே." இது தோழி வினவியவழித் தலைவி கூறியது. வரைவிடைவைத்தகாலத்து வருந்திறும் என்பதனைத் தொகுத்தமொழியின் வகுத்தனாகோடல் என்னுந் தந்திரவுத்தியா ககொண்டு அதன்கண் வேறுபட வருவனவெல்லாங்கொள்க. "உரைத்திசிற் றோழியது புரைத்தோ வன்றே - யருந்துய ருழத் தலு மாற்றா மதன்றலைப் - பெரும்பிறி தாத லதனினு மஞ்சுது - மன்னோ பின்னு நன்மலை நாடன் - பிரியா வன்பின ரிருவரு மெ னறு - மலரதற் கஞ்சினன் கொல்லோ பலருடன் - றுஞ்சூ யா மத தாறுமென் - னெஞ்சத் தல்லது வரவறி யானே." இது வரைவிடைக் கவன்று தோழிக்குக் கூறியது. "அதுகொ றோழி காம நோயே" என்னும் பாட்டும் அது. "தோழி வாழி மேனுட் சாரற் - கொடியோர குன்றம் பனிப்ப நெடிதுநின்று - புயறு டங் கின்றே பொய்யா வானத் - தளோவா லழிதுளி தலைஇ - வெம்முலை யாக நினைக்குமெங் கண்ணே." இது வரைவிடைப் பருவங்கண்டு ஆற்றாது தோழிக்குக் கூறியது. "பனிப்புத லிவர்ந்த பைங்கொடி யவரைக் - கிளிவா யொப்பி னொளிவிடு பன்மலர் - வெருக்குப் பல்லுருவின் முல்லையொ டுஞல - வாடை வந்ததன் றலையு நோய்பொரக் - கண்டிசின் வாழி தோழி தெண்டிரைக் - கடலாழ் கலத்திற் றோன்றி - மாலே மறையுமவர் மணிநெடுங் குன்றே." இது பருவங்கண்டு ஆற்றாது தோழிக்குக் கூறியது. "நோயுங் கைமிகப் பெரிதே மெய்யுந் - தீயுமிழ் தெறலின் வெய்தா கின்றே - பொய்யெனச் சிறிதாங் குயிரிய பையென - முன்றிற் கொளினேர் நந்துவள் பெரிதென - நிரையே நெஞ்சத் தன்னைக் குய்த்தாண் - டொயினி வாழி தோழி புரையி - னுண்ணே ரொல்வலை நெகிழ்த்தோன் குன்றந் - தண்ண னெடுவரை யாடித் தண்ணென - வியலறை மூழ்கிய வளியென் - பசலை யாகந் தீண்டிய சிறிதே." இது வரைவிடை ஆற்றாமை மிக்குழி அவன்வரையின் மூழ்கிய காற்று என்மெய்க்கட் படினும் ஆற்றலாமென்றது. "அம்ம வாழி தோழி யவரபோ - னம்முடை வாழ்க்கை மறந்தன்று கொல்லோ - மனையெறி யுலக்கையிற் றினைகிளி கடியுங் - கான நாடன் பிரிந்தெனத் - தானும் பிரிந்தன்றென் மாமைக் கவினே." இது வன்புறையெதிரழிந்தது. "சிறுபுன் மாலை சிறு

புன் மாலை - நீப்பனிப் பன்ன தண்வளி யசைஇச் - செக்கர் கொண்ட சிறுபுன் மாலை - வைகலும் வருதியா லெமக்கே - யொன்றுஞ் சொல்லாயவர் குன்றுகெழு நாட்டே." இது மாலைப் பொழுது கண்டு வருந்திக் கூறியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக. "கேட்டிசின் வாழி தோழி யல்கற் - பொய்வ லாளன் மெய்யுற மரீஇ - வாய்த்தகைப் பொய்க்கன மருட்ட வேற்றெழூஉ - தமளி தைவந் தனனே குவளை - வண்டுபடு மலரிற் சாஅய்த் - தமியோன் மன்ற வளியேன் யானே." வரைதற்குப் பிரிய வருந்துகின்றது என்னென்றாட்குக் கனவு நலிவுரைத்தது. "ஆடமைக் குயின்ற வவிர்துளை மருங்கிற் - கோடையவ்வளி குழலிசை யாகப் - பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை - தோடமை முழவின் றுதைகுர லாகக் - கணக்கலை யிகுக்குங் கடுங்குரற் றூம்பொடு - மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக - வின்ப லிமிழிசை கேட்டுக் களிசிறந்து - மந்தி நல்லவை மருள்வன நோக்கக் - கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில் - விழவுக்கள விறலியிற் றோன்று நாட - னுருவவல் விற்பற்றி யம்பு தெரிந்து - செருச்செய் யானை சென்னெறி வினைஇப் - புலர்குர லேனற் புழையுடை யொருசிறை - மலாதார் மார்ப னின்றோற் கண்டோர் - பலர்சிலர் வாழி தோழி யவரு - ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி - யோர்யா னாகுவ தெவன்கொ - னீர்வார் கண்ணொடு நெகிழ்தோளேனே." அவனை ஆயத்தார் பலருங் கண்டாரென வந்தோன் முட்டியவாறும் அவருள் நெகிழ்தோளேன் யானேயெனத் தானே கூறியவாறுங் காண்க. "தாழை குருகீனுந் தண்ணந் துறைவனை - மாழைமா னோக்கின் மடமொழி - நூழை - நுழையு மடமகன் யார்கொலென் றன்னை - புழையு மடைத்தாள் கதவு." "நகைநீ கேளாய் தோழி யல்கல் - வயநா யெறிந்து வன்பறழ் தழீஇ - யிளையரெய்துதன் மடக்கிக் கிளையொடு - நான்முலைப் பிணவல் செவிய கானொழிந் - தரும்புழை முடுக்க ராட்குறித்து நின்ற - தறுகட் பன்றி நோக்கிக் கானவன் - குறுகினன் றொடுத்த கூர்வாய்ப் பகழி - மடைசெலன் முன்பிற்றன் படைசெலச் செல்லா - தருவழி யிலங்குமென் பெருவிறல் போன்மென - வெய்யாது பெயருங் குன்ற நாடன் - செறிவுய றொடக்கலிற் பரீஇப்புரி யவிழ்ந்தேந்து - குவவு மொய்ம்பிற் பூச்சோர் மாலை - யெற்றியிற் கயிற்றி னொழில்வந்து துயல்வர - வில்வந்து நின்றோற் கண்டன ளன்னை - வல்லே யென்முக நோக்கி - நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே." இவை வந்தோன் செவிலியை எதிர்த்துழிக் கூறியன. "கொடியவுங் கோட்டவு நீரின்றி நிறம்பெறப் - பொடியழற் புறங்

தந்த பூவாப்பூம் பொலங்கோதைத் - தொடிசெறி யாப்பமை யரிமுன்கை யணைத்தோளா - யடியுறை யருளாமை யொத்ததோ நினக்கென; காந்தா திருங்கூந்த லெஞ்சாது நனிபற்றிப்- பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை - நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ் - விரன்முறை சுற்றி மோத்தலு மோந்தனன்; நறுஅவவிழ்ந் தனவெண்மெல் விரற்போது கொண்டு - செறுஅச் செங்கண் புதைய வைத்துப் - பறுஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்; தொய்யி லிளமுலை யினிய தைவந்து - தொய்யலந் தடக்கையின் வீழ்பிடி யளிக்கு - மையல் யானையின் மருட்ட மருட்டினன்; அதனால், லலவ கண்ணந்தனன் றோழி நன்னக - ரருங்கடி நீவாமைக் கூறி னன்றென - நின்னொடு சூழ்வ தோழி நயம்புரிந்- தின்னது செய்தா ளிவளென - மன்னு வுலகத்து மன்னுவது புரைமே." எனக் கைப்பட்டுக் கலங்கிப் புணர்ச்சி நிகழ்ந்ததை கூறி அருங்கடி நீவாமைக் கூறின் நன்றெனத் தமாக்குக் கூறுமாறு தோழிக்குத் தலைவி கூறினாள். சுரிதகத்து இருகாற் றோழியென்றாள் நாணுத் தலையாக மறைகரந்தவாறு தீரத் தோழிக்கு முகமனுக. "எரிதகைந் தன்ன செந்தலை யன்றில்-பிரியின் வாழா தென்போற் றெய்ய - துறைமேல் வலம்புரி துணைசேர்த் தோடிக்- கருங்கால் வெண்குருகு பயிறரும் - பெருங்கடற் படப்பையெஞ் சிறுநல் லூரோ." இது அன்றில் பிரியின் வாழாதெனக் கூறென்றது. "ஐயோ வெனயாம் பையெனக் கூறிற் - கேட்குவர் கொல்லோ தாமே மாக்கடற் - பருஉத்திரை தொகுத்த நுண்கண் வெண்மணலின்னுந் தூரா காணவர்-பொன்னி னெடுநேர் போகிய நெறியே." அவர் இன்னும் போவதற்குமுன்னே நம்வருத்தத்தை வெளிபடக் கூறென்றது. "என்னைகொ றோழி யவாகண்ணு நன் இல்லை- யன்னை முகனு மதுவாகும்- பொன்னலர் - புன்னையம் பூங் கானற் சேர்ப்பனை தக்கதோ - நின்னல்ல தில்லென் றுரை." இவை தலைவற்குக் கூறென்றன. இவை தலைவி அறத்தொடு நிற்றற்பகுதி. தோழிக்கே உரைத்தற்குத் தோழிக்கென்றார். (உக)

ககரு. உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
காமக் கிழவ னுள்வழிப் படினுந்
தாவி னன்மொழி கிழவி கிளப்பினு
மாவகை பிறவுந் தோன்றுமன் பொருளே.

இது தலைவிகூற்றிற்குச் சிறப்பில்லன கூறி, அவையும் அகப்பொருளாம் என்கின்றது. (இ-ள்.) உயிரினும் நாண் சிறந்தன்று= எல்லாவற்றினுஞ் சிறந்த உயிரினும் மகளிர்க்கு நாண் சிறந்தது: நாணினுஞ் செயிர்தீர் கற்புக் காட்சி சிறந்தன்று=அந்நாணினுங் குற்றந் தீர்ந்த கற்பினை நன்றென்று மனத்தாற் காணுதல் சிறந்தது: எனத் தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு=என்று முன்னுள்ளோர் கூறிய கூற்றினைப் பொருந்திய நெஞ்சுடனே: காமக் கிழவன் உள்வழிப் படினும்= தலைவன் இருந்தவிடத்தே தலைவி தானே செல்லினும்: தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்= மனவலியின்றிச் செல்வாமெனக் கூறும் நன்மொழியினைத் தலைவிதானே கூறினும்: பொருள் தோன்றும்=அவை அகப்பொருளாய்த்தோன்றும்: ஆவகை பிறவும் மன் பொருள் தோன்றும்= அக்கூற்றின் கூறுபாட்டிலே பிற கூற்றுக்களும் மிகவும் அகப்பொருளாய்த் தோன்றும்.—எ-று. என்றது, தலைவிகூற்று. சிறுபான்மை வேறுபட்டு வருவனவற்றைக் கற்புச்சிறப்ப நாண் துறந்தாலுங் குற்றம் இன்றென்றற்குச் செயிர்தீரென்றார்; நன்மொழியென்றார் கற்பிற் றிரியாமையின்; அவை இன்னோரன்ன வழி நெஞ்சொடுகிளத்தல்போல்வன. இவள்கூற்றுத் தோழிக்குந் தலைவற்குமே தோன்றுவதென்க. மன் ஆக்கம், இழிந்த பொருளும் உயரத் தோன்றலின். "மள்ளர் குழீஇய விழவி னானும்- மகளிர் தழீஇய துணங்கை யானும் - யாண்டுங் காணேன் மாண்டக் கோனை - யானுமோ ராடுகள மகளே யென்கைக் - கோடீ ரிலங்கு வளை நெகிழ்த்த - பீடுகெழு குரிசிலு மாடுகள மகனே." ஆண்டுங் காணேனென அவனுள்வழிப்பட்டுக் கூறினமையிற் கற்பின்பாலதாய்த் தோழியுந் தலைவனும் பெண்டன்மையிற் றிரியக் கருதாது நன்குமதித்தவாறு காண்க. "அருங்கடி யன்னை காவ னீவிப்- பெருங்கடை யிறந்து மன்றம் போகிப் - பகலே பலருங் காண நாணிட் - டகல்வயற் படப்பை யவனூர் வினவிச் - சென்மோ வாழி தோழி பன்னாட் - கருவி வானம் பெய்யா தாயினு - மருவி யார்க்கு மயந்திகழ் சிலம்பின் - வான்றோய் மாமலை நாடனைச் - சான்றோ 'யல்லை யென்றன மவற்கே." "கோடீ ரிலங்குவளை நெகிழ நாடொறும் - பாடில் கலுழுமங் கண்ணொடு புலம்பி - யீங்கிவணுறைதலு முயங்குவ லாங்கே-யெழுவினி வாழி நெஞ்சே முனாது- குல்லைக் கண்ணி வடுகர் முனையது - வல்வேற் கட்டி நன்னாட்டும்பர் - மொழிபெயர் தேஎத்த ராயினும் - வழிபடல் சூழ்ந்திசினவருடை நாட்டே." இவை தோழிக்கும் நெஞ்சிற்குங் கூறியன. "ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த - குரும்பி வல்சிப் பெருங்கை

யேற்றை * * * வென்னூரப் பெறினே." என்னும் அகப்பாட்டும் அது. இங்ஙனம் வந்துழியுங் கற்புச் சிறந்ததாம். இனிப் பிறவாற் கொள்வன வருமாறு: "பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழி-லுன்னமலை நாட னலம்புனைய- மென்முலையாய்- போயின சின்னாள் புனத்து மறையினா - லேயினா ரின்றி யினிது." "கானலஞ் சிறுகுடிக் கடன்மேம் பரதவர் - நீனிறப் புன்னைக் கொழுநிழ லசைஇத் - தண்பெரும் பரப்பி னொண்பத நோக்கி - யங்க ணரில் வலை யுணக்குந் துறைவனோ - டலரே யன்னை யறியி னிவணுறை- வரிய வாகு நமக்கெனக் கூறிற் - கொண்டுஞ் செல்வர்கொ றோழி யுமணர்-வெண்க லுப்பின் கொள்ளை சாற்றிக் - கணநிரை கிழிக்கு நெடுநெறிச் சகட - மணன்மடுத் துரறு மோசைக் கழனிக் - கருங்கால வெண்குருகு வெரூஉ - மிருங்கழிச் சேர்ப்பிற்றம் மிறைவனூர்க்கே." எனவரும். "விழுந்தண் மாரிப் பெருந்தண் சாரற்- கூதிர்க் கூவிரத் தலரி நாறு - மாதர் வண்டின நயவரு தீங்குரன்- மணநாறு சிலம்பி னசுண மோர்க்கு - முயர்வரை நாடற் றுறத்த லொன்றோ - துடாமருங் கறியா வன்னைக் கிந்நோய் - தணியுமா றிதுவென வுரைத்த லொன்றோ - செய்யா யாகலிற் கொடியை தோழி - மணிகெழு நெடுவரை யணிபெற நிவந்த - செயலை யந்தளி ரன்னவென் - பதனின் மாமைப் பசலையுங் கண்டே." இது அறத்தொடு நிற்குமாறு தோழிக்குத் தலைவி கூறியது. இன்னும் அதனானே தோழியைத் தலைவி ஆற்றுவித்தலுங் கொள்க. "நெகிழ்ந்த தோளும் வாடிய வரியுந் - தளிர்வனப் பிழந்த நிறனு நோக்கி - யாஞ் செய்வ தன்றிவ டுயரென வன்பினா - னழாஅல் வாழி தோழி வாழைக் - கொழுமட லகலிலைத் துளிதலைக் கலாவும் - பெருமலை நாடன் கேண்மை நமக்கே - விழும மாக வறியி னன்றெனக் - கூறுவை மன்னோ நீயே - தேறுவென் மன்யா னவருடை நட்பே." எனவரும். "துறுக லயலது மாணை மாக்கொடி - துஞ்சு களி றிவருங் குன்ற நாட - னெஞ்சு களனாக நீயலேன் யானென- நற்றோள் மணந்த ஞான்றை மற்றவன் - றவாஅ வஞ்சின முரைத்தது - நோயோ தோழி நின்வயி னானே." இதுவும் அது. (௨௨)

௧௧௪. நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்
செய்வினை மறைப்பினுஞ் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வரூஉ
முணர்ச்சி யேழினு முணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொரு ணாட்டத் தானும்

குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப்
பெருமையிற் பெயர்ப்பினு முலகுரைத் தொழிப்பினு
மருமையி னகற்சியு மவளறி வுறுத்துப்
பின்வர வென்றலும் பேதைமை யூட்டலு
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலு
மஞ்சியச் சுறுத்தலு முரைத்துழிக் கூட்டமோ
டெஞ்சாது கிளந்த விருநான்கு கிளவியும்
வந்த கிழவனை மாயஞ் செப்பிப்
பொறுத்த காரணங் குறித்த காலையும்
புணர்ந்தபி னவன்வயின் வணங்கற் கண்ணுங்
குறைந்தவட் படரினு மறைந்தவ ளருகத்
தன்னொடு மவளொடு முதன்மூன் றளைஇப்
பின்னிலை நிகழும் பலவேறு மருங்கினு
நன்னயம் பெற்றுழி நயம்புரி யிடத்தினு
மெண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்
புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்
வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தும்
புணர்ந்துழி யுணர்ந்த வறிமடச் சிறப்பினு
மோம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணுஞ்
செங்கடு மொழியாற் சிதைவுடைத் தாயினு
மென்புநெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ
யன்பு தலையடுத்த வன்புறைக் கண்ணு
மாற்றது தீமை யறிவுறு கலக்கமுங்
காப்பின் கடுமை கையற வரினுங்
களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதன் மிகுதி யுளப்படப் பிறவு
நாடு மூரு மில்லுங் குடியும்
பிறப்புஞ் சிறப்பு மிறப்ப நோக்கி
யவன்வயிற் றோன்றிய கிளவியொடு தொகைஇ
யனைநிலை வகையான் வரைதல் வேண்டினு
மையச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினு

மவன்விலங் குறினுங் களம்பெறக் காட்டினும்
பிறன்வரை வாயினு மவன்வரைவு மறுப்பினு
முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்
வரைவுடன் பட்டோற் கடாவல் வேண்டினு
மாங்கதன் றன்மையின் வன்புறை யுளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையுந்
தாங்கருஞ் சிறப்பிற் றோழி மேன.

இது முறையானே தோழிக்கு நிகழும் இடம்பலவுந் தொகுத்துக் கூறுகின்றது. (இ-ள்) தலைவன் பெட்டவாயில் பெற்று இரவுவலியுற்று முன்னுறுபுணர்ச்சியை உரைப்பினை இன்னது நிகழுமென்று அறியாது அருசிக் கரந்து மதியுடம்படப்பத் தோழி மதியுடம்படுங்கால் அவள் ஆராயும் ஆராய்ச்சியெல்லாம் நாட்டமாம்; அது எட்டாம்: அவற்றுள் முன்னுறுபுணர்ச்சியை உணர்தற்குக் காரணம் எழுவகைய. அவை நாற்றமுதலிய ஏழும். நாற்றமாவது, ஓதியும் நுதலும் பேதைப்பருவத்துத் தகநாறாது தலைவன் கூட்டத்தான் மான்மதச்சாந்து முதலியனவும் பலபூக்களும் விரவிநாறுதல்: தோற்றமாவது, நீண்டும் பிறழ்ந்தும் பிள்ளைப்பருவத்து வெள்ளைநோக்கின்றி உள்ளொன்று கொள்ள நோக்குங் கண்ணும், தந்நிலை திரிந்து துணைத்து மெல்கிப் பணைத்துக்காட்டுந் தோளும் முலையுமென்று இன்னோரன்ன: ஒழுக்கமாவது, பண்ணையாயத்தோடு முற்றிலான் மணற்கொழித்துச் சோறமைத்தன் முதலியன முனிந்த குறிப்பினளாய்ப் பெண்டன்மைக்கு ஏற்ப ஒழுகுதல்: உண்டியாவது, பண்டு பான்முதலிய கொண்டு ஒறுத்து ஊட்ட உணவெருகின்றாள், இப்பொழுது ஆசாரமும் நாணுங் காதலும் மீதூர அதன்மேல் உவட்பு ஆண்டு இன்றி மிக ஒறுத்த உள்ளத்தளாதல்: செய்வினைமறைத்தலாவது, முன்புபோலாது இக்காலத்து நினைவுஞ் செயலுந் தலைவனோடு பட்டனவேயாகலான் அவை பிறர்க்குப் புலனாகாமை மறைத்தல்; அது ஆயத்தோடு கூடாது இடந்தலைப்பாட்டிற்கு ஏதுவாக நீங்கிநிற்றலாம்: செலவாவது, பண்டுபோல் வேண்டியவாறு நடவாது சீர்பெற நடந்து ஓரிடத்துச்சேறல்: பயில்வாவது, செவிலிமுலையிடத்துத் துயில் வேண்டாது பெயர்த்து வேறோரிடத்துப் பயிறல். இன், சாரியை. புணர்ச்சி எதிர்ப்பாடு=எதிர்ப்பாட்டுப் புணர்ச்சியென மாறுக, அஃது கொடுப்பாரும் அடுப்பாருமின்றி இருவருந் தமியராய்

எதிர்ப்பட்டுப் புணரும் புணர்ச்சி. இவ்வொழுக்கம் பாங்கற் கூட்டத்திற்கு ஏதுவாகா.

உள்ளுறுத்து வருஉம் உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை= அப்புணர்ச்சியெதிர்ப்பாடு நிகழ்ந்ததனைத் தோழி தன்னுள்ளத்துளளே வினவிவருகின்ற ஐயவுணர்வினை அவ்வேழனானுந் தெளிந்து புணர்ச்சி உண்டென்பதனை உணர்ந்தபின்றை: இன்னதும் இன்னதுமாகிய ஏழென்க. அங்ஙனந் துணிந்தபின்னல்லது தலைவிமாட்டுத் தோழி சொன்னிகழ்த்த லென்றற்குப் பின்றையென்றார். உம். "காம்பிவர் தோளுங் கருமதர் மழைக்கணும் - வீங்கிள முலையும் வேறுபட் டனவே - தாங்கரு நாற்றந் தலைத்தலை சிறந்து - பூங்கொடிக் கிவர்ந்த புகற்சியென வாங்கிற் - பகலுங் கங்குலு மகலா தொழுகுமே - னன்றி யளவைத் தன்றி - தெவ்வனகொன் மற்றிவட் கெய்திய வாறே." இதனுள் நாற்றமுந் தோற்றமுஞ் செலவும் வந்தன. "கண்ணுஞ் சேயரி பரந்தன்று நுதலு - நுண்வியர் பொறித்து வண்டார்க் கும்மே - வாங்கமை மென்றோண் மடநதை - யாங்கா யினள்கொ லென்னுமென் னெஞ்சே." "தெய்வத்தி னுயதுகொ றெண்ணீர் புடையுடுத்த - வையத்து மக்களி னுயதுகொ - லைவற்று - வண்டார்பூங் கோதை வரிவளைக்கை வாணுதலாள் - பண்டைய ளல்லள் படி." இவையும் அவை. "ஏனல் காவ லிவளு மல்லண் - மான்வழி வருகுவ னிவனு மல்ல - னரந்தங் கண்ணி யிவனோ டிவளிடைக் - கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே - நம்மு னாணுநர் போலத் தம்முண் - மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல - வுள்ளத் துள்ளே மகிழ்ப - சொல்லு மாடுப கண்ணி னானே." இது புணர்ச்சி உணர்ந்தது. "இவள் வயிற் செலினே யிவற்குடம்பு வறிதே - யிவன்வயிற் செலினே யிவட்கு மற்றே - காக்கை யிருகணி னொருமணி போலக் - குன்றுகெழு நாடற்குங் கொடிச்சிக்கு - மொன்றுபோன் மன்னிய சென்றுவா ழுயிரே." இதுவும் அது.

மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர்பொருள் நாட்டத்தானும் = அங்ஙனம் உணர்ந்தபின் தோழி தலைவியுடன் ஆராயுங்காற் தன்மனத்து நிகழ்ந்தனவற்றை மறைத்துக் கூறவேண்டுதலின் உண்மைப்பொருளானும் பொய்ப்பொருளானும் விராவிவரினும் அவட்குக் குற்றேவல் செய்யுந் தன்மையிற் தப்பாதவாற்றான் வேறுபல் கவர்பொருள்படக்கூறி ஆராயும் ஆராய்ச்சிக்கண்ணும்: நாணால் இறந்துபடாமற் கூறுதற்கு வழிநிலை பிழையாதென்றார். பிறைதொழுவாமெனவுங், கணைகுளித்த புண்

கூர் யானை கண்டனெனெனவுந், தன்பெருமைக்கு ஏலாத சிறுசொற்கூறிக் குறையுற்று நிற்கின்றான் ஒருவனுளன் அவனை நீயுங் காண்டல் வேண்டுமெனவும், அவன் என்னைத் தழுவிக்கொண்டு குறைகூறவும் நான்மறுத்து நின்றேனென்றாற் போலவும் மெய்யும் பொய்யும் விராயும் பிறவாறாகவுங் கூறுவன பல்வேறு கவர்பொருளாம். உம். "முன்னுாற தொழத்தோன்றி முள்ளெயிற்று யத்திசையே-பின்னுந் தொழத்தோன்றிற் றீத்தகாண் - மன்னும் - பொருகளி மால் யானைப் புகழ்க்கிள்ளி பூண்போற் - பெருகொளியான் மிக்க பிறை." இது பண்டு கூறியவாறு கூறலின் மெய்யும் பிறைதொழாமை அறிந்துகூறலிற் பொய்யுமாய் வழிநிலை பிழையாத கவர்பொருளாயிற்று. "பண்டைப் புனத்துப் பகலிடத் தேனலுட்-கண்டிக் களிற்றை யறிவன்மற் - றிண்டிக் - கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணா-யுதிர முடைத்திதன் கோடு." நடுங்க நாட்டம்; இது இறந்துபாடு பயத்தலிற் கந்தருவத்திற்கு அமையாது. "தொய்யில் வன முலையுந் தோளுங் கவினெய்தித-தெய்வங் கமழுமா லெம்பாலு-மையுறுவல் - பொன்னனங் கொடிமருங்குற் பூங்கயற் கண்ணிணைய்க்-கென்னை யிதுவந்த வாறு." என வழிநிலை பிழையாமற் கவர்பொருளாக நெறிபடுநாட்டம் நிகழ்ந்தவழித் தலைவி சுனையாடினேற்கு இங்ஙனம் ஆயிற்றென்னும். அதுகேட்டுத் தோழியும் யானும் ஆடிக்காண்பல் என்னும். உம். "பையுண் மாலைப் பழுமரம் படரிய-நொவ்வுப்பறை வாவ னேன்சிற கேய்க்கு- மடிசெவிக் குழவி தழீஇப் பையாந - திடுகுகவுண் மடப்பிடி யெவ்வங் கூர - வெந்திறலாளி வெரீஇச் சந்தின் - பொரியரை மிளிரக் குத்தி வான்கே-ழுருவ வெண்கோ டேய்க்கொண்டு கழியுங் - கடுங்கண் யானை கானுற வொற்றலிற் - கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு-பேஎ நாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை - தோனே யொல்வளை தெளிர்ப்ப நின்போல் - யானு மாடிக் காண்கோ தோழி - வரைவயிறு கிழித்த நிழறிகழ் நெடுவேற் - றிகழ்பூண் முருகன் றீம்புன லலைவாய்க் - கமழ்பூம் புறவிற் கார்பெற்றுக் களித்த - வொண்பொறி மஞ்ஞை போல்வதோர் - கண்கவர் காரிகை பெறுதலுண் டெனினே." எனவரும். "நெருந லெல்லை யேனற் றோன்றித் - திருமணி யொளிர்வரும்" என்னும் அகப்பாட்டுங் கொள்க. "எழாஅ வாகலி னெழினலந் தொலைய - வழாஅ தீமோ நொதுமலர் தலையே - யேனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த - பகழி யன்ன சேயரி மழைக்க - ணல்ல பெருந்தோ ளோயே கொல்லை - னெறிபொற் பிதிர்விற் சிறுபல் காய - வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி-மயிலறி வறியா மன்னோ-பயில்குரல் கவரும் பைம்புறக் கிளி

யே." தலைவி வேறுபாடு கண்டு ஆராயுந் தோழி தனது ஆராய்ச்சியை மறைத்துக் கூறியது. நாட்டத்தானும் என்னும் உம்மை முற்று, நாட்டமெல்லாந் தழீஇயினமையின். ஆனுருபு இடப்பொருட்டாம். அஃது இடமாக வருகின்ற எட்டனையும இடத்தியல் பொருளாக உரைக்கவே அவனை நாடுகின்ற காலமும் மேல்வருகின்ற எட்டனையுந் தலைவற்கு உரைக்குங்காலமும் ஒருங்கு நிகழுமென்பதாம். இங்ஙனம் நாடி மதியுடம்படுக்குந் துணையுந் தலைவற்கு இக்குறை முடிப்பல் என்னாது ஒழுகும்.

குறையுறற்கு எதிரிய கிழவனை மறையுறப் பெருமையிற் பெயர்ப்பினும் = இரவுவலியுற்றுக் குறைகூறத் தொடங்கிய தலைவனைத் தோழி தான் இவ்வொழுகலாறு அறிந்தும் அறிந்திலள்போலத் தலைவன்பெருமை கூறி அவன்குறிப்பினை மாற்றினும்: தான் அறிந்ததனை மறைத்துக்கூறுதலனறி அன்பின்மை ஒருதலையாக உடையளல்லள். உ-ம். "கலலோங்கு சாரற கடிபுனங் காத்தோம்பு - நல்கூர்ந்தார் மாட்டு நயந்தொழுகித் - தொலைவந்த - வான்றோய் குடிக்கு வடுச்செய்த றக்கதோ - தேன்றோய்பூங் கண்ணியீர் நீர்." "மறுவொடு பட்டன மாமலை நாட - சிறுகுடியோர் செய்வன பேணார் - சிறுகுடிக்கு - மூதான் புறத்திட்ட சூடேபோ னில்லாதே - தாதாடு மார்ப பழி." "தகைமாண் சிறப்பிற் சான்றோர்க் கொத்த - வகையமை வனப்பினை யாகலி னுலகமொடு - பாற்படற் பாலை மன்னோ காப்புடுத் - தோங்குயர் நடுக்கத்துச் சாந்துவளர் நனந்தலை - நெடுவரை மருங்கிற் குடிமை சானறோ - ரின்ன வொன்றி னின்பம் வெஃகிப் - பின்னிலை முயற்சியின் வருந்தினு - நும்மோ ரன்னோர்க்குத் தருவதோ வன்றே." எனவரும். "இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி - நீனிறப் பெருங்கடல் கலங்க வுள்புக்கு - மீனெறி பரதவர் மகளே நீயே - நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்க் - கடுந்தேர்ச் செல்வன் காதன் மகனே - நண்ணிச் சுறவறுத்த வுணங்கல் வேண்டி - யினப்புள் ளோப்பு மெமக்கு நல னெவனோ - புலவு நாறுதுஞ் செலநின் றீமோ - பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை - நும்மொடு புரைவதோ வன்றே - யெம்ம னோரிற் செம்மலு முடைத்தே." இதுவும் அது.

உலகு உரைத்து ஒழிப்பினும் = அவ்வொழுக்கம் அறியாள் போற் கரந்த தோழி உலகத்தாரைப்போல் வரைந்துகொள்ளெனக் கூறித் தலைவனை நீக்கினும்: உ-ம். "கோடீ ரெல்வளைக் கொழுமணிக் கூந்த - லாய்தொடி மடவரல் வேண்டுதி யாயிற் - றெண்கழிச் சேயிறாப் படூஉந் - தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ."

அருமையின் அகற்சியும் = அவை கேட்டுப் பிற்றைஞான்றும் வந்தவன்மாட்டுச் சிறிது நெஞ்சுநெகிழ்ந்த தோழி அங்ஙனங் கூறாது இவள் அரியளெனக் கூறுதலும்: இருவருமுள்வழியவன் வரவுணர்தலின் இருவருள்ளமும் உணர்ந்து அங்ஙனங் கூறினாள். "நெருநலு முன்னா ளெல்லையு மொருசிறைப் - புதுவை யாகலிற் கிளத்த னாணி - நேரிறை வளைத்தோ ணின்றோழி செய்த - வார னார் வருத்தங் களையா யோவென - வெற்குறை யுறுதி ராயிற் சொற்குறை - யெம்பதத் தெளிய ளல்ல ளெமக்கோர் - கட்காண் கடவு ளல்லளோ பெரும - வாய்கோன் மிளகின் மலையங் கொழுங்கொடி - துஞ்சுபுலி வரிப்புறந் தைவரு - மஞ்சுசூழ் மணிவரை மன்னவன் மகளே." "தழையொடு தண்கண்ணி தன்மையாற் கட்டி - விழையவுங் கூடுமோ வெற்ப - விழையார்ந் - திலங்கருவி பொன்கொழிக்கு மீர்ங்குன்ற நாட - குலங்கருதி வாழ்வார் மகள்."

அவள் அறிவுறுத்துப் பின் வர என்றலும் = தலைவனை நோக்கி நீகாதலித்தவட்கு நீயேசென்று அறிவித்துப் பின்னர் என்மாட்டுவருகவென்றலும்: அவனறிவுறுத்தென்று பாடமோதுவாரும் உளர். உம். "தன்னையுந் தானாணுஞ் சாயலாட் கிஃதுரைப்பி - னென்னையு நாணப் படுங்கண்டா - யென்னையே - வேயோர்மென் றோளிக்கு வேறா யினியொருநா - ணீயே யுரைத்து விடு." இது நீயே யுரையென்றது. "நாள்வேங்கை பொன்சொரியு நன்மலை நன்னாட - கோள்வேங்கை போற்கொடிய ரென்னைமார் - கோள்வேங்கை - யன்னையா னீயு மிருந்தழையா மேலாமைக் - கென்னையோ நாளை யெளிது." இது கையுறைமறுத்துப் பின் வருக என்றது. இவை ஒருகூற்றாக வருவனவுளவேற் காண்க.

பேதைமை யூட்டலும் = அங்ஙனம் பின் வருகவென்றவழி முன்வந்தானை அறியாமை ஏற்றிக் கூறலுந் தலைவியையும் அங்ஙனம் அறியாமையேற்றிக் கூறலும்: "நெடுந்தேர் கடைஇத் தமியராய் நின்று - கடுங்களிறு காணிரோ வென்றீர் - கொடுங்குழையார் - யானை யதருள்ளு நிற்பரோ தம்புனத் - தேனற் கிளிகடிகு வார்." "வேங்கை கமழும் வெறிகமழ் தண்சிலம்பின் - வாங்கமை மென்றோட் குறவர் மகளிரோஞ் - சோர்ந்த குருதி யொழுகமற் றிப்புறம் - போந்த திலையக் களிறு." இவை தலைவனைப் பேதைமை யூட்டின. "நறுந்தண் டகரம் வகுள மிவற்றை - வெறும்புதல்போல் வேண்டாது வெட்டி - யெறிந்துழுது - செந்தினை வித்துவார் தங்கை பிறர்நோய்க்கு - நொந்தினைய வல்லளோ நோக்கு." இவை தலைவி

யைப் பேதைமையூட்டியது. "இளையள் விளைவிலள்" என்பதூஉம் இதன்கண் அடங்கும். "புன்றலை மந்திக் கல்லா வன்பறழ் - குன்றுழை நண்ணிய முன்றிற் போகா - தெரியகைந் தன்ன வீததை யிணர - வேங்கையம் படுசினை பொருந்திக் கைய - தேம்பெய் தீம்பால் வெளவலிற் கொடிச்சி - யெழுதெழில் சிதைய வழுத கண்ணே - தேர்வண் சோழர் குடந்தை வாயின் - மாரியங் கிடங்கி னீரிய மலர்ந்த - பெயலுறு நீலம் போன்றன விரலே - பாஅ யவ்வயி றலைத்த லின்னு - தாமெழை தவழுங் கோடுயர் பொதியி - னோங்கிருஞ் சிலம்பிற பூத்த - காந்தளங் கொழுமுகை போன்றன சிவந்தே." எனவரும்.

முன்னுறு புணர்ச்சி முறைநிறுத்து உரைத்தலும் = அங்ஙனம் பேதைமையூட்டியவழி இவள் இச்குறைமுடிப்பளென்று இரந்து ஒழுகினேற்கு இவள்புணர்ச்சியறிந்திலள்போற் கூறினளென ஆற்ருனுயவனை யான் அப்புணர்ச்சிநிகழ்ந்தமை அறிவலென்றுகூறி வருத்தந்தீர்த்தலும்: உம். "நறுந்தண கூந்தற் குறுந்தொடி மடந்தை - சிறுமுதுக் குறைவி யாயினள் பெரிதென - நின்னெதிர் கிளத்தலு மஞ்சுவ லெனக்கே - நின்னுயி ரன்ன ளாயினுந் - தன்னுறு விழுமங் காத்த லானே." நின்னெதிர்கிளத்தல் அஞ்சுவல் நீ அவட்கு உரைத்தியெனக் கருதியென்றலிற் புணர்ச்சியுணர்ந்தமை கூறினள்.

அஞ்சி அச்சு உறுத்தலும் = அங்ஙனம் ஆற்றுவித்துங் கடிதுகுறைமுடியாமையைக் கருதுந் தோழி குரவரைத் தான் அஞ்சித் தலைவியும் அவரை அஞ்சுவளெனக்கூறலும்: அஞ்சுதல் அச்சென்ருயிற்று. இவ்வச்சங்கூறவே அவன் ஆற்றும். உம். "யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற் - கரும்பு மருண்முதல பைந்தாட் செந்தினை - மடப்பிடித் தடக்கை யன்ன பால்வார்பு - கரிக்குறட் டிறைஞ்சிய செறிதாட் பெருங்குரற் - படுகிளி கடிகஞ் சேறு மடுபோ - ரெஃகு விளங்கு தடக்கை மலயன் கானத் - தார நாறு மார்பினை - வாரன் மற் றைய வருகுவள் யாயே." இஃது யாயை அஞ்சியது. "யானை யுழலு மணிகிளர் நீள்வரைக் - கானக வாழ்க்கைக் குறவர் மகளிரோ - மேனலுலைய வருதன்மற் றென்னைகொல் - காணினுங் காய்வ ரெமர்." இது தமரை அஞ்சிக் கூறியது.

உரைத்துழிக் கூட்டமோடு எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும் = ஆயத்தினீங்கித் தன்னேடு நின்ற தலைவியை அவனேடு கூட்டவேண்டி அவளினீங்கித் தலைவர்க்கு இன்னுழி எதிர்ப்

வென்சொற் றேறிப் - பசுநனை ஞாழற் பலவினை யொருசிறைப் - புதுநல னிழந்த புலம்புமா ருடைய - ளுதுக்காண் டைய்ய வுள்ளல் வேண்டு - நிலவு மிருளும் போலப் புலவுத்திரைக் - கடலுங் கானலுந் தோன்று-மடல்சூழ் பெண்ணைமென் சிறுநல் லூரே." "வாங்குகோனெல்" என்னுங் குறிஞ்சிக்கலியுள், "அரவின் பொறியு மணங்கும் புணர்ந்த- வுரவின் மேலசைத் தகையை யொராங்கு - நிரைவளை முன்கையென் றோழியை நோக்கிப் - படுகிளி பாயும் பசுங்குர லேனல் - கடிதினை மறப்பித்தா யாயி னினிநீ - நெடிதுள்ளலோம்புதல் வேண்டும்" எனவும், "கடுமா கடவுறூஉங் கோல்போலெனைத்துங் - கொடுமை யிலையாவ தறிந்து மடுபெயல் - வழைவளர் சாரல் வருடை நன்மான்-குழவி வளர்ப்பவர் போலப்பா ராட்டியு- முழையிற் பிரியிற் பிரியு- மிழையணி யல்குலென் றோழியது கவினே." எனவும்வரும். இத்துணையும் ஓர்கூட்டங் கூறினார்.

குறைந்து அவட் படரினும் = தலைவன் இரந்து பின்னின்றமைகண்டு தோழி மனம் நெகிழ்ந்து தான்குறைந்து தலைவியிடத்தே சென்று குறைகூறினும்: உம். "வளையணி முன்கை வாலெயிற் றின்னகை - யிளையா ராடுந் தளையவிழ் கானல - விருந்தென வினவி நின்ற - நெடுந்தே ளண்ணலைக் கண்டிகும் யாமே." என வரும்.

மறைந்தவள் அருக = நாண்மிகுதியாற் தனது வேட்கை மறைந்த தலைவி அக்கூற்றிற்கு உடம்படாது நிற்றலால்: தன்னொடும் அவளொடும் முதன்மூன்று அளைஇ = தலைவனொடுந் தலைவியோடும் நிகழ்ந்த இயற்கைப்புணர்ச்சிமுதலிய மூன்றனையுந் தான அறிந்தமை குறிப்பான உணர்த்தி: பின்னிலை பலவேறு நிகழும் மருங்கினும் = இரந்து பின்னிற்றல் பலவாய் வேறுபட்டு நடக்குமிடத்தும்: அவை பெருந்தன்மையானொருவன் யானைமுதலியன வினாயுந் தழையுங் கண்ணியுங் கொண்டும் இப்புனத்து வாராநின்றானெனவும், அவன் என்மாட்டுப் பெரிதுங் குறையுடையனெனவும், அவன குறைமுடியாமையின் வருந்தாநின்றானெனவும், அத்தழை நீ ஏற்றலவேண்டுமெனவும், அக்குறைமுடித்தற்கு இஃதிடமெனவும், யானகூறியது கொள்ளாயாயின் நினக்குச் செறிந்தாருடன உசாவிக் குறைமுடிப்பாயெனவும், மறுப்பின மடலேறுவனெனவும் வரைபாய்வனெனவும், பிறவாற்றானுங் கூறிக் குறைநயப்பித்தலாம். உம். "புன்னைபூந் தழையல்குற் பொன்னனாய் சாரற்-றினைகாத் திருந்தேம்யா மாக-வினைவாய்த்து-மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்-தாம்வினவ லுற்றதொன் றுண்டு." "கைதையங்

தண்கானற் காலையு மாலையு - மெய்த வரினு மிதுவெங் குறையென் னூன் - செய்தழையுங் கண்ணியுஞ் சேர்ந்துழி வைத்திறந்தா - னுய்ய லன் கொல்லோ வுணரலனே யென்றியால்; ஒருநாள் வாரல னிரு நாள் வாரலன் - பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியெ - னன்னர் நெஞ்ச நெகிழ்ந்த பின்றை - வரைமுதிர் தேனிற் போகி யோனே யாசா கெந்தை யாண்டுளன் கொல்லோ - வேறுபல நன்னாட்டுப் பெய்த - வேறுடை மழையிற் கலுழுமெ னெஞ்சே." "புணர்து ணையோ டாடும் பொறியலவ னோக்கி - யிணர்ததை பூங்கான லெ ன்னையு நோக்கி - யுணர்வொழியப் போன வொலிதிரைநீர்ச் சேர் ப்பன் - வணர்சுரி யைம்பாலாய் வண்ண முணரேனால்; ஓரை யாய மறிய வூர - னல்கினன் றந்த நறும்பூந் தண்டழை - யாறுபடி னெ வனோ தோழிவீறு சிறந்து - நெடுமொழி விளக்குந் தொல்குடி - வடுநாம் படுத்த லஞ்சுது மெனவே." இது கையுறை எற்பத் தலைவிக்குக் கூறியது. "சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சே தா - வலங்குகுலைக் காந்த ளண்டித் தாதுசக் - கன்றுதாய் மரு ளுங் குன்ற நாட - னுடுக்குந் தழைதந் தனனே யவையா - முடுப் பின் யாயஞ் சுதுமே கொடுப்பிற் - கேளிடைக் கேடஞ் சுதுமே யாயிடை - வாடல் கொல்லோ தாமே யாய்மலைப் - போருடை வருடையும் பாயாச் - சூருடை யடுக்கத்த கொயற்கருந் தழை யே." இதுவும் அது. "இலைசூழ்செங் காந்த ளெரிவாய் முகை யவிழ்த்த வீர்ந்தண் வாடை - கொலைவே னெடுங்கட் கொடிச்சி கதுப்புளரூங் குன்ற நாட - னுலைபடு வெந்நோ யுழக்குமா லந்தோ - முலையிடை நேர்பவர் நேரு மிடமிது மொய்குழலே." "அவ்வளை வெரிநின் றரக்கீர்த் தன்ன - செவ்வரி யிதழ சேணாறு நறவி - னா றுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப் - பொன்னுரை கல்லி னன்னி றம் பெறூஉம் - வளமலை நாட னெருந லெம்மொடு - இளமலி சி றுதினைக் கிளிகடிந் தசைஇச் - சொல்லிடம் பெறாஅன் பெயர்ந் தனன் பெயர்ந்த - தல்ல லன்றது காதலந் தோழி - தாதுண் வேட்கையிற் போதுநெரித் தூதா - வண்டோ ரன்ன தண்டாக் காட்சி - கண்டுங் கழறுடி வலித்தவென் - பண்பில் செய்தி நினைப் பாய் நின்றே." "மாயோ னன்ன மால்வரைக் கவாஅன் - வாலியோ னன்ன வயங்குவெள் ளருவி - யம்மலைக் கிழவோ னந்நயந் தென் றும் - வருந்தின னென்பதோர் வாய்ச்சொற் றேறாய் - நீயுங் கண்டு நுமரொடு மெண்ணி - யறிவறிந் தளவல் வேண்டு மறுதரற் - கரிய வாழி தோழி பெரியோர் - நாடி நட்பி னல்லது - நட்டு நாடார் தம் மொட்டியோர் திறத்தே." "மறவல் வாழி தோழி துறைவர் - கடல்புரை பெருங்கிளை நாப்பண் - மடல்பூனைந் தேறிநிற் பாடும்

பொழுதே." எனவரும். இன்னும் வேறுபட வருவனவெல்லாம் ஈண்டு அடக்கிக்கொள்க.

நின்னயம் பெற்றுழி நயம்புரியிடத்தினும் = அங்ஙனந் தோழி கூறிய குறையினை அவள் அருளப் பெற்றவழி அதனைத் தலைவற்குக் கூறுதற்கு விரும்புமிடத்தும்: அவை தலைவனுற்றுறைமை கண்டு தோழி கையுறையெதிர்தலும், இரவுக்குறியும் பகற்குறியும் நேர்தலுங், குறியிடங்காட்டலும், பிறவுமாம். உம். "பொன்மெலியு மேனியாள் பூஞ்சுணங்கின் மென்முலைக - ளென்மெலிய வீங்கினவே பாவமென் - றென்மெலிவிற் - கண்சண்ணி வாடாமை யானல்ல னென்றுரைத்தா - லுண்கண்ணி வாடா ளுடன்று." இதனுட் கண்ணி, குறுங்கண்ணி. "நிலாவி னிலங்கு மணன்மலி மறுகிற் - புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை - யூரோ ணுணராச் சிறுமையொடு நீருடுத் - தின்னு வுறையீ டாயினு மின்ப - மொருநா ளுறைந்திசி னோர்க்கும் வழிநாட் - டம்பதி மறக்கும் பண்பி னெம்பதி - வந்தனை சென்மோ வளைமெய் பரப்ப - பொம்மற் படுதிரை கம்மென வுடைதரு - மாஞூங் கொருசிறைப் பலபா ராட்டி - யெல்லை யெம்மொடு கழிஇ யெல்லுற - நற்றேர் கூட்டலு முரியி ரற்றன்று - சேர்ந்தனிர் செல்குவி ராயின் யாமு - மெம்வரை யளவையிற் பெட்குவ - நும்மொப் பதுவோ விரித்திசி னெமக்கே." "கடும்புலால் புன்னை கடியுந் துறைவ - படும்புலால் புட்கடிவான் புக்க - வடும்புலாந் - தாழைமா ஞாழற் றகைந்துயர்ந்த தாழ்பொழி - லேழைமா னோக்கி யிடம்." எனவரும். இன்னும் நயம்புரியிடத்துமென்றதனால் அவன்வரவினைத் தலைவிக்குக் கூறுதலுங் கொள்க. "இவர்பரி நெடுந்தேர் மணியு மிசைக்கும் - பெயர்பட வியங்கிய விளையரு மொலிப்பர் - கடலாடு வியலணிப் பொலிந்த நறுந்தழைத் - திதலை யல்கு னலம்பா ராட்டிய - வருமே தோழி வாரமணற் சேர்ப்ப - னிரைபட வோங்கிய முழவுமுதற் புன்னை - மரவணா மறைகம் வம்மதி பானாட் - பூவிரி கானற் புணர்குறி வருந்துணை - மெல்லிணர் நறும்பொழிற் காணு - வல்ல வரும்படர் காண்காஞ் சிறிதே." இது தோழி தலைவிக்குப் பகற்குறிக்கட் தலைவன் வருகின்றமை காட்டி அவன் வருத்தங் காண யாம் மறைந்து நிற்பான் வம்மோவெனக் கூறியது.

எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும் = தலைவன் இளிவந்தொழுகுதற்குப் பொருத தோழி அவன் இளிவரவு உணர்த்துங் கருத்தினளாய்ச் செயற்கையாக ஆராய்தற்கு அரியவாய் வரு

ம் ஒன்றல்லாப் பலநகைகுறித்த பகுதிக்கண்ணும்: அவை என்னை மறைத்தலெவனுக்கியொன்றனும் அறியாள்போறலுங் குறியாள் கூறலும் படைத்துமொழிகிளவியுங் குறிப்புவேறுகொளலும் பிறவுமாம். உம். "நிறைத்திங்கள் சேர்ந்தோடு நீண்மலை நாட - மறைக்கப் படாதேனை மன்னு - மறைத்துக்கொண் - டோடினு யானே தலா லொண்டொடியா டன்பக்கங் - கூடக் கிடந்ததொன் றில்." "மன்னேர்மன் சாய லவருண் மருடீஇர - வின்னார்க ணைஎப தறியேனேன் - மின்னாருங் - கார்கெழு தோன்றற் கணமலை நன்னாட - யார்கண்ண தாகுங் குறை." "தன்னெவ்வங் கூறினுநீ செய்த வருளின்மை - யென்னையு மறைத்தாளென் றேழி யதுகேட்டு - நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூறற் றோணி." இது பழிகூறுமேனென்று தலைவி குறியாததொன்றைத் தோழிகூறினது. "விருந்தின ராதலின் வினவுதி ரதனெதிர் - திருந்துமொழி மாற்றந் தருதலுமியல்பெனக் - கூறுவ தம்மயா னூறுபல வருமென - வஞ்சுவன் வாழி யறைய வெஞ்சா - தெண்ணில வொண்ணியது முடிப்பர் - கா ணிலர் கொடியரிவ டன்னை மாரோ." இது நிகழாது நிகழ்வதாகப் படைத்துமொழிந்தது. "நெறிநீ ரிருங்கழி நீலமுஞ் சூடாள் - பொறிமாண் வரியலவ னாட்டலு மாட்டாள் - சிறுநுதல் வேரரும்பச் சிந்தியா நின்றாட் - கெறிநீர்த்தண் சேர்ப்பயா னென்சொல்லிச் செல்கோ." இது குறிப்பு வேறு கொண்டாளென்றது.

புணர்ச்சி வேண்டினும் = தலைவன் பகற்குறியையும் இரவுக்குறியையும் விரும்பிக் கூறுமிடத்தும்: தோழிமேன கிளவி. அவை பலவகைய. உம். "நன்னலஞ் சிதைய நாடொறும் புலம்பப் - பொன்னிணர் வேங்கை துறுகற்றுஅ - யிரும்பிடி வெரூஉ நாடற்கோ - பெருங்க ளூட்டஞ் செய்தன்றோ விலமே." இது தோழி தலைவியைப் பகற்குறிநயப்பித்தது. "மாயவனுந் தம்முனும் போல மறிகடலுங் - கானல்சேர் வெண்மணலுங் காணுயோ - கானலிடையெலா ஞாழலுந் தாழையு மார்ந்த - புடையெலாம் புன்னை புகன்று." "ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச் - சேய்த்து மன்றே சிறுகான் யாறே - யிரைதேர் வெண்குருகு கல்ல தியாவருந் - துன்னல் போகின்றாற் பொழிலே யாமெங் - கூழைக் கேர் மணங் குறுகுஞ் சேறு - மாண்டும் வருகுவள் பெரும்பே தையே." இவை பகற்குறிநேர்ந்து இடங்காட்டியன. "செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த - செங்கோ லம்பின் செங்கோட் டியானைக் - கழறொடிச் சேய குன்றங் - குருதிப் பூவின் குலைக்காந் தட்டே." இது தோழி தலைவியை இடத்துய்த்துநீங்கியது. "ஆர்கலி

வெற்பன் மார்பு புணையாகப் - பாடின் னருவி யாடுத லினிதே - நிரையிதழ் பொருந்தாக் கண்ணோ டிரவிற் - பஞ்சி வெண்டிரிச் செஞ்சுடர் நல்லிற் - பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ - யன்னை முயங்கத் துயிலின் னாதே." இது இரவுக்குறி நயந்த தலைவன் சிறைப்புறமாகப் பகற்குறிநேர்வாள்போல் இரவுக்காப்புமிகுதி கூறியது. பாடின்னருவி ஆட என்றாள் அதன்கண் உதவினானென்பதுபற்றி; அல்லது களவிற்கு உடன் ஆடுதலின்று. "சிறுவர்க் குறுகை யாகத் தெறுவர - வீங்கும் வருபவோ தேம்பாய் துறைவ - சிறுநா வெண்மணி விளரி யார்ப்பக் - கடுமா நெடுந்தேர் நேமி போகிய - இருங்கழி நெய்தல் போல - வருந்தின ளளியணி யருந்திசி னோளே." இது தலைவன் இரவுக்குறிநயந்தவனைத் தோழி மறுத்தது. "நாகுபிடி நயந்த முளைக்கோட் டிளங்களிறு - குன்ற நண்ணிக் குறவரார்ப்ப - மன்றம் போழு நாடன் றோழி - சுனைப்பூங் குவளைத் தொடலை தந்துந் - தினைப்புன மருங்கிற் படுகிளி யோப்பியுங் - காலை வந்து மாலைப் பொழுதி - னல்லக நயந்துதான் மயங்கி - சொல்லு மாகா தஃகி யோனே." இது தோழி கிழத்தியை இரவுக்குறிநயப்பித்தது. "தண்ணந் துறைவன் கடும்பரி மான்றேர் - காலை வந்து மாலை பெயரினும் - பெரிது புலம்பின்றே கானல் - சிறிது புலம்பினமாற் றோழி நாமே." இது தலைவியது ஆற்றாமை கண்டு நம்வருத்தந் தீர்தற்கு இரவுக்குறியும் வேண்டுமென்றது. "ஏன மிடந்திட்ட வீர்மணிகொண் டெல்லிடைக் - கானவர் மக்கள் கனலெனக் கைகாய்த்தும் - வானுயர் வெற்பன் வருவான்கொ றோழிநம் - மேனி பசப்புக் கெட." இது தலைவன் வருவனென்றது. "சுறவுப்பிற ழிருங்கழி நீந்தி வைகலு - மிரவுக்குறிக் கொண்கன் வந்தனன் - விரவுமணிக் கொடும்பூண் விளங்கிழை யோயே." இஃது இரவுக்குறி. தலைவன் வந்தமை தலைவிக்குக் கூறியது. "அன்னாய் வாழிவெண் டன்னைநம் படப்பைத் - தன்னயத் தமன்ற கூதளங் குழைய - வின்னிசை யருவி யோடு மென்ன தூஉங் - கேட்டியோ வாழிவெண் டன்னைநம் படப்பை - யூட்டி யன்ன வொண்டளிர்ச் செயலை - யோங்குசினைத் தொடுத்த வூசல் பாம்பென - முழுமுத றுமிய வுருமெறிந் தன்றே - யின்னுங் கேட்டியோ வெனவுமஃ தறியா - ளன்னையுங் கனைதுயின் மடிந்தன ளதன்றலை - மன்னுயிர் மடிந்தன்றாற் பொழுதே காதலர் - வருவ ராயிற் பருவமிஃதெனச் - சுடர்ந்திலங் கெல்வளை ஞெகிழ்ந்த நம்வயிற் - படர்ந்த வுள்ளம் பழுதின் றாக - வந்தனர் வாழி தோழி யந்தரத் - திமிழ்பெய றலைஇய வினப்பல கொண்மூத் - தவிர்வில் வெள்ளந் தலைத்

தலை சிறப்பக் - கன்று காலோயுங் கடுஞ்சுழி நீத்தம் - புன்றலை மடப்பிடிப் பூசல் பலவுடன் - வெண்கோட் டியானை விளிபடத் துழவு - மகல்வாய்ப் பாந்தட் படாஅப் - பகலு மஞ்சும் பனிக் கடுஞ் சுரனே.'' இது தாயது துயிலுணர்ந்து தலைவன்வந்தமை தோழி தலைவிக்குக் கூறிக் குறிவயிற்சென்றது. “செய்விசும் பு பிவர்ந்த செங்கதிர் மண்டில - மால்வரை மறையத் துறைபுலம் பின்றே - யிறவருந்தி யெழுந்த கருங்கால் வெண்குருகு - வெண்கோ ட்டுச்சிறைத் தாஅ யக்கரைக் - கருங்கோட்டுப் புன்னை யிறைகொ ண் டனவே - கணைக்கான் மாமலர் கரப்ப மல்குகழித் - துணைச்சுறா வழங்கலும் வழங்கு மாயிடை - யெல்லுமிழ் பனிக்கடன் மல்கு சுடர்க் கொளீஇ - யெமரும் வேட்டம் புக்கன ரதனாற் - றங்கி னெவ னோ தெய்ய பொங்குபிசிர் - முழவிசைப் புணரி யெழுதரு - முடை கடற் படப்பையெம் முறைவி னூர்க்கே.'' இஃது இரவுக்குறி வே ண்டிய தலைவற்குத் தோழி உடன்பட்டுக் கூறியது. “ஆம்ப னுட ங்கு மணித்தழையு மாரமுந் - திம்புன லூரன் மகளிவ - ளாய்ந்த கு நறுந் - தேமலர் நீலம் பிணையல் செறிமலர்த் - தாமரை தன்னையர் பூ.'' இஃது இரவுக்குறி நேர்ந்த தோழி இந்நிலத்தின்கண் நீ வரு ங்கால் இன்னபெற்றியான் வருவாயாகவென்றது. “கடற்கானற் சேர்ப்ப கழியுலாய் நீணட - வடற்கானற் புன்னைதாழ்ந் தாற்ற - மடற்கான - லன்றி லகவு மணிநெடும் பெண்ணைத்தே - முன்றி லிளமணன்மேன் மொய்த்து.'' இஃது இரவுக்குறியிடங் காட்டித் தோழி கூறியது. “எம்மூர் வாயி லொண்டுறைத் தடைஇய - கட வுண் முதுமரத் துடனுறை பழகிய - தெய்யா வளைவாய்த் தென் கட் கூருகிர் - வாய்ப்பறை யசாவும் வலிமுந்து கூகை - மையூன் றெரிந்த நெய்யுண் புழுக்க - லெலிவான் சூட்டொடு மலியப் பேறி னுது - மெஞ்சாக் கொள்கையெங் காதலர் வரநசைஇத் - துஞ் சா தலம்வரும் பொழுதி - னஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றா தீமே.'' இஃது இரவுக்குறித் தலைவன் சிறைப்புறமாகக் கூகைக்கு உரைப் பாளாய்த் தோழி கூறியது. “நிலவு மறைந்தன் றிருளும் பட்டன் - றோவத் தன்ன விடனுடை வரைப்பிற் - பாவை யன்ன நிற்புறங் காக்குஞ் - சிறந்த செல்வத் தன்னையுந் துஞ்சினள் - கெடுத்துப்படு நன்கல மெடுத்துக்கொண் டாங்கு - நன்மார் படைய முயங்கி மென்மெலக் - கண்டனம் வருகஞ் சென்மோ தோழி - சீழ் மேலுங் காப்போர் நீத்த - வறுந்தலைப் பெருங்களிறு போலத் - தமியன் வந்தோன் பனியலை நிலையே.'' இது தலைவனைக்கண்டு முயங்குகஞ் செ வம்மோ என்றது.

வேண்டாப் பிரிவினும் = தலைவன்முன் புணர்ச்சியை விரும்பாது பிரிவை விரும்பிய இடத்தும் : அப்பிரிவு தண்டாதிரத்தலை முனிந்த மற்றையவழி இட்டுப்பிரிவும் அருமைசெய்தயர்த்தலுமாம்; ஆண்டுத் தலைவற்குந் தலைவிக்குங் கூறுவனகொள்க. உம். "முத்தமரும்பு முடத்தாண் முதிர்புன்னை - தத்துந் திரையலைக்குந் தண்ணங் கடற்சேர்ப்ப - சித்திரப் பூங்கொடியே யன்றாட் கருளியாய் - வித்தகப் பைம்பூணின் மார்பு." "இறவுப் புறத்தன்ன பிணர்படு தடவுமுதற் - சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை - பெருங்களிற்று மருப்பி னன்ன வரும்பு - முதிர்பூன் மானுழையின் வேறுபடத் தோன்றி - விழவுக்களங் கமழு முரவுநீர்ச் சேர்ப்ப - வினமணி நெடுந்தேர் பாக னியக்கச் - செலிய சேறி யாயி னிவளே - வருவை யாகிய சின்னாள் - வாழ்வா ளாத லறிந்தனை சென்மே." இது பிரிவுவேண்டியவழிக் கூறியது. "சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழ - மிருங்கல் விடரளை வீழ்ந்தன வெற்பிற் - பெருந்தே னிறாலொடு கீறு நாடன் - பேரமர் மழைக்கண் கலுழத்தன் - சீருடை நன்னாட்டுச் செல்லு மன்னாய்." எனவும்வரும்.

வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தும் = தலைவற்குத் தான் சிலகொடுத்தலைத் தலைவி வேண்டியவிடத்தும் : அது தலைவி வேளாணெதிரும் விருந்தின்கட் தோழி கூறுவதாம். உம். "பன்னாளெவ்வந் தீரப் பகல்வந்து - புன்னையம் பொதும்ப ரின்னிழற் கழிப்பி - மாலை மால்கொள நோக்கிப் பண்ணாய்ந்து - வலவன் வண்டே ரியக்க நீயுஞ் - செலவுவிருப் புறுத லொழிகதி லம்ம - செல்லா நல்லிசைப் பொலம்பூட் டிரையன் - பல்பூங் கானற் பவத்திரி யன்னவிவ - ணல்லெழி லிளநலந் தொலைய வொல்லெனக் - கழியே யோத மல்கின்று வழியே - வள்ளெயிற் றரவொடு வயமீன் கொட்குஞ் - சென்றோர் மன்ற மான்றன்று பொழுதென - நின்றிறத் தவலம் வீட வின்றிவட் - செப்பி னெவனோ பூக்கேழ் புலம்பப் - பசமீ னெடுத்த வெண்ணெனென்மாத் தயிர்மிதி - மிதவை மாவார் குநவே நினக்கே - வடவர் தந்த வான்கேழ்ச் சாந்தம் - குடபுல வுறுப்பிற் கூட்டுபு நிகழ்த்தி - வண்டிமிர் நறுஞ்சாந் தயர்குவந் திண்டிமில் - வெல்லுத்தொழின் மடுத்த வல்வினைப் பரதவர் - கூருளிக் கடுவிசை மண்டலிற் பாய்ந்துடன் - கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை - தண்கட லசைவளி யெறிதொறும் வினைவிட்டு - முன்றிற் றாழைத் தூங்குந் - தெண்டிரைப் பரப்பினெம் முறைவி னூர்க்கே." இதனுட் டனக்கும் புரவிக்குங் கொடுப்பன கூறித் தடுத்தவாறுகாண்க. "நாள்வலை முகந்த" என்பதும் அது.

புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பினும் = இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தகாலத்து அவன் இங்கு உணராதவனை நன்முக உணர்ந்த அறிவினது மடப்பங் கூறித் தங் காதற்சிறப்பு உரைத்த இடத்தும்: அது "சுரஞ்செல் லியானைக் கல்லுறு கோட்டிற் - றெற்றென விறியரோ வைய மற்றியா - னும்மொடு நக்க வால்வெள் ளெயிறே - பாணர் பசுமீன் சொரிந்தமண்டை போல - வெமக்கும் பெரும்புல வாகி - நும்மும் பெறேஎ மிறியரொ னுயிரோ.' இஃது அவனோடு நகுதற்குத் தோன்றிய உணர்வு இன்றியமையாமை கூறிக் காதற்சிறப்பு உரைத்தது.

ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும் = தலைவற்குத் தலைவியைப் பாதுகாத்துக்கொள்ளெனக் கூறுங் கிளவியது பகுதிக்கண்ணும்: தோழிமேன கிளவி. பகுதியாவன வரைவிடைப்பிரிவு முதலியபிரிவிடத்தும் புனத்திடைப் புணர்ச்சியின்றி நீங்குமிடத்தும் பிறவிடத்துங் கூறுவனவாம். உம். "நனைமுதிர் ஞாழற் சினைமருடிரள்வீ - நெய்தன் மாமலர்ப் பெய்த போல - வூதை தூற்று முரவு நீர்ச் சேர்ப்ப - தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட் - டன்னை யென்னுங் குழவி போல - வின்னா செய்யினு மினிதுதலை யளிப்பினு - நின்வரைப் பினளென் றோழி - தன்னுறு விழுமங் களைஞரோ விலளே." "பெருநன் முற்றிற் பேணரு முளரோ - வொருநன் றுடைய ளாயினும் புரிமா - ணுடு புலவிதீர் வளிமதி யிலைகவர் - பாடமை யொழுகிய தண்ணறுஞ் சாரன் - மென்னடை மரையா துஞ்சு - நன்மலை நாட நின்னல திலளே." "எறிந்தெமர் தாமுழுத வின்குர லேனன் - மறந்துங் கிளியினமும் வாரா - கறங்கருவி - மாமலை நாட மடமொழி தன்சேண்மை - நீமறவ ளெஞ்சசத்துக் கொண்டு." "அரிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி - குன்றக் குறவா ஊன்றுகொய்தினைப் பைங்கா - லிருவி நீள்புனங் கண்டும் - பிரிதறேற்று பேரன் பினவே." இது தினை அரிந்துழிக் கிளியை நோக்கிக் கூறுவாள்போற் சிறைப்புறமாக ஓம்படுத்தது. இன்னும் ஓம்படைக்கிளவியென்றதற்கு இவளை நீ பாதுகாத்துக்கொள்ளென்று தலைவன் கூறுங் கிளவியது பகுதிக்கண்ணுமென்றும் பொருள்கூறுக. "பிணங்கரில் வாடிய பழவிற லனந்தலை - யுணங்கூணாயத் தோராயென் றெண்மணி - பையபைய விசைக்கு மத்தம் வைவெயிற் - றிவளொடுஞ் செலினோ நன்றே குவளை - நீரைசூழ் மாமல ரன்ன கண்ணழக் - கலையொழி பிணையிற் கலங்கி மாறி - யன்பிலி ரகறிராயி னென்பர - மாகுவ தன்றிவ ளவல நாகத் - தணங்குடை நெடியவர்தந் தலையுட லிவனோ - பார்கலி நல்லேறு திரிதரும் - கார்

செய் மாலை வரூஉம் பொழுதே." இது வரைவிடைப் பிரிகின்றான் ஆற்றுவித்துக்கொண்டிரு என்றாற்குத் தோழி கூறியது.

செங்கடுமொழியாற் சிதைவுடைத்தாயினும் = தோழி செவ்வனங் கூறுங் கடுஞ்சொற்களாற் தலைவி நெஞ்சு சிதைவுடைத்தாயினும்: ஆண்டுந் தோழிமேன கிளவி. அவை தலைவனை இயற்பழித்தலுந் தலைவியைக் கழறலுமாம். உம். "சௌவையம் பெரும்பழி தூற்ற நலனழிந்து - பைதலஞ் சிறுநுதல் பசலை பாய - நம்மிகப் படுத்த வவரினு மவர்நாட்டுக் - குன்றங் கொடியகொ றோழி - யொன்றுந் தோன்றா மழைமறைந் தனவே." வரைவிடைப் பருவங்கண்டு அழிந்த தோழி இயற்பழித்தது. "மாசறக் கழீஇய யானை போலப் - பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகற் - பைதலொருதலை சேக்கு நாடன் - நோய்தந் தனனே தோழி - பசலை யான்றன குவளையங் கண்ணே." "கேழ லுழுத கரிப்புனக் கொல்லையுள் - வாழை முதுகாய் கடுவன் புகைத்தயருந் - தாழருவி நாடன் றெளிக்கொடுத்தா னென்றோழி - நேர்வளை நெஞ்சூன்று கோல்." இஃது அவன்கூறுறவு பொய்த்ததென இயற்பழித்தது. "மகிழ்நன் மார்பே வெய்யை யலர்நீ - யழியல் வாழி தோழி நன்ன - னறுமா கொன்று நாட்டிற் போக்கிய - வொன்றுமொழிக் கோசர் போல - வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே." "மெய்யிற் றீரா மேவரு காமமொ - டெய்யா யாயினு முரைப்ப றோழி - கொய்யா முன்னுங் குரல்வார் முதுதினை - யருவி யார்ந்த பைங்கா றோறு - மிருவி தோன்றிய பலவே நீயே - முருகு முரண்கொள்ளுந் தேம்பாய் கண்ணிப் - பரிபன் ஞயொடு பன்மலைப் படரும் - வேட்டுவற் பெறலோ டமைந்தனை யாழநின் - பூக்கெழு தொடலை நுடங்க வெழுந்து - கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி - யாங்காங் கொழுகா யாயி னன்னை - சிறுகிளி கடிதற் றேற்றா ளிவளெனப் - பிறர்தந்து நிறுக்குந ளாயி - னுறற்கரி தாகுமவன் மலர்ந்த மார்பே." எனவரும். இதனுள் வரையும்பருவமன்றெனக் கூறுதலுங் கொள்க.

என்பு நெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ அன்பு தலையடுத்த வன்புறைக்கண்ணும் = என்பு உருகுமாறு தலைவனாற் பிரியப்பட்ட தலைவிக்கு வழிபாடாற்றிச் சென்று தான்கூறும் மொழியை அவள்மனத்தே செலுத்தித் தலைவன் அன்பை அவளிடத்தே சேர்த்துக்கூறிய வற்புறுத்துதற்கண்ணும்: அப்பிரிவு வரைந்துகோடற்குப் பொருள்வயிற்பிரிதலும் வேந்தர்க்குற்றுழிப்பிரிதலுங் காவற்குப்பிரிதலுமாம். ஆண்டு வற்புறுத்துங்கால் இயற்பழித்தும் இயற்படமொழிந்தும் பிறவாறும் வற்புறுத்தும். முன்

செங்கடுமொழியாலென்புழி இயற்பழித்தனவும் வற்புறுத்துதல் பயனாகக் கூறியனவென்றுணர்க. உம். "யாஞ்செய் தொல்வினைக் கெவன்பே துற்றனை - வருந்தல் வாழி நீயென யாஞ்சென் - றுரைத்தனம் வருக வெழுமதி புணர் திரைக் - கடல்விளை யமுதம் பெயற் கேற் றாஅங் - குருகி யலகுத லஞ்சுவ லதுகொண் - டம்மென் கொடுமை நம்வயி னேற்றி - நயம்பெரி துடைமையிற் றுங்கல் செலலாது - கண்ணீ ரருவி யாக - வழுமே தோழியவர் பழமுதிர் குன்றே," இது பிரிவிடைத் தோழி இயற்பழித்து வற்புறுத்தது. "தோளுந் தொல்கவின் றொலைந்தன நாளு-மன்னையு மருந்துய ருற்றன ளலவே -பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமா-னெழுஉத் திணிதோ ளியறேர்ச் செழிய - னேரா வெழுவ ரடிப்படக் கடந்த-வாலங் கானத் தார்ப்பினும் பெரிதென- வாழல் வாழி தோழி யவரே - மாஅல் யானை மறப்போர்ப் புல்லிக் - காம்புடை நெடுவரை வேங்கடத் தும்ப-ரறையிறந் தகன்றன ராயினு நிறையிறந்-துள்ளா ரகலோ வரிதே செலவென - முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி - செல்லா நல்லிசை நிறுத்த வல்வி - லோரிக்கொன்று சேரலர்க் கீத்த - செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி - நிலை பெறு கடவுளாக் கியாப் - பலர்புகழ் பாவை யன்னநின் னலனே." "அழியலாயிழை" என்னுங் குறுந்தொகையுங் கொள்க. "பெருங்கை யிருங்களி றைவன மாந்திக் - கருங்கான் மராம்பொழிற் பாசடைத் துஞ்சுஞ் - சுரும்பிமிர் சோலை மலைநாடன் கேண்மை-பொருநதினார்க் கேமாப் புடைத்து." இவை இயற்பட மொழிந்து வற்புறுத்தன. இன்னும் அன்புதலைப்படுத்த வன்புறை என்றதனாற் பிறவுங்கொள்க. "பெறுமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர் - சிறுதோட் கோத்த செவ்வரிப் பறையின் - கண்ணகத் தெழுதிய குறியே போலக் - கோல்கொண் டலைக்கப் படஇயர் மாதோ - விரைவெண் மான வெளியன் றீத்தன் - முரசுமுற் கொளீஇய மாலை விளக்கின் - வெண்கோ டியம்ப நுண்பனி யரும்பக் - கையற வந்த பொழுதொடு மெய்சோர்ந் - தவல நெஞ்சினம் பெயர வுயர் திரை - நீடுநீர்ப் பனித்துறைச் சேர்ப்ப - னேடுதேர் நுண்ணுக நுழைந்த மாவே." இது பகற்குறி வந்து போகின்ற தலைவன் புறக்கிடை நோக்கி ஆற்றாத தலைவி குறிப்பறிந்து மாவின்மேல் வைத்து வற்புறுத்தது. "விளையா டாயமொ டோரை யாடா-தினையோ ரிவ்விடத் திற்செறிந் திருத்த - லறனு மன்றே யாக்கமுந் தேய்மெனக் - குறுநுரை சுமந்து நறுமல ருந்திப்- பொங்கிவரு புதுநீர் நெஞ்சுண வாடுகம் - வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே - செல்லென விடுநண்மற் கொல்லோ வெல்லுமிழ்ந்

துரவுரு முரறு மனையிருணடுநாட்-கொடிநுடங் கிலங்கின மின்னி-யாடுமழை யிறுத்தன்றவர் கோடுயர் குன்றே." இது வரைவு நீடவாற்றாத தலைவி வேறுபாடு புறத்தாரக்குப் புலனாகாமையும் இடையும் இங்ஙனங் கூறுவாளைப் பெறினெனக் கூறி வற்புறுத்தது. "மறுகுபு புகலு நெஞ்ச நோயினை - நிறுகப் புல்லி முயங்குகஞ் - சிறுபுன் மாலை செயிர்ப்ப நாமே." பிரிவிடையாற்றாத தலைவியைத் தோழி நன்னிமித்தங்கூறி வற்புறுத்தது.

ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும் = தலைவன் வருகின்ற நெறியினது தீமையைத் தாங்கள் அறிதலுற்றதனானே எய்திய கலக்கத்தின்கண்ணும்: தோழிமேல கிளவி. உம். "கழுதுகால் கிளர ஊர்மடிந் தன்றே யுருகெழு மரபிற் குறிஞ்சி பாடிக் - கடியுடை வியனகர்க் காவலர் துஞ்சார் - வயக்களிறு பொருத வாள்வரி யுழுவை - கன்முழைச் சிலம்பிற் குழூஉ மன்னே - மென்றோ ணெகிழ்ந்துநாம் வருந்தினு மின்றவர் - வாரா ராயினு நன்றுமற் றில்ல - கருவியர்வரை யடுக்கத் தொளிறுபு மின்னிப் - பெயல்கான் மயங்கிய பொழுதுகழி பானாட் - டிருமணி யரவுத்தேர்ந் தேறிய - வுருமுச் சிவந் துழலு மோங்குவரை யாறே." "கொடுவரி வேங்கை பிழைத்துக் கோட்பட்டு - மடிசெவி வேழம் வெரீஇ - யடியோசை - யஞ்சி யொதுங்கு மதருள்ளி யாமிருட் - டுஞ்சா சுடர்த்தொடி கண்." இவை இரவுக்குறிவரவாற் தலைவி வருந்துவளென்றது. "கனைபொருங் கானயாறறங் கல்லதா" என்பதும் அது. "கூருகிரொண்கின்" என்னும் அகப்பாட்டுங் காண்க. கலக்கமெனப் பொதுப்படக் கூறியவதனால் ஆற்றிடை ஏதமின்றிச் சென்றமை தோன்ற ஆண்டு ஓர்குறிசெய்யெனக் கூறுவனவுங் கொள்க. "கான மானதர் யானையும் வழங்கும் - வான மீமிசை யுருமுநனி யுரறு - மரவும் புலியு மஞ்சுதக வுடைய - விரவுச் சிறுநெறி தனியை வருதி - வரையிழி யருவிப் பாடொடு பிரச - முழவுச் சேர் நரம்பி னிம்மென விமிரும் - பழவிற னனந்தலைப் பயமலை நாட - மன்றல் வேண்டினும் பெறுகுவை யொன்றோ - வின்றுதலை யாக வாரல் வரினே - யேமுறு துயர நாமிவ ணொழிய - வெற்கண்டு பெயருங் காலை யாழநின் - கறகெழு சிறுகுடி யெய்திய பின்றை - யூதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு - வேய்பயி லழுவத்துப் பிரிந்தநின் - னாய்பயிற் குறிநிலை கொண்ட கோடே." என்னும் நித்திலக்கோவையுள், வரினே ஏமுறு துயரம் நாமிவணொழிய, நின்னாய்பயிற் குறிநிலை கொண்ட கோட்டை ஊதல்வேண்டுமாற் சிறிதே, என்றவாறு காண்க.

தாயவின் கடுமை கையற வரினும் = காத்தற்றொழிலால் உண்டாம் கடுஞ்சொற்கள் களவொழுக்கத்திடத்தே எல்லையற வருமிடத்தும்: தோழிமேன கிளவி; அவை பலவகைய. உம். "கடலு - ளொழியுங் கானலல்கியுந் - தொடலை யாயமொடு தழூஉவணி யயர்ந்து - நொதுமலர் போலக் கதுமென வந்து - முயங்கினன் செலினே யலர்ந்தன்று மன்னே - துத்திப் பாந்தள் பைத்தக லல்குல் - திருந்திழை துயல்வுக்கோட் டசைத்த பசுங்குழைத் - தழையினு முழையிற போகான் - றானறுந் தனன்யாய் காத்தோம் பலலே." இது பகற்குறிக்கட் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது. "கணமுகை கையெனக் காந்தள் கவின - மணமுகை யென்றெண்ணி மந்திகொண் டாடும் - விறன்மலை நாட வரவரிதாங் கொல்லோ - புனமு மடங்கின காப்பு." இது தினைவிளைந்தமை கூறிச் செறிப்பறிவுறீஇயது. "அறையருவி யாடா டினைவளமுங் காவா - பொறையுயர் தண்சிலம்பிற் பூந்தழையுங் கொய்யா - துறைகளவேழமொன் றுண்டென்றா ளன்னை - மறையாதி வாழிய மையிருங் குன்றே." இது குன்றத்திற்குக் கூறுவாளாகச் செறிப்பறிவுறீஇயது. "சாந்த மெறிந்துழுத சாரற் சிறுதினைச் - சாந்த விதணரிசைச் சார்ந்து - சாந்தங் - கமழக் கிளிகடியுங் காமயி லன்னா - ளிமிழக் கிளியெழா வார்த்து." இது பிறனைக் காத்தற்கு இடுவெனச் செறிப்பறிவுறீஇயது "பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத் - துரவுக்களிறு போல்வந் திரவுக்கதவு முயறல் - கேளே மல்லேங் கேட்டனெம் பெரும - வோரி முருங்கப் பீலி சாய - நன்மயி லலைப் பட் டாங்கியா - முயங்குதொறு முயங்கு மறனில் யாயே." இது இரவுக்குறிக் காப்பினகடுமை கூறியது. "வினைவிளைய செல்வம் விளைவதுபோ னீடாப் - பனைவிளைவு நாமெண்ணப் பாத்தி - தினைவிளைய - மையார் தடங்கண் மயிலன்னாய் தீத்தீண்டு - கையார் பிரிவித்தல் காண்." இது இவ்வொழுக்கத்தினை வெங்கை நீக்கிற்றெனத் தலைவிக்குக் கூறியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக. "புன்னையம் பூம்பொழிலே போற்றவே யாதுகா - வன்னப் பெடையே யறமறவன் - மன்னுங் கழிம்புதர்மான் காவலி கானலஞ் செலதூர் - நெடுங்கடலே நீயுநினை." இது புனங் கைவிட்டுப் போகின்றுழிச் சிறைப்புறமாகத் தோழி கூறியது. "பண்டைக்கொ ணல்வினை யில்லேம் பதிப் பெயர்துங் - கண்டற் குலங்காள் கழியருகே - முண்டகங்கா - ணணி யிராதே நயந்தங் கவர்க்குழைமின் - பேணி யவர்செறித்த வான." இது தலைவற்குக் கூறுமினென்றது.

களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் காதன்மிகுதி உளப்பட = காதன்மிகுதி உளப்படக் களனும் பொழுதும் வரைநிலை விலக்கி; அவளிடத்துக் காதன்மிகுதி மனத்து நிகழாநிற்க இருவகையிடத்தையும் இருவகைக் காலத்தையுந் தாம் வரைந்து கூறுங் குறிநிலைமையைத் தவிர்த்து அவன்வயிற் றோன்றிய கிளவியும்: பிறவும் = கூறியவாறன்றிப் பிறவாறாக அவன்வயிற் றோன்றிய கிளவியையும்: நாடும் ஊரும் இல்லுங் குடியும் பிறப்பும் சிறப்பும் இறப்பும் நோக்கி அவன்வயிற் றோன்றிய கிளவியொடு தொகைஇ = அவன்பிறந்தநாடும் அதன்பகுதியாகிய குடியிருப்பும் அவ்வூர்க்கு இருப்பாகிய மனையும் பார்ப்பார்முதலிய நால்வகை வருணமும் அவ்வருணத்துள் இன்னவழி இவனென்றலும் ஒருவயிற்றுப்பிறந்தோர பலருள்ளுஞ் சிறப்பித்துக்கூறலும் பிறரின் ஒவ்வாதிறந்தனவாதல் நோக்கித் தலைவனிடத்தே தோழி கூறிய கிளவியோடே கூடி: அனைநிலைவகையான் வரைதல் வேண்டினும் = அத்தன்மைத்தாகிய நிலைமையினை கூறுபாட்டானே வரைந்துகோடலை விரும்பிய வழியும்: தோழிமேன கிளவி. "பகற்புணர்களனே" "இரவுக்குறியேயில்" "குறியெனப்படுவது" எனனுஞ் சூத்திரங்களாற் களனும் பொழுதும் உணர்க. உம் "புன்னை காத்து மன்னமோப்பியும் - பனியிருங் கானல யாம்விளையாட - மல்லல் பேரூர்மறுகி - னலகலு மோவா தலரா கின்றே." இது பகற்குறி விலக்கியது. "நெடுமலை நன்னாடன் நின்வே றுணையாக் - கடுவிசை வாலருவிநீந்தி - நடுவிரு - ளின்று வரவர வீங்கோதை மாதரா - ளெனறுவா ளெனனுமெ னெஞ்சு." இது இரவுக்குறி விலக்கியது. "இரவு வாரலை யையவிரவுவீ-பகலுறை வரிக்குஞ் சாரற் - பகலும் பெறுதியிவ டடமென் றோளே" இது பகற்குறி நேர்வாள்போல இரவுக்குறி விலக்கியது. "திரைமேற்போந் தெஞ்சிய தெண்கழிக கானல் - விரைமேவு பாக்கம் விளக்காக் - கரைமேல் - விடுவாய்ப் பசும்புற விப்பிகான் முத்தம் - படுவா யிருளகற்றும் பார்த்து." இதுவும் அது. இவை வரவுநிலை விலக்கின. "வேரல் வேலி வேர்க்கோட பலவின் - சாரனாட செவ்வியை யாகுமதி - யாரஃதறிந்திசி னோரே சாரற் - சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்-கிவளுயிர் தவச்சிறிது காமமோ பெரிதே." இது காதன்மிகுதி கூறியது. பிறவுமென்றதனால், "கோடீ ரிலங்குவளை ஞெகிழ நாடொறும் - பாடில் கலுழுந் தளியா னுவே - துன்னரு நெடுவரைத் ததும்பிய வருவி - தண்ணென் முழவி னிமிழிசை காட்டு-மருங்கிற் கொண்ட பலவிற் - பெருங்க னாடனின் னயந்தோள் கண்ணே." இது யான் வரையுந்துணையும் ஆற்றுவளோ என்

றூற்கு ஆற்றுளென்றது. "நெடுவரை மிசையது குறுங்கால் வருடை - தினைபாய் கிள்ளை வெரூஉ நாட - வல்லைமன் றம்ம பொய்த்தல் - வல்லாய் மன்றநீ யல்லது செயலே." இது தலைவனைப் பழித்தது. "கானற் கண்டற் கழன்றுகு பைங்காய் - நீனிற விருங்கழி யுட்பட வீழ்ந்தெழ - வுறுகா றூக்கத் தூங்கி யாம்பல் - சிறுவெண் காக்கை யாவித் தன்ன - வெளிய விரியுந் துறைவ வென்று - மளிய பெரியோர் கேண்மை நும்போற் - சால்பெதிர் கொண்ட செம்மை யொருத்தி - தேறு நெஞ்சங் கையறுபு வாடி - நீடின்று விரும்பா ராயின் - வாழ்தன்மற் றெவனோ தேய்கமா தெளிவே" ஆற்றாத் தலைவியைக் கடிதின் வரைவேனென்று தலைவன் தெளிவிக்கப் புகருழித் தோழி தெளிவிடை விலக்கியது. "குன்றக் குறவன் காதன் மடமகள் - மென்றோட் கொடிச்சியைப் பெறற்கரி தீதல - வைம்புறப் படுகிளி யோப்பலவர் - புன்புல மயக்கத்து விளைந்தன தினையே." புனங்காவல் இனியின்று என்றது. "என்றுங்கொ லீடிய வினவேங்கை நாளுரைப்பப் - பொன்னும் போல வெல்லா தாம்புரிக - தென்னே - மருவியா மாலை மலைநாடன் கேண்மை - யிருவியா மேன விவர்" இது இனை அறிகின்றமையுஞ் சுற்றத்தார் பொருள்வேட்கையுங் கூறியது. "வெறிகமழ் வெற்பவென் மெய்ந்நீர்மை கொண்ட - தறியாண்மற் றன்னை யணங்கணங்கிற் றென்று - மறியீர்ந் துதிரந்தூய் வேலற் றரீஇ - வெறியோ டலம்வரும் யாய்." இது வெறியச்சுறுத்தியது. "இனமீனிருங்கழி யோத முலாவ - மணிநீர் பரிக்குந் துறைவ தகுமோ - குணநீர்மை குன்றுக கொடியன்னாள் பக்க - நினைநீர்மை யில்லா வொழிவு." இது அருளவேண்டும் என்றது. "மூத்தோ ரன்ன வெண்டலைப் புணரி - யிளையோ ராடும் வரிமனை சிதைக்குந் - தளையவிழ் தாழைக் கானலம் பெருந்துறைச் - சிலசெவ்வித் தாகிய புணர்ச்சி யலரெழ - வில்வயிற் செறித்தமை யறியாய் பன்னாள் - வருமுலை வருத்த வம்பகட்டு மார்பிற் - றெருமர லுள்ளமொடு வருந்து நின்வயி - னீங்குக வென்றியான் யாங்கன மொழிகோ - வருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாது - பெருங்கடன் முழக்கிற் றாகி யாண - ரிரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர் - கருங்கட் கோசர் நியம மாயினு - முறுமெனக் கொள்குவ ரல்லர் - நறுநுதலரிவை பாசிழை விலையே." இது பொருண்மிகக் கொடுத்தல்வேண்டுமென்றது. இன்னும் வரைவுகடாவுதற் பொருட்டாய் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க. "கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை - யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த - சாரற் பலவின் கனியொடு படிய - பாறை [illegible]

தேற - லறியா துண்ட கடுவ னயலது - கறிவளர் சாந்த மேறல் செல்லாது - நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும் - குறியா வின்ப மெளிதெனின் மலைப்பல் - வேறு விலங்கு மெய்து நாட - குறித்த வின்ப நினக்கே வணரிய - வெறுத்த வேய்மருள் பணை த்தோ ணிறுப்ப - நில்லா நெஞ்ச மோடு நின்மாட் - டிவளு மினைய ளாகிற் றந்தை - யருங்கடிக் காவலர் சோர்பத னொற்றிக் - கங் குல் வருதலு முரியை பைம்புதல் - வேங்கையு மொள்ளிணா விரிந்தன - நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே.'' விலங்கும் எய்து நாடவென்று அந்நாட்டினை இறப்பக்கூறி இந்நாடுடைமை கலவிற் குறித்த இன்பம் நினக்கே வணரியவென வரைதல்வேண்டிய வாறும் வேங்கைவிரிந்ததனாற் றினையறுத்தலின் இற செறிப்புக் கூறியவாறுங் கங்குல்வருதலும் உரியையெனப் பகற்குறிமறுத்து இரவுக்குறி நேர்வாள்போற் கூறி நெடுவெண்டிங்களு மூர்கொண் டன்றேயென்று அதனையும் மறுத்து வரைதற்கு நல்லநாளெனக் கூறி வரைவுகடாயவாறுங் காண்க. ''காமங் கடவ வுள்ள மினைப்ப - யாம்வந்து காண்பதோர் பருவ மாயி - னோங்கித் தோன்று முயர்வரைக் - கியாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ.'' இது வரை இறப்பக்கூறியது. ''துணைபுணர்ந் தெழிதரும்'' என்னும் நெய்தற்கலியுட் ''கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத் - தொடிநெகிழ் தோளளாத் துறப்பாயான் மற்றுநின் - குடிமைக்கட் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ; ஆய்மலர்ப் புன்னைக்கீ ழணிநலந் தோற்றாளை - நோய்மலி நிலையளாத் துறப்பாயான் மற்றுநின் - வாய்மைக்கட் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ; திகழ்மலர்ப் புன்னைகீழ்த் திருநலந் தோற்றாளை - யிதழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின் - புகழ்மைக்கட் பெரியதோர் புகராகிக் கிடவாதோ.'' இவை ஒழுக்கமும் வாய்மையும் புகழும் இறப்பக்கூறியன. குடிப்பிறந்தார்க்கு இம்மூன்றுஞ் சிறப்பக் கூறல்வேண்டும். ஏனைய வந்துழிக்காண்க. இன்னும் அனை நிலைவகை என்றதனானே தலைவியாற்றாமைகண்டு வரைவுகடாவவோவென்று தலைவியைக்கேட்டலுஞ் சிறைப்புறமாகவுஞ் சிறைப்புறமன்றாகவுந் தலைவியாற்றாமைகூறி வரைவுகடாவுவனவும் பிறவும் வேறுபடவருவனவும் இதனான் அமைக்க. ''கழிபெருங் கிழமை கூறித் தோழி - யொழியா யாயினென் னுரைக்கோ தெய்ய - கடவு ணெற்றிய கருங்கால் வேங்கை - தடவுநிலைப் பலவொடு தாழ்ந்த பாக்கத்துப் - பின்னீ ரோதி யிவடமர்க் குரைப்பதோர் - பெண்யாப் பாயினு மாகவொண் ணுத - விலங்குவனை மென்றோட் கிழமை - விலங்குமலை நாடநீ வேண்டுதி யெனினே.'' ''நிலவு

மிருளும் போல நெடுங்கடற் - கழியுங் கானலு மணந்தன் று - அது லுங் தோளு மணிந்தன்றும் பசப்பே." எனவரும்.

ஐயச் செய்கை தாய்க்கு எதிர்மறுத்துப் பொய் என மாற்றி மெய்வழிக் கொடுப்பினும் = தலைவிக்குக் கூட்டம் உண்டுகொலெ னறு தாய் ஐயுற்றவழி அவ்வையப்பட்ட செய்கையைத் தாய்க்கு எதிரேநின்று மறுத்து அதனைப் பொய்யெனவே கருதும்படி அவள்மனத்தினின்றும் போக்கி மெய்யல்லன சிலசொற்களை மெய்வழிப்படுத்து அறிவுகொள்ளக் கொடுப்பினும்: உம். "உருமுரறு கருவிய பெருமழை தலைஇப் - பெயலான் றவிந்த தூங்கிருணடு நாண் - மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை யிமைப்பப் - பின்னு க௦ விடு நெறியிற் கிளைஇய கூந்தலள் - வரையிழி மயிலி னொல்குவ ளொதுங்கி - மிடையூர் பிழியக் கண்டனெ னிவளென - வலைபல் வழிவெண் டன்னைநம் படப்பைச் - சூருடைச் சிலம்பிற் சுடர் பூ வேய்ந்து - தாம்வேண் டுருவி னணங்குமார் வருமே - நனை விள் வாயே போலத் துஞ்சுநர்க் - கனவாண்டு மருட்டலு முண்டே க௫ யிவடான் - சுடரின்று தமியளாய்ப் பனிக்கும் வெருவர - மன்ற மரத்த கூகை குழறினும் - நெஞ்சழிந் தரணஞ் சேரு மதன்ற லைப் - புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு - முருகி னன்ன சீற்றத்துக் கடுந்திற - லெந்தையு மில்லா னாக - வஞ்சுவ ளல்ல ளோ விவளிது செயலே." மிடையை ஏறி இழிந்தாளென்றது உ௦ காரணமாக ஐயுற்ற தாயைக் கனவுமருட்டலும் உண்டென்றது முதலாகப் பொய்யெனமாற்றி அணங்கும் வருமென மெய்வழிக் கொடுத்தது. இது சிறைப்புறமாகக் கூறி வரைவுகடாதலின் அதன்பின் வைத்தார். "வேங்கை நறுமலர் வெற்பிடை யாங்கொ ய்து - மாந்தளிர் மேனி வியர்ப்பமற் - றிங்கெனைத்தும் - பாய்ந்த ஊ௫ ருவி யாடினே மாகப் பணிமொழிக்குச் - சேந்தனவாஞ் சேயரிக் கண்." இதுவும் அது.

அவன் விலங்குறினும் = தன்னானுந் தலைவியானும் இடையீடு படுதலின்றித் தலைவனாற் கூட்டத்திற்கு இடையூறு தோன்றினும்: அது வரைவிடைப் பொருட்பிரிவும் வேந்தற்குற்றுழியுங் காவற்பி ௩௦ ரிவுமாம். உம். "செவ்விய தீவிய சொல்லி யவற்றொடு - பைய முயங்கிய வஞ்ஞான் றவையெல்லாம் - பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய - வகனகர் கொள்ளா வலர்தலைத் தந்து - பகன் முனி வெஞ்சுர முள்ள லறிந்தேன் - மகனல்லை மன்ற வினி." "நுண்ஞாண் வலையிற் பரதவர் போத்தந்த - பன்மீ னுணங்கல் கடு

கவருந துறைவனைக் - கண்ணினுற் காண விழையுங்கொ லென்றோழி - வண்ணந்தா வெண்கந் தொடுத்து." எனவரும்.

களம்பெறக் காட்டினும் = காப்புமிகுதியானுங் காதன்மிகுதியானுந் தமர் வரைவுமறுத்ததினானுந் தலைவி ஆற்றுளாயவழி இதேரற்றினானாயிற்றெனச் செவிலி அறிவனைக் கூஉய் அவர் களத்தைப் பெறுநிற்கத் தலைவியை அவர்க்கு வெளிப்படக் காட்டினும்: களமாவது கட்டுங் கழங்கும் இட்டுரைக்கும் இடமும் வெறியாட்டிடமுமாம். உம். "பொய்படு பறியாக் கழங்கே மெய்யே-மணிவரைக் கட்சி மடமயி லாலு - மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோ - னாண்டகை விறல்வே ளல்லனிவள் - பூண்டாங் கிளமுலை யணங்கி யோனே." இது கழங்குபார்த்துழிக் கூறியது. "கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி - யறியா வேலன் வெறியெனக் கூறு - மதுமனங் கொள்குவை யன்னையிவள் - புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே." இது தாயறியாமை கூறி வெறிவிலக்கியது. "அம்ம வாழி தோழி பன்மலர் - நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை - குன்றம் பாடா தாயி - னென்பயன் செய்யுமோ வேலற்கு வெறியே." இது தலைவிக்குக் கூறியது. "நெய்தனறுமலர் செருந்தியொடு விரைஇக் - கைபுனை நறுந்தார் கமழு மார்பனருந்திறற் கடவு ளல்லன் - பெருந்துறைக கண்டிவ ளணங்கியோனே." இது வேலற்குக் கூறியது. "கடவுட் கற்சுனை யடையிறந் தவிழ்ந்த - மறியாக் குவளை மலரொடு காந்தட் - குருதி யொண்பூ வுருகெழக் கட்டிப் - பெருவரை யடுக்கம் பொற்பச் சூர்மக - ளருவி யின்னியத் தாடு நாடன் - மார்புதர வந்த படர்மலி யருநோய் - நின்னணங் கன்மை யறிந்து மாறாது - கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி - வேலன் வேண்ட வெறிமனை வந்தோய் - கடவு ளாயினு மாக - மடவை மன்ற வாழிய முருகே." இது முருகற்குக் கூறியது. "அன்னை தந்தது வாகுவ தறிவன் - பொன்னகர் வரைப்பிற் கன்னந் தூக்கி - முருகென மொழியு மாயி - னருவரை நாடன் பெயர்கொலோ வதுவே." இது தமர்கேட்பக் கூறியது.

பிறன்வரைவு ஆயினும் = நொதுமலர் வரையக் கருதியவழித் தலைவி சுற்றத்தார் அவ்வரைவினை ஆராயினும்: தோழி தலைவற்குந் தலைவிக்குங் கூறும். உம். "கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை-முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக் - கொழுமீன் கொள்பவர் பாக்கங் கல்லென - நெடுந்தேர் பண்ணி வரலா னாதே - குன்றத் தன்ன குவவுமணல் நீந்தி - வந்தனர் பெயர்வர்கொ றாமே யல்கு-

விளையரு முதியருங் கிளையுடன் குழீஇக் - கோட்சுறு வெறிநதெ ளச சுருங்கிய நாம்பின - முடமுதிர் பரதவர் மடமொழிக் குறும கள- வலையுந் தூண்டிலு மறீஇய பெருநகாற்-றிரையெழு பௌவ முனணிய - கொலைவெ ஞ சிறுஅா பாற்பட் டனளே." இது சோ துமலர்வரைவு மலிந்தமை தோழி சிறைபபுறமாகக் கூறியது. ஒ பாறபட்டனளெனத தெளிவுபறறி இறநதகாலத்தாற் கூறினள். இனி, "யாஅண் டையஞே தோழி குன்றததுப - பழங்குழி யக ழநத கானவன் கிழங்கி-னொஎ ரகனமை துணிபெறூஉ நாட - னறி கொழக் கொள்ளு மளவைச செறிதொடி - யெம்மில வருகுவை நீயெனப் - பொம்மலோதி நீவி யோனே." இது தாய் கேட்பதகத் தோழி தலைவிக்குக் கூறியது.

அவன் வரைவு மறுபபினும்=தலைவிசுற்றத்தார் தலைவற்கு வரை வமறுத்தவழியும்; தோழி அறததொடுநிலையாற் கூறும். உம். "அலகன் மழைபொழிந்த வகன்க ணருவி-யாடுமழை யடுகக்த் திழியு நாடன்-பெருவரை யன்ன திருவிறல வியனுமார்பு-முயங்காது கழிந்த நாளிவண-மயஙகிதழ மழைக்கண கலுழு மன்னாய்." "குன றக குறவன் காதன் மடமக - ளணிமயி லன்ன வசைநடைக் கொ மசசியைப் - பெருவரை நாடன் வரையு மாயிற - கொடுத்தனெ மாயினோ நன்றே - யினனு மானாது நன்னுத றுயரே." எனவரும். தலைவிக்குக கூறுவனவுங கொள்க. "அம்ம வாழி தோழி நம்மூ ரு ௦. -பிரிநதோர்ப் புணர்பபவவ ரிருநதனர் கொல்லோ - தணடுடைக் கையா வெண்டலைச் சிதவலர் - நனறுநன றெனனு மாக்களோ- டுன்றுபெரி தென்னு மாங்கண தவையே." இது தமர் வரைவு மறுப்பரோவெனக் கவன்றாட்குத் தோழி கூறியது. "நுணணோர் புருவத்த கண்ணு மாடு - மயிர்வார் முன்கை வளையுஞ் செறூஉங்- களிறுகோட் பிழைத்த சதஞ்சிறந தெழுபுலி - யெழுதரு மழை யிற் குழுமும் - பெருங்க னுடன் வருங்கொ லன்னாய்." இது தமர் வரைவுமறுத்துழி ஆறறுத தலைவிக்குத் தோழி தீயகுறி நீங்கி நறகுறி தனக்குச் செய்யக்கண்டு கடிதினவரைவரெனக் கூறியது.

முன்னிலை அறன் எனப் படுதல் என்று இருவகைப் புரைநீர் களவி தாயிடைப புகுபபினும்=அறனெனப்படுதல இருவகைப் புரைதீர முன்னிலையென்று களவி தாயிடைப் புகுப்பினும்; அறனென்று சொல்லபபடுந் தனமை இருவர்கண்ணுங் குற்றந்தீர் நத எதிர்ப்பாடென்று செவிலியிடத்தே கூறி அக்களவியை நற்றா யிடத்துஞ் செலுத்தினும்: எனறது புனறருபுணர்ச்சியும் பூத்தரு புணர்ச்சியுங் களிறுதருபுணர்ச்சியும் போலவன செவிலிக்குக்

கூறி அவள் நற்றாய்க்குக் கூறுதலை நிகழ்த்துவித்தலாம். எனவே, அவள் தந்தைக்கும் தன்னையர்க்கும் உணர்த்துதலும் அதனை மீண்டுவந்து தலைவிக்கு உணர்த்துதலும் பெற்றாம். அவ்வறத் தொடுநிலை எழுவகைய என்ப பொருளியலுட் கூறுப. உம். "காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்" என்னுங் குறிஞ்சிக் கலியுள், "தெருமந்து சாய்த்தார் தலை." எனப் புணர்ச்சியாற் றோழி செவிலிக்கு அறத்தொடுநிற்பச் செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்ப அவள் ஐயன்மார்க்கு அறத்தொடு நின்றவாறு காண்க. "வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டாராய்க் - கோடாது நீர்கொடுப்ப வல்லது - கோடா - வெழிலு முலையு மிரண்டற்கு முந்நீர்ப் - பொழிலும் விலையாமோ போந்து." "சான்றோர் வருந்திய வருத்தமு நுமது - வான்றோய் வன்ன குடிமையு நோக்கித் - திருமணி வரன்றுங் குன்றங் கொண்டிவள் - வருமுலை யாகம் வழங்கினோ நன்றே - யஃதான், றடைபொருள் கருதுவி ராயிற் குடையொடு கழுமலந் தந்த நற்றேர்ச் செம்பியன் - பங்குனி விழவின் வஞ்சியோ - டுள்ளி விழவி னுறந்தையுஞ் சிறிதே." இவை நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடுநின்றன. "அன்னாய் வாழிவேண் டன்னை யென்னை - தானு மலைந்தா னெமக்குந் தழையாயின - பொன்வீ மணியரும் பினவே - யென்ன மரங்கொலவர் சார லவ்வே." இது தழைதந்தமை கூறிற்று. "சுள்ளி சுனைநீல ஞ் சோர்பா லிலைசெயலை - யள்ளி யளகத்தின் மேலாய்ந்து - தெள்ளி - யிதணால் கடிவொடுங்கா வீர்ங்கடா யானை - யுதணாற் கடிந்தா னுளன்." இது களிற்றிடையுதவி கூறிற்று. "வில்லார் விழவினும் வேலாழி சூழுலகி - னல்லார் விழவகத்து நாங்காணே - நல்லாய் - யுவர்க்கத் தெறிதிரைச் சேர்ப்பனோ டொப்பார் - சுவர்க்கத் துளராயிற் சூழ்." இது செவிலி தலைவியைக் கோலஞ்செய்து இவள் நலத்திற்கு ஒப்பான ஒருவனைப் பெறவேண்டுமென்றாட்குத் தோழி கூறியது. "பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை - துறைபடி யம்பி யகமனை யீனும் - தண்ணந் துறைவ னல்கி - லொண்ணுத லரிவை பாலா ரும்மே." நொதுமலர்வரைவுழி ஆற்றாது பசியட நின்றுழி இதற்குக் காரணமென்னென்ற செவிலிக்குத் தோழி கூறியது. "எந்தையும் யாயு முணரக் காட்டி - யொளித்த செய்தியின் வெளிப்படக் கிளந்தபின் - மலைகெழு வெற்பன் றலைவந் திரப்ப - நன்றுபுரி கொள்கையி னொன்றா கியின்றே - முடங்க லிறைய தூங்கணங் குரீஇ - நீடிரும் பெண்ணைத் தொடுத்த - கூட்டினு மயங்கிய மைய லூரே." இது அறத்தொடு நின்றமை தலைவிக்குக் கூறியது.

வினைவு உடன்பட்டோற் கடாவல் வேண்டினும் = தலைவி தமர்வரைவுடன்படத் தானும் வரைவுடன்பட்ட தலைவன் வரைவிடைவைத்துப் பிரிந்து நீட்டித்தவழி இனி நீட்டிக்கற்பாலையல்லையெனக் கடிந்சொற் கூறி வரைவுகடாவல் வேண்டிய இடத்தும்: உம். "மாமலர் முண்டகந் தில்லையோ டொருங்குடன் - கானலணி ஒ
ந்த வுயர்மண லெக்கர்மேற் - சீர்மிகு சிறப்பினோன் மரமுதலசை
த்த - நீர்மலி கரகம்போற பழந்தூங்கு முடத்தாழைப் - பூமலர்ந்
தவைபோலப் புள்ளல்குந் துறைவகேள்; ஆற்றுத லென்பதொன்
றலந்தவர்க் குதவுதல் - போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரி
யாமை - பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுத - லன்பெனப்படு கஃ
வது தன்கிளை செறாமை - யறிவெனப் படுவது பேதையார் சொன்
னோன்றல் - செறிவெனப் படுவது கூறியது மறாமை - நிறையெனப்
படுவது மறைபிற ரறியாமை - முறையெனப் படுவது கண்ணோடா
துயிர்வௌவ * * * லாங்கதை யறிந்தனி ராயினென் றோழி
நன்னுத னலனுண்டு துறத்தல் கொண்க - தீம்பா லுண்போர் கடு
கலம்வரைத லின்று - நின்றலை வருந்தியா ளயரஞ் - சென்றனை களை
மோ பூண்கநின் றேரோ." இது முற்காலத்து வரைவுகடாவுமாறு
போலன்றி வரைவுகடாயது. "யாரை யெலுவ யாமே நீயெமக் -
கியாரையு மல்லை நொதும லாளனை - யனைத்தாற் கொண்கவெம்
மிடையே நினைப்பிற் - கடும்பகட் டியானை நெடுந்தேர்க் குட்டுவ
வன் - வேந்தடு களத்தின் முரசதிர்ந் தன்ன - வோங்கற் புணரி பா
ய்ந்தாடு மகளி - ரணிந்திடு பல்பூ மரீஇ யார்ந்தவர் - புலம்புகு
தரூஉம் பேரிசை மாலைக் - கடல்கெழு மாந்தை யன்னவெம் - வேட்
டனை யல்லையா னலந்தந்து சென்மே" இது நலந்தொலைவுரை ஓரு
த்து வரைவுகடாயது.

ஆங்கு அதன் தன்மையின் வன்புறை உளப்பட = அங்ஙனங் கடாவியவழி அவ்வரைந்துகோடன் மெய்யாயினமையின் வதுவை முடியுமளவும் ஆற்றுதற்கு வற்புறுத்துக் கூறுதல் உளப்பட: தன்மை, மெய்ம்மை. எனவே, முன் பொய்ம்மையான வற்புறுத்தலும் பெற்றாம். உம். "நெய்கனி குறும்பூழ் காய மாக - வார் கூ
பதம் பெறுக தோழி யத்தை - பெருங்க ணுடன் வரைந்தென வந்
தெதிர - நன்றோ மகனே யென்றனை - னன்றே போலு மென்று
ரைத் தோனே." இது தலைவன் குற்றேவன்மகனுன் வரைவுமலி
ந்த தோழி தலைவிக்குரைத்தது. "கூர்முண் முண்டகக் கூர்ம்
பனி மாமலர் - நூலறு முகத்திற் காலொடு பாறித் - துறைதொறும் கூடு
பரக்குந் தூமணற் சேர்ப்பனை - யானுங் காதலென் யாயு நனிவெ

ய்ய - வெண்ணெயுங் கொடீஇயர் வேண்டு - மம்ப லூரு மவனொடு மொழிமே." எனவரும். "கொடிச்சி காக்கு மடுக்கற் பைந்தினை - முந்து விளைபெருங் குரல்கொண்ட மந்தி - கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி - யங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன் - றிரையணற் கொடுங்கவு ணிறைய முக்கி - வான்பெய னனைந்த புறத்த நோன்பியர் - கையூ ணிருக்கையிற் றோன்று நாடன் - வந்தனன் வந்தனன் வாழி தோழி - யுலங்கயங் கணற்ற பைதறு காலைப் - பீளொடு திரங்கிய நெல்லிற்கு - நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே." இதனுட் தினைவிளைகாலம் வதுவைக்காலமாயினும் வம்பமாரி இடையிடுதலன்றி யான்கூறிய வரைவு பொய்த்தனோனும் இன்று மெய்யாகவே வந்தனனென்றாள். "உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுத - லரவு வாய முள்ளிலைத் தாழை - பொன்னேர் தாதிற் புன்னையொடு கமழும் - பல்பூங் கானற் பகற்குறி வந்துநம் - மெய்கவின் சிதையப் பெயர்ந்தன னாயினுங் - குன்றிற் றோன்றுங் குவவுமண லேறிக் - கண்டனம் வருகஞ் சென்மோ தோழி - தண்டா ரகலம் வண்டிமிர் பூதப் - பன்மணிக் கலிமா கடைஇ - நெடுநீர்ச் சேர்ப்பன் வரூஉ மாறே." இது தலைவன் வரைவொடுவருகின்றமை காண்கம் வம்மோவென்றது.

பாங்குற வந்த நாலெட்டும் = பாங்கியர் பலருள்ளும் பாங்காந்தன்மை சிறப்பக் கூறிய முப்பத்திரண்டும்: நாலெட்டுமென உம்மை விரிக்க; வகையும் = இக்கூற்றுக்களிலே வேறுபட வருவனவும்: தாங்கருஞ் சிறப்பிற் றோழி மேன = பொறுத்தற்கரிய சிறப்பினையுடைய தோழியிடத்தன.—எ-று. எனவே, ஒன்றிய தோழிக்கன்றி ஏனையோர்க்கு இக்கூற்று இன்றென்றான். தாயத்தாய்க் கொண்டுவருஞ் சிறப்பும் இருவர் துன்பமுந் தான் உற்றாளாகக் கருதுஞ் சிறப்பும் உடைமையிற் றாங்கருஞ் சிறப்பென்றான். உரைத்துழிக் கூட்டத்தோடே அகற்சியும் என்றலும் ஊட்டலும் உரைத்தலும் அச்சுறுத்தலும் எஞ்சாமற் கிளந்த இருநான்கு கிளவியும் பாங்குறவந்த என்க. நாட்டத்தின் கண்ணும் எஞ்சாமற் கிளந்த என்க. என்றது, ஆராய்ச்சியுடனே இவ்வெட்டுங் கூறுமென்றான். பெயர்ப்பினும் ஒழிப்பினும் உரைத்துழிக் கூட்டத்தோடு எஞ்சாமற் கிளந்த என்க. ஏனைப்பொருள்கள் ஏழனுருபும் வினையெச்சமுமாய் நின்றவற்றைப் பாங்குறவந்த என்பதனோடு முடித்து அப்பெயரெச்சத்தினை நாலெட்டென்னும் பெயரோடு முடித்து அதனைத் தோழிமேனவென முடிக்க.

இனி வகையாற்கொள்வன வருமாறு. "அன்னை வாழிவேண் டன்னை நெய்த - னீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவ - னெந் தோ டுறந்த காலை - யெவன்கொல்பன் னாள்வரு மவனளித்த போழ்தே." இது அறத்தொடுநின்றபின் வரைவு நீட்டித்துழி ஐயுற்றசெவிலி அவன் நும்மைத் துறந்தான்போலும் நுங்கட்கு அவன் கூறியதிறம் யாதென்றாட்குத் தோழி கூறியது. "புன்னை வாழிவேண் டன்னை கழனிய - முண்டக மலருந் தண்கடற் சேர்ப்ப - னெந்தோ டுறந்தன னாயி - னெவன்கொன் மற றவ னயந்த தோளே." இது அறத்தொடுநின்றபின் வரைவுநீட மற்றொரு குலமகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலி குறிப் பறிந்த தோழி அவட்குக் கூறியது. "அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு - ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவ - னிவட்கமைந் தனனாற் றனே - தனக்கமைந் தன்றிவள் மாமைக் கவினே." இது வதுவைநிகழாநின்றுழித் தாய்க்குக் காட்டித் தோழி கூறியது "கன்னவி றோளான் கடிநாள் விலக்குதற் - கென்னை பொருணினைந்தா யேந்திழாய் - பின்னை - நமரேற்றுக் கொள்ளுமென் றஞ்சினே னஞ்சா - நமரேற்றுக் கொள்ளாத ஞான்று." இது சுற்றத்தார் பொருள்வேண்டி மறுத்தாரென்றது. "நொதுமலாளர் கொள்ளா ரிவையே - யெம்மொடு வந்து கடலாடு மகளிரு - நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையா - ருடலகங் கொள்வோ ரின்மையிற் - றொடலைக் குற்ற சிலபூ வினரே." இது கையுறை மறுத்தது. "அம்ம வாழி தோழி நம்மலை - வரையா மிழியக் கோட னீடக் - காதலர்ப் பிரிந்தோர் கையற நலியுந் - தண்பனி வடந்தை யச்சிர - முந்து வந்தனர்நங் காத லோரே." இது வரைவிடைப்பிரிந்தோன் குறித்த பருவத்திற்குமுன் வருகின்றமை யறிந்த தோழி தலைவிக்குக் கூறியது. (௨௫)

௧௧௫. களவல ராயினுங் காமமெய்ப் படுப்பினு
மளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினுங்
கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரு
மொட்டிய திறத்தாற் செய்திக் கண்ணு
மாடிய சென்றுழி யழிவு தலைவரினுங்
காதல் கைமிகக் கனவி னரற்றலுந்
தோழியை வினவலுந் தெய்வம் வாழ்த்தலும்
போக்குடன் அறிந்தபிற் றோழியொடு கெழீஇக்
கற்பி னாக்கத்து நிற்றற் கண்ணும்

பிரிவி னெச்சத்து மகணெஞ்சு வலிப்பினு
மிருபாற் குடிப்பொரு ளியல்பின் கண்ணு
மின்ன வகையிற் பதின்மூன்று கிளவியோ
டன்னவை பிறவுஞ் செவிலி மேன.

இது செவிலிகூற்று நிகழுமாறு கூறுகின்றது: அக்கூற்றுச் செவிலி தானே கூறப்படுவனவுந் தலைவியுந் தோழியுங் கொண்டு கூற்றாகக் கூறப்படுவனவுமென இருவகையவாம்: இக்கூறப்பட்ட பதின்மூன்றுகிளவியும் அவைபோல்வனபிறவுஞ் செவிலி தானே கூறப்படுவனவுந் தலைவியுந் தோழியும் அவள் கூற்றுக் கொண்டெடுத்து மொழியப்படுவனவுமாகச் செவிலிக்குரியவாமென்றவாறு. இன்னவகையென்றது தன்கூற்றுங் கொண்டுகூற்றுமாய் நிகழுமென்றற்கு. (இ-ள்) களவு அலர் ஆயினும் = களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாய் அலர் தூற்றப்படினும். உ-ம். "பாலடிசிலுண்ணாது பசுவாய் வளர்ந்த - யேதின் மாக்க ளுவறலு நுவல்ப-வெழில தெவன்கொலிப் பேதை யூர்க்கே - பெரும்பூட் பொறையன் பேஎ முதிர் கொல்லிக் - கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய - நல்லியற் பாவை யன்னவென் - மெல்லியற் குறுமகள் பாடிநன் குறினே." இது செவிலிதானே கூறியது. "அம்ம வாழி தோழி நென்ன - லோங்குதிரை வெண்மண லுடைக்குந் துறைவற் - கூரார் பெண்டென மொழிய வென்னை - யதுகேட், டன்று மென்றன ளன்னை - பைபய வெம்மை யென்றனென யானே." பெண்டென்றதனைக்கேட்டு அன்றுமென்றனள் அன்னையென அலர் தூற்றினமைகண்டு செவிலிகூறிய கூற்றினைத் தலைவி கொண்டுகூறியவாறு காண்க.

காமம் மெய்ப்படுப்பினும் = தலைவி கரந்தொழுகுங் காமந்தானே அக்களவினை நன்றாயுந் தீதாயும் மெய்க்கண் வெளிப்படுப்பினும்: உ-ம். "மணியுட் டிகழ்தரு நூல்போன் மடந்தை-யணியிற் றிகழ்வதொன் றுண்டு." காமத்தாற் றிகழ்ந்த பொலிவினைச் செவிலி தானே கூறியது.

அளவு மிகத் தோன்றினும் = கண்ணுந் தோளும் முலையும் பிறவும் புணர்ச்சியாற் கதிர்த்துக் காரிகைநீரவாய் அவளிடத்து அளவை மிகக்காட்டினும். உ-ம். "கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப் - பெண்ணிறைந்த நீர்மை பெரிது." இது கதிர்ப்புக்கண்டு செவிலி தானேகூறியது. "பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென-வாகத் தரும்பிய சுணங்கும் வம்புடைக்-

கண்ணூறு தெழுதரு முலையு நோக்கி - பெய்யிவள் பெரிதெனப் பன்மாண கூறிப் - பெருநதோ ளடைய முயங்கி நீடுநினைந் - தருங் கடிப் படுத்தனள் *** ஞான்றே.'' தோழி கொண்டுகூறியது.

தலைப்பெய்து காணினும் = இருவர்க்குங் கூட்டம் நிகழ்தலானே தலைவனை இல்லிடத்தே வரக்காணினுந் தலைவியைப் புறத்துப்போகக் காணினும்: பெய்தெனபது காரணகாரியப்பொருட்டாய பிறவினைகொண்டது. உ-ம் ''இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப் - புலவுநாறு புகர்நுதல கழுவக் கங்கு - லருவிந்த வணங்குடை நெடுங்கோட் - டஞ்சுவரு விடர்முழை யாரிருளகற்றி - மின்னொளி ரவிர்கஞ் சென்னெறி விளக்கத் - தனியன் வந்து பனியலை முனியா - னீரழி மருங்கி னாரிடத் தமனற-னுளவி பொடு மிடைந்த கூதளங் கண்ணி - யசையா நாற்ற மசைவளி பகரத் - துறுக னண்ணிய கறியிவர் படப்பைக் - குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரு-மெய்ம்மலி யுவகைய னந்நிலை கண்டு-முருகென வுணர்ந்து முகமன் கூறி - யுருவச் செந்தினை நீரொடு தூஉய் - நெடுவேட் பரவு மன்னை யன்னோ - வென்னா வதுகொ றானே பொன்னென - மலர்ந்த வேங்கை யலங்குசினை பொலிய - மணிநிற மஞ்ஞை யகவு - மணிமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே.'' இம்மணிமிடைபவழத்துத் தலைவனைச் செவிலிகண்டு முருகெனப் பராவினமை தோழி கொண்டுகூறினாள். "உருமுரறு கருவிய'' என்பதனுள் ''மிடைபூ பிழியக் கண்டன ளெவனோ - மலையல வாழிவெண் டன்னை'' என்றது தலைவி புறத்துப்போகக்கண்டு செவிலி கூறியதனைத் தோழி கொண்டுகூறினாள். தாமே கூறுவன வந்துழிக்காண்க

கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும் ஒட்டிய திறத்தாற் செய்திக்கண்ணும் = கட்டுவிச்சியும் வேலனுந் தாம் பார்த்த கட்டினுங் கழங்கினுந் தெய்வத்திற்குச் சிறப்புச்செய்யாக்கால் இம்மையல் தீராதென்று கூறுதலின் அவ்விருவருந் தம்மினொத்த திறம்பற்றியதனையே செய்யுஞ் செயதியிடத்தும்: திறமென்றதனான் அவர் வேறுவேறாகவுங் கூறப்படும். உ-ம். ''பெய்ம் மணன் முற்றங் கவின்பெற வியற்றி - மலைவான் கோட்ட சினைஇய வேலன - கழங்கினா னறிகுவ தென்றால் - நன்றா லம்ம நின்ற விவ ணலனே.'' இது வேலன கழங்குபார்த்தமை கூறிற்று. ''அறியா மையின் வெறியென மயங்கி - யன்னையு மருந்துய ருழந்தன ளதனா - னெய்யாது விடுதலோ கொடிதே நிறையித - ழாய்

றுகிழ வோனே - டகன்மா யநதிப் படுசுட ரமயத - தவணமனூ
தேள நோக்கி மற்றிவன் - மகனே தோழி யென்றனை - ளிதனள
வுண்டுகொன் மதிவல லோ'க்கே." இது செவிலிகூறுதிலைத்
தோழி கொணடு கூறியது.

**காதல கைமிகக் கனவின அரற்றலும்** = தலைவியிடத்துக்கு
காதல கையிகநது பெருகுதலாற் துயிலாநின்றுழியும் ஒனறு
கூறி ஆற்றுதலும்: கனவு, துயில; துயிலிற் காண்டலைக் கனவிற்
காணடலென்ப. உம். "பொழுதுமெல்லின்றே" என்பதனுள் "புத
லவற்புலலி அனனுய்" என்று தலைவியை விளித்தது கனவின் அ
ரறறலாயிற்று. அரற்றல இனனதோர் இன்னுக்காலதது என் கெ
செயகின்றுயெனக் காதலபற்றி இரங்குதல்.

**தோழியை வினவலும்** = நின்றோழிக்கு இவ்வேறுபாடு எற
றினனுயிற்றென்றுற்போலத் தோழியை வினவுதலும்: உம். "நெடு
வேலேந்தி நீயெமக் கியாஅர்-தொடுத லோம்பென வாற்றலு மாற
றுங் - கடவுள் வேங்கையுங் காந்தளு மலைந்த - தொடலைக் கண்ணி கரு
பரியது மென்னும் - பாம்புபட நிவகத பயமழைத் தடக்கை-
பூம்பொறிக் கழற்கா லாஅய குனறத்துக் - குறுஞ்சுனை மலாநத
குவளை நாறிச் - சிறுதேன் கமழ்ந்த வம்மெல லாகம் - வாழியெம்
மகளை யுரைமதி யிம்மலைத் - தேம்பொதி கிளவியென் பேதை-
யாங்கா டினளோ நின்னொடு பகலே." எனவரும். இது செவிலி உ.
தோழியை வினயது. "ஓங்குமலை நாட வொழிகநின் வாயமை-
காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி - யுறுபகை பேணு திர
வின் வநதிவள் - பொறிகிளர் ராகம் புல்லத் தோள்சேர் - பறகாற்
பறவை யளவில மொய்த்தலிற் - கண்கோ ளாக நோக்கிப் பண்டு-
மினையை யோவென வினவின ளாயே - யதனெதிர் சொலலா ளுறி
ளாகி யலலாந - தென்முக நோக்கி யோளே யன்னு - யாங்குணர
துய்குவள் கொல்லென மடுத்த - சாநத ஞெகிழி காட்டி - யிங்கா
யினவா லென்றிசின் யானே." இது செவிலி வினுயினமையைத்
தோழி கொண்டுகூறினுள்.

**தெய்வம் வாழ்த்தலும்** = இன்னதொன்று நிகழ்நததெனத்
துணிநதபின்னர்த் தன்மகளொடு தலைமகனிடை நிகழநத ஒழுக
கம் நன்னர்த்தாகவெனத் தெய்வத்திறகுப பராவுதலும்: உம.
'பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய - செறிபடை யம்பின
வல்விற் கானவன்-பொருது தொலையானை வெணகோடு கொண்டு
நீர்திகழ் சிலம்பினன் போன கழலோன் - கண்பொரு திமைக்கும் கூடு

திருமணி கிளர்ப்ப - வைந்நுதி வான்மருப் பொடிய வுகக்க - தெண்ணீ ராலி கடுக்கு முத்தமொடு - மூவேறு தாரமு மொருங்குடன் சாஅறிச் சாரதம் போன்ற மாமர நறைநார் - வேங்கைக் கண்ணணி யணிந்து ... பலவி னோங்கெழு செல்வத் - தெந்தையு மெதிர்ந்தனன் கொண்டே யலர்வா - யம்ப லூருமவ னொடு மொழியுஞ் - சாயிறைத் திரண்ட தோளபா ராட்டி - யாயு மவனே யென்னும் யாமும் - வல்லே வருக வரைந்த நாளென - நல்லிறை மெல்விரல் கூப்பி - யில்லுறை கடவுட் கொக்குதும் பலியே." இதனுட் டோளபாராட்டி யாயுமவனே என்னுமென்று யாய் தெய்வம் பராயினளென்பதுபடக் கூறி யாம் அத்தெய்வத்திற்குப் பலிகொடுத்துமென றவாறு காணக.

போக்குடன் அறிந்தபிற் றோழியொடு கெழீஇக் கற்பின் ஆக்கத்து நிற்றற்கண்ணும் = உடன்போக்கு அறிந்தபின்னர்ச் செவிலி தோழியொடு மதியுடம்பட்டுநின்று தலைவியது கற்புமிகுதி களையே கருதி உவந்த உவகைக்கண்ணும்: அது "எம்மனை முந்துறத் தருமோ தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே." என்றாற்போலக் கற்பினுக்கத்துக் கருத்துநிகழ்தல். உம். "முயங்குகம் வாராய் தோழி தயங்குபு - கடல்பெயர்ந் தன்ன கானலங் கலலெனப் - பெயல்கடைக் கொண்ட பெருந்தண் வாடை - வருமுலை வெப்பங் கொழுநற் போற்றிய - சென்றனை ளெம்மனின் றோழி யவனொ - டென்றினி வருஉ மென்றனள் - வலந்துரை தவிர்ந் தன் றலர்ந்த வூரே." இது செவிலி கற்பினுக்கத்து நின்றமை தோழி கூறியது.

பிரிவின் எச்சத்தும் = தலைவி உடன்போயவழித் தான் பின் செல்லாதே எஞ்சுதலும் உளவாதலின் ஆண்டுக் கூறுவனவும். உம். "தெறுவ தம்ம நும்மகள் விருப்பே-யுறுதுய ரவலமொ டுயிர் செலச் சாஅய்ப - பாழ்படு நெஞ்சம் படரடக் கலங்க - நாடிடை விலங்கிய வெற்பிற் - காடிறந் தனளம் மணங்கி யோளே." இது பின்செல்லாது வருந்தியிருந்த செவிலியைக் கண்ட நற்றாய் கூறியது. இது நற்றாய்கூற்றாய்ச் செவிலிமேன ஆயிற்று.

மகள் நெஞ்சு வலிப்பினும் = உடனபோக்கிற்கு மகள நெஞ்சுத் துணியினும்: தன்மேல அன்பு நீங்கியது உணர்ந்து செவிலி கூறும். உம். "பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனெ னென்றனள் - இனியறிந் தேனது துனியா குதலே - சபூறொடி மாஅய

மழைதவழ் பொதியில் - வேங்கையுங் காந்தளு நாறி - யாம்பல மலரினுந் தான்றண் ணியளே." எனவரும்.

இருபாற் குடிப்பொருள் இயல்பின் கண்ணும் = தலைவனுந் தலைவியுந் தோன்றிய இருவகைக் குடியும் நிரம்பிவருதல் இயல்பாகப் பெற்றவழியும்: பொருளென்றார், பிறப்புமுதலிய பத்தையுங் கருதி. "காமர்கடும்புனல்" என்னுங்கலியுள் "அவனுந்தான், ஏனல் இதணத் தகிற்புகை யுண்டியங்கும் - வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத் - தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங் - கானக நாடன் மகன் - எனவாங்கு, அறத்தொடு நின்றேனைக் கண்டு - திறப் பட வென்னையர்க் குய்த்துரைத் தாளியாய்." எனத் தோழி தான் கூறிய இருபாற் குடிப்பொருளைக் கூறிச் செவிலி அறத்தொடு நின்றாளெனக் கொண்டெடுத்து மொழிந்தவாறு காண்க.

இன்னவகைப் பதின்மூன்று கிளவியோடு அன்னவை பிறவும் = இத்தன்மைத்தாகிய கூறுபாட்டையுடைய பதின்மூன்று கிளவியோடே அவைபோல்வன பிறவாய் வருவனவும்: செவிலி மேன = தன்கூற்றாயும் பிறர்கொண்டு கூறுங் கூற்றாயும் கூறுங் கூற்றுச் செவிலிக்கு உரியவாம். — எ-று. அன்னபிற என்றதனால், "பறைபடப் பணிலம் ஆர்ப்ப விறைகொளத் - தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய - நாலூர்க் கோசர் நன்மொழி போல - வாயா கின்றே தோழி யாய்கழற் - சேயிலை வெள்வேல் விடலையொடு - தொகுவளை முன்கை மடந்தை நட்பே" இது உடன்போயபின் செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநின்றது. இன்னும் அதனானே "வல்லுளைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்" என்றலுஞ் "சிறுகிளி கடிதற் றேற்றா ளிவள்" என்றலுங் "கண்கோ ளாக நோக்கிப் பண்டு மினையையோ" என்றலும் போல்வன பிறவுங் கொள்க ()

## ககசு. தாய்க்கும் வரையா ருணர்வுடம் படினே.

இது செவிலிக்கு உரியனகூறி நற்றாய்க்கு உரிய கூற்றுக் கூறுகின்றது. (இ-ள்.) உணர்வு உடம்படின் = அங்ஙனஞ் செவிலி உணர்ந்தாங்கே நற்றாயும் மதியுடம்படில்: தாய்க்கும் வரையார் = நற்றாய்க்கும் முற்கூறிய பதின்மூன்று கிளவியும் பிறவுமாகக் கொண்டு எடுத்து மொழிதல் வரையார் — எ-று. தாய்க்கும் என்றார் இவட்கு அத்துணை பயின்றுவாரா என்றற்கு. அது நற்றாய் இல்லறம் நிகழ்த்துங் கருத்து வேறு உடைமையின் உற்றுநோக்

கான் செவிலியே தலைவியை உற்றுநோக்கி ஒழுகுவாளாதலின் இலக்கணமுண்மையின் இலக்கியம் வந்துழிக்காண்க. (உரு)

ககஎ. கிழவோ னறியா வறிவின ளிவளென
மையறு சிறப்பி னுயர்ந்தோர் பாங்கி
னையக் கிளவி யறிதலு முரித்தே.

இது அங்ஙனங் களவு வெளிப்பட்ட பின்னர் நற்றாய்க்குஞ் செவிலிக்கும் உரியதோர் இலக்கணங் கூறுகின்றது (இ-ள்.) கிழவோன் அறியா அறிவினள இவளென ஐயக்கிளவி = நங்குலத்திற்கு ஒத்த தலைவனை அறிந்து கூடாத அறிவினையுடையள் இவளென்று தம்மனத்தை ஐயமுற்றுப் பிறரோடு உசாவுங் கிளவியை: மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின் அறிதலும் உரித்தே = குற்றமற்ற சிறப்பினையுடைய அந்தணர் முதலியோரிடத்தே கூறி அதுவும் முறைமையென்று அவர் கூற அறிதலும் உரித்து—எ-று. என்றது, "மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே" என முற்கூறினமையிற் தலைவன் தன்குலத்தின் உயர்ந்தமை அறிந்தவிடத்து இங்ஙனங் கூடுதல் முறையன்றென்று ஐயுற்ற செவிலியும் நற்றாயும் உயர்ந்தோரைக் கேட்டு இதுவுங் கூடுமுறைமை எனறுணர்வர் என்பதாம். இலக்கணமுண்மையின இலக்கியமும் அக்காலத்து உளவென்றுணர்க. (உகூ

ககஅ. தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்த
லெண்ணுங் காலை கிழத்திக் கில்லைப்
பிறநீர் மாக்க ளின்றிய வாயிடைப்
பெய்ந்நீர் போலு முணர்விற் றென்ப.

இது தலைவிக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்) பிறநீர் மாக்களின் = வேறுவேறாகத் தம்மிற் றாங் காதல செய்து ஒழுகும் அறிவில்லாதாரைப்போல: கிழவன் அறியத் தன்னுறு வேட்கை முற்கிளத்தல் கிழத்திக்கு இலலை = தலைவன் அறியும்படியாகத் தனக்குற்ற வேட்கையை அவன்முன்னர்க் கூறுதல தலைவிக்கு இல்லை: ஆயிடை = அங்ஙனங் கூற்றில்லாதவிடத்து: எண்ணுங் காலையும்: அவள வேட்கையை அவன் ஆராயுங்காலையும்: பெய்நீர் போலும் உணர்விற்று என்ப = அவ்வேட்கை புதுக் கலததுப் பெய்த நீர் புறத்துப் பொசிந்து காட்டுமாறுபோலும் உணர்வினையுடைத்தென்று கூறுவர் ஆசிரியர்—எ-று. கிழத்திக்

இல்லையெனவே தோழிக்குத் தலைவி தனது வேட்கையை எதிரினறு கூறுதலுளதென்பது பெற்றும். தலைவிக்குக் குறிப்பானன்றித தலைவனமுன்னின்று கூறும் வேட்கைக்கூற்றின்மை முற்கூறிய செய்யுட்களுட் காண்க. எனவே தோழிமுன்னர்த் தலைவிக்கு வேட்கைக்கூற்று நிகழ்தல பெற்றும். உம். "சேணோன மாட்டிய நறும்புகை" "ஏயற் புறத்த் தீம்புறத் திறுத்த" என்பனவும் "இவளே நின்சொற கொண்ட" என்றாற்போல் வருவனவும் முன்னர்க் காட்டினும். "கடும்புனன மலிந்த காவிரிப் போதந்தோளே" என்றாற்போலவன தலைவிவேட்கையைத் தலைவன குறிப்பான் உணர்ந்தன. (௨௭)

௧௧௯. காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலிற்
றாமே தூதுவ ராதலு முரித்தே

இது எய்தாதது எய்துவித்தது பாங்கனும் தோழியும் நிமித்தமாகவன்றித் தாமே தூதாகும் இடமும் உண்டென்றலின். (இ-ள்) காமக்கூட்டந் தனிமையிற் பொலிதலில் = இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடுங் கூடுவாரையின்றித் தனிமையாற் பொலிவுபெறுதலின்; தாமே தூதுவர் ஆகலும் உரித்தே = ஒருவருக்கு ஒருவர் தூதுவராகி ஒருவர் ஒருவரைக் கூடுதலும் ஆண்டுரித்து —எ-று. அது மெய்ப்பாட்டினுட் புகுமுகம்புரிதன்முதலிய பன்னிரண்டானும் அறிக. இதன்பயன இக்கூட்டத்தின்பின்னர் வரைதலும் உண்டெனபதாம் (௨௮)

௧௨௦. அவன்வரம் பிறத்த லறந்தனக் கின்மையிற
களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்
தான்செலற் குரியவழி யாக லான.

இது முன்னர்க் களனும் பொழுதும் என்றவற்றுட் களங்கூறுதற்கும் உரியாள் தலைவியென்கின்றது. (இ-ள்.) அவன்வரம்பு இறத்தல் = தலைவன் கூறிய கூற்றின் எல்லையைக்கடத்தல்; தனக்கு அறமின்மையின் = தலைவிக்கு உரித்தெனக் கூறிய தருமநூலின்மையின்; களஞ்சுட்டுக் கிளவி கிழவியது ஆகும் = தலைமகனை இன்னவிடத்து வருகவென்று ஓரிடத்தைத் தான்கருதிக் கூறுங்கூற்று அவன்குறிப்புவழி ஒழுகுந் தலைவியதாம்; தான் செலற்கு உரியவழி ஆகலான = தான் சென்று கூடுதற்குரிய இடந் தானே உணர்வன ஆதலான்.—எ-று. சுட்டுக்கிளவி என்றதன் கருத்துத் தலைவன இருவகைக்குறியும் வேண்டியவழி அவனை மறுத்து தான் அறிந்த

விடத்தினைக் கூற்றானன்றிக் குறிப்பானுதல் சிறைப்புறத்தானுதல தோழியானுதல உணர்த்துமென்பதாம். தலைவன களஞ்சுட்டுமாயின் யாண்டானும் எப்பொழுதானும் அக்களவொழுக்கம் நிகழந்தது பிறர்க்கும் புலனாயக் குடிப்பிறப்பு முதலியவற்றிற்குத் தகாதாம். "விரியிணர் வேங்கை" எனனும் அகப்பாட்டுத் தலைவி களஞ்சுட்டியது. "மறந்திசின யானே" என்றலின் இது குறிப்பான உணர்த்திற்று. பிறவும் வந்துழிக் காண்க. (௨௯)

௧௨௧. தோழியின் முடியு மிடனுமா ருண்டே.

இது தோழிக்குங் களஞ்சுட்டுக் கிளவி உரிததென்று எய்தாதது எய்துவித்தது. (இ-ள்) களஞ்சுட்டுக்கிளவி தலைவிகுறிப்பாற தோழி கூறுதலன்றித் தானேயுங் கூறப்பெறும் ஒரோவழி—எ-று. தோழி குறித்த இடமுந் தலைவி தானசேறறகுரிய இடமாமெனபது கருத்து. உம். "செவ்வி ஞாழற கருங்கோட் டருசினைத்-தனிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை-மணிககேழ் நெய்தன் மாக்கழி நிவப்ப-வினிட புலம் பினறே கானலு நளிகடற-றிரைசு முழந்த திண்டிமில விளககிற-பன்மீன் குட்ட மெனனேயர் க காட்டிய-வெந்தையுஞ் செலலுமா ரிரவே யந்தி-லணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி-யாயு மாயமோ டயருநீயுந்-தேம்படு யோதி திருநுத னியிக-கோங்கு முகைத்தனன குவிமுலை யாகத்-தின்றுயி லமர்ந்தனை யாயின வண்டுபட-விரிந்த செருந்தி வெணமணன் முடுக்கர்-பூவேய் புன்னையந் தண்பொழில-வாவே தெய்ய மணந்தனை செலறகே" எனத் தோழி களஞ்சுட்டிய வாறும் காண்க. (௩0)

௧௨௨. மூன்றா ளல்லது துணையின்று கழியா
தந்நா ளகத்து மதுவரை வின்றே.

இதுவும் அதிகாரத்தாற் தலைவிக்கெய்தியதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) மூநநாள் அல்லது துணையின்ற கழியாது = பூப்பெய்திய மூன்றுநாளும் அல்லது கூட்டமின்றி இக்களவொழுக்கங் கழியாது: அந்நாளகத்தும் அது வரைவு இன்றே - அம்மூன்றுநாளின் அகப்பட்ட நாளாகிய ஒருநாளினும் இரண்டுநாளினுந் துணையின்றிக் கழிதல நீக்கப்படாது.—எ-று. அது என்றது துணையின்று கழிதலை, பூப்பினுற் துணையின்றிக் கழிதலபொருந்திற்றாயினும் பூப்பின்றி ஒருநாளும் இரண்டுநாளுந் துணையின்றிக கழிதல்

வழுவாமெனக் கருதின் அதுவும் புறத்தார்க்குப் புலனாம் என்று
அஞ்சுதலாற் கழிதலின் வழுவாகாவென்றற்கு வரைவின்றென்
றார். இன்னோரன்ன காரணம் தலைவற்கின்மையின் அவனாற் றலை
யின்றிக் கழிதல் இனைத்தாயிற்று. உம். "குக்கூ வென்றது கோ
ழி யதனெதிர் - துட்கென் றற்றென் றூய நெஞ்சம் - தோடோய்
காதலர்ப் பிரிக்கும் - வாள்போல வைகறை வந்தன்றா லெனவே."
இது முந்நாளைப்பிரிவாகிய பூப்பிடைப்பிரிவு வந்துழித் தலைவி
கூறியது. இனி அல்லகுறிப்பட்டுழி ஒருநாளும் இரண்டுநாளும்
இடையீடாமென்றுணர்க. பூப்புநிகழாத காலத்துக் களவொழுக்
கம் பூப்பு நிகழ்காலம் வரையப்பட்டதென்று உரைப்பாரும் உளர்.
இவ்விதி அந்தணர்க்குக் கூறியதன்று. அரசர் வணிகராதியோர்க்
குச் சிறுபான்மையாகவும் ஏனைவேளாளர் ஆயர் வேட்டுவர் முத
லியோர்க்குப் பெரும்பான்மையாகவுங் கூறிய விதியென்றுணர்க.
என்னை? பூப்பு நிகழுங்காலத்து வரையாது களவொழுக்கம் நிக
ழ்த்தினார்க்கு "அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான - வந்த
குற்றம் வழிகெட வொழுகலும்" என்பதனாற் பிராயச்சித்தம்
விதிப்பராதலின். இதனானே அந்தணர்மகளிர்க்கும் பூப்பெய்தி
யக்கால் அறத்தொடு நின்றும் வரைதல் பெறுதும். (௩௧)

௩௨. பன்னூறு வகையினுந் தன்வயின் வரூஉ
நன்னய மருங்கி னாட்டம் வேண்டலிற்
றுணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகுந்
துணையோர் கருமம் மாக லான.

இது தலைவிக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது
(இ-ள்.) தன்வயின் வரூஉம் நன்னய மருங்கின் = தலைவியிடத்தே
தோழிக்குஞ் செவிலிக்கும் வருகின்ற அன்புமிகுதிக்கண்ணே: பன்
னூறு வகையினும் நாட்டம் வேண்டலில் - பலநூறாகிய பகுதியானு
ம் ஆக்கமுங் கேடும் ஆராய்தலை அவர் விரும்புதலாலே = துணைச்சு
ட்டுக் கிளவி கிழவியதாகும் = இவள் ஓர் துணையுடையளென அவர்
சுட்டுதலிடத்துக் கிளக்குங் கிளவி தலைவியதாம்: துணையோர்
கருமம் ஆகலான = அக்கிளவி அத்தோழியானுஞ் செவிலியானும்
முடியுங்காரியம் ஆதலான் — எ-று. என்றது, தோழி பல்வேறு
கவர்பொருணாட்டம் உற்றவழியுஞ் செவிலி களவு அலராதல் முத
லியவற்றான் நாட்டமுற்றவழியுந் தலைவி அறத்தொடு நிற்குமெ
ன்று அறத்தொடுநிலைக்கு இலக்கணங் கூறியவாறாயிற்று. தோழி

க்குத் தலைவி அறத்தொடுநிற்ப, அவள் செவிலிக்கு அறத்தொடு நிற்ப, அவள் நற்றாய்க்கு அறத்தொடுநிற்குமென்று உணர்க. இதனானே பாங்கற்கு உற்றதுரைத்தபின்னர்த் தலைவன் உரையாமையும் பெறதும். "புனையிழை நோக்கியும்" என்னும் மருதக்கலியுள், 'வினவுதியாயின்' என நாடகம் நிகழ்ந்தவாறும் அதன்சுரிதகத்துக் கூட்டமுண்மை கூறுதலிற் றுணைச்சுட்டுக் கிளவி கிழவியதாயவாறுங் காண்க. "கொடியவுங் கோட்டவும்" என்பதன் சுரிதகத்துச் செவிலிக்கு உரையாயெனக் கூறியவாறுங் காண்க. (௩௨)

௧௨௪. ஆயபெருஞ் சிறப்பி னருமறை கிளத்தலிற்
றாயெனப் படுவோள் செவிலி யாகும்.

இது முற்கூறிய செவிலிசிறப்புக் கூறுகின்றது. (இ-ள்.) ஆய பெருஞ் சிறப்பின் = தாயத்தாய்க் கொண்டு உயிர் ஒன்றுப வருகின்றாளென்று ஆராய்ந்து துணியப்பட்ட பெருஞ்சிறப்புக் காரணமாக. அருமறைகிளத்தலின் = கூறுதற்கரிய மறைப்பொருளெல்லாங் குறிப்பானன்றிக் கூற்றாற் கூறத்தக்காளாதலின்: தாயெனப் படுவோள் செவிலி ஆகும் = தாயென்று சிறப்பித்துச் சொல்லப்படுவாள் செவிலியேயாம்.—எ-று. எனவே ஈன்றதாயினுங் களவின்கட் சிறந்தாள் இவளென்றார். கற்பிற்கு இருவரும் ஒப்பாராயிற்று. செவிலி சிறந்தமை சான்றோர் செய்யுளுட் பலருங் கூறியவாறு காண்க. (௩௩)

௧௨௫. தோழி தானே செவிலி மகளே.

இது தோழியது சிறப்புணர்த்துகின்றது. (இ-ள்.) தோழி தானே = தோழியர் பலருள்ளும் ஒருத்தியெனப் பிரிக்கப்படுவாள். செவிலிமகளே = முற்கூறிய செவிலியுடையமகள்.—எ-று. இதற்கும் அருமறைகிளத்தல் அதிகாரத்தாற் கொள்க. தாயத்தாய்க் கொண்டுவருகின்றமையின் உழுவலன்பு போல்வதோர் அன்புடையர் இருவருமென்று கொள்க. இதனானே களவிற்குத் தோழியே சிறந்தாளாயிற்று; அது சான்றோர் செய்யுளுட் காண்க. (௩௪)

௧௨௬. சூழ்தலு முசாத்துணை நிலைமையிற் பொலிமே

இதுவுந் தோழிசிறப்பினையே கூறுகின்றது. (இ-ள்.) உசாத்துணை நிலைமையின் = தலைமகனுந் தலைமகளும் உசாவுதற்குத் துணைமைசான்ற நிலைமையினாலே சூழ்தலும் பொலிமே = புணர்ச்சியுண

யே - சிறியிலை யுழிஞைத் தெரியல சூட்டிக் - கொண்டமை மிகை படத் தண்டமிழ் செறித்துக் - குன்றினிலை தளர்க்கு முருமிற் சீறி- யொருமுற் றிருவ ரோட்டிய வொளவாட் - செருமிகு தானை வெலபோ ரோயே - யாடு போர்பெற் றழிந்த மளளர் - மாடுறு பெற்ற நீகண டனையே- யெனறன வறுமையும் வென்றாய் நீயே- யதஞற், செல்வக் கோவே சேரல ரமருக் - கனாதலை யெடுத்த முழங்குகடல வேலி - நனந்தலை யுலகஞ் செய்நன் றுண்டெனி-னடையடுப் பறியா வருவி யாம்ப-லாயிர வெள்ள ஆழி-வாழி யாக வாழிய பலவே.'' இது வாகைத்துறைப் பாடாணபாட்டு. இப்பதிற்றுப்பதது நூறும் இவ்வாறே வருதலிற் பாடாணடிணையேயாயிற்று. புறததுள்ளும் இவ்வாறு வருவனவும் உணர்க. (உரு)

அக. அமரர்கண் முடியு மறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினு
மொன்றன் பகுதி யொன்று மென்ப.

இது முன்னர் எட்டெனப் பகுதத பாடாணடிணையுள் ஏழொழித்துத் தன்பொருட் பகுதிகள் எலலாங் கூடி ஒன்றுமென்ற பாடாணடிணை தேவரும் மக்களுமென இருதிறத்தாககே உரிய எனபார அவ்விரணடினுட் தேவாபகுதி இவையென்பதுணாத்துகின்றது. (இ-ள.) அமராகண்முடியும் அறுவகையானும் = பிறப்பு வகையானன்றிச சிறப்புவகையாற் தேவர்கணணே வநது முடிதலுடையவாகிய அறுமுறை வாழத்தினகண்ணும்: புரைதீர் காமம் புல்லிய வகையினும் = அத்தேவரிடத்தே உயர்சசி நீங்கிய பொருளகளை வேண்டுங் குறிப்புப் பொருநதின பகுதிக்கண்ணும்: ஒன்றன பகுதி ஒன்றும் என்ப. மேற் பாடாணபகுதியெனப பகுத்து வாங்கிககொணட ஒன்றனுட் தேவரும் மக்களுமெனப் பகுத்த இரணடினுட் தேவர்க்கு உரித்தாம் பகுதியெலலாந் தொக்கு ஒருங்கு வருமென்று கூறுவார் ஆசிரியர்.—எ-று. அமரர்கண்ணே வந்து முடியுமெனவே அமரர் வேறென்பதூஉம் அவர்கண்ணே வநது முடிவன வேறென்பதூஉம் பெற்றாம். அவை முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் முடியுடைவேநதரும் உலகுமாகும். இவை தத்தஞ் சிறப்புவகையான் அமரர்சாதிப் பால வென்றல் வேதமுடிவு. இதனானே பிறப்புமுறையாற் சிறநத அமரரை வாழத்தலுஞ் சொல்லாமையே முடிநதது தந்திரவுத்தி வகையான். வகையென்றதனானே அமரரை வேறுவேறு பெயர்கொடுத்து வாழ்த்தலும் ஏனைய பொதுவகையாற் கூறி வாழ்த்தினன்றிப் பகுத்

துக் கூறப்படாமையுங்கொள்க. புரை உயர்ச்சியாதலின் உயர்ச்சி யில்லாத காமமாவது மறுமைப்பயன் பெறுங் கடவுள் வாழ்த்துப் போல் உயர்ச்சியின்றி இம்மையிற் பெறும்பயனுதலின் இழிந்த பொருள்களிற் செல்லும் வேட்கைக் குறிப்பு. புல்லிய வகை யாவது அம்மனக்குறிப்புத் தேவர்கண்ணே பொருந்திய கூறு; அது தன்பொருட்டானும் பிறன்பொருட்டானும் ஆக்கத்துமேல ஒருவ ன் காமுற்றவழி அவை அவற்குப் பயன்கொடுத்தலாம். இது ஒன றனுடைய பகுதியென்க. இத்துணைப் பகுதியெனறு இரண்டிறந் தன எனக்கூறாது வாளாதே பகுதியென்றமையிற் றேவரும் மக்க ளுமென இரண்டேயாயிற்று. அத்தேவருட் பெணடெய்வங் கொ டிநிலை கந்தழி என்புழி அடங்கும். மக்களுட் பெண்பால் பாடு தல் சிறப்பின்மையிற் "செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவன்" என்றாற்போலச் சிறுபான்மை ஆண்மக்களோடு படுத்துப்பாடுப. வகையென்றதனுன் வாழ்த்தின்கண மக்கட்பொருளும் உடன்றழு வினும் அவை கடவுள்வாழத்த மென்றுகொள்க. உம். "எரியெள் ளுவன நிறத்தன் விரியிணர்க்-கொன்றை யம்பைந் தாரக லத்தன்- பொன்று ரெயிலெரி யூட்டிய வில்லன்-பயிலிருட் காடமர்ந் தாடிய வாட - னீடிப் புறம்புதை தாழ்ந்த சடையன் - குறங்கறைந்து வெ ண்மணி யார்க்கும் விழவின- ணுண்ணூற் சிரந்தை யிரட்டும் விரல- னிரண்டுருவா யீரணி பெற்றவெழிற் றகைய - னேரு மிளம்பிறை சேர்ந்த நுதலன் - களங்கனி மாறேர்க்கும் பண்பின்மறு மிடற்ற னச் - சூலம் பிடித்த சுடர்ப்படைக் - காலக் கடவுட் குயர்க மாவ லனே." இது கடவுள் வாழ்த்து. தொகைகளிலுங் கீழ்க்கணக்கி லும் உள்ள கடவுள வாழ்த்தெலலாம் இதன்கண் அடக்குக. இனி அறுமுறை வாழத்தும் வருமாறு. "நிறைமொழி மாந்தர் பெரு மை நிலத்து - மறைமொழி காட்டி விடும்." "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே - யெடுப்பதூஉ மெல்லா மழை." "நாகின நந்தி யினம்பொலியும் போநதெனா-வாய்வா ளுழ வர் வளஞ்சிறப்ப வாய - ரகன்றூர் சுரைய கறந்தபால் சீர்சிறந்த- வான்பொருள் வடடத் தயிராகு மத்தயிர் - மெல்லக் கடைவி டத்து நெய்தோனறு நெய்யநது - நல்லமு தன்ன வளையாகு நல்ல - புனிதமு மெச்சிலு நீக்கித் துணியின்றி - யன்ன பெரும் பயத்த வாகலாற் றென்மரபிற்-காரார் புறவிற் கலித்த புதர்மா ந்தி- யாவா ழியரோ நெடிது." ஏனைய வநதுழிக்காண்க. "புயல் சூடி நிவந்த பொற்கோட் டிமயத்து - வியலறைத் தவிசின் வேங் கை வீற்றிருந்தாங்-கரிமான் பீடத் தரசுதொழ விருந்து-பெருநிலச் செல்வியொடு திருவீழ் மார்பம் - புதல்வரும் தாமு மிகலின்று பெ

மையை ஏழுவகையானுஞ் சூழ்தற்கண்ணும் பொலிவுபெறும்.— எ-று. எனவே, இம்மூன்று நிலைக்குந் தோழி உரியள் என்றார். உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க. (௩௫)

௧௨௭. குறையுற வுணர்தல் முன்னுற வுணர்த
லிருவரு முள்வழி யவன்வர வுணர்தலென
மதியுடம் படுத்த லொருமூ வகைத்தே.

இது அத்தோழிகூட்டம் இத்துணைப் பகுதித்து என்கின்றது. (இ-ள்.) குறையுற உணர்தல் = தலைவன் தோழியை இரந்து குறையுற்றவழி உணர்தல்: முன் உற உணர்தல் = முன்னம் மிகவுணர்தல். இருவரும் உள்வழி அவன் வர உணர்தல் = தலைவியுந் தோழியும் ஒருங்கிருந்தவழித் தலைவன் வருதலாற் தலைவன் குறிப்புந் தலைவி குறிப்புங் கண்டுணர்தல்: என மதியுடம்படுத்தல் ஒரு மூவகைத்தே = என்று இருவர் கருத்தினையுந் தன் கருத்தினோடு ஒன்றுபடுத்துணர்தல் ஒருமூன்று கூற்றினையுடைத்து.—எ-று. எண்ணுதல் எண்ணென்றாற்போல முன்னுதல் முன்னென நின்றது. உயிராகலங் கருதோன்றலிற் குறிப்பின்றியும் பாகமுணர்வாள் குறிப்புப்பெற்றுழி மிகவுணரும் என்றுகொள்க. இது மூவர் மதியினையும் ஒன்றுபடுத்துதலின் மதியுடம்படுத்தலென்று பெயராயிற்று. இம்மூன்றுங் கூடிய பின்னரல்லது மதியுடம்படுத்தலின்றென்றற்கு மூவகைத்தென்று ஒருமையாற் கூறினார். முன்னுறவென்றதனை முந்துற உம்மென்றாலோவெனின் குறையுறுதலான் உணர்தல் அவன்வருதலான் உணர்தலென்று இரண்டற்குங் காரணங் கூறுதலின் இதற்குங் குறிப்புமிகுதலான் உணர்தலெனக் காரணங் கொடுத்தல்வேண்டுமென்றுணர்க. "நாற்றமுந் தோற்றமும்" என்பதனுட் கூறியவாறன்றி முன்னுறவை இடைவைத்தார், அவ்விரண்டினுள் ஒரு உணருங்காலும் இக்குறிப்பான் உணரவேண்டுமென்றற்கு. இம்மூன்றும் முற்கூறிற்றேனும் ஒரோவொன்றாற் கூட்டமுணரிற் தலைவியை நன்குமதித்திலளாவளென்றற்கு இம்மூன்றும் வேண்டுமென்று ஈண்டுக் கூறினார். உ-ம். "கோனே ரெல்வளை தெளிர்ப்ப நின்றோழி" இது கூட்டமுணராதாள்போல நாணிற்கு மாறுகாவமற் கூறலின் முன்னுறவுணர்தல். "நின்னின் விடாஅநிழற்போற் றிரிதர்வா-யென்னீ பெறாஅ ததென்" இது குறையுறவுணர்தல்; "ஒரல் காவ லிவளு மல்லள்" என்பது அவன்வரவுணர்தல். (௩௬)

௧௨௮. அன்ன வகையா னுணர்ந்தபி னல்லது
பின்னிலை முயற்சி பெறாஅனென மொழிப.

இது மதியுடம்பட்டபின்னல்லது தலைவன் கூற்றுநிகழ்த்தப் பெறானென்கின்றது. (இ-ள்) அன்னவகையான் உணர்ந்தபின் அல்லது = அம் மூவகையானுந் தோழி மதியுடம்படுத்தபினனல்லது: பின்னிலை = இவன் ஓர் குறையுடையனென்று தோழி உய்த்துணரா நிற்குமிடத்து: முயற்சிபெறான் என மொழிப = கூற்றான் அக்குறைமுடித்தல வேண்டுமென்று முடுக்குதல் பெறானென்று கூறுப ஆசிரியர்.—எ-று. தோழி தன்னை வழிபட்டவாறு கண்டு
௧௪ மதியுடம்பட்டவாறுணர்ந்து கூற்றான் உணர்த்தும். அது "நெருநலு முன்னாள்" என்பதனுள் "ஆரஞர் வருத்தங் களையாயோ" எனறவாறு காண்க. (௩௭)

௧௨௯. முயற்சிக் காலத் ததற்பட நாடிப்
புணாததை லாற்றலு மவள்வயி னான.

௧௫ இது தலைவன்முயற்சி கூறிய முறையே தோழிமுயற்சி பிறக்குமிடங் கூறுகின்றது. (இ-ள்) முயற்சிக்காலத்து = தலைவன் அங்ஙனங் கூடுதற்கு முயற்சி நிகழத்துங்காலத்தே: நாடி அதற்படுத்தலும் = தலைவி கூடுதற்கு முயலுங் கருத்தினை ஆராய்ந்தறிந்தே உளளம்படும்படி கூட்டுதலும். அவள் வயின ஆன ஆற்றல் = தோழியிடத்து உண்டான கடைப்பிடி. எ-று. ஆற்றல ஒன்றனை முடிவுபோககல. உம்மை, எச்சவும்மை. மதியுடம்படுத்தலேயன்றிக் கூட்டவும்பெறுமெனக. (௩௮)

௧௩௦. குறியெனப் படுவ திரவினும் பகலினு
மறியத் தோன்று மாற்ற தென்ப.

௨௫ அங்ஙனங் கூட்டுகின்றவட்குக் கூடுதற்குரிய காலமும் இடனுங் கூறுகின்றது. (இ-ள்) குறியெனப படுவது = குறியென்று சொல்லப்படுவது: இரவினும் பகலினும் = இரவின்கணணும் பகலின் கண்ணும்: அறியத் தோன்றும் ஆற்றது என்ப = தலைவனுந் தலைவியுந் தானும் அறியும்படி தோன்றும் நெறியையுடைய இடம். எ-று. நெறியென்றார் அவன் வருதற்குரிய நெறி இடமென்றற்கு. அதுவென்று ஒருமையாற் கூறினார், தலைப்பெய்வதோரிடமெனனும் பொதுமைபற்றி. இரவுகளவிற்குச் சிறத்தலின முற்கூறினா. அறியத் தோன்றுமென்றதனாற் சென்றுகாட்டல் வேண்டாது நின்று காட்டல் வேண்டுமெனக் கொள்க. (௩௯)

௧௩௧. இரவுக் குறியே யில்லகத் துள்ளு
மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே
மனையகம் புகாஅக் காலை யான.

இது நிறுத்தமுறையானே இரவுக்குறியிடம் உணர்த்துகின்றது. (இ-ள்.) அகமனைப் புகாக் காலை ஆன இரவுக்குறியே=உண்டு மனையிற் சென்றுகூடுதற்கு உரித்தல்லாத முற்காலத்து உண்டான இரவுகுறியே: ஏகாரம், பிரிநிலை. இல்லகத்துள்ளும் மனையோர் கிளவி கேட்கும வழியதுவே=இல்வரைப்பினுள்ளதாகியும் மனையோர் கூறிய கிளவிகேட்கும் பிறமனையிடத்ததாம்.—எ - று. அல்லகுறிப்பட்டதனை ஒருவாற்றான் உணர்த்தியகாலத்து அவன் அதுகேட்டு ஆற்றுவனென்பது கருதி மனையோர்கிளவி கேட்கும் வழியதென்றார். ஏகாரம் ஈற்றசை. என்றது, இரவுக்குறி. அம்முயறசிக்காலத்து அச்சநிகழ்தலின் அகமனைக்கும் புறமதிற்கும் நடுவே புணர்சசி நிகழுமென்றதாம். அகமனையிற் புகாக்காலையெனவே இரவுக்குறி அங்ஙனஞ் சிலநாள் நிகழ்ந்தபின்னர் அச்சமின்றி உண்மனையிற் சென்று கூடவும்பெறுமென்பதுங் கூறியதாம். உம் "அஞ்சிலம் பொடுக்கி யஞ்சினள் வந்து - துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்" எனவும், "மிடையூர் பிழியக் கண்டனெனிவளென - வலையல் வாழிவெண் டன்னை" எனவும் "அட்டிலோலை தொட்டனை நின்மே" எனவும் வருவன பிறவும் மனையோர் கிளவி கேட்கும் வழியது. "உழைமான் றுப்பி னேங்குதினைய பெரும்புனத்துக் - கழுதிற் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென - வுரைத்த சாந்தி னூர விருங்கதுப் - பைதுவா லசைவளி மாற்றக் கைப்பெயரா - வொலியல வார்மயி ருளரினள் கொடிச்சி - பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக - குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது - படாஅம் பைங்கண பாடுபெற் றொய்யென - மறம்புகன் மழகளி றுறங்கு நாட - வுரமார்பி னணிமிஞி றூர்ப்பத் - தாரன் கண்ணிய னெஃகுடை வலத்தன் - காவல ரறித லோம்பிப் பையென - விழாஅக் கதவ மசையினன் புகுந்து - துயங்குபட ரகலமுயங்கித் தோண்மணந் - தின்சொ லளிஇப் பெயர்ந்தனன் றோழி - யின்றெவன் கொல்லோ கண்டிகு மற்றவ - னல்கா மையி னம்பலாகி - யொருங்குவந் துலக்கும் பண்பி - னிருஞ்சூ ழோதி யொண்ணுதற் பசப்பே." இது மனையகம் புக்கது. தலைவி புறத்துப் போகின்றாளெனச் செவிலிக்கு ஓர் ஐயம் நிகழ்ந்தவழிப் பின்னர் மனையகத்துப் புணர்ச்சி நிகழுமென்றுணர்க. (௪0)

**க௩உ. பகற்புணர் களனே புறனென மொழிப
அவளறி வுணர வருவழி யான.**

இது முறையானே பகற்குறி உணர்த்துகின்றது. (இ-ள்.) அவள் அறிவு உணர வருவழி ஆன பகற் புணர் களனே=களஞ்சுட்டிய தலைவி அறிந்தவிடந் தலைவன் உணரும்படியாக வருவதோரிடத்து உண்டான பகற்புணருங் குறியிடத்தை: புறன் என மொழிப=மதிற்புறத்தேயென்று கூறுவர் ஆசிரியர். எ-று. அறிவு, ஆகுபெயர். உ-ம். "புன்னையங் கானற் புணர்குறி வாய்த்த - மின்னே ரோதியென் றோழிக்கு" எனவும், "பூவே புன்னையந் தண்பொழில்-வாவே தெய்ய மணந்தனை செலற்கே" எனவும் வருவன பிறவுங் கொள்க. (௪௧)

**க௩௩. அல்லகுறிப் படுதலு மவள்வயி னுரித்தே
யவன்குறி மயங்கிய வமைவொடு வரினே.**

இது தோழி அல்ல குறிப்படுமாறு கூறுகின்றது. இருவகைக் குறி பிழைப்பாகியவிடத்தும் என்புழித் தலைவி அல்லகுறிப்படுதல் கூறிற்று. (இ-ள்.) அவன்குறி=தலைவன் தன்வரவு அறிவிக்குங் கருவிகள்: மயங்கிய அமைவொடு வரின்=அவன் செயற்கையானன்றி இயற்கைவகையானே நிகழ்ந்து தோழி மயங்கிய அமைதியோடே வருமாயின்: அல்லகுறிப் படுதலும் = குறியிடத்துக் கூட்டுங்கால் அவ்வல்லவாகிய குறியிலே மயங்குதலும்: அவள்வயின் உரித்து=அத்தோழியிடத்து உரித்து. எ-று. வெறித்தல் வெறியாயினாற்போலக் குறித்தல் குறியாயிற்று. அக்கருவி புனலொலிப்படுத்தல் முதலியன. உ-ம். "கொடுமுண் மடற்றாழைக் கூன்புற வான்பூ - விடையு ளிழுதொப்பத் தோன்றிப் - புடையெலாந் - தெய்வங் கமழுந் தெளிகடற் றண்சேர்ப்பன்-செய்தான் றெளியாக் குறி." இது அல்லகுறிப்பட்டமை சிறைப்புறமாகக் கூறியது. "எறிசுறா நீள்கட லோத முலாவ-நெறியிறாக் கொட்கு நிமிர்கடற்றண் சேர்ப்ப - னறிவுறா வின்சொலணியிழையாய் நின்னிற்-செறிவுறா செய்த குறி." இது அவன் மேற்குறிசெய்கின்றமை தலைவிக்குக் கூறியது. "இடுமண லெக்க ரகன்கானற் சேர்ப்பன் - கடுமான் மணியரவ மென்று - கொடுங்குழை - புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தாள் சிறுகுடிய-ருள்ளரவ நாணுவ வொன்று." இது இவன் இனி ஆண்டுவரிற் சுற்றத்தார் அறிவரென்றது. "வீழ்பெயற் கங்குலின் விளியோர்த்த வொடுக்கத்தால் - வாழுநாள் சிறந்தவள் வருந்துதோட் டவறுண்டோ - தாழ்செறி கடுங்காப்பிற்

ருய்முன்னர் நின்சாரா - னூழுறு கோடல்போ லொளிவளை யுகுபவால்." இது தலைவற்குப் பிற்றைஞான்று கூறியது. "அன்னை வாழியோ வன்னைநம் படப்பை - மின்னென நுடங்கிடைக் கின்னிழ லாகிய - புன்னை மென்காய் போகுசினை யிரிய - வாடுவளி தூக்கிய வசைவிற் கொல்லோ - தெண்ணீர்ப் பொய்கையுள் வீழ்ந்தென - வெண்ணிலை யுரைமோ வுணர்குவல் யானே." இது தோழி தாய்க்குக் கூறுவாளாய் அல்லகுறி அறிவித்தது. "மணிநிற நெய்த லிருங்கழிச் சேர்ப்ப - னணிநல முண்டகன் றென்றுகொ லெம்போற் - றிணிமண லெக்கர்மே லோதம் பெயரத் - துணிமுந்நீர் துஞ்சா தது." இது தோழி இல்லுளிருந்து சிறைபபுறமாகக் கூறியது. திங்கள்மேல வைத்துக் கூறுவனவும் ஓதத்தின்மேல்வைத்துக் கூறுவனவும் பிறவுங் கொள்க. "அரவளை மென்றோ ளனுங்கத் துறந்து - கரவல மென்றாரைக் கண்ட திலையா - லிரவெலா நின்றுயா லீர்ங்கதிர்த் திங்காள்." "புன்னை நனைப்பினும் பூஞ்சினை தோயினும் - பின்னிருங் கூந்தலென் றோழி நடையொக்கு - மன்னை நனையாதி வாழி கடலோதம்" எனவருவன பிறவுங்கொள்க. படுதல் எதிர்ப்படாமையை உணர்த்திற்று. ஆண்டுத் தன்மேற் தவறேற்றாது தலைவன் பொழுதறிந்து வாராமையின் மயங்கிற்றென்று அமைவுதோன்றலின் அமைவென்றார். அது "தான் குறிவாராத் தப்பற்குத் - தாம்பசந் தனவென் றடமென் றோளே" என்றாற்போல வரும். இதன்பயன் தலைவி துன்பந் தனதாகத் துன்புறுதலாயிற்று. (௪௨)

௧௩௪. ஆங்காங் கொழுகு மொழுக்கமு முண்டே
யோங்கிய சிறப்பி னொருசிறை யான.

இது தலைவனும் அல்லகுறியால் வருந்துவனென்கின்றது (இ-ள்.) ஓங்கிய சிறப்பின்=தனது மிக்க தலைமைப்பாட்டினாலே பொழுதறிந்து வாராமையின்: ஒருசிறை ஆன ஆங்கு=தான் குறி செய்வதோரிடத்தே தன்னானன்றி இயற்கையான் உண்டான அவ்வல்லகுறியிடத்தே: ஆங்கு ஒழுகும் ஒழுக்கமும் உண்டு = தலைவியுந் தோழியுந் துன்புறுமாறு போலத் தலைவனுந் துன்புற்று ஒழுகும் ஒழுக்கமும் உண்டு. எ-று. முன்னர்நின்ற ஆங்கு முன்னிற்சூத்திரத்து அல்லகுறியைச் சுட்டிற்று; பின்னர்நின்ற ஆங்கு உவமவுருபு. உ-ம். "தாவி னன்பொன் றைஇய பாவை - விண்டவ ழிளவெயிற் கொண்டுநின் றன்ன - மிகுகவி னெய்திய தொகுகுர லைம்பாற் - கிளையரி நாணற் கிழங்குமணற் கீன்ற - முளையோ ரன்ன

முள்ளெயிற்றுத் துவர்வாய் - நயவன் றைவருஞ் செவ்வழி நல்யா-ழிசையோர்த் தன்ன வின்றீங் கிளவி - யணங்குசா லரிவையை நசைஇப் பெருங்களிற் - றினம்படி நீரிற் கலங்கிய பொழுதிற் - பெறலருங் குரைய ளென்னாய் வைகலு - மின்னா வருஞ்சுர நீந்தி நீயே - யென்னை யின்னற் படுத்தனை யின்னுவசிப்-புரவுக்கால் கடுப்ப மறலி மைந்துற்று - விரவுமொழித் தகட்டோ வேண்டுவயிற் சொளீ இப் - படைநிலா விலங்குங் கடன்மரு டானை - மட்டவிழ் தெரியன் மறப்போர்க் குடடுவன் - பொருமுரண் பெறாது விலங்கிச சினஞ் சிறந்து - செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி - யொருங்குதிரைப் பௌவ நீங்க வோட்டி - நீமா ணெஃகந் திறத்துசசென றழுந்தத் - தாமத னழியரோ நெஞ்சே யானு - தெளிய லல்லோட்கு வருந்தி - விளியா வெவ்வந் தலைத்தந் தோயே." "வடமலை மிசையோன் கண்ணில் முடவன் - றென்றிசை யெல்லை விணபுகு பொதியிற் - குருடை நெடுஞ்சுனை நீர்வேட் டாங்கு - வருந்தினை வாழியெ னுள்ளஞ் சாரற் - பொருது புறங்கண்ட பூறுத லொருத்தல் - சிலம்பிழி பொழுதி னத்தம் பெயரிய - வல்லிய மடுக்கத் தொடுங்கு நல்வரைக் - கல்லக வெற்பன் மடமகண் - மெல்லியல் வனமுலைத் துயிலுற் றேயே." இவை அல்ல குறிப்பட்டு நீங்குகின் றான் நெஞ்சிற்குக கூறியன. (௪௩)

௧௩௫. மறைந்த வொழுக்கத் தோரையு நாளுந்
துறந்த வொழுக்கங் கிழவோற் கில்லை.

இது தலைவற்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) ஓரையும் நாளுந் துறந்த ஒழுக்கம்=தீய இராசியின்கண்ணுந் தீய நாளின்கண்ணுங் கூட்டத்தைத் துறந்த ஒழுக்கம்; கிழவோற்கு மறைந்த ஒழுக்கத்து இல்லை=தலைவற்குக் களவொழுக்கத்தின்கண் இல்லை. எனவே கற்பின்கணுள: எ - று. ஒழுக்கமாவது சீலமாதலிற் சீலங் காரணத்தாற் றுறபபது தீதாகிய இராசியும் நாளுமென்பது பெற்றும். நாளாவது அவ்விராசி மண்டிலமுழுவதும். கிழத்தி துறந்த ஒழுக்கம் மூந்நாளல்லதென முற்கூறிற்று. இதனான் அன்பு மிகுதி கூறினர். இதற்குப் பிராயசசித்தம் அந்தணர்முதலிய மூவர்க்கும் உண்மை "வந்தகுற்றம் வழிகெடவொழுகலும்" எனக் கற்பியலிற் கூறுப. (௪௪)

௧௩௬. ஆறின தருமையு மழிவு மச்சமு
மூறு முளப்பட வதனோ ரன்ன,

இதுவுந் தலைவற்கு இல்லன கூறுகின்றது. (இ-ள்.) உளப் படு=நிலவும் இருளும் பகைவரும் போல்வனபற்றிச் செலவழுங்கு தல் உளப்பட: ஆறினது அருமையும்=நெறியினது அருமை நினை ந்து கூட்டநிகழ்ந்தவழிக் கூறுதலும்: அழிவும்=குறைந்த மனத் தனாதலும்: அச்சமும்=பாம்பும் விலங்கும் போல்வன நலியுமெ ன்று அஞ்சுதலும்: ஊறும்=அக்கருமத்திற்கு இடையூறு உள வாங்கொலென்று அழுங்குதலும்: அதனோர் அன்ன=கிழவற்கு இல்லை. எ-று. கிழவற்கில்லையெனவே கிழத்திக்குந் தோழிக்கும் உளவாயிற்று. அவை முற்காட்டியவாறுட் காண்க. (சரு)

கஙஎ. தந்தையுந் தன்னையு முன்னத்தி னுணர்ப.

இது தந்தையுந் தன்னையுங் களவொழுக்கம் உணருமாறு கூறு கின்றது. (இ-ள்.) தந்தையுந் தன்னையும் ஒருவர் கூறக் கொள் ளாது உய்த்துககொண்டுணர்வர். எ-று. நற்றாய் அறத்தொடுநின்ற வழியும் "இருவர்கட் குற்றமு மில்லையா லென்று - தெருமந்து சாய்த்தார் தலை" என்றலின் முன்னர்நிகழ்ந்த வெகுட்சிநீங்கி உய்த் துக்கொண்டு உணர்ந்தாராயிற்று. (சசா)

கஙஅ. தாயறி வுறுதல் செவிலியோ டொக்கும்.

இது தந்தைதன்னைக்கு நற்றாய் களவொழுக்கம் உணர்த்து மாறு கூறுகின்றது. (இ-ள்.) தாய் அறிவுறுதல்=நற்றாய் கள வொழுக்கம் உண்டென்று அறிந்த அறிவு தந்தைக்குந் தன்னைக்குஞ் சென்று உறுந்தன்மை: செவிலியோடு ஒக்கும்=செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநின்று உணர்த்திய தன்மையோடு ஒக்கும். எ-று. என் றது, செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநின்றாற்போல நற்றாயுந் தந் தைக்குந் தன்னைக்கும் அறத்தொடுநிற்கும் என்றவாறாயிற்று. அது "எனவாங், கறத்தொடு நின்றேனைக் கண்டு-திறப்பட வென்னையர்க் குற்றுணர்த் தாள்யாய்" என்பதனான் உணர்க. இனி இதற்கு நற் றாயுஞ் செவிலி உணர்ந்தாற்போல உணருமென்று பொருட்கூறிற் "தாய்க்கும் வரையார" என்னுஞ் சூத்திரம் வேண்டாவாம். (சஎ)

கஙகூ. அம்பலு மலருங் களவுவெளிப் படுத்தலி னங்கதன் முதல்வன் கிழவ னாகும்.

இது களவு வெளிப்படுதற்கு நிமித்தமாவான் தலைமகனென்கி றது. (இ-ள்.) அம்பலும் அலருங் களவு வெளிப்படுத்தலின்=முகிழ்

முகிழ்த்தலும் பலரறியச் சொல் நிகழ்த்தலுங் களவொழுக்கத்தினை வெளிப்படுத்தலான்; அங்கதன் முதல்வன் கிழவன் ஆகும் = அவ்விடத்து அவ்வெளிப்பாடை நிகழ்த்துதற்கு நிமித்தமாயினான் தலைமகனும். எ-று. தலைவனை அறிந்தபின் அல்லது முற்கூறிய ஐயம் நிகழாமையின் தலைவிவருத்தம் நிமித்தமாகா, ஆண்டு ஐயம் நிகழ்தலன்றித் துணிவு தோன்றாமையின். வரைவு நீட்டிப்போனுந் தலைவி தமர்க்குக் கூறி வெளிப்படுப்போனுந் தலைவனே என்றுணர்க. அது "நீரொலித்த லின்ன போலா நமக்கொழிய வழிப்பிரிந் தோரோ" எனவும் "நெறியறி செறிகுறி புரிதிரி பறியா - வறிவனை முந்துறீ" என்றாற்போல வருவனவும் பிறவும் வெளிப்பாடையாமாற்றாற் கண்டுணர்க. (சஅ)

கசo. வெளிப்பட வரைதல் படாமை வரைதலென்
றாயிரண் டென்ப வரைத லாறே.

இது வரையும் பகுதி இனைத்தென்கின்றது. (இ-ள்.) வெளிப்பட வரைதல் = முற்கூறியவாற்றானே களவு வெளிப்பட்டபின்னர் வரைந்து கோடல்: படாமைவரைதல் = அக்களவு வெளிப்படுவதன் முன்னர் வரைந்துகோடல்: என்று ஆ இரண்டு என்ப வரைதல் ஆறே = என்று கூறப்பட்ட அவ்விரண்டே என்று கூறுவர் ஆசிரியர் வரைந்துகொள்ளும் வழியை. எ - று. "சேயுயர் வெற்பனும் வந்தனன் - பூவெழி லுண்கணும் பொலிகமா வினியே" இது வெளிப்பட்டபின் வரைவுநிகழ்ந்தது. "கொல்லைப் புனத்த வகில்சுமந்து கல்பாய்ந்து - வானி னருவி ததும்பக் கவினிய - நாட னயனுடைய னென்பதனு னீப்பினும் - வாடன் மறந்தன தோள்." இது வெளிப்படாமல் வரைவு நிகழ்ந்தது. "எம்மனை முந்துறத் தருமோ - தன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே" என்றாற்போல்வன வெளிப்படுவதன் முன்னர்க் கொண்டுதலைக்கழிந்துழிக் கொடுப்போரின்றியுங் கரணம் நிகழ்ந்தமையின் அதுவும் வெளிப்படாமல் வரைந்ததாம். (சக)

கசக. வெளிப்பாடை தானே கற்பினொ டொப்பினு
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோற் கில்லை.

இது முற்கூறிய வரைவு நிகழ்த்தாது பிரியும் இடம் இதுவெனவும் பிரியலாகா இடம் இதுவெனவுங் கூறுகின்றது. (இ-ள்.) வெளிப்பாடைதானே கற்பினொடு ஒப்பினும் = முற்கூறிய வெளிப்பாடை

தானே கற்பினுட் தலைவி உரிமை சிறந்தாங்கு அருமைசிறந்து கற்போடொத்ததாயினும்: ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக=முற்கூறிய ஓதல் பகை தூதென்ற மூன்றும் நிமித்தமாக: வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை=வரைவிடைவைத்துப் பிரிதல் தலைமகற்கில்லை. எ-று. மூன்றுமென முற்றும்மைகொடாது கூறினமையின் ஏனைப்பிரிவுகளின் வரையாது பிரியப்பெறும் என்றவாறாயிற்று. அவை வரைதற்குப் பொருள்வயிற்பிரிதலும் வேந்தற்குற்றுழியுங் காவற்குப்பிரிதலுமென மூன்றுமாம். உ-ம். "பொன்னடர்ந் தன்ன வொள்ளிணர்ச் செருந்திப்-பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதை-யணிமண லடைகரை யலவ னாட்டி - யசையுள்ளி வந்த வாய்தொடிக் குறுமக - ணலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்-பெறலருங் குரைய ளாயி னறந்தெரிந்து-நாமுறை தேஎ மரூஉப்பெயர்ந் தவனோ-டிருநீர்ச் சேர்ப்பி னுப்புட னுழுதும்-பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்-படுத்தனம் பணிந்தன மடுத்தன மிருந்தபிற்-றருகுவன் கொல்லோ தானே விரிதிரைக் - கண்டிரண் முத்தங் கொண்டுந் துஞ்சாத் - தேனிமிர் தண்கரைப் படுக்கும் - கானலம் பெருந் துறைப் பரதவ னமக்கே." இதனுள் ஈண்டுள்ள பொருள்கொடுத்தாம் பெறல் அரியளாயிற் தன்னை வழிப்பட்டாற் தந்தை தருவனோ? அது நமக்கரிதாகலின் இன்னும் பொருள் நாம் மிகத் தேடிவந்து வரைதுமெனப் பொருள்வயிற்பிரியக் கருதியவாறு காண்க. "பூங்கொடி மருங்குற் பொலம்பூ ணோயே - வேந்துவினை முடித்து வந்தனர் - காந்தண் மெல்விரற் கவையினை நினைமே." இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தான் வரைவுமலிந்தமை தோழிகூறியது. ஏனைய வந்துழிக்காண்க. ஓதற்கு ஏவுவார் இருமுதுகுரவராதலின், அவர் வரையாமற் பிரிகவென்னார். பகைவென்று திறைகோடற்குப் பிரியுங்கால் அன்புறு கிழத்தி துன்புற்றிருப்ப வரையாது பிரிதலின்று. இது தூதிற்கும் ஒக்கும். மறைவெளிப்படுதல் கற்பென்று செய்யுளியலுட்கூறுதலின் இதனை இவ்வோத்தின் இறுதிக்கண் வைத்தார். கற்பினோடொப்பினும் பிரிவின்றெனவே கற்பிற்காயிற் பிரிவு வரைவின்றாயிற்று. (௩௦) ௧௨௦

களவியன் முற்றிற்று.



## நாலாவது

# கற்பியல்.

கசஉ. கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே

என்பது சூத்திரம். இவ்வோத்துக் களவுகற்பென்னுங் கைகோளிரண்டினுட் கற்புணர்த்தினமையிற் கற்பியலென்னும் பெயர்த்தாயிற்று. கற்பியல் கற்பினது இயலென விரிக்க. இயல், இலக்கணம். அது ஆகுபெயரான் ஓத்திற்குப் பெயராயிற்று. அது கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும் அவனை இன்னவாறே வழிபடுகவெனவும் இருமுதுகுரவர் கற்பித்தலானும் அந்தணர்திறத்துஞ் சான்றோர்தேஎத்தும் ஐயர்பாங்கினும் அமரர்ச்சுட்டியும் ஒழுகும் ஒழுக்கந் தலைமகன் கற்பித்தலானுங் கற்பாயிற்று. இனித் தலைவனுங் களவின்கண் ஓரையும் நாளுந் தீதென்று அதனைத் துறந்தொழுகினாற்போல ஒழுகாது ஓத்தினுங் கரணத்தினும் யாத்த சிறப்பிலக்கணங்களைக் கற்பித்துக்கொண்டு துறவறத்திற் செல்லுந் துணையும் இல்லறநிகழ்த்துதலிற் கற்பாயிற்று. களவுவெளிப்பட்ட பின்னராயினும் அது வெளிப்படாமையாயினும் உள்ளப்புணர்ச்சி நிகழ்ந்தவழியாயினும் வரைதல் களவின்வழியாதலின் மேலதனொடு இயைபுடைத்தாயிற்று. இச்சூத்திரம் கற்பிற்கெல்லாம் பொதுவிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்.) கற்பு எனப்படுவது=கற்பென்று சிறப்பித்துக் கூறப்படுவது: கரணமொடு புணர=வேள்விச்சடங்கோடே கூட: கொளற்கு உரி மரபிற் கிழவன்=ஒத்த குலத்தோனும் மிக்க குலத்தோனுமாகிக் கொள்ளுதற்குரிய முறைமையினையுடைய தலைவன்: கிழத்தியை=ஒத்த குலத்தாளும் இழிந்தகுலத்தாளுமாகிய தலைவியை: கொடைக்கு உரி மரபினோர் கொடுப்ப=கொடுத்தற்குரிய முறைமையினையுடைய இருமுதுகுரவர் முதலாயினோர் கொடுப்ப: கொள்வது=கோடற்றொழில். எ-று. எனப்படுவதென்னும் பெயர் கொள்வதென்னும் பெயர்ப்பயனிலை கொண்டது; இது சிறப்புணர்த்துதல் "அவ்வச் சொல்லிற்கு" என்னுஞ் சூத்திரத்துக் கூறினும். கொடுப்போரின்றியும் மேன்மேல் வருகின்றதாகலின் இக்கற்புச் சிறத்தலிற் சிறந்ததென்றார். இது என என்கின்ற எச்சமாதலிற் சொல்லளவே எஞ்சிநின்

றது. இதனாற் காரணம்பிழைக்கில் மரணம் பயக்குமென்றார். அத் தொழிலின் நிகழுங்கால் இவளை இன்னவாறு பாதுகாப்பாயெனவும் இவற்கின்னவாறே நீ குற்றேவல் செய்தொழுகெனவும் அங்கியங்கடவுள் அறிகரியாக மந்திரவகையாற் கற்பிக்கப்படுதலின் அத்தொழிலைக் கற்பென்றார். தலைவன் பாதுகாவாது பரத்தைமைசெய்து ஒழுகினும் பின்னர் அதனைவிட்டு இல்லறமேநிகழ்த்தித் துறவறத்தே செல்வனென்றுணர்க. இக்கற்புக்காரணமாகவே பின்னர் நிகழ்ந்த ஒழுகலாறெல்லாம் நிகழவேண்டுதலின் அவற்றையுங் கற்பென்று அடக்கினார். இருவரும் எதிர்ப்பட்ட ஞான்று தொடங்கி உழுவலன்பால் உரிமைசெய்து ஒழுகலிற் கிழவனுங் கிழத்தியுமென்றார். தாயொடுபிறந்தாருந் தன்னையருந் தாயத்தாரும் ஆசானும் முதலியோர் கொடைக்குரியரென்றற்கு மரபினோரென்றார்.

உ-ம். "உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவைப் - பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகாற் - றண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி - மனைவிளக் குறுத்து மாலை தொடரிக் - கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக் - கோள்கா ணீங்கிய கொடுவெண் டிங்கட் - கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென - வுச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர் - பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர் - முன்னவும் பின்னவு முறைமுறை தரத்தரப் - புதல்வற் பயந்த திதலைய வயிற்று - வாலிழை மகளிர் நால்வர் கூடிக் - கற்பினின் வழாஅ நற்பல வுதவிப் - பெற்றோற் பெட்கும் பிணையை யாகென - நீரொடு சொரிந்த வீரித ழலரி - பல்லிருங் கதுப்பி னெல்லொடு தயங்க - வதுவை நன்மணங் கழிந்த பின்றைக் - கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுந்து - பேரிற் கிழத்தி யாகென மாத - ரோரிற் கூட்டிய வுடன்புணர் கங்குற் - கொடும்புறம் வளைஇய கோடிக் கலிங்கத் - தொடுங்கினள் கிடந்தன ளோர்புறந் தழீஇ - முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப-வஞ்சின ளுயிர்த்த காலை யாழநின் - னெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென-வின்னகை யிருக்கைப் பின்யான் வினவலிற்-செஞ்சூட் டொண்குழை வண்காது துயல்வர - வகமலி யுவகைய ளாகி முகனிகுத் - தொய்யென விறைஞ்சி யோளே மாவின் - மடங்கொண் மதைஇய நோக்கி - னொடுங்கீ ரோதி மாஅ யோளே." இதனுள் வதுவைக்கு ஏற்ற காரணங்கள் நிகழ்ந்தவாறுந் தமர் கொடுத்தவாறுங் காண்க. சுற்றஞ் சூழ்ந்து நிற்றலானுந் தமர் அறிய மணவறைச் சேறலானுங் களவாற் சுருங்கிநின்ற நாண் சிறந்தமையைப் பின்னர்த் தலைவன் வினவ அவன் மறுமொழிகொடாது நின்றமையைத்

தலைவனுட் தாழுப் புகுதும் கூறுபுணர் கூறுங்க. இதனானே இது களவின் வழி நிகழ்ந்த கற்பாயிற்று. (௧)

௧௪௩. கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான.

இது எய்தியதன்மேற் சிறப்புவிதி. (இ - ள்.) கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே = முற்கூறிய கொடைக்குரிய மரபினோர் கொடுப்பக் கோடலன்றியுங் கரணம் உண்டாகும்: புணர்ந்து உடன் போகிய காலையான = புணர்ந்து உடன்போகிய காலத்திடத்து. எ-று. இது புணர்ந்து உடன்போயினார் ஆண்டுக் கொடுப் போரின்றியும் வேள்வியாசான் காட்டிய சடங்கின் வழியாற் கற்புப்பூண்டு வருவதும் ஆமென்றவாறு. இனி ஆண்டு வரையாது மீண்டுவந்து கொடுப்பக் கோடல் உளதேல் அது மேற்கூறியதன் கண் அடங்கும். இனிப் போயவழிக் கற்புப் பூண்டலே கரணம் என்பாருமுளர். எனவே கற்பிற்குக் கரணம் ஒருதலையாயிற்று. "பறைபடப் பணில மார்ப்ப விறைகொளத் - தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய - நல்லூர்க கோசர் நன்மொழி போல - வா யா கின்றே தோழி யாய்கழற் - செயலை வெள்வேல் விடலையொடு - தொகுவளை முன்கை மடந்தை நட்பே." இதனுள் வாயாகின்றெனச் செவிலி நற்றாய்க்குக் கூறினமையானும் விடலையெனப் பாலை நிலத்துத் தலைவன்பெயர் கூறினமையானும் இது கொடுப்போரின் றிக் கரணம் நிகழ்ந்தது. "அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோட் குறுமகள்" என்பதும் அது. (௨)

௧௪௪. மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணங்
கீழோர்க் காகிய காலமு முண்டே.

இது முதலூழியில் வேளாளர்க்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்) மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம் = வேதநூல்தான் அந்தணர் அரசர் வணிகரென்னும் மூவர்க்கும் உரியவாகக் கூறிய கரணம்: கீழோர்க்கு ஆகிய காலமும் = அந்தணர் முதலியோர்க்கும் மகட்கொடைக்குரிய வேளாண்மாந்தர்க்குந் தந் திரமந்திர வகையான் உரித்தாகிய காலமும் உள. எ-று. எனவே முற்காலத்து நான்கு வருணத்தார்க்குங் கரணம் ஒன்றாய் நிகழ்ந் தது என்பதாம். அது இரண்டாம் ஊழி தொடங்கி வேளாளர்க் குத் தவிர்ந்தது என்பதூஉந் தலைச்சங்கத்தாரும் முதனூலாசிரியர்

கூறிய முறையே கரணம் ஒன்றாகச் செய்யுள் செய்தார் என்பதூஉங் கூறியவாறாயிற்று. உதாரணம் இக்காலத்தின்று. (௩)

௧௪௫. பொய்யும் வழுவுந் தோன்றிய பின்ன
ரையர் யாத்தனர் கரண மென்ப.

இது வேதத்திற் கரணம் ஒழிய ஆரிடமாகிய கரணம் பிறந்தவாறும் அதற்குக் காரணமுங் கூறுகின்றது. (இ-ள்.) பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்=ஆதி ஊழி கழிந்தமுறையே அக்காலத்தந்தந் தொடங்கி இரண்டாம் ஊழி முதலாகப் பொய்யும் வழுவுஞ் சிறந்து தோன்றிய பிற்காலத்தே; ஐயர் யாத்தனர் கரணம் என்ப= இருடிகள் மேலோர்கரணமும் கீழோர்கரணமும் வேறுபடக் கரணங்கள் கட்டினாரென்று கூறுவர். எ-று. ஈண்டு என்ப என்றது முதனூலாசிரியனையன்று, வடநூலோரைக் கருதியது. பொய்யாவது செய்த ஒன்றனைச் செய்திலேனென்றல்; வழுவாவது சொல்லுதலே அன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகல். அது அரசரும் வாணிகருந் தத்தம் வகையாற் செய்யத் தகுவன செய்யாது சடங்கொப்புமை கருதித் தாமும் அந்தணரோடு தலைமைசெய்தொழுகுதலுங் களவொழுக்கத்தின் இழுக்குதல் போல்வனவும் அவர்கணிழுக்கம். ஏனைவேளாளரும் இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்தபின்னர்ப் பொய்யும் வழுவுந் தோன்றி வழுவுதல் அவர்க்கிழுக்கம். இவற்றைக் கண்டு இருடிகள் மேலோர்மூவர்க்கும் வேறுவேறு சடங்குகட்டிக் கீழோராக்குங் களவின்றியும் கற்பு நிகழுமெனவுஞ் சடங்கு வேறுவேறு கட்டினர். எனவே, ஒருவர் கட்டாமற் றாமே தோன்றிய கரணம் வேதநூற்கே உளதென்பது பெற்றாம். ஆயிற் கந்தருவ வழக்கத்திற்குச் சிறந்த களவு விலக்குண்டதன்றோ எனின், ஒருவனையும் ஒருத்தியையும் எதிர்நிறீஇ இவனைக் கொள்ள இயைதியோ நீயெனவும் இவற்குக் கொடுப்ப இயைதியோ நீயெனவும் இருமுதுகுரவர் கேட்டவழி இவர் கரந்த உள்ளத்தான் இயைந்தவழிக் கொடுப்பவாகலின் அதுதானே ஒருவகையாற் கந்தருவ வழக்கமாம், களவொழுக்கம் நிகழாதாயினும் என்பது கரணம் யாத்தோர் கருத்தென்பது பெற்றாம். இதனானே இயற்கைப்புணர்ச்சிக்கண் மெய்யுறுபுணர்ச்சியையும் உள்ளப்புணர்ச்சியென்றுகூறி அதன்வழிக் கற்புநிகழ்ந்ததென்றுங் கூறவும்படும். இவ்வாசிரியர் ஆதியூழியின் அந்தத்தே இந்நூல் செய்தலின் முதனூலாசிரியர் கூறியவாறே களவு நிகழ்ந்தபின்னர்க் கற்பு நிகழுமாறுங் கூறித் தாம் நூல்செய்

இன்ற காலத்துப் பொய்யும் வழுவும் பற்றி இருடிகள் கரணம் யாத்தவாறுங் கூறினார் அக்களவின்வழி நிகழ்ந்த கற்புங் கோடற்கென்றுணர்க. உ-ம். "மைப்புறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு-வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப் - புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி - யங்கணிரு விசும்பு விளங்கத் திங்கட்-சகடமண்டிய துகடீர் கூட்டத்துக் - கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்-படுமண முழவொடு பரூஉப்பணை யிமிழ- வதுவை மண்ணிய மகளிர் விசும்புற்றுப்- பூக்கணு மிமையார் நோக்குபு மறைய - மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை-பழங்கன்று கறித்த பயம்பம லறுகைத்-தழங்குகுரல் வானந் தலைப்பெயற் கீன்ற-மண்ணு மணியன்ன மாயிதழ்ப் பாவைத்-தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்-தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி - மழைபட் டன்ன மணன்மலி பந்தர் - ரிழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித் - தமர்நமக் கீத்த தலைநா ளிரவி- னுவரீங்கு கற்பி னுயிருடம் படுவி - முருங்காக் கலிங்க முழுவதும் வளைஇப் - பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவிய - ருறுவளி யாற்றிடச் சிறுவரை திறவென - வார்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலி - னுறைகழி வாளி னுருவுபெயர்ந் திமைப்ப - மறைதிற னறியா ளாகிப் பையென - நாணின ளிறைஞ்சி யோளே பேணிப் - பரூஉப்பகை யாம்பற் குரூஉத்தொடை நீவிச- [illegible] ராயமலர் வேய்ந்த - விரும்பல் கூந்த லிருண்மறை யொளித்தே." எனவரும். (௪)

கசகூ. கரணத்தி னமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணு
மெஞ்சா மகிழ்ச்சி யிறந்துவரு பருவத்து
மஞ்ச வந்த வுரிமைக் கண்ணு
நன்னெறிப் படருந் தொன்னலப் பொருளினும்
பெற்ற தேஎத்துப் பெருமையி னிலைஇக்
குற்றஞ் சான்ற பொருளெடுத் துரைப்பினு
நாமக் காலத் துண்டெனத் தோழி
யேமுறு கடவு ளேத்திய மருங்கினு
மல்லல் தீர வார்வமொ டளைஇச்
சொல்லுறு பொருளின் கண்ணுஞ் சொல்லென
வெனது சுவைப்பினு நீகை தொட்டது

வானோ ரமுதம் புரையுமா லெமக்கென
வடிசிலும் பூவுந் தொடுதற் கண்ணு
மந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்து
மந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினு
மொழுக்கங் காட்டிய குறிப்பினு மொழுக்கத்துக்
களவினு ணிகழ்ந்த வருமையைப் புலம்பி
யலமர லுள்ளமொ டளவிய விடத்து
மந்தரத் தெழுதிய வெழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட வொழுகலு
மழிய லஞ்சலென் றாயிரு பொருளினுந்
தானவட் பிழைத்த பருவத் தானு
நோன்மையும் பெருமையு மெய்கொள வருளிய
பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்
தன்னி னாகிய தகுதிக் கண்ணும்
புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதி
னெய்யணி மயக்கம் புரிந்தோ ளோக்கி
யையர் பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும்
பயங்கெழு துணையணை புல்லிய புல்லா
துயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப்
புல்கென முன்னிய நிறையழி பொழுதின்
மெல்லென் சீறடி புல்லிய விரவினு
முறலருங் குண்மையி னூடன் மிகுத்தோளைப்
பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்
பிரிவி னெச்சத்துப் புலம்பிய விருவரைப்
பிரிவி னீக்கிய பகுதிக் கண்ணு
நின்றுநணி பிரிவி னஞ்சிய பையுளுஞ்
சென்றுகை யிகந்துபெயர்த் துள்ளிய வழியுங்
காமத்தின் வலியுங் கைவிடி னச்சமுந்
தான்வட் பிழைத்த நிலையின் கண்ணு
முடன்சேறல் செய்கையொ டன்னவை பிறவு
மடம்பட வந்த தோழிக் கண்ணும்

வேற்றுநாட் டகல்வயின் விழுமத் தானு
மீட்டுவர வாய்ந்த வகையின் கண்ணு
மவ்வழிப் பெருகிய சிறப்பின் கண்ணும்
பேரிசை யூர்திப் பாகர் பாங்கினுங்
காமக் கிழத்தி மனையோ ளென்றிவ
ரேமுறு கிளவி சொல்லிய வெதிருஞ்
சென்ற தேஎத் துழப்புநனி விளக்கி
யின்றிச் சென்ற தன்னிலை கிளப்பினு
மருந்தொழின் முடித்த செம்மற் காலை
விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணு
மாலை யேந்திய பெண்டிரு மக்களுங்
கேளி ரொழுக்கத்துப் புகற்சிக் கண்ணு
மேனை வாயி லெதிரொடு தொகைஇப்
பண்ணமை பகுதிமுப் பதினொரு மூன்று
மெண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன.

இது பார்ப்பார் முதலிய பன்னிருவருங் கற்பிடத்துக் கூற்றிற்கு உரியராயினும் அவருட் தலைவன் சிறந்தமையின் அவன்கூற்றெல்லாந் தொகுத்துக் களவிற் கூறியாங்கு முற்கூறுகின்றது.

(இ-ள்.) கரணத்தின் அமைந்து முடிந்த காலை = ஆதிக்கரணமும் ஐயர் யாத்த கரணமுமென்னும் இருவகைச் சடங்கானும் ஓர் குறைபாடின்றாய் மூன்று இரவின் முயக்கம் இன்றி ஆன்றோர்க்கு அமைந்த வகையாற் பள்ளிசெய்து ஒழுகி நான்காம் பகலெல்லை முடிந்தகாலத்து: ஆன்றோராவார், மதியுங் கந்தருவரும் அங்கியும்; நெஞ்சு தளை அவிழ்ந்த புணர்ச்சிக்கண்ணும் = களவிற் புணர்ச்சி போலுங் கற்பினும் மூன்றுநாளுங் கூட்டமின்மையானும் நிகழ்ந்த மனக்குறைதீரக் கூடிய கூட்டத்தின்கண்ணும்: அது நாலாம் நாளையிரவின்கண்ணதாம். உ-ம். "விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமு - மரிதுபெறு சிறப்பிற் புத்தே ணாடு - மிரண்டுந் தூக்கிற் சீர்சா லாவே - பூப்போ லுண்கட் பொன்போன் மேனி - மாண்வரி யல்குற் குறுமக - டோண்மாறு படூஉம் வைகலோ டெமக்கே." இது நெஞ்சு தளையவிழ்ந்த புணர்ச்சி. "முகனிகுத் தொய்யென விறைஞ்சி யோளே" என முற்காட்டிய கரணத்தின் அமைந்து முடிந்தது.

எஞ்சா மகிழ்ச்சி இறந்துவரு பருவத்தும்—அதன்பின்னர் ஒழி யாத மகிழ்ச்சி பலவேறு வகையவாகிய நுகர்ச்சிக்கட் புதிதாக வந்த காலத்தினிடத்தும்: உ-ம். "அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ் - செறிதோறுஞ் சேயிழை மாட்டு." என்றது பொருள்களை உண்மையாக உணர்ந்த இன்பத்தை அறியுந்தோறும் அவற்றை முன் இவ்வாறு விளங்க உணராத அறிவின்மையை வேறுபடுத்துக் கண் டாற்போலுந் சேயிழைமாட்டுச் செறியுந்தொறுந் தலைத்தலை சிறப் பப் பெறுகின்ற காமத்தை முன்னர் அறியப் பெற்றிலேமென்று வெறுத்தலென்றவாறு.

அஞ்ச வந்த உரிமைக்கண்ணும் = தலைவனும் பிறரும் அஞ்சும் படி தலைவிக்கட்டோன்றிய உரிமைகளிடத்தும்: அவை இல்லறம் நிகழ்த்துமாறு தன் மனத்தாற பலவகையாகக் காணலும் பிறர்க் குத் தான் கொடுத்தலுங் கற்புச் சிறத்தலுமாம். உ-ம். "உள்ளத் துணாவுடையா னோதிய நூலற்றால் - வள்ளன்மை பூண்டான்க ணொண்பொரு - டெள்ளிய - வாணமகன் கையி லயில்வா ளனைத்த ரோ - நாணுடையாள் பெற்ற நலம்." இதனுள் நலமென்றது இம் மூன்றினையும். தலைவி இல்லறப்பகுதியை நிகழ்த்துமாறு பலவகை யாகக் காணுந் தன்மை உணாவுடையான் ஓதிய நூல் விரியுமாறு போல விரியாநின்றதெனவும், இவள் கொடை வள்ளன்மை பூண் டான் பொருளனைத்தெனவும், இவளது கற்புச்சிறப்புப் பிறர்க்கு அச்சஞ்செய்தலின் வாளனைத்தெனவுந், தலைவன் அவளுரிமைகளை வியந்து கூறியதுகாண்க.

நன்னெறிப் படரும் தொல் நலப் பொருளினும் = இல்லறத் திற்கு ஓதிய நெறியின்கட் தலைவி கல்லாமற் பாகம்பட ஒழுகுந் தொன்னலஞ் சான்ற பொருளின்கண்ணும்: பொருள்வருவாய் இல் லாத காலமும் இல்லறநிகழ்த்துதல் இயல்பாயிருத்தற்குத் தொன் னலமென்றார். உ-ம் "குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதிற் - கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங் - கடனீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி - மாதர் மனைமாட்சி யாள்." இது ஒரு குட ம் நீரால் சோறமைத்து உண்ணுமாறு மிடிப்பட்ட காலத்தும் மனை க்கு மாட்சிமையுடையாள் கடல் நீரை வற்ற உண்ணுங் கேளிர் வரி னும் இல்லறநிகழ்த்துதலைக் கைக்குநெறியாகக் கொள்ளுமெனத் தலைவன் வியந்துகூறினான்.

பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇக் குற்றஞ் சான்ற பொருள் எடுத்து உரைப்பினும் = தலைவி அங்ஙனம் உரிமை சான்ற

இடத்து அவளைப் பெருமையின்கண்ணே நிறுத்திக் குற்றமமைந்த களவொழுக்கத்தை வழுவியமைந்த பொருளாகக் கேளிர்க்காயினும் பிறர்க்காயினும் உரைப்பினும்: அது களவொழுக்கத்தையுந் தீய ஓரையுள்ளுந் துறவாது ஒழுகிய குற்றத்தையும் உட்கொண்டும் அதனைத் தீதென்னாமற் கூறுதலாம். உ-ம். "நாலாறு மாறாய் நனி சிறிதா யெப்புறனு - மேலாறு மேலுறை சோரினு - மேலாய - வல் லளாய் வாழுமூர் தற்புகழ மாண்கற்பி - னில்லா ளமைந்ததே யில்." இதனுள் மனைவி அமைந்துநின்ற இல்நிலையே இல்லறமாவதெனவே யாம் முன்னரொழுகிய ஒழுக்கமும் இத்துணை நன்மையாயிற்று என்றானாயிற்று. இது குறிப்பெச்சம்.

நாமக் காலத்து உண்டெனத் தோழி ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கினும்; தோழி நாமக்காலத்து ஏமுறு கடவுள் உண்டென ஏத்திய மருங்கினும் = தோழி இன்னது விளையுமென அறியாது அஞ்சுதலையுடைய களவுக்காலத்தே யாம் வருந்தாதிருத்தற்குக் காரணமாயதோர் கடவுள் உண்டெனக் கூறி அதனைப் பெரிது ஏத்திய இடத்தும்: தலைவன் வதுவைகாறும் ஏதமின்றாகக் காத்த தெய்வம் இன்னுங்காக்குமென்று ஏத்துதலும்: அது "குனிகாயெருக்கின்" என்னுங் குணநாற்பதில் ஏமுறு கடவுளைத் தலைவன் தானே ஏத்தியது போலாது, "நேரிழாய் நீயுநின் மகளும் புணர - வரையுறை தெய்வ முவப்ப வுவந்து - குரவை தழீஇயா மாடக் குரவையுட் - கொண்டு நிலைபாடிக் காண்" எனத் தான் பராய தெய்வத்தினைத் தோழி கற்புக்காலத்துப் பராவுக்கடன் கொடுத்தற்கு ஏத்தியவழித் தலைவனும் ஏத்துதலாம். உ-ம். "அதிரிசை யருவி யருவரைத் தொடுத்த - பஃறே னிறாஅ லல்குநர்க் குதவு - நுந்தைநன் னாட்டு வெந்திறன் முருகென - நின்னோய்க் கியற்றிய வெறிநின் றோழி - யென்வயி னோக்கலிற் போலும் பன்னாள் - வருந்திய வருத்தந் தீரநின் - றிருந்திழைப் பணைத்தோள் புணர்ந்துவந் ததுவே." தேன் இறாலை அல்குநர்க்கு உதவும் நாடாதலின் நின் நோய்க்கு இயற்றிய வெறி நுமக்குப் பயன்படாது எமக்குப் பயன்றருமென்றான் என்வயின் நோக்கலின் என்றது. எனக்குப் பயன் கொடுக்கவேண்டுமென்று பராயதனிற் றோளைப் புணர்ந்து உவந்தது என்றான். இது கற்புக்காலத்துப் பராவுக்கடன் கொடுக்கின்ற காலத்துத் தலைவன் கூறியது.

அல்லல் தீர ஆர்வமொடு அளைஇச் சொல்லுறு பொருளின் கண்ணும் = வரைந்த காலத்து மூன்றுநாட் கூட்டமின்மைக்குக் காரணமென்னென்று தலைவி மனத்துநிகழாநின்ற வருத்தந் தீரு

ம்படி மிக்க வேட்கையோடு கூடியிருந்து வேதஞ்சொல்லுதலுற்ற பொருளின்கண்ணும்: தலைவன் விரித்து விளங்கக் கூறும். அது முதனாட் தண்கதிர்ச் செல்வற்கும் இடைநாட் கந்தருவர்க்கும் பின்னாள் அங்கியங்கடவுட்கும் அளித்து நான்காநாள் அங்கியங் கடவுள் எனக்கு நின்னை அளிப்ப யான் நுகரவேண்டிற்று, அங்ஙனம் வேதங்கூறுதலால் எனத் தலைவிக்கு விளங்கக்கூறுதல். உதாரணம் இக்காலத்தின்று.

சொல்லென எனது சுவைப்பினும் நீ கை தொட்டது வானோர் அமுதம் புரையுமால் எமக்கென அடிசிலும் பூவுந் தொடுதற்கண்ணும்=அமிர்தத்திற்கு மாறுகிய நஞ்சை நுகரினும் நீ கையாற் தீண்டின பொருள் எமக்கு உறுதியைத் தருதலிற் தேவர்களுடைய அமிர்தத்தை ஒக்கும் எமக்கெனப் புனைந்துரைத்து இதற்குக் காரணங் கூறென்று அடிசிலும் பூவுந் தலைவி தொடுதலிடத்தும்: கூற்றுநிகழும். உம்மை இழிவுசிறப்பு. "வேம்பின் பைங்காயென் றோழி தரினே - தேம்பூங் கட்டி யென்றீர்" எனத் தலைவன் கூற்றினைத் தோழி கொண்டுகூறியவாறு காண்க.

அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும் அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும் ஒழுக்கங் காட்டிய குறிப்பினும்=வேட்பித்த ஆசிரியனுங் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பார்கண்ணும் முற்ற உணர்ந்து ஐம்பொறியையும் அடக்கியோர்கண்ணும் முடிவில்லாச் சிறப்பினையுடைய தேவர்கள் கண்ணும் ஒழுகும் ஒழுக்கத்தைத் தான் தொழுது காட்டிய குறிப்பின்கண்ணும்: பிறர்பிறரென்றார் தேவர் பலவொன்பது பற்றி. தன்னையன்றித் தெய்வந் தொழாதாளை இத்தன்மையோரைத் தொழல்வேண்டுமென்று தொழுதுகாட்டினான். குறிக்கொளுங் கூற்றால் உரைத்தலிற் குறிப்பினுமென்றார். உதாரணம் வந்துழிக்காண்க.

ஒழுக்கத்துக் களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி அலமரல் உள்ளமொடு அளவிய இடத்தும்=வணக்கஞ்செய்தும் எதிர்மொழியாது வினையவழிப் பிறராற் கூற்று நிகழ்த்தியும் எதிர்ப்பட்டுழி எழுந்தொடுங்கியுந் தான் அக்காலத்து ஒழுகும் ஒழுக்கத்திடத்து முன்னர்க் களவுக்காலத்து நிகழ்ந்த கூட்டத்தருமையைத் தனித்துச் சுழலுதலையுடைய உள்ளத்தோடே உசாவிய இடத்தும்: தலைவற்குக் கூற்றுநிகழும். உதாரணம் வந்துழிக்காண்க. "களவுக்கடுங்குரையள்" என்பது காட்டுவாரும் உளர்.

அந்தரத்து எழுதிய எழுத்தின் மான வந்த குற்றம் வழி கெட ஒழுகலும்; வந்த குற்றம் அந்தரத்து எழுதிய எழுத்தின் மான வழி கெட ஒழுகுதலும்=களவுக் காலத்து உண்டாகிய பாவம் ஆகா யத்தெழுதிய எழுத்து வழிகெடுமாறுபோல வழிகெடும்படி பிரா யச்சித்தஞ்செய்து ஒழுகுதற்கண்ணும்: அது முன்புபோலக் குற்றஞ் சான்ற பொருளை வழுவமைத்துக் கொள்ளாது குற்றமென்றே கரு திக் கடிதலாம். "பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந் தூரீ - மையற்ற படிவத்தால்" என்றவழி மையற்ற படிவமெனத் தலைவன் கூறியதனைத் தோழி கூறியவாறு காண்க.

அழியல் அஞ்சல் என்று ஆ இரு பொருளினும்=வந்தகுற்றம் நினக்கு உளதென்று அழியலெனவும் எனக்கு உளதென்று அஞ்ச லெனவுஞ் சொல்லப்படும் அவ்விருபொருண்மைக்கண்ணும்: இவை இரண்டாகக் கொள்ளின் முப்பத்தொன்பதாமாதலின் இருவர் குற் றமுங் குற்றமென ஒன்றாக்கியது. தெய்வத்தினுதலின் ஏதம் பய வாதென்றான். "யாயும் யாயும் யாரா கியரோ - வெந்தையு நுந்தை யு மெம்முறைக் கேளிர் - யானு நீயு மெவ்வழி யறிதும் - செம்பு லப் பெயனீர் போல - வன்புடைநெஞ்சந் தாங்கலந் தனவே." இது நம்மானன்றி நெஞ்சந் தமமிற் றாங் கலத்தலிற் றெய்வத்தான் ஆயிற்றெனத் தெருட்டியது.

தான் அவட் பிழைத்த பருவத்தானும் = அங்ஙனந் தெய்வத்தி னான் ஆயிற்றேனுங் குற்றமேயன்றோ என உட்கொண்ட அவட்கு யான் காதன்மிகுதியாற் புணர்ச்சி வேண்ட நின் குறிப்பிற்கேற்ப ஒழுகினையாகலின் நினக்கோர் குற்றமின்றென்று தான் பிழைத்த பருவமுணர்த்தும் இடத்தும்: கூற்று நிகழும். உ-ம். "நசைநீ கே ளாய் தோழி தகைபெற - நன்னுட் படராத் தொன்னிலை முயக்க மொடு - நாணிழுக் குற்றமை யறிகுநர் போல - நாங்கண் டனையமாக கேள்வர் - தாங்கண் டனைய ராமென் றோமோ." இதனுள் நன்னுள் வேண்டுமென்னாது கூடிய கூட்டத்துட் டங்கி நாணுச் சுருங்கி வேட்கை பெருகிய நம்மினும் ஆற்றாராயினார்போல நாங் குறித்தழி வந்தொழுகிய தலைவர் தாங் குறித்தனவே செய்தனமென நமக்குத் தவறின்மை கூறினாரெனத் தோழிக்குத் தலைவி கூறியவழித் தலை வன் பிழைப்புக் கூறியவாறு காண்க.

நோன்மையும் பெருமையும் மெய்கொள அருளிய பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித் தன்னின் ஆகிய தகுதிக்கண்ணும்

தன்னின் ஆகிய நோன்மையும் பெருமையும் மெய்கொள = தலைவனுன் உளதாகிய பொறையையுங் கல்விமுதலிய பெருமையையும் உடைய மகவைத் தலைவி தன்வயிற்றகத்தே கொள்கையினாலே: பன்னல்சான்ற வாயிலொடு பொருந்தி அருளிய தகுதிக்கண்ணும் = வேதத்தை ஆராய்தல் அமைந்த அந்தணரோடு கூடி இருத்தற்குச் செய்யத்தகுஞ் சடங்குகளைச் செய்த தகுதிப்பாட்டின்கண்ணும்: தன்னினாகிய மெய், கருப்பம். அவிப்பலிகொள்ளும் அங்கியங்கடவுட்கும் அதுகொடுக்குந் தலைவற்கும் இடையே நின்று கொடுப்பித்தலின் அந்தணரை வாயிலென்றார். "ஆற்றல் சான்ற தாமே யன்றியு - நோற்றோர் மன்றநங் கேளிரவர் தமைமை-வட்டிகைப் படவெந் திட்டமேய்ப்ப - வரிமயி ரொழுகுநின் னவ்வயி றருளி - மறைநவி லொழுக்கஞ் செய்து மென்றனர் - துனிதீர் கிளவிநந் தவத்தினு - நனிவாய்த் தனவான் முனிவர்தஞ் சொல்லே." இதனுள் நந்தலைவரோயன்றிச் சுற்றத்தாரும் நோற்று ஓர்கருப்பம் தங்கிய நினது வயிற்றைக் கண்டு உவந்தெனவும் அதற்கேற்ற சடங்கு செய்துமென்றானெனவும் முற்காலத்து நாங் கேட்ப நமக்குக் கூறிய முனிவர் சொல்லும் உண்மையாயிற்றெனவுங் கூறியவாறு காண்க. தலைவன்கூற்று வந்துழிக் காண்க.

புதல்வற் பயந்த புனிறு சேர் பொழுதின் = அங்ஙனஞ் சிறப்பெய்திய புதல்வனைப் பெற்ற ஈன்றணுமை சேர்ந்த காலத்தே: நெய் அணி மயக்கம் புரிந்தோள் நோக்கி = சுற்றக் குழாத்துடனே வாலாமை வரைதலின்றி எண்ணெயாடும் மயக்கத்தை விரும்பிய தலைவியை முகமனாகக் கூறுதலைக் குறித்து: ஐயர்பாங்கினும் = முனிவர் மாட்டும்: அமரர்ச் சுட்டியும் = தேவர்கள் புதல்வனைப் பாதுகாத்தலைக் கருதியும்: செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற்கண்ணும் = அக்காலத்துச் செய்யும் பெரிய சிறப்புக்களைக் குறித்த மனத்தோடே சென்று சார்தற்கண்ணும்: சிறப்பாவன பிறந்த புதல்வன் முகங் காண்டலும் ஐம்படை பூட்டலும் பெயரிடுதலும் முதலியனவும் எல்லாமுனிவர்க்குந் தேவர்க்கும் அந்தணர்க்குங் கொடுத்தலும். சேர்தல் கூறவே, கருப்பம் முதிர்ந்த காலத்துத் தலைவன் பிறரொடு கூட்டமுண்மையுங் கூறிற்றும். ஆண்டுத் தோழி கூறுவனவும் ஒன்றெனமுடித்தலாற் கொள்க. "வாராய் பாண நகுகம் நேரிழை - கடும்புடைக் கடுஞ்சூ னங்குடிக் குதவி-நெய்யோ டிமைக்கு மையவித் திரள்காழ் - விளங்குதர விளங்கக் கிடந்தோட் குறுகிப் - புதல்வ னீன்றெனப் பெயர்பெயர்த் தவ்வரித் - திதலை யல்குன் முதுபெண் டாகித் - துஞ்சுதி யோமெல் லஞ்சி லோதியெனப் - பன்மா ணகட்டிற்

குவளை யொற்றி - யுள்ளினெ னுறையுமெற் கண்டு மெல்ல - முகை நாண் முறுவ லேற்றிய-தகைமலர் நெடுங்கண் கையுதைத் ததுவே.'' இது நெய்யணிமயக்கம்பற்றித் தலைவன் கூறியது. "நெடுநா வொண் மணி கடிமனை யிரட்டக்-குரையிலை போகிய விரவுமணற் பந்தர்ப் - பெரும்பாண் காவல் பூண்டென வொருசார்த் - திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப - வெறியுற விரிந்த வறுவை மெல்லணைப் - புனிறு நாறு செவிலியொடு புதல்வன் றுஞ்ச - வையவி யணிந்த நெய்யாட் டீரணிப் - பசுநெய் கூர்ந்த மெய்மை யாக்கைச் - சீர்கெழு மடந் தை யீரிமை பொருந்த - நள்ளென் கங்குற் கள்வன் போல - வகன் றுறை யூரனும் வந்தனன் - சிறந்தோன் பெயரன் பிறந்த வாறே.'' இது முன்வருங் காலத்து வாராது சிறந்தோன் பெயரன் பிறந்த லான் வந்தானெனத் தோழி கூறினாள். "குவளை மேய்ந்த குறுந்தா ளெருமை - குடநிறை தீம்பால் படூஉம் - புதல்வனை யீன்றிவ ணெய்யா டினவே.'' இதுவும் அது.

பயங் கெழு துணையணை புல்லிய புல்லாது உயங்குவள் கிடந்த கிழத்தியை குறுகி புல்கு என முன்னிய நிறையழி பொழுதின் மெல்லென் சீறடி புல்லிய இரவினும்—தலைவி தனது ஆற்றாமை மிகுதியாற் தழுவி ஆற்றுதற்குக் குளிர்ந்த பயன்கொடுத்தல் பொருந்திய பல அணைகளைத் தழுவித் தன்னைப் புல்லுதல் பெறாதே வருந்திக் கிடந்த தலைவியை அணுகித் தான் கூடுதலைக் கருதின நிறையழிந்த காலத்தே அவளது மெத்தென்ற சிறிய அடியைத் தீண்டிய இரத்தற்கணணும்: இதனானே மகப்பேற்றுக்கு முன்னர்த் துணையாற்றாமை எய் திற்றிலனென்றார். இப்பிரிவு காரணத்தாற் தலைவனும் நிறையழி வனென்றார். "அகன்றுறை யணிபெற" என்னும் மருதக்கலியுள், "என்னைநீ செய்யினு முணர்ந்தீவா ரில்வழி - முன்னடிப் பணிந்தெம் மை யுணர்த்திய வருதிமன் - னிறைதொடி நல்லவர் துணங்கையுட டலைக்கொளக் - கறையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துறையாக் கால்'' என இதனுட் சீறடிப் புல்லிய இரவினைத் தலைவி கூறியவாறுகாண்க. தலைவன்கூற்று வந்துழிக்காண்க.

உறலருங்கு உண்மையின் ஊடல் மிகுத்தோளைப் பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற்கண்ணும்—தலைவற்குச் சாந்தழி பெருங்குறி பெற்றார் கூத்தற் றுகளும் உண்மையின் அவனைக் கூடுதல் அருமையினாலே ஊடன் மிகுத்த தலைவியைப் பிறபிற பெண்டிர் ஏது வாக ஊடல் உணர்த்துதலிடத்தும்: என்றது உலகத்துத் தலைவரொடு கூடுந் தலைவியர் மனையறத்து இவ்வாறொழுகுவரொன அவர்

ஒழுக்கங் காட்டி அறத்துறைப் படுத்தலாம். மறைவெளிப்படுத் தலுந் தமரிற்பெறுதலும் மலிவும் முறையே கூறிப் பின்னர்ப் புலவி நிகழ்ந்து ஊடலாய் மிகுதலின் ஊடல் மிகுத்தோளென்றார். இரத்தற்பாலிலும் பெண்பால் காட்டிப் பெயர்த்தலிற் பிறபிற பெண்டிரென்றார். "புனமவளர் பூங்கொடி" என்னும் மருதக்கலியுள் ஒருத்தி "புலவியாற் புல்லா திருந்தா ளலவுற்று - வண்டின மார்ப்ப விடையிட்டுக் காதலன் - றண்டா ரகலம் புகும்" எனக் கூறி, "அன்ன வகையால்யான் கண்ட கனவுத்தா - னனவாகக் கண்டை நறுநுதால் பன்மாணுங் - கூடிப் புணர்ந்நீர் பிரியன்மினீடிப் - பிரிந்நீர் புணர்தம்மி னென்பன போல - வரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி - லாலு தகவும் பொழுதினான் மேவர - நான்மாடக் கூடன் மகளிரு மைந்தரும் - தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமா - ரானா விருப்போ டணியயர்பு காமற்கு - வேனில் விருந்தெதிர் கொண்டு." எனவே, புல்லாதிருந்தாளென்றதனான் ஊடன் மிகுதி தோன்றுவித்து மகளிரும் மைந்தரும் வேனில் விழாச் செய்கின்றார் நாமும் அது செய்யவேண்டுமென்று கூறியவாறு காண்க.

பிரிவின் எச்சத்துப் புலம்பிய இருவரைப் பிரிவின் நீக்கிய பகுதிக்கண்ணும்=பரத்தையிற்பிரிவினது தவிர்ச்சிக்கட் தனிமையுற்றிருந்த தலைமகனையுந் தலைமகளையுந் தனதருளினாலே தானும் பிரிவினெச்சத்துப் புலம்பி நின்றான் ஒருதலைவன் தலைவிதனைக் கண்டருளுதற்கு அப்பிரிவினின்று நீக்கிய கூறுபாட்டின்கண்ணும்: பிரிந்துவந்துழியல்லது புலத்தல் பிறவாமையின் எச்சத்தென்றார். உதாரணம் வந்துழிக் காண்க. இதுவும் ஊடற்பகுதியாம்.

நின்று நனி பிரிவின் அஞ்சிய பையுளும்=முன்னிலாதொருசிறைப் போய் நின்று நீட்டித்துப் பிரிவினாற் தலைவன் அஞ்சிய நோயின்கண்ணும்: இஃது "மையற விளங்கிய" என்னும் மருதக்கலியுள் "ஏதப்பா டெள்ளிப் புரிசை வியலுள்ளோர் - கள்வரைக் காணாது கண்டேமென் பார்போலச் - சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவுநின் - னாணை கடக்கிற்பார் யார்." எனச் சேய்நின்றென்றதனாற் துணித்து நின்றவாறுஞ் சினவலென்றதனாற் பிரிவு நீட்டித்தவாறும் நின்னாணை கடக்கிற்பார் யாரென அஞ்சியவாறு கூறியவாறுங்காண்க. "பொய்யெல்லா மேற்றித் தவறு தலைப்பெய்து - கையொடு கண்டாய் பிழைத்தே னருளி" என்பதும் அச்சமாதலின் இதன்கண் அடங்கும்.

**செ**ன்று கை இகந்து பெயர்த்து உள்ளிய வழியும்; சென்று—தலைவன் ஆற்றாய்த்த துனியைத் தீர்த்தற்கு அவனை அணுகச்சென்று: கையிகந்து—அவன்மெய்க்கட் கிடந்த தவறுகண்டு தலைவி ஆற்றாளாய் நீக்கி நிறுத்தலானே: பெயர்த்து—அவன் ஒருவாற்றான் அவளாற்றாமையைச சிறிது மீட்கையினாலே: உள்ளிய வழியும்—அவள் கூடக் கருதியவிடத்தும்: தலைவன் கூற்று நிகழும்; இதுவுந் துனி தீர்ப்பதோர் முறைமை கூறிறறு. உ-ம். முற்கூறிய பாடலுள், "அதிர்வில் படிறெருக்கி வநதெம் மகன்மேன் - முதிர்பூண் முலைபொருத வேதிலாண் முச்சி - யுதிர்துக ளுக்கநின் னாடை யெறிப்ப - வெதிர்வெளியே சென்றாய்நீ செல். எலலாயாந், திதிலே மென்று தெளிப்பவுங் கைந்நீவி - யாதொன்று மெமசண் மறுதர வில்லாயின் - மேதக்க வெநதை பெயரனை யாங்கொள்வேம் - தாவா விருப்பொடு கன் றியாத்துளிச செல்லுமா - போலப படர்தகக நாம்." எனத் தலைவன் கூறியவாறு காண்க.

**கா**மத்தின் வலியும்—அவளது நீத்து நீங்கியவழி முற்கூறிய வாறன்றிக் காமஞ் சிறத்தலின் ஆற்றாமைவாயிலாகச சென்று வலித்துப் புக்கு நெருங்கிக் கூடுமிடத்தும். தலைவன்கூற்று நிகழும். இதுவுந் துனி தீாபபதோர் முறைமை கூறிறறு. உ-ம். "யாரிவ னெங் கூந்தல் கொள்வா னிதுவுமோ - ரூராண்மைக் கொத்த படிறுடைத் தெம்மனை-வாரனீ வந்தாங்கே மற்று." என வலிந்து சென்றதனைத் தலைவி கூறியவழி, "என்னிவை, ஒருயிரப புள்ளி னிருதலை யுள்ளொன்று - போரெதிர்ந் தற்றாப் புலவனீ கூறியென் - னாருயி ரிறகுமாறியாது" என ஆற்றாமை மிகுதியாறசென்றமை கூறியவாறுகாணக

**கை**விடின் அச்சமும்—தலைவி தான் உணர்த்தவும் உணராமற் தன்னைக் கைவிட்டுப் பிரியிற் தான அவனை நீங்குதற்கு அஞ்சிய அச்சத்தின்கண்ணும்: தலைவற்குக் கூற்று நிகழும். அது உணர்ப்புவயின் வாராவூடலாம். "எவ்வி யிழந்த வறுமையர் பாணர் - பூவில் வறுந்தலை போலப் புல்லென்-றினைமதி வாழிய நெஞ்சே மனைமரத்-தெல்லுறு மௌவ னாறும் - பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே." இதனுள் அவளையின்றி வருந்துகின்ற நெஞ்சே அவன் நமக்கு யாரெனப் புலத்தலன்றி ஆண்டுநின்றும் பெயர்தல் கூறாமையிற் கைவிடின் அச்சமாயிற்று.

**தா**ன் அவட் பிழைத்த நிலையின்கண்ணும் — தலைவன் தலைவியைப் பிழைத்த பிரிவின்கண்ணும்—பிழைத்தவென்றார் இயற்கைப்பு

ணாச்சி தொடங்கிப் பலகாலும் பிரியேனெனத் தெளிவித்ததனைத் தப்பலின். உ-ம். "அன்பு மடனுஞ் சாயலு மியல்பு-மென்பு நெகிழ்த் தன இளவியும் பிறவு-மொன்றுபடு கொள்கையொ டொராங்கு முய ஙகி - யினறே யிவண மாகி நாளைப - புதலிவ ராடமைத் துமபி குயின்ற - வகலா வந்துளை கோடை முகத்தலி - னீாக்கியங் கினைகி னைப் பின்றை வாாகோ - லாய்க்குழம் பாணியி னேதுவந் திசைக குந் - தேக்கமழ சோலைய கடறேய கருஞ்சுரத் - தியாத்த தூணி த் தலைதிறந் தவைபோற - பூத்த விருப்பைக் குழைபொதி குவியி ணா - கழ்றுளை முத்திற செங்கலத் துதிா - மழைதுளி மறைந்த பை ங்குடிச சிறாாச - சேக்குவங் கொல்லோ நெஞ்சே பூபபுனைப் - புய லென வொலிவருந் தாழிருங் கூந்தற் - செறிதொடி முன்கைநங் காதலி - யறிவுஞா நோககமும் புலவியு மினைநதே." இது நெஞ்சி றைற் பிரியக கருதி வருந்திக் கூறியது. "வயங்க மணிபொருத" என்பதும் அது. அகம.

உடன்சேறல் செய்கையொடு அன்ன பிறவும் மடம்பட வந்த தோழிகண்ணும் ; அன்னவையும் பிற = நீ களவிற் தேறறிய தெளிவகப்படுத்தலுந் தீராத தேறறமும் பொய்யாம்: செய்கை யொடு உடன்சேறல் = அவை பொய்யாகாதபடி செய்கைகளோ டே இவளை உடன்கொண்டு செலக: மடம் பட வநத தோழிக் கண்ணும் = தன்னறியாமை தோனறக கூறிவந்த தோழிகண்ணும்: கூற்றுநிகழும. உடன்கொண்டுபோதல் முறைமையன்றென்று அறி யாமற் கூறலின் மடம்படவென்றா. செயகைகளாவன தலைவன் கை புனை வலவில் நாண் ஊாநதவழி இவள மையில் வாண்முகம் பசப பூாதலும் அவன புனை மாண் மரீஇய அம்பு தெரிநதவழி இவள் இணை நோக்குண்கண ணீா நில்லாமையும் பிறவுமாம். "பாஅலஞ்செவி" எனனும் பாலைக்கலியுள், "ஒரிரா வைகலுட் டாமரைப் பொய்கை யு - ணீர்நீத்த மலாபோல நீநீபபின் வாழ்வாளோ" எனவும், "அந் நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே" எனவும், உடன் கொண்டு சென்மினெனத் தோழி கூறியது கேட்ட தலைவன் இவளை உடன்கொண்டு போதல் எல்லாவாற்றானும் முறைமையன்றென்று தோழிக்குக் கூறுவனவும் நெஞ்சிற்குக் கூறுவனவும் பிறவுங்கொள்க. "வேட்டைச் செந்நாய் கிளைத்தூண் மிசசில் - குளவி மொய்தத வழுகற் சின்னீர் - வளையுடைக் கைய ளெம்மொ டுணீஇய - வருக தில் லம்ம தானே-யளியளோ வளியளென் னெஞ்சமர்ந் தோளே" இது தோழி கேட்பக் கூறியது. "நாணகை யுடைய நெஞ்சே கடுந் திறல் - வேனி னீடிய வானுயர் வழிநாள் - வறுமை கூறிய மன்

னீர்ச் சிறுகுளந் - தொடுகுழி மருங்கிற் றுவ்வாக் கலங்கல் - கன்றுடை மடப்பிடி கயந்தலை மண்ணிச் - சேறுகொண் டாடிய வேறுபடு வயக்களிறு - செங்கோல் வாலிணர் தயங்கத் தீண்டிச் - சொறிபுற முரிஞ்சிய நெறியய னன்மராஅத் - தல்குறு வரிநிழ லசைஇய நம்மொடு - தான்வரு மென்ப தடமென் ேறாளி - யுறுகணை மழவ ருருள்கீன் டிட்ட - வாறுசென் மாக்கள் சோறுபொதி வெண்குடைக்-கன்மிசைக் கடுவெளி யெடுத்தலிற் றுணைசேர்த்து - வெருளேறு பயிரு மாங்கட் - கருமுக முசுவின் கானத் தானே." இது நெஞ்சிற்குக் கூறியது.

வேற்று நாட்டு அகல் வயின் விழுமத்தானும் = அங்ஙனம் வேற்றுநாட்டிற் பிரியுங் காலத்துத் தானுறும் இடும்பையிடத்து: தலைவற்குக் கூற்று நிகழும். விழுமமாவன பிரியக் கருதியவன் பள்ளியிடத்துக் கனவிற்கூறுவனவும் போவேமோ தவிர்வேமோ என வருந்திக் கூறுவனவும் இவள் நலன் திரியுமென்றலும் பிரியுங் கொலென்று ஐயுற்றதலைவியை ஐயந்தீரக் கூறலும் நெஞ்சிற்குச் சொல்லி அழுங்குதலும் பிறவுமாம். "நெஞ்சுநடுக்குற" என்னும் பாலைக்கலியுள் கனவிற் கூறியவாறு காண்க. "உண்ணா மெய்யினுயங்கிய மருங்கி - ளுடாப் படிவத் தான்ேறார் போல - வரைசேர் சிறுநெறி நிரையுடன் செல்லுங் - கான யானை கவினழி குன்றம் - இறந்துபொரு ளருதலு மாற்றுய் சிறந்த - சில்லையங் கூந்த னல்லகம் பொருந்தி - யொழிவின் வறுமை யஞ்சுதி யழிதக - வுடைமதி வாழிய நெஞ்சே நிலவென - நெய்கனி நெடுவே லெஃகிலை யிமைக்கு - மழைமருள் பஃறோன் மாவண் சோழர் - கழைமாய் காவிரிக் கடன்மண்டு பெருந்துறை - யிறவொடு வந்து கோதையொடு பெயரும் - பெருங்கட லோதம் போல - வென்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே" இது போவேமோ தவிர்வேமோ என்றது. "அருவி யார்க்கும் பெருவரை யடுக்கத் - தாளி நன்மான் வேட்டெழிற் கோளுகிர்ப் - பூம்பொறி யுழுவை தொலைச்சிய வைநுதி - யேந்துவெண் கோடு வயக்களி றிழுக்குந் - துன்னருங் கானமென்னுய் நீயே - குவளை யுண்க ணிவளீண் டொழிய - வாள்வினைக் ககறி யாயின் மன்னு - போயின்று கொல்லோ தானே படப்பைக் - கொடுமுள் ளீங்கை நெடுமா வந்தளிர் - நீர்மலி கதழ்பெயறலைஇய - வாய்நிறம் புரையுமிவண் மாமைக் கவினே." இது இவள் நலனழியுமென்று செலவழுங்கியது. "தேர்செல வழுங்கத் திருவிற் கோலி - யார்கலி யெழிலி சோர்தொடங், கின்றே - வேந்து விடு தொழி லொழிய - யான்றொடங் கினனு னிற்புறந் தரலே." இது

ஐயந்தீர்த்தது. "ஈதலுந் துய்த்தலு மில்லோர்க் கில்லெனச் - செய்வினை கைம்மிக வெண்ணுதி யவ்வினைக் - கம்மா வரிவையும் வருமோ - வெம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே." இது தலைவியை வருகின்றாளன்றே எனக் கூறிச் செலவழுங்கியது.

மீட்டுவரவு ஆய்ந்த வகையின்கண்ணும் = பிரிந்த தலைவன் இடைச்சுரத்து உருவு வெளிப்பட்டுழியும் மனம் வேறுபட்டுழியும் மீண்டு வருதலை ஆராய்ந்த கூறுபாட்டின்கண்ணும்: "உழையணிந் துண்டவிறைவாங் குயர்சினைப - புல்லரை யிரத்திப் பசுங்காய் பொற்பக் - கல்சேர் சிறுநெறி மல்கத் தாவும் - பெருங்கா டிறந்து மெய்த வந்தனவா - லருஞ்செயற் பொருட்பிணி முன்னி யாமே - சேறு மடந்தையென்றலிற் றன்ற - னெய்த வுண்கண் பைதல் கூரப் - பின்னிருங் கூந்தலின் மறையினள் பெரிதழிந - துதியன் மண்டிய வொலிதலை ஞாட்பி - னிம்மென் பெருங்களத் தியவரு துயர - மாம்பலங் குழலி னேங்கிக - கலங்கஞ ருறுவோள் புலம்புகொ ளேறுக்கே." இது உருவுவெளிப்பட்டுக் கூறியது. "ஒன்றுநெரிந் துரைத்திசி னெஞ்சே புன்காற் - சிறியிலை வேம்பின் பெரிய கொன்று - கடாஅஞ் செருக்கிய கடுஞ்சின முன்பிற் - களிறுநின் றிறந்த நீர லீரத்துப் - பால்வீ தோன்முலை யகடுநிலஞ் சேர்த்திப் - பசியட முடங்கிய பைங்கட் செந்நாய - மாயா வேட்டம் போகிய கணவன் - பொய்யா மரபிற் பிணவுநினைந் திரங்கும - விருநிலன் வெங்காட்டு வருந்துதும் யாமே - யாள்வினைக் ககல்வா மெனினு - மீள்வா மெனினு நீதுணிந் ததுவே." இது வேறுபட்டு மீட்டுவரவு ஆய்ந்தது. "ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை - வெம்முனை யருஞ்சுர நீந்தி நம்மொடு - மறுதரு வதுகொ றானே செறிதொடி - கழிந்துகு நிலைய வாக - வொழிந்தோள் கொண்டவெ னுரங்கெழு நெஞ்சே." இது மீளவுறும் நெஞ்சினை நொந்து தலைவன் உழையர்க்கு உரைத்தது. "நெடுங்கழை முளிய வேனி னீடிக் - கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின் - வெய்ய வாயின முன்னே யினியே - யொண்ணுத லரிவையை யுள்ளுதொறுந் - தண்ணிய வாயின சுரத்திடை யாறே." இது இடைச்சுரத்துத் தலைவி குணம் நினைந்து இரங்கியது. இன்னும் இரட்டுறமொழிதலென்பதனாற் செய்வினை முற்றி மீண்டுவருங்கால் வருந்தி நெஞ்சொடு கூறுவனவும் பிறவுங் கொள்க. அது "என்றுகொ லெய்து ஞான்றே சென்ற - வளமலை நாடன் மடமக - ளிளமுலை யாகத் தின்னுயிர்ப் புணர்ப்பே." "கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் பெஃகின் - வில்லோர் தூணி வீங்கப் பெய்த - வப்புநுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச் - செப்படர் அன்ன செங்குழை யகந்தோ-

திழுதி னன்ன தீம்புழற் றுயவா - யுழுதுகாண் டுளைய வாகி யார் கழல் - பாசி வானிற் காலொடு பாறித் - துப்பி னன்ன செங்கோட் டியவி - னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு - மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்க் - கொடுநுண் ணேக்கின் மகளி ரோச்சிய - தொடிமா ணுலக்கைத் தூண்டுரற் பாணி - நெடுமால் வரைய குடிஞை யொ டிரட்டுங் - குன்றுபி னொழியப் போகியுந் தூரந்து - ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது - துணைபரி துரக்குந் துஞ்சாச் செலவி - னெம்மினும் விரைந்துவல் லெய்திய பன்மா - னேங்கிய நல்லி லொருசிறை நிலைஇப் - பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக் - கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக் - கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப் - பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித் - தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ - நாணொடு மிடைந்த கற்பின் வாணுத - லந்தீங் கிளவிக் குறுமகண் - மென்றோள் பெறநசைஇச் சென்றவெ னெஞ்சே." எனவரும். இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

அவ்வழிப் பெருகிய சிறப்பின்கண்ணும் = பிரிந்தவிடத்துத் தான்பெற்ற பெருக்கம் எய்திய சிறப்பின்கண்ணும்: மனமகிழ்ந்து கூறும். சிறப்பாவன பகைவென்று திறைமுதலியன கோடலும் பொருண்முடித்தலுந் துறைபோகிய ஓத்தும் பிறவுமாம். உதாரணம் "கேள்கே டூன்றவுங் கிளைஞ ராரவும்" எனவும், "தாமிது மேவியம்" என்பதனுட் "செய்வினை முடித்த செம்ம லுள்ளமொடு" எனவும், மனமகிழ்ந்து கூறியவாறு காண்க. "முன்னியது முடியா மரபின்" என்னும் நற்றிணையுட் பொதுப்படச் சிறப்புக் கூறியவாறு காண்க.

பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும் = அச்சிறப்புக்களை எய்திய தலைவன் பெரிய புகழையுடைத்தாகிய தேரையுடைய பாகரிடத்தும்: கூற்றுநிகழ்த்தும். அவரது சிறப்பு உணர்த்துதற்குப் பாகரெனப் பன்மையாற் கூறினர். "இருந்த வேந்த னருந்தொழின் முடித்தெனப் - புரிந்த காதலொடு பெருந்தேர் யானு - மேறிய தறிந்த தல்லது வந்த - வாறுநனி யறிந்தன்றோ விலனே தாவு - முயற் பற முகளு முல்லையம் புறவிற் - கவைக்கதிர் வரகின் சீறூ ராங்கண் - மெல்லிய லரிவை யில்வயி னிறீஇ - யிழிமி னென்றநின் மொழிமருண் டிசினே - வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ - மானுரு வாகநின் மனம்பூட் டினையோ - வுரைமதி வாழியோ வலவ வெனத் தன் - வரைமருண் மார்பி னளிப்பனன் முயங்கி - மனைக்கொண்டு

புக்கன னெடுந்தகை - விருந்தோ பெற்றன டிருந்திழை யோளே.'' இதனாற் பாகன் சிறப்புக் கூறியவாறு காண்க. ''மறத்தற் கரிதாற் பாக பன்னாள் - வறத்தொடு வருந்திய வுலகுதொழிற் கொளீஇய - பழமழை பொழிந்த புதுநீ ரவல - நாகவில் பலகிளை கறங்க நாவுடை - மணியொலி கேளாள் வாணுத லதனா - லேகுமி னென்ற விளையர் வல்லே - யில்புக் கறியுந ராக மெல்லென - மண்ணாக் கூந்தன் மாசறக் கழீஇச் - சில்போது கொண்டு பல்குர லழுத்திய - வந்திலைப் புகுதலின் மெய்வருந் தூறஅ - வவிழ முடியினள் கவைஇ - மடமா வரிவை மகிழ்ந்தயர் நிலையே.'' இது தானுற்ற இன்பத்தினைப் பாகற்குக் கூறியது. ''ஊர்க பாக வொருவினை கழீஇய - செல்க தேரோ நல்வலம் பெறுநன்'' எனவும்வரும். ''தயங்கிய களிற்றின் மேற் றகைகாண விடுவதோ - தாள்வலம் படவென்ற தகைநன்மா மேலகொண்டு'' என வருவன தலைவிகூற்றாதலிற் றலைவன் மீண்டுவருங்காற் பாகற்கே கூறுவனென்றார்.

காமக்கிழத்தி மனையோள் என்று இவர் ஏமுறு கிளவி சொல்லிய எதிரும்; காமக்கிழத்தி மனையோளென்றிவர் சொல்லிய ஏமுறு கிளவி எதிரும் = இற்பரத்தை தலைவியென்று கூறிய இருவர் சொல்லிய வருத்தமுற்ற கிளவியின் எதிரிடத்தும்: கூற்றுநிகழ்த்தும். அவை அருஞ்சுரத்து வருத்தம் உற்றீரோ எனவும் எம்மை மறந்தீரோ எனவுங் கூறுவனவும் பிறவுமாம். ''எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடை - யரிய வாயினு மெளிய வன்றே - யவவுறு நெஞ்சங் கவவுநனி விரும்பிக் - கடுமான் றிண்டேர் கடைஇ - நெடுமா ணோக்கி நின் னுள்ளியாம் வரவே.'' இது வருத்தம் உற்றீரோ என்றதற்குக் கூறியது. ''தொடங்குவினை தவிரா வசைவி ணோன்றாள் - கிடந்துயிர் மறுகுவ தாயினு மிடம்படில் - வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த - தாவி னுள்ளந் தலைத்தலைச் சிறப்பச் - செய்வினைக் ககன்ற காலை யெஃகுற் - றிருவே றாகிய தெரிகுவன் பயின்மா - வீன்று வடிவேல் போலக் காண்டொறு - மேவ றண்டா மகிழ நோக்குங்க - ணிணையாது கழிந்த வைக லெனையதூஉம் - வாழலென் யானெனத் தேற்றிப் பன்மாண் - டாழக் கூறிய தகைசா னன்மொழி - மறந்தனிர் போறி ரெம்மெனச் சிறந்தநி - னெயிறுகெழு துவர்வாயின்னகை யழுங்க - வினவ லானாப் புனையிழை கேளினி - வெம்மை தண்டா வெரியுகு பறந்தலைக் - கொம்மை வாடிய வியவுள் யானை - நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி - யறுநீ ரம்பியி னெறிமுத லுணங்கு - முள்ளூநர்ப் பனிக்கு மூக்கருங் கடத்திடை - வெள்ளெ ஞேனுப் பொருடரல் விருப்பொடு - நாணுத் தணையாக வைகி மாண்

வினைக் - குடம்பாண் டொழிந்தமை யல்லது - மடங்கேழ் நெஞ்ச நின்னுழை யதுவே." இது மறந்தீர்போலும் என்றதற்குக் கூறியது. "உள்ளினெ னல்லனோ யானே யுள்ளி - நினைத்தனெ னல்லனோ பெ ரிதே நினைத்து - மருண்டனெ னல்லனோ வுலகத்துப் பண்பே-நீடிய மரத்த கோடு கொய்மலர் - நிறையிறைத் தணைச்சென் றற்றூஅங்- கனைப்பெருங் காம மீண்டுகடைக் கொளலே." பிறவுமென்றதனன் இத்தன்மையனவுங் கொள்க. இவை இருவர்க்கும் பொது. இவற் றைக் காமக்கிழத்தி விரைந்துகூறுமென்றற்கு அவளை முற்கூறினர்.

சென்ற தேஎத்து உழப்பு நனி விளக்கி இன்றிச் சென்ற தம் நிலை கிளப்பினும் = அங்ஙனங்கூறிய இருவர்க்குந் தான் சென்ற தேயத்தில் வருத்தத்தை மிகவும் விளங்கக் கூறி நனவினுற் சேற லின்றிக் கனவினுற் கடத்திடைச் சென்ற தம்முடைய நிலையைத் தலைவன் கூறினும்: உ-ம். "ஒழித்துப் பழித்த நெஞ்சமொடு வழி ப்படர்ந் - துள்ளியு மறிதிரோ வெம்மெண யாழநின் - முள்ளெயி ற்றுத் துவர்வாய் முறுவ லழுங்க - நோய்முந் துறுத்து நொது மலர் மொழியநின் - னய்நல மறப்பெனோ மற்றே சேணிகந் - தொ லிகழை மிசைந்த வொலிசொரி யொண்பொறி - படுஞமல் புதை யப் பொத்தி நெடுநிலை-முளிபுன மீமிசை வளிசுழற் றுறூஅக் - காடு கவர் பெருந்தீ யோடுவயி னோடலி - னதர்கெடுத் தலறிய சாத் தொ டொராங்கு - மதர்புலி வெரீஇய மையல் வேழத் - தினந்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு - ஞான்றுதோன் றவிர்சுடர் மான்றுமரப் பட்டெனக் - கட்பட ரோதி நிற்படர்ந் துள்ளி - யருஞ் செல லார்வற் றரிடை நெரோனெனப் - பரந்துபடு பாய னவ்வி பட் டென - விலங்குவளை செறியா விகுத்த நோக்கமொடு - நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண் - டின்னகை யினைய மாகவு மெம்வயி- னூடல் யாங்குவந் தன்றென யாழநின் - கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி - நறுங்கதுப் புள்ளிய நன்ன ரமயத்து - வறு ங்கை காட்டிய வாயல் கனவி - னேற்றேக் கற்ற வலமரல் - போ ற்று யாகலிற் புலத்தியா லெம்மே." இதனுள் வறுங்கை காட்டிய வாயல் கனவினென நனவின்றிச் சென்றவற்றைத் தலைவன் கூறிய வாறு காண்க. இதுவும் இருவர்க்குமாம்.

அருந்தொழின் முடித்த செம்மற் காலை விருந்தொடு நல்ல வை வேண்டற்கண்ணும் = செயற்கு அரிதாகிய வினையை முடித்த தலைமையை எய்திய காலத்தே தலைவி விருந்தெதிர்கோடலோடே நீராடிக் கோலஞ்செய்தல் முதலியவற்றைக் காண்டல் வேண்டிய

இடத்தும்: தலைவன் கூற்றுநிகழ்த்தும். உ-ம். "மூரம்புதலை மணந்த நிரம்பா வியலி-ேனுங்கித் தோன்று முமண்பொலி சிறுகுடிக் - களரிப் புளியிற் காய்பசி பெயர்ப்ப - வுச்சிக் கொண்ட வோங்குகுடை வம்பலீர் - முற்றையு முடையமோ மற்றே பிற்றை - வீழ்மா மணிய புனைநெடுங் கூந்த - னிர்வார் புள்ளி யாக நனைப்ப - விருந்தயர் விருப்பினள் வருந்துந் - திருந்திழை யரிவை தேமொழி நிலையே." என இதனுள் விருந்தயர் விருப்பினளென விருந்தொடு நல்லவை வேட்டுக்கூறியவாறு காண்க.

மாலை ஏந்திய பெண்டிரும் மக்களும் கேளிர் ஒழுக்கத்துட் புகற்சிக் கண்ணும—வினைமுற்றிப்புகுந்த தலைமகனை எதிரேற்றுக் கொள்ளும் மங்கலமரபினர் மாலையேந்திய பெண்டிரும் புதல்வருங் கேளிரும் ஆகலான் அக்கேளிர் செய்யும் எதிர்கோடலொழுக்கத்துக் கண்ணும்: தலைமகன் உள்ளமகிழ நதுரைக்கும். உம்மைவிரிக்க. பெண்டிரும் மக்களுமாகிய கேளிரொன்றுமாம். உ-ம். "திருந்துங் காட்சிப் பெரும்பெயர்க் கற்பி - னுனுடை யரிவை மாணகர் நெடுந்தே ரொய்த வந்தன்ருற் பாக நல்வர - விளைய ரிசைத்தலிற் கிளையோ டொல்லாஞ் - சேயுயா நெடுங்கடைத் துவன்றின ரொதிர்மார் - தாயரும் புதல்வருந் தம்முன் பறியாக் - கழிபே ருவகை வழிவழி சிறப்ப - வறம்புரி யொழுக்கங் காண்கம் - வருந்தின காண்கநின் திருந்துநடை மாவே." எனவரும்.

ஏனை வாயில் எதிரொடு தொகைஇ—சிறந்த மொழியை ஒழிந்துநின்ற வாயில்கட்கு எதிரே கூறுங் கூற்றேடே முற்கூறியவற்றைத் தொகுத்து: உ-ம். "நகுகம் வாராய் பாண பகுவா - யரிபெய் கிண்கிணி யார்ப்பத் தெருவிற் - றேர்நடை பயிற்றுந் தேமொழிப் புதல்வன் - பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு காமர் நெஞ்சந் துரப்ப யாந்தன் - முயங்கல் விருப்பொடு குறுகினே மாகப் - பிறைவனப் புற்ற மாசி றிருநுத - ணறிருங் கதுப்பினெங் காதலி வேறுணர்ந்து - வெரூஉ மான்பிணையி னொரீஇ - யாமை யோவென் றிகந்துநின் றதுவே." இது ஏனைவாயிலாகிய பாணற்கு உரைத்தது.

பண்ணமை பகுதி முப்பதினொருமூன்றும்—ஓதப்பட்ட இவையே இடமாக நல்லறிவுடையோர் ஆண்டாண்டு வேறுவேறாகச் செய்யுள் செய்துகோடற்கு அமைந்துநின்ற கூறுபாட்டை உடையவாகிய முப்பத்துமூன்று துறையும்:

எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேனகளவுபோல இழி தொழிலின்றி ஆராய்தற்கரிய சிறப்போடுகூடிய தலைவன்கண்ண. எ-று. சிறப்பாவன வந்தகுற்றம் வழிகெட ஒழுகலும் இல்லறம் நிகழ்த்தலும் பிரிவாற்றுதலும் பிறவுமாம். இன்னவிடத்தும் இன்னவிடத்தும் நிகழுங் கூற்றுக்களை வாயிலெதிர்கூறுங் கூற்றோடே தொகுத்துப் பண்ணுதற்கமைந்த பகுதியுடையவாகிய முப்பத்து மூன்று துறையுந் தலைவன்கண் நிகழ்வன என்றுமுடிக்க. எடுத்துரைப்பினுந் தந்நிலைகிளப்பினும் அக்கூற்றுக்களையும் வாயிலெதிரொடு தொகைஇயென முடிக்க. இவற்றுட் பண்ணிக்கொள்ளும் பகுதியாவன, யாம் மறைந்துசென்று இவனைக் கண்ணைப்புதைத்தாற் றலைநின்றொழுகும் பரத்தையர்பெயர் கூறுவனென்று உட்கொண்டு காமக்கிழத்தியாதல் தலைவியாதல் சென்று கண்புதைத்துழித் தலைவன் கூறுவனவும் பள்ளியிடத்து வந்திருந்து கூறுவனவும் இவள் ஊடற்குக் காரணம் என்னென்று தோழி வினயவழிக் கூறுவனவும் பிரிந்தகாலத்து இவளை மறந்தவாறென்னென்ற தோழிக்குக் கூறுவனவும் பிறவுமாம். உ-ம். "சிலம்புகமழ் காந்த ணறுங்குலை யன்ன-நலம்பெறு கையினெங் கண்புதைத் தோயே - பாய லின்றுணையாகிய பணைத்தோட் - டோகை மாட்சிய மடந்தை - நீயல துளளோவெ னெஞ்சமர்ந் தோளே." "தாழிரு டுமிய மின்னித் தண்ணென - வீழ்முறை யினிய சிதறி யூழிற் - கடிப்பிடு முரசின் முழங்கி யிடித்திடித்துப் - பெய்தினி வாழியோ பெருமவான் யாமே-செய்வினை முடித்த செம்ம லுள்ளமொ - டிவணின் மேவல மாகிக் குவளைக் - குறுந்தா ணுண்மலர் நாறு - நறுமென் கூந்தன் மெல்லணை யேமே." "இம்மைப பிறப்பிற் பிரியலே.மென்றேனக் - கண்ணிறை நீர்கொண் டனள்." "தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ - ரிந்நீர ராகுதி ரென்று." "எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடைச் - சிறிதுகண் படுப்பினுங் காண்குவென் மன்ற - நள்ளென் கங்கு னளிமனை நெடுநகர் - வேங்கை வென்ற சுணங்கிற்-றேம்பாய் கூந்தன் மாஅ யோளே." எனவும்வரும். இன்னும் அதனானே ஊடலைவிரும்பிக் கூறுவனவுங் கொள்க. "ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது - நீடுவ தன்றுகொ லென்று." "ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப - நீடுக மன்னோ விரா." எனவரும். இன்னுங் கற்பியற்கட் தலைவன்கூற்றாய் வேறுபடவருஞ் சானறோர்செய்யுட்களெல்லாம் இதனான் அமைத்துக்கொள்க. (௫)

௧௪௭. அவனறி வாற்ற வறியு மாகலி
னேற்றற் கண்ணு நிறுத்தற் கண்ணு

முரிமை கொடுத்த கிழவோன் பாங்கிற்
பெருமையிற் றிரியா வன்பின் கண்ணுங்
கிழவனை மகடூஉப் புலம்புபெரி தாகலி
னலமரல் பெருகிய காமத்து மிகுதியு
மின்பமு மிடும்பையு மாகிய விடத்துங்
கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ
நளியி னீக்கிய விளிவரு நிலையும்
புகன்ற வுள்ளமொடு புதுவோர் சாயற்
சுகன்ற கிழவனைப் புலம்புநனி காட்டி
யியன்ற நெஞ்சந் தலைப்பெயர்த் தருக்கி
யெதிர்பெய்து மறுத்த வீரத்து மருங்கினுந்
தங்கிய வொழுக்கத்துக் கிழவனை வணங்கி
யெங்கையர்க் குரையென விரத்தற் கண்ணுஞ்
செல்லாக் காலைச் செல்கென விடுத்தலுங்
காமக் கிழத்தி தன்மகத் தழீஇ
யேமுறு விளையாட் டிறுதிக் கண்ணுஞ்
சிறந்த செய்கை யவ்வழித் தோன்றி
யறம்புரி யுள்ளமொடு தன்வர வறியாமைப்
புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானுந்
தந்தைய ரொப்பர் மக்க ளென்பத
லந்தமில் சிறப்பின் மகப்பழித் தெருங்கலுங்
கொடியோர் கொடுமை சுடுமென வொடியாது
நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப்
பகுதியி னீங்கிய தகுதிக் கண்ணுங்
கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி
யடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்
காத லெங்கையர் காணி னன்றென
மாதர் சான்ற வகையின் கண்ணுந்
தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப் பரத்தை யுள்ளிய வழியுந்
தன்வயிற் சிறப்பினு மவன்வயிற் பிரிப்பினு

மின்னுத் தொல்கு ளெடுத்தற் கண்ணுங்
காமக் கிழத்தியர் நலம்பா ராட்டிய
தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணுங்
கொடுமை யொழுக்கந் தோழிக் குரியவை
வடுவறு சிறப்பிற் கற்பிற் றிரியாமைக்
காய்தலு முவத்தலும் பிரித்தலும் பெட்டலு
மாவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்
வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக்
கிழவோள் செப்பல் கிழவ தென்ப.

இது முறையானே தலைவிகூற்று நிகழும் இடங் கூறுகின்றது. (இ-ள்.) அவன் அறிவு ஆற்ற அறியும் ஆகலின் ஏற்றற்கண்ணும் நிறுத்தற்கண்ணும் உரிமைகொடுத்த கிழவோன் பாங்கிற் பெருமையிற் றிரியா அன்பின்கண்ணும்; அவன் அறிவு ஆற்ற அறியும் ஆகலின்= வேதத்தையுந் தருமநூலையுந் தலைவன் அறிந்த அறிவைத் தலைவி மிக அறியுமாதலின் : ஏற்றற்கண்ணும்=அந்தணர்முதலிய மூவருந் தத்தமக்குரிய வேள்விசெய்யுங்காற் றம்மனைவியர் பலருள்ளுந் தமக்கு ஒத்தாளை வேள்விக்கண் உரிமைவகையான் எனைமகளிரின் உயர்த்தல்செய்யுமிடத்தும்: நிறுத்தற்கண்ணும்=தத்தங் குலத்திற்கேற்ப நிறுத்துதலைச் செய்யுமிடத்தும் : உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில்=அவர்குலத்திற்கேற்ற உரிமைகளைக் கொடுத்த தலைவனிடத்து: பெருமையிற் றிரியா அன்பின்கண்ணும்=தத்தங் குலத்திற்கேற்ற பெருமையினின்றும் நீங்காத அன்புசெய்து ஒழுகுதற்கண்ணும்: அறியுமாகலின் அன்புசெய்து ஒழுகுமெனக் கூட்டுக. எனறது, அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும் வணிகர்க்கு இருவருந் தலைவியராகியவழித் தங்குலத்திற்கொண்டவரோ வேள்விககு உரியர் ஏனையோர் வேள்விக்கு உரியரன்றென்பதூஉம் அவர்க்குத் தங்குலங்கட்கு ஏற்றவகையின் உரிமைகொடுப்பனென்பதூஉம் அவர்களும் இது கருமமேசெய்தானென்று அன்பிற் றிரியாரென்பதூஉங் கூறியவாறு. உ-ம். "நின்ற சொல்லா னீடுதொ றினிய - ரென்று மென்றோள் பிரிபறி யலரே - தாமரைத் தண்டா தூதி மீமிசைச்-சாந்திற் கொண்ட தீந்தேன் போலப் - புரைய மன்ற புரையோர் கேண்மை - நீரின் றமையா வுலகம் போலத் - தம்மின் றமையா நந்நயந் தருளி - நறுநுதல் பசத்த லஞ்சிச - சிறுமை யுறுப செய்பறி யலரோ." இதனுட் தாமரைத்தாதையும் ஊதிச் சந்தனத்தாதையும் ஊதி வைத்த தேன்

போலப் புரைய என்றதனன் ஏற்றற்கட் தலைவிகூறினள். பிரிவறி யலொன்றதும் அன்னதோர் குணக்குறையிலொன்றதாம். பிரிவுணர்ந்து புலந்துரைப்பின் நாணழிவாம். "நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று - நீரினு மாரள வின்றே சாரற் - கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு - பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே." இது நிறுத்தற்கட் கூறியது.

கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின் அலமரல் பெருகிய காமத்து மிகுதியும் = அறமும் பொருளுஞ் செய்வதனாற் புறத்துறைதலிற் தலைவனைத் தலைவி நீங்குங்காலம் பெரிதாகலின் அதற்குச் சுழற்சிமிக்க வேட்கைமிகுதி நிகழ்ந்தவிடத்தும் : உ-ம். "காமந் தாங்குமதி யென்போர் தாமஃ - தறியுநர் கொல்லோ வனைமதுகையர்கொல் - யாமெங் காதலர்க் காணே மாயிற் - செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க் - கல்பொரு சிறுநுரை போல - மெல்ல மெல்ல வில்லா குதுமே." இது தெருட்டுந்தோழிக்குத் தலைவி காமத்துமிகுதிக்கட் கூறியது.

இன்பமும் இடும்பையும் ஆகிய இடத்தும்=அங்ஙனம் அலமரல்பெருகியவழித் தலைவனை எதிர்ப்பட்ட ஞான்று இன்பமுந் தனிப்பட்டஞான்று துன்பமும் உளவாகிய இடத்தும் : உ-ம். "வாரன் மென்றினைப் புலவுக்குரன் மாந்திச்-சாரல் வரைய கிளையுடன் குழீஇ-வளியெறி வயிரிற் கிளிவிளி பயிற்று - நளியிருஞ் சிலம்பி னன்மலை நாடன் - புணரிற் புணருமா ரெழிலே பிரியின் - மணிமிடை பொன்னின் மாமை சாயவென் - னணிநலஞ் சிதைக்குமார் பசலை யதனுலசுணங் கொல்பவர் கைபோ னன்று - மின்பமுந் துன்பமு முடைத்தே - தண்கமழ் நறுந்தார் விறலவன் மார்பே." "இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும் - புன்க ணுடைத்தாற் புணர்வு." எனவரும்.

ஙயந்தலை தோன்றிய காமர் நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ நளியினீக்கிய இளிவரு நிலையும் = யானைக்கன்று போலும் புதல்வன் பிறத்தலான் உளதாகிய விருப்பத்தையுடைய நெய்யணிக்கு விரும்பிய தலைவனை நெஞ்சைவருத்தித் தன்னைச் செறிதலினின்று நீக்கிய இளிவந்த நிலைமைக்கண்ணும்: தன்னை அவமதித்தானென்றது இளிவருநிலையென்றார். "கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல் - சுரும்புபசி களையும் பெரும்புன லூர - புதல்வனையீன்றவெம் முயங்க - லதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே." இது புதல்வற் பயந்தகாலத்துப் பிரிவுபற்றிக் கூறியது.

புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு அகன்ற கிழவனை = புதல்வனை விளையாட்டை விரும்பின உள்ளத்தோடே புதுவது புணர்ந்த பரத்தையர் தன்மாட்டு மனநெகிழ்ந்த மென்மையின்பொருட்டு அவர்க்கு அருள்செய்யப் பிரிந்து வந்தோனை: புலம்பு நனி காட்டி= தனது தனிமை மிகவும் அறிவித்து: இயன்ற நெஞ்சந் தலைப்பெயர்த்து அருக்கி=அவன்மேற் சென்ற நெஞ்சினைச் செல்லாமல் அவனிடத்தினின்றும் மீட்டு அருகப்பண்ணி; எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும்=பிறருள் ஒருத்தியைக் காணாளாயினுங் கண்டாள்போலத் தன்முன்னர்ப் பெய்துகொண்டு வாயின்மறுத்ததனாற் தோற்றிய நயனுடைமைக்கண்ணும்: எனவே, மறுப்பாள்போல நயந்தாளாயிற்று. கிழவனை மறுத்தவெனக் கூட்டுக. உ-ம். "கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பி-னிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கிற்-கழை கண் டன்ன தூம்புடைத் திரள்காற் - களிற்றுச் செவியன்ன பாசடை மருங்கிற்-கழுநிவந் தன்ன கொழுமுகை யிடையிடை-முறுவன முகத்திற் பன்மலர் தயங்கப - பூத்த பொய்கைப் புள்ளிமிழ் பழனத்து - வேப்புநனை யன்ன நெடுங்க ணீராஞெண் - டிரைதேர் வெண்குரு கஞ்சி யயல - வொலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளற்-றிதலையின் வரிப்ப வோடி விரைபுத - னீரமலி மண்ணளைச் செறியு மூர - மனைநடு வயலை மானிவர் கொழுங்கொடி - யரிமல ராம்பலோ டார்தழை தைஇ - விழவாடு மகளிரொடு தழுவணிப் பொலிந்து - மலரேருண்கண் மாணிழை முன்கைக் - குறுந்தொடி தொடக்கிய நெடுந்தொடர் விடுத்த - துடன்றனள் போலுநின் காதலி யெம்போற்-புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து - நெல்லுடை நெடுநகர் நின்னின்றுறையா - ளென்ன கடத்தளோ மற்றே தன்முகத் - தெழுதெழில் சிதைய வழுதன ளேங்கி - யடித்தென வுருத்த தித்திப் பல்லூழ் - நொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுப்-கூர்நுதி மழுங்கிய வெயிற்ற-ளூர்முழுது நுவலுநிற் காணிய சென்மே." எனவரும். எதிர்பெய்து மறுத்த ஈரமெனவே எதிர்பெய்யாது மறுத்த ஈரமுங்கொள்க. "கூர்முனை முள்ளிக் குவிகுலைக் கழன்ற-மீன்முள் ளன்ன வெண்கான் மாமலர் - பொய்தன் மகளிர் விழவணிக் கூட்டு - மவ்வய னண்ணிய வளங்கெ ழூரனைப் - புலத்தல் கூடுமோ தோழி யல்கற் - பெருங்கதவு பொருத யானை மருப்பி - னிரும்புசெய் தொடியி னேர வாங்கி - மாக்க ணடைய மார்பகம் பொருந்தி - முயங்கல் வீடா விவையென மயங்கி - யானோடு மென்னவு மொல்லார் தாமற்றிவைபா ராட்டிய பருவமு முளவே - யினியே, புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத் - திதலை யணிந்த தேங்கொண் மென்முலை-நறு

ஞ்சாந்து புலர்ந்த கேழ்கிள ரகலம் - வீங்க முயங்கல் யாம்வேண் டினமே - தீம்பால் படுதல் தாமஞ் சினரோ-யாயிடைக், கவவுக்கை ஞெகிழ்ந்தமை நோக்க மதவுநடைச் - செவிலி கையெனப் புதல்வனை நோக்கி - நல்லோர்க் கொத்தனி ரிஃதோர் செல்வர்க் - கொத்தனெம் யாமென மெல்லவென் மகன்வயிற் - பெயர்தந் தேனே யதுகண் டியாமுங் - காதலெ மவற்கெனச் சாஅய்ச் சிறுபுறங் - கவையினன் ஞக வதற்கொண் டிருபெயற் - றண்டுளிக் கேற்ற பலவுழு செஞ் செய் - மண்போன் ஞெகிழ்ந்தவா கலுழ்ந்தே - னெஞ்சறை போகிய வறிவி னேற்கே." இதனுள் ஒருத்தியை வரைந்துகூறாது நல்லோரைப் பொதுவாகக் கூறியவாறும் வேண்டினமெனப் புலம்புகாட்டிக் கலுழ்ந்ததென ஈரங்கூறியவாறுங் காண்க.

தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி எங்கையர்க்கு உரை யென இரத்தற்கண்ணும்—பரத்தையர்மாட்டுத் தங்கிய செவ்வியை மறையாத ஒழுக்கத்தோடே வந்த தலைவனை நீகூறுகின்ற பணிந்தமொழிகளை எங்கையர்க்கு வணங்கிக்கூறெனை இரந்துகோடற்கண்ணும்: உ-ம். "அகன்றுறை யணிபெற" என்னும் மருதக்கலியுள் "நோதக்கா யெனநின்னை நொந்தீவா ரில்வழித் - தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன் - ஞெகிழ்தொடி யிளையவ ரிடைமுலைத் தாதுசோர்ந் - திதழ்வனப் பிழந்தநின் கண்ணிவந் துரையாக்கால்" என்பனகூறி, "மண்டுநீ ரார மறிகடல் போலுநின் - றண்டாப் பரததை தலைக்கொள நாளும் - புலத்தகைப் பெண்டிரைத் தேற்றிமற் றியாமேற் - றேலாமோ நின்பொய் மருண்டு." எனவும் எங்கையரைத் தேற்றெனக் கூறியவாறுகாண்க.

செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும்—தலைவன் செல்லானென்பது இடமுங் காலமும்பற்றி அறிந்தகாலத்து ஊடலுள்ளத்தாற் கூடப்பெறுதாள் செல்கெனக்கூறி விடுத்து ஆற்றுதற்கண்ணும்: "புள்ளுமி ழகல்வயல்" என்னும் மருதக்கலியுள் "பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி - நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி - யாங்கே யவர்வயிற் சென்றி யணிசிதைப்பா - யீங்கெம் புதல்வனைத் தந்து." எனவும், "சேற்று நிலைஇய செங்கட் காரா - னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து - கூர்முள் வேலி கோட்டினீக்கி - நீர்முது பழனத்து மீனுட னிரியவந் - தூம்பு வள்ளை மயக்கித் தாமரை - வண்டூது பனிமல ராரு மூர - யாரை யோநிற் புலக்கேம் வாருற் - றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற் - பிறருமொருத்தியை யெம்மனைத் தந்து - வதுவை யயர்ந்தனை யென்ப

வஃதியாங் - கூறேம் வாழிய ரொந்தை செறுநர் - களிறுடை யருஞ் சமந் ததைய நூறு-மொளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன்- பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெம் - மொண்டொடி ஞெகிழினு ஞெகிழ்க - சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே." எனவும் வரும்.

காமக்கிழத்தி தன்மகத் தழீஇ ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்—மனையறத்திற்கு உரியளாக வரைந்த காமக்கிழத்தி தலைவி புதல்வன் மனைப்புறத்து விளையாடுகின்றவனைத் தழுவிக்கொண்டு தான் ஏமுறுதற்குக காரணமான விளையாட்டின்முடிவின்கண்ணும்: அவள் எம்மைப் பாதுகாப்பீரோவென வினயவழி அவனும் அதற்கு உடன்பட்டான்போலக் கூறுவன உளவாதலின் ஏமுறுவிளையாட்டென்றார். இறுதியென்றார் விளையாட்டு முடியுந்துணையுந் தான் மறைய நின்று பின்னர்க்கூறுதலின். உ-ம். "நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத் - தாதி னல்லி யயலிதழ் புரையு - மாசி லங்கை மணிமருள் செவ்வாய் - நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல் - யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்-தேர்வழங்கு தெருவிற் றமியோர்க் கண்ட - கூரெயிற் றரிவை குறுகி யாவருங் - காணுந ரின்மையிற் சேர்த்தனள் பேணிப் - பொலங்கலஞ் சுமந்த பூண்டாங் கிளமுலை - வருக மாளவெ னுயிரெனப் பெரிதுவந்து - கொண்டனணின்றோட் கண்டுநிலைஇச் செல்லெனை - மாசில் குறுமக ளெவன்பேதுற்றனை - நீயுந் தாயை யிவற்கென யான்றற்-கரைய வந்து விரைஇனள் கவைஇக் - களவுடன் படுநரிற் கவிழ்ந்து நிலங்கிளையா - நாணி நின்றோ ணிலைகண் டியானும் - பேணினெ னல்லெனோ மகிழ்நவானத் - தணங்கருங் கடவு ளன்னோணின் - மகன்றா யாதல் புரைவதா லெனவே." எனவரும்.

சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி அறம்புரி உள்ளமொடு தன்வரவு அறியாமைப் புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டு இடத்தானும்; சிறந்த செய்கை அவ்வழித்தோன்றி—காமக்கிழத்தியது ஏமுறும் விளையாட்டுப்போலாது தலைவி தன்புதல்வனைத் தழீஇ விளையாட்டையுடைய இல்லிடத்தே தலைவன் தோன்றி: அறம்புரி உள்ளமொடு தன்வரவு அறியாமைப் புறஞ்செய்து—அவ்விளையாட்டு மகிழ்ச்சியாகிய மனையறத்தினைக் காணவிரும்பிய நெஞ்சோடே தன்வரவினைத் தலைவி அறியாமல் அவள்பின்னே நிற்றலைச்செய்து: பெயர்தல் வேண்டு இடத்தானும் — தலைவியது துனியைப் போக்குதல் வேண்டிய இடத்தும்: தன்வரவறியாமை என்றதற்குத் தன்னைக் கண்டாற் தலைவியுழை நின்றார் தமக்குச்செய்யும் ஆசாரங்களையும்

அவர்செய்யாமற் கைகவித்துத் தன்வரவு அறியாமல் நிற்டனென்று கொள்க. உ-ம். "மையற விளங்கிய மணிமரு ளவ்வாய்தன் - மெய்பெறு மழலையின் விளங்குபூ ணனைத்தரப் - பொலம்பிறையுட் டாழ்ந்த புனைவினை யுருள்கல - னலம்பெறு கமழ்சென்னி நகையொடு துயல்வர - வுருவெஞ்சா திடைகாட்டு முடைசழ லந்துகி-லரிபொலி கிண்கிணி யார்ப்போவா தடிதடப்பப்-பாலோ டலர்ந்த முலைமறந்து முற்றத்துக - கால்வறேர் கையி னியக்கி நடைபயிற்று - வாலமர் செல்வ னணிசால் பெருவிறல் - போல வருமெ னுயிர்; பெரும, விருந்தொடு கைதூவா வெமமையு முள்ளாய் - பெருந்தெருவிற் கொண்டாடி ஞாயர் பயிற்றத - திருநதுபு நீகற்ற சொறகள்யாங் கேட்ப - வருந்தோவா நெஞ்சிற் கமிழ்தயின் றற்றுப்-பெருந்தகாய் கூறு சில; எல்லிழாய், சேய்நின்று தாநகொணாநத பாணன் சிதைந்தாங்கே - வாயோடி யேனுதிப பாடியெ மென்றற்று - நோய்நாந் தணிக்கு மருந்தெனப் பாராட்ட - வோவா தடுததடுத்தத தாவென் பவன்மாண - வேய்மென்றோள் வெய்த்திறஞ் சேர்த்தலு மற்றிவன் - வாயுள்ளிற் போகா னரோ; உள்ளி யுழையே யொருங்கு படைவிடக் - கள்வர் படர்தந் ததுபோலத் தாமெம்மை - யெள்ளுமார் வந்தாரோ யீங்கு; ஏதப்பா டெளிப் புரிசை வியலுள்ளோர் * * * * * * படர்தக்க தாம்." எனவரும்.

தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனுல் அந்தமில் சிறப்பின் மகப் பழித்து நெருங்கலும் = அஙஙனம விளையாடுகின்ற காலத்து மக்கள் தந்தையரை ஒப்பரென்னும் வேதவிதிபற்றி முடிவில்லாத சிறப்பினையுடைய மகனைப பழித்து வெகுளுதற்கண்ணும்: பகனுக்கும் இதுபடுமென்று கருதிக் கூறலிற் தலைவனைப் பழித்தெனுது மகப்பழித்தென்றுர். "மைபடுசென்னி" என்னும் மருதக்கலியுள், "வனபபெலா நுந்தையை யொப்பினு நுநதை - நிலைப்பாலுளொத்த குறியென்வாய்க் கேட்டொத்தி - கன்றிய தெவ்வாக் கடந்து களங்கொள்ளும் - வென்றிமாட் டொத்தி பெருமமற் றுவாதி - யொன்றினேம் யாமென் றுணர்ந்தாரை நுந்தைபோன் மென்றோ ணெகிழ விடல்." என அவனைக் கொண்டு விளையாடிய வழி அவன் தலைவனமேல் வீழ்தலிற் "தந்தை வியன்மார்பிற் பாய்ந்தா னறனிலா - வன்பிலி பெற்ற மகன்" எனத் தன் திறத்து அன்பிலனென நெருஙகிக் கூறியவாறு காண்க.

கொடியோர் கொடுமை சுடுமென ஒடியாது நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப் பகுதியின் நீங்கிய தகுதிக்கண்

ணும்; கொடியோர் நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇ= கொடியோனென்றது பாணர் கூத்தர் விறலியர் அந்தணர்முதலியோரை; கொடியோராய்த் தலைவன்புகழைக் கூறுதற்கு விரும்பினோர் பரத்தையர்க்கு வாயிலாய் வந்துகூறிய சொல்லோடே தானும் அவரிடத்தே சேர்ந்து: பகுதியினீங்கிய கொடுமை=காவற்பாங்கிற் பக்கமும் ஆங்கோர்பக்கமுமாகிய பகுதி காத்தலினின்று நீங்கிய பரத்தையரைக் கூடியகொடுமை: சுடுமென ஒடியாது தகுதிக்கணும்=நெஞ்சைச் சுடுமென்று கூறி அவன் அவற்றைக் கூறுதலைத் தவிராமற் கூறுதற்குத் தக்க தகுதியிடத்தும்: இன் நீக்கப்பொருட்டு; பகுதி கூறுபாடு, ஆகுபெயர்; பகுதிகளைக் காத்தற்குப் பிரிவேனெனக் கூறிப் பிரிந்து பாணர்முதலியோர் புதிதிற் கூட்டிய பரத்தையரிடத்தே ஒழுகிய மெய்வேறுபாட்டோடு வந்தானைக் கண்டு அப்பகுதிகளைப் பரத்தையராகக் கூறுவாளாயிற்று. அது "இணைபட நிவந்த" என்னும் மருதக்கலியுள், "கண்ணிநீ கடிகொண்டார்க் கனைதோறும் யாமழப் - பண்ணினாற் களிப்பிக்கும் பாணன் காட் டென்றாளே - பேணானென் றுடன்றவ ருகிர்செய்த வடுவினான் - மேனாணின் றோள்சேர்ந்தார் நகைசேர்ந்த விதழினை; நாடிநின் றூதாடித் துறைசெல்லா ளூரவ - ராடைகொண் டொலிக்குநின் புலத்திகாட் டென்றாளோ - கூடியார்ப புனலாடப் புனையாய மார்பிணி - னூடியா ரெறிதர வொளிவிட்ட வாக்கினை; வெறிதுநின் புகழினை வேண்டாரி னெடுத்தேத்து - மறிவுடை யந்தண னவனைக் காட் டென்றாளே - களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட வுருவின் மேற் - குறிபெற்றார் குரற்கூந்தற் கோடுளர்ந்த துகளினை." என்பவற்றாற் பாணர்முதலியோர் வாயிலாயவாறு காண்க. "ஏந்தெழின் மார்ப வெதிரல்லா வென்வாய்சசொற் - பாய்ந்தாய்ந்த தானை பரிந்தானா மைந்தினை - சாந்தழி வேரை சுவற்றாழ்ந்த கண்ணியை - யாங்குச்சென் றீங்குவந் தீத்தக்காய் கேளினி; எய்தி, எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய் - குதிரை வழங்கி வருவ தறிந்தேன் - குதிரைதான், பால்பிரியா வைங்கூந்தற் பன்மயிர்க் கொய்சுவன் - மேல்விரித் தியாத்த சிகழிகைச் செவ்வலை - நீல மணிக்கடிகை வல்லிகை யாப்பின்கீழ் - ஞாலிய மென்காதிற் புல்லிசைச் சாமரை- மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற - வுத்தி யொரு காழ்நூ லுறுத்திரியத் திண்பிடி-நேர்மணிநேர் முக்காழ பல்பல கண்டிகைத்- தார்மணி பூண்ட தமனிய மேகலை - நூபுரப் புட்டி லடியொ டமைத்தியாத்த - வார்பொலங் கிண்கிணி யார்ப்ப வியற்றிநீ - காதலித் தூர்ந்தநின் காமக் குதிரையை - யாய்சுதை மாடத் தணிநிலா

முற்றத்து - ளாதிக் கொளீஇ வகையிலே யாகுவை - வாதுவன் வாழிய நீ; சேகா, கதிர்விரி வைகலிற் கைவாரூஉக் கொண்ட - மதுரைப் பெருமுற்றம் போலநின் மெய்க்கட் - குதிரையோ வீறி யது; கூருகிர் மாண்ட குளம்பி னதுவன்றே - கோரமே வாழிகுதிரை; வெதிருழக்கு நாழியாற் சேதிகைக் குத்திக் - குதிரை யுடலணி போலநின் மெய்க்கட் - குதிரையோ கவ்வி யது; சித்தை,பயனின்றி யீங்குக் கடித்தது நன்றே - வியமமே வாழி குதிரை மிக நன்!- றினியறிந்தே னின்றுநீ யூர்ந்த குதிரை - பெருமணம் பண்ணி யறத்தினிற் கொண்ட - பருமக் குதிரையோ வன்று; பெருமநின், னேதில் பெரும்பாணன் றூதாட வாங்கேயோர் - வாதத்தால் வந்த வளிக்குதிரை யாதி - யுருவழிகரு மக்குதிரை யூரனீ யூரிற் - பரத்தை பரியாக வாதுவனு மற்றக் - கரத்திரியாய் தேறிய செல்.'' இதனுட் பாணன் தூதாட வாதத்தால் வந்த குதிரையென்பதனுல் அவன் கூட்டிய புதியபரத்தையர் என்பதூஉம் அவன் பகுதியினின்று நீங்கியவாறுங் குதிரையோவீறியதென்பது முதலியவற்றுற் கொடுமைநெஞ்சைச் சுடுகின்றவாறும் அதனை நீக்கிய பரத்தையரைச் குதிரையாகக் கூறித் தான் அதற்குத் தக்குநின்றவாறுங் காண்க.

கடவுட்பாட்டு ஆங்கோர் பக்கமும் யானைப்பாட்டுக் காவற் பாங்கின்பக்கமுமாம்.

கொடுமை ஒழுக்கங் கோடல் வேண்டி அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக் காதல் எங்கையர் காணின் நன்றென மாதர் சான்ற வகையின்கண்ணும்; கொடுமை ஒழுக்கங் கோடல்வேண்டி = அங்ஙனம் பகுதியினீங்கிப் பரத்தையர்மாட்டு ஒழுகிக் கொடுமை செய்த ஒழுக்கத்தைத் தலைவி பொறுத்தலையேண்டி : அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கி = தன் அடிமேல் வீழ்ந்து வணங்கிய தலைவனை அதனின்மீது துனிமிக்குக் கழறி : காதல் எங்கையர் காணின் நன்றென = நின்மாட்டுக் காதலையுடைய எங்கையர் காணின் இவை நன்றெனக்கொள்வரெனக் கூறி: மாதர் சான்றவகையின் கண்ணும் = காதல் அமைந்து மாறிய வேறுபாட்டின்கண்ணும்: பொருதாளைக் கொள்ளாரென்பவாகலிற் கோடல் பொறுத்தலாயிற்று. காதலெங், கையர் மாதர்சான்ற என்பனவற்றுற் துனிகூறினுர். எனவே, யாங் கண்டதனுற் பயனின்றென்ருர். ''நில்லாங்கு நில்'' என்னும் பூழ்ப் பாட்டினுள், ''மெய்யைப் பொய்யென்று விலக்கிய கைபோன் - றறிகல்லாய் போறி காணீ நல்லாய் - பொய்யெல்லா மேற்றித் தவறு தலைப்பெய்து - கையொடு கண்டாய் பிழைத்தே னருளினி - யருளு

கம் யாமேயா ரெல்லா தெருள - வளித்துநீ பண்ணிய பூழெல்லா மின்னும் - விளித்து நின்பாணனோ டாடி யளித்தி - விடலைநீ நீத்த லி ஞெய்பெரி தேய்க்கு - நடலைப்பட் டெல்லாநின் பூழ்," இதனுள் அருளினியெனா அடிமேல்வீழ்ந்தவாறும் அருளுகம்யாமே யாரெனக் காதல் அமைந்தவாறும் விளித்தளித்தியெனா இப்பணிவை நின்பெ ண்டிர் கொள்வரெனவுங் கூறியவாறுணர்க.

"நினக்கே யன்றஃதெமக்குமா ரினிதே - நின்மார்பு நயந்த நன்னுத லரிவை - வேண்டிய குறிப்பினை யாகி - யீண்டுநீ யருளா தாண்டுறை தல்லே." இதுவும் அது.

தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை மாயப் பரத்தை உள் ளியவழியும் = பரத்தையர் கருதி அணிந்த நன்றாகிய அணிகளையு டைய புதல்வனை மாயப் பரத்தைமையைக் குறித்தவிடத்தும்: அவ ருட் துனியாலே வருந்திய பரத்தையர் தம்வருத்தத்தினை உணர்த் தியும் தலைநின்றொழுகும் பரததையர் தஞ்சிறப்பு உணர்த்தியும் அணிவரென்றற்குக் கண்ணியவென்றார். பரத்தையர்சேரி சென்று அணியணிந்ததற்கு வெகுண்டுகூறலிற் பொய்யாகிய பரத்தையென் றார். எனவே தலைவன்பரத்தைமை கருதினளாயிற்று. உ - ம். "உறு வளி தூக்கு முயர்சினை மாவின் - னறுவடி யாரினிற் றவைபோ லழி யக் - கரந்தியா மார்க்கவுங் கைநில்லா வீங்கிச் - சுரந்தவென் மென் முலைப் பால்பழு தாகநீ - நல்வாயிற் போத்தந்த பொழுதினா னெ ல்லா - கடவுட் கடிநகர் தோறு மிவனை - வலங்கொளீஇ வாவெனச் சென்றாய் விலங்கினை - யீர மிலாத விவன்றந்தை பெண்டிருள் - யா ரிற் றவிர்ந்தனை கூறு; நீருள், அடைமறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட - குடைநீழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ - விவன் மன்ற யானேவ வுள்ளங்கொண் டுள்ளா - மகனல்லான் பெற்ற மக னென் றகனகர்வா - யில்வரை யிறந்து போத்தந்து தாயர் - தெரு விற் றவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர் - தத்தங் கலங்களுட் கை யுறை யென்றிவர்க் - கொத்தவை யாராய்ந் தணிந்தார் பிறன்பெண் டி - ரீத்தவை கொள்வானா மிஃதொத்தன் சீத்தை - [illegible]றுதக் கான் மன்ற பெரிது; சிறுபட்டி, ஏதிலார் கையெம்மை யெள்ளுபு நீதொட்ட - மோதிரம் யாவோயாங் காண்கு; அவற்றுள், நறாவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்பச் - சுறாவே றெழுதிய மோதிரந் தொ ட்டாள் - குறியறிந்தேன் காமன் கொடியெழுதி யென்றுஞ் - செ றியாப் பரத்தை யிவன்றந்தை மார்பிற் - பொறியொற்றிக் கொண் டாள்வ லென்பது தன்னை - யறீஇய செய்த வினை; அன்னையோ,

மூந்தைய கண்டு மெழுகல்லா தென்முன்னர் - வெந்தபுண் வேலெறிந் தற்றா லிஃதொன்று - தந்தை யிறைத்தொடீஇ மற்றிவன் றன்கைக்கட் - டந்தார்யா ரெல்லா விது; இஃதொன்று, என்னொத்துக் காண்க பிறரு மிவற்கென்னுந் - தன்னலம் பாடு விதந்தாளா நின்னே - யிதுதொடீக் கின்றவா யார்; அஞ்சாதி, நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த - பூவெழி லுண்க ணவளுந் தவறிலள் - வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார் - மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா - டான்யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன் - யானே தவறுடை யேன்." எனவரும்.

தன்வயிற் சிறைப்பினும்=தலைவனிற் நான் புதல்வற்குச் சிறந்தாளாகி அத்தலைவன்மாட்டும் அவன் காதலித்த பரத்தையர்மாட்டுஞ்செல்லாமற் புதல்வனைத் தன்பாற் சிறைசெய்தற்கண்ணும் : உ-ம். "புள்ளிமி ழகல்வயல்" என்னும் மருதக்கலியுள், "அணியொடு வந்தீங்கெம் புதல்வனைக் கொள்ளாதி - மணிபுரை செவ்வாய்நின் மார்பகல நணைப்பவாற் - றேய்ந்தன ரறிகுவன் யானெனக் கமழுநின் - சாந்தினுற் குறிகொண்டாள் சாய்குவ ளல்லளோ; புல்லலெம் புதல்வனைப் புகலக னின்மார்பிற் - பல்காழ்முத் தணியாரம் பற்றினன் பரிவானுன் - மாணிழை மடநல்லார் முயக்கத்தை நின்மார்பிற் - பூணினுற் குறிகொண்டாள் புலக்குவ ளல்லளோ; கண்டேயெம் புதல்வனைக் கொள்ளாதி நின்சென்னி - வண்டிமிர் வகையிணர் வாங்கினள் பரிவாறு - ணண்ணியார்க் காட்டுவ திதுவெனக் கமழுநின் - கண்ணியாற் குறிகொண்டாள் காய்குவ ளல்லளோ; எனவாங்கு, பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி - நீங்கா யிகவாய் நெடுங்கடை நில்லாதி - யாங்கே யவர்வாயிற் சென்றிவ் வணிசிதைப்பா - யீங்கெம் புதல்வனைத் தந்து." இது தலைவனிடத்தி னின்றும் புதல்வனைச் சிறைத்தது. "ஞாலம் வறந்தீர" என்னும் மருதக்கலியுள், "அவட்கினி தாகி விடுத்தனன் போகித் - தலைக்கொண்டு நம்மோடு காயுமற் றீதோர் - புலத்தகைப் புத்தேளில் புக்கானலைக்கொரு - கோளு நினைகவள்யா ராம்; எல்லா, வருந்தியா நோய்கூர நுந்தையை யென்றும் - பருந்தெறிந தற்றாகக் கொள்ளுங்கொண் டாங்கே - தொடியு முகிரும் படையாக நுந்தை - கடிகமழ் மார்பிற் சிறுகண்ணு முட்காள் - வடுவுங் குறித்தாங்கே செய்யும் விடுவினி - யன்ன பிறவும் பெருமா னவள்வயிற் - றுன்னுதலோம்பித் துறவதின் முன்னினி - யையமி லாதவ ரில்லொழிய வெம்போலக் - கையா றுடையவ ரில்லல்லாற் செல்ல - லமைந்த தினி,

நின் ஞெழில்." இது காதற்பரத்தையர்பாற் புதல்வன் செல்லாமற் சிறைத்தது.

அவன்வயிற் பிரிப்பினும்—தன்னொடு மைந்தனிடை உறவு நீக்கி அவனைத் தலைவனோடு சார்த்துதற்கண்ணும்: என்றது, எமக் கிவன் யாரென்று அயன்மைகூறுதலாம். "மைபடுசென்னி" என்னும் மருதககலியுள், "மறைநின்று, தாமன்ற வந்தீத் தனராயி ஞயி ழாய் - தாவாத வெற்குத் தவறுண்டோ காவாதீங் - கித்தை யிவனை யாங் கோடற்குச் சீத்தையாங் - கன்றி யதனைக் கடியவுங் கைந்நீ விக் - குன்ற விறுவளைமேற் கோண்மா விவர்ந்தாங்குத் - தந்தை வியன்மார்பிற் பாய்ந்தா னறனிலா - வன்பிலி பெற்ற மகன்." என் புழி "அறனிலா வன்பிலி பெற்றமகன்" எனவும், "நின்மகன் றாயா தல் புரைவதா லெனவே" என்புழி "நின்மகன்" எனவும் பிரித்த வாறு காண்க.

இன்னாத் தொல் சூள் எடுத்தற்கண்ணும் — இன்னுங்குப் பயக்குஞ் சூளுறவினைத் தலைவன் சூளுறுவலெனக் கூறுமிடத்தும்: தலைவன் வந்தகுற்றம் வழிகெட ஒழுகிக, களவிற் சூளுறவான் வந்த ஏதம் நீக்கி, இக்காலத்துக் கடவுளரையும் புதல்வனையுஞ் சூளு றுதலின் இன்னாதசூளென்றார். அது களவுபோலச் சூளுறுதலிற் தொல்சூளென்றார். "ஒரூஉக்கொடியியனல்லார்" என்னும் மருதக் கலியுள், "வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை - தேற் றக்கண் டீவாய் தெளிக்கினித் தேற்றேம்யாம் - நேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார் - தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர் மயங்கி - நீயுறும் பொய்ச்சூ ளணங்காகின் மற்றினி - யார்மேல் விளியுமோ கூறு." எனத் தலைவி எம்மேலே இப்பொய்ச்சூளால் வரு ங் கேடு வருமென மறுத்தவாறு காண்க.

காமக் கிழத்தியர் நலம் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின்கண்ணும் — நலம்பாராட்டிய காமக்கிழத்தியர் தலைவி தன்னிற் சிறந்தாராகத் தன்னான் நலம்பாராட்டப்பட்ட இற்பரத் தையர்மேற் றீமையுறுவரென முடித்துக்கூறும் பொருளின்கண் ணும்: உ-ம். "மடவ ளம்மநீ யினிககொண் டோளே - தன்னொடு நிகரா வென்னொடு நிகரிப் - பெருநலந் தருக்கு மென்ப விரிமல ர்த் - தாதுண் வண்டினும் பலர்நீ - யோதி யொண்ணுதல் பசப்பித் தோரே." இதனுள் இப்பொழுது கிடையாதது கிடைத்ததாக வரை ந்துகொண்ட பரத்தை தன்னொடு இளமைச்செவ்வி ஒவ்வா என்னை

யுந் தன்னொடொப்பித்துத் தன் பெரியநலத்தாலே மாறுபடுமென்ப வென அவள் நலத்தைப் பாராட்டியவாறும், நீ பசப்பித்தோர் வண்டு தாது உண்டமலரினும் பலவெனத் தீமையின் முடித்தவாறுங் காண்க. "அணிற்பல்லன்ன" என்னும் அகப்பாட்டுக் கற்பாகலின் இதன்பாற்படும்.

கொடுமையொழுக்கம் தோழிக்கு உரியவை வடுவறு சிறப்பிற் கற்பிற் றிரியாமைக் காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும் ஆ வயின் வருஉம் பல் வேறு நிலையினும்; கொடுமை ஒழுக்கம் தோழிக்கு உரியவை=பரத்தையிற்பிரிவும் ஏனைப்பிரிவுகளும் ஆகித் தலைவன்கண் நிகழுங் கொடுமையொழுக்கத்திற் றோழி கூறுதற்கு உரியவெனை மேற் கூறுகின்றவற்றைக் கேட்டவழி : வடுவறு சிறப்பிற் கற்பிற் றிரியாமை=எஞ்ஞான்றுங் குற்றமின்றி வருகின்ற பிறப்புமுதலிய சிறப்பிடத்துங் கற்பிடத்துந் திரிவுபடாதபடி: காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும் நிலையினும்=தோழிகூற்றினை வெகுடலும் மகிழ்தலும் அவளைப் பிரித்தலும் பின்னும் அவள் கூற்றினைக் கேட்டற்கு விரும்புதலுமாகிய நிலையின்கண்ணும் : ஆ வயின் வருஉம் நிலையினும் = அத்தோழியிடத்துத் தலைவனைக் காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலுமாய் வரும் நிலையின் கண்ணும் : பல வேறு நிலையினும் = இக்கூறியவாறன்றிப் பிறவாற்றாய்ப் பலவேறுபட்டு வரும் நிலையின்கண்ணும் : அவள்வயினென்றது ஆவயினென்றார், தோழியும் பொருளென்பதுபற்றி. "இதுமற் றெவனோ தோழி துனியிடை - யின்ன ரென்னு மின்னாக் கிளவி- யிருமருப் பெருமை யின்றணிக் காரா - வுழவன் யாத்த குழவியி னகலாது - பாற்பெய் பைம்பயி ராரு மூரன் - திருமலைப் பல் கடம் பூண்ட - பெருமுது பெண்டி ராகிய நமக்கே." இது தோழி இன்னாக்கிளவி கூறியதனை இதுபொழுதுகூறிப் பயந்ததென்னெனக் காய்ந்து கூறினாள். "பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட் - டுடும்படைந் தன்ன நெடும்பொரி விளவி - ஞெட்டொழி பந்திக் கோட்டுமூக் கிறும்பு - கம்பலத் தன்ன பைம்பயிர்த் தாவும் - வெள்ளில் வல்சி வேற்றுநாட் டாரிடைச் - சேறு நாமெனச் சொல்லச் சேயிழை - நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே - செயல்படு மனத்தர் சேய்பொருட் - ககல்வ ராடவ ரதுவதன் பண்பே." இது செய்தனையெனத் தலைவி உவந்து கூறியது. "வண்டுபடத் ததைந்த கொடியிண ரிடையிடு - பொன்செய் புனையிழை கட்டிய மகளிர் - கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றைக் - கானங் கா

ரெனக் கூறினும் - யானோ தேறேனவர் பொய்வழங் கலரே.'' கான ங் காரெனக் கூறவும் வாராரென்றவழி அது கூறினும் யானோதே றேனெனப் பிரிநிலை ஓகாரத்தாற் பிரிந்தது. "யாங்கறிந் தனர்கொ ரோழி பாம்பி - னுரிநிமிர்ந் தன்ன வுருப்பவி ரமையத் - திரைவேட் டெழுந்த சேவ லுள்ளிப் - பொறிமயி ரொருத்திற் குறுநடைப் பே டை - பொரிக்காற் கள்ளி விரிகாய்ங் கவட்டுத் - தயங்க விருந்து புலம்பக் கூஉ - மருஞ்சுர வைப்பிற் கானம் - பிரிந்துசே ணுறைதல் வல்லு வோரே.'' இது வல்லுவோர் என்னும் பெயர்கூறித் தோழி கொடுமை கூறியவழி அவனையே பிரிதல்வன்மை யாங்கறிந்தனரென த் தலைவி வினவுதலின் அது பின்னுங் கேட்டற்கு அவாவியதாம்.

இனித் தோழியிடத்துத் தலைவனைக் காய்தல் முதலியன வரு மாறு;— "நன்னலந் தொலைந்து நலமிகச் சாஅ - யின்னுயிர் கழியி னு முரைய லவர்நமக் - கன்னையு மத்தரு மலரோ தோழி - புலவிய தெவனோ வன்பிலங் கடையே.'' இது காய்தல். "வெள்ளாங் குரு கின் பிள்ளை சேத்தெனக் -காணிய சென்ற மடநடை நாரை-பதைப் பத் ததைந்த நெய்தல் கழிய -வோதமொடு பெயருந் துறை வற்குப் - பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே.'' இஃது பல் லாற்றானும் வாயில் நேராத தலைவியை மகப்பேற்றிற்கு உரியகாலங் கழிய ஒழுகாநின்றாயென நெருங்கிய தோழிக்கு யான் களவின் கண் மகப்பெற்றேனெனக் காய்ந்து கூறியது. "கொடிப்பூ வேழந் தீண்டி யயல - படுக்கொண் மரத்து வண்டளிர் நுங்கு - மணித் துறை யூரன் மார்பி - னினித்துயில் செய்யு மின்சா யற்றே.'' இது உவத்தல். "புதன்மிசை நுடங்கு வேழ வெண்பூ - விசும்பாடு குரு கிற் றோன்று மூரன் - புதுவோர் மேவல னாகலின் - வறிதா கின்றெ ன் மடங்கெழு நெஞ்சே.'' இது பிரித்தல். "நாமவர் திருந்தெயி றுண்ணவு மவர்நம் - மேந்துமுலை யாகத்துச் சார்ந்துகண் படுப்ப வும் - கண்சுடு பரத்தையின் வந்தோர்க் கண்டு - மூடுதல் பெருந்திரு வுறுகெனப்-பெறலரு மையின் முயங்கி யோனே.'' இது பெட்டது. "நீரார்செறுவின்'' என்னும் மருதக்கலியும் அது.

இனிப் பலவேறு நிலையாவன, தோழி பிரிவுணர்த்தியவழிச் செலவழுங்கக் கூறுவனவற்றின் வேறுபாடுகளும், பிரிந்துழி வழியரு மை பிறர்கூறக்கேட்டுக் கூறுவனவுந, தலைவனது செலவுக்குறிப்பு அறிந்துதானே கூறுவனவுந்,தூதுவிடக்கருதிக் கூறுவனவும், நெஞ்சி னையும் பாணனையும் தூதுவிட்டுக் கூறுவனவும், வழியிடத்துப் புட்க

ஊ நேர்ந்து கூறுவனவும், பிரிவிடையாற்றாளெனக் கவன்றதோழிக்கு ஆற்றுவலெனக் கூறுவனவும், அவன்வரவுதோழி கூறியவழி விரும்பிக் கூறுவனவுங், கூறிய பருவத்தின் வாராது பின்னர் வந்தவனோடு கூடியிருந்து முன்னர்த் தன்னை வருத்திய குழலை மாலையிற் கேட்டுத் தோழிக்குக் கூறுதலுந், தலைவன் தவறிலனெனக் கூறுவனவும், புதல்வனை நீங்காதொழுகிய தலைவன் நீங்கியவழிக் கூறுவனவுங், காமஞ்சாலாவிளமையோளைக் களவின்கண் மணந்தமை அறிந்தேனெனக் கூறுவனவும், இவற்றின் வேறுபடவருவன பிறவுமாம். "அருளு மன்பு நீக்கித் துணைதுறந்து - பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயின் - னுரவோ ருரவோ ராக - மடவ மாக மடந்தை நாமே." இது செலவழுங்கக் கூறியது. "வெந்தெறற் கடுவளி பொங்கர்ப் போந்தென - நெற்றுவிளை யுழிஞ்சில் வற்ற லார்க்கு - மலையிடை யருஞ்சுர மென்பநம் - முலையிடை முனிநர் சென்ற வாறே." "எறும்பி யளையிற்றிவ் வழுங்க லூரோ" இவை வழியருமை கேட்டவழிக் கூறியன. "நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங் - கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரொன் - ஞெண்ணுத லீவுவர் காதலர் மறறவ - ரெண்ணுவ தெவன்கொ லறியே னென்னும்." இது செலவுக் குறிப்பறிந்து தோழிக்குக் கூறியது கொண்டுகூறிற்று. "பலர்புகழ் சிறப்பினுங் குரிசி லுள்ளச் - செலவுநீ நயந்தனை யாயின் மன்ற - வின்னு வரும்பட ரெம்வயிற் செய்த - பொய்வ லாளர் போலக் - கைவல பாணவெம் மறவா தீமே." இது தூதுவிடக் கருதிக் கூறியது. "சூழ்கம் வம்மோ தோழி பாழ்பட்டுப் - பைதற வெந்த பாலை வெங்காட் - டருஞ்சுர மிறந்தோர் தேஎத்துச் - சென்ற நெஞ்ச மீட்டிய பொருளே." இது நெஞ்சினைத் தூதுவிட்டுக் கூறியது. "மையறு சுடர்நுதல் விளங்கக் கறுத்தோர் - செய்யரண் சிதைத்த செருமிகு தானையொடு - கதழ்பரி நெடுந்தே ரதர்படக் கடைஇச் - சென்றவர்த் தருகுவ லென்னு - நன்று லம்ம பாணன தறிவே." இது பாணனைத் தூதுவிட்டுக்கூறியது. "புல்வீ ழிற்றிக் கல்லிவர் வெள்வேர் - வரையிழி யருவியிற் றோன்று நாடன் - றீதி னெஞ்சத்துக் கிளவி நம்வயின் - வந்தன்று வாழி தோழி நாமு - நெய்பெய் தீயி னெதிர்கொண்டு - தாமணந் தனையமென விடுகந் தூதே." இது தூதுகண்டு கூறியது. "ஆம்பற் பூவின் சாம்ப லன்ன - கூம்பிய சிறசர் மனையுறை குரீஇ - முன்றி லுணங்கன் மாந்தி மன்றத் - தெருவினுண் டாது குடைவன வாடி - யில்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும் - புன்கண் மாலையும் புலம்பு - மின்று கொ ளோழியவர் சென்ற நாட்டே." இது சென்றநாட்டு இவை

இன்றுகொலென்றது. "வாரா ராயினும் வரினு மவர்நமக் - கியாரா கியரோ தோழிநீர் நிலப்பைம் - பொதுளீரிப் புதல்பிலி யொண் பொறிக் கருவிளை - நுண்மு ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த - வண் ணத் துய்ம்மல ருதிரத் தண்ணெனன் - றின்னு தெறிவரும் வாடை யொ - டென்னு யினள்கொ லென்னு தோரோ." இது பருவங்கண்டு அழிந்து கூறியது. "உதுக்கா ணதுவே யிதுவென மொழிகோ - நோன்சினை யிருந்த விருந்தோட்டுப் புள்ளினந் - தாம்புணர்ந் தமை யிற் பிரிந்தோ ருள்ளா - தீங்குர லகவக் கேட்டு நீங்கிய - வேதி லாள ரிவண்வரிற் போதிற் - பொம்ம லோதியும் புனைய - லெம்முந் தொடாஅ லென்குவ மன்னே." இது காய்ந்து கூறியது. "மூதைப் புனங் கொன்ற வார்கலி யுழவர் - விதைக்குறு வட்டி போதொடு பொதுளப் - பொழுதோ தான்வந் தன்றே மெழுகான் - றூதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி - மாம்பிய விறும்பி னூர்ப்பச் சுரணி றிபு - மாலை நனிவிருந் தயரவவர் - தேர்வரு மென்னுமுன் னுனை வா ராதே." இது பொழுதொடுதான் வந்தன்றெனப் பொழுது கண்டு மகிழ்ந்து கூறினாள். "அம்ம வாழி தோழி சிறியிலை - நெல் லி நீடிய கல்காய் கடத்திடைப் - பேதை நெஞ்சம் பின்படச் சென் றோர் - கல்லினும் வலியர் மன்ற - பல்லித ழுண்க ணழப்பிரிந் தோ ரோ." இது வன்புறை ஒழிந்து கூறியது. "அம்ம வாழி தோழி யா வதும் - வல்லர் சொல்லோ தாமே யவணைக் - கல்லுடை நன்னாட் டுப் புள்ளினப் பெருந்தோ - டியாவுந் துணைபுணர்ந் துறைதும் - யாங்குப் பிரிந்துறைதி யென்னு மாறே." இது புள்ளை நோந்து கூறியது. "காதல ருழைய ராகப் பெரிதுவந்து - சாறுகொ ளூரிற் புகல்வேன் மன்ற - வத்த நண்ணிய வங்குடிச் சீறூர் - மக்கள் போகிய வணிலாடு முன்றிற் - புலப்பில போலப் புல்லென் - றலப் பென் றோழியவ ரகன்ற ஞான்றே." இது ஆற்றுவலெனக் கூறியது. "நீகண் டனையோ கண்டார்க்கேட் டனையோ - வொன்று கேளிய துகையினை மொழிமோ - வெண்கோட் டியானை சோணை படியும் - பொன்வலி பாடலி யெறீஇயர் - யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே." இது தலைவன் வரவை விரும்பிக் கூறியது. "இம்மை யாற் செய்தவை யிம்மை யியாம்போலு - மும்மையா மென்பவ ரோரார்கா - ணம்மை - யெளிய ரெனநினைந்த வின்குழலா ரேஉ - தெளியச் சுடப்பட்ட வாறு." இது குழல் கேட்டுத் தோழிக்குக் கூறியது. "பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை - நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு - பூக்கமழ் பொதும்பர் சேக்குந் து றைவனொ - டியாத்தேம் யாத்தன்று நட்பே - யவிழ்த்தற் கரிது முடிந்

தமைந் தன்றே." இது தலைவன் தவறிலனென்று கூறியது. "ஊட லினே னல்லேன் பொய்யா துரைமோ - யாரவன் மகிழ்நன் தானே தேரொடு - தளர்நடைப் புதல்வனை யுள்ளிநின் - வளமனை வருதலு ம் வெளவி யோனே." புதல்வனை நீங்கியவழிக் கூறியது. "கண்ட னெ மல்லெமோ மகிழ்நநின் பெண்டே - பலராடு பெருந்துறை மல ரொடு வந்த - தண்புனல் வண்ட லுய்த்தெனஉண்கண் சிவப்ப வழுதுநின் றோளே." இது காமஞ்சாலாவிளமையோளைக் களவின் மணந்தமை அறிகதேனென்றது.

வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇ=வாயில்தன் ஏது வாகத் தலைவிக்கு வருங் கூற்றுவகையோடு கூட்டி: வாயில்களாவார் செய்யுளியலுட் கூறும் பாணன் முதலியோர். வகையென்றதனான் ஆற்றாமையும் புதல்வனும் ஆடைகழுவுவாரும் பிறவும் வாயிலாத ல் கொள்க. "கொக்கினுக் கொழிந்த தீம்பழங் கொக்கின் - கூம்பு நிலை யன்ன தகைய வாம்பற் - றாங்குநீர்க் குட்டத்துத் துடுமெனா வீழுந் - தண்டுறை யூரன் றண்டாப் பரத்தைமை - புலவா யென்றி தோழி புலவேன் - பழன யாமைப் பாசறைப புறத்துக் - கழனி காவ லர் சூடுந் தொடைக்கும் - தொன்று முதிர்வெதிர் குன்றா ரன்ன - வென்ன மனைநனி விருந்தயருங் - கைதூ வின்மையி னெய்தா மா றே." இந்நற்றிணை தலைவனொடு புலவாமை நினக்கு இயல்போவெ ன்ற தோழிக்கு விருந்தாற் கைதூவாமையின் அவனை எதிர்ப்படப் பெற்றிலேனல்லது புலவேனோ என்றவாறு. "அன்னோ யிவனோ ரின் மா ணகன்-றன்னூர் மன்றத் தென்னை கொல்லோ - விரந்தூ ணிரம் பா மேனியொடு - விருந்தி னூரும் பெருஞ்செம்ம லேனே. இது பாணன் சொலவன்மைக்குத் தோற்று வாயில் நேர்ந்த தலைவி தோ ழிக்கு உரைததது. "காண்மதி பாணனீ யுரைத்தற் குரியை-துறை கெழு கொண்கன் பிரிந்தென - விறைகே ழெல்வளை நீங்கிய நிலை யே". இது பரத்தையிற் பிரிந்துழி இவன் நின்வார்த்தையே கேட் பனென்பது தோன்றப் பாணற்குத் தலைவி கூறியது. "ஆடியல் விழவி னழுங்கன் மூதூ - ருடையோர் பன்மையிற் பெருங்கை தூவா - வறனில் புலத்தி யெல்லித் தோய்த்த - புகாப்புகர்க் கொ ண்ட புன்பூங் கலிங்கமொடு - வாடா மாலை துயல்வர வோடிப் - பெ ருங்கயிறு நாலு மிரும்பனம் பிணையற் - பூங்க ணாய முயங்க வூங்கா- ளழூதனள் பெயரு மருஞ்சி லோதி - நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமக - ளூச லுறுதொழிற் பூசற் கூட்டா - நயனின் மாக்களொ டு குழீஇப் - பயனின் றம்மவில் வேந்துடை யவையே." இது பாங் கனைக்குறித்துக் கூறியது. "நெய்யுங் குய்யு மாடி மையொடு - மாசு

பட் டின்றே கலிங்கமுந் தோளுந் - திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றுப் - புதல்வற் புல்லிப் புனிறு நாறுமெம் - வாலிழை மகளிர் சேரித் தோன்றுந் - தேரோர்க் கொத்தனெ மல்லேம் மதனுடைப்-பொன் புனை நரம்பி னின்குரற் சீறியா - ழெழாஅல் வல்லே யாயினுந் தொ ழாஅல் - புனையோ ரன்ன புனையின நட்பி - னிளையோர் கூம்புகை மருள்வோ ராங்குக் - கொண்டுசெல் பாணநின் றண்டுறை யூரனை ப் - பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப் - புரவியும் பண்ணிலை முனிகுவ-விரகில மொழியல்யாம் வேட்டதில் வழியே". இது பாண னுக்கு வாயின்மறுத்தது. "புல்லேன் மகிழ்ந புலத்தலு மிலனே - கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன் - மடைமான் பெருநகுள மடைநீ விட்டெனக் - காலணைந் தெதிரிய கணைக்கோட்டு வாளை - யள்ளலங் கழனி யுள்வா யோடிப் - பகடுசே றுதைந்த புள்ளிவெண் புறத்துச் - செஞ்சா லுழவர் கோற்புடை மதரிப் - பைங்காற் செறு வி னனைமுதற் புரளும் - வாணன் சிறுகுடி யன்னவென் - கோனே ரொல்வளை ஞெகிழ்த்த தும்மே". இது ஆற்றாமை வாயிலாகச் செ ன்றுழித் தலைவி கூறியது. "வெள்ளாங் குருகின் பிள்ளை சேததெ னக் - காணிய சென்ற மடநடை நாரை - காலை யிருந்து மாலை சேக் குந் - தண்கடற் சேர்ப்பனொடு வாரான் - றான்வந் தனனெங் காத லோனே." வாயில் வேண்டி ஒழுகுகின்றான் புதல்வன் வாயிலாக வருமெனக் கேட்டு அஞ்சிய தலைவி அவன் விளையாடித் தனித்து வந் துழிக் கூறியது. "கூர்முண் முள்ளி" என்னும் அகப்பாட்டு ஆற்று மை வாயிலாகச் சென்றுழித் தடையின்றிக் கூறியவாறு. "மாறுப் புண்போன் மாற்றச் சீறறங் - கனற்றப்" பின்னும் புலவிகூர்ந்து தலைவன் கேட்ப முன்னிலைப் புறமொழியாக யான் நோமென்னவும் பொல்லாறொன வலிதிற் கூறியவாறு காண்க. "பூங்கட் புதல்வனைப பொய்பல பாராட்டி" எனப் புதல்வனை வாயிலாகக் கொண்டு செ ன்றவாறுகாண்க. "நாடிநின் றூதாடித் துறைச்செல்லா ளூரவ - ராடைகொண் டொலிக்குநின் புலத்திகாட் டென்றாளோ * * * வ்ாக்கினை." இது ஆடைகழுவுவாளை வாயிலென்றது. பிறவும் வே றுபட வருவனவெல்லாம் இதனாற்கொள்க.

கிழவோள் செப்பல் கிழவது என்ப = இப்பத்தொன்பதுங் கிழவோளுக்கு உரிமையுடைத்தென்று கூறுவர் ஆசிரியர். எ - று. முன்னர்நின்ற ஏழனுருபுகளைத் தொகுத்து இன்னதன்கண்ணும் இன்னதன்கண்ணுந் தலைவி செப்புதலை வாயிலின் வகையோடே கூட்டிக் கிழவோள் செப்பல் வாயிலின் வரும் வகையோடு தொ கைஇ என மாறுக. (௬)

கசஅ. புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந்
திடைச்சுரத் திறைச்சியும் வினையுஞ் சுட்டி
யன்புறு தக்க கிளத்த றானே
கிழவோன் செய்வினைக் கச்ச மாகும்.

இது தலைவிகூற்றின்கட் படுவதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்) புணர்ந்து உடன் போகிய கிழவோள் மனை இருந்து=களவுக் காலத்துப் புணர்ந்து உடன்போகிய தலைவி கற்புக்காலத்து இல்லின் கண் இருந்து: இடைச்சுரத்து இறைச்சியும் அன்புறுதக்க வினையுஞ் சுட்டிக் கிளத்தல் தானே=தான் போகிய காலத்துக் காட்டின்கட் கண்ட கருப்பொருளையுந் தலைவன் தன்மேல் அன்புசெய்தற்குத்தக்க கருப்பொருளின் தொழில்களையுங் கருதிக் கூறுதல் தானே: கிழவோன் செய் வினைக்கு அச்சம் ஆகும்=தலைவன் எடுத்துக்கொண்ட காரியத்திற்கு முடித்தலாற்றான்கொலென்று அஞ்சும் அச்சமாம். எ-று. எனவே, அருத்தாபத்தியாற் புணர்ந்து உடன்போகாத தலைவி மனைக்கணிருந்து தலைவன் கூறக்கேட்டு அக்கருப்பொருளினது தன்மேல் அன்புறுதக்க வினைகளைக் கூறுதல் தலைவன் செய்வினைக்கு அச்சமாகாது வருவனெனத் துணிந்து கூறுதலாமென்றாயிற்று. "கானயானை தோனயந் துண்ட - பொறிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை - யலங்க லுலவை யேறி யொய்யெனப் - புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரு - மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்ச் - சேர்ந்தனா கொல்லோ தாமே யாந்தமக் - கொல்லே மென்ற தப்பல் - சொல்லா தகறல் வல்லு வோரே." புலம்புதரு குரலவாய்ப் புறவினைப் பெடை அழைக்கும் வருத்தங் கண்டு வினைமுடியாமல் வருவரோவென அஞ்சியவாறு காண்க. "அரிதாய வறனெய்தி" எனனுங் கலிப்பாட்டுத் தலைவன் அன்புறுதக்கன கூறக் கேட்ட தலைவி அவற்றைக் கூறிப் புனைநலம் வாட்டுநர் அல்லரென வரவுகருதிக் கூறியவாறு காண்க. இதனுள் ஆற்றுவிக்குந் தோழி வருவர்கொல்லென ஐயுற்றுக் கூறலின்மையிற் தோழிகூற்றன்மையும் உணர்க. "புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன" என்றாற்போல்வன தலைவிகூற்றாய் வருவன உளவாயின் இதன்கண் அடக்குக. (எ)

கசகூ. தோழியுள் ளுறுத்த வாயில் புகுப்பினு
மாவயி னிகழு மென்மனார் புலவர்.

இது தோழி முதலிய வாயில்கட்கு எய்தாததெய்துவித்தது. (இ-ள்.) தோழி உள்ளுறுத்த வாயில் புகுப்பினும்=தலைவனது செலவுக் குறிப்பு அறிந்து அவனைச் செலவழுங்குவித்தற்குத் தோழி

யுள்ளிட்ட வாயில்களைத் தலைவி போகவிட்ட அக்காலத்து அவர் மேலனபோலக் கூறுங் கூற்றுக்களும்: ஆ வயின் நிகழும் என்மனார் புலவர்=தலைவி அஞ்சினாற்போல அவ்வச்சத்தின்கண்ணே நிகழுமென்று கூறுவர் புலவர். எ-று. "அறனின்றி யயறூற்றும்" என்னும் பாலைக்கலியுள் இறைச்சியும் வினையுமாகிய பூமுதலியனகூறி அவற்றாற் தலைவிக்கிரங்கி நீ செலவழுங்குமெனக் கூறுவாள் "யாமிரப் பவுமெய் கொள்ளா யாயினை" எனப் பிறவாயில்களையுங் கூட்டி உரைத்தவாறு காண்க. (அ)

கரு0. பெறற்கரும் பெரும்பொருண் முடிந்தபின் வந்த
தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணு
மற்றமழி வுரைப்பினு மற்ற மில்லாக்
கிழவோட் சுட்டிய தெய்வக் கடத்தினுஞ்
சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினு
மடங்கா வொழுக்கத் தவன்வயி னழிந்தோளை
யடங்கக் காட்டுதற் பொருளின் கண்ணும்
பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி
யிழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்
வணங்கியன் மொழியான் வணங்கற் கண்ணும்
புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியுஞ்
சிறந்த புதல்வனை நேராது புலம்பினு
மாணலந் தாவென வகுத்தற் கண்ணும்
பேணா வொழுக்க நாணிய பொருளினுஞ்
சூனயத் திறத்தாற் சோர்வுகண் டழியினும்
பெரியோ ரொழுக்கம் பெரிதெனக் கிளந்து
பெறுதகை யில்லாப் பிழைப்பினு மவ்வயி
னுறுதகை யில்லாப் புலவியுண் மூழ்கிய
கிழவோள்பா னின்று கெடுத்தற் கண்ணு
முணர்ப்புவயின் வாரா வூடலுற் றோள்வயி
னுணர்த்தல் வேண்டிய கிழவோன்பா னின்று
தான்வெகுண் டாக்கிய தகுதிக் கண்ணு
மருமைக் காலத்துப் பெருமை காட்டிய
வெண்மைக் காலத் திரக்கத் தானும்

பாணர் கூத்தர் விறலிய ரென்றிவர்
பேணிச் சொல்லிய குறைவினை யெதிரு
நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக்
காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்
பிரியுங் காலை யெதிர்நின்று சாற்றிய
மரபுடை யெதிரு முளப்படப் பிறவும்
வகைபட வந்த கிளவி யெல்லாந்
தோழிக் குரிய வென்மனார் புலவர்.

இது முறையானே தோழிக்குரிய கூற்றுக் கூறுகின்றது. (இ-ள்) பெறற்கு அரும் பெரும் பொருள் முடிந்தபின் வந்த தெறற்கு அரும் மரபிற் சிறப்பின் கண்ணும்; பெறற்கு அரும் பெரும் பொருள் முடிந்தபின் வந்த=தலைவனுந் தலைவியுந் தோழியும் பெறுதற்கரிதென நினைத்த பெரிய பொருளாகிய வதுவை வேள்விச்சடங்கான் முடிந்தபின்பு தோன்றிய: தெறற்கு அரும் மரபிற் சிறப்பின் கண்ணும்=தனது தெறுதற்கரிய மரபுகாரணத்தாற் தலைவன் தன்னைச் சிறப்பித்துக் கூறுமிடத்தும்: தோழி கூற்றுநிகழும். தலைவியையுந் தலைவனையும் வழிபாடாற்றுதலிற் தெறற்கருமரபினென்றார். தெறுதல் அழன்றுநோக்குதல். சிறப்பு இவளை நீ ஆற்றுவித்தலின் எம் உயிர் தாங்கினேம் என்றாற்போல்வன. அவை எம்பெருமானே அரிதாற்றியதல்லது யான் ஆற்றுவித்தது உண்டோவென்றும் நின் அருளால் இவள் ஆற்றியதல்லது யான் ஆற்றுவித்தது உண்டோவென்றுனுங் கூறுவனவாம். "அயிரை பரந்த வந்தண் பழனத் - தேந்தெழின் மலர்ந்த தூம்புடைத் திரடா - ளாம்பல் குற்றுநர் நீர்வேட டாங்கிவ - ளிடைமுலைக் கிடந்து நடுங்க லானீர் - தொழுதுகாண் பிறையிற் றோன்றி யானுமக் - கரிய மாகிய, காலைப் - பெரிய நோன்றனிர் நோகோ யானே." இதனுண் முலையிடைக்கிடந்தும் பனிக்கின்ற நீர் அரியமாகிய காலத்து எங்ஙனம் ஆற்றினீரென யான் நோவாநின்றேன், இங்ஙனம் அருமைசெய்தலாற் தேற்றுதற்கு உரியேனாகிய என்னைச் சிறப்பித்துக் கூறல் ஆகாது என்றவாறு காண்க. "பொங்குதிரை பொருத வார்மண லடைகரைப் - புன்காய் நாவற் புகர்ப்புற வீர்ங்கனி - கிளைசேத்து மொய்த்த தும்பி பழஞ்சேத்துப்-பலகா லலவன் கொண்டகோட் கூர்ந்து-கொள்ளா நாம்பி னிமிரும் பூச - லிரைதேர் நாரை யெய்தி விடுக்குந் - துறைகெழு மாந்தை யன்ன விவணலம் - பண்டு மிற்றே கண்டிசிற் றெய்ய - வுழையிற் போகா தளிப்பினுஞ் சிறிய - ஞெகிழ்ந்த கவி

னலங் கொல்லோ மகிழ்ந்தோர் - கட்கழி செருக்கத் தன்ன - காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே.'' இதனுட் தலைவி கனியாகவுந் தும்பி தோழியாகவும் அலவன் தன்மேற் தவறிழைக்குந் தமராக வுந் தலைவன் இரைதேர் நாரையாகவும் உள்ளுறையுவமங் கொள் வுழித் தலைவிபொருட்டு யாய்க்கு அஞ்சியொழுகினேனை நீ காத்த தன்றி யான் ஆற்றுவித்தது உளதோவெனத தலைவன் சிறப்பிற்கு எதிர் தோழி கூறியவாறு காண்க. பண்டும் இற்றே என்றது பண் டையின் மிகவும் வருந்தினாளென்றாள். இவள் கண் நீண்டு பசந்தது, களவின்கண் நீங்காது அளியாநிறகவுஞ் சிறிது கெட்ட அழகின் மிகுதியோ, கள்ளுண்டார்க்குக் கள் அறாஉங் காலத்துப் பிறந்த வேறுபாடுங் காமவேறுபாடோ, அவ்விரண்டும் அல்லவே, இது ஓர் அமளிக்கட் துயிலப்பெற்றும் வேதவிதிபற்றிக் கூட்டம் நிகழாமை யாற் பிறந்த மிக்க வேறுபாடன்றோ ? இதனை இவளே ஆற்றுவத ன்றி யான் ஆற்றுவிக்குமாறென்னை என்றாளென்க.

அற்றம் அழிவு உரைப்பினும்=களவுக்காலத்துப் பட்ட வரு த்தம் நீங்கினமை கூறினும்: "எக்கர் ஞாழ லிகந்துபடு பெருஞ் சினை - வீயினிது கமழுந் துறைவனை - நீயினிது முயங்குமதி காத லோயே.'' "எரிமருள் வேங்கை யிருந்த தோகை - யிழையணி மட ந்தையிற் றோன்று நாட - வினிதுசெய் தனையா லுந்தை வாழியர் - நன்மனை வதுவை யயரவிவள் - பின்னிருங் கூந்தன் மலரணிந் தோ யே.'' எனவரும்.

அற்றம் இல்லாக் கிழவோட் சுட்டிய தெய்வக் கடத்தினும்= களவொழுக்கம் புலப்பட ஒழுகுதல் இல்லாத தலைவியைத் தலை வன் வரைந்துகோடல் குறித்துப் பரவிய தெய்வம் அதனை முடித்த லின் அப்பரவுக்கடன் கொடுத்தல் வேண்டுமெனத் தலைவற்குக் கூ றும் இடத்தும்: உ-ம். "நெஞ்சொடு மொழிகடுத் தஞ்சுவர நோக் கு - தாயவட் டெறுவது தீர்க்க வெமக்கெனச் - சிறந்த தெய்வ த்து நிறையுறை குன்ற - மறைந்துநின் றிறைஞ்சினம் பலவே-பெற் றனம் யாமே மற்றதன் பயனே.'' கிழவோற் சுட்டிய தெய்வக்கட மென்று பாடம் ஓதி, "வாழி யாதன் வாழிய வினியே - வேந்து பகைதணி யாண்டுபல நந்துக - வென்வேட் டோளே யாயே யாமே- மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத் - தண்டுறை யூரன் வரைக- வெந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே.'' என்பது உதாரணங் காட்டுவாரும் உளர்.

சீருடைப் பெரும் பொருள் வைத்த வழி மறப்பினும் = தலைமையுடைய இல்லறத்தைத் தலைவிமாட்டு வைத்த காலத்துத்

தலைவன் அறஞ்செயற்கும் பொருள்செயற்கும் இசையுங் கூத்துமாகிய இன்பம் நுகர்தற்குந் தலைவியை மறந்து ஒழுகினும்: உ-ம். "கரும்பி னெந்திரங் களிற்றெதிர் பிளிறுந் - தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவ - ணல்லணி நயந்துநீ துறத்தலிற் - பல்லோ ரறியப் பசந்தன்று நுதலே." இதனுட் டுறத்தலினெனப் பொதுவாகக் கூறினாள் அறமுதலியவற்றைக் கருதுதலின்.

அடங்கா ஒழுக்கத்து அவன்வயின் அழிந்தோளை அடங்கக் காட்டுதற் பொருளின்கண்ணும்=புறத்து ஒழுக்கத்தை உடையனாகிய தலைவன்மாட்டு மனம் வேறுபட்ட தலைவியைப் புறத்து ஒழுக்கமின்றி நின்மேல் அவர் அன்புடையரோன அவ்வேறுபாடு நீங்க நெருங்கிக் கூறுதலையுடைத்தாகிய பொருளின்கண்ணும்: உ-ம். "செந்நெற் செறுவிற் கதிர்கொண்டு கள்வன் - றன்னக மண்ணைச் செல்லு மூரற் - கெல்லே ஞெகிழச் சாஅ - யல்ல லுழப்ப தெவன்கொலன்னாய்." இதன் உள்ளுறையாற் பொருளுணர்க.

பிழைத்து வந்து இருந்த கிழவனை நெருங்கி இழைத்து ஆங்கு ஆக்கிக் கொடுத்தற்கண்ணும்=பரத்தையர் மனைக்கட் டங்கி வந்து அகனகர் புகுதாது புறத்திருந்த தலைவனை மிகக் கழறிச், சிலமொழிகளைக் கூறி, இதனானே தலைவிமனத்தின்கண் ஊடல்நீங்குந் தன்மை உளதாக்கிக் கூட்டும் இடத்தும்: உ-ம். "நகைநன் றம்ம தானே யிறைமிசை - மாரிச் சுதையி னீர்ம்புறத் தன்ன - கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல் - வெள்ளி வெண்டோ டன்ன கயல்குறித்துக் - கள்ளா ருவகைக் கலிமகி ழுழவர் - காஞ்சியங் குறுந்தறி குத்தித் தீஞ்சுவை - மென்கழைக் கரும்பி னன்பல மிடைந்து - பெருஞ்செந்நெல்லின் பாசமல் போற்றி - வருந்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை - யிதழி கடுநீர் நோக்கிப் பையபய் - பார்வ லிருக்கும் பயங்கெ மூர - யாமது பேணின்றோ விலமே நீநின் - பண்ணமை நல்யாழ்ப் பாணனொடு விசிபிணி - மண்ணார் முழவின் கண்ணதிர்ந் தியம்ப - மகிழ்துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி - யெம்மனை வாரா யாகி முன்னா - ணும்மனைச் சேர்ந்த ஞான்றை யம்மனைக் - குறுந்தொடி மடந்தை யுவந்தன ணெடுந்தே - ரிழையணி யானைப் பழையன் மாறன் - மாடமலி மறுகிற் கூட லாங்கண் - வெள்ளத் தானையொடு வேற்றுப்புலத் திறுத்த - கிள்ளி வளவ னல்லமர் சாயக் - கடும்பரிப் புரவியொடு களிறுபல வௌவி- யேதின் மன்ன ரூர்கொளக் - கோதை மார்ப னுவகையிற் பெரிதே." "கேட்டிசின் வாழியே ரமகிழ்ந வாற்றுற - மைய னெஞ்சிற் கெவ்வந் தீர - நினக்கு மருந்தாகியயா - னிவட்கு மருந்தன்மை நோமென் னெஞ்சே." எனவரும்.

வணங்கியன் மொழியான் வணங்கற்கண்ணும்—தாழும் இயல்பினையுடைய சொற்களாற் றோழி தாழ்ந்து நிற்கும் நிலைமைக்கண்ணும்: உ-ம். "உண்டுறைப் பொய்கை வராஅ லினமிரியுந் - தண்டுறை யூர தகுவகொ - லொண்டொடியைப் - பாராய் மனைத்துறந்தச் சேரிச் செலவதனை - யூராண்மை யாக்கிக் கொளல்." எனவரும். "பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயி - னாம்பலஞ் செறுவிற் றேனூ ரன்ன - விவணலம் புலம்பப் பிரிய - வவணல முடையளோ மகிழ்நநின் பெண்டே." இதுவும் அதன்பாற் படும்.

புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியும் — பரத்தையரிடத்தே உண்டாம் விளையாட்டினைத் தலைவன் பொருந்திய மனமகிழ்ச்சிக்கண்ணும்: விளையாட்டாவது யாறுங் குளனுங் காவும் ஆடிப் பதியிகந்து நுகர்தலாம். "பருவாய் வராஅற் பல்வரி யிரும்போத்துக் - கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி - யாம்பன் மெல்லடை கிழியக் குவளைக் - கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழூந் - தரில்படு வள்ளை யாய்கொடி மயக்கித் - தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது - கயிறுடு கதச்சேப் போல மதமிக்கு - நாட்கய முழக்கும் பூக்கெ ழூர - வருபுனல் வையை வார்மண லகன்றுறைத் - திருமருதோங்கிய விரிமலர்க் காவி - னறும்பல கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு - வதுவை யயர்ந்தனை யென்ப வலரோ - கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழிய - னாலங் கானத் தகன்றலை சிவப்பச்- சேரலன் செம்பியன் சினங்கெழூ திதியன் - போர்வல் லியானைப் புலம்பூ ணெழினி - நாரரி நறவி னெருமை யூரன்-றேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தி - னிருங்கோ வெண்மா னியறேர்ப் பொருநனென்- றெழூவர் நல்வல மடங்க வொருபகன் - முரசமொடு வெண்குடையகப்படுத் துரைசெலக் - கொன்றுகளம் வேட்ட ஞான்றை - வென்றி கொள்வா ளார்ப்பினும் பெரிதே." இதனுள் வாளார்ப்பினும் பெரிதெனவே நாண் நீங்கிப் புலப்படுத்தலை மகிழ்ந்தவாறு காண்க.

சிறந்த புதல்வனை நேராது புலம்பினும்—யாரினுஞ் சிறந்த புதல்வனை வாயிலாகக்கொண்டு சென்றுழி அவற்குந் தலைவி வாயில் நேராமற் றலைவன் வருந்தினும்: உ-ம். "பொன்னொடு குயின்ற பன்மணித் தாலித் - தன்மார்பு நனைப்பத்தன் றலையு மிஃதோ - மணித்தகைச் செவ்வாய் மழலையங் கிளவி - புலர்த்தகைச் சாந்தம் புலர்தொறு நனைப்புக் - காணு யாகலோ கொடிதே கடிமனைச் - சேணிகந் தொதுங்கு மாணிழை யரிவை - நீயிவ ணேரா வாயிற்கு நாணுந் - தந்தையொடு வருவோன் போல - மைந்தனொடு புகுந்த மகிழ்நன் மார்பே." எனவரும்.

மாண் நலம் தா என வருத்தற்கண்ணும்—இவள் இழந்த மாட்சிமையுடைய நலத்தைத் தந்து இகப்பினும் இகப்பாயெனத் தலைவனை வேறுபடுத்தற்கண்ணும்: உ-ம். "யாரை யெலுவ யாமே நீயெமக் - கியாரையு மல்லை நொதும லாளனை - யனைத்தாற் கொண்கவெம் மிடையே நினைப்பிற் - கடும்பகட் டியானை நெடுந்தேர்க் குட்டுவன் - வேந்தடு களத்தின் முரசதிர்ந் தன்ன - வோங்கற் புணரி பாய்ந் தாடு மகளி - ரணிந்திடு பல்பூ மரீஇ யார்ந்த - வாபுலம் புகுதரு பேரிசை மாலைக் - கடல்கெழு மாந்தை யன்னவெம் - பெட்டனை யல்லையா னலந்தந்து சென்மே." எனவரும். "நுண்ஞாண் வலையிற் பரதவர் போத்தந்த - பன்மீ னுணங்கல் கவருந் துறைவனைக் - கண்ணினாற் காண வியையுங்கொ லென்றோழி - வண்ணந் தா வென்கந் தொடுத்து." இதுவும் இதன்பாற் படும்.

பேணா ஒழுக்கம் நாணிய பொருளினும்—பரத்தை தலைவியைப் பேணாது ஒழுகிய ஒழுக்கத்திற்குத் தலைவி நாணிய பொருளின்கண்ணும்: தலைவற்குத் தோழிகூற்று நிகழ்த்தும். உ-ம். "பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து-வாளை நாளிரை தேரு மூர-நாணினென் பெரும யானே பாணன் - மல்லடு மார்பின் வலியுற வருந்தி - யெதிர்தலைக் கொண்ட வாரியம் பொருந - னிறைத்திரண் முழவுத் தோள் கையகத் தொழிந்த - திறன்வேறு கிடக்கை நோக்கி நிற் போர்க் - கணையா னணி யாங்கு மறையினன் - மெல்ல வந்து நல்ல கூறி - மையீ ரோதி மடவோ யானு - நின்சேரி யேனே யயலி லாட்டியே - னுங்கை யாகுவெ னினக்கெனத் தன்கைத் - தொடுமணி மெல்விரற் றண்ணெனத் தைவர - நுதலுங் கூந்தலு நீவிப் - பகல் வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே." இதனுள் யான் நினக்குத் தோழியாவேனெனப் பரத்தை நீவிய பேணா ஒழுக்கத்திற்குத் தலைவி நாணியதுகண்டு தான் நாணினேனென்று தலைவற்குத் தோழி கூறியவாறு காண்க. இன்னுந் தலைவனது பேணா ஒழுக்கத்திற்குத் தலைவி நாணிய பொருளின்கண்ணுமெனவுங் கூறுக. "யாயா கியளோ மாஅ யோளே - மடைமாண் செப்பிற் றமியள் வைகிய - பெய்யாப் பூவின் மெய்சா யினளே - பாசடை நிவந்த கணைக்கா, னெய்த - லினமீ னிருங்கழி யோத மல்குதொறுங் - கயமூழ்கு மகளிர் கண்ணின் மானுந் - தண்ணந் துறைவன் கொடுமை - நம்முணிக் காப்பா டும்மே." எனவரும். இவை இரண்டும் பொருள்.

சூள் நயத் திறத்தாற் சோர்வு கண்டு அழியினும்—கூடுதல்வேட்கைக் கூறுபாட்டாற் தான் சூளுறக்கருதிய சூளுறவினது பொய்ம்,

மையைக்கருதித்தலைவிவருந்தினும்:தோழிக்குக் கூற்றுநிகழும். உ-ம். "பகல்கொள விளக்கோ டிராநன் றறியா - வென்வேற் சோழ ராமூ ரன்னவிவ - ணலம்பெறு சுடர்நுதற் றேம்ப-வெவன்பயஞ் செய்யு நீ தேற்றிய மொழியே." இதனுள் இவள் நுதல் தேம்பும்படி நீ தேற்றிய சொல்லெனவே சோர்வுகண்டு அழிந்தாளென்பது உணர்ந்தும் இப்பொய்ச்சூள் நினக்கு என்னபயனைத் தருமெனத் தோழி தலைவனை நோக்கிக் கூறியவாறு காண்க. "கோடுறநிவந்த" என்னும் மணிமிடைபவழத்தைத் தோழிகூற்றாகக் காட்டுவாரும் உளர்.

பேரியொர் ஒழுக்கம் பெரிது எனக் கிளந்து பெறு தகை இல்லாப் பிழைப்பினும்; பெரியோர் பெறுதகை இல்லாக் கிளந்து=நன மக்கள் பெறுந்தகைமை இல்லறமாயிருக்குமென்றுஞ் சொல்லி: பெரியோர் ஒழுக்கம் பெரிதெனக் கிளந்து பிழைப்பினும்=நன்மக்கள் ஒழுகும் ஒழுக்கம் பெரிதாயிருக்குமென்றுஞ் சொல்லித் தான் தலைவனை வழிபாடுதப்பினும்: தோழிக்குக் கூற்றுநிகழும். பெரியோரையுங் கிளந்தென்பதனையும் இரண்டிடத்துங் கூட்டுக. உ-ம்- "வெள்ளி விழுத்தொடி மென்கருப் புலக்கை - வள்ளி நுண்ணிடை வயின்வயி னுடங்க - மீன்சினை யன்ன வெண்மணற் குவைஇக் - காஞ்சி நீழற் றமர்வளம் பாடி - யூர்க்குறு மகளிர் குறுவழி யிறந்த- வார லருந்திய சிறுசிரன் மருதின் - றாழ்சினை யுறங்குந் தண்டுறை யூர - விழையா வுள்ளம் விழையு மாயினுங் - கேட்டவை தோட்டி யாக மீட்டாங் - கறனும் பொருளும் வழாஅமை நாடித் - தற்றக வுடைமை நோக்கி மற்றதன் - பின்னா குமமே முன்னியது முடித்த- லனைய பெரியோ ரொழுக்க மதனு - லரிய பெரியோர்த் தேருங் காலை - நும்மோ ரன்னோர் மாட்டு மின்னன - பொய்யொடு மிடைந் தவை தோன்றின் - மெய்யாண் டுளதோவிவ் வுலகத் தானே." இதனுள் அறனென்றது இல்லறத்தை; தற்றகவுடைமைநோக்கியென்றது தன்னால் அவ்வறனும் பொருளுந் தகுதிப்பாடுடையவாந் தன்மையைநோக்கி என்றவாறும்; முன்னியதென்றது புறத்தொழுக்கத்தை; பெரியோரொழுக்கமனையவென்றது பெரியோர் ஒழுக்கம் பெரிய வென்றவாறு. இது முன்னர் நிகழ்ந்த பொய்ச்சூள்பற்றி நும்மனோர் மாட்டும் இன்னபொய்ச்சூள் பிறக்குமாயின் இவ்வுலகத்து மெய்ச்சூள் இனி இன்றாம், அதனாற் பெரியோரைத் தமது ஒழுக்கத்தைத் தேருங்காலை அரியவாயிருந்தனவெனத் தலைவனைநோக்கித் தோழிகூறலின் அவனை வழிபாடு தப்பினளாயிற்று. உள்ளுறையுவமம் இதற்கு எய்துமாறுணர்க.

அவ்வயின் உறுதகை இல்லாப் புலவியுண் மூழ்கிய கிழவோள் பால் நின்று கெடுத்தற்கண்ணும்—தலைவன் அங்ஙனம் பிறழ்ந்த இடத்து அவன் சென்று சேருந் தகைமை இல்லாமைக்குக் காரணமாகிய புலவியின்கண் அழுந்திய தலைவிபக்கத்தானாய் நின்று அவள்புலவியைத் தீர்த்தற்கண்ணும்: உ-ம். "மானோக்கி நீயழ நீத்தவ னானாது - நாணில னாயி னலிதந் தவன்வயி - னூடுவ தெனனோ வினி." "உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது - மிக்கற்றா னீள விடல்." "காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி - வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற - மல்ல லூர னெல்லினன் பெரிதென - மறுவருஞ் சிறுவன் றாயே - தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே." எனவரும்.

உணர்ப்புவயின் வாரா ஊடல உற்றோள்வயின் உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்று தான் வெகுண்டு ஆக்கிய தகுதிக்கண்ணும்; உணர்ப்புவயின் வாரா ஊடல் உற்றோளவயின் = தலைவன் தெளிவிக்கப்படுந்தன்மைக்கணில்லாத ஊடல் மிகுத்தோளிடத்து: உணர்ப்புப் புணர்பபுட்போல் நின்றது; உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்று—ஊடல் தீர்த்தலை விரும்பிய தலைவன்வயத்தாளாய்நின்று: தான் வெகுண்டு ஆக்கிய தகுதிக்கண்ணும்—தான் தலைவியைக் கழறி அவள் சீறறம் போந்தனமை உண்டாக்கிய தகுதிக்கண்ணும்: உ-ம். "துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை - யரிமல ராம்பன் மேய்ந்த நெறிமருப - பீர்ந்த ணெருமைச் சுவல்படு முதுபோத்துத் - தூங்குசேற் றள்ளற் றுஞ்சிப் பொழுதுபடப் - பைந்நிண வராஅல் குறையப் பெயர்தந்து - பகுஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப் - போர்ச்செறி மள்ளரிற் புகுதரு மூரன் - றேர்தர வந்த தெரியிழை நெகிழ்த்தோ - னூர்கொள் கல்லா மகளிர்த் தரத்தரப்-பரத்தைமை தாங்கலோ விலனென வறிதுநீ-புலத்த லோம்புமதி மனைகெழு மடந்தையது - புலந்துறை நுதல வல்லியோரோ - செய்யோ ணீங்கச சிலபதங் கொழித்துத் - தாமட் டுண்டு தமியராகித் - தேமொழிப புதல்வர் திரங்குமுலை சுவைப்ப - வைகுநராகுத லறிந்து - மறியா ரம்மவஃ துடலு மோரோ." இது தோழி தலைவியை வெகுண்டு ஆக்கியவாறு காண்க.

அருமைக் காலத்துப் பெருமை காட்டிய எண்மைக் காலத்து இரக்கத்தானும்; எண்மைக் காலத்து—தாம் எளியராகிய கற்புக் காலத்திலே: அருமைக் காலத்துப் பெருமை காட்டிய இரக்கத்தானும்—களவுக்காலத்துத் தமதுபெருமையை உணர்த்திய வருத்தத்தின்கண்ணும்: உ-ம். "வேம்பின் பைங்காயென் றோழி தரினே-

தேம்பூங் கட்டி யென்றனி ரினியே - பாரி பறம்பிற் டனிச்சுனைத் தெண்ணீர் - தைஇத் திங்கட் டண்ணிய தரினும் - வெய்ய வுவர்க்கு மென்றி - ளாய வற்று லன்பின் பாலே.'' எனவரும்.

பாணர் கூத்தர் விறலியர் என்று இவர்=பாணருங் கூத்தரும் விறலியருமென்று சொல்லுகின்ற இம் மூவரும் : பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்= விரும்பிக்கூறிய குறையுறும் வினைக்கு எதிராகவும் : கூற்றுநிகழும். எதிருமென்றது அவர் வாயில்வேண்டிய வழித் தோழி அவர்க்குமறுத்தலும் மறுத்தாள்போல நேர்தலுங் கூறியதாம். உ-ம். "புலைமக னாதலிற் பொய்ந்நின் வாழி - நில்லல் பாண செல்லினிப் பரியல் - பகலெஞ் சேரி காணி - னகல்வய லூர னுணவும் பெறுமே.'' இது பாணற்கு வாயின்மறுத்தது. "விளக்கி னன்ன சுடர்விடு தாமரை - களிற்றுச் செவியன்ன பாசடை தயங்க - வுண்டுறை மகளி ரிரியக் குண்டுநீர் - வாளை பிறழு மூரற்கு நாளை - மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு பெண்டே - தொலைந்த நாவி னுலைந்த குறுமொழி - யுடம்பட் டோராய்த் தாயரோ டொழிபுடன் - சொல்லலை கொல்லோ நீயே வல்லைக் - கன்றுபெறு வல்சிப் பாணன் கைததை - வள்ளுயிர்த் தண்ணுமை போல - வுள்யாது மில்லதோர் போர்வையஞ் சொல்லே.'' இது விறலிக்கு வாயின்மறுத்தது. மறுப்பாள்போல் நேர்வது வந்துழிக் காண்க.

நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக் காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும் ; நீத்த கிழவனை=பரத்தையிற்பிரிந்து தலைவியைக் கைவிட்ட தலைவனை : நிகழுமாறு படீஇ = தானொழுகும் இல்லறத்தே படுத்தல்வேண்டி : காத்த தன்மையிற்=புறத்தொழுக்கிற் பயனின்மைகூறிக் காதத தன்மையினாலே : கண் இன்று பெயர்ப்பினும்=அக்கண்ணோட்டமின்றி நீக்கினும் : உ-ம். "மனையுறை கோழிக் குறுங்காற் பேடை - வேலி வெருகின் மாலை யுற்றெனப் - புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇப் - பைதற் பிள்ளைக் கிளைப் பயிர்ந் தாஅங் - கின்னா திசைக்கு மம்பலொடு - வாரல் வாழிய ரையவெந் தெருவே.'' இதனுள் அம்பலொடு வாரலெனவே பன்னாள் நீத்தமையுங் கண்ணின்று பெயர்த்தமையுங் கூறிற்று. கோழிபோலத் தாயர் மகளிரைத் தழீஇக்கொண்டானொன்றலிற் புறம்போயும் பயமின்றெனக் காத்ததன்மை கூறிற்று.

பிரியுங் காலை எதிர்நின்று சாற்றிய மரபுடை எதிரும் உளப்படப் பிறவும்; பிரியுங் காலை எதிர்நின்று சாற்றிய=தலைவன் கற்பிடத்துப் பிரியுங்காற் றெய்வத்தன்மையின்றி முன்னின்று வெளிப்படக்

கூறிய: மரபுடை எதிரும் உளப்படப் பிறவும் = முறையுடைத்தாகிய எதிர்காலமும் இறந்தகாலமும் உட்படப் பிறவற்றுக்கண்ணும்: எதிருமென்ற உம்மை எச்சவும்மை. பிற ஆவன தலைவன் வரைவுமலிந்து கூறுவனவும், வந்தபின்னர் முன்புநிகழ்ந்தன கூறுவனவும், வற்புறுப்பாள் பருவமன்றெனப் படைத்துமொழிவனவுந், தூதுகண்டு கூறுவனவுந், தூதுவிடுவனவுஞ், சேணிடைப் பிரிந்தோன் இடைநிலத்துத் தங்காது இரவின்வந்துழிக் கூறுவனவும், நிமித்தங்காட்டிக் கூறுவனவும், உடன்சேறலை மறுத்துக்கூறுவனவும் பிறவுமாம். "பாஅலஞ்செவி" என்னும் பாலைக்கலியுள் "பொய்நல் கல் புரிந்தனை புறந்தரல் கைவிட் - டென்று ளோநெடுந் தகாய்நீ செல்வ - தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே." இதனுட் புரிந்தனையென இறப்பும் இறக்குமென எதிரும் மரபிற் றப்பாமல் வந்தவாறு காண்க. "வேனிற் றிங்கள் வெஞ்சுர மிறந்து - செலவயர்ந் தனையா னீயே நன்று - நந்நயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன் - முறுவல் காண்டலி னினிதோ - விறுவரை நாட வினைந்து செய் பொருளே." இது எதிரது நோக்கிற்று. "புறவணி நாடன் காதன் மடமக - ளொண்ணுதல் பசப்ப நீசெலின் றெண்ணீர்ப் - போதவிழ் தாமரை யன்னநின் - காதலம் புதல்வன் பூமணி முலைக்கே." இதுவும் அது.

இனிப் பிற வருமாறு; "பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ - நெடுங்காற் கணந்துள் புலம்புகொ டெள்விளி - கதஞ்செல் கொடியர் கதுமென விசைக்கும் - கடும்பொடு கொள்ளு மத்தத் தாங்கட் - கடுங்குரற் பைம்பீக் கதநாய் வடுகர் - நெடும்பெருங் குன்ற நீந்தி நம்வயின் - வந்தனர் வாழி தோழி கைதை - செம்பொற் கழறொடி நோக்கி மாமடற் - கவவுக்கொ ளின்குரல் கேட்டொறு - மவவுக் கொண் மனத்தே மாகிய நமக்கே." இது தலைவிக்கு வரவுமலிந்தது. நற்றிணை. "நீலத் தன்ன நீர்பொதி கருவின் - மாவிசும் பதிர முழங்கி யாலி - நிலந்தண் ணென்று கானங் குழைப்ப - வினந்தே ருழவ ரின்குர லியம்ப - மறியுடை மடப்பிணை தழீஇப் புறவிற் - றிரிமருப் பிரலை பைம்பயி ருகள - வார்பெய லுதவிய கார்செய் காலை - நூனெறி நுணங்கிய கானவில் புரவி - கல்லெனக் கறங்குமணி யியம்ப வல்லோன் - கவர்ச்செல வணக்கி யதர்ப்பரி நெடுந்தே - ரீர்ம்பற வியங்குவழி யறுப்பத் தீந்தொடைப் - பையு ணல்யாழ் சேய்வழி மறப்ப - வின்னிலை வாரா ராயிற் றன்னிலை - யென்கொல் பாண வுணர்த்திசிற் சிறிதெனக் - கடவுட் கற்பின் மடவோள்

கூறச் - செய்வினை யழிந்த மைய னெஞ்சிற் - றுனிகொள் பருவரல் தீர வந்தோ-யினிது செய்தனையால் வாழ்கநின் கண்ணி - வேலி சுற்றிய வால்வீ முல்லைப் - பெருந்தகை கமழும் விரிந்தொலி கதுப்பி-னின்னகை யிளையோள் கலவ - மன்னுக பெருமநின் மலர்ந்த மார்பே.'' இது முன்பு தலைவிக்கு நிகழ்ந்த ஆற்றாமையும் அதுகண்டு தான் கலங்கியவாறுந் தலைவற்குக் கூறியது. "மடவ மன்ற தடவு நிலைக் கொன்றை - கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய - பருவம் வாரா வளவை நெரிதரக் - கொம்புசேர் கொடியிண ரூழ்த்த - வம்ப மாரியைக் காரென மதித்தே.'' இது பருவம் அன்றெனப் படைத்து மொழிந்தது. "எனநீ, தெருமரல் வாழி தோழிநங் காதலர் - பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர் - செருமேம் பட்ட வென்றியர் - வருகென வந்தன்றவர் வாய்மொழித் தூதே.'' இது தூதுவந்தமை தலைவிக்குக் கூறியது. "கைவல் சிறியாழ்ப் பாண நுமரோ - செய்த பருவம் வந்துநின் றதுவே - யெம்மி னுணரா ராயினுந் தம்வயிற் - பொய்படு கிளவி நாணலு - மெய்ய ராகுத லோகோ யானே.'' இது குறித்த பருவத்துத் தலைவன் வாராத வழித் தூதாய்வந்த பாணற்குத் தோழி கூறியது. தூதுவிட்டது வந்துழிக் காண்க. "பதுக்கை தாய வொதுக்கருங் கவலைச் - சிறுகண் யானை யுறுபகை நினையா - தியாங்கு வந்தனையோ பூந்தார் மார்ப - வருள்புரி நெஞ்ச முயாத்தர - விருள்பொர நின்ற விரவி னானே.'' சேணிடைப்பிரிந்து இரவின்வந்துழிக் கூறியது. "ஆமா சிலைக்கு மணிவரை யாரிடை - யேமான் சிலையார்க் கினமா விரிந்தோடுந் - தார்மாண்பில் வெஞ்சுரஞ் சென்றார் வரக்கூறும் - வாய்மாண்ட பல்லி படும்.'' நிமித்தங் காட்டிக் கூறியது. இன்னும் அதனானே நமர் பொருள்வேண்டுமென்றார் அதற்கு யான் அஞ்சினேனெனக் களவின் நிகழ்ந்ததனைக் கற்பிற் தலைவிக்குக் கூறுதலுங் கொள்க. "கன்னவி றோளான் கடிநாள் விலக்குதற் - கென்னை பொருணினைந் தா ரேந்திழாய் - பின்ன - ரமரோற்றுக் கொள்ளுமென் றஞ்சினே னஞ்சார் - நமரோற்றுக் கொள்ளாத ஞான்று.'' எனவரும்.

இன்னுந் தோழிகூற்றாய்ப் பிறவாற்றான் வருவன வெல்லாம் இதனான் அமைக்க. "அன்னை வாழிவெண் டன்னை நம்மூர்ப் - பலர் மடி பொழுதி னலமிகச் சாஅய் - நள்ளென வந்த வியறேர்ச் - செல்வக் கொண்கன் செல்வ னூரே.'' இது புதல்வற்பெற்றுழித் தலைவன் மனைக்கட்சென்ற செவிலிக்கு அறத்தொடு நின்று வதுவைகூட்டிய தோழி அவன் ஊர் காட்டிக் கூறியது.

வகைபட வந்த கிளவி எல்லாம் தோழிக்கு உரிய என்மனு புலவர்=தோழிகூற்றுய்த் தலைவிகூற்றினுள் அடங்குவதன்றித்தோழிக்கே கூறத்தகும் வேறுபாடு உண்டாகவந்த கிளவிகளெல்லாந் தோழிக்கு உரியவென்று கூறுவர் புலவர். எ - று. இச்சூத்திரத்துக் கண்ணுருபும் அவ்வுருபு தொக்குநின்று விரிந்தனவுஞ் செயினென்னும் வினையெச்சமும் உரியவென்னுங் குறிப்புவினை கொண்டன. அவற்றை இன்னவிடத்தும் இன்னவிடத்தும் இன்னதுசெய்யினும் உரியவென்று ஏற்பித்துமுடிக்க. (௯)

கருக. புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணு
மில்லோர் செய்வினை யிகழ்ச்சிக் கண்ணும்
பல்வேறு புதல்வர்க் கண்டுநனி யுவப்பினு
மறையின் வந்த மனையோள் செய்வினை
பொறையின்று பெருகிய பருவரற் கண்ணுங்
காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையிற்
றாய்போற் றழீஇக் கழறியம் மனைவியைக்
காய்வின் றவன்வயிற் பொருத்தற் கண்ணு
மின்னகைப் புதல்வனைத் தழீஇயிழை யணிந்து
பின்னர் வந்த வாயிற் கண்ணு
மனையோ ளொத்தலிற் றன்னோ ரன்னோர்
மிகைபடக் குறித்த கொள்கைக் கண்ணு
மெண்ணிய பண்ணையென் றிவற்றொடு பிறவுங்
கண்ணிய காமக் கிழத்தியர் மேன.

இது காமக்கிழத்தியர் கூற்றெல்லாந் தொகுத்துக் கூறுகின்றது. காமக்கிழத்தியராவார் கடனறியும் வாழ்க்கையுடையராகிக் காமக்கிழமைபூண்டு இல்லறநிகழ்த்தும் பரத்தையர். அவர் பலராதலிற் பன்மையாற் கூறினார். அவர் தலைவன் இளமைப்பருவத்திற் கூடிமுதிர்ந்தோரும், அவன் தலைநின்று ஒழுகப்படும் இளமைப்பருவத்தோரும், இடைநிலைப்பருவத்தோருங், காமஞ்சாலா இளமையோருமெனப் பலபகுதியாம். இவரைக் கண்ணிய காமக்கிழத்தியரெனவே கண்ணாத காமக்கிழத்தியரும் உளராயிற்று. அவர் கூத்தும் பாட்டும் உடையராகிவருஞ் சேரிப்பரத்தையருங் குலத்தின்கண் இழிந்தோரும் அடியரும் வினைவலபாங்கினரும் பிறருமாம். இனிக் காமக்கிழத்தியைப், பார்ப்பார்க்குப் பார்ப்பனியையொழிந்த மூவ

ரும், ஏனையோர்க்குத் தங்குலத்தல்லாதோரும், வரைந்துகொள்ளும் பரத்தையருமென்று பொருளுரைப்பாரும் உளர். அவர் அறியார்; என்னை? சிறப்புடைத்தலைவியரோடு பரத்தையரையுங் கூட்டிக் காமக்கிழத்தியரென்று ஆசிரியர் சூத்திரஞ்செய்யின் மயங்கக்கூற லென்னுங் குற்றந்தங்குமாதலின். அன்றியுஞ் சான்றோர் பலருங் காமக்கிழத்தியரைப் பரத்தையராகத் தோற்றுவாய்செய்து கூறுமாறும் உணர்ந்துகொள்க.

புல்லுதன் மயக்கும் புலவிக்கண்ணும்=தலைவன் தனது முயக்கத்தைத் தலைவியிடத்துந் தம்மிடத்தும் இடைவிட்டு மயக்குதலாற் தலைவிகட்டோன்றிய புலவியிடத்தும்: காமக்கிழத்தியர் புலந்துகூறுப. உ-ம். "மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்கத் - தண்டுறை யூரனெஞ் சேரி வந்தென - வின்கடுங் கள்ளி னிருதை களிற்றொடு - நன்கல னீயு நாண்மகி ழிருக்கை - யவைபுகு பொருநர் பறையி னானது - கழறுப வென்பவவன் பெண்டி ரந்திற் - கச்சினன் கழலினன் றேந்தார் மார்பினன் - வகையமை பொலிந்த வனப்பமை தெரியற் - சுரியலம் பொருநனைக் காணி ரோவென-வாதி மந்தி பேதுற் றினையச் - சிறைபாய்ந் தரைஇச் செங்குணக் கொழுகு - மந்தண் காவிரி போலக் - கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே." இதனுள் எஞ்சேரிவந்தெனக் கூறுபவென்ப அவன்பெண்டிரென முன்னேஞான்று புல்லுதன்மயக்குதலாற் தலைவிபுலந்தவாறும் அதுகண்டு காமக்கிழத்தி கொண்டுகைவலிப்பலெனப் பெருமிதம் உரைத்தவாறுங் காண்க. இது பெருமிதங்கூறலின் இளமைப்பருவத்தாள் கூற்றாயிற்று. "ஒண்டொடி யாயத் துள்ளு நீயந்து-கொண்டனை யென்பவோர் குறுமகள்" எனக் காமஞ்சாலா இளமையோளைக்கூறிற்று. இரட்டுறமொழிதலென்பதனாற் பரத்தையரிடத்துப் புலப்பட ஒழுகாது அவர்புல்லுதலை மறைத்தொழுகலாற் காமக்கிழத்தியர்க்குப் பிறக்கும் புலவிக்கண்ணும் அவர்க்குக் கூற்று நிகழுமெனவும் பொருள் கூறுக. உதாரணம் "கண்டேனின் மாயங் களவாதல் பொய்ந்நகா" என்னும் மருதக்கலியுட்காண்க.

இல்லோர் செய்வினை இகழ்ச்சிக்கண்ணும்=இல்விடத்திருந்த தலைவனுந் தலைவியும் ஊடியும் உணர்த்தியுஞ் செய்த தொழிலைக்கேட்டு இகழும் இகழ்ச்சிக்கண்ணும்: உ-ம். "கழனி மாத்து விளைந்துகு தீம்பழம் - பழன வாளை கதூஉ மூர - னெம்மிற் பெருமொழி கூறித் தம்மிற் - கையுங் காலுந் தூக்கத் தூங்கு - மாடிப் பாவை போல - மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே." "நன்மரங் கு

நீஇய நனைமுதிர் சாடிப்-பன்னா ளரித்த கோதுடை வைப்பின் - மய ங்குமழைத் துவலையின் மறுகுடன் பனிக்கும் - பழம்ப னெல்லின் வேளூர் வாயி - னறுவிரை தெளித்த நாறிணர் மாலை - பொறிவரி யினவண் டூதல் கழியு - முயர்பலி பெறூஉ முருகெழு கதவம் - புனை யிரும் கதுப்பி னீகடுத் தோள்வயி - னனையே னாயி னணங்குக வெ ன்னென - மனையோட் டேற்று மகிழ்ந ராயின் - யார்கொல் வாழி தோழி நெருநனைத் - தார்பூண் களிற்றிற் றலைப்புனைத் தழீஇ - வது வை யீரணிப் பொலிந்த நம்மொடு - புதுவது வந்த காவிரிக் - கொ டுத்தோய் மலிர்நிறை யாடி யோரே." எனவரும். இவையும் இளை யோர் கூற்று. பிறவும் அன்ன.

பல் வேறு புதல்வர்க் கண்டு நனி உவப்பினும்=வெவ்வேறாகிய புதல்வரைத் தாங் கண்டு மிகமகிழ்ச்சிசெய்யினும்: வேறுபல் புதல் வனொன்றார் முறையாற்கொண்ட மனைவியர் பலரும் உளராதலின். "ஞாலம் வறந்தீர" என்னும் மருதக்கலியுள் "அடக்கமில் போழ் தின்கட் டந்தைகா முற்ற - தொடக்கத்துத் தாயுழைப் புக்காற் கவ ளு - மருப்புப்பூண் கையுறை யாக வணிந்து - பெருமான் கைமுகங் காட்டென்பாள் கண்ணீர் - சொரிமுத்தங் காழ்சோர்வ போன்றன ள்" இது முதிர்ந்தாள் உண்ணயந்து கூறியது. "மற்றும், வழிமு றைத் தாயுழைப் புக்கார்க் கவளு - மயங்குநோய் தாங்கி மகனெதிர் வந்து - முயங்கினண் முத்தின னோக்கி நினைந்தே - நினக்கு யாரே, மாகுது மென்று - வனப்புறக் கொள்வன நாடி யணிந்தனள்." இத னுள் நோய்தாங்கினளென இளமைப்பருவத்து மகிழ்ச்சியும் முதிர் ந்த பருவத்து மறவியுந் தோன்றக் கூறுமையினானும் வழிமுறைத்தா யென்றமையானும் இது இடைநிலைப்பருவத்தாள் கூறியது. "அவட் கினிதாக விடுத்தனன் போகித் - தலைக்கொண்டு நம்மொடு காயுமற் றீதோர் - புலத்தகைப் புத்தேளில் புக்கான்." என்றவழிப் புத்தே ளென்றதுவுந் தலைநின்றொழுகும் இளையோனைக் கூறியது. "தந்தை யிறைத்தொடி மற்றிவன் றங்கைகட்-டந்தாய சொல்லா விது" என் றாற்போல அவள் கொடுப்பக்கொள்வனவுங் கொள்க.

மறையின் வந்த மனையோள் செய்வினைப் பொறையின்று பெ ருகிய பருவரற்கண்ணும்; மறையின் வந்த=தலைவற்கு வேறோர் தலைவியோடு களவொழுக்கம் நிகழ்தலின் அவன் செய்திகளின் வேறு பாட்டாற் றமக்குப் புலப்பட வந்த: மனையோள் செய்வினை = மனையோளாதற்குரியாள் தமர்பணித்தலின் நீராடலும் ஆறாடலும் முதலிய செய்தொழில்களைச் செய்யுமிடத்து: பொறை இன்று பெ

ருகிய பருவரற்கண்ணும் = இவள் தோற்றப்பொலிவாற் தலைவன் கடிதின்வரைவனெனக் கருதிய பொறுத்தலின்றி மிகக வருத்தத்தின் கண்ணும்: உ-ம். "வாளை வாளிற் பிறழ நாளும்-பொய்கை நீர்நாய் வைகுதுயி லேற்கும் - கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த - வயல்வெள் ளாம்ப லுருவ நெறித்தழை - யைதக லல்கு லணிபெறத் தைஇ - விழவிற் செலியர் வேண்டு மன்னோ - யாண ரூரன் காணுநனாயின்-வரையா மையோ வரிதே வரையின்-வரைபோல் யானை வாய்மொழி முடியன் - வரைவேய் புரையு நற்றோ - ளிய தோழி தொலையுந பலவே." இதனுள் விழவிற்செல்கின்ற தலைவியைக்கண்டு காமக்கிழத்தி இவர் தோற்றப்பொலிவோடு புறம்போதரக் காணின் வரைவனெனவும் அதனான் இல்லுறைமகளிர பலருந தோள்நெகிழ்பவெனவும் பொறாது கூறியவாறு காண்க.

காதற் சோர்விற் கடப்பாட்டு ஆண்மையிற் தாய்போற் தழீஇக் கழறி அம்மனைவியைக் காய்வு இன்று அவன்வயிற் பொருத்தற்கண்ணும்; காதற் சோர்வில = தானுங் காய்தற்குரிய காமக்கிழத்தி தலைவன் தன்மேற் காதலை மறத்தலானும்: கடபபாட்டாண்மையிற் சோர்வில்=அவற்கு இல்லொடு பழகிய தொல்வரற் கிழமையாகிய ஒப்புரவின்மையானும்: தாயபோற் தழீஇக்கழறி=தலைவியைச்செவிலிபோல உடன்படுத்திக்கொண்டு தலைவனைககழறி: அம்மனைவியைக் காய்வின்று அவன்வயிற் பொருத்தற்கண்ணும்=அத்தலைவியைக் காய்தலின்றாக்கித் தலைவனிடத்தே கூட்டுமிடத்தும்: இது துனிமிகழ்ந்துழித் தலைவனது தலைவளரிளமைக்கு ஒருதுணையாகி முதிராத காமககிழத்தி இங்ஙனங் கூட்டுமென்றார். உ-ம். "வயல்வெள் ளாம்பற் சூடுதெரி புதுப்பூக் - கன்றுடைய புனிற்றா தின்ற மிச்சில் - லோப்புடை கடைபபக டாரு மூரன் - றொடர்புநீ வெஃகினை யாயினென்சொற் - கொள்ளன் மாதோ முள்ளெயிற் றோயே - நீயே பெருநலத் தகையே யவனே - நெடுநீர்ப பொய்கை நடுநா ளெய்தித் - தண்கமழ் புதுமல ரூதும் - வண்டென மொழிப மகனென் னாரே." இதனுள் நீ இளமைச்செவ்வியெல்லாம் நுகர்ந்து புதல்வற்பயந்த பின்னர் உழுதுவிடு பகடு எச்சிலை அயின்றாற்போலப் பிறர் அவனை நுகர்ந்தமை நினக்கு இழுக்கன்றெனவும் அவனோடு கூட்டம் நெடுங்காலம் நிகழ்த்தவேண்டும் நீ அவள் அவனோடு கட்டில்வரை எய்தியிருக்கின்றாளென்று ஊரார்கூறுகின்ற சொல்லை என்னைப்போல வேறுபட்டுக் கொள்ளாதே கொள்வது நின் இளமைக்கும் எழிற்கும் ஏலாதெனவும் அவனை வண்டென்பதன்றி மகனென்னாதலின் அவன் கடப்பாட்டாண்மை அதுவென்றுங் கூறினாள். இனி "என்

சொற்கொள்ளன்மாதோ"என்பதற்கு என்வார்த்தையைக் கேட்டல் நினக்கு விருப்பமோ விருப்பமாகில் யான்கூறுகின்றதனைக் கொள்க. "ஈண்டு பெருந்தெய்வத் தியாண்டுபல கழிந்தெனப் - பார்த்துறைப் புணரி யலைத்தலிற் புடைக்கொண்டு - மூத்துவினை போகிய முரிவா யம்பிநல் - லெருது நடைவளம் வாய்த்தென வுழவர் - புல்லுடைக் காவிற் றொழில்விட் டாங்கு - நறுவிரை நன்புகைக் கொடாஅச் சிறுவிலை - ஞாழலொடு கெழீஇய புன்னையங் கொழுநிழன் - முழவு முதற் பிணிக்குந் துறைவ நன்றும் - விழுமிதிற் கொண்ட கேண்மை நொவ்விதிற் - றவறுநன் கறியா யாயி னென்போல் - நெகிழ்தோட் கலுழ்ந்த கண்ணர் - மலர்தீய்ந் தனையர் நின்னயந் தோரே." இத னுள் மூத்துவினை போகிய அம்பிபோலப் பருவஞ்சென்ற பிணிக்கப் பட்ட எம்மைப்போலாது இவள் இப்பருவத்தே இனையளாகற்பால ளோ மலர்ந்தசெவ்வியான் முறைவீயாய்க கழியாது இடையே எரிந் து கரிவுற்ற பூவினைப்போலவெனத் தலைவனுக்குக் காமக்கிழத்தி கூறியவாறு காண்க.

இன் நகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து பின்னர் வந்த வாயிற்கண்ணும் ; இன்நகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து =கண்டோர்க்கெல்லாம் இன்பத்தைப் பயக்கும் புதல்வனை எடுத் துப் பொலங்கலத்தாற் புனைந்துகொண்டு: பின்னர் வந்த வாயிற் கண்ணும்=பலவாயில்களையும் மறுத்தபின்னர் வாயிலாகக் கொண்டு புகுந்த வாயிலின்கண்ணும்: உ-ம். "என்குறித் தனன்கொல் பாண நின் கேளே - வன்புறை வாயி லாகத் தந்த - பகைவரு நகூஉம் புத ல்வனை - நகுவது கண்டு நகூஉ மோரே." இதனுள் வன்புறை வாயி லாகிய புதல்வனைக் கண்டு நகுவாளைத் தனக்கு நகுவாளைப்போல நகாநின்றானெனக் காமக்கிழத்தி கூறிய வாயில்நேர்ந்தவாறு காண்க. பகைவரும் நகூஉமெனவே தான் புலக்கத்தகுந் தலைவியருடைய புதல்வனென்றாளாயிற்று.

மனையோள் ஒத்தலிற் றன்னோர் அன்னோர் மிகைபடக் குறித்த கொள்கைக்கண்ணும் ; மனையோள் ஒத்தலின்=தானும் உரிமைபூண் டமைபற்றி மனையோளொடு தானும் ஒததாளாகக் கருதுதலின்: தன்னோர் அன்னோர் மிகைபடக் குறித்த கொள்கைக்கண்ணும்= தன்னை ஒக்கும் ஏனைமகளிரிற் றன்னை விசேடமுண்டாகக் குறித்துக் கொண்ட கோட்பாட்டின்கண்ணும்: உ-ம். "புழற்காற் சேம்பின் கொழுமட லகலிலைப் - பாசிப் பரப்பிற் பறழொடு வதிந்த - வுண் ணாப் பிணவி னுயக்கஞ் சொலிய-நாளிரை தரீஇய வெழுந்த நீர்நாய்

வாளையொ டுழப்பத் துறைகலுழ்ந் தமையிற் - றெண்கட் டேறன் மாந்திய மகளிர் - நுண்செய லங்குட னிரீஇப் பண்பின் - மகிழ் நன் பரத்தை பாடிய விழிணர்க் - காஞ்சி நீழற் குரவை யயரும் - தீம்பெரும் பொய்கைத் துறைகெ ழூரன் - றேர்தர வந்த நேரிழை மகளி - ரேசுப வென்பவென் னலனே யதுவே - பாக னெடிதுயிர் வாழ்தல் காய்சினக் - கொல்களிற் றியானை நல்கா மாறே - தாமும் பிறரு முளர்போற் சென்றனர் - முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவினுள் - யானவண் வாரா மாறே வரினே - சுடரொடு திரிதரு நெருஞ்சி போல - வென்னொடு திரியே னாயின் வென்வேன் - மாரி யம்பின் மழைத்தோற் சோழர் - வில்லீண்டு குறும்பின் வல்லத்துக் குறுமிளை - யாரியர் படையி னுடைகவென் - னேரிறை முன்கை வீங்கிய வளையே." இதனுள் யான் அவண் வாராமாறே எனத் தான் மனையோளைப்போல் இல்லுறைதல்கூறி யாண்டுச்செல்லிற் சுட ரொடுதிரியும் நெருஞ்சிபோல என மகளிரை யான்செல்வுழிச் செல்லுஞ் சேடியர்போலத் திரியும்படி பண்ணிக்கொள்வலெனக் கூறியவாறு காண்க.

எண்ணிய பண்ணை—தலைவற்குத் தருமென்று ஆய்ந்த யாறுங் குளனுங் காவும் ஆடிப் பதியிகந்து நுகர்தல்போல்வனவற்றுக்கட். தாமும் விளையாடுதற்கண்ணும்: உ-ம். "கூந்த லாம்பன் முழுநெறி யடைச்சிப்-பெரும்புனல் வந்த விருந்துறை விரும்பி - யாமஃ தயர் கஞ் சேறுந் தானஃ - தஞ்சுவ துடைய ளாயின் வெம்போர் - நுகம் படக் கடக்கும் பலவேலெழினி - முனையான் பெருநிரை போலக் - கிளையொடு காக்கதன் கொழுநன் மார்பே." இதனுள் யாமஃதயா கஞ்சேறும் என விளையாட்டுக்கூறினாள்.

என்று இவற்றொடு பிறவும்—இக்கூறியவற்றின்கண்ணும், புத ல்வற்கண்டு நனியுவப்பினுங் கூற்றுநிகழுமென்று கூறப்பட்ட இவ் வெட்டோடே பிறகூற்றுக்களும்: கன்னிய காமக்கிழத்தியர் மேன —இக்கருதப்பட்ட காமக்கிழத்தியரிடத்தன. எ-று. கூற்றென்பது அதிகாரத்தான் வருவிக்க; ஓம்வென்றது, உருபு; கண்ணுதல், ஒருமனத்தெருவின்கண் உரிமைபூண்டு இல்லறநிகழ்த்துவனொன்று சிறப் புக்கருதுதல். பிறவு மென்றதனுல் தலைவனை என்னலந் தாவெனத் தொடுத்துக்கூறுவனவும், நின்பரத்தைமையெல்லாம் நின்றலைவிக்கு உரைப்பலெனக் கூறுவனவுஞ், சேரிப்பரத்தையரொடு புலந்துரைப் பனவுந், தலைவிகூற்றோடொத்து வருவனவும் பிறவுங் கொள்க. "தொடுத்தென மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்-பொலம்பூ ணன்ன புனுடு கடிந்தென-யாழிசை மறுகிற் பாழி யாங்க - னஞ்ச லென்

ற வாது யேயின - ஙிகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித் - தன்னு யிர் கொடுத்தனன் சொல்லிய தமையாது - தெறலருங் கடவுண் முன்னர்த் தேற்றிய - மெல்லிறை முன்கை பற்றிச் சொல்லிறந் - தார்வ நெஞ்சு தலைத்தலைச் சிறப்பநின் - மார்புதரு கல்லாய் பிறனு யினையே - யினியான் விடுகுவெ னல் லன் மந்தி - பனிவார் கண் ணன பல்புலந் துறையக்-கடுந்திற லத் யாடணி நசைஇ-நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்குநின் - மனையோள் வெளவலு மஞ் சுவல் சினைஇ - யாரிய ரலறத் தாக்கிய பேரிசைத் - தோன்று முதிர் வடவரை வணங்குவிற் பொறித்து - வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன் - வஞ்சி யன்னவென் னலந்தந்து சென்மே.'' இது காமக்கிழத்தி என்னலந்தாவென்றது. "உள்ளுதொறு நகுவென் றோழி வள்ளுகிர் - மாரிக் கொக்கின் கூரல கன்ன - குண்டுநீ ராம் பற் றண்டுறை யூரன் - றேங்கம ழைம்பால் பற்றி யெம்வயின் - வான்கோ லெல்வளை வெளவிய பூசல் - சினவிய முகத்துச் சின வாது சென்றுநின் - மனையோட் குரைப்ப லென்றலின் முனையூர்ப்- பலர்நெடு நெறிநிரை வில்லி நொய்யுந் - தேர்வண் மலையன் முந் தைப் பேரிசைப் - புலம்புரி வயிரியர் நலம்புரி முழவின் - மண் ணூர் கண்ணி னதிரு - நன்ன ராள னடுங்கஞர் நிலையே.'' இது மனையோட்கு உரைப்பலென்றலின் நடுங்கினுனென்றது. "கண்டே னின்மாயம்'' என்னும் மருதக்கலியுள் "ஆராக் கவவி னொருத்தி வந் தல்கற்றன் - சீரார் ஞெகிழஞ் சிலம்பச் சிவந்துநின் - போ ரார் கதவ மிதித்த தமையுமோ * * * தேறிநீ தியே னலேனென்று மற்றவள் - சீறடி தோயா விறுத்த தமையுமோ.'' எனச்சேரிப்பரத் தையராற் புலந்து தலைவனோடு கூறியவாறுகாண்க. இன்னும் இத னுனே "நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த - வாளை வெண் போத் துணீஇய நாரைதன் - னடியறி வுறுத லஞ்சிப் பையப்பயக்- கடியில போலச் சாஅ யொதுங்குந் - துறைகெ ழூரனொ டொல்கா தாகக் - கவினிநா ளுண்டோ வருகதி லம்மவெஞ் - சேரிசேர், வரிவே யுண்கண் வன்பெண்டிர் காணத் - தாருந் தானையும் பற்றி யாரி யர் - பிடிபயிர்ந்து தரூஉம் பெருங்களிறு போலத் - தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன் - மார்பு கடிகொள்ளே னாயி னார்வுற் - றிரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போற் - பரந்து வெளிப் படா தாகி - வருந்துக தில்லயா யோம்பிய நலனே.'' இதனுட் பரந்து வெளிப்படாது வருந்துக என்னலம் என்றமையிற் சேரிப் பரத்தையைப் புலந்து கூறுதன்முதலியனவுங் கொள்க. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக. (௬O)

கருஉ. கற்புங் காமமு நற்பா லொழுக்கமு
மெல்லியற் பொறையு நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலுஞ் சுற்ற மோம்பலும்
பிறவு மன்ன கிழவோள் மாண்புகண்
முகம்புகன் முறைமையிற் கிழவோற் குரைத்த
லகம்புகன் மரபின் வாயில்கட் குரிய.

இது விருந்துமுதலிய வாயில்கள்போலாது அகநகர்க்கட் புகுதற்குரிய வாயில்கள்கூற்று உணர்த்துகின்றது. (இ-ள்.) கற்பும்=கணவன்முதலியோர் கற்பித்த நிலையிற் றிரியாத நல்லொழுக்கமும்: காமமும்=அன்பும்: நற்பால் ஒழுக்கமும்=எவ்வாற்றானுந் தத்தங் குலத்திற்கு ஏற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கமும்: மெல் இயற் பொறையும் = வல்லென்ற நெஞ்சொடு பொறுக்கும் அவனைப்போலாது ஒருதலையாக மெல்லென்ற நெஞ்சினராய்ப் பொறுக்கும் பொறையும்: நிறையும்=மறை புலப்படாமை நிறுக்கும் நெஞ்சுடைமையும் : வலலிதின் விருந்து புறந்தருதலும்=வறுமையுஞ் செல்வமுங் குறியாது வல்லவாற்றான் விருந்தினைப் பாதுகாத்து அவர் மனமகிழ்வித்தலும் : சுற்றம் ஓம்பலும்=கொண்டோன்புரக்கும் நண்புடை மாந்தருஞ் சுற்றத்தாருங் குஞ்சரமுதலிய காலேசங்களும் பலபடைமாக்களும் உள்ளிட்ட சுற்றங்களைப் பாதுகாத்து அவை உண்டபின் உண்டலும் : அன்ன பிறவுங் கிழவோள் மாண்புகள்=அவைபோல்வன பிறவுமாகிய தலைவியுடைய மாட்சிமைகளை : முகம்புகன்முறைமையிற் கிழவோற்கு உரைத்தல் = அவன்முகம்புகலும் முறைகாரணத்தாற் தலைவற்குக் கூறுதல்: அகம்புகன் மரபின் வாயில்கட்கு உரிய=அகநகர்க்கட் புகுந்து பழகி அறிதன்முறைமையினையுடைய வாயில்களுக்குரிய. எ-று. அன்னபிறவாவன அடிசிற்றொழிலுங், குடிநீர்மைக்கேற்றவகையான் ஒழிந்த தலைமகளிரையும் மனமகிழ்வுறுத்தலுங், காமக்கிழத்தியர் நண்புசெய்து நன்குமதிக்கப்படுதலும்போல்வன. புகலுதல், மகிழ்தல். செவிலி கூற்றுமை கொள்க, அவட்கு முகம்புகன்முறைமையின்மையின். உ-ம். "கடல்பா டவிந்து தோணி நீங்கி - நெடுநீ ரிருங்கழிக் கடுமீன் கலிப்பினும் - வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினு - மாணிழை நெடுந்தேர் பாணி நிற்பப் - பகலு நம்வயி னகலா னாகிப் - பயின்றுவரு மன்னே பனிநீர்ச் சேர்ப்ப - னினியே, மணப்பருங் காமந் தணப்ப நீங்கி-வாரா தோர் நமக் கியாஅ ரென்னாது - மல்லன் மூதூர் மறையினை சென்று - சொல்லி னெவனோ பாண வெல்லி - மனைசேர் பெண்ணை மடல்வா யன்

றி - றுணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக் - கண்ணிறை நீர்கொண்டு கரக்கு - மொண்ணுத லரிவையா னென்செய்கோ வெனவே.'' இதனுட் காமமிகுதியாற் கண் தாமே அழவுங் கற்பிற் காக்குமெனத் தலைவி பொறையும் நிறையுந் தோழி பாணற்குக் கூறினாள், அவன் தலைவற்கு இவ்வாறே கூறுவனெனக் கருதி. இனி என்றதனாற் கற்புப்பெற்றும். தலைவற்குக் கூறுவன வந்துழிக் காண்க. ''வாயி லுசாவே தம்முள் ளுரிய'' என்பதனாற் தலைவற்கு உரையாமற் தம்முட் தாமே உசாவுவனவும் ஈண்டேகொள்க. ''அணி நிற வெருமை யாடிய வள்ளன் - மணிநிற நெய்த லாம்பலொடு கலிக்கும் - கழனி யூரன் மகளிவள் - பழன வூரன் பாயலின் றுணையே.'' இது கற்புக்கூறியது. ''முளிதயி ரிசைந்த'' என்பது அடிசிற் தொழிலின்கண் மகிழ்ச்சி வாயில்கள் தம்முட் கூறியது. ''கிழமை பெரியோர்க்குக் கேடின்மை கொல்லோ - பழமைப் பயனோக்கிக் கொல்லோ - கிழமை - குடிநாய்கர் தாம்பலர் பெற்றருட் கேளா - யடிநாயேன் பெற்ற வருள்.'' பலவாயில்களை மறுத்த தலைவி தனக்கு வாயில் நேர்ந்தமை தோழிக்கு விறலிகூறியது. (கக)

கரு௫. கழிவினும் வரவினு நிகழ்வினும் வழிகொள
நல்லவை யுரைத்தலு மல்லவை கடிதலுஞ்
செவிலிக் குரிய வாகு மென்ப.

இது செவிலிகூற்று உணர்த்துகின்றது. (இ-ள்) கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள=மூன்றுகாலத்துந் தத்தங் குலத்திற்கு ஏற்கும்படியாக: நல்லவை உரைத்தலும்=முற்கூறிய கற்பு முதலிய நல்லவற்றைக் கற்பித்தலும்: அல்லவை கடிதலும்=காமநுகர்ந்த இன்பமாகிய கற்பிற்குத் தீயவற்றைக் கடிதலும்: செவிலிக்கு உரிய ஆகும் என்ப = செவிலித்தாய்க்கு உரியவாகுமென்று கூறுவர் புலவர். எ-று. உ-ம். ''கட்கினியாள் காதலான் காதல் வகைபுனைவா-ளுட்குடையா ளூரா ணியல்பினா - ளுட்கி - யிடனறிந் தூடி யினிதி னுணரு - மடமொழி மாதராள் பெண்.'' கட்கினியாள், இது காமம்; வகைபுனைவாள், இது கற்பு; உட்குடையாள், இது ஒழுக்கம்; ஊராண்மை, இது சுற்றமோம்பல்; ஊடியுணர்தல், அல்லவைகடிதல். ''நாலாறு மாறாய் நனிசிறிதா யெப்புறனு - மேலாறு மேலுறை சோரினு - மேலாய - வல்லாளாய் வாழுமூர் தற்புகழு மான்கற்பி - னில்லா ளமர்ந்ததே யில்.'' என்னும் வெண்பா விருந்துபுறந்தருதல் கூறியதுமாம். இனி ஆகுமென்றதனானே செவிலி நற்றாய்க்கு உவந்துரைப்பனவுங் கொள்க. ''கானங் கோழிக் கவர்குரற் சேவ - லொண்

பொறி யெருத்திற் றண்சித ருறைப்பப் - புதனீர் வாரும் பூநாறு புறவிற்-சீறூ ரோளே மடந்தை வேறூர் - வேந்துவிடு தொழிலொடு செல்லினுஞ் - சேர்ந்துவர லறியாது செம்ம றேஎ." "மறியிடைப் படுத்த மான்பிணை போலப் - புதல்வனை யிவண தாளுக நின்று - மினி துமன் றம்மவவர் கிடக்கை முனிவின்றி - நீர்நின்ற வியலகங் கவை இய - வீனு மும்பரும் பெறலருங் குரைத்தே." "வாணுத லரிவை மகன்முலை யூட்டத் - தானவள் சிறுபுறங் கவையின னன்று - நறும் பூந் தண்புற வணிந்த - குறும்பல் பொறைய நாடுகிழ வோனே." இவை உவந்துகூறியன. "பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால் - விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப் - புடைப்புறத் தாற்று பூந்தலைச் சிறுகோ - லுண்ணென் றோக்குபு புடைப்பத் தெண் ணீர்-முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற் - றரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர் - பரீஇமெலிந் தொழியப் பந்த ரோடி - யே வன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி - யறிவு மொழுக்கமும் யாண் டுணர்ந் தனள்கொல் - கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக் - கொடுத்த தந்தை கொழுஞ்சோ றுள்ளா - ளொழுகுநீர் நுணங் கறல் போலப் - பொழுதுமறுத் துண்ணுஞ் சிறுமது கையளே." மனையறங் கண்டு மருண்டு உவந்து கூறியது. "அடிசிற் கினியாளை யன்புடை யாளைப் - படுசொற் பழிநாணு வாளை - யடிவருடிப் - பின் றூங்கி முன்னுணரும் பேதையை யான்பிரிந்தா - லென்றூங்குங் கண்க ளெனக்கு." என்னும் பாட்டுச் செவிலிகூற்றன்றாயினுந் தலை வன் மனையறங்கண்டு கூறியதன்பாற் படுமெனக் கொள்க. (கஉ)

## கருச. சொல்லிய கிளவி யறிவர்க்கு முரிய.

இது அறிவரது கூற்றுக் கூறுகின்றது. (இ - ள்.) முற்கூறிய நல்லவையுணர்த்தலும் அல்லவைகடிதலுமாகிய கிளவி செவிலிக்கே யன்றி அறிவர்க்குமுரிய. எ-று. என்றது, அறியாத தலைவியிடத்துச் சென்று அறிந்தார் முன்னுள்ளோர் அறம்பொருளின்பங்களாற்கூறிய புறப்புறச் செய்யுட்களைக் கூறிக் காட்டுவரென்பதாம். உ-ம். "தெய் வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழு வாள் - பெய்யெனப் பெ ய்யு மழை." "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற - சொற்காத்துச் சோர்விலாள் பெண்." "மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான் - வளத்தக்காள் வாழ்க்கைத் துணை." இவை நல்லவையுணர்த்தல். "எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை - யட்டில் புகாதா ளரும்பிணி - யட்டதனை - யுண்டி யுத வாதா ளில்வாழ்பே யிம்மூவர் - கொண்டானைக் கொல்லும் படை."

"தலைமகனிற் றீர்ந்தொழுகல் தான்பிறரிற் சேற - னிலைமையி றீப் பெண்டீர்ச் சார்தல் - கலனணிந்து-வேற்றூர் புகுதல் விழாக்காண்ட ஞேன்பெடுத்தல் - கோற்றொடியார் கோளழியு மாறு." இவை அல்லவைகடிதல். இவை அறிவர்கூற்றுதலிற் புறப்புறப் பொருளாயிற்றென உணர்ந்துகொள்க. (கங)

கருரு. இடித்துவரை நிறுத்தலு மவர தாகும்
கிழவனுங் கிழத்தியு மவர்வரை நிற்றலின்.

இது அறிவர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது. (இ - ள்.) கிழவனுங் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்=தலைவனுந் தலைவியும் அவ்வறிவரது ஏவலைச்செய்து நிற்பராதலின்: இடித்து வரை நிறுத்தலும் அவரது ஆகும்=அவரைக் கழறி ஓரெல்லையிலே நிறுத்தலும் அவ்வறிவரது தொழிலாம். எ-று. அது உணர்ப்புவயின் வாராது ஊடிய தலைவிமாட்டு ஊடிஞனையும் உணர்ப்புவயின் வாராது ஊடிஞனையுங் கழறுப. "உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயுந்-தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி - விழவொடு வருதி நீயே யிஃதோ-வோரா வல்சிச் சீரில் வாழ்க்கை-பெருநலக் குறுமகன் வந்தென-வினிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே." இது தலைவனைக்கழறியது. "மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை-யெனைமாட்சித் தாயினு மில்." இது தலைவியைக்கழறியது. (கச)

கருசு. உணர்ப்புவரை யிறப்பினுஞ் செய்குறி பிழை[ப்பினும்
புலத்தலு மூடலுங் கிழவோற் குரிய.

இது தலைவற்குப் புலவியும் ஊடலும் நிகழுமிடங் கூறுகின்றது. (இ-ள்.) உணர்ப்புவரை இறப்பினும்=கற்பிடத்துத் தலைவி ஊடியவழி அவன் தேற்றத் தேறுமெல்லை இகழ்ந்தாளாயினும்: செய்குறி பிழைப்பினும்=களவின்கட் தலைவிசெய்த குறியைத் தானே தப்பினும்: புலத்தலும் ஊடலுங் கிழவோற்கு உரிய = உள்ளஞ் சிறிது வேறுபடுதலும் அவ்வேறுபாடு மிக்கு நீடுகின்று தேற்றியக்கால் அதுநீங்குதலுந் தலைவற்குரிய. எ-று. எனவே, கற்பிற்கும் புலத்தலும் ஊடலும் உரிய, களவிற்கும் புலத்தலும் ஊடலுமுரியவென்றார். புலவியும் ஊடலுங் கற்பிற்கே பெரும்பான்மை நிகழ்தலிற் கற்பிற்கு அவை உரியவென்கின்றார், அவை களவிற்குஞ் சிறுபான்மை உரிமைபற்றிச் சேரக் கூறினர், சூத்திரச் சுருக்கம் நோக்கி. "எவ்வி யிழந்த வறுமையர்" இது கற்பிற் புலந்தது. "தீஇ

லோ மென்று தெளிப்பவுங் கைந்நீவி - யாதொன்று மெங்ஙன் மறுதா வில்லாயின்'' என்பது ஊடல். பிற இடத்தும் ஊடுதல் அறிந்துகொள்க. "கலந்தநோய் கைமிகக் கண்படா வெம்வயிற் - புலந்தாயு நீயாகிற் பொய்யானே வெல்குவை'' என்பது குறிபிழைத்துழிப்புலந்தது. "குணகடற் றிரையது பறைதபு நாரை'' என்பதனுள் நாரை தெய்வங் காக்கும் அயிரையம்பொற்றுறை இரையை வேட்டாற்போல் நமக்கரியளாயினுளை வேட்டாயென்பதனாற் குறிபிழைத்துழி ஊடினமை கூறிற்று. பிறவும் இவ்வாறுவருவன உய்த்துணர்ந்துகொள்க. (௧௫)

௧௫௭. புலத்தலு மூடலு மாகிய விடத்துஞ்
சொலத்தகு கிளவி தோழிக் குரிய.

இது முன்னர்த் தலைவன் புலக்குமென்றார், அவ்விடத்துந் தோழியே கூற்றுநிகழ்த்துதற்கு உரியளென்கின்றது. (இ-ள்.) புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும் = தலைவன் தலைவியையுந் தோழியையும் அச்சுறுத்தற்குச் செய்கையாகச்செய்துகொண்டு புலத்தலும் அது நீட்டித்து ஊடலும் உடன் நிகழ்த்தியவழியும்: சொலத் தகு கிளவி தோழிக்கு உரிய=சொல்லத்தகும் பணிமொழி தோழிக்கு உரிய. எ-று. எனவே, தலைவிகுறிப்பறிந்து தோழிகூறுதலன்றித் தலைவி தானே கூறப்பெறாளென்றவாறு. எனவே பாடாண்டிணைக் கைக்கிளையாயிற் தலைவிகூறவும் பெறுமென்றுகொள்க. உம்மை சிறப்பும்மை. உ-ம். "தாயுயிர் வேண்டாக் கூருகி ரலவ - னாரின்று பரிக்கு மூர யாவது - மன்புமுத லுறுத்த காத -லின்றெவன் பெற்றனை பைந்தொடி திறத்தே.'' "அலந்தாரை யல்லனோய் செய்தற்றூற் றம்மைப் - புலந்தாரைப் புல்லார் விடல்.'' எனவரும். இவை கற்பிற் தலைவிகுறிப்பினாற் தோழிகூற்று வந்தன. "புலந்தாயு நீயாகிற் பொய்யானே வெல்குவை'' என்று களவிற் தோழிகூறினாள் தலைவிகுறிப்பினால். "கனைபெய னடுநாள்வான் கண்மாறக் குறிபெறான் - புனையிழா யென்பழி நினக்குரைக்குந் தானென்ப - துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளிற்றன் - னளிநசை யார்வுற்ற வன்பினேன் யானுக.'' எனத் தோழி சொல்லெடுப்புதற்குத் தலைவி சிறுபான்மை கூறுதலும் ஈண்டு உரியவென்றதனாற் கொள்க. "யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதன் - றானூட யானுணர்த்தத் தானுணரான் - றேனூறுங் - கொய்தார் வழுதிக் குளிர்சாந் தணியகலம் - மெய்தற் கிராக்கழிந்த வாறு.'' இதனுள் யானுணர்த்தத் தானுணரானெனப் பாடாண்டிணைக்கைக்கிளையுட் தலைவி கூறியதுகாண்க.

கருஅ. பரத்தை மறுத்தல் வேண்டியுங் கிழத்தி
மடத்தகு கிழமை யுடைமை யானு
மன்பிலை கொடியை யென்றலு முரியள்.

இது சொல்லத்தகுங் கிளவியேயன்றிச் சொல்லத்தகாத கிளவியுந் தோழி கூறுமென எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துகின்றது. (இ-ள்.) பரத்தை மறுத்தல் வேண்டியும்=தலைவன் படிற்றுள்ளத்தாற் புறத்து ஒழுகும் ஒழுக்கத்தைப் போக்குதல்விரும்பியும்: கிழத்தி மடத்தகு கிழமை உடைமையானும்=தலைவி அவன் பரத்தைமை அறிந்தேயும் அவன்கூறியவற்றை மெய்யெனக்கொண்டு சீற்றங்கொள்ளாது ஒழுகும் மடனென்னுங் குணத்திற்கு ஏற்றன அறிந்தொழுகும் உரிமையுடையளாகிய என்மையானும்: அன்பிலை கொடியை என்றலும் உரியள்=தலைவனை அன்பிலையென்றலுங் கொடியையென்றலுமுரியள் தோழி. எ-று. கொடுமை கடையாயினார் குணம். களவினுட் தன்வயினுரிமையும் அவன்வயிற் பரத்தைமையுங்கோடலின் இதற்குப் பரத்தைமை மறுத்தல்கொள்க. உ-ம். "கண்டவரில்லென வுலகத்து ளுணராதார்- தங்காத தகையின்றித் தாஞ்செய்யும் வினைகளு - ணெஞ்சறிந்த கொடியவை மறைப்பினு மறிபவர் - நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை யாகலின்; வன்பரி நவின்ற வயமான் செல்ல - நன்றதை யறியினு நயனில்லா நாட்டத்தா - லன்பிலை யெனவந்து கழறுவ லையகேள்; மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூ ழிளமுலை - முகிழ்செய மூழ்கிய தொடர்பவ ளுண்க-ணவிழ்பனி யுறைபபவு நல்காது விடுவா - யிமிழ்திரைக் கொண்க கொடியை காணீ; யிலங்கேே ரெல்வளை யெய்தழை யல்கு - லலஞ்செல நல்கிய தொடர்பவள் சாய்ந்து - புலந்தழ வுலந்தநீஇப் புல்லாது விடுவா-யிலங்குநீர்ச் சேர்ப்ப வலியை காணீ; எனவாங், கனைய ளிவளை, ன் றளிமதி பெருமநின்-னறிவரை யிலலா வனைய ளிவட்குப் - பிறையேர் சிறுநுதற் பசலை - மறையச் செல்லுநீ மணந்தனை விடினே." என்னும் நெய்தற்கலி கைகோள் இரண்டிற்குங் கொள்க. (௧௭)

கருகூ. அவன்குறிப் பறிதல் வேண்டியுங் கிழவி
யகன்மலி யூட லகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே.

இது தலைவிக்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துகின்றது. (இ-ள்.) அவன் குறிப்பு அறிதல் வேண்டியும்=தோழி அன்பிலை

கொடியையெனக் கேட்ட தலைவன் முனிந்த உள்ளத்தனுங்கொல்லோவென ஐயுற்று அவனதுகுறிப்பை அறிதல்வேண்டியும்: அகன்மலி ஊடல் அகற்சிக்கண்ணும்=தனது நெஞ்சில் நிறைந்துநின்ற ஊடல் கையிகந்து துனியாகியவழி இஃது அவற்கு எவனுங்கொல்லென அஞ்சியவழியும்: கிழவி வேற்றுமைக்கிளவி தோற்றவும் பெறும்=தலைவி தலைவனோடு அயன்மையுடையசொல்லைத் தோற்றுவிக்கவும் பெறும். எ-று. உ-ம். "நன்னலந் தொலைந்து நலமிகச் சாஅயின்னுயிர் கழியினு முரைய லவர்நமக் - கன்னையு மத்தரு மல்லரோ தோழி - புலவிய தெவனோ வன்பிலங் கடையே." இதனுள் அவரை அன்பிலை கொடியையென்றுதி, அன்பில்வழி நின்புலவி அவரை என் செய்யும், அவர்நமக்கு இன்றியமையாத எமரல்லரோவென இருவகையானும் அயன்மை கூறியவாறு காண்க. (கஅ)

கசூ0. காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற் குரித்தே
வழிபடு கிழமை யவட்கிய லான.

இது தலைவி வேற்றுமைக்கிளவி தோற்றியபின்னர்த் தலைவற்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) காமக் கடப்பினுட் பணிந்த கிளவி=அங்ஙனந் தலைவிகண்ணுந் தோழிகண்ணும் வேறுபாடு கண்டுழித் தனக்குக் காமங் கையிகந்துழித் தாழ்ந்துகூறுங் கூற்று: காணுங் காலை கிழவோற்கு உரித்தே=ஆராயுங்காலத்துத் தலைவற்கு உரித்து: வழிபடு கிழமை அவட்கு இயலான=அவனை எஞ்ஞான்றும் வழிபட்டொழுகுதல் தலைவிக்கு இல்லறத்தோடு பட்ட இயல்பாகலான். எ-று. உ-ம். "ஆயிழாய், நின்கண் பெறினல்லாலின்னுயிர் வாழ்கல்லா - வென்கணெவனோ தவறு." "கடியதமக்கியார்சொலத்தக்கார்" "மற்றுநின் ஞாணை கடக்கிற்பா ரியார்" என்றாற்போல்வன கொள்க. காணுங்காலை என்றதனாற் தலைவன் தலைவியெதிர் புலப்பது தன்றவறு சிறிதாகிய இடத்தெனவும் இங்ஙனம் பணிவது தன்றவறு பெரிதாகிய இடத்தெனவுங்கொள்க. ()

கசூக. அருண்முந் துறுத்த வன்புபொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட்கு முரித்தே.

இது தலைவன் பணிந்து மொழிந்தாங்குத் தலைவியும் பணிந்து கூறுமென்கின்றது. (இ-ள்.) அருள்முந்துறுத்த அன்பு பொதி கிளவி=பிறர் அவலங் கண்டு அவலிக்கும் அருள் முன் தோற்று

வித்த அவ்வருள் பிறத்தற்கு ஏதுவாகி எஞ்ஞான்றும் அகத்து நிக ழும் அன்பினைக் கரந்துசொல்லுங் கிளவி: பொருள் பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே = பணிந்தமொழி தோற்றாது வேறோர் பொருள் பயப்பக்கூறுதல் தலைவிக்கும் உரித்து. எ-று. வேறுபொ ருளாவது தலைவன் கூறியாங்குத் தானும் பணிந்து கூறுவாள், பணியாதே தன் நெஞ்சு தன்னையுங் கைகடந்து அவன் ஏவலைச் செய்ததென்றாற்போலக் கூறுதலுமாம். இது "தன்வயிற் கரத்த லு மவன்வயின் வேட்டலும்" எனப்பொருளியலுள் வழுவமைத் தற்கு இலக்கணம். "இணையிரண்டு" என்னும் மருதக்கலியுள் "மாசற மண்ணுற்ற மணியேசு மிருங்கூந்தல் - வீசேர்ந்து வண் டார்க்குங் கவின்பெறல் வேண்டேன்ம - ஞெய்சேர்ந்த திறம்பண் ணி நினபாண னெம்மனை - நீசேர்ந்த வில்லினுய் வாராமை பெறு கிற்பின்" எனக் கூறிய தலைவி "கடைஇய நின்மார்பு தோயல மென்னு - மிடையு நிறையு மெளிதோ நிறகாணிற் - கடவுபுகைத் தாங்கா நெஞ்சென்னுந் தம்மோ - டெனவாழ் பகையுடை யார்க்கு." என்றாழி நிற்காணிற் கடவுபுகைத் தாங்காநெஞ்செனவே அவன் ஆற்றாமை கண்டருளி நெஞ்சு ஏவல்செய்ததென வேறோர் பொ ருள் பயப்பக் கூறித் தன் அன்பினைக் கரந்தவாறு காண்க. "கூர்முனைமுள்ளி" எனபதனுட் "சிறுபுறங் கவையினன்" என அவள்வருந்தியது ஏதுவாகத் தான் மண்போன் ஞெகிழ்ந்தேனென அருண்முந்துறுத்தவாறும், இவை பாராட்டிய பருவமும் உள வென அன்புபொதிந்து கூறியவாறும், ஆண்டும் பணிந்தமொழி வெளிப்படாமல நெஞ்சறைபோகிய அறிவினேற்கெனத் தன் அறி வினை வேறாக்கி அதன்மேலிட்டுக்கூறியவாறுங் காண்க. (உ०)

கசுஉ. களவுங் கற்பு மலர்வரை வின்றே.

இதுவுந் தலைவிக்குந் தோழிக்கும் உரிய கூற்றுக் கூறுகின்றது. (இ-ள்.) களவின்கண்ணுங் கற்பின்கண்ணும் அலரொழுகின்றதென்று கூறுதல் தலைவிக்குந் தோழிக்கும் நீக்குநிலைமையின்று. எ-று. வரை வின்றெனப் பொதுப்படக் கூறுதலின் இருவரையுங் கொண்டாம். தலைவன் கூறுவனாயிற் களவிற் கூட்டமின்மையுங் கற்பிற் பிரிவின் மையும் பிறக்கும். ஒப்பக்கூறலென்னும் உத்திபற்றிக் களவும் உட னோதினார் சூத்திரஞ் சுருங்குதற்கு. களவலராயினும் எனவும் அம்ப லுமலரும் எனவுங் களவிற் கூறியவை அலராய்நிகழ்ந்தவழி வேறுகி லபொருண்மை பற்றிக் கூறுதற்குவந்தன. அவை அலர்கூறப்பெறு ப என்றற்கு வந்தனவன்றென உணர்க. உ-ம். "கண்டது மன்னு

மொருநா ளலர்மன்னுங் - திங்களைப் பாம்புகொண் டற்று.'' இது களவு. ''வேதினை வெரிநி னோதி முதுபோத் - தாறுசென் மாக்கள் புட்கொளப் போகுதரு - சுரனே சென்றனர் காதல ருனழிந் - திங்கியான் றுங்கிய வெவ்வம் - யாங்கறிந் தன்றிவ் வழுங்க லூரே.'' இது கற்பு. ''கரும்பி னெந்திரங் களிறறெதிர் பிளிறுந் - தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவ - ணல்லணி நயந்துநீ துறத்தலிற் - பல் லோ ரறியப் பசந்தன்று நுதலே.'' இது தோழி அலர்கூறியது. (உக)

கசுங. அலரிற் றோன்றுங் காமத்திற் சிறப்பே.

இது அலர்கூறியதனாற் பயன் இது என்கின்றது. (இ-ள்.) அலரிற் தோன்றுங் காமத்திற் சிறப்பே=இருவகைக் கைகோளினும் பிறந்த அலராற் தலைவற்குந் தலைவிக்குங் காமத்திடத்து மிகுதிதோன்றும். எ-று. என்றது, களவு அலராகியவழி இடையீட்டிற்கு அஞ்சிய அச்சத்தான் இருவர்க்குங் காமஞ்சிறத்தலுங் கற்பினுட் பரத்தைமையான் அலர்தோன்றியவழிக் காமஞ்சிறத்தலும் அவள்வருந்துமென்று தலைவற்குக் காமஞ்சிறத்தலுந் தலைவன்பிரிவின்கட் தலைவிக்குக் காமஞ் சிறத்தலும் பிறவுமாம். உ-ம். ''ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொ - னீராக நீளுமிந் நோய்.'' ''நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற் - காம நுதுபபே மெனல்.'' என்றற போல்வன கொள்க. (உஉ)

கசுச. கிழவோன் விளையாட் டாங்கு மற்றே.

இதுவுங் காமச்சிறப்பே கூறுகின்றது. (இ-ள்.) கிழவோன் விளையாட்டு=தலைவன் பரத்தையர் சேரியுள் ஆடலும் பாடலுங்கண்டுங் கேட்டும் அவருடன் யாறுமுதலியன ஆடியும் இன்பம் நுகரும் விளையாட்டின்கண்ணும்: ஆங்கும அற்று=அப்பரத்தையரிடத்தும் அலராற் தோன்றுங் காமச்சிறப்பு. எ-று. ஆங்கும என்ற உம்மையான் ஈங்கும் அற்றெனக் கொள்க. தம்மோடு தலைவன் ஆடிய பல ரறியாதவழி யென்றுமாம். பலரறிந்தவழி அவனது பிரிவு தமக்கு இழிவெனப்படுதலின் அவர் காமச்சிறப்புடையராம். தலைவன் அவரோடு விளையாடிய அலர்கேட்டொறுந் தலைவிக்கும் புலத்தலும் ஊடலும் பிறந்து காமச்சிறப்பெய்தும். ஆங்கும் ஈங்குமெனவே அவ்விருவரிடத்துந் தலைவன் அவை நிகழ்த்தினுகலின் அவற்குங் காமச்சிறப்பு ஒருவாற்றாற் கூறியவாறுயிற்று. இது காமக்கிழத்திய ரல்லாத பரத்தையரோடு விளையாடிய பகுதியாகலின் வேறுகூறினர். காமக்கிழத்தியர் ஊடலும் விளையாடலுந் தலைவி ஊடலும்

விளையாடலும் "யாறுங் குளனும்" என்புழிக் கூறுப. அஃது அல ரெனப்படாமையின் விளையாட்டுக்கண்ணென விரித்த உருபு வினை செய்யிடத்து வந்தது. உ-ம். "எஃகுடை யெழினலத் தொருத்தி யொடு நெருனை - வைகுபுன லயர்ந்தனை யென்ப வதுவே - பொய்புறம் பொதிந்தயான் கரப்பவுங் - கையிகந் தலரா கின்றாற் றனே." எனவும், "கொடுத்தோய் மலிர்நிறை யாடி யோரோ." எனவுந், தலைவியும் பரத்தையும் பிறர் அலர்கூறியவழிக் காமஞ்சிறந்து புலந்தவாறுகாண்க. ஆண்டுப் பணிந்துகூறுங்காலும் விளையாடுங்காலுந் தலைவன் காமச்சிறப்புக் காண்க. (உரு)

கசரு. மனைவி தலைத்தாட் கிழவோன் கொடுமை
தம்முள வாதல் வாயில்கட் கில்லை.

இது வாயில்கட்கு உரிய இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) மனைவி தாட் தலை=தலைவி எத்திறத்தானும் புலந்துழி அவளிடத்து: கிழவோன் கொடுமை = தலைவன் கொடுந்தொழில்களை: தம் உள ஆதல்=தம் உரைக்கண் உளவாக்கி உரைத்தல்: வாயில்கட்கு இல்லை = தோழிமுதலிய வாயில்களுக்கில்லை. எ - று. தாட்டலையென மாறுக. அது பாதத்திடத்தென்னுந் தகுதிசசொல். அது வாயில்கள் கூற்றாய் வந்தது. உதாரணம் வந்துழிக் காண்க. (உச)

கசசு. மனைவி முன்னர்க் கையறு கிளவி
மனைவிக் குறுதி யுள்வழி யுண்டே.

இது எய்தியது இகந்துபடாமற் காத்தது, இன்னுழியாயிற் பெறுமென்றலின். (இ - ள்.) மனைவி முன்னாக் கையறு கிளவி= தலைவிமுன்னர்த் தலைவன் காமக்கடப்பினாற் பணியுந்துணையன்றி நம்மைக் கையிகந்தானெனக் கையறறுக் கூறுங் கூற்று: மனைவிக்கு உறுதி உள்வழி உண்டே=புலந்துவருந் தலைவிக்கு மருந்தாய் அவன் கூடுவதோர் ஆற்றல் உறுதி பயக்குமாயின் அவ்வாயில்கட்கு உளதாம். எ-று. உ-ம். "அறியா மையி னன்னை யஞ்சிக் - குழையன் கோதையன் குறும்பைந் தொடியன் - விழவயர் துணங்கை தழூஉகஞ் செல்ல - நெடுநிமிர் தெருவிற் கைபுகு கொடுமிடை - நொதும லாளன் கதுமெனத் தாக்கலிற் - கேட்டோ ருளர்கொ லில்லைகொல் போற்றென - யாண்டைய பசலை யென்றனன் அதனெதிர் - நாணிலை யெலுவ வென்றுவந் திசினே - செறுநரும் விழையுஞ் செம்ம லோனென - நறுநுத லரிவை போற்றென் - சிறுமை பெருமையிற் காணாது துணிந்தே." இதனுள் என்னறியாமையினாலே அன்னாய் நின்

ஊயஞ்சி யாங் கள்வன் துணங்கையாடுங் களவைக் கையகப்படுப் பேமாகச் செல்லாநிற்க, அவன் குழைமுதலியவற்றை உடையனுய்த் தெருவுமுடிந்த இடத்தே எதிர்ப்பட்டானுக, அவ்வருளாமையின் யாண்டையதென்கட்பசலையென்ருனுக, அவனெதிரே என்சிறுமை பெரிதாகலான் ஆராயாதே துணிந்து நாணிலை எலுவ வந்தேனெனத் தோழி மெய்யானும் பொய்யானும் புனைந்துரைத்தவாறு காண்க. ஏனை வாயில்கள்கூற்று வந்துழிக் காண்க. இங்ஙனந் தலைவன் சிறைப்புறமாகக் கூறுவன "அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றின்" என்புழிக் கூறுதும். (உரு)

கசு௭. முன்னிலைப் புறமொழி யெல்லா வாயிற்கும்
பின்னிலைத் தோன்று மென்மனுர் புலவர்.

இது வாயில்கட்கு உரியதோர் பகுதி கூறுகின்றது. (இ-ள்) முன்னிலைப் புறமொழி=முன்னிலையாய் நிற்கின்ற தலைவனை நோக்கிப் பிறரைக் கூறுமாறுபோலக் கூறுதல்: எல்லாவாயிற்கும்=பன்னிரண்டு வாயில்களுக்கும்: பின்னிலைத் தோன்றும் என்மனுர் புலவர்=குறைவேண்டி முயலுங்காற் தோன்றுமென்று கூறுவர் புலவர். எ-று. உ-ம். "உண்கடன் வழிமொழிந் திரக்குங்கான் முகனுந்தாம் - கொண்டது கொடுக்குங்கான் முகனும்வே றுகுதல - பண்டுமிவ் வுலகத் தியற்கையஃ தின்றும் - புதுவ தன்றே புலனுடை மாந்தர் - தாயுயிர் பெய்த பாவை போல - நலனுடை யார்மொழிக்கட் டாவார்தாந் தந்நலம் - தாதுதேர் பறவையி னருந்திறல் கொடுக்குங் கா - லேதிலார் கூறுவ தெவனே நின்பொருள் வேட்கை" எனத் தலைவனை நோக்கி முன்னிலைப்புறமொழியாகக் கூறியது. (உசு)

கசு அ. தொல்லவை யுரைத்தலு நுகர்ச்சி யேற்றலும்
பல்லாற் றானு மூடலிற் றணித்தலு
முறுதி காட்டலு மறிவுமெய் நிறுத்தலு
மேதுவி னுணர்த்தலுந் துணிவு காட்டலு
மணிநிலை யுரைத்தலுங் கூத்தர் மேன.

இது கூத்தர்க்குரிய கிளவி கூறுகின்றது. (இ-ள்.) தொல்லவை உரைத்தலும்=முன்பே மிக்கார் இருவர் இன்பம் நுகர்ந்தவாறு இதுவெனக் கூறலும்: நுகர்ச்சி ஏற்றலும்=நுமது நுகர்ச்சி அவரினுஞ் சிறந்ததெனக் கூறலும்; பல் ஆற்றானும் ஊடலிற் றணித்தலும்= இல்லறக்கிழமைக்கு இயல்பன்றென்றாயினும் இது அன்பின்மையா

மென்றாயினுங் கூறித் தலைவியை ஊடலினின்று மீட்டலும்: உறுதி காட்டலும் = இல்வாழ்க்கைநிகழ்த்தி இன்பநுகர்தலே நினக்குப் பொருளென்றலும்: இனிக்கூறுவன தலைவற்குரிய; அறிவு மெய் நிறுத்தலும்=புறத்தொழுக்கம் மிக்க தலைவற்கு நீ கற்றறிந்த அறிவு இனி மெய்யாக வேண்டுமென்று அவனை மெய்யறிவின்கண்ணே நிறுத்தலும்: ஏதுவின் உணர்த்தலும்=இக் கழிகாமத்தான் இழிவு தலைவருமென்றதற்குக் காரணங்கூறலும்: துணிவு காட்டலும்= அதற்கேற்பக் கழிகாமத்தாற் கெட்டாரை எடுத்துக்காட்டலும்; அணிநிலை உரைத்தலும்=முலையினுந் தோளினும் முகத்தினும் எழுதுங்காற் புணர்ச்சிதோறும் அழித்தெழுதுமாறு இதுவெனக் கூறலும்: கூத்தர் மேன=இவ்வெட்டுங் கூத்தரிடத்தன. எ-று. கூத்தர், நாடகசாலையர். தொன்றுபட்ட நன்றுந் தீதுங் கற்றறிந்தவற்றை அவைக்கெலாம் அறியக்காட்டுதற்கு உரியராகலிற் கூத்தர் இவையுங் கூறுபவென்றார். இலக்கியம் இக்காலத்திறந்தன "பொருட்பொரு ளார் புன்னலந் தோயா ரருட்பொரு-ளாயு மறிவி னவர்." இது அறிவுமெய்ந்நிறுத்தது. (உஎ)

௧௯௯. நிலம்பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய.

இது அதிகாரப்பட்ட கூத்தரோடு பாணர்க்கும் உரியதோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) நிலம் பெயர்ந்து உறைதல் வரைநிலை உரைத்தல்=தலைவன் சேட்புலத்துப் பிரிந்துறைதலைத் தலைவிக்காக வரைந்து மீளும் நிலைமை கூறுதல்; கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய = கூத்தர்க்கும் பாணர்க்கும் யாப்பமைந்தன உரிய. எ-று. யாப்பமைதலாவது, தோழியைப்போலச் செலவழுங்குவித்தல் முதலியன பெறாராகலின், யாழெழீஇக் கடவுள்வாழ்த்தி அவளதுஆற்றாமை தோற்றும்வகையான் எண்வகைக்குறிப்பும்பட நன்னயபடுத்துத் தலைவற்குக் காட்டல்போல்வன. உ-ம். "அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக் - காயாஞ் செம்ம றாஅய்ப் பலவுட-னீயன் மூதாய் பரப்பப் பவளமொடு - மணிமிடைந் தன்ன குன்றங் கவைஇய-வங்காட் டாலிடை மடப்பிணை தழீஇத் - திரிமருப் பிரலை புல்லருந் துகளு - முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்-குறும்பொறை மருங்கி னிறும்பூ தயரப் - பதவுமெய லருந்து மதவுநடை நல்லான் - வீங்குமான் செருத்த தீம்பால் பிலிற்றக் - கன்றுபயில் குரல மன்று நிறை புகுதரு - மாலையு முள்ளா ராயிற் காலை - யாங்காகு வதுகொல் பாண வென்ற - மனையோள் சொல்லெதிர் சொல்லச் செல

னென் - செவ்வழி நல்லியா ழிசையினென் பையெனக் - கடவுள் வா ழ்த்திப் பையுண்மெய் திறுத்த - லவர்திறஞ் செலவெனக் கண்ட னென் யானே - விடுவிசைப் புரவி விலங்குபரி முடுக்கக் - கல்பொரு திரங்கும் பல்லார் நேமிக் - கார்மழை முழக்கிசை கடுக்கு - முனை நல் லூரன் புனைநெடுந் தேரே.'' இதனுட் தலைவி இரக்கந்தோன்றக் கடவுள்வாழ்த்திப் பிரிந்தோர்மீள்க நினையாநின்றேனாக அவர்மீட்சி கண்டேனெனப் பாணன் கூறியவாறு காண்க. கூத்தர்கூற்று வந்துழிக்காண்க. (உ௮)

௧௭௦. ஆற்றது பண்பும் கருமத்து விளைவு
மேவன் முடிவும் வினவுஞ் செப்பு
மாற்றிடைக் கண்ட பொருளு மிறைச்சியுந்
தோற்றஞ் சான்ற வன்னவை பிறவு
மிளையோர்க் குரிய கிளவி யென்ப.

இது உழைக்குறுந்தொழிற்குங் காட்பிற்கும் உரியராகிய இளையோர்க்குரிய இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) ஆற்றது பண்பும் = தலைவன் தலைவியுடனாயினுந் தானேயாயினும் போக்கு ஒருப்பட்டுழி வழிவிடற்பாலராகிய இளையோர தண்ணிது வெய்து சேய்த்து அணித்தென்று ஆற்றது நிலைமை கூறுதலும்: கருமத்து விளைவும் = ஒறருகச் சென்று வந்து செய்பொருண் முடிக்குமாறு அறிநது கூறுதலும்: ஏவல் முடிவும் = இன்னுழி இன்னதுசெய்க என்று ஏவியக கால் அதனை முடிததுவந்தமை கூறலும்: வினவும் = தலைவன் ஏவலைத் தாங் கேட்டலும்: செப்பும் = தலைவன் வினவாதவழியுந் தலைவிக்காகவாயினுஞ் செப்பத்தகுவன தலைவற்கு அறிவுகூறுதலும்: ஆற்றிடைக் கண்ட பொருளும் = செல்சுரத்துக் கண்ட நிமித்தம் முதலிய பொருள்களைத் தலைவற்குந் தலைவிக்கும் உறுதிபயக்குமாறு கூறலும்: இறைச்சியும் = ஆண்டு மாவும் புள்ளும் புணர்ந்துவிளையாடுவனவற்றை அவ்விருவர்க்குமாயினுந் தலைவற்கேயாயினுங் காட்டியும் ஊறுசெய்யுங் கோண்மாககளை அகற்றியுங் கூறுவனவும்: தோற்றஞ் சான்ற அன்னவை பிறவும் = அங்ஙனம் அவற்குத் தோற்றுவித் தற்கமைந்த அவைபோல்வன பிறகூற்றுக்களும்: இளையோர்க்கு உரிய கிளவி என்ப = இளையோர்க்கு உரிய கூற்றென்று கூறுவர் ஆசிரியர். எ-று. தலைவியது செய்தி அறிந்துவந்து கூறுவனவும் பிற பொருளுணர்ந்து வந்துரைப்பனவும் ஒற்றர்கண் அடங்கும். ஏவன் முடிவிற்கும் இஃதொக்கும். சான்றவென்றதனான் ஆற்றதுபண்பு கூறுங்கால் இதுபொழுது இவ்வழிச்சேறல் அமையாதென விலக்கலு

ங் கருமங்கூறுங்காற் சந்துசெய்தல் அமையுமெனக் கூறுதலும் போ ல்வன அமையாவாம், அவர் அவைகூறப்பெறுராகலின். பிறவாவன தலைவன் வருவனெனத் தலைவிமாட்டுத் தூதாய்வருதலும், அறிந்து சென்ற தலைவற்குத் தலைவி நிலைகூறுதலும், மீளுங்கால் விருந்துபெ றுகுவள்கொல்லெனத் தலைவி நிலையுரைத்தலும் போல்வன. இலக் கியம் வந்துழிக் காண்க. "விருந்தும் பெறுகுநள் போலுந் திருந்தி ழைத் - தடமென் பணைத்தோள் மடமொழி யரிவை - தளரியற் கிள்ளை யினிதினி னெடுத்த - வளரிளம் பிள்ளைத் தூவி யன்ன - வார்பெயல் வளர்த்த பைம்பயிர்ப புறவிற் - பறைக்கண் ணன்ன நிறைச்சுனை தோறுந் - துளிபடு மொக்கு ளுளுவன சாலத் - தெளிபொரு பொகுட்டிற் றேன்றுவன மாய - வளிசினை யுதிர்த் தலின் வெறிகொள்பு தாஅய்ச - சிரற்சிற கேய்ப்ப வறற்கண் விரி த்த - வண்டு ணறுவீ துமிதந நேமி - தண்ணில மருங்கிற் போழ் ந்த வழியு - ணிரைசெல் பாம்பின் விரைவுநீ முடுகச் - செல்லு நெடு ந்தகை தேரோ - முலலை மாலை நகர்புக லாய்நதே." அவர்கள் தங் களுக்கு வளராப்பிள்ளையென்றலுமாம். இது பெறுவளென்றது. ஆற்றது பண்பு, ஆற்றிடைக்கண்ட பொருளும் இறைசசியும் உடன் போககிலுங் கற்பிலுங் கூறுவனவாதலின் இசசூத்திரங் கைகோள் இரண்டற்கும் பொதுவிதி. (உகூ)

கஎக. உழைக்குறுந் தொழிலுங் காப்பு முயர்ந்தோர்க்கு
நடக்கை யெல்லா மவர்கட் படுமே.

இது முற்கூறியவற்றிறகு உரியார் இங்ஙனஞ் சிறந்தாரென மேலதற்கோர் புறனடை. (இ-ள்.) உழைக்குறுந் தொழிலும் காப் பும் உயர்ந்தோர்க்கு நடக்கை எலலாம்=அவரிடத்து நின்று கூறிய தொழிலசெய்தலும போற்றீடுமுதலிய பாதுகாவலும் பிறவும் உய ர்ந்தோர்ககுச செய்யுந் தொழிற்பகுதியெல்லாம்: அவர்கட் படும்= முற்கூறிய இளையோரிடத்து உண்டாம். எ-று. என இவ்விரண்டற் குமுரியர் அல்லாத புறத்திணையர் முற்கூறியவை கூறபபெறுரொன் பது பொருளாயிற்று. (௩௦)

கஎஉ. பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவைத்
தொன்முறை மனைவி யெதிர்ப்பா டாயினு
மின்னிழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினு
மிறந்தது நினைஇக் கிழவோ னுங்கட்
கலங்கலு முரிய னென்மனார் புலவர்.

இது மேல் அதிகாரப்பட்ட வாயில் பரத்தையிற்பிரிவொடும் பட்டதாகலின் அதுகூறி இனித் தலைவன் பரத்தைமை நீங்குமிடங் கூறுகின்றது. (இ-ள்.) பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவை=மூவகை வருணத்தாரும் முன்னர்த் தத்தம்வருணத்தெய்திய வதுவை மனைவியர்க்குப் பின்னர் முறையாற் செய்துகொள்ளப் பட்ட பெரும்பொருளாகிய வதுவைமனைவியரை: தொன்முறை மனைவி எதிர்ப்பாடாயினும்=பழையதாகிய முறைமையினையுடைய மனைவி விளக்கு முதலிய மங்கலங்களைக் கொண்டு எதிரேற்றுக் கோடற் சிறப்பினும்: இன் இழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினும்=இனிய பூண்களையணிந்து தொன்முறை மனைவி புதல்வனைக் கோலங்காட்டிய செல்வாள்போலப் பின்முறை வதுவையரிடத்து வாயிலாகக் கொண்டு செல்லினும்: கிழவோன் இறந்தது நினைஇ= தலைவன் இங்ஙனஞ் செய்கையுடைய இருவகைத்தலைவியரையுங் கை விட்டுப் பரத்தைமைசெய்து ஒழுகியவற்றை நினைந்து: ஆங்கட் கலங்கலும் உரியன் என்மனார் புலவர்=அப்பரத்தையர்கண் நிகழ்கின்றகாதல் நிலைகுலைந்து மீளுதலும் உரியன் எனக் கூறுவர் புலவர். எ-று. உம்மை எதிர்மறையாகலான் மீளாமையும் உரித்தாயிற்று; என்னை? இளமைப்பருவங் கழியாத காலத்து அக்காதன் மீளாதாகலின். பெரும்பொருளென்றார், வேதநூல் அந்தணர்க்குப் பின்முறை வதுவை மூன்றும் அரசர்க்கிரண்டும் வணிகர்க்கொன்றும் நிகழ்த்தல்வேண்டுமெனக் கூறிற்றென்பது உணர்தற்கு. இனிமகப்பேறு காரணத்தாற் செய்யும் வதுவையென்றுமாம். ஆக்கியவென்றதனனே வேளாளர்க்கும் பின்முறைவதுவை கொள்க. தொன்மனைவியென்னாது முறையென்றதனான் அவரும் பெருஞ்சிறப்புச்செய்து ஒருகோத்திரத்தராய் ஒன்றுபட்டொழுகுவரென்பது கூறினார். இங்ஙனந் தொன்முறையார் பின்முறையாரை மகிழ்ச்சிசெய்தமைகண்டு இத்தன்மையாரை இறந்தொழுகித் தவறுசெய்தேமேயென்றும் பின்முறையார் அவர்புதல்வனைக் கண்டு மகிழ்ச்சிசெய்து வாயில் நேர்ந்த குணம்பற்றி இவரை இறந்தொழுகித் தவறுசெய்தேமேயென்றும் பரத்தைமைநீங்குவனென்றார். புகினுமெனவே பிறர்மனைப் புதல்வனென்பது பெற்றாம். தொன்முறைமனைவி எதிர்ப்பட்டதற்கு இலக்கியம் வந்துழிக் காண்க. இனிப் பரத்தைமையிற் பிரிவொழிந்து மனைக்கண் இருந்ததற்கு உதாரணம். "மாதருண்கண் மகன் விளையாடக் - காதலிற் றழீஇ யினிதிருந் தனனே - தாதார் பிரசமூதும் - போதார் புறவி னாடுகிழ வோனே." இன்னும் இவ்வாறு வருவனபிறவும் உய்த்துணர்ந்து கொள்க. (நுக)

களகூ. தாய்போற் கழறித் தழீஇக் கோட
லாய்மனைக் கிழத்திக்கு முரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான.

இது தலைவி புலவிகடைக்கொள்ளுங் காலம் உணர்த்துகின்றது. (இ-ள்.) தாய்போற் கழறித் தழீஇக் கோடல்=பரத்தையிற் பிரிவுநீங்கிய தலைவன் தன்னினும் உயர்ந்த குணத்தினளெனக் கொள்ளுமாற்றான் மேல்நின்று மெய்கூறுங் கேளிராகிய தாயைப் போலக் கழறி அவன்மனக்கவலையை மாற்றிப் பண்டுபோல மனங் கோடல்: ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப=ஆராய்ந்த மனையறநிகழ்த்துங் கிழத்திக்கும் உரித்தென்று கூறுப: கவவொடு மயங்கிய காலையான=அவன்முயக்கத்தாற் தலைவி மயங்கிய காலத்து. எ-று. என்றது, தலைவன் தவத்திற்கு உடம்பட்டுக் கலங்கினமை கண்ட தலைவி அதற்கு ஆற்றாது தன்மனத்துப் புலவியெல்லாம்மாற்றி இதற்கொண்டும் இனையையாகலெனத் தழீஇக்கொண்டமை கூறிற்று. தலைவன் தன்குணத்தினும் இவள்குணம் மிகுதிகண்டு மகிழவே தலைவி தன்னைப்புகழ்ந்த குறிப்பு உடையளென்பதூஉங் கொள்க. (கூ௨)

களச. அவன்சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்
மகன்றா யுயர்புந் தன்னுயர் பாகுஞ்
செல்வன் பணிமொழி யியல்பாக லான.

இதுவுந் தலைவிகுணச்சிறப்புக் கூறுகின்றது. (இ-ள்.) அவன் சோர்பு காத்தல் கடன் எனப் படுதலின்=தான் நிகழ்த்துகின்ற இல்லறத்தாற் தலைவற்கு இழுக்கம் பிறவாமற் பாதுகாத்தல் தலைவிக்குக் கடப்பாடென்று கூறப்படுதலால்: மகன் தாய் உயர்பும் தன் உயர்பு ஆகும்=மகன் தாயாகிய மாற்றாளைத் தன்னின் இழிந்தாளாகக் கருதாது தன்னோடு ஒப்ப உயர்ந்தோளாகக் கொண்டொழுகுதல் தனது உயர்ச்சியாம்: செல்வன் பணிமொழி இயல்பு ஆகலான= தலைவன் இவ்வாறொழுகவென்று தமக்குப் பணித்தமொழி நூலிலக்கணத்தான் ஆன மொழியாகலான். எ-று. ஈண்டு மகன்றாயென்றது பின்முறையாக்கிய வதுவையாளை. இன்னும் அவன்சோர்பு காத்தல் தனக்குக் கடனென்று கூறப்படுதலாலே முன்முறையாக்கிய வதுவையாளைத் தம்மின் உயர்ந்தாளென்றும் வழிபாடாற்றுதலும் பின்முறைவதுவையாளுக்கு உயர்பாஞ் செல்வன் பணித்தமொழியா லென்றவாறு. ஈண்டு மகன்றாயென்றது உயர்ந்தாளை, உய்த்துக்கொண்

ணேர்தலென்னுமுத்தியால். இவையிரண்டும் பொருள். செல்வனென்றார், பன்மக்களையுந் தன்னாணைவழியிலே இருத்துந திருவுடைமை பற்றி. இவை வநதசெய்யுள்களும் உய்த்துணாக. (௩௩)

களரு. எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்.

இது எய்தியது விலக்கிற்று; "முநநீர்வழக்கம்" என்பதனாற் பகைதணிவினைக்குங காவற்குங் கடும்பொடு சேறலாமென்று எய்திய தனை விலககலின். (இ-ள்.) எண் அரும் பாசறை = போாசெய்து வெல்லுமாற்றை எணணும் அரிய பாசறையிடத்து: பெண்ணொடு புணராா=தலைவியரோடு தலைவனைக்கூட்டிப் புலனெறிவழக்கஞ் செய்யார். எ-று. இரவும் பகலும் போாத்தொழின் மாறுமை தோன்ற அரும்பாசறையென்றார். "நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான் - சிலரொடுந் திரிதரும் வேநதன் - பலரொடு முரணிய பாசறைத் தொழில" எனவும் "ஒருகை பள்ளி யொற்றி யொருகை-முடியொடு கடகஞ் சோதி நினைந்து" எனவும் வருவனவறறான் அரிதாக உணற்றியவாறு காண்க. இனிக் காவற்பிரிவுககு முறைசெயது காப்பாற்றுதலை எண்ணுமெனப் பொருளுரைகக. (௩௪)

களசு. புறத்தோ ராய்கட் புரைவ தென்ப.

இது எய்தியது இகந்துபடாமற் காத்தது (இ-ள்) புறத்தோர் ஆங்கண=அடியோரும் வினைவல பாங்கினோருமாகிய அகபபுறத் தலைவருடைய பாசறையிடத்தாயில். புரைவது என்ப = அவரைப பெண்ணொடுபுணாததுப் புலனெறிவழக்கஞ்செய்தல பொருநதுவது என்று கூறுவா ஆசிரியா. எ-று. இப்பாசறைப்பிரிவை வரையறுபபவே ஏனைபபிரிவுகளுக்குப புணர்த்தலும் புணராமையும் புறத்தோர்க்கு வரைவின்றாயிறறு. (௩௫)

களஎ. காமநிலை யுரைத்தலுந் தேர்நிலை யுரைத்தலுங்
கிழவோன் குறிப்பினை யெடுத்தனர் மொழிதலு
மாவொடு பட்ட நிமித்தங் கூறலுஞ்
செலவுறு கிளவியுஞ் செலவழுங்கு கிளவியு
மன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய.

இது பார்ப்பார்க்குரிய கிளவி கூறுகின்றது. (இ-ள்) காமநிலை யுரைத்தலும்=தலைவன் காமமிகுதிகண்டு இதன் நிலை இற்றென்று இழித்துக்கூறுவனவும்; தேர் நிலை உரைத்தலும் = அங்ஙனங் கூறி

அவன் தேருமாறு ஏதுவும் எடுத்துக்காட்டுங் கூறலும்: கிழவோன் குறிப்பினை எடுத்தனர் மொழிதலும்=தலைவன் தாழ்ந்தொழுகியவற்றை அவன் குறிப்பான் அறிந்து வெளிப்படுத்தி அவற்கே கூறுதலும்: ஆவொடு பட்ட நிமித்தம் கூறலும் = வேள்விக்கபிலையாற் பயங் குன்றுதலானுங், குன்றாது கலநிறையப் பொழிதலானும் உளதாய நிமித்தம் பற்றித் தலைவற்குவரும் நன்மைதீமை கூறுதலும்: செலவுறு கிளவியும் = அவன் பிரியுங்கால் நன்னிமித்தம்பற்றிச் செலவுநன்றென்று கூறுதலும்: செலவு அழுங்கு கிளவியும் = தீயநிமித்தம்பற்றிச் செலவைத் தவிர்த்துக் கூறுதலும்: அன்னபிறவும்=அவைபோல்வன பிறவும்: பார்ப்பார்க்கு உரிய = அந்தணர்க்கு உரிய. எ-று. தேர்நிலையென்றதனாற் தேர்ந்து பின்னுங் கலங்கினுங் கலங்காமற் தெளிவுநிலை காட்டலுங் கொள்க. அன்னபிறவும் என்றதனான், அவர் இடித்துக் கூறியாங்குத் தானும் இடித்துக் கூறுவனவும், வாயிலாகச் சென்று கூறுவனவுந், தூதுசென்று கூறுவனவுங் கொள்க. மொழிந்தபொருளோடொன்ற அவ்வயின்மொழியாததனை முட்டின்று முடித்தலென்பதனாற் களவியலிற் கூறாதனவும் ஈண்டேகூறினார். அது இப்பேரறிவு உடையையாயின் இனையையாதற்பாலையல்லையெனக் காமநிலையுரைத்தலுங் கற்பினுள் "இல்லிருந்து மகிழ்வோற் கில்லையாற் புகழே" எனத் தலைவன் நினையுமாற்றாற் காமநிலையுரைத்தலும் அடங்கிற்று. ஏனையவற்றிற்கும் இருவகைக் கைகோளிற்கும் ஏற்பன கொணர்ந்து ஒட்டுக. "பார்ப்பான் பாங்கன்" என உடன் கூறினமையிற் பாங்கற்கும் ஏற்பனவுங் கொள்க. இவையெல்லாந் தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாருஞ் செய்தபாடலுட் பயின்ற போலும். இக்காலத்தில் இலக்கியமின்று. பாங்கன் கூறுவன "நோய்மருங் கறிநரு ளடக்கிக் கொண்டு" என்றாற்போல எடுத்து மொழியப்படுதலன்றிக் கூற்று அவண் இன்மை உணர்க. அது "வேட்டோர் திறத்து விரும்பியநின் பாகனும் - நீட்டித்தா யென்று கடாங்கடுந் திண்டேர் - பூட்டு விடாது நிறுத்து." எனவும் வரும். இன்னும் சான்றோர் கூறிய செய்யுட்களில் இதுபோல வருவனபிற அனைத்தும் உய்த்துணர்ந்து கொள்க. (ருசு)

கஎஅ. எல்லா வாயிலு மிருவர் தேஎத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள வென்ப.

இது வாயில்களின் இலக்கணங்கூறுகின்றது. (இ-ள்.) எல்லாவாயிலும் = பார்ப்பான்முதலிய வாயில்களெல்லாம்: இருவர் தேஎத்தும் புல்லிய = தலைவன்கண்ணுந் தலைவிகண்ணும் பொரு

தியா: மகிழ்ச்சிப் பொருள என்ப=மனமகிழ்ச்சிப்பொருளினை நிக ழ்த்துதலைத் தமக்குப் பொருளாகவுடைய. எ-று. எனவே மகிழ்ச் சி கூறப் பெறுராயிற்று. புல்லிய என்றதனுன் விருந்தும் புதல்வ ரும் ஆற்றுமையும் வாயிலாகுப என்றுகொள்க. வாயில்கள் "தோ ழி தாயே" என்பதனுட் கூறுப. உ-ம். வந்துழிக்காண்க. (௱௭)

கஎகூ. அன்பு தலைப்பிரிந்த கிளவி தோன்றிற்
சிறைப்புறங் குறித்தன் றென்மனார் புலவர்.

இது மகிழ்ச்சிப்பொருளன்றி வாயில்கள் இவ்வாறுங் கூறப் பெறுப என்றலின் எய்தியதிகந்துபடாமற் காத்தது. (இ-ள்.) அன் பு.தலைப்பிரிந்த கிளவி தோன்றில்=அன்பு இருவரிடத்தும் நீங்கிய கடுஞ்சொல் அவ்வாயில்களிடத்துத் தோன்றுமாகில்: சிறைப்புறங் குறித்தன்று என்மனார் புலவர்=ஒருவர்க்கொருவர் சிறைப்புறத்தரா கக் கூறல் வேண்டுமென்று கூறுவர் புலவர். எ-று. தோன்றினென் பது படைத்துக்கொண்டு கூறுவரென்பதாமாகலின் குறித்தன்றென் பது போயின்றென்பதுபோல றகரம் ஊர்ந்த குற்றியலுகரம். "அறி யாமையின்" என்னும் நற்றிணைப்பாட்டும் உதாரணமாம், அது சிறை ப்புறமாகவுங் கொள்ளக் கிடந்தமையின். (௱௮)

கஅ0. தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்த
லெத்திறத் தானுங் கிழத்திக் கில்லை
முற்பட வகுத்த விரண்டலங் கடையே.

இது தலைவியிலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) தர்புகழ் கிள வி கிழவன்முற் கிளத்தல்=தன்னைப் புகழ்ந்துரைத்தலைக் கிழவன் முன்னர்ச் சொல்லுதல்: எத்திறத்தானுங் கிழத்திக்கு இல்லை=தனி மிகு சிறத்துனியினும் இல்லை: முற்பட வகுத்த இரண்டலங் கடை யே=முன்பு கூறுபடுத்தோதிய "தாய்போற் கழறித் தழீஇக்கோட லும்" அவன்சோர்புகாத்தற்கு மகன்றுயுயர்பு தன்னுயர்பாதலும் அல்லாதவிடத்து. எ-று. கிழத்திக்கில்லையென முடிக்க. அவ்விர ண்டிடத்துந் தனது குணச்சிறப்பைக் குறிப்பாற் தலைவன்முன்னே புகழ்வாள்போல ஒழுகினுளென்றுணர்க. இனி முற்படவகுத்த இரண்டென்பதற்கு "இரத்தலுந்தெளித்தலும்" என அகத்திணையிய லுட் கூறியனவென்றுமாம். தலைவன்முன்னர் இல்லையெனவே அவன் முன்னர் அல்லாதவிடத்துப் புகழ்தல் பெற்றும். அவை காமக்கிழத் தியரும் அவர்க்குப் பாங்காயினருங் கேட்பப் புகழ்தலாம். உதா

ரணம் "பேணுதகு சிறப்பிற் பெண்ணியல் பாயினு - மென்னொடு புரையுந ளல்ல - டன்னொடு புரையுநர்த் தானறி குநளே." எனப் பதிற்றுப்பத்தில் வந்தது. (௩௯)

கஅ௪க. கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி
கிழவோன் வினைவயி னுரிய வென்ப.

இது தலைவன் தன்னைப் புகழ்ந்துரைக்கும் இடம் இன்னுழி யென்கின்றது. (இ-ள்.) கிழவிமுன்னர்க் கிழவோன் தற் புகழ் கிளவி=தலைவிமுன்னர்த் தலைவன் தன்னைப் புகழ்ந்துகூறுங் கூற்று: வினைவயின் உரிய என்ப=காரியங்களை நிகழ்த்துங் காரணத்திடத்து உரியவென்று கூறுவார் ஆசிரியர். எ-று. அக்காரணமாவன கல்வி யுங் கொடையும் பொருள்செயலும் முற்றகப்பட்டோனை முற்றுவி டுத்தலுமாகிய காரியங்களைநிகழ்த்துவலெனக் கூறுவன. இவ் ஆள் வினைச்சிறப்பை யான் எய்துவலெனத் தன்னைப்புகழவே அதுபற்றித் தலைவி பிரிவாற்றுதல் பயனாயிற்று. "இலலென விரந்தோர்கொன் றீயாமை யிளிவென" என்றவழி யான் இளிவரவு எய்தேனென்றலிற் புகழுக்குரியேன் யானேயெனக் கூறியவாறுகாண்க. ஏனையவும் வந்துழிக்காண்க. (௪௦)

கஅ௪உ. மொழியெதிர் மொழிதல் பாங்கற் குரித்தே.

இது மேற் பார்ப்பார்க்குரியன பாங்கற்குமாமெனை எய்துவித் ததனை ஒருமருங்கு மறுக்கின்றது. (இ-ள்.) மொழியெதிர் மொழி தல்=பார்ப்பானையேபோலக் காமநிலை உரைத்தல்போல்வன கூறுங் காற் தலைவன் கூறிய மொழிக்கு எதிர்கூறுதல்: பாங்கற்கு உரித் து=பாங்கனுக்கு உரித்து. எ-று. இது களவிற்கும் பொது: அது பாங்கற்கூட்டத்துக் காண்க. கற்பிற் புறத்தொழுக்கத்துத் தலைவன் புகலாமற் கூறுவன வந்துழிக் காண்க. உரிதென்றதனாற் தலைவ னிடுக்கண் கண்டுழி எற்றினன் ஆயிற்றென அவன்மொழிக்கு முன் னே வினாதலுங் கொள்க. (௪க)

கஅ௪௩. குறித்தெதிர் மொழித லஃகித் தோன்றும்.

இதுவும் பாங்கற்குரியதோரிலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) குறித்து எதிர் மொழிதல்=தலைவன்குறிப்பினை அவன்கூறுமற் தான் குறித்துணர்ந்ததற்கு எதிர்மொழி கொடுத்தல்: அஃகித் தோன்றும் =சுருங்கித்தோன்றும்: எ-று. அவன்குறிப்புணர்ந்து கூறல் சிறு

வரவிற்றெனவே "காமநிலையுரைத்தல்" என்னுஞ் சூத்திரத்தின்கட் கூறிய "ஆவொடு பட்ட நிமித்தம்" ஆயிற் பார்ப்பான்கூறக் கேட்டுத் தான் கூறவும்பெறுமெனவும் ஏனையவுங் கிழவன்கூறுமற் றானே கூறவும் பெறுமெனவுங் கூறியவாறுயிறறு. (சஉ)

கஅச. துன்புறு பொழுதினு மெல்லாங் கிழவன்
வன்புறுத் தல்லது சேற லில்லை.

இது முன்னர்க் கிழவி முன்னர் என்பதனுன் குறிப்பினுன் ஆற்றுவித்துப் பிரிதல் அதிகாரப்பட்டதனை ஈண்டு விளங்கக்கூறி வற்புறுத்துமென்கின்றது. (இ-ள்.) துன்பு உறு பொழுதினும்=உணாத்தாதுபிரிந்து தலைவி துன்பம் மிக்கபொழுதினும், உம்மையான் உணர்த்திப் பிரிந்து துன்பம் மிகாத பொழுதினும்: எல்லாம்=சுற்றமுந் தோழியும் ஆயமுந் தலைமகள் குணமாகிய அச்சமும் நாணமும் மடனுமாகியவற்றையெல்லாம்: கிழவன் வன்புறுத்து அல்லது சேறல் இல்லை=தலைவன் வலியுறுத்து அல்லது பிரியான். எ-று. எனவே இவற்றை முன்னர் நிலைபெறுத்திப் பின்னர்ப் பிரியுமாயிற்று. சொல்லாது பிரியுங்காற், "போழ்திடைப படாமன் முயங்கியு மதன் றலைத் - தாழ்கதுப் பணிந்து முள்ளெயிற் றமுதங் - கள்ளினு மகிழ் செய்தும்" இவை முதலிய தலையளிசெய்து தெருட்டிப்பிரிய அவை பற்றுக்கோடாக ஆற்றுதலின் அவள்குணங்கள் வற்புறுத்துவன ஆயிற்று. இனி உலகத்தார் பிரிதலும் ஆற்றியிருத்தலுமுடைய ரென உலகியலாற்கூறலும் பிரிவுணர்த்தற்றேயாம். இனிப் பிரிவினை விளங்கக்கூறி ஆற்றியிருவென்றலும் அவற்றை வற்புறுத்தலாம். "யாந்தமக் கொலலோ மென்ற தப்பல் - சொல்லா தகறல் வல்லு வோரோ." இது சொல்லாது பிரிதல. "அரிதாயவறனெய்தி" இது சொல்லிப்பிரிதல். (சங)

கஅரு. செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே
வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்.

இது செலவழுங்கலும் பாலையாமென்கின்றது. (இ-ள்.) செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே=தலைவன் கருதிய போக்கினை இடையிலே தவிர்ந்திருத்தல் பிரிந்துபோதல் ஆற்றாமைக்கன்று: வன்புறை குறித்தல் தவிர்ச்சி ஆகும்=தலைவியை ஆற்றுவித்துப் பிரிதற்குத் தவிர்ந்த தவிர்ச்சியாகும். எ-று. செலவழுங்கி ஆற்றுவிக்க அவள் ஆற்றியிருத்தல் இப்பிரிவிற்கு நிமித்தமாதலிற் பாலை

யாயிற்று. "ஒண்டொடி யுழை *** மெனினே" "களங்காய்க் கண்ணி னூர்மு டிச்சொ-லிழந்த நாடு தந்தனன்-வளம்பெரிது பெறினும் வாரலேன் யானே" இவை வன்புறைகுறித்துச் செலவழு ங்குதலிற் பாலையாயிற்று. (சச)

கஅசு. கிழவி நிலையே வினையிடத் துரையார் வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்.

இது அகத்திணையியலுட் பாசறைப்புலம்பலுமென்றூர் ஆண்டைப்புலம்பல் இன்னுழியாகா இன்னுழியாமென வரையறை கூறுகின்றது. (இ-ள்.) கிழவி நிலையே வினையிடத்து உரையார்=தலைவியது தன்மையை வினைசெய்யாநிற்றலாகியவிடத்து நினைந்துகூறினூகச் செய்யுள்செய்யப்பெறூர்: வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும் = வெற்றிநிகழுமிடத்துந் தான்குறித்தபருவம் வந்துழியுந் தூதுகண்டுழியும் வருத்தம்விளங்கிக் கூற்றுத்தோன்றிற்றூகச் செய்யுள்செய்ப. எ-று. உரையாரெனவே நினைத்தலுளதென்பதூஉம் அதுபோர்த்திறம்புரியும் உள்ளத்தாற் கதுமென மாயுமென்பதூஉங் கொள்க. வினையிடம் வினைசெய்யிடம். காலத்துமென்னும் எச்சவும்மை தொக்குநின்றது. அன்றி அங்ஙனம் பாடங்கூறலும் ஒன்று. உ-ம். "வேளாப் பார்ப்பான் வாளாந் துமித்த-வளைகளைந் தொழிந்த கொழுந்தி னன்ன-தளைபிணி யவிழாச் சுரிமுகிழ்ப் பகன்றை-சிதாலந் துவலை தூவலின் மலரும்-தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்-வயங்குகதிர் கரந்த வாடை வைகறை-விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி-மங்குன் மாமழை சேண்புலம் படரும்-பனியிருங் கங்குலுந் தமிய ணீந்தித்-தன்னூ ரோளே நன்னுதல் யாமே-கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து-நுதிமுக மழுங்கிய மண்ணைவெண் கோட்டுச்-சிறுகண் யானை நெடுநா வொண்மணி-கழிபிணிக் கறைத்தோற் பொழிகணை யுதைப்புத்-தழங்குகுரன் முரசமொடு மயங்கும் யாமத்துக்-கழித்துறை செறியா வாளுடை யெறுழ்த்தோ-ளிரவுத்துயின் மடிந்த தானை-யுரவுச்சின வேந்தன் பாசறை யேமே." இதனுட் கணையுதைப்பு முரசொடு மயங்கும் யாமத்துத் துயின்மடிந்து வாளுறைசெறியாத் தானையையுடைய வேந்தனெனவே வென்றிக்காலங் கூறியவாறுங் கிழவிநிலை உரைத்தவாறுங் காண்க. பருவங்கண்டுந் தூதுகண்டுங் கூறியவை "பாசறைப் புலம்பலும்" என்புழிக் காட்டினும். (சரு)

௧௮௭. பூப்பின் புறப்பா டீரா றுநாளு
நீத்தகன் றுறையா ரென்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான.

இது பரத்தையிற் பிரிவின்கட் தலைவற்குந் தலைவிக்கும் உரிய தோர் இலக்கணங் கூறுகின்றது. (இ-ள்.) பரத்தையிற் பிரிந்த காலை யான=பரத்தையிற் பிரிந்த காலத்தின்கணுண்டான: பூப்பின் நீத்து = இருதுக்காலத்தின்கட் சொற்கேட்கும் அணுமைக்கண் நீங்கியிருந்து: புறப்பாடு ஈராறு நாளும் அகன்று உறையார் என்மனார் புலவர்=அவ் இருதுக்காலத்தின் புறக்கூறுகிய பன்னிரண்டு நாளும் இருவரும் பிரிந்துறையாரென்று கூறுவர் புலவர். எ-று. என்றது பூப்புத்தோன்றிய மூன்றுநாளுங் கூட்டமின்றி அணுகவிருந்து அதன்பின்னர்ப் பன்னிரண்டுநாளுங் கூடியுறைப என்றதாம். தலைவியுந் தலைவனுந் துணிந்தும் இருத்தலிற் பிரிந்துறையாரெனப் பன்மையாற் கூறினார். இனிப் பூப்பின் முன்னாறுநாளும் பின்னாறு நாளுமென்றும், பூப்புத்தோன்றிய நாள் முதலாகப் பன்னிரண்டு நாளுமென்றும், நீத்தல் தலைவன்மேல் ஏற்றியும், அகறலைத் தலைவிமேல் ஏற்றியும் உரைப்பாருமுளர். பரத்தையிற் பிரிந்தகாலத்துண்டான பூப்பெனவே, தலைவிசேடியர் செய்யகோலங்கொண்டு பரத்தையர்மனைக்கட்சென்று தலைவற்குப் பூப்புணர்த்துதலுங்கொள்க. இது "அரத்த முடீஇ யணிபழுப்புப் பூசிச் - சிரத்தையாற் செங்கழுநீர் சூட்டிப் - பரத்தை - நினைநோக்கிக் கூறினு நீமொழிய லென்று - மனைநோக்கி மாண விடும்." தோழி செவ்வணியணிந்து விட்டமை தலைவன் பாங்காயினார் கூறியது. இக்காலத்தின்கண் வேறுபாடாக வருவனவெல்லாம் ஈண்டு அடக்கிக் கொள்க. பூப்புப்புறப்பட்டஞான்றும் மற்றைநாளுங் கருத் தங்கில் அதுவயிற்றில் அழிதலும் மூன்றுநாட் தங்கில் அது சில்வாழ்க்கைத்தாகலும் பற்றி முந்நாளுங் கூட்டமின்றென்றார். கூட்டமின்றியும் நீங்காதிருத்தலிற் பரத்தையிற்பிரிந்தானெனத் தலைவி நெஞ்சத்துக்கொண்ட வருத்தம் அகலும். அகலவே அக்கரு மாட்சிமைப்படுமாயிற்று. இது மகப்பேற்றுக்காலத்திற்குரிய நிலைமை கூறிற்று. இதனாற் பரத்தையிற்பிரியுநாள் ஒருதிங்களிற் பதினைந்தென்றாராயிற்று. உதாரணம் வந்துழிக் காண்க. "குக்கூ" என்பதனைக் காட்டுவாருமுளர். (௪௯)

௧௮௮. வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது.

இது "ஓதலுந் தூதும்" என்னுஞ் சூத்திரத்திற்கூறிய ஓதற்பிரிவிற்குக் காலவரையறையின்றென்பதூஉம் அவ்வோத்து இதுவென்

பதூஉம் உணர்த்துகின்றது. (இ-ள்.) கல்வி வேண்டிய யாண்டு இறவாது=துறவறத்தினைக்கூறும் வேதாந்தமுதலிய கல்வி வேண்டிய யாண்டைக் கடவாது: மூன்று இறவாது=அக்கல்வியெல்லாம் மூன்றுபதத்தைக் கடவாது. எ-று. இறவாதென்பதை இரண்டிடத்துங் கூட்டுக. மூன்றுபதமாவன அதுவென்றும் நீயென்றும் ஆனாயென்றுங் கூறும் பதங்களாம். அவை பரமுஞ் சீவனும் அவ்விரண்டும் ஒன்றாதலும் ஆதலின் இம்மூன்றுபதத்தின்கண்ணே தத்துவங்களைக் கடந்த பொருளை உணர்த்தும் ஆகமங்களெல்லாம் விரியுமாறு உணர்ந்துகொள்க. இது மூன்றுவருணத்தார்க்குங் கூறினார். ஏனைய வேளாளரும் ஆகமங்களானும் அப்பொருளைக் கூறியதமிழானும் உணர்தல் "உயர்ந்தோர்க்குரிய" என்பதனான் உணர்க. இது இல்லறம் நிகழ்த்தினார் துறவறம் நிகழ்த்துங்கருத்தினராக வேண்டுதலின் காலவரையறை கூறாராயினார். முன்னர்க்காட்டிய "அரம் போழவ்வளை" என்னும் பாட்டினுட் பானாட் கங்குலின் முனிய வலைத்தி, கடவுள் சான்ற செய்வினைமருங்கிற் சென்றோர் வலவரின் ஓடுவை என்றது இராப்பொழுது அகலாது நீட்டித்ததற்கு ஆற்றாளாய்க் கூறினாளென்று உணர்க. (௭௭)

௧௪௪. வேந்துறு தொழிலே யாண்டின தகமே.

இது வரையறையுடைமையிற் பகைவயிற்பிரிவிற்கு வரையறை கூறுகின்றது. (இ-ள்) வேந்து உறு தொழிலே=இருபெரு வேந்தருறும் பிரிவும் அவருள் ஒருவற்காக மற்றொரு வேந்தனுறும் பிரிவும்: யாண்டினது அகமே=ஓர் யாண்டினுட்பட்டதாம். எ-று. வேந்துறுதொழிலென்பதனை இரட்டுறமொழிதலென்பதனான் வேந்தனுக்கு மண்டிலமாக்களுந் தண்டத்தலைவருமுதலியோர்க்கு உறும் பிரிவும் யாண்டினதகமெனவும் பொருளுரைக்க. தொழிலென்றது அதிகாரத்தாற் பிரிந்துமீளும் எல்லையை. அது "நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு" என்பதனாற் பிரிவிற்கோதிய இருவகைக் காலத்துள்ளும் முதற்கணின்ற சித்திரை தொடங்கித் தையீறாகக் கிடந்த பத்துத்திங்களுமாம். இனிப் பத்தென்னாது யாண்டென்றதனாற், "பின்பனிதானும்" என்பதனாற்கொண்ட சிறப்பில்லாத பின்பனிக்குரிய மாசிதொடங்கித் தையீறாக யாண்டுமுழுவதூஉங் கொள்ளக்கிடந்ததேனும் அதுவும் பன்னிருதிங்களுங் கழிந்ததன்மையின் யாண்டினதகமாமாறுணர்க. இதற்கு இழிந்த எல்லை வரையின்மையிற் கூறாராயினார், அது "இன்றே சென்று வருவது நாளைக் குன்றிழி யருவியின் வெண்டேர் முடுக" எனச் சான்றோர் கூறலின்.

"நிலநாவிற் றிரிதரூஉ நீண்மாடக் கூடலார்-புலநாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதன்றோ - பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்கால் - சுடர்நுதா னமக்கவர் வருதுமென் றுரைத்ததை." இது பின்பனியிற்பிரிந்து இளவேனிலுள் வருதல் குறித்தலின் இரு திங்கள் இடையிட்டது. "கருவிக் காரிடி யிரீஇய - பருவ மன்னவர் வருதுமென் றதுவே." இது கார்குறித்து வருவலென்றலின் அறு திங்கள் இடையிட்டது. "வேளாப் பார்ப்பார்" என்பது "தைஇ நின்ற தண்பெயற் கடைநாட் பனியிருங் கங்குல்" என்றலின் யாண் டென்பதூஉம் அது கழிந்ததன்மையின் அஃது அகமெனவும் பட் டதென்பதூஉம் தலைவன வருதுமென்று காலங்குறித்தற்கொத்த வழக்கென்றுணர்க. காவற்பிரிவும் வேந்துறுதொழிலெனவே அ டங்கிற்று, தான்கொண்ட நாட்டிற்குப் பின்னும் பகையுளதாங் கொலென்று உட்கொண்டு காத்தலின். (௪௮)

**௧௯௦. ஏனைப் பிரிவு மவ்வயி னிலையும்.**

இது எஞ்சிய பிரிவிற்கு வரையறை கூறுகின்றது. (இ-ள்.) ஏனைப் பிரிவும் அவ்வயின் நிலையும்=கழிந்துநின்று தூதிற்கும் பொருளிற்கும் பிரிந்துமீளும் எல்லையும் யாண்டினதகம். எ-று. உ-ம். "மண்கண் குளிர்ப்ப வீசிய தண்பெயல் - பாடுலந் தன்றே பறைக் குரலெழிலி - புதன்மிசைத் தளவி னிதழ்முட் செந்நனை - நெடுங்குலைப் பிடவோ டொருங்குபிணி யவிழக் - காடே கம்மென் றன்றே யலையக் - கோடுடைத் தன்ன கோடற் பைம்பயிர்ப் - பதவின் பார்வை முனைஇ மதவுநடை - யண்ண லிரலை யமர் பிணை தழீஇத் - தண்ணறன் மருங்கிற் றுஞ்சுபட் டன்றே - யனையகொல் வாழி தோழி மனைய - தாழ்வீ நொச்சி சூழ்வன மலரும் - மௌவன் மாச்சினை கட்டி - யவ்வள வென்றோ ராண்டுச் செய் பொருளே." இது பொருட்பிரிவின்கட் கார்குறித்து ஆறு திங்கள் இடையிட்டது. "நெஞ்சுநடுக்குற" என்னும் பாலைக்கலி யுள் "நடுநின்று செய்பொருண் முற்றுமளவென்றார்" என்றலின் எத்துணையும் அளித்தாக மீள்வலென்றதாம். இவற்றிற்குப் பேரெல்லைவந்த செய்யுள் வந்துழிக் காண்க. (௪௯)

**௧௯௧. யாறுங் குளனுங் காவு மாடிப்**
**பதியிகந்து நுகர்தலு முரிய வென்ப.**

இது தலைவற்குங் காமக்கிழத்தியர்க்குந் தலைவியர்க்கும் உரிய தோர்மரபு கூறுகின்றது. (இ-ள்.) யாறும் குளனும் காவும் ஆடி—

காவிரியுந் தண்பொருநையும் மான்பொருநையும் வையையும்போலும் யாற்றிலும் மிருகாமத்திணையேரிபோலுங் குளங்களிலுந் திருமருதத் துறைக்காவேபோலுங் காக்களினும் விளையாடி : பதி இகந்து நுகர்த லும் உரிய என்ப=உறைபதியைக் கடந்துபோய் நுகர்ச்சியெய்துத லுந் தலைவற்குங் காமக்கிழத்தியர்க்குந் தலைவியர்க்கும் உரிய. எ-று. ஏற்புழிக்கோடலாற் தலைவியர்க்குச் சிறுபான்மையென்றுணர்க. " கதிரிலை நெடுவேற் கதிமான் கிள்ளி - மதில்கொல் யானையிற் கத வுநெரி தந்த - சிறையழிப் புதுப்புன லாடுக - மெம்மொடுங் கொ ண்மோவெந் தோள்புரை புணையே." இது காமக்கிழத்தி நின்மனை வியோடன்றி எம்மொடு புணைகொள்ளின் யாமாடுதுமென்று புன லாட்டிற்கு இயைந்தாள்போல மறுத்தது. "வயன்மல ராம்பற் கய லமை நுடங்குதழைத் - திதலை யல்குற் றுயல்வருங் கூந்தற் - குவ ளை யுண்க ணேரார் மெல்லியன் - மலரார் மலிர்நிறை வந்தெனப் - புனலாடு புணர்துணை யாயின னெமக்கே." இது தலைவி புலவிநீங் கித் தன்னொடு புனலாடல்வேண்டிய தலைவன் முன் புனலாடியதனை அவள் கேட்பத் தோழிக்குரைத்தது. "வண்ண வொண்டழை" "விசும்பிழி தோகை" இவையும் அது. "புனல்வளர் பூங்கொடி" என்னும் மருதக்கலியுள் "அன்ன வகையால்யான் கண்ட கனவுத் தா - னனவாகக் காண்டை நறுநுதாஅல் பன்மாணுங்-கூடிப் புணர்ந் தீர் பிரியின்மி னீடிப் - பிரிந்தீர் புணர்தம்மி னென்பன போல-வ ரும்பவிழ் பூஞ்சினை தோறு மிருங்குயி-லானு தகவும் பொழுதினான் மேவர - நான்மாடக் கூடன் மகளிரு மைந்தருந் - தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமா - ரானு விருப்போ டணியயர்பு காமற்கு - வேனில் விருந்தெதிர் கொண்டு." என்னுஞ் சுரிதகத்துக் காவிற் புணர்ந்திருந்தாட நீயுங்கருதெனத் தலைவன் தலைவிக்குக் கூறிய வாறு காண்க. (ரு0)

கசுஉ. காமஞ் சான்ற கடைக்கோட் காலை
யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி
யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே.

இது முன்னர் இல்லறநிகழ்த்திய தலைவனுந் தலைவியும் பின்ன ர்த் துறவறநிகழ்த்தி வீடுபெறுப என்கின்றது. (இ - ள்.) கிழவ னும் கிழத்தியும்=தலைவனுந் தலைவியும் : சுற்றமொடு துவன்றி அற ம்புரி மக்களொடு=உரிமைச்சுற்றத்தோடே கூடிநின்று இல்லறஞ் செய்தலை விரும்பிய மக்களோடே; சான்ற காமங் கடைக்கோட்

காலை—தமக்குமுன்னரமைந்த காமத்தினையுந் தீதாக உட்கொண்ட காலத்திலே; சிறந்தது ஏமஞ் சான்ற பயிற்றல்—அறம்பொருளின் பத்திற் சிறந்த வீட்டின்பம் பெறுதற்கு ஏமஞ்சான்றவற்றை அடிப் படுத்தல்: இறந்ததன் பயனே—யான் முற்கூறிய இல்லறத்தின்பய ன். எ-று. சான்றகாமமென்றார், நுகர்ச்சியெல்லாம் முடிந்தமை தோன்ற. இது கடையாயினார்நிற்கும் நிலையென்று உரைத்தற்குக் கடையென்றார். ஏமஞ்சான்றவாவன, வானப்பிரத்தமுஞ் சன்னி யாசமும்; எனவே, இல்லறத்தின்பின்னர் இவற்றின்கண்ணே நின்று பின்னர் மெய்யுணர்ந்து வீடுபெறுப என்றார். இவ்வீடுபேற்றினை இன்றியமையாது இவ்வில்லறமென்பது இதன்பயன். இது காஞ்சி யாகாதோ வெனின், ஆகாது; தங்குறிப்பினானன்றி நிலையாமை தானே வருவது தாஞ்சிறந்து நிலைபெற்று நிற்குமெனச் சான்றோர் கூறுதலும் அதுதானே வந்துநிற்றலுங் காஞ்சி; இது அன்னதன் றிச் சிறந்த வீட்டின்பவேட்கையாற தாமே எல்லாவற்றையும் பற் றறத் துறத்தலின் அகப்பொருட் பகுதியாம். இதனானே இவ்வோ த்தினுட் பலவழியுங் கூறிய காமம் நிலையாமையின் மேல் இன்பத் தை விளைத்தே வருதலிற காஞ்சியாகாமையுணர்க. உ-ம். "அரும் பெறற் கற்பி னயிராணி யன்ன - பெரும்பெயர்ப் பெண்டி ரெனி னும் - விரும்பிப் - பிறனசையாற் பின்னிற்பா ரின்மையே பேணு- நறுநுதலா ளன்மைத் துணை." இதனுள் அருந்ததியைப்போலுந் தமக்குப் பெரும்பொருள்களை நச்சுதலாலே இரப்பாரது வறுமையே விரும்பிப் பாதுகாத்து, அவர்க்கு வேண்டுவன கொடுக்கும் மகளிர், நாஞ் செல்கின்ற வானப்பிரத்தங் கிரகத்தத்திற்குத் துணையாவரெ னத் தலைவன் கூறவே தலைவியும் பொருள்களிற் பற்றற்றாளாய் யா முந் துறவறத்தின்மேற் செல்வாமெனக் கூறியவாறு காண்க. பிற வும் வந்துழிக் காண்க. (ருக)

கசுூ. தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி யிளையர் விருந்தினர்
கூத்தர் விறலிய ரறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்க ளென்ப.

இது வாயில்களைத் தொகுத்து அவருந் துறவிற்கு உரியராவா ரென்கின்றது. (இ-ள்.) தோழி—அன்பாற்சிறந்த தோழியும்: தாய்— அவளேபோலுஞ் செவிலியும்; பார்ப்பான்—அவரின் ஆற்றலுடைய பார்ப்பானும்: பாங்கன்—அவரோபோலும் பாங்கனும்: பாணன்— பாங்குபட்டொழுகும்பாணனும்: பாடினி — தலைவிமாட்டுப் பாச

காயொழுகும் பாடினியும்: இளையர் - என்றும்பிரியா இளையரும்: விருந்தினர் = இருவரும் அன்புசெய்யும் விருந்தினரும்: கூத்தர்= தலைவற்கு இன்றியமையாக் கூத்தரும்: விறலியர்=தாமே ஆடலும் பாடலும் நிகழ்த்தும் விறலியரும்: அறிவர் = முன்னே துறவுள்ளத்தராகிய அறிவரும்: கண்டோர்=அவர் துறவுகண்டு கருணைசெய்யுங்கண்டோரும்: யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப=இந்தத் தலைவனுந் தலைவியும் பெற்ற துறவின்கண்ணே மனம் பிணிப்புண்ட சிறப்பினையுடைய வாயில்களென்று கூறுவர் ஆசிரியர். எ - று. எனறது, இவர் அத்துறவிற்கு இடையூறுகாதுமுன்செல்வர் தாமும் அவரைப் பிரிவாற்றுமையினென்பதாம். இதனைக் "கற்புங்காமமும்" என்னுஞ் சூத்திரத்து முன்னாக வாயில்களைத் தொகுத்துக் கூறிய சூத்திரமாக வைத்தல் பொருத்தமுடைததேனும் யாத்தசிறப்பினென்று துறவுநோக்குதலின் இதன்பின் வைத்தார். இதற்குக் கோப்பெருஞ் சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும்போல்வார் துறந்தாரொன்று கூறும் புறசெய்யுட்கள் உதாரணம் என்றவாறு. (௫௨)

௧௯௪. வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவருங் காலை
யிடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை
யுள்ளம் போல வுற்றுழி யுதவும்
புளளியற் கலிமா வுடைமை யான.

இது பிரிந்து மீளுங்காற் செய்யத்தகுவதோர் இயல்பு கூறுகின்றது. (இ-ள்.) வினைவயின் பிரிந்தோன் மீண்டு வரு காலை=யாதானுமோர் செய்வினையிடத்துப் பிரிந்தோன் அதனைமுடித்து மீண்டு வருங் காலத்து: இடைச் சுர மருங்கிற் தவிர்தல் இல்லை=எத்துணைக் காதம் இடையிட்டதாயினும் அவ்விடையின்கணுண்டாகிய வருவழியிடத்துத் தங்கிவருதலில்லை: உள்ளம் போல உற்றுழி உதவும்= உள்ளஞ் சேட்புலத்தை ஒருகணத்திற் செல்லுமாறுபோலத் தலைவன்மனஞ் சென்றுற்றவிடத்தே ஒருகணத்திற்சென்று உதவிசெய்யும்: புள் இயல் கலிமா உடைமையான = புட்போல நிலந்தீண்டாத செலவினையுடைய கலித்த குதிரையையுடையனுதலான். எ-று. தேருங் குதிரையாலல்லது செல்லாமையிற் குதிரையைக் கூறினார். இது இடையிற் தங்காது, இரவும்பகலுமாக வருதல் கூறிற்று. இதனை மீட்சிக்கெல்லைகூறிய சூத்திரங்களின்பின் வையாது, ஈண்டுத் துறவு கூறியதன்பின்னர் வைத்தார், இன்பநுகர்ச்சியின்றி இருந்து

அதன் இன்பமெய்துகின்ற நிலையாமைநோக்கியும், மேலும் இன்பப் பகுதியாகிய பொருள்கூறுகின்றதற்கு அதிகாரப்படுத்தற்குமென் றுணர்க. உ-ம். "வேந்துவினை முடித்த காலைத் தேம்பாய்ந் - தினவண் டார்க்குந் தண்ணம் புறவின் - வென்வே லிளைய ரின்புற வலவன் - வன்புவலித் தூரி னல்லதை முள்ளூன்றின் - முந்நீர் மண்டில மாதி யாற்றா - நன்னான்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர் - வாங்குசினைப் பொலிய வேறிப் புதல - பூங்கொடி யவவைப் பொய்யத ளனன - வுள்ளில வயிற்ற வெள்ளை வெண்மறி - மாழ்கி யன்ன தாழ்பெருஞ் செவிய - புன்றலைச் சிறாஅ ரோடுகளி மன்றுழைக் - கவையிலையாணி னிளங்குழை கறிக்குஞ் - சீறூர் பல்புறத் தொழியா மாலை - யினிதுசெய் தனையா லெந்தை வாழிய - பனிவார் கண்ணள் பலபுலந் துறையு - மாய்தொடி யரிவை கூந்தற் - போதுகுர லணிய வெய்தந் தோயே." இதனுள் வினைமுடித்த காலைத் தேரிளையர் செவ்விக்கேற்ப ஊராது கோலூன்றின் உலகிறந்தன செவ்விக்குப் பற்றுத குதிரைத்தேரேறி இடைச்சுரத்திற் தங்காது மாலைக்காலத்து வந்து பூச்சூட்டினை இனிதுசெய்தனை எந்தைவாழிய எனத்தோழி கூறியவாறு காண்க. "இருந்த வேந்த னருந்தொழின் முடித்தென" என்னும் அகபாட்டினுட் "பெருந்தேர் யானு - மேறிய தறிந்த தல்லது வந்த - வாறுநனி யறிந்தன்றோ விலனே * * * இழிமினென நின் மொழிமருண் டிசினே - வான்வழங் கியற்கை வளிபூட்டினையோ - மானுரு வாகநின் மனம்பூட் டினையோ - வுரைமதி வாழிநீ வலவ" என உள்ளமபோல உறறுழி உதவிற்றெனத் தலைவன் கூறியவாறு காண்க. (ருங)

கற்பியன் முற்றிற்று.



## ஐந்தாவது
# பொருளியல்.

**கக௩௫. இசைதிரிந் திசைப்பினு மியையுமன் பொருளே யசைதிரிந் தியலா வென்மனார் புலவர்.**

இவ்வோத்துப் பொருளிலக்கணம் உணர்த்தினமையிற் பொருளியலென்னும் பெயர்த்தாயிற்று. ஏனை ஓத்துக்களும் பொருளதிலக்கணமன்றே உணர்த்தியது, இதற்கிது பெயராயவாறென்னையெனின்; சொல்லதிகாரத்திற் கூறியசொற்களை மரபியலின் இருதிணை ஐம்பாலியனெறிவழாமைத் திரிபில்சொல்லென்பாராதலின் அவை, ஈண்டுத் தம்பொருளை வேறுபடவிசைப்பினும் பொருளாமெனவும், இப்பொருளதிகாரத்து முன்னர்க்கூறிய பொருள்களிற் பிறழ்ந்திசைப்பனவும் பொருளாமெனவும் அமைத்துச், சொல்லுணர்த்தும் பொருளுந் தொடர்மொழியுணர்த்தும் பொருளும் ஒருங்கேகூறலிற் பொருளியலென்றார். இச்சூத்திரம் இவ்வோத்தின்கண் அமைக்கின்ற வழுவமைதிகளெல்லாஞ் சொற்பொருளின் வழுவமைதியும் பொருளின் வழுவமைதியுமென இருவகைய என்கின்றது. (இ-ள்.) இசை திரிந்து இசைப்பினும் = சொற்கள் தத்தம் பொருளுணர்த்தாது வேறுபட்டிசைப்பினும்: அசை திரிந்து இயலா இசைப்பினும் = இவ்வதிகாரத்துள் யாத்தபொருள்கள் நாடகவழக்கும் உலகியல்வழக்குமாகிய புலனெறி வழக்கிற் றிரிந்து இயன்றிசைப்பினும்: மன பொருள் இயையும் என்மனார் புலவர் = அவை மிகவும் பொருளேயாய்ப் பொருந்துமென்று தொல்லாசிரியர் கூறுவர். எ-று. அதனால் யானும் அவ்வாறு கூறுவலென்றார். சொல்லாவது எழுத்தினான் ஆக்கப்பட்டுப் பொருளறிவுறுக்கும் ஓசையாதலின் அதனை இசையென்றார்: இஃது ஆகுபெயர். அசைக்கப்பட்டது அசையென்பதும் ஆகுபெயர். "நோயுமின்பமும்" என்பதனுள் "இருபெயர் மூன்று முரிய வாக" என்பதனாற் றிணைமயங்குமென்றும் "உண்டற்குரியவல்லாப் பொருளை" என்றும் பிறாண்டுஞ் சொல் வேறுபட்டுப் பொருளுணர்த்துதலும், இறைச்சிப்பொருண்முதலியன நாடகவழக்கின் வழீஇயவாறுந், "தேரும் யானையும்" "அறக்கழிவுடையன" "தாயத்தினடையா" என்னுஞ் சூத்திரமுதலியன உலகியல்வழக்கின் வழீஇயவாறுங் கூறி, அவ்வழு அமைக்கின்றவாறு மேலே காண்க. புறத்திணையியலுட் புறத்திணை வழுக்கூறி அகப்பொருட்குரிய வழூஉ ஈண்டுக் கூறுகின்றதென்றுணர்க. "இயலா" என்றதனால் என்செய்வாமென்றவழிப் பொன்செய்வாமென்

றூற்போல விறுவிற் பயவாது இறைபயந்தாற்போல நிற்பனவுங்கொளக. இன்னும் அதனானே செய்யுளிடத்துச் சொற்பொருளானன்றித் தொடர்பொருளாற் பொருள்வேறுபட இசைத்தலுங்கொள்க. அது சூத்திரத்துஞ் செய்யுளுள்ளும் பொருள்கூறுமாற்றானுணர்க. (௧)

கககூ. நோயு மின்பமு மிருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
வெட்டன் பகுதியும் விளங்க வொட்டிய
வுறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோன்
மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்துஞ்
சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியு
மவரவ ருறுபிணி தம்போலச் சேர்த்தியு
மறிவும் புலனும் வேறுபட நிறீஇ
யிருபெயர் மூன்று முரிய வாக
வுவம வாயிற் படுத்தலு முவமமோ
டொன்றிடத் திருவர்க்கு முரியபாற் கிளவி.

இது முற்கூறிய இருவகையானும் பொருள்வேறுபட்டு வழீஇயமையுமாறு கூறுகின்றது. (இ-ள்.) நோயும் இன்பமும் இருவகை நிலையிற் காமம் கண்ணிய மரபிடைதெரிய = துன்பமும் இன்பமுமாகிய இரண்டுநிலைகளைத்துங் காமங் கருதின வரலாற்றுமுறைமையிடம் விளங்க: எட்டன் பகுதியும் விளங்க = நகைமுதலிய மெய்ப்பாடு எட்டனுடைய கூறுபாடுந் தோன்ற: அறிவும் புலனும் வேறுபட நிறீஇ இருபெயர் மூன்றும் உரியவாக = மனவறிவும் பொறியறிவும் வேறுபடநிறுத்தி அஃறிணையிருபாற்கண்ணும் உயர்திணை மூன்றுபொருளுமுரியவாக: அவரவர் ஒட்டிய உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோல் மறுத்துரைப்பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும் = கூறுகின்ற அவரவர் தமக்குப் பொருந்திய உறுப்பெல்லாம் அதுவுடையதுபோலவும் உணர்வுடையதுபோலவும் மறுமாற்றந்தருவதுபோலவுந் தந்நெஞ்சொடு புணர்த்துச்சொல்லியும்: சொல்லாமரபினவற்றொடு கெழீஇச் செய்யாமரபிற் தொழிற் படுத்து அடக்கியும் = வார்த்தை சொல்லா முறைமையுடையனவாகிய புள்ளும் மாவும் முதலியனவற்றோடே அவை வார்த்தைகூறுவனவாகப் பொருந்தி அவை செய்தலாற்றாதமுறைமையுடைய தொழிலினை அவற்றின்மேலே ஏற்றியும்;

உறுபிணி தமபோலச் சேர்த்தியும் = அச்சொல்லா மரபினவை உற்ற பிணிகளைத் தமபிணிகரு வருந்தினபோலச் சார்த்திக்கூறியும்: உவமம் ஒன்றிடத்து உவமவாயிற்படுத்தலும் = அம்மூவகைப்பொருளை உவம ஞ்செய்தற்குப் பொருந்துமிடத்து உவமத்தின்வழியிலே சார்த்திக்கூறு தலும்: இருவர்க்கும் உரிய பாற் கிளவி = அத்தலைவர்க்குந் தலைவிய ர்க்குமுரிய இலக்கணத்திற் பக்கச்சொல். எ-று. தெரிய விளங்க உரிய வாகப் புணர்த்தும் அடக்கியுஞ் சேர்த்தும் அவற்றைப் படுத்தலும் இ வ்விருவர்க்குமுரிய பாற்கிளவியென முடிக்க. அவரவரொன்கின்றார் அகத்திணையியலுட் பலராகக் கூறிய தலைவனையுந் தலைவியையு ம். இருவரொன்றதும் அவரொன்னுஞ்சுட்டு. நெஞ்சென்னும் அஃறி ணையொருமையைத் தெரியவிளங்கத் தலைவன்கூறும்வழி உயர்திணை யாண்பாலாகவுந் தலைவிகூறும்வழி உயர்திணைப்பெண்பாலாகவும் பன் மையாற்கூறும்வழிப் பன்மைப்பாலாகவுங்கொள்க. என்றுஞ்சொல்லா மரபினவற்றையும் உயர்திணைப்பாலாக்கியும் அவற்றைத் தம்போலச் சேர்த்திக் கூறுபடுத்து உயர்திணைமுப்பாலாக்கியுங் கூறுபவென வழு வமைத்தார். இருவகைநிலைக்களத்து எட்டனையுஞ்சேர்க்கப் பதினா றும். அவற்றை நெஞ்சொடுசேர்க்கப் பலவாமென்றுணர்க.

"உண்ணுமையின்" என்னும் அகப்பாட்டினுள் "இறவொடுவ ந்து கோதையொடு பெயரும் - பெருங்கட லோதம் போல - வொன்றிற் கொள்ளாய் சென்றுதருபொருட்கே" என்றவழி "அழிதகவுடைமதி வாழியநெஞ்சே" என்றதனுன் நிலையின்றாகுதியென நெஞ்சினை உறுப் புடையதுபோலக் கழறிநர்க்குரைத்தவாறும் ஓதத்தையும் நெஞ்சையும் உயர்திணையாக்கி உவமவாயிற்படுத்தவாறுங் காண்க. "கைகவியாச் சென்று * * * நசைஇச் சென்றவென் னெஞ்சே" இது உறுப்புடை யதுபோல் உவந்துரைத்தது. "அன்றவ ணொழிந்தன்று மிலையே" என் னும் அகப்பாட்டினுள் "வருந்தினைவாழியை நெஞ்சே * * * செலவி னிச் சிறக்கநின் னுள்ளம்" என அறிவுடையதுபோல் அழுகைபற்றிக் கூறிற்று. "பூவில் வறுந்தலைபோலப் புலநெஞ்சே" என்றது உணர்வு டையதுபோல் வெகுளிபற்றிக் கூறிற்று. "உள்ளம் பிணிக்கொண் டோள்வயி னெஞ்சஞ் செல்ல வுடம்பே" இஃது உணர்வுடையது போல இளிவரல்பற்றிக்கூறியது. "ஈதலுந் துய்த்தலும் * * * இலை நெஞ்சே" இது மறுத்துரைப்பதுபோல நெஞ்சினை இளிவரல்பற்றிக் கூறியது. "பின்னின்று துரக்கு நெஞ்சநின் வாய்போலப் பொய் மொழிகளையா" என்பதும் அது. "விசும்புற நிவந்த" என்பதனுள் "வருக வென்னுதி யாயின் - வாரா நெஞ்சம் வாய்க்கநின் வினையே" என்பது மறுத்துரைப்பதுபோற் தறுகண்மைபற்றிய பெருமிதங்கூறி

ற்று. ஏனை அச்சமும் மருட்கையும்பற்றியன தலைவன்கூற்று வந்துழிக்காண்க. இவை நெஞ்சை ஆண்பாலாகக் கூறியன. "மன்றுபாடவிந்து" என்பதனுள் "நெஞ்சந் தளரடித் தாங்கிய சென்றதின்றே" என்பது உறுப்புடையது போல் அழுகைபற்றிக் கூறியது. "குறுநிலக்குரவின்" என்பது உறுப்புமுணர்வுமுடையதுபோல இளிவரல்பற்றிக் கூறியது. "அறியவும் பெற்றாய்நீ யறியாயோ மடநெஞ்சே." இது உணர்வுடையதுபோல் நகைபற்றிககூறியது. "கோடெழிலகலல்குற் கொடியன்னார் முலைமூழ்கி * * * நெஞ்சே." இது மறுதரைப்பதுபோல் உவகைபற்றிக் கூறியது. "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே - நீயெமக் காகா தது." இது இளிவரல்பற்றி மறுத்துக்கூறியது. ஏனைய வந்துழிக் காண்க. இவை நெஞ்சினைத் தலைவி பெண்பாலாகக் கூறியன. இவை துன்பமும் இன்பமும் நிலக்களமாகக காமங்கண்ணியமரபிடை தெரியவந்தன.

"கானலுங் கழறாதுகழி * * * அலவ" இது சொல்லாமரபின சொல்லுவனவாக அழுகைபறறிக் கூறியது. இவை உயர்திணையுமாயிற்று. "கொங்குதேர் வாழ்க்கை" என்பது உவகைபற்றிக் கூறியது. "போர்தோலைந் திருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போ - லாரஞ ருற்றாரை யணங்கிய வந்தாயோ" இது செய்கையில்லாத மாலைப்பொழுதினைச் செய்யாமரபிற் தொழிறபடுத்தடக்கி உவமவாயிற்படுத்தது. "தொல்லூழி தடுமாறி" என்பதனுள் "பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல் - மன்றிரும் பெண்ணை மடல்சேரன்றில் * * * பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழல்" எனக் கடலும் அன்றிலுங் குழலும் உற்ற பிணியைத் தம்பிணிகரு வருந்தினவாகச் சேர்த்தி உயர்திணையாக்கி உவமவாயிற்படுத்தவாறு காண்க.

ஒன்றிடத்தென்றார் வேண்டியவாறு உவமங்கோடலாகாதென்றற்கு. பகுதியைப் "பால்கெழு கிளவி" என மேலும் ஆளுப. காமங்கண்ணிய என்றதனுற கைக்கிளையும் பெருந்திணையுமாகிய காமத்திற்குவருவனவுங் கொள்க. "சென்றதுகொல் போந்ததுகொல் செவ்விபெறுந்துணையு - நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி - முன்றின்முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற் - குழந்துபின் சென்றவென் னெஞ்சு." இது கைககிளைக்கண் உறுப்புடையதுபோல் அவலம்பற்றி நெஞ்சினைக்கூறியது. "ஓங்கெழிற் கொம்பர் நடுவி தெனப்புல்லுங் - காந்தட் கிவருங் கருவிளம் பூக்கொள்ளு - மாந்தளிர்க் கையிற் றடவரு மாமயில் - பூம்பொழி ஞேகிப் புகுவள்பின் செல்லும்" என்றாற்போல உயர்திணையாக உவமவாயிற்படுத்த பெருந்திணையுமாய் வருவனவுங்காண்க. இது அவலம். (உ)

## ககூஎ. கனவு முரித்தா லவ்விடத் தான.

இது மேற்கூறிய நிலைமைகள் கனவின்கண்ணும் நிகழுமெனப் பகுதிக்கிளவி கூறுகின்றது. (இ-ள்.) அவ்விடத்தான = முன்னர்வழுவமைத்த நிலைமையின்கண்ணே வந்தன; கனவும் உரித்தால் = கனவும் உரித்தாயிருந்தது முந்துநூற்கண். எ-று. எனவே, யானுங் கூறுவலென்றார். "அலந்தாங்கமையலே னென்றானைப்பற்றியென் - னலந்தாராயோவெனத் தொடுட்பேன்போலவுங் - கலந்தாங்கேயென் கவின்பெறமுயங்கிப் - புலம்பலோம்பென வளிப்பான்போலவு - முலையிடைத் துயிலு மறந்தீய்த்தோவென - நிலையழிநெஞ்சந் தழியேன்போலவும் - வலையுறுமயிலின் வருந்தினைபெரிதெனத் - தலையுறமுன்னடிப் பணிவான்போலவும்" இவற்றுட் தன்னெஞ்சினை உறுப்பும் உணர்வும் மறுத்துரைத்தலுமுடையதாகக் கூறியவாறும், ஆங்கு எதிரெய்துகொண்ட தலைவன் உருவும் உறுப்பும் உணர்வும் மறுத்துரைத்தலுமுடையதாய்ச் செய்யாமரபின செயத்தாகக கூறியவாறும், அவை உயாதிணையாகக் கூறியவாறும் பிறவுமுணர்க. "இன்னகையினையமாகவு மென்வயின் வாயல்கனவினம்" என வருவனவுங் கொள்க. (ரு)

## ககூஅ. தாய்க்கு முரித்தாற் போக்குடன் கிளப்பின்.

இது முற்கூறியகனவு களவின்கட் செவிலிக்குமுரித்தென வழுவமைக்கின்றது. (இ-ள்) உடன்போக்குக் கிளப்பின் = உடன்போக்கின்கட் கூறின்: தாய்க்கும் உரித்தால் = அக்கனவு செவிலிக்கும் உரித்தாயிருந்தது முந்துநூற்கண். எ-று. தோழி உடன்படப்போகுதலானும் நற்றாய் "நற்பாற்பட்டனள்" என்று வருதலானுந் "தாயெனப்படுவோள் செவிலியாகும்" என்பதனானுஞ் செவிலியைத் தாயென்றார். தலைவிபோகாமற் காத்தற்குரியளாதலானும் அவளை என்றும் பிரியாத பயிற்சியானுஞ் செவிலிக்குக் கனவு உரித்தாயிற்று. "காய்ந்துசெல்லற் கனவி" என்பதனுட் "கண்படைபெறேன்கனவ" என்றவாறு காண்க.

## ககூகூ. பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்தே.

இது எய்தாததெய்துவித்து வழுவமைக்கின்றது. (இ-ள்.) பால்கெழு கிளவி = இலக்கணத்திற் பக்கச்சொல்: நால்வர்க்கும் உரித்து = தோழியுஞ் செவிலியும் நற்றாயும் பாங்கனுமென்னும் நால்வர்க்கும் உரித்தாம். எ-று. மேல் "இருவர்க்குமுரிய பாற்கிளவி" என்றலிற் தலைவனையுந் தலைவியையும் ஆண்டே கூறலின் ஈண்டு இந்நால்வருமென்றே கொள்க. "தருமணற்கிடந்த பாவை *** யென்னணிவது மே" இது நற்றாய் மணற்பாவையைப் பெண்பாலாகக்கூறித் தழீஇ

க்கொண்டொழுதலிற் பால்கெழுகிளவியாயிற்று. "தான் ருயாய்க் கோங்கந் * * * வந்து" என்பது செவிலி குரவை வழிகாட்டென்றலிற் பால்கெழுகிளவியாயிற்று. ஏனையிரண்டும் மேல் விலகருப. (ரு)

உ00. நட்பி னடக்கை யாங்கலங் கடையே.

இது இறந்தது காத்தது. (இ-ள்.) ஆங்கு = அந்நால்வரிடத்து : நட்பின் நடக்கை அலங்கடை = நட்பின்கண்ணே ஒழுகுதலல்லாத அவ்வீரிடத்தும் பால்கெழுகிளவி உரித்து. எ-று. எனவே, நட்புச்செய்தொழுகுந் தோழிக்கும் பாங்கனுக்கும் பால்கெழுகிளவி இன்றென்றார். எனக்கொள்க. (சு)

உ0க. உயிரு நாணு மடனு மென்றிவை
செயிர்தீர் சிறப்பி னால்வர்க்கு முரிய.

இது தலைவிக்குத் தலைவனாற்பிறப்பதோர் வேறுபாடு தோன்றியவழி அதனைப் பரிகரித்தற்குரியோர் இவரென வழுவமைக்கின்றது. (இ-ள்.) உயிரும் நாணும் மடனும் என்றிவை = உயிரும் நாணும் மடனுமென்று கூறப்பட்ட இவைமூன்றும்: செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய = குற்றந்தீர்ந்த தலைமையினையுடைய நற்றாய்க்குஞ் செவிலிக்குந் தோழிக்குந் தலைவற்குமுரிய. எ-று. உம்மை ஐயமாதலிற் தலைவனையொழிந்த மூவர்க்குமுரிய என்றாராயிற்று. என்றது தலைவன் இவற்றைக் களவிலுங் கற்பிலுங்காத்தலும் வரைவிடைவைத்துப்பிரிந்தும் பரத்தையிற்பிரிந்துங் காவாமையுமுடையவென்பது கூறிற்று. அவை எழுவகையாற் தோழி அவற்றைக்காத்து அறத்தொடுநிற்ப, அதனைச் செவிலி உட்கொண்டு அவற்றைக்காத்து நற்றாய்க்கறத்தொடுநிற்ப, அவளும் அவற்றை உட்கொண்டுகாத்தற்கு அறத்தொடுநிற்றலும் உடன்போயது அறனென நற்றாய் கோடலுஞ் செவிலி பிறளாவளாகின்றாளே வெனத் தோழியைவினவலும் பிறவுமாம். உதாரணம் முன்னர்க்காட்டியவற்றுட் காண்க. இனி உம்மையை முற்றும்மையாக்கி உயிர் முதலிய தலைவியுறுப்பினை உறுப்புடைத்தாகவும் மறுத்துரைப்பதாகவுங் கூறப்பெறுதென்றார். (எ)

உ0உ. வண்ணம் பசந்து புலம்புறு காலை
யுணர்ந்த போல வுறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே.

இது வருத்தமிக்கவழி அமையுமாமென்கின்றது. (இ-ள்.) வண்ணம் பசந்து புலம்பு உறுகாலை = மேனி பசந்து தனிப்படருறுங்காலத்து : கிழவி உறுப்பினை உணர்ந்த போல = தலைவி தனது உறுப்பினை

அறிந்தனபோல: புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே = பொருந்தினகூற்றாற் சொல்லவும்பெறும். எ-று. "கேளல்லன நமக்க * * * நெஞ்சத்தெம்" "நாணில மன்றவெங் கண்ணே" "நாணோராககழலே" "தணந்தநாள் சால வறிவிப்ப போலு - மணந்தநாள் வீங்கிய தோள்." எனவரும். காதும் ஓதியும் முதலியன கூறப்பெறா, கண்ணுந் தோளும் முலையும்போல்வன புணர்க்கப்படுமென்றற்குப் புணர்ந்தவகையென்றார். இதனானே இவற்றைத் தலைவன்பாற் செலவுவரவுடையனபோலக் கூறலுங்கொள்க. "கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையெம்மைத் - தின்னு மவர்க்காண லுற்று" எனக கண்ணினைச் செல்வனவாகக் கூறினாள். (அ)

உ0ரு. உடம்பு முயிரும் வாடியக் காலு
மென்னுற் றனகொ லிவையெனி னல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை.

இது தலைவனோடு வேறுபட்டுழிப் பிறப்பதோர் வழுவமைதி கூறுகின்றது. (இ-ள்.) உடம்பும் உயிரும் வாடியக்காலும் = தன் உடம்பும் உயிருந் தேய்ந்து கூட்டமின்றி இருந்தகாலத்தும்: இவை என் உற்றன கொல் எனின் அல்லது = இவை என்னவருத்தமுற்றனகொலென்று தனககு வருத்தமில்லதுபோலக் கூறினல்லது: கிழத்திக்குக் கிழவோற் சேர்தல் இல்லை = தலைவிகருத் தலைவனைத் தானேசென்று சேர்தல் இருவகைக் கோளினுமில்லை. எ-று. இது காதல்கூரவுங் கணவற்சேராது வஞ்சம்போன்றெழுகலின் வழுவாயினும் அமைக்க என்றவாறு "ஏற்றோ வாழி தோழி * * * சால்பின் றன்றே" என்பதனுட் கேண்மை தோளை மெலிவித்ததாயினும் எனக்கு அமைதியைத்தந்தது, யான் ஆற்றவுந் தாம் மெலிதல் பொருந்தாதது எத்தன்மைத்தெனத் தலைவிதோழிககுக் கூறியவாறு காண்க. "கலைதீண்ட வழுக்கி வீழ்ந்த - பழத்தையருவிப் பின்னும் பயன்படுத்து நாடன்" என்றதனால் அலரால் நஞ் சுற்றத்திற்பிரிந்தேமாயினும் அவன் நம்மை வரைந்துகொண்டு இல்லறஞ்செய்வித்துப் பயன்படுத்துவனென்பதாம். "கதுமெனத் தானோக்கித் தானேகலுழ்-மிதுநகத் தக்க துடைத்து." இதுவும் அது. "ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண் - டாஅ மிடர்ப்பட்டது." இதுவும் இதன்பாற்படும். இனிப் "புணர்ந்த வெழில் * * * நெஞ்சே." இதனுள் யான் துனித்தல்வல்லேன் என் நெஞ்சிற்குத் தன்றன்மையென்பதொன்றில்லை ஈதென்னென்றலின் அவ்வாறுகாண்க. (கூ)

உ0சு. ஒருசிறை நெஞ்சமொ டுசாவுங் காலை
உரிய தாகலு முண்டென மொழிப.

இதுவும் அது. (இ-ள்.) ஒருசிறை=தன் உள்ளத்து நின்ற தலைவனையொழியப் போந்துநின்றது: நெஞ்சமொடு உசாவுங் காலே=தானுந் தன் நெஞ்சமும் வேறாகநின்று கூட்டத்திற்கு உசாவுங் காலம்: உரியதாகலும் உண்டென மொழிப = தலைவிக்குரிததாகலும் உண்டென்று கூறுவர் புலவர். எ - று. உம்மையாற் தோழியுடன் உசாவுங்காலமும் உண்டென்று கொள்க. உம்மை எச்சவும்மை. இது தலைவனை வேறுபடுத்துத் தானும் நெஞ்சமும் ஒன்றாய் நின்று உசாவுதலின் வழுவாயமைந்தது. இது யாண்டு நிகழுமெனின் இவனோடு கூடாமையின் இவன் ஆற்றானவனென்றானும் உணர்ப்புவயின்வாரா ஊடற்கட்புலக்குமென்றானும் பிறவாற்றானுமென்றானும் உசாவும். "மாணமறந்துள்ளா நாணிலிகடிசேர்தலுமுண்டு." எனவரும். "பலலே பலருங்காண நாணிவிட்டு * * * தோழி" இது தோழியோடு உசாவியது. (கo)

உoரு. தன்வயிற் கரத்தலு மவன்வயின் வேட்டலு
மன்ன விடங்க ளல்வழி யெல்லா
மடனொடு நிற்றல் கடனென மொழிப.

இது பெண்டிர்க்கியல்பாகிய மடமையழிவதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்.) தன்வயிற் கரத்தலும்=தலைவன் தலைவியிடத்தே புறத்தொழுக்கமின்றென்று பொய்கூறலும்: அவன்வயின் வேட்டலும்=அங்ஙனங் கரந்துகூறிய தலைவன்கட் தலைவிவிரும்புதலும்; அன்ன இடங்கள் அல்வழி எல்லாம். = ஆகிய அவைபோலும் இடங்களல்லாத இடத்தெல்லாம்: மடனொடு நிற்றல் கடன் என மொழிப = தலைவி மடமையுளளாகிநிற்றல் கடப்பாடென்று கூறுவா புலவர். எ-று. எனவே இவ்வீரிடத்தும் மடனழிதலுடையளென வழுவமைத்தார். அது "குதிரைவழங்கிவருவல்" என்று அவன்கரந்தவழி, அதனை மெய்யெனக்கோடலன்றே மடமை, அங்ஙனங்கொள்ளாது அறிந்தேன் குதிரைதானெனப் பரத்தையர்கட் தஙகினையெனக் கூறுதலின் இதுமடனழிந்த வழுவமைதியாயிற்று. "கவவுக்கை ஞெகிழ்ந்தமைபோற்றி மதவுநடைச் செவிலி பெயர்ந்தேனே" என்றவழி மனத்து நிகழ்ந்த வேட்கையைமறைத்து வன்கண்செய்து மாறினமையின் அதுவும் மடனழிந்து வழுவாகியமைந்தது. அன்னவிடமென்றதனால் "யாரினுங் காதல மென்றேனா வூடினாள் - யாரினும் யாரினு மென்று." என்றாற்போல மடனழிய வருவனவுங்கொள்க. (கக)

உoசு. அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
யறத்தியன் மரபில டோழி யென்ப.

இது தலைவியாற் றோழிக்கு வருவதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்.) அறத்தொடு நிற்குங் காலத்தன்றி = தலைவி இக்களவினைத் தமர்க்கறிவுறுத்தல் வேண்டுமென்னுங் கருத்தினளாகிய காலத்தன்றி: தோழி அறத்தியன் மரபிலளென்ப = தோழி அறத்தினியல்பாகத் தமர்க்குக்கூறும் முறைமையிலளென்று கூறுவர் புலவர். எ-று. காலமாவன நொதுமலர்வரைவும் வெறியாட்டெடுத்தலும் முதலியன. தலைவி களவின்கண்ணே கற்புக்கடம்பூண்டு ஒழுகுகின்றாளை நொதுமலர் வரைவைக்கருதினுமென்பதூஉம் இற்பிறந்தார்க்கேலாத வெறியாட்டெடுத்த தம்மனைககண்ணிகழ்ந்ததூஉந் தலைவிக்கிறந்துபாடுபிறக்குமென்று உட்கொண்டு அவைபிறவாமற் போற்றுதல் தோழிக்குக் கடனாதலின் இவை நிகழ்வதற்கு முன்னே தமர்க்கறிவித்தல்வேண்டும்; அங்ஙனம் அறிவியாதிருத்தலின் வழுவாயமைந்தது. "இன்றியாண்டையனோ தோழி" இது நொதுமலர் வரைவுகூறி உசாவி அறத்தொடு நின்றது. "கடவுட் கற்சுனை யிடையிறந் தவிழ்ந்த" இது வெறியாட்டெடுத்தவழி அறத்தொடு நின்றது. "அகவன்மகளே அகவன்மகளே" இது கட்டுக காணிய நின்றவிடத்து அறத்தொடுநின்றது. அதுவும் வெறியாட்டின் கண் அடங்கும். தலைவிக்குக் குறிப்பினுமிடத்தினுமல்லது வேட்கை நெறிப்பட வாராமையிற் சின்னாள் கழித்தும் அறத்தொடு நிற்பாளாகலானுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்டபொழுதே அறத்தொடுநிற்பாராகலானும் ஆண்டு வழுவின்று. (கஉ)

உ0எ. எளித்த லேத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுத லுசாத லேதீடு தலைப்பா
டுண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
யவ்வெழு வகைய வென்மனார் புலவர்.

இதுவும் இவ்வறத்தொடு நிற்றலை இனைத்தென்கின்றது (இ-ள்.) எளித்தல் = தலைவனை எளியனாகக்கூறுதல்: ஏத்தல் = அவனை உயாத்துக்கூறல்: வேட்கை உரைத்தல் = அவனது வேட்கை மிகுத்துரைத்துக்கூறல்: கூறுதல் உசாதல் = தலைவியுந் தோழியும் வெறியாட்டிடத்தும் பிரிவிடத்துஞ் சிலகூறுதற்கண்ணே தாமும் பிறருடனேயும் உசாவுதல்: ஏதீடு = ஒருவன் களிறும் புலியும் நாயும்போல்வனகாத்து எம்மைக்கைக்கொண்டானெனவும் பூத்தந்தான் தழைதந்தானெனவும் இவைமுதலிய காரணமிட்டுணர்த்தல்: தலைப்பாடு = இருவருந் தாமே எதிர்ப்பட்டார் யான் அறிந்திலேனெனக் கூறுதல்: உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ = என்று அவ்வாறனையும்

படைத்துமொழியாது பட்டாங்குகூறுதலென்னுங் கிளவியோடே கூட்டி: அவ் எழுவகைய என்மனார் புலவர் = அத்தன்மைத்தாகிய எழுகூற்றையுடைய அறத்தொடுநிற்றலென்று கூறுவர் புலவர். எ-று. அவ்வெழுவகைய என்றதனால் உண்மைசெப்புங்கால் ஏனையாறுபொருளினுட்சில உடன்கூறி உண்மைசெப்பலும் ஏனைய கூறுங்காலுந் தனித்தனிகூறாது இரண்டும்மூன்றும் உடனேகூறுதலுங்கொள்க. உ-ம் "எல்லுமெல்லின் றசைவுபெரி துடையன் * * * ஒருவன்" என்பது எளித்தல். "பகன்மாய்ந்திப்படுசுடரமையத்தல * * * தோழியென்றனள்" என்பது ஏத்தல். "பூணுகமுறத்தழீஇப் போத்தந்தான்" என்பது வேட்கையுரைத்தல். "முருகயர்ந்துவந்த பலியே" இது வேலனோடு கூறுதலுசாதல். கூறுதற்கண் உசாதலென விரிக்க. "வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய் - கோடாது நீர்கொடுப்ப தல்லது கோடா - வெழிலுமுலையு மிரண்டற்கு முந்நீர்ப் - பொழிலும் விலையாமோ போந்து." இதுவும் உசாதலாய் அடங்கும்.

"உருவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுளு - முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி - கிளையா கண்ண வளைகுபு நெரித்தர - நடுங்குவன மெழுது நல்லடி தளர்ந்தியா- மிடும்பைகூர் மனத்தே மருண்டு புலப்பட - மாறுபொரு தோட்டிய புகல்வினை - வேறு புலத்தர் காண விடையி-னணிபெற வந்தே ஞமல மாலாயிடை-வெருவுதலஞ்சி மெல்லிய வினிய-மேவரக் கிளந்தெம்மை மாலாய் கவினேக்கி-யன்போ டசைவென சாய்ப வாங்குந்தி-மடமதர் மழைக்க ணிளையி-ரிறந்த கெடுதியு முடையமென் றனனே." என நாய்காத்தவாறும், " கணவிடை புடையூக் கானங் கல்லென-மடிவி லிளையர் வெடிபடுத் தெடுத்தரக்-கார்ப்பெய லுருமிற் பிளிற்றுச் சீர்த்தக - விரும்பினர்த் தடக்கை யிருநிலஞ் சேர்த்திச்-சினந்திகழ் கடாஅஞ் செருக்கி மரங்கொல்பு-மையல் வேழ மடங்கலி னெரிதர-வுய்விட மறியே மாகியொய்யெனத்-திருந்துகோ லெல்வளை தெளிர்ப்ப நாண்மறந்து-விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச் - சூருறு மஞ்ஞையி னடுங்க வார்கோ-லுடைவுறு பகழி வாங்கிக் கடுவிசை-யண்ணல் யானை யணிமுகத் தழுத்தலிற்- புண்ணுமிழ் குருதி முகம்பரந் திழிதரப்-புள்ளின் வரிநுதல் சிதைய நில்லா - தயர்ந்து புறக்கொடுத்த பின்னர் நெடுவேளணங்குறு மகளி ராடுகளங் கடுப்பத் - திண்ணிலைக் கடம்பிற் றிரளரை வளைஇய-துணையறை மாலையிற் கைபிணி விடாஅ-துரையுடைக் கலுழி பாய்தலி னுருவுத்திரை - யருங்கரை வாழையி னடுங்கப் பெருந்தகை-யஞ்சி லோதி யசைய லெனைய தூஉ - மஞ்ச லோம்புநின் னணிநலங் காக்கென-மாசுறு சுடர்நுத னீவி - நீடுநினைந் தென்முக நோக்கி நக் கனனே." எனக் களிறு காத்தவாறும், புனலுள் எடுத்தவாறுங் கா

ண்க. "புலிபுலி யென்னும் பூச ரோன்ற * * * நிற்றந்தோனே." இது புலிகாத்தற்கு வந்தானென இட்டுரைத்தது. "அன்றாய் வாழிவெண் டன்னை யென்னை-தானு மலைந்தா னெமகருந் தழையாயின-பொன்வீ மணியரும் பினவே - யென்ன மரங்கொலவர் சாரலவ்வே" இது தோழி தழைதந்தானென அறத்தொடுநின்றது. "சுள்ளி சுனை நீலஞ் சேர் பா லிகைசெயலை-யள்ளி யளகத்தின் மேலாய்ந்து-தெள்ளி-யிதனாற் க டியொடுங்கா வீர்ங்கடா யானை - யுதனாற் கடிந்தா னுளன்." இதனு ள் அளகத்தின்மேலாயந்தெனவே பூத்தந்தமை கூறினாள். "பிறிதொ ன்றின்மையறியக் கூறிகொடுஞ்சுழிப* * *னினக்கே." இது தலைப் பாடு. "நேரிறை முன்கை பற்றின் மாதர் - நாடறி நன்மண மயர்கஞ் சின்னாட்-கலங்க லோம்புமின் னிலங்கிழை யீரென - வீர நன்மொழி தீரக்கூறித்-துணைபுண ரேற்றி னெம்மொடு வந்து - துஞ்சா முழவின் மூதூர்வாயி - லுண்டுறை நிறுத்துப் பெயர்நதன னதற்கண் - டன்றை யணைய விருப்போ டென்று - மிரவின் வரன்மா லையனென வருந்தொ றுங் - காவலர் கடுகினுங் கதநாய் குரைப்பினு- நீதுயி லெழினு நிலவுவெ ளிப் படினும் - வேய்புரை மென்றோ ளின்றுயி லென்றும் - பெறாஅன் பெயரினு முனியி-லுறாஅ னிளமையி னிகந்தன்று மிலனே." எனவும் " வளமையிற் றன்னிலை திரிந்தன்று மிலனே" எனவும் "கன்மழை பொழிந்த வகன்கணருவி - யாடுகழை யடுக்கத் திழிதரு நாடன் - பெ ருவரை யன்ன திருவிறல் வியன்மாபு - முயங்காது கழிந்த நாளி வள் - மயங்கிதழ் மழைக்கண் கலுழு மன்றாய்" எனவும் வருவன உண்மைசெப்பல். "காமர் கடும்புனல்" என்பதனுள் இரண்டு வந்தன. பிறவுமன்ன. (கடு)

உ0அ. உற்றுழி யல்லது சொல்ல லின்மையி னப்பொருள் வேட்கைக் கிழவியி னுணர்ப.

இது மேலதற்கோர் புறனடை. (இ-ள்.) உற்றுழி அல்லது சொ ல்லல் இன்மை யின் = தலைவியாக்கு ஏதமுற்ற இடத்தன்றித் தோழி அவ்வாறு மறைபுலப்படுத்துக் கூறுளாதலின்: அப்பொருள் வேட்கைக் கிழவியின் உணர்ப = அம்மறைபுலப்படுத்துதல் விருப்பத்தைத் தலைவி யர்காரணத்தாற் தோழியர் உணர்வர். எ-று. உணர்வவொன்று உயர்தி ணைப்பன்மையாற் கூறவே தலைவியருந் தோழியரும் பலரென்றார். கிழ வியென்றாரேனும் ஒருபாற்கிளவியென்பதனாற் பன்மையாகக் கொ ள்க. உயிரினுஞ் சிறந்த நாணுடையாள் இதுபுலப்படுத்தற்கு உடம்படு தலின் வழுவாயமைந்தது. "மற்று *** இன்னுயிர் - கழிவ தாயி னின் மகளா இமே" என்றாற்போல்வனவே இலக்கணமென்பது மே லைச்சூத்திரத்தாற் கூறுப. (கசு)

உ0கூ. செறிவு நிறைவுஞ் செம்மையுஞ் செப்பு
மறிவு மருமையும் பெண்பா லான.

இது மறைபுலப்படாமல் ஒழுகுதல் இலக்கணமென்றற்கும் மறைபுலப்படுத்துதல் வழுவென்றற்குங் கூறுகின்றது. (இ-ள்.) செறிவும் = அடக்கமும்; நிறைவும் = மறைபுலப்படாமல் நிறுத்தும் உள்ளமும்: செம்மையும் = மனகோட்டமின்மையும்: செப்பும் = களவின்கட் செய்யத்தருவன கூறலும்: அறிவும் = நன்மைபயப்பனவுந் தீமைபயப்பனவும் அறிவித்தலும்: அருமையும் = உள்ளக்கருத்தறிதலருமையும்: பெண்பாலான = இவையெல்லாம் பெண்பாற்குக் காரணங்கள். எ-று இவையுடையளெனவே மறைபுலப்படுதற்கு உரியளல்லளென்பதூஉம் அதனைப்புலப்படுத்தலின் முற்கூறியன வழுவமைத்தனவுமாயிற்று. இது வருஞ்சூத்திரத்திற்கும் ஒத்தலிற் சிங்கநோக்கு. (கரு)

உக0. பொழுது மாறுங் காப்புமென் றிவற்றின்
வழுவி னாகிய குற்றங் காட்டலுந்
தன்னை யழிதலு மவனா றஞ்சலு
மிரவினும் பகலினு நீவா வென்றலுங்
கிழவோன் றன்னை வார லென்றலு
நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த வன்னவை பிறவும்
வரைதல் வெட்கைப் பொருள வென்ப.

இதுவுந் தோழிக்குந் தலைவிக்கும் உரியனவாகிய வழுவமைக்கின்றது. (இ-ள்) பொழுதும் ஆறும் காப்பும் என்றிவற்றின் வழுவின் ஆகிய குற்றங் காட்டலும் = இராப்பொழுதும் அககாலத்துவழியுங் கண்ணுறும் இடத்துள்ள காவலுமென்று கூறப்பட்டவை மூன்றினது பழையமுறையிற் பிறழுதலாற் தலைவர்க்குளதாகிய குற்றத்தையுணர்த்தலும்: இவை தலைவர்க்கு அச்சம் உளவாகக் கருதுதலும் அவனால் நிகழும் இன்பத்தைத் துன்பமாகக் கருதுதலும் உடையனவாயிற்றேனும் அன்புபற்றிக்கூறலின் அமைந்தது. அப்பொழுதிற் தலைவனது செலவுவரவு நிகழ்ந்துழியே இச்குற்றங் காட்டுவதென்றுகொள்க. "மன்றுபாடவிந்து" என்பது பொழுதுவழுவுதலிற் குற்றங்காட்டியது. "ஈந்த ணுடையை * * * வலரே" இது காப்பினுன் வழுவுணர்த்தியது.

தன்னை அழிதலும் = அவன் அக்காலத்தவ்வழியிற் தனியே வருதற்கு யான் ஏதுவாயினேன் எனத் தன்னை அழிவுபடுத்துரைத்த

லும் "நீதவ றுடையையு மில்லை நின் * * * யேனே" அவன்வரவினை உவவாது துன்பங்கூர்தல் வழுவாயினும் அதுவும் அவன்கண் அன் பாதலின் அமைத்தார்.

அவன் ஊறு அஞ்சலும் = அவ்வழியிடத்துத் தலைவற்கு வரும் ஏதமஞ்சுதலும்: "அஞ்சுவல் வாழி யைய வாரிருட் - கொங்கிய ரீன்ற மைந்தின் - வெஞ்சின வுழுவை திரிதருங் காடே" இது அவனைப் புலி நலியுமென்றஞ்சியது. "ஒருநாள் விழும முறினும் - வழிநாள் வாழ வல் லளென் றோழி" என்பதும் அது. ஆறின்னுமையாவது விலங்குமுத லியவற்றான் வரவிற்கு இடையீடு நிகழுமென்றஞ்சுதல். ஏத்தல் எளி த்தலின் வேறாயிற்று. இது நன்குமதியாமையின் வழுவாயினும் அன் புமிகுதியான் அமைத்தார்.

இரவினும் பகலினும் நீ வர என்றலும் = இராப்பொழுதின் க ண்ணும் பகற்பொழுதின்கண்ணுந் தலைவனைக் குறியிடத்து வருகவெ னத் தோழிகூறலும்: "வல்வு வினையரொ டெல்லிச் செல்லாது * * * சேய நாட்டே" எனவும் "பூவே புன்னையந் தண்பொழில் - வாவே தெய்ய மணந்தனை செலற்கே" எனவும் வரும். களவு அறிவுறுமெ ன்று அஞ்சாது வருகவென்றலின் வழுவேனுந் தலைவி வருத்தம் பற் றிக் கூறலின் அமைத்தார்.

கிழவோன்றன்னை வாரல் என்றலும் = தோழியுந் தலைவியுந் தலைமைசெய்துகொண்டு தலைவனை வாரற்க என்றுகூறுதலும்: தலை மை வழுவேனும் அன்பான் அமைந்தார். "இரவு வாரா நிலையையெ ன் றோளே" இது இரவுவாரலென்றது. "பகல்வரிற் கவ்வையஞ்சுது ம்" என்றது பகல்வாரலென்றது. "நல்வரை நாட நீவரின் - மெல்லி யாளொரு நாள்வா ழலளே" இது இரவும்பகலும் வாரலென்றது.

நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும் = பிறிதோர் பொ ருண்மேல்வைத்து நன்மையுந் தீமையுந் தலைவற்கேற்பக்கூறலும்: "கழியாத காதல ராயினுஞ் சான்றோர் - பழியொடு வருஉ மின்டம் வெஃகார்" எனப் பிறர்மேல்வைத்துத் தலைவனை அறிவுகொளுத்தின மையின் வழுவாயமைந்தது. "பழியொடு வருஉ மின்பம் வெஃகார்" எனவே புகழொடு வருஉம் இன்பம் வெஃகுவரெனக்கொள்ளவைத் தலின் நன்மையுந் தீமையும் பிறிதின்மேல்வைத்துக் கூறிற்றாம்.

புரைபட வந்த அன்னவை பிறவும் = வழுப்படவந்த இவை போல்வன பிறவும்: அவை ஊடற்கணின்றியுந் தலைவனைக் கொடிய னென்றலும் கொடுமலர்வரைகின்றானென்றலும் அன்னை வெறியெடு

க்கின்றுளென்றலும் பிறவுமாம். "பகையிஞேய்செய்தான்" என்பது ஊடற்கணின்றிக் கொடியனென்றது. "தினையுண் கேழலிரிய" என் னும் நற்றிணையுள் "யாவது முயங்கல் பெறுகுவ னல்லன் - புலவி கொளியர்தன் மலையினும் பெரிதே." இது நொதுமலர்வரைவு சி றைப்புறமாகக் கூறியது. "கடம்புங் களிறும் பாடித் தொடங்குபு- தோடுந் தொடலையுங் கைக்கொண் டல்கலு - மாடிப் பாடினு ளாக நன்றே" என்பது தலைவர்கரு வெறியாட்டுணர்த்தியது .

வரைதல் வேட்கைப் பொருள என்ப = தலைவன் வரைந்து கோடற்கண் நிகழும் விருப்பத்தைத் தமக்குப் பொருளாகவுடைய. எ-று. என்றது வழுப்படக்கூறினும் வரைவுகாரணத்தாற்கூறலின் அமைக்கவென்றவாறும். (௧௬)

௨௧௧. வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்
மரீஇய மருங்கி னுரித்தென மொழிப.

இது நடுவணைந்திணையல்லாத கைக்கிளைபெருந்திணைக்கட் படு வதோர் வழுவமைக்கின்றது (இ-ள்.) வேட்கை மறுத்து = தம்மனத்து வேட்கையை மாற்றி: ஆங்குக கிளந்து உரைத்தல் = இருவரும் எதிர் ப்பட்டவிடத்துத் தாம் ஆற்றினதன்மையைப் புலப்படக்கூறி ஒருவர் ஒருவர்க்கு அறிவித்தல் : மரீஇய மருங்கின் உரித்தென மொழிப = பு லனெறிவழக்கஞ்செய்து மருவிப்போந்த கைக்கிளைபெருந்திணைக்கண் உரித்தென்று கூறுவர் ஆசிரியர். எ-று. "கைக்கிளைமுதலாப் பெருந் திணையிறுவாய்" என அவை இருமருங்கும் நிற்றலின் ஈண்டு மருங்கெ ன்றுர். "தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்ன - செய்வது நன்று மோ மற்று." அடியோர் தலைவராயவழித் தலைவி வேட்கை மறுத்து ரைத்தியது. "எறித்தபடைபோ * * * னுண்டெனுயிா" "உழுந்தி னுந் * * * பிறப்பு" இவை அடியோர் தலைவராக வேட்கை மறுத்துண ர்த்தியது. பெருந்திணை. ஏனை வினைவலபாங்கிஞேர்க்கு வந்துழிக் கா ண்க. இவை கைகோளிரண்டன்கண்ணும் வழங்குதல் சிறுபான்மை யுரித்தென்று அகத்திணைககட் கூறலின் வழுவமைத்தார். ஒன்றென முடித்தலான் மரீஇயவாறு ஏனையவற்றிற்குங்கொள்க. "புள்ளிக்கள் வன் புனல்சேர் * * * தவறுதல் சாலாவோ கூறு" எனவும் "குதி ரையோ வீறியது" எனவும் வருவனவும் பிறவும் இழிந்தோர்கூற்றை உயர்ந்தோர்கூறுவனவும் அமைத்துக்கொள்க. (௧௭)

௨௧௨. தேரும் யானையுங் குதிரையும் பிறவு
மூர்ந்தன ரியங்கலு முரிய ரென்ப.

இது களவொழுக்கத்துக்கு மறுதலையாயதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்) தேர்முதலியவற்றையும் பிறவூர்திகளையும் ஏறிச்சென்று கூடுதலையும் உரியர் தலைவரென்று கூறுவர் புலவர். எ-று. பிறவாவன கோவேறுகழுதையுஞ் சிவிகையும் முதலியனவாம். இது செல்வக்குறைபாடின்மை கூறுதலான் அமைந்தது. "குறியின்றிப் பன்னாள் கடுந்திண்டேர் வருபதங்கண் - டெறிதிரை யிமிழ்கானல் லெதிர்கொண்டா ளென்பதோ-வறி * * * வருதுறந் துறந்தனை" "நிலவுமணற் கொட்குமோ தேருண்டெனவே." எனவுங் "கடுமான் பரிகதழ் * * * கடை இ நடுநாள் வரும்" எனவுங் "கழிச்சுறா வெறிந்த புட்டாளத்திரி - நெடுநீ ரிருங்கழிப் பரிமெலிந் தசைஇ" எனவும் வரும். ஏனைய வந்துழிக்காண்க. உம்மையான் இளையரோடுவந்து தனித்துக்கூடுதலுங்கொள்க. "வல்வி லிளையரோ டெல்லிச் செல்லாது-சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டே" என்றாற்போல்வனகொள்க. இதனானே உடன்போக்கிலுங் "கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறி * * * யாய்க்கே" என்ற தேர்முதலிய ஏறிப்போதலுங்கொள்க. (௧௮)

௨௧௯. உண்டற் குரிய வல்லாப் பொருளை
யுண்டன போலக் கூறலு மரபே.

இது சொல்வேறுபட்டுப் பொருளுணர்த்தும் வழுவமைக்கின்றது. (இ-ள்.) உண்டற்கு உரிய அல்லாப் பொருளை = உண்டற்றொழிலை நிகழ்த்துதற்குரியவல்லாத பொருளை: உண்டன போலக் கூறலும் மரபே = அத்தொழிலை நிகழ்த்தினவாகப் புலனெறிவழக்கஞ்செய்தலும் மரபு. எ-று. அது "பசலையா லுணப்பட்டுப் பண்டைநீரொழிந்தக்கால்" எனவரும். இதன்கட் சொல்வழுவன்றிச் செய்யாமரபிற்றொழிற்படுத்து அடக்கலும் அமைத்தார் இன்னும் உய்த்துக்கொண்டுணர்தலென்பதனான் உண்ணப்படுதற்குரியவல்லாத பொருளதனைப் பிறர் உண்ணப்பட்டதுபோலக் கூறலும் மரபாமென்பது பொருளாகக் கொள்க. அவை "தோணல முண்டு துறக்கப் பட்டோர்-வேணீ ருண்ட குடையோ ரன்னர் * * * கூடினர் புரிந்து குணனுண்ணப் பட்டோர் - சூடுநரிட்ட பூவோ ரன்னர்." எனவரும். பிறவுங்கொள்க. உம்மையாற் பிறதொழில் பற்றி வருவனவுங்கொள்க. "கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையெம்மைத் - தின்னு மவர்க்காண லுற்று." "புல்லிக் கிடந்தென் புடைபெயர்ந்தே னவ்வளவில் - அள்ளிக்கொள் வற்றே பசப்பு." "வருந்தின வான்றோய் வற்றே காமம்" என்றாற் போல்வனவுங்கொள்க. (௧௯)

**உகச. பொருளென மொழிதலும் வரைநிலை யின்றே காப்புக் கைம்மிகுத லுண்மை யான.**

இது களவின்கட் டோழிக்குரியதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்) பொருள் என மொழிதலும் வரைநிலை இன்றே=எமா வரைவு நேராமைக்குக் காரணம் பொருள் வேண்டியெனத் தோழி கூறலும் நீக்குநிலைமையின்று: காப்புக் கைமிகுதல் உண்மையான=காவன் மிகுதியாற் தலைவிக்கு வருத்தங் கைகடத்தலுண்டாகையால் எ-று. உம்மையாற் பொருளேயன்றி ஊருங் காடும் மலையும் முதலியன வேண்டுமென்றலுங் கொள்க. "சான்றோ வருந்திய வருத்தமு நமது - வான்றோய் வன்ன குடிமையு நோக்கித் - திருமணி வரன்றுங் குன்றங் கொண்டிவள் - வருமுலை யாகம் வழங்கி னனறே - யலைதான், றடைபொருள் கருதுவி ராயிற் குடையொடு - கழுமலந் தந்த நற்றேர்ச் செம்பியன் - பங்குனி விழவின் வஞ்சியொ - டுள்ளி விழவி னுறந்தைபுஞ் சிறிதே" இதனுட் பொருள்விரும்பியவாறுங் குன்றம்விரும்பியவாறுங் காண்க. அடைபொருள், இவன் நம்பால் அடைதற்குக் காரணமாகிய பொருளென்க. (உ0)

**உகரு. அன்பே யறனே யின்ப நாணொடு துறந்த வொழுக்கம் பழித்தன் றாகலி னொன்றும் வேண்டா காப்பி னுள்ளே.**

இது தோழி பொருளென மொழிதற்குத் தலைவியும் உடன்பட்டு நிற்றற்குரியளென்றலின் மேலததறகோர்புறனடை. (இ-ள்) காப்பினுள்=காவன்மிகுதியாற் தலைவிக்கு வருத்தம் நிகழ்ந்தவிடத்து: அன்பே அறனே இன்பம் நாணொடு துறந்த ஒழுக்கம்= தலைவன்கண் நிகழும் அன்புங் குடிப்பிறந்தோர் ஒழுகும் அறனுந் தமக்கின்றியமையா இன்பமும் நாணும் அகன்ற ஒழுகலாறு: பழித்தன்று ஆகலின் ஒன்றும் = பழியுடைத்தன்று ஆகையினாலே புலனெறிவழக்கிற்குப் பொருந்தும்: வேண்டா = அவற்றை வழுவென்று களையல்வேண்டா. எ-று. எனவே பொருளெனமொழிதல் தலைவிக்கும் உடனபாடென்று அமைததாராயிற்று. (உக)

**உகசு. சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே.**

இது தோழிக்குந் தலைவிக்குமுரியதோர் வழுவமைக்கின்றது (இ-ள்.) தலைவன் பிரியக்கருதியவழித் தோழியுந்தலைவியும் நீபோகின்றவிடம் எல்லாவாற்றானும் போதற்கரிய நிலமெனக்கூறி விலக்குதலு

ம் நீக்குநிலைமையின்று. எ-று. உ-ம். "இடுமு ணெடுவேலி போலக் சொலைவர் - கொடுமரந் தேய்ந்தார் பதுக்கை நிரைத்த - கடுநவை யார்பற் றறுசுனை முற்றி - யுடங்குநீா வேட்ட வுடம்புயங் கியானை - கடுந் தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு - வெறிநிரா வேருகிச் சாரச்சார லோடி - நெறிமயக் குற்ற நிரம்பா நீடத்தஞ் - சிறுநனி நீதுஞ்சி யேறபி னு மஞ்சு - நறுநுத னீத்து * * * பொருள்வயிற் செல்வோ யுரனுடை யுள்ளத்தை" எனச் சுரமெனக் கூறினள். தலைவியுந் தோழியாற் கூற்றுநிகழ்த்தும். சூத்திரம் பொதுப்படக்கிடத்தலிற் தலைவி உடன்போக்க கருதியவழித் தலைவனுஞ் சுரமெனக்கூறுதல் கொள்க. "எல்வளை யெம்மொடு நீவரின் * * * வல்லவோ" எனவரும். (உஉ)

## உகஎ. உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின், வழக்குவழிப் படுத்தல் செய்யுட்குக் கடனே.

இது முன்னர் உலகியல் வழக்கென்றது செய்யுட்காமென்று அமைக்கின்றது. (இ-ள்.) உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணாதலின் = உயர்ந்தமக்கள் கூறுங்கூற்றும் வேதநெறியோடு கூடுதலின்: வழக்கு வழிப் படுத்தல் செய்யுட்குக் கடனே = அவ்வழக்கினது நெறியிலேநடத்தல் செய்யுட்கு முறைமை. எ-று. "வழக்கெனப் படுவது" என்னும் மரபியற் சூத்திரத்தான் வழக்கு உயர்ந்தோர் கண்ணதாயிற்று. அவா அகத்தியன் முதலியோரென்பது பாயிரத்துட் கூறினும். அவை சான்றோர்செய்யுளுட் காண்க. இதனை மேலைச் சூத்திரத்திற்கும் எய்துவிக்க. (உங)

## உகஅ. அறக்கழி வுடையன பொருட்பயம் படவரின் வழக்கென் வழங்கலும் பழித்தன் றென்ப.

இது உலகியல்வழக்கன்றிப் பொருள்கூறினும் அமைகவென்றது. (இ-ள்.) அறக்கழிவு உடையன = உலகவழக்கத்திற்குப் பொருத்தமில்லாத கூற்றுக்கள்: பொருட்பயம் படவரின் = அகப்பொருட்குப் பயமுடைத்தாக வருமாயின்: வழக்கென வழங்கலும் = அவற்றைவழக்கென்றே புலனெறிவழக்கஞ் செய்தலும்: பழித்தன்று என்ப = பழிபுடைத்தன்றென்று கூறுவாராசிரியர். எ-று. தலைவன் குறையுறறு நிற்கின்றவாற்றைத் தோழி தலைவிக்குக் கூறுங்காற் தன்னை அவன் துறந்தான்போலத் தலைவிக்குக் கூறுவனவும், "பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின்" எனப் படைத்துமொழிவனவுந், தலைவி "காமக் கிழவ னுள்வழிப் படுதலும்" "தாவி னன்மொழி கிழவி கிளத்தலும்" போல்வனபிறவும் அறக்கழிவுடையனவாம். தலைவிதன்

க்கு மறைபுலப்படுத்தாது வருந்துகின்றகாலத்து அதனைத் தனக்குப் புலப்படுவித்துக்கொண்டே அவளை ஆற்றுவித்தற்பொருட்டு அறக்கழிவுடையன கூறலின் அவை பொருட்குப்பயன்றந்தனவாம். "நெருநலெல்லை யேனற் றோன்றி" என்பதனுட் "சிறுபுறங் கவையினனாக * * * கைபிணி விடா" எனத் தலைவன் தன்னை நயந்தானென இவள் கொண்டாள்கொல்லெனத் தலைவிகருதுமாற்றாற் றோழிகூறவே தலைவிமறைபுலப்படுத்துவளென்பது பயனாயிற்று. "சுயமலருண்கண் * * * கணுடையனவன்" என்பதனுள் "மெய்யறியாதேன்போற்கிடந்தேன்" என்புழி முன்னர் மெய்கூறி வழிநிலை பிழையாமனின்று பின்னர்ப் பொய்யாக வழிநிலை பிழைத்துக் கூறியது வழூவேனும் இவளுந் தலைவனும் இவ்வாறே செறிந்தமையுணர்த்தலின் மறைபுலப்படுத்துங் கருத்தினளாந் தலைவியென்பது பயனாம். "மள்ளர்குழீஇய விழவினானும்" "அருங்கடியன்னை" "பாம்புமதனழியும்" "பானகுளை" என்பனவற்றுட் தலைவி தேடிச்சென்றதுஞ் செல்வாமென்றதுஞ் சிறைப்புறமாக வரைவுகடாயது. அறப்பயன்றருதலின் அறக்கழிவுடையவேனும் அமைந்தன. இது "பல்வேறுகவர்பொருணாட்டத்தான்" அறக்கழிவுடையனவுங் கூறப்பெறுமென்றமைப்பது பெரும்பான்மை. இந் அதிகாரத்தாற் றோழிக்குந் தலைவிக்குங்கொள்க. (உச)

## உசரு. மிக்க பொருளினுட் பொருள்வகை புணர்க்க நாணுத் தலைப்பிரியா நல்வழிப் படுத்தே.

இது மேல் அறக்கழிவுடைத்தாயினும் அது பொருட்பயம்படுமென்றார், அப்பொருளினை இதுவென்றலின் மேலதற்கோர் புறனடை. (இ-ள்.) மிக்க பொருளினுள் = முன்னர் அகப்பொருட்குப் பயம்படவரினென்று வழூவமைத்த பொருளின்கண்ணே; நாணுத்தலைப்பிரியா நல்வழிப் பொருள்வகை படுத்துப் புணர்க்க = தலைவியது நாண் அவளிடத்துநின்று நீங்காமைக்குக் காரணமாகிய நன்னெறியாகிய பொருட்கூறுபாடுகளை உள்ளடக்கிப் படுத்துக்கூறுக. எ-று. "நெருநலெல்லை" என்பதனுள், நெருநல் யான் காக்கின்ற புனத்துவந்து ஒருதலைவன் தன்பெருமைக்கேலாச் சிறுசொற்சொல்லித் தன்னை யான் வருத்தினேனாகக் கூறி என்னை முயங்கினன், யான் அதற்கு முன்னானெகிழ்ந்தே மனநெகிழ்ச்சி அவனறியாமன்மறைத்து வன்சொற்சொல்லி நீங்கினேன், அவ்வழி என்வன்கண்மையாற் பிறிதொன்றுகூற வல்லனாயிற்றிலன், அவ்வாறு போனவன் இன்று நமக்குத் தோலாத்தன்மையின்மையினின்றும் இளிவந்தொழுகுவன், தனக்கே நந்தோள் உரியவாகலும் அறியானாய் என்னைப் பிறநிலையுயலுங் கண்ணோட்

டமுமுடையவனை நின் ஆயமும் யானும் நீயுங்கண்டு நகுவோமாக, நீ அவன் வருமிடத்தேசெல்வாயாக, எனக்கூறியவழி; எம்பெருமானை இவள் புறத்தாற்றிற்கொண்டாள் கொல்லோவெனவும், அவன் தனக்கு இனியசெய்தனவெல்லாம் என்பொருட்டென்று கொள்ளாது பிறழக்கொண்டாள் கொல்லோவெனவுந் தலைவி கருதுமாற்றானே கூறினாளெனினும் அதனுள்ளே இவளெனக்குச் சிறந்தாளென்பதுணர்தலின் என்வருத்தந் தீர்க்கின்றில்லையென்றான் எனவும், அதற்கு முகமனாக இவளைத்தழீஇக்கொண்டதன்றி இவள்பிறழக்கொண்டதன்மை அவன்கணுளாதாயின் இவளைக் குறிப்பறியாது புல்லானெனவும், இவ்வொழுகலாறு சிறிதுணர்தலில் இக்குறைமுடித்தற்கு மனநெகிழ்ந்தாளெனவும், அவனை என்னோடு கூட்டுதற்கு என்னை வேறு நிறுத்தி தானும் ஆயமும் வேறுநின்று நகுவேனெனக்கூறினாளெனவுந், தலைவி நாண் நீங்காமைகருக காரணமாகிய பொருளை உள்ளடக்கிப் புணர்த்துக் கூறியவாறுகாண்க. இதனுள் அறக்கழிவான பொருள் புலப்படவும் ஏனைப்பொருள் புலப்படாமலுங் கூறாக்காற் தலைவியது மறையைவெளிப்படுத்தினாளாமாதலின் அதனை மிகைபொருளென்றார். ஏனையவற்றிற்கும் உட்பொருள் புணர்த்தவாறுணர்ந்து பொருளுரைத்துக்கொள்க. (உரு)

உஉ௦. முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்
ளிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே. [சொ

இது கிழவன் கிழத்தி பாங்கன் பாங்கியென்னு முறைப்பெயராகிய சொற்பற்றிப் பிறந்ததோர் வழுவமைக்கின்றது. (இ-ள்.) முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொல்=முறைப்பெயரிடத்து இருபாற்கும் பொருந்தின தகுதியையுடைய எல்லாவென்னுஞ் சொல் : நிலைக்கு உரி மரபின் இருவீற்றும் உரித்தே=புலனெறிவழக்கிற்குரிய முறைமையினாலே வழுவாகாது ஆண்பாற்கும் பெண்பாற்கும் ஒப்ப உரியதாய் வழங்கும். எ - று. கெழுதகையென்றதனானே தலைவியுந் தோழியும் தலைவனைக் கூறியதே பெரும்பான்மையென்றுந் தலைவன் தலைவியையும் பாங்கனையுங் கூறுதல் சிறுபான்மை வழுவமைதியென்றுங்கொள்க. உ-ம். "அதிர்வில் படிறெருக்கி * * * நீசெல்; இனி யெல்லா" எனத் தலைவியைத் தலைவன் விளித்துக்கூறலின் வழுவாயமைந்தது. "எல்லாநீ, முன்னர்த்தா னென்று குறித்தாய்போற் காட்டினை - நின்னின் விடாஅ நிழற்போ றிரிதருவா - யென்னீ பெறாத திதென்" எனத் தோழி தலைவனை விளித்துக்கூறலின் வழுவாயமைந்தது. "எல்லாவிஃதொத்தன்" என்பது பெண்பால்

மேல் வந்தது. ஏனைய வந்துழிக்காண்க. பொதுச்சொல்லென்றதனு னே எல்லா எலா எல்ல எலுவ எனவுங்கொள்க. "எலுவசிறாஅர்" என வந்தது. "யாரை யெலுவ யாமே" எனத் தலைவனைத் தோழி கூறினள். எலுவியென்பது பாலுணர்த்தலின் ஆராயப்படா. (உசு)

உஉக. தாயத்தி னடையா வீயச் செல்லா
வினைவயிற் றங்கா வீற்றுக் கொளப்படா
வெம்மென வரூஉங் கிழமைத் தோற்ற
மல்லா வாயினும் புல்லுவ வுளவே.

இது தோழி தலைவியுறுப்பினைத் தன்னுறுப்பாகக் கூறப் பெறுமென வழுவமைக்கின்றது. (இ-ள்.) தாயத்தின் அடையா = தந் தையுடைய பொருள்களாய் மக்களெய்துதற்குரிய பொருள்களிற் சே ராதனவுமாய் : ஈயச் செல்லா = அறமும் புகழுங் கருதிக் கொடுப்பப் பிறர்பாற்செல்லாதனவுமாய் : வினைவயிற் தங்கா = மைந்தரில்லாதார் க்கு மைந்தர்செய்வன செய்து பெறும்பொருளிற் தங்காதனவுமாய் : வீற்றுக் கொளப்படா = வேறுபட்டானொருவன் வலிததுக்கொள்ள ப்படாதனவுமாய் : எம்மென வரூஉங் கிழமைத் தோற்றம் = எம்மு டையனவென்று தோழிகூறப் புலனெறிவழக்கிற்குப் பொருந்திவரு ம் உரிமையையுடைய உறுப்புக்கள் : அல்லாவாயினும் புல்லுவ உள வே = வழுவாயினும் பொருந்துவனவுள. எ-று. உறுப்புக கட்புலனு தலிற் தோற்றமென்றார். எனவே, உறுப்பொழிய இந்நான்கும் எம் மெனக் கூறலாகாவென்றார். "ஒருநாளெந்தோ ணெகிழ்புற்ற துயரா ற்றுனிதந்து" எனவும். " என்றோ ளெழுதிய தொய்யிலும்" எனவும் தலைவிதோளினை எந்தோளிணையென்றாள். "என்கா லரியமை சிலம் பு கழீஇ - யென்றோள் தோழி" "செய்த விதழுண்க - ணின்கண்ணா தென்கண் மன" என்பதும் இதன்கணடங்கும். உளவென்றதனாற் சிறுபான்மை தலைவிகூறுவனவுங்கொள்க. அவை "என்னொடு நின் னொடுஞ் சூழாது" எனவும் "நின்கண்ணாற் காண்பென்மன் யான்" என வும் வரும். (உஎ)

உஉஉ. ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப.

இது "ஒன்றேவேறே" என்னுஞ் சூத்திரத்து "ஒத்த கிழவனு ங்கிழத்தியும்" என்ற ஒருமைப்பன்மைப்பாலாய் உணர்த்துகவென வழுவமைத்தது. (இ-ள்.) ஒருபாற் கிளவி = "ஒத்தகிழவனுங் கிழத்தி யும்" என்றவழி ஆணொருமையும் பெண்ணொருமையும் உணர்த்திநின்

ற சொற்களை ஆசிரியரும் அவ்வாறு ஆண்டாரேனும் அஃவொருமைச் சொற்கள் : எனைப்பாற்கண்ணும் வருவகை தானே=நால்வகைக்குல த்துத் தலைவரையுந் தலைவியரையும் உணர்த்தும் பன்மைசொற்கண ணேநின்று பன்மைப்பொருள் உணர்த்திவருங் கூறுபாடுதானே; வழ க்கென மொழிப=உலகவழக்கென்று சொல்லுவர் ஆசிரியர். எ-று. இதனாற் பயன் உலகத்து ஒரூர்க்கண்ணும் ஒரோவொரோ குலத் தின்கண்ணுந் தலைவருந் தலைவியரும் பலரேனும் அவர்களையெல்லாங் கூறுங்காற் கிழவனுங்கிழத்தியுமென்று ஒருமையாற் கூறுவதன்றி வேறோர்வழக்கின்றென்பதுபற்றி முதனூலாசிரியர் அங்ஙனஞ் சூத் திரஞ் செய்தலின், யானும் அவ்வாறே சூத்திரஞ்செய்தேனாயினும், அ ச்சொற் பலரையும் உணர்த்துமென வழுவமைத்தாராயிற்று. ஒருவ னோடு பலர்கூட்டமுங்கோடற்கு எனைப்பாலென்று ஒருமையாற் கூ றாது எனைப்பாலெனப் பன்மையாற்கூறினார். இது சொல்வழுவும் பொருள்வழுவும் அமைத்தார். "ஒத்தகிழவனுங் கிழத்தியும்" என்ற ஒருமையேகொள்ளின் அன்னாரிருவர் இவ்வுலகத்துள்ளாரன்றி வேறு க நாட்டிக்கொள்ளப்பட்டாரென்பதுபட்டு இது உலகவழக்கல்லாத தோர் நூலுமாய் "வழக்குஞ்செய்யுளும்" என்பதனோடு மாறுகோட லேயன்றிப் "பரத்தை வாயி லல்வார்க்கு முரிதடே" என்றாற் போல் வன பிறசூத்திரங்களும் வேண்டாவாமென்றுணர்க. (உஅ)

உஉந. எல்லா வுயிர்க்கு மின்ப மென்பது
தானமர்ந்து வரூஉ மேவற் றாகும்.

இது மேலதற்கோர் புறனடை. (இ-ள்.) இன்பம் என்பது தான்=அறனும் பொருளும் ஒழிய இன்பமென்று கூறப்படுவதுதா ன்; எல்லா உயிர்கடும் அமர்ந்து வரூஉம்=மக்களுந் தேவரும் நரகரு ம் மாவும் புள்ளும் முதலிய எல்லாவுயிர்களுக்கும் மனத்தின்கண்ணே பொருந்தித் தொழிற்பட வருமாயினும் : ஏவற்றாகும்=ஆணும்பெண் ணுமென அடுக்கிக்கூறலுடைத்தாய் நுகர்ச்சிநிகழும். எ-று. ஏவற்றா குமென்றார். என்பது ஆணும்பெண்ணுமாய்ப் போகநுகர்ந்துவருதலி ன் ஒருவனும் ஒருத்தியுமே இன்பநுகர்ந்தாரெனப்படாது அவ்வின் பம் எல்லாவுயிர்க்கும் பொதுவென்பதூஉம் அவை இருபாலாய்ப் புணர்ச்சிநிகழுமென்பதூஉங் கூறியதாயிற்று. அறனும் பொருளும் எல்லா உயிர்க்கும் நிகழா, மக்கட்கே சிறந்துவருமென்றாராயிற்று.

உஉச. பரத்தை வாயி லல்வர்க்கு முரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்.

இது தலைவர்க்குரிய தலைவியர்பலருந் தலைவன் பரத்தைமை காரணமாக ஊடற்குரியரென்பதூஉம் அவரிடத்து வாயில்சேறற்குரியரென்பதூஉங் கூறி வழுவமைக்கின்றது. (இ-ள்.) பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்து = தலைவன் பரத்தைமையாற் தலைவிக்குத் தோன்றிய ஊடல் தீர்த்தற்குரியவாயிலை அவர்பாற்செலுத்தல் நான்கு வருணத்தாருக்கும் உரித்து: அஃது நிலத்திரிபு இன்று என்மனார் புலவர் = அவ்வொழுக்கம் பெரும்பான்மை மருதநிலத்தினின்றுந் திரிந்துவருதல் இன்றென்று கூறுவர் புலவர். எ-று. பரத்தைவாயிலென்றது குறிைத்தேர்போல நின்றது. இதனாற் பயன் அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும் வணிகர்க்கு இருவருமாகிய தலைவியர் ஊடற்குரியரென்பதூஉம் அவர்பாற் தத்தந் தலைவர் ஊடறீர்த்தற்குரிய வாயில் விடுவரென்பதூஉம் அவர் வாயின்மறுத்தலும் நேர்தலும் உடையரென்பதூஉம் ஏனைப்பரத்தையர்க்கு வாயில்விடுதல் இன்றென்ப தூஉங் கூறியவாறாயிற்று. "ஒருபாற் கிளவி" என்பதனால் ஒரோவோர்குலத்துத் தலைவருந் தலைவியரும் அடங்குமாறுணர்க. உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க. ஒருவனும் ஒருத்தியுமாகி இன்பநுகர்ந்து இல்லறநிகழ்த்துதலே சிறந்ததென்றற்கு இங்ஙனம் பலராதல் வழுவென்று அதனை அமைத்தார். (௩௰)

௨௨௫. ஒருதலை யுரிமை வேண்டினு மகடூஉப்
பிரிதலச்ச முண்மை யானு
மம்பலு மலருங் களவுவெளிப் படுக்குமென்
றஞ்ச வந்த வாங்கிரு வகையினு
நோக்கொடு வந்த விடையூறு பொருளினும்
போக்கும் வரைவு மனைவிக்கட் டோன்றும்.

இது களவின்கட் தலைவியின்கண் நிகழ்வதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்.) உரிமை ஒருதலை வேண்டியும் = இடைவிடாது இன்பநுகர்தலோடு இல்லறநிகழ்த்தும் உரிமையை உறுதியாகப்பெறுதலை விரும்புதலானும்: பிரிதல் அச்சம் மகடூஉ உண்மையானும் = ஆள்வினைக்குறிப்புடைமையின் ஆண்மக்கள் பிரிவரென்று அஞ்சும் அச்சம் மகளிர்க்குண்டாகையினானும்: ஆங்கு அம்பலும் அலரும் களவு வெளிப்படுக்கும் என்று அஞ்ச வந்த இருவகையினும் = அக்களவொழுக்கத்திடத்தே அம்பலும் அலரும் இக்களவைப்புலப்படுக்குமென்று அஞ்சும்படி தோன்றிய இருவகைக்குறிப்பானும்: நோக்கொடு வந்த இடையூறு பொருளினும் = பிறர் தன்னை அயிர்த்துநோக்கும் நோக்கங்காரணமாக வந்தகூட்டம் இ

டையூறுற்ற காரியத்தினும்: மனைவிக்கட் போக்கும் வரைவும் தோன்றும்=தலைவியிடத்தே உடன்போக்கும் வரையக்கருதுதலுந் தோன்றும். எ-று. "பழைய மலரடுக்கத்து" என்பதனுண் "முன்னது கொண்டடக்குவம்" என இடைவிடாது இன்பநுகர விரும்பியவாறும் உள்ளுறையான் இல்லறநிகழ்த்த விரும்பியவாறுங்காண்க. "உள்ளங் கொள்கையொடு" என்பது அம்பலும் அலரும் அஞ்சிப் போக்குடன்பட்டது. "ஆறுதலைக்கு மறனிலன்னே - தானே யிருக்கத் தன் மனையே" இது இடையூறுபொருளின்கட் போககுடன்பட்டது. ஏனைய முன்னர்க்காட்டியவற்றுட் காண்க. "ஒன்றித்தோன்றுந் - தோழிமேன". என்பதனாற் தோழிக்கும் இவையுரியவென்றுகொள்க. உடன்போக்குக கருதுதலுந தலைவன் தான் வரையாமற் தலைவி விரும்புதலும் வழுவாயிறறு. (௩க)

## உஉசு. வருத்த மிகுதி சுட்டுங் காலை யுரித்தென மொழிப வாழ்க்கையு ளிரக்கம்.

இது கற்புக்காலத்துத் தோழிக்கும் அறிவர்க்கும் உரியதோர் வழுவமைககின்றது. (இ-ள்.) வருத்தமிகுதி சுட்டுங்காலை=தோழியும் அறிவரும் பரத்தையிற்பிரிவாற் தலைவாககுந் தலைவியாககுந் தோன்றியவருத்தமிகுதியைத் தீர்க்கக்கருதிக் கூற்றுநிகழ்த்துங்காலத்து: வாழ்க்கையுள் இரக்கம் உரிததென மொழிப=அவரது இல்வாழ்கைநிகழ்ச்சிககண்ணே தமககு வருத்தநதோன்றிற்றாகக் கூறுதலும் உரிதததென்று கூறுவராசிரியர். எ-று. "நீாநீ டாடிற் கண்ணுஞ் சிவக்கு - மார்ந்தோர் வாயிற் றேனும் புளிசகுந்- தணந்தனை யாயினெம் மில்லுயித்துக் கொடுமோ - வந்தண் பொய்கை யெந்தை யெம்மூர்க - கடும்பாம்பு வழங்குந் தெருவி - னடுங்கஞ ரெவ்வங் களைந்த வெம்மே" இதனுள் இல்லறததினை நீ துறந்தாயாயின் எம்மை எம்மூர்க்கண்ணேவிடுகவெனத் தனக்கு வருத்தந்தோன்றிற்றாகத் தோழி கூறியவாறுகாண்க. "உடுத்துந் தொடுத்தும் பூண்டு மெஞ்சே" இதனுள் ஓராவல்சியொடு முன்னர்நிகழ்த்திய வாழ்ககை இவள் வந்தாளாகப் புறந்து விளையாடும் விழவுளதாயிற்றென்று இவ்வூர் கூறுநிற்குஞ் செல்வம் இவளைநெகிழ்ந்தாற் பழையதன்மையாமென்று அறிவர் இரங்கிக்கூறியவாறு காண்க. "துறைமீன் வழங்கும்" என்பதனுள் "அதுபுலந் துறைதல் வல்லியோ ரெமரோ" எனப் புலவியால் நின் இல்வாழ்ச்கை குறைபடுமெனத் தோழி கூறியவாறு காண்க. இன்னும் உய்த்துக்கொண்டுணர்தலென்பதனால் ஏனைப்பிரிவான் நிகழும் வருத்தமிகுதியைக் குறித்தவிடத்து உயிர்வாழ்க்கையின் இரக்கமுரித்தெ

ணமொழிய என்றும் பொருள் கூறிச் "செல்லாமை யுண்டே லெமக்குரை மற்றுநின்-வல்வரவு வாழ்வார்க் குரை" எனவும், "அன்பற மாறியா முள்ளத் துறந்தவள் - பண்பு மறிதிரோ வென்று வருவாரை - யென்றிறம் யாதும் வினவல் வினவிற் - பகலின் விளங்குநின் செம்மல் சிதையத் - தவலருஞ் செய்வினை முற்றும லாண்டோர - ரவலம் படுதலு முண்டு" எனவும் வருவன பிறவுங்கொள்க. (௩௨)

## உ௨எ. மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவு நினையுங் காலைப் புலவியு ளுரிய.

இது கற்பினுட் தலைவற்குந் தலைவிக்கும் எய்தியதோர் வழுவமைக்கின்றது. (இ - ள்.) புலவியுள் மனைவி உயர்வும் = புலவிககாலத்துத் தலைவன்பணிந்துழி உட்கும் நாணுமின்றித் தலைவி அதனை ஏற்றுக்கோடலும் : கிழவோன் பணிவும் = தலைவன் தலைமைககு மாறாகத் தலைவியைப் பணிதலும் : நினையுங் காலை உரிய = ஆராயுங்காலை இருவர்க்குமுரிய. எ - று. உ - ம். "வலையுறு மயிலின் வருந்தினை ✻✻✻ பான் போலவும் - கோதை கோலா விறைஞ்சி நின்ற - வூதையஞ் சேர்ப்பனை யலைப்பேன் போலவும்" இது முன்னே தலைவிமனத்து நிகழ்தலுண்மையிற் கனவிலுங் கண்டாளென்றுணர்க. "தம்மினென்றடி சேர்தலுமுண்டு" என்பதும் அது. நினையுங்காலையென்றதனற் தோழியுயர்வுங் கிழவோன் பணிமொழிபயிற்றலுங் கொள்க. "ஒன்றிரப்பான் போலப் ✻✻✻ பன்மாணும்" இதனுட் தலைவன் இரந்துரைத்தவாறுந் தான் அதனை ஏற்றுக்கொண்டவாறுங் காண்க. இச்சூத்திரம் புலவிக்கே கூறினார். ஊடற்குந் துனிக்குங் "காமக்கடப்பின்" என்பதனுட் கூறினாமெனவுணர்க. (௩௩)

## உ௨அ. நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற் புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே.

இது கற்புக்காலத்துத் தலைவற்குந் தலைவிக்கும் உரியதோர் வழுவமைக்கின்றது. (இ - ள்.) கற்பினுள் = கற்புக்காலத்து : தகை நிகழ் மருங்கின் = ஒருவர்க்கொருவர் மனத்து நிகழுமிடத்து : வேட்கை மிகுதியிற் புகழ் தகை வரையார் = வேட்கைமிகுதியாலே அதனைப் புகழ்ந்துரைக்குந் தகைமையினை ஆசிரியர் இருவருக்கும் நீக்கார் கொள்வர். எ-று. "ஆக வனமுலை யரும்பிய சுணங்கின் - மாசில்கற்பிற் புதல்வன் றாயென-மாயப் பொய்மொழி சாயினை பயிற்றி" இது புலவிக்கட் தலைவன்புகழ்ந்தது. "அணைமருளின்றுயில் ✻✻✻ இனியறிந்தேனது துனியாகுதலே." இது போர்க்கின்கட் தலைவன்புகழ்

ந்தது. "அரிபெய் சிலம்பின்" என்பதனுள் "ஏந்தெழின் மார்பிற் பூ ந்தார் குழைய" என்பது தலைவி புலவிக்கட் புகழ்ந்தது. "நிரைதார மார்ப நெருந லொருத்தியொடு" என்பதும் அது. தகை எனப் பொதுவாகக் கூறலிற் குணத்தைக் கூறலுங் கொள்க. 'நாலாறுமாறாய்" எனவும் "நிறைசொல்லா" எனவும் வரும். குற்றேவனிலையளாகிய தலைவியைத் தலைவன்புகழ்தலானும் பெருநாணினளாகிய தலைவி கணவனைப் பிறரெதிர் புகழ்தலானும் வழுவாயிற்று. (௩௪)

உ௨௯. இறைச்சி தானே பொருட் புறத் ததுவே.

இது தலைவிகருந் தோழிக்குமுரியதோர் வழுவமைக்கின்றது. இறைச்சியாவது உள்ளபொருள் ஒன்றனுள்ளே கொள்வதோர் பொருளாகலானுஞ் செவ்வன் கூறப்படாமையானுந் தலைவன் கொடுமைகூறும்வழிப் பெரும்பான்மை பிறத்தலானும் வழுவாயிற்று. (இ-ள்.) இறைச்சிதானே = கருப்பொருட்கு நேயந்தான் : பொருட் புறத்ததுவே = கூறவேண்டுவதோர் பொருளின்புறத்தே புலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருட்தன்மையுடையதாம். எ-று. "இலங்கு மருவித் திலங்கு மருவித்து - வானி னிலங்கு மருவித்தே தானுற்ற - சூள்பேணான் பொய்த்தான் மலை" சூளைப்பொய்த்தானென்பதே கூறவேண்டும்பொருள். அதன்புறத்தே இங்ஙனம் பொய்த்தான்மலையகத்து நீர்திகழ் வானென இறைச்சிப்பொருள் தோன்றியவாறுகாண்க. பிறவுமன்ன. (௩௫)

உ௩0. இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே திறத்தியன் மருங்கிற் றெரியு மோர்க்கே.

இது எய்தியது இகந்துபடாமற் காத்தது. (இ-ள்.) இறைச்சியிற் பிறக்கும் பொருளுமார் உளவே = கருப்பொருள் பிறிதோர் பொருட்கு உபகாரப்படும் பொருளாதலேயன்றி அக்கருப்பொருடன்னுள்ளே தோன்றும் பொருளும் உள; திறத்து இயல் மருங்கில் = அது உள்ளுறையுவமத்தின் கூற்றிலே அடங்குமாறுபோல நடக்குமிடத்து: தெரியுமோர்க்கே = அவ்வுள்ளுறையுவமமன்று இஃது இறைச்சியென்று ஆராய்ந்துணரும் நல்லறிவுடையோர்க்கு எ-று. "கன்றுதன் பயமுலை மாந்த முன்றிற்-றினைபிடி யுண்ணும் பெருங்கன் னாட-கெட்டிடத் துவந்த வுதவி கட்டில்- வீறுபெற்று மறந்த மன்னன் போல - நன்றி மறந்தனை யாயின் மென்சீர்க்- கலிமயிற் கலாவத் தன்னவிவ-ளொலிமென் கூந்த லுரியவா நினக்கே" இதனுட் தான் கெட்டவிடத்து வினை உதவியை அரசவுரிமையெய்தியமன்னன் மறந்தாற்போல நீ து துயருற்றகாலத்து யான் தலைவியை நின்னோடுகூட்டிய செய்நன்றியை மறவாது இன்று நீ வரைந்துகொள்வையாயின் இவள் கூந்த

ல் நினக்குரியவென்றவழி உவமையும் பொருளும் ஒத்து முடிந்தபி ன் முன்னின்ற நாடவென்பது உள்ளுறையுவமமன்றாய் இறைச்சியாம். என்னை? தன்கன்றிற்குப் பயன்பட்டுப் பிறர்க்கு உயிரைக்கொடுக்கின் ற கினையைத் தான் உண்டு அழிவுசெய்கின்றாற்போல, நீ நின்கருமஞ் சிதையாமற் பார்த்து எமக்குயிராகிய இவளைத் துயருறுத்தி எம்மை இ றந்துபடுவித்தல் ஆகாதென்று உவமையெய்திற்றேனும், பின்னர் நின் ற பொருளோடியையாது இவ்வுவமம் உள்ளுறையுற்றுப் பொருள்பய வாது இறைச்சியாகிய நாடனென்பதனுள்ளே வேறோர் பொருள் தோ ன்றுவித்து நின்றதேயாமாதலின். முலைமாந்த என்றது தன்கருமஞ் சிதையாமற் பார்த்தென்னுந் துணையன்றி உள்ளுறையுவமப்பொருளை முற்ற உணர்த்தாமையுணர்க. "வேங்கை * * * சோலை - தையலாய் பாடுவா நாம்" இதனுட் புலவுநாறியும் பூநாறியுந் தீதும் நன்றுமாகிய இறைச்சியாகிய உலக்கைகளாற் தலைவனைப்பாடும் பாட்டோடேகலந் து கூறத்தகாத தெய்வத்தையும் பாடுவாமென்னும் பொருள்பயப்பச் செய்த இறைச்சியிற்பொருளே பயந்தவாறும் இரண்டுலக்கையானும் பயன்கொண்டாற்போல் அவை அன்பே பாடுதலாற் பயன்கொள்ளா மையின் உள்ளுறையுவமமன்மையுங் காண்க. உள்ளுறையுவமமாயிற் "தன்பார்ப்புத் தின்னு மன்பின் முதலையொடு-வெண்பூம் பொய்கைத் தவரூரோ" என்றாற்போலத் தலைவன்கொடுமையுந் தலைவிபேதைமை யும் உடனுவமங்கொள்ளநிற்கும். இதுபற்றித் தெரியுமோர்க்கேயென் றார். உம்மை இறந்ததுதழீஇயிற்று. (நசு)

உநக. அன்புறு தகுந விறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே.

இது இறைசசி முற்கூறியவற்றின் வேறுபட வருமென்கின்ற து. (இ-ள்.) வருந்திய பொழுதே = பிரிவாற்றாதகாலத்து: இறைச்சியுள் அன்புறு தகுந சுட்டலும் = தோழி கருப்பொருள்களுட் தலைவன் அன்பு செய்தற்குத் தகுவனவற்றைக் கருதிக் கூறலும்: வன்புறை ஆகும் = வன்புறுத்தலாகும். எ-று. "நசைபெரி துடையர் * * * தோ ழியவர் சென்ற வாறே" இதனுண் முன்பே நெஞ்சகத்தன்புடை யார் அதன்மேலே களிறு தன்பிடியின் பெரும்பசிகளைதற்கு மென்றோ லையுடைய ஆச்சாவைப்பிளந்து அந்நாரைப் பொளித்தூட்டும் அன்பி னையுடைய அவர்சென்ற ஆறதனைக் காண்பர்காண் என்று அன்புறு தகுந கூறிப் பிரிவாற்றாதவளை வற்புறுத்தவாறுகாண்க. நம்மேல் இய ற்கையாக அன்பிலனென்று ஆற்றாளாவளென்று கருதாது இவ ளை ஆற்றுவித்தற்பொருட்டு இவ்வாறுகூறலின் வழுவாயமைந்தது. "அரிதாயவறன்" என்பது தோழிகூற்றன்மை உணர்க. (நஎ)

உகஉ. செய்பொரு ளச்சமும் வினைவயிற் பிரிவு
மெய்பெற வுணர்த்துங் கிழவி பாராட்டே.

இது தலைவன் தலைவியைப் பாராட்டியவழி வருவதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்.) கிழவி பாராட்டே = தலைவன் தலைவியைப் பாராட்டிய பாராட்டு: செய்பொருள் அச்சமும் = யாஞ்செய்யக் கருதியபொருட்கு இவள் இடையூறுவள்கொலென்று தலைவன் அஞ்சிய அச்சத்தையும்: வினைவயிற் பிரிவும் = தான் பொருள்செய்தற்குப் பிரிகின்றதனையும் : மெய்பெற உணர்த்தும் = ஒருதலையாகத் தலைவிக்கு உணர்த்தும். எ-று. அப்பாராட்டுக் கிழவியதாகலிற் கிழவிபாராட்டென்றார். "நுண்ணெழின் மாமை" என்பதனுட் கழிபெருநல்கலாற் தலைவன் செய்பொருட்கஞ்சியவாறும் அவன்பிரியக்கருதியதூஉந் தலைவியுணர்ந்தாள் அப்பாராட்டினாலென்றுணர்க. அன்பானன்றிப் பொருள்காரணத்தாற் பாராட்டினமையானும் அதனைச் செவ்வணங்கொள்ளாது பிறழக்கோடலானும் இருவர்க்கும் வழுவாமென்றமைத்தார்.

உகங. கற்புவழிப் பட்டவள் பரத்தை யேத்தினு
முள்ளத் தூட லுண்டென மொழிப.

இஃது தலைவிக்கட் தோன்றியதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்.) கற்புவழிப் பட்டவள் = கற்பின்வழி நின்ற தலைவி : பரத்தை ஏத்தினும் = பரத்தையைப் புகழ்ந்துகூறினாளாயினும் : உள்ளத்து ஊடல் உண்டென மொழிப = உள்ளத்துள்ளே ஊடின தன்மை உண்டென்று கூறுவர்புலவர். எ-று. பரத்தையை ஏத்தவே தலைவன்கட்காதலின்மைகாட்டி வழுவாயிற்றேனும் உள்ளத்தூட லுண்மையின் அமைக்கவென்றார். "நாணி * * * லெனவே" எனவரும். ஏத்தினுமென்ற உம்மையால் ஏத்தாமற் கூறும்பொழுதெல்லாம் மாறுபடக்கூறலுளதென்பது பெற்றாம். "என்னொடு புணையுந ளல்ல - டன்னொடு புணையுநர்த் தானறி யுநளே" எனவரும். (௩௬)

உகச. கிழவோள் பிறள்குண மிவையெனக் கூறிக்
கிழவோன குறிப்பினை யுணர்தற்கு முரியள்.

இது எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது: உள்ளத்தூடலின்றியும் பிறளொருத்தியைத் தலைவி புகழுமென்றலின். (இ-ள்.) கிழவோள் பிறள் குணம் இவையெனக் கூறி = தலைவி வேறொரு தலைவியுடைய குணங்கள் இத்தன்மையவென்று தலைவற்குக்கூறி : கிழவோன் குறிப்பினை அறிதற்கும் உரியள் = அவள்மாட்டு இவன்

எத்தன்மையனுயிருக்கின்முனென்று தலைவன்குறிப்பினை உணர்தற் குமூரியள். எ-று. பரத்தையென்னுது பிறளென்றதனுற் தலைவியே யாயிற்று : அன்றிப் பரத்தையாயின் ஊடலின்மை அறனன்முகலின் உள்ளத்தூடல் நிசழ்பவை வேண்டும். தோழிகூறுங்சாற் தலைவிய ைாக் கூறப்பெமுளென்பதூஉம் பரத்தையைக் கூறின் அவர்க்கு மு துக்குறைமைகூறிக் கூறுவளென்பதூஉங் கொள்க. "கண்டிகு மல்ல மோ * * * வோளே" இது தலைவன் வரையக்கருதினுளோர் தலைவி யை இனையளெனக்கூறி அவள்மாட்டு இவன் எத்தன்மையனென்று விதுப்புற்றுக்கூறியது. இது தலைவன்கூற உணராது தான் வேமுன் றுகூறி அவன்குறிப்பு அறியக் கருதுதலின் வழுவாயமைந்தது. இது கைக்கிளைப்பொருட்சண் வழுவமைக்கின்றது. (சo)

உகடு. தம்முறு விழுமம் பரத்தையர் கூறினு
மெய்ம்மை யாக வவர்வயி னுணர்ந்து
தலைத்தாட் கழறற மெதிர்ப்பொழு தின்றே
மலிதலு மூடலு மவையலங் கடையே.

இது பரத்தையர்க்குந் தலைவிக்குந் தலைவற்கும் படுவதோர் வழுவமைக்கின்றது. (இ - ள்.) தம்முறு விழுமம் பரத்தையர் கூறி னும் = தலைவனுற் தாம் உற்ற வருத்தத்தைத் தலைவிக்குப் பரத்தையர் கூறினும் ஏனைத்தலைவியர் கூறினும் : அவர்வயின் மெய்ம்மையாக உணர்ந்து = அவர் கூறியவாற்முனே அவ்வருத்தத்தை அவரிடத்து உண்மையாக உணர்ந்து : தலைத்தாட் கழறல் = தலைவன்முன் நி ன்று கழறுங் கழற்றுரை : தம் எதிர்ப்பொழுது இன்று = தம்மைப் பரத்தையர் எதிர்ப்பட்ட பொழுதின்கண் இல்லை : மலிதலும் = அவர் துயருறநின்றுழிக் கவலாது நீங்கினுனென மகிழ்தலும் : ஊடலும் = அவன்பிரிவிற்கு இவர் இரங்கினுரொன்ற காரணத்தான் ஊடுதலும்: அவை அலங்கடை = அவ்விரண்டும் நிகழாவிடத்து. எ-று. என்பது வெறுத்த உள்ளத்தளாமென்பது கருத்து. எனவே, மலிதலும் ஊட டலும் நிகழுமிடத்தாயிற் தலைத்தாட்கழறுமென்பது பெறுதும். தலை த்தாள், தகுதிபற்றியவழக்கு. "பொன்னெனப் பசந்தசண் * * * வ ந்துநொந் துரையாமை பெறுகற்பின்" இது பரத்தையர் முன்னரன் மையின் மலிதலும் ஊடலும் நிகழ்ந்து தலைத்தாட்கழறியது. கழமுது கூறியது வந்துழிக்காண்க. தம்முறுவிழுமத்தைப் பரத்தை தலைவிக் குக்கூறுதலாற் பரத்தைக்கும், அவர் கூறத் தான் எளிவந்தமை யிற் தலைவிக்கும், இவரிங்ஙனமொழுசலிற் தலைவற்கும் வழுவமைந் தது. உம்மை இறந்தது தழீஇயிற்று. (சக

உ௬௬. பொழுது தலைவைத்த கையறு காலை
யிறந்த போலக் கிளக்குங் கிளவி
மடனே வருத்த மருட்கை மிகுதியோ
டவைநாற் பொருட்க ணிகழு மென்ப.

இது "பின்னர்நான்கும் பெருந்திணைபெறுமே." என்ற சிறப்புடைப்பெருந்திணையன்றிப் பெருந்திணைக்குறிப்பாய்க் கந்தருவத்துட்பட்டு வழுவிவரும் "ஏறியமடற்றிறம்" முதலிய நான்கினுள் ஒன்ருய் முன்னர்நிகழ்ந்த கந்தருவம் பின்னர் வழீஇவந்த "தேறுதலொழிந்தகாமத்து மிகுதிறம்" ஆகிய பெருந்திணை வழுவமைக்கின்றது. ஓதலுந்தூதும் ஒழிந்த பகைவயிற்பிரிவாகிய வாளாணைதிரும்பிரிவும் முடியுடைவேந்தர்க்கும் அவரேவலிற் பிரியும் அரசர்க்கும் இன்றியமையாமையின், அப்பிரிவிற் பிரிகின்ருன் "வன்புறை குறித்த றவிர்ச்சி யாகும்" என்பதனுற் கற்புப்போல நீ இவ்வாருெழுகி யான்வருந்துணையும் ஆற்றியிருவென ஆற்றுவித்துப்பிரிதல் இலக்கணமன்மையின் வாளாபிரியுமன்றே: அங்ஙனம் பிரிந்துழி அவன் கூறியகூற்றினையேகொண்டு ஆற்றுவிக்குந் தோழிக்கும் ஆற்றுவித்தலரிதாகலின், அவட்கு அன்பின்றி நீங்கினுனென்று ஆற்ருமைமிக்கு ஆண்டுப் பெருந்திணைப்பகுதி நிகழுமென்றுணர்க. (இ - ள்.) பொழுது = அந்திக்காலத்தே : கையறுகாலை = "புறஞ்செயச்சிதைத்தல்" என்னுஞ் சூத்திரத்தில் "அதனினூங்கின்று" எனக் கூறிய கையறவுரைத்தலென்னும் மெய்ப்பாடெய்தியகாலத்தே : தலைவைத்த = அந்தவாற்ருமையின் இகந்தவாக முடிவிலேவைக்கப்பட்ட மெய்ப்பாடுகள்: மிகுதியோடு மடனே வருத்தம் மருட்கை நாற்பொருட்கண் நிகழும் = தன்வனப்புமிகுதியுடனே மடப்பமும் ஆற்ருமையும் வியப்புமாகிய நான்குபொருட்கண்ணே நடக்கும் : அவை இறந்தபோலக் கிளக்குங் கிளவி என்ப = அங்ஙனம் அவைநடக்கின்ற நான்குபொருளுங் கூற்றுநிகழுங்காற் தன்னைக் கைகடந்தனபோலக் கூறுங்கூற்ருய் நிகழுமென்று கூறுவர்புலவர். எ-று. தலைவைத்த மெய்ப்பாடாவன அருமவதியினும் ஒப்பத்தோன்றுதற்குரிய மெய்ப்பாடுகளாகி மன்றத்திருந்தசான்ருேரறியத் தன்றுணைவன்பெயரும் பெற்றியும் அவனுடுபுணர்ந்தமையுந் தோன்றக்கூறியும் அழுதும் ஆற்றியும் பொழுதொடுபுலம்பியும் ஞாயிறுமுதலியவற்ருேடு கூறத்தகாதன கூறலும் பிறவுமாம். உம். "புரிவுண்ட புணர்ச்சி" யுண் "மல்கவழும்; ஒ ஓ, அழிதகப் பாராதே யல்லல் குறுகினங் - காண்பாங் கனங்குழை பண்பு; என்று, எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ - நல்ல நகாஅலிர் மற்கொலோ யானுற்ற - வல்லலுறீஇயான் மாய மலர்மார்பு - புல்லிப் புணரப் பெறின்; எல்லாநீ,

யுற்ற தெவனேமற் றென்றிரோ லெற்சிதை - செய்தா னிவனென வுற்றதிதுவென - வெய்த வுரைக்கு மூரனகத் துண்டாயிற் - பைதல வாகிப் பசக்குவ மன்னோவென் - னெய்தன் மலரன்ன கண்; கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று - நாடுவென் கண்டனென் * * * கொன்றை யவன்; தெள்ளியே மென் றுரைத்துத தேரா தொரு நிலை - வள்ளியைப் பற்றிய * * * கையுளே மாய்ந்தான் கரந்து; கதிர்பகர் ஞாயிறே கல்சேர்தி * * * நெஞ்சத் - துயிர்திரியா மாட்டிய தீமையில் சுடரோ - மலைசேர் * * * தொய்யில் சிதைத்தானைத் தேர்கு; சிதைத்தானைச் செய்வ தெவன்கொலோ வெம்மை - நயந்து நலஞ்சிதைத்தான் மன்றப் பனைமேன் - மலைமாந் தளிரோ நீ * * * யான்காணேனன்றுதி தென்று பிற; நோயெரி யாகச் சுடினுஞ் சுழற்றியென் - னுயித மூள்ளே கரப்பேன் கரந்தாங்கே * * * கொண்டு - வேறு தனித்திவ் வுலகு; மெலியப் பொறுத்தேன் * * * விழும மிரண்டு; எனப் பாடி, இனைந்துநொந் தழுதன ணினைந்து நீ டுயிர்த்தன - ளெல்லையு மிரவுஞ் சுழிந்தன வென்றெண்ணி - யெல்லிரா நல்கிய கேள்வ னிவன்மன்ற - மெல்ல மணியிற் பிறந்தநீர் போலத் - துணிவாங், கலஞ்சிதை யில்லத்துக் காழ்சொண்டு தேற்றக் - கலங்கிய நீர்போற் றெளிந்து நலம்பெற்று - ணல்லெழின் மார்பனைச் சார்ந்து." இதனுள் அந்திக்காலத்தே கையறவெய்திப் பின்னர்ச் சான்றோரைநோக்கிக் கூறுகின்றவள் புல்லார் மாத்திரையென அவனோடு புணர்ச்சிநிகழ்ந்தமையும் யாவருங் கேட்ப நக்கழுது அல்லலுறீஇயானெனப் பெயரும்பெற்றியுங் கூறிப், புல்லிப் புணரப்பெறின் ஈதிகழ்ச்சியன்றாமெனக் கூறத்தகாதன கூறலான் மடன் றன்னை இறந்தவாறுந், தெள்ளியேமென்றதனானும் எள்ளியிருக்குவனென்றதனானும் வருத்தமிறந்தவாறுங், "கோடுவாய்கூடா" என்பது முதலாகக் "கொன்றையவன்" என்னுந்துணையுந் தான்செய்ததனை வியவாமையின் மருட்கையிறந்தவாறும், நெய்தன்மலரன்ன கண்ணெனத் தன்வனப்புமிகுதிகூறலின் மிகுதியிறந்தவாறுங்காண்க. எல்லிரா நல்கிய கேள்வனிவனெனவே கந்தருவத்தின் வழுவிப் பெருந்திணை நிகழ்ந்தவாறும் பின்னர் வரைவுநிகழ்ந்தவாறுங்காண்க. இதற்குப் பொருளுரைக்குங்காற், கேட்பீராக இவள் நக்கு, நக்க அப்பொழுதேயழும், இங்ஙனம் அழுமாறு காமத்தை ஊழானது அகற்றலின் அஃதறுதியாக நரம்பினும் பயனின்றாயிருந்தது. ஓ ஓ, இதனையுற்ற இவள் அல்லற்பண்பைப் பாராதே அழிதக யாங் குறுகினோம், குறுகி யாம் இதனை முடிவுபோகக் காண்பேமென்றுவந்து எல்லீரும் என் செய்தீர்? என்னையிகழ்கின்றீரோ? இவ்வருத்தத்தை எனக்குறுத்தினவனது மாயஞ்செய்த மலர்ந்த மார்பை யான்முயங்கிக் கூடினும் இகழ்ச்சியன்றாம் என்றற்றொடக்கமாய் வரும். (௬௨)

உகூஎ. இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி
நிரம்ப நீக்கி நிறுத்த லன்றியும்
வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலு
நல்வகை யுடைய நயத்திற் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே.

இது தோழி தலைவனைக் கூறுவனவற்றுள் வழுவமைவ னகூறுகின்றது. (இ-ள்.) இரந்து குறையுற்ற கிழவனை = இரந்து கொண்டு தன்காரியத்தினைக் கூறுதலுற்ற தலைவனை: தோழி நிரம்ப நீக்கி நிறுத்தலன்றியும் = தோழி அகற்றுற ஏத்துமுறைமையிற் தாழ்வின்றாக அகற்றி நிறுததலையன்றியும்: வாய்மைகூறலும் = நுமது கூட்டத்தினை யான்முன்னே அறிவலென மெய்யாகக்கூறலையும்: பொய்தலைப்பெய்தலும் = அப்புணர்ச்சியில்லையென்று பொய்த்ததுணைத் தலைவன்மேற் பொய்யுரைபெய்துரைத்தலையும் அவன்வரைந்துகோடற்பொருட்டுச் சிலபொய்களைக் கூறவேண்டுமிடங்களிலேபெய்துரைத்தலையும்: நல்வகையுடைய நலத்திற் கூறியும் = நல்லகூறுபாடுடைய சொற்களை அசதியாடிக் கூறியும்: பல்வகையானும் படைக்கவும் பெறுமே = இக்கூறியவாறன்றி வேறுபடப் புனைந்துரைக்கவும்பெறும். எ-று. தோழி நீக்கலன்றியுங் கூறலையுந் தலைப்பெய்தலையும் படைக்கவும்பெறும் பல்வகையானும் படைக்கவும் பெறுமென வினைமுடிக்க. தோழி தலைவனோடு நயங்கருதுமாற்றால் அவனை நீக்குதல் ஏனையவற்றோடெண்ணுது அன்றியுமெனப் பகுத்துரைத்தார். ஏனைக்குறைமுடித்தற்கு இடையூறின்மைகூறியனவும் வரைவுகடாய்க்கூறியனவுமாம். "நெருநலு முன்னாளெல்லையு*** மகளே" இது சேட்படுத்தது. "எமக்கிவை யுரையன் மாதோ நுமக்கியான்-யாரா கியரோ பெரும வாருயி-ரொருவி ரொருவிர்க் காகி முன்னாளிருவீர் மன்னு மிசைந்தனி ரதனா - லயலே னாகிய யான்-முயலேன் போல்வனீ மொழிபொருட் டிறத்தே." இது வாய்மைகூறியது. யாந்தன்னைமறைத்தலிற்போலும் இவள்குறைமுடியாளாயதென அவன் கருதக்கூறினாள். "அறியே மல்லே மறிந்தன மாதோ - பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச் - சாந்த நாறு நறியோள் - கூந்த னாறுநின் மார்பே தெய்யோ". இதுவும் அது. "நீயே, பொய்வன்மையிற் செய்பொருண் மறைத்து - வந்து வழிப்ப டுகுவை யதனா - லெம்மை யெமச்சே வில்வலனே - தகாது சொல்லப் பலவும் பற்றி - யொருநீ வருத னுடொறு முள்ளுடைந் - திரமா மழைக்கண் கலுழ்க மதனா - னல்லோர் கண்ணு மஃதல்ல - தில்லை போலுமிவ் வுலகத் தானே." இது பொய்தலைப்பெய்தது. "திருந்திழைகேளாய்" என்னுங் குறிஞ்சிக்

கலியுள் வரைந்து கோடற்குப் பொய்யுரை படைத்தது. "அன்னையு மறிந்தன ளலரு மாயின்று - நம்மூர்ச் செல்க மெழுமோ தெய்யோ" இது நல்வகையுடைய நயத்திற்கூறியது. "வீகமழ் சிலம்பின் வேட் டம் போந்து - நீயே கூறினு மமையுநின் குறையே" இதுவும் அது. அதன்றியும் நீயேசென்று கூறென்றலும் அறியாள்போறலுங் குறியாள்கூறலுங் குறிப்புவேறுகூறலும் பிறவும் நயத்திற்கூறும் பகுதியாற்படைத்தது பலவகையாற்படைத்துத் துறைவகையாம். இன்னும் வேறுபடவருவனவெல்லாம் இதனானமைக்க. இவை நாடகவழக்காகவும் உலகியல்வழக்காகவும் புனைந்துரைத்தமையானுந் தோழி தலைவற்குக் கூறத்தகாதன கூறலானும் வழுவாயமைந்தது. (சரு)

உகூஅ. உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி
ஐயக் கிளவி யாடூஉவிற் குரித்தே.

இது தோழிக்குந் தலைவிக்குமுரியதோர் வழுவமைக்கின்றது. (இ - ள்.) உயர்மொழிக்கு உறழுங் கிளவியும் உரிய = இன்பம் உயர்தற்குக்காரணமான கூற்றுநிகழுமிடத்திற்கு எதிர்மொழியாக மாறுபடக்கூறுங் கிளவி நிகழ்தலுமுரிய: ஐயச்கிளவி ஆடூஉவிற்கு உரித்தே = கூறுவேமோ கூறேமோ என்று ஐயப்பட்டுக் கூறுஞ்சொற் தலைவற்குரித்து. எ-று. உறழுங்கிளவியைப் பொதுப்படக் கூறினர் தோழி உயர்மொழி கூறியவழித் தலைவி உறழ்ந்து கூறலுந் தலைவன் உயர்மொழிகூறியவழித் தோழி உறழ்ந்துகூறலுந் தலைவன் உயர்மொழிகூறியவழித் தலைவி உறழ்ந்துகூறலுந் தலைவி உயர்மொழிகூறியவழித் தோழி உறழ்ந்துகூறலுங் கோடற்கு. "சுணங்கணி வனமுலை" என்னுங் குறிஞ்சிக்கலியுள் "என்செய்தான் கொல்லோ விஃதொத்தன் றன்கட் - பெருங்களிற் றன்ன தகைசாம்பி யுள்ளூ - ரூருகு வான் போலு முடைந்து" எனத் தோழிகூறியவழித் "தெருவின்கட் * * * கண்டு" எனவும் "அலர்முலை யாயிழை நல்லாய் * * * பொன்செய்வா நாம்" எனவுந் தலைவி உறழ்ந்துகூறியவாறுகாண்க. இது தலைவன்வருத்தங்கூற அதனை ஏற்றுக்கொள்ளாது உறழ்தலின் வழுவாய் நாண்மிகுதியாற் கடிதின் உடம்படாமையின் அமைந்தது. "எல்லாவிஃதொத்தன்" என்னுங் குறிஞ்சிக்கலியுள் "ஈதலிரந்தார்க் கொன்றீயானும்" எனத் தலைவன்கூறியவழி "இவள் * * * யது" எனவும், "மண்ட * * * மாலோ" எனவுந் தோழியுறழ்ந்துகூறியவாறுகாண்க. இதுவும் அவன்வருத்தத்திற்கு எதிர்கூறத்தகாதன கூறலின்வழுவாய்த் தலைவிகருத்தறிந்து உடம்பட வேண்டுமென்று கருதுதலின் அமைந்தது. "அணிமுக மதியேய்ப்ப * * * பெரும்பொன் படுகு

வைபண்டு.'' "மொழிவதுகண்டை * * * உடையேமோயாம்'' "உழு தாய் சுரும்பிமிர் * * * மற்றினி'' "எல்லா நற்ஞெ ளிழை* * * யின்'' "நல்லா யிருளைகேள் ஈங்கே * * * பல.'' "ஆங்காக; அத்திறமல்லா * * * விடறகு'' இது தலைவன் உயர்மொழிக்குத்தலைவி உறழ்ந்துகூறி யது. இது நகையாடிக் கூட்டத்தைவிரும்பிக்கூறியமொழிக்கு உறழ்ந் துகூறலின் வழுவாய் அவளும் நகையாடிக்கூறலின் அமைந்தது. "மறங்கொளிரும்புலி'' என்னுங் குறிஞ்சிககலியுள், "ஆர்வுற்றார் நெஞ் ச மழிய விடுவேஞே * * * தவன்'' எனத் தலைவிகூறலுந் "தண்ணாறுங் கோங்க * * * மலை'' எனத்தோழி உறழ்ந்துகூறியவாறு காண்க. இதுவுந் தலைவிகூற்றிற்கு மாறுதலின் வழுவாய்ச் சிறைப்புறமாகக் கேட்டு வரைதல் பயனுதலின் அமைந்தது. "சொல்லின் மறுதீவாண் மன்ஞே விவள்'' எனவுங் "கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெ னக் - கரந்த காமங் கைநிறு'' எனவும், ஐயக்கிளவி தலைவற்குரியவாய் வந்தன. இனி ஐயப்பாடு தலைவிக்குமுரித்தென்றுற் "சிறந்துழியை யம்'' என்பதற்குமாறும். "அவன்மறை தேஎநோக்கி மற்றிவன் மக னே தோழி யென்றனள்'' என்பதனை ஐயத்துக்கட் டெய்வமென்று துணிந்தாளெனின் அதனைப் பேராசிரியர்தாமே மறுத்தவாறுகாண்க.

உகக. உறுகண் ணோம்பல் றன்னியல் பாகலி
னுரிய தாகுந் தோழிகண் ணுரனே.

இது தோழி அறிவுடையளாகக் கூறலும் அமைகவென்கி ன்றது. (இ - ள்.) உறுகண் ஒம்பல் தன் இயல்பு ஆகலின் = தலை விக்குவந்த வருத்தத்தைப் பரிகரித்தல் தனக்குக் கடனுதலின் : தோழிகண் உரன் உரியதாகும் = தோழிமாட்டு அறிவுளதாகக் கூ றல் உரித்தாகும். எ-று. உம். "பான்மருண் மருப்பின்'' என்னும் பாலைக்கலியுட் "பொருடான்-பழவினை மருங்கிற் பெயர்பு பெயர்புறை யு-மன்ன பொருள்வயிற் பிரிவோய்'' எனத் தோழி அறிவுடையாளா கக் கூறியவாறுகாண்க. "பிண்டநெல்லி னள்ளூரன்ன * * * யாரோ''. என்பது உறுகண் சாத்தற்பொருட்டாகத் தலைவி வருந்தினும் நீ செல்லென்றாள் தலைவன் செல்லாமை அறிதலின். ஒன்றெனமுடித் தலாற் தலைவி உரனுடையளெனக் கூறலுங்கொள்க. (சரு)

உசO. உயர்மொழிக் கிளவியு முரியவா லவட்கே.

இதுவுந் தோழிக்குரியதோர் வேறுபாடு கூறுகின்றது. (இ - ள்.) அவட்கு=தோழிக்கு: உயர் மொழிக் கிளவியும் உரிய= தலைவியையுந் தலைவனையும் உயர்த்துக்கூறுங் கூற்றுமுரியவாம் ஒரோ வோரிடத்து. எ - று. "மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ.

யாண ரூரநின் மாணிழை யரிவை - காவிரி மலிர்நிறை யன்னநின் - மார்புநனி விலக்க லெருடங்கி யோளே." இதனுட் காவிரிப் பெருக்குப்போலத் தலைவியைநோக்கி வருகின்ற மார்பினைத் தான் விலக்குமாறென்னையெனத் தலைவியை உயர்த்துக்கூறியவாறு காண்க. "காலையெழுந்து" என்பதும் அது. "உலகம்புரப்பான்போல்வதோர் மதுகையுமுடையன்" எனவும் "தாமரைக்கண்ணியை * * * யோரோ" எனவுந் தலைவனை உயர்த்துக் கூறியவாறுகாண்க. (சசு)

## உசக. வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்த றாவின் றுரிய தத்தங் கூற்றே.

இது தலைவியுந் தோழியும் வாயிலாகச் சென்றாருடன் கூறுவனவற்றுட் படுவதோர் வழுவமைக்கின்றது. (இ - ள்.) தத்தங் கூற்றே = தோழிக்குந் தலைவிக்குமுரிய கூற்றின்கண் : வாயிற்கிளவி = வாயிலாய்வந்தார்க்கு மறுத்துத் தலைவனது பழிகளைக்கூறுங் கிளவிகளை : வெளிப்படக் கிளத்தல் = மறையாது வெளியாகக் கூறுதல் : தாவின்று உரிய = இங்ஙனங் கூறுகின்றேமே என்னும் வருத்தம் மனத்துநிகழ்தலின்றியே உரியவாம். எ - று. அவை தலைவிக்குந் தோழிக்குமுரியனவும் தோழிக்கேயுரியனவுந் தலைவிக்கேயுரியனவுமாம். வாயில்களாவார் ஆற்றாமையுந் தோழிமுதலியோருமாம். "நெஞ்சத்த பிறவாக நிறைவில ளிவளென - வஞ்சத்தான் வந்தீண்டு வலிதொலைத் திவாயோ." இது ஆற்றாமைவாயிலாகத் தலைவன்வந்துழித் தலைவி வெளிப்படக் கூறியது. இது தோழிக்கும் உரித்து. "எரியகைந் தன்ன தாமரை யிடையிடை * * * யார்ப்பினும் பெரிதே" இதனுள் "ராணிலமன்ற" எனத் தோழிகூறி அலராகின்றாலென வெளிப்படக்கிளத்தலின் வழுவாயமைந்தது. "அகலநீ துறந்தலி னழுதோவா * * * தெடுப்புமே." இது தலைவிகூற்று. உரியவென்றதனாற் தோழிவாயிலாகச் சென்றுழித் தலைவி வெளிப்படக்கூறுதலுங் கொள்க. அது "இம்மை யுலகு" என்னும் அகப்பாட்டினுட் காண்க. இவை இங்ஙனம் வெளிப்படக்கிளத்தலின் வழுவாய் அமைந்தன. (சஎ)

## உசஉ. உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக் கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே.

இது மேல் வெளிப்படக்கிளப்பனகூறிப் பின்வெளிப்படாமற் கிளக்கும் உள்ளுறை இனைத்தென்கின்றது. (இ - ள்.) உடனுறை = நான்கு நிலத்தும் உளவாய் அந்நிலத்துடனுறையுங் கரு

ப்பொருளாற் பிறிதொன்று பயப்ப மறைத்துக்கூறும் இறைச்சி யும் : உவமம் = அக்கருவாற் கொள்ளும் உள்ளுறையுவமமும் ஏனையுவமமும்: சுட்டு = உடனுறையுவமமும் அன்றி நகையுஞ்சிறப்பும் பற்றாது வாளாது ஒன்றுநினைந்து ஒன்று சொல்வனவும் அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டிவருவனவும் : நகை = நகையாடி ஒன்று நினைத்து ஒன்றுகூறுதலும்: சிறப்பென = ஏனையுவமம் நின்று உள்ளுறையுவமத்தைத் தத்தஞ் சுருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து நிற்றலும் என்று : கெடலரும் மரபின் உள்ளுறை ஐந்தே=கெடுதலரிதாகிய முறைமையினையுடைய உள்ளுறை ஐந்துவகையாம். எ-று. ஒன்றனை உள்ளுறுத்து அதனை வெளிப்படாமற் கூறலின் அவற்றை உள்ளுறையாமென்றார். "இறைச்சிதானே" "இறைச்சியிற்பிறக்கும்" என்பனவற்றுள் இறைச்சிக்குக்காரணங் காட்டினும். உவமம் உவமவியலுட் காட்டுதும். "பெருங்கடன் முகந்த பல்கிளைக் கொண்மூ - விருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப் - பொறபுறு முரசி னிரங்கி முறைபுரிந் - தறநெறி பிழையாத் திறனறி மன்னரருஞ்சமந் ததைந்த பெருஞ்செய லாடவர் - கழிதமதெறி வாளி னழிப்பன விளங்கு - மின்னுடைக் கருவியை யாகி நாளுங் - கொன்னே செய்தியோ வரவம் பொன்னென - மலர்ந்த வேங்கை மலிதோ டடைச்சிப் - பொலிந்த வாயமொடு தொண்டக மியலித்-தழலை வாங்கியுந் தட்டை யோப்பியு - மழலொடு செயலை யந்தளிர் தழையுங் - குறமகள் காதகு மேனற் - புறமுந் தருதியோ வாழிய மழையே." இதனுட் கொன்னே செய்தியோ அரவமென்பதனாற் பயனின்றி அலாவினைத்தியோவெனவுங்கூறி ஏனற்புறமுந்தருதியோ, என்பதனால் வரைந்து கொள்வையோவெனவுங் கூறித் தலைவனை மழைமேல்வைத்துக்கூறலிற் சுட்டாயிற்று. கொன்னே செய்தியோ என்றதனால் வழுவாயினும் வரைதல்வேட்கையாற் கூறினமையின் அமைந்தது. "அன்புறுதகுந" என்பதனுள் ஏனையதற்குக் காரணங் காட்டினும். "விளையாட்டாயமொடு" இதனுட் புன்னையை அன்னை நுவ்வையாகுமென்றதனான் இவளெதிர் நும்மை நகையாகிதலஞ்சுதுமென நகையாடிப் பசற்றுறியெதிரேசொள்ளாமைக் குறிப்பினான் மறைத்துக்கூறி மறுத்தவாறுகாண்க. இதனைச் செவ்வணங்கூறுமையின் அமைத்தார். "உள்ளுறை யுவம மேனை யுவமம்" என்னுஞ் சூத்திரத்து "விரிகதிர்மண்டிலம்" என்னும் மருதக்கலியுட் சிறப்புக் கொடுத்து நின்றது காட்டினும். அறத்தொடுநிலையும் பொழுதும் ஆறும் முதலியனவுஞ் செவ்வணங்கூறப்படுதலின் இவை கரந்தேகூறப்படுதலிற் "கெடலரு மரபின்" என்றார். இவை தோழிக்குந் தலைவிக்கும் உரியவாறு செய்யுட்களை நோக்கியுணர்க. (சஅ)

உசங. அந்தமில் சிறப்பி னாக்கிய வின்பந்
தன்வயின் வருதலும வகுத்த பண்பே.

இது முற்கூறிய உள்ளுறை பற்றித் தலைவற்கு வருவதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்.) ஆக்கிய அந்தமில் சிறப்பின் இன்பமும்= முற்கூறிய உள்ளுறை ஐந்தானும் அவர்களுண்டாக்கிய முடிவிலாத சிறப்பினையுடைய இன்பம் : தன்வயின் வருதலும் வகுத்த பண்பு = தலைவன் கண்ணும் நிகழ்ந்து இன்பஞ்செய்தலுங் காமத்துக்கு முதலாசிரியன் வகுத்த இலக்கணம். எ-று. தலைவன் நன்மை என்பதொன்றின்றி நந்தன்மையெனக் கருதுதலின் யாம் ஒன்றை நினைந்து ஒன்றுகூறினும் அவன்முனியாது இன்பமெனக் கொள்வனெனக் கூறியவற்றை அவன் இவை இன்பந் தருமென்றேகோடலின் வழுவாயமைந்தன. உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க. (சங)

உசச. மங்கல மொழியும் வைஇய மொழியு
மாறி லாண்மையிற சொல்லிய மொழியுங்
கூறியன் மருங்கிற் கொள்ளு மென்ப.

இஃது மேன் மூன்றுபொருளும் வழுவாயமைக என்றலின் எய்தாததெய்துவித்தது. (இ - ள்.) மங்கலமொழியும்= தலைவற்குத் தீங்கு வருமென்றுட்கொண்டு தோழியுந் தலைவியும் அதற்கஞ்சி அவனை வழுத்துதலும் : வைஇயமொழியும் = தலைவன் தம்மை வஞ்சித்தானாகத் தலைவியுந் தோழியுங் கூறலும்: வைஇயமொழி, தீங்கை வைத்த மொழியுமாம் ; மாறில் ஆண்மையிற் சொல்லிய மொழியும்=மாறுபாடில்லாத ஆளுந்தன்மையிடத்தே பழிப்பட்டக்கூறிய மொழியும் : கூறியன் மருங்கிற் கொள்ளும் என்ப=வழுவமைதியாகக் கூறிய இலககணத்திடத்தே கொள்ளுமொழியென்று கூறுவர் ஆசிரியர். எ-று. "நோயிலாராகங்காதலர்" எனவுங் "காந்தளுஞ்செய்வினைமுடிக்கததோழி" எனவுங் கூறுவன நம்மை அறனன்றித்துறத்தலிற் தீங்குவருமென்றஞ்சி வாழ்த்தியது. நம்பொருட்டுத் தீங்கு வருமென நினைத்தலின் வழுவாயமைந்தது. "வையினர் நலனுண்டார் வாராமை நினைத்தல்" என்பது வஞ்சித்தமை கூறிற்று. "இதுவுமோ ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" என்பது ஆண்மையிலே பழிபுண்டு என்றது. இதுவும் வழீஇ அமைந்தன. (ருo)

உசரு. சினனே பேதைமை நிம்பிரி நல்குர
வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே.

இது மெய்ப்பாட்டியலுள் ஆகாதென்பவற்றுட் சில அமைக வென வழுவமைக்கின்றது. இது பொதுவாகக் கூறலிற் தலைவிக்குந் தோழிக்குங்கொள்க. (இ-ள்.) சினனே=கோபம் நீட்டித்தலும் : பேதைமை=ஏழைமையும் : நிம்பிரி=பொறாமைதோன்றுங் குறிப்பும்: நல்குரவு = செல்வமின்மையும் · அனைநால்வகையும் = என்ற அத்தன்மையனவாகிய நாற்கூறும் : சிறப்பொடு வருமே=ஒருபொருளைச் சிறப்பித்துக் கூறுதல் காரணத்தான் வரும். எ-று. சினத்தை ஆண்டுக் கொடுமையினடக்கினுர். "நாணு நிறையு நயப்பில பிறப்பிலி" எனவும், "கொடிய வெமர்க்குநீ யாரை" எனவுஞ் சினம்பற்றிவரினும் அவை தன்காதலைச் சிறப்பித்தலின் அமைந்தன. "செவ்விய தீவிய * * * மகனல்லை மன்ற வினி" எனக் கழிபெருங் காதலான் நின்னை உள்ளவாறறிந்திலேனெனத் தன்பேதைமையைக் காதலாற்சிறப்பித்தலின் அமைந்தது. "உறலியாமொளிவாட * * * என்றறையினருளராயின்" இது நிம்பிரி; அவரோடும் விளையாடுவானெனப் பொறாமைகூறியும் அவன் ஈண்டையானுகவேண்டுமெனக் காதலைச் சிறப்பித்தலின் அமைர்தது. "பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால் - விரிசதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப் - புடைப்புறச் சுற்றும் பூந்தலைச் சிறுகோ - லுண்ணென் றோக்குபு புடைப்பத் தெண்ணீர் - முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற் - றரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர் - பரீஇமெலிந் தொழியப் பந்த ரோடி - யேவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி-யறிவு மொழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல் - கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக் - கொடுத்த தந்தை கொழுஞ்சோ றுள்ளா - ளொழுகுநீர் நுணங்கறல் போலப் - பொழுது மறுத்துண்ணுஞ் சிறுமது கையளே." இது குடிவறனுற்றென நல்குரவு கூறியுங் காதலைச்சிறப்பித்தலின் அமைந்தது. இது மெய்ப்பாட்டியலுள் விளக்காமையின் அதனைச்சார ஈற்றிலே வைத்தார். ()

உ௪௬. அன்னை யென்னை யென்றலு முளவே
தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினுந்
தோன்று மரபின வென்மனுர் புலவர்.

இது முறைப்பெயர்பற்றி வருவதோர் வழுவமைக்கின்றது. (இ-ள்.) சொல்லினும் எழுத்தினுந் தோன்று மரபின=சொல்லோத்தினும் எழுத்தோத்தினுஞ் சொல்லப்படாத இலக்கணத்தனவாய: தொல் நெறி முறைமை=புலநெறிவழக்கிற்குப் பொருந்திய பழைய நெறிமுறைமையானே : அன்னை என்னை என்றலும் உள என்மனுர் புலவர் = தோழி தலைவியை அன்னையென்றலுந் தலைவி தோழி

யை அன்னையென்றலும் இருவருந் தலைவனை என்னையென்றலும் உளவென்று கூறுவர்புலவர். எ-று. "அன்னா யிவனோ ரிளமா ணக்கன்" "புல்லின் மாய்வ தெவன்கொ லன்னாய்" இவை தோழியைத் தலைவி அன்னாயென்றன. "அன்னாய் வாழிவெண் டன்னை நம்மூர் — பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங் - குடுமித் தலைய மன்ற - நெடுமலை நாட னூர்ந்த மாவே." "அன்னாய் வாழிவெண் டன்னை யுவக்காண் - மாரி குன்றத்துக் காப்பா ளன்ன - தூவலி னனைந்த தொடலை யொள்வாட் - பாசி தூர்ந்த பெருங்கழற் - றண்பனி வைகிய வரிக்கச் சினனே." இவை தோழி தலைவியை அன்னாயென்றன. "எனக்கு மாகா தென்னைக்கு முதவாது." "ஒரீஇயின னொழுகு மென்னைக்குப் - பரியன் மன்யான் பண்டொரு காலே" இவை தலைவி தலைவனை என்னையென்றன. தோழிகூறியது வந்துழிக்காண்க. தலைவன் தலைவியை அன்னையெனக் கூறலும் உளதென்பாருமுளர். எழுத்திறுஞ் சொல்லினுமென்னாத முறையன்றிக்கூற்றானே புறத்திற்கும் இவைகொள்க. "என்னை மார்பிற் புண்ணுக்கு" "என்னைக் கூரீதன்மையானு மென்னைக்கு நாடீதன்மையானும்" "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை - முன்னின்று கன்னின்றவர்" "என்னை மார்பிற் புண்ணுமவெய்ய" என்பனகொள்க. ஏனைய வந்துழிக்காண்க. இனி உம்மையாற் பிறவுமுளவென்பது பெறுதலின் "எந்தைதன் னுள்ளங் குறைபடா மாறும்" என்றாற்போல் வருவன பிறவுங்கொள்க. (௫உ)

உசஎ. ஒப்பு முருவும் வெறுப்பு மென்றா
கற்பு மேரு மெழிலு மென்றா
சாயலு நாணு மடனு மென்றா
நோயும் வேட்கையு நுகர்வு மென்றாங்
காவயின் வரூஉங் கிளவி யெல்லா
நாட்டிய மரபி னெஞ்சுகொளி னல்லது
காட்ட லாகாப் பொருள வென்ப.

இது சுட்புலனாகக் காணப்படாத பொருண்மேலுங் கட்புலனாகக் காணப்பட்டாறபோலப் பொருள்கோடல் வழுவமைக்கின்றது. (இ-ள்.) ஒப்பாவது, ஒத்தகிழவனுங் கிழத்தியு மென்றவழி அவரொப்புமை மெய்வேறுபாடுபற்றி மனனுணர்வானுணர்வதன்றிப் பொறியானுணரலாகாதென்றது ; தந்தையரொப்பர் மக்களென்பதும் அது: உருவாவது, உட்கு; அதுவும் பொறிநுதல் வியர்த்தல் போல்வனவற்றானன்றிப் பிழம்புபற்றி உணரலாகாது ; வெறுப்பா

வது, செறிவு; அதுவும் மக்கட்குணமாய் இசையாததோர் மனநிகழ்ச்சியாதலிற் பொறியான் உணரலாகாது : கற்பாவது, தன்கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள். ஏராவது, எழுச்சி; அது எழுகின்ற நிலைமையென நிகழ்காலமே குறித்து நிற்கும். எழிலாவது அங்ஙனம் வளர்ந்தமைந்த பருவததும் இது வளர்ந்துமாறியதன்றி இன்னும் வளருமென்பதுபோன்றுகாட்டுதல் : சாயலாவது, ஐம்பொறியால் நுகரும்மென்மை : நாணுவது, செயத்தகாதனவற்றின்கண் உள்ளமொடுங்குதல் : மடனாவது, கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை : நோயாவது, நோதல் : வேட்கையாவது, பொருள்கண் மேற் தோன்றும் பற்றுள்ளம் ; "செய்யுண்மருங்கின்வேட்கை" என்புழி அவாவிற்கு வேறுபாடு கூறினும் : நுகர்வாவது, இன்பத்துன்பங்களை நுகருநுகர்ச்சி : என்றுவென்பன எண்ணிடைச்சொல் : என்று வருங் கிளவி = ஒப்புமுதல் நுகர்வு ஈறாகப் பன்னிரண்டென்று அகப்பொருட்கண் வருங் கிளவிகளும் : ஆவயின் வருங் கிளவி = அப்பன்னிரண்டின்கண்ணே புறப்பொருட்குரியவாய் அவ்வாசகத தான் வருங்கிளவிகளும் : ஆங்கு ஈண்டுவமவுருபு, அவைபோல்வன கிளவி என்பதாம் ; எல்லாம் நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது = ஏனையவும் நாடகவழக்கத்தாற் புலனெறிவழக்கஞ்செய்த முறைமையானே நெஞ்சுணர்ந்துகொள்ளினன்றி : காட்டலாகாப் பொருள என்ப = உலகியல்வழக்கான் ஒருவர்க்கொருவர் கட்புலனாகக் காட்டப்படாதபொருளைப் பொருளாகவுடைய என்று கூறுவர் புலவர். எ - று. இவை மேல்வரும் மெய்ப்பாடுபற்றி உணர்தலிற் கட்புலனாகாவோவெனின், மெய்ப்பாடாவது மனக்குறிப்பாதலின் அதன் குறிப்பிற்குப் பற்றுக்கோடாகிய பொருளினவை யென்றுணர்க. இனி இவை புறப்பொருட்கண்வருமாறு ; "வரைபுரையுமழகளிற் றின்மிசை" எனவும் "உருகெழு முரசம்" எனவும் "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" எனவும் "நிலைகெழு கூட னீளெரி யூட்டிய - பலர்புகழ் பத்தினி" எனவும் இவ்வாறே ஏனையவற்றிற்கும் ஒட்டிக்கொள்க. இனி எல்லாமாவன, ஒளியும் அளியுங் காய்தலும் அன்பும் அழுக்காறும் பொறையும் நிறையும் அறிவும் முதலியனவும் பிறவுமாம். ஒளியாவது வெள்ளமையின்மை ; அளியாவது அன்பு காரணத்தாற் தோன்றும் அருள் ; காய்தலாவது வெகுளி ; அன்பாவது மனைவியர் கண்ணுந் தாய்தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின்கண்ணும் மனமகிழ்ச்சிநிகழ்த்திப் பிணிப்பித்துநிற்கும் நேயம் ; அழுக்காறாவது பிறர்செல்வமுதலியவற்றைப் பொறாமை; பொறையாவது பிறர்செய்த தீங்கைப் பொறுத்தல் ; நிறையாவது மறை பிறரறியாமலொழுகுதல் ; அறிவாவது நல்லதனலனுந் தீயதன்றி

மையும் உள்ளவாறுணர்தல். இவைகண்டிலமென்று கடியப்படா கொள்ளும் பொருளென்முர். இவை ஆசிரியஞணையன்றென்பது மேற் சூத்திரத்தாற் கூறுகின்ருன். (ருக)

உசஅ. இமையோர் தேஎத்து மெறிகடல் வரைப்பினு மவையில் காலை மின்மை யான.

இது இவையுங்காட்டலாகாப் பொருள்கள் ஆசிரியஞணையாற்கொண்டன அல்லவற்றைப் பொருளெனக்கொள்க என்கின்றது. (இ-ள்.) இமையோர் தேஎத்தும் எறி கடல் வரைப்பினும் = தேவருலகத்தின்கண்ணுந் திரையெறியுங் கடல்சூழ்ந்த உலகின்கண்ணும்: அவை இல் காலம் இன்மையான = அறம்பொருளின்பநுகர்ச்சி இல்லாததோர்காலம் இன்ருகையால் அவற்றைப் பொருளென்றே சொல்க. எ-று. தமிழ்நடக்கும் எல்லைகூருது தேவருலகையும் மண்ணுலகையுங் கூறினமையின் இவையாண்டும் ஒப்ப முடிந்தனவெனவும் அவை உள்ள அளவும் இவை நிகழ்வனவெனவுங் கூறலின் வழுவமைதியாயிற்று. இமையாக் கண்ணராகலின் இமையோரென்ருா. இடையூறில்லா இன்பச்சிறப்பான் இமையோரை முற்கூறிஞன். (ருச)

பொருளியன் முற்றிற்று.

ஆறாவது

# மெய்ப்பாட்டியல்.

உசகூ. பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொரு
கண்ணிய புறனே நானான் கென்ப. [ளுங்

என்பது சூத்திரம். இவ்வோத்து என்னபெயர்த்தோவெனி ன், மெய்ப்பாட்டியலென்னும் பெயர்த்து. மெய்ப்பாடென்பன சில பொருள் உணர்த்தினமையின் அப்பெயர்த்தாயிற்று. இதனானே ஓத் துநுதலியதூஉம் மெய்ப்பாடு உணர்த்துதலென்பது பெற்றாம். மெய்ப் பாடென்பது பொருட்பாடு. அஃதாவது, உலகத்தார் உள்ளநிகழ்ச்சி ஆ ண்டுநிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்ப டுதல். அதனது இலக்கணங்கூறியஓத்தும் ஆகுபெயரான் மெய்ப்பாட் டியலென்றாயிற்று. மேலோத்தினோடு இவ்வோத்தினிடை இயைபெ ன்னையோவெனின், மேலை ஓத்துக்களுட் கூறப்படும் ஒழுகலாற் றிற்குங் காட்டலாகாப் பொருள் என்றவற்றிற்கும் எல்லாம் பொதுவா கிய மனக்குறிப்பு இவையாகலின் இவற்றை வேறுகொண்டு ஓரின மாக்கி மெய்ப்பாட்டியலென வேறோர் ஓத்தாக வைத்தமையான் எ ல்லாவற்றோடும் இயைபுடைத்தென்பது. இதன் தலைச்சூத்திரம் என் னுதலிற்றோவெனின், அம்மெய்ப்பாடு பிறர் வேண்டுமாற்றான் இத் துணைப் பகுதிப்படுமென்றுணர்த்துதனுதலிற்று. (இ - ள்.) பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும் = முடியுடைவேந்தருங் குறுநிலம ன்னருமுதலாயினோர் நாடகமகளிர் ஆடலும்பாடலுங் கண்டுங்கே ட்டுங் காமநுகரும் இன்பவிளையாட்டினுட் தோன்றிய முப்பத்திரண்டு பொருளும் : கண்ணிய புறனே நானான்கு என்ப = அவை கருதிய பொருட்பகுதி பதினாறாகி அடங்கும் நாடகநூலாசிரியர்க்கு. எ - று. அது முதனூலைநோக்கிக் கூறியவாறுபோலும்.

முப்பத்திரண்டாவன யாவையெனின் :— ஒன்பதுசுவையெ னப்பட்டவற்றுள் உருத்திரமொழிந்த எட்டனையுங் கூறுங்காற், சுவை க்கப்படும்பொருளும், அதனை நுகர்ந்த பொறியுணர்வும், அது மனத் துப்பட்டவழி உள்ளத்துநிகழுங் குறிப்பும், குறிப்புக்கள் பிறந்த உள் ளத்தாற் கண்ணீரரும்பலும் மெய்ம்மயிர்சிலிர்த்தலுமுதலாக உடம்பி ன்கண்வரும் வேறுபாடாகிய சத்துவங்களுமென நான்காக்கி, அச்சு வையெட்டோடுங்கூட்டி, ஒன்று நான்குசெய்து உறழ, முப்பத்திரண் டாமென்பது. எனவே, சுவைப்பொருளுஞ் சுவையுணர்வுங் குறிப்பும் விறலுமென நான்காயின. விறலெனினுஞ் சத்துவமெனினும் ஒக்கும்,

சுவைப்பொருளென்பன, அறுசுவைக்கு முதலாகிய வேம்புங் கடும் உப்பும் புளியுங் கரும்பும்போல்வன. அவையாமாறு, நகைச்சுவைக்குப் பொருளாவன ஆரியர்கூறுந் தமிழுங், குருடரும் முடவருஞ் செல்லுஞ் செலவும், பித்தருங் களியருஞ் சுற்றத்தாரை இகழ்ந்தாருங் குழவிகூறும் மழலையும்போல்வன. அச்சப்பொருளாவன, "வள்ளெயிற் றரிமா வாள்வரி வேங்கை - முள்ளெயிற் றரவே முழங்கழற் செந்தீ - யீற்று மதமா வேக பாதங் - கூற்றங் கோண்மா குன்றுறை யசுணம்" என்றுசொல்லப்பட்டனபோல்வன. இவற்றைச் சுவைகோடலென்பதென்னையெனின், நகையும் அச்சமுமுதலாகிய உணர்வு முற்காலத்து உலகியலான் அறிவானொருவன் அவற்றுக்கு ஏதுவாகிய பொருள்பிற கண்டவழித் தோன்றிய பொறியுணர்வுகள் அவ்வச்சுவையெனப்படும். வேம்பென்னும் பொருளும் நாவென்பொறியுந் தலைப்பெய்தவழியல்லது கைப்புச்சுவை பிறவாததுபோல, அப்பொருள் கண்டவழியல்லது நகையும் அச்சமுந் தோன்றா. ஒழிந்த காமமுதலியனவும் அன்ன. இக்கருத்தேபற்றிப் பிற்காலத்து நாடகநூல் செய்த ஆசிரியரும் "இருவகை நிலத்தி னியல்வது சுவையே" என்றாரென்பது. இனி இருவகைநிலனென்பன உய்ப்போன்செய்தது காண்போர்க்கெய்துதலன்றோவெனின் சுவையென்பது ஒப்பினாய பெயராகலான் வேம்புசுவைத்தவன் அறிந்த கைப்பறிவினை நாவுணர்வினாற் பிறனுணரான், இவன் கைப்புச்சுவைத்தானெனக் கண்ணுணர்வினான் அறிவதன்றி; அதுபோல அச்சத்துக்கு ஏதுவாகிய ஒரு பொருள்கண்டுஅஞ்சி ஓடிவருகின்றானொருவனை மற்றொருவன் கண்டவழி இவன் வள்ளெயிற்றரிமாமுதலாயினகண்டு அஞ்சினானென்றறிவதல்லது வள்ளெயிற்றரிமாவினைத் தான்காண்டல் வேண்டுவதன்று; தான் கண்டானாயின், அதுவுஞ் சுவையெனவேபடும். ஆகவே அஞ்சினானைக் கண்டு நகுதலுங் கருணைசெய்தலுங் கண்டோர்க்குப் பிறப்பதன்றி அச்சம்பிறவாதாகலான் உய்ப்போன்செய்தது காண்போனுய்த்த அறிவின்பெற்றியாற் செல்லாதாகலின் இருவகை நிலமெனப்படுவ'ன சுவைப்பொருளுஞ் சுவைத்தோனுமென இருநிலத்தும் நிகழுமென்பதே பொருளாதல்வேண்டுமென்பது.

குறிப்பென்பது, கைப்பின் சுவையுணர்வு பிறந்தவழி வெறுப்புமுதலாயின உள்ளநிகழ்ச்சிபோல அஞ்சுதக்கனகண்டவழி அதனை நோக்காது வெறுக்கும் உள்ளநிகழ்ச்சி. விறலென்பன, அவ்வுள்ளநிகழ்ச்சி பிறந்தவழி வேம்புதின்றார்க்குத் தலைநடுங்குவதுபோலத் தாமே தோன்றும் நடுக்கமுதலாயின. இவ்வகையால் இந்நான்கினையும் எட்டோடும் உறழவே முப்பத்திரண்டாயின.

இனி அவை பதினாறாயினவாறென்னையெனின்:—வேம்புமுதலாயின பொருளும் அதனோடு நாமுதலாயினபொறியும் வேறுவேறு நின்றவழிச் சுவைபிறவாமையானும் அவ்விரண்டுங்கூடியவழிச் சுவை பிறத்தலானும் அவைபதினாறும் எட்டெனப்படும்; இனிக் குறிப்புஞ் சத்துவமுமென்பனவும் உள்ளநிகழ்ச்சியும் உடம்பின்வேறுபாடுமென்பராகலின் அவ்வுள்ளநிகழ்ச்சியை வெளிப்படுப்பது சத்துவமாகலின் அவை பதினாறும் எட்டாயடங்குமாகலின் அவை ஈரெட்டுப் பதினாறுமென்பது. மற்றிவை பண்ணைத்தோன்றுவனவாயின், இது பொருளோத்தினுள் ஆராய்வதென்னை? நாடகவழக்கத்தானே, ஒருவன்செய்ததனை ஒருவன் வழக்கினின்றும் வாங்கிக்கொண்டு பின்னர்ச்செய்கின்றதாதலானும் வழக்கெனப்படாதாகலானும் ஈண்டு ஆராய்வது பிறிதெடுத்துரைத்தலென்னுங் குற்றமாமென்பது கடா. அதுவன்றே இச்சூத்திரம் பிறன்கோள்கூறலென்னும் உத்திவகையாற் கூறி, அது தானே மரபாயிற்றென்பது. (௧)

௨௫0. நாலிரண் டாகும் பாலுமா ருண்டே.

இது மெய்ப்பாட்டின் அடக்கங்கூறுகின்றது. (இ - ள்.) முப்பத்திரண்டுமெய்ப்பாடும் பதினாறுதலேயன்றி எட்டாதலும் உண்டு. எ - று. அவை வீரம் அச்சம் வியப்பு இழிபு காமம் அவலம் நகை நடுவுநிலையென்பன. இவற்றின்விகாரமாகிய சத்துவங்களெட்டனையும் இவற்றுளடக்கி எட்டாக்கிக் கூறியவாறிதுவென்பது. நாலிரண்டாதலுமுண்டென்னாது பாலென்றதனான் எட்டாகலேயன்றி அவை ஒன்பதாதற்குப் பகுதியுமுடையவென்பது; என்னை? "உருத்திரந் தன்னோ டொன்ப தாகும்" என்பவாகலின். உம்மை இறந்தது தழீஇயிற்றுதலான் இவையும் பண்ணைத் தோன்றிய எண்ணான்கெனப்பட்டனவற்றுப் பகுதியென இதுவும் பிறன்கோட்கூறியவாறாயிற்று. மற்றிவற்றது பயனென்னையெனின்; பொருளதிகாரத்துச்கூறுகின்ற வழக்கியலே அவையுமென்பதுகூறி, அச்சுவைக்கு ஏதுவாய பொருளினை அரங்கினுள் நிறீஇ, அதுகண்டு குறிப்புஞ்சத்துவமும் நிகழ்த்துகின்ற கூத்தனையும் அரங்கிற்றந்து, பின்னர் அவையரங்கினோர் அவன்செய்கின்றமெய்ப்பாட்டினை உணர்வராக வருகின்றமுறைமையெல்லாம் நாடகவழக்கிற்கே உரியபகுதியெனவும், அப்பகுதியெல்லாம் ஈண்டுணர்த்தல்வேண்டுவதன்றெனவுங் கூறியவாறு. இங்ஙனம் அடங்குமென்பது நாடகநூலுள்ளுஞ் சொல்லுபவோவெனின், சொல்லுபவாகலினன்றே அதன்வழிநூல்செய்த ஆசிரியர்செயிற்றியனார் சுவையுணர்வும்பொருளும் ஒன்றாகவடக்கிச் சுவையுங்குறிப்புஞ்

சத்துவமுமென மூன்றாக்கி வேறுவேறிலக்கணங் கூறி அவற்றை "எண்ணிய மூன்று மொருங்கு பெறுமென - நுண்ணிதி னுணர்ந்தோர் நுவன்றன ரென்ப" என்றோதினாராயிற்றென்பது. (உ)

உருக. நகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம பெருமிதம வெகுளி யுவகையென்
றப்பா லெட்டே மெய்ப்பா டென்ப.

இது பிறர்வேண்டுமாற்றானன்றி இந்நூலுள் இவ்வாறு வேண்டப்படும் மெய்ப்பாடென்பதுணர் - ற்று. (இ - ள்.) இச்சொல்லப் பட்ட எட்டும் மெய்ப்பாடென்று சொல்லுவர்புலவர். எ - று.

நகையென்பது சிரிப்பு; அது முறுவலித்துநகுதலும் அளவே சிரித்தலும் பெருகச்சிரித்தலுமென மூன்றென்ப. அழுகையென்பது அவலம்; அஃது இருவகைப்படும், தானே அவலித்தலும் பிறரவலங்கண்டு அவலித்தலுமென; இவற்றுள் ஒன்று கருணையெனவும் ஒன்று அவலமெனவும்பட்டுச் சுவை ஒன்பதாகலுமுடைய என்பது. இளிவரலென்பது இழிபு. மருட்கையென்பது வியப்பு; அற்புதமெனினும் அமையும். அச்சமென்பது பயம். பெருமிதமென்பது வீரம். வெகுளியென்பது உருத்திரம். உவகையென்பது காமமுதலியமகிழ்ச்சி. இவை அவ்வெட்டுமாவன. இவற்றைச் சுவையெனவுங் குறிப்பெனவும் வழங்கினும் அமையும்.

மற்று நகை முன்வைத்ததென்னையெனின், பண்ணைத்தோன்றிய எண்ணான்குபொருட்கும் இவையென்னும் இயல்பில்லனவல்ல என்றதற்கு விளையாட்டுப் பொருட்டாகிய நகை முன்வைத்தானென்பது. அதற்கு மறுதலையாகிய அழுகையை அதன்பின் வைத்தான். இளிவரவு அதன்பின் வைத்தான், அழுகையும் இளிவரவோடு இயைபுடைமையின். தானிளிவந்து பிறிதோர்பொருளைவியக்குமாதலின் இளிவரலின்பின் வியப்புவைத்தான். வியப்புப்பற்றியும் அச்சம்பிறத்தலின் அச்சத்தை அதன்பின் வைத்தான். அச்சத்திற்கு மறுதலையாகிய வீரத்தை அதன்பின் வைத்தான். அவ்வீரத்தின்பயனாகிப் பிறர்க்கு வரும் வெகுளியை அதன்பின்னே வைத்தான். வெகுளிக்கு மறுதலையாகலானும் எல்லாவற்றினும் ஈண்டு ஓதுதற்குச் சிறந்ததாகலானும் முதற்கணோதிய நகைக்கு இயைபுடைத்தாகலானும் உவகையை அவ்வீற்றுக்கண் வைத்தானென்பது. இவ்வெட்டனுண் முதனின்ற நான்கும் முற்கூறுதற்கும் இறுதிநின்ற நான்கும் பிற்கூறுதற்குங் காரணம் வருகின்ற சூத்திரங்களானும் பெறுதும்.

மற்றிவ்வெட்டனோடுஞ் சமநிலைகூட்டி ஒன்பதென்றுமோ நாடகநூலுட்போலவெனின், அதற்கு ஓர்விகாரமின்மையின் ஈண்டுக்கூறியதிலனென்பது; அதற்கு விகாரமுண்டெனின் முன்னையெட்டனுள்ளுஞ்சார்த்திக்கொள்ளப்படும். அஃதல்லதூஉம் அஃதுலகியல் நீங்கினோர் பெற்றியாகலின், ஈண்டு உலகவழக்கினுட் சொல்லியதிலனென்பது. ஒழிந்த எட்டும் உலகியலாகலிற் கூறினான், "வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்" என்று புகுந்தமையினென்பது. அவை எட்டுமாமாறு இனிக்கூறுதும். (ங)

உருஉ. எள்ள லிளமை பேதைமை மடனென்
றுள்ளப் பட்ட நகைநான் கென்ப.

இது நிறுத்தமுறையானே நகைக்குறிப்பு நான்கென்பதுணர்-ற்று. (இ-ள்.) எள்ளுதலும் இளமையும் பேதைமையும் மடனுமெனக் கருதப்பட்ட நகை நான்கு. எ-று. இவை நான்கும் பொருளாகிச் சத்துவமுங் குறிப்புஞ் சுவையுமென்னும் மூன்றற்கும் முதற்கண்ணவாகலான் மூன்றனையும் அடக்கிப் பொருட்பகுதியான் அவற்றைக் கூறுகின்றவாறு இதுவென்பது. இவைநான்கும் ஒன்று இரண்டாகி எட்டாதலும் உடைய.

எள்ளலென்பது தான் பிறனை எள்ளிநகுதலும் பிறரால் எள்ளப்பட்டவழித் தான் நகுதலுமென இரண்டாம். இளமையென்பது தான் இளமையாற் பிறனை நகுதலும் பிறரிளமைகண்டு தான் நகுதலுமென இரண்டு. பேதைமையென்பது அறிவின்மை. மடமையென்பது பெரும்பான்மையுங் கொளுத்தக்கொண்டு சொண்டதுவிடாமை. இவையுந் தன்பேதைமையான் நகுதலும் பிறன்பேதைமையான் நகுதலுந் தன்மடமையான் நகுதலும் பிறன்மடமையான் நகுதலுமென இரண்டாம்.

எள்ளலென்பது இகழ்ச்சி. "எள்ளி நகினும்வரூஉம்" என்பது தன்கண் நிகழ்ந்த எள்ளல்பொருளாக நகைபிறந்தது. "நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே" என்பது பிறனெள்ளியது பொருளாகத் தன்கண் நகைபிறந்தது; என்னை? தன்மகள் தன்னை மதியாது இகழ்ந்தாளென நக்கவாறு. இது வெகுளிப்பொருளாக நக்கன்றேவெனின், அது வீரர்க்கே உரித்தாகல்வேண்டும்; இவள் அவனை வெகுண்டு தண்டஞ்செய்வாளல்லள் அதற்கே உவப்பினல்லதென்பது. அல்லதூஉம், "நகுதக் கனரோ நாடுமிகக் கூறுநர்" என்றாற்போல வீரத்தெழுந்த வெகுளிநகையும் எள்ளல் நகையென்றே அடக்கவேண்டும் ஈண்டென்பது.

"நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரோ" என்புழித் தன் இளமைபொருளாக நகைபிறந்தது. "திறனல்ல யாங்கழற யாணா ந குமிம் - மகனல்லான் பெற்ற மகன்" என்பதும் அது. அங்ஙனம் மக ன்சிரித்தவழித் தாய்க்கு நகைதோன்றிற்றேல் அது பிறரிளமை பொ ருளாக நகைதோன்றிற்றாம். "நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்" என்பது பிறரிளமைபொருளாக நகைபிறந்தது.

"நகைநீ கேளாய் தோழி" என்பது தன்பேதைமைபொருளா க நகைபிறந்தது; என்னை? தான் செய்த தவற்றிற்குத் தாய் தன்னை வெகுண்டது தனக்கு நகையாகக்கொண்டமையின். "நகையா கின் றே தோழி - மம்மர் நெஞ்சினன் றொழுதுநின் றதுவே" என்பது பி றன்பேதைமைபொருளாக நக்கது.

"நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே" என்பது தன்மடத் தான் நகைதோன்றிற்று; என்னை? நீயிர் கூறிய அதனையே மெய் யெனக்கொண்டு மகிழ்ந்து நக்கனென் என்றமையின். "குறிக் கொண்டு நோக்காமை யல்லா லொருகண் - சிறக்கணித்தாள் போல நகும்." என்பதும் அது. "நாநகை யுடைய நெஞ்சே நம்மொடு - தான்வரு மென்ப தடமென் றோளி" எனப் பிறர்மடம் பொருளாக நகைதோன்றிற்று. பிறவும் அன்ன.

இவ்வோதப்பட்டவற்றுக்கெல்லாம் உவகை உரித்து. உள்ள ப்பட்ட நகைநான்கு என்றதனான் உள்ளத்தோடு பிறவாத நகையுமு ள, அவை "வறிதகத் தெழுந்த வாயின் முறுவல்" என்றாற்போல வருவனவெனக் கொள்க. (ச)

உடுரு. இளிவே யிழவே யசைவே வறுமையென
விளிவில் கொள்கை யழுகை நான்கே.

இது முறையானே அழுகையென்னுஞ் சுவையினைப் பொருள் பற்றி உணர்-ற்று. (இ-ள்.) இளிவும் இழத்தலும் அசைதலும் வறு மையுமென இந்நான்குபொருள்பற்றித் தோன்றும் அவலம். எ-று. இளிவென்பது பிறரான் இகழப்பட்டு எளியனாதல். இழவென்பது தந்தையுந் தாயுமுதலாகிய சுற்றத்தாரையும் இன்பம்பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல். அசைவென்பது பண்டைநிலைமை கெட்டு வேறொருவாறாகி வருந்துதல். வறுமையென்பது போகந்துய் ப்பப்பெறாத பற்றுள்ளம். இவை நான்குந் தன்கட் தோன்றினும் பி றன்கட் தோன்றினும் அவலமாமென்பது. எனவே, இவையும் எட் டாயின. விளிவில்கொள்கை, கேடில்கொள்கை. அங்ஙனங் கூறி

ய மிகையானே அழுகைக்கண்ணீர்போல உவகைக்கண்ணீர்வீழ்த லும் உண்டு. அதனையும் அழுகைப்பாற்சார்த்தி உணரப்படும்.

"ஏழுதெழில் சிதைய வழுதன ளேங்கி - யடித்தென வருத்த தித்திப் பல்லூழ் - தொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு - கூர்நு தி மழுங்கிய வெயிற்ற - ளூர்முழுது நுவலுதிற் காணிய சென்மே" என் பது, பரத்தையை நீயெள்ளினையென்று அழுதுவருகின்றாளென்று த லைமகற்குச் சொல்லியதாகலின் இது தன்கட் டோன்றிய இளிவரல் பொருளாக அவலச்சுவை பிறந்தது. "கயமல ருண்கண்ணாயொருவ ன்" என்னும் பாட்டினுட் "தானுற்ற - நோயுரைக் கல்லான் பெயரு மற் பன்னாளும்" எனத் தலைமகன் இளிவந்தொழுகுவதுகாரண மாகச் "செய்யேன்மன் யானுந் துயரிழப்பென்." என்றமையின் இ து பிறன்கட் டோன்றிய இளிவரல்பொருளாக அவலச்சுவை பிறந் தது. இது கருணையெனவும்படும்.

"மெழுகு மாப்பிதன் கண்கலுழ்நீ ரானே" என்புழிக் கணவனை யிழந்தாள் அவற்குப் பலிக்கொடைகொடுத்தற்கு மெழுகுகின்றாளைக் கண்ணீரே நீராக மெழுகின்றாளென்றமையின் இது தன்கட் டோன் றிய இழவுபற்றிப் பிறந்த அவலச்சுவையாயிற்று. "ஐயோ வெனின் யான் புலியஞ்சுவல்" என்பதும் அது. "பின்னொடு முடித்த மண்ணா மு ச்சி" என்னும் பாட்டினுள் "அணங்குறு கறபொடு மடங்கொளச் சாஅய் - நின்னோய்த் தலையையு மல்லை தெறுவர - வென்னா குவள்கொ லளிய டாளெனை - வென்னழி பிரங்கு நின்னொடியானும்" என்றவழித் தலைமகன்பிரிவிற்குத் தோழி படர்கூர்ந்தாளெனச் சொல்லினமை யின் அது பிறன்கட் டோன்றிய இழவுபற்றி அவலம்பிறந்ததாம்.

"துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி - யொளி யோ டுருவென்னைக் காட்டி யளியளென் - னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டு துஞ்சேன்" எனத் தன்கட் டோன்றிய அசைவுபற்றி அவலம் பிறந்தது. "இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ் - சொல்வ லை வேட்டுவ னாயினள் முன்னே." என்பது பிறன்கட் டோன்றிய அ சைவுபற்றிய அவலம்; என்னை? அள்ளிலைத்தாளி கொய்யாநின்றாள் இதுபொழுது என அவலித்துச்சொல்லினமையின்.

"இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை - சுவைத்தொ றழூஉந்த ன் மகத்துமுக நோக்கி - நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கண்ணெ ம் - மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ - நிற்படர்ந் திசினே நற்போ ர்க் குமண" என்புழி, முலைப்பசை காணாது அழுகின்றது குழவியெ

ன்பது தன்கட் டோன்றிய வறுமைபற்றி அவலம்பிறந்தது. மகமுக னோக்கி அழுகின்றாள் என்மனைவியென்பது பிறன்கட் டோன்றிய வறுமையவலம்.

"இன்ன விறலு முளகொ னமக்கென - மூதூர்ப் பெண்டிர் கசிந்தழ நாணிக் - கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை" என் புழி மூதூர்ப்பெண்டிர் இழவுபற்றி அழுதாராயிற் கூற்றுக்கண்ணோ டாதாகலின் அவர் உயந்தனரென்பது பெற்றாம்; அதனானே அஃது உவகைக்கலுழ்ச்சியாமென்பது. (ரு)

உருச. மூப்பே பிணியே வருத்த மென்மையோ
டியாப்புற வந்த விளிவர னான்கே.

இது மூன்றாம் எண்ணுமுறைமைக்கணின்ற இளிவரல் கூறுகி ன்றது. (இ - ள்.) மூப்பும் பிணியும் வருத்தமும் மென்மையுமென நான்கு பொருள்பற்றிப் பிறக்கும் இளிவரல். எ-று. வருத்தமெனினு முயற்சியெனினும் ஒக்கும். யாப்புறவந்த என்பது திட்பமுறவந்த என்றவாறு. அங்ஙனங் கூறிய மிகையானே வீரமுதலாயினபற்றியும் இளிவரல்பிறக்கும் என்றவாறு. இவை முன்னையபோலத் தன்கட் தோன்றுவனவும் பிறன்கட் தோன்றுவனவும்பற்றி எட்டாதலுடைய வென்பது கொள்க.

"நொடிந்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற் - றிருமிடை மிடை ந்த சிலசொற் - பெருமூ தாளரோ மாகிய வெமக்கே" என்பது தன் கட் டோன்றிய மூப்புப்பொருளாக இளிவரல் பிறந்தது; என்னை? இளமைககாலத்துச் செய்தன செய்யமாட்டாது இளிவந்தனம் இக்கா லத்து என்றமையின். "மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம் முதுமை யெள்ளலஃ தமைகுந தில்ல" என்பதும் அது. "மூத்துத்த லை யிறைஞ்சிய நின்னொடு யானே - போர்த்தொழி றொடங்க நாணுவ லதனான்" என்பது பிறன்கட் தோன்றிய மூப்புப் பொருளாக இளிவ ரல் பிறந்தது.

"இமயமுந் துளக்கும் பண்பினை - துணையி லாளர் பெண்டிரி ஃ தெவனோ" என்பது தன்கட் தோன்றிய பிணிபற்றி இளிவரவுபிறந் தது; என்னை? மலையைத்துளக்கும் ஆற்றலையுடையாய் காமப்பிணிகூ ர்ந்தோரை அலைப்பது நினக்குத் தகுவதன்றெனை இளிவந்து வாடை க்குக் கூறினமையின். "குணகடற் றிரையது பறைதபு நாரை * * * நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே" என்பது நெஞ்சினை வேறு நிறீஇக் கூறினமையிற் பிறன்கட் தோன்றிய பிணியெனப்படும்.

இதனுட் "சேய ளரியோட் படர்தி" என்றமையின் இது பிறன்கட் தோன்றிய வருத்தமும் வந்ததாயிற்று. "யான்ற னறிவ ருனறி யலளே" என்பது தன்கட் தோன்றிய வருத்தம்பற்றி வந்த இளிவரல்; என்னை? அது பின்னின்ற தலைமகன் கூறியதாகலின். "ஒன்றிரப்பான்போ லிளிவந்துஞ் சொல்லும்" என்பது பிறன்கட் தோன்றிய வருத்தம்பற்றி வந்தது; என்னை? அவன் இவ்வாறொழுகுதல் நமக்கு இளிவரலாமென்னுங் குறிப்பினாற் கூறிக் குறைநயப்பித்தமையின்.

"வலியரொன்று வழிமொழியலன் - மெலியரொன்று மீக்கூறலன்" எனத் தன்கண்ணும் பிறன்கண்ணுந் தோன்றிய மென்மைபற்றி இளிவரல் பிறந்தன; என்னை? மெலியார் இளிவந்தன கூறுவராயினும் வலியார் மீக்கூறுவராயினும் இவன் அவைசெய்யானென்றமையின்.

"ஒருகை யுடைய தெறிவலோ யானு - மிருகை சுமந்துவாழ் வேன்" என்பது வீரம்பற்றிய இளிவரல்பிறந்தது. இது தன்கண்ணும் பிறன்கண்ணுந் தோன்றாமையின் இலேசினாற் கொண்டாமென்பது. (௬)

௨௫௫. புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே.

இது வியப்புணர்-ற்று. (இ-ள்.) புதிதாகக் கண்டனவுங், கழியப் பெரியவாயினவும், இறப்பச் சிறியனவும், ஒன்று ஒன்றாய்த் திரிந்தனவுமென நான்கும்பற்றி வியப்புத் தோன்றும். எ-று. மதிமைசாலாமருட்கையென்பது அறிவினை உலகவழக்கினுள் நின்றவாறு நில்லாமற் றிரிதது வேறுபடுத்து வருவதென்றவாறு. இவையுமெல்லாம் மேலனபோலத் தன்கட் தோன்றினவும் பிறன்கட் தோன்றினவுமென எட்டாதலுடைய.

"மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர் - பலர்தில் வாழி தோழி யவரு - ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி - யோர்யாவுவ தெவன்கொ - னீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே" என்பது தன்கட் தோன்றிய புதுமைபற்றிய வியப்புப்பிறந்தது; என்னை? தன்கருத்து வெளிப்படாது தன்மெய்க்கட் தோன்றிய புதுமையைத் தலைவி வியந்தாள்போலத் தோழிகூறு அறத்தொடு நின்றமையின். "மந்தி நல்லவை மருள்வன நோக்கக் - கழைவள ரடுக்கத் தியலி யாமெயில் - விழவுக்கள விறலியிற் றோன்று நாடன்" என்றவழிப் பண்

டு ஒருகாலுங் கண்டறியாதபடி ஆடிற்று மயிலென்றமையிற் பிறபொருட்கட் தோன்றிய புதுமையாயிற்று.

"நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று - நீரினு மாரள வின்றே சாரற் - கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு - பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே" என்பது பெருமைவியப்பு; என்னை? கருங்கோற் குறிஞ்சிப்பூக்கொண்டு பெருந்தேன் இழைத்தாற்போல வழிமுறை முறையாற் பெருகற்பாலதாகிய நட்பு மற்றவனைக் கண்ணுற்றஞான்றே நிலத்தினதகலம்போலவும் விசும்பினோக்கம்போலவுங் கடலினாழம்போலவும் ஒருகாலே பெருகிற்றென்றமையின்; இது தன்கட் தோன்றிய பெருமைவியப்பு. இது தலைமகன் கருத்தினுள் நட்பிற்குங் கொள்ளுங்காற் பிறன்கட் தோன்றிய பெருமைவியப்பாமென்பது கொள்க.

"மைம்மல ரோதி மணிமகைப் பேதைதன்-கொம்மை வரிமுலை யேந்தினு - மம்ம - கடையிற சிறந்த கருநெடுங்கட் பேதை - யிடையிற் சிறியதொன் றில்." என்பது பிறன்கட் தோன்றிய சிறுமை வியப்பு. தன்கட் தோன்றினவுங் கண்டுகொள்க.

"எருமை யன்ன கருங்கல் லடைதொ - றுனிற் பரக்கும் யானைய முன்பிற் - கானக நாடனை நீயோ பெரும" என்பது நரிவெரூஉத்தலையார் தம்முடம்பு பெற்று வியந்துகூறிய பாட்டாகலின் இது தன்கட் தோன்றிய ஆக்கம்பற்றிய வியப்புப் பிறந்ததாயிற்று. "உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி - யிறப்ப நிழற்பயந் தாஅங்கு" என்பது பிறபொருளாக்கம்பற்றிய வியப்பு.

இனி மதிமைசாலாமருட்கையானே சிறுமைப்பொருள் பெருந்தொழில்செய்தலும் பெருமைப்பொருள் சிறுதொழில் செய்தலும் வியப்பாமெனக்கொள்க. "கிண்கிணி களைந்தகா லொண்கழல் கட்டி" என்னும் பாட்டுச் சிறியோர் பெருந்தொழிலைச் செய்தது. "அன்றொருவன்றன் றுண்டகை விட்டென்னைச் - சொல்லுஞ்சொற் கேட்டி சுடரிழாய்" என்பது பெரியோன் சிறுதொழில் கூறலின் வியப்பாயிற்று.

புதுமையை ஆக்கத்துளடக்கி முதுமையென்பது பாடமாகவும் உரைப்ப. அன்னதோர்வழக்கின்மையாலும் புதுமை ஒன்று ஒன்றாய்த் திரியுமெனப்பட்டு அவ்வாக்கத்துள் அடங்காமையானும் அது பொருந்தமையாதென்பது.

இங்ஙனம் இவை நான்கு சூத்திரப்பொருளும் நானான்கு பதி னாறாகியும் முப்பத்திரண்டாகியும் விரியுமாகலின் இவற்றை ஓரின மாக்கி முதற்சூத்திரத்து முன்வைத்தானென்பது. இனிவருஞ் சூத்தி ரநான்கினும் எண்ணப்படும் பொருள் ஒன்று இரண்டாகாமையின் அ வை பதினாறேயாமென்பது. அஃதேயெனின் இத்துணையுங் கூறிவ ந்த முப்பத்திரண்டனையும் இனிக்கூறும் பதினாறனையும் நோக்கி முத ற்சூத்திரத்துட் "பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளுங் கண்ணிய புறனே நானான் கென்ப" என்றானென்னாமோவெனின், எ ன்னுமன்றே, பதினாறுபொருளும் மேற்கூறிய முப்பத்திரண்டுமென் று படாமையினென்பது; என்றார்க்குத் தன்கட் தோன்றுதல் பிறன் கட் தோன்றுதலெனப் பகுத்துப் பொருளுணையாது மேலனவும் இனி வருகின்றனவும் நானான்கேயாகலாற் பண்ணைத்தோன்றிய எண் ணான்குபொருளென்றானாமெனின், அங்ஙனங் கூறின் அவை "கண் ணிய புறனே நானான் கென்ப" என்றும், "நாலிரண் டாகும் பாலு மா ருண்டே" என்றும், மடங்கக்கூறல்வேண்டாவாம், வேண்டவே இச்சூத்திரம் எட்டுவகையாகியே செல்லுமென மறுக்க. அல்லதூஉம் இஃது உலகவழக்காதலிற் பண்ணைத்தோன்றிய பொருள் ஈண்டு ஆ ராயானென்பது. அற்றன்றியும் இவற்றைப் பண்ணைத்தோன்றிய பொருளெனின் ஒன்றொன்றாக்கிக் கூறாது கூத்தன் அரங்கினுள் இ யற்றும் வகையானே சுவையுங் குறிப்புஞ் சத்துவமுமென வேறு வேறுசெய்வான் ஆசிரியனென்பது. (எ)

௨௫௬. அணங்கே விலங்கே கள்வர்த மிறையெனப்
பிணங்கல் சாலா வச்ச நான்கே.

இது முறையானே அச்சமுணர்-ற்று. (இ-ள்.) தெய்வமும் விலங்குங் கள்வருந் தமக்கு இறைவராயினாருமென நான்குபகுதியா ன் அச்சம் பிறக்கும். எ-று. அணங்கென்பன பேயும் பூதமும் பாம்பும் ஈறாகிய பதினெண்கணனும் நிரயப்பாலரும் பிறரும் அணங்குதற்றொ ழிலராகிய சவந்தின் பெண்டிர் முதலாயினாரும் உருமிசைத்தொடக் கத்தனவுமெனப்படும். விலங்கென்பன அரிமாமுதலாகிய அஞ்சு தக்கன. கள்வரென்பார் தீத்தொழில்புரிவார். இறையெனப்படுவார் தந்தையரும் ஆசிரியரும் அரசரும் முதலாயினார். பிணங்கல்சாலா அ ச்சமென்றதனான் முன்னையபோல இவை தன்கட் தோன்றலும் பிறன் கட் தோன்றலுமென்னுந் தடுமாற்றமின்றிப் பிறிதுபொருள்பற்றியே வருமென்பது.

உ-ம், "யானை தாக்கினு மரவுமேற் செலினு - நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினுஞ் - சூர்மகண் மாறா மறப்பூண் வாழ்க்கை" என்பதனுள் அணங்கும் விலங்கும் பொருளாக அச்சம் பிறத்தல் இயல்பென்பது கூறியவாறாயிற்று. "ஒருஉநீ யெங்கூந்தற் கொள்ளல்யா நின்னை - வெரூஉதுங் காணுங் கடை" இது கள்வர் பொருளாக அச்சம்பிறந்தது; என்னை? அவனைக் கள்வாபாற் சார்த்தி உரைத்தமையின். "எடுத்துமே ஞேக்குறின் வாழலே மென்னுங் - கருத்தினுற்கை கூப்பிப் பழகி - யெருத்திறைஞ்சிக் - கால்வண்ண மல்லாற் சடுமான்றேர்க் கோதையை - மேல்வண்ணங் கண்டறியா வேந்து." இது இறைபொருளாக அச்சம் பிறந்தது.

பிணங்காத அச்சமென்றது சாலா அச்சமென்ற மிகையான் இந்நான்குமேயன்றி ஊடன்முதலியனவும் அச்சத்திற்குப் பொருளாமென்று கொள்க. "சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவணி - நுணை கடக்கிற்பா ரியார்" என்பது புலவிப்பொருளாக அச்சம் பிறந்தது. "அணிகிளர் சாந்தி னம்பட் டிமைப்பக் - கொடுங்குழை மகளிரி னொடுங்கிய விருக்கை" எனவும் "அச்சா றாக வுணரிய வருபவன் - பொய்ச்சூ ளஞ்சிப் புலவே றுருவல்" எனவும் வருவனவும் அவை. பிறவும் அன்ன. (அ)

௨௫௭. கல்வி தறுகண் ணிசைமை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமித நான்கே.

இது ஆறும் எண்ணுமுறைமைக்கண் நின்றவீரம் உணர்-ற்று. (இ-ள்.) கல்வியுந் தறுகணமையும் புகழுங் கொடையுமென்னும் நான்கும்பற்றி வீரம்பிறக்கும். எ-று. இச்சூத்திரத்துள் வீரத்தினைப் பெருமிதமென்றெண்ணினான்; என்னை? எல்லாரொடும் ஒப்பநில்லாது பேரெல்லையாகநிற்றல் பெருமிதமெனப்படும் என்றற்கென்பது. கல்வியென்பது தவமுதலாகிய விச்சை. தறுகணென்பது அஞ்சுதக்கன கண்ட இடத்து அஞ்சாமை. இசைமையென்பது இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் பழியொடுவருவன செய்யாமை. கொடையென்பது உயிரும் உடம்பும் உறுப்பும் முதலாகிய எல்லாப்பொருளுங் கொடுத்தல்.

உ-ம். "வல்லார்முற் சொல்வல்ல னென்னைப் பிறர்முன்னர்க் - கல்லாமை காட்டி யவள்" என்பது கல்விபற்றிய பெருமிதம்; என்னையுங் கல்லாமைகாட்டினுளெனத் தன்பெருமிதங் கூறினமையின். "அடன்மாமே லாற்றுவெ னென்னை மடன்மாமேன்-மன்றம் படர்வித் தவள்" என்பது தறுகண். "கழியாக் காதல ராயி

னுஞ் சான்றோர் - பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்" என்பது புகழ். "வையம் - புரவூகரு முள்ளத்தே னென்னை யிரவூக்கு - மின்று விடும்பைசெப் தாள்" என்பது கொடை. "தன்னகம் புக்க குறு நடைப் புறவின் - றபுதிகண் டஞ்சிச் சீனா புக்க - வனாயா வீகை யுரவோன் மருக" என்பதும் அது.

சொல்லப்பட்ட பெருமிதமென்றதனாற் காமம்பற்றியும் பெருமிதம்பிறக்குமென்றுகொள்க. "பல்லிருங் கூந்தன் மகளி - ரொல்லா முயக்கிடைக குழைகவென் முரோ" என்பது காமம்பற்றியபெருமிதம். பிறவும் வருவன உளவேற்கொள்க. இது தன்கட் டோன்றிய பொருள்பற்றிவரும்; என்னை? கல்வியுந தறுகண்மையும் இசைமையும் வேட்கையுங் கொடைத்தொழிலுந் தன்கண்ணவாகலின். (கூ).

௨௫அ. உறுப்பறை குடிகோ ளலைகொலை யென்ற
வெறுப்ப வந்த வெகுளி நான்கே.

இஃது எழாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற வெகுளி உணர்ற்று. (இ - ள்) உறுப்பறையென்பது, கைகுறைத்தலுங் கண்குறைத்தலும் முதலாயின: குடிகோளென்பது, தாரமுஞ் சுற்றமுங் குடிப்பிறப்பும் முதலாயவற்றுக்கட் கேடுசூழ்தல்: அலையென்பது, கோல்கொண்டலைத்தன் முதலாயின : கொலையென்பது, அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல்: இவைநான்கும் பொருளாகவெகுளி பிறக்கும். எ - று. வெறுப்பவென்றதனான் ஊடற்கண்ணுந் தோன்றும் வெகுளிமுதலாயினவுங் கொள்க.

"முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று" என்பது உறுப்பறையான்வந்த வெகுளி. நின்மகன் படையழிந்துமாறினனென்றுபலர்கூற, "மண்டமர்க் குடைந்தன னாயி னுண்ட - வென்முலை யறுத்திடுவன் யானெனச் சினைஇ" என்பது குடிகோள்பற்றிவந்தவெகுளி; என்னை? தன்மகன் மறக்குடிக்குக் கேடுசூழ்ந்தானென்று சினங்கொண்டாளாகலின். "நெருந லெல்லைநீ யெறிந்தோன் றம்பி - யகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்" என்பதும் அது. "வரிவயம் பொருத வயக்களிறு போல - வின்னு மாறாது சினனே" என்பதனுள் அலைபற்றிச் சினம்பிறந்தது ; என்னை? புலியான் அலைக்கப்பட்ட யானை பொருது போர்தும் அவ்வலைப்புண்டலைநினைந்து சினங்கொள்ளாநின்றதென்றமையின். "உறுப்பஞ்சா துடல்சினஞ் செருக்கிச் - சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை" என்பது கொலை பொருளாக வெகுளிச்சுவை பிறந்தவாறு ; என்னை? சிறுசொற்சொல்லுதலென்பது புகழ்கொன்றுரைத்தலாகலின். "செய்தவ றில்வழி யாங்

குச் சினவுவாய்" என்பது ஊடற்கட் டலைமகள் வெகுட்சி கூறியது. பிறவுமன்ன.

இன்னும் அவ்விலேசானே "நெருப்புச்சினந் தணிந்த நிணந்த யங்கு கொழுங்குறை" என்றாற்போலச் சினமில்லதனை உள்ளதுபோலக் கூறுவனவுங் கொள்ளாமோவெனின், உணர்வுடையனவற்றுக் கல்லது சுவைதோன்றாமையின் வெகுளியென்று ஈண்டுக் கூறப்படாவென்பது. இது பிறன்கட் டோன்றிய பொருள்பற்றிவரும். (௧0)

உடுகூ. செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்
றல்ல னீத்த வுவகை நான்கே.

இஃது ஈற்றுக்கண்ணின்ற உவகை உணர் - ற்று. (இ - ள்.) செல்வமென்பது, நுகர்ச்சி: புலனென்பது, கல்விப்பயனாகிய அறிவுடைமை: புணர்வென்பது, காமப்புணர்ச்சி முதலாயின: விளையாட்டென்பது, யாறுங் குளனுங் காவுமாடிப் பதியிகந்துவருதன்முதலாயின. இவைநான்கும் பொருளாக உவகைச்சுவை தோன்றும். எ-று. உவகையெனினும் மகிழ்ச்சியெனினும் ஒக்கும்.

"உரனுடை யுளத்தைச் செய்பொருண் முற்றி - வளமையனாகும் பொருளிது வென்பாய்" என்புழி வளமையனாகும் மனமகிழ்ச்சி இதுவெனக்கூறினமையின் இது செல்வம்பொருளாகப்பிறந்த உவகையாம். "நன்கலம் பெற்ற வுவகையர்" என்பதும் அது. "பெண்டிர் நலம்வெளவித் தன்சாரற் றாதுண்ணும் - வண்டிற் றுறப்பான் மலை" என்பது அறிவுபொருளாக உவகைபிறந்தது; என்னை, முகைப்பதம்பார்க்கும் வண்டுபோலத் தலைவியமை நகைப்பதம்பார்க்கும் அறிவுடைமை காமத்திற்கு ஏதுவாமாகலின். "இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ - நகலி னினிதாயிற் காண்பாம்" என்பதும் அது. "இலமல ரன்ன வஞ்செந் நாவின்" என்னும் மணிமிடைபவளத்துட் "தொடிக்கண் வடுக்கொள முயங்கினள் - வடிப்புறு நரம்பிற் றிவ்விய மொழிந்தே" என்பது புணர்ச்சிபற்றிய உவகை; என்னை? அவள் இவ்வாறு முயங்கினமையான் "உவவினி வாழியென்னெஞ்சே" என்றமையின். "துயிலின்றி யாணீந்தத் தொழுனையம் புனலாடி - மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்மன்னோ" என்புழி ஆறாடி விளையாடி மயிலியலார் மருவுண்டு மறைந்தமைகுவான்மன் என்றமையின் இது விளையாட்டுப்பொருளாக உவகைபிறந்தது.

அல்லல் நீத்தவுவகையென்றதனாற் பிறர்துன்பங்கண்டுவரும் உவகையும் உவகையெனப்படாதென்பது. இதுவுந் தன்கட் டோன்

றிய பொருள்பற்றிவருமென்றார்க்குப் பிறன்கட் டோன்றிய இன்பம் பற்றியும் உவகை பிறக்குமன்றே, அதுவும் அல்லல் நீத்தவுவகையெ ன்றதனான் உவகையெனப்படுமெனமறுக்க. இனித் தன்கட் டோ ன்றிய பெருமிதமும் உவகையும் முற்கூறாது பிறன்கட் டோன்றிய அச்சம் முற்கூறி இதனை ஈற்றுக்கண்வைத்தமையான் எடுத்தோதிய நான்கும்போலாது இது பிறன்கட் டோன்றிய இன்பம்பொருளாக வருமென்பதுகொள்க. (௧௧)

௨௬௦. ஆங்கவை யொருபா லாக வொருபா
லுடைமை யின்புற னடுவு நிலை யருள
றன்மை யடக்கம் வரைத லன்பெனாஅக்
கைம்மிக னலிதல் சூழ்ச்சி வாழ்த்த
னாணு துஞ்ச லரற்றுக் கனவெனாஅ
முனித னினைதல் வெரூஉதன் மடிமை
கருத லாராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅக்
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்த லைய மிகைநடுக் கெனாஅ
விவையு முளவே யவையலங் கடையே.

இச்சூத்திரம் மேற்கூறிவந்த எண்ணான்குமன்றி இவைமுப் பத்திரண்டும் அவைபோல மெய்ப்பாடெனப்படுமென்பதுணர்-ற்று.

(இ-ள்.) ஆங்கவை ஒருபாலாக = எள்ளன்முதலாக விளையாட்டிறு தியாகச் சொல்லப்பட்ட முப்பத்திரண்டும் ஒருகூறாக: ஒருபாலென் பது இனிச்சொல்லுகின்ற ஒருகூறு, பின்னர் அவற்றையெல்லாம் எ ண்ணி "இவையுமுளவே அவையலங்கடையே" யென்றார். ஈண்டெண் ணப்பட்டவையே ஆண்டடங்குவனவும் உள. அப்பொருண்மையவ ல்லாதவிடத்து இவை முப்பத்திரண்டும் ஈண்டு மெய்ப்பாடெனப் படும். எ-று.

இவை முப்பத்திரண்டெனத் தொகை கூறியதிலனாலெனின், ஆங்கவை ஒருபாலாக ஒருபாலென்றானாகலின் இருகூறெனப்படு வன தம்முளொத்த எண்ணாதல்வேண்டுமாகலின் அவைமுப்பத்தி ரண்டெனவே இவையும் முப்பத்திரண்டென்பது எண்ணி உணர வைத்தானென்பது.

உடைமையென்பது, செல்வம்; செல்வநுகர்ச்சியாயின் உவ கைப்பொருளாம், இஃது அன்னதன்றி நுகராதே அச்செல்வந்

தன்னை நினைந்தின்புறுதற்கு ஏதுவாகிய பற்றுள்ளம்; அஃதாவது நிதிமேனின்ற மரம்போலச் செல்வமுடைமையான்வரும் மெய்வேறுபாடு. இன்புறலென்பது, அவ்வுடைமையை நினையுந்தோறும் இடையிட்டுப்பிறக்கும் மனமகிழ்ச்சி. நடுவுநிலையென்பது, ஒன்பது சுவையுள் ஒன்றென நாடகநிலையுள் வேண்டப்படுஞ் சமநிலை; அஃதாவது "செஞ்சாந் தெறியினுஞ் செத்தினும் போழினு நெஞ்சோர்ந்தோடா நிலைமை." அது காமவெகுளிமயக்கநீங்கினோர்கண்ணே நிகழ்வது; இது சிறுவரவிற்றாகலான் அவற்றொடு கூறினான். அருளென்பது, மக்கண்முதலிய சுற்றத்தாரையருளுதல்; அது "அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" என்றாற்போல வருவது. ஆண்டைக் கருணையினை அழுகையென்றமையின் இஃது அதனோடடங்காது. தன்மையென்பது, சாதித்தன்மை; அவையாவன பார்ப்பாராயிற் குந்தி மிதித்துக் குறுநடைக்கொண்டுவந்து தோன்றலும், அரசராயின் எடுத்தகழுத்தொடும் அடுத்தமார்பொடும் நடந்துசேறலும், இடையராயிற கோற்கையுங் கொடுமடியுடையும் விளித்தவீளையும் வெண்பல்லுமாகித் தோன்றலுமென்று இன்னோரன்ன வழக்குநோக்கிக்கொள்க. அடக்கமென்பது, உயர்ந்தோர்முன் அடங்கியொழுகும் ஒழுக்கம்; அவை பணிந்தமொழியுந தணிந்தநடையுந் தானைமடக்கலும் வாய்புதைத்தலும் முதலாயின. வரைதலென்பது, காப்பனகாத்துக் கடிவனகடிந்தொழுகும் ஒழுக்கம்; அவை பார்ப்பாராயின் முத்தீவேட்டலும் புலவுங் கள்ளும் முதலாயின கடிதலுமென்று இன்னோரன்னகொள்க; வரைதலென்பது தொழிலாதலான் இது தன்மையெனப்படாது. அன்பென்பது, அருட்குமுதலாகி மனத்தினிகழுநேயம்; அஃதுடையார்க்குப்பிறர்கட் துன்பங்கண்ட வழிக் கண்ணீர் விழுமாகலின் அவ்வருளானே அன்புடைமை விளங்குமென்பது. இவையெல்லாந் தத்தமனத்தினிகழ்ச்சியை வெளிப்படுப்பனவாகலின் மெய்ப்பாடெனப்பட்டன. இனி வருகின்றவற்றிற்கும் இஃதொக்கும். கைம்மிகலென்பது, ஒழுக்கக்கேடு; அது சாதித்தருமத்தினை நீங்கினமை தன்னுள்ள நிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்றால் ஒழுகுதல். நலிதலென்பது, பிறர்க்கின்னாசெய்து நெருங்குதல்; அது தீவினைமாக்கள்கண் நிகழும். அவரைக்கண்டு அச்சம் எழுந்ததாயின் அஃது அச்சத்தினுள் அடங்குமாகலின் அஃதன்று இஃதென்பது. சூழ்ச்சியென்பது சுழற்சி, சூழ்வருவானைச் சுழல்வருமென்பவாகலின்; அது வெளிப்படுவதோர்குறிப்பின் அவன்கட் தோன்றின் அதுவும் மெய்ப்பாடு; அஃதாவது மனத்தடுமாற்றம். வாழ்த்தலென்பது, பிறரால் வாழ்த்தப்படுதலின் பிறவினையன்றோவெனின், ஒருவனை நீடுவாழ்க என்றுவாழ்த்தல் பிறவினையாயினும் அவன் வாழ்விக்கப்படுதலின் அவன் அவ்

வாறுகூறல் அமையுமென்பது. நாணுதலென்பது, நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்பட நிகழும் நிகழ்ச்சி. துஞ்சலென்பது, உறக்கம்; அது நடந்துவருகின்றுன்கண்ணும் விளங்கித்தோன்றுதலின் அதுவும் மெய்ப்பாடெனப்பட்டது. அரற்றென்பது, அழுகையன்றிப் பலவுஞ் சொல்லித் தன்குறைகூறுதல்; அது காடுகெழுசெல்விக்குப் பேய்கூறும் அல்லல்போல வழக்கினுள்ளார் கூறுவன. கனவென்பது, வாய்வெருவுதல்; அதனானும் அவனுள்ளத்துக்கண் நிகழ்கின்றதொன்று உண்டென்றறியப்படும். முனிதலென்பது, வெறுத்தல்; அஃது அருளுஞ்சினமுமின்றி இடைநிகர்த்தாதல்; வாழ்க்கை முனிந்தானெனவும் "முறையுண் முனியுமவன் செல்லு மூரே" எனவுஞ் சொல்லுபவாகலின். நினைதலென்பது, விருப்புற்று நினைத்தல்; நின்னை மிகவும் நினைத்தேனென்பது வழக்காதலின்; அந்நினைவுள்ளம் பிறர்க்குப் புலனாதலின் மெய்ப்பாடாயிற்று. வெரூஉதலென்பது, விலங்கும்புள்ளும்போல வெருவிநிகழும் உள்ளநிகழ்ச்சி; அது அஞ்சவேண்டாதன கண்டவழியுங் கடிதிற்பிறந்து மாறுவதோர் வெறி. மடிமையென்பது, சோம்பு. கருதலென்பது, மறந்ததனை நினைத்தல். ஆராய்ச்சியென்பது, ஒருபொருளை நன்றுதீதென்றுராய்தல். விரைவென்பது, இயற்கைவகையானன்றி ஒருபொருட்கண் விரைவுதொழில்பட உள்ளநிகழுங்கருத்து, உயிர்ப்பென்பது, வேண்டிய பொருளைப் பெறாதவழிக் கையறவெய்தியகருத்து; அது நெட்டுயிர்ப்பிற்கு உமுதலாகலின் அதனையும் உயிர்ப்பென்றுரொன்பது. கையாறென்பது, அவ்வுயிர்ப்புமின்றி வினையொழிந்தயர்தல். இடுக்கணென்பது, மலர்ந்தநோக்கமின்றி மையனோக்கம்படவரும் இரக்கம். பொச்சாப்பென்பது, அற்றப்படுதல்; அஃதாவது பாதுகாத்துச்செல்கின்ற பொருட்கண் யாதானும் ஓர்நிகழ்ச்சியான் இடையறவுபடுதல். பொறாமையென்பது, அழுக்காறு; அஃதாவது பிறர்செல்வங்கண்டவழி வேண்டாதிருத்தல். வியர்த்தலென்பது, பொறாமைமுதலாயினபற்றி மனம்புழுங்குதல். ஐயமென்பது, ஒருபொருண்மேல் இருபொருட்டன்மைகருதி வரும் மனத்தடுமாற்றம். மிகையென்பது, கல்லாமையுஞ் செல்வமும் இளமையும் முதலாக வரும் உள்ளமிகுதி. நடுக்கமென்பது அன்பும் அச்சமும் முதலாக உடம்பிற்புலப்படுமாற்றுன் உள்ளநடுங்குதல்; புதல்வர்க்குப் பிணி இல்வழியும் எவனாங்கொலென்று நடுங்குதல் அன்பான் நடுங்குதலாம். அச்சமென்னுஞ்சுவை பிறந்ததன்பின்னர் அதன்வழித்தோன்றியநடுக்கம் அச்சத்தாற் தோன்றிய நடுக்கமாமென்பது.

இவை முப்பத்திரண்டும் மேற்கூறிய முப்பத்திரண்டும்போல அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகி நிகழும் மெய்ப்பாடெனக்கொள்க. இவையெல்லாம் உலகவழக்சாகலான் இவ்வழக்கே பற்றிநாடகவழக்குள்ளுங் கடியப்படா என்றவாறு. மற்றிவற்றை எண்ணிய மாத்திரையல்லது இலக்கணங் கூறுகின்றிலனாலெனின், சொல்லின் முடியும் இலக்கணத்தவாகலின் சொல்லானாயினனென்பது. உதாரணம் இக்கூறியவாற்றான் வழக்குநோக்கியுஞ் செய்யுணோக்கியுங் காணப்படும். (கஉ)

உசுக. புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்த
நகுநய மறைத்தல் சிதைவுபிறர்க் கின்மையொடு
தகுமுறை நான்கே யொன்றெண மொழிப.

இதன்மேலெல்லாம் அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாகிவரும் மெய்ப்பாடுகூறினான். இனி அகத்திணையுட் பெரும்பான்மையவாகிவரும் மெய்ப்பாடுகூறுவான் தொடங்கி, அவற்றுள்ளுங் களவிற்குச் சிறந்துவரும் மெய்ப்பாடு கூறுவான், ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழி அவ்வெதிர்ப்பாடுதொடங்கிப் புணர்ச்சியளவும் மூன்றுபகுதியவாம் மெய்ப்பாடெனவும், புணர்ச்சிப்பின்னர்க் களவுவெளிப்படுந்துணையும் மூன்றுபகுதியவாம் அவையெனவும், அவையாறும் ஒரோவொன்று நன்னான்கு பகுதியான் ஒன்றன்பின்னொன்று பிறக்குமெனவுங் கூறுகின்றான். அவற்றுண் முதலனமூன்றினும் முன்னர்நின்ற ஒருகூற்றினை இந்நாற்பகுதித்தென்கின்றது இச்சூத்திரமென உணர்க. ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழிக் கரந்தொழுகும் உள்ள நிகழ்ச்சி பெண்பாலதாகலாற் பெரும்பான்மையும் அவள்கண்ணே யாண்டுக் கூறுகின்ற மெய்ப்பாடுசிறந்ததென்பது. (இ - ள்.) புகுமுகம்புரிதல் = ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழித் தன்னை அவன் நோக்குதற்கண் விரும்பும் உள்ளநிகழ்ச்சியும் : புகுதலென்பது தலைமகன் நோக்கிய நோக்கெதிர் தான்சென்று புகுதல் : முகமென்பது அங்ஙனந் தான்புகுதற்கிடமாகிய நோக்கு. "நோக்கெதிர் நோக்குத லிலைமுக நோக்குதல்" என்பவாகலின் இந்நோக்கினை முகமென்றானென்பது. புரிதலென்பது மேவுதல்; அஃதாவது தலைமகன்காண்டலைத் தலைமகள்வேட்டல் என்பது. மற்றிது தலைமகற்கு உரித்தன்றோவெனின் அவன் தான்காண்பினல்லது தற்காண்டலை நயவான் அது தலைமையன்றாகலினென்பது. அது "யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற் - றானோக்கி மெல்ல நகும்." எனவரும்.

பொறிநுதல்வியர்த்தல்=தலைமகன் தன்னைநோக்கியவழி உட்கும் நாணும் ஒருங்குவந்தடைதலின் வியர்ப்பொறித்த நுதலாளாதலும்: அது "பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவியர் - வுறுவளி யாற்றச் சிறுவரை திற" எனவரும். இம்மெய்ப்பாடுந் தலைமகற்குரித்தன்று; உட்கும் நாணும் அவற்கின்மையின்,

நகுநயமறைத்தல்=அதன் பின்னர்த் தலைமகன்கட் தோன்றியகுறிப்புக்களான் அதற்கேதுவாகிய நயனுடைமை மனத்திற் பிறந்தவழியும் நகாதுநிற்றலும்: அது "முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை - நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு." எனவரும். இது மடமையாற் தோன்றிய நகையாகலான் இது மறைத்தலுந் தலைமகற்குரித்தன்று; எனவே அவற்காயின் நகைதோன்றப் பெறுமென்பது. மற்றுச் "சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டின்" என்னும்பாட்டினுள் "நும்மொடு நக்க வால்வெள் ளெயிறு" என நகைகூறிற்றாலெனின், அங்ஙனம் மறைக்கப்பட்டநகை தலைமகன் அறிந்து அது மெய்ப்பாடாமாகலான் அவ்வாறுகூறினானென்பது.

சிதைவுபிறர்க்கின்மை=அங்ஙனம் நகுநயமறைத்த வழியும் உள்ளஞ்சிதைந்து நிறையழியுமாகலின் அச்சிதைவு புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினைநிறுத்தலும்: அது "அகமலி யுவகைய ளாகி - முகனிகுத் தொய்யென விறைஞ்சி யோளே" எனத் தலைமகன் அறிய மெய்ப்பட்டதென்பது. இதுவுந் தலைமகற்குரித்தன்று, தன்சிதைவுணர்த்தினல்லது மறைக்குந்துணைச் சிதைவின்மையின்; என்னை? "பெருமையு முரனு மாடூஉ மேன" என்பதாகலின்.

தகுமுறைநான்கு=இங்ஙனம் ஒன்றன்பின் ஒன்று தோன்றுதற்குத் தகுமெனப்பட்டமுறையானே அந்நான்கும்: ஒன்றென மொழிப=களவிற்கு முதற்கூறென்ப. (எ - று. இவைகளவிற் சிறந்தனவாவதல்லது கற்பினுள் வருவனவல்ல என்றுணர்க. சிதைவுபிறர்க்கின்மையெனவே சிதைவு தலைமகனுணருமென்றானும்.

இனி இவைநான்கும் முறையானே ஒருங்குவந்த செய்யுள்வருமாறு:—"யான்றற் காண்டொறுந் தான்பெரிது மகிழாள் - வாணுதல் வியர்ப்ப நாணின ளிறைஞ்சி - மிகைவெளிப் படாது நகைமுகங் கரந்த - நன்னுத லரிவை தன்மனஞ் சிதைந்ததை - நீயறிந் திலையா னெஞ்சே - யானறிந் தேனது வாயா குதலே." இது இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கிய தலைமகன் தன்னெஞ்சிற்குச்சொல்லியது. இதனுட் "தான்பெரிது மகிழாள்" என்புழிச் சிறிதுமகிழுமென்றமை

யான் இது புகுமுகம்புரிதலாயிற்று. "வாணுதல் வியர்ப்ப நாணின ளிறைஞ்சி" என்பது பொறிநுதல் வியர்த்தல். "நகைமுகங் கரந்த" என்பது நகுநயமறைத்தல். "மிகைவெளிப்படாது" என்புழி மேல் "அன்ன பிறவு மவற்றொடு சிவணி" என்னும் புறனடையாற்றழீஇயி ன நகைமொக்குளும் பெற்றாம். "தன்மனஞ் சிதைந்ததை நீயறிந் திலையால்" என்பது சிதைவுபிறர்க்கின்மை. பிறவும் அன்ன. (கங)

உசுஉ. கூழை விரித்தல் காதொன் றுகளைத
லூழணி தைவர லுடைபெயர்த் துடுத்தலோ
டூழி நான்கே யிரண்டெென மொழிப.

இஃது இரண்டாம் மெய்ப்பாடுணர்-ற்று. என்னை? உள்ளத்துச் சிதைவறிந்தவழியன்றித தலைமகளினைத் தலைமகன்சென்று கையுங்காலும் மெய்யுறத்தீண்டிக் கண்ணுறுதலின், அங்ஙனஞ் சிதைவுபிறந்தது எழுவாயாகப், பின்னர்த் தலைமகன் மெய்யுற்றவழிநிகழ்ந்த உள்ளநிகழ்ச்சியை இரண்டாவதென்றானென்பது. (இ-ள்.) கூழை விரித்தன் முதலாகிய நான்கும் முறையானே இரண்டாவதெனப்படும். எ-று. இவற்றுககுத் தலைமகன் ஏதுவாவதல்லது இவைதாம் அவட்கு நிகழாவென்பது.

கூழைவிரித்தலென்பது, மெய்யுமெய்யுந் தீண்டியவழி மெல்லியன்மகளிர்க்குவரும் வேறுபாடு நான்கனுண் முதற்கண்ணதெனப்படும்; என்னை? தன்னுள்ளத்தில் நிகழ்ந்த வேறுபாட்டினை அக்காலத்துத் தலைமகள் நிறையுடையளாகலாற் கரந்தொழுகுதற்பாலளல்லளே, அங்ஙனங் கரக்குங்காற் தன்வயத்ததாகிய உடம்புபற்றிவரும் வேறுபாட்டினைத் தாங்கும், அங்ஙனந் தாங்குங்கால் உடம்பொடு தொடர்புடையவாகி வேறுபட்ட தலைமயிரினது முடி உள்ளநெகிழ்ச்சியானே தன்வயத்ததன்றி ஞெகிழும்; ஆகலின் இது முற்கூறப்பட்டது. பிறசுவைபற்றியும் உலகினுண் மயிர்க்கு வந்த வேறுபாட்டினைக் கூறுப; என்னை? ஒன்றன்மதுரச் சுவைக்கு அதிசயங் கூறுவார் மயிரினைச் செவ்வனின்றனவென்பதுபோலக் கொள்க. அக்கூழை விரித்தற்கு ஏதுவாயினுள் இவளாகலின் அதனைச் சினைவினையானன்றி முதல்வினையாற் கூறினானென்பது.

காதொன்று களைதலென்பது, உறுப்பிடைப் பூட்டுறப்புனையாது பெய்துவைத்தனவாகலாற் றோடு முதலாயின எளிதின் வீழ்வனவாயின, மற்றவை வீழ்தற்கு ஏதுவாய நெகிழ்ச்சி நிரம்பத்தோன்றாது இடைநிகர்த்ததாகலின் ஒன்றுநிற்ப ஒன்று வீழ்தலென்றானென்பது. இது கூழைபோலாது ஊறுணர்வுடைய உறுப்பாகலிற் காதின் வேறு

பாட்டினைக் கூழைவேறுபாட்டின்பின் வைத்தான்; என்னை? கூழையிற் காதுதனக்கு உறவுடைமையின்.

ஊழணிதைவரலென்பது, அக்கூழையுந்தோடும்போலப் பெய்யப்படுமுறைமையவாகிய வளைகளை முன்கைமேல் இறுகச்செறித்தலும் விரற்செறியினைத் திருத்தலும் முதலாயின. இவை தோடுபோலச் செறிவில்லன அன்மையின் அவற்றுப்பின் வைத்தான்.

உடைபெயர்த்துடுத்தலென்பது, உடுத்த உடையினைப் பலகாலும் அழித்துடுத்தல்; அது சுழற்றுடிபோலாது செறிவுடைமையின் அவ்வுடைநெகிழ்ச்சியைத் தொடிநெகிழ்ச்சிக்குப்பின் வைத்தானென்பது. மற்றுத், "தொடிநெகிழ்ந் தனவே தோள்சா யினவே" எனப் பிரிவின்கண்வந்த வேறுபாட்டினை ஈண்டுக் கூறுரோவெனின், அவை இன்னதன்பின்னர் இன்னதுதோன்றுமென்னும் முறைமைய அல்லவாகலின் ஈண்டுக்கூறுர். அவை "வினையுயிர் மெலிவிடத் தின்மையு முரித்து" என்புழிச் சொல்லப்படுமென்பது. இவற்றுக்குச் செய்யுள், "விண்ணுயர் விறல்வரைக் கவாஅ னொருவன் - கண்ணி னோக்கிய தல்லது தண்ணென - வுரைத்தலு மில்லை மாதோ வவனே - வரைப் பாற் கடவுளு மல்ல னதற்கே - யோதி முந்துறக் காதொன்று ணெகிழ - நிழலவிர் மணிப்பூ ணெஞ்சொடு கழலத் - துகிலும் பன்முறை நெடிதுநிமிர்ந் தனவே - நீயறி குவையதன் முதலே - யாதோ தோழியது கூறுமா றெமக்கே." என்றது, தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநின்றது. இதனுள் "ஓதி முந்துற ஞெகிழ" என்பது கூழைவிரித்தல்; "காதொன்றுஞெகிழ" என்பது காதொன்று களைதல்; "நிழலவிர்மணிப்பூ ணெஞ்சொடுகழல" என்பது ஊழணிதைவரல்; "நெடிது நிமிர்ந்தன துகிலும் பன்முறை" என்பது உடைபெயர்த்துடுத்தலாயிற்று. இவை பாடாண்கைக்கிளையுள் இக்காலத்துப் பயின்றன. பிறவும் அன்ன. (௧௫)

௨௬௩. அல்குறைவர லணிந்தவை திருத்த
வில்வலி யுறுத்த விருகையு மெடுத்தலொடு
சொல்லிய நான்கே மூன்றென மொழிப.

இது முறையானே மூன்றுவது உணர் - ற்று. (இ-ள்.) அல்குறைவரல் முதலாகக் கூறப்பட்டன நான்கும் மூன்றுவதெனப்படும். எ-று. மேலது உடைபெயர்த்துடுத்தலாகலான் அதன்வழித்தோன்றுவது உடை பெரிதும் ஞெகிழ்ந்துகாட்டுதலாயிற்று, அதனைப் பாதுகாத்தலான் அவ்வற்றம் மறைக்குங் கையினை அல்குறைவரலென்றொன்பது.

அணிந்தவைதிருத்தலென்பது, கடிசூத்திரமுதலாயின திருத்தல்; அஃது உடைநெகிழ்ச்சிபோலப் போற்றிச்செய்வதாகலான் அதனை அல்குறைவரலின்பின்வைத்தான்.

இல்வலியுறுத்தலென்பது, புணர்ச்சியை வேண்டாதார்போல்வதோர் வன்மைபடைத்துக்கொண்டு செய்தல்; என்னை? இல்லாத வலியை மிகுத்தலென்றமையின் அப்பொருட்டாயிற்று. அல்குறைவரலும் அணிந்தவைதிருத்தலுந் தன்வலியின்மைகாட்டவும் வலிதோற்றிக்கொண்டுசெய்வதாகலின் அதனை இல்வலியுறுத்தலென்று மூன்றுமுறைமைக்கண் வைத்தானென்பது. இனி இற்பிறத்தலான் அதன்வலிதோன்றுதலெனவுஞ் சொல்லுப; அஃதாவது முற்பிறந்தவற்றிற்கு முன்னே கூறினென்பது.

இருகையுமெடுத்தலென்பது, அங்ஙனம் படைத்துக்கொண்ட வலியானுந் தடுக்கப்படாது நிறையழிதலிற கைகள் தாமே முயங்கல் விருப்பத்தான் எழுவனபோல்வதோர் குறிப்பு. இந்நான்கும் மேலனவுமெனப் பன்னிரண்டு பகுதியும் புணர்ச்சிக்குமுன் நிகழ்வனவாம். சொல்லியவென்றதனான் இவையெல்லாஞ் சொல்லப்படுவதல்லது ஈண்டுச் சொல் நிகழ்தல் வேண்டிலவென்பது. எண்ணுநிலைவகையாற் றொகைபெற்ற நான்கென்னும் எழுவாய்க்கு மூன்றென்பது பெயர்ப்பயனிலையாய் வந்தது. இவைநான்குந் தலைமகற்குரியதல்லதான் அவற்றுக்கு ஏதுவாவதல்லதென உணர்க. இவற்றுக்குச் செய்யுள், "ஒதியு நுதலு நீவி யாடன் - மாதர் மென்முலை வருடலிற் கலங்கி - யுள்ளத் துருநள் போல வல்குலின் - நெகிழ்நூற் கலிங்கமொடு புகுமிட னறியாது - மெலிந்தில ளாகி வலிந்துபொய்த் தொடுங்கவும் - யாமெடுத தணைத்தொறுந் தாமியைந் தெழுதலி - னிம்மை யுலகத் தன்றியு நம்மை - நீளரி நெடுங்கட் பேதையொடு - கேளறிந் தனகொலிவள் வேய்மென் றோளே." இஃது இயற்கைப்புணர்ச்சிக்கட் தலைவன் தன்னிலையுரைத்தது. இதனுள் உடம்பும் உள்ளத்துருவன போன்றனளென்பது அல்குறைவரல்; என்னை? அவ்வேறுபாட்டானே அற்றப்படுதலின். "அல்குலின் நெகிழ்நூற் கலிங்கம்" என்பது அணிந்தவைதிருத்தல்; அல்குலின்யாத்த நூலிற்கு நெகிழ்ச்சிகூறினமையின். "மெலிந்திலளாகி வலிந்துபொய்த்தொடுங்கவும்" என்பது இல்வலியுறுத்தல்; "யாமெடுத்தணைத்தொறுந் தாமியைந்தெழுதல்" என்பது இருகையெடுத்தல்; அங்ஙனம் ஒடுங்கியவழியும் உயிர்ப்பினல்லள்போலத் தோள்களைத் தன்வயத்தவாயின என்றமையின். இம்மையுலகத்தன்றியு நம்மைக்கேளறிந்தன" என்றமையின் இரு

வர் அன்பும் எழுமையுந் தொடர்ந்த உழுவலன்பெனச் சொல்லித் தன்னிலையுரைத்ததாம். பிறவும் அன்ன. (௩௫)

௨௬௪. பாராட் டெடுத்தன் மடந்தப வுரைத்த
ஈரமில் கூற்ற மேற்றலர் நாணல்
கொடுப்பவை கோட லுளப்படத் தொகைஇ
யெடுத்த நான்கே நான்கென மொழிப.

இது நான்காம்பகுதி கூறுகின்றது. (இ-ள்.) பாராட்டெடுத்தல் = புணர்ச்சிநிகழ்ந்தபின்னர்த் தலைமகனை இயற்பட நினையுங் குறிப்பும்: இது பாராட்டென்னாது எடுத்தலென்றதனால் அதனை உள்ளமெடுத்தன் மேறகொள்க. இது தலைமகறரும் ஒக்கும்.

மடந்தபவுரைத்தல் = விளையாடும்பருவத்து நிகழ்ந்த அறிமட நீங்கக் காமப்பொருட்கண்ணே சிறிதறிவு தோன்றுதலும்: உரைத்தலென்றதனான் அக்காலத்துப் பாங்கிகருச் சிலகூற்றுமொழி கூறவும்பெறுமென்பதுகொள்க. அவை மேலேயோத்துக்களுட் கூறப்பட்டன. மடந்தபவுரைத்தற்கு ஏதுவாகிய கருத்து ஈண்டு மெய்ப்பாடெனப்படும்.

ஈரமில்கூற்றமேற்றலர்நாணல் = அங்ஙனம் அறிமடங்கெடச் சொற்பிறந்தவழி இன்றளவுந் தமராற் கூறப்படாத கடுஞ்சொல் உளவாமன்றே, அவற்றை முனியாது ஏற்றுக்கொண்டு புறத்தார்க்கு இது புலனாங்கொலென்று நாணுதலும்:

கொடுப்பவைகோடல் = தலைமகனாற் கொடுக்கப்பட்ட தழையுங் கோதையுந் தாருங் கண்ணியுந் தோண்மாலையுமுதலாயினகொண்டு கையுறைபாராட்டுதலும்: உளப்படத்தொகைஇ எடுத்த நான்கே நான்கென மொழிப=கொடுப்பவைகோடலகப்படத் தொகுத்தோதிய நான்கும் நான்காவது. எ-று. எடுத்தவென்றதனாற் கொடுப்பவைகொள்ளாது மறுத்தன்முதலியனவுங் கொள்க.

புணர்ச்சிப்பின்னரல்லது பாராட்டுள்ளம் பிறவாமையானும் அதன்பின்னரல்லது பிறரொடு கூற்றுநிகழாமையானும் அக்கூற்றுக் கேட்டல்லது தமரான் ஈரமில்கூற்றங் கோடலின்மையானும் அவையெல்லாம் முடிந்தவழித் தலைவன்மேற் சென்ற உள்ளத்தாற் கொடுப்பவைகோடற் குறிப்பினளாமாகலானும் அம்முறையான் வைத்தானென்பது. இவற்றுக்குச்செய்யுள், "ஒருநாள் வந்து பலநாள் வருத்து - கின்னே போலுநின் றழையே யென்வயி - னிற்பா ராட்டியுஞ்

சொற்கொள வின்றியும் - யாயெதிர் கழறலிற் போலா நாணியு - மய ல்கூர் மாதர்க்குத் துயர்மருந் தாயினு - நோய்செய் தன்றாற் றானே - நீதொடக் கருதலி ஞேரிடத் தானே." இது கையுறைமறுத்தது. இதனுள் "நிற்பாராட்டி" என்பது பாராட்டெடுத்தல்; "சொற்கொ ளலின்றி" என்பது மடந்தபவுரைத்தல்; என்னை? கொளுத்தக்கொ ள்ளாதுவிடின் அது மடனாகாமையின். "யாயெதிர்கழறலிற் போலா நாணி" என்பது ஈரமில்கூற்றமேற்றலர்நாணல். "துயர்மருந்தாயினு ம்" என்பது கொடுப்பவைகோடல். இத்தழை நின்கைப்பட்டவழிக் கரிந்துகாட்டி நின்மெய்வெப்பங்கூறுதலின் இதனை அவள் காணின் ஆற்றாளாமெனப் பின்னொருகாலத்து மறுத்தாளென்பது. (கசு)

உகரு. தெரிந்துடம் படுத றிளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி யுவத்தலொடு
பொருந்திய நான்கே யைந்தென மொழிப.

இஃது ஐந்தாங்காலத்து மெய்ப்பாடுணர்த்துகின்றது. (இ-ள்.) மேற்கூறிய கொடுப்பவை கோடல் நிகழ்ந்தவழி அவ்வொழுகலாறு புறத்தார்க்கெல்லாம் ஐயமாகலின் அதன்வழித்தோன்றுவது தெரி ந்துடம்படுதலென்றானென்பது. தெரிந்துடம்படுதல் = தலைமகனைத் தலைமகள் இவ்வொழுகலாறு நிகழ்ந்தவாற்றைப் பட்டாங்குணராதார் தலைமைசெய்தனளிவளெனவுந் தகாத ஒழுக்கினளிவளெனவும் பல் லாற்றானும் இவள் கண்ணே ஏதமிட்டுத் துணிந்துந் துணியாதும் உ ரைப்பாராகலான், அதற்குநாணி, இனி யாதுகொல்லோ செயற்பால தென்று ஆராய்ந்து, இவ்வொழுகலாற்றினை அறிவிப்பேங்கொல் அறி வியேங்கொலெனத் தடுமாறிப், பின்னொருவகையான் ஆராய்ந்து, முழு வதூஉஞ்சொல்லாது குலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பெண்டன்மைக் கும் ஏற்றவகையான் வேண்டுவனதெரிந்துகொண்டு, இன்னவாறு பட் டதென்று தோழிக்கு உடம்படுதலுந் தோழியாற் செவிலிக்கு உடம்ப டுதலுமென இன்னோரன்ன குறிப்பினைத் தெரிந்து உடன்படுதலும்:

திளைப்புவினைமறுத்தல் = அங்ஙனந் தமர்க்குத் தானுடம் பட்டதன் பின்னர்த் தலைமகனோடு பகலுமிரவும் பண்டு திளைத்தவாறு திளைத்தலை அச்சமு நாணு மடனுங் காரணமாக மறுத்தலும்: உடம் பாட்டின் பின்னர் மறுக்குமாதலின் அதனைத் திளைப்புவினைமறுத்த லென்று இரண்டாவது வைத்தானென்பது.

கரந்திடத்தொழிதல் = அக்காலத்து இற்செறிக்கப்படுதலாற் றான் அவனை மறுத்த ஏதத்திற்கு நாணியும் அஞ்சியும் அவற்கு

வெளிப்பட்டாதொழுகுதலை உடையளாதலும் : தன்னிடத்தேதங்குதலை இடத்தொழிதலென்றான்.

கண்டவழியுவத்தல் = அங்ஙனங் கரந்தொழுகுங்காலத்து அவனை ஒருஞான்று கண்டவழிக் கழியுவகை மீதூர்தலும் : இது தலைமகற்கும் உரித்து. பொருந்திய நான்கே ஐந்தென மொழிப = இவை நான்கும் ஐந்தாங்கூறெனப்படும். எ-று. பொருந்திய நான்கென்றது இவை இடையறவின்றி ஒருங்கு தொடர்தலுமுடைய என்பது. இதனானே இவை நன்னான்கினோடு வருகின்றதற்குச் சிறிது இடையறவும்படுமென்பதுகொள்க.

புகுமுகம்புரிதன் முதலாயின நான்குந் தலைமகளனவேயாகி ஓரினத்தவாயின. அவற்றுப்பின்னர்த் தலைமகன் அவளைப் பொருந்தியவழிக் கூழைவிரித்தன் முதலாயின நான்கும் நிகழ்ந்தமையின் அவையும் அவற்றோடு சிறிது இடையறவுபட்டன. அல்குறைவரன் முதலாயின நான்கும் புணர்ச்சிக்கு மிகவும் இயைபுடைமையின் மேலவற்றோடொன்றாது வேறாயின. பாராட்டெடுத்தன்முதலாயின புணர்ந்துநீங்கியபின் நிகழ்ந்தமையின் அவையும் அவற்றிற் சிறிது வேற்றுமையுடைய. தெரிந்துடம்படுதன் முதலாயின களவுவெளிப்படுத்தற் குறிப்பினவாகலின் மேலனவற்றோடு தழுவாது வேறாயினவென்பது. இவற்றொடும் வருகின்ற நான்கன் வேறுபாடும் ஆண்டுச் சொல்லுதும். அவ்வாறுநோக்கியன்றே இவ்வாறுகூத்திரப்பொருளினையும் இருபத்துநான்காக உடனோதாது வேறுபடுத்தோதிய கருத்தென்பது. இங்ஙனம் பொருத்தமின்றி வருவனவல்ல நன்னான்கு பகுதியாற் கூறியவை தம்முட் தாமென்பான் பொருந்தியநான்கென்றானென்பது. இவற்றுக்குச்செய்யுள், "அறியாய் கொல்லோ நீயே தெறுவர - நோக்குதொறும் பனிக்கு நெஞ்சமோ டிவளே - யாய்க்கறி வுறலி னின்னெதிர் நாணி - மனைவயிற் பிரியலள் மன்னே யதற்கே - நினைவில ளிவளென வுணர்த்தி - புனைதார் மார்ப காண்டியோ வதுவே." என்பது பகற்குறிக்கட் தலைமகளை இடத்துய்த்துவந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று தோழி வரைவுகடாயது. இதனுள் "யாய்க்கறிவுறலின்" என்பது தெரிந்துடம்படுதலென்பது ; என்னை ? அவள் நோக்குந்தொறும் பனித்தலென்றறிவுறுத்தாளென்றமையின். "நின்னெதிர்நாணி" என்பது கிளைப்புவினைமறுத்தல் ; என்னை ? தமர்க்குமறைத்தாள் இம்மறையினையென்று தலைமகன்குறிக்குமென நாணி எதிர்ப்படாமையின். "மனைவயிற்பிரியலள்" என்பது கரந்திடத்தொழிதல் ; "புனைதார்மார்ப காண்டியோவதுவே" என்பது கண்டவழி உவத்தல் ; என்னை ? நிற்கண்டவழி நுதலுந்தோளும் பசலைநீங்கியவரு

று கண்டிலேயோவென்னுங் குறிப்பினாற் கூறினமையின். பிறவும் அன்ன. (கஎ)

உகூகூ. புறஞ்செயச் சிதைத்தல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையற வுரைத்தலொடு
புலம்பிய நான்கே யாறென மொழிப.

இஃது ஆறுவது கூறுகின்றது. (இ-ள்.) புறஞ்செயச்சிதைத்தல் = பூவுஞ்சாந்தும் பூணுந்துகிலும் முதலாயின கொண்டு புறத்தே கோலஞ்செய்ய அகத்தே சிதைவுண்டாதலும்: மேல் நின்றது கண்டவழி உவத்தலாகலானும் இது காணாதவழி நிகழ்கின்றதாகலானும் அதற்கினமின்றியும், அதன்வழித்தோன்றியதெனப்படுமாகலான் இதனை இச்சூத்திரத்தின் முன்வைத்தானென்பது.

புலம்பித்தோன்றல் = அங்ஙனம் புனைந்தகோலந் துணையொடுகழியப் பெறாமையிற் புல்லென்றழிந்த நெஞ்சினளாகலான் எல்லாச் சுற்றத்தார்க்கும் இடைநின்றேயுந் தனியளென்பது அறிவியாநிற்றலும்:

கலங்கிமொழிதல் = கையொடுபட்ட கள்வனைப்போலச் சொல்லுவனவற்றைத் தடுமாற்றந்தோன்றச் சொல்லுதலும்: அஃதாவது தன்மனத்துநிகழாநின்றன தன்னையறியாமற் சிலபுலப்படச் சொல்லுதலாயிற்று.

கையறவுரைத்தல் = கலங்காது சொல்லுங்காற் செயலறவு தோன்றச் சொல்லுதலும்: அஃதாவது வன்புறையெதிரழிந்து சொல்லுவனபோல்வன. புலம்பியநான்கே ஆறெனமொழிப = இவைநான்குந் தனிமைவிகற்பமாகிய ஆறுங்கூற்று. எ-று.

கையறவுரைத்தலென்பதனை ஈற்றுக்கண்வைத்தான் களவொழுக்கத்தினுள் இதனினூங்கு மெய்ப்பாடு கூறப்பெறுமதென்றற்கு; என்னைகாரணமெனின், கையறவுரை தோன்றியதற்பின்னர் நிகழ்வன கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் மெய்ப்பாடாவதன்றி நற்காமத்துக்காகாவென்பது கருத்து; என்னை? கையறவுரைத்தலென்பது சொல்லாமரபினவற்றொடு கெழீஇச் செய்யாமரபிற் றொழிற்படுத்தடக்குதலை எல்லையாகவுடைமையின், அதனினும் இறப்பததோன்றுவன மன்றத்திருந்தசான்றவரறியத் தன் துணைவன்பெயரும்பெற்றியுங்கூறி அழுதும் ஆற்றியும் பொழுதொடுபுலம்பியும் புள்ளொடுசொல்லியும் நிகழும் மெய்ப்பாடாகலான், அவை நடுவணைந்திணையெனப்பட்ட நற்காமத்திற்கு இலக்கணவகையான் ஏலாவாகலினென்பது. கையறவு

ளாத்தலென்றதனான் இம்மெய்ப்பாடு மனத்தவேயன்றி மாற்றத்தானும் பிறர்க்குப் புலனாக வெளிப்படுமென்பதுகொள்க. இவை எல்லாம் முறையானே நிகழ்ந்தமைநோக்கி யாழோர்கூட்டத் தொன்மையுந் தோலும்போலப் பொருட்டொடர்நிலையாக்கி உரைப்பாருமுளர். அஃது ஆகாமைக்குக் காரணங் களவியலுட் கூறினானென்பது. இவற்றுக்குச்செய்யுள், "இவளே, அணியினும் பூசினும் பிணியுழந் தசைஇப் - பல்கிளை நாப்ப ணில்கிளை போல - மொழிவகை யறியாள் பொழிகண்ணீர்துடைத் - தியானே கையற வலம்வருங் - கூருய் பெருமநிற் றேறு மாறே." என்பது வரைவுகடாயது. இதனுள் "அணியினும் பூசினும் பிணியுழந் தசைஇ" என்பது புறஞ்செயச்சிதைத்தல்; "பல்கிளைநாப் பணில்கிளைபோல" என்பது புலம்பித்தோன்றல்; "மொழிவகையறியாள்" என்பது கலங்கிமொழிதல்; "யானே கையற வலம்வரும்" என்பது கையறவுரைத்தல்; என்னை? தன் கண்ணீர்துடைத்தலும் ஆற்றுளென்றமையின். பிறவும் அன்ன. (௧௮)

௨௬௭. அன்ன பிறவு மவற்றொடு சிவணி
மன்னிய வினைய நிமித்த மென்ப.

இது மேலனவற்றுக்கு ஓர்புறனடை. (இ - ள்.) அன்னபிறவும் = மேற்சொல்லப்பட்ட இருபத்துநான்கு மெய்ப்பாடுபோல்வன பிறவும்: அவற்றொடு சிவணி = அவற்றின்வேறன்றி அவைதம்முட்பகுதியாகிவருவன பிறவும்: மன்னிய வினைய நிமித்தம் என்ப = நிலைபெறதந்தோன்றுங் காமவொழுக்கத்து நிமித்தமென்றுசொல்லுவர் புலவர். எ - று. மன்னியவினையவென்பது நடுவணைந்திணைக்கேயுரிய மெய்ப்பாட்டினவை என்றவாறு; என்னை? கந்தருவ வழக்கமல்லனவற்றை மன்னியகாமமென்றூரன்றே அஃது இடையறவுபடாதாகலின். எனவே, கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் வரையறையின்றி வேண்டியவாறு வரப்பெறுமென்பதாம், அவை மன்னியவினையல்லாமையின்; என்னை? காமஞ்சாலாவிளமையோள்வயினேமஞ்சாலாவிடும்பையெய்துதலும் நாற்பத்தெட்டியாண்டையாளோடு பன்னீராட்டையாள் கூட்டஞ்சொல்லுதலும் ஒத்தகாமமெனப்படாவாகலினென்பது. இவ்வாறு கூறவே கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் இவை வைத்த முறையான் வரையறுத்துக்கூறப்படாவெனவும், அவைவருவன வந்துழிக் கொளப்படுமென்பதும் பெற்றும். இது புலனெறிவழக்கமல்லாத கந்தருவமணத்திற்கும் ஒக்கும்.

அன்னபிறவுமவற்றொடுசிவணிவருவன யாவையெனின், புகுமுகம்புரிதற்கட் தலைமகன் நோக்கியவழி ஒருவல்லிப்பொதும்பரானும்

மற்றொன்றானுஞ் சார்புபெற்றுமறைதலும் அவையில்லாதவழி இடர்ப்படுதலுமென்றாற்போல்வன புகுமுகம்புரிதலாயடங்கும். நகுநயமறைக்குங்காற் றலைமகன்கட் டோன்றிய நகைமுதலாகிய குறிப்பேதுவாக நகைதோன்றியதனை மறைக்குங்கால் இதழ்மொக்குளுட் டோன்றுவது நகையெனப்படாது நகுநயமறைத்தலின்பாற் படுமென்பது. இனிச் சிதைவுபிறர்க்கின்மையின்கண்ணும் "நாட்ட மிரண்டு மறிவுடன் படுத்தற்குக் - கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்" என்றமையாற் கண்ணின் வேறுபாடுளவாமன்றே, அவை சிதைவுபிறர்க்கறிவிக்குமாயினும் ஆண்டுத் தானதுமறைத்தாளென்னுங் கருத்தினளாகலின் அதுவுஞ் சிதைவுபிறர்க்கின்மையாமென்பது. அவை யாவையெனின், அமர்த்துநோககாது அலமரநோக்குதலும் நிலங்கிளைத்தலும் போல்வன. மற்றுப் பொறிநுதல்வியர்த்தற்குப் புறனடையாற்கொள்வன யாவையெனின், புறனடையாற்கோடல் ஆணையன்றாகலான் உள்ளனவற்றிற்குக் கொண்டொழிகவென்றவாறு. ஒழிந்தனவற்றிற்கும் இவ்வாறேவருவன அறிந்து அடக்கங்கூறுக.

மற்றும் பிறவும்அவற்றொடு சிவணியெனவே, மேற்கூறியவற்றொடு பொருந்தவருவன கோடுமென்றே, அன்ன என்றதென்னையெனின்; அதனானே தலைமகட்குரிய மெய்ப்பாடு வேறுளவாயினுங்கொள்க. அவை ஐயப்படுதலும் ஆராய்தலுந் துணிதலுமுதலாயின. மற்றுத் தலைமகட்குரிய மெய்ப்பாடுபோலத் தலைமகற்குரியனவும் இன்னமுறையனவென்று வரையறுத்துககூறாரோவெனின்; அற்றன்று, தலைமகன்குறிப்புச் சிலபற்றித் தலைமகள்குறிப்புப் பலபிறக்குமாகலானும் ஐயமுதலாயினமெய்ப்பாடு காமப்புணர்ச்சிக்கு இன்றியமையாதன இன்மையானுந் தலைமகட்குரிய மெய்ப்பாடே சிறந்தனவென்று அவற்றை வரையறுத்துக் கூறினானென்பது. மற்று இவற்றை நிமித்தமென்றதென்னையெனின், இவை முறையானே நிகழ்ந்து புணர்ச்சி நிகழுமாகலினென்பது. வினைய என்பது ஆறும் வேற்றுமைப்பன்மையுருபு. இம்மெய்ப்பாட்டினுட் கைக்கிளைபெருந்திணைக்கு வருவன வருமாறு; "ஒருக்குநா மாடுங் குரவையு ணம்மை - யருக்கிளுன் போனோக்கி யல்லனோய் செய்தல் - குருக்கட் கொலையேறு கொண்டேன் யா னென்னுந் - தருக்கன்றோ வாயர் மகன்." எனப் புகுமுகம்புரிதல் கைக்கிளைக்கண் வந்தது. "முன்னையமூன்றுங் கைக்கிளைக்குறிப்பே" என்பதனான் இது கைக்கிளையெனப்பட்டது. மற்றிது முல்லைத்திணைப்பாட்டன்றோவெனின், அது நிலத்தான் முல்லையாயிற்றென்பது அகத்திணையியலுட் கூறினும். இனித் தொன்மையுந் தோலும் முதலாயின வனப்புக்களுட் புகுமுகம்புரிதன் முதலாயின பெருந்திணைப்

பொருள்பற்றிவருவன வருமாறு அறிந்துகொள்க. மற்றிவ்விருபத்து நான்கு மெய்ப்பாடுங் கற்பினுள் இம்முறையானே வரப்பெறுவோ வெனின், அதற்கு இம்முறையான் இவையனைத்தும் வரல்வேண்டுவ தின்மையிற் களவிற்கே விதந்துகூறினொன்பது. அஃதென்னை பெறுமாறெனின், பலபொருட்கேற்பின் நல்லதுகோடல் என்னும் உத்திவகை. இனிக் கற்பினுள்வருவன வருமாறு, "இனிதெனக் கணவ னுண்டலி - னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முக னே." என்பதனுள் நகுநயமறைத்தல் வந்தது. "மாண மறந்துள்ளா நாணிலிக் கிப்போர் - புறஞ்சாய்ந்து கண்டைப்பாய் நெஞ்சே யுறழ்ந்தி வளைப் - பொய்ப்ப விடேஎ னெனநெருங்கித் தப்பினே - னென்றடி சேர்தலு முண்டு." இதனுட் சிறைவுபிறர்க்கின்மை வந்தவாறு. ஒழிந் தனவும் அன்ன. "நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாண னெம்மனை - நீசேர்ந்த வில்வினுப் வாராமற் பெறுசுற்பின்" என்பது மடந்தபவு ரைத்தல். இவையெல்லாங் கற்பின்கண்வந்தன. "அன்னை சொல்லு முய்க மென்னதூஉ - மீரஞ் சேரா வியல்பில் பொய்ம்மொழிச் - சேரி யம் பெண்டிர் கௌவையு மொழிகம்" என்பதோவெனின் அது பா ராட்டெடுத்தல் மடந்தபவுரைத்தலென்புழி அடங்குமென்பது. (கக)

உகஅ. வினையுயிர் மெலிவிடத் தின்மையு முரித்தே.

இது மேலனவற்றுக்கே ஆவதோர் விதிகூறுகின்றது. (இ-ள்) மன்னியவினையவெனப்பட்டபுணர்ச்சி மேல் அறுவகையான் இருபத் துநான்கெனக் கூறப்பட்ட மெய்ப்பாட்டினை அம்முறையானே நிமித் தமாகக்கொண்டு வருதலின்மையும் உரித்தெனப்படும், ஆற்றுமைவந்த விடத்து. எ - று. மேற்கூறிய இருபத்துநான்கினையின்மை உரித்தெ ன்பது அதிகாரத்தாற்கொள்க. "தன்னசை யுள்ளத்து நன்னசை வா ய்ப்ப - வின்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து - நக்கனெ னல்லனோ யானே யெய்த்த - நோய்தணி காதலர் வரவீண் - டேதில் வேலற் குவந்தமை கண்டே" எனவும், "வளைந்துவா விளமுலை ஞெமு ங்கப் பல்லூழ் - விளங்குதொடி முன்கை வளைந்துபுறஞ் சுற்றலி - னி ன்மார் படைதலி னினிதா கின்றே" எனவும் இவை களவியலுள் உயிர்மெலிந்தவிடத்துப் புணர்ச்சிநிமித்தமெனக் கூறப்பட்டவையின் றியும் புணர்ச்சிநிகழ்ந்தவாறு; என்னை? முயங்குதொறு நகைதோன்றி ற்றெனவே, பாராட்டெடுத்தன் முதலாயினவின்றியும் புணர்ச்சிநிகழ் ந்ததாம். ஒழிந்தனவும் அவ்வாறேகொள்க. இவை கண்டவழி யு வத்தலாகாவோவெனின், ஆண்டுத் தன்னுவகைகூறுளன்றே கரந்தி டத்தொழிந்தாளாகலினென்பது. "தண்டுளிக் கேற்ற பலவுழு செழுஞ் செய் - மண்போன் ஞெகிழ்ந்தவற் கலுழ்ந்தவென் - னெஞ்சறை போ

கிய வறிவி னேற்கே." என்புழிப் பாராட்டெடுத்தன்முதலாகிய பன்னிரண்டு நிமித்தமுமின்றி ஆற்றாமைநிமித்தமாகக் கற்பினுட் புணர்ச்சி நிகழ்ந்தது. உம்மை, எதிர்மறை; உயிர்மெலிவிடத்து உடைமையுடைத்துமாம் அவ்வினையென்பது. "தொடிநெகிழ்ந்தனவே தோள்சாயினவே" என்பதனுள் ஊழணிதைவரலென்னும் மெய்ப்பாடுவந்தது. பிறவும் அன்ன. இனி மேற்கூறிய ஆறுமேயன்றி இன்னும் இவற்றொடு நான்குகூட்டிப் பத்தென்பாருமுளர். அவை இன்பமாதற்குரியனவன்மையின் வரையறை கூறுதொழிந்தானென்பது. (௨0)

௨௬௬. அவையு முளவே யவையலங் கடையே.

இஃது எதிரதுபோற்றி இறந்தது காத்தது. (இ-ள்.) அவையுமுளவே = இனி எதிர்வருகின்றனவும் உளவாவது: அவையலங்கடையே=இறந்தனவற்றுசகு இடனல்லாதவிடத்தே எ-று. இதனது கருத்து, மேற்கூறிய இருபத்துநான்குமல்லாதவழி இன்பத்தை வெறுத்தன் முதலாச இனிக் கூறுகின்ற மெய்ப்பாடும் உளவாம் என்றவாறு. அவையல்லாதவிடத்து இவையும் உளவாமெனவே, வருகின்றமெய்ப்பாடுங் களவிற்குங் கற்பிற்குமுரியவெனவுங், களவிற்குவருங்கான் முதற்கூறிய இருபத்துநான்கன்பின்னுமே இவை பெரும்பான்மையான் வருமெனவுங், கற்பிற்காயிற் பயின்றுவருமெனவுங் கூறியவாறு. அவை இனிக் கூறுகின்றும். (௨௧)

௨௭0. இன்பத்தை வெறுத்த றுன்பத்துப் புலம்ப
லெதிர்பெய்து பரித லேத மாய்தல்
பசியட நிற்றல் பசலை பாய்த
லுண்டியிற் குறைத லுடம்புநனி சுருங்கல்
கண்டுயின் மறுத்தல் கனவொடு மயங்கல்
பொய்யாக் கோடன் மெயயே யென்ற
லையஞ் செய்த லவன்றம ருவத்த
லறனளித் துரைத்த லாங்குநெஞ் சழித
லெம்மெய் யாயினு மொப்புமை கோட
லொப்புவழி யுவத்த லுறுபெயர் கேட்ட
னலத்தக நாடிற் கலக்கமு மதுவே.

இது மேல் இவையுமுளவெனப்பட்ட மெய்ப்பாடு கூறுகின்றது. (இ-ள்.) எண்ணப்பட்ட இருபதும் மன்னியவினையநிமித்தமென்பான் நலத்தகநாடின் அதுவேயாமென்றானென்பது. இவை புணர்ச்

சிக்கு நிமித்தமாகாதனபோன்று காட்டினும் அவற்றை மிகவும் ஆரா ய்ந்துணரிற் புணர்ச்சிநிமித்தமேயாம். எ-று.

இன்பத்தை வெறுத்தலென்பது, யாழுங்குழலும் பூவுஞ்சாந் தும் முதலாக இன்பத்திற்கேதுவாகிய பொருள்கண்டவழி அவற்றி ன்மேல் வெறுப்புத்தோன்றுதல். அவை காமத்திற்கு ஒருவகையா ன் ஏதுவாமாகலின் மன்னியவினைய நிமித்தமெனப்படுமாகலான் அவற்றை வெறுத்தல் புணர்ச்சிக்கேதுவாகாதன்றேயாயினும் அதனை ஆராய்ந்துணரின் நிமித்தமெனவேண்டுமென்பான் நலத்தகநாடின் அதுவேயென்றானென்பது. கலக்கமுமெனநின்ற உம்மை மேற்கூறிய பத்தொன்பானையுந் தழுவலின் இறந்தது தழீஇயிற்றாம். "கல்லாக் கோ வல ரூதும் - வல்வாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே." என்புழி இன் பத்தை வெறுத்தனளாயினும் புணர்ச்சிக்கேதுவாமென்பது கருத்து.

"எல்லி - மனைசேர் பெண்ணை மடிவா யன்றி - றுணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக் - கண்ணிறை நீர்கொண்டு சாக்கு - மொண்ணுத லரிவையா னென்செய்கோ வெனவே" என்பது துன் பத்துப்புலம்பல்; என்பது, பிரிவாற்றாது துன்புறுங்காலை அவ்வாற்றா மை தலைமகற்கின்றித் தானே துன்புறுகின்றாளாகச் சொல்லுதல். அவை கூட்டத்தை வெறுத்த குறிப்பாயினும் அக்கூட்டத்திற்கே நிமி த்தமாகும் ஆராய்ந்துணரினென்றவாறு. அவை "நின்னுறு விழுமங் களைந்தோ - னன்னுறு விழும நீந்துமோ வெனவே." எனவரும்.

எதிர்பெய்து பரிதலென்பது, உருவுவெளிப்பாடு. அது தலைம கனையும் அவன் தேர்முதலாயினவற்றையுந் தன்னெதிர் பெய்துகொ ண்டு பரிந்து கையறுதல். அது "வாரா தாயினும் வருவது போலச் - செவிமுத லிசைக்கு மரவமொடு - துயின்மறந் தனவாற் றோழியென் கண்ணே." என்புழி வாராதென்றுணர்ந்தது இக்காலத்தாகலான் அ தற்குமுன் இன்னவாறு பட்டதன்று அன்மையின் எதிர்பெய்து பரித லாயிற்று.

ஏதமாய்தலென்பது, கூட்டத்திற்குவரும் இடையூறுண்டென் று பலவும் ஆராய்தல். அது நொதுமலர் வரையக் கருதுவர்கொல்லெ னவும் பிரிந்தோர் மறந்து இனிவாரார்கொல்லெனவுந் தோன்றும் உள் ள நிகழ்ச்சி. அது "வாரார் கொல்லெனப் பருவருந் - தாரார் மார்பநீ தணந்த ஞான்றே" எனவரும்.

பசியடநிற்றலென்பது, பசிவருத்தவும் அதற்குத் தளராது உணவு மறுத்தல். "அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள் - பாலு

முன்னாள் பழங்கண் கொண்டு - கனிபசந் தனளென வினவுதி"
எனவும் "இனியா, னுண்ணனு முண்ணேன் வாழலும் வாழேன்."
எனவும் வரும்.

பசலைபாய்தலென்பது, பசலைபரத்தல். அது "கன்று முண்ணாது கலத்தினும் படாது - நல்லான் றீம்பா னிலத்துக் காஅங் - கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது - பசலை யுணீஇய வேண்டுந் - திதலை யல்குலெம் மாமைக் கவினே." எனவரும்.

உண்டியிற்குறைதலென்பது, பசியடநிற்றலேயன்றிச் சிறிது உண்டியூட்டியவழிப் பண்டுபோலாது கழியவுஞ்சிறிதுண்டல். அது "தீம்பா லூட்டினும் வேம்பினுங் கைக்கும் - வாரா யெனினு மார்வ மொடு நோக்கு - நின்னிற் சிறந்தநோன் றிலளே - யென்னினும் படாஅ ளென்னிதற் படலே." எனவரும்.

உடம்புநனிசுருங்கலென்பது, அவ்வுண்ணாமை உயிரிற்செல்லாது உடம்பிற்காட்டுதல். அது "தொடிநிலை நெகிழச் சாஅய்த் தோளவர் - கொடுமை கூறிய வாயினுங் கொடுமை - நல்வரை நாடற் கில்லை தோழி - நெஞ்சிற் பிரிந்தது மிலரோ - குன்ற நோக்கங் கடிந்தது மிலரோ." எனவரும்.

கண்டுயின்மறுத்தலென்பது, இரவும்பகலுந் துஞ்சாமை. அது "புலர்குர லேனற் புழையுடை யொருசிறை - மலர்தார் மார்பனின்றோற் கண்டோர் - பலர்தில் வாழி தோழி யவரு - ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி - யோர்யா னாகுவ தெவன்கொ - னீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே." எனவரும்.

கனவொடுமயங்கலென்பது, அரிதினிற் றுயிலெய்தியவழித் தலைமகனைக் கனவிற்கண்டு பின்னர் அவனன்மையின் மயங்கும் மயக்கம். "அலந்தாங் கமையலே னென்றானைப் பற்றியென் - னலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவுங் - கலந்தாங் கேயென் கவின்பெற முயங்கிப் - புலம்ப லோம்பென வளிப்பான் போலவும்" என்பது கனவொடு மயங்கிற்று.

பொய்யாக்கோடலென்பது, மெய்யைப் பொய்யாக் கோடல். அது "கனவினா னெய்திய செல்வத் தனையதே - யைய வெமக்குநின் மார்பு." எனவும், "வானி லிலங்கு மருவித்தே தானுற்ற - சூள்பேணான் பொய்த்தான் மலை." எனவும், "வருவே னென்ற நாளும் பொய்த்த - வரிவே யுண்க ணீரு நில்லா." எனவும் வரும்.

மெய்யேயென்றலென்பது, பொய்யை மெய்யென்று துணிதல். அது "கழுங்கா டாயத் தன்றுநய மருவிய - பழங்கணோட்டமுன்னலிய - வழுங்கின னல்லனோ வயர்ந்தனன் மன்னே." என்பது. தானே தன்மகனை வாயில்கொண்டு புக்கானாயினும் அதனைப் பழங்கண்ணோட்டம் முன் நலிதரப் பொய்யேபுகுந்தானென்று மெய்யாகத் துணிந்துகோடலின் அப்பெயர்த்தாயிற்று.

ஐயஞ்செய்தலென்பது, "தூதவர் விடுத்தரார் துறப்பார்கொ லோதக - விருங்குயி லாலு மரோ" என்புழி நம்மை இம்மைப்பிறப்பினுட் துறப்பார்கொல்லென வாளாதே ஐயஞ்செய்தமையின் ஐயமாயிற்று.

அவன்றமருவத்தலென்பது, "ஊர னூரன் போலுந் - தேரும் பாணன் றெருவி னானே." என்பது. அவன்றமரைக்கண்டு உவந்தது. இது முனிவெனப்படாதோவெனின், அது தலைமகனைப் புலந்தாற்போல்வதோர் முனிவாயினல்லது பகைபடநிகழாக்குறிப்பெனப்படும்; அல்லாக்கால் அது பெண்டன்மையன்றாமாகலின். அவர் நாட்டு "மாலைப் பெய்த மணங்கமழுந்தியொடு - காலை வந்த காந்தண் முழுமுதன் - மெல்லிலை குழைய முயங்கவு - மில்லுய்த்து நடவுங் கடியாதோளே." என்பதும் அது.

அறனளித்துரைத்தலென்பது, அறக்கிழவனை அன்புசெய்தல். அது "பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக் - கன்றுபுகு மாலை நின்றோ ளெய்தி." எனவரும்.

ஆங்குநெஞ்சழிதலென்பது, அங்ஙனம் உரைக்குங்கால் நெஞ்சழிந்துரைத்தல். எனவே, அறனளித்துரைத்தல் அழிவின்றாமென்பது சொல்லினாரும். அது "பழிதபு ஞாயிறே பாடறியா தார்கட் - கழியக தழ்வை யெனகேட்டு நின்னை - வழிபட்டிரக்குவென் வந்தன னென்னெஞ் - சழியத் துறந்தானைச் சீறுங்கா லென்னை - யொழிய விடாதிமோ வென்று." எனவரும்.

எம்மெய்யாயினுமொப்புமைகோடலென்பது, யாதானும் ஒரு பொருள் கண்டவிடத்துத் தலைமகனோடொப்புமைகோடல். அது "கணைகழி கல்லாக் கல்பிறங் காரிடைப் - பணையெருத் தெழிலேற்றின் பின்னர்ப் - பிணையுங் காணிரோ பிரியுமோ வவையே." என எம்மெய்யாயினும் ஒப்புமைகொண்டவாறு. எம்மெய்யாயினுமென்றமையாற் கண்டபொருளுங் கேட்டபொருளும் ஒப்புமைகொள்ளப்பெறுமென்றவாறு.

ஒப்புவழிபுவத்தலென்பது, ஒப்புமையுண்டாகியவழியே உவமைகொண்டு அதனானே உவகை தோன்றுவது. எனவே, முன்னது ஒப்பின்றி ஒப்புமைகொண்டதாயிற்று; என்னை? எம்மெய்யாயினுமென்றமையின். "காம நோக்கினை யதத்தா வென்னுநின் - றேமொழி கேட்ட வினிதுமற் றின்னாதே" என்பது ஒப்புவழியுவந்தது; என்னை? காமரு நோககினையென்றமையின். "பால்கொள லின்றிப் பகல்போன் முறைகோடாக் - கோல்செம்மை யொத்தி பெருமமற ெருவ்வாதி" எனவருவதூஉஞ் சொல்லுப.

உறுபெயர்கேட்டலென்பது, தலைமகன் பெரும்புகழ்கேட்டு மகிழ்தல். அவை "பலவின் பழத்துட் டங்கு மலைகெழு வெறபனைப் - பாடுகம்வா" எனவும், "மென்றோ ணெகிழ்த்தான் றிறமல்லால்யான்காணே - னன்றுதீ தென்று பிற" எனவும் வரும்.

கலக்கமென்பது, சொல்லத்தகாதன சொல்லுதல். அவை "பையெனக் கான்கு விழிப்பயான் பற்றிய - கையுளே மாய்ந்தான் கரந்து" எனவும், "பிறங்கிரு முந்நீர் வெறுமண லாகப் - புறங்காவிற் போக விறைப்பேன் முயலி - னறம்புணை யாகலு முண்டு" எனவும் வரும். "கலக்கமு நலத்தக நாடி னதுவே" என்றது கலக்கமென்பதனை வேறுபெயாத்து வைத்ததென்னையெனின், இககாலத்து அதனினூங்கு நிகழும் மெய்ப்பாட்டுக்குறிப்புளவல்ல தலைமகட்கென்பது அறிவித்தற்கென்பது. இன்னும் அதனானே தலைமகறகாயின் அதனினூஙகு வருவதோா கலககமும் உளதாமென்றது; அவை, மடலூர்தலே வரைபாய்தலே என்றற்றொடககததன. அது "மாவென மடலு மூர்ப பூவெனக் - குவிமுகி ழெருக்கங கண்ணியுஞ் சூடிப - மறுகி னார்க்கவும் படுப - பிறிது மாகுப காமஙகாழ்க் கொளினே." இதனுட் சாதல் எல்லையாகக கூறியவாறு கண்டுகொள்க.

இவ்வாறு கூறவே இச்சூத்திரத்துளோதிய இருபது மெய்ப்பாடுந் தலைமகற்கும் ஏறறவகையானே கொள்ளப்படுமென்பது. அவை, "எவ்வி யிழந்த வறுமையாழப் பாணா - பூவில் வறுந்தலை போலப் புல்லென் - றினைமதி வாழிய நெஞ்சே மனைமரத - தெல்லுறு மௌவ னாறும் - பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே." என்பது துன்பத்துப் புலம்பலாம்; என்னை? தானே துன்புறுகின்றானாகத் தலைமகன் உரைத்தமையின்: "அந்திங் கிளவி யாயிழை மடந்தை - கொடுங்குழைக் கமர்த்த நோக்க - நெடுஞ்சே ணாரிடை யிலங்கு ளான்றே." என்பது எதிர்பெய்துபரிதல்; என்னை? முற்காலத்து எதிர்ப்பட்டமை பிற்காலத்துச் சொல்லினமையின். ஒழிந்தனவுந் தலைமகற்குரியனவா

இவருவன வந்தவழிக்கண்டுகொள்க. இவையெல்லாம் அறனும்பொருளுமன்றி இன்பப்பொருள் நிகழ்ந்தவிடத்து அவரவருள்ளத்து நிகழ்வனவாதல் வழக்குநோக்கி உணரப்படுமென்பது. மேற்கூறிய நகைமுதலாயவற்றுக்கும் இஃது ஒக்கும். இவ்வெண்ணப்பட்டனவெல்லாம் உளளத்துநிகழ்ந்தனவற்றை வெளிப்படுப்பனவாகலான் மெய்ப்பாடெனப்பட்டன. மேல்வருவனவற்றுக்கும் இஃது ஒக்கும். (உஉ)

உஎக. முட்டுவயிற் கழறன் முனிவுமெய்ந் நிறுத்த
லசசததி னகற லவன்புணர்வு மறுத்த
றூதுமுனி வின்மை துஞ்சிச சேர்தல்
காதல் கைம்மிகல் கட்டுரை யின்மையென்
றுயிரு நான்கே யழிவில் கூட்டம்.

இது வரைந்தெய்துங் கூட்டத்திற்கு ஏதுவாகிய மெய்ப்பாடு இவை எட்டுமென்பதுணர் - ற்று. (இ-ள்.) முட்டுவயிற்கழறல்= தலைக்கூட்டததிற்கு முட்டுப்பாடாகியவழிக் கழறியுரைத்தலும்: அது "நொச்சி வேலித் தித்த னுறந்தைக் - கன்முது புறங்காட் டன்ன - பன்முட் டின்றாற் றோழிநங் களவே" என்பது. இது தலைமகன் கேட்பக் கழறியுரைத்தது.

முனிவுமெய்ந்நிறுத்தல்=தலைமகளுள்ளத்து வெறுப்பு வெளிப்படநிற்குநிலைமையும்: அது "இன்னுயிர் கழிவ தாயினு நின்மக - ளாய்மல ருண்கட் பசலை - காம நோயெனச் செப்பா தீமே" என்புழி வாழ்க்கைமுனிநது தலைமகள் சொல்லியது.

அச்சத்தினகறல்=தலைமகன்கண்வரும் ஏதமஞ்சி அவனை நீங்குங்குறிப்பும்: "இன்ன மாகவு நன்னர் நெஞ்ச - மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைமிக் * * * னிருளிடை மிதிப்புழி நோக்கியவா - டளரடித் தாங்கிய சென்ற தின்றே" என்னும்பாட்டினை முழுதுங்கொள்க. அதன் கருத்தாவது, நாம் அவர் இருளிடைவருதலேதமஞ்சி அகன்றுவலித்திருப்பவும் என்னையும் நின்னையுங் கேளாது என்னெஞ்சு போவானேனென்றவாறாயிற்று.

அவன்புணர்வுமறுத்தல்=இரவுக்குறியும் பகற்குறியும் விலக்குதற்கெழுந்த உள்ளநிகழ்ச்சியும்: அது தமரையஞ்சி மறுத்தமையானும் இது வரைவுகடாவுதற்குக் கருத்தாகலானுந் தினைப்புவினைமறுத்தலோடு இது வேற்றுமையுடைத்து. "நல்வரை நாட நீவரின் - மெல்லி யாளொரு நாள்வா ழலளே" என்பது தலைமகள் குறிப்பினைத் தோழி கூறியதாகலான் அஃது அவன்புணர்வுமறுத்தலெனப்படு-

இஃது "ஒன்றித்தோன்றுந் தோழிமேன" என்னும் இலக்கணத் தாற் றோழிகுறிப்பாயினுந் தலைமகள்குறிப்பெனவே படுமென்பது கொள்க.

தூதுமுனிவின்மை = புள்ளும் மேகமும்போல்வன கண்டு சொல்லுமின் அவர்க்கென்று தூதிரந்து பன்முறையானுஞ் சொல்லுத லும்: அவை "கானலுங் கழறாது கழியுங் கூறாது - தேனிமிர் நறுமல ர்ப் புன்னையு மொழியா - தொருநீ யல்லது பிறிதியாது மிலனே - யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தல் - கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத் - தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து - பறவை சிளருந் துறைவனை நீயே - சொல்ல வேண்டுமா ரலவ" என்புழிக் கூறப்பட் டனவெல்லாந் தூதாகலிற் றூதுவிடுதலை வெறாததன்மை கூறியதாம் இப்பாட்டென்பது. "புல்வீ ழிற்றிச் கல்லிவர் வெள்வேர் - வரை யிழி யருவியிற் றோன்று நாடன் - றீதி னெஞ்சத்துக் கிளவி நம்வ யின் - வந்தன்று வாழி தோழி நாமு - நெய்பெய் தீயி னெதிர்கொ ண்டு - தாமணந் தனையமென விடுகந் தூதே." என்பதோவெனின், அது கற்பிற்கல்லது ஏலாது. என்னை? களவினுள் நெய்பெய் தீயின் வந்து எதிர்கொளலாகாமையின்.

துஞ்சிச்சேர்தல் = மனையகத்துப் பொய்த்துயிலோடுமடிந்து வைகுதலும்: துஞ்சுதலெனினும் மடியெனினும் ஒக்கும். வேண் டியவாறு கூட்டம் நிகழப்பெறாமையிற் தலைமகனொடு புலந்தாள் போல மடிந்தொன்றுமாதலின் அதனைத் துஞ்சிச்சேர்தலென்றானெ ன்பது. எங்ஙனமோவெனின், "என்மலைந் தனன்கொ றானே தன்ம லை - யார நாறு மார்பினன் - மாரி யானையின் வந்து நின்றனனே." என்புழி, என்னகாரியம் மேற்கொண்டுவந்தானென்றமையின் இது துஞ்சிச்சேர்தலாயிற்று. அல்லாக்கால் அங்ஙனஞ் சொல்லுதல் அன்ப ழிவெனப்படும். "ஆமிழி யணிவரை" என்னுங் குறிஞ்சிப்பாட்டினுட் "பின்னீதல் வேண்டுநீ பிரிந்தோணட் பெனநீவிப் - பூங்கண் படுத லு மஞ்சுவ றாங்கிய - வருந்துய ரவலந் தூக்கின் - மருங்கறி வாரா மலையினும் பெரிதே" என்னுஞ் சுரிதகமும் அது.

காதல்கைம்மிகல் = காமங்கையிகந்தவழி நிகழும் உள்ளநிகழ் ச்சியும்: அது "உள்ளி னுள்ளம் வேமே யுள்ளா - திருப்பினெம் ம ளவைத் தன்றே வருத்தி - வான்றோய் வற்றே காமஞ் - சான்றோ ரல்லர் யாமரீஇ யோரே" எனவரும்.

கட்டுரையின்மை = உரைமறுத்திருத்தலும்: அதனானே அதற் குத் தோழிகண்ணாயினுந் தலைமகள்கண்ணாயினும் உரைநிகழ்வதல்

லது தலைமகள் உரையாளென்பது பெற்றும். அது "யான்ற னறிவ ருனறி யலளே - யாங்கா குவள்கொ ருனே - பெருமுது செல்வ ரொருமட மகளே" என்பது தலைமகள் கட்டுரையாதிருத்தலிற் தலை மகன் தமரினெய்தல்வேண்டினமையிற் கட்டுரையின்மையின் வரை வுகடாவுதலாயிற்றென்பது. ஒழிந்தனவும் அவ்வாறே வரைவுகடாவு தற்கு ஏற்றவாறு உரையிற்கொள்க.

என்று ஆயிரு நான்கே அழிவில்கூட்டம் = என்றெண்ண ப்பட்ட மெய்ப்பாடெட்டும் பின் அழியாத கூட்டத்திற்கு ஏதுவாம். எ - று. அஃதாவது வரைந்தெய்துங் கூட்டமென உணர்க. (உ௩)

உ௭உ. தெய்வ மஞ்சல் புரையறந் தெளித
லில்லது காய்த லுள்ள துவர்த்தல்
புணர்ந்துழி யுண்மை பொழுதுமறுப் பாக்க
மருண்மிக வுடைமை யன்புதொக நிற்றல்
பிரிவாற் றாமை மறைந்தவை யுரைத்தல்
புறஞ்சொன் மாணாக் கிளவியொடு தொகைஇச்
சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே.

இஃது அழிவில்கூட்டம் நிகழ்ந்தபின்னர் வருதற்குரிய மெய் ப்பாடு இவையென்கின்றது. (இ - ள்.) இவ்வெண்ணப்பட்ட பதி னொன்றும் மேற்கூறிய அழிவில்கூட்டமெனப்படும். எ - று. செப் பியபொருளென்பது அழிவில்கூட்டமன்றே, முற்படும் மெய்ப்பாடெ ட்டனையும் அழிவில்கூட்டமென்றதுபோலப் பிற்படும் மெய்ப்பாட்டி னையும் அழிவில்கூட்டமென்பான் மேற்கூறிய அழிவில்கூட்டமே இவையுமெனக் கூறியவாறு. எனவே, வரைந்தெய்திய பின்னர்த் தலைமகன்மனத்து நிகழ்வன இவையென்பது கூறினானும்.

தெய்வமஞ்சலென்பது, தலைமகற்குத் தொழுகுலமாகிய தெய் வமும் அவற்கு ஆசிரியராகிய தாபதரும் இன்னோரென்பது அவனா னுணர்த்தப்பட்டு உணர்ந்ததலைமகள் அத்தெய்வத்தினையஞ்சி ஒழுகு மொழுக்கம் அவள்கட்டோன்றும், அங்ஙனம்பிறந்த உள்ளநிகழ்ச்சி யைத் தெய்வமஞ்சலென்றானென்பது. மற்றுத் தனக்குத் தெய்வந் தன்கணவனாதலான் அத்தெய்வத்தினைத் தலைமகளஞ்சுதல் எற்றுக் கெனின், அவனிற் தான் வேறல்லளாக மந்திரவிதியிற் கூட்டினமை யில் அவனான் அஞ்சப்படுந் தெய்வந் தனக்கும் அஞ்சப்படுமென் பது. அல்லதூஉந் தலைவற்கு ஏதம் வருமெனவும் அஞ்சுவளென்பது.

"சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் திகெனக் - கனைகதிர்க் கனலியைக் காமுற லியையவதோ" என்பது, தெய்வத்திறநோக்கித் தெருமந்ததாம்; என்னை? அவற்கிலவெனவும் அன்னவெனவுந் தாம் வேண்டிய குறைமுடியாது பிரிந்தார்மாட்டு ஏதஞ்செய்யுங்கொலென் றஞ்சி உரைத்தவாறு. "அச்சா றாக வுணரிய வருபவன்-பொய்ச்சூ ளஞ்சிப் புலவே றுகுவல்." என்பதும் அது. இவை "ஐயர்பாங்கினு மமரர்ச்சுட்டியுஞ் செய்பெருஞ்சிறப்பொடு சேர்தற்கண்" தலைமகள்கருத்தின்கண் நிகழுங் குறிப்பென்பது.

புரையறந்தெளிதலென்பது, தனக்கொத்த இல்லறம் இன்னதென்று தலைமகள்மனத்துப் படுதல். அது "விரியுளைக் கலிமான் றேரொடும் வந்த - விருந்தெதிர் கோடலை மறப்ப லென்றும்" எனவரும். இஃது அவனொடு சொல்லாடாது ஊடியிருப்பேனாயின், விருந்து கொண்டு புகுதரும், அதனான் ஊடலைமறப்பேனென்றமையிற் புரையறந்தெளிதலாயிற்று.

இல்லதுகாய்தலென்பது, களவின்கட்போலாது தலைமகற்கு இல்லாததனை உண்டாக்கிக்கொண்டு காய்தல். அது "நற்றூர்கலத்துக் கோர்சார் மேவிய - நெட்டிருங் கூந்தற் கடவுளரெல்லார்க்கு-முட்டுப்பா டாகலு முண்டு" எனவரும். இது கடவுளாயேகண்டு தங்கினாயினும் நெட்டிருங்கூந்தற் கடவுளாயேகண்டாயென்று இல்லது சொல்லிக் காயுமாகலின் அப்பெயர்த்தாயிற்று.

உள்ளதுவர்த்தலென்பது, தலைமகனாற் பெற்றதலையளி உள்ளதேயாயினும், அதனை உண்மையென்றேதெளியாது அருவருத்து நிற்கும் உள்ளநிகழ்ச்சி. அது "கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பின்" என்னும்பாட்டினுள், "வேப்புநனை யன்ன நெடுங்கண் ணீர்ஞெண் - டிரைதேர் வெண்குரு கஞ்சி யயல - வொலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளற் - றிதலையின் வரிப்ப வோடி விரைபுத - ணீர்மலி மண்ணளைச் செறியு மூர" என்புழித் தலைமகன் வாயில்வேண்டச்சென்றானைப் பிறர்கூறும் பழிக்கு வநதாயென்றமையின் இஃது உள்ளதுவர்த்தலாயிற்று. "பட்டுழி யறியாது பாகனைத் தேரொடும் - விட்டவள்பா னேக்கி விருந்தேற்றாக கொளகின்றாய்." என்பதும் அது.

புணர்ந்துழியுண்மையென்பது, முன்கூறிய இல்லதுகாய்தலும் உள்ளதுவர்த்தலுமாகிய விகாரமின்றிப் புணர்ச்சிக்காலத்துச் செவ்வனசென்ற உள்ளநிகழ்ச்சி. அது "குளிரும் பருவத்தே யாயினுந் தென்றல் - வளியெறியின் மெய்யிற் கினிதா - மொளியிழா - யூடி யிருப்பினு மூரன் நறுமேனி - கூட லினிதா மெனக்கு." என்பது. என்னை? புணர்ந்துழியுண்மை கூறினாள் விகாரமின்றியாதலின்.

பொழுதுமறுப்பாக்கமென்பது, களவின்கட் பகற்குறியும் இரவுக்குறியுமென வரையறுத்தாற்போல்வதோர் வரையறையின்மையின் அப்பொழுதினை மறுத்தலாகிய ஆக்கமென்றவாறு. எனவே, களவுக்காலத்துப் பொழுது வரைந்துபட்ட இடர்ப்பாட்டினீங்கிய மனமகிழ்ச்சி ஆக்கமெனப்படும். அது "அயிரை பரந்த வந்தண் பழனத்- தேந்தெழின் மலர்ந்த தூம்புடைத் திரள்கா - லாம்பல் குற்றுநர் நீர்வேட் டாங்கிவ - ளிடைமுலைக் கிடந்து நடுங்க லானீர் - தொழுது காண் பிறையிற் றோன்றி யானுமக் - கரிய மாகிய காலைப் - பெரிய நோன்றனிர் நோகோ யானே." என்பதனுட், தொழுதுகாண்பிறையிற் றோன்றினமென்பது களவுக்காலத்து இடையீடுபெருகிற்றெனக் கூறி அங்ஙனம் வரைந்தபொழுதினை மறுத்தகாலந்து நடுங்கலானீ ரொன்றமையின் இஃது அப்பொருட்டாயிற்று.

அருண்மிகவுடைமையென்பது, களவுக்காலத்துப்போலத் துன்பமிகுதலின்றி அருண்மிகத் தோன்றியநெஞ்சினளாதல். அது "நின்ற சொல்லி னீடுதோ றினிய - ரென்று மென்றோள் பிரிபறியலரோ" எனவரும்.

அன்புதொகநிற்றலென்பது, களவுக்காலத்துப்போலத்துன்பம் மிகுதலாற் பிரிந்த அன்பெல்லாம் இல்லறத்தின்மேற் பெருகிய விருப்பினானே ஒருங்குதொகநிற்றல். "எம்போற், புல்லுளைக் குடுமிப்புதல்வற் பயந்து - நெல்லுடை நெடுங்கா னின்னின்-றுறைவா ளென்ன கடத்தளோ மற்றே" என்புழிப் புதல்வர்ப்பயந்து நின்னின்றுறையுங்கடத்தினம் யாமென்றமையின் இஃது அன்புதொகநிற்றலாயிற்று.

பிரிவாற்றாமையென்பது, களவிற் பிரிவாற்றுதல் வேண்டுமாறுபோலக் கற்பினுட் பிரிவாற்றுதல் வேண்டப்படாது; என்னை? புறத்தார்க்குப் புலனாகாமைமறைத்தல் கறபிற்கு வேண்டுவதன்றாகலினென்பது. "இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிளிவெனக - கடனிறந்து செயல் சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ - வடமீன்போ ற்றொழுதேத்த வயங்கிய கற்பின - டடமென்றோள் பிரியாமை பொருளாயி னல்லதை" என்புழி இனையகற்பினாளைப் பிரியாமைபொருளாயினன்றி நும்மாற் றரப்படும்பொருள் பொருளாகுமோ என்றதன், கருத்தாவது, பிரிவாற்றாமையின் இவள் இறந்துபடுவள், பின்னை அப் பொருள்கொண்டு ஆற்றும் இல்லறம் யாண்டையதெனத் தலைமகள் பிரிவாற்றாமை கூறியவாறாயிற்று.

மறைந்தவையுரைத்தலென்பது, களவுக்காலத்து நிகழ்ந்தனவற்றைக் கற்புக்காலத்துக்கூறுதல். அவை "களவினு ணிகழ்ந்த வரு

மையைப் புலம்பி - யலமர லுள்ளமொ டளவிய விட்த்தும்" என்புழித் தோன்றிய மனக்குறிப்பு. அது "முயங்கல் விடாஅ லிவையென ம யங்கி-யானோ மென்னவு மொல்லார் தாமற் - றிவைபா ராட்டிய பருவ மு முளவே - யினியே, புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத் - திதலே 'யணிந்த தேங்கொண் மென்முலே-நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரக லம் - வீங்க முயங்கல் யாம்வேண் டினமே - தீம்பால் படுத ருமஞ் சினரோ" என்பது. முன்னிலைப்புறமொழியாகலான் மறைந்த ஒழுக கததுக்கண் நிகழ்ந்தபொருளைக் கற்பினுள் உரைத்தவாறுயிற்று.

புறஞ்சொன்மாணுக்கிளவியென்பது, தலைமகற்கு வந்த புறஞ் சொல்லின் பொல்லாங்கு குறித்து எழுந்த கிளவி. அவற்கு வரும் பழி காத்தலுந் தனக்கு அறமாதலின் அதுவுங் கற்பின்கண்ணே நிகழுமெ ன்பது. அது "களிறுகவர் கம்பலை போல - வலரா கின்றது பலர்வா ய்ப் பட்டே" என்றாற்போல்வன.

கிளவியொடுதொகைஇயென்பது, இதனோடுந் தொகுத்தென் றவாறு. சிறந்தபத்தும் என்பது, விதந்தோதிய பத்தும் செப்பிய பொருள் என்பது, அழிவில்கூட்டமெனச் செப்பிய கற்பின்கண்வரும் மெய்ப்பாடெனப்படும் இவையும் என்பது.

மற்றுப் பதினொன்றனையெண்ணிச் சிறந்தபத்து இவையென்ற தென்னையெனின், அதனை "ஒன்பதுங் குழவியோ டிளமைப் பெ யரோ" என்ற மரபியற் சூத்திரம்போல மொழிமாற்றியுரைக்கப்படுமெ ன்க. அங்ஙனஞ்சிறந்தபத்தும் புறஞ்சொன்மாணுக்கிளவியொடு தொ கைஇயெனக் கூட்டியுரைக்க. சிறந்தபத்தென்றதனான் இவையன் றிக் கற்பினுள்வரும் மெய்ப்பாடு பிறவுமுளவேற்கொள்க. (உச.)

உஎரு. பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
டுருவு நிறுத்த காம வாயி
னிறையே யருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த வொப்பினது வகையே.

இதுவும் மெய்ப்பாட்டுப்பகுதியே கூறுகின்றது; மேற்களவிய லுள் "ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப" என்றான், அவ்வொப்பி னதுபகுதி இத்துணைக்குறிப்பு உடைத்தென்பதுணர்த்தினமையின். (இ-ள்.) ஒத்த பிறப்பும் ஒத்த ஒழுக்கமும் ஒத்த ஆண்மையும் ஒத்த பிராயமும் ஒத்த உருவும் ஒத்த அன்பும் ஒத்த நிறையும் ஒத்த அருளும் ஒத்த அறிவும் ஒத்த செல்வமுமெனப் பத்துவகைய தலைமகனொப்பின துபகுதி. எ-று. இவை தலைமகற்கு மெய்ப்பாடெனப்படாவோவெனி

ன், படுமாயினும் அஃது ஒப்பினதுவகையென்றதனுனே தலைமகட்கே உரிமை கொளப்படும். குடிமையொடு பிறப்பிடை வேற்றுமை என்னை யெனின், பிறப்பென்பது குடிப்பிறத்தல்; அதற்குத்தக்க ஒழுக் கங்குடிமை; குடிப்பிறந்தாரது தன்மையைக் குடிமையென்ருேன் பது; அதனை ஊராண்மையெனவுஞ் சொல்லுப. ஆண்மை புரு டர்க்காம், அஃது ஆள்வினையெனப்படும், இது தலைமகட்கொப்ப தன்ருலெனின்; குடியாண்மையென்புழி ஆண்மையென்பது இருபாற் கும் ஒக்குமாதலின் அமையுமென்பது. யாண்டென்பது ஒத்தவா றென்னையெனின், பன்னீர்யாண்டும் பதினாறியாண்டும் பெண்மை யும் ஆண்மையும் பிறக்கும் பருவமென்பது வேதநூலின் ஒப்பமுடிந்த மையின் அதுவும் ஒப்பெனவேபடும். உருவுநிறுத்தகாமவாயிலென்ப து, பெண்மைவடிவும் ஆண்மைவடிவும் பிறழ்ச்சியின்றி அமைந்தவழி அதன்மேல் நிகழும் இன்பத்திற்கு வாயிலாகிய அன்பென்றவாறு.

இங்ஙனம் ஓதியவகையான் இவை ஒன்பதாகலிற் பத்தாமா றென்னையெனின், காமவாயிலெனப்பட்ட இயற்கையன்பு வடிவுபற் றியல்லது தோன்ருவாகலானுங், குணம்பற்றித்தோன்றுவன செயற் கையன்பாகலானும், உருவினை அன்பிற்கு அடையாகக் கூறினுரெனி னும் உருவு சிறப்புடைமையின் அதனை நாம்பகுத்தெண்ணிக்கொண் டாமென்பது. என்னை? "வன்கண் குடிகாத்தல் கற்றறிதலாள்வி னையோ-டைந்துடன் மாண்ட தமைச்சு." என்புழிக் கற்றறிதலெ ன்பதனை இரண்டாக்கி ஐந்தென்பவாகலின்.

அஃதேல், உருவென்பது குறிப்பின்ருகலின் மெய்ப்பாடாமா றென்னையெனின், அவ்வுருவுபற்றி மனத்தின்கட்பிறப்பதோர் தருக்கு ண்டன்றே அதனுன் அது மெய்ப்பாடெனப்படும். நிறையென்பது ம றைபிறரறியாமை நெஞ்சினைநிறுத்தல். அருளென்பது, எல்லாவுயிர் க்கும் இடுக்கண்செய்யாத அருளுடையராயிருத்தல். அதுவுங் காமத் திற்கு இன்றியமையாததோர் குறிப்பு. உணர்வென்பது, அறிவுடை மை; அஃதாவது உலகியலாற் செய்யத்தகுவது அறிதல். திருவென் பது, பொருளுடைமையும் பொருள்கொணர்ந்து துய்த்தலுமின்றி எ ஞ்ஞான்றுந் திருத்தகவிற்ருகியதோர் உள்ளநிகழ்ச்சி. அது வினை யுள்ளுடைமையெனவும்படும். இவையெல்லாம் இருவர்க்குந் தம்மி ன் ஒக்கும்பகுதியெனவும் அவைபற்றி மெய்ப்பாடு பிறக்குமெனவுங் கூறியவாறு.

வகையென்றதனுன் ஆண்மைவகை பெண்மைவகையென வுங், குடிமைவகையென்பது இருவர்க்கும் இளமைப்பருவத்தே தங்

இய ஒழுக்கமெனவும், பிறப்பினதுவகை அந்தணர்க்கு நான்கும் அரசர்க்கு மூன்றும் வணிகர்க்கு இரண்டும் வேளாளர்க்கு ஒன்றும் பிறப்புவகையெனப்படுமெனவுங் கூறுக. இனி ஏவன்மரபின் ஏனோர்பாங்கினும் அடியோர்பாங்கினும் வினைவலபாங்கினுந் தம்மின் ஒத்த பிறப்புக்காரணமாக உள்ளத்துவருங் காமக்குறிப்புமுதலாயினவுங் கொள்க. இவ்வெண்ணப்பட்டன ஒத்துவரினன்றி அறிவுடையார்கட் காமக்குறிப்பு நிகழாமையின் இவற்றையும் ஈண்டு மெய்ப்பாடென்றோதினானென்பது. அடியோர்பாங்கினும் வினைவலபாங்கினும் வரும் இக்குறிப்புமுதலாயவற்றை இலேசினாற் கொணடான் அவை பிறழ்ந்துவருமாகலினென்பது.

உ - ம். "அவனுந்தா, னேன விதணத் தகிற்புகை யுண்டியங்கும் - வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத் - தேனி னிறாலென வேணி யிழைத்திருக்குங் - கானக நாடன் மகன்." என்பது பிறப்பொப்புமை "உள்ளினெ னல்லன் யானே யுள்ளிய - வினைமுடித் தன்ன வினியோண் - மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே." என்பது தலைமகன் தனது இல்லறத்தைத் தலைமகள்மேல் வைத்துச் சொல்லினமையிற குடிமையாயிற்று. "கேள்கே டூன்றவுங் கிளைஞ ராரவுங் - கேடில் கேளிர் கெழீஇயின ரொழுகவு - மாள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல்சிறந்து" என்புழி இன்னகாரணத்திற் பிரிந்துபோந்து வினைமுடித்தனமாயினும் அவளை "முயங்குகஞ் சென்மோ" என்றமையிற தன் ஆள்வினைக்குத்தக்க பெண்மையான் அவள் ஆற்றியிருந்தாளென்பதூஉங் கருதியகருத்தினாற் காமக்குறிப்புப் பிறந்தமையின், அஃது ஆண்மையாயிற்று. "என்றோ ளெழுதிய தொய்யிலும் யாழநின் - மைந்துடை மார்பிற் சுணங்கு நினைதந்துக்காண்" என்பது யாண்டு. "முல்லை முகையு முருந்து நிரைத் தன்ன - பல்லும் பணைத்தோளும் பேரம ருண்கண்ணு - நல்லேன் யானென்று நலத்தகை நம்பிய - சொல்லாட்டி நின்னொடு சொல்லாற்ற கிற்பாரியார்" என்பது உருவு. "நின்மக ளுண்கண் பன்மா ணோக்கிச் - சென்றோன் மன்றவச் குன்றுகிழ வோனே - பகன்மா யந்திப் படுசுட ரமையத் - தவன்மறை தேஎ நோக்கி மற்றிவன் - மகனே தோழி யென்றனள்" என்பது உருவுநிறுத்த காமவாயில். "கன்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு - முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற - நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும் - பாயல் பெறேன்படர் கூர்ந்து" என்புழி முன்னத்திற் காட்டுதலல்லது தானுரையானென்பது தலைமகனிறையுடைமை கூறியவாறு. "அவன்வயிற் - சேயேன்மன் யானுந் துயருழப்பேன்" எனத்

தன்னிறையுடைமைகாரணத்தாற் காமக்குறிப்பு நிகழ்ந்தவாறு. "பெ ண்ணென் றுரைத்த னமக்காயின்" என்பதும் அது. இது தோழி கூற் றன்றோவெனின், அதுவுந் தலைமகள்குறிப்பெனவே படுமென்பது முன்னர்க் கூறினுமென்பது. "தாதுண் பறவை பேதுற லஞ்சி - ம ணிநா வார்த்த மாண்வினைத் தோள" என்பது அருள்பற்றிப் பிறந்த காமக்குறிப்பு. "அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதரும்" எனும் பாட்டினுட் "தன்னசை யுள்ளத்து நன்னசை வாய்ப்ப" என்பது இ ருவருணர்வும் ஒத்தவாறு; தலைமள்குறிப்பு உணாந்துவநதனனென்ற மையின். இது "செல்வம்புலன்" என்புழிப் புலனெனப்படாது காம த்திற்கே உரித்தாகிய உணர்வாகி வேறு கூறப்பட்டது. "நெய்த னெறிக்கவும் வல்ல னெடுமென்றோட் - பெய்கரும் பீர்க்கவும் வல்ல னிளமுலைமேற் - றொய்யி லெழுதவும் வல்லன்றன் கையிற் - சிலைவல் லான் போலுஞ் செறிவினு னல்ல - பலவல்லன் றோளாள் பவன்" என் பது இருவினுற் காமக்குறிப்புப்பிறந்தவாறு. என்னை? இனையன வல் லுநதல் செல்வக்குடிப்பிறந்தாரை அறிவிக்குமாகலின் அது காமக்கு றிப்பினை நிகழ்த்துமென்பது. இது தலைமகட்கும் ஒக்கும். "உழுந்தினு ந் துவ்வாக் குறுவட்டா நின்னி - னிழிந்ததோ கூனின் பிறப்பு" என் பதும் பிறப்புவகையின்பாற்படும். பிறவும் இவ்வாறேகொள்க. (உரு)

உஎச. நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொற பொச்சாப்பு மடிமையொடு குடிமை
யின்புற லேழைமை மறப்போ டொப்புமை
யென்றிவை யின்மை யென்மனூர் புலவர்.

இது காமக்குறிப்பாகாதன கூறுகின்றது. (இ-ள்.) நிம்பிரி= பொறாமைதோன்றுங் குறிப்பும்: அவை இந்நாட் சிறிதுபொறுத்தா யென்றாற் போல்வன; கொடுமை=கேடுசூழ நினையுந் தீவினையுள்ள மும்: வியப்பு=தலைமகள்பாற் தெய்வத்தன்மைகண்டான்போல் வி யந்தொழுகுதலும்: இனிக் குணத்தின்மேற் கொண்டு தன்னைவியத் தலெனினும் அமையும்; புறமொழி=புறங்கூற்றும்: வன்சொல்=க ண்ணோட்டமின்றிச சொல்லுஞ்சொற்களும்: பொய்ச்சாப்பு=கடைப் பிடியின்றி நெகிழ்ந்திருத்தலும்: மடிமை=சோம்புள்ளமும்: குடி மை= இவள் இழிந்தபிறப்பினளெனத் தன்னை நன்குமதித்தொழுகு தலும்: இன்புறல்=ஒருவரொருவரிற் தாமே இன்புறுகின்றராககினை த்தலும்: ஏழைமை=நுழைந்தவுணர்வினரன்றிவரும் வெண்மையும்: மறப்பு = மறவியும்: ஒப்புமை=இன்னானையொக்கும் இவளென்று அன்புசெய்தலும்: என்று இவை இன்மை என்மனார் புலவர்=இவை

யெல்லாம் இன்றிவரும் தலைமகன்கண் நிகழும் மெய்ப்பாடென்று சொல்லுவர் புலவர் எ-று. எனவே, அவைதம்மை வரையறுத்துக் கூறாது அவற்றுக்காகாதன வரையறுத்துக் கூறினானென்பது. தலைமகட்குரிய மெய்ப்பாடாயின் வரையறுத்துக் கூறினமையின் அவற்றுக்காகாதன கூறல்வேண்டுவதன்றென்பது. ஆகாதவற்றுக்கு உதாரணங்காட்டலாவதில்லை. (உசு)

உஎரு. கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரு
முணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியி
னன்னயப் பொருள்கோ ளெண்ணருங் குரைத்தே.

இது மேற்கூறிய மெய்ப்பாட்டிற்கெல்லாம் புறனடை. "எள்ள லிளமை பேதைமை மடனென் - றுள்ளப்பட்ட நகைநான்கு" என்புழி நகைக்கேதுவாகிய பொருள்கூறியதல்லது அப்பொருள் பற்றிப்பிறந்த நகையுணர்வு புலப்படுமாறு இன்னவாறென்றிலன். இனி "உடைமையின்புறல்" என்றற்றொடக்கத்தனவினும் அவ்வாறு எண்ணியதல்லது அவை உணருமாற்றுக்குக் கருவி கூறியதிலன். அங்ஙனமே பிறவுங் கூறியதிலனாகலான் அதனை ஒருவாற்றாற் கூறுகின்றான். (இ-ள்.) கண்ணானுஞ் செவியானும் யாப்புற அறியும் அறிவுடையார்க்கல்லது மெய்ப்பாட்டுப்பொருள்கோடல் ஆராய்தற்கு அருமையுடைத்து. எ - று. மற்று மனத்துநிகழ்ந்த மெய்ப்பாட்டினைக் கண்ணானுஞ் செவியானுமுணர்தலென்பதென்னையெனின், மெய்ப்பாடுபிறந்தவழி உள்ளம்பற்றி முகம் வேறுபடுதலும் உரை வேறுபடுதலுமுடைமையின் அவை கண்ணானுஞ் செவியானுமுணர்ந்து கோடல் அவ்வத் துறை போயினாரது ஆற்றலென்பதுகருத்து. "இரண்டறி களவிநங் காதலோளே - முரண்கொ டுப்பிற் செவ்வேன் மலையன் - முள்ளூர்க் கானநாற வந்து-நள்ளென் கங்கு னம்மோ ரன்னள் - கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச் - சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி - யமரா முகத்த ளாகித் - தமரோ ரன்னள் வைகறை யானே." என்பதனுள் அமராமுகத்தளாகுதலுந் தமரோரன்னளாகுதலுந் தலைமகற்குப் புலனாகலின் அவை கண்ணுணாவெனப்படும். "ஒழிகோ யானென வழிதகக் கூறி" என்புழித் தலைமகன்மனத்து நிகழ்ந்தவழியெல்லாம் மொழிகோ யானென்ற உரையானே உணர்ந்தமையிற் செவியுணர்வெனப்படும். இங்ஙனம் உணர்தலும் உணர்வுடையார்க்கன்றிப் பெரிதும் அரிதென்பான் எண்ணருங்குரைத்தென்றானென்பது. (உஎ)

மெய்ப்பாட்டியன் முற்றிற்று.



## ஏழாவது

# உவமவியல்.



௨௭௪. வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
வகைபெற வந்த வுவமத் தோற்றம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின் உவமவியல் என்னும் பெயர்த்து. உவமம் என்பது ஒருபொருளோடு ஒருபொருளினை ஒப்புமைகூறுதல். இதனானே இவ்வோத்து நுதலியதூஉம் உவமப் பொருளே கூறுதலாயிற்று. மற்று அகம்புறம் என்பனவற்றுள் இஃது என்ன பொருள் எனப்படுமோவெனின், அவ்விரண்டுமெனப்படும்; மெய்ப்பாடுபோல என்பது. என்னை? "உவமப் பொருளி னுற்ற துணருந் - தெளிமருங் குளவே திறத்திய லான" என மேல்வருகின்றதாகலின். மற்றிவ்விருதிணைப்பொருளும் உவமம்பற்றி வழக்கினுள் அறியப்படுதலானும் உவமம்பற்றியும் பொருள் கூறுகின்றானென்பது. மேல் அகத்திணையியலுள் உவமத்தினை இரண்டாக்கி ஓதினான், உள்ளுறையுவமம் ஏனையுவமமென; அவ்விரண்டனையும் ஈண்டு விரித்துக் கூறுகின்றவாறு. அவற்றுள் ஈண்டு ஏனையுவமத்தினை முற்கூறினான், அஃது அகத்திணைக்கே சிறந்ததின்றாயினும் யாப்புடைமை நோக்கி; உலகவழக்கினுஞ் செய்யுள்வழக்கினும் வருமாகலானுமென்பது. அஃதேல் உள்ளுறையுவமஞ் செய்யுட்கே உரிமையின் அதனைச் செய்யுளியலுட் கூறுகவெனின், உவமப்பகுதியாதலொப்புமை நோக்கி ஓரினப்பொருளாக்கி ஈண்டுக் கூறினானாயினும் வருகின்ற செய்யுளியற்கும் இயையுமாற்றான் அதனை ஈற்றுக்கண் வைத்தான் அது செய்யுட்குரித்தென்னுங் கருத்தானென்பது. எனவே, எழுத்தினுஞ் சொல்லினும் போலச் செய்யுட்குரியன செய்யுட்கென்றே ஓதலும் ஒருவகையாற் பெற்றாம். மற்றுப் பாடல்சான்ற புலனெறிவழக்கம் அல்லாத வழக்கு ஆராயப் பயந்ததென்னையெனின், அப்புலனெறிவழக்கிற்கு உறுப்பாகிய வழக்கினை ஆராய்தலும் அதற்கு உபகாரமுடைத்தாதலானென்றவாறு. மற்றிது மேல் எவ்வோத்தினொடு இயைபுடைத்தோவெனின், மேற்பொருள்புலப்பாடு கூறிய மெய்ப்பாட்டியலோடு இயைபுடைத்து; என்னை? உவமத்தானும் பொருள்புலப்பாடே கூறுகின்றானாகலின். எங்ஙனமோவெனின், ஆபோலும் ஆமா என்றக்கால் ஆமா கண்டறியாதான் காட்டுட் சென்றவழி அதனைக் கண்டால் ஆபோலும் என்னும் உவமையே பற்றி ஆமா இதுவென்று அறியுமாகலானென்பது. இவ்வோத்தின் தலைச்சூத்திரம் என்னுதலி

ற்றூவெனின், உவமத்திற்கெல்லாம் பொதுவிலக்கணங் கூறி அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்-ற்று. (இ - ள்.) தொழிலும் பயனும் வடிவும் வண்ணமும் என்னும் நான்கெனப்படுங் கூறுபட வரும் உவமத்தோற்றம். எ - று. உவமமென்பதனை வினை முதலாகிய நான்கினொடுங் கூட்டி வினையுவமம் பயனுவமம் மெய்யுவமம் உருவுவமமெனப் பெயர்கூறப்படும்.

வினையாற் பயப்பது பயனாதலின் பயத்திற்கு முன் வினை கூறப்பட்டது; அதுபோலப் பிழம்பினாற் தோன்றும் நிறத்தினை அதற்குப் பின் வைத்தான், பயனும் பொருளாக நோக்கி மெய்யினையும் அதனுடன்வைத்தானென்பது. மற்று மெய்யெனப்படுவது பொருளாதலின் அதன் புடைபெயர்ச்சியாகியவினை பிற்கூறுகவெனின், வினையுவமந் தன்னுருபு தொக்குநில்லாது விரிந்தேநிற்றற் சிறப்புடையனவும் உளவாகநோக்கி அது முற்கூறினானென்பது. அது புலிமறவனெனத் தொகாது புலியன்ன மறவனென விரிந்தே நிற்றலும், புலிப்பாய்த்துளெனத் தொக்கு வருதலும் உடைத்தென்பது. தொகை நான்கென எண்ணிக்கொடுத்தான்.

வரலாறு:—புலியன்னமறவனென்பது வினையுவமம், அதுபாயுமாறே பாய்வனென்னுந் தொழில்பற்றி ஒப்பித்தமையின்; அற்றன்றித் தோலும் வாலுங் காலும் முதலாகிய வடிவும் ஏனைவண்ணமும் பயனும் ஒவ்வாவென்பது; ஒழிந்தவற்றிற்கும் இஃதொக்கும். "மாரியன்ன வண்கைத்-தேர்வேளாயைக் காணிய சென்மே" என்பது பயவுவமம்; என்னை? மாரியான் விளைக்கப்படும் பொருளும் வண்கையாற் பெறும் பொருளும் ஒக்குமென்றவாறு. துடியிடையென்பது மெய்யுவமம்; அல்குலும் ஆகமும் அகன்றுகாட்ட அஃகித் தோன்றும் மருங்குலாற் துடி அதனொடு ஒத்தது. பொன்மேனியென்பது உருவுவமம்; பொன்னின்கண்ணும் மேனியின்கண்ணுங் கிடந்த நிறமே ஒத்தன, பிற ஒத்திலவென்பது. இந்நான்கும்பற்றி உவமந் தோன்றுமென்பது கருத்து. உவமத்தோற்றமென்பது மூன்றாவதன் தொகை; உவமத்தாற் பொருள் தோன்றுந் தோற்றமென்றவாறு.

மற்று "அடைசினைமுதல்" என்றாற்போல அடையெனவே இந்நாற்பகுதியும் அடங்கக்கூறிப் பண்புத்தொகையென்புழி வண்ணம் வடிவுமுதலாயின அடங்கியவாறுபோலப் பண்பென்று அடக்குதல்செய்யாது ஈண்டு நான்கெனப் பகுத்ததென்னையெனின், இது பொருளாராய்ச்சியாகலாற் கட்புலனும் பண்பும் உற்றுணரும் பண்பும் வேறாக நோக்கி வடிவினையும் உருவினையும் வேறுபடுத்தான்; என்

னை ? வடிவுபற்றிய பண்பினை இரவின்கண் உற்றுணரப்படும், வண்ணமாயின் அவ்வாறு உற்றுணரப்படாதென்பது. அல்லாக்காற் பகற்குறிக்கட் கூறப்படும் வண்ணம் முதலாயினவும் இரவுக்குறிக்கண் எய்துவான் சொல்லும் வடிவும் பண்பும் ஒன்றாகக்கூறினானென்பது. அல்லதூஉம், உணர்த்துகின்ற திணைப்பொருளினை எளிதிற் புலப்படுத்தலுபகாரம் நோக்கியும் அவ்வாறுபகுத்தானென்பது.

"களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கி - னொளித்தியங்கு மரபின் வயப்புலி போல" என்புழிப் பார்வலொதுக்கமாகிய வினை பண்பெனப்படாது. என்னை ? பண்பென்பது குறிப்பின்றிநிகழுங் குணமாகலினென்பது. அடையெனினும் அதுவேயெனக் கூறி மறுக்க. எனவே, பார்வலொதுக்கமெனப்பட்ட வினைப்பகுதியாற் பிழையாமற் கோடற்குப் பார்வலொதுங்கிநின்றானென்பதும் பிறர்க்கஞ்சிப் பார்வலொதுங்குகின்றானல்லனென்பதுஞ் சொல்லியவன் தலைமைக்கேற்ற உவமையாதலின், அது பொருட்தோற்றமாயிற்று. "மாரியன்ன வண்மை" என்பதூஉம் பண்பாயின், அதன் நிறத்து மேற்கொண்டு வண்மையுங் கரிதெனல்வேண்டுமாகலின் அது பண்பென அடங்காது. "அணைத்தோள்" என்பதும் அது. "உருவுகிளரோவினைப் பொலிந்த - பாவை யியல்கற் றன்ன வொதுக்கினள்" என்றக்கால், வடிவுபற்றி உவமங்கொள்ளவே, உயிரில்லாதாள்போல, அச்சமின்றி, இரவிடை வந்தாளென்னும் பொருள்தோன்றும். வடிவு பண்பெனப்படாது; பண்பு இழிபாகலின். "மாரிப் பீரத் தலர்சில கொண்டே" காட்டி "இன்ன ளாயின ளன்னுதல்" என்றவழிக், குறித்த பருவங் கழிந்ததென்னும் பொருண்மை விளங்கிற்று. உருவுவமம் இவ்வாறு பொருளுணர்த்துதற் பகுதி நோக்கி உவமப்பகுதியென்றான் என்பது. என்றற்கு, இந்நான்கு பகுதியேயன்றி அளவுஞ் சுவையுந் தண்மையும் வெம்மையும் நன்மையுந் தீமையுஞ் சிறுமையும் பெருமையும் முதலாயின பற்றியும் உவமப்பகுதி கூறாரோவெனின், அவையெல்லாம் இந்நான்கனுள் அடங்குமென்றற்கும் அந்நான்கும் இன்னபொருட்பகுதி உடையவென்றற்குமன்றே அவற்றை வகைபெற வரும் என்பானுயிற்றென்பது. "பறைக்குரலெழிலி" என்றக்காற் பறையும் எழிலியும் ஒத்தல் வினைபற்றி உவமைகொள்வான் ஒன்றற்குக் குரல் கூறி ஒன்றனை வாளாது கூறினானாயினும் வினையுவமத்தின் வகையெனப்படும். "கடைக்கண்ணாற் கொல்வான்போ னோக்கி" என்பதூஉம் அதன்வகை.

வந்த என்றதனான் இல்லாத வினை வருவித்துஞ் சொல்லப்படும். அவை "விசும்புரிவதுபோல்" எனவும், "மணிவாழ் பாவை ந

டைக்கற் றன்ன'' எனவும், ''வான்றோய் வன்ன குடிமையும்'' எனவும் வரும். இவை உவமையும் பொருளும் ஆகிய வினைபற்றி வந்திலவாகலின் அதன் வகையெனப்பட்டன. அன்ன ஆங்க என்பன இடைச்சொல்லாகலின் வினைப்பின்னும்வந்தன. ஈடைகற்றன்ன என்புழிக் கற்று என்னும் வினையெச்சந் தன்னெச்சவினை இகந்ததாயினும் அஃது உவமப்பகுதியாகலான் அங்ஙனம்வருதலும் வகையென்றதனானே கொள்ளப்படும். ''கொன்றன்ன வின்னா செயினும்'' என்பதும் அது. ''இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்'' என்பது வினைப்பெயர்பற்றி உவமஞ் சென்றது. பொன்மரம் போலக் கொடுக்குமென்பது பயவுவமத்தின்பகுதியாய் அடங்கும்; என்னை? மழைத்தொழிலாகிய பெயலாற் பயந்த வினையுடன் இடையிட்டுப்போய் உவமங் கொள்ளாது கொடைப்பொருள் இரண்டும் ஒத்தமையின் மெய்யுவமம் எனப்படாது, கொள்வார்க்குப் பயம்ஒத்தலாற் பயவுவமத்தின்வகையாயிற்று. நிலம்போலுங்கொடை என்பதும் அது. ''தெம்முனையிடத்துச்சேயர்கொல்'' என்னும் எல்லைப்பொருண்மை மெய்யுவமத்திற்கு வகையெனப்படும், அஃது அன்னவாகலினென்பது. இடைகிடந்த நிலம் இரண்டினையும் வடிவுபற்றி உவமஞ்செய்தானென்பது. மற்றுச் சேய்மை அணுமைக் குணமாம் பிறவெனின், அற்றன்று; துடியிடை என்றவழி அதன் இடைநுணுக்கமுங் குணனாகும் அவ்வாறு கொள்வார்க்கு என்பது; எனவே நிறப்பண்பு அல்லனவெல்லாம் மெய்யுவமத்தின் வகையெனப்படுவனவாயின. குணமாதலொப்புமையான் அவை நிறப்பண்பிற்கு இனமெனவும்படும். அவ்வாறு திரிபுடைமையின் அவற்றை விதந்தோதாது வகையென்றதனாற் கொண்டானென்பது. தளிர்சிவந்தாங்குச் சிவந்த மேனியென்பது உருவுவமத்தின் வகையெனப்படும்; என்னை? உவமத்தாற் கொள்ளப்பட்டுப் பொருள் நிறமாயினும் அதனை வினைவிரித்தாங்கு விரித்தமையின் அவ்வேறுபாடுநோக்கி வகையெனப்பட்டது. பிறவும் அவ்வாறேகொள்க. இப்பகுதியுடைமைநோக்கி வகைபெறவந்த என்றானென்பது. (௪)

௨௭௭. விரவியும் வருஉ மரபின வென்ப.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்தது; நான்கென மேற் றொகைகொடுத்தமையின் அவை வேறு வருதலெய்தியதனை அவ்வாறேயன்றி விரவியும் வரும் என்றமையின். (இ-ள்.) அந்நான்கும் ஒருபொருளோடு ஒருபொருள் உவமஞ்செய்யும்வழி ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் விரவியும் வரும் அதன் மரபு. எ-று. ''செவ்வானன்னமேனி'' என வண்ணம் ஒன்றுமேபற்றி உவமஞ்சென்றது. ''அவ்வானி - னிலங்கு பிறையன்ன விளங்குவால் வையெயிற்று''

என்றவழி வண்ணத்தோடு வடிவுபற்றி உவமஞ்சென்றது. "காயா மென்சினை தோய நீடிய - பஃறுடுப் பெடுத்த வலங்குருலைக் காந்த - ளணிமலர் நறுந்தா தூதுந் தும்பி - கையாடு வட்டிற் றோன்று - மையாடு சென்னி மலைகிழ வோனே" என்புழி ஆடுதற் றொழில்பற்றியும் வடிவுபற்றியும் வண்ணம்பற்றியும் வந்தது. பிறவுமன்ன. மரபினவென்றதனான் அவை அவ்வாறு விராய்வருதலும் மரபே, வேறு வேறு வருதலே மரபெனப்படாதெனக் கொள்க. (உ)

உஎஅ. உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை.

இஃது எய்தாதது எய்துவித்தது. (இ-ள்.) உவமையெனப்பட்டது உயர்ந்தபொருளாகல்வேண்டும். எ-று. எனவே, உவமிக்கப்படும் பொருள் இழிந்துவரல் வேண்டுமென்பது "அரிமா வன்ன வணங்குடைத் துப்பின்." எனவும், "மாரி யீகை மழைத்தோட் சோழர்" எனவும், "கடல்கண்டன்ன கண்ணகன் பரப்பின்" எனவும், "பொன்மேனி" எனவும் வரும். இவற்றுள் உவமையுயர்ச்சியானே உவமிக்கப்படும் பொருட்குச் சிறப்பெய்துவித்தவாறு கண்டுகொள்க.

உள்ளுங்காலை என்றதனான் முன்னத்தினுணருங்கிளவியான் உவமங்கோடலும், இழிந்தபொருள் உவமிப்பினும் உயர்ந்த குறிப்புப்படச் செயல்வேண்டுமெனவுங் கொள்க. அவை என்யானை என்பாவை என்றவழி அவைபோலும் என்னுங் குறிப்புடையான் பொருள் கூறிற்றிலனாயினும் அவன் குறிப்பினான் அவை வினையுவமையெனவும் மெய்யுவமையெனவும் படும். இவற்றுக்கு நிலைக்களங் காதலும் நலனும் வலியுமென்பது சொல்லுதும், அவை பற்றாது சொல்லுதல் குற்றமாகலின். "அணங்குகொல் * * * மாலுமென்னெஞ்சு" என்பது ஐயுற்று முன்னத்தான் உவமஞ்செய்தது. தாமரையன்று முகமேயெனத் துணிந்தவழியும், மழையன்று வண்டிருத்தலிற் குழலேயெனப் பொருட்குக் காரணங்கொடுத்தவழியும், மதியங்கொல்லோ மறுவில்லையென்று உவமைக்குறைபாடு கூறுதலும், "நுதலு முகனுந் தோளுங் கண்ணு - மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ - யைதேய்ந் தன்று பிறையு மன்று - மைதீர்ந் தன்று மதியு மன்று - வேயமன் றன்று மலையு மன்று - பூவமன் றன்று சுனையு மன்று - மெல்ல வியலு மயிலு மன்று - சொல்லத் தளருங் கிளியு மன்று" என்பனவுமெல்லாம் அவை. இவற்றுண் மலையுஞ் சுனையும் உவமையின்மையின் அவற்றைப் பிறையோடும் மதியோடும் உடன்வைத்து உவமைபோலக்கூறி எதிர்மறுத்தது என்னையெனின், அவையாமாறு "முதலுஞ் சினையும்" என்புழிச் சொல்லுதும்.

"என்ற வியப்ப வென்றவை யெனூஅ" என மேல்வருஞ் சூத்திரத்துள் என்றவென்பதோர் உவமவுருபு கூறினமையின், "வாயென்றபவளம்" எனவும் "வாய்பவளமாக" எனவும் "வாய்பவளம்" எனவும் வருவனவும் அக்குறிப்புவமையின் பகுதியெனவேபடும். இவற்றை வேறுவேறு பெயர்கொடுத்து விரித்துக்கூறாது முன்னத்தினுணர்வனவே இவையெல்லாமென்னுந் துணையே இலேசினாற் கூறி ஒழிந்ததென்னையெனின், இவற்றாற் செய்யுள் செய்வார் செய்யும் பொருட்படைப்பகுதி எண்ணிறந்தனவாகலின், அப்பகுதியெல்லாங் கூறாது பொதுவகையான் வரையறைப்படும் இலக்கணமே கூறியொழிந்தானென்பது. வாயென்றபவளமெனவும் வாய்பவளமாகவெனவும் வாய்பவளமெனவும் வந்த பவளக்குறிப்புவமைகளை இக்காலத்தார் உருவகமென்றே வழங்குப. இனி வாய் பவளமெனவுங் கண் கருவிளையெனவும் பெயர்ப்பயனிலைவரின் அவற்றை ஒற்றுமைகாட்டி உருவகம் என்றாராகலின் அதுவும் உவமையெனவேபடுமென்பது. (௩)

௨௭௩. சிறப்பே நலனே காதல் வலியோ
டந்நாற் பண்பு நிலைக்கள மென்ப.

இதுவும் எய்தாதது எய்துவித்தது. (இ-ள்.) வினை பயன் மெய் உரு என்பனபற்றி உவமை கூறுங்கால் இவைநான்கும் இடனாகப் பிறக்கும் உவமை. எ - று. நிலைக்களமென்பது அவை அவ்வாறு உவமை செய்தற்கு முதலாகிய நிலைக்களனென்றவாறு. "முரசுமுழங்கு தானை மூவருங் கூடி - யரசவை யிருந்த தோற்றம் போலப் - பாடல் பற்றிய பயனுடை யெழாஅற் - கோடியர் தலைவருங் கொண்ட தறிந்" என்பது சிறப்பினாற் பெற்ற உவமமாகலிற் சிறப்புநிலைக்களனாகப் பிறந்தது. "ஓவத் தன்ன விடனுடை வரைப்பின்" என்புழி அந்நகரினது செயற்கைநலந் தோன்றக் கூறினமையின் அதற்கு நிலைக்களன் நலனாயிற்று. "பாவை யன்ன பலராய் மாண்கவின்" என்புழி மகள்கட் காதல் காரணமாக உவமைபிறந்தது. என்யானையென்பதும் அது. "அரிமா வன்ன வணங்குடைத் துப்பின்" என ஒருவன் வலிகாரணமாக உவமம்பிறந்தமையின் அதற்கு நிலைக்களம் அவன்வலியாயிற்று. இவ்வாறு கூறவே உயர்ந்தபொருளின் இழிந்ததெனப்பட்ட பொருள் யாதானும் இயைபில்லதொன்று கூறலாகாதெனவும், உவமையோடு முழுதும் ஒவ்வாமைமாத்திரையாகி அதனோடொக்கும் பொருண்மை உவமிக்கப்படும்பொருட்கண்ணும் உளவாகல்வேண்டுமெனவுங் கூறி, அவைதாமும் பிறர் கொடுப்பப் பெறுவனவும் ஒருபொருட்கட் தோன்றிய நன்மைபற்றியவுங் காதன்மிகுதியால் உளவாகக்

கொண்டு உரைப்பனவுந் தன்றன்மையால் உளவாயின் வலிபற்றின வுமென நான்காமென்றவாறு. இவற்றுக்கெல்லாம் வினை பயன் மெய் உரு என்னும் நான்குந் தலைப்பெய்யுமென்பது.

சிறப்பென்பது, உலகத்துள் இயல்புவகையானன்றி விகாரவகையாற் பெறுஞ் சிறப்பு. நலனென்றது அழகு. காதலென்பது அந்நலனும் வலியும் இல்வழியும் உண்டாக்கியுரைப்பது. வலியென்பது தன்றன்மையானே உள்ளதோர் வலியெனக்கொள்க. இவற்றை நிலைக்களமெனவே இவைபற்றாது உவமம் பிறவாதென்பதாம். தன்மேல் வருகின்ற பகைவனைப் பகைவன் புலிபோலுமென்று வீரக் குறிப்பு அழியாமற் கூறுங் குறிப்பு இன்மையின் அவ்வுவமைக்குத் தோற்றம் ஆண்டில்லைத் தன்வினையுவமமாகலிற் றிரியாதாயினுமென்பது. (௪)

### ௨அ௦. கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்.

இது மேற்கூறிய நிலைக்களத்திற்கு ஓர் புறனடை. (இ-ள்.) அந்நிலைக்களம் நான்கேயன்றிக் கிழக்கிடுபொருளோடு ஐந்தெனவும்படும். எ - று. கிழக்கிடுபொருளென்பது கீழ்ப்படுக்கப்படும்பொருள்; "கிளைஇய குரல கிழக்குவீழ்ந் தனவே" என்புழிக் கீழ்வீழ்ந்தன என்பதனைக் கிழக்குவீழ்ந்தன என்பவாகலின். ஒருபொருளின் இழிபு கூறுவான் உவமத்தான் இழிபு தோன்றுவித்தலின் அதுவும் நிலைக்களமாமென்றவாறு. அவை "உள்ளூ தரவியற் பைபய நுணுகி" எனவும், "அரவுநுங்கு மதியி னுதலொளி கரப்ப" எனவும் வரும். இவை பொருளன்றி உவமையுங் கிழக்கிடப்பட்டனவாலெனின், அங்ஙனமாயினும் அவை பொருளோடு சார்த்தி நோக்க உயர்ந்தனவெனப்படும். (௫)

### ௨அக. முதலுஞ் சினையுமென் றாயிரு பொருட்கு நுதலிய மரபி னுரியவை யுரிய.

இது மேற் கூறிவருகின்ற உவமை முதல் சினை பற்றி வருங்கால் இன்னவாறாகவென்கின்றது. (இ-ள்.) முதற்பொருளுஞ் சினைப்பொருளும் என்னும் அவ்விரண்டுபொருட்குங் குறித்தவகையான் மரபுபடவரின் உரியவை உரியவாம். எ - று. இதன்கருத்து, முதலொடுமுதலுஞ் சினையொடுசினையும் முதலொடுசினையுஞ் சினையொடுமுதலும் வேண்டியவாற்றான் உவமஞ்செய்தற்கு உரியவெனவும், அங்ஙனஞ்செய்யுங்கால் மரபு பிறழாமைச் செய்யப்படுமெனவுங் கூறியவாறு. "வரைபுரையு மழகளிற்றின்மிசை" என்பது முதற்கு முதலே வந்து உவமையாயிற்று. "தாமரை புரையுங் காமர் சேவடி" என்பது சினை

க்குச் சினையே வந்து உவமையாயிற்று. "நெருப்பி னன்ன சிறுகட் பன்றி" என்பது முதல் உவமமாகப் பொருள் சினையாகி வந்தது. "அடைமரை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட -குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ" என்பது சினையுவமமாக உவமிக்கப்படும்பொருண் முதலாயிற்று. நுதலிய மரபென்றதனால் "விசும்பி னன்ன சூழ்ச்சி" என்றக்கால் விசும்பென்பது முதலாதல் கருதியுணர்தல் வேண்டும், முதற்சினைப்பகுதி அதற்கு இன்மையினென்பது. இனி "வேயமன் றன்று மலையு மன்று" என்றவழியும், மலைநோக்காது மலையுள் வேயெழும் இடங்கருதி அவ்விடமன்றென்றவாறெனக் கொள்க. "பூவமன் றன்று சுனையு மன்று" என்பதற்கும் ஒக்கும்.

உரிய என்றது உரியவை என்றதனாற் றிணையும் பாலும் மயங்கிவரும் உவமையுங் கொள்ளப்படும். அவை:—"மாரி யானையின் வந்துநின் றனனே" என்பது திணைமயங்கிற்று. "கூவற் - குராலான் படுதுய ரிரவிற் கண்ட - வுயர்திணை யூமன் போலத் - துயர்பொறுக் கல்லேன் றோழி நோய்க்கே" என்பது உயர்திணைப்பான் மயங்கிற்று. "கடம்பமர் நெடுவே ளன்ன மீளி - யுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்" என்பது ஒருமைப்பன்மைமயங்கிற்று. "இலங்கு பிறை யன்ன விளங்குவால் வையெயிற்று" என்பது அஃறிணைப் பால் மயங்கிற்று. பிறவுமன்ன. இக்கருத்து அறியார் இவற்றையுஞ் "செப்பினும் வினாவினுஞ் சினைமுதற் கிளவிக்கு" என்புழி இலேசு கொண்டு உரைப்ப. (சு)

உஅஉ. சுட்டிக் கூறா வுவம மாயிற்
பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே.

இஃது எய்தாதது எய்துவித்தது. (இ - ள்.) உவமத்திற்கும் பொருட்கும் பொதுவாகிய ஒப்புமைக்குணம் நான்கினையும் விதந்து சொல்லி உரையாதவழி அவ்விரண்டினையும் எதிர்ப்பெய்து கூட்டி ஆண்டுப் பொருந்தியதொன்று பொருந்தியதுபற்றி வினைபயன்மெய் யுருவென்னும் நான்கினுள் இன்னதென்று சொல்லப்படும். எ - று. பவளம்போற் செந்துவர்வாயென்பது சுட்டிக்கூறியவுவமம்; என்னை? இரண்டிற்கும் பொதுவாகிய செம்மைக்குணத்தினைச் சொல்லியே உவமஞ்சொல்லினமையின். அது பவளவாயென்கின்றவழிச் சுட்டிக்கூறாவுவமமாம். ஆண்டுப் பவளத்தினையும் வாயினையுங் கூட்டிப்பார்த்துச் செம்மைக்குணம்பற்றி உவமஞ் செய்ததென்று அறியப்படும்; அல்லாக்கால், வல்லென்ற கல்லிற்கும் மெல்லென்ற இதழிற்கும் உள்ளதோர் ஒப்புமை ஆண்டில்லையென்பது. பிறவுமன்ன. (எ)

உஅங. உவமையும் பொருளு மொத்தல் வேண்டும்.

இதுவும் அது. (இ-ள்.) உவமானமும் உவமேயமுந் தம்மின் ஒத்தனவென்று உலகத்தார் மகிழ்ச்சி செய்யல் வேண்டும். எ - று. மயிற்றோகைபோலுங் கூந்தல் என்பதன்றிக் காக்கைச்சிறகன்ன கருமயிர் என்றுசொல்லின், அஃதொத்ததெனப்படாதென்றவாறு. புலிபோலப் பாய்ந்தான் என்பதன்றிப் பிழையாமற் பாயும் என்பதேபற்றிப் பூசைபோலப் பாய்ந்தான் எனின், அதுவும் ஒப்பென்று கொள்ளாது உலகமென்றவாறு. ஈண்டு ஒத்தவென்பதனை "ஒத்ததறிவான்" என்பதுபோலக் கொள்க. (உ)

உஅச. பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினு மருளறு சிறப்பினஃ துவம மாகும்.

இது மேற்கூறியவாறன்றி வருவதோர் உவமைவிகற்பங் கூறுகின்றது. (இ - ள்) "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை" என்புழி உவமம் உயர்ந்துவரல்வேண்டுமென்றான், இனிப் பொருளினை உவமமாக்கி உவமையை உவமிக்கப்படும்பொருளாக்கி மயங்கக்கூறுங் காலும் அஃது உவமம்போல உயர்ந்ததாக்கிவைக்கப்படும். எ - று. "வருமுலை யன்ன வண்முகை யுடைந்து - திருமுகம் வீழ்ந்த தெய்வத் தாமரை" என்றவழி, வருமுலையுந் திருமுகமும் ஈண்டு உவமையாகி முகையும் பூவும் பொருளாயின, ஆண்டு முலையும் முகமும் உயர்ந்தவாகச் செய்தமையின் அவ்வையே உவமமாயின. இவை உவமத்தொகையாங்கால் முலைக்கோங்கம் முகத்தாமரை எனப்படும். இவற்றை வேறு உருவகமென்றும் பிறர்மயங்குப. சிறப்பென்றதனுன் ஒப்புமை மாத்திரையன்றித் தான் புனைந்துரைக்கக் கருதிய முலையினையும் முகத்தினையும் உயர்ந்தபொருளாகிய உவமத்தினும் உயர்ந்ததாகச் சிறப்பித்துரைத்தானென்பது. மருளறு சிறப்பின் என்றதனுன் அங்ஙனஞ் சிறப்பிக்குங்கால் மயக்கந்தீரச் சிறப்பித்தல் வேண்டும். அஃது உலகினுள் உயர்ந்ததென்று ஒப்பமுடிந்த பொருளினையுஞ் சிறப்பித்தற்கு உவமஞ்செய்பவோவெனிற் செய்யாரென்பது; என்னை? முகமொக்குந் தாமரை என்றால் முகத்திற்குந் தாமரைக்குஞ் சிறப்புடைமை மயங்கிவாராது, பின்னும் முகத்திற்கே சிறப்பாமென்பதுகருத்து. அஃதெனப்பட்டது பொருளாகலான் "உயர்ந்ததன்மேற்று" என்னும் விதி அப்பொருட்கு எய்துவிக்க. (௩)

உஅரு. பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக் குறிப்பின் வருஉ நெறிப்பா டுடைய.

இஃது உவமத்திற்கு ஆவதோர் இலக்கணமுணர்-ற்று. (இ-ள்.) இறப்ப உயர்வும்இறப்ப இழிவும் உவமிக்குங்கால் இன்னாவாகச்செய்யாது சிறப்புடைமையிற் றீராவாகிக் கேட்டார் மனங்கொள்ளுமாற்றான் வருதலே வழக்குவலியாகவுடைய. எ - று. "அவாப்போ லகன்றத னல்குன்மேற் சான்றோ - ருசாஅப் போல வுண்டே நுசுப்பு" என்றவழி, உலகத்தார் அவாப்போலப் பெரிதாகிய அல்குலெனக் கழிபெரும் பரப்பிற்றாகக் கூறினும் அது சிறப்பிற் றீராக் குறிப்பிற்றாதல் வழக்குண்டாகலின் உடம்படப்படும் என்றவாறு. "மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப் - பகுவெண் டிங்க டோன்றி யாங்குக் - கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்" என்றவழிச், கடல்போன்றது கூந்தலெனவுங், கடனடு எழுந்த எண்ணாட் பக்கத்து மதிபோன்றது நுதலெனவுங் கூறினான். அதனாற் கடல்போலும் மயிரொன்றதும் பலகாவதப் பரப்புடைய மதிபோன்றது நுதலென்றதுங் கழியப்பெரியவாயினும், அது வழக்காதலிற் சிறப்பிற் றீராது மனங்கொள வந்ததெனவே படும். "சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்" என்பதும் அது. "சான்றோருசாஅப்போல வுண்டே நுசுப்பு" என்றவழியும், நுண்ணுணர்வின் ஆராய்ச்சி ஒருவர்க்கும் புலனாகாததனை ஒக்கும் இடையென்றமையின் அதுவுங் கழியச் சிறிதாக உவமித்தார். "யானை யனையவர் நட்பொரீஇ நாயனையார் - கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்" என்பதும் அது. இவையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக்குறிப்பின் வந்த வழக்காதல் அமைந்தனவென்பது. பிறவுமன்ன.

இவ்வாறன்றி மேருமால்வரை காம்பொத்து விண்முகடு குடையொத்து விண்மீன்கணம் முத்துப்போன்றனவென வடிவுபற்றி உவமங்கூறுதல் தமிழ்வழக்கன்றாகின்றதென்பது. இனி "வள்ளத்தி னீர்கொண் டுமிழ்ந்த மூலைச்சாந்து மறுகிற்பரந் - தள்ளல் யானை யெல்லா மடிவழுக் கினவே" என்பதோவெனின், அவ்வாற்றானும் இன்பங்கொள்வார்க்கு அவையும் இழுக்கில என்பது. "சோறு வாக்கிய கொழுங்கஞ்சி - யாறு போலப் பரந்தோடிய" என்பதோவெனின், யாறென்ற துணையானே பேர்யாறெனக் கொண்டு உலகிறந்தனவாகாமைக்கன்றே "ஏறு பொரச் சேறாகித் தேரோடத் துகள்கெழுமி" என்பதாயிற்றென்பது. (௪0)

உஅ௬. அவைதாம், அன்ன வேய்ப்ப வுறழ வொப்ப
வென்ன மான வென்றவை யெனாஅ
வொன்ற வொடுங்க வொட்ட வாங்க
வென்ற வியப்ப வென்றவை யெனாஅ

வெள்ள விழைய விறப்ப நிகர்ப்பக்
கள்ளக் கடுப்ப வாங்கவை யெனாஅக்
காய்ப்ப மதிப்பத் தகைய மருள
மாற்ற மறுப்ப வாங்கவை யெனாஅப்
புலலப் பொருவப் பொற்பப் போல
வெல்ல வீழ வாங்கவை யெனாஅ
நாட நளிய நடுங்க நந்த
வோடப் புரைய வென்றவை யெனாஅ
வாறா றவையு மன்ன பிறவுங்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே.

இது உவமத்தினையும் பொருளினையும் ஒப்பிக்குங்கால் இடை வருஞ்சொல் இனைத்தென்கின்றது. அவைதாமென்பது, வினைபய ன்மெய்யுருவென்னுநான்குவமையுமென்றவாறு. (இ-ள்.) இவை எண் ணப்பட்ட முப்பத்தாறுசொல்லும் இவையே போல்வன பிறவும் வழக் கிடத்துஞ் செய்யுளிடத்தும் வேறுபடு குறிப்பினவாகி வரும். எ - று. ஆறாறவையுமென்பது அவை முப்பத்தாறுமென்றவாறு; பல்குறிப்பின வென்பது, அவை இடைச்சொல்லாகித் தொகுத்து வருவனவுந் தொ காதே நிற்பனவும் வினைச்சொல்லாகி வேறுபட நிற்பனவுமெனப் பல வாமென்றவாறு.

இவ் ஓதிய வாய்பாடெல்லாம் நான்கு உவமத்திற்கும் பொ துவென்பது ஈண்டுக் கூறி, இனி அவை சிறப்புவகையான் உரியவா றிதுவென்பது மேற்கூறுகின்றான். பிறவும் என்பதனான் எடுத்தோ தினவேயன்றி, நேர் நோக்க துணைப்ப மலைய ஆர அமர அனைய ஏர ஏர்ப்ப செத்து அற்று கெழுவ எனறற்றொடக்கத்தன பலவும் ஐந் தாம் வேற்றுமைப் பொருள்பற்றி வருவனவும் எனவெஃன் எச்சங்கள் பற்றி வருவனவும் பிறவுமெல்லாங் கொள்க. ஈண்டு எடுத்தோதிய வற்றுள் வரையறை வகையவென மேற் கூறப்படுவன பொதுவகை யான் வருமாற்றுக்கும் உதாரணம் அவற்றை உரிமைவகையான் உதா ரணங்காட்டும் வழிக்காட்டுதும். ஆண்டு எடுத்தோதாதன ஆறெனப் படும். அவை ஒன்ற என்ற மாற்ற பொற்ப நாட நடுங்க என்பன. அஃதேல் ஆண்டு வரையறை கூறப்பட்டன எண்ணான்கு முப்பத்திர ண்டாயினவாறென்னை? முப்பதேயாகல் வேண்டுமால் அவையெ னின், அவற்றோடு புறனடையாற் கொண்டவற்றுள்ளும் நேர நோக்க என்னும் இரண்டு கூட்டி ஓதினான் ஆண்டென்பது.

அவை பொதுவகையான் வருமாறு; "வேலொன்று கண்ணார் மேல் வேட்கைநோய் நீராமோ - கோலொன்று கண்ணொன்று கொண்டு" என்பது வினையுவமம். "மழையொன்று வண்டடக்கை வள ளிபோற் பாடி" என்பது பயவுவமம். "வேயொன்று தோளொருபால் வெற்பொன்றுதோளொருபால்" என்பது மெய்யுவமம். "குன்றியுங் கோபமு மொன்றிய வுடுக்கை" என்பது உருவுவமம். ஒழிந்தனவும் இவ்வாறே நான்குபகுதியும் பற்றி வருமாறு கண்டுகொள்க. "வா யென்றபவளம்" என்றது பணபுவமைபற்றி வந்தது. இது "வாயாகி யபவளம்" என்று ஆக்கச் சொல்லானும் வரும். "மணிநிற மாற்றிய மாமேனி" என்பது உருவுவமம். "மருயம் பொற்ப மலார்ந்த வாண்மு கம்" என்பது மெய்யுவமம். "வேயொடு நாடிய தோள்" என்பது நா டவென்பது வந்த மெய்யுவமம். "படஙகெழு நாக நடுங்கு மல்குல்" என்புழி நடுங்கவென்பது மெய்யுவமம்பறறி வந்தவாறு. இவ் ஓதிய வாய்பாட்டோடு பொருந்த வருஞ் சொல்லெல்லாம் பல்குறிப்பினவெ ன்பதனாற் கொள்ளப்படும் இப்பகுதியெல்லாம் புறனடையாற் கொள் வனவற்றிற்கும் ஒக்கும் இச்சொற் பரப்பெல்லாம் நோக்கி "உவமச் சொல்லே வரம்பிகந் தனவே" என்று ஓதி உரைப்ப; அவை அவ்வச் சொல்லுள் அடங்குமாற்றான் வரம்பிகந்தனவாகாவென்பது.

இனிப் பிறவுமென்றதனான் ஓதப்பட்டன வருமாறு:—"துறந் தார்பெருமை * * * எண்ணிகொண்ட டற்று" என்பதனுட் துணைப்ப வென்பதூஉம் அற்றென்பதூஉம் வந்தன. "குன்றி னனையாருங் குன் றுவர் குன்றுவ - குன்றி யனைய செயின்." என்று அனையவென்பது வநதது. பிறவுமன்ன. "கயமூழ்கு மகளிர் கணணின் மானும்" என இன் வேற்றுமையும் உவமவுருபொடு வநதது. "குளிததுப் பெயலிற் கண்பனி மல்க" என்பது உவமவுருபின்றி இன்னுருபு தன்பொருட்க ண்ணும் வந்தது. "தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்" என்பது எனவெனெச்சத்தால் உவமம் வந்தது. பிறவுமன்ன. இவை எல்லாம் வரைவின்றி நான்குவமமும்பற்றி வருமாறு கண்டுகொள்க. ஐந்தாம்வேற்றுமைப்பொருள் வந்த உவமங்களும் பிறவும் உவமத்தொ கையெனப்படா, தொகைப்படாமையினென்பது. அங்ஙனந் தொகை ப்பட்டவழியும் மற்று மேனுரிமை கூறுகின்றதாமென்பது. "மதியொ த்ததுா மாசற்றதிருமுகம்" என்றவழி உவமமாயினும் உவமத்தொகை யெனப்படாது, தொகைப்பாடின்மையினென்பது. (கக)

உஅஎ. அன்ன வாங்க மான விறப்ப
என்ன வுறழத் தகைய நோக்கொடு
கண்ணிய வெட்டும் வினைப்பா லுவமம்.

இது மேற்பொதுவகையாற் கூறியவாறன்றி வினையுவமைக் கட் சிறந்து வருவன இவையென வரைந்துகூறுகின்றது. (இ-ள்.) இவ்வெட்டும் வினையுவமம். எ-று. "எரியகைந் தன்ன தாமரை பழ னத்து" எனவுங் "கயமா டியானையின் முசனமர்ந் தாங்கு" எனவுங் "கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" எனவும் "புலி விறப்ப வொலி கோற்றீ" எனவும் "புலியென்னக் கலிசிறந் துராஅய்" எனவும் "மின்னுறழ் திமைப்பிற் சென்னி பொற்ப" எனவும் "பொருகளிற் றெருத்திற் புலித்தகைப் பாய்ந்துள்" எனவும் "மானோக்கு நோக்கு மடநடை யாயத்தார்" எனவும் வரும். இனிக், "கார்மழை முழக் கிசை கடுக்கும்" எனவும் "யாழ்கெழு மணிமிடற் றந்தணன்" என வும் "ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல" எனவும் "ஒழுகை நோ ன்பக டொப்பக் குழீஇ" எனவுங் "குறுந்தொடி யேய்க்கு மெலிந்து வீங்கு திவவின்" எனவும் பிறவாய்பாட்டாற் சிறுபான்மை வரும் வி னையுவமம் பொதுவிதியாற் கொள்ளப்படும். பிறவுமன்ன. (கஉ)

உஅஅ. அன்னவென் கிளவி பிறவொடுஞ் சிவணும்.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்தது. (இ-ள்.) வினை க்கே உரிமையெய்தியதாகக்கூறிய அன்னவென்பது நான்குவமைக் கும் உரிமையொக்க வரும். எ-று. அவை "மாரி யன்ன வண்கை" எ னவும் "இலங்கு பிறையன்ன விளங்குவால் வையெயிற்று" எனவுஞ் "செவ்வானன்ன மேனி" எனவும் ஒழிந்த மூன்றற்கும் பெருவரவி ன்றன் வந்தவாறு வழக்குநோக்கி உணர்க. (கரு)

உஅகூ. எள்ள விழையப் புல்லப் பொருவக்
கள்ள மதிப்ப வெல்ல வீழ
வென்றாங் கெட்டே பயனிலை யுவமம்.

இது முறையானே பயனிலையுவமைக்குச் சிறந்த வாய்பாடு இவையென்பதுணர்-ற்று. (இ-ள்.) இவை எட்டும் பயனிலையுவமம். எ-று. "எழிலி வான மெள்ளினன் றருஉங்-கவிகை வண்கைக் கடு மான் றோன்றல்" எனவும், "மழைவிழை தடக்கை வயவா ளெழிலி" எனவும், "புத்தே ளுலகிற் பொன்மரம் புல்ல" எனவும், "விண்பொரு புகழ்விறல் வஞ்சி" எனவுங், "கார்கள்ள வுற்ற பேரிசை யுதவி" எனவும், "இருநிதி மதிக்கும் பெருவள் ளீகை" எனவும், "வீங்கு சுனை நல்லான் வென்ற வீகை" எனவும், "விரிபுனற் பேர்யாறு வீழ யாவதும் - வறையாது சுரக்கு முறைசா றோன்றல்" எனவும் இ வை ஓதியமுறையானே பயவுவமைபற்றி வந்தன.

இவை எட்டும் பெருவரவினவெனவே, சிறுவரவினுன் "அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்" எனவும், "மகன்று யாதல் புரைவதா லெனவே" எனவும், "ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்" எனவும், "பல்லோர் நிகர்ப்ப வந்த வுவகை - யெல்லா மென்னுட் பெய்தந் தற்றே" எனவும், "யாழ்கொண் டன்ன விமிழிசை வியன் மாலை" எனவும், "உருமெனச் சிலைக்கு மூக்கமொடு" எனவும், "யாழ்செத் - திருங்கல் விடரளை யசுண மோர்க்கும்" எனவுஞ், "செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை" எனவும், "விண்ணதி ரிமிழிசை கடுப்பப் - பண்ணமைத்து" எனவும் வரும். பிறவுமன்ன. மேலைச்சூத்திரத்திற் சொல்லியவாறே இதற்கும் வேண்டுவன உரைத்துக்கொள்க. ()

உ௬௰. கடுப்ப வேய்ப்ப மருளப் புரைய
வொட்ட வொடுங்க வோட நிகர்ப்பவென்
றப்பா லெட்டே மெய்ப்பா லுவமம்.

இது முறையானே மெய்யுவமத்திற்குரிய வாய்பாடு கூறுகின்றது. (இ-ள்.) இவ்வெட்டும் மெய்யுவமம். எ-று. "நீர வார நிகழ்மலா கடுப்ப" எனவும், "மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப" எனவும், "வேய்மருள் பணைத்தோண் ஞெகிழ" எனவும், "உரல்புரை பாவடி" எனவும், "முத்துடை வான்கோ டொட்டிய முலைமிசை" எனவும், "பாம்புரு வொடுங்க வாங்கிய நுசுப்பின்" எனவும், "செந்தீ யோட்டிய வெஞ்சுடர்ப் பரிதி" எனவுங், "கண்ணொடு நிகர்க்குங் கழிப்பூங் குவளை" எனவும் இவை ஓதிய முறையானே மெய்யுவமத்துக்கண் வந்தவாறு.

இவற்றை உரிமைகூறிப் பெருவரவினவெனவே ஒழிந்தனவுஞ் சிறுபான்மை வருமென்பதூஉம் அவை பொதுச்சூத்திரத்தான் அடங்குமென்பதூஉங்கொள்க. அவை, "கடல்போ றோன்றல் காடிறந் தோரே" எனவும், "அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி" எனவும் "புலிசெத்து வெரீஇய புகர்முக வேழம்" எனவுஞ், "சேயிதழனைய வாகி" எனவும், "மாணெழில் வேய்வென்ற தோளாய்நீ வரிற்றாங்கும்" எனவுங், "கண்போன் மலர்ந்த சுனையும்" எனவும், "நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த" எனவும், "முழவுறழ் தடக்கையி னியல வேந்தி" எனவும் வரும். இவை புறனடையாற் கொண்டனவும் எடுத்தோதியனவும் பொதுவிதியான் வந்தவாறு. (௧௫)

உ௬௧. போல மறுப்ப வொப்பக் காய்த்த
நேர வியப்ப நளிய நந்தவென்
றொத்தவரு கிளவி யுருவி னுவமம்.

இது நான்காம் என்னுமுறைமைக்கண் நின்ற உருவுவமத்தி ற்குரிய வாய்பாடு கூறுகின்றது. (இ-ள்.) இவ்வெட்டும் உருவுவமம். எ-று. அவை, "தன்சொல் லுணர்ந்தோர் மேனி - பொன்போலச் செய்யு மூர்கிழ வோனே" எனவும், "மணிநிற மறுத்த மலர்ப்பூங் கா யா" எனவும், "ஒண்செங் காந்த ளொக்கு நின்னிறம்" எனவும், "வெ யிலொளி காய்த்த விளங்குமணி யழுத்தின" எனவுங், "கார்விரி கொ ன்றைப் பொன்னேர் புதுமலர்" எனவுந், "தண்டளிர் வியப்பத் தகை பெறு மேனி" எனவும் வரும். நளிய நந்த என்பன இக்காலத்து அ ரியபோலும். அவை வந்தவழிக் கண்டுகொள்க.

இனி இவைபோல உரியவன்றி உருவுவமத்திற்கண்ணும் பொ துச்சூத்திரத்தான் வருமெனப்பட்ட வாய்பாடு சிறுவரவின வருமாறு. "துளிதலைத் தலைஇய மழையே ரைம்பால்" எனவும், "நெருப்பெனச் சிவந்த வுருப்பவிர் மண்டிலம்" எனவுஞ், "செயலையந் தளிரேய்க்கு மெழினல மந்நலம்" எனவும், "ஆயிதழ் புரையு மலர்கொ ளீரிமை" எ னவும், "பான்மருண் மருப்பி னுரல்புரை பாவடி" எனவும், "எரியுரு வுறழ விலவ மலர" எனவும், "பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" எனவும், "பொன்னுரை கடுக்குந் திதலையர்" எனவுந், "தீயி னன்ன வொண்செங் காந்தட் - வேற் கவித்த புதுமுகை செத்து" எனவும் வரும். பிறவுமன்ன. (கசு)

## உகூஉ. தத்த மரபிற் றோன்றுமன் பொருளே.

இது நான்கு உவமைக்கும் ஒரோவொன்று எட்டாகக் கூறிய வாய்பாட்டிற்கெல்லாம் புறனடை. (இ-ள்.) இன்னதற்கு இன்னவாய் பாடு உரியவென்றற்குக் காரணம் என்னையென்றார்க்கு, அவை தத்தம் வரலாற்று முறைமையானே அவ்வவ பொருடோன்ற நிற்கும். எ-று. புலிபாய்ந்தாங்குப் பாய்ந்தானென வினையுவமத்திற்கு வந்த 'ஆங்' கென்கிளவி தளிராங்குச் சிவந்தமேனியெனிற் பொருந்தாது. இ னி எள்ளவென்பது பயவுவமைக்கு ஏற்குமென்றான், அது புலியெ ள்ளும்பாய்த்துளெனலாகாது ; என்னை ? புலிக்கு வலிகூறினன்றி அதனோடு உவமிக்கப்பட்ட சாத்தற்குப் புகழாகாதாகலானென்பது. ஒருவனை வென்றிகூறுங்கால் அவனோடு ஒப்பிக்கின்ற புலியேற்றினை, அவனைக்கண்டு எதிர்நிற்கலாற்றாது புறக்கொடுத்ததெனலும், நடுங்கி ற்றெனலுங், கண்சிம்புளித்ததெனலும் அவற்குப்புகழாமென்பதே க ருதிக்கூறின் கூறின உவமைவெளிப்பாடுமின்றி அவற்கது புகழுமாகா தென்பது கருத்து. இனி மழையினைக் கொடைக்கு இழித்துச்சொல்

லவும் பெறுமவன்றே, அவ்வாறு சொல்லினும் அதனை அவனின் இழித்து நோக்காது உலகமாதலின். விழைய வீழ புல்ல மதிப்ப வெல்ல என்பனவும் உவமை தான் பொருளையொத்தற்கவாவினவென்று பொருள்தோன்ற நிற்குமென்றவாறு. கள்ளவென்பதூஉம் அதன்குணம் அதன்கண் இல்லாமற் கதுவிற்றென்னும் பொருட்டு. பொருவவென்பதூஉம் மழையினையும் ஒருவனையும் உறழ்ந்துணைச் சிறந்தானெனச் சொல்லுதல். இவ்வாற்றான் இவை உரிமைகூறப்பட்டன.

இனி மெய்யுவமத்திற்கு உரியவெனப்பட்டனவும் அவ்வாறே ஒரு காரணமுடைய போலும். கடுப்ப என்றக்கால் வினைக்கும் பயத்திற்கும் ஏலாது; என்னை? கடுத்தலென்பது ஐயுறுதல். புலியோடு மறவனை ஐயுறவேண்டுவதோர் காரணமின்மையானும், மழையின் விளைத்த பயத்தோடு உவமித்தலின் மழையோடு ஒருவனை ஐயஞ்செய்தல் வெண்டுவதின்மையானும், வடிவுகண்டவழி ஐயம்பிறக்குமாகலானும், உருவென்பது குணமாகலாற் பொருள்வேற்றுமை அறிந்தவழி ஐயஞ்செல்லாதாகலானும், மெய்க்குரிமைகூறினுனென்பது. ஏய்த்தலென்பதூஉம் பொருந்துதலாகலின் வடிவிற்கேற்கும். மருள புரைய ஒட்ட ஒடுங்க என்பனவுங் கடுத்தல்போலும் பொருண்மைய; என்னை? மருட்சியும் புரையுணர்வுங் கவர்த்தலைக் காட்டுதலானும், ஒட்ட ஒடுங்க என்பனவும் இரண்டனை ஒன்றென்னும் பொருண்மையவாகலானுமென்பது. நிகர்த்தலும் அவ்வினப்பொருளென்பதனைக் காட்டுதலின் வடிவிற்கேற்றது. ஓடவென்பதும் ஒடுதற்றொழில் வடிவிற்கல்லதின்மையின் அவ்வடிவிற்கேற்றது. பண்பாயிற் பண்பு நிறப்பண்பு ஓடிற்றெனலாகாமையின்.

இனி உருவுவமவாய்பாட்டிற்குங் காரணங் கூறுங்காற் போலுமென்பது இடைச்சொல்லாகலானும், மரீஇவந்த வினைப்பாற் பட்டதாகலானும், அதற்குக் காரணங்கூறப்படாதென்பது. அஃதேல் அதனை இவ்வெட்டற்கும் முன்பு கூறியதென்னை? பொருளுடையவற்றைப் பிற்கூறியெனின், அதுவும் அன்னவென்பதுபோல மற்றை மூன்றுவமத்தும் பயின்றுவருமென்பது எய்துவித்தற்கென்பது. மறுப்ப ஒப்ப என்பன முதலாயினவும் ஒருகாரணமுடையவென்பது ஆசிரியன் பெருவரவினவாக உரிமைப்படுத்துக் கூறினமையின் அறிந்தாம். அல்லதூஉம் மரபிற் தோன்றும் என்றதனான் இவையெல்லாம் மரபுபற்றி அறியல்வேண்டும் எனவே தலைச்சங்கத்தார் முதலாயினோர் செய்யுட்களுள் அவ்வாறு பயின்று வருமென்பது அறிந்தாமன்றே இவ்வாறு சூத்திரஞ் செய்தலானென்பது. (௧௭)

## உகூரு. நாலிரண் டாகும் பாலுமா ருண்டே.

இதுவும் மேலனவற்றையே பகுக்கின்றது. (இ - ள்) வினை பயன் மெய் உரு என்னப்பட்ட நான்கும் எட்டாம் பகுதியும் உண்டு. எ - று. அவை உவமத்தொகை நான்கும் உவமவிரி நான்குமென எட்டாதலும் உடையவென்றவாறு. அவை புலியன்னபாய்த்துள் புலிப்பாய்த்துள் எனவும், மழையன்னவண்கை மழைவண்கை எனவும், வேயன்னதோள் வேய்த்தோள் எனவும், பவளத்தன்னவாய் பவளவாய் எனவுந், தொகைவிரிபற்றி நான்கும் எட்டாயினவாறு. சொல்லோத்தினுள் இவ்வாய்பாடு விரிந்துவருமாறு கூறாது ஆண்டுத் தொகையாராய்ச்சிப்பட்ட மாத்திரையானே கூறினான், அவ்வுவமத் தான் ஈண்டுக் கூறப்படுதல் பொருளினவாகலானும், இடைச்சொல் லேயன்றிப் பொருள்பயப்பனவும் அவ்வுருபாகலானும், அதன்விரி வினை ஈண்டுப் பெயர்த்து கூறி அதன் தொகையொடு படுப்ப இத் துணைப்பகுதியவாம் அந்நால்வகையுவமமும் என்றானென்பது.

இதுவுமொருகருத்து, முன்னர் எவ்வெட்டாகக் கூறியவை ஒவ்வொன்றும் இரண்டு கூறாகி எட்டாம் பகுதியுடைய என்றவாறு. யாங்ஙனமெனின் அன்ன என்னுஞ் சொன்முதலாகிய எட்டனுள் அன்ன ஆங்க மான என்ன எனப்பட்ட நான்கும் வேறொரு பொருளை உணர்த்தாமையின் ஓரினமாகி ஒன்றாகவும், விறப்ப உறழ தகைய நோக்க என்னும் நான்கும் ஒருபொருளுடைமையின் ஒருபொருளாகவும் இவ்வாறே இனநோக்குதற் குறிப்பினவாயிற்று. இவ்வாற்றான் இரண்டெனவும் படும் எட்டுமென்றவாறு. இதனது பயன் இவ்விரண்டு கூற்றான் அடக்கப்படும் வினையுவமச்சொல்லெட்டும் என்றவாறு. விறத்தல் இனமாகச் செறியுமென்னும் பொருட்டு. உறழ்ச்சியுந் தன் இனமாகக் கொண்டுமாறுதற்பொருட்டேயாம். தகுதி அதுவெனப்படுவது என்னும் பொருண்மைத்தாகலின் அவற்றோடொக்கும். நோக்கென்பதூஉம் அவ்வாறே இனமாக்கி நோக்குதற்பொருட்டு. இவ்வாற்றான் இரண்டெனவும்படும் எட்டுமென்றவாறு. இதனது பயன் ஓதிய வாய்பாடு எண்ணான்கறகும் இன்னவாய்பாடும் இன்னவாய்பாடும் ஒருபொருளவென்று அறிதலுந் தத்தம் மரபிற் பொருள்தோன்றவருமென்பதும் இடைச்சொல்லென்றலும் ஒப்பில்வழியாற் பொருள்செய்யினும் இசைச்சொல்லராகா தெரிகிலவினை உருபாயினும் என்பதறிவித்தலுமெனக்கொள்க. மேல்வருகின்றனவற்றிற்கும் இஃதொக்குமென்பது.

இனிப் பயவுவமைவாய்பாடு எட்டனுள்ளும் எள்ள பொருவ கள்ள வெல்ல என்னும் நான்கும் உவமத்தினையிழித்தற் பொருளவாகி ஓ

ன்றுயடங்கும். என்னை? மழையைப் பொரீஇச் சொல்லுதலும் அதனை து தன்மைக்குணங் கொள்ளப்படுதலும் வெல்கையும் அதனை என்று தல்போல்வான் இழித்து வினையே காட்டுதலின். இனி விழைய புல்ல மதிப்ப வீழ என்னும் நான்கும் உவமிக்கப்படும்பொருளினை உயர்த்தா மையானும் உவமத்தினை இழித்துக்கூறுமையானும் அவை நான்கும் ஒருபொருளெனப்பட்டன. இவ்வாற்றாற் பயவுவமையெட்டும் இர ண்டாயினவென்பது.

மெய்யுவமை இரண்டாங்கால் ஐயப்பொருட்கண் நான்குந் து ணிபொருட்கண் நான்குமென இரண்டாம். கடுப்ப மருள புரைய ஓட என்னும் நான்கும் ஐயப்பொருளவாகி ஒன்றும். ஓடவென்பது உவ மத்தின்கண்ணும் பொருளின்கண்ணும் உணர்வுகவர்ந்தோடிற்றென் னும் பொருள்தோன்றவுஞ் சொல்லின் அதுவும் ஐயமெனப்பட்டது போலும். இனி ஏய்ப்ப ஒட்ட ஒடுங்க நிகர்ப்ப என்னும் நான்கும் ஐயமின்றி உவமையும் பொருளும் ஒன்றென உணர்வுதோன்றும் வா ய்பாடாகலின் இவைநான்கும் ஒன்றெனப்பட்டு இவையெட்டும் இர ண்டாயின.

இனி உருவின்கண்ணும் போல ஒப்ப நேர நளிய என்னும் நான்கும் மறுதலையின்றிச் சேர்ந்தனவென்று கோடற்கு வாய்பா டாகி வருதலின் அவையும் ஒன்றெனப்பட்டன. "நளியென் கிளவி செறிவு மாகும்" என்றதனால் அதனொடு சேர்ந்ததென்னும் பொருட் டேயாயிற்று. இனி மறுப்ப காய்த்த வியப்ப நந்த என்னும் நான்கும் உ வமையோடு மறுதலை தோன்றி நிற்கும் பொருளவாகலின் நான்கும் ஒன்றெனப்பட்டு இவையும் இரண்டாயின. நந்துதலென்பது கேடு. வியத்தலென்பது உவமையான் வியக்கததக்கது பொருளெனவே அ தன்கண் அக்குணமின்றென மறுத்தவாறும். காய்த்தலென்பதூஉம் உவமையைக் காயப்பித்தலாகலின் அதுவும் மறுத்தலென்பதன் பொருளெனப்பட்டது.

இவ்வாறு இவையெல்லாந் தொகுப்ப எட்டாதலும் உண்டெ ன்பது இதன்கருத்து. இவற்றுட் பலவற்றையுஞ் செயவெனெச்சவா ய்பாட்டால் ஓதியது என்னையெனின் அஃது உடம்பொடு புணர்த் தலென்பதனான் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் வினைச்சொற்போ லநிற்குமெனவும் அதனானே பெயரெச்சமும் வினையெச்சமும் முற்றுமா கி நிற்குமெனவும் அவையுந் தெரிநிலைவினையுவமையாய் வருமெனவும் அறிவித்தற்கென்க. இவற்றை இவ்வாறு எட்டாகச் சொல்லுதல் பெ ரிதும் நுண்ணுணர்விற்றெனவுணர்க. (கஅ)

உகச. பெருமையுஞ் சிறுமையு மெய்ப்பா டெட்டன்
வழிமருங் கறியத் தோன்று மென்ப.

இது மேற்கூறிய உவமை இன்னுமொருவாற்ருன் எட்டெனப்படுமென்பது உணர்த்து. (இ-ள்.) பெருமைபற்றியுஞ் சிறுமைபற்றியும் ஒப்புமைகொள்ளப்படும் உவமை மேற்கூறிய மெய்ப்பாடெட்டன் வழித் தோன்றுமென்று சொல்லுவர் புலவர். எ-று. மெய்ப்பாடு எட்டென்பன "நகையே யழுகை யிளிவரன் மருட்கை - யச்சம் பெருமிதம் வெகுளி யுவகை" என மெய்ப்பாட்டியலுண் மேற்கூறப்பட்டன. "களவுடம் படுநரிற் கவிழ்ந்து நிலங்கிளையா" என்பது நகையுவமம்; என்னை? தலைமகனைக் கண்டறியாதாள்போலக் கரந்தொழுகுகின்ற பரத்தை அவனோடு ஒப்புமைகண்டு தனிநின்று விளையாடும் புதல்வனைகொண்டு மகிழ்கின்ருளை, வாயிற்கதவம் மறைந்து நின்ற தலைமகள் நீயும் அம்மகவிற்குத் தாயேகாண் என்றவழிக், களவுகண்டபொருளோடு கையகப்பட்ட கள்வர்போலச் செய்வதறியாது தடுமாறி முகம் வேறுபட்ட நிலைமையை உவமித்துச் சிரித்தமையின் நகையுவமமாயிற்று. "கலங்கவிழ்த்த நாயகன்போற் களைதுணை பிறிதின்றிப் - புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்" என்பது அவலவுவமை; கலங்கவிழ்த்த நீகாமன்போலப் புலம்பினளென்றமையின் அப்பெயர்த்தாயிற்று. "பெருஞ்செல்வ ரில்லத்து நல்கூர்ந்தார் போல - வருஞ்செல்லும் பேருமெ னெஞ்சு" என்பது இளிவரலுவமம்; என்னை? தலைமகன்மாட்டு இன்பவிளையாட்டெய்துவார் பலரையுங்கண்டு நெஞ்சு நீரப்புன்கணெய்தித் தனிநின்றும் புகப்பெருது இளிவந்தமையின் அப்பெயர்த்தாயிற்று. "ஈரநது ளின்னவை தோன்றி னிழற்கயத்து - ணீருட் குவளைவெந் தற்று." என்பது மருட்கையுவமம்; என்னை? நிழற்கயத்தின் குவளை வெவன வின்மையின் இஃது அற்புதமாயிற்று. "சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன் - பாம்பகத்துக் கண்ட துடைத்து" என்பது அச்சமாகலின் அச்சவுவமை. "மல்லலை மறஞ்சாய்த்த மால்போற்றன் கிளைநாப்பட்—கல்லுயர் நனஞ்சாரற கலந்தியலு நாடகேள்" என்பது பெருமிதவுவமை. "கூற்று வெகுண்டன்ன முன்பொடு - மாற்றிரு வேந்தர் மண்ணேக் கினையே" என்பது வெகுளியுவமம். "பாடிச் சென்ற பரிசிலர் போல வுவவினி வாழியெ னெஞ்சே" என்பது உவகையுவமை. பிறவுமன்ன. இவற்ருன் எண்வகை மெய்ப்பாடும்பற்றி உவமை எட்டெனப்படுமென்று அறிந்து கூறினன். "பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீரா" என்புழிப் பெற்ருமாகலின் மெய்ப்பாடெட்டன்வழித் தோன்றுமென்னுது மருங்கறிய வென்றதனுற் பெருமையுஞ் சிறுமையும் பற்றி வருதல் வழிமருங்கெ

னவும் அவை பற்றாது மெய்ப்பாடு எட்டும்பற்றி வாளாதே உவமைவருதல் செவ்விதெனவுங் கொள்ளப்படும். "நீருட் குவளைவெந் தற்று" என்பது பெருமைபற்றியது. என்னை? உலகநடையிறந்ததோர் உவமை கூறி அதனோடு தலைமகன் ஈரத்தினை ஒப்பித்தமையின். "களவுடம் படுநரிற் கவிழ்ந்துநிலங் கிளையா" என்பது தனக்குநிகராமல் இழித்துரைத்தமையிற் சிறுமைபற்றிவந்ததாம். உவமையும் மெய்ப்பாடும் பொருள்களை அறிவிப்பனவாகி அவைவேறுவேறுபொருள் அறிவித்தலின் ஒத்து வேறுடையனவாயினுஞ் சிறுபான்மை மயங்கியும் வருமென்றற்கு இது கூற வேண்டியதென்பது. (கக)

௨௯௫. உவமப் பொருளி னுற்ற துணருந்
தெளிமருங் குளவே திறத்திய லான.

இஃது எய்தாததெய்துவித்தனுதலிற்று; உவமையோடு பொருள் ஒவ்வாதெனவும் ஒப்புமை சாத்திக் கொள்ளுமாறுணர்த்தினமையின். (இ - ள்.) உவமப்பொருளின் = உவமையெனப்பட்ட பொருளான்: இன் உருபு ஆன் உருபின்கண் வந்தது; உற்றதுணருந் தெளிமருங்குள = உவமிக்கவரும் பொருட்குற்றதெல்லாம் அறிந்து துணியும் பகுதியுமுள : திறத்தியலான = அங்ஙனந் துணியப்படும் பொருட்டிறம் பலவாகிவரும் இலக்கணவகையான். எ-று. அப்பகுதி பலவும் உற்றுணராமற் சொல்லியவழியும், அஃது உணரவருமென்பது கருத்து. திறத்தியல எனப்பட்ட பகுதியாவன, மேற்கூறப்பட்ட மெய்ப்பாடெட்டும்பற்றி உவமங்கொள்ளுங்கால், உற்றதுணருந் தெளிமருங்கென உவமானவடைக்கு உவமேயவடை குறைந்துவருவனவும் யாதும் அடையின்றி வருவனவுமென்று இவ்விரண்டும் உற்றுணராமற் சொல்லியவழி, அவற்றுக்கும் உவமைப்பொருளே தெளிமருங்காமெனவும் வாளாதே உவமஞ்செய்து உற்றதுணர்த்தாதவழியும் அதுவே தெளிமருங்காமெனவும் இன்னோரன்ன கொள்க. உதாரணம். "களவுடம் படுநரிற் கவிழ்ந்து நிலங் கிளையா" என்றவழிக் கண்டோர்க்கெல்லாம் பெருநகையாகக் களவுண்டாகப்படுநரிற கவிழ்ந்து நிலங்கிளையாவென உற்றதுணரக் கூறியதிலனாயினுங் கையொடுபட்ட களவுடையார் போல நின்றாளென்னும் உவமைப்பொருளானே எள்ளுதற்பொருள் தோன்றி நகை புலப்படுவதாயிற்று. "சாறுதலைக் கொண்டெனனுமப்பெண்ணீற் றுற்றெனன" என்னும் பாட்டினுள் உவமப்பொருளாகிய போழ்தூண்சேக்குப் பல அடை கூறி அதனோடு உவமிக்கப்படும் போர்த்தொழிலினை யாதுமோர் அடையின்றி வாளாது கூறினானாயினும் உவமப்பொருளானே போர்த்தொழிற் குற்றதும் உணரக்கூறினானாம். என்னை? உண்டாட்டுங் கொடையும் உரனொடு நோக்கி மறத்தவும் மேத

லாகிய உள்ளக்கருத்தினுன் ஒருகணத்துள்ளே பலவேர்தரை ஒருங்கு வென்றற்கு விரைகின்றது போர்த்தொழிலென்பது தெளியப்பட்டமையின். "உழுத நோன்பக டழிகின் ருங்கு" எனவும் "மருந்துகோண் மரத்தின் வாள்வடு மயங்கி" என்ருற்போல்வனவும் அவை. இனி வாளாதே உவமஞ்செய்து உற்றதுணர்த்தாதவழித் தெளியுமாறு; "உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க் - கச்சாணி யன்னு ருடைத்து." என்பதனுள் அவன் செய்கைவன்மை கூருராயினும் அச்சாணியென்று உவமப்பொருள்தானே அச்செய்கைவன்மை கூறிற்று. "வேனிற் புல்லன்ன நுந்தையை நோவா யார்" என்பதும் அது. ஒழிந்தனவுமன்ன. இனி உவமத்தின் உற்றதுணர்கவென்றது பொருளென்றதனுற் பொருட்கு அடுத்த அடையும் உவமவடைக்கேற்றது உணரப்படாதன களையப்படுமென்பது. அது "பாசடை நிவந்த கணைக்கா னெய்தல் - வினமீ னிருங்கழி யோத மல்குதொறுங் - கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" என்றவழிப் பாசடைநிவந்த கணைக்காலென மெய்தலாகிய பொருட்கு வந்த அடையிரண்டுங் கண்ணெனப்பட்ட உவமத்திற்கேறப வாராமையான் அவை தெளிமருங்கில வென்று களைந்துகொள்க. ஒழிந்தனவுமன்ன. மற்றுப் "புறமதி யன்ன திருமுக மிறைஞ்சி" என்றவழி அகத்துத் தோன்றும் மறுப்போலப் புறத்துமறு மதிக்கில்லையென்பதூஉம் புறமதிபோலக் கறைதீர்ந்த முகமென்பதூஉம் உவமப்பொருளின் உற்றதுணருந் தெளிமருங்கென்றதனுற் கோடுமோவெனின், அங்ஙனங் கொள்ளாமைக்கன்றே வருகின்ற சூத்திரமென்பது. (உ०)

உகூசு. உவமப் பொருளை யுணருங் காலை
மரீஇய* மரபின் வழக்கொடு படுமே.

இது மேலதற்கோர் புறனடை; மேல் உவமப்பொருளானே உற்றதுணரச் செயல்வேண்டுமென்ருன் இனி அங்ஙனம் உணருமாறு இது கூறினுனுதலின். (இ-ள்.) உவமப்பொருளான் உற்றதுணருங்காலை மரீஇவந்த வழக்கொடுபடுத்து அறியப்படும். எ-று. அதுவருமாறு; "களவுடம் படுநரிற் கவிழ்ந்து நிலங் கிளையா" என்பது களவுடம்படுநர்க்குள்ள வேறுபாடு உலகத்து அடிப்படவந்த வழக்காறலான் அஃது ஏதுவாக அதனையும் அறிந்துகொள்ளப்படுமென்றவாறு. எனவே, உலகத்துவழக்கினுள் அடிப்படத்தோன்றும் உவமையாயிற்ருயினும் உவமப்பொருள் புலப்பாடு செய்யாது "புறமதிபோலுமுகம்" என்றது போலவென்பது இதன்கருத்து. (உக)

உகூஎ. இரட்டைக் கிளவி யிரட்டை வழித்தே.

இஃது எய்தாததெய்துவித்தது; அடையொடு வந்த பொருளொடு புணர்க்குமாறு கூறினமையின். (இ-ள்.) இரட்டைக்கிளவி = அடையும் அடையடுத்தபொருளுமென இரண்டாகச் சொல்லப்படுங் கிளவி: இரட்டைவழித்தே = அடையும் அடையடுத்த பொருளுமென இரண்டாக்கி நிறுத்தப்படும் உவமையின் வழித்து. எ-று. அது "பொன்காண் கட்டளை கடுப்பச் சண்ணம் - பைம்பூண் சுண்ணம் புடைத்த மார்பினன்" எனவரும். தன் பைம்பூண் புடைத்த செஞ்சுவட்டினையும் மார்பினையும் பொன்னுரையோடுங் கல்லோடும் உவமித்தமையின் இரட்டைக்கிளவி இரட்டைவழித்தாயிற்று. இரட்டைக்கிளவியெனப் பொருளினை முற்கூறியதனான் இரண்டுபொருளினை ஒன்றாகக் கூட்டி உவமிக்கக் கருதினான் உவமையினையும் இரண்டு ஒன்றாக்கியே உவமிக்குமென்பது கருத்து. உம்மையான் ஒற்றைக்கிளவியும் இரட்டைவழித்தாகி வருவனகொள்க. அது "கருங்கால் வேங்கை வீயுகு துறுக - லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை" என வரும். இரும்புலிக்குருளையென்றதனையே துறுகல்லோடும் வேங்கைவீயோடும் ஒப்பித்தமையின் இப்பெயர்த்தாயிற்று. (உஉ)

உகூஅ. பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
முன்னை மரபிற் கூறுங் காலைத்
துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே.

இது மேலெல்லாம் ஏனையுவமங் கூறி உள்ளுறையுவமம் உணர்-ற்று. மேல் இசைதிரிந்திசைக்குமெனப்பட்டவற்றின் பகுதியாயினும் இதனை ஆண்டுக்கூறாது ஈண்டுக் கூறினான் உள்ளுறையுவமமாகலானும் இவ்வோத்து உவமவியலாகலானுமென்பது. (இ-ள்.) பிறிதொடு படாது = உவமையோடு உவமிக்கப்படும்பொருள் பிறிதொன்றுதாராது: பிறப்பொடுநோக்கி = உவமநிலங்களுட் பிறந்த பிறவிகளோடு சார்த்தி நோக்கி: முன்னை மரபிற் கூறுங்காலை = சான்றோர் இதற்கு இஃது உவமையென்று சொன்னமரபினாற் கூறுங்காலை: துணிவொடு வரூஉம் துணிவினோர் கொளினே = இன்னபொருட்கு இஃது உவமமாயிற்றென்பது துணிந்து கொள்ளத் தோன்றும் அவ்வாறு துணிந்துகொள்ளும் உணர்வுடையோர்கொள்ளின். எ-று. எனவே, அஃது எல்லார்க்கும் புலனன்று நல்லுணர்வுடையோர்க்கே புலனென்பதூஉம் அவர்கொள்ளச்செய்யவேண்டுமென்பதூஉங் கூறியவாறு. இதனானே செய்யுளுட் பயின்றுவருமென்பது கூறினாம். அவற்றிற்கு உதாரணம் மேற்காட்டுதும். மற்றிதனை உவமையென்றதென்னை? உவமையும் உவமிக்கப்படும்பொருளுமாகநிற்றலிக் கூறுணு

யினெனின் அங்ஙனங் கூறுஞயினும் உவமம்போன்று பொருள்கொள்ளப்படுதலின் அதனை உவமையென்ருன். அஃது ஒப்பிஞகிய பெயரொன்பது; என்னை? இவற்றை உவமப்போலியென்பது கூறுமாகலின். (௨௯)

௨௯௯. உவமப் போலி யைந்தென மொழிப.

இது மேற்கூறிய உள்ளுறையுவமை ஐவகைப்படுமென்கின்றது. (இ-ள்) உள்ளுறையுவமை ஐந்துவகையெனக் கூறுவர் புலவர். எ-று. அவையைந்துமாமாறு முன்னாச்சொல்லுதும். இதனதுபயம் வினையுவமத்திற்கு நிலைகளம் ஐந்து ஓதினன், அவ்வாறே இதற்கு நிலைக்களம் ஓதாது அவைபோறலின் அவையே நிலைக்களமாமென்றலும் வினையுவமதத்துள் ஒருசாதியோடு ஒருசாதியினை உவமித்தல் வழக்கன்றுயினும் உள்ளுறையுவமத்திற்கு அமையுமென்றலுமென்பது. ()

௩00. தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினு முறுப்பினு முருவினும்
பிறப்பினும வரூஉந் திறத்திய லென்ப.

இது மேற்கூறிய ஐந்தும் இவையென்கின்றது. (இ-ள்.) வினை பயன் மெய் உருவென்ற நான்கினும் பிறப்பினும் வரும் மேற்கூறிய ஐந்தும். எ-று. உறுப்பென்றது மெய்யினை; உடம்பினை உறுப்பென்பவாகலானும் மெய்யுவமமெல்லாம் உறுப்பினையேபற்றிவருதல் பெரும்பான்மையவென்றற்கும் அவ்வாறு கூறினனென்பது. தவலருஞ்சிறப்பினத்தன்மை நாடின் என்றதனன் வினையுவமத்தினும் உள்ளுறையுவமமே செய்யுட்கும் பொருளிலக்கணத்திற்குஞ் சிறந்ததென்பது. அவை வருமாறு;* "கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை - சுரும்புபசி களையும் பெரும்புன லூர - புதல்வ னீன்றவெம் முயங்க - லதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே." என்பது வினையுவமப்போலி; என்னை? தாமரையினை விளைப்பதறகன்றிக் கரும்புநடுதற்குச் செய்த பாத்தியுட் தானேவிளைந்த தாமரை சுரும்பின்பசி தீர்க்கு மூரனென்ருள். இதன்கருத்து, அதுகாதற்பரத்தையர்க்கும் இற்பரத்தையர்க்கும் என்றமைககப்பட்ட கோயிலுள் யாமுமுளமாகி இல்லறம் பூண்டு விருந்தோம்புகின்றனம் அதுபோலவென்பதாகலான் உவமைக்குப் பிறிதொருபொருள் எதிர்ந்து உவமஞ்செய்யாது ஆண்டுப் பிறந்தனவற்றெடு நோக்கிக் கருத்தினுற் கொள்ளவைத்தலின் இஃது உள்ளுறையுவமமாயிற்று. அவற்றுள்ளும் இது சுரும்புபசிகளையுந் தொழிலோடு விருந்தோம்புதற்றெழில் உவமங்கொள்ள நின்றமையின் வினையுவமப்போலியாயிற்று. இங்ஙனங் கூறவே இதனை இப்பொருண்மை

த்தென்பதெல்லாம்-உணருமாறென்னையெனின் முன்னர்த் "துணிவொடுவருஉந் துணிவினோர் கொளினே" எனல் வேண்டியது இதன் அருமை நோக்கியன்றேயென்பது. அல்லாக்காற் கரும்புநடுபாத்திக் கலித்ததாமரை சுரும்புபசிகளையும் பெரும்புனலூர என்பது பயமில வென்பது கூறலாமென்பது. "கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குந் - துறைகெழு ழூரன் கொடுமை நாணி- நல்ல னென்றும் யாமே - யல்லனென்னுமென் றடமென் றோளே." என்பது பயவுவமப்போலி. இதனுட் தலைமகன் கொடுமைகூறியதல்லது அக்கொடுமைக்கேதுவாகியதொன்றுவிளங்கக் கூறியதிலளாயினும் இழிந்தவேழம்உயர்ந்தகரும்பிற்பூக்குமெனவே அவற்றிற்கும் இழிபுயர்வாமென்பதொன்றில்லை எல்லாரும் இன்பங்கோடற்குரியர் தலைமகற்கென்றமையின் யாமும் பரத்தையரும் அவற்கு ஒத்தனமென்றமையின் அவை கூறினாளென்பது. "நீருறை கோழி நீலச சேவல்- கூருகிர்ப் பேடை வயாவு மூர - புளிங்காய் வேட்கைத் தன்றுநின் - மலர்ந்த மார்பிவள் வயவு நோய்க்கே." என்பதும் அது. நீருறைகோழிநீலச்சேவலை அதன் கூருகிர்ப்பெடை நினைந்து கடுஞ்சூலான்வந்த வயாத் தீர்தற்பயத்தவாகும், அதுபோல நின் மார்பு நினைந்து தன்வயவு நோய்தீரும் இவளுமென்றவாறு. புளிங்காய் வேட்கைத்தென்பது, நின்மார்புதான் இவளை நயவாதாயினும் இவடானே நின்மார்பை நயந்து பயம்பெற்றாள்போலச் சுவைக்கொண்டு சிறிது வேட்கைதணிதற்பயத்தளாகும்; புளியங்காய்நினைய வாய் நீர் ஊறுமாறுபோல என்பது. "ஒன்றேனல்லெ னொன்றுவென் குன்றத்துப் - பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை - குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார் - நின்றுகொய மலரு நாடனொ - டொன்றேன் றோழி யொன்ற னானே" என்பது மெய்யுவமப்போலி; என்னை? மிதியுண்டு வீழ்ந்த வேங்கை குறையுயிரோடு மலர்ந்தாற்போல யானும் உளேனாயினேனென்றமையின். "வண்ண வாண்டமை துளங்குவளை விழையே - யொண்ணுத லரிவை பண்ணை பாய்ந்தெனக் - கண்ணுறுங் குவளை நாறித் - தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே." இது உருவுவமம். நீ புனலாடிய ஞான்று பரத்தை பாய்ந்தாடிய புனலெல்லாந் தண்ணென்றதெனக் கூறியவழி, அத்தடம்போல இவள் உறக்கலங்கித் தெளிந்து தண்ணென்றாளென்பது கருதியுணரப்பட்டது; அவளொடு புனல்பாய்ந்தாடிய இன்பச் சிறப்புக்கேட்டு நிலையாற்றாளென்பது கருத்து. இது நிறமன்றோவெனின் நிறமும்பண்பாகலின் அந்நிறத்தோடு நிறமல்லாதபண்புங் கொள்ளப்படுமென்பது "வகைபெறவந்த உவமத்தோற்றம்" என்புழிக் கூறினானென்பது "பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய் - வாளை நாளிரை பெறூஉ

மூர் - வெண்மலர் தொலைவ தாயினுந் - துன்னலம் பெருமபிறர் தோ ய்ந்த மார்பே" என்பது பிறப்புவமப்போலி. நல்லகுலத்திற்பிறந்தும் இழிந்தாரைத் தோய்ந்தமையான் அவர்நாற்றமே நாறியது, அவனை யே பாதுகாவாய், மேற்குலத்துட்பிறந்த எம்மைத் தீண்டலென்பாள் அஃதெல்லாம் விளங்சக் கூறாது பொய்கைப் பள்ளிப் பிறந்த நீர்நாய் முன்னாட் டின்ற வாளைமீன்புலவுநாற்றத்தோமே் பின்னாளும் அதனை யே வேண்டும் ஊரன் என்றமையிற் பரத்தையர்பிறப்பு இழிந்தமை யுந் தலைவிபிறப்பு உயர்ந்தமையுங் கூறி அயன்பிறப்பின் உயர்வுங் கூ றினமையின் இது பிறப்புவமப்போலியாயிற்று. இவையெல்லாங் கருதிக் கூறிற் செய்யுட்குச் சிறப்பின்றெனவும், வாளாது நீர்நாய்வா ளை பெறுஉமூரனென்றதனான் ஒருபயமின்றெனவுங்கொள்க. பிறப் பொடுவரூஉந் திறத்தவென்றது தலைமகனால் இவ்வாறு திறப்பாடு வே றுமுளவென்பதூஉங்கொள்க. அவை "தன்பார்ப்புத் தின்னு மன் பின் முதலையொடு - வெண்பூம் பொய்கைத்தவ னூரோ யதனாற் - றன்சொ லுணர்ந்தோர் மேனி - பொன்போலச் செய்யு மூரிழ வோ னே" என்றவழித் தன்பார்ப்புத்தின்னும் அன்பில் முதலையென்ப து இன்னுந் தலைமகனது கொடுமைக்கு உவமையாயிற்று. வெண்பூ ம்பொய்கைத்து அவனூரென்பது தலைமகள்பசப்புநிறம்பற்றி உவமை யாயிற்று. ஆதலான் வினையுவமமும் உருவுவமமும் ஒருசெய்யுளுள்ளே தொடர்ந்து ஒருங்குவருதலும் உடையவென்பது. அவை "தன்பார் ப்புத் தின்னு யன்பின் முதலையொடு * * * பொன்போலச் செய்யு மூரிழவோன்" என்றவழி, இன்னதிறத்தனென்றதனானே இத்தன் மைத்தாகிய ஊரனையானெனச் சொல்லுதலுந், தலைவனூரின்கணுள் ளன சொல்லத் தலைவற்கேயன்றித் தலைவிக்கேற்ற உவமைதோன்றச் செய்தலுமென உவமங்கூறியவழி உள்ளுறையுவமங்கோடலும், பிற வாறு வருவனவுளவாயினும் எல்லாங்கொள்க. "தேர்வண் கோமான் றேனூ ரன்னவிவள்" என்பது அவனூரனையாளென வந்தது. வெ ண்பூம்பொய்கைத்து அவனூரோ எனத் தலைவனூரின் உள்ளதொன் றனாற் தலைவிக்குவமையே பிறப்பித்தவாறாயிற்று. அல்லாக்கால், "வெள்ளையாம்பலடைகளை" என்றதனாற் பயமின்றென்பது. (உரு)

**௬௦௧. கிழவி சொல்லி னவளறி கிளவி**
**தோழிக் காயி னிலம்பெயர்ந் துரையாது.**

இது மேற்கூறிய உள்ளுறையுவமைக்காவதோர் இலக்கண ம். (இ-ள்.) ஐந்துவகைப்பட்ட உவமப்போலியும் பிறிதொடுபடா து பிறப்புநோக்கி உணரக்கூறியவழி, அக்கூற்றுத் தலைமகட்குந் தோ

றிக்கும் உரித்தாங்காற், தலைவிக்காயின் அவளறியுங் கருப்பொருளா னே செய்யல்வேண்டுங்; தோழிக்காயின் அந்நிலத்துள்ளனவெல்லாஞ் சொல்லவும்பெறும் பிறநிலத்துள்ளன அறிந்துசொல்லினளாகச் செய்யுள் செய்யப்பெறுமொன்றவாறு. இதனது பயங், தலைமகள் இந்நிலத்துள்ளனவெல்லாம் அறியுந்துணைப் பயிற்சியிலளெனவும் அவளாயத்தாராயின் இந்நிலத்துள்ளன அறியச் சிறைந்ததின்றெனவுங் கூறியவாறு. "ஒன்றேனல்லெ னென்றுவென்" என்னும் பாட்டினுட், பொருகளிறுமிதித்த நெரிதாள்வேங்கைமரம் படப்பையிலுள்ளதாகலானுந் தன்னூற் பூக்கொய்யப்படுமாசலானும் அஃது அவளறிகிளவியெனப்பட்டது. "தன்பார்ப்புத்தின்னு மன்பின்முதலை" என்பது தோழி கூற்று. என்னை? அவற்றின் செய்கையெல்லாம் அறியாளன்றே தலைமகள் பெரும் பேதையாதலினென்பது. அதிகாரத்தானின்ற உள்ளுறையுவமையென்பதனை அவளறிகிளவியென்றதற்குப் பெயர்ப்பயனிலையாகவும் நிலம்பெயர்ந்துரையாதென்னும் முற்றுவினைக்குப் பெயராகவும் வேறுவேறு சொல்லிக்கொள்க. (உசு)

௩௦உ. கிழவோற் காயி னுரனொடு கிளக்கு
மேனோர்க் கெல்லா மிடம்வரை வின்றே.

இதுவும் அது. (இ-ள்.) கிழவோன் சொல்லும் உள்ளுறையுவமந் தன்னுடைமைதோன்றச் சொல்லப்படும், ஏனோனெனப்பட்ட பாங்கனும் பாணனுமுதலாயினோர் சொல்லுங்காலை மேற்கூறிய வகையானே இடம்வரையப்படாது தாந்தாம் அறிந்த கிளவியானும் நிலம்பெயர்ந்துரையாதபொருளானும் அந்நிலத்துள்ள பொருளானும் உள்ளுறையுவமை சொல்லப்பெறுப. எ-று. "கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றாக் - காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு - நுந்தை நும்மூர் வருது - மொண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே." என்றவழித் தாய்போன்று நும்மைத் தலையளிப்பலெனத் தலைமகன் தலைமைதோன்ற உரனொடு கிளந்தவாறு காண்க. ஒழிந்தோராயின வரையறையின்மையிற் காட்டாமாயினும், அவைவர்துழிக் காண்க. (உஎ)

௩௦௩. இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியு
முவம மருங்கிற் றோன்று மென்ப.

இதுவும் மேலதற்கேயாவதோர் வேறுபாடுணர்-ற்று. (இ-ள்.) மேற்கூறப்பட்ட உள்ளுறையுவமம் இன்ப துன்பங்கள் தோன்றச் சொல்லவும்படும். எ-று. "கழனி மாத்து விளைந்துகு தீம்பழம் - பழன வாளை கதூஉ மூரன்" என்பது பலவகையின்பமும் வருந்தாது

பெறுவரென்பதற்கு உவமையாகிவருதலின் இனிதுறுகிளவியெனப் பட்டது. "தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு - பிள்ளை தின்னு முதலைத்து" என்பது தலைமகன் கொடுமைகூறினமையின் துனியுறு கிளவியாயிற்று. இவ்விருபகுதியும்படச் செய்யப்படும் மேற்கூறிய உள்ளுறையுவமமென்பது இதன் கருத்து. மருங்கென்னும் மிகையா னே ஏனையுவமத்தின்கண்ணும் இப்பகுதிகொள்ளப்படும். அவை "ம ருங்கெனின் மருங்கே வைப்பெனின் வைப்பே" என்பது இனிதுறு கிளவி; "கராத்தின் வெய்யவோ தோள்" என்பது துனியுறுகிளவி.

௩௦௪. கிழவோட் குவம மீரிடத் துரித்தே.

இஃது அவ்வுள்ளுறையுவமையை வரையறுத்துணர்-ற்று. (இ-ள்.) தலைமகள் இரண்டிடத்தல்லது உள்ளுறையுவமை சொல்லப் பெறாள். எ-று. இரண்டிடமென்பன மருதமும் நெய்தலும்; அந்நில த்துப்பிறந்த பொருள்பற்றியல்லது உள்ளுறையுவமஞ்சொல்லுதல் கிழ த்திக்குரித்தன்றென்பது கருத்து. இவ்விடத்து உரிமையுடைத்தெனவே குறிஞ்சிக்கண் அத்துணையுரித்தன்றென்றவாறு. "தாமரை - வண் டூது பனிமல ராரு மூர - யாரையோ நிற்புலக்கேம்," என்றவழி வண்டூ துபனிமலரொனப் பிறர்க்குரிய மகளிரொனவும் அவரை நயப்பாயென வும் உள்ளுறையுவமம் மருதத்துக்கண்வந்தது. "அன்னை வாழிவெ ண் டன்னை கழிய - முண்டக மலருந் தண்கடற் சேர்ப்ப - னென் றோ டறந்தன ளுயி - னென்னுங் கொல்லவ னயந்தோ டோளே." என்பது நெய்தல். இதனுட் கழியமுண்டகமலருமென முள்ளுடைய தனைப் பூமலருமென்று உள்ளுறுத்ததனான் இருவர்காமத்துறைக்கண் ணும் ஒருதலை இன்னு ஒருதலை இனிதென்றாளென்பது. என்றோ டறந்தனனென்பது முள்ளுடைமையோடொக்க, என்னுங்கொல்லவ னயந்தோடோளென்றவழி அவன் அன்பிற் றிரியாமைகூறினமையி ன் முண்டகமலர்ச்சியோடொப்பிக்கப்படும். பிறவும் அன்ன. "குன்ற க் குறவர் புல்வேய் குரம்பை - மன்று டினமழை மறைக்கு நாடன் - புரைவன வாழி தோழி விரைய - லரும்பனி யளைஇய கூதிர்ப் - பெ ருந்தண் வாடையின் முந்துவந் தனனே" என்னுங் குறிஞ்சிப்பாட் டினுள் வறுமைகூர்ந்த புல்வேய்குரம்பையை மழை புறமறைத்தாற் போல வாடைசெய்யும் நோய்தீர்க்கவந்தானென்று உள்ளுறையுவமஞ் செய்தவாறு கண்டுகொள்க. இனிக் கிழவோட்குவமம் பிரிவிடத்துரி த்தென்பது பாடமாக உரைப்பாருமுளர். யாதானுமொருநிலத்தாயி னும் பிரிந்திருந்தவிடத்து உள்ளுறையுவமங் கூறப்பெறுங் கிழத்தியெ ன்பது இதன்கருத்து. பெருந்தண்வாடையின் முந்துவந்தோனென்ப து பிரிவன்றாகலின் ஈரிடமென்றலே வலிதென்பது. (௨௬)

**௩0௫. கிழவோற் காயி னிடம்வரை வின்றே.**

மேல் "உரனொடு கிளக்கும்" என்றதல்லது இன்னவழிச் சொல்லப்பெறுந் தலைமகனென்றிலன், அதனான் அவற்கு எல்லா நிலனும் உரியவாமென்கின்றானென்பது. (இ-ள்.) தலைமகற்கு இடவரையறை இல்லை. எ - று. வரையறையில்லனவற்றுக்கு வரையறைகூறாமே முடியாவோவெனின் அங்ஙனமாயினுங் கிழத்திக்குந் தோழிக்கும் இடம்வரையறுத்ததனைக் கண்ட மாணாக்கன் இவ்வாறே தலைமகற்கும் இடம்வரையறையுண்டுகொலென்று கருதிற் கருதற்கவென்றற்கு இது கூறினானென்பது. (௩0)

**௩0௬. தோழியுஞ் செவிலியும் பொருந்துவழி நோக்கிக் கூறுதற் குரியர் கொள்வழி யான.**

இது தோழியுஞ் செவிலியும் உள்ளுறையுவமங் கூறுமிடமுணர்-ற்று. (இ-ள்.) காலத்திற்கும் இடத்திற்கும் பொருந்துமாற்றான் உள்ளுறையுவமங் கூறப்பெறுப தோழியுஞ் செவிலியும். எ-று. காலமுமிடனும் பொருந்துதலென்பது வெளிப்படக்கிளவாது முன்னத்தான்மறைத்துச் சொல்லவேண்டியவழி அவ்வாறு சொல்லப்பெறுப அவருமென்றவாறு. இங்ஙனங் கூறவே, "ஏனோர்க் கெல்லா மிடம்வரை வின்று" என்றவழி எல்லாரும் உள்ளுறையுவமஞ் சொல்லப்பெறுவரென்பது பட்டது. அதனை நற்றாயும் ஆயத்தாருந் தந்தையுந் தன்னையரும் உள்ளுறையுவமை கூறப்பெறாரெனவுந் தோழிகூறின் நிலம்பெயர்ந்துரையாத பொருளான் ஒருவழிக் கூறுமெனவுஞ்செவிலிக்காயின் இடம்வரைவின்றெனப்பட்டவகையாற் பொருந்தும்வழிக் கூறுதற்குரியளெனவுங் கூறினானும் இச்சூத்திரத்தானென்பது. கொள்வழியென்றதனாற் தோழிக்குப்போல நிலம்பெயர்ந்துரையாதபொருளான் உள்ளுறையுவமங்கூறுதலே செவிலிக்குமுரித்தென்பது கொள்க. மற்றிவையெல்லாம் அகப்பொருட்கேயுரியவாக விதந்தோதியதென்னை? புறப்பொருட்கு வாராதனபோலவெனின் ஆண்டுவருதல் அரிதாகலின் இவ்வாறு அகத்திற்கே கூறினானென்பது. "வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரு - மென்புல வைப்பி னந்நாட்டுப் பொருள்" என்றக்கால், பகைவேந்தரை வென்றிகொள்ளுங்கால் அவர்தாமே தத்தம்பொருள் பிறர்க்களிப்பாரென்னும் பொருள் தோன்றினுந் தோன்றுமென்பதல்லது ஒருதலையாக உள்ளுறையுவமங் கோடல்வேண்டுவதன்று. என்னை? "தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு - பிள்ளை தின்னு முதலைத் தவளூர்" என்றாற்போலக் கூறாது அந்நாட்டுக் கருங்களமர் முதலாயினார் வருந்தாமற் பெறும் பொருள் பிறநாட்டார்க்கு

விருந்துசெய்யத்தருமென்று அந்நாட்டினது வளமைகூறினமையினெ ன்பது. தோழி பொருந்தியவழிக் கூறுமாறு முன்காட்டப்பட்டன. செவிலிபொருந்துவழிக் கூறுவனவுங் கண்டுகொள்க. இலக்கணமு ண்மையின் அவையும் உளவென்பது கருத்து. (௩௪)

௩௦௭. வேறுபட வந்த வுவமத் தோற்றங்
கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்.

இது மேலெல்லாம் இருவகையுவமமுங் கூறி இன்னும் ஏனை யுவமப்பகுதியே கூறுவான் எய்தாததெய்துவித்தது. (இ - ள்.) வேறுபடவந்த உவமத்தோற்றம் = வேறுபாடுதோன்ற வந்த உவமைச்சாதி: தோற்றமெனினும் பிறப்பெனினுஞ் சாதியெனினும் ஒக்கும்; கூறிய மருங்கிற கொள்வழிக் கொளால் = அங்ஙனம் வேறுபடவந்தனவாயினும் மேற்கூறியபகுதியானே கொள்ளுமிடனறிந்து கொளுத்துக. எ - று. கொளுவுதலென்பது கொளாஅலென்பதாயிற்று.

வேறுபடவருதலென்பது :—உவமைகளும் பொருட்கும் ஒப்புமையாமாறுபடக் கூறுதலும், ஒப்புமைகூறுது பெயர்போல்வன வற்று மாத்திரையானே மறுததுக்கூறுதலும், ஒப்புமைமறுத்துப் பொருளைநாட்டிக்கூறுநலும், ஒப்புமைமறுத்தவழிப் பிறிதோருவமை நாட்டுதலும், உவமையும்பொருளும் முற்கூறி நிறீஇப் பின்னர் மற்றைய ஒவ்வாவென்றலும், உவமைகரு இருகுணங்கொடுததுப் பொருளினை வாளாதுகூறுங்கால் உவமையினை இரண்டாக்கி ஒன்றற்குக் கூறிய அடை ஒன்றற்குக் கூறுதுகூறுநலும், ஒப்புமை குறைவுபட உவமித்து மற்றொரு குணங்கொடுத்து நிரப்புநலும், ஒவ்வாக்கருத்தினுன் ஒப்புமைகோடலும், உவமத்திற்கன்றி உவமத்திற்கு ஏதுவாகிய பொருட்குச் சில அடை கூறி அவ் அடையானே உவமிக்கப்படும் பொருளினைச் சிறப்பித்தலும், உவமானத்தினை உவமேயமாக்கியும் அதுவிலக்கியுங் கூறுதலும், இரண்டுபொருளானே வெவ்வேறுகூறிய வழி ஒன்று ஒன்றற்கு உவமையென்பது கொள்ளவைத்தலும், இன் னோரன்னவெல்லாம் வேறுபடவந்த உவமத்தோற்றமெனப்படும்.

இவற்றைக் கூறியமருங்கிற் கொளுத்துதலென்பது, முற்கூறிய ஏனையுவமத்தின்பாலும் பிற்கூறிய உள்ளுறையுவமத்தின்பாலும் படுதது உணரப்படுமென்பது. ஏனையுவமத்தின்பாற்படுத்தலென்பது வினை பயன் மெய் உரு என்ற நான்கும்பற்றி வருதலும் அவற்றுக்கு ஓதிய ஐவகைநிலைக்களனும்பற்றி வருதலுமெனக்கொள்க. உள்ளுறையுவமத்தின்பாற்படுத்தலென்பது, இவ்வேனையுவமம்போல உவமையும்பொருளுமாகி வேறுவேறு விளங்க வாராது குறிப்பினுற்

கொள்ளவருதலின் இக்கருத்தினனே இதனை ஈண்டு வைப்பானாயி ற்று. வரலாறு;—"வையங்காவலர் வழிமொழிந்தொழுக" என்னும் பாட்டினுட் "கடந்தடுதானைச் சேரலாதனை" என்னுந்துணை உவமத் திற்குவந்த அடையினைப் பொருட்கு மறுத்துக்கொள்ள வைத்தானெ ன்பது, என்னை? "வெஞ்சுடர் வழி" என்னுந்துணை உவமத்திற்குரிய அடையினைப் பொருட்கு மறுத்துக் கொள்ளவைத்தானென்பது. இ னிப் "பொழுதென வரைதி" என்பது தொடங்கிப் பாட்டுமுடிகாறும் பொருட்குரிய அடையினை உவமத்திற்கு மறுத்துக்கொள்ளவைத்தா னென்பது. என்னை? வெஞ்சுடர்வழித் தோன்றிய அரசனைத் தண்சு டரோடு பழிப்பான்பொருளே உவமஞ்செய்தானென்பது. மொழியி னுமென்றதனாற் பொருளினை உவமையாகக் கூறாது உள்ளுறையுவமம் போலக்கொள்ளவைத்துப் பின்னர் உவமத்திற்கு அடையாயவற்றுள், "வையங்காவலர் வழிமொழிந்தொழுக" என்றான் வழிமொழிதலென் பது வேற்றரசர்க்குத் தன்றன்மையெனை வேறின்றித் தன்னகப் படுத்துவார் தம்மொழியொடுபடுத்தது. ஒழிந்த கோளுஞ் செல்லத் தானுஞ் செல்லும் மதியமென்று எதிர்மறுத்துக் குற்றங்கூறிக் குறிப் புப்பட வைத்தானென்பது. "போகம்வேண்டிப் பொதுச்சொற் போற்றாது" எனவே இன்பநுகர்வு முற்றுச்சிறப்பில்லாக் கட்டுரை பெய்தானெனவும் அவனோடு உவமிக்கின்ற மதியமாயின் இருப த்தெழுவர் மகளிரொடு போகந்துய்த்துச் சிறப்பில்லாத கட்டுரைபு ரையுமென்று எதிர்மறுத்துக்கொள்ளவைத்தான். சிறப்பின்மையெ ன்பது, எல்லார்க்கும் ஒத்தவாற்றான் அறஞ்செய்யாது உரோகணி மேற் கழிபெருங்காதலனெனப்படுதல்போல்வன. "இடஞ்சிறிதெ ன்னு மூக்கந்துரப்ப" எனவே, எஞ்ஞான்றுந் தன்னெல்லைக்கண் ணே வரும் மதிமண்டிலமென்று எதிர்மறுத்துக்கொள்ளப்படும். "ஒ டுங்காவுள்ளம்" எனவே, அம்மதியந் தேய்ந்தொடுங்குமென்பது கொ ள்ளப்படும். "ஓம்பாவீகை" எனவே, நாடோறும் ஒரோவோர் கலை யாகப் பல்லுயிர்க்கும் இன்பம் பயக்குமாற்றாற் தருவதல்லாது தானு டையதெல்லாம் ஒருகாலேகொடாத மதியமெனப்படும். "கடந்தடுதா னை" எனவே, மதிக்குத் தானையாகிய தாரகையெல்லாம் பகைக்கதிரா கிய பரிதிமண்டிலத்துக்குத் தோற்குமென்றானும். இவ்வாற்றான் உ வமான அடையெல்லாம் எதிர்மறுத்துக்கொள்ளப்பட்டன.

இனிப் பொருட்குரிய அடையும் அவ்வாறே எதிர்மறுத்துக் கொள்ளப்படுமென்றவாறு. வீங்குசெலன்மண்டிலமெனவே, கடை யோயினுர் கதியிற்செல்லுமதியமென்று பாட்டுடைத்தலைவன் தலையாயி னுர்கதியிற் செல்லுமென்றான். பொழுதெனவருதியெனவே, நா

டோறும் நாழிகைவேறுபட்டு எறித்தியென்றதனுன் அவன்பொழுது செய்யானெனவும், புறங்கொடுத்திறந்தியெனவே, தோற்ருர்போன்று ஒளிமழுங்கிச் செறிகின்ருயெனவும், விளங்கித்தோன்றலென்பதனுற் தொடர்கின்ற சுடர்போல விளங்கிப் பிறர்தோற்ருேடக் காயும் இவனெனவும், மாறிவருதியெனவே, திங்கடோறும் மாறிப்பிறத்தியென்பதனுன் இவனிலைபெற்ருனெனவும், மலைமறைந்தொளித்தியெனவே, மலைசார்ந்தவழித் தோன்ருயென்பதனுன் இவன் தன்னுட்டுமலைமீக்கூறுமெனவும், அகல்விசும்பினுலுமெனவே, இவன் இவ்வுலகத்து நிலைபேறுடையனெனவும், பகல்விளங்காயெனவே, இவன் இருபொழுதும் விளங்குமெனவுங்கொள்ளப்படும். முற்பகுதியும் பிற்பகுதியும் வேறுபடுதலின் வேறுபடவந்ததாயிற்று. மற்றையவும் அன்ன.

இக்கூறிய அடையெல்லாம், வினை பயன் மெய் உருவெனக் "கூறிய மருங்கிற் கொள்வழிக்" கொளுவுவதாகக் காட்டுவனவற்றிற்கும் இஃதொக்கும். " கண்ண னவனிவன் மாறன் கமழ்துழாய்க் கண்ணி யவற்கிவற்கு வேம்புதார் - வண்ணமு - மாய னவனிவன் சேயன் மரபொன்றே - யாய னவனிவன் கோ." என்பது, பெயருந் தாருமுதலாயினபற்றி மாயனேடு உவமங்கருதி மறுத்துரைத்தவாறு. பெயரொன்பது பொருளுணர்த்துதலின் அதனை வடிவின்பாற் படுத்துணர்க. " அடிநோக்கி னாழ்கடல் வண்ணன்றன் மேனிப் - படிநோக்கிற் பைங்கொன்றைத் தாரோன் - முடிநோக்கித் - தேர்வளவ னுத றெளிந்தேன் றன்சென்னிமே - லாரலங்க லான்றிற்றுக் கண்டு." என்பதனுள் ஆழ்கடல்வண்ணனையுங் கொன்றைத்தாரோனையும் உவமைகூறியவற்றை மறுத்துத் தேர்வளவனெனத் தெளிந்தேனெனப் பொருளையே கூறுதலின் அது உவமம்வேறுபட வந்ததாயிற்று. "இந்திர னென்னி னிரண்டேகண் ணேறூர்ந்த - வந்தரத்தா னென்னிற் பிறையில்லை - யந்தரத்துக் - கோழியா னென்னின் முகமொன்றே கோதையை - யாழியா னென்றுணரற் பாற்று." என்பதனுள் இந்திரனையும் இறையோனையும் முருகனையும் ஒப்புமறுத்து நெடியோனை உவமங்கூறலின் ஒப்புமைமறுத்துப் பிறிதுகாட்டியது. " சுற்றுவிற் காமனுஞ் சோழர் பெருமகனுங் - கொற்றப்போர்க் கிள்ளியுங் கேழொவ்வார் - பொற்றொடி - யாழி யுடையான் மகன்மாயன் சேயனே - கோழி யுடையான் மகன்." என்பதனுன் உவமையும் பொருளும் முன் ஒருங்குநிறீஇப் பின்னர் ஒவ்வாமைகூறுதலின் இதுவும் பின்னும் வேறுபட வந்ததாயிற்று. " புனலூடர் கோமானும் பூந்துழாய் மாலும் - வினைவகையான் வேறு படுப - புனலூட - னேற்றெறிந்து மாற்றலர்பா லெய்தியபார் மாயவ - னேற்றி

ர்ந்து கொண்டமையா னின்று." என்பதும் அது. "ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலி - னீர்த்துறை படியும் பெருங்களிறு போல - வினியை பெரும வெமக்கே" என்னும் பாட்டினுள் உவமையாகியபொருளினை யானையுங் கடனுமென இரண்டாக்கி யானைக்கே ஊர்க்குறுமாக்கள் வெண்கோடுகழாலின் நீர்த்துறைபடியுமென்னும் அடைகூறி ஊர்ச்குறுமாக்கள்போல் அவளைத் துன்னருங் கூட்டத்திற்குச் சொல்லாமையின் இதுவும் வேறுபடவந்த உவமைத்தோற்றமெனப் பட்டது. "முதிர்கோங்க முகையென முகஞ்செய்த குரும்பையெனப் - பெயருளி முகிழெனப் பெருத்தநின் னிளமுலை" என்றவழி முதிர்கோங்கும் முற்றியகுரும்பையும் பெரியவாகலின் அவைபோலப் பெருத்த நின் இளமுலையென்றல் ஒத்தது, பெயருளிமுகுளஞ் சிறிதாக இவற்றோடு அதனை உடன்கூறி அப்பெயருளி முகுளத்திறகில்லாத பெருமைக்குணம் பொருட்குப் பின்னர் விதந்துகூறுதலின் அதுவும் வேறுபடவந்த உவமையாயிற்று. "மக்களே போல்வர் கயவ ரவரன்ன - வொப்பா ரியாங்கண்ட தில்." என்பது ஒவ்வாப் பொருளை ஒப்புமைகொண்டது; என்னை? மக்களைக் கயவர் ஒவ்வாரென்னுங் கருத்தினன் மக்கள்போல்வர் கயவரொன்றமையின் அதுவும் வேறுபடவந்த உவமையாயிறறு. "நெடுங்தோட் டிரும்பனை கீர்நிழல் புரையக் - குறும்பல முரிந்த குன்றுசேர் சிறுநெறி" என்பதனுள் உவமையாகிய நிழற்பொருட்கெய்தியது உவமவினையன்றே, அதற்கு நெடுங்தோடும் பெருமையும் அடையாகக் கூறினன்; கூறவே, பனைநிழலோடொக்குங் குன்றஞ்சேர் சிறுநெறி முடிந்தவழிச் சென்றுபுகும் ஊர்கருவமை நெடுங்தோடென்று கொள்ளவைத்தமையின் அதுவும் வேறுபடவந்த உவமையாயிற்று. "மண்படுதோட் கிள்ளிமதவேழ மாற்றரசர் - வெண்குடையைத் தேய்த்த வெகுளியால் - விண்படர்ந்து - பாயுங்கொ லென்று பனிமதியுந் தன்னுருவந் - தேயுந் தெளிவிசும்பி னின்று" என்பதனுள் உவமானத்தினை உவமேயமாக்கி அதனையே விலககினார்; என்னை? வெண்குடையென்று யானை குததுமென்று மதியினைக் குடையுடனொப்பிப்பான் மதியினைக் குடையாகவே கூறித், தேயுர்தெளிவிசும்பினின்று என்பதனாற் குடையோடு உவமைகூறியதை விலக்கினமையின் அதுவும் வேறுபடவந்த உவமைத்தோற்றமாயிற்று. "அகர முதல வெழுத்தெல்லாம்" என்றவழி இரண்டுபொருள் வேறுவேறு கூறியதன்றி, அகரமுதல எழுத்தெல்லாம் அதுபோல என்றானும் ஆதிபகவன்முதற்று உலகம் அதுபோல என்றானும் ஒன்றாகத் துணியுமாற்றான் உவமையும் பொருளுங் கூறாமையின் அதுவும் வேறுபடவந்த உவமமாயிற்று. பிறவும் அன்ன. இவை ஏனையுவமத்திற்கெல்லாம் பொதுவிலக்கணம். ()

௩௦அ. ஓரீஇக் கூறலு மரீஇய பண்பே.

இதுவும் ஏனையுவமத்திற்காவதோர் இலக்கணமுணர் - ற்று. (இ - ள்.) ஓரீஇக்கூறலும் = ஒக்குமெனக் கூறாது ஒவ்வாதெனக் கூறுதலும்: உம்மை இறந்தது தழீஇயிற்று; மரீஇய பண்பு = அது வும் உவமையாதற்கு அடிப்படவந்த வழக்கு. எ - று. உதாரணம். "யாங்ஙன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்" எனவும் "மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற் - காதலை வாழி மதி" எனவும் வ ரும். "நின்னேரனையை நீ" என்பதும் அது. இவற்றுள் யாங்ஙனம் ஒத்தியோவென்பது ஒவ்வாயென்னும்பொருட்டு. காதலைவாழிமதி யென்றவழியும் யான்காதலியாமையான் மதியமே அவள் வாண்முக மொவ்வாயென்றலின் ஓரீஇக்கூறிற்று. இதுவும் மரீஇயபண்பாக லானும் உள்ளுறையுவமம்போலக் குறிப்பினான் உவமங்கோடலொ ப்புமையானும் ஈண்டு வைத்தானென்பது. பண்பென்றதனான் அது வும் இலக்கணத்தோடொக்கும் என்றவாறு. இவற்றையும் வேறு படவந்த உவமமென்னுமோவெனின், உவமையும் அவ்வழி மாறு படவருமாறு உவமத்துக் கூறினான், உவமையின்மை கூறுதலும் உவ மையெனப்படுமென்றற்கு இது கூறினானென்பது. இவற்றுள்ளும் வேறுபடவந்த இலக்கணம் மேலைச்சூத்திரத்துள் அடங்கும். (௩௩.)

௩௦௧. உவமத் தன்மையு முரித்தென மொழிப
பயனிலை புரிந்த வழக்கத் தான.

இஃது எய்தாதது எய்துவித்தது; மேல் ஏனையுவமங் கூறுங்கா ல் உவமிக்கப்படும் பொருட்குப் பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பக் கூறல்வேண்டுமென்றான் அவ்வாறன்றி உவமமுங் கொள்ளப்படுமெ ன்றமையின். (இ - ள்.) உவமத்தன்மையும் உரித்தென மொழிப = விகாரவகையாற் பெருமையுஞ் சிறுமையும் ஒருபொருட்குக் கூறாது பட்டாங்கு உவமங்கூறுதலும் உரித்தென்று சொல்லுவர் ஆசிரியர்: பயனிலை புரிந்த வழக்கத்தான = அதனானும் ஒருபயன் தோன்றச் சொல்லுதனெறிப்பாட்டின்கண். எ - று. அது "பாரி பாரி யென்று பல வேத்தி - யொருவர்ப் புகழ்வர் செந்நாப் புலவர்" என்னும்பாட் டினுள் உலகளித்தற்கு மாரியும் உண்டென மாரியை உவமித்துச் சிற ப்பித்துக்கூறுவான் மாரியைச் சிறப்பித்துப் பாட்டுடைத்தலைவனாகிய பாரியை உயர்த்துக் கூறாதான்போல இயல்பினான் உவமைகூறினா னும்; இது மாரிக்கும் பாரிக்கும் ஓரிழிவில்லையென்னுந் தன்மைபடக் கூறவே அவனுயர்வுகூறுதலிற் பயனிலைபுரிந்த வழக்கெனப்படுமென் பது. "தொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் பெஃகின் - வில்லோர்

தூணி வீங்கப் பெய்த - வப்புதுனை யேய்ப்ப வரும்பிய விருப்பைச் - செப்பட ரன்ன செங்குழை யகந்தோ - றிழுதி னன்ன தீம்புழற் றுயவா - யுழுதுகாண் டுளைய வாகி யார்கழல் - பாலி வானிற் காலொடு பாறித் - துப்பி னன்ன செங்கோட் டியவி - னெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கும்" எனவும் "நீளரை யிலவத் தலங்குசினை பயந்த - பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன - வரிப்புற வணிலொடு கருப்பை யாடா - தியாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல் - வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தோட் - டீத்தலை வேய்ந்த வேய்ப்புறக் குரம்பை" என்றாற்போல்வனவும் அது "கொல்வினைப்பொலிந்த" என்பதனுள் இந்நிலத்தின் மக்கள் அம்பினை உவமையாக்கி ஆண்டையவாகிய இருப்பையின் பூங்கொத்தை உவமிக்கப்படும் பொருளாக்கியும் உவமநிலத்திற்கேற்ற வெண்ணெய்த்திரளொடு கழன்ற பூவினை உவமஞ்செய்தும் அந்நிலத்தியல்பு கூறினமையின் அது பயனிலைபுரிந்த வழக்கெனப்பட்டது. பிறவும் அன்ன.

உவமத்தன்மையுமென்ற உம்மையான் உவமத்தன்மையேயன்றி வாளாது தன்மைகூறுதலும் அந்நிலத்திற்கே பயனிலையெனப்படுவனவுங் கொள்க. அவை "மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி - யீன்பிணை யொழியப் போகி நோன்கா - ழிரும்பு தலையாத் திருந்துகணை விழுக்கோ - லுளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி - யிழுநிலங் கரம்பைப் படுநீ றாடி - நுணபுல் லடகிய வெண்பல் லெயிற்றியர் - பார்வை யார்த்த பறைதாழ் விழவி - னீழன் முன்றி னில்வுரற் பெய்து" என்றவழி உவமஞ்செய்யாது அந்நிலத்தியல்பு கூறப்பட்டதாயினும் உவமத்தாற் பொருட்பெற்றி தோன்றச் செய்தாற்போல அந்நிலத்திற்குப் பயம்பாடு வெளிப்படச்செய்யாமையின் உவமவிலக்கணத்துள் இதனையும் இலேசினாற் கொண்டாமென்பது. அற்றன்று. "மரபேதானும்" என்புழி நாற்சொல்லியலெனச் சொற்றன்மையுங் கூறப்பட்டமையின் உவமையாராய்ச்சியுள் அதுகூறுமெனின் அது. உம்மை இறந்தது தழீஇயிற்று; என்னை? உயர்ந்ததன்மேறறன்றி உயர்பிழிபுடைத்தல்லாத தன்மையுவமையுங் கொள்கவென்றமையின். (௬௪.)

௬௪௦. தடுமா றுவமங் கடிவரை யின்றே.

இதுவும் உவமத்திற்கேயாவதோர் இலக்கணமுணர் - ற்று (இ - ள்.) தடுமாறுவமம் = உவமையும் பொருளும் வேறு நிறீஇ இதுபோலும் இதுவென்றுது அவ்விரண்டினையும் உவமையுறச் சொல்லுந் தடுமாறுவமம் : இனி அவ்வாறன்றி உவமையைப் பொருளாக்கியும் பொருளை உவமையாக்கியுந் தடுமாறச் சொல்லுதலுந் தடுமாறு

வமமெனப்படும்; கடிவுணா இன்று = அவ்விரண்டும் உவமமென்று சொல்லற்பாட்டிற் கடியப்படா. எ-று. "அரிமலர்த் தன்னகணம்மா கடைசி - திருமுகமுந் திங்களுஞ் சேர்ந்துத் - தெருமந்து - வையத்தும் வானத்துஞ் செல்லா தணங்காகி - யையத்து நின்ற தரா" என்பத னுள் உவமையினையும் பொருளினையும் வேறுவேறு துணியாது ஐயுற்று வையத்தும் வானத்துஞ் செல்லாது அராவென்றமையின் இது தடு மாறுவமமாயிற்று. "தளிர்பெற்று வைகிய தண்சுனை நீல - மளிபெ ற்றூர் கண்போன் மலரு - மளிபெற்ற - நல்லார் திருமுகத் தோற்றத் தளிபெற்ற - கல்லாரம் போன்மலருங் கண்." என்புழி நீலத்தோடு க ண்ணினையும் கண்ணினோடு நீலத்தினையும் ஒன்றற்கொன்று உவமை யாக்கியும் பொருளாக்கியும் ஒருங்கே தடுமாறக் கூறினமையின் இது வுந் தடுமாறுவமமெனப்பட்டது. பிறவும் அன்ன. (௩௫)

௩௧௬. அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே.

இஃது எய்தியது மறுத்தது; என்னை? வேறு ஒருபொருளோ டு ஒருபொருளை உவமித்து நிறீஇ அப்பொருளோடு பிறிதொருபொரு ளையுவமித்தலும் உவமையென்று கொள்ளுவாருமுயினும் அது கொ ள்ளப்படாது பொருள்விளங்காமையினெனக் கூறிவிலக்கியமையின் (இ-ள்.) அடுக்கிய தோற்றம் = உவமையும் பொருளும் நிறுத்தி அடுக் கிய தோற்றம்: விடுத்தல் பண்பு = சிறப்பினவாகக் கொள்ளப்படா. எ-று. "மதியத் தன்ன வாண்முகம் போலும் - பொதியவிழ் தாமரை ப் புதுப்பூம் பொய்கை" என்றக்கால் மதியந்தன்ன வாண்முகத்தினை த் தாமரையென்றமையின் அவை ஒன்று ஒன்றனோடு பொருந்தாவெ ன்பது கருத்து. "இலங்கு வளையன்ன நலங்கே ழாம்பற் - போதி னன்ன தாதவிழ் கைதை" என்றக்கால், ஒன்று ஒன்றனோடு ஒருவண் ணத்ததாய் உவமைக்கேற்பினும் ஒன்றற்கொன்று உவமையாய் நின் றது. நின்றுற மற்றும் அதனோடு உவமங்கொள்ளப்படாது, இது வ ரையறையுடைமையின் விலக்கப்பட்டது. மற்று "ஈர்ந்து நிலந்தோ யு மிரும்பிடித் தடக்கையிற் - சேர்ந்துடன் செறிந்த குறங்கினள் குறங்கென - மால்வரை யொழுகிய வாழை வாழைப் - பூவெனப் பொ லிந்த வோதி யோதி - நெறிச்சினை வேங்கை நாண்மலர் நச்சி" என்ப தூஉம் அடுக்கியதோற்றமெனப்படாதோவெனின், படாதன்றே; யா னைக்கைபோலுங் குறங்கு குறங்குபோலும் வாழையென வடுக்கிச்சொ ல்லாது குறங்கினையுடையாளென்று துணித்துக்கூறியபின்னர்க் கு றங்கென மால்வரை ஒழுகிய வாழையென்றுணுதலினென்பது. தோ ற்றமென்றதனுன் உவமையும் பொருளுமாக நிறீஇ உவமவுருபுதோன் றக் கூறுங்கால் அடுக்கப்படுவதென்பது. (௩௬)

௩௧௨. நிரனிறுத் தமைத்த நிரனிறை சுண்ணம்
வரைநிலை வைத்த மூன்றலங் கடையே.

இதுவும் எய்தாதனவரையறையுடைமையிற் கூறியவற்றோடு இனமாகலின் உவமத்திற்காவதொன்றுணர் - ற்று. (இ - ள்.) நிரனிறுத்து அமைத்த நிரனிறை = உவமையையும் நிரலே நிறுத்துப் பொருளினையும் நிரலே நிறுத்து ஒப்புமைகூறின் அது நிரனிறையெனப்படும்: சுண்ணம் வரைநிலை வைத்த மூன்றலங்கடையே = சுண்ணத்தினைவரைந்த நிலைமையான்வந்த சுண்ணமும் அடிமறியும் மொழிமாற்றுமென்னும் மூன்றுமல்லாத இடத்து. எ - று. சுண்ணத்தினை வரைந்த நிலைமையான் வந்தனவெனவே சுண்ணந்தவிர மூன்றுளவோவெனின் அதனை ஒருவரைவிலக்க மூவரும்வந்திலரொன்றாற்போலக்கொள்க. உதாரணம், "கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி - மதி பவள முத்த முகம்வாய் முறுவல் - பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல் - வடிவினளே வஞ்சி மகள்." எனவரும். நிரனிறுத்தலென்றது அமைத்தவென்றதனான் நிரனிறையன்றி அமைத்துக்கொள்வதும் உண்டு; அது "களிறுங் கந்தும் போல நளிகடற் - கூம்புங் கலனுந் தோன்றுந் - தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே." எனவரும், பிறவும் அன்ன; என்றார்க்கு நிரனிறுத்தமைத்த நிரனிறை யனைவரைநிலைவைத்த மூன்றலங்கடையே என்றது சுண்ணத்தினை வரைந்தோதியது என்னையெனின், அவைமூன்றுஞ் சுண்ணம்போலச் சுண்ணஞ் செய்யப்படுதலின் அவ்வாற்றாற் சிதர்ந்துகிடப்ப உவமையுங் கூறின் அதுபொருள்விளக்காதென்பது அறிவித்தற்கென்பது. என்னை? அடிமறியுள் ஓரடியுள் உவமங்கூறி ஓரடியுட் பொருள்வைத்தால் இனிதுபொருள்கொள்ளாது அடிமறிக்குங்காலைப் பிறிதுபிறிதாகலுடைத்து. இனி ஓரடியுள் உவமங்கூறிப் பின்னர் எத்துணையுஞ்சென்று பொருள்கூறி மொழிமாற்றிகொள்ளாவைப்பின் அதுவும் உவமத்தாற் பொருள் தோன்றாது. சுண்ணத்திற்கும் அஃதொக்கும்.

இனி இவ்வோத்தினிற் கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றையுஞ் சொல்லதிகாரத்தினுள்ளுஞ் செய்யுளியலுள்ளுஞ் சொல்லுகின்றன சிலபொருள்களையும் வாங்கிக்கொண்டு மற்றவை செய்யுட்கண்ணே அணியாமென இக்காலத்தாசிரியர் நூல்செய்தாருமுளர். அவை ஒருதலையாகச் செய்யுட்கு அணியென்று இலக்கணங் கூறப்படா. என்னை? வல்லார் செய்யின் அணியாகியும் அல்லார் செய்யின் அணியன்றாகியும் வருந் தாங்காட்டிய இலக்கணத்திற் சிதையாவழி

யுமென்பது. என்னை? "நாயகர்க்கு நாய்கள்போ னட்பிற் பிறழாது - கூஉய்ச் குழாஅ முடன்கொட்கு - மாய்படை - பன்றி யனையர் பகை வேந்த ராங்கவர் - சென்றெவன் செய்வர் செரு." என்றவழி, நாய் போலும் நட்புடையர் படையாளரென்பது வினையுவமம்; பன்றியனை யர் பகைவேந்தரென்பது நாய்க்குப் பகையாகிய பன்றிபோலவென் பது. வேற்றுவேந்தர் பகைவராதலால் அவ்வுவமை விலக்கரிது. அன் றுமாயினும் அஃதணியெனப்படாது; உவமைதான் உயர்ந்ததின்மை யின். அது குற்றமன்றாவெனின் "பேரூ ரட்ட கள்ளிற் - கோரிற் கோயிற் றேருமா னின்னே" என்பது குற்றமன்றாகலின் அதுவுங் குற்றமன்றெனப்படும். இனிப் பொன்மாலையும் பூமாலையும்போலப் பொலிவுசெய்தலின் இதுவுங் குற்றமாகாது மேலதே குற்றமென்பது. அற்றன்று, இன்னசொல்லும் இன்னபொருளுமுடையன பொன்மா லையெனவும் பூமாலையெனவும் வரையறுத்துக் கூறலன்மையின் அத னானும் அதனைக் குற்றமென்று இலக்கணத்தார் கூறின் நிரம்பாது. அ ல்லதூஉம் பொருளதிகாரத்துட் பொருட்பகுதிகளெல்லாஞ் செய்யுட் கு அணியாகலான் அவை பாடலுட் பயின்றவையெனப்பட்டன. எ ன்றதனான் அவையெல்லாந்தொகுத்து அணியெனக் கூறாது வேறுசி லவற்றை வரைந்து அணியெனக் கூறுதல் பயமில்கூற்றாமென்பது.

இனி இரண்டுபொருளெண்ணியவற்றை வினைப்படுக்குங்கால் ஒருங்கென்பதோர் சொற்பெய்தல் செய்யுட்கு அணியென்ப. பிறவும் இன்னோரன்ன பலவுஞ் செய்யுட்கணியாமென்பது அவர் கருத்து. ஒருங்கேயென்பதேயன்றி மூன்றுதாழிசையுண் மூன்றுபொருள்கூறி எனவாங்கு என்பதொருசொல்லான் முடிந்தவழியும் எனவாங்கு என் பதோர்மொழி ஏனவென்பது ஓரலங்காரமெனல்வேண்டுமாகலான் அவ்வாறு வரையறுத்துக்கூறலமையாதென்பது. பிறவும் அன்ன. இனி அவற்றைப் பொருளுறுப்பென்பதல்லது அணியென்பவாயிற் சாத்தனையுஞ் சாத்தனலணியப்பட்ட முடியுந் தொடியும் முதலாயவ ற்றையும் வேறுகண்டாற்போல அவ்வணியுஞ் செய்யுளின் வேறாக ல்வேண்டுமென்பது.

இனிச் செய்யுட்கணிசெய்யும் பொருட்படை எல்லாங் கூறா து சிலவேகூறி ஒழியின் அது குன்றக்கூறலாமென்பது. அவை யாவையெனின், " அகன்மர் கேள்வ னகற்சி தீர்த்தற்கு - மகனொடு புகுந்த மகவுநிலை யெனாஅ - மறுக்குங் காலை மறுத்துரை மொழியா து - குறிப்பு வேறு கொளீஇய குறிப்புநிலை யெனாஅப் - புலவிக் கண் ணும் போக்கின் கண்ணு - மழுதலு மழாஅதலு முயங்கலு மென்றாங்

இருவகைப் பட்ட மங்கல மெனாஅப் - புலம்புறு காலை யறிவொடு படாது - புலம்புகொள வந்த செய்வினை யெனாஅ - வின்னோ ரன்ன பலபொருட் பகுதி - நன்னெறிப் புலவர் நாட்டல்வகை யுடைய" என் றோர் சூத்திரஞ்செய்யின் அவையும் அலங்காரமெனப்படுமென்பது. அவற்றுக்கு உதாரணம்; "ஆகத தொடுக்கிய புதல்வன் புன்றலைத் - தூநீர் பயந்த துணையமை பிணையல்" என்பது மகவுநிலை; "ஓவச் செய்தியி னொன்றுநினைந் தொற்றி" என்பது, குறிப்புநிலை; என்னை? தலைமகன்போக்கினை உவக்குங் குறிப்பல்லாத குறிப்பாகலின் அஃது அணியெனப்படும். "தும்முச் செறுப்ப வழுதனள்" என்பது புலவியுளழுத மங்கலம்; "பாவைமாய்த்த பன்னீர்நோக்கமொடு - மோயின ளுயிர்த்த காலை" என்பது போக்கின்கண் அழாத மங்கலநிலை; "விளிநிலை கொளாஅ டமியண் மென்மெல - நலமிகு சேவடி நிலமிசை வடுக்கொளாஅக் - குறுக வந்து கூரெயிறு தோன்ற" என்பது அறிவொடுபடாது புலம்புகொளவந்த செய்வினை; என்னை? கேளாது கேட்டான் போல் வந்தமையின். அதுவும் அலங்காரமெனப்படுமென்று சூத்திரஞ் செய்துகொள்ளல்வேண்டுஞ் செய்யுட்கு அணிவேறுகூறினெனென்பது. இனி இங்ஙனங் கூறினவெல்லாங் குற்றமென்று கொள்ளப்படா; என்னை? வேறு காரணமுணரப்பெறாது பிறழ்ந்து இடையறவுபட்ட காலை இடர்ப்பட்டுச்செய்தனவாதலான் அவையும் அவ்வாற்றானமையுமென்பது. இனி ஆனந்தவுவமையென்பனசில குற்றம் அகத்தியனார் செய்தாரெனக் கூறுபவாகலின் அவையிற்றை எவ்வாறுகோடுமெனின், அவைகள் தாம் அகத்துள்ளும் பிறசான்றோர்செய்யுளுள்ளும் வருதலிற் குற்றமாகா; அகத்தியனாராற் செய்யப்பட்ட மூன்றுதமிழினும் அடங்காமை வேறுஆனந்தவோத்தென்பது ஒன்றுசெய்தாராயின் அகத்தியமுந் தொல்காபியமும் நூலாகவந்த சான்றோர்செய்யுங் குற்றம் வேறுபடாவென்பது. அஃதேற, செய்யுட்கு இவையணியென்பதூஉம் இவை குற்றமென்பதூஉம் மூன்றதிகாரத்துள்ளும் இவ்வாசிரியர் யாண்டுங் கூறாரோவெனின், செய்யுளியல் முப்பத்துநான் குறுப்புக்கூறி அவற்றதியைபு நல்லிசைப்புலவர் செய்யுளுறுப்பெனவும் அவை தொடர்ந்த தொடர்நிலை எண்வகையாற் தொடர்நிலைச்செய்யுட்கு வனப்பெனவும் பகுத்தோதிய இலக்கணத்திற் பிறழ்ந்தவை எல்லாங் குற்றமென்பதுங் கொள்ளவைத்தானென்பது. (௩௭)

உவமவியன் முற்றிற்று.

—•◦•◦—

## எட்டாவது
## செய்யுளியல்.

---

௬௧௬. மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ
யாத்த சீரே யடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை யெனாஅ
நோக்கே பாவே யளவிய லெனாஅத்
திணையே கைகோள் கூற்றுவகை யெனாஅக்
கேட்போர் களனே காலவகை யெனாஅப்
பயனே மெய்ப்பா டெச்ச வகையெனாஅ
முன்னம் பொருளே துறைவகை யெனாஅ
மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையி
னாறு தலையிட்ட வந்நா லைந்து
மம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியைபே புலனே யிழைபெனாஅப்
பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே.

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், செய்யுளியலென்னும் பெயர்த்து; செய்யுளிலக்கணம் உணர்த்தினமையான் அப்பெயர்த்தாயிற்று. எனவே, ஓத்து நுதலியதூஉஞ் செய்யுளிலக்கணமுணர்த்தலென்பது பெற்றாம். மேற் பாயிரத்துள் "வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி - னெழுத்துஞ் சொல்லும் பொருளும்" ஆராய்வலென்று புகுந்தமையால், எழுத்தினுஞ் சொல்லினும் வழக்கிற்குஞ் செய்யுட்கும் வேண்டுவன விராய்க்கூறிப், பொருளதிகாரத்துள்ளும் இதுகாறும் பெரும்பான்மையும் வழக்கிற்கு வேண்டுவனவே கூறிவந்தான், அப்பொருள்பற்றிச் செய்யுள் கூறுமாதலின் இவ்வதிகாரத்துட் செய்யுளிலக்கணமெல்லாந் தொகுத்துக் கூறுகின்றது இவ்வோத்தென்பது. எனவே, முற்கூறிய எழுவகையோத்தும் வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொதுவென்பதூஉம் இது செய்யுட்கே உரித்தென்பதூஉம் பெற்றாம். மற்றிதனை யாப்பதிகாரமென வேறோரதிகாரமாக்கி உரைப்பாருமுளர்; அங்ஙனங் கூறின் வழக்கதிகாரமெனவும் வேறுவேண்டுமென மறுக்க. அல்லதூஉம் எழுத்துஞ் சொல்லும்ப...

ருளுமென மூன்றும் மூன்றதிகாரமாக்கி அதிகாரமொன்றற்கு ஒன்ப தோத்தாகத் தந்திரஞ்செய்ததனோடு மாறுகோளாம் இதனை வேறதி காரமென்பார்க்கென்பது., மற்று, ஓத்து அதிகாரம் நுதலியதெல்லா ம் நுதலுவதன்றே ஓதநிதனுளவைத்த சூத்திரம்; அதனான், இதன் முதற்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், இவ்வோத்தினுளுணர்த்த ப்படுகின்ற செய்யுட்குறுப்பாவன இவையெனவே, அவற்றது பெய ரும் முறையுந் தொகையும் உணர் - ற்று. (இ - ள்.) இக்கூறப்பட்ட முப்பத்துநான்கும் பெயரிசைப்புலவர் செய்யப்படுஞ் செய்யுட்கு உறு ப்பாமென அவ்வாறு செய்தல்வன்மையாற் கூறினார் புலவர். எ-று. அப்பெயர், பெயர்; அம்முறை, முறை; அத்தொகை, தொகை. தொகை ஆறுதலையிட்ட அந்நாலைந்துமெனவும், எட்டெனவும் இருவகையாற் தோன்றக் கூறியது ஏனையபோலாமல் எட்டுறுப்பும் ஒரோசெய்யுட்கு ஒரொவொன்றேயும் வருமென்பதறிவித்தற்கும் அவைதாம் அச்செ ய்யுள் பலதொடர்ந்தவழியே பெரும்பான்மையும் உறுப்பாமென்பத றிவித்தற்கும் என்க. எனவே, ஒழிந்த உறுப்பிருபத்தாறும் ஒன் றொன்றனை இன்றியமையாவென்பது பெற்றாம்.

இனி மாத்திரையென்பது, எழுத்திற்கோதிய மாத்திரைகளைச் செய்யுள் விராய்க்கிடக்கும் அளவையென்றவாறு. மாத்திரையது மா த்திரையினை ஈண்டு மாத்திரையென்றான். அது "மாத்திரையளவும்" என்றதனாற் பெற்றாம். எழுத்தியல்வகையென்பது, மேற்கூறிய எழு த்துக்களை இயறறிக்கொள்ளுங் கூறுபாடு. அசைவகையென்பது, அ சைக்கூறுபாடு; அவை இயலசையும் உரியசையுமென இரண்டாம். யாத்தசீரென்பது. பொருள்பெறத தொடர்ந்து நிற்குஞ் சீரென்றவாறு; எனவே, அசைபலதொடர்ந்து சீராங்கால் அவ்வசையுந் தத்தம்வகை யாற் பொருள்பெறறு நிற்றலும் அவ்வாறன்றிச் சீர்முழுதும் ஒரு சொல் லாங்கால் அசை பொருள்பெறாது நிற்றலும் அடங்கின. தேமாவென் று அசை பொருள்வேறு பெற்றன; சாத்தன் எனப் பொருள் வேறு பெறாது நின்ற அசையாற் சீர்யாத்து நின்றது. பொருள்பெறநின்ற எ ழுத்தும் அசையுஞ் சிறப்புடையவென்பாருமுளர். அற்றன்று, பொரு ள்படநிற்பன எழுத்து யாண்டுமின்மையானும் பொருள்பெறநின்ற அ சையானாகிய தேமாவென்னுஞ் சீரும் அவ்வசைச்சிறப்பினாற் சிறப்பு டைச்சீரெனப்படாமையானுஞ் சாத்தனெனத் தன்பொருளொடு தா ன் துணிந்து நின்றவழி அதுவுஞ் சிறப்புடைச் சீரெனவும்படுமாதலா னுமென்பது. அடியென்பது, அச்சீர் இரண்டும்பலவுந் தொடர்ந்தாவ தோர் உறுப்பு. யாப்பென்பது, அவ்வடிதொறும் பொருள்பெறச்

செப்பவதோர் செய்கை. மரபென்பது, காலமுமிடனும்பற்றி வழக்கு
த் திரிந்தக்காலுந் திரிந்தவற்றுக்கேற்ப வழுப்படாமைச் செய்வதோர்
முறைமை. மற்றுச் சொல்லோத்தினுட் கூறிய மரபிற்கும் மரபியலு
ள் உரைப்பனவற்றுக்கும் இதற்கும் வேற்றுமையென்னையெனின்
இது செய்யுட்கே உரித்து, அவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொது
வென்பது. தூக்கென்பது, பாக்களைத் துணிந்து நிறுத்தல். தொ
டைவகையென்பது, தொடைப்பகுதிபலவுமென்றவாறு; அவை வ
ரையறையுடையனவும் வரையறையில்லனவுமென இருவகைய. இப்
பகுதியெல்லாம் அடியாற்கோடலின் அடிக்கும் இஃதொக்கும். நோ
க்கென்பது, மாத்திரைமுதலாகிய உறுப்புக்களைக் கேட்டோர்க்கு நோ
க்குப்படச்செய்தல். பாவென்பது, சேட்புலத்திருந்த காலத்தும் ஒரு
வன் எழுத்துஞ்சொல்லுந் தெரியாமற் பாடமோதுங்கால், அவன்சொ
ல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்னசெய்யுளென்று உணர்தற்
கேதுவாகிப் பரந்துபட்டுச்செல்வதோர் ஓசை. அளவியலென்பது
அப்பாவரையறை. திணையென்பது, அகம்புறமென்று அறியச்செய்த
ல். கைகோளென்பது, அவ்வந்திணையொழுக்கவிகற்பம் அறியச்செ
ய்தல்; அது களவுங் கற்பும் கூற்றுவகையென்பது, அச்செய்யுள் கே
ட்டாரை இது சொல்லுகின்றார் இன்னாரெனவுணர்வித்தல். இவை
யென்பது, பாடமாயின் எண்ணிய மூன்றனையுந் தொகுத்ததாம்
கேட்போரென்பது இன்னார்க்குச் சொல்லுகின்றதிதுவெனத் தெரித்
தல். களனென்பது, முல்லை குறிஞ்சி முதலாயினவும் இரவுக்குறி
பகற்குறி முதலாயினவும் உணரச்செய்தல். மற்றுத் தன்மைமுன்
னிலை படர்க்கையுமாம் காலவகையென்பது, சிறுபொழுது பெரும்
பொழுதென்னுங் காலப்பகுதி முதலாயின. பயனென்பது, சொல்ல
யபொருளாற் பிறிதொன்று பயப்பச்செய்தல். மெய்ப்பாடென்பது
சொற்கேட்டோர்க்குப் பொருள்கண்கூடாதல். எச்சவகையென்பது
சொல்லப்படாத மொழிகளைக் குறித்துக்கொள்ளச்செய்தல். அது
கூற்றினுங் குறிப்பினும் வருதலின் வகையென்றான். முன்னமென்
பது, உயர்ந்தோரும் இழிந்தோரும் ஒத்தோருந் தத்தம்வகையால்
ஒப்பச் சொல்லுதற்குக் கருத்துப்படச்செய்தல். பொருளென்பது, புல
வன் தான்தோற்றிக்கொண்டு செய்வதோர் பொருண்மை. துறைவ
கையென்பது, முதலுங்கருவும் முறைபிறழவந்தாலும் இஃது இதன்
பாற்படுமென்று ஒருதுறைப்படுத்தற்கேதுவாகியதோர் கருவி அச்செய
யுட்குளதாகச்செய்தல்; அவையும் பலவாதலின் வகையென்றானென்
பது. மாட்டென்பது, பல்வேறு பொருட்பரப்பிற்றாயினும் அன்றாயி
னும்நின்றதனொடுவந்ததனை ஒருதொடர்கொளீஇ முடித்துக்கொள்ளச்

செய்தல். வண்ணமென்பது, ஒருபாவின்கண் நிகழும் ஓசைவிகற்பம். எனுவென்பதெண்ணிடைச்சொல். யாப்பியல்வகையின் ஆறுதலையிட்ட அந்நாலைந்துமென்பது, யாப்பிலக்கணப்பகுதியாகிய இருபத்தாறுமென்றவாறு. இவை யாப்பிற்கு இன்றியமையாத இலக்கணப்பகுதியுவென விதந்தோதவே, இனிக் கூறும் உறுப்பெட்டும் இன்றியமையாமை இல்லையென்றவாறு. அம்மை யழகு தொன்மை தோலே - விருந்தே யியைபே புலனே யிழைபெனப் - பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇயென்பது இக்கூறப்பட்ட எண்வகைவனப்பொடு முன்னர்க்கூறிய இருபத்தாறுந் தொகுப்ப முப்பத்துநான்குறுப்பாமென்றவாறு.

மற்றிவற்றை வனப்பென்று கூறற்குக் காரணம் அவற்றைக் கூறும் வழிச்சொல்லுதும். நல்லிசைப்புலவர் செய்யுளென்பது, இவ்வுறுப்பனைத்துங் குறையாமற் செய்யப்படுவன நல்லிசைப்புலவர் செய்யுஞ் செய்யுளெனப்படுமென்றவாறு. நல்லிசைப்புலவர் செய்யுளேவே, எழுநிலத்தெழுந்த செய்யுளுள்ளும் அவ்வரையறையுடையவற்றுக்கே இவ்விலக்கணமென்பதூஉந் திணையேகைகோளெனக் கூறும் உறுப்பு முதலாயினவெல்லாம் ஏனை அறுவகைச்செய்யுட்கும் உறுப்பாகாவென்பதூஉம் அவையொழிந்த உறுப்பினுள் ஏற்பன பெறுமாயினும் ஆண்டு வரையறையின்மையிற் கூறுனென்பதூஉம் அவற்றானே நல்லிசைப்புலவனெனப்படானென்பதூஉம் பெற்றாம். இனி நூலும் உரையுஞ்செய்தார் நல்லிசையுடையனென்பது அவற்றை நூலினுன் உரையினுனென இதற்கு இடையின்றிவைத்தமையிற் பெறுதுமென்பது. வல்லிதிற் கூறி வகுத்துரைத்தனனென்பது, இங்ஙனங்கூறிய நல்லாசிரியரிலக்கணமே கூறியொழிந்தார்; எல்லாவற்றான் எல்லாமறையச்செய்யுஞ் சுவடுடையராகி அவ்வத்துறை போயினார்தாமுமென்றவாறு. எனவே, இவ்வுறுப்பமையச்செய்தனவே செய்யுளெனப்படுவனவென்று சிறப்பித்தவாறு. மற்றுக் கூறியெனவும் உரைத்தனனெனவும் இருகாற் சொல்லியதென்னையெனின், அச்செய்யுளானே கூறி அவற்றுப் பொருளுரைத்தாரென்றவாறு. என்றார்க்குச் செய்யுட்குற்றம் ஈண்டோதாரோவெனின், ஓதல்வேண்டுமே? இவ்விலக்கணத்துப் பிறழ்ந்துங் குன்றியும் வருவனவெல்லாம் வழுவென்பதறியவைத்தானல்லனோ? ஆசிரியனென்பது. மற்றுச் செய்யுளுறுப்பு ஈண்டோதினார் செய்யுள் யாண்டோதுபவெனின், அறியாது கடாயினாய், உறுப்பென்பன உறுப்புடைப்பொருளின் வேறெனப்படா; பொருளெனப்படுவன உறுப்பே அவற்றதீட்டத்தினை முதலென வழங்குபவாகலான் உறுப்பினையே சொல்லியொழிந்தார்; முதற்பொருளிலக்கண

மென உறுப்பிலக்கணத்தினையே வேறுபடுத்துக் கூறலாவதின்மையா னும் உறுப்புனாப்பவே அவ்வுறுப்புடையபொருள் வழக்கியலாற் பெ றலாமாகலானுமென்பது.

மற்று யாத்தசீரேயடியாப்பென்றதென்னை? தளையென்பதோர் உறுப்புப் பிறர் வேண்டுபவாலெனின், இவருஞ் சீரதுதொழிலே தளையென வேண்டுப, தளைத்தலிற் றளையாதலானும் வேறுபொரு ளென வேண்டாரென்பது; என்னுர்க்கு அசையின்றிச் சீருமில்லை சீரின்றி அடியுமில்லையாம் பிறவெனின், அற்றன்று, உறுப்பும் உ றுப்புடைச்செய்யுளும்போல அவை கொள்ளப்படும், தளையெனவே றொன்றின்மையான்; என்னை? அது குறளடியென வேறுறுப்பாயி னமையின் என்பது; தளையென்றிதனைக் கோடுமேல் அதனைக் குற ளடியெனலாகாதென்பது. அல்லதூஉம், ஈரசைகூடி ஒருசீராயினவா றுபோல இருசீர்கூடியவழி அவ்விரண்டனையும் ஒன்றென்று கோடல் வேண்டும்; கொள்ளவே நாற்சீரடியினை இடைதுணித்துச் சொல்லுவத ன்றி நான்குபகுதியானெய்திக் கண்டம்படச் சொல்லுமாறில்லையெ ன்க. யாத்தசீரென்றதனானே அசைதொறுந் துணித்துச் சொல்லப்ப டா சீரென்பதூஉம் அச்சீரான் அடியானவழிச் சீரியைந்திற்றது சீரெ னவே படுமென்றதனாற் சீரெல்லாந் துணித்துச் சொல்லப்படுமென்ப தூஉங் கூறினான் இவ்வாசிரியனென்பது. அற்றன்றியும், அவ்வாறுத ளைகொள்வார் சீரானடிவகுப்பதூஉங் குற்றமென மறுக்க. மற்றுத் தொடை கூறியதென்னை, அடியிரண்டு தொடுத்தற்றொழிலல்லதின் மையினெனின், அற்றன்று, தொடுத்தற்றொழின்மாத்திரையானே தொடையென்றானல்லன், அவ்வடிக்கணின்று எழுத்துஞ்சொல்லும் பிறபொருளாகலான் அவற்றானே தொடைகொண்டமையின் வேறுறு ப்பென்றானென்பது. அஃதேற், சீருஞ் சீரும் இயைந்தவழி அவையி டமாக நின்ற அசையாற் றளைகொள்ளாமோவெனின், கோடுமன்றே, அதனை அடியென்னுமாயினென முற்கூறியவாறே கூறி மறுக்க. அல்லதூஉம் அவ்விரண்டசையுங் கூடிச் சீராமன்றோவெனின் என் பது. மற்று நாற்சீரடியுள் இரு சீரியைந்தவழிக் குறளடியென்னுமா கலின் அதனைத் தளையென்னுமோவெனின், அங்ஙனங்கொள்ளின் இருசீரடிக்கட் டளைவேண்டாதானும்; ஆகவே, ஒருவழிக்கொண்டு ஒருவழிக்கொள்ளாமை மயங்கக்கூறலென்னுங் குற்றமாமென்பது. அல்லதூஉம், அங்ஙனமன்றி வருமாயின் அடிக்கெல்லாம் பொதுவ கையாற் றளையுறுப்பெனப்படாது எழுத்தும் அசையும்போல யாண் டும் வருவனவெல்லாம் உறுப்பெனப்படுவனவென்றற்கு "இணைநான் முடிபு தன்னான் மேற்றே" என்பதனாற் காக்கைபாடினியார் ஓதி

ய தளையிலக்கணம் ஈண்டுங்கோடல் வேண்டுமெனின், அஃதே கருத்தாயின் இவர்க்கும் அவர் முடிவேபற்றித் தளைதளையல்வேண்டும். அல்லதூஉம், அவர்க்கு இளையரான காக்கைபாடினியார் தளைகொண்டிலரென்பது இதனாற் பெற்றாம். தளைவேண்டினார் பிற்காலத்தோராசிரியரென்பது. என்னை? "வடக்குந் தெற்குங் குணக்குங் குடக்கும்-வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்-றிந்நான் கெல்லை யகவயிற் கிடந்த - நூலதி னுண்மை வாலிதின் விரிப்பின்" எனக்கூறி வடவேங்கடந்தென்குமரியெனப் பனம்பாரனார் கூறியவாற்றானே எல்லைகொண்டார் காக்கைபாடினியார். ஒழிந்த காக்கைபாடினியத்து, "வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத் - தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்" எனத் தென்றிசையுங் கடலெல்லையாகக் கூறப்பட்டதாகலான் அவர் குமரியாறுள்ள காலத்தாரல்லரென்பதூஉங், குறும்பனை நாடு அவர்க்கு நீக்கல்வேண்டுவதன்றென்பதூஉம் பெறலாம். பெறவே, அவர் இவரோடு ஒருசாலைமாணாக்கரல்லரென்பது எல்லார்க்கும் உணரல்வேண்டுமென்பது.

மற்றிது முறையாயவாறென்னையெனின், மாத்திரை எழுத்தினது குணமாதலானும் அசையுஞ் சீரும் அடியுந்தூக்கும் பாவும் வண்ணங்களுமென்று இன்னோரன்னவெல்லாம் மாத்திரை நிமித்தமாகத் தோன்றுவனவாதலானும் அது முன்வைத்தான். அக்குணத்திற்குரிய எழுத்தினை அதன்பின் வைத்தான். அவ்வெழுத்தான் அசையும், அசையாற் சீருஞ், சீரான் அடியும், அவ்வடிபெற்றவழி அதனை ஆக்குமாறறியக்கூறும் யாப்பும் அவ்வடியகத்தன சொல்லும்பொருளுமாகலான் அதன்பின் மரபும் வைத்தான். அவ்வடியிரண்டினைத் தொடுக்குங்கால் அவற்றை ஓரடியென ஒரு தொடர்ப்படாமைத் துணிப்பது தூக்காகலான் அதனைத் தொடைக்குமுன் வைத்தான். அவ்வடியிரண்டு தொடுத்தவழியுங் கொள்ளப்படும் நோக்கென்பதறிவித்தற்கு அதனைத் தொடைப்பின் வைத்தான். அவ்வடி இரண்டும்பலவுந் தொடர்ந்தவழி முழுவதுங் கிடப்பது பாவாகலான் அதனை அதன்பின் வைத்தான். அப்பாத் துணிந்த துணிவினை எண்ணுதலான் அளவினை அதன்பின்வைத்தான். திணையுந் திணைக்குறுப்பாகிய ஒழுகலாறும் அவ்வொழுக்கத்தவாகிய கூற்றும் அதன்பின் வைத்தான். கேட்போருங் கேட்கும் இடனும் அதுபோலப் புலப்படாத காலமும் இவற்றாற் பயனும் பயனது பரத்துவரும் மெய்ப்பாடும் இவற்றினெல்லாம் ஒழிந்துநின்ற எச்சமும் அவ்வெச்சத்தோடுங் கூட்டிப் புணரப்படும் முன்னமும் அம்முறையான் அதன்பின்வைத்தான். அப்பொருட் பிறழ்ச்சியை ஒருதுறைப்படுக்குந்துறையை அதன்பின் வை

த்தான். மேல் எச்சமும் மாட்டு மின்றியும் வரூஉமென்பவாகலான் மாட்டினைத் துறைவகையின்பின் வைத்தான். அவற்றுள் எச்சத்தினை முன் ஓதினான் அது செய்யுட்கணின்றி வருஞ் சிறுபான்மையாதலா னென்பது. வண்ணம் பாவினது பகுதியுறுப்பாதலான் அதனை அவ ற்றுப்பின்வைத்தான். வனப்பினை எல்லாவற்றுக்கும்பின் வைத்தா ன், அவற்றை ஒன்றென்றாக நோக்குங்கால் அவ்வெட்டுமின்றியுஞ் செய்யுள் செய்பவாகலினென்பது. மற்றிவ்வுறுப்பினையெல்லாம் ஆசி ரியன்குறியென்றுமோ உலகுகுறியென்றுமோவெனின், அவ்விருதி றத்தானும் ஏற்பனவறிந்து கொள்ளப்படுமென்றொழிக. இவற்றை உயிருடையதனுறுப்புப்போலக்கொளின் உயிர் வேறுகூறல்வேண்டு வதாம், அவ்வாறு கூறாமையிற் கலவையுறுப்புப்போலக் கொள்க. (க)

**ருகக௪. அவற்றுண், மாத்திரை யளவு மெழுத்தியல் வகையு**
**மேற்கிளந் தன்ன வென்மனார் புலவர்.**

இது நிறுத்தமுறையானே முதற்கணின்ற மாத்திரையும் எ ழுத்தியலுமுணர் - ற்று. (இ-ள்.) மாத்திரைகள் பலதொடர்ந்து செ ய்யுட்கண் விராய் நிற்கும் அளவையும் எழுத்துக்களியற்றப்பட்டு எ ழுத்ததிகாரத்தின் வேறுபட்டதொகையுமென இரண்டினமும் மே ல் எழுத்தோத்தினுட் கூறப்படாதனவல்ல; அவையே : அவற்றை ஈண்டு வேண்டுமாற்றான் மேற்கிளந்தவகையிற் பிறழாமற்கொள் க. எ - று. அன்னவெனவே, இம்மாத்திரையளவும் எழுத்தியல் வகையும் வேறென்பதூஉம் வேறாயினும் ஆண்டுக் கூறியவற்றொடு வேறுபடாமைக்கொள்க வென்பதூஉம் உரைத்தானும். எனவே, எல்லாவழியும் விரையாது எய்தற்பாலவாகிய மாத்திரைகள் ஒரோ வழிவரையப்படுமாயினும் அவை முற்கூறாத வேறுசில மாத்திரையும ல்ல, ஈண்டு உரைப்பநினைந்து எழுத்தென்றுகூறிப் பயங்கோடுமாயினு ம் ஆண்டை முப்பத்துமூன்றெழுத்தின் வேறுபடப் பிறந்தன சிலவெ ழுத்துமல்லவென்பான் மேற்கிளந்தன்னவென்றானென்பது. மா த்திரையென்றொழியாது மாத்திரையளவென்றதனான் அம்மாத்திரை யை விராய்ச்செய்யும் அளவை ஈண்டுக் கூறினானென்பது கருத்து. ம ற்று, எழுத்தியல் வகையினை மாட்டேற்றான் முப்பத்துமூன்றெனக் கொள்வதன்றிப் பதினைந்தென்று கொள்ளுமாறென்னையெனின், எழு த்தோத்தினுட் குறிலுநெடிலும் உயிருமெய்யும் இனமூன்றுஞ் சார் பெழுத்துமூன்றுமெனப் பத்தும் இயல்புவகையான் ஆண்டுப்படுத் தோதினான், உயிர்மெய்யும் உயிரளபெடையுந் தத்தம்வகையாற் கூடு மாறும் ஐகாரம் ஔகாரம் போலிவகையாற் கூடுமாறும் யாழ்நூலகத்

து ஒற்றிசை நீளுமாறும் ஆண்டுத்தோற்றுவாய் செய்தான், செய்யவே அவை ஈண்டுக்கூறும் எழுத்தியல்வகையோடொக்குமென்று உய்த்துணர்ந்துகொள்ளவைத்தானென்பது. இவற்றோடு மகரக்குறுக்கமுங் கூட்டிப் பதினேழெழுத்து என்பாருமுளர். அதனாற் பயனென்னையெனின் பாட்டுடைத்தலைவன் கேட்டிக்குக் காரணமாமென்பர். மற்றுயிர்மெய்த்தொடக்கத்து ஐந்தனையும் மேல் எழுத்தென்றிலனாகலான் ஈண்டு எழுத்தியல்வகையுள் எழுத்தாக்கி அடக்குமாறென்னையெனின் ஈண்டு அன்னவெனவே, ஆண்டு இரண்டெழுத்தின்கூட்டமெனவும் மொழியெனவும் போலியெனவுங் கூறினானாயினும் அவற்றை எழுத்தியல்வகையெனப் பெயர்கொடுப்பவே ஆண்டுநின்ற வகையானே ஈண்டு எழுத்தெனப்படுமென்பதாயிற்று. இதன்கருத்து இயலென்றதனான் இயற்றிக்கொள்ளும்வகையான் எழுத்து இனையதென்றானாம். வகையென்பதனான் முப்பத்துமூன்றினைக் குறிலும் நெடிலுமென்றற் றொடக்கத்துப் பெயர்வேறுபாட்டாற் பத்துவகைப்பட இயற்றுதலுங் கூட்டவகையானிரண்டும் போலிவகையானிரண்டும் யாழ்நூல்வேண்டும்வகையானொன்றுமென ஐந்துவகையானியற்றுதலுமென இருவகையுங்கொள்ளப்படும். அல்லதூஉஞ் செய்யுட்கள் அவ்வெழுத்துவகையான் ஓசையாகவிராய்ச்செய்தலுங்கொள்க. மற்றளபெடையை மேல் மொழியென்றான் ஈண்டெழுத்தென்றானாகலின் இதனை ஓரெழுத்தென்றும் ஓரிரண்டெழுத்தென்றுங் கோடுமோவெனின், "நெட்டெழுத் திம்ப ரொத்த குற்றெழுத்து" என்று கூறியவாற்றான் ஆண்டிரண்டெழுத்தெனக் கொள்ளக்கிடந்ததாயினும் முன்னர்ப்போக்கி "அளபெடை யசைநிலை யாகலு முரித்து" என்றவழி எழுத்து நிலைமையும் எய்துவிக்குமாகலான் எதிரதுநோக்கி ஈண்டு ஓரெழுத்தென்று கோடுமென்பது. இனி அவற்றுட் குறிலும் நெடிலுங் குற்றுகரமும் அசைக்குறுப்பாம். மற்று "ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி" என்பதனான் ஒற்றும் அசைக்குறுப்பாகாவோவெனின், அச்சூத்திரத்தானன்றே அவைகுறிலும் நெடிலும் அடுத்துவந்தும் வேறுபடாது நேர்நிரையாதலெய்தியது நோக்கி அவை அசைக்குறுப்பாகாவென்றதென்க. மற்றிடைநின்று நிரையாதலை விலக்காவோவெனின். அன்னதோர் விதியுண்டாயினன்றே இவை இடைபுகுந்து விலக்கவேண்டுவதென மறுக்க. நெடிலும் அளபெடையிரண்டும் உயிரும் மெய்யும் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமுமெனப் பத்துந் தொடைக்கு உறுப்பாம். குறிலும் நெடிலும் அளபெடையிரண்டும் இனம்மூன்றும் ஆய்தமும் வண்ணத்திற்கு உறுப்பாம். இங்ஙனமே வேறுபடவந்தபயனோக்கி எழுத்தினை இயற்றி

க்கோடலின் எழுத்தியல்வகையென்றானென்பது. அஃதேல் ஒற்றுங் குற்றுகரமும் எண்டோதியதென்னையெனின் ஒற்றளபெடையான் அசைநிலையுஞ் சீர்நிலையுங் கோடலின் எண்டொற்றுக்கூறினான்.

குற்றுகரம் உயிராயினும் ஒற்றுப்போல எழுத்தெண்ணி அடிவகுக்குங் கால் எண்ணப்படாதென்றற்குக் கூறினானென்பது. அஃதேல் "ஒற்றெழுத் தியற்றே குற்றிய லுகரம்" என்பவாகலின் அதனை எண்டுத்தழாஅற்கவெனின் அக்கருத்தினால் அவ்வாறும் அமையுமென்பது. அற்றன்று இதனை மேற் புள்ளிபெறுமென்றிலாதான் புள்ளிபெறுமென்றற்கும் "ஒற்றெழுத் தியற்றே குற்றிய லுகரம்" என்றானென்பது. இனி ஒருசாரார் மாத்திரையென்றது எடுத்தலோசையாகிய குறிப்பிசைகொண்டானென்பர். அகுறிப்பிசை உறுப்பாகவருஞ் சான்றோர்செய்யுள் யாண்டுங்காணாமையின் நாம் அதுவேண்டாமாயினும். சிறுபான்மை ஒரோவழிவரினும் அத்துணையானே அஃது இன்றியமையாத உறுப்போடு எண்ணப்படாதெனமறுக்க. என்றார்க்குக் குறிப்பிசை யாண்டுப்பெறுதுமெனின், "அசையுஞ் சீருமிசையோடு சேர்த்தி" என்புழிப் பெறுதுமென்பது. இனி எழுத்தியல்வகையும் மேற்கிளந்தன்னவென்பதனையும் எழுத்திலக்கணத்திற் றிரியாமற் செய்யுள்செய்கவென்றவாறென்பவெனின், அஃதே கருத்தாயிற் சொல்லோத்தினுள்ளும் எழுத்திலக்கணமாகிய மயக்கமும் நிலையும் முதலாகிய இலக்கணந் திரியாமற் சொல்லாராய்தல் வேண்டுமெனவும் இவ்வதிகாரத்துள்ளும் எழுத்தியல்வகையுஞ் சொல்லியல்வகையும் மேற்கிளந்தன்னவெனவுஞ் சூத்திரஞ் செய்வான்மன் ஆசிரியனெனமறுக்க. மற்று மாத்திரையளவைசகு இலக்கணங்கூறுமினெனின் அதுவும் "அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" என்புழி வல்லோராறெனப் பாவொடுபொருந்தக்கொளக் கூறுதுமென்பது. அல்லதூஉம் மாத்திரையினை அளவைப்பட நிறுத்துக என்பதோரிலக்கணமாதலின் இங்ஙனம் வரையறையுடைத்தாகநோக்கிச் செய்யுளுறுப்பென்றானுமென்பது. மற்று மாத்திரையினை அளவைப்பட நிறுத்தாக்காற் படுங்குற்றம் என்னையெனின், அறறன்று; வாரு வாரு வாரு வாரு என்னும் அடியினைப் பணைட்டுப் பணைட்டுப் பணைட்டுப் பணைட்டு என நிறுத்தின் அது மாத்திரைவகையாற் சிதைவுபட்டதாம். "அம்ம வாழி கேளாய் தோழீ" என்றாற் பின்னர்நின்ற இருசீரும் நெடிலாதல் இன்னாதென்றுந் தோழியெனப் பின்னர்நின்ற சீரைக் குறுக்கினவழி இன்னோசைத்தாமென்றும் அவ்வாறே செய்யுள்செய்ப. பிறவுங் கொச்சகக்கலியுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளும் இவ்வாறே கண்டுகொள்க. (உ)

௩௨௫. குறிலே நெடிலே குறிலிணை குறினெடி
லொற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரு நிரையு மென்றிசிற் பெயரே.

இது நிறுத்தமுறையானே அசைவகையுணர்த்துறு. (இ-ள்.) குறிலும் நெடிலுந் தனித்துவந்துங் குறிலிரண்டு இணைந்துவந்துங் குறிற்பின்னர் நெடில் இணைந்துவந்தும் அவை ஒற்றடுத்தும் முறையானே நிரனிறைவகையானே நேரசையும் நிரையசையுமென்றும். எ-று. குறிலே நெடிலே ஒற்றொடுவருதலொடு எனவுங் குறிலிணை குறினெடில் ஒற்றொடுவருதலொடு எனவும் வேறு நிரனிறீஇப் பொருளுரைக்க. மெய்ப்படநாடியென்பது பொருள்பெற ஆராய்ந்து எனவே, இப்பெயர் ஆட்சிகாரணமேயன்றிக குணங்காரணமாகலுமுடையவென்றவாறு. உயிரொழுத்தல்லாதன தனித்துநிற்றலின் இயலசையென்னும்பொருள்பட நேரசையென்றாயிற்று. அவை இரண்டு நிரைதலின் இணையசையென்னும் பொருள்பட நிரையசையென்றாயிற்று. அல்லதூஉம் மெய்ப்படநாடி என்றதனுன் அவ்வாய்பாடே அவற்றுக்குக் காரணமென்பதூஉங்கொள்க. உடம்பொடு புணர்த்தலென்பதனுல் உதாரணமுங் கூறியவாறு. அவை நேர் நிரையெனச் சொல்லிக் கண்டுகொள்க. அ ஆ எனவும், அல் ஆல் எனவும், பல பலா எனவும், புகர் புகார் எனவும், பிறவும் இவ்வாறுவருவனவெல்லாங் கொள்க. மற்றுக் குறினெடிலென எழுத்தாக ஓதியதென்னை? சொல்லாயவழி அசையாகாவோவெனின், அவை ஒற்றொடுவருதலென்றதனுனே, சொல்லாதலும் நேர்ந்தானுகவே அவை இருவாற்றானும் அசையாமென்பது சீரின்றன்மைக்கண் வந்தது. "உள்ளார்தோழி" என நேரசை நான்கும் வந்தன. வரிவரால்கலங்கலின் என நிரையசை நான்கும் வந்தன. (௧)

௩௨௬. இருவகை யுகரமோ டியைந்தவை வரினே
நேர்பு நிரைபு மாகு மென்ப.

இது சொல்லாத அசைக்கூறுஞ் சொல்லுகின்றது. (இ-ள்.) இருவகையுகரமென்பன, குற்றுகர முற்றுகரங்கள். அவற்றோடு மேற்கூறிய நேரசையும் நிரையசையும் ஒரு சொல்விழுக்காடுபட இயைந்துவரின் நிறுத்தமுறையானே நேர்பசை நிரைபசையெனப்படும். எ-று. இயைந்தென்றன் இருவகை உகரமும் இருபிளவுபடாது ஒன்றுஇவரல்வேண்டும் அங்ஙனம் அசையாங்காலென்றற்கு. இருவகை உகரமும் ஒருகாலத்து ஒன்றன்பின் வாரா, வேறு வேறு வருமென்

பது. இருவகை உகரமும் இறுதிக்கண் நின்று அசையாக்குமென்ப தென்னைபெறுமாறெனின், குற்றுகரம் ஈற்றுக்கணல்லது வாராமை யானும் "நிற்றலின்றே யீற்றடி மருங்கினும்" என்பதனானும் பெறுது மென்பது. அல்லதூஉம் நுந்தையென்னும் முதற்கட் குற்றுகரம் இறுதிக்கண் நேரசையல்லது நிரையசை அடுத்துவருதலின்மையானும் அது பெறுதுமென்பது. முன்னர் நேரசை நான்கும் நிரையசை நான்குமென எண்வகையான் அசைகூறி அவற்றுப்பின் இருவகையுகரமும் வருமெனவே அவை குற்றுகரத்தோடு எட்டும் முற்றுகரத்தோடு எட்டுமாகப் பதினாறு உதாரணப்பகுதியவாய்ச் சென்றதேனும், அவற்றுட் குற்றெழுத்துப்பின்வரும் உகரம் நேர்பசையாகாதென்பது "குறிலிணையுகர மல்வழியான" என்புழிச் சொல்லுதும். ஒழிந்தன குற்றுகரநேர்பசை மூன்றும் நிரைபசை நான்குமாயின. உதாரணம்; வண்டு, நாகு, காம்பு, வரகு, குரங்கு, மலாடு, மலாட்டு; இவை குற்றுகரம் அடுத்து நேர்பும் நிரைபும் வந்தவாறு. இனி முற்றுகரம் இரண்டசைப்பின்னும் வருங்காற் குறிலொற்றின்பின்னும் நெடிற்பின்னுமென நேரசைக்கு இரண்டல்லதாகாது. நிரையசைக்கண்ணுங் குறிலிணைப்பின்னுங் குறிநெடிற்பின்னுமல்லதாகாது. உதாரணம்; மின்னு நாணு எனவும், உருமு குலாவு எனவும் வரும். போழ்வு, தாழ்வு, என நெடிலொற்றின் பின்னும் முற்றுகரம் வந்ததாலெனின் அவை ஆகாவென்பதூஉம் இக்காட்டியநான்குமே ஆயினவென்பதூஉம் முன்னர் "நிற்றலின்றே யீற்றடி மருங்கினும்" என்புழிச் சொல்லுதும். இனி, ஒருசாரார் நேர்பசை நிரைபசையென்பன வேண்டாவென்ப. என்னை? குற்றுகரங்கள் முற்றுகரங்களை வேறாக்கி அலகிட அமையாதே? ஞாயிறெனக் குற்றுகரங் குறிலிணையாய் அலகுபெறுமாறெனக்கூறுப. முற்றுகரமுந் தேடவென நேரசையாயிற்றுப்போல மின்னு என்றவழியும் வேறலகுபெற அமையுமென்பது. அற்றன்று, குற்றுகரத்தினைக் குற்றெழுத்தென்ப வேறு குற்றுகரம் வேண்டாதாரும் என்றூர்க்கு வேண்டினனையுங் குற்றங்கூறுவரவர்; என்னை? குற்றியலுகரம் அரைமாத்திரைத்தாகலின் ஒற்றுப்போல ஓரசையுள் ஒடுக்கி அலகிடப்படும். அற்றன்றேற் குற்றெழுத்தாக்கி அலகுவைக்கவே அமையுமென்பதாம், அவர்கருத்து. அதற்கு விடை, குற்றுகரம் ஒற்றுப்போன்று ஒடுங்கிநில்லாது. என்னை? தன்னான் ஊரப்பட்ட ஒற்றுந் தானுமாகி அரைமாத்திரைத்தாகியும் ஒடுங்கி இசையாது அகன்று இசைக்கும், அதனால் ஒற்றென்றலுமாகாது; பின்னும் ஒருமாத்திரைத்தாகாமையிற் குற்றெழுத்தெனலுமாகாது; மற்று அதனான் அத

னை ஒற்றென அடக்கார் குற்றெழுத்தென ஏற்று அலகுகொள்ளார் இனி அதனைச் செயற்பாலதோர் அசையாக்குதலென்பது நோக்கி நேர்பசைநிரைபசையென வேண்டினானென்பது. அவை வண்டு தொண்டு என ஓசையொவ்வாமை செவிகருவியாக உணர்ந்துகொள்க. அஃதேன் ஞாயிறு வலியது என்றவழிக் குறிலிணையுகரமெனக் குற்றெழுத்தாக்குவது ஏற்றுக்கெனின், அளபெடையை ஓசையிற்சிதையாது நிலப்படையுள் அலகுசிதைத்தாற்போலக் குற்றுகரத்தைக் குற்றெழுத்துப்போல அலகுபெறுமென்பது இலக்கணமில்லதோர் வழூவமைதி தானுயதனை இலக்கணமாக ஒத்துக்கொண்டு இலக்கணவகையாற் குற்றுகரமாதலே விலக்குவாரும் உளரோவெனமறுக்க. அஃதாக, முற்றுகரம் ஒருமாத்திரையாதலிற் குற்றெழுத்தாக்கி நேரும் நிரையுமாகப் பெறுவோவெனிற் பெறு. என்னை? வண்டு வண்டு வண்டு வண்டு என நின்றவழிப் பிறந்த அகவலோசை மின்னு மின்னு மின்னு மின்று என்றவழியும் பெறப்படுமாதலின், அதுவும் அதுபட்டதே பட்டு அவ்வசையே பெறுமென்றானென்பது. அல்லதூஉம் வெண்பாட்டீற்றடி வண்டு எனக் குற்றுகரவீற்றான் இறறவழிக் கொல்லு என முற்றுகரவீறறான் இறுமாயினும் ஒத்தவோசையாம். இனி உகரவீறல்லாத தேமாவென்பதனான் முடியாவென்பர். அதனானுங் குற்றுகரத்தின் செய்கை முற்றுகரத்திற்கும் வேண்டி நேர்பு நிரைபுகொண்டானென்பது. அற்றன்றியுங் குற்றுகரஞ் சார்ந்து தோன்றுமாறுபோல இம்முற்றுகரமும் வருமொழிகாரணமாக நிலைமொழிசார்ந்து தோன்றுதலொப்புமைநோக்கியும் அதனைக் குறறுகரம்போல ஒரசைக்கு உறுப்பாம் என்றானென்பது. "எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலைதானே - குன்றலு மிகுதலு மில்லென மொழிப." என்பதனான் அவை அவ்வாறாதல் அறிந்துகொள்க. இவையும் ஆட்சியுங் குணமுங் காரண்மாகப் பெற்றபெயர். ஆட்சி, "நிரையவ ணிற்பி னேரு நேர்பும்" எனவும், "நேரீற் றியற்சீர் நிரையு நிரைபும்" எனவும் வருமென்பது. இருவகையுகரமும் அடைந்துவந்த இயலசையிரண்டும் நேர்பும் நிரைபுமென்றாலும் நேரும் நிரையுமென்னும் பொருண்மையவேயாகலான் அவற்றதுபெயரான் இவற்றையும் பெயர்கொடுத்தான் ஆகுபெயராக்கியென்பது. எனவே நேர்நிரையின்பின் உகரம்வருதலின் நேர்புநிரைபெனக் குணங்காரணமாகவும் பெற்றாம். (௪)

௩௬௭. குறிலிணை யுகர மல்வழி யான.

இஃதெய்தியதொருமருங்கு மறுத்ததூஉம் எய்தாததெய்துவித்ததூஉமாம்; வழூவமைத்ததெனினும் அமையும். தனிக்குறிலானு

கிய நேரசைப்பின்னும் இருவகையுகரம்வந்து நேர்பசையாதலை வில க்கினமையின் எய்தியதொருமருங்குமறுத்ததாம். குற்றுகரங் குற்றெ ழுத்துப் போன்று அலகுபெறுமென்றமையின் எய்தாததெய்துவித்து வழுவமைத்ததாம். (இ - ள்.) இருவகை உகரமும் இருகுறிலாகி இ ணைந்தவழி நேர்பசையாகாது. எ-று. கரு முழு என முற்றுகரம் நேர்பசையாகாது நிரையசையாயிற்று. என்றார்சருக், குற்றுகரம் வில க்கியதென்னை? குறிலிணைந்தவழிக் குற்றுகரமாகாதென்பது "வ ட்டெழுத் திம்பருந் தொடாமொழி யீற்றுங் - குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே" என்றதனாற் பெறுதும் பிற வெனின், அதுநோக்கிக் கூறி னனல்லன்; எற்புழிகோடலென்பதனான், ஞாயிறுவலியது என ஓர சைப்பின்னர் வந்தவழி இதுகுற்றுசரமேயாமன்றே ஆண்டும் அதுகு றிலிணையுகரமெனவே படுமென்பது. பட்டக்கண்ணுங் குற்றுகரமே யென வழுவமைத்தவாறு. குறிலிணையெனக் குற்றுகரத்தையும் உடம் பொடுபுணர்ந்தலென்பதனாற் குற்றெழுத்தென வேண்டினனென்பது பெற்றாம். இங்ஙனங் குறறுகரங் குறிலிணையாகியுங் குற்றுகரமாகி எழுந்தளவெஞ்சினும் அமையுமெனவே நுந்தையென்னும் முதற்கட் குற்றுகரமுங் குற்றெழுத்துப்போன்று அலகுபெறும் எழுததளவெஞ் சினுமென்பது சொள்க. (ரு)

## ௩கஅ. இயலசை முதலிரண் டேனைய வுரியசை.

இது மேற்கூறிய அசைநான்கினையும் இருகூறுசெய்து அவற் றுகெய்தாததெய்துவிக்கின்றது. இனி, ஆட்சியுங்குணனுங்காரண மாக வேறு வேறு பெயர்கொடுக்கின்றது இச்சூத்திரமெனவும் அமை யும். (இ-ள.) முதற்கணின்ற நேரும் நிரையும் இயற்றிக்கொள்ளப்ப டாது; இயற்கைவகையான் நின்றாங்குநின்று நீளப்பனவாம். ஒழிந் தன விரண்டும் இயற்றிக்கொள்ளப்பட்டு இயலசையாதற்கு உரியவா ம். எ - று. எனவே எய்தாததெய்துவித்தான். இயலசை உரியசையெ ன்று ஆளுமாகலானும் இயற்கையால் இயறலின் இயலசையெனவும் அவைசெய்யுந்தொழில் செய்தற்கு உரியவாகலான் உரியசையெனவும் ஆட்சியுங் குணனுங் காரணமாகப்பெயரெய்துவித்ததுமாயிற்று. அங் ஙனம் இயற்றிக்கொள்ளுமாறு சீர்கூறும்வழிக் கூறுதும். (சா)

## ௩கக. தனிக்குறின் முதலசை மொழிசிதைத் தாகாது.

இஃது எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிவகுத்தனுதலிற்று; உகி ரி மயிரி என நின்றவழிக் குறிலிணையேயன்றி மூன்றெழுத்து நிரை ந்தமையின் நிரையசையாகா, தனித்தனி நேரசையாகலும் மூன் று குற்றெழுத்தினுள் இரண்டு குறிலிணையாக ஒன்று நேரசையாவது

ம் முதற்கண்ணே கொல்லோவெனவும் எய்தியதனைவிலக்கி விட்டி சைத்தவழித் தனிக்குறில் நேரசையாமென்பது எய்துவித்தமையின். (இ-ள்.) தனிக்குறிலாகிய நேரசை முதற்கண் மொழிசிதைத்துச் செய்யப்படாது. எ-று. இங்ஙனம் முதற்கண் வரையறுப்பவே இடையும் இறுதியும் மேலோதியவாற்றான் நேரசையாமென்பது. மொழிசிதைத்தலென்பது விட்டிசையாத மொழியை விட்டிசைத்து மொழிதல்; எனவே விட்சைத்தமொழியாயின் அது மொழிசிதைத்ததெனப்படாது இயல்பாமென்பது பெற்றாம். கரு மழு என முதற்கண் மொழிசிதைத்து நேரசையாகாமையுங் குறிலிணையெனப்பட்டு நிரையசையாயினவாறுங் கண்டுகொள்க. "அ ஆ விழுந்தான்" எனவும் "அ உமறியா வறிவி லிடைமகனே- நொ அலைய னின்னாட்டை நீ." எனவும் இவைவிட்டிசைத்தலின் மொழிசிதையாது தனிக்குறில் முதற்கண் நேரசையாயினவாறும் அவைகுறினெடிலுங் குறிலிணையுமெனப்பட்டு நிரையசையாகாதவாறுங் கண்டுகொள்க. இனி விட்டிசைக்கும் இடந்தான் மூன்றென்பது உரையிற்கொள்க. அவை "அஆவிழுந்தான்" எனக் குறிப்பின்கண்வருதலும் "அ உமறியா" எனச் சுட்டின்கண் வருதலும் "நொஅலையல்" என ஏவற்கண்வருதலுமென விட்டிசைக்குமிடந்தான் மூன்றெனப்பட்டது. முதலசையென்பது நேரசையென்பாருமுளர். அது விதந்தோதல் வேண்டா தனிக்குறிலான் அசையாமெனப்பட்டது நேரசையேயென்பது பெறுமாகலான். மற்றும் "இடைகுறுக்கம்" என்றவழி விட்டிசைத்துமொழிசிதையாதாகலான் அவ்விரண்டெழுத்துங் கூட்டி நேர்பசையென்றாமோவெனின் அவை பிளவுபடநிற்றலின் இயைந்திலவெனமறுக்க. (எ)

## ௩௨௦. ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்.

இஃது எய்தாததெய்துவித்து ஐயம் அறுத்ததது, (இ - ள்.) மேற்கூறிய எழுத்திலக்கணவகையானும் ஈண்டோதும் அசைக்குறுப்பாமாற்றானும் எல்லாங் குற்றியலிகரம் ஒற்றெழுத்தியற்றேயாம். எ - று. தேற்றேகாரம் அடுத்துக் கூறியவாறு. எனவே எழுத்தோத்தினுண் "மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்" எனக்கூறிக் "குற்றிய லுகரமு மற்றென மொழிப" எனக் குற்றுகரத்திற்குப் புள்ளிபெறுதலுங்கூறினன் அது போலக் குற்றிகரமும் புள்ளிபெற்றுநிற்றல் உடைத்தெனவும் ஈண்டுக் குற்றுகரம் நேர்பும் நிரைபுமாகியவாறு போலத் தானும் ஓர் அசையாகுங்கொல்லென்று ஐயுறுவது வேண்டா ஒற்றுநின்றாங்கு நின்று இயலசை உரியசைகளைச் சார்ந்துவருதலும் ஒற்

றுப்போல எழுத்தெண்ணப்படாமையுமுடைத்து என்றவாறுமாயிற்று. எனவே, ஒற்றெழுத்தியற்றாயினுங் குற்றுகரம் இகரக்குறுக்கம்போலா து செய்யுட்கு உபகாரப்பட்டதோர் அசைவேறுபாடு தோன்ற நிற்கு மென்றவாறாயிறறு. மற்று எண்ணப்படாதென்றது ஈண்டுக்கூறல்வே ண்டுமே ? "உயிரில்லெழுத்துமெண்ணப்படா" என்புழிப் பெறுதுமா லெனின் அது குற்றுகரத்திற்கேகூறியதென்பது ஆண்டுச்சொல்லுதும்.

உதாரணம் "மியாயிக மோமதி யிருஞ்சின னென்னும்." எனவும், "அருளல்ல தியாதெனிற் சொல்லாமை" எனவும், இவை இயலசைசார்ந்து ஒற்றியற்றாகிக் குற்றிகரம்வந்தவாறு. நாகியாது வரகியாது எனக் குற்றிகரம் உரியசைசார்ந்து ஒற்றியற்றாகிவந்தவாறு. அது நிரையும் நிரைபுஞ்சார்ந்து ஒறறியற்றாமாறு இல்லைபோலும். இ வற்றையெல்லாம் ஒற்றெழுத்தியற்றேயென்பதனாற் புள்ளியிட்டெழு துக. இது சொல்லியகாரணங், குற்றுகரம் அரைமாத்திரைத்தாகியும் ஒற்றியற்றாகாது நேர்பும் நிரைபும் ஆகியவாறுபோல அதற்கு இன மாகிய குற்றிகரமும் அரைமாத்திரைத்தாகி வேறோரசையாகுங்கொல் லென்று ஐயுறாமற்காத்தவாறு. மற்று ஆய்தத்தினையும் ஒற்றியற் றென்னாமோவெனின் அஃது எழுத்தோத்தினுள் "எழுத்தோரன்ன" என்பதனாற் பெற்றாமென்பது.

மற்று "மூர்தியாய் பெய்த வளைகழலும்" எனவும் "நினக்கி யான்சொன்னதின்னதின்று" எனவும் இவை ஒற்றியற்றாகாது எ ழுத்தியற்றாயினவென்று காட்டுவாருமுளர். மூர்தியாய் என்பது இக ரவீறுமாமாகலின் அது காட்டநிரம்பாது. அல்லதூஉம் அவை சான் றோர் செய்யுளல்லவென மறுக்க. இனி, ஒற்றும் எழுத்துமென உம்மையோடெண்ணலுமாகாது; இவ்வோத்தினுள் "உயிரில்லெழு த்துமெண்ணப்படா" என ஒற்றினையும் எழுத்தென்றானாகலின். (அ)

௬உக. முற்றிய லுகரமு மொழிசிதைத்துக் கொளாஅ
நிற்ற லின்றே யீற்றடி மருங்கினும்.

இதுவும் ஐயம் அறுத்தது ; இருவகையுகரமொடு நேரும் நிரை யும் இயையின் அவை நேர்பும் நிரைபுமாமென்றான், அவற்றுண் முற் றுகரம் ஈறாகி நிற்குஞ் சொல் உலகத்து அரியவாயினவாதலிற் புண ர்ச்சிக்கண் வந்த உகரமே ஈண்டு நேர்பும் நிரைபுமாவனவெனவும் பு ணர்ச்சிக்கண்ணும் நிலைமொழித்தொழிலாகிய உகரமும் நிலைமொழி யீறுகெட்டு நின்ற உகரமுமே கொள்ளப்படுவனவெனவும் வருமொ ழிததொழிலாகிய ஒற்றுநிலைமொழியாகிய நேர்புநிரைபிற்கு உறுப்பா

வன கண்டு வருமொழியுகரம் ஈண்டும் அதுபோல அவற்றிற்குறுப் பாங்கொல்லென்று ஐயுற்றுனை ஐயுறற்கவெனவுங் கூறினமையின். (இ - ள்.) முற்றியலுகரம் மொழிசிதைத்துக்கொளாஅ = இருவகையு கரமுமியைந்தவை வருங்கால் வருமொழியைச் சிதைத்துப்பிரித்து அ வற்றினின்று வாங்கிக்கொடுக்கப்படா: நிற்றலின்றேயீற்றடி மருங்கி னும் = அங்ஙனம் வாங்கிக்கொடுக்கப்படாவாயின், நேரசைநிரைய சைப்பின்னர் முற்றுகரம் ஈறுகி வருஞ்சொல்லும் உலகத்தரியவாயி ன் முற்றுகரத்தால் நேர்பும் நிரைபும் ஆமாறென்னையென்றார்க்கு அடி யிறுதிககணல்லது, முற்றுகரம் புணர்ச்சிவகையான் இடைநில்லாத னவல்ல. எ - று. இன்றென ஒருமைகூறினமையின் எடுத்தோதிய முற்றுகரமேகொண்டு இலேசினுற் தழீஇய குற்றுகரங்கொள்ளற்க. மற்றிதனை இலேசினுற் கொண்டதென்னையெனின் நுந்தையென்னு ம் ஒருமொழிக்கணன்றி வாராமையின் அதன்சிறுவரவு நோக்கி உம் மையாற் கொண்டானென்பது. முற்றுகரம் மொழிசிதைத்துக்கொளா வெனவே ஒற்றூர்ந்துவரினுந் தனித்துவரினும் உடன்விலக்குண்ணு மென்பது. நாணுடையரிவை என்றவழி நாணென்னும் நேரசைப்பின் னர் உடையரிவையெனத் தனித்துவந்த உகரம்நேர்பசையாகாது. வார்முரசு என்றவழி வாரொன்னும் நேரசைப்பின்னர் முரசென ம கரம்ஊர்ந்துவந்த உகரமும் நேர்பசையாகாது. வற்றுறுசெய்தி என வும் பரன்முரம்பு எனவும் வந்தவழி வற்றெனவும் பரலெனவும் நின் ற நேரசை நிரையசைப்பின்னர் உறுசெய்தியெனவும் முரம்பெ னவும் வந்த உகரங்களும் நேர்பசை நிரைபசையாகா. சின்னூர்தை இராநூந்தை எனக் குற்றுகரம் வந்தவழியும் நேர்பசை நிரைபசையா காவென்றவாறு. "நாணுத் தளையாக வைகி" என்றவழி ணகார வீறு புணர்ச்சிவகையாற்பெற்ற உகரம் நிலைமொழித்தொழிலாகலான் அது நாகு என்னுங் குற்றுகரம்போல் ஒற்றுமைப்பட்டு நேர்பசை யாயிற்று. "விழவுத்தலைக்கொண்ட" என்றக்காலும் அவ்வாறே அகா ரவீறும் உகாரம்பெற்று நிரைபசையாயிற்று. "மின்னுமிளிர்ந்தன் னகனங்குழை" எனவும் "முழவு முகம்புலரா" எனவும் வருவன வும் அவை. நாணுத்தளை என்றாற்போல வரும் ஒற்றுப்பேறு மு ன்னர்ச்சொல்லுதும். நீர்க்கு நிழற்கு என்ற உருபும் நிலைமொழித்தொ ழிலாதலான் அவையும் நேர்பசைநிரைபசையாமென்பது இதனுற் பெற்றாம். நிற்றலின்றென ஒருமைகூறி முற்றுகரமே கொண்டமை யிற் குற்றுகரமாயின் இடையும் இறுதியும் நின்று நேர்பும் நிரைபு மாம் என்றவாறும். அவை ஆட்டுத்தாள் சேற்றுக்கால் எனவும் "எ ய்போற் கிடந்தானென் னேறு" எனவும் இடையும் இறுதியுங் குற்

றுகரம் நேர்பசையாயிற்று. களிற்றுத்தாள் எனவும் "வேலாண் முகத்த களிறு" எனவும் இடையும் இறுதியுங் குற்றுகரம் நிரைபசையாயினவாறு. மருங்கினுமென்ற உம்மையான் அடியீறன்றேயன்றி மொழியீற்றும் அவற்றிறுதிகெடநின்ற மொழிக்கண் இடைநின்ற உகரம் இறுதியாகி உரியசையாகுவனவும் உளவென்பதுகொள்க. அவை மேவுசினெனவுங் கோலுகடலெனவும் உலவுகடலெனவும் விரவுகொடியெனவுங் கலனளவு நலனளவு எனவுஞ் "சுரும்புலவு நறுந்தொடையலள்" எனவும் வரும். இவை ஈற்றுநின்ற மகரங்கெட்டு உகரவீறாயின. இவற்றுள் நிரைபசையுகரங்களை ஆகாரவீற்றுப் புணர்ச்சியுகரமென்றாமோவெனின், என்றுமன்றே; வருமொழியொற்று மிகாமையினென்பது. உலவுக்கடல் விரவுத்தலையெனின் அவ்வாறேயமையுமென்பது. மருங்கென்றதனான் ஈற்றடிக்கண்ணும் இறுதிக்கண்ணே முற்றுகரம் விலக்குண்டதெனக்கொள்க. என்றாக்குப் "பூமலர்த் தாரகலம் புல்லு" எனவுங் "கண்ணூரக் காணக் கதவு" எனவும் வருமாலெனின் அவை மருஉ வழக்கென்க. (கூ).

கூஉஉ. குற்றிய லுகரமு முற்றிய லுகரமு
மொற்றொடுந் தோன்றி நிற்கவும் பெறுமே.

இஃது எய்தாதது எய்துவித்தது; இயலசைகளை "ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி" என்றான், உரியசைக்கு அதுகூறாதான் ஈண்டுக் கூறுகின்றமையின். (இ - ள்.) மேற்கூறிவருகின்ற குற்றுகரமுற்றுகரங்கள் ஒற்றொடுநிற்கவும் பெறும் அவ்வொற்றுத் தோன்றிய ஒற்றாயின். எ - று. எனவே, அவை நிலைமொழி ஒற்றுடையவாயின் நேர்பும் நிரைபுமாகா. வருமொழி வல்லெழுத்துமிகினே யாவதென்றவாறு. அஃதென்னைபெறுமாறெனின், "வல்லொற்றுத்தொடர்மொழி வல்லெழுத்து வருவழி" என்றதனான் முன்னர் நிலைமொழித்தொழிலாகிய முற்றுகரம்வருமெனக்கூறிய அதிகாரத்தானே ஒற்றுத்தோன்றினென்றானுகலானும்பெறுதும்; நிலைமொழியுகரம்பெற்று வருமொழி ஒற்றெய்துவது கண்டாகலானென்பது. உ-ம். "சேற்றுக்கா னீலஞ் செருவென்ற வேந்தன்வேல்" எனவும் "நாணுத்தளையாக வைகி" எனவும் "நெருப்புச்சினந்தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை" எனவும் "கனவுக்கொனீகண்டது" எனவும் இவை இருவகையுகரமும் ஒற்றடுத்துரியசையாயினவாறு. உம்மை எதிர்மறையாகலான் ஒற்றின்றிவருதலே பெரும்பான்மை. இங்ஙனம் வருமொழியொற்றுமிகின் அவைகொண்டு நேர்பும் நிரைபுமாமெனவே உண்ணும் எனவும் நடக்கும் எனவும் நிலைமொழியொற்றுநின்றவழித் தே

மாவும் புளிமாவுமாவதல்லது நேர்பசையும் நிரைபசையுமாகாதென்ப தாம். விக்குள் கடவுள் என்பனவும் அவை. (௯0)

**௩உ௩. அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே.**

இது மேற்கூறப்பட்டனவற்றுக்கும் இனிவருஞ் சீர்க்குமெல்லாம் புறனடை. (இ - ள்.) அசைகளையுஞ் சீர்களையும் ஓசையொடு சேர்த்தி வேறுபடுத்து உணர்த்துவித்தலும் அச்செய்யுளிலக்கணத்துறைபோயினாரது நெறி. எ - று. மேன் மாத்திரையென்பதோர் உறுப்புரைத்தான் அதனான் அசைசீர்களது ஓசையை அளந்து கூறுபடுத்து இன்னோசையும் இன்னாவோசையுமுணர்த்துக. எழுத்தியல்வகைககும் இஃதொக்கும். குருத்துக் குறைத்துக் கொணர்ந்து நமது - கருப்புச் செறுப்புப் பரப்பு எனின் வெண்பாவீற்றடி இன்னோசைத்தன்றாம்; கருப்புக் கொழுந்து கவர்ந்து என முடிக்கின் இன்னோசைத்தாய் வெறுத்திசையின்றாமென்பது. "நிலமிசை நீடுவாழ் வார்" இதனுள் வாழ்வார் என்னும் மொழியை வகுத்து வாரொன நேரசைச்சீராக்கி வகுப்பவே அசையினை இசையொடுசேர்த்திற்றாம். இனி நீடுகொடி என்பதனை மாவருவாய் என்று அசையுஞ்சீரும் இசையிற் சேர்த்துகவென்பாருமுளர். இவற்றைப் பிறநூலார் வகையுளியென்ப.

இச்சூத்திரத்து வகுத்தனருணர்த்தலென்றமையின் இனி வெண்பாவினுள் வெண்சீரொன்றி வந்தவழியும் வேற்றுத்தளைவிரவும் இடனுடைய அவையும் இசையொடுசேர்த்தி வேறுபாடுணர்த்துக. மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என்பது பன்னிரண்டெழுத்தடி; மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாவருவாய் என்பது பதின்மூன்றெழுததடி; மாசேர்வாய் மாசேர்வாய் மாவருவாய் மாவருவாய் என்பது பதினான்கெழுத்தடி; இவை மூன்றும், "அளவுஞ் சிந்தும் வெள்ளைக்குரிய" என வெண்பாவிற்கு ஓதிய அளவடியேயாயினும் இச்சாட்டிய அலகிடுகையாற் கலித்தளைதட்டுத் துள்ளலோசையும் பிறக்கும். மாசேர்வாய் மாசேர்வாய் பாதிரி பாதிரி எனவும், மாசேர்வாய் பாதிரி பாதிரி காருருமு எனவும், மாசேர்வாய் பாதிரி காருருமு காருருமு எனவும், முன்காட்டிய மூன்றனையுமே இவ்வாறு அலகிட்டு ஓசையூட்டக் கலித்தளைதட்டாது வெண்பாவடியேயாம். இவ்விருகூறும் ஓசையொடுசேர்த்துணர்த்துக. பதினான்கெழுத்தின் இறந்த பதினைந்துநிலனும் பதினாறுநிலனும் பதினேழுநிலனுமென இம்மூன்றும் வெண்சீர்வந்தொன்றியக்காலும் இயற்சீர்வந்தொன்றாக்காலும் ஒருஞான்றுஞ் செப்பலோசை பிறவா; அவையும் ஓசையோடுசேர்த்தி வகுத்துணர்த்துக. அவை வருமாறு ;-

புலிவருவாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாவருவாய் எனவும், மாவ ருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய் எனவும், புலிவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய் எனவும் இவைவெண்சீரொன் றியுங் கலித்தளைதட்டின. இனி இவற்றை இயற்சீர்கொடுத்துச் சொ ல்லுங்காலுஞ் செப்பலோசைசிதையும், என்னை ? காருருமு காருருமு காருருமு பாதிரி எனவும், காருருமு காருருமு காருருமு காருருமு எ னவும், நளியொருமு காருருமு காருருமு காருருமு எனவும் இவை இயற்சீரான்வந்தும் வேறோர்சந்தப்பட்டுச் செப்பலோசை சிதையாநிற் குமென்பது அசையுஞ்சீரும் இசையொடுசேர்த்தி வகுத்துணர்த்துக. இன்னோரன்னபிறவும் பெரிதும் எஃகுசெவியும் நுண்ணுணர்வும் உடையார்க்கன்றி உணரலாகா. ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் மாசேர்வாய் என்றக்கால் ஞாயிறு புலிவருவாயென இயற்சீரின்பின் னர் நிரையசைவந்து "சீரியை மருங்கி னோரசை யொப்பி - னாசிரியத் தளையென் றறியல் வேண்டும்." என்பதனான் ஆசிரியத்தளையாயினும் அஃது ஆண்டுக் கலித்தளைப்பாற் படுமென்பது அசையுஞ்சீரு மிசை யொடுசேர்த்தி என்பதனான் உணரப்படும். இனி ஞாயிறு புலிசேர் வாய் புலிசேர்வாய் மாசேர்வாய் எனபுழிப் புலிசேர்வாய் மாசேர்வா யென நேரொன்றியதேனும் அது கலித்தளையென்பது அசையுஞ் சீரு மிசையொடுசேர்த்தி என்பதனான் உணரப்படும். இன்னோரன் ன பலவுமுள, அவையெல்லாம் வரையறுத்து இலக்கணங்கூறப்படா; அவற்றை அவ்வாறு வேறுபடுத்துணர்த்துதல் வலத்துறைபோயினோர் கடனென அடங்சக்கூறல்வேண்டி "அசையுஞ்சீரு மிசையொடுசேர்த் தி வகுத்தனருணர்த்தலும் வல்லோராறே" என்றானென்பது.

உம்மையான் அடியினை வகுத்துணர்த்துதலுங்கொள்க. அது "நுதல திமையா நாட்ட - மிகலட்டுக் கையது கணிச்சியொடு மழு வே"என்புழி இகலட்டென்னுஞ்சீர் குறித்தபொருளை முடியநாட்டியு ம் யாப்பென்னும் உறுப்பினுள் அடங்காது இகலட்டுச்சையநென மேலடியோடு பொருள் கூடியும், இசையொடுசேர்த்தி வகுத்துணர்த் தியதேயாம். இன்னும் இவ்விலேசானே எழுத்தலோசையும் அசை யொடுஞ் சீரொடுஞ் சேர்த்தி வகுத்துணர்த்தலுங்கொள்க. அவை "சுஃஃறென்னுந்தண்டுறெடு" என்றாற்போல்வன. இனி அகவலோ சை மூன்றெனவுஞ் செப்பலோசை மூன்றெனவும் அசையுஞ்சீரும் இ சையொடுசேர்த்தியென வகுத்துணர்த்துவாருமுளர் அவை இயல சைமயங்கிய இயற்சீரும் உரியசைமயங்கிய இயற்சீரும் வெண்சீரும் பற்றி ஓசைவேறுபட்டுத் தோன்றுமென்க. அவை மும்மூன்றாக்கி வ ரையறுக்கப்படாமையின் ஈண்டவைகூறானென்பது.

இனி ஒருசாரார் அசையுஞ்சீரு மிசையொடுசேர்த்தி வகுத்து ணர்த்தலென்பதனை இவ்வாறு முரைப்ப. என்னை? ஒருசெய்யுளுட் கிடந்த அசைசீர்களை ஈண்டுக் காட்டிய தேமா புளிமாவென்பன முதலாகிய உதாரணங்களோடு சேர்த்தி அவ்விரண்டனையும் ஒக்கும்வகையான் ஓசையூட்டிக்காட்டுப. அற்றன்று, இவ்வுதாரணஞ் சீரென்றுவலிந்தார்க்காம் அது செய்துகாட்டல்வேண்டுவது. எல்லாச்சொல்லிற்கும் ஏற்றவாற்றான் அசையுஞ்சீரும் இசையொடெனப் பொதுவகையாற் கூறினமையின் அதுகாட்ட நிரம்பாதென்பது. இனிக் கடியாயாறு கடியாறு கடியாறு கடியாறு என்பதனைத் துள்ளலாகச் சொல்லிக் கலியடியெனவுங் கடியாறென்பது கூவிளமென்பதாயினும் அது வெண்சீரோ ஈற்றசை நிரையியற்றாய் நின்றதெனச்சொல்லி அதற்கு இலக்கணம் "வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே" எனப் பொருளுரைத்து, மற்று அதனைக் கலித்தளையெனவுங் காட்டுப. அற்றன்று; கடியாறென்னுஞ்சீரின் உறழ்ந்த ஆசிரியவடியும் அதுவேவாய்பாடாக வருமாகலின். மற்று அதன்கட் துள்ளலோசை பிறந்ததாலெனின் அவற்றுக்கண் ஒரோமாத்திரை கொடுப்பத் துள்ளலோசை பிறந்ததாயினும் அசையுஞ்சீரு மிசையொடுசேர்த்திச் சொல்லுகவெனவே அங்ஙனம் மாத்திரைநீட்டிச்சொல்லாது அகவலோசைப்படச்சொல்லுகவென்பது இதனாற் பெற்றாமாகலின் அது பொருளன்றென்பது. (௧௪)

௩௨௪. ஈரசை கொண்டு மூவசை புணர்ந்துஞ்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே.

இது முறையானே அசையுணர்த்திச் சீராமாறுணர்த்துவான் தொடங்கி அவை இத்துணைப்பகுதியவென்பதூஉம் அவற்றுப்பொது விலக்கணமும் உணர்-ற்று. (இ - ள்.) இரண்டசையானும் மூன்றசையானும் ஓரோர்சொற்கள் சீரியைந்திறுவன சீரென்று சொல்லப்படும். எ - று. சீரியைந்திறுதலென்பது வழக்கியல் செய்யுளாமாற்றால் யாப்பினும் பொருள்பெறப் பகுத்துப் பதமாகியவற்றுச்சேறல். உ-ம். சாத்தன் கொற்றன் எனவும் உண்டான் தின்றான் எனவும் இரண்டசைகொண்டு சீராயின. காணப்போ சாய்க்காணம் கூதாளி எனவும் உண்ணுத எனவும் இவைமூவசைபுணர்ந்து சீராயின. இவை செய்யுளுள் வருமாறு "உலக முவப்ப வலனேர்பு திரிதரு - பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" என ஈரசைச்சீர் வந்தன. "யானுடத் தானுணர்த்த யானுணரா விட்டபின் - றானுட யானுணர்த்தத் தானுணர்ந்தான்" எனவும் "வசையில்புகழ் வயங்குவெண்மீன் றிசைதிரிந்து தெற்கேகினும்" எனவும் இவை மூவசைச்சீர் வந்தன. பிறவுமன்ன.

மற்றுச் சீரென்றதென்னையெனின் பாணிபோன்று இலயம்படநிற்ற லான் அது சீரெனத்தொழிற்பெயராம். என்னை? சொற்சீர்த்திறுத லென்புழித் தொழிற்படுதலோகினமையின். இனி இயைதலென்பது அசைவகை ஒன்றொன்றனொடு தொடர்ந்தவழியல்லாற் சீர்க்கு அலகு பெறலாகாதென்றவாறு. எனவே, அவ்வாறு இலயம்படநின்றனவா யினும் புணர்ச்சியெய்துமென்பதாம். மற்று இற்றதென்றதென்னை? சீரென்பது தொழிற்பெயராதலால் அதுசீரியைந்தெனவே பெறுது மெனின், அங்ஙனஞ் சொல்லிற் சீரியைந்த தொடரெல்லாங் கூடி ஒருசீராவான் செல்லுமாகலின் இடையிட்ட இறுதி வரல்வேண்டு மென்றற்கு அங்ஙனங் கூறினனென்பது. இதனானே ஒரோவழிப் புணர்ச்சிவிகாரம் எய்தாமையுங் கூறினானாம். "வண்டுபடத் ததைந்த கண்ணி" என்புழி வல்லெழுத்து மிக்க புணர்ச்சியவையானே சீரியைந்தன. போந்து போந்து சார்ந்து சார்ந்து என்றவழி ஒன்றொன்றொ டொன்று தொடர்ந்ததேனும் இற்றதென்பதனான் இறுதிபடநின்றமையின் எல்லாவிறுதியும் உகரநிறையுமென்றதனாற் குற்றுகரமுற்றுகரமாகாது நாலெழுத்தடியாயிற்று. இதனை எழுத்தடியென்றலே வலியுடைத்து; வல்லொற்றுத்தொடர்மொழிக் குற்றுகரந்தால் நாலெழுத்தடிவேறுண் மையின். ஈரசைகொண்டெனவும் மூவசைபுணர்ந்தெனவுங் கூறின மையான் ஒருசீர் பலசொற் றொடர்ந்துவரினும் அவை ஒன்றுபட நி ற்றல்வேண்டுமென்றவாறும். எனவே, உலகத்துச்சொல்லெல்லாம் ஈரசையானும் மூவசையானுமன்றி வாராவென்பதுபெற்றாம். இதனா னே ஒருசொல்லைப் பகுத்துச் சீர்க்கு வேண்டுமாற்றான் வேறு சீராக் கியவழியும் அச்சீர்வகையானே வேறுசொல்லிலக்கணம் பெறுமென் பதுங் கொள்க. அது "மம்மர் நெஞ்சினன் றொழுது நின்றதுவே" எ ன்புழி நின்றது என்னுஞ்சீர் குற்றுகரவீற்றுச்சொல்லன்றே, அதனை ப் பிரித்து அதுவேயென வேறுசீராகவே அது முற்றுகரமாகி வே றுபடுதல் கண்கூடாகக் கண்டுகொள்க; என்றார்க்கு, எனப்படுமென்ற தென்னையெனின், ஓரசையே சீர்நிலை பெறுமென்றுமாயினும் அவை சீரென முன்னோதப்படாவென்றற்கென்பது. மற்று நாலசையானும் ஐந்தசையானும் உண்ணாநின்றன அலங்கரியாநின்றானெனச் சொல்வ ருவன உளவாலெனின், அங்ஙனம் வருஞ் சொற்கள் சிலவாகலானும் அவைதாமும் இரண்டுசொல்விழுக்காடு பிளவுபட்டுநிற்றலின் ஒருசீ ரெனப்படாமையானும் அவை சீராக வருஞ் செய்யுளின்மையானும் இனி வஞ்சிப்பாவினுள் வந்த ஆசிரிய அடியினை நாலசைச்சீர் காட் டல் வேண்டுவார் இருசீரடியாக உரைப்பினும் அவை தூங்கலோசை யிலவாகலானும் அவை சீரியைந்திறுதலின்மையானுங் கொள்ளாவெ

ன்பது. ஈண்டு எனப்படுமென்பதேபற்றி நாலசைச்சீர் கொண்டாரும் உளர். ஐயசைச்சீர் கொண்டாரைக்கண்டிலமென்க. (கஉ)

## ௩உ௫. இயலசை மயக்க மியற்சீ ரேனை யுரியசை மயக்க மாசிரிய வுரிச்சீர்.

இது நிறுத்தமுறையானே இயலசையும் உரியசையும் வேறு வேறு தம்முண் மயங்கிவரும் ஈரசைச்சீருணர்த்துகின்றது. (இ-ள்.) நேர்நேர் நிரைநேர் நிரைநிரை நேர்நிரை என்பன நான்கும் இயற்சீர், நேர்புநேர்பு நிரைபுநேர்பு நிரைபுநிரைபு நேர்புநிரைபு என்பனநான்கும் ஆசிரியவுரிச்சீர். எ-று. இவற்றுள் இயற்சீரைத் தேமா புளிமா கணவிரி பாதிரி எனவும் வாய்க்கால் வாய்த்தலை துலைவாய் துலைமுகம் எனவும் பிறவும் இன்னோரன்ன வேறுவேறுகாட்டுப. இனிவருவனவற்றிற்கும் இஃதொக்கும். ஆசிரியவுரிசசீரை வீடுபேறு வரகுசோறு புட்டுமருது மாறுகுருது எனவுங் காட்டுப. அவற்றுக்குச் செய்யுள் "அவரோ, கேடில் விழுப்பொரு ளருமார் பாசிலை - வாடா வள்ளியங் காடிறந் தோரே" எனபுழிக் கேடில் விழுப்பொரு ளருமா பாசிலை என நான்கியற்சீரும் வந்தன. "வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற்றுக் கிடப்ப" எனவும் "வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோளா" எனவும் "பூண்டுகிடந்து வளரும் பூங்கட் புதல்வன்" எனவும் "நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்களித்து" எனவும் இவற்றுள் வீற்றுவீற்று எனவும் வசிந்துவாங்கு எனவும் பூண்டுகிடந்து எனவும் இறவுசகளிதது எனவும் நான்காசிரியவுரிச்சீரும் வந்தவாறு கண்டுகொள்க பிறவுமன்ன. இஃது ஆட்சியுங் குணனுங் காரணமாகப்பெற்ற பெயர். ஆட்சி, "இயற்சீ ரிறுதிமு னேரவ ணிற்பின்" எனவும் பிறுண்டும் ஆளுப. குணம், இயற்சீராகலானும் நான்குபாவிற்கும் இயன்று வருதலானுங் குணங் காரணமாயிற்று. இயல்புவகையான் ஒரோ ஒன்றாகிநின்ற சொற்கள் வருதல் பெரும்பான்மையாகலானும் நான்கு பாவிற்கும் பொதுவாகி இயன்றுவருதலானும் இயலசையான்வரும் ஈரசைச்சீராகலானும் இவற்றை ஒருபாவிற்குரிமை கூறுதல் அரிதாகலானும் இவற்றை இயற்சீரொன்றான். எனவே, சொல்லின்முடியுமிலக்கணத்தால் நான்குபாவிற்கும் உரியவென்பதூஉம் ஈண்டுப்பெற்றாம். அல்லதூஉம் அவற்றைத் தனைகூறும்வழி மூன்றுபாவிற்கும் உரிமைகூறிக் கலிப்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் நேரீற்றியற்சீர் வாராவென ஒழிந்தசீர் வருமெனப்பட்டமையானும் நான்குபாவிற்கும் இயன்றுவருமென்பதுபெற்றாம். ஆசிரியவுரிச்சீரொன்றதூஉம் அவ்வாறே ஆட்சியுங்குணனும் நோக்கியபெயர். ஆட்சி

வெண்பாவுரிச்சீர் ஆசிரியவுரிச்சீர் எனவும் பிரூஉம் அஞப. உரி யசைமயக்கமாகலானும் ஆசிரியத்திற்குரிமையானும் இக்குறி கூணா ங் காரணமாயிற்று. மற்றிவை இயற்சீர்போல ஒரோர் சொல்லாய் யாண்டும் நிற்றலில்லை பிறவெனின், அற்றன்று. தோன்றுவாக்கு இரங்குவாக்கு என்றாற்போல்வன உளவென்பது. இனி இவ்வி யற்சீர்தாமும் இரண்டுசொற் கூடியும் ஒன்றாகியவழியே சீரெனப்ப டும். அதுபோல இவையும் "எல்லாத்தொகையு மொருசொன்ன டைய" என்பதனான் ஒருசொல்லாயினமெனினும் அமையும். மற் று ஒழிந்த இயற்சீருங் கூறாது ஆசிரியவுரிச்சீர் எனவைத்ததென் னையெனின், இவ்விருபகுதியவற்றை இயற்சீரொன்றும் ஆசிரியவுரிச்சீ ரொன்றும் ஆளுமாகலின் என்றவாறு. (கங)

நஉச. முன்னிரை யுறினு மன்ன வாகும்.

இஃது இயலசையும் உரியசையும் மயங்கியாவனவற்றுள் இர ண்டுசீர் கூறுகின்றது. (இ-ள்.) "உரியசைமயக்கம் ஆசிரியவுரிச்சீர்" என மேனின்ற அதிகாரத்தான் அவ்வுரியசைப்பின்னர் நிரையசையு றினும் அவ்வுரியசைமயக்கமாகிய ஆசிரியவுரிச்சீராம். எ-று. அவை நேர்புநிரை நிரைபுநிரை எனவரும். இவற்றை நீடுகொடி நாணுத்தளை குளிறுபுலி விரவுக்கொடி எனவும் பிறவாற்றானுங் காட்டுப. அவையெ ல்லாம் அறிந்துகொள்க. மற்று இயலசையும் உரியசையும் விரவி இ யற்சீராவன இலவோவெனின் உள; அவையன்றே மேற்சொல்கின் றனவென்பது. அஃதேல் இவ்விரண்டும் இயற்சீராகாவோவெனின், அன்னவென்று மாட்டெறிந்த கருத்தினான் அதுவும் அமையுமென்ப து. என்றார்க்கு இவற்றை ஆசிரியவுரிச்சீரென்றல் குற்றமாம்பிறவெ னின், பெரும்பான்மையும் ஆசிரியத்திற்கும் அதற்கினமாகிய வஞ்சிக் கும் உரியவாகலானும், ஒழிந்த இரண்டு பாவின்கண்ணுஞ் சிறுவர வினவாகலானும், வெண்பாவினுட் கட்டளையடிக்கண் வாராவென்பது "கூவித்தளை மருங்கிற் கடியவும் படா" என வரைந்தமையாற்பெறு துமாகலானும், இவற்றை ஆசிரியவுரிச்சீரென்றலே வலியுடைத்தெ ன்பது. அன்னவென்பதனை இயற்சீரொடு மாட்டுங்கால் இற்றது அ திகாரம்பட இறுதிநின்ற நிரையீற்றியற்சீரிரண்டனோடுங் கொள்ள ப்படும். கொள்ளவே, அம்முறையானே நீடுகொடி என்பதனைப் பாதி ரிபோலவுங் குளிறுபுலி என்பதனைக் கணவிரிபோலவுந் தளைகொள்ள ப்படுமென்பதாம். அவை செய்யுளுள்வருமாறு;- "ஓங்குமலைப் பெரு விற் பாம்புநாண் கொளீஇ" எனவும். "உவவுமதி யுருவி னோங்கல் வெ ண்குடை" எனவும் "ஓங்குதிரை வியன்பரப்பின்" எனவும் "நிலவுமண ணல் வியன்கானல்" எனவும் இவை ஆசிரியத்துள்ளும் வஞ்சியுள்ளு

ம் வந்தவாறு. "தூங்குகிளை யன்னந் துயில்வதியுஞ் சோணாட்டே" எனவும் "ஏடுகொடி யாக வெழுதுகோ" எனவும் இவை வெண்பாவினு ட் கட்டளையடியல்லாதவழிச் சிறுபான்மையான் வந்தன. மற்றிவை யுங் கட்டளையடியென்றோமோவெனின், அற்றன்று; அது தளைவ கைகொள்ளுந்துணை இன்னோசைத்தன்றென்பது "அசையுஞ் சீரு மி சையொடு சேர்த்தி" என்பதனானுணர்க. இப்பகுதியறியாதார் அடி யுறழ்ந்ததனாற் பயனென்னையென்றிகழ்ப. (கச)

௩௨௭. நேரவ ணிற்பி னியற்சீர்ப் பால.

இயலசை உரியசை மயக்கத்துப் பிறப்பன இரண்டியற்சீர் உ ணர்த்துகின்றது. (இ - ள்.) முன்னர் உரியசைப்பின்னர் நிரைய சைவரின் ஆசிரியவுரிச்சீராமென்றான். அவ்வதிகாரத்தால் உரியசையி ரண்டன்பின்னும் நேரசைவரின் அவையிரண்டும் ஆசிரியப்பாலவாம். எ-று. அவை சோபுநேர் நிரைபுநேர் எனவரும். உ-ம். சேற்றுக்கா ல் வேணுக்கோல் களிற்றுத்தாள் முழவுத்தோள் எனவரும். நீத்துநீர் குளத்துநீர் போதுபூ விறகுதீ எனவுங் காட்டுப. பிறவுமன்ன. இவை இயற்சீர் நான்கினுள்ளும் எப்பாற்படுமெனின் அதிகாரத்தால் நீடுகொ டி குளிறுபுலி என்பனபோல இறுதியினின்ற பாதிரி கணவிரிப்பாற்ப டும் முறையானென்பது. எனவே, போதுபூ பாதிரியாகவும் வி றகுதீ கணவிரியாகவும் இயற்றப்படுமென்பது. இவ்வாறுகூறவே, இவை பாதிரி கணவிரி போல அசைதிரிந்து நிரையாமென்பது கொ ள்ளற்க. நேர்பு நிரைபுமுதலாக நிரையீறாகிய சீர் தளைகொண் டாங்குக் கொள்ளப்படும் இவையுமென்பதாம். தளைகோளொக்குமெ னவே எழுதளையுள்ளும் இவற்றை ஒன்றென்றனுள் அடங்கு மென்று அடக்கற்க. என்னை? இவை வேறுவேறு பட்ட அசை யான் வேறுவேறு சீராயினமையினென்பது. அசைச்சீர்க்கு உரிச்சீரி லக்கணமின்மையின் இதற்கு இஃதொப்பவாராதென்றுணர்க. "நீ த்துநீர்ப் பரப்பி னிவந்துசென் மான்றேர்" என்புழிப் போதுபூவும் வி றகுதீயும் வந்தவாறு கண்டுகொள்க: இவற்றை ஆசிரியவுரிச்சீர்ப்பின் வைத்ததென்னையெனின் இவையும் அவைபோல ஈண்டொருங்கியை தல் பெரும்பான்மையென்பது அறிவித்தற்கெனவுணர்க. (கரு)

௩௨௮. இயலசை யீற்றுமு னுரியசை வரினே
நிரையசை யியல வாகு மென்ப.

இது மேனின்ற இயற்சீரதிகாரத்தான் ஈரசைச்சீருள் இயல சை உரியசை மயக்கத்துள் ஒழிந்துநின்ற நான்கு இயற்சீருமுணர்-

ற்று. (இ - ள்.) இயலசை இரண்டின்பின்னும் உரியசை இரண்டும் ஒன்று இரண்டுசெய்து மயக்கி நான்காகுங்கால் அவ்விரண்டுரியசையும் இயலசை மயக்கமாகிய இயற்சீர்நான்கனுள் நிரையீற்ற பாதிரியுங் கணவிரியும்போல வருஞ்சீரொடு தட்கும். எ - று. அவை நேர்நேர்பு நேர்நிரைபு நிரைநேர்பு நிரைநிரைபு எனவரும் வருங்கால் நேர்முதற் சீர் இரண்டும் பாதிரிபோலவும் நிரைமுதற்சீர் இரண்டுங் கணவிரிபோலவுங் கொள்ளப்படுமென்றவாறு. எனவே இச்சூத்திரமுஞ் சீராமாறேயன்றிச் சீர்தளைக்குமாறுங் கூறியவாறாயிற்று. இவற்றைப் போரேறு பூமருது கடியாறு மழகளிறு எனினும் இழுக்காது. (சகூ)

கூஉகூ. அளபெடை யசைநிலை யாகலு முரித்தே.

இஃதெய்தியதன்மேற் சிறப்புவிதி; மேல் எழுத்ததிகாரத்தில் ஓதப்பட்ட அளபெடையை ஆணைமொழியெனக்கூறினுன் அவ்வாற்றுனே அவை பெரும்பான்மையும் ஈண்டும் ஈரசைச்சீராகலின் ஈண்டுச்சீர்கூறியவாற்றான் எய்திநின்றனவற்றை எழுத்துநிலைமைப்படுத்து அசைநிலையும் வேண்டினமையின். (இ - ள்.) அளபெடை மேற்கூறிய இயற்சீர்நிலைமையேயன்றி ஓரசையாய்நிற்றலும் உரித்து. எ-று. உம்மையாற் சீர்நிலையெய்தலே வலியுடைத்து. நிலையென்றதனுன் எழுத்துநிலைமையும் நேர்ந்தானும். என்னை? அசையது நிலையைச் குறிலும் நெடிலுங் குறிலிணையுமென எழுந்தான் வகுத்தமையின் அவை மேற்கூறிய ஈரசைச்சீர் பதினறனுள்ளும் என்னைசொப்பட்டனவெனின் ஆசிரியவுரிச்சீராறும் போதுபூ விறகுதீ என்னும் இரண்டியற்சீரும் ஒழிந்து ஒழிந்தவியற்சீர் எட்டுமோம். அங்ஙனமாதல் ஒருமொழியகத்தே உடையவென்பது. ஆஅ எனத் தேமாவாயிற்று. கடாஅ எனப் புளிமாவாயிற்று. யாஅது என ஈரெழுத்து ஞாயிறும். என்னை? கடாஅ என்புழி அளபெடையதாகாரம்பிரித்துக் குறினெடிலாயினுற்போல ஆகாரத்துப்பின்னின்ற அகரமுங் குற்றுகரமுங் குறிலிணையெனப்பட்டமையின். ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். ஆஅழி என்பது மூவெழுத்துப் பாதிரியாம். வடாஅது என மூவெழுத்துப் புளிமாவாம். படாஅகை என நாலெழுத்துக் கணவிரியாம். ஆஅங்கு என ஈரெழுத்துப் போரேறும். ஆஅவது மூவெழுத்துப் பூமருது. புகாஅர்தது என்பது கடியாறு. விராஅயது என்பது மழகளிறு. இவைஒரோசொல்லாகிநின்று எட்டியற்சீரானும் அளபெடைவந்தவாறு. "தேஎந் தேரும் பூஉம் புறவிற்-போஒரி துள்ளுஞ் சோஒரி நண்ணிக்-குராஅம் பிணையல் விராஅங் குறிஞ்சி-குடாஅரிக் கோவல ரடாஅ வைத்த - கானெறிச் சென்றனர் கொல்லோ - மேனெறிச் சென்று பொருள்படைட் போரோ." என இதனுள் இயலசை மயக்கமாகிய இயற்சீர் நான்குமாகி

அளபெடைவந்தன. ஒழிந்த இயற்சீரும் மேல் நான்கனுள் அடங்குமா கலின் அளபெடை நான்கென்பாருமுளர். அவை தனிநிலை முதனிலை இடைநிலை இறுதிநிலை எனப்படுமென்ப. ஒழிந்த இயற்சீரான் அள பெடைவந்த செய்யுளுங் கண்டுகொள்க.

வாஅழ்க என மூவகைச்சீரான் வரும் அளபெடைமொழியு முள. மற்றுப் படாஅகையெனவும் ஆஅழியெனவும் இவை மூவகைச சீராகாவோவெனின் ஆகா. "தனிக்குறின் முதலசை மொழிசிதை த் தாகாது" என்புழி முதற்கணல்லது விட்டிசைத்தல் நேர்ந்திலனாக லானுங் குறிலிணைந்தனவும் குறினெடிலிணைந்தனவும் நிரையாமென் றுரைகலானுமென்பது. என்றார்க்குத், தூஉமணி கெழூஉமணி என நேர்நிரைப்பின் முற்றுகரம்வந்து நேர்பும் நிரைபுமாமாகலின் அவற் றையும் ஆசிரியவுரிச்சீரொன்றோமோவெனின் என்றுதவாறு. அங்ஙனம் அளபெடையான் நேர்பசை நிரைபசை கொள்வாரும் அளபெழுந்த கு ற்றெழுத்து வருமெழுத்தொடு கூட்டி "முதனிலை யளபெடை நேர் நே ரியற்றே - யிடைநிலை யளபெடை நிரைநே ரியற்றே" என்பவாக லின் அளபெழுந்த மொழி நேர்பும் நிரைபுமாகாவென்பது. அவ்வா றுயினும் ஓரோர்கால் அளபெடையுகரத்தைக்கூட்டி நேர்பு நிரைபு மென்றுமோ காசு பிறப்பென்பன தேமா புளிமாவாயினவாறு போ லவெனின், அவை தேமா புளிமாவாகாமையுந் தளைவகையொக்கு மத்துணையென்பதூஉம் மேற்கூறப்பட்டதாகலின் அவைபோல இ வையும் நேர்பசை நிரைபசையாகாவென்பது. அல்லதூஉம், "நீட் டம் வேண்டி னவ்வள புடைய" எனப்பட்டது அளபெடையாகலானு ம் நாலுத்தளையென்பதுபோலாது இயல்பாகவந்து இயைந்த எழுத் தாகலானும் அவைபோல அளபெடை இருவகை யுகரமொ டியைந்த வை வந்தனவெனப்படாமையானும் நேர்பசை நிரைபசையாகாவென் பது. அற்றன்றியும் அவை நேர்பசை நிரைபசையாதல் ஒருவகையா ன் நேர்ந்தானெனினும் அவை நாலுத்தளை விரவுக்கொடியென்னுஞ் சீராதற்கு இழுக்கென்னையெனவும் சிறையிறு காலையும் ஆசிரியவுரி ச்சீரென ஓதி ஆசிரியவுரிச்சீரொட்டென்பான்போல விதந்தோதிப் ப யந்ததென்னையெனவுங் கூறிமறுக்க.

இனி ஒருசார்; - தூஉமணி கெழூஉமணி என்பன அளபெடை அசைநிலையாகியும் ஆகாதும் வருதலின் வெண்சீர்க்கும் இருநிலைமை கோடற்கென்ப. அது நீடுகொடி குளிறுபுலி என்பனவற்றிற்கும் ஒக்கு மாதலானும் அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்துங்கால் அங்ஙனம் அசையாகாமையானும் அது பொருந்தாதென்பது. இங்ஙனஞ் சீர் நிலையெய்திநின்ற அளபெடைகளெல்லாம் வழக்கிற்குஞ் செய்யுட்கும்

பொதுவாயினவுஞ் செய்யுட்கே உரியவாகிச் செய்யுள்செய்யும் புலவராற் செய்துகொள்ளப்படுவனவுமென இருவகை. அவ்விருதிறத்தவும் "நீட்டம் வேண்டின் அவ்வள புடைய" என்னும் இலக்கணத்துட்பட்டு அடங்கின. இனி அவற்றுள் வழக்குக்குஞ் செய்யுட்கும் பொதுவாகியதனை இயற்கையளபெடையென்றுஞ் செய்யுட்குப் புலவர் செய்துகொண்டதனைச் செயற்கையளபெடையென்றும் பெயரிட்டு வழங்கப்படும். அவ்விரண்டனுள்ளும் ஈண்டு அளபெடை அசைநிலையாகலும் உரித்தெனப்பட்டது இயற்கையளபெடையென்று பெயரிட்டுவழங்கப்படும். செயற்கையளபெடை சீர்நிலையாதல் செய்யுட்கேயுரியவாறுபோல இயற்கையளபெடை அசைநிலையாகலுஞ் செய்யுட்கேயுரியதென்பது. ஆகலுமுரித்தென்ற உம்மையான் அவையிரண்டானும் அவ்வாற்றானும் அசைநிலையாகப்படாது புணர்ச்சிவகையான்வந்த அளபெடைக்கண்ணும் பொருள்புலப்பாட்டிற்கு உரியவாகச் செய்யுள் செய்யுமிடத்தும் அவ்வாறசைநிலையாகப்படுமென்றவாறு. உதாரணம். "பலாஅக்கோட்டுத் தீங்கனிமேற் பாய்ந்தாடு கடுவன்" எனப் பலாஅக்கோடென்புழிக் "குறியதன் முன்னரு மோரெழுத்து மொழிக்கு - மறியத் தோன்று மகரக் கிளவி" எனப்பெற்ற அகரமுண்டன்றே? அதுவும் அளபெடையெனப்படும். அதனைப் பலாஅவென்புழிப் புளிமாவென்னுஞ் சீராக அலகுவையாது நிரையசை நிலைமைத்தேயாக வைக்கப்படுமென்பது. "நிலம்பாயப் பட்டன்று நீணிலவா மென்றோட் - குலம்போஒய்ப்போஒய்க் கோவை செய" என்புழிப் போஒய்ப்போஒயெனச் சேய்மைக்குறிப்புப்படச் செய்யுள்செய்தவழியும் அளபெடை அசைநிலையாயிற்று. இனி இவற்றை விளியும் பண்டமாற்றும் நாவல்கூற்றும் முதலாயவற்றுள் வருமென்பாருமுளர். அங்ஙனம் வந்தது பிற்காலத்துச் செய்யுளென்ப. அல்லதூஉம் அங்ஙனம் வரையறைப்படாமையானும் நாம் முன்காட்டினவை ஆண்டு அவற்றுள் அடங்காமையானும் அவ்வாறும் இகந்துகூறுமெனென்பதூஉம்படும். "உப்போஒவெனவுரைத்து மீள்வா ளொளிமுறுவல்" எனப் பண்டமாற்றின்கண் வந்ததெனக்காட்டுப. பிறவும் இவ்வாறு வருவன அறிந்து அசைநிலைப்பாற்படுக்க. என்றார்க்கு இவை செய்யுளுட் தம்மோசை சிதையாவாயின் அலகிருக்கையுள் அழித்துப்பயந்ததென்னையெனின் அஃதன்றே இதனை எழுத்து நிலைப்படுமென்றற்கு உதாரணமென்பது; அஃதேற் செய்யுளின் ஓசையை அழிக்கவமையும் பிறவெனின், அற்றன்று. அவ்வோசையைச் செய்யுட்கண்ணே அழிப்பது சந்தியிலக்கணத்தின் வழீஇயிற்றும். இனிப் பிறவற்றுக்கண்ணும் அளபெடை

யைச் சிதைத்துச் சொல்லின் அச்செய்யுளுட்கருதிய பொருண்மை வி ளங்காதாம். அது நோக்கி இச்செய்யுளின்பத்தைச் சிதையாது ஈண் டு நாம் வேண்டப்பட்ட அலகிருக்கைக்கட் சிதைத்துக்கொள்க என் றுமென்பது. (கள)

௬௨௦. ஒற்றள பெடுப்பினு மற்றென மொழிப.

இஃது ஒற்றளபெடையும் உயிரளபெடைபோலச் சீர்நிலையாத லேயன்றி அசைநிலையாகலும் உரித்தென மாட்டெறிந்தமையின் எய் தாததெய்துவித்தது. இந்நூல் அசைப்படுத்து எழுத்துநிலையும் வேண் டுகின்றமையின் வழுவமைத்ததூஉமாம் (இ - ள்.) ஒற்றளபெடுத் தாலும் உயிரளபெடைபோலச் சீர்நிலையெய்தலும் ஓரசையாய்நிற்றலும் உரித்து. எ - று. ஒற்றளபெடுப்பினுமெனவே, ஒற்றுக்கள் அள பெடுத்து நிற்றற்கு உரியன; உரியவழி, எல்லாம் வரையாது கொள்ள ப்படும். அவை வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் இருவாற்றான் ஒரு சொற்கு உறுப்பாய்நின்ற ஒற்றே அளபெழினும் பின்தோன்றிக்கொள் ளப்பட்ட ஒற்றளபெழினுமென இருவகைப்படும். “அஃதிவ ணுவ லா தெழுந்துபுறந் திசைக்கும்” என்பது சொற்குறுப்பாய்நின்றது. “ஆஅ நோயொடு கான லஃதே” என்பது பின்றோன்றிக்கொண் ட புள்ளியெனப்படும். அற்றெனமொழிப என்றதனான் ஒற்றள பெடையும் உயிரளபெடைபோலத் தானுந் தன்னையொற்றிய எ ழுத்துங்கூடி அளபெடை மொழியாகிச் சீர்நிலையெய்தல் பெரும்பான் மையாகலானும் அவை இயற்கையளபெடையாகியவழி அசையாதல் சிறுபான்மையென்பதூஉம் உயிரளபெடை முதற்கணின்ற நெட்டெழு த்துப்போல ஒற்றளபெடைமுதற்கணின்ற குற்றெழுத்துத் “தனிக் குறின் முதலசை மொழிசிதைத் தாகாது” என்பதனான் விலக்குண்ணா து விட்டிசையாது முதற்கணின்று நேரசையாமென்பதூஉங் கூறிய வாறு. வல்லெழுத்தாறும் ரகாரழகாரமும் ஒழித்தொழிந்த பதினொரொ ற்றுங் குறிற்கீழுங் குறிலிணைக்கீழும் அளபெய்திநிற்கும்வழிச் சீர்நிலை யாதலேயன்றி அசைநிலையாகலுமுரித்துச் சிறுபான்மையென்றவாறு. அவை “கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்” என்றவழிக் கண்ணென்பது சீர்நிலையாகித் தேமாவாயிற்று.

தண்ணென என்றவழித் தட்பத்துச்சிறப்பு உரைத்தற்கு ணக ரவொற்றினை அளபேற்றிச் செய்யுள்செய்தான். ஆண்டு அது மாசெல் சுரமென்னும் வஞ்சியுரிச்சீராவதனைப் பாதிரியென்னுஞ் சீரோயாமெ ன வழுவமைத்தவாறு. குற்றுகரங் குறிலோடுகூடி நிரையாவதனைக் குறிலிணையெனக் குற்றெழுத்தாக்கி ஒழிஞன். அதுபோல ஒற்றள

பெடையும் ஒருமாத்திரையாவதனைக் குற்றெழுத்தென்றோதாரோ வெனின், அங்ஙனம் ஓதின் அவ்வளபெடை குறிலாகிநின்று தன்முன்வந்த குறிலோடும் பின்வந்தகுறிலோடும் நெடிலோடுங் கூடி நிரையசையாக்குவதாவான் செல்லுமென மறுக்க. மற்றும் அரங்கம் என்புழிப் புலிசெல்வாயென மூவகைச்சீருமாமாகலின் இதனை மூவகைச்சீரின் பின் வைக்கவெனின், அற்றன்று அவ்விரண்டற்கும் பொதுவகையாக இடைவைத்தானென்பது. அல்லதூஉம் ஈரசைச்சீராதலே பெரும்பான்மையாதலின் ஈண்டு ஈரசைச்சீர்ப்பின் வைத்தான் இவ்விரண்டளபெடையினையுமென்பது. மற்றும் வழக்கினுள் வரும் இயற்கையளபெடையன்றே அசைநிலையாவன, ஒற்றளபெடை வழக்கினுள் வருமோவெனின், அவையுஞ் சிறுபான்மை வழக்கினுள் வருமென்பது. சுள்ளென்றது புள்ளென்றது கள்ளென்றது துண்ணென்றது திண்ணென்றது எனவரும் பிறவுமன்ன. இவை, செய்யுளகத்தல்லது பரவைவழக்கினுள் வாராவென்பாருமுளர். அவரறியார், செய்யுட்குப் புலவர்செய்துகொண்ட அளபெடை பின்னர் அசைநிலையாகற்கு என்னைகாரணமென மறுக்க. மற்று "அளபெடை யசைநிலை யாகலு முரித்து" எனவரையாதுகூறவே இசசூத்திரமும் அடங்குமாகலின் இது மிகையாம்பிறவெனின், அற்றன்று; எழுத்ததோத்தினுள் ஒற்றளபெடுக்குமென்பது கூறுமையின் வேறுகூறினான். அல்லதூஉம் உயிரளபெடையின் வேறுபட்டதோர் இலக்கணமுடைமையின் இதனை வேறுகூறினானென்பது. என்னை? பறூஉக்கட்டு என்றவழி உயிரளபெடை கடியாறு என்னுஞ்சீராயவாறுபோலாது கொங்ங்கு குரங்ங்கு எஃஃகு மின்ன்னு என அளபெழுந்த இருவகையுகரவீற்றுச்சொற்கள் போறோறு கடியாறு என்னுஞ் சீரானும் ஞாயிறு வலியது என்னுஞ் சீரானுமாகாது இருவகை உகரமொடு இயைபின்றி வருதலானும் அவையண்டு வரகு எனவும் உரியசைச்சீர்ப்பாறபட்டு அசையாகுமாதலானும் இருவகை யுகரமொடியையாதவழிச "கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்" எனவுங் "கஃஃ றென்னுங் கல்லதர்" எனவுஞ் சீர்நிலைபெறுதலானுமென்பது. எனவே, இயற்கையுயிரளபெடைபோலச் செய்ற்கையொற்றளபெடையும் ஒரோவழி ஓசை சிதைக்கப்படாதாயிறறு. இதனானே உயிரளபெடைபோல ஒற்றளபெடை வருகின்ற எழுத்தோடுகூடி அசையாகாதென்பதாம். ஈர்க்கு பீர்க்கு என ஈரொற்றுநின்றவழி வேறோரசையாகாதவாறுபோல ஒற்றளபெடையும் ஒரோவழி அசைநிலைபெறாதென்பதூஉங் கூறினானும். இனி இயற்கையொற்றளபெடை சிறபான்மை வருமாதலின் இஃது அசைநிலையாதலே பெரும்பான்மையாதனோக்கி மாட்டெறிந்தானெனவும் அமையுமெனக்கொள்க. (கஅ)

௩௩௧. இயற்சீ ரிறுதிமு னேரவ ணிற்பி
னுரிச்சீர் வெண்பா வாகு மென்ப.

இது நிறுத்தமுறையானே ஈரசைகொண்டு சீரியைந்திறுவன உணர்த்தி இனி மூவசைகொண்டு முடிவன உணர்த்துவானெழுந்தான் அவற்றுள் இது வெண்பாவுரிச்சீருணர்த்துகின்றது. (இ - ள்) மேனின்ற அதிகாரத்து இயலசையானாகிய இயற்சீரிறுதிக்கண் நேரசைபெறுவன நான்கும் வெண்பாவுரிச்சீராமென்று சொல்லுவர் புலவர். எ - று. உரிச்சீரவெணபா வெண்பாவுரிச்சீராமென மொழிமாற்றியுரைக்க. உதாரணம். நேர்நேர்நேர் நிரைநேர்நேர் நேர்நிரைநேர் நிரைநிரைநேர் எனவரும். இவற்றை மாசெல்வாய் புலிசெல்வாய் மாவருவாய் புலிவருவாய் எனவுந், தேமாங்காய் புளிமாங்காய் கூவிளங்காய் கருவிளங்காய் எனவும் வேறுவேறுதாரணங்காட்டுப. பிறவும் அவ்வாறு வருவன அறிந்துகொள்க. அவற்றுக்குச் செய்யுள். "காமன்கா ணென்று கருவூரார் பாராட்டத் - தாமந்தாழ் கோதை தருவானை - யாமு-மிருகுடங்கை யானெதிரோ கூப்பித் தொழக்கண்-டொருகுடங்கை யாயின கண்." இதனுட் காமன்காண் எனவும் கருவூரார் எனவும் இருகுடங்கை எனவும் யானெதிரோ எனவும் நான்கு வெண்சீரும் வந்தன இதுவும் ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெற்றபெயர். வெண்பாவிற்கும் அதன்பகுதியாகிய கலிப்பாவிற்கும் உரிமையாதலிற் குணங்காரணமாயிற்று. ஆட்சி "வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீ - ரின்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே" எனவும் பிறாண்டும் ஆளுமென்பது. மற்று இயற்சீரொன்றவழிப் பத்து இயற்சீருங் கொள்ளாமோவெனின் அதற்குவிடை முன்னர் "இயலசைமயக்கம்" என்புழிச் சொல்லிப்போந்தாம். இயற்சீரெனப் பொதுவகையான் ஓதியவழி இயற்சீர்பத்துங்கொள்ளாது இயலசைமயக்கமாகிய நான்கனையுங் கோடலும் ஆசிரியவுரிச்சீரென்று பொதுவகையான் ஓதியவழி ஆறனையுங் கொள்ளாது உரியசைமயக்கமாகிய நான்கனையுமே கோடலும் வேண்டிற்றுமென்பது. அஃது இச்சூத்திரத்தானும் "வெண்பாவுரிச்சீ ராசிரியவுரிச்சீர்" என்பதனானும் பெறுதும். (௧௧)

௩௩௨. வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீ ரல்லா மூவசை யான.

இஃது ஒழிந்த மூவசைச்சீருணர்த்துகின்றது. (இ - ள்.) வஞ்சிச்சீரெனக் கூறுபடுக்கப்பட்டன மேற்கூறிய வெண்சீரல்லா மூவசைச்சீரெல்லாம். எ - று. நேர் நிரை நேர்பு நிரைபு என்னும் நான்கனையும் மூன்றுபடியான் இழியவைத்து, முதற்கணின்ற நான்கசையும்

இடைநின்ற நான்கனோடும் ஒரோவொன்று நான்காகக் கூட்டி, இறுதி நின்ற நான்கசையோடும் ஒரோவொன்றற்குப் பதினாறாக நாற்காலுறழ அறுபத்துநான்கு மூவசைச்சீர் பிறக்கும். அவற்றுள், இயலசை மருங்கின் நேரிறுவன நான்குசீருள. அவை முன்னர் வெண்சீர்நான்கெனக் கூறப்பட்டன. ஒழிந்த மூவசைச்சீர்களெல்லாம் வஞ்சியுரிச்சீரெனப்படும். எ - று. அவை அறுபதுவகைப்படும். உதாரணம். நேர்நேர்நேர் நேர்நிரைநேர் நேர்நேர்புநேர் நேர்நிரைபுநேர் எனவும் நிரைநேர்நேர் நிரைநிரைநேர் நிரைநேர்புநேர் நிரைநிரைபுநேர் எனவும் நேர்புநேர்நேர் நேர்புநிரைநேர் நேர்புநேர்புநேர் நேர்புநிரைபுநேர் எனவும், நிரைபுநேர்நேர் நிரைபுநிரைநேர் நிரைபுநேர்புநேர் நிரைபுநிரைபுநேர் எனவும் இவை நேரீற்று மூவசைச்சீர் பதினாறு; இவற்றுள் வெண்சீரென மேற்காட்டிய நான்கும் ஒழித்து ஒழிந்த பன்னிரண்டும் வஞ்சியுரிச்சீர்; இனி நிரையீற்று மூவசைச்சீர் பதினாறும் வருமாறு;-நேர்நேர்நிரை நேர்நிரைநிரை நேர்நேர்புநிரை நேர்நிரைபுநிரை எனவும் நிரைநேர்நிரை நிரைநிரைநிரை, நிரைநேர்புநிரை நிரைநிரைபுநிரை எனவும் நேர்புநேர்நிரை, நேர்புநிரைநிரை நேர்புநேர்புநிரை நேர்புநிரைபுநிரை எனவும் நிரைபுநேர்நிரை நிரைபுநிரைநிரை நிரைபுநேர்புநிரை, நிரைபுநிரைபுநிரை எனவும் நிரையீற்றுச்சீர் பதினாறும் வந்தன. நேர்நேர்நேர்பு நேர்நிரைநேர்பு நேர்நேர்புநேர்பு. நேர்நிரைபுநேர்பு எனவும் நிரைநேர்நேர்பு நிரைநிரைநேர்பு நிரைநேர்புநேர்பு நிரைநிரைபுநேர்பு எனவும் நேர்புநேர்நேர்பு நேர்புநிரைநேர்பு நேர்புநேர்புநேர்பு நேர்புநிரைபுநேர்பு எனவும் நிரைபுநேர்நேர்பு நிரைபுநிரைநேர்பு நிரைபுநேர்புநேர்பு நிரைபுநிரைபுநேர்பு எனவும் இவை நேர்பீற்றுச்சீர்பதினாறும் வந்தன. நேர்நேர்நிரைபு நேர்நிரைநிரைபு நேர்நேர்புநிரைபு நேர்நிரைபுநிரைபு எனவும் நிரைநேர்நிரைபு நிரைநிரைநிரைபு நிரைநேர்புநிரைபு நிரைநிரைபுநிரைபு எனவும் நேர்புநேர்நிரைபு நேர்புநிரைநிரைபு நேர்புநேர்புநிரைபு நேர்புநிரைபுநிரைபு எனவும் நிரைபுநேர்நிரைபு நிரைபுநிரைநிரைபு நிரைபுநேர்புநிரைபு நிரைபுநிரைபுநிரைபு எனவும் இவை நிரைபீற்றுச்சீர் பதினாறும் வந்தன. நேரீற்றுவஞ்சியுரிச்சீர் பன்னிரண்டும் நிரையீற்றுவஞ்சியுரிச்சீர் பதினாறும் நேர்பீற்றுவஞ்சியுரிச்சீர் பதினாறும் நிரைபீற்றுவஞ்சியுரிச்சீர் பதினாறுமாக வஞ்சியுரிச்சீர் அறுபதும் வந்தன. அவற்றுக்குச்செய்யுள்; - "மேற்கோட்டுநீர் கீழ்ப்பரந்துதன் வீழ்க்கோட்டு மெய் வியல்விசும்புதோய்ந் தோங்குமூன்னர்க் சாம்புசழியப் பாய்ந்து சென்றுசென் றோங்குநலிபுநின் றெதிர்த்துமீண்டாங் கதிர்த்துக்கனைகொன் றலங்குகோட்டுமுத் திலங்குநிலவுச்செய் துர்நிரைக்காவிரி பரக்குந்தண்டலை மூதூரோனே பேரிசைவளவன் சுரம்படர்ந்து வருந்துதலை வரோ நிரம்பாவாழ்க்கைப் பாணர்கடும்பே" இதனுள், நேரீற்றுமூவ

ஓசைச்சீர் பதினாறுள்ளும் வெண்பாவுரிச்சீர் நான்குமொழித்து ஒழிந்த பன்னிரண்டுவஞ்சியுரிச்சீரும் முறையானேவந்தன. "தண்டண்டலைத் தாதுறைத்தலின் வண்டோடுவயல் வாய்புகைபுகரந் தயலாலையினறைக்கடிகையின் வழிபோகுவர மறித்துருபுகிளர்ந் தோங்குசென்னிலை வாங்குகதிர்தரும் போதுதூங்குசிலை மீதுபுகுந்துபுகுந் தொடுங்குசெப்தொழில் வழங்குகிளிக்குழாத் திருந்துகோட்டுமிசைக குரங்குவிருந்துகொளு நன்னர்நன்னாட் டென்றுகுவகொல் பொன்னிநன்னாட்டுப் பொருநனெனங்கோன் முடோய்நகையுமல்லவனுடுகெழுதிருவிற்பீடுகெழுவேந்தே." இதனுள் நிரையீற்றுவஞ்சியுரிச்சீர் பதினாறும் வந்தன. "வான்பொய்யாது திம்பெயல்பெய்து மால்யாறுபோந்து கால்சுரந்துபாய்ந்து சுனைபொய்யாது நிறைவளஞ்சான்று வளையாதுவந்து பலாப்பழுத்துவீழ்ந்து பாம்புகொள்ளாது வீங்குசுடர்நீண்டு வித்துநாறுவாய்த்து முத்துக்கரும்புபூத்து வரம்புகொள்ளாது நிரம்புபெருங்கூட்டு விசும்புநீங்குமஞ்சு துயின்றுபெயர்ந்துபோந்து வாழையோங்கிய கோழிலைபரக்குந் தண்டாயாணர்த்தென்பவென்றம் படுவது கூட்டுண்டு கடவதுநோக்கிக் குடிபுறந்தரூஉம் வேந்த னெடுநிலைத் தண்குடைநிழற்றுநாடே." இதனுள் நேர்பசையிறுதியாகியவஞ்சியுரிச்சீர் பதினாறும் முறையானே வந்தன. "சீறறமிகுபு செல்சினஞ்சிறந்து கூற்றெருத்துவிளைபு கோள்குறித்துமுயன்று புலிப்போத்துலவு பொலங்கொடியெடுத்துப் புகவேற்றுமலைந்து பகையரசுதொலைத்து வேந்துமீதணிபு போந்துபடர்ந்தொடுத்து வீற்றுவீற்றுப்புணர்ந்து வேற்றுச்சுரும்புகிளர்ந்து களிறுகால்கிளர்ந்து குளிறுகுரல்படைத்துச் சொரிந்துதூங்குகடாத்து விரவுப்பலவுதொலைத்து மணங்கமழாரமொடு தயங்கச்சூடிய வென்வேற்சென்னி பொன்னியற்புனைகழல் பாடுபெறுபாணினும் பலவே பாடாதோடிய நாடுசெழுவேந்தே" இதனுள் நிரையீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும் முறையானேவந்தன. (உ0)

### ௩௩௩. தன்பா வல்வழித் தானடை யின்றே.

இஃது அவறறைப் பாவிறகுரிமைகூறுகின்றது. இவ்வறுபது வஞ்சியுரிச்சீருந் தன்பாவினுளல்லாத ஆசிரியம் வெண்பாக் கலியினுள் வாரா. எ-று. சிறுபான்மையானுவன முன்னர்ச்சொல்லுதும். இவை ஆசிரியவுரிச்சீர் தூங்கலோசையாறுகுமாறுபோல ஆசிரியவோசையும் ஆக்குங்கொல்லெனின் ஆக்காவென்பது இதனது பயன். (உக)

### ௩௩௪. வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய.

இது மற்றைச்சீர் மயங்குமாறு உணர்-ற்று. (இ-ள்.) வஞ்சியுரிச்சீர் பிறபாக்களை ஆக்காதவாறுபோலாது ஒழிந்த ஆசிரியவுரிச்சீரும்

வெண்பாவுரிச்சீரும் இவ்வஞ்சிப்பாவினையாக்கும். எ - று. உரிச்சீர் மேலதிகாரமாகலான் எஞ்சியவென இவ்விரண்டனையுமே கொண்டா மென்பது. வஞ்சியதுபாவினை வஞ்சியென்றான் ஆகுபெயரான். மற்றுச் சீர்கூறும்வழிப் பாக்கூறுவதென்னையெனின் அப்பாவினை யாக்குவன சீராகலிற் சீரிலக்கணம் எய்துமென்பது. அவையாமாறு "வசையில்புகழ் வயங்குவெண்மீன் றிசைதிரிந்து தெற்கேகினுந் - தற் பாடிய தளியுணவின்" எனத் தன்சீர்வரத் தூங்கலோசைபிறந் தது. "தாழ்தாழைத் தண்டலை" என்பதூஉம் "புட்டேம்பப் புயன் மாறி" என்பதுவும் வெண்பாவுரிச்சீரால் தூங்கலோசைபிறந்தது. "புட் டேம்பப் புயன்மாறி" என்புழி "வசையில்புகழ் வயங்குவெண்மீன்" எனத் தனது சீரானே தூங்கலோசைபிறவாதாங்குப்பிறந்தது திசைதிரி ந்து தெற்கேகினும் என இயற்சீர்நிற்பத் தன்சீரானே தூங்கலோசைபி றந்தது. புள்ளுந்துயின்று புலம்புகூர்ந்தென ஆசிரியவுரிச்சீரான் வ ஞ்சித்தூக்காயிற்று. பிறவும் அன்ன. (உஉ)

௩௩௫. வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீ
ரின்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே.

இது கட்டளையாசிரியப்பாவினுள் அடியுறழப்படாதசீர் இவை யென்கின்றது. (இ-ள்.) வெண்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஆசிரியப்பாவி ற்கு ஒப்பவரும் நிலை இல. எ - று. இன்பாநேரடியென்பது ஆசிரியவ டியென்றவாறு. ஒருங்கென்றதனான் இயற்சீராகிய தன்சீரேபோல வெண்சீரும் வாராதென்பராம். இயலசை மயங்கினவே இயற்சீரென ப்படுவன எனவும் உரியசைமயங்கினவே ஆசிரியவுரிச்சீரெனப்படுவன எனவும் முன்னர்ச்சொல்லிப்போந்தானாகலின் ஈண்டு உரியசை மயக் கத்தினையே ஆசிரியவுரிச்சீரென்றான். எனவே நீடுகொடி குளிறுபுலி என்னும் இரண்டாசிரியவுரிச்சீரும் ஆசிரியத்துவந்து அடியுறழுமென் பது ஈண்டுக்கொள்ளப்படும். அல்லது "முன்னிரை யுறினு மன்ன வாகும்" என்ற மாட்டேற்றான் இயற்சீர்த்தன்மை சிறுபான்மை வகையான் எய்துவித்ததூஉம் இப்பயனோக்கியாயிற்று. இக்கருத்து நோக்கிப் போலுங் "கலித்தளை மருங்கிற் கடியவும் படா" என்ற உம் மை இறந்ததுதழீஇயிற்றுமாமென்பது. இனி ஒருசாரார் வெண்சீரும் ஆசிரியப்பாவினுள் வருங்கால் இயற்சீரிடையிட்டன்றி உடனியைந் துவாரா என்ப. அங்ஙனங்கொள்ளிற் கட்டளையடிக்கண்ணும் ஆசிரிய வடியுள் வெண்சீரும்வந்து உறழப்பெறுமென்றானும். அல்லாதவடிக் காயின் அது போக்கி "இன்சீ ரியைய வருவ தாயின்-வெண்சீர் வரை யார் ஆசிரிய வடிக்கே" என்புழிக் கூறப்படுமென்பது. ஈண்டுநேரடிக் கென்பது கட்டளையடிக்கென்றவாறு. (உ௩)

௩௩௪. கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ.

இது கலிப்பாவிற் சீர்மயங்குமாறுணர்த்-று. (இ - ள்.) மேல் ஆசிரியவடியுறழ்தற்கண் விலக்கப்படாத நிரையீற்றாசிரியவுரிச்சீர் இரண்டுங் கலிப்பாவின் அடங்குங்காற் கடிதலுமுடையசொல்லெனின் ஈண்டும் அவை விலக்கப்படா. எ - று. எனவே, நிரையீற்றாசிரியவுரிச்சீர் இரண்டுங் கலியடியுறழ்வனவாயின. கடியவும்படாவென்பது இறந்ததுதழீஇய எச்சவும்மை. ஆசிரியத்திற் கடியப்படாவாதலேயன்றி ஈண்டுக் கடிதலும்படாவென்றமையின் கலித்தளைமருங்கினென்பது வினைசெய்யிடத்துக்கண் ஏழாவது வந்தது; தளைத்தலென்பது சீர்த்தொழிலாகலின். அல்லாக்கால் இருசீராகியதோர் தளையிடைக்கப் பிறிதொருசீர் ஆண்டுவரல்வேண்டுமெனமறுக்க. மற்றுக் கலித்தளை மருங்கின் வெண்சீர்வருகவென்றாரோவெனின் அது சொல்லவேண்டுமோ? ஆசிரியந்துத் தன்சீர் வாராதன கூறுவதன்றி வருமென்பது கூறான், வெண்பாவிற்கும் அவ்வாறே வெண்சீர்வருமென விதந்தோதான், அதுபோல அதனியற்றாகிய கலிப்பாவிற்கும் வெண்சீர் வருமென விதந்தோதல்வேண்டுவதன்று; வஞ்சிப்பாவிற்குப்போல வேறு சீரின்மையினென்பது. அஃதேல் "வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய" என வஞ்சிப்பாவினுள் ஆசிரியவுரிச்சீர் வருமென்று கூறல்வேண்டாவெனின் வேண்டுமன்றே வெண்சீர்வருமென விதந்தோதுவான் ஆசிரியவுரிச்சீர் ஆண்டு விலக்குண்ணுமாகலினென்பது. அவற்றுக்குச் செய்யுள்; "ஓங்குவரை யடுக்கத்துப்பாய்ந் துயிர்செகுக்குந் துறைவகேள்." எனவும் "விளங்குமணிப் பசும்பொன்னின் வியலறைமேல் விளையாடி" எனவும் நிரையீற்றாசிரியவுரிச்சீர் கலிப்பாவினுள் வந்தன. "வஞ்சியே னென்றவன் றூருரைத்தான். யானவனை" எனவும் "அரிகாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" எனவும் இவையிரண்டும் வெண்சீரெனத் தொகுக்கப்படுதலின் வெண்சீரொன்னுஞ்சொல்லின்முடியுமிலக்கணத்தான் விதந்தோதாமேயும் அவ்விருபாவிற்கும் உரியவாயின. மற்றுக் கலிமருங்கினென்னாது தளைமருங்கினென்றதென்னையெனின் இவ்வாராய்ச்சியுடையன கட்டளையடியென்றதென்பது. எனவே, தளையென்று ஓதுவனவெல்லாங் கட்டளையடியே நோக்குமென்பதுபெற்றாம். இங்ஙனம் வரையறையுடையன கட்டளையடியெனவே, அல்லாத அடிக்கண் ஒழிந்த ஆசிரியவுரிச்சீரும் வருமென்பது பெறுதுமென்பது. மற்றுக் கட்டளையடியல்லாத ஆசிரியவடியுள் உரியசைமயங்கிய ஆசிரியவுரிச்சீரும் வருமென்பதூஉங் கூறுகவெனின், அவை விலக்குண்டது கட்டளையடிக்காதலின் விலக்காதவழித் தன்சீர் வருதல் விதந்தோதவேண்டாவென்பது முற்கூறியவாறேகொள்க. (௨௪)

௩௩௭. கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே.

இதுவுங் கட்டளையடிக்கு எண்ணப்பட்டதோர் சீர்வரையறை. (இ - ள்.) கலித்தளை அடிவயின் = கலிப்பாவினது கட்டளையடிக்கண் : நேரீற்றியறசீர் நிலைக்கு உரித்தன்று = தேமா புளிமா என்னும் இரண்டியற்சீரும் வரப்பெறா : தெரியுமோர்க்கே = துள்ளலோசையைத் தெரிவார்க்கு. எ - று. ஆகாவென்றவற்றைக் காட்டலாவதில்லை, ஆகாவென்பதல்லது. கட்டளையடிக்கண் வாராதோதவே, அல்லனவற்றுக்கண் வருமென்பதாம். அவை "பாஅலஞ்செவிப் பணைத்தாள மானினை" எனவும் "உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கை" எனவுங் "காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்" எனவுங் கலியடியுள் வந்தன. இயற்சீர் பத்துள்ளும் இவையிரண்டனையுங் கலிக்கண் வாராவெனவே ஒழிந்த ஆசிரியத்துள்ளும் வெண்பாவுள்ளும் பத்தியற்சீரும் வேறுவேறு வந்து அடியுறழுமென்பதூஉம், இதற்காயின் எட்டியற்சீர் அடியுறழுமென்பதூஉங் கூறினானும். எனவே ஆசிரியம் இயற்சீர்பத்தும் ஆசிரியஉரிச்சீரிரண்டுமெனப் பன்னிரண்டுசீர் பெறுவதாயிற்று. வெண்பாவும் இயற்சீர்பத்தும் வெண்சீர்நான்குமெனப் பதினான்குசீர் பெறுவதாயிற்று. கலிப்பாவடியின் இயற்சீரெட்டும் வெண்சீர்நான்கும் ஆசிரியவுரிச்சீரிரண்டுமெனப் பதினான்குசீர் பெறுவதாயிற்று. அசைச்சீருளாவன முன்னர்ச்சொல்லுதும். இனி, வஞ்சிப்பாவிற்கும் "வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய" என முற்கூறியவாற்றான் ஈரசைச்சீர் பதினாறும் மூவசைச்சீர் அறுபத்துநான்குமென எண்பதுசீருங் கட்டளையடியல்வழி உரியவென எய்துவித்தற்றாய. அவற்றுட் தேமா புளிமாவென்னும் இரண்டுசீரும் ஆகாத இடம் இனிச்சொல்லுகின்றான். (௨௫)

௩௩௮. வஞ்சி மருங்கினு மிறுதி நில்லா.

இது வஞ்சிப்பாவினுள் வாரா இயற்சீர் கூறுகின்றது. (இ-ள்) வஞ்சி மருங்கினும் = மேற்கூறிய இயற்சீரிரண்டும் வஞ்சிப்பாவினும் : இறுதி நில்லா = ஈற்றில் நிலைமைப்படா. எ-று. வஞ்சித்தளைமருங்கினென்னது வஞ்சிமருங்கினென வாளாதுகூறினான் அது கட்டளையடிக்கல்லாமையின். வஞ்சிப்பாவினுட் சீர்வருங்கால் ஒழிந்த பாவிற்குப்போலச் சீரியைந்திறுதன்மாத்திரையன்றிச் சீர்தோறுந் தம்முள் வேறுபாடு தோன்றத் தூங்கப்படும். அவ்வாறு தூங்கலோசைப்படநில்லா தேமா புளிமாவென்னும் இரண்டுசீருமென்றவாறும். உம்மை

இறந்தது தழீஇயிற்று. இறுதியில்லாவென்பது இறுதி வாடியில்லாவெ ன்றவாறு. எனவே, தூங்கலோசைப்பட முதற்கண் வாராவென்ற வாறும். என்னை? இருசீரினுள் வருஞ்சீரோடு தொடருங்கால் இறு தற்கெழுதில்பெறுவது நின்றசீராகலினென்பது. இதனானே ஒழிந்த இ யற்சீரிற் றூங்கலோசைப்பட நிற்குமென்றவாறும். "கொற்றக் கொ டியுயரிய" எனவுங் "களிறுங் கதவெறிந்தன" எனவும் நேரீற்றியற்சீர் முதற்கண் தூங்காவாயின. "அகல்வயன் மலைவேலி நிலவுமணல் விய ன்கானல்" என ஒழிந்த இயற்சீர் தூங்கினவென்பது. இவையுங் க ட்டளையல்லவென்பது "அசையுஞ் சீரும்" என்பதனான் அறிக. இறு திக்கண் விலக்காமையின் "மண்டிணிந்த நிலனு நிலனேந்திய விசு ம்பும்" என நேரீற்றியற்சீர்வந்தன.

இனி ஈற்றுக்கண் வருதல் சிறுபான்மையென்பாரும் யாண் டும் இறுதிக்கண் வாராவென்பாரும் இச்சூத்திரத்தையுரைக்குமாறு; வஞ்சியடியிறுதிக்கண் இவை வாராவெனப் பெரும்பான்மைபற்றி ஓதினனெனவும், இஃதொருதலையாக விலக்கினனெனவுஞ் சொல் லுப. அவ்வாறு கூறின் முதற்கண் அவ்விருசீரும் வருதல் பெரும்பா ன்மையாதல் வேண்டுமென மறுக்க. என்றார்க்குத் "தன்பால் வெ ங்கள்ளினொலிவேலிலங்கு தடக்கை" எனவும் "புனற்காற் புணர் மருதின் போதப்பிய புனற்றுமனை" எனவுந் "தேன்றுட் ... ... யின்" எனவும் வந்தனவாலெனின் அங்ஙனம் நலிந்து க... அளபெடை வெண்சீராம்; அது செவிகருவியாக உண... "கொற்றக் கொடியுயரிய" என அளபெழாதவழித்... அல்லதூஉம் நேரீற்றியற்சீர் இறுதிக்கண் நிற்றல் ... யெனப்படும். "மண்டிணிந்த நிலனு-நிலனேந்திய விசும்பும - ... தைவரு வளியும் - வளிதலைஇய தீயுந் - தீமுரணிய நீரும்." எனவும் "ஆழ்ந்துபட்ட கிடங்கி னுயர்ந்தோங்கிய வாயில்" எனவும், ஒரோ செய்யுட்கண்ணே பலவந்தமையினென்பது. மருங்கென்றதனானே நேர்நிலைவஞ்சிப்பகுதிக்கே இவ்வரையறைகொள்ளப்படும். கொள் ளவே, வியனிலைவஞ்சிக்கு இவ்வரையறையின்றென்பது. மற்று ம ண்டிணிந்த நிலனுமென்பது நேர்நிலை வஞ்சியாகலின் அடிநிலையோடு அடிக்கூட்டத்துக்கண் அதற்குத் தூங்கலோசை கொள்ளுமாறென் னையெனின், அஃது இலக்கண அடியன்மையின் ஈண்டாராய்ச்சியின் றென்பது. நேர்நிலைவஞ்சியுள் இலக்கண அடிக்கண் இயற்சீரெல் லாம் வாராவென்பது "குறளடி முதலா வளவடி காறும்" என்புழிச் சொல்லுதும். (௨௬)

௩௩௯. இசைநிலை நிறைய நிற்குவ தாயி
னசைநிலை வரையார் சீர்நிலை பெறலே.

இது நான்கசையுஞ் சீராகும் இடனுமுடைய என்கின்றது. (இ - ள்.) ஓசைநிலை நிறையாமையாற் சீர்த்தன்மைபட நிறைந்து நிற்குமாயின் அசைநிலைமைப்பட்டசொற்களையெல்லாஞ் சீர்நிலைபெறுதற்கண் வரையார். எ-று. "கழுெழா மன்னர்தங் கை." என்று நேரசைச்சீராயிற்று. "புனனுடன் பேரோ வரும்" என நிரையசைச்சீராயிற்று. "எய்போற் கிடந்தானென் னேறு" என நேர்பசைச் சீராயிற்று. "மேவாரை யட்ட களத்து" என நிரைபசைச்சீராயிற்று. பிறவு மன்ன. இவற்றை உண்மைவகையாற் சீராமென்றான் அல்லன், "தொடர்மொழி யெல்லா நெட்டெழுத் தியல" என்றாற்போலக் கூறினனென்பது. இவை இன்னபாவினுள் வருமென்பது முன்னர்ச் சொல்லுதும். இங்ஙனங் கூறுக்கால் வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடியென்னுமாறு இல்லையென்பது. (உஎ.)

௩௪௦. இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான.

இஃது எய்தியதொருமருங்குமறுத்தல் நுதலிற்று; இயலசையிரண்டுஞ் சீர்நிலையெய்தினும் தளைகொள்ளப்படாவென்றமையின். இனி, எய்தாததெய்துவித்ததூஉமாம். என்னை? உரியசையாற் தளை கொள்ளுமாறுணர்த்தினமையின். (இ-ள்) இயற்சீர்க்கண்ணே கூறுபடுத்து இயற்றப்படும், அவை தளைவகை சிதையாத்தன்மைக்கண். எ-று. பாற்படுத்தெனவே அதிகாரத்தான் இறுதிநின்ற உரியசையிரண்டும் பகுத்துக்கொள்ளப்படும்.

நான்கியற்சீருள் இன்ன இயற்சீர்ப்பாற்படுமென்றானோவெனின், "கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர்" என அதிகாரம் வருகின்றமையிற் தேமா புளிமாவென்னுஞ் சீர்போல இரண்டசையுந் தளைகொள்ளுமென்றமையின் இயற்றுகவென்றானென்பது. தானுக இயல்வதன்மையின் இயற்றுகவெனப்பட்டது. தளைவகைசிதையாத் தன்மையானவென்று இடம் நியமித்ததென்னையெனின், சீர்வகையான் அசைச்சீரென வேறாய் நிற்றலுடைய தளைவகை சிதையாத் தன்மைநோக்கியே இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றுகவென அடக்கங் கூறிற்றென அறிவித்தற்கெனவுணர்க.

இவ்வுரியசையிரண்டுஞ் சீர்வகையான் வேறுவேறு எண்ணித்தொகைபெற்றுத் தமக்கு ஓதிய அடியுறழுமெனவும், அஃதெண்ண

ப்பட்ட தளைவகைநோக்குங்கால் வேறுவேறெண்ணுந்தொகைபெற்று இயற்சீரெனவேயடங்குமெனவுங் கூறப்பட்டதாம். இன்னுந் தளைவகைக்கண்ணெனவே, கட்டளையடிக்கண்ணதே இவ்வரையறையென்பதூஉம் அல்லாதவழி இந்நான்கசையும் வரையறையின்மையிற் தளைகொள்ளப்படாதென்பதூஉங் கூறப்பட்டதாம். அஃது ஓரசைச்சீரல்லாத சீராயிற் கட்டளையடியல்வழியுந் தளைகொள்பவோவெனிற், தளைகொள்ளிற் கட்டளையடியெனப்படுமாதலின் அல்லாதவழி வந்தசீர் தளைகொண்டனவென்றல் பயனில்கூற்றாமென மறுக்க. "உலக மூவப்ப வலனேர்பு திரிதரு" என்றவழி ஆசிரியத்துட் பிறதளை வந்ததென்று இலக்கணங்கூறி வழுவமைக்கல் வேண்டா. என்னை? அது பெருவரவிற்றாகலின்; அதனான் வருஞ்சீரவகையான் வந்ததென்று ஒழிதலே அமையும், வரையறை இல்லனவற்றுக்கு வரையறைகூறல் குற்றமாகலினென்பது. மற்று இவ்வுரியசைச்சீரிரண்டும் வரையாது கூறினமையின் மூன்றுபாவிற்குஞ் செல்லும்பிறவெனின் "கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர் - நிலைக்குரித் தன்று" எனக் கூறி ஈண்டு இவற்றை இயற்சீர்ப்பாற்படுமென்றமையின் இவையுங் கலிப்பாவிற்கு விலக்குண்டனவென்பது. எனவே, ஆசிரியத்திற்கும் வெண்பாவிற்கும் உரியசைச்சீரிரண்டும் உரியவாயின. ஆசிரியத்திற்கு மேற்கூறிய பன்னிரண்டும் இவையிரண்டுமென அடியுறழுஞ்சீர் பதினான்காயின. வெண்பாவிற்கு முன்னரெய்திய சீர் பதினான்கும் இவையிரண்டுமாக அடியுறழுஞ்சீர் பதினாறாயின. கலிப்பாவிற்கு மேற்கூறியசீர் பதினான்குமேயாயின. இங்ஙனம் வகுக்கப்பட்ட சீர் நாற்பத்துநான்கினையும் சீர்வகையான் உண்மை நோக்கித் தொகுப்ப இயற்சீர்பத்தும் ஆசிரியவுரிச்சீரிரண்டுமே வெண்சீர்நான்கும் அசைச்சீரிரண்டுமெனப் பதினெட்டாம்.

மேல் ஐவகை அடியெனப்பட்ட அறுநூற்றிருபத்தைந்தடியும் இச்சீர்பதினெட்டானுந் தோற்றிக்கொள்ளப்படும். இப்பதினெட்டுச்சீரும் இருநிலைமையெய்துவனவும் எய்தாதனவுமாகி முப்பதுதொன்றாகி விரியுமாறு முன்னர் "எழுத்தள வெஞ்சினும்" என்புழிச் சொல்லுதும். (உ௮.)

௩௨௯. வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே.

இது வெண்சீராற் கலித்தளையாமாறுணர்-ற்று. "கலித்தளை மருங்கிற் கடியவும் படா" என்புழி அவ்வாசிரியவுரிச்சீராற் கலித்தளையாமென்றான் அவ்வதிகாரம் இடையறாதுநின்றமையின் இதுவுங் கலித்தளைக்கே இலக்கணமாயிற்று என்றார்க்கு "வஞ்சி மருங்கினும்"

எனவும், "இசைநிலைநிறைய" எனவும், "இயற்சீர்ப்பாற்படுத்து" எனவும் இம்மூன்றுசூத்திரம் இடையிட்டனவாலெனின், அற்றன்று. கலிப்பாவிற்கு விலக்கப்பட்ட நேரீற்றியற்சீர் அதிகாரம்பற்றி இடைபுகுந்ததல்லது கலித்தளையதிகாரம் விலக்கினவல்லவென்பது. (இ-ள்.) வெண்சீர் பலதொடர்ந்து ஒருகலியடியுள் நின்றவழி அவ்வெண்சீருள் ஈற்றுநின்ற சீரின் முதல்வந்த நேரசை மற்றநிரைமுதல் வெண்சீர்வந்து முன்னைய இரண்டுங் கலித்தளையாயவாறுபோலக் கலித்தளையாம். எ - று. மேனின்ற அதிகாரத்தாற் றளைவகை சிதையாத் தன்மைக் கணென்பது கூட்டியுரைக்க. எனவே வெண்சீர்ப்பின்னர் நிரைவந்து தட்டலே சிறந்ததெனவும் நேர்வந்து தோன்றினும் அவ்வோசையே பயந்து ஒருநிகர்த்தாமென்பதூஉங் கூறி அவ்வாறுங்காலும் இறுதிச்சீரின் முதலசையே நிரையியற்றுவதெனவுங் கூறினானும். இது மொழிந்தபொருளோடொன்றவவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தலென்னும் உத்திவகை. வெண்சீரிறுதியென்பது ஏழாவதன்றொகை; என்னை? ஈறெனப்பட்டது சீராகலின். வெண்சீருள் ஈற்றுச்சீரெனவே வெண்சீர் பலவுந் தொடர்ந்து நிரைமுதல்வந்தவழியன்றி இறுதிச்சீரொன்றியது நிரையசையியற்றாதென்பதாம். இதனான் நிரைமுதல்வெண்சீர்வந்து நிரைதட்டுங்கால் இயற்சீர் அடிமுதற்கண்வருமென்பதூஉங் கூறப்பட்டதாம். மற்று ஈறென்றது ஈற்றுச்சீரினையாயின் அச்சீரினிடையும் இறுதியும் நின்ற அசையினை நிரையசையியற்றென்று கொள்வவெனின், நின்றசீரின் ஈற்றசை வருஞ்சீரின் முதலசையோடு தட்டிற் றளையாவதன்றி ஒன்றிடையிட்ட அசையுஞ் சீரும்பற்றித தளைகொள்வாரின்மையின் அது கடாவன்றென்பது. இனி வெண்சீரென்பது அஃறிணையியற்பெயராகலானும் பன்மைவினைகொண்டு பால் அறிய வந்ததன்றாயினும் அதனை யானைக்கோடென்றாற்போல இறுதியென்றமையானும் பன்மைப்பாற்பட உணர்க. என்னை? பின்னேன் முன்னேன் என்றவழி அவர்க்கு முன்னும் பின்னும் வேறுசிலருளரொன்பது உணர்த்துமாகலின். என்றார்க்கு வெண்சீரிறுதி நீடுகொடி குளிறுபுலி வந்தவழி அவற்று முன்னின்ற நேர்பசை நிரைபசைகளைக் கலிப்பாவினுட் கலித்தளையாக்குதற்கு நிரையசையியற்றென்றானென்றுமோவெனின், அற்றன்று; வெண்சீர்களின் இறுதியெனவே மூன்றாஞ்சீரும் நான்காஞ்சீரும் வெண்சீராகல்கூறி நிரைமுதல்வெண்சீர்வந்து நிரைதட்டலெனவே இரண்டாஞ்சீரும் வெண்சீரவாகல்வேண்டுமெனக்கூறி நிரைதட்டுமெனவே இயற்சீரானும் ஆசிரியவுரிச்சீரானும் நிரையீறாயினவெல்லாம் முதற்கண் நிற்குமெனவுங் கூறினான். கூறவே ஆசிரியவுரிச்சீர் இடைநில்லாவெனவும் அங்ஙனம்

நிற்பிற் கலியோசையழியுமென்பதூஉமாம் இவர்கருத்தென்பது. அல்ல தூஉம் வெண்சீர்க்கு உரியசையின்மையானும் அற்றன்றென்பது. எனவே, ஈற்றுச்சீர் நிரைமுதலியற்சீர்வரினும் ஆண்டுத் துள்ளலோசை ஒழுங்குமென்பதாம். "அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" என்பது வெண்சீரிறுதி நிரையொடுதட்ட கலித்தளை. "அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையான்" என்பது வெண்சீர்கள் பகைத்துவந்து ஈற்றுச்சீரின் முதற்கணின்ற நேரசைநிரையசைபோலக் கலியோசை கொண்டமையின் அது கலித்தளையெனப்பட்டது. இனி, வெண்சீர் நான்கும் ஒன்றிவரினுங் கலித்தளையாகுமேனும், அது வெண்பாவடியெனவும்பட்டுத் திரிவுபடுதலின் அதனைக் கட்டளையடியென்றது இறுதிக்கண் ஒரோவழி ஒருசீர் ஒன்றிவரினும் அதன் முதற்கட் பல வெண்சீர்வந்து பகைத்தலிற் கலியோசையே காட்டுமென்றானென்பது. அஃதேற், "பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்" என்றவழி இடைநின்ற சீரின் நேரசை நிரையசையற்றென்றாமோவெனின், அது கட்டளையடியென்பது "அசையுஞ் சீருமிசையொடு சேர்த்தி" என்பதனான் அறியப்படும். அல்லாதாரும் இவை செவிகருவியாக உணர்தற்கருமைநோக்கி அடியறியுந் தன்மை அரிதென்றுசொல்லுப. இனி, இயற்சீரானன்றித் தளைகொள்ளாமோவென்பார் "தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா" என்பதனான் வெண்சீர்க்குத் தளைவிலக்கல்வேண்டி அவ்வெண்சீரினையும் இயற்சீராக இயற்றிக்கொள்ளப்படுமென்றற்கு ஒருவெண்சீரின் ஈற்றசை நிரையசையியற்றென்றானெனக் கூறி, ஞாயிறென்னும் இயற்சீரினை மாசெல்வாயெனப் பின்னுமொருகாற் திரிந்ததனையே திரியாமல் நிறுத்தி நிரைமுதல்வெண்சீர்வந்து நிரைதட்பினுங் கலியாமெனக் காட்டுப. அது ஞாயிறு புலிசெல்வாய் மாசெல்வாய் எனவரும். இவ்வாறே "கலித்தளைமருங்கிற் கடியவும்படா" என்று ஆசிரியவுரிச்சீர்க்குந் திரிபுகூறுமோவெனின் அது நினைந்திலர்போலுமென்று இகழ்ந்துரைப்பாராவர். மற்று வெண்சீரிறுதி நிரைவந்தாற் கலித்தளையாமென்பதற்கு ஓத்து வேறுண்டாயினன்றே நேரும் நிரையுந் தட்டதனை நேரும் நிரையும் பகைத்ததெனவும் வேண்டுவதெனவும் அங்ஙனம் பொருளுரைப்பார்க்கு எவ்வாற்றானும் இச்சூத்திரம் வேலாதெனவுந் "தன்சீர்வகையினுந் தளைநிலைவகையினும்" என்றவழித் தன்சீரானுந் தளைகோடுமாகலானும் அதுபொருந்தாதெனமறுக்க. இனி, வெண்சீரின் ஈற்றசையொன்றேயாகலான் இயற்றென்று ஒருமைகூறினான். இடைநின்றநேரும் நிரையுங் கோடுமென்னுமையின் இங்ஙனந் திரிந்தநிலைமை வஞ்சியுரிச்சீரெனப்படும். இனி, வெண்சீரொன்பது எழுவாயாயின் ஈற்றசை

நிலையென்பது இயற்சீரின்பெயராதல்வேண்டும். அங்ஙனங் கருதி னும் அசையென்பதனை ஒருகாற்சொல்லி ஈற்றசை நிலையசையென லாகாதென்பது. அல்லதூஉம் வெண்சீரினை இயற்சீராக்கி அவ்வியற் சீரினை வெண்சீராக்குதல் வினையிலுழப்பாகி வரம்பின்றுமெனமறு க்க. என்றார்க்குத் தன்சீருள்வழித் தளைவகைவேண்டானெனல் "அ ரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" என்பதூஉங் கலித்த ளையன்றாகிய செல்லுமென்பது. கலிப்பாவிற்கு ஒன்றாது வருதலு ரிமையுடைய வெண்சீரெனவே வெண்பாவிற்கு ஒன்றாது வருதல் யாண்டுமில்லை, ஒன்றிவரினல்லதென்பது உடம்படப்பட்டது. (உக)

ங௪உ. இன்சீ ரியைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையா ராசிரிய வடிக்கே.

இது கட்டளையடியல்லாதவழிச் சீர்மயங்குமாறுணர்-ற்று: (இ-ள்.) இன்னோசைத்தாகிய துணிவிற்றாகி வரின் ஆசிரியவடிக்க ண்வெண்சீரும் வரப்பெறும். எ-று. "இமிழ்கடல் வளைஇய வீண்டக ன் கிடக்கைத் - தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து" எனத் த லையாலமென்றவழி ஆசிரியவடியுள் இன்சீரியைய வெண்சீர்வந்தது. முன்னர் வெண்சீரினை "இன்பா நேரடிக் கொருங்கு நிலையில" என விலக்கி ஈண்டு வரையாரென்றமையின் அது கட்டளையடிக்கென் பதூஉம் இது கட்டளையடிக்கன்றென்பதூஉம் பெற்றாம். வருகுவ தாயினென்று ஒருமைகூறினமையானும் இயையவென்றதனானும் ஓரடிக்கண் ஒன்றே யாண்டும் வருவதெனக்கொள்க. (ங0)

ங௪ங. அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீ
ரொன்றுத லுடைய வோரோர் வழியே.

இது வஞ்சியுரிச்சீர் ஆசிரிய அடியுண் மயங்குமாறுணர்-ற்று. (இ-ள்.) கட்டளையடியல்லாதவழி இன்சீரியையவருகுவதாயின் வ ஞ்சியுரிச்சீர்களும் ஓரோர்வழி ஆசிரியத்துள் வரப்பெறும். எ-று. ஒருவழியென்னாது ஓரோர்வழியென்றதென்னையெனின் அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் பத்துச்சீரே வருமென்பதூஉம் அவைவருங்காலு ம் பயின்றுவாராவென்பதூஉம் அறிவித்தற்கென்பது. அவை மாசேர் சுரம் புலிசேர்சுரம் மாசெல்காடு புலிசெல்காடு மாசெல்கடறு புலி செல்கடறு பாம்புசேர்வாய் பாம்புவருவாய் களிறுசேர்வாய் களிறு வருவாய் என்பன. அவற்றுக்குச்செய்யுள்; -"மாரியொடு மலர்ந்த மா த்தாட் கொன்றை - குறிஞ்சியொடு கமழுங் குன்ற நாடன்" என மாசேர்சுரம் புலிசேர்சுரம் என்பன அடிமுதற்கண் வந்தன. "முன்

நிலாடு மஞ்ஞை மூதிலை கொறிக்கும்" என்பது மாசெல்லாடு வந்தது. "அலரிநாறு துவர்வாய் மாத்தா ளேக்கின்" எனப் புலிசெல்காடுவந்தது "கண்போன்மலர்ந்து வண்டுமயங்குதாமரை" என மாசெல்கடாறு வந்தது. "கரடிவழங்கு குன்று கண்டுபோகி" எனப் புலிசெல்கடாறு வந்தது. "காடுதேரா வழிதருகண்யானை" எனப் பாம்புசெல்வாய் வந்தது. "சேந்துசிதையா செங்குரற் சிறுதினை" எனப் பாம்புவருவாய் வந்தது. "மருந்துநாடாத் திருந்து சிலம்பிற் கைக்கும்" எனக் களிறுசெல்வாய்வந்தது. "கடறுகவரா விழிந்து கண்யாறு வரிப்ப" எனக் களிறுவருவாய்வந்தது. பிறவுமன்ன. நேர்நிரையாகியும் நேர்புநிரைபாகியும் ஈறுமுதல்பெறச் சீர்வந்தது. (௬௪)

௬௪௪. நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே.

இது முதற்சூத்திரத்துள் "யாத்த சீரே யடியாப் பெறுஅ" என நிறுத்தமுறையானே சீருணர்த்தி அடியுணர்த்தவெழுந்தான் அவற்றுள் இது நாற்சீரடியுணர்-ற்று. (இ - ள்.) அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன நாற்சீரடி. எ - று. எனவே, இருசீரானும் முச்சீரானும் ஐஞ்சீரானும் அறுசீர்முதலியவற்றானும் வருமாயினும் அவை சிறப்பிலவென்றவாறும். இருசீரான் வருவதனை என்ன அடியென்னுமோவெனின் அடிக்கெல்லாம் எழுத்துவகையானே மேற்பெயர்கூறும். அவ்வாறே சீர்வகையானுங் கொள்ளப்படுமென்பது. சுருங்கிய எழுத்தான்வருவன குறளடியென்றும் அவற்றின் ஏறிய எழுத்தான் வருவன சிந்தடியென்றும் இடைநின்றன அளவடியென்றும் அவற்றின் நெடியன நெடிலடியென்றும் அவற்றினும் நெடியன கழிநெடிலடியென்றுங் கூறுமாகலான் அவ்வாறே இருசீரடி குறளடியென்றும் முச்சீரடி சிந்தடி யென்றும் நாற்சீரடி அளவடியென்றும் ஐஞ்சீரடி நெடிலடியென்றும் அறுசீர்முதலியன கழிநெடிலடியென்றுங் கோடுமென்பது. இவற்றினெல்லாம் நாற்சீரடி சிறந்ததென்றதென்னையெனின், அளவிற்பட்டமைந்தமையானும் அதுபயின்றுவருதலானுமென்பது. உதாரணம் "திருமழை தலைஇய விருணிற விசும்பின்" எனவும் "அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட" எனவும் "அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" எனவும் இவை மூன்றுபாவினும் அளவடி வந்தவாறு. இவற்றது விகற்பமெல்லாம் முன்னர்ச் சொல்லுதும். (௬௨)

௬௨௫. அடியுள் ளனவே தளையொடு தொடையே.

இதுவுமது. நாற்சீரடியது சிறப்புணர்ற்-று. எதிரதுநோக்கியதோர் கருவியெனினும் அமையும். (இ-ள்.) முன்னர்க்கூறிய நா

ற்சீரடியுள் உள்ளனவே தளையுந் தொடையும். எ-று. மற்று மாத்திரையும் எழுத்தும் அசையுஞ் சீரும் அவ்வடியுள்ளன அல்லவோவெனின் அற்றன்று; அவ்வடிககளுள்ளனவெல்லாங் கூறுகின்றானல்லன் இதுவென்பது. என்னை? நாற் தளைப்பகுதியாற் கட்டளையடியென உறழ்வதூஉம் அறுநூற்றிருபத்தைந்தடியென வரையறைகூறுவதூஉம் அவ்வளவடியே என்றற்கு நாற்சீர்க்கண்ணது தளையென்றானென்பது. மூன்றுஞ் சீர்வகையான் வருக்கும் அடியன்றிக் கட்டளையடியெல்லாந் தளைவகையுடையவென விதந்தோதி வந்ததனானே நாந் தளைகொள்வது நாற்சீரடிக்கணென்பான் அடியுள்ளது தளையென்றானென்பது. மற்றையடிககட்டளைகொள்ளின் அது வரையறையின்றென்னுமாகலின் ஈண்டுவரைந்தோதினானென்பது. அஃது தக்கது, மற்றுப் பொழிப்பும் ஒரூஉவும்போலாத மோனை முதலிய தொடையெல்லாம் அடியிரண்டியையத தொடுக்கல்வேண்டுமென்றே? அவற்றை அடியுள்ளனவே தொடையுமென்றதென்னையெனின், அற்றன்று நாந் தொடையுறழச் சீர்கொள்வதூஉம் இவ்வளவடிக்கணென்பது கூறினான். ஆண்டுத்தொடைகூறும்வழி வரையாது கூறுமாகலினென்பது. எனவே, கட்டளைப்படுப்பதூஉந் தொடையுறழ்தற்கு இடனாவதூஉம் நேரடியேயெனச் சிறப்பித்தவாறு. (கக)

கசசு. அடியிறந்து வருதலில்லென மொழிப.

இதுவுங் கட்டளைப்பாட்டிற்குந் தொடைக்கும் ஆவதோர் கருவி. (இ-ள்.) அறுநூற்றிருபத்தைந்து அடியுள்ளும் ஓரடியின் இறந்துவாரா மேற்கூறிய தளையுந் தொடையும். எ-று. இதன்பொருள் மேற்கூறிய தளைவகையேயன்றி அடியோடு அடிக்கூட்டத்துத தளைகொள்ளுங்காலும் ஓரடிச்கண்ணே வழுவாமற் கோடல்வேண்டுமெனவும் அங்ஙனமே தொடைகொள்ளுங்காலும் வந்தவந்த அடி வரப்பெறுவதெனவுங் கூறியவாறு. எனவே, தேமா தேமா தேமா தேமா வென்னும் அடிக்கட் தொடைகொள்ளுங்கால் வாமா னேறி வந்தான் மன்ற என முன் வந்த அடியே வரல்வேண்டு மென்பதூஉம் அன்றித் தேமாஞ் சோலைத் தீந்தே னுண்ட - காமர் தும்பி யாதல் கண்டது எனவரிற் தளைவழுவாகிப் பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டெனப்பட்ட தொடைப்பகுதியுட்படாவென்பதூஉம் பெற்றாம். இனி வெண்பாவினுள் அவைவருமாறு; "சென்றே யறைப வொருகால் சிறுவரை - நின்றே யறைப பறையினை - நன்றேகாண்" எனப் பன்னிரண்டெழுத்தடி ஒன்றினையும் இருகாற் சொல்லிக் கூட்டி எதுகைத்தொடை கொள்ளுங்கால் அடியோடு அடிக்கூட்டத்துத் தளைவகை சிதையாது வந்தமையின் அத்தொடை பதின்மூவா

யீரத் தெழுநூற்றெட்டென வரையறைப்பட்ட தொடையுட்பட்டது. "யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின் றானூட - யானு ணர்த்தத் தானுணர்ந்தான் - றேனூடு" என்றவழிப் பதினொன்கெழுத்த டியே தொடுத்தமையின் அடியிறந்து வந்ததன்றாயினுந் தளைவகை ஒன்றாமையான் இது பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டினுட்படா தாயிற்று. வண்டு வரகு வரகு வரகு என்கிற அடியை மீட்டுந் தந்து தொடைகொள்ளுங்கால் வண்டு வரகு வரகு வரகு என்றது நேரொ ன்றாசிரியத்தளை தட்டுமாதலான் இது வழுவெனப்படுமென்பது. கலி ப்பாவிற்கு அன்னதோர் வரையறை இல்லை. இருவாறானும் வரு மென்பது. என்னை? "வெணசீ ரீற்றசை நிரையசை யியற்றே" எ ன்றாராகலின். மேலைச்சூத்திரத்தானே தளைவகை சிதையாமல் அறு நூற்றிருபத்தைந்து வகைப்படுவது நாற் சீரடியே என்பதூஉங் கூறி அந்நாற்சீரடியே நாம் முன்னா வேண்டுந் தொடைவிகற்பத்திற குரியவென்பதூஉங் கூறினான். இச்சூத்திரத்தானே அத்தொடை கொள்வது தம்மின் வேறாகாத இரண்டடிக்கண்ணென்பதூஉம் அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஒன்றனை இருகாற்சொல்லித் தொடை கொள்ளப்படுமென்பதூஉம் அங்ஙனந் தொகுக்குங் காலும் அடி யோடு அடிக்கூட்டத்தின்கண்ணுந் தளைவகை சிதையாமல் வேண டுமென்பதூஉங் கூறியவாறாயிற்று. இவற்றானெல்லாம் நாற்சீரடியே சிறப்புடைத்தென்பது பெற்றாம். இன்னும் அதன் சிறப்புடைமை யே கூறுகின்றான். (கூசா)

## கூசஎ. அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே.

இது நாற்சீரடியே விசேடித்துக்கூறி அதனது இடத்தானே பாட்டென்பதோர் முதற்பொருள் தோன்றுமென்பதுணர்த்தியவாறு. எனப்படுமென்றதனான் இவ்வடிகளான் வந்த செய்யுளே சிறப்புடை யனவென்பதூஉஞ் சொல்லியவாறு. மாத்திரை முதலியவற்றை உறுப்புக்களான் இத்துணை மாத்திரை கொண்டது செய்யுளென்றா னும், இத்துணை அசையுஞ் சீருந் தொடையுங் கொண்டது செய்யு ளென்றானும் அளயியல் கூறிய உறுப்புக்களான் வரையறுக்கப்படா. அடியளவே கூறிச்செய்யுட்புலப்பாடாமென்பது எனப்படும் என்ற தனான் ஒழிந்த அடிகளானும் அவ்வாறு வருமாயினும் அவை சிறப் பிலவென்பது. (இ - ள்.) அடி இரண்டும் பலவும் அடுத்துவந்த தொ டையே பாட்டு. எ - று. தலையிடைகடைச்சங்கத்தாரும் பிறசான் றோரும் நாற்சீரடியான் வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே பெரும்பான்மையுஞ் செய்தார்; வஞ்சிப்பாச் சிறுவரவிற்றெனக்

கொள்க. "மாயோன் மார்பி னாரம் போல - மணிவரை யிழிதரு மணி
யிள ரருவி - நன்பொன் வரன்று நாட - னன்புபெரி துடைய னின்
னே செலினே" என நாற் சீரடியான் ஆசிரியம் வந்தவாறு. "மலைமி
சைத் தோன்று மதியம்போல் யானைத் - தலைமிசைக் கொண்ட
குடையார்" என அளவடியானே வெண்பாவந்தவாறு. "அரிதாய
வறனெய்தி யருளியோர்க் களித்தலும்" எனக் கலிப்பா அளவடியான்
வந்தது. பிறவுமன்ன. (௩௫)

௩௪௮. நாலெழுத் தாதி யாக வாறெழுத்
தேறிய நிலத்தே குறளடி யென்ப. (௩௬)

௩௪௯. ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே
யீரெழுத் தேற்ற மவ்வழி யான. (௩௭)

௩௫௦. பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
யொத்த நாலெழுத் தொற்றலங் கடையே. (௩௮)

௩௫௧. மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
யீரெழுத்து மிகுதலு மியல்பென மொழிப. (௩௯)

௩௫௨. மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
யீரெழுத்து மிகுதலு மிவட்பெறு மென்ப. (௪௦)

இவை ஐந்து சூத்திரமும் உணாயினையநோக்கி உடனெழுதப்பட்டன. நாற்சீரடி இத்துணைப்பகுதிப்படுமென அவற்றது பெயரும் முறையுந் தொகையுமுணர் - ற்று. (இ - ள்.) நாலெழுத்து முதலாக ஆறெழுத்தளவும் வந்த நிலம் மூன்றுங் குறளடியெனவும் ஏழெழுத்து முதன் மூன்றுநிலனுஞ் சிந்தடியெனவும் பததெழுத்துமுதல் ஐந்துநிலனும் அளவடியெனவும் பதினோரெழுத்துமுதன் மூன்றுநிலனும் நெடிலடியெனவும் பதினெட்டெழுத்துமுதல் இருபதெழுத்துவரை மூன்றுநிலனுங் கழிநெடிலடியெனவுஞ் சொல்லுப ஆசிரியர். எ - று. குறளடிநிலங்களை வகுததுரையாது ஒழிந்தன வகுத்துரைத்தான் அவை முதலிடைகடையென மூன்றுகூற்றுள் ஒன்றொன்றனிற் சிறப்பிழிவுடையனவென்று கொள்ளினுங் கொள்ளாமலென்பது. அவற்றுக்குச் செய்யுள்; "போந்து போந்து சார்ந்து சார்ந்து - நேர்ந்து நேர்ந்து மூசி நொந்து - வண்டு சூழ விண்டு நீங்கி - நீர்வாய்க் கொண்டு நீண்ட நீல - மூர்வா யூதை வீச நீர்வாய் - மணியேர் நுண்டோ டொல்கி மாலை - நன்மணங் கமழும் பன்னெல் லூர - வமையேர் மென்றோ ளாயரி நெடுங்க - ணிணையீ ரோதி யேந்திள வனமுலை - யிரும்பமன் மலரிடை

யெழுந்த மாவி - னறுந்தழை தயல்வருஉஞ் செறிந்தேந் தல்குல்வணி ரடை யசைஇய வரிவமை சிலம்பின் - மணிமருள் வணர்குரல் வளரி ளம் பிறைநுத - லொளிநிலவு வயங்கிழை யுருவுடை மகளிரொடு - நளி முழவு முழங்க வணிநிலவு தயங்குநக - ரிருந்தளவு மலரளவு சுரும் புலவு நறுந் தொடை - கலனளவு கலனளவு கலனளவு கலனளவு - பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ - தொருநீ மறைப்ப வொழி குவ தன்றே" என இதனுட் பதினேழுநிலத்து ஐவகையடியும் முறை யானே வந்தவாறு கண்டுகொள்க. குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடியென நாற்சீரடிதானே ஐவகைப்படுமென்று அவற்றது பெயரும் முறையுந் தொகையுங் கூறினான். தொகை பதினேழ்நிலத்து ஐவகையடியென்பது. எண்ணிப்பார்க்க. இப்பெயரெல்லாங் காரணப்பெயர். மக்களுட் சிறக் குறியானைக் குறளனென்றும் அவனினெடியானைச் சிந்தனென்றும் ஒப்பமைந்தானை அளவிற்பட்டானென்றும் அவனினெடியானை நெடியானென்றும் அவனினெடியானைக் கழிநெடியானென்றுஞ் சொல்லுப. அவைபோற் கொள்க இப்பெயரென்பது. (௫௦)

௫௬௧. சீர்நிலை தானே யைந்தெழுத் திறவாது.

இது மேலெழுத்தளவான் அடிவகுக்கப்பட்ட ஐவகையடிக்குஞ் சீரும் எழுத்தெண்ணி வகுக்கின்றது (இ - ள்.) சீரது நிலைமைதான் ஐந்தெழுத்து இறந்துவாராது. எ - று. பெருமைக்கெல்லைகூறி வரையறுக்கவே சிறுமைக்கெல்லை வரையறைப்படாது ஒன்றுமுதலாக வருமென்பதாம். சீர்நிலைதானேயென்பது பிரிநிலையேகாரம். அதனை அசைநிலையிற் பிரித்துக்கூறியவாறு. அதனை அவ்வாறு பிரித்துக்கூறவே அசைச்சீராயவழி ஐந்தெழுத்திறவாமை அவற்றுக்கில்லையென்பது கொள்ளப்படும். அஃதேல் அயற்றுகசெல்லைகூறிற்றேயெனின் அவை மூன்றெழுத்தினிறவாதென்பது உரையிற்கொள்க. தானென்பதனை இலேசுப்படுத்துக்கொள்ளினும் அமையும். மற்றிவற்றையுஞ் சீர்நிலைபெறுமென்பவாதலாற் சீரென அடக்காரோவெனின், அடக்கானன்றே, அவை சீர்நிலையெய்தியவழியும் அசையிரண்டாகாமையினென்பது. "தளைவகை சிதையாத் தன்மை யான" என்று ஆண்டுவரைந்தமையின் அதனைச் சீர்நிலையென வாளாது பொதுவகையானோதான். அதுவேகருத்தாயின் அவற்றை நேர்பசை நிரைபசையெனக் கூறிய தனானும் "ஈரசை கொண்டு மூவசை புணர்ந்துஞ் சீரியைந் திற்றது சீரெனப்படும்" என்றதனானும் பயந்ததென்னையெனமறுக்க. அல்லதூஉம் இயற்சீர்ப்பாற்படுத்தியற்றுகவெனவே இவைதாமியற்சீரல்ல, அவற்றதுசெய்கை இவற்றானுங் கொள்கவென்றதனையே ஆண்டுக்

அஃது இருசீரான் வருதலிற் சமனிலை வஞ்சியெனப்பட்டது, மூச்சீரான் வருவதனை வியனிலைவஞ்சியென்பவாகலின். (இ-ள்.) இருசீரடிவஞ்சியுள் ஒருசீர் ஆறெழுத்துமாகப்பெறும். எ - று. இதற்குமேனின்ற அதிகாரத்தாற் பெருக்கத்திற்கெல்லைகூறினுன் சுருக்கத்திற்கு வரையறையுடைமையின். அது முன்னுகச்சொல்லும். எனவே, அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் ஆறெழுத்தான் வருஞ்சீருங் கட்டளையடியாய் வரப்பெறுமென்றவாறு. உம்மை இறந்ததுதழீஇயிற்று. "தன்சீரெழுத்தின் சின்மை மூன்றே" என்றதனுன் ஒன்றும் இரண்டும் எழுத்தாய் வருதலொழித்து ஒழிந்த எழுத்தான் ஆறெழுத்தளவும் வஞ்சியுரிச்சீர்வருமென்பதுகொள்ளப்படும். இதனை எச்சவும்மையென்பார் ஏழெழுத்தானும் வஞ்சியுரிச்சீர்வருமென்ப. அங்ஙனங்கொள்ளின் இரண்டு சீராற் பதினன்கெழுத்துளவாகிய செல்லும். செல்லவே "குறளடி முதலா வளவடி காறு - முறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப." என்பதனேடு மாறுகொள்ளுமென்பது. "தன்சீரெழுத்தின் சின்மை மூன்றே." என்புழி இவற்றிற்கு உதாரணங் காட்டுதும். (௪௨)

௬௫௪. எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப.

இது மேற்கூறிய சீரெல்லாவற்றிற்கும் பொதுவிதி. (இ - ள்.) ஒருசீர் இரண்டுமூதற் பதினெட்டீருகப் பலநிலைமைப்பட்டுப் பலசீராகிச் செய்யுளுள் வருமாற்ருற் தத்தமெழுத்துக் குறைந்தும் மிகுந்தும் அளவிறப்பினும் அவ்வச்சீரெனப்பட்டுச் செய்யுளுள் ஒத்த ஓசை இருவகையும் ஒருதன்மையவேயாகச் சுருங்கிற்றும் பெருகிற்றுமில்லை. எ - று. எனவே, அவை எழுத்தெண்ணி அடிவகுக்குமாற்ருன் இருநிலைமையும் இரண்டிறந்த பலநிலைமையும் படுவனபடும், அவ்விடத்து எழுத்திற்கல்லது சுருக்கப்பெருக்கமில்லையென்பதூஉங் கூறியவாருயிற்று. தானென மிகுத்துச்சொல்லியவதனுன் அசைச்சீர்க்கும் அவ்வாறே கொள்ளப்படும். தளைவகைக்குரியவென மேலோதிவந்த சீர்பதினுறும் அசைச்சீரிரண்டுமெனப் பதினெட்டினுள்ளும் இயற்சீர்பத்தினுட் புளிமாவும் வெண்சீர்நான்குமென ஐந்தும் ஒருநிலைமையவேயாம். ஒழிந்தசீர் பதின்மூன்றும் இருநிலைமையெய்தி இருபத்தாரும். ஆகச்சீர்முப்பத்தொன்ருமென்பது. அவற்றுக்குதாரணம்; நுந்தை தேமா ஞாயிறு பாதிரி வலியது கணவிரி போதுபூ மேவுசீர் போரேறு நன்னுணு பூமருது காருருமு கடியாறு பெருநாணு விறகுதீ உருமுத்தீ மழகளிறு நரையுருமு என ஒன்பதியற்சீரும் இருநிலைமையாற் பதினெட்டாயின. புளிமாவென்னும் இய

த்சீர் ஒருநிலைமைத்தேயாம். அல்லாதார் வரகு என்பதனுட் குற்றுகரங்களைந்து புளிமாவிற்கு இருநிலைமை காட்டுப; அங்ஙனங் காட்டின் வரகென்பதுபோலப் புளிமாவும் ஓரசையாகவானும் புளிமாவென்பதுபோல வரகு என்பது இரண்டசையாகவானுங் கோடல்வேண்டும். கொள்ளவே இச்சூத்திரத்தொடு மாறுகோளாமென்பது. என்னை? "எழுத்தளவெஞ்சினுஞ் சீர்நிலை தானே குன்றலு மிகுதலு மில்லெனமொழிப" என்றோதலின் என்பது. நீடுகொடி நாணுத்தளை எனவும் உரறுபுலி விரவுகொடி எனவும் நிரைமுற்றியலுகரச்சீரானும் இவ்விரண்டாகி இருநிலைமையெய்தியவாறு. நேர்பசையென்சீர் நான்கும் ஒருநிலைமையவேயாம். வண்டு மின்னு வரகு அரவு என அசைச்சீரனைத்தும் நான்காய் இருநிலைமையவாம். இவ்வாற்றான் இவையெல்லாந் தொகுப்ப இயற்சீர் பத்தொன்பதும் ஆசிரியவுரிச்சீர் நான்கும் அசைச்சீர் நான்கும் வெண்சீர் நான்கும் என முப்பத்தொன்றாயின. என்றார்க்கு மாவருவாய் புலிவருவாய் என்பவற்றையும் ஞாயிறுகொல் வலியதுகொல் எனக் குற்றுகரம்பெய்து இருநிலைமைகொள்ளாமோவெனிற் கொள்ளாம். அவை "எல்லா விறுதியு முகர நிறையும்" என்பதனான் முற்றுகரமேயாமென்பது. இனி முதற்கணின்ற குற்றுகரமுங் கொண்டு இருநிலைமை கொள்ளாம். என்னை? நுந்தையென்பது ஈரசையாகவானும் அதனை நீ நுந்தையென வேறோர்சொற்படுப்பது வெனநிறோனக் காட்டின் அது வந்துநின்றது என்றதுபோலச் சிறவசையான் வேறோர்சொல்லாமாகவே அது முற்றுகரமாகலாறுமென விடுக்க. என்றார்க்குப் போதுபூ என்பதூஉம் இருநிலைமைத்தாகாவாம் பிறவெனின், அற்றன்று; சேற்றுக்கால் யாட்டுத்தாள் வட்டுப்போர் எனப் பலவும் வருமாகலின் அஃதிருநிலைமைத்தேயாமென்பது. இனி, வஞ்சியுரிச்சீர்க்கும் இடைநின்ற குற்றுகரங்களை வன்றொடராக வருவித்துக்கொள்க. இனிச், சீரிறுதிக் குற்றுகரங்கள் நிறையாது நிற்றலும் உடையவென்பது "சீரியைந் திற்றது சீரெனப் படுமே" என்றவழிக் கூறியவாற்றானறிக. இனிச் சூத்திரம் வரையாது கூறினமையின் அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் இருபத்துநான்குசீர் இருநிலைமையாகவும் இருபத்தெட்டுச்சீர் நான்குநிலைமையாகவும் எட்டுச்சீர் எட்டுநிலைமையாகவுங் கொள்ளப்படும் அவற்றுள் இருநிலைமைப்படுவன நேரீற்றுச்சீரொட்டு நிரையீற்றுச்சீரொட்டு நேர்பீற்றுச்சீர்நான்கு நிரைபீற்றுச்சீர்நான்கு என இருபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம். அவை மாபோகுவாய் மாவழங்குவாய் பாம்புசேர்வாய் பாம்புவருவாய் புலிபோகுவாய் புலிவருவாய் களிறுசேர்வாய் களிறுவருவாய் எனவும் மாசேர்சுரம் மாவருசுரம் மாபோகுசுரம் மாவழங்குசுரம் புலிசேர்சுரம் புலிவருசுரம் புலிபோகுசுரம் புலிவ

பூங்குசுரம் எனவும் மாசேர்காடு மாவருகாடு புலிசேர்காடு புலிவருகாடு எனவும் மாசேர்கடறு மாவருகடறு புலிசேர்கடறு புலிவருகடறு எனவும் வரும். இவ்விருபத்துநான்கும் இருநிலைமையால் நாற்பத்தெட்டாமென்பது. இனி நான்குநிலைமைப்படுஞ்சீர் இரபத்தெட்டு வருமாறு; பாம்புபோகுவாய் பாம்புவழங்குவாய் களிறுபோகுவாய் களிறுவழங்குவாய் எனவும் பாம்புபோசுரம் பாம்புவருசுரம் பாம்புபோகுசுரம் பாம்புவழங்குசுரம் எனவும் களிறுபோசுரம் களிறுவருசுரம் களிறுபோகுசுரம் களிறுவழங்குசுரம் எனவும் மாபோகுகாடு மாவழங்குகாடு புலிபோகுகாடு புலிவழங்குகாடு எனவும் பாம்புசேர்காடு பாம்புவருகாடு களிறுசேர்காடு களிறுவருகாடு எனவும் மாபோகுகடறு மாவழங்குகடறு புலிபோகுகடறு புலிவழங்குகடறு எனவும் பாம்புசேர்கடறு பாம்புவருகடறு களிறுசேர்கடறு களிறுவருகடறு எனவும் வரும். இவற்றைப் பாம்புபோகுவாய் பாம்புமன்னுவாய் மின்னுப்போகுவாய் மின்னுச்கோலுவாய் என ஒன்று நான்காக வாய்பாடுகொடுத்து ஒட்டியுணாக. இவற்றுள் உரியசைமுதற்கணின்ற நிரையீற்றுநான்கினையும ஒன்று நான்குசெய்யுங்கால் பாம்புசேர்சுரம் பாம்புசேர்வது மின்னுச்சேர்சுரம் மின்னுச்சேர்வது என்றாற்போல வெவ்வேறு வாய்பாடுகொடுத்துணாக்க. இவையிருபத்தெட்டும் விரிப்ப நூற்றுறுபத்திரண்டு வஞ்சியுரிச்சீராம். இனி எட்டுநிலைமைப்படுஞ் சீர் எட்டுமாவன, பாம்புபோகுகாடு பாம்புவழங்குகாடு களிறுபோகுகாடு களிறுவழங்குகாடு எனவும் பாம்புபோகுகடறு பாம்புவழங்குகடறு களிறுபோகுகடறு களிறுவழங்குகடறு எனவும் வரும். இவை மும்மூன்று உரியசையுடைமையின் முதற்கணின்ற உரியசையிரண்டும் நான்குநிலைமை எய்தும். பின்னாநின்ற உரியசையொன்றனை இருநிலைமையாக்கி அவற்றொடு முன்னாநின்ற நான்கினையும் வேறுவேறுகூட்ட எட்டாமென்பது. உதாரணம்; பாம்புபோகுகாடு மின்னுப்போகுகாடு பாம்புமன்னுகாடு மின்னுமன்னுகாடு பாம்புபோகுகாவு மின்னுப்போகுகாவு பாம்புமன்னுகாவு மின்னுமன்னுகாவு எனவரும். இவ்வாறே ஒழிந்தசீரேழனையும் வெவ்வேறு வாய்பாடுகொடுத்துணாக்க அறுபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம். இவ்வாற்றான் இருநிலைமையும் நான்குநிலைமையும் எட்டுநிலைமையும் பட்ட சொல்லாக் தொகுப்ப வஞ்சியுரிச்சீர் இருநூற்றிருபத்துநான்காமெனப்படும். இவற்றுள் ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பதெழுத்தும் பெற்றசீர் இருபத்துமூன்றுள. அவை நேர்நிலைவஞ்சிக்காகாவென்பது "உறழ்நிலையிலவே வஞ்சிக்கு" என்புழிச் சொல்லுதும். இனி ஆசிரியவுரிச்சீர் நான்கும் ஒன்று நான்குநிலைமைப்படுமென்

பதூஉம் சண்டடங்கும். நீடுகொடி குளிறுபுலி என்பன இருநிலைமைப்படும். அது மேற்கூறினாம். என்னுர்க்கு அவற்றை இருநிலைமையென்றதென்னை? நீடுகொடி நீடியது எனவும் ஊணுத்தனை கூறுவது எனவும் ஒன்று நான்காம் பிறவெனின், அற்றன்று; நீடுவது என்பதனை அலகுநிலைக்கண்கால் "அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" என்பதனுன் அவ்வசைகள் இசையாவாகலிற் பூமருது என்னுஞ் சீராக வைத்தலகைக்கூறலாமென்பது. (௪௩)

௧௫௨. உயிரி லெழுத்து மெண்ணப் படாஅ
வுயிர்த்திற மியக்க மின்மை யான.

இது மேல் எழுத்தெண்ணப்பட்ட வெழுத்த முறையானே ஒற்றும் ஆய்தமுங் குற்றுகரமும் எண்ணப்படுமெனவெய்தினவற்றை விலக்கினவாறு. (இ-ள்.) உயிரில்லெழுத்தும் எண்ணப்படாஅ = தம் முசை இசைந்து விளங்கித் தன்மையான் ஒலித்தற்றொழிலில்லாத எழுத்துக்களும் எண்ணப்படா: உயிர்த்திறம் இயக்கம் இன்மையான = அங்ஙனம் எண்ணப்படாதனவும் எழுத்தெனப்படுதலிற் சிறிது நாப்புடை பெயரா துணையான் ஒலித்தலும் மொழிசார்ந்து ஒலித்தலும் உடையவன்றே? அங்ஙனம் ஒருவாற்றான் உயிர்க்குரிய திறமுடையவாயினும் அவ்வுயிர்க்குத் திறம் கண்டுச் செய்யுட்பாற் படுங்கால் உபகாரப்படுவதுமாகிலவாகலின் எண்ணப்படா. எ - று. மேற் சீர்தனை இருநிலைமைப்படுத்த அதிகாரத்தான் ஒற்றுங் குற்றுகரமுமே எண்ணு விலக்கிறுனென்பது. இச்சூத்திரம் வலித்ததாயிற்று, "ஒற்றெழுத்தியற்றே குற்றியலிகரம்" என மேற்கூறினுைலினென்பது. போந்து சென்று சார்ந்து சார்ந்து என ஒற்றுங் குற்றுகரமும் ஒழித்தெண்ணப்பட்டமையினுல் எழுத்தடியாயிற்று. பிறவும் அன்ன. (௪௪)

௧௫௩. வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்.

இது "நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்" எனவுந் "தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே" எனவும் எழுத்தெண்ணி வரையறுக்கப்பட்ட சீரிரண்டு கொண்டது வஞ்சியடியென்ப துணர்த்துறு. (இ-ள்) குறளடியே வரையறையுடைய வஞ்சியடியெனப்படுவது. எ-று. ஏகாரம் பிரிநிலை. என்னை? சிறப்புடை வஞ்சியடியைப் பிரித்து வாங்கிக் கொண்டமையின். எனவே, முச்சீரான் வரும் வஞ்சியடியும் உள, அவை கட்டளையடியல்லவென்றுணையிற்று. இங்ஙனங் கூறவே வஞ்சியடியும் ஒருவாற்றான் உறழ்ந்துகொள்ள வழிகாட்டியவாறு. இவ்

வாறு கூறுக்கால் மூன்றுபாவிற்குங் கூறினன் இதற்குக் கூறியதி லனெனக் குன்றக்கூறலென்னுங் குற்றமாமென்பது. இதனை மேற் "குறளடி முதலா வளவடி காறு - முறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப" என உறழ்நிலை ஒருவாற்றனே கூறுமென்பது. அச்சூத்திரத்தான் முச்சீரும் உறழ்பவென்று கொள்பவெனின் அஃதே கருத்தாயின் இருசீரும் முச்சீரும் வஞ்சிக்கென்பவென்று உடனே துவான்மன் ஆசிரியனென மறுக்க. (சரு)

கூருச. தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே.

இது மேற்கூறிய வஞ்சியடிக்கண்வரும் இருசீர்க்கும் பெருமைக்கெல்லை "நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்" என்று கூறி, ஈண்டு அவை மூன்றெழு,த்திற் சுருங்காவெனச் சுருக்கத்திற்கெல்லையுணர்த்து. (இ-ள்.) வஞ்சியடிச்சீர் மூன்றெழுத்துச் சிறுமைபெறும், எ-று. சிறுமைக்கெல்லை வஞ்சிச்சீர்க்கணல்லது இன்மையின் இதனை "வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்" என்றதன்பின் வைத்தானென்பது. இது முச்சீர்க்குரித்தன்மையானும் மூன்றெழுத்தினிழிந்துவரும் வஞ்சியுரிச்சீர் பெரும்பான்மையும் முச்சீரடிக்கு உரிமையானும் இதன் பின் முச்சீரானும் வரும் இடனுடைத்தென்றுனென்பது. "கொன்றுகோடுநீடு கொலைக்களிறுகடாம்" என்புழி இருசீரடிமுதற்கண் மூவெழுத்தான் வஞ்சியுரிச்சீர்வந்தது. பிறவும் அன்ன. நுந்தைகாடு என ஈரெழுத்தானும் வஞ்சியுரிச்சீர்வருமெனக்கொள்க. (சகூ)

கூருரு. முச்சீ ரானும் வருமிட னுடைத்தே.

இது ஒழிந்த வியனிலைவஞ்சிகூறுகின்றது. (இ - ள்.) வஞ்சியடி முச்சீரானும் வரப்பெறும். எ - று. இடனுடைத்தென்றதனுன் இஃது உறழும் அடிக்கண்ணதன்றென்றவாறு. மற்று இருசீரடிவஞ்சிக்கும் இத்துணையென அடி விரியுமாறுகூறியதிலனுகலின் இதற்கேவரையறையின்றென்றது. என்னையெனின், இருசீரடிக்காயின் ஒருவாற்றன் உறழ்ச்சிகூறி வரையறுப்பதோராறுகூறினன், இதற்கு அன்னதூஉம் இன்றென்பது. மற்று உறழுமடி இல்வழி வஞ்சியடி இருசீர்த்தாகப்பெருதோவெனின், அதற்கன்றே, முச்சீரானும் வருமென்று உம்மைகூறி இருசீரடியுந் தழீஇக்கொண்டு இடனுடைத்தென வேறுபடுப்பானுயிற்றென்பது. இவ்விரண்டனையும் வஞ்சியடியென வரையாதுகூறவே அவற்றன் வேறுவேறு வருதலும் அவை மயங்கிவருதலுமுடைத்து வஞ்சிப்பாட்டென்பது பெறுதும். இக்கருத்தானே அவற்றைக் குறளடிவஞ்சியெனவுஞ் சிந்தடிவஞ்சியென

வும் மயக்கடிவஞ்சியெனவுஞ் சொல்லுப. சிந்தடியான் வருதல் சிறு பான்மையெனக்கொள்க. (௬௭)

௩௫௬. அசைகூ றுகு மவ்வயி னான.

இதுவும் அதற்செய்தியதோர்விதி. (இ-ள்.) மேற்கூறிய வஞ்சி யடி இரண்டன்கண்ணும் நான்கசையுங் கூறுமியாப்பேறும். எ - று. எனவே அடியெனப்பட்ட இருசீர்க்கும் முச்சீர்க்கும் அசைகூட்டிக் கொண்டு சொல்லப்படாவென்றவாறு. அவை "வாள், வலந்தர மறு ப்பட்டன - செவ்வானத்து வனப்புப்போன்றன" எனவும், "அடி, அ தர்சேறலின் கன்சிவந்தன" எனவும், "வண்டு, மலர்சோர்து வரிபா டின" எனவுங், "களிறு, கதவெறியாச் சிவந்துராஅ - நுதிமழுங் கிய வெண்கோட்டா - னுயிருண்ணுங் கூற்றுப்போன்றன" எனவும் முறையே நான்கசையுங் கூறுயின. இனி இடையும் இறுதியுங் கூறு மென்பாருமுளர். அது வஞ்சித்தூக்கு இரண்டுகொள்ள வருமாயின் அமையுமென்பது. என்றூர்க்கு, வாள், வலந்தர என்பதனை ஒருசீரா கக் கோடுமெனின் யாத்தசீரொன்றுதலன் வலந்தருதல் வாண்மேற் சென்று வருகின்ற பயனிலைநின்று வற்றுமென்பது. (௬௮)

௩௫௭. சீர்கூ றுதை னேரடிக் குரித்தே.

இஃதெய்தாதெய்துவித்தது. (இ - ள்.) தளைவகையானுஞ் சீர்வகையானும் நின்ற நேரடிக்காயின் அசைகூறுகாது சீர்கூறுகும். எ - று. "அவரோ, கேடில்விழுப்பொரு டருமார்பாசிலை - வாடாவள் ளியங் காடிறந்தோரே" எனவும் "உதுக்காண், சுரந்தானா வண் கைச் சுவர்ணமாப்பூதன்" எனவும் "அவனூர்தா, னென விதணத் தமி ற்புகை யுண்டியங்கும்" எனவும் இவை மூன்றுபாவினும் அளவடிக் கட் சீர் கூறுயினவாறு. என்றூர்க்கு, நேர்பசை நிரைபசைதனையுஞ் சீர்நிலைபெறுமென்றூனைகலின் அவற்றையுஞ் "சீர்கூறுதை னேரடிக் குரித்தே" என்றதனுனே கொள்வலெனின், அசைச்சீரினை வாளாது சீரொன்றுனென்பது "சீர்நிலை தானே யைந்தெழுத் திறவாது" என்றவழிக் கூறியவதனுன் அறிக. அசைச்சீரினை வாளாது சீரொ ன்றுமைக்கு மேலைச்சூத்திரமும் இச்சூத்திரமுந்தாமே கரியாயின வென்பது. என்றூர்க்கு இவற்றையும் முதற்கண்ணே காட்டியதென் னை? சூத்திரத்துள் அவ்வாறு வைத்துரைத்ததில்லையாலெனின் ஏற்பு ழிக்கோடலென்பதனுன் முதற்கணின்றென்பது கொள்ளப்படும். இக் கருத்தானே வஞ்சிப்பாவிற்கும் அவ்வாறே கொள்க. (௬௯)

௩௫௮. ஐவகை யடியும் விரிக்குங் காலை
மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்த
தெழுபது வகையின் வழுவில வாகி
யறுநூற் றிருபத் தைந்தா கும்மே.

இது முன்னர்ச் சிறப்புடைத்தென வேண்டிய நாற்சீரடியினைக் குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடியென வகுத்தமையாமாறு கூறினேன், இனி அறுநூற்றிருபத்தைந்தென வகைப்பட்ட விகற்பமுங் கூறியவாறு. (இ - ள்.) மேற்கூறிய ஐவகையடியினையும் விரிக்குங்காலைப் பொருள்வகையமைந்த பதினேழ்நிலத்து எழுபதுவகைக் குற்றநீங்கிய அறுநூற்றிருபத்தைந்தாம். எ - று. எனவே பதினேழ்நிலத்தேறினும் எழுபதுவகைக்குற்றம் விரவச் செயினும் அறுநூற்றிருபத்தைந்தெனப்படாதென்பதாம். பதினேழ்நிலனும் ஆசிரியம்பெறுமென்பதூஉம் வெண்பாவுங் கலிப்பாவும் ஒரோவொன்று எட்டுநிலம்பெறுமென்பதூஉம் முன்னர்ச்சொல்லுதும். அவை மூன்றுந் தொகுப்ப முப்பத்து மூன்றுநிலனாயின. வெள்ளைநிலம் பத்தென்பார்க்கு முப்பத்தைந்துநிலனும். எழுபதுகூற்று வழுவெனப்பட்டன தளை வழு. தளைவழுவாவன, ஆசிரியநிலம் பதினேழனுள் வெண்டளையுங் கலித்தளையுமாகி வேற்றுத்தளை தட்ப முப்பத்துநான்குதளை வழுவாம். வெள்ளைநிலம் பத்தும் ஆசிரியத்தளை பத்துங் கலித்தளை பத்துந் தட்ப இருபது தளைவழுவாம். இனிக் கலிநிலமெட்டனுள் ஆசிரியத்தளை எட்டுங் கலித்தளை எட்டுந் தட்பப் பதினாறு தளை வழுவாம். இவையெல்லாந் தொகுப்ப முப்பத்தைந்து நிலத்தும் ஒன்றிரண்டுசெய்து எழுபது தளை வழுவாயினவாறு. இது வெள்ளைநிலம் பத்தென்பாருரை. அது பொருந்தாது. என்னை? ஆசிரியத்து நாலெழுத்தடியுள் இரண்டு தளை வழுவுங் காட்டுகவெனின் அவர்க்கு அவை காட்டலரிது. குறிப்பசைபெய்து காட்டின் அதுகூறப்பட்ட உறுப்பினுளின்றென்றவாறு. எடுத்தோதிய எழுத்துமுதல் உறுப்பினான் வந்த அடிக்கண்ணே காட்டாதொழிதலின் அது நூன்மாறுகோளாம், அல்லதூஉம் அவ்வாறு தளைகொள்ளின் முழுவதுங் குறிப்பசையானே வரும் அடியும் ஓரெழுத்தடிமுதன் மூன்றுநிலனுங் கொள்ளல்வேண்டும். கொள்ளவே நிலம் இருபத்தொன்றாகலுங் காட்டுந் தளைவழுத் தொண்ணூற்றுநான்காகலும்பெற்று ஞாயிறுவரகு வண்டு வண்டு வண்டு என்பது கலித்தளைதட்ப ஆசிரியவடி அன்றாவான் செல்லுமெனவுங் கூறிமறுக்க. இனி, ஆசிரியத்துட் கலித்தளை தட்குங்கால் அவர்தாந் தளைவேண்டுமாற்றான் வெண்சீர்நிற்ப இறுதி நிரைவரவேண்டுமாகலானுங் கட்

டளையடிக்கண் வெண்சீர்வருமென்றிலளகையாலும் "வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே" என்பதனான் இயற்சீரா வெண்சீராக்கிக் கொள்ளினும் அச்சூத்திரத்துக்கு அவ்வாறு பொருளுரைப்பிற் படுங் குற்றம் ஆண்டுக் கூறினமையாலும் அதுசிரம்பாதென்பது. அற்றன்றியும் ஒரெழுத்துமுதலியநிலங்கள் ஒரோநிலத்துஇரண்டும் மூன்றுந் தளைவழுக் காட்டலாமாகலின் எழுபதுவகையின வழுவெனலுமாகாது என்பது. இனி "அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய" என்னும் எடுத்தோத்துக்கிடப்ப இலேசினான் இரண்டுநிலனேற்றி வெள்ளைநிலம் பத்தெனலுமாகாது. என்னை? "அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி-யிருநெடி லடியுங் கலியிற் குரிய" என ஓதினான், இதனினுஞ் சிறந்த வெண்பாவிற்கும் அங்ஙனமோதுவான்மன் ஆசிரியன் அதுவே கருத்தாயினென்பது. அல்லதூஉங் கலிப்பாவினுள் வெண்சீரொன்றினுங் கலியோசை பிறக்குமென்று பதினேழெழுத்தடியான் வந்த வெண்பாவடியினைத் தாமுங் களைபவாகலானும் அதுகூறி சிரம்பாதென்பது. மற்றென்னை தளைகொள்ளுமாறெனின், ஆசிரியத்துள் இயற்சீர் பத்தொன்பதும் ஆசிரியவுரிச்சீர் நான்கும் அசைச்சீர் நான்குமென இருபத்தேழாகி "எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே - குன்றலு மிகுதலும்" இன்றிவரும் வெண்பாவினுள் ஆசிரியவுரிச்சீர் நான்கும் அசைச்சீர் நான்கும் ஒழித்து ஒழிந்தசீர் இருபத்துமூன்றும் வெண்சீர்நான்கினோடுந் தலைப்பெய்ய அவையும் அவ்வாறே இருபத்தேழாம். கலிப்பாவிற்கு நேரீற்றியற்சீர் மூன்றொழித்து ஒழிந்த இயற்சீர் பதினாறும் ஆசிரியவுரிச்சீர் நான்கும் வெண்சீர் நான்கும் என இருபத்துநான்காம். இவை மூன்று பகுதியுந் தொகுப்ப எழுபத்தெட்டாயின. அவற்றுள் ஆசிரியத்துள்வந்த அசைச்சீர் நான்கினையும் வெண்பாவினுள் வந்த அசைச்சீர் நான்கினையும் ஈண்டுத் தளைகொள்ளுங்கால் இயற்சீர்ப்பாற்படுத்து அடக்குகவென்று ஆண்டுக் கூறினமையின் ஈண்டு அவற்றை இயற்சீர்ப்பாற்படுத்தடக்கின் எழுபதாகக் கொள்ளப்படும். அங்ஙனங் கொள்ளப்பட்ட சீர் ஒன்றொன்றனோடு தட்குங்கால் அவ்வெழுபதுவகையானுமன்றித் தட்குமாறில்லை. அதுநோக்கி எழுபது வகையின் வழுவில வாகியென்றானென்பது. அவை தட்குமாறு முன்னர்ச்சொல்லுதும். அங்ஙனந் தளைசிதையா அடி அறுநூற்றிருபத்தைந்தும் மூன்றுபாவிற்கும் உரியபகுதியவாம். யாங்ஙனம்? ஆசிரியவடி முன்னூற்றிருபத்துநான்கும் வெண்பாவடி நூற்றெண்பத்தொன்றுங் கலியடி நூற்றிருபதுமென அறுநூற்றிருபத்தைந்தாம். மெய்வகையமைந்த என்றதனான் நாற்சீரடிக்கண் உறழ்கின்ற சீரினை அடிமுதற்கண்ணே வெளிப்படவைத்து அச்சீரின் அடியாக்கி உறழப்படுமே

ன்பதுகொள்க. அல்லாக்கால் இடையும் இறுதியும் வைத்துழித் தன் முதற்கணின்றதோர் சீர் இரண்டான் அடியாகியும் அவ்வடிமயங்குமா கலான் அதுமயங்கக்கூறலென்னுங் குற்றமாமெனமறுக்க. "எள்ளா ற்ற மூன்னூற இருபத்து நான்கசீவல் - வெள்ளைக்கு நூற்றெண்பத் தொன்றாகுந் - துள்ள - லவையறு நூற்றிருப தாமடி நாடி - லவை யறு நூற்றிருபத் தைந்து." ஆசிரியத்துள் வருமெனப்பட்டசீர் இருப த்தேழும் ஓரோவொன்று பன்னிரண்டாயுறழ அகவலடி மூன்னூ ற்றிருபத்துநான்காம். இது பயனில் வெளி. "நால்வே றுரியசைச் சீர் நால்வே றகவற்சீர் - பால்வேறு பட்டியற்சீர் பத்தொன்ப தாக- விருபஃதேழ் சீரகவற் சீரிரண்டாகி-யிருப தெழுத்தளவு மேற்று." "ஆ சிரியப் பாவினுள் ளைந்தாறே ழெட்டொன்ப-தாதி நிலமாறு மைஞ் சீரா னீறு - நிரையாஞ்சீர் நேரசைச் சீர்க்கொன்றேன் றேற்ற - லையாதொன் றேறிற்றே வந்து." ஓரெழுத்துரிச்சீரும் ஓரெழுத்தசை ச்சீருஞ் சுருக்கத்திற்கெல்லையாகிய சீராகலான் அவை சுருக்கத்துக் கெல்லையாகிய நாலெழுத்தடிமுதற் பதினைந்தெழுத்தடியளவும் உறழும். அவை நுந்தை வண்டு வண்டு வண்டு எனவும் நுந்தை காருருமு நனிமுழவு நனிமுழவு எனவும் ஓரெழுத்துத் தேமாவடி பன்னிர ண்டற்கும் முதலடியும் முடிந்தவடியுங் கண்டுகொள்க. வண்டு வண்டு வண்டு வண்டு எனவும், வண்டு காருருமு நனிமுளவு நனிமுளவு என வும் இவை வண்டு முதலும் முடிவுங்காட்டிய அடியினில் நேரீற்றடி எ ழுத்துச்சீர் என்றும் ஐந்தெழுத்தடி முதலாகவும் பதினேழெழுத்தடி யிறு தியாகவும் வரும். அது தேமா வண்டு வண்டு வண்டு எனவுந் தேமா காருருமு நனிமுழவு நனிமுழவு எனவும் வரும். மின்னு வரகு என்னும் ஈரெழுத்துசைச்சீரிரண்டும் அவ்வாறேயுறழும் நிரையீற்றீ ரெழுத்துச்சீர் மூன்றும் ஆறெழுத்தடிமுதற் பதினேழெழுத்தடிய ளவும் உறழும். அவை ஞாயிறு போதுபூ போரேறு என்பனவற்றை முதனிறீஇ வரகு வண்டு வண்டு எனவும் நனிமுழவு நனிமுழவு நனி முழவு எனவும் தந்து இங்ஙனமாயினவாறு கண்டுகொள்க. இனி மூன் றெழுத்தான் வருவன ஒன்பதுசீரும் அசைச்சீருமெனப் பத்து. அவை புளிமா பாதிரி வலியது மேவுசீர் நன்ஞாணு பூமருது கடியாறு விற குதீ நீடுகொடி அரவு என்பன. இவற்றுட் புளிமாவும் ஆறெழுத்தடி முதலாகப் பதினேழெழுத்தடியளவும் உறழ்ந்து ஓரொன்று பன்னி ரண்டு கிலம்பெறும். ஒழிந்தசீர் எட்டும் நிரையீறாகலின் ஏழெழுத் தாதி பதினெட்டெழுத்தடியளவும் உறழும். அவை புளிமா வண்டு வண்டு வண்டு எனவும் புளிமா காருருமு நனிமுழவு நனிமுழவு எனவும் பாதிரி வரகு வண்டு வண்டு எனவும் பாதிரி நனிமுழவு நனிமுழவு நனிமுழவு எனவும் உறழ்ந்தவழிப் புளிமா ஆறெழுத்துமுதற் பதி

னேழன்காறும் உறழ்ந்தவாறும் பாதிரி யெழுத்துமுதற் பதினெட் டன்காறும் உறழ்ந்தவாறுங் கண்டுகொள்க. ஒழிந்தனவும் அன்ன.

இனி நாலெழுத்துச்சீர் எழு வகைய. அவை கணவிரி காருருமு பெருநாணு உருமுத்தீ மழகளிறு நாணுத்தளை உரறுபுலி என்பன. இவையெல்லாம் எட்டெழுத்தடிமுதற் பத்தொன்பதளவும் உயர்ந்தே ஓரோவொன்று பன்னிரண்டடிபெறும். அவை கணவிரி வரகு வண்டு வண்டு எனவுங் கணவிரி நரையுருமு நரையுருமு நரையுருமு எனவும் வரும். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. ஐயெழுத்துச்சீர், நரையுருமு விரவுகொடி என இரண்டு. அவை ஒன்பதுமுதல் இருபதின்காறும் உயரும். அவை நரையுருமு வரகு வண்டு வண்டு எனவுங் கலனளவு கலனளவு கலனளவு கலனளவு எனவும் வரும். விரவுகொடிக்கும் இஃதொக்கும். இவ்வாற்றான் ஓரெழுத்துச் சீரிரண்டும் ஈரெழுத்துச்சீர் ஆறும் மூவெழுத்துச்சீர் பத்தும் நாலெழுத்துச்சீர் ஏழும் ஐயெழுத்துச்சீர் இரண்டுமாகச் சீர் இருபத்தேழினையும் பன்னிரண்டடிற் பெருக்கிய பெற்ற ஆசிரியவடி முந்நூற்றிருபத்துநான்கும் பாட்டினுந் தொகையினும் வருமாறு கண்டுகொள்க.

இனி வெண்பாவடி நூற்றிரண்பத்தொன்றும் உறழுங்கால் எழுத்தடியும் எட்டெழுத்தடியும் ஒன்பதெழுத்தடியும் பத்தெழுத்தடியும் முதலாய்சிறப்பப் பதினொன்கெழுத்தடியளவும் ஏறி ஓரோசீர் எட்டடிப் பெறுவனவும் எழடிப் பெறுவனவும் ஆறடிப் பெறுவனவும் ஐந்தடிப் பெறுவனவுமாகி முறையானே வருமென்பது. "இயற்சீ ரசைச்சீ ரிருபத்து மூன்றே - யுரிச்சீர்நான் கேற்றிச்சீ ரொன்பதிற்று மூன்று - மயக்கறு வெள்ளைக்க ணேழ்தொடங்கி மாதே - யுயர்ச்சி பதினொன்கென் றெட்டு." "மூவெழுத்துச் சொல்லா மேழெழுத்தா ணாசிரியத் - தாதிபெறு தொன்றேறிற் றுங்கதுபோ னலெழுத்தான் - வந்தசீர் வெண்பாவிற் பத்தெழுத்தான் வாராவா யைஞ்சீர்க்கு நான்கா முதல்" நுந்தை வண்டு ஞாயிறு போதுபூ போரேறு என ஐந்தும் எழுத்தடிமுதற் பதினொன்கெழுத்தடியளவும் உயர்ந்து ஓரோவொன்று எட்டடியுறழப் பெற்ற அடி நாற்பதாம். "ஞாயிறு போதுபூ போரேறு நுந்தைவண் டேழாதி யெட்டா மடி." தேமா மின்னு வரகு பாதிரி வலியது மேவுசீர் நன்ஞாணு பூமருது கடியாறு விறகுதீ மாசெல்வாய் எனப் பதினொன்றும் எட்டெழுத்தடிமுதற் பதினொன்கெழுத்தடியளவும் ஓரொன்று ஏழடியுறழப் பெற்ற அடி எழுபத்தேழாம். "மின்னு வரகு வலியது மேவுசீர் - நன்ஞாணு பாதிரிப் பூமருதே யாறுதீ - மன்றை மாசெல்வாய் தேமா வெணப்பதி

னே - சொன்னூறு மெட்டாதி யேழ்." புளிமா அரவு கணவிரி கா ருருமு பெருவேணு உருமுத்தீ மழகளிறு மாவருவாய் புலிசெல்வாய் என இவை ஒன்பதுசீரும் ஒன்பதெழுத்தடி முதற் பதினான்கெழுத் தடியளவும் உயர்ந்து ஓரோவொன்று ஆறடியுறழப்பெற்ற அடி ஐம் பத்துநான்காம். "அரவு புளிமா கணவிரி வேணு - புலிசெல்வாய் காருருமுப் பேருருமுத் தீயே - மழகளிறு மாவருவா யொன்பது மென்ப - தெழுவா யிரூமூன் றெனல்." நனிமுழவு புலிவருவாய் என் னும் இரண்டுசீரும் பத்தெழுத்தடி முதற் பதினான்செழுத்தடியளவும் உயர்ந்து ஓரோவொன்று ஐந்தடியுறழப்பெற்ற அடி பத்தாம் "புலி வருவாயு நனிமுழவு மென்னு மிவை - யீரைந்தீ ரெழுத்தீ ரைந் து." இவையெல்லாந் தொகுப்ப வெண்பாவடி நூற்றெண்பதெ தொன்றாயின. அவற்றுட் சிலவருமாறு; நந்தை வரகு வரகு வரகு எனவும் நந்தை நனிமுழவு காருருமு காருருமு எனவும் இவை ஏழெழுத்தடிமுதற் பதினான்செழுத்தளவும் நுந்தை வந்த வாறு. வண்டென்பதற்கும் இஃதொக்கும். ஞாயிறு வண்டு வரகு வரகு என வும் ஞாயிறு காருருமு மாவருவாய் காருருமு எனவும் இவை ஏழெழுத்தடியும் பதினான்கெழுத்தடியுமாயினவாறு போதுபூ போ ரேறு என்பனவற்றிற்கும் இஃதொக்கும். தேமா வரகு வரகு வரகு எனவுந் தேமா நனிமுழவு காருருமு பாதிரி எனவும் எட்டெழுத்த டிமுதலாகப் பதினான்கெழுத்தடியளவும் உயர்ந்து தேமா ஏழ டிப்பெற்றது. ஒழிந்த பத்துச்சீர்க்கும் இஃதொக்கும். புளிமா வரகு வரகு வரகு எனவும் புளிமா புலிவருவாய் காருருமு தேமா என வும் இவை ஒன்பதெழுத்தடிமுதலாகப் பதினான்கெழுத்தடியளவும் உயர்ந்து ஆறடிப்பெற்றது. ஒழிந்த எட்டுச்சீர்க்கும் இஃதொக்கும். நனிமுழவு வண்டு வரகு வரகு எனவும் நனிமுழவு காருருமு பா திரி தேமா எனவும் இவை பத்தெழுத்தடிமுதற் பதினான்கெழு த்தளவும் ஏறி ஐயெழுத்து நனிமுழவு ஐந்தடிப்பெற்றது. புலிவ ருவாய்க்கும் இஃதொக்கும். இவற்றுக்கெல்லாம் பதினான்கெழுத் தின் ஏறியச்சாற் செப்பலோசை திரிபுடையவெண்பாது வல்லார் வாய்க் கேட்டு உணர்க. என்னை? "அசையுஞ் சீரு மிசையோடு சேர்த்தி - வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே" என்றமையின். "அடியி னுட்ப மறிவருங் குரைத்தே" எனப் பிறருஞ் சொல்லுப. இனிக் கலியடிக்குரியசீர் இருபத்தினான்கும் ஓரோவொன்று ஐந்த டியுறழ அதன் அடித்தொகை நூற்றிருபதாம். "அளவடி மிகுதியு ளப்படத் தோன்றி - யிருநெடி லடியுங் கலியிற் குரிய" என்ப தனான் பதின்மூன்றெழுத்தும் பதினான்கெழுத்தும் பதினைந்தெழுத்

தும் பதினெழுத்தும் முதலாக ஒரோவொன்று ஐந்தடி உறழ்ந்து கலியடியளவு பதினேழெழுத்துமுதல் இருபதின்காறும் உயருமென்றது. "நிரையீற் றியற்சீர் பதினாறு மேனை - நிரையீற் றகவற்சீர் நான்கு - மொருநான்கு - வெண்சீருந் துள்ளற்கு வெவ்வே றொருசீரா - வொந்தா முறழ்ந்த வடி." "ஈரெழுத்துச் சீபதின் மூன் றாகி யிருபதின்கா - றேறியசீ ரான்கற் குயர்வு." ஞாயிறு போதுபூ போரொறு என்றும் ஈரெழுத்துச்சீர் மூன்றும் பதின்மூன்றெழுத்து முதற் பதினேழெழுத்தளவா ஒரோவொன்று ஐந்தடியுறழும். பாதிரி வலியது மேவுசீ ... பூமருது கடியாறு விரகுந் மாசெல்வாய் நீடுகொடி என ... ழுத்துச்சீர் ஒன்பதும் பதினான்கெழுத்துமுதல் ஒரோ ... டியுறழும். கலைவிரி காருருமு பெருநாறு உருமுச்சு மரகதவு யாமரூஉவாய் புலிசெல்வாய் நாணுவலை உராறுபுலி என நாலெழுத்துச்சீர் ஒன்பதும் பதினைந்தெழுத்துமுதற் பத்தொன்பதளவும் ஒரோவொன்று ஐந்தடியுறழும். நரையுருமு புலிவருவாய் விரவுகொடி என்றும் ஐந்தெழுத்துச்சீர் மூன்றும் பதினாறெழுத்தடிமுதல் இருபதெழுத்தடியளவும் உயர்ந்து ஒரோவொன்று ஐந்தடிப்பெறும். இவ்வாற்றாற் கட்டளைக் கலியடி நூற்றிருபதாமென்பது.

அவற்றுட்சில வருமாறு;—ஞாயிறு புலிசெல்வாய் மாசெல்வாய் புலிசெல்வாய் எனவும் ஞாயிறு புலிவருவாய் புலிவருவாய் புலிவருவாய் எனவும் முதலும் முடிவும் பதின்மூன்றும் பதினேழுமாகி ஈரெழுத்துப்பாதிரி ஐந்தடியுறழ்ந்தவாறு. ஞாயிறு புலிவருவாய் என முதற்கண் ஆசிரியத்தளை தட்பதென்னோமோவெனின் என்னும், "நிரை முதல் வெண்சீர் வந்து நிரைதட்டல் - வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப" என்புழி அதனைக் கலித்தளையென்னுமாகலின். புலி செல்வாய் மாசெல்வாய் என ஈற்றுக்கண் வெண்டளைவந்ததென்னோமோவெனின் என்னும், "வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்று" என்றுணகலின். ஒழிந்த மூவெழுத்துச்சீரும் நாலெழுத்துச்சீரும் ஐயெழுத்துச்சீரும் அவ்வாறே உறழ்ந்துகொள்க. (௫௦)

௩௫௬. ஆங்ஙனம் விரிப்பி னளவிறந் தனவே
பாங்குற வுணர்ந்தோர் பனுவங் காலை.

இஃது ஒழிந்த அடி இந்நாற்சீரடிபோல உறழ்கவென்றார்க்கு அவையுறழாவென உறழாமைக்குக் காரணங் கூறுகின்றது. (இ - ள்.) அந்நாற்சீரடிபோல் மற்றையடிகளையும் விரிப்பின் அஃது இலக்கணக்கட்டளையின் இகந்துபட்டதாம் அப்பகுதியெல்லாம் அறிந்

தோர் விரிக்குங்காலத்து. எ - று. அளவிறந்தன, எண்ணிறந்தன. அஃது இலக்கணங்கூறுமாறன்றென்றவாறு. அஃதெற்றாற்பெறுது மெனின் இதன்முதனூல்செய்த ஆசிரியன் அகத்தியனுர் சொல்லுமா ற்றாற் பெறுதுமென்றவாறு.

அங்ஙனம் வரையாத சிறப்புடையனவற்றுக்குஞ் சிறப்பில் லனவற்றுக்கும் ஒருங்கு இலக்கணங்கூறின் அவையெல்லாம் எடுத் தோதப்பெறாத இலக்கணத்தவாம். அதனால் வரையறையுடையன வற்றுக்கன்றி வாராதே பரந்துபட்டவகையான் இலக்கணங்கூற ல் பயனில்கூற்றாமெனவும் அதுகருதி இதன்முதனூல்செய்த ஆசி ரியருங் கூறிற்றிலரெனவுங் கூறியவாறு. வடநூலாசிரியர் ஆறுவகைப் பிரத்தியங்களான் எழுத்துக்களைக் குருவும் இலகுவுமென இருகூ றுசெய்து உறழ்ந்து பெருக்கிக்காட்டுவதோராறுமுண்டு. அவரும் இருபத்தாறெழுத்தளவும் உறழ்ந்துகாட்டி ஒழிந்தன ஒழிந்து போவர். அவ்வாறே சீர்தளையுங் குருவும் இலகுவும்போல இருசீ ரடி இத்துணையெனப் பெருக்கவும் ஒழிந்தனவும் இவ்வாறே பெரு க்கவுஞ் சிதைந்ததில்லை. அங்ஙனம் பெருக்குங்காலும் ஓரடிக்குரியசீ பத்தும் நூறும் ஆயிரமுமாச வைத்து உறழ்ந்தக்காலும் வருவதொ ன்றில்லை. அங்ஙனம் உறழினும் இத்துணைச்சீரான் வந்த அடிக்கே உறழ்ச்சி கூறுவதென்று ஒரெல்லை கூறிக்கொள்ளல்வேண்டும். கொ ள்ளவே, எத்துணையிடஞ்சென்றக்காலும் இத்துணையென வரையறை ப்பாடு உடையனவல்ல. அவ்வரையறை இன்மையின் அதனை அளவில வென்பதற்கோர் காரணங்கூறல்வேண்டுமாதலான் அதுநோக்கி நாற்சீ ரடிசிறப்புடைத்தென வேறுபல காரணங்கூறி அவற்றுக்கே வரை யறைகூறி அல்லனவற்றுக்கட் சொல்லப்படாதென்றான் இச்சூத்திரத் தானென்பது. அஃதேல் அவை சிறப்புடையவற்றுக்குசகாரணங்கூறி யவாற்றாற் சான்றோர்செய்யுளுட் பயின்றுவரல்வேண்டும் பிறவெனி ன், இந்நூல் செய்தகாலத்துத் தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாரும் அவ்வாறு கட்டளையடியாற் பயின்றுவரச் செய்யுள்செய்தாரென்பது இச்சூத்திரங்களாற் பெறுதுமென்பது. இதன்முதனூல் செய்த ஆசிரி யனாற் செய்யப்பட்ட யாழ்நூலுள்ளுஞ் சாதியும் உவமதருவுந் திருவி ரியிசையுமெனக் கூறப்பட்டவற்றுட் கட்டளைப்பாட்டுச் சிறப்புடை யன சாதிப்பாட்டுக்களே. அவை இக்காலத்துப் பயின்றிலவென்று மற்றையவற்றோடு ஒக்குமெனப்படாவென்பது.

அல்லதூஉம் உலகத்து மக்கட்பிறவி பலவாயினும் நால்வ கைவருணமென்ப, அவர் வரையறையிலக்கணத்தாராகலினென்பது.

இனி, அவருள்ளும் அந்தணரும் வேளாளரும் போல இடையிருவகையோரும் பயின்றிலரொன்று சிறப்பிலராகாரென்பது.

இனிக் கடைச்சங்கத்தார் அறுநூற்றிருபத்தைந்தடியும் பயின்றுவரச் செய்யுள்செய்திலரெனின் கட்டளையடியாற் செய்தவல்லனவேண்டாவென்பதோர் ஆணையுடைமையினரல்ல. உடையவரும் இவ்வாசிரியனாற் சிறப்புடைத்தென்று சொல்லப்பட்ட அளவடியாற் செய்யுள் செய்தாரென்பது. இனிப் பிற்காலத்தார் அளவடியாற் பயின்றுவரச் செய்யுள் செய்திலரென்று கடைச்சங்கத்தார் செய்யுள் செய்த அடியுஞ் சிறப்பிலவாமோவென்பது. வஞ்சியடிக்கும் வரையறையின்மையதொக்கும். அது முன்னர்ச்சொல்லுதும். (௫௧)

௩௬௦. ஐவகை யடியு மாசிரியக் குரிய.

இஃது எய்தாதரெய்துவித்தது; மேல்வகுக்கப்பட்ட அடியினை இன்னபாவிற்குரிய அடி இவையென்று கூறுதான் அதுகூறினமையின். (இ-ள்) நாலெழுத்துமுதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த பதினேழ்நிலனும் ஆசிரியத்திற்குரிய. எ-று. "மெய்வகை யமைந்த பதினேழ் நிலத்த * * * அறுநூற திருபத் தைந்தாகும்" என்றான் அதனைக்கண்டுப்போதந்து ஆசிரியத்திற்கு எய்துவித்தவாறு. அவற்றுக்குச்செய்யுள் ஐந்தடியுங் கூறியவழிக் காட்டப்பட்டது. மற்று மெய்வகையமைந்த பதினேழ்நிலத்தும் எனவே இதுவும் அடங்காதோவெனின் அடங்காது, பாத்தோன்றும் அந்நிலங்கள் பகுத்துக்கொள்ளப் பொதுவகையான் ஆண்டோதினானென்பது. மற்று ஐவகையடியும் ஓராசிரியத்துக்கண் வரல்வேண்டுமோவெனின், அன்னதோர வரையறையுண்டே? வரையாது கூறினமையின் அவையெல்லாவற்றானும் வருக. வருங்கால் ஐந்தும் ஆசிரியத்துக்கு உரியவென்பதே கருத்து. ஒழிந்த பாவிற்கு நிலங்கூறாரோவெனின் ஆசிரியம் பதினேழ்நிலனுமுடைமையின் அக்கூறிய பதினேழநிலனுந் தளைவிரவுதலின் தளை அதற்குப்பின் கூறித் தளையதிகாரம்பட்டமையின் அவற்றுப்பின் ஒழிந்த பாவிற்கு நிலனுங் கூறுமென்பது.

மற்று ஆசிரியமென்பது மகரவீறாதலின் "மஃகான் புள்ளிமு னத்தே சாரியை" என்பதனான் அத்துச்சாரியை பெறல்வேண்டுமெனின் அது செய்யுள்விகாரமென்பாருமுளர். அற்றன்று, ஆண்டுநின்றது நான்காமுருபாயினன்றே அதுகடாவாவது. அதனை ஏழாவதன்பொருண்மைக்கண் அக்குச்சாரியை ஈறுதிரியாது வந்ததென்று கொள்ளப்படும். (௫௨)

**௩௬௧. விராஅய் வரினு மொரூஉநிலை யிலவே.**

இஃது எய்தியதிகந்துபடாமைக்காக்கின்றது; மெய்வகைய மைந்த பதினேழ் நிலமெனவும் எழுபதுவகையின வழுவெனவும் மேனிறுத்தமுறையானே ஆசிரியத்திற்கும் பதினேழ்நிலமாமாறு -றினான் இனி எழுபதுவகையின வழுவாயின அப்பதினேழ்நில த்து யாண்டுமொகாதென்பது பட்டதனை இகந்துபடாமைக் கூறினமை யின். (இ-ள்.) தளைவிரவிவரினும் ஒருவப்படா. எ-று. மற்று இத னைத் தளை விரவிவரினுங் கட்டளையடியாமெனப் புறனடுத்தானென்று கோடுமோ தளைவிரவிற் கட்டளையடியாகாதென்று கோடுமோவெனி ன், தளைமயங்காதனவே தளைவகையடியெனவும் அல்லன கட்டளை யடியாகாவெனவுங் கோடுமென்பது. அஃதேற் தளைமயங்கின அடி க்கும் பதினேழ் நிலனுங் கோடுமோவெனின், கோடுமன்றே? விராய் வரினுமென்ற உம்மை இறந்தது தழீஇயிற்றுகலினென்பது. (௫௩)

**௩௬௨. தன்சீர் வகையினுந் தளைநிலை வகையினு மின்சீர் வகையி னைந்தடிக்கு முரிய.**

இஃது எய்தாததெய்துவித்தது; என்னை? இயற்சீராற் கட்ட ளையடியாமாறெல்லாம் "ஐவகை யடியு மாசிரியக் குரிய" என்னுந் துணையுங்கூறிப் பின்னும் "விராய் வரினும் ஒரூஉ நிலையில" எனக் கட்டளையடியன்றியும் அளவடி வருமெனவும் அவை பதினேழ் நிலத்த வெனவுங்கூறி இனி உரிச்சீரானுஞ் சீர்வளையறையடி உளவென்ப தூஉம் அவ்வுரிச்சீராற் தளைவகையடி உளவென்பதூஉம் அவை பதி னேழ்நிலத்தின் இகந்துவாராவென்பதூஉங் கூறுகின்றமையின். (இ-ள்.) தன்சீர்வகையினும் = ஆசிரியவுரிச்சீரானும் : அதனை அதி காரத்தாற் கொள்ளப்படும்; தளைநிலைவகையினும் = அவ்வாசிரியவுரிச்சீ ரானாகிய தளைநிலைமைப்பகுதியானும்: இன்சீர்வகையினும் = இதன் சீர்ப்பகுதியானும் : ஐந்தடிக்குமுரிய = அவையும் மேற்கூறிய ஐவகை யடிக்கும் உரியவாம். எ-று. ஐவகையடிச்குமுரியவெனவே பதி னேழ்நிலத்தின் இகந்துவாராவென்பதாம். தன்சீரென்னாது வகை யென்றது அவற்றை இருபகுதியானே "முன்னிரை யுறினு மன்ன வாகும்" என்றதும் வெண்பாவுரிச்சீர் ஆசிரியவுரிச்சீரொன்புழி உடன் கூறுது கூறிய வேறுபாடும் நோக்கியென்பது. அதனாது பயம் வருகி ன்ற தளைவகைக்காயின் ஆசிரியவுரிச்சீராறுந் தளைகொள்ளப்படா, முன்னிரையீற்ற இரண்டுமெல்லதென்றவாறு. தளைநிலைவகை சிறப்பு டைமையின் அதுமுற்கூறுகவெனின், அங்ஙனமாயினும் அறுவகைச்

சீரானுஞ் சீர்வகையடிவருதல் பெரும்பான்மையாகலானும் அவற்றுள்ளும் நீடுகொடி குளிறுபுலி என்னும் இரண்டுமே பற்றித் தளையேகோடல் சிறுபான்மை நோக்கியுந் தன்சீர்வகை முற்கூறப்பட்டது. அல்லதூஉந், தளைநிலைவகை முற்கூறின் அவ்வியற்சீர்த்தளைமேற் செல்லும் ; அவ்வாறன்றித் தன்சீர்த்தளையே கோடற்கும் அது பிற்கூறினானென்பது. மற்றுத் தன்சீரானவதனை இன்சீர்வகையோடு ஐந்தடிக்கு முரியதென்றதென்னையெனின் ஆசிரியவுரிச்சீர் நான்கும் நிரலேநின்றுழி அகவலோசை பிறவாதென்பது அறிவித்தற்கென்பது. எனவே, ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் இன்சீர் வரல்வேண்டுவதாம். இனிச் சீர்வகையினென இயற்சீர்களான் உரிச்சீர்களை வகுத்து நிறீஇக்கொள்ளப்படும். உதாரணம்; "ஓங்குகோட்டுத் தொடுத்த பாம்புபுரை யருவி" எனவும் "நிவந்துதோன்று களிற்றினிலங்குகோடு புரைய" எனவும் இவை இயற்சீரொன்று இடையிட்ட ஆசிரியவுரிச்சீரான்வந்த நேரடி. "பாம்புமணி யுமிழும் பானாளிங்கு வரல்" என்பது இயற்சீரிரண்டு இடையிட்டுவந்தது. இதுவும் "அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" என்பதனான் அகவலோசை வழுவினவாறறிந்துகொள்க. இனித் தன்சீராற் தளைநிலையடிவருமாறு ; "ஓங்குமலைப் பெருவிற் பாம்பு நாண்கொளீஇ" எனவும் "உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை" எனவும் வரும்.

தளைவகையென்றது நிலையென்றதனான் அவற்று இரண்டாசிரியவுரிச்சீரும் அடிமுதற்கணின்று சீராவதன்றி இடைவாராவென்பது கொள்க. தளைநிலையென்றது வகையென்றதென்னையெனின், உரிச்சீராற் தளைவழுங்கின் ஓரடிக்கண் இரண்டுவரின் ஓசையுண்டாதென்பதுணர்வித்தற்கென்பது. இவையும் இன்சீர்வகையொடு வருமெனவே தன்சீர் இயற்சீரொடு தட்குமென்பதாம். அஃதேற் " தன்சீருள்வழித் தளைவகை வேண்டா" என வருகின்ற சூத்திரத்தானே தன்சீர் பெறுதுமாகலின் ஈண்டுத் தளைநிலைவகையே கூறுகவெனின், இஃது ஆசிரியத்திற்குக் கூறினான். அது வெண்பாவிற்குக்கூறினான். அல்லாக்கால் அது மிகையாமென்பது. எனவே, தன்சீர்வகை நாலெழுத்திற்குரித்தன்றென்பதூஉந் தளைவகையடிக்குறளடிமுதன் மூன்று நிலத்திற்கும் உரித்தென்பதூஉம் உரையிற்கொள்க. "ஓங்குகோட்டுமீது பாய்ந்துபாய்ந்து - முசுக்கலை யாடு நாடற் - குரைப்பதையென்கொணர் தோளே தோழீஇ" என்பது ஐந்தெழுத்தாற் தன்சீரடிவந்தது.
ஆடுகொடி நுடங்கு காடு போந்து - விளங்கிழை கோயிற் சேர்ந்

தன- முழங்குக வானந் தழங்குகுரல் சிறந்தே.'' என்பது எழெழுத்தாற் றளைநிலையடிவந்தது. பிறவும் அன்ன. இன்சீரொன்றுது வகையென் றதனால் இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றிக்கொள்ளப்பட்ட அசைச்சீரும் இன்சீரோயாந் தன்சீர்வகையினுந் தளைநிலைவகையினும் இடையிட்டுவ ந்ததென்பது. இவை மேற்காட்டியவற்றுட் காணப்படும். (௫௪)

௫௬௫. தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா.

இது மேலாசிரியத்திற்குத் தன்சீர்வகையுந் தன்றளைவகை யுங் கூறியவழியானே வெண்பாவிற்குச் சீர்வகையுந் தளைவகையுங் கூறுகின்றது. (இ - ள்.) தன்சீர் = வெண்சீர் ; உள்வழி = வெண்சீ ரே வருஞ்சீராகியும் வந்தவழி: என்னை ? தளைவகைக்கு இரண்டுசீர் வேண்டுதலானுந் தளைவகைவேண்டாதநிலம் இதுவென்கின்றுகை லானுமென்பது; தளைவகைவேண்டா = தளைவகைநிலைமைகொள்ள ப்படா மற்று அவ்வடிக்கண். எ - று. எனவே, வெண்சீர்நிற்ப இயற்சீர்வந்தொன்றின் வெண்டளையாமென்பதேகருத்தாயிற்று. இஃ து உய்த்துக்கொண்டுணர்தலென்னும் உத்திவகை. இதனானே வெண்சீ ர்க்கு வெண்சீர்வந்தொன்றுவது கட்டளையடியெனப்படாது சீர்வகை யடியாமென்பது பெற்றும். ''வெண்சீ ரொன்றின் வெண்டளை கொ ளாஅல்'' ''வெண்சீ ரொன்றினும் வெண்டளை யாகு - மின்சீர் விர விய காலை யான'' என்றார் காக்கைபாடினியாரும். வெண்சீரொன் றியது வெண்டளையாகாதென்றற்குக் காரணமென்னையெனின், '' அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய - தளைவகை யொன்றாத் தன் மை யான'' என்புழி அளவுஞ் சிந்தும் அல்லாத வெறியநிலமெல் லாம் வெண்பாவுங் கலிப்பாவுந் தம்மிற் றளைவகையொக்குமென் றுகலினென்பது. எனவே, வெண்சீர் நான்கும் ஒன்றிவரின் அதுகலிப்பாவிற்குஞ் சீர்வகையடியாவதாயிற்று. மற்றும் வஞ்சியுரிச் சீருந் தன்சீராகலின் இன்னவாறு தளைகொள்ளுமென்றுறேவெனி ன், அவை தன்சீருள்வழி ஒன்றினும் ஒன்றுவாயினும் பிறசீர்வந் துழி ஒன்றினும் ஒன்றுவாயினும் வஞ்சித்தளையாகி வரையறையின் மையானும் வஞ்சியடி அறுநூற்றிருபத்தைந்தடியுட்படாமையானும் அவை கூறுறுயினுன் ஆசிரியனென்பது. (௫௫)

௫௬௪. சீரியை மருங்கி னோரசை யொப்பி
னாசிரியத் தளையென் றறியல் வேண்டும்.

இது கட்டளையடிக்கண் இயற்சீர் தட்குமாறுணர் - ற்று. (இ-ள். இயற்சீர்பத்தும் பிறிதொன்றனோடு இயையுங்கால் அவை தத்தம் ஈற் றசை ஒன்றி வருஞ்சீரின் முதலசையோடொப்பநிற்பின் ஆசிரியவடி.

குந் தட்கும் முறைமையென்றறியப்படும். எ - று. ஒப்பின் ஆசிரிய த்தளையெனவே ஒவ்வாதொழியின் வெண்டளையென்று எதிர்மறுத் துக்கொள்ளப்படும். என்னை? "எடுத்த மொழியினஞ் செப்பலு மு ரித்தே" என்றமையின். "அகலிரு விசும்பிற் பாயிருள் பருகி" என் றவழி நேரும் நிரையுமொன்றி ஆசிரியத்தளையாயின. "மல்லற் கட ந்த நிறம்போ லிருண்டெழுந்து" என்புழி முதலடி இயற்சீர் ஒன்றாது வெண்டளையாயிற்று. மற்றுச் சீரியைமருங்கின் ஓரசையே வரினென் றது ஒப்பினென்றதென்னையெனின், உரியசை முதலும் ஈறுமாகி யவழி அவை இயலசையோடு ஒப்புமைநோக்கித் தளைகொள்ளின ல்லது தம்மோடுதாம் ஒன்றுதல் கொள்ளாவொன்றற்கென்பது இத னும்பெற்றாம். போதுபூ என்பது வருஞ்சீராயவழிப் போரோறு என்பதோர் அசையொன்றிற்றென்று ஆசிரியத்தளையென்றமையெ ன்பது. இனி அவைநின்று சீராயவழி நிரையீறாகல் அறியல்வே ண்டுமென்னும் மிகையானுங் கொள்க. இனி ஈரசையொப்பினென் பது பாடமாக உரைப்பின் நேரும் நிரையும் ஒன்றினென்றவாறு மாமெனக்கொள்க. (௫௬)

௩௬௫. குறளடி முதலா வளவடி காறு
முறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப.

இது வஞ்சியடியுறழுமாறும் அதுபெறும் நிலனும் உணர்த்து. (இ - ள்.) நாலெழுத்துமுதலாகப் பதினென்கெழுத்தளவும் உறழும் நிலைமையில வஞ்சியடிக்கு. எ - று. இனி முதலும் ஈறும் யாதெ னப்படுமோவெனின் "தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே" என்றதனான் ஆறெழுத்தடிமுதலாகவும் "நேர்நிலை வஞ்சிக் காறும்" என்றதனாற் பன்னிரண்டெழுத்தடியீறாகவும் உறழுமென்றவாறு. எனவே, வஞ்சியடிக்கு நிலன் ஏழென்பது சொல்லியவாறு. அது வே கருத்தெனின் இச்சூத்திரம் மிகையாம் பிறவெனின், அற்றன்று; வஞ்சியுரிச்சீர் மூன்றெழுத்திற் சுருங்கா ஆறெழுத்தின் ஏறாவெனி வே நேர்நிலைவஞ்சிக்கு மூவெழுத்துச்சீர் இரண்டுவந்த இருசீரடிக் கு ஆறெழுத்துமுதலாமென்பதூஉம் ஆறெழுத்துச்சீர் இரண்டுவரிற் பன்னிரண்டெழுத்தடி ஈறுமென்பதூஉம் பெறுதுமால் அவ்வச்சூத்திர ங்களானேயெனின், ஆண்டு வஞ்சியுரிச்சீர்க்கு எழுத்துவரையறை கூறினான் அவ்வடி இத்துணைநிலம்பெறுமென்றற்கு இதுகூறல்வேண் டுமென்பது. அல்லதூஉம் அங்ஙனங்கொள்ளின் உய்த்துணர்ச்சியாம். இஃதெடுத்தோத்தாகலின் எடுத்தோத்துக்களைந்து உய்த்துணராரென் பது. இனி இதுகூறாக்காற் கட்டளையடிக்கண் இயற்சீர்வாராதென்பது

பெறலாகாதாம். ஆகவே, ஞாயிறு புலிசெல்சுரம் என்பது கட்டளை யடியாகியசெல்லும். வஞ்சித்தூக்கின் அதுகொள்ளாமையின் அதுவி லக்கவேண்டி இதுகூறினான். என்னை? இயற்சீர்கொள்ளின் ஓரொழுத் தாணகிய இயற்சீரும்ஆண்டேகோடல்வேண்டும், அதுகொள்ளின் இச் சூத்திரத்திற்கு ஏலாமையினென்பது. இனி வஞ்சியுரிச்சீர் அறுபதும் இருநிலைமைப்படுவன இருபத்துநான்கும் நான்குநிலைமைப்படுவன இருபத்தெட்டும் எட்டுநிலைமைப்படுவன எட்டுச்சீருமாகி இருநூற்றிருப த்துநான்காய் விரியும். "இரண்டுநான் கெட்டு நிலைமைய வாகித் - திர ண்ட நிலைவஞ்சிச் சீர்க - ளொருங்கே - யிருபத்து நான்கிருபத் தெட் டெ னெட்டா - யிருநூற் றிருபத்து நான்கு" அவ்வஞ்சியுரிச்சீர் இருநூற்றிருபத்துநான்கினுள்ளும் ஒன்பதெழுத்துச்சீரொன்றும் எ ட்டெழுத்துச்சீரொன்பதும் ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றுமாக நாற்பத்து மூன்றுவகையானுறழும் நிலம் இல இச்சூத்திரத்தான் ஓதி யவாற்றானென்பது. "நாலாதி யீற்றன நான்கு பதினாற - ஞதிய வெண்சீ ரகப்பட்ட மூவைந்து - பொய்ப்பினவ் வஞ்சி யடியுற ழா மோனை - மூவைந்து மூன்றுமூன் றொன்று" "இரண்டெட்டு மூவெ ட்டு நாலேழா றைந்தொன் - றகன்றநாற் பஃதுநான் காறேழும் பத்திரண்டு - நான்கைந்தெட் டொன்பா னறுபஃ தொன்றுநான் - கா றேழு பெற்றனமூ வைந்து" "நாலெட்டே யேழெட் டறுபத் திரண்டி வற்று - னேழெழுத்தா றெட்டெழு பத்துமூன் றேழா - மேழெழு மும்மூன்று யெட்டெழுத்தா ஞேரொன்று - மாறெட் டறுபஃது மூன்று" "எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை யொக்கு - மசைக்கு வரையறை யின்மை யான" "வஞ்சி யுரிச்சீர் நிரையுரி யுறழ்ந்து-மெல் லாங் குறைத்து மிகுத்துக் கொளாஅல்" எனவே இவ்வாற்றான் வஞ்சியுரிச்சீர் ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பதெழுத்துமாகிவ ரும். அவையறிந்து மாற்றுக. அவையாவன; களிறுபோகுவாய் களிறு வழங்குவாய் புலிவழங்குசுரம் மாவழங்குசுரம் களிறுவருசுரம் களிறு போகுசுரம் புலிவழங்குகாடு பாம்புவழங்குகாடு களிறுவருகாடு களிறு போகுகாடு மாவழங்குகடறு புலிபோகுகடறு பாம்புவருகடறு பாம்பு போகுகடறு களிறுசெல்கடறு என இவை பதினைந்தும் ஏழெ ழுத்தாங்கால் உறழ்நிலை இலையெனப்படும். களிறுவழங்குவாயென்ப தனை அரவுவிரவுவாயென ஏழெழுத்துச்சீராம். ஒழிந்தனவும் அவ்வா றேகொள்க. இவை பதினைந்தும் ஏழெழுத்தின் இகவாதன. இனி ஏழெழுத்துச்சீரின் இவ்விரண்டும் எட்டெழுத்துச்சீர் ஓரோவொ ன்றுமாகி வருவன மூன்று சீர் உள. அவை களிறுவழங்குசுரம்

புலிவழங்குகடறு களிறுவருகடறு என்பன. இவற்றைக் களிறுவிரவு சுரம் அரவுவழங்குசுரம் அரவுவிரவுசுரம் என்றாற்போல வாய்பாடு படுத்தோட்டிக்காணவே ஏழெழுத்துச்சீராறும் எட்டெழுத்துச்சீர்மூன்றுமெனவொன்பதாம். களிறுவழங்குகாடு பாம்புவழங்குகடறு களிறுபோகுகடறு என இவைமூன்றுசீரும் ஒரோவொன்று ஏழெழுத்துச்சீர்மூன்றும் எட்டெழுத்துச்சீரொன்றுமாக முந்நான்கு பன்னிரண்டும் உறழ்நிலைமையில எனப்படும். அவை களிறுவிரவுகாவு களிறுவழங்குகுரவு அரவுவிரவுகாடு அரவுவிரவுகுரவு என ஏழெழுத்துச்சீர்மூன்றும் எட்டெழுத்துச்சீரொன்றுமாயினவாறு கண்டுகொள்க. ஒழிந்தனவும் அவ்வாறேகொள்க. இனிக் களிறுவழங்குகடறு என்பது ஆறெழுத்துச்சீர் ஒன்றும் ஏழெழுத்துச்சீர் மூன்றும் எட்டெழுத்துச்சீர் மூன்றும் ஒன்பதெழுத்துச்சீரொன்றுமென அதுவும் எட்டுநிலைமைத்தாம். அவற்றுள் ஆறெழுத்துச்சீரொன்றும் ஒழித்து ஒழிந்த வஞ்சியுரிச்சீரேழும் உறழ்நிலையில வஞ்சிக்கெனப்பட்டன. அவை களிறுவழங்குகுரவு களிறுவிரவுகட்டு அரவுவழங்குகடறு என மூன்றும் ஏழெழுத்துச்சீர், களிறுவிரவுகுரவு அரவுவழங்குகுரவு அரவுவிரவுகடறு என மூன்றும் எட்டெழுத்துச்சீர், அரவுவிரவுகுரவு என்பது ஒன்பதெழுத்துச்சீர் ; இவையெல்லாந்தொகுப்ப ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றும் எட்டெழுத்துச்சீரொன்பதும் ஒன்பதெழுத்துச்சீரொன்றும் ஒழித்து ஒழிந்த வஞ்சியுரிச்சீர் நூற்றெண்பத்தொன்றும் உறழ்நிலையுடையவெனக்கொள்க. ஏழெழுத்துச்சீரும் எட்டெழுத்துச்சீரும் ஒன்பதெழுத்துச் சீரும் அடியுறழ்வனவாக்கி மேன்மூன்றுசீரானும் மூன்றுநிலனேற்றிப் பதினேழெழுத்தடியளவும் உறழும் வஞ்சியடி என்பாருமுளர்.• அங்ஙனம் ஒன்பதெழுத்துச்சீர் இரண்டுவந்த குறளடி பதினெட்டெனப்படுதலின், வஞ்சிநிலம் பதின்மூன்றுதல் வேண்டும் ஓசை நோக்காது சீர்நோக்கி உறழ்ச்சிகொள்ளினென மறுக்க. அவை அளவடியோடு ஒத்த சிறப்பினவன்மையானும் அவற்றுக்குத் தளைவகையின்மையானும் எடுத்தோதித் தொகைகூறிற்றிலனாயினும் நாம் அவற்றை எண்ணி உணர்ந்து கூறுங்கால் ஒருசீர்க்கு அடிநான்காக வஞ்சியடி எழுநூற்றிருபத்துநான்காமெனக்கொள்க. அவையுறழுங்கால் மூன்றெழுத்துச்சீர் ஆறுமுதல் ஒன்பதுயர்வும் நாலெழுத்துச்சீர் ஏழாதி பத்தெழுத்துயர்வும் ஐயெழுத்துச்சீர் எட்டாதி பதினொன்றுயர்வும் ஆறெழுத்துச்சீர் ஒன்பதுமுதல் பன்னிரண்டுயர்வும் பெற்று நின்றசீரோடு மூன்றெழுத்துச்சீரும் நாலெழுத்துச்சீரும் ஐயெழுத்துச்சீரும் ஆறெழுத்துச்சீருந் தந்துறழ்கவென்பது. அவை "கால்காய்ந்தது காம்புநீடி" என்பது ஆறெழுத்தடி. "நல்கூர்ந்தது வில்லோர்சுரம்" என்பது ஏழெழுத்தடி.

"வான் பெய்தது மணக்குளிர்ப்புற" என்பது எட்டெழுத்தடி. "தேன் பெய்தது செழுந்தரைதொறும்." என்பது ஒன்பதெழுத்தடி. இவை மூவெழுத்து மாசெல்காடு நின்றுறழ்ந்த நான்கடியும் வந்தவாறு. ஒழிந்தனவும் அன்ன. "மண்மாய்ந்தென வுள்வீழ்ந்தது" என்பது ஏழெழுத்தடி. "விண்பாய்ந்தென மேற்றெடுத்தது" என்பது எட்டெழுத்தடி. "காடோங்கிய கல்கெழுசுரம்" என்பது ஒன்பதெழுத்தடி. "கோடோங்கிய குறும்பொறைமருங்கு" என்பது பத்தெழுத்தடி. இவை நான்கடியும் நாலெழுத்து மாசெல்சுரம் நின்றுறழ்ந்த அடி. "மழைபெய்தென வான்வெள்ளென்று" என்பது எட்டெழுத்தடி. "தழைபச்செனுந் தண்ணென்காவு" என்பது ஒன்பதெழுத்தடி. "கமழ்பூந்துணர் கள்ளவிழ்தொறும்" இது பத்தெழுத்தடி. "இமிழ்தூங்கிசையிசைசுரும்புகள்" என்பது பதினோரெழுத்தடி. இவை நான்கும் ஐயெழுத்துப்புலிசெல்சுரம் நின்றுறழ்ந்த அடி. இனி ஒன்பதெழுத்துமுதற் பன்னிரண்டளவும் உயர மற்றையனபோல நான்கடிபெறும். "அமைவிடுகொடி வஞ்சியோர்ந்து" என்பது ஒன்பதெழுத்தடி. "கணைகுரலன கானக்கோழி" என்பது பத்தெழுத்தடி. "தினைப்புனத்திதணு மறப்பெயர்" என்பது பதினோரெழுத்தடி. "மனைக்குறமகள் கடைப்புறந்தரும்" என்பது பன்னிரண்டெழுத்தடி. இவ்வாறே ஒழிந்தனவும் உறழ்ந்துகொள்க. மூன்றுபாவின்றுணைச் சிறப்பின்மையின் வஞ்சியடி ஈண்டுப்போதந்து கூறினானென்பது. ஒழிந்தமூன்றுசீரடி சிறுவரவிற்றாகலின் அதற்குக்கூறியதிலனென்பது. (ருஎ)

நுசுசு. அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றாத் தன்மை யான.

இஃது ஆசிரியவடிக்கும் அதன் நடைத்தாகிய வஞ்சியடிக்கும் உரிய நிலங்கூறி வெண்பாவிற்குரிய நிலங் கூறுகின்றது. (இ-ள்.) அளவடி ஐந்துஞ் சிந்தடி மூன்றுமென எட்டுநிலம்பெறுந் தளைவிரவாதவாற்றான் வெண்பாவடி. எ - று. அளவடி முதற்கூறியதென்னையெனின் மேல் நிறுத்தமுறையாற் கொள்ளாது ஈண்டுச் சொல்லும் முறைமையாற்கூறினானென்பது. "நின்று நினைந்து நெடிதுபெயர்ந்து" என்பது ஏழெழுத்தடி. "அறிவறிந்தார்த் தேறுங்காலஞ்சுவதொன் றில்லை." என்பது பதினன்கெழுத்தடி. இதனும்பர் நெடிலடியானும் வெண்பாவடி வருவன உள. அவை கட்டளையடியெனப்படா, செப்பிக்கூறும் பாவாகாது செய்கைதோன்றியே நிற்குமாகலினென்பது. பிறிதுகாரணம் உண்டாயினும் அறிந்துகொள்க. தளை

வகை ஒன்றுமையென்பது வெண்பாவும் வெண்பாவடைத்தாகிய கலிப்பாவும் மயங்காமைகாரணத்தானென்றவாறு, கலியோசைமய ங்கிவருவனவும் வெண்பாவடியுளுள. அவை நெடிலடி மூன்றும் வருமெனக்கொள்க. ஒரோவடியே வெண்பாவடியுமாய்த் துள்ளிக் கலியடியுமாகித் தளைவகை ஒன்றுமாகலான் அம்மயக்கந் தீராதென "அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய" என்றானென்பது. மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய் என்றக்கால் இதனை "அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" என்றதனாற் கலியோசை பிறப்பவுஞ் சொல்லிக் கண்டுகொள்க. மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவரு வாய் - மாவருவாய் தேமா வரகு, என்றிதனையே ஓசையூட்ட வெண் பாவாயிற்று. இது மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாற்றி னரே எனக் கலியோசையாயினவாறறிக. (௫௮)

௩௬௭. அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
யிருநெடி லடியுங் கலியிற் குரிய.

இது முறையானே கலிக்குரிய நிலமுணர்த்து. (இ - ள்.) ஐவகையடியினும் அளவடிமிகுதியாகிய பதின்மூன்றெழுத்தும் பதினொ ன்கெழுத்தும் நெடிலடியுங் கழிநெடிலடியுங் கலியடிக்குரிய. எ - று. எனவே, அதுவுந் தன் முதற்கட்பாவாகிய வெண்பாப்போல எட்டு நிலம் பெறுவதாயிற்று. ஒழிந்த அடி மூன்றனோடும் ஒவ்வாது மிக்கநிலம் இரண்டனையும் மிகுதியென்றானென்பது. இனி "ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே" என்பதே கொண்டு பதினொ ரெழுத்துமுதல் நான்குநிலனும் அளவடிமிகுதியெனப்படும் எனவும் அவை கலிக்குரிய எனவுங் கொள்வாருமுளர். அங்ஙனங் கொள்வா ர்க்கு ஞாயிறு கடியாறு கடியாறு கடியாறு என்றதனைப் பதினொ ரெழுத்தடியென்று காட்டல்வேண்டும். அஃது ஆசிரியவடியாம். ஆக லான் அற்றன்றென்பது. இனி ஞாயிறு மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என்பதோவெனின், அது கலிப்பாவோடு தளைவகை ஒன்றிய வெண்பாவடியாகலானும் நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை தட்பினன்றி ஞாயிறு எனநின்ற நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நேர்வ ந்தாற் கலித்தளையாகாது வெண்டளையாமாகலானுங் கட்டளையடிக்கு அவ்வாறு கோடல் குற்றமென்பது. அல்லதூஉங் கலிப்பாவிற்குப் பத் துநிலங் கொள்ளிற் கட்டளையடி அறுநூற்றிருபத்தைந்தன்றிப் பல்கு மென்பது. (௫௯)

௩௬௮. நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்பினும்
வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப.

இதுவுங் கலித்தளைவிகற்பங் கூறுகின்றது. (இ - ள்.) நிரையீற்றியற்சீரும் நிரையீற்றாசிரியவுரிச்சீரும் நிற்ப நிரைமுதல் வெண்சீர் வந்து நிரையொன்றியக்காலுங் கலித்தளையாம். எ - று. "மணிபுரை திருமார்பின் மறுத்தயங்கத் தோன்றுங்கால்" என்புழித் திருமார்பினென நிரைமுதல்வெண்சீர்வந்து மணிபுரையென்னுஞ்சீர் இறுதி நிரையொடு தட்டுக் கலித்தளையாயிற்று. எனவே நிரைமுதலியற்சீர் வந்து நிரைதட்பினும் நேர்முதல்வெண்சீர் வந்து ஒன்றாதொழியினும் அது கட்டளைவகையாற் கலியடியாகாதென்றவாறு. என்னை? துள்ளாத இயற்சீர்ப்பின் நிரைமுதல்வெண்சீர வந்து துள்ளுவிக்கல் வேண்டுமாதலானும் ஞாயிறு மாசேர்வாயென்பது வெண்பாவடியுமாம் ஆகலானுமென்பது. அடிக்கென்ப என்றதனான் இதுவுங் கட்டளையடிக்கேயென்பதுகொள்க. மற்று நிரைமுதல்வெண்சீர் வருவது முதனின்ற இயற்சீர்ப்பின்னர் இடைநின்ற இயற்சீர்ப்பின்னரொன்பதறியுமாறென்னையெனின், அங்ஙனம் வரையாதுகூறினமையின் முதற்கண்ணதே இவ்விதியென்பதாம். அல்லதூஉம் அவ்வாறு இயற்சீரினை இடையும் வருமென்றுகொள்ளிற் பதின்மூன்றெழுத்திற் சுருங்கிய நிலனும் அதுபெறுவான் செல்லும். செல்லவே கலியோசை இனிதுபெறலாகாவென மறுக்க. என்றார்க்குப் பின்வருஞ்சீர் மூன்று நிரைமுதல்வெண்சீர் வருவதென்றிலனாதலின் மூன்றாஞ்சீர் நேர்முதல் வெண்சீர்வந்தும் "வெண்சீரீற்றசை நிரையசையியற்று" என்றதனானும் இடைநிற்பன வெண்சீரொன்பது பெறுதுமாகலானும் அது கட்டளையன்றென்பது. இனி முதனின்றது நிரையீற்றியற்சீராகலாற் துள்ளலோசை பிறவாமையின் அவற்றோசைகுறைதீரக் கலித்தளை பலவாகி வரல்வேண்டுமென்பது. இவ்வாற்றான் ஓசைச்சுருக்கம்பெருக்கம் உணர்தற்கு அருமைநோக்கி "அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி - வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே" என்பானாயிற்றெனவுணர்க. இக்கருத்தினானன்றே நிரைமுதல்வெண்சீர் வருகவெனவும் நிரையீற்றியற்சீர்ப்பின்னர் மாசெல்வாய் மூன்றுவரினுஞ் சிறிதுகலியோசை பிறக்குமாயினும் அதனைக் கட்டளையடியென வேண்டானாயிற்றுமென்பது. (கூ0)

நகூக. விராஅய தளையு மொரூஉ நிலை யின்றே.

இது சீர்வகையான்வருங் கலியடித்தளை விரவினுங் கடியப்படாதென்கின்றது; யாதனொடு விரவியோவெனின் வெண்பாவினோடு விராய்த் தட்பினுமென்றவாறு. என்னை? "தளைவகை யொன்றாத் தன்மை யான" என வெண்பாவிற்குங் கூறினமையின். (இ-ள்)

வெண்சீர் ஒன்றிவருதலுங் கடியப்படா கலிக்கு. எ - று. சீர்வகை யடிககணென்பது என்னைபெறுமாறெனின், விராயதளையென்றமை யிற் பெறுதுமென்பது. உதாரணங் "தளைவகையொன்ருத் தன்மை யான" என்புழிக் காட்டப்பட்டது. (௬௯)

௩௭௦. இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி
னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே.

இது வெண்சீரொன்றிவரும் அடி கலிப்பாவிற்கும் உரித்தெனற முறையானே இயற்சீர்வெள்ளடியான்வரும் ஆசிரியத்திற்கு மயங்கி யல்வகையான் நிலைக்குரித்தாகி நிற்கவும் பெறுமென்கின்றது. (இ-ள்.) அம்மயங்கியல்வகைதான் அப்பாவிற்கு உரிமைபூண்டுநிற்கும், ஆசிரிய அடியோடு கூடிய கூட்டத்துக்கண். எ - று. வெண்பாவினுளாயின் ஆசிரியவடி முழுவதுந் தன்றளையோடு வாராது. என்னை? "தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல் - பாஅய்ப் பகல்செய் வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொன் - மாஅ மிசையான்கொன் னன்று நுதலார - மாஅமை யெல்லாம் பசப்பு." என்பதன் முதலடியு ள்ளே தூஉத்தீம்புகையென ஓர் ஆசிரியத்தளை வர மற்றையன வெண் டளையாகி வந்தமையின். அற்றன்றி முழுவதூஉம் ஆசிரியத்தளைவரி ன் வெண்பா சிதையுமாகலின் இதனையே சொல்லின்முடிவிலக்கணத் தான் வெண்பாவென்ருன். எனவே, வேற்ருேசை விராயவழித் தன் ஞேசை அழிதல் இதற்குப் பெரும்பான்மையாயிற்று. ஆசிரியமாயி ன் அவ்வாறு அழியாதென்பது கருத்து. என்போலவோவெனின் பளிங்குடன் அடுத்த பஞ்சிவேற்றுமையாற் பளிங்கு வேறுபடினல் லது பஞ்சிவேறுபடாததுபோலவென்பது. இதனுனே வெள்ளையென் பது ஒப்பினுன் ஆகிய பெயரொன்பதுஉம் பெற்ரும். "எறும்பி யளை யிற் குறும்பல் சுனைய" இவ்வாசிரியநதுள் எல்லாவடியும் பாவேறுப ட்டு இசையாமையின் முதற்கணின்ற இயற்சீர் வெள்ளடி நிலைக் குரிமரபின் நின்றதாயிற்று. "கொலைநவில் வேட்டுவன் கோள்வே ட் டெழுந்த - புகர்நுதல் யானை நுதன்மீ தழுத்திய - செங்கோற் கடுங் கணை போலு மெனது - நெஞ்சங் கவர்ந்தோ ணிணையிதழ்க் கண்ணே." என்பது செய்யுண்முழுவதும் இயற்சீர் வெள்ளடியான் வந்தது. மற் று இயற்சீர்வெள்ளடியல்லது பிறவடி ஆசிரியத்துண் மயங்கப்பெரு தோவெனின், அது நிலைக்குரிமரபின் நில்லாமையின் உம்மையாற் றழீஇக்கொள்ளப்படுஞ் சிறுபான்மையென்பது. "பாஅல் புளிப்பினும் பகலிருளினும்" என்ருற்போல்வன. "மாவழங்கு பெருங்காட்டு மழக ளிறு காணுது" என்னும் ஆசிரியவடியினைக் கலிப்பா மயங்கிற்றென்

பாரும் உளர். அது துள்ளச்செல்லுங்கால் அளபெடுக்கவேண்டுமெனக்கூறி மறுக்க. (சுஉ)

நஎக· வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு
மைஞ்சி ரடியு முளவென மொழிப.

இது ஐஞ்சீரடியும் வருமாறு கூறுகின்றது. (இ-ள்.) மேனின்ற அதிகாரத்தாற் கலிப்பாவிற்கு ஐஞ்சீரடியும் உள. எ-று. வெண்டளைவிரவியும் ஆசிரியம்விரவியுமென்றது என்னையெனின் அவ் ஐஞ்சீரடி வெண்பாவோடுவிராயும் ஆசிரியப்பாவோடு விராயும் வருமென்றவாறு. ஈண்டுத் தளையென்றது அப்பாக்களையாதலான் அப்பாக்களோடு விரவுகெனவே அப்பாக்களை உறுப்பாகவுரும் பிறசெய்யுட்கண்ணும் அவ்வைஞ்சீரடி வருமென்பது பெற்றாம். வெண்டளையொடு விரவுமெனவே ஐஞ்சீரடி அவற்றுக்கு உரியவல்லவென்பதாம். எனவே, கலிப்பாவின்கண்வரும் ஐஞ்சீரடியாயின் அக்கலியோசைக்கு உரிமையுடைத்தென்பதாம். உளவெனவே, ஐஞ்சீரடி கலியினுட் பயின்றுவருமென்பதூஉம் அல்லனவற்றுட் பயிலாவெனவுங் கொள்க. "விராய தளையு மொரூஉநிலை யின்று" எனப்பட்ட கலிப்பாவினோடு இயைபுபட்ட வெண்பாவடியும் அதனோடு இயைபுபட்ட ஆசிரியவடியுங்கூறி, அம்மூன்றனையும் உடன்கூறினானாயினும், ஆண்டுச் சிறந்தவாறே ஈண்டும் அவ்வதிகாரத்ததாக நாட்டி, ஐஞ்சீரடியும் உளவென்று ஆண்டு நின்ற கலிக்குக்கூறிய அவ்வடி வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும் வருமெனப் பிறவற்றுக்குங் கூறினானென்பது. ஐஞ்சீரடியென்பதனை அளவடி மூன்றுபாவிற்கு உரித்தென்றால் அவ்வப்பாவிற்கு வேறுவேறு கொண்டாற்போல ஐஞ்சீரடியும் பாத்தோறும்வேறு படுத்துக்கொள்க. உதாரணம்; "தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக" என்னுங் கலிப்பாவினுள் ஐஞ்சீரடிவந்தது. "அரவணிந்த கொடிவெய்யோ னகம்புக்கா னரவையகன் றகற்றியே" எனக் கலியடி வெண்சீரான் வந்தது. "கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க - வொண்செங் குருதியி னோடு கிடப்பதே - கெண்டிக் - கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்னு - ளழுதகண் ணீர் துடைத்த கை." என்னும் வெண்பாவினுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தது. "சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே - பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே" என்பன ஐஞ்சீரான்வந்த ஆசிரியவடி. ஆசிரியத்துள் இவ்வாறு இரண்டடி ஒருங்குநிற்குமென்பது அறிவித்தற்கு ஐஞ்சீரடிக்குச் சிறந்த கலிப்பாவோடு வைத்தான் அதனை முறைபிறழுவென்பது. எனவே, வெண்பாவிற்கு ஐஞ்சீரடி ஒன்

றல்லது வாராதாயிற்று. இக்கருத்தேபற்றி "ஐஞ்சீ ரடுக்கலு மண்டி. ல மாகலும் - வெண்பா யாப்பிற் குரிய வல்ல" என்றார் பிறருமெனக. உம்மையான் இருசீரடியுங் கலியடியாம். "மன்று பார்த்து - நின்று தாயைக் - கன்று பார்க்கு - மின்றும் வாரா" எனக் கொச்சகக்கலியுள் இருசீர் வந்தது. மூன்றுபாவிற்கும் முச்சீரடி உரித்தென்பது முன்னர்ச் சொல்லும். வரையாது கூறினமையின் கலிப்பாவிற்காயின் ஐஞ்சீரடி வருங்காற் தளைவிரவியும் விரவாதும் வேண்டியவாறு வரப்பெறுமென்பது. (சுங)

ஙஎஉ. அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு
நெறிபெற்று வருஉ நேரடி முன்னே.

இது முறையானே அறுசீரடியுங் கலிப்பாவிற்கு உரித்தென்கின்றது. (இ-ள்.) நாற்சீரடியும் முன்னும் பின்னும் அறுசீரடியும் வருதலுமுண்டு. அன்னது வருங்காற் தனக்குரிய வெண்டளையேயன்றி ஆசிரியத்தளையொடும்வழக்குப்பெற்றுநடக்குங் கலிப்பாவினுள். எ-று. நெறிபெற்றுவரும் என்றதனாற் சிறுபான்மை நேரடி இடையிட்டன்றி ஒருசெய்யுள் முழுவதூஉந் தானேவருதலுங்கொள்க. ஆசிரியத்தளையொடுமென்றஉம்மையாற் கலி தனக்குரியவெண்டளையான் வருதலும் மயங்கிவருதலும் உரியவாம். "முன்னைத்தஞ் சிற்றின் முழுங்கு கட்லோத மூழ்கிப் பெயர-வன்னைக் குரைப்ப னறிவாய் கடலேயென் றலறிப் பெயரு்ந் - தன்மை மடவார் தணர்துகுத்த வெண்முத்தம் - புன்னையரும் பேயென்னப் போவாரைப் பேதுறச்கும் புகாரே யெம்மூர்." என்பது மூன்றும் அடி நேரடியாக முன்னும் பின்னும் அறுசீர் வந்தது. பிறவுமன்ன. "கரைபொரு கான்யாற்றங் கல்லதரெம்முள்ளி வருதி ராயின்" என்பதன் முதலடியுள் வருதிராயின் என்பது ஆசிரியத்தளை, ஒழிந்தன வெண்டளை. முன்னென்றதனான் இடம் முன்னுங்கால் முன்னுங்கொள்ளப்படும். "தொக்குத் துறைபடியுந் தொண்டையஞ்செவ் வாய்மகளிர் தோண்மேற் பெய்வான் - கைக்கொண்ட நீருட் கருங்கண் பிறழ்வ கயலென் றெண்ணி - மெய்க்கென்னும் மெய்கல்லார் மீண்டுகைக் கேசொரிந்து மீள்வார் காணு - ரொக்கர் மணற்கிளைக்கு மேழை மகளிர்க்கே யெறிநீர்க் கொற்கை." எனச் செய்யுண்முழுவதும் அறுசீரடியே வந்தது. "வரைபுரை நிரை போத்து மணநாறு நறுநுதல் பொருட்டு வந்தோய்" என ஆசிரியத்தளையானும் அறுசீரடி வந்தது. மற்றுத் தளையென்றோதுவது கட்டளையடிக்கென்றீரால், ஈண்டுத் தளையென்றதென்னையெனின், அவ்வரையறை ஒருவன் சொல்லுவது, அறுசீரடி வருங்கான் முதற்கண் நேரடி தூங்கிப் பின் இருசீரொடு தொடுத்தல் வேண்டுமென்னும்,

அஃது இச்சூத்திரத்திற்கேலாது. நேரடிமுன் அறுசீர் வரினென்பது பதின்சீரடியாமாகலின். அல்லதூஉங் குறளடி தூ ஞ் சிந்தடி தூங்கியும் அறுசீரடி வருதலின் அஃதுஅமையாதெ . என்னை? "வாராது நீத்தகன்றார் வருமாறு பார்த்திருந்தார் வடிக்கண் போல" என்றவழி இருசீரான் யாத்தமையின் அது தூக்கெனப்படாது. "செங்கார்தள் கைகாட்டுங் காலஞ் - சேட்சென்றார் வாரார்கொல் பாவம்" என முச்சீரான் யாத்தமையின் அதுவுந் தூக்கெனப்படாது. அறுசீரடியே தூக்காகக் கொண்டமையின், நேரடி முன் இருசீரடி வந்ததென்றதூஉம் பிழைக்குமென்பது. (௬௪)

௩௭௩. எழுசீ ரடியே முடுகிய னடக்கும்.

இது எழுசீரான்வரும் அடிகூறுகின்றது. (இ-ள்.) எழுசீரான் வருமளவும் அடியுள; அவை பயின்று நடப்பது முடுகியற்கண். எ-று. எனவே, முடுகாதவழி அத்துணை நடையாட்டம் இல எழுசீரடி என்பதாம். பாவென்னும் உறுப்பு இடனுரும். ஏகாரம் பிரிநிலை. "தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை தழலென விரிவன பொழில்" எனவுங் "கவிரிதழ் கதுவிய துவரித ழரிவையர் கலிமயிற் கணமொடு விளையாட" எனவும் எழுசீரடி முடுகிவந்தது. இவை பரிபாடலுள்ளுங் கலியுள்ளுங் காணப்படும். முடுகாது வரும் எழுசீரடி வந்தவழிக் கண்டுகொள்க. (௬௫)

௩௭௪. முடுகியல் வரையார் முதலீ ரடிக்கும்.

இஃதெய்தாததெய்வித்தது, எழுசீரடியேயன்றி ஐஞ்சீரடியும் அறுசீரடியும் அராகந் தொடுக்குமென்றமையின். (இ-ள்.) எழுசீரடிக்கு முன்னர் இடைநின்ற ஐஞ்சீரடியும் அறுசீரடியும் முடுகியல் நீக்கார். எ-று. அவற்றுக்குச் செய்யுள்; "காரொதிர் கலியொலி கடியிடி யுருமினியங் கறங்க - நேரிதழ் நிரைநிரை நெறிவெறிக் கோதையா ணிறப" என ஐஞ்சீரடி முடுகிவந்தது. "மலர்மலி புகலெழு வலர்மலிர் மணிபுரை நிரைதோள் பணைஇ" என்பது அறுசீரடி முடுகிற்று. முதல் ஈரடிக்கும் என்ற உம்மை எச்சவும்மை. அவ்வும்மையால் நாற்சீரடியும் இத்துணைப் பயிலாது முடுகுமென்பது. "புரிபுரிபு புக்க பொதுவரைத் - தெரிபு தெரிபு குத்தின வேறு" எனவரும். "இரிபெழு பதிர்பதிர் பிகழ்ந்துடன் பலர்நீங்க - வரிபரி பிறுபிறுபு குடர்சோரக் குத்தித்தன் - கோடழியக் கொண்டானை யாட்டித் திரிபுழக்கும் - வாடா வெகுளி யெழிலேறு கண்டை யிஃதொன்று" என்பதனுள் முடுகியலடி இரண்டும் வந்தன. மற்று இவற்றை அராகமென்

ஞமோவெனின், அதனைப் பரிபாடற்கு உறுப்பென்றமையாற் பிற வடியொடு தொடராகிற்று வரவேண்டும், இஃது அன்னதன்றென் பது. எழுசீரடியிற் சிறுவரவினவாகலான் ஐஞ்சீரடியினையும் அறு சீரடியினையும் வரையாரொன்றுன். அவற்றினுஞ் சிறுவரவிற்றாகலின் இதனை உம்மையாற்கொண்டான். முற்றும்மையாகாதோவெனின், அதுவும் எச்சப்படுதலின் அமையுமென்பது. அல்லதூஉம் முதல டியிரண்டே அன்மையின் முற்றாகாதென்பது. (௬௬)

௬எ௫· ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினு
மூவகை யடியு முன்னுத லிலவே.

இது முடுகியல் இன்ன பாவிற்கு உரித்தென்கின்றது ; எய்திய திகந்துபடாமற் காக்கின்றதூஉமாம். என்னை? நாற்சீரடிமுதன் மூன் றும் அகவலோசைக்குஞ் செப்பலோசைக்கும் உரியவெனவே அவை முடுகி ஆண்டுஞ் சேறலெய்தியதனைக் கலிப்பாவிற்கல்லது ஆகாதென் றமையின். (இ-ள்.) ஆசிரியம் வெண்பாவென்னும் இரண்டுபாவினும் முடுகியலடி மூன்றும் புகா. எ - று. உம்மை முற்றும்மை. மற்றை முச்சீரடியோடு நான்கென்னுமோவெனின் அஃது இவற்றுக்கு ஈண்டு ஒவ்வாது. முடுகிவருதல் பெரும்பான்மைத்தாகலின் மூவகையடி யென அடையெடுத்துக் கூறினுனென்பது. அல்லதூஉம் எழுசீரடி விலக்கானன்றே அதனை ஆசிரியமருங்கிறும் வெண்பாமருங்கினும் மய ங்குக என்றதுண்மையினென்பது.

இனி அறுசீரடி ஆசிரியத்தளையோடும் வருமென்றது அகவ லோசைக்கு உரித்தென்றமையானும் வெண்டளை விரவியும் ஆசி ரியம் விரவியும் ஐஞ்சீரடியும் வருமென்றமையானும் அவற்றை அள வடியுடன் எடுத்தோதி விலக்கினுன். மூவகை அடியுமென்றது ஐஞ் சீரடி முதன் மூன்றுமெனப்படுமென்பார் அளவடி முடுகுதல் ஆசி ரியத்திற்கும் உரிமையின் அதுவரையறையின்றென்றலும் ஒன்று. அது "திருமழை தலைஇய விருணிற விசும்பின்" எனவரும். அத ற்கு முடுகியூற்றன்மை இன்றென்றது கருத்து. வஞ்சிப்பாவிற்குக் குறளுஞ் சிந்தும் அல்லது இன்மையின் இவ்வாராய்ச்சி இன்றென் பது. எனவே, ஆசிரியத்தளையோடு முடுகியலடியினைக் கலியடியெ ன்றும் முடுகாத அறுசீரடி ஆசிரியத்தளையோடு நெறிபெற்று வருதற் கும் கலிப்பாவிற்குச் சிறுமையான் வருமென்பதூஉஞ் சொல்லப்ப ட்டது. அல்லாதார் ஐஞ்சீரடி முதலிய மூன்றுங் கலிக்குரிய, பிற பாவிற்கு உரியவல்ல என்றற்கு வந்தது இச்சூத்திரமென்ப. அற்ற ன்று ; அங்ஙனங் கூறிற் தாம்வேண்டும் ஐஞ்சீரடி ஆசிரியத்துள்ளும்

புகாதென்று மறுக்க. முன்னுதலிலவென்றது யாண்டுமாகாதென்ற வாறு. இவ்விலக்கணமெல்லாம் மேற்காட்டிய செய்யுளுள்ளே கண்டறிந்துகொள்க. (சுஎ)

நஎசு. ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப. (சுஅ)

நஎஎ. இடையும் வரையார் தொடையுணர் வோரே.

இவை இரண்டுசூத்திரமும் முறையியைபுநோக்கி உடனெழுதப்பட்டன. இவைஆசிரியத்துட் சிந்தடிவருமென்றமையின் எய்தாததெய்துவித்தனவாம். (இ - ள்.) ஆசிரியத்துள் ஈருத்தடியொன்றும் இடையடியிரண்டுமாகி முச்சீரடி வரும். எ - று. முச்சீர்த்தென்று ஒருமைகூறினமையின் அஃதொன்றாகலுந் தொடையுணர்வோரொன்றமையின் இடைவருவன இரண்டாதலுங் கூறினானென்பது. இடையும் வரையார் என்றமையான் ஈற்றயன் முச்சீர்த்தாதல் பெரும்பான்மை. உதாரணம்; "நீர்வர வறியாக் கரகத்துத் - தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே" என அப்பாட்டினை முழுவதூஉங் கொள்ள ஈற்றயலடி முச்சீர்த்தாயிற்று. "நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ் - சாரச் சார்ந்து தீரத் தீருஞ் - சார றுடன் கேண்மை - சாரச் சாரச் சார்ந்து - தீரத் தீரத் தீர்பொல் லாதே." என்பதனுட் "சார றுடன் கேண்மை" எனவுஞ் "சாரச் சாரச் சார்ந்து" எனவும் முச்சீரடி இரண்டு வந்தன. ஏகாரம்பிரிநிலை. மற்று "நரந்த நாறுங் கையாற் - புலவுநாறு மென்றலை தைவரு மன்னே" என முச்சீரடி இடையும் ஒன்று வந்ததாலெனின், தோற்றமென்றதனான் ஈருத்தடி முச்சீராய காலத்துக் குட்டம்பட்டும் இனிது விளங்கும். இடையிடை ஒன்று வருதலும் உண்டாயினும் அத்துணை இனிதன்று அதுவென்பதுகொள்க. "பெரியகட் பெறினே" என இருசீரடி வந்ததாலெனின் அதனைச் சொற்சீரடியென்று களைக. "உப்பிலாஅஅ விப்புழுக்கல் கைக்கொண்டு பிறக்குநோக்காது" எனவுங் காட்டுப. இவை வஞ்சியடியெனப்படுமென்பது. வெண்சீரான் வஞ்சியடிவருமோவெனின், வாரா வஞ்சிச்சீர் விரவினல்லதென்பது. "உப்பிலாஅஅ விப்புழுக்கல்" என்பதோவெனின் அது மற்றைஇருசீரடியொடு கூட்டத்துக் காட்டலானும் வஞ்சியடிபோன்றது (சுகூ)

நஎஅ. முச்சீர் முரற்கையு ணிறையவு நிற்கும்.

இது கலிப்பாவிற்கு அளவடியும் நெடிலடியும் அதனினிறந்த அடியும் உரிமைகூறி இனிச் சிந்தடியும் உரித்தென்கின்றது.-(இ-ள்.)

கலிப்பாவினுள் முச்சீரடி நிரம்பவும் நிற்கும். எ-று. நிறையநிற்ற லென்பது அச்செய்யுண்முழுவதும் அவ்வடியே வருதலாம். உம்மை யான் ஒருசெய்யுணிறையவாராது ஒன்றும் இரண்டும் பலவுமாகி அம் முச்சீரடி வருதல் பெருவரவிற்றென்பது. தாங் குறைந்த அடியாத லிற் கலிப்பாவிற்கு உறுப்பாகிய சின்னத்துக் குறையநிற்கும் இயல் பினவாயினும் நிறைய நிற்றலுடைய கொச்சகத்துளென்றவாறு. "செய்தானக் கள்வன் மகன்" எனவே வெண்கலியுள் இறுதிக்கணல் லது வாராது. "நின்கண்ணாற் காண்பென்மன் யான்" என்பது இ டைவந்தது. என உறுப்பின்கண் இரண்டும் நான்கும் வருமாறு கண் டுகொள்க. "நீர்வரக் கண்கலுழ்ந் தாங்குக் - கார்வரக் கண்டனங் கா, தலர் - தேர்வரக் கண்டில மன்னோ - பீர்வரக் கண்டனந் தோளே." என முச்சீரடி ஒருசெய்யுள் நிறையவும் வந்தவாறு. (எ௦.)

## கஎக. வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே.

இது முறையானே அடியுரிமை கூறியவாற்றான் வஞ்சிப்பா விற்குக் கூறியதிலன். எற்றுக்கு? அது "வஞ்சி யடியே யிருசீர்த் தா கும்" எனவும் "முச்சீ ரானும் வருமிட னுடைத்து" எனவும் மேற் கூறப்பட்டமையின். அதுநோக்கி அடியுரிமைகூறப்படாத வஞ்சிப்பா விற்கு வஞ்சியினது ஈற்றடியும் அவ்விருசீரடியும் முச்சீரடியுமாவன சென்றநனை விலக்கி இன்ன அடியான் முடியுமென்கின்றது. (இ-ள்.) வஞ்சிப்பாவினது இறுதியடி ஆசிரியவடி இறுதிபோன்று இறுக. எ-று. எனவே, ஆசிரியத்திற்கு ஓதிய சீரானுந் தளையானும் இறுமென்ற வாறு. உதாரணம்; "மாக்கட னிவந்தெழுந்த - செஞ்ஞாயிற்றுக் கவி னைமாதோ - அனையை யாகன் மாறே - தாயி றூவ்வாக் குழவி போல - வோவாது கூஉய்நின் னுடற்றியோர் நாடே." என மண்டிலவாசிரிய த்தானிற்றது. செந்தூக்கியற்றேயென்ற மாட்டேற்றானே "ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற் - றோற்ற முச்சீர்த் தாகு மென்ப." எனவும் "இடையும் வரையார் தொடையுணர் வோரே." எனவும் எய்தியவிதி ஈண்டும் எய்துவிக்க. "அனையை யாகன் மாறே" என முச்சீரடி இடைவந்தது. "இழைபெற்றபாடி நீக்கிக்குரல்புணர்ச் - சீர்க்கொ ளைவல பாண்மகனும்மே - யெனவாங், கொள்ளழற் புணர்ந்த தாம ரை - வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே." இஃது ஈற்றயலடி முச்சீர்த் தாகி வந்த செந்தூக்கியற்றாகி இற்ற வஞ்சிப்பா. பிறவும் அன்ன. ஈண் டுத் தனிச்சொல்வேண்டுமென்று பிற்காலத்து நூல்செய்தாரும் உளர். அது சான்றோர்செய்யுள் எல்லாவற்றோடும் பொருந்தாமையானும் பிற்காலத்திற்செய்த நூல்பற்றி முற்காலத்துச் செய்யுட்கெல்லாம்

இலக்கணஞ்சேர்த்துதல் பயமின்றாதலானும் அஃதமையாதென்பது. வஞ்சிப்பாவின் ஈற்றடி வரைந்தோதவே இடையாயின எல்லா அடி யும் வரப்பெறுமென்பதாம். "நேரிழை மகளி ருணங்குணாக் கவருங் - கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை" என ஆசிரியவடியும் வெண்பாவடியும் இடைவந்தன. (எக.)

கூஅ௦. வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்.

இது வெண்பாவிற்கு ஈறு உணர்த்துகின்றது. ஆசிரியத்தூக் கோவெனின் தனக்கோதிய அளவடியானே இறுதலின் வேறுபாடு கூறவேண்டா. எருத்தடியும் இடையும் முச்சீரான்வருமென வேறு பட்டவழிக் கூறி அல்லாதன அளவடியாதல் கொள்ளவைத்தானெ ன்பது. (இ ள்.) வெண்பாவின் இறுதியடி ஒன்றும் முச்சீரான ன்றி வாராது. எ-று. அவை முன்னர்க்காட்டுதும். அஃதேல் "அட் டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய் - நட்டாலு நண்பல்லார் நண் பல்லர்" என முச்சீரடி இடையும் வந்ததால் வெண்பாவினுளெனின் மூச்சீர்த்தென்னாது ஆகுமென்று ஆக்கங்கூறக் கொடுத்தமையான் அ த்துணை ஆக்கமின்றி இடையுஞ் சிறுபான்மை வருமெனக்கொள்க. அல்லாதார் அதனை வெண்பாவன்றென்ப. (எஉ.)

கூஅக. அசைசீர்த் தாகு மவ்வயி னான.

இது மேலதற்கெய்தியதோர்விதி. (இ-ள்.) வெண்பாவின் இ றுதிவரும் முச்சீரடி ஈற்றுச்சீர் வரப்பெறாது அசைச்சீரல்லாது. எ-று. மேல் "அசைநிலை வரையார் சீர்நிலை பெறல்" என்றான், அவற்றுள் உரியசைச்சீர் முதலும் இடையும் இறுதியும் வருமென்பான் "இயற்சீ ர்ப் பாற்படுத் தியற்றுக" என்றான். அவ்வாறே இயலசைச்சீரும் முச் சீரடி இறுதிவருமென்பது ஈண்டுக் கூறியவாறு. (எங)

கூஅஉ. நேரீற் றியற்சீர் நிரையு நிரைபுஞ்
சீரேற் றிறாஉ மியற்கைய வென்ப.

இது மேற்கூறப்பட்ட இயற்சீர் நான்கும் வருங்கால் இன் னுழி நின்று இன்னவாறு கொள்ளப்படுமென்பதுணர்த்து. (இ - ள்.) நேரிறுதி வந்த நிரையும் நிரைபுமே இறுதிச்சீராய் நிற்பன. எ - று. எனவே, தனிவந்த நிரையும் நிரைபும் நிரைமுதற்சீர்போலத் தளை கொள்ளப்படுமென்பதாம். ஏற்றிறாஉமென்ற இலேசினான் இடை வந்த நிரைபசையும் அவ்வாறுகொள்க. அஃது "இயற்சீர்ப் பாற் படுத் தியற்றினர் கொளின்" என்பதனான் அடங்காதோவெனின் அடங்காது. என்னை? அசைச்சீர்தான் அடங்குமாற்றுக்கு ஆண்டுக் கூறினான், அது பிறிதுசீர் அசைச்சீரொடு தட்குமாற்றுக்கும் கூற

ல்வேண்டுமென்பது. அல்லதூஉம் ஆண்டு அளவடிக்குக் கூறினான் இது சிந்தடிக்கென்பது. வரலாறு ; "வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோ - லேரிய வாயினு மென்செய்ய - கூரியவேற் - கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்- கோட்டு மணங் கொள்ளா முலை." எனவும், "அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாழித்தேர் குத்தி - யெயிற்கதவங் கோத்தெடுதத கோட்டாற் பணிக்கடலுட் - பாய் செய்த நாவாய்போற் றோன்றிற்றே யெங்கோமான் - காய்சினவேற் கோதை களிறு." எனவும் இவற்றினுட் கொள்ளா எனவுங் கோதை எனவும் நின்ற நேரிற்றியற்சீர் முன்னர் முலையெனவுங் களிறெனவும் நிரையும் நிரைபுஞ் சீரேற்றவாறும் வெண்பாட்டீற்றடி முச்சீரத்தாயவாறும் ஆண்டு அசைச்சீராய் வந்தவாறுங் கண்டுகொள்க. என்றார்க்கு முச்சீரடியின் முதற்சீர்க்குத் தளைகூறாரோவெனின், ஆண்டுத் தளைவகையின்றியும் வருதலின் அதனை வரைந்து கூறாரென்பது. என்னை? "கோட்டுமணங் கொள்ளா முலை" எனவுங் "காய்சினவேற் கோதை களிறு" எனவுந் தளைவகையான் வந்தன. "உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச் - செறாஅய் வாழியென் னெஞ்சு." எனவுங் "கலாஅற் கிளிகடியுங் கானக நாட - விலாஅஅர்க் கில்லை தமர்" எனவுந் தளைவகையின்றிவந்தன. (எச)

௩அ௩. நிரையவ ணிற்பி னேரு நேர்பும்
வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர்.

இஃது ஒழிந்த அசைச்சீர் நிரையீற்றுப்பின்னன்றி வாராவென்கின்றது. (இ - ள்.) நேரீற்றியற்சீர் நின்றவழி நிரையீற்றியற்சீர் நிற்பினென்பான் நிரையவண் நிற்பின் என்றான், ஆண்டு நிரையும் நிரைபும்வரிற் தளைவழுவாமாதலான் நேரும் நேர்புமே வந்து சீரேறறு முடிதல் வரைவின்று. எ-று. "கொழுநனை மைந்தன் கொணர்ந்ததற்காக - முழுமுலை பாய்ந்தன பால்" எனவும் "வண்டொன்று வந்தூது வாரற் பனிவாடாய் - பண்டன்று பட்டினங் காப்பு" எனவும் இவற்றுட் பாய்ந்தனவெனவும் பட்டினமெனவும் வந்த நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நேரும் நேர்பும் வந்தன. முன்னர் "நேரீற்றியற்சீர் நிரையு நிரைபும்" எனக் கூறி ஈண்டு நிரையவண் நிற்பினெனச் சுட்டிக்கூறியவதனானே அதுவும் நிரையீற்றியற்சீரென்பதூஉம் அஃதிரண்டாஞ் சீரென்பதூஉங் கொள்க. அல்லாதார் அதனை வெண்சீர்க்கும் பொதுவெனக் கூறி "வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே" என்றதனான் வெண்சீரிறுதி நிரையாக இயற்றி அதன் அடிப்பின் நேர்பசை கொடுப்ப; "எய்போற் கிடந்தானென் னேறு" என்

புழிச் கிடந்தானென்னென நின்ற புலிசெல்வாயினைக் கணவிரியாக இயற்றி, நிரையவணிற்பின் நேரும் நேர்புமென்றதனான் ஏறென் னும் நேர்பசை கொடுப்பர். அஃது ஈண்டு ஆராய்ச்சியின்றென் பது. என்னை? இது கட்டளையடியன்மையின். (எ௫)

௩௮௪. எழுசீ ரிறுதி யாசிரியங் கலியே. (எ௬)

௩௮௫. வெண்பா வியலினும் பண்புற முடியும். (எஎ)

இவை இரண்டுசூத்திரமும் முறையானே கலிப்பாவிற்கு அன்னதோர் அடி அதற்கு வகுத்தில்லாமையின் வகுக்கின்றது. என் ருர்க்கு முதலது நேரடியும் ஈற்றது சிந்தடியுமாகக் கொள்ளல் அவ்வெ ழுநிலையுமெனின் அங்ஙனங் கொள்ளாமைக்கன்றே "ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்- ேறாற்ற முசசீர்த் தாகுமென்ப" எனவும் "இடை யும் வரையார் தொடையுணர் வோரே" எனவுங் கூறிற்றென்பது. எழுசீர் இறுதி ஆசிரியமெனவே ஆசிரியவடி பலவும்வந்து ஈருத்தடி முச்சீராக வருமென்பதுகொள்க. "அரிதாயவறன்" என்னுங் கலிப்பா வினுள் "இனைநல முடைய கானஞ் சென்ேறார்" என்பது ஈற்றயன் முச்சீரிறுதி ஆசிரியத்தாற் கலிப்பாவாயிற்று. "மணிநிற மலர்ப் பொய்கை" என்னுங் கலிப்பாவினுண் "மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலைபோ - லெல்லாத் துயிலோ வெடுப்புக நின்பெண் டி - ரில்லி னெழீஇ யாழ்தழீக் கல்லாவாய்ப் - பாணன் புகுதராக் கால்" என வெண்பாவியலினும் பண்புறவந்தவாறு. பண்புற வென்பது விசேடம், மிகமுடியு மென்றவாறு. எனவே ஈண்டுக் கூறுத இருசீரடியானும் நாற்சீரான் வந்த கலிப்பாவடியானும் ஐஞ்சீரடியானும் முடிவன கொச்சகக் கலியுள் அவை இத்துணை விசேடமிலவென்றவாறு. ஈண்டு விதந்து ஓதியதெல்லாம் பெரும்பா ன்மையும் ஒத்தாழிசைக்கலிக்கெனவுணர்க. இயலென்றதனாற் கட் டளைவெண்பாவே வரல்வெண்டுவதில்லை எனக்கொள்க. பண்புற என்றதனன் மூன்றடியின் இழியிற் பண்புபட வாரா வெள்ளைச் சுரிதகமெனவுங் கொள்க. (எஎ)

௩௮௬. எழுத்து முதலா வீண்டிய வடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்.

இஃது "யாத்த சீரே யடியாப் பெனுஅ" என நிறுத்தமுறையா னே அடியுணர்த்தி யாப்புணர்த்துகின்றது. (இ-ள்.) எழுத்துமுதலா ஈண்டிய அடியிற் குறித்த பொருள்களை முடியயாத்தல் யாப்பாவதெ

ன்று சொல்லுவர் புலவர். எ - று. அடிக்கண்ணே முடியுமெனவே இருசீரும் முச்சீருங் கிடப்ப முடியநாட்டினும் நாற்சீர்கொண்டு முடியநாட்டினும் அமையுமென்பது. மாத்திரைமுதலாகவென்றது எழுத்தென்றதென்னையெனின், எழுத்தும் அசையுஞ் சீருங்கொண்டியன்ற ஓரோவடிக்கண்ணே இன்பஞ்செய்யும் அது பொருட்டாய் இன்றியமையாமையின் எழுத்து முதலாகவென்றானென்பது. ஈண்டியவடியென்பது அவை மூன்றும் ஒன்றாகத்தொடர்ந்து ஈண்டிய அடியென்றவாறு. எனவே, இவற்றைப் பொருளன்றி வேறுவேறுசெய்யாது பொருட்டொடர்படச் செய்யவேண்டுமென்பதூஉங் கூறி ஓரடிக்கட் பொருளாற் செய்யாது ஒழிந்த அடிக்கண் ஒருசொல்லினைப் பகுத்து வாங்கிக் கொண்டுபோய் வைத்தலாமென்பதூஉங் கூறியவாறாயிற்று. குறித்தபொருளென்றது அவ்வடியிற் றான்வைக்கக் கருதிய பொருளைப் பிறிதோர் அடியுங் கொண்டுகூட்டாது அமைந்து மாறச்செய்தல். யாப்பறிபுலவரென்பது அவ்வாறு செய்தல்வல்ல புலவர் அதுகூறினரென்றவாறு. அது இது போலச் சீரும் பொருண்முடிய நிற்றலின் யாத்தசீரென்றானென்பது. "மாயோன் மார்பி லாரம் போல - மணிவரை யிழிதரு மணிகிளரருவி - நன்பொன் வரன்று நாட - னன்பு பெரிதுடைய னின்சொல் லினனே." என இது குறித்தபொருளை நாற்சீரடிதோறும் முடிய நாட்டினவாறு. "மண்டில மழுங்க மறுநிறங் கிளர - வண்டின மலரபரந் தூது மீமிசைக் - கண்டற் கானற் குருகினமொலிப்ப" என்றவழி இருசீரானும் முச்சீரானும் நாற்சீரானுங் குறித்தபொருளை முடிய நாட்டினவாறுகண்டுகொள்க. முச்சீரான் முடியநாட்டுவன ஒருசார் வெண்பாட்டினுட் பயின்றுவருமெனவுணர்க. "முயற்கோடு நீவி முதுவிசும்பு போழ்ந்தான்" என்றவழி எழுத்தும் அசையுஞ் சீரும் பொருளிலவாகி வந்தமையின் அஃதமையாது யாப்பெனப்படாது, சொல்லிலக்கணத்தாற் சொற்றொறும் பொருளுடையவாயினுமென்பது. "மணிவெண் ணகைவன முலைமதி முகமலர் - விழியிணைச் செவ்வாய் மென்னடைப் பேதை" என்றவழியும் முதலடிக்கட் பொருட்டொடர்பினை அறுத்துக் குறைத்துச் செய்ததன்மையின் அதுவும் யாப்பறிபுலவரான் யாப்பெனப்படாதென்றவாறு. (எஅ)

கூஅஎ. பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கத முதுசொல்லோ டவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பி
னாற்பெய ரெல்லை யகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர்.

இச்சூத்திரம் அரிமா நோக்கு. மேற்கூறிய யாப்பிற்கும் வருகின்ற மரபிற்கும் அப்பகுதியுரிமை கூறினமையின். (இ - ள்.) பாட்டும் உரையும் நூலும் வாய்மொழியும் பிசியும் அங்கதமும் முதுசொல்லுமென்று சொல்லப்பட்ட அவ்வேழுநிலத்தும் "வடவேங்கடந் தென்குமரியாயிடை" நாட்டார் நடாத்துகின்ற செய்யுளின் பெயரோ தனக்குப் பெயராகவுமுடைத்து மேற்கூறிய யாப்பு. எ - று. எனவே, மேற்குறித்தபொருளை அடிக்கண் முடிய நாட்டல் யாப்பென்றான், அதுவேயன்றி இப்பகுதிப்படச்செய்தலும் யாப்புறுப்பேயென்றானும். இவ்வேழுவகையானுஞ் செய்தன் மரபென எதிரது நோக்கிற்று. பாட்டு உரை நூல் என்பவற்றிலக்கணம் முன்னர்ச்சொல்லுதும். யாப்பின் வழியதென்பது இவ்வேழு வகைப்பட்ட யாப்பின் பெயரது மரபாகும் யாப்பாகிய உறுப்பென்றவாறு. இதனை நூல்யாப்புப் போற்கொள்க. இப்பகுதிதாந் தமிழ்நாட்டு மரபாகலின் மரபென்னும்* உறுப்பு மரபென எதிரதுநோக்கிற்று. வண்புகழ்மூவரொன்பது வளனுடைமையாற் புகழ்பெற்றாரென்றவாறு. அஃதாவது கொடுத்துப் பெறும் புகழெனக்கொள்க. மூவரெனப்படுவார் தமிழ்நாட்டு மூவேந்தருமாயினார். தண்பொழில் வரைப்பென்பது நிலத்துக்கு நிழல்செய்யும் நாவலம்பொழிலுள் *வரைந்துகொள்ளப்படும் வரைப்பினையுடையவென்றவாறு. தண்பொழில் உடைமையின் நாவலந்தண்பொழிலெனப்பட்டது. நாற்பெயரெல்லையகமென்பது தமிழ்நாடென்றவாறு. வடவேங்கடந் தென்குமரியன்றிக் கிழக்கும் மேற்குங் கடலெல்லை கூறிற்றிலனேவெனின், அறியாது கடாயினாய். வரையறையிலவென்று கூறாதனவெல்லாங் களைந்துகொள்ளப்படுவனவல்ல. வகைகூறாமையுந் தமிழ்கொள்ளப்படுங் கண்டாய். அவர்வழங்கும் யாப்பின்வழியதென்பது அந்நாட்டார் வழங்கும் யாப்புப்பகுதி அவையென்றவாறு. தமிழ்நாட்டார் வழங்கும் மரபுப்பகுதி அவையெனவே யாப்பும் மரபுங் கருதியதாயிற்று இச்சூத்திரமென்பது இதனாற்பெற்றாம். வடவேங்கடந் தென்குமரியாயிடையென்புழி நான்கெல்லையுங் கூறினானென்பது. (எசு)

௩அ அ. மரபே தானு,
நாற்சொல் லியலான் யாப்புவழிப் பட்டன.

இது நிறுத்தமுறையானே மரபினை விளங்கக் கூறுகின்றது. (இ-ள்.) மரபேதானும்=அங்ஙனங் கூறப்பட்ட மரபுதானும்: ஏகாரம் பிரிநிலை; உம்மை இறந்தது தழீஇயிற்று; மேல் எழுவகையான் யாக்கப்படுதன் மரபென்றமையின், மரபேதானுமென்றானென்பது;

நாற்சொல் = பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல்: இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லெனினும் அமையும்; இயலான் = நாற்சொல்லினையும் உலகத்தார் வழங்குகின்ற வழக்குவழியினான்: யாப்புவழிப் பட்டன = மேற்பகுத்த யாப்புவழிப் பொருத்தமுடைத்தாகி கிடப்பது. எ-று. அஃதாவது வழக்கெனவுஞ் செய்யுளெனவும் இடைதெரியாமல் ஒருவாய்பாட்டான் வழக்குஞ் செய்யுளுமாகி ஒருசொற் றொடரினைச் சொல்லியதுபோலச் செய்யுள்செய்தலென்றவாறு. சாத்தனுண்டான் கொற்றனுண்டான் எனவுஞ், சாத்தனுறங்கினான் கொற்றனுறங்கினான் எனவுஞ், சாத்தனை யறியாதார் ஒருவரையுமறியாதார் எனவுஞ், சாத்தனிற்கொற்றன்போழ்மே எனவும் நின்ற வழக்கியலை முறையானே ஆசிரியமும் வெண்பாவுங் கலியும் வஞ்சியுமாகப் பரப்பப்பட்ட யாப்புவழிப்படுத்துக் கண்டு கொள்க. "ஓதியு மோதா ருணர்விலார்" என்னுஞ் செய்யுள் வழக்கிற்றாகவுஞ் சொல்லப்படும். வழக்குவழியினானெனவே சொன்மரபும் பொருண்மரபும் அடங்கக் கூறினான். என்னை? பொருளின்றி நாற்சொல்லையும் வழங்காராகலின். எனவே, சொல்லும்பொருளும் அவ்வக்காலத்தார் வழங்குமாற்றானே செய்யுள்செய்க என்பதாயிற்று. இதனதுபயன், ஒருகாலத்து வழங்கப்பட்ட சொல் ஒருகாலத்து வாராதாகலும் பொருள்வேறுபடுதலும் உடைய. அதொளி இதொளி உதொளி எனவுங் குயின் எனவும் நின்ற இவை ஒருகாலத்துளவாகி இக்காலத்திலவாயின. இவை முற்காலத்துளவென்பதேகொண்டு வீழ்ந்த காலத்துஞ் செய்யுள்செய்யப்படா. அவை ஆசிரியர் நூல்செய்த காலத்துளவாயினுங் கடைச்சங்கத்தார்காலத்து வீழ்ந்தமையிற் பாட்டினுந் தொகையினும் அவற்றை நாட்டிக்கொண்டு செய்யுள்செய்திலர்; அவற்றுக்கு இது மரபிலக்கணமாகலினென்பது. இனிப், பாட்டினுந் தொகையினும் உள்ள சொல்லே மீட்டொருகாலத்துக்கு உரித்தன்றிப் போயின முற்காலத்துளவென்பதே கொண்டு பிற்காலத்து நாட்டிச் செய்யுள்செய்யப்பெறா. இனிப் பொருளும் இவ்வாறே காலத்தானும் இடத்தானும் வேறுபடுதலுடைய. ஒருகாலத்து அணியுங் கோலமும் ஒருகாலத்து வழங்காதனவுள. ஓரிடத்து நிகழும் பொருண் மற்றோரிடத்து நிகழாதனவுமுள. அவ்வக்காலமும் இடனும்பற்றி ஏற்றவாற்றாற் செய்யுள்செய்யவேண்டுமென்பது. ஒருகாலத்துக் குழைபெய்தாரொன்றும் ஒருகாலத்துக் குழல்படமுடித்தாரொன்றும் ஆண்மக்களை ஒழிந்தகாலத்தும் அதுகூறார். பதினெண்பாடைத் தேசிகமாக்கள் அணியினையுங் கோலத்தினையும் விரவிக்கூறாது, அவ்வந்நாட்டார் பூணுமாற்றானும் புனையுமாற்றானும் ஏற்பச்சொல்லு

தல் மரபு. இனி நான்கு நிலத்தினும் ஓரிடத்துப் பொருளை ஓரிடத்த வாகச் சொல்லுதலும் உலகொடுமலைதலுஞ் சமயங்களொடுமலைத லுங் கலையொடுமலைதலும் பிறவும் இன்னோரன்னவும் பொருண்மர பின்பாற்பட்டடங்கும். இவை நாடகவழக்கின் ஆமென்பது முன்னர் அகத்திணையியலுட் கூறினும். "புலிப்பற் கோத்த புலம்புமணத் தாலி - யொலிச்குழைச் செயலை யுடையமா ணல்குல்" என்பது பரு வத்துக்கேற்ற அணிகூறியது. "கொல்வினைப் பொலிந்த கூர்ங்கு றும் பெஃகின் - வில்லோர் தூணி வீங்கப் பெய்த - வப்புநுனை யேய்ப் ப வரும்பிய விருப்பைச்-செப்படரன்ன செங்குழை யகந்தோ-றிழுதி னன்ன தீம்புழற் றுயவா - யுழுதுகாண் டுளைய வாகி யார்கழல் - பாலி வானிற் காலொடு பாறித் - துப்பி னன்ன செங்கோட் டியவி - னெய்த் தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு - மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்க்- கொடுநுண் ஞெக்கின் மகளி ரோச்சிய - தொடிமா ணுலக்கைத் தூண் டூற் பாணி - நெடுமால் வரைய குடிஞையொ டிரட்டுங் - குன்றுபி ழெ ழியப் போகி யரந்துரந்து - ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது - து ணைபரி துரக்குந் துஞ்சாச் செலவி - னெம்மினும் விரைந்துவல் லெய் திப் பன்மா - ஞெங்குயர் நல்லி லொருசிறை நிலைஇப் - பாங்கர்ப் பல்லி படு தொறும் பரவிக் - கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக் - கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப் - பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்- தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ - நாணுடை மிடைந் த கற்பின் வாணுத - லந்தீங் கிளவிக் குறுமகள் - மென்றோள் பெற நசைஇச் சென்றவெ னெஞ்சே." என்றவழிக் குறிஞ்சிக்கும் முல்லைக் கும் ஏற்றபொருள் தத்தம் மரபிற்றாய் வந்தனபலவுங் கண்டுகொள்க. மற்றும் நாற்சொல்லியலென்பது வழக்காயின் அது செய்யுட்குரிய திரிசொற்கும் ஏற்றவாறென்னையெனின், அவையுஞ் சான்றோர் வழங்கினவாறன்றி வேறுபட நாட்டப்படாவெனவும் அவற்றுள்ளுங் காலம்பற்றித் திரிந்தன உளவாயினும் அவை தவிர்த்துச் செய்யுள் செய்யப்படுமென்றற்கும் நாற்சொல்லியலானென அடங்கக்கூறினு னென்பது. மலையென்றதனைப் பிறங்கலென்றோரொன்று இக்காலத் துச் செய்யுள்செய்யுங்கால் அப்பொருண்மையானே உயரொன்று செப்பவோவெனின் அது மரபன்று.

இனிக் குடவாயிலென்பதனைக் "கொற்றச் சோழர் குடந் தை வைத்த" எனவும் உறையூரென்பதனைப் "பிறங்குநிலை மாயி லுற ந்தை போக்கி" எனவும் மேலையார் திரித்தவகையானே இக்காலத் துந் திரித்துக்கொள்ளப்படுவன உள. அவை "களந்தை" என்றற் றொடக்கத்தன. பிறவும் இவ்வாறு வருவனவும் அறிந்துகொள்க.

"கடையாயார் நட்புக் கமுகனையர்" என இதனுள் ஓரினத்தவாகிய புல்லே கூறி ஒழிந்த மரங்களொப்பன உளவாயினும் உடன்கூறாரா யினூர். இன்னோரன்னவுஞ் செய்யுட்கு மரபெனப்படுமென்பது.

மற்றுப் பாட்டுரைநூலேயென ஏழுவகை வகுத்த பகுதியையுஞ் செய்யுட்கு மரபென மேற்கூறினன் அதனானே இவ்வேழுவகையானு மன்றி ஆசிரியா வேண்டுமாற்றானும் பிறபாடைமாக்கள் வேண்டுங் கட்டளையானுந் தமிழ்ச்செய்யுள் செய்தல் மரபன்றென்றவாறு. (அ௦)

௩அ௧. அகவ லென்ப தாசிரி யம்மே.

இது நிறுத்த முறையானே தூக்கு உணர்த்துவானெழுந் தான் அஃதாவது பாவினைத் துணிக்கப்படுவதாகலான் அப்பாவினை உணர்த்துகின்றானென்பது. நிறுக்கப்படுபொருள் பொன்னானும் வெள்ளியானும் ஒன்று பெற்றவழியன்றிக் கழஞ்சுந் தொடியுந் துலா முமெனத் துலைக்கோலாற் றூக்கி அளக்குமாறில்லை. அதுபோலப் பாவின்றித் தூக்கப்படுபொருள் இன்மையானும் பாவினை எழுநிலத் தெழுந்த செய்யுளடி வரையறையுடைய பாட்டிற்கு இன்னவாறு வந்த தென்றறிவிப்பது தூக்காகலானும் எல்லாப்பாவினுக்குந் தூக்குப்பொ துவாகலானும் பாவொடுபுணர்த்தே தூக்குணர்த்தப்பட்டது. (இ-ள்.) அகவல் என்பது ஆசிரியம்மே=வழக்கினுள் அகவலென்று வழங்கப் படும் பாவினை ஆசிரியத்திற்குரிய பாவென்ப. எ - று. அகவிக் கூறுத லான் அகவலெனக் கூறப்பட்டது. அஃதாவது கூற்றும் மாற்றமு மாகி ஒருவன்கேட்ப அவற்கு ஒன்று செப்பிக்கூறாது தாங் கருதிய வாறெல்லாம் வரையாது சொல்லுவதோராறும் உண்டு. அதனை வழக் கினுள்ளார் அழைத்தலென்றுஞ் சொல்லுப. அங்ஙனஞ் சொல்லு வார் சொல்லின்கண் எல்லாந் தொடர்ந்துகிடந்த ஓசை அகவலெனப் படும். அவை தச்சுவினைமாக்கள்கண்ணுங் களம்பாடும்வினைஞர்கண் ணுங் கட்டுங் கழங்குமிட்டு உரைப்பார்கண்ணுந் தம்மில் உறழ்ந்து உரைப்பார்கண்ணும் பூசலிசைப்பார்கண்ணுங் கேட்கப்படும். கழங் கமிட்டுரைப்பார் அங்ஙனமே வழக்கினுள்ளதாய்க் கூறும் ஓசை ஆசி ரியப்பாவெனப்படுமென்றவாறு. (அ௧)

௩௯௦. அஃதான் றென்ப வெண்பா யாப்பே.

இது வெண்பாவாமாறு உணர்த்து. (இ - ள்.) மேற் கூறி ய அகவலோசையன்றிச் செப்பிக்கூறும் ஓசையெல்லாம் வெண் பாவெனப்படும். எ - று. யாப்பென்றதனான் அப்பாக்கள் செய்யுண் முழுதும் ஒருங்குதழீஇக் கிடக்குமென்பதுகொள்க. அகவிக்கூறாது

ஒருவற்கொருவன் இயல்புவகையானே ஒருபொருண்மைக் கட்டுரைக்குங்கால் எழும் ஓசை செப்பலோசையெனப்படும். இவ்விரண்டுமல்லது வழக்கினுள் இன்மையான் அஃதான்றெனவே அதனிலக்கணம் போல்வதாயிற்று. (அஉ)

ஙடகூக. துள்ள லோசை கலியென மொழிப.

இனித் துள்ளலுந் தூங்கலும் செய்யுட்கணன்றி வழக்கினுஞ் செய்யுளினும் ஒப்பவருவனவல்ல. அவற்றுட், துள்ளலோசை உணர்த்துகின்றது. (இ-ள்.) துள்ளலோசையென்பது வழக்கியலாற் சொல்லாது மூரற்கைப்படுமொற்றுற் துள்ளச்சொல்லும் ஓசை ; அது கலிப்பாவெனப்படும். எ-று. (அ௩)

ஙடகூஉ. தூங்க லோசை வஞ்சி யாகும்.

இது தூங்கலோசையுணர்த்து. (இ-ள்.) அடியிற்றூங்காது சீர்தொறுந் தூங்குமோசை தூங்கலோசையெனப்படும். அதுபோலும் வஞ்சியெனப்படுவது. எ-று. (அச)

ஙடகூ௩. மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்றே.

இது மருட்பாவிற்கு வேறுபாடு இல்லை என்பது உணர்-ற்று. (இ - ள்.) மருட்பாவிற்கு உறுப்பா ஆவது ஒழிந்த இரு கூறுமல்லது தானாக வேறுபடுத்து இதுவெனக் காட்டுந் தனிநிலையின்று. எ-று. எனவே, இரண்டன் கூட்டத்துச்கண்ணது மருட்பாவாவதென்றவாறு. பரிபாடற்கு இருசார் அன்மையின் ஈண்டுக் கூறிற்றிலாது மேற்கூறுப. ஏனை இருசாரொன்றதென்னையெனின் இச்சூத்திரத்து முன்னர் அதிகாரப்பட்டு நின்ற துள்ளலோசையுந் தூங்கலோசையுமல்லது அங்ஙனஞ் செய்யுட்கு உரியவன்றி வழக்கிற்கு வருவனவாகி ஒழிந்துநின்ற செப்பலும் அகவலுமேயென்றற்கு அவ்வாறு கூறினானென்பது. அவை இரண்டுங்கொள்ளுங்கால் நிறுத்தமுறையாற்கொள்ளாது எதிர்சென்றுகொள்ளப்படும். கொள்ளவே, செப்பன்முன்னாகவும் அகவல்பின்னாகவும் வருவதாயிற்று மருட்பா. இனி நிறுத்த முறையானே கொள்வார் வெண்பாமுதல் அகவல்பின்னாக வருவது மருட்பாவன்றெனவும் வெண்பாவொழித்து ஒழிந்தபாத் தம்முண் மயங்குவனவே மருட்பாவெனவுங் கூறுப. கலிப்பாவும் வஞ்சிப்பாவும் ஆசிரியத்தோடும் வெண்பாவோடும் மயங்கியிறினும் அவை மருட்பாவெனப்படாமையின் அது பிழைக்குமென்பது. (அரு)

௩௧௪. அவ்விய லல்லது பாட டாங்குக் கிளவார்.

இது மேலவற்றிற்கு ஓர் வரையறை கூறுகின்றது. (இ-ள்.) மேற்கூறிய நான்குபாவிலக்கணத்தானல்லது பாட்டின்கண் வேறுபாக் கூறப்படாது. எ-று. இது கூறிப் பயந்ததென்னையெனின் மேற்கூறிய பாக்களாற் பெயர்கூறாத செய்யுட்களும் அவை பாவாக வரினல்லது வேறு தமக்குப்பாவிலவென்பதூஉம், மருட்பா வினை இருசாரல்லது தானிதுவென்னுந் தனிநிலையின்றெனவே அவ்விரண்டன்கூட்டத்தின்கண்ணும் வேறோர் பாப் பிறக்குமென்றுகொள்ளினுங் கொள்ளற்கவெனவும், பிற்காலத்துநூல்செய்யும் ஆசிரியர் பிறவகையாற் பாவுறுப்பினை மயக்கப்படவேண்டுவாருளராயின் அவரை விலக்கியுங் கூறினவாறு. அல்லதூஉம் மாணாக்கன் இதன் முதனூல்செய்த ஆசிரியன் பண்ணுந் திறனும் பகுத்தானைக்கண்டு இவற்றையும் பாவும் இனமுமாகப் பகுத்தான்கொலென்று ஐயுறாமை விலக்கி இயனூலுள் அவ்வாறு கூறிற்றிலனெனச் சொல்லினானென்பது. நான்கு பாவினையும் நோக்கி ஆங்கென்றான். ஐந்து செய்யுளைநோக்கி அவ்வியலென்றானென்பது. (அ௬)

௩௧௫. தூக்கியல் வகையே யாங்கென மொழிப.

இது தூக்காமாறுணர்த்துகின்றது (இ - ள்.) தூக்கெனப்பட்ட உறுப்பு நடக்கும் இடவகை அச்சொல்லப்பட்ட நான்கிடமுமாம். எ - று. ஆங்கென்றது அப்பெற்றித்து என்றவாறாகக்கொள்க. அவ்விடந் தூக்கு இயலும் இடப்பகுதியென்றவாறு. என்றாற்குத் தூக்கினது இலக்கணம் ஈண்டுச் கூறியதிலதாலெனின், தூக்கென்பது சொல்லின்முடியுமிலக்கணத்திற்றது. தூக்கென்பது நிறுத்தலும் அறுத்தலும் பாடலுமென்று இன்னோரன்னவற்றுமேல் நிற்கும்; ஈண்டும் அவ்வாறே பாவினை இத்துணையடியென நிறுத்துக் கூறுபாடறிதலும் அவ்வத்தூக்குள்வழிச் சொல்லுவாரது உறுப்பு விகாரப்பட்டு ஓடுவது' போன்று அசையுமாறுங் கண்டுகொள்க. இனி அதுதான் இன்னபொருளை அறுத்துநிற்குமென்பான் பாக்கூறி அப்பாவின்கண்ணது இவ்விறுதியென்றான். எனவே இனிக் கூறாதுநின்றதில்லை தூக்கிற்குவேண்டும் இலக்கணமென்பது. இக்கருத்தினானே தூக்கினைப் பாவெனினும் அமையும். "பாவென மொழியினுந் தூக்கினது பெயரோ" எனப் பிறருஞ் சொல்லுப. அகவலோசைக்கட் தூக்குவருங்கால் இருசீர்முதலா எண்சீர்காறும் பரந்துபட்ட அகவலோசையை நாற்சீர்க்கண்ணே துணித்துக்கொள்ள அஃது ஆசிரியத்தூக்காமென்றவாறு. இருசீராற் துணிப்ப ஆசிரியவோ

சையாகாது. முச்சீராற் றுணிப்பினும் ஆசிரியவோசையாம். என்னை? ஈற்றயலடி முச்சீர்த்தாமெனவும் இடையும் வரையாரெனவுங் கூறி னமையின். அஃதேல் அடிவரையானே அறுதியுணர்த்துமாகலிற் றூக்கு எவன் செய்யுமெனின் அவ்வடியினையுந் தூக்கானன்றி உண ர்த்தலாகாது; என்னை? இருசீர் முதலாப் பலசீர் தொடர்ந்தவழித் தூக்கு அறுப்புக்கொண்டன்றி இத்துணைச்சீர் கொண்ட அடி இஃ தென்பது அறியலாகாமையின். அல்லதூஉம் ஆசிரியத்துள் எண் சீர் தொடர்ந்து பாச்சென்றவழி அதற்கு வருமெனப்பட்ட முச்சீர டியும் ஐஞ்சீரடியுமாகாது நாற்சீரடி இரண்டென்று அறிதற்குக் கருவி தூக்கென்பதுகொள்க. அல்லாக்கால் "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை - யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய்" என்றவழி "உள்ளார்" "முள்ளுடை" என்பன அடியெதுகை யாக முச்சீரடியும் ஐஞ்சீரடியுமெனக் கொண்டு மயக்கமா மென்பது. "நரந்த நாறுந்தன் கையாற் - புலவுநாறு மென்றலை தைவரு மன்னே" என்றவழி எண்சீரான் இரண்டு நாற்சீரடி வந்த னவென்று கோடுமென்றே தூக்கின்றுயினென்பது.

தூங்கலோசை அவைபோல நாற்சீரடிக்கணன்றி இருசீர்க் கண்ணுஞ் சிறுபான்மை முச்சீர்க்கண்ணுந் தூக்குக்கொள்ளப்படும். அங்ஙனங் கொள்ளாக்கால் இருசீரெனவும் முச்சீரெனவுந் தூக்கி ன்றி இடைதெரியப்படாவென்பது. (அஎ)

௩௯௩. மோனை யெதுகை முரணே யியைபென
நானெறி மரபின தொடைவகை யென்ப.

இது "மரபே தூக்கே தொடைவகை யெனாஅ" என நிறுத்தமு றையானே தூக்குணர்த்தித் தொடைவகை உணர்த்துவானெழுந்தான் இவையெனப் பெயரும் முறையுந் தொகையுமுணர் - ற்று. (இ - ள்.) அவைதான் மோனைத்தொடையும் எதுகைத்தொடையும் முரண்டொ டையும் இயைபுத்தொடையுமென நான்குவகைப்படுந் தொடை. எ-று. நெறிமரபென்பது நெறிப்பட்ட தொடையிலக்கணம் இதுவென்ற வாறு. எனவே "அளபெடை தலைப்பெய வைந்து மாகும்" என் றவழி இதுபோலச் சிறந்ததன்று அளபெடைத்தொடையென்பதாம். என்னை? அதுவும் வழுவமைத்துக்கொண்ட எழுத்தாகலானென்பது. தொடைவகையென்பது தொடைப்பகுதிபலவுமென்றவாறு அவை மேற்கூறுமாற்றான் மோனைநான்கும் எதுகைபதினைந்தும் முரண் ஐந்தும் இயைபு இரண்டுமென்று இவ்வகைப்படுத்தலும் இனி ஈண் டு எண்ணப்பட்ட தொடைப்பகுதிகளும் அறுநூற்றிருபத்தைந்தடி

யிளையும் ஓரோவொன்ருகத் தம்மொடு தம்மைத் தொடுப்பனவும் அவை தம்மொடு பிறவந்தது தொடுப்பனவும் ஓரடிக்கண்ணே தொடுப்பனவும் அவற்றைக் கட்டளையடியல்லனவற்றும் ஈருய் விராய்த்தொடுப்பனவும் கட்டளையடியல்லனவற்றைத் தம்மொடு தம்மைத் தொடுப்பனவுந் தம்மொடு பிறவந்தது தொடுப்பனவுமென இன்னோரன்ன பலவுமுள. அப்பகுதியெல்லாம் அறிவித்தற்குத் தொடைவகையென்ருனென்பது. (அஅ)

ருகூஎ. அளபெடை தலைப்பெய வைந்து மாகும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி. (இ-ள்.) அந்நான்கேயன்றித் தொடைவகை ஐந்தெனவும்படும் அளபெடைத்தொடையோடு தலைப்பெய்ய. எ - று. அளபெடை எழுத்தோத்தினுள் வேறு எழுத்தெனப்படாமைச் சிறப்பின்மைநோக்கி ஈண்டுப் போதந்து கூறினனென்பது. என்ருர்க்கு மேலைச் சூத்திரத்து நாலெனிமரபாவனவெனத் தொகைகூறினமையின் ஈண்டு அளபெடையுந் தொடையாமென அமையும். நான்கின்மேல் ஒன்றேறியக்கால் ஐந்தாமென்பது ஈண்டுச் சொல்லவேண்டுவதன்று பிறவெனின், அற்றன்று, நான்கிேேனாடு ஒன்றினையே சொல்லுகின்ருனுயின் அது கடாவாவது. ஐந்தெனவும் ஆறெனவும்படுமென்றற்கு இது கூறினன். என்னை? உயிரளபெடையும் ஒற்றளபெடையுமென அளபெடை இரண்டாதலினென்பது. அஃதே கருத்தாயின் ஆறுமாகுமென்மினெனின் அங்ஙனங் கூறின் உயிரளபெடையோடு ஒத்தசிறப்பிற்ருவான் செல்லும் ஒற்றளபெடையெனமறுக்க. உயிரின்பின்னது ஒற்ருகலான் எடுத்தோத்துப்பெறுவது உயிரளபெடையெனவும் உம்மையாற் பெறுவது ஒற்றளபெடையெனவுங்கொள்க. உம்மை எச்சவும்மை. ஒற்றளபெடை மூன்றுபாவினுஞ் செல்லாது கலிப்பாவினுட் துள்ளலோசையான் நில்லாமையினென்பது. (அகூ)

ருகூஅ. பொழிப்பு மொரூஉவுஞ் செந்தொடை மரபு
மமைத்தனர் தெரியி னவையுமா ருளவே.

இதுவுமது. (இ - ள்.) மேற்கூறிய ஐந்துமேயன்றிப் பொழிப்புத்தொடையும் ஒரூஉத்தொடையுஞ் செந்தொடையுமென இவையுமுள. எ - று. செந்தொடைமரபென்பது செந்தொடையிலக்கணமென்றவாறு. அமைத்தனர் தெரியினென்றதனுன் அமையுமாற்ருன் அமைத்துக்கொள்ளப்படும். யாங்ஙனம்? பொழிப்பும் ஒரூஉவும் ஓரடியுள்ளே வருமெனவுஞ் செந்தொடை ஓரடியுள் வரினும் இரண்

டடியானன்றி அறியவாராதெனவுங்கொள்க. இக்கருத்துநோக்கி இவை ஈண்டுப் போதந்து கூறினனென்பது. அவையுமாருளவேயென்ற உம்மையான் இவைபோல ஓரடிக்கண்ணே வரும் முற்றெதுகையுங் கீழைமுற்றெதுகையும் இரண்டடந்தாதியும் இருவகைவிட்டிசைத் தொடையுங் கொள்ளப்படும். (கூ0)

கூகூகூ. நிரனிறுத் தமைத்தலு மிரட்டை யாப்பு
மொழிந்தவற் றியலான் முற்று மென்ப.

இது நிரனிறைத்தொடையும் இரட்டைத்தொடையுமென இரண்டுதொடை கூறி அவை முற்கூறிய தொடைப்பாற் படுமென்று அடங்கக்கூறுகின்றது. (இ-ள்.) நிரனிறைப் பொருள்வகையாற் றொடுக்குந் தொடையும் வந்த சீரே நாற்காற் றொடுக்குந் தொடையும் முன்னைத் தொடைப்பாற்பட்டு அடங்கும். எ-று. யாத்தவெனினுந் தொடுத்தவெனினும் ஒன்று. "அடலமர் வேனேக்கி நின்முகங் கண்டே - யுடலு மிரிந்தோடு மூழ்மலரும் பார்க்குங் - கடலுங் கனையிருளு மாம்பலும் பாம்புந் - தடமதிய மாமென்று தாம்." என்றவழி உடலுங் கடலுமென நிரனிறைத்தொடைமேற் கூறுமாற்றான் எதுகைத்தொடையாய் அடங்கும். "பரவை மாக்கடற் றொகுதியைப் பரவும் - பண்டைச் செய்தி யின்றிவள் வரவும்" என இவ்வாறு நிரனிறுத்தலும் ஒன்று. அஃது இயைபின்பாற்படுமென்க. ஒழிந்தனவும் அன்ன.

இரட்டைத்தொடையென்பது ஒருசொல்லே நான்கு சீருமாகி வருமென்பது. அது "ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்" எனவரும். இது குறையீற்றிரட்டையியைபுத்தொடையாய் அடங்கும். "பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ - நாவீற்றிருந்த புலவீர்காள் பாடுகோ" என்பது நிறையீற்றிரட்டை. இதுவும் இயைபாய் அடங்கிற்று. செந்தொடையாய் அடங்குவன உளவேற் கண்டுகொள்க. மற்று இவை இவ்வாறு அடங்குவனவற்றை விதந்தோதுவதென்னையெனின் இவையுந் தொடைப்பாடுகண்டு ஐயுற்றானை ஐயமறுத்தானென்பது. எனவே, ஒழிந்த பொருள்கோள் தாமேநின்று தொடைப்பாடுசாட்டி ஐயஞ்செய்யாமையின் அவை கூறாதாயினானென்பது. நிரனிறையாயின் இனைத்தென நிறுத்தபொருட்கேற்ப எதிர்பொருளும் எண்ணி நிறுத்துச் செய்யப்படுதலின் அதுவேறுதொடையாங்கொலென்று ஐயஞ்செல்லுமென்பது. மொழிந்தவற்றியலானெனவே தனக்கு வேறியல்பில்லாத செந்தொடை நீக்கப்பட்டது. பொழிப்பும் ஒரூஉவும்போல ஓரடியுள் நின்றுந் தொடைமை

செய்யினும் அவை மூற்றாய் அடங்கும். ஈரடிக்கூட்டத்துத் தத்தம் வகையாற் தொடைமைசெய்யாவென்பது. (௯௪)

௪00. அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை.

இது நிறுத்தமுறையானே மோனைத்தொடையாமாறுணர் - ற்று. (இ-ள்.) அடிதொறும் முதற்கண் ஒரெழுத்தே வரத்தொடுப்பது மோனைத்தொடையாம். எ-று. "கண்டற் கானற் குருகினமொலிப் பச் - காரையா டலவ னளைவயிற் செறிய" என்பது அடிதொறும் முதலெழுத்தொன்றி மோனைத்தொடை வந்தவாறு. "கோதை மார்பிற் கோதை யானுங் - கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்." என்பதும் அது. இனிவருந்தொடையும் இதுவுமெல்லாம் அறுநூற்றிருபத்தைந்தடிக்கு உரியவாகியும் பிறவடிக்கு உரியவாகியுங் குறளடி சிந்தடி நெடிலடி கழிநெடிலடியெனும் நால்வகையடிக்கு உரியவாகியும் வருமெனக்கொள்க.

அற்றன்று, அறுநூற்றிருபத்தைந்தடிக்கும் மோனைத்தொடை ஒன்றென்றாகச்சென்று பெருகி அறுநூற்றிருபத்தைந்து தொடையாமென்பது. மற்று அடியிரண்டியைந்தவழியன்றே தொடையாவது? இவை அறுநூற்றிருபத்தைந்து தொடையாங்கால் இஃது ஓரடிக்கண்ணே வரல்வேண்டும், வேண்டவே அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனையென்றதனோடு மாறுகொள்ளும் பிறவெனின், இதுநோக்கியன்றே "அடியுள் ளனவே தளையொடு தொடையே" எனக் கூறி "அடியிறந்துவருதலில்" என்பானாயிற்று. எனவே, அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஒன்றனையே இரட்டித்துத் தொடைகொள்கவென்பதுபெற்றாமன்றே, ஈண்டு அடிதோறுமெனப் பன்மைகூறவே அவற்றையே இரட்டித்தலும் பிற அடிவந்து தொடுத்தலும் எல்லாம் அடங்கக்கூறினான் ஈண்டென்பது.

"மெய்பெறு மரபிற் றொடைவகை" என மேல் வரையறுக்கப்படுந் தொகை பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டனுள்ளும் மோனைத் தொடை வருங்கால் மூன்றுபாவிற்கும் ஓதிய எழுபத்தெட்டுச் சீரினும் வரப்பெறும். அவ்வாறு வருங்கால் "அடியுள்ளனவே தளையொடுதொடையே" என்றதனை, இலக்கணமும் "அடியிறந்து வருதலில்" எனப்படுமாகலான், அவ்வடி இரண்டன்கூட்டத்துத் தளைவழுக் களையல் வேண்டும். களையுங்கால் ஆசிரியத்துநாற்பத்தொன்றும் வெள்ளையடியுட் பதினெட்டும் ஆக ஐம்பத்தொன்பது நிலங் களையப்படும். கலிப்பாவிற்கு அவ்வாறு களையவேண்டுவதில்லையென்பது. ஆசிரியத்து

நாற்பத்தொரு நிலமாவன, தனக்கு ஓதிய இருபத்தேழுசீரும் பதினொன்கு நேராதியும் பதின்மூன்று நிரையாதியுமாதலான் அவற்றுள் நேராதி பதினொன்கும் ஒரோவொன்று பன்னிரண்டடி உறழுங்காற் பெருகிய நிலத்தின் இவ்விரண்டடியாக இருபத்தெட்டடியும் இனி நிரையாதி பதின்மூன்றற்குஞ் சுருங்கிய நிலத்தின் ஒரோவொன்ருகப் பதின்மூன்றடியுமென நாற்பத்தோரடியுந் தம்மொடுதாம் வந்திரட்டிக்குங்காற் தளைவழுப்படுதலின் அவை தொடுக்கப்படாவென்பது. இனி வெண்பாவடி உறழுஞ்சீர் இருபத்தேழுள்ளும் நேராதிச்சீர் பதினொன்குஞ் சுருங்கியநிலத்துள் ஓரோன்ருகப் பதினொன்கடியும் நிரையாதிசசீர் பதின்மூன்றனுள் ஒன்பதொழித்து ஒழிந்த நான்குசீரும் நின்றுறழ்ந்த அடியுட் பதினொன்கெழுத்தடி நான்குமாகப் பதினெட்டடியுந் தம்மொடு தம்மை இரட்டித்துத் தொடுப்பத் தளைவழுவுமாகலிற் களையப்படுமென்பது. நிரையாதிச்சீர் நான்குமாவன; வரகு வலியது கடியாறு விறகுதீ என்பன. ஒழிந்த நிரையாதி ஒன்பது சீரும் நின்று உறழ்ந்த அடி எஞ்ஞான்றுங் களையப்படாது தொடைப்படுமென்பது. அவை ஒன்பதுமாவன, அரவு புளிமா கணவிரி பெருநாணு உருமுத்தீ மழகளிறு நரையுருமு புலிசெல்வாய் குளிறுபுலி எனவிவை. வரகு நரையுருமு காருருமு பாதிரி எனவும் வலியது கடியாறு காருருமு பாதிரி எனவும் கடியாறு தேமா நரையுருமு காருருமு எனவும் விறகுதீ தேமா புலிவருவாய் காருருமு எனவும் இப்பதினொன்கெழுத்தடி நான்குந் தொடுக்குமாறில்லை. ஒழிந்த நேராதியும் இவ்வாறே சுருங்கினநிலத்து உறழ்ந்தவடி தொடுக்குமாறில்லையென்பதூஉங் கண்டுகொள்க. இனித் தளையப்படாத நிரைமுதற்சீர் ஒன்பானுள்ளுஞ் சுருங்கிய எழுத்துச்சீர் ஒன்பது. பெருகிய எழுத்துச்சீர் நரையுருமு புலிவருவாயென்பன. அரவு வரகு எனவும் அரவு புலிவருவாய் காருருமு தேமா எனவும் இவை முதலும் முடிவுங் காட்டிய அடிக்கண் அவை தம்மோடு தம்மைத் தொடுக்கப்படுதலிற் களையுநிலமிலவாயின. நரையுருமு வண்டு வரகு நரையுருமுக் காருருமு பாதிரி தேமா எனவும் ஐயெழுத்துச்சீர் முதலும் முடிவுங் காட்டிய அடியுங் களையப்படாது தொடைப்படுமென்பது. புலிவருவாய்க்கும் இஃதொக்கும். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. இவ்வாற்ருன் அறுநூற்றிருபத்தைந்தடியுள் ஐம்பத்தொன்பதுநிலங் களைந்து ஒழிந்த அடி ஐஞ்ஞூற்றறுபத்தாறுனும் பெற்ற மோனைத்தொடை ஐஞ்ஞூற்றறுபத்தாறெனப்படும்.

இவ்வாறே தலையாகெதுகை அடியெதுகை எழுத்தோடியைபு சொல்லோடியைபு என்னும் நான்குதொடைக்குங் களைவனகளைந்து

தொகைகூட்டிக்கொள்க. இவற்றுள் ஆசிரியப்பாவினுள்வரும் அடி மோனைத்தொடை இருநூற்றெண்பத்து மூன்றும் வெண்டொடை நூற்றறுபத்து மூன்றுங் கலிப்பாவிற்குரிய தொடை நூற்றிருபதுமாகி மூன்றுபாவிற்குந் தொகுப்பத் தொடை ஐஞ்ஞூற்றறுபத்தாறும்.

ஒழிந்த நான்கற்கும் இவ்வாறே கொள்க. கொள்ளவே இத் தொடை ஐந்தனும்பெற்ற தொடை இரண்டாயிரத்தெண்ணூற்று முப்பத்தாறும். இவற்றுள் அகவற்றொடை ஆயிரந்து நானூற்றொருப த்தைந்து, வெண்டொடை எண்ணூற்றொருபத்தைந்து, கலித்தொடை அறுநூறெனக்கொள்க. "அடியெதுகை மோனை தலையாகெதுகை-யடியியைபு தாமிரண்டென் றைந்துங் - கடியப் - படுநில மைம்பது மொன்பது மென்ப - வெழுபத்தெண் சீரடிக்கு மேற்று." எனவும், "ஒழிந்த நிலத்து நிரைபதின்மூன் றெல்லா - மொழிந்த வுயர்ந்து ழி யொன்றாக் - கழிந்த - நிரையொன்றாய் நேரிரண்டாய் நாற்பத்தொ ன்றாகு - மவையகவற் காகா தன." எனவும், "வரகு வலியது வான்க டி யாறு - விறகுதீ வெள்ளைக்கு மேனிலத்து ளொன்றா - வழிவழி நேர் முதற்சீ ரேழிரண்டு மாக - வவையைம்பத் தொன்பா னகற்று." எனவும், "ஐம்பத்தொன் பானன்றி யைஞ்ஞூற் றறுபத்தா - றொன்றற் குரியவா றொட்டு." எனவும், "ஐந்து தொடையா னகவற் றொடையிருநூற் - றெண்பத்து மூன்று மெனமொழிப - வொன்றொன் றா - வெள்ளைத் தொடைநூற் றறுபத்து மூன்றாகுந் - துள்ளற்கு நூற்றிருப தாம்." எனவுஞ், "சொல்லி னவைதன் றொடையிரண் டாயிரத் - தெண்ணூற்று முப்ப தெனல்" எனவும் இவ்வாறே விரித் துரைத்துக்கொள்க. (௯௨)

௪௦௧. அஃதொழித் தொன்றி னெதுகை யாகும்.

இஃது இரண்டாமெண்ணுமுறைமைக்கணின்ற எதுகைத்தொ டையுணர்-ற்று. (இ-ள்.) இரண்டடியினும் முதனின்ற சீர் முதலெ ழுத்திரண்டும் ஒழிய அல்லனவெல்லாம் ஒன்றிவருதலும் ஓரோவெழு த்தே ஒன்றிவருதலுமென இங்ஙனங் கூறியவற்றுள் அஃதொழித்து அச்சீர் முழுதொன்றிற் தலையாகெதுகையென்றும் இரண்டாமெழுத் தொன்றின் அடியாகெதுகையென்றும் வழங்கப்படும். அயலெழு த்தொன்றினென்னாது முதலெழுத்தினைச் சுட்டிக்கூறுதலென்னை யெனின், இவ்வாறு எதுகையாங்கால் முதலெழுத்துக்களின் மாத் திரை தம்மின் ஒத்துவரல்வேண்டுமென்றற்குக் கூறினனென்பது. உதாரணம் ;—"மாயோன் மேய காடுறை யுலகமுஞ் - சேயோன் மேய மைவரை யுலகமும்" என்பது தலையாகெதுகை. "அகலிரு விசும்

பிற் பாயிருள் பருகிப் - பகல்கான் றெழுதரு பலகதிர்ப் பரிதி" என்பது அடியெதுகை. இதனை அடியாகெதுகையெனவும் அமையும். ஒழிந்தன கடையாகெதுகையெனப்படும். பிறவும் அன்ன. அஃதேற் றலையாகெதுகையென்றதுபோலத் தலையாகுமோனையுங் கொள்ளாமோவெனின், அற்றன்று ; ஆசிரியன் "அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை" என்றானாகலின் அடிமோனையே கொண்டாமென்பது. என்றார்க்கு, "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்" என்றவழி அடிதோறும் ஒருசொல்லே வந்து தொடையாயிற்றன்றோவெனின், அஃது இரண்டடிக்கண்ணே வந்ததன்று, செய்யுண்முழுவதும் பயின்றுவந்து சுவைமைப்படாதாகலின் வழிமோனைப்பாற் பட்டடங்கும் என்க. இச்சூத்திரத்துக் காட்டப்பட்ட தொடை இரண்டும் மூன்று பாவிற்கும் ஓதி அறுநூற்றிருபத்தைந்து அடியோடுங்கூட்டித் தொகைசொல்லுமாறு மேலைச்சூத்திரத்துரைக்கப்பட்டது. (௯௩)

௪0௨. ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய.

இது மேற்கூறிய தொடைப்பாற்பட்டு வருவன வேறுபல தொடைகண்டு அவைகூறுகின்றது. (இ-ள்.) ஆயிருதொடையென்பன மோனையும் எதுகையும். இவை இரண்டற்குங் கிளையெழுத்துக்களும் ஒன்றிவரப்பெறும். எ-று. இதன்கருத்து அங்ஙனங் கிளையாகி வந்த வேறுபாட்டான் எல்லாத் தொடையும் வேறுபலவாமென்றவாறு. கிளையெழுத்தென்பன வருக்கமும் நெடிலும் அனுவும் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் உயிருமெனவிவை. இவையெல்லாம் ஒரோகிளைமையுடைமையிற கிளையெனப்பட்டன. இனி, ஆசெதுகையும் மூன்றாமெழுத்தொன்றெதுகையும் அடியெதுகைக்குரித்தாகிய இரண்டாமெழுத்தின் முன்னும்பின்னுந் தொடர்ந்துநிற்றலின் அவையுங் கிளையெனினும் அமையும். அற்றன்று. அடிமோனையுந் தலையாகெதுகையும் அடியெதுகையும் வந்தது. நுந்தையென்னுஞ் சீர்க்கண் மூன்றாமெழுத்தொன்றிவருதன் "மெய்பெறு மரபிற் றொடை" எனப்பட்டமையின் ஆண்டு அது கிளையாகாது. மெய்த்தல் ஒத்தலென்றவழியன்றி ஈதல் காய்தலென்றவழி நெடின்மோனையாய்த் திரிபுபடுதலின் ஆசிடையெதுகையுங் கிளையாகாது. உரியவென்றதனானே இவை அத்துணையுரியவன்றாமெனக்கொள்க. மற்று நுந்தை தந்தையென்றவழி ஆண்டு முதனின்றமோனை சிறந்ததென்றாமோவெனின் என்றாமன்றே! இரண்டாயவழி ஈரெழுத்துத்தேமாவாகலே பெரும்பான்மையாகலின். இதனானே இது தலையாகுமோனையெனத் தலைமைகூறப்படாததூஉமாயிற்று. என்னை? தொடையென்பன பூத்தொடைபோலச் செய்யுட்குப் பொலிவுசெய்யவேண்டுமாகலின் இக்கருத்தினானன்

றே சொல்லடியிளையபிணைத் தலையாகிளையபெனத் தலைமைகூறுராயிற் றென்பது. அடியெதுகையாயிற் தலையாகெதுகைபோலச் சிறந்து காட்டுமென்பது. செந்தொடையுஞ் செய்யுட்பொலிவுசெய்யுங்காற் கொன்றையுங் கடம்பும்போல நின்றவாறேநின்று தொடைப்பொலிவு செய்யுமென்பதாம். அதுவுங் கிளையெனப்படுமோவெனின், அது வுங் கிளைமைபற்றியல்லது அனுவாகாதென்றற்கு இவற்றோடுங் கூறி ஞனென்பது. ஈண்டு ஓதியகிளை உயிரும் ஒற்றுமென இரண்டாகலின் அவ்விருவாற்றானுங் கிளைமைபற்றி அனுக்கொள்ளப்படும். என்னை "அஆ வாயிரண் டங்காந் தியலும்" என அகர ஆகாரங் கிளையாயின. ஐகார ஔகாரம் போலிவகையான் அவையெனப்படும். இ ஈ எ ஏ என்பனவும் உ ஊ ஒ ஓ என்பனவும் உடன்பிறப்பினவாகலான் அவை யங் கிளையெனப்படும். ஒற்றுக்கிளையென்பன தம்முன்னாத் தாம்வ ருதலும் பிறவருதலுமென இரண்டு. அவற்றுட் தம்முன்னர்த் தாம் வருங்கால் வந்த உயிரோவாரா. அனுவிற்கு ஓதிய உயிரோ வேறுபட வ ருமென்பது. இனி ஒரடிக்கண்ணுயின் ஐஞ்சீரானும் அறுசீரானும் வ தவழியினும் அனுவெனப்படுமென்பது. இனித் தம்முன்னுகப் பிறவ ருங்கால் வந்த உயிரோ வரவும்பெறுமெனக்கொள்க. பிறவருங்கால் நக ரஞகரங்களும் மகரவகரங்களுஞ் சகரதகரங்களும் இனம்பற்றிக் கிளை யாமென்பது. அவற்றுள் மகரவகரங்கள் இதழ்பற்றிப்பிறத்தலிற் கி ளையாயின. இவ்வாறே இ ஈ எ ஏ என்பனவும் யகரமும் மிடற்றுவ ளியாற் பிறத்தலானும் இயல்பொப்புமையானுங் கிளையாமென்பது.

ஒற்றும், உயிரும் உயிர்மெய்யும் மெய்யுமென மூன்றுவகை யாற் கிளைமைகூறி மெய்ம்மோனை உயிர்மோனை உயிர்மெய்ம்மோனை யெனவுங் கொள்ளாமோவெனின், அவை "மெய்பெறுவகையிற் றொ டைவகை" அன்மையிற் கொள்ளாமென்பது. அல்லதூஉம் அவையெ ல்லாங் கொள்ளிற் செந்தொடை இழவுபடுமென மறுக்க. எதுகைக்கு ம் இஃதொக்குமாறு கண்டுகொள்க.

இங்ஙனம் ஈண்டுக் கிளையெனக்கூறியவற்றுள், ஏற்புழிக்கோ டலென்பதனன் வருக்கமென்பது மோனைக்கும் எதுகைக்கும் உரி மையான், வருக்கமோனை வருக்கவெதுகையென்று இருவகைப்படும் நெடிலும் அனுமோனைக்குரிய உயிரும் வல்லினமும் மெல்லினமும் இ டையினமும் ஆசிடையிடுதலும் மூன்றுமெழுத்தொன்றுதலுமென்ற வாறும் எதுகைக்கே உரியவாம். இவை பத்துத்தொடையுள்ளும் மோ னைமூன்றும் வருமாறு;—"வயங்கு கதிர்கரந்த வாடைவைகறை - விசு ம்புரிவதுபோல் வியலிடத் தொழுகி" என்பது வகரவருக்கம் முதற்

ண்வந்தமையின் வருக்கமோனையாயிற்று. "கலக்கொண்டன் களனெ ன்கோ காழ்க்கொத்தன் சூட்டென்கோ" என்பதும் அது. இவை ஒருமெய்யின் வருக்கமாகலான் வருக்கமெனப்பட்டன.

அஃதேல் உயிர்வருக்கமும் வருக்கமெனப்படாதோவெனின் அங்ஙனங்கொள்ளின் நெடிலும் அனுவும் விரவும் வருக்கமும் வருக்க மெனப்படுமென மறுக்க. அல்லதூஉம் நெடிலுங் குறிலும் ஊர்ந்த மெய்யிரண்டு இயைந்தவழித் தொடையாகல்வேண்டுமென்றே வென் பது. என்றார்க்கு முதற்கண் உயிர்வந்ததனையே இன்னதொடையெ ன்றுமோவெனின், அவை அனுவாய்வருவன வழிமோனையெனவும் அல்லாக்காற் செந்தொடையெனவுங் கூறுபவென்பது. இஃது, ஒர டிக்கண்வரினும் ஒக்குமென்பதுய்த்துணர்க.

"மடவான் மகளிர் பிடகைப் பெய்த - செவ்வி யரும்பின் பை ங்காற் பித்திகத்து" என்றவழிச் செந்தொடையாவதன்றி மோனைத் தொடைப்பாடின்றென்பது. இவ்வாறே குறிலும் நெடிலும் எதுகை யாகாமையின் அவையும் வேண்டியதிலவென்பது. "வெள்ளி வெள்ளி விளங்கிறைப் பணைத்தோண்-மெத்தென் சாயன் முத்துறழ் முறுவல்" என்பது வழிமோனை. "ஒங்குதிரை வியன்பரப்பி - னொலிமுந்நீ வரம் பாக" என்பதும் அது. இவற்றை அனுமோனையெனினும் அமையும். அவை விகற்பங்கொள்ளாமோவெனிற் கொள்ளாம். "முன்னைத்தஞ் சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப் பெயர-வன்னைச் குரைப்ப னறிவா ய் கடலேயென் றலறிப் பேரும்" என்னும் அறுசீரடியினும் எழுசீரடி யினும் எண்சீரடியினும் நாற்சீரடியினும் ஒப்பவருதலானும், எண்சீரடி யுள் ஒருநான்குசீர் அற்றவழி ஒழிந்தநான்கனுண் முதற்கண்ணும் இ டைக்கண்ணும் இனம் வந்தால் அவைவந்தவழியெல்லாந் தொடையா காமையானுமென்பது. பிறவும் அன்ன. எதுகைக்குப்போல இன மோனைகொள்ளா தனிமெய் மொழிக்கு முதலாகாமையினென்பது. "கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை - வாடா வள்ளியங் காடிறந் தோரோ" என்பது வருக்கவெதுகை. "அத்தக் கள்வ ராதொழு வறுத் தெனப் - பிற்படு பூசலின் வழிவழி யோடி" என்பது வல்லினவெ துகை. "தும்மில் புலம்பினு முள்ளுதொறு நலியுந் - தண்வர லசைஇ ய பண்பில் வாடை" என்பது மெல்லினவெதுகை. "மள்ளர் மள் ளுறவர் மறவ - செல்வா செல்வ செருமேம் படுந" என்பது இடை யினவெதுகை. "புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியுஞ் - சொல்லி ய வல்ல வேனைய வெல்லாம்" என்பதும் அது. "இமிழ்கண் முழவி னின்சீர் வாமனைப் - பயிரவன் போலவந் திசைப்பனவுந் தவி

ரான்" என்பது உயிரொதுகை. இஃது ஒற்றூர்ந்த உயிர் ஒன்றி னமையின் உயிரொதுகையாயிற்று. "நெய்த்தோர் மீமிசை நிணத் திற் பரிக்கு - மத்த நண்ணிய வங்குடிச் சீறூர்" என்பது யகரவொ ற்றிடையிட்டுவந்த ஆசிடையெதுகை. பிற ஒற்றிடையிடினும் மெய் பெறுமரபிற்றொடையாவனகொள்க. "உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை - நிலவுக்கடல் வரைப்பின் மண்ணக நிழற்ற" என்பது மூ ன்றாமெழுத்தொன்றெதுகை. இவையும் மேற்கூறப்பட்டனவும் இ னிக்கூறுவனவுமெல்லாம் நான்குபாவினும் வருமாறுகண்டுகொள்க.

இனி மூன்றுபாவினும் அறுநூற்றிருபத்தைந்தடியோடும் இவ ற்றைப் பெருக்கி உணருங்கால் இவை பத்துத்தொடையானும் பெ ற்ற தொடை மூவாயிரத்தெண்ணூற்றறுபத்தேழு. இவற்றுள் வருக்க மோனையும் வழிமோனையும் உயிரொதுகையுமென இவைமூன்றும் நு ந்தையென்னுஞ் சீர்க்கு ஏலாமையின் அச்சீர் முதற்பா இரண்டினும் உறழ்ந்த அடி இருபதும் ஒழித்து ஒழிந்தசீர் எல்லாவற்றானும் உற ழ்ந்த அடி அறுநூற்றைந்தனுள் ஐம்பத்தாறுநிலங் களைய ஒரோவொன் றற்குப் பெற்றதொடை ஐஞ்ஞூற்றுநாற்பத்தொன்பதாம். இவ்விலக் கணமெல்லாம் இனிக்கூறும் முரணைந்தற்கும் ஒக்கும். அவற்றை அக வற்றொடை இருநூற்றெழுபத்துமூன்றெனவும் வெண்டொடை நூற் றைம்பத்தாறெனவுங் கலியிற் களைவன இன்மையின் அவை நூற்றிரு பஃதெனவும் பகுத்துக் காணப்படும். இம்மூன்றுதொடையும் முர ண் ஐந்துந் தொகுப்பப் பெற்ற தொடை நாலாயிரத்து மூந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டு. இவை பிற அடிக்கண்வருங்கால் அவ்வளாய முறையாற் பயிலாவென உணர்க. பிறவும் அன்ன.

வழிவருக்க மோனை யுயிர்முரணைந் தெட்டு - மொழிகின்ற நுந்தை யொழிய - வழுநில - மைம்பதின்மே லாறகற்ற வைஞ்ஞூற்று நாற்பதின்மே - லொன்பதென் றோதப் படும்" எனவும். "இருநூற்றெ ழுபத்து மூன்றகவல் வெள்ளைக் - கொருநூற்றைம் பத்தா றுரிய- வொ ருநூற் - றிருபதாந் துள்ளற் கெனல்" எனவும் "நாலா யிரத்துமூந் நூற்றுத்தொண் ணூற்றிரண்டி-னுலீ ரிடத்து நவிற்று" எனவும் "பதி ன்மூன்று பாற்றொடை யேழா யிரத்தோ - டிருநூற் றிருபத் திரண்டு" எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி மூன்றாமெழுத்தொன்றெதுகைக்கு வண்டு மின்னு நுந்தை சேற்றுக்கால் நீடுகொடி என்னும் ஐந்துசீரானும் உறழ்ந்த அடி அறுபஃதொழித்து ஒழிந்தசீர் இருபத்திரண்டானும் பெற்

அடி இருநூற்றறுபத்துநானகனுள்ளும் ஒன்பது நேர்முதற்சீராற் பதினெட்டும் பதின்மூன்று நிரைமுதற்சீராற் பதின்மூன்றுமாக மூப்பத்தொரு நிலங் களைந்து கொள்ளப்பெற்ற ஆசிரியத்தொடை இருநூற்றுமுப்பத்துமூன்று.

இனி, வெண்பாவினுள் நீடுகொடி வாராமையின், வண்டுமின்னு நுந்தை சேற்றுகால் என்னும் நான்குசீரும் உறழ்ந்த அடி முப்பத்தொன்றொழித்து ஒழிந்தசீர் இருபத்துமூன்றும் பெற்ற அடி நூற்றைம்பதாகலின், அவற்றுள்ளும் நேர்முதற்சீர் பத்தும் வருவலியது கடியாறு விறகுதீ என்னும் நான்குமாகப் பதினான்குசீரானும் பதினாலுநிலங் களைந்து பெற்ற வெண்டொடை நூற்றுமுப்பத்தாறும். இவ்வாற்றான் இரண்டுபாவிற்குங் களையும் நிலம் நாற்பத்தைந்து. கலிப்பாவினுள்ளுஞ் சேற்றுக்கால் நீடுகொடி என்னும் இரண்டும் மூன்றாமெழுத்தொன்றெதுகைக்கு ஏலாமையின் ஒழிந்த சீர் இருபத்திரண்டானும் பெற்ற தொடை நூற்றொருபதாம். இவ்வாற்றான் இவை மூன்றுபாவின் தொடையுந் தொகுப்ப நானூற்றெழுபத்தொன்பதாம். இம் மூன்றாமெழுத்து ஒன்றுங்கால் இரண்டாமெழுத்து ஒன்றாது வரல்வேண்டும். அல்லாக்காற் தலையாகெதுகையாமாகலினென்பது.

"வண்டுமின்னி ரண்டுநுந்தை சேற்றுக்கா னீடுகொடி - யென்றிரண்டு மூன்றா மெழுத்தியையா - நின்ற - வறுபத்தேழ் சீரா னடித்தொடை நானூற் - றெழுபத்தொன் பானு மியற்று." எனவும் "வந்த பதினான்கு மேழா யிரத்தெழுநூற் - றோன்றென் றுரைக்கப்படும்" எனவும் "நேர்முத லொன்பா னிரட்டி நிரைபதின்மூன் - றாசிரியப் பாமுப்பத் தொன்றகற்றி- நேர்முதற்சீர் - பத்தொடு நான்குவெண் பாவகற்ற வாங்கதற் - கற்றன நாற்பத்தைந் தாம்." எனவும் "இருநூற்று முப்பத்து மூன்றகவல் வெள்ளைக் - கொருநூற்று முப்பத்தாறுகு - மொருநூற் - றொருபதாந் துள்ள லொருங்கிவை மூன்று - மெதுகையாற் பெற்றனவா மீண்டு" எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி வருக்கவெதுகை ஆசிரியத்துள் எழுசீர்க்கும் வெண்பாவினுள் ஐந்துசீர்க்குங் கலிப்பாவினுள் நான்குசீர்க்கும் ஏலாது. அவை வண்டு மின்னு போதுபூ மேவுசீர் நீடுகொடி நாணுத்தளை நுந்தை என இவையேழும் ஆசிரியத்துள் ஆகாதன. இவற்றுள் நீடுகொடி நாணுத்தளை இரண்டும் ஒழித்து ஒழிந்தசீர் ஐந்தும் வெண்

பாவிற்கேலா. அவற்றுள்ளும் வண்டு மின்னு நுந்தை ஒழித்து ஒழிந்த நான்குங் கலிப்பாவிற்காகாவெனவுணர்க. இனி ஆசிரியத்துள் நேர்முதற்சீர் ஏழும் பதின்மூன்று நிரைமுதற்சீரும் உறழ்ந்த அடி இருநூற்றுநாற்பதாம். இவற்றுட் களையும் நிலம் இருபத்தேழாம். ஆகவே அகவற்றொடை இருநூற்றொருபத்துமூன்றாயின. வெண்பாவின் ஐந்துசீரானும் முப்பத்தெட்டடியொழித்து ஒழிந்த அடிநூற்றுநாற்பத்துமூன்றானும் நேர்முதற்சீரொன்பதும் நிரைமுதற்சீர் நான்குமெனப் பதின்மூன்றானுங் களையும் நிலம் பதின்மூன்றகற்றிப் பெற்ற வெண்டொடை நூற்றுமுப்பதாம். கலிப்பாவிற் களைந்த சீர் நான்கொழித்து ஒழிந்தசீரான் அடி நூறெனப்படும். அம்மூன்றுந் தொகுப்ப வருச்கவெதுகை நானூற்றுநாற்பத்துமூன்றாயின.

"நேர்பிரண்டு நேர்பு முதஞன்கு நுந்தையுமென் - றாகாச்சீ ரேழைந்து நான்காக - வாகாத - நாற்பதும்போய் நானூற்று நாற்பத்து மூன்றாகித் - தோற்றும் வருக்கத் தொடை" எனவும் "முறையா னிருநூற் றொருபத்து மூன்றே - டொருநூற்று முப்பதுநூ றொட்டு" எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி நெடின்மோனையும் மெல்லினவெதுகையும் இடையினவெதுகையும் ஆசிடையெதுகையுமென நான்கற்கும் நிரைமுதற்சீரும் நுந்தையுமெனப் பதினாற்சீர் ஏலாமையின் ஒழிந்த நேராதிச்சீர் பதின்மூன்றனுன் ஆசிரியத்து ஓரோசீர்க்கு இரண்டுநிலங் களைந்து பெற்றதொடை நூற்றுமுப்பதாம். வெண்பாவினுள் நேர்முதற்சீர்பதின்மூன்றும் உறழ்ந்த அடி தொண்ணூற்றுமூன்றனுள் ஒருசீர்க்கு ஒரு நிலமாகப் பதின்மூன்று நிலங்களைந்து பெற்ற வெண்டொடை எண்பதாம். கலிப்பாவிற்கு நேர்முதற்சீர் பன்னிரண்டனுற் பெற்றதொடை அறுபஃதாம். ஆக மூன்றுபாவிற்குந் தொடை ஓரோவொன்றற்கு இருநூற்றெழுபதாக நான்கனுனும் பெற்றதொடை ஆயிரத்தெண்பதாம்.

"இடையின மெல்லின மாசெதுகை யேனை - நெடின்மோனை நான்காகி நின்ற - தொடைதா - மிருநூற் றெழுபஃ தொரோவொன் றற் கெய்து - நிரைமுதலு நுந்தையு நீத்து" எனவும் "பதின்மூன் றிரட்டித் தகவலினே ராதி - பதின்மூன்றே வெண்பாவிற் பாற்றி யவை தொகுப்ப - மூவகை மூன்று தலையிட்ட முப்பஃது - நால்வகையானிற்க நவிற்று" எனவும் "மூவகைப் பாவின் மொழிந்த தொடைத்தொகை - யாயிரத்து மேலெண்ப தாகுமாம் - பாவின - மூந்நூற்று முப்பதா மெண்பதாம் வெண்பாக் - கடைய கலிக்கறுபஃ தாம்" எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி வல்லினவெதுகைக்கு நிரைமுதற்சீர் பதின்மூன்றும் மின்னு நுந்தை மேவுசீர் நாலுத்தலையென நான்குமாகப் பதினேழு சீர் தொடைகொள்ளாமையின் ஒழிந்த நேராதிச்சீர் பத்தனுங் களைவன களைந்து பெற்ற அகவற்றொடை நூறாகவும், வெண்பாவிற்கு நாலுத்தலை வாராமையின் அஃதொழிக்கல் வேண்டுவதன்றாயிற்றா கவே மின்னு நுந்தை மேவுசீர் என்னும் மூன்றொழித்து ஒழிந்த நேராதிச்சீர் பதின்மூன்றனுங் களைவன களைந்து கொண்டவெண் டொடை அறுபத்தெட்டாகவும், கலிப்பாவின் நேர்முதற்சீர் பன்னிர ண்டனுள் மேவுசீர் நாலுத்தலை ஒழித்து ஒழிந்த பத்தனுந் தொடையைம்பதாகவும் மூன்றுபாவினுனும் வல்லினவெதுகை இரு நூற்றொருபத்தெட்டாமென்ப.

"முற்றுகர நேர்புநேர் முன்னருஞ் சீரிரண்டுங் - குற்றுகரத் தேமாவுங் கொள்ளாது - மற்றை - நிரைமுதலுங் கூட்டாது நேர்முத லான் வல்லொற்-றெதுகையிரு நூற்றொருபத் தெட்டு" எனவும் "இரு பஃதகவல்பதி னொன்றுவெள்ளைக் காகா - நிலமுப்பத் தொன்றாக நீக்கி- வலியெதுகைக் - கீரைம்ப தாமகவல் வெள்ளைக் கறுபத்தெட் - டோ ரைம் பதுதுள்ளற் கொட்டு" எனவும் இவற்றை விரித்துரைக்க.

இவையெல்லாங் கிளைமைபற்றிவந்தமையின் ஆயிருதொடைக் குங் கிளையெழுத்துரிய என்றானென்பது. இப்பத்துத் தொடையா னும் முரணைந்தானும் பெற்றதொடை ஆறாயிரத்தறுநூற்றொருபத்திர ண்டெனப்படும். ஆறாயிரத்தறுநூற்றொருபத்திரண்டும் பெறுங் கிளை முரண் ஐந்தும். மேற்கூறிய மோனை எதுகையிரண்டனோடும் இனி க்கூறும் முரணைந்தும் இயைபு இரண்டும் உடன்கூட்டித் தொடை கூறினும் இவற்றோடு இயைந்தமையினென்பது. இத்தொகையெல் லாந்தொகுப்ப ஒன்பதினாயிரத்து நானூற்று நாற்பத்திரண்டாயின வாறு கண்டுகொள்க.

"மோனை யெதுகை முரணியைபு நான்கிற்கு - மானவை யொன்பதி னாயிரத்து- நானூற்று - நாற்பத் திரண்டாகு மோரடியே யாயினுங் - கூட்டத்துக் கொண்ட குழாம்." (௯௪)

௪௦௭. மொழியினும் பொருளினும் முரணுதன் முரணே.

இது முறையானே முரண் தொடை உணர்த்து, (இ-ள்.) சொல்லும் பொருளும் பகைத்தல் காரணமாக முரண்டொடைவ ரும். எ-று. அவை ஐவகைய; சொல்லுஞ் சொல்லும் முரணுதலும்,

பொருளும் பொருளும் முரணுதலுஞ், சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணுதலுஞ், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதலுஞ், சொல்லும் பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணுதலும் என. "செவ்வி வாய்த்த செம்பாட் டூரத்து - வெள்ளை வெண்மதி மெய்புலத் தொழிய" என்புழிச் செவ்வி வெள்ளையென்பன பொருளின்றிச் சொல்லுஞ் சொல்லும் முரணியன. வெள்ளையென்பது சாதிப்பெயர். "செந்தொடைப் பகழி வாங்கிச் சினஞ்சிறந்து - கருங்கைக் கானவன் களிற்றுநிறத் தழுத்தலின்" என்பதும் அது. "நீரோ ரன்ன சாய - றீயோ ரன்னவென் னுரனவித் தன்றே." என்பது பொருளும் பொருளும் முரணியது. "தண்ணி யலற்ற தயங்கறற் கானத்து - வெந்நீர்ப் பொருணசைஇ முன்னிச் சென்றோர்" என்பது சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணியது. "இநீர் நஞ்சந் திருமிடற் றொடுங்கிய - வுவரி யன்ன வுடைப்பெருஞ் செல்வர்" என்பது சொல்லும் பொருளும் பொருளொடு முரணியது. இதனைச் சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணியதுபோலப் பொய்ப்பொருளோடு முரணுதல் வேண்டுமென்று கொள்ளற்க. "செவ்வேற் சேஎய் திருமண மறுத்த - கருவிற் கானவன் வரிலவ றிலரோ, யது போல" என்புழிச் சொல்லும் பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணியது. பிறவும் அன்ன. இவை ஐந்தொடையுந் தலைவகையடிக்கண் வருங்கால் இன்னவாறுவருமென்பது மேற்கூறியவாற்றானே கொள்ளப்படும். இவை விரித்துநோக்கப் பலவாமாறும் விரித்துறழ்ந்து கண்டுகொள்க. (௯௫)

சoஅ. இறுவா யொன்ற லியைபின் யாப்பே.

இது முறையானே இயைபிரண்டும் உணர்த்துகின்றது. (இ-ள்.) இரண்டடியும் ஈற்றொத்தல் இயைபுத்தொடைக்கிலக்கணம். எ-று. வாளாதே இறுவாயொன்றலென்றானும் ஆண்டு ஒன்றுவது பொருளியையின்றி எழுத்துஞ்சொல்லும் ஒன்றியடையின் இயைபாமென்பது. எனவே, எழுத்தடியியைபுஞ் சொல்லடியியைபுமென இத்தொடை இரண்டாயின. "அவரோ வாரார் கார்வந் தன்றே- கொடிக்கு முல்லையுங் கடிக்கரும் பின்றே." என்பது எழுத்தடியியைபு. "பரவை மாக்கடற் றொகுதிரை வரவும் - பண்டைச் செய்தியின்றிவன் வரவும்" என்பது சொல்லடியியைபு. இவையும் அடிமோனைபோல எல்லா அடியோடுந் தொடுக்கப்படுமென்பதூஉம் அவற்றதுவிரியும் எல்லாம் "அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை" என்புழிச் சொல்லியவாற்றானே கொள்ளப்படும். (௯௬)

சுOகூ, அளபெழி னவையே யளபெடைத் தொடையே.

இது முறையே அளபெடைத்தொடை உணர்-ற்று. (இ-ள்.) அடிமுதற்கண் எழுத்துக்கள் அளபெழுந்தனவாயின் அவை அளபெடைத்தொடையெனப்படும். எ-று. அவையென்றது உயிரளபெடையும் ஒற்றளபெடையுமென்றிரண்டென்பது கோடற்கு. "பாஅலஞ்செவிப் பணைத்தாண் மானிரை - மாஅல் யானையொடு மறவர் மயங்கி" என்பது உயிரளபெடை. "கஃஃறென்னுங் கல்லதர்க் கானிடைச் - சுஃஃறென்னுந் தண்டோட்டுப் பெண்ணை" என்பது ஒற்றளபெடை. இவை கட்டளையடியொடு தொகுக்குங்கால் உயிரளபெடை முந்நூற்றுமுப்பத்துமூன்றும். அவை மூன்றுபாவினும் வருங்கால் உரியசைச்சீர் நான்கும் உரிமுதற்சீர் எட்டும் நிரையசையுமெனப் பதின்மூன்றும் ஒழித்து ஒழிந்தவற்றுள் வரும். அவை ஆசிரியத்துள் நேர்முதற்சீரேழும் நிரைமுதற்சீரேழும், வெண்பாவினுள் நேர்முதற்சீரொன்பதும் நிரைமுதற்சீரொன்பதுங், கலிப்பாவினுள்ளும் உரிமுதற்சீரெட்டொழித்து நேர்முதற்சீரெட்டும் நிரைமுதற்சீரெட்டுமெனப் பதினாறுமாக, நாற்பத்தெட்டுச்சீர்க்கண்ணும் வருமென்பது. அங்ஙனம் வருங்கால் ஆசிரியத்து நூற்றுநாற்பத்தேழும் வெண்பாவினுள் நூற்றாறுங் கலிப்பாவினுள் எண்பதுமாகி முந்நூற்று முப்பத்துமூன்றும். அவை ஆசிரியத்துள் இருபத்தொன்றும் வெண்பாவினுட் பதினொன்றுமாக முப்பத்திரண்டுநிலங் களைந்து பெறப்பட்டன. "உரியசைச்சீர் நான்கு முரிமுதற்சீ ரெட்டு - மளபெடைக்கு நுந்தையோ டாக - வொருநாற்பத் - தெண்சீரான் முந்நூற்று முப்பத்து மூன்றென்ப - தொண்சீர் பெறுமுறையா னுய்த்து" எனவும் "நேரேழ் நிரையேழ் முதற்சீர் முதற்பாவிற் - கோரேழான் மூவேழ் நிலமில வா - னேராதி - யொன்ப திரண்டு நிரையாதி வெண்பாவிற் - கென்றிவை முப்பத் திரண்டு." எனவும் "நூறொடு நாற்பத்தே ழாமகவனூற்றின்மே - லாறு தொடைவெள்ளைக் காறுமா - லேறுதுள்ளற்கெண்பதா மீரேழ் ரொன்பஃ தெண்ணிரண் - டென்றுமாம் பாமூன் றிடத்து." எனவும் இவற்றை விரித்துக்கொள்க.

ஈரொற்றளபெடை கலிப்பாவினுள் வாராது. என்னை? அது துள்ளலோசை தள்ளிநிற்றலின். அங்ஙனமாதல் "அசையுஞ் சீருமிசையொடு சேர்த்தி" அறிக. இனி ஆசிரியத்துட் தேமா புளிமாவென்னும் இரண்டும் வெண்பாவினுட் தேமா புளிமா மாசெல்வாய் புலிசெல்வாயென்னும் நான்குமாகச் சீராறன்கண்ணும் பெற்றதொடை நாற்பத்தைந்து இவை ஆசிரியத்திருபத்தொன்றும்,

வெண்பாவினுளிருபத்து நான்குமெனப்படும். இவை ஆசிரியத்துண் மூன்றும் வெண்பாவினுள் இரண்டுமாக ஐந்துநிலங் களைந்து பெறப் பட்டன. களையுநிலம் அதனிற் சுருங்குவதில்லை. "நேமா புளிமாவே மாபுலிசெல் வாயென்று - ஞானர்பத் தைநதொற் றளபாகும் - வேறு - தனித்தொலி யொன்று களையுநில மூன்று - முதற்பாவின் வெள்ளைக் கிரண்டு." எனவும் "எழுமூன்று மாசிரியத் தெண்மூன்றும் வெள்ளை க் - கழியாத வீரொற் றளபு." எனவும் இவற்றை விரித்துரைத்துக் கொள்க. ஆக அளபெடைத்தொடைஇரண்டுங் கூட்டிப் பெற்றதொ டை மூந்நூற்றெழுபத்தெட்டு. ஆக முதற்றொடை இருபத்திரண் டனும் பெற்ற தொடை ஒன்பதினாயிரத்தெண்ணூற்றிருபஃது. "ஒன்பதி னாயிரத் தெண்ணூற் றிருபஃதா - மந்தமில் காட்சி யளபெ டைத்தே - வந்த விருபத்தி ரண்டு." (கூ௭)

சச0. ஒருசீ ரிடையிட் டெதுகை யாயிற்
பொழிப்பென மொழிப புலவ ராறே.

இது பொழிப்பெதுகையாமாறுணர்த்து. (இ - ள்.) ஒருசீ ரிடையிட்டு எதுகையாயிற் பொழிப்பாம். எ - று. இடையிடினென வே முதற்சீர் நிற்பதாயிற்று. எதுகையாயினெனவே மூன்றாஞ்சீ ரோடு தொடுப்பதாயிற்று. இவற்றுள் ஆசிரியங்களைவன களையப்பெ ற்ற தொடை நூற்றுநாற்பதெனவும், வெண்பா களைவன களையப் பெற்றதொடை நூற்றுமூன்றெனவுங் கொள்க.

"நிரைமுதற்சீர் பன்னிரண்டு கீழ்நிலத்துள் ஒன்ற - வருகலி மூந்நூற்றெட் டாம்" எனவும், "மேவுசீர் வெள்ளைக்கொன் றேற்கிளை முற்றே- லோரிரு நூற்றுமுப்பத் தெட்டாகு மாக- விருநூறு நானூறொ டேழ்பத்தைந் தாக - வருமுற்று மொன்றும் வகை" எனவும் இவை முற்றெதுகைக்கு உரைச்சூத்திரம். இன்னும் புலவராறென்று மிகுத் துச்சொல்லியவதனானே அமைவன வேறுளவெனத் தழீஇப் புகுந் தவற்றுள் ஈண்டுக் கூறுத அந்தாதித்தொடையும் மற்றை விகற்பத் தொடையாகிய ஒரூஉத்தொடையுங் கூறிக்கொள்க. (கூ௮)

சசக. இருசீ ரிடையிடி னொரூஉவென மொழிப.

இது நிறுத்தமுறையானே ஒரூஉத்தொடை உணர்த்துகின் றது. (இ-ள்.)நாற்சீருள்ளும் இடையிருசீரொழித்து ஒழிந்த முதற்சீரு ம் நான்காஞ்சீரும் இரண்டாமெழுத்தொன்றி வரத் தொடுப்பின் அத னை ஒரூஉவென்ப, எ - று. அதிகாரத்து ஒரூஉவெதுகையெனப்ப

ட்டது. அதுவும் பொழிப்புப்போல வந்த எழுத்தே வருதலுங் கிளையெழுத்து வந்து கிளையொரூஉ என்னப்பட்டு இரண்டாதலுமுடைத்து." "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை" என்பது ஒரூஉ வெதுகைத்தொடை. "குரலங் கடுவழி யெடுப்ப வாருற்று" என்பது கிளையொரூஉவெதுகை. இவை இரண்டுதொடையுங் கட்டளையடிக்கண் வருங்கால் ஒரூஉவெதுகை ஐஞ்ஞூற்றிருபத்தெட்டாம்.

அவை ஆசிரியத்திற்கு உரியசீர் இருபத்தேழனுள் நேர்முதற்சீர் பதினொன்கும் ஒரோவொன்று உறழ்ந்தஅடி பன்னிரண்டனுட் சுருங்கிய நிலந்தோறும் ஒன்பதொன்பதாக நூற்றிருபத்தாறும், நிரைமுதற்சீர் பதின்மூன்றும் பெருகியநிலத்து ஒரோவொன்று பத்தாக நூற்றுமுப்பஃதுமாக அகவற்றொடை இருநூற்றைம்பத்தாறு. அவற்றுண் மின்னு மேவுசீர் நாணுத்தளை என்னும் மூன்றுசீரானும் மூன்றுநிலம் முதனிலத்தகற்றிப் பெற்றதொடை இருநூற்றைம்பத்துமூன்று. வெண்டொடை இருபத்தேழுசீருறழ்ந்த அடி அனைத்தினும் பெற்ற தொடைநிலை நூற்றெண்பத்தொன்று. இவற்றுண் மின்னு மேவுசீரென்னும் இரண்டனுனும் முதனிலத்து இரண்டுநிலங் களைந்து பெற்றதொடை நூற்றெழுபத்தொன்பதாம். இனிக், கலிப்பாவினுள் நேர்முதற்சீர் பன்னிரண்டாகப் பெருகியநிலத்து ஒரோவொன்று களையப்பெற்றதொடை நாற்பத்தெட்டும் நிரைமுதற்சீர் பன்னிரண்டுஞ் சுருங்கிய நிலத்து ஒரோவொன்று களையப் பெற்றதொடை நாற்பத்தெட்டுமாகக் கலிப்பாவிற் குரியதொடை தொண்ணூற்றாறும். ஆக மூன்றுபாவினும் பெற்ற ஒரூஉத்தொடை ஐஞ்ஞூற்றிருபத்தெட்டாம்.

கிளையொரூஉவும் இவ்வாறே ஐஞ்ஞூற்றிருபத்தெட்டாகவும், அவற்றுமேல் மின்னு மேவுசீரென்னும் இரண்டும் வெண்பாவினுள் உறழ்ந்த முதனிலையிரண்டுங் களையாதுகொள்ளக் கிளையொரூஉத்தொடை ஐஞ்ஞூற்றுமுப்பதாம். ஆகவொரூஉத்தொடை இரண்டனும் ஆயிரத்தைம்பத்தெட்டாம்.

'நேராதி யாதி நிலத்தொன்ப தொன்பதா - மீரைந்தா மாசிரியத் திற்று நிரையாதி - யாக விருநூற்றைம் பத்துமூன் றாமாதி - நேர்புகா மூன்றனையு நீத்து." எனவும் "மேவுசீர் மின்னுச்குண் முன்னை நிலத் தோரோவொன் - றாகா தொரூஉவெள்ளைக் காதலா - னவை - நூற்றெழுபத் தொன்பதா நோக்கு" எனவும் "முன்பினின்ற நேரா நிரையாதி துள்ளற்கோ - ரொன்றொழியத் தொண்ணூற்றா றாகுங் கிளைவெள்ளைக் - கொன்றா யிரண்டா றொரூஉவிரண்டு மாயிரத் -

தைம்பான்மே லெட்டா மவை." எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

மேலைப் பொழிப்பிரண்டு முற்றிரண்டு இயைபிரண்டுமென விகற்பதொடை ஆறனுனும் பெறறதொடை இரண்டாயிரத்தைஞ் ஞூற்றிருபத்தொன்று. இவை ஆறுதொடையும் ஓரடிக்கண்ணே வருதலிற் றனை வழுவப்பட்டனவென்று களையும் நிலமிலவென்பது.

இன்னும் புலவராறென்றதனற் தொடையந்தாதியும் விட்டிசையும் ஒரோவொன்று இரண்டாகி அசையந்தாதியுஞ் சீரந்தாதியும் விட்டிசைத்தொடையுங் குறிப்புவிட்டிசையுமென நான்காம். ஓரடியுள் இறுதிச்சீருள் ஈறறசையும் விட்டிசையும் மற்றையடியின் முதற்சீரின் முதலசையும் ஒன்றத் தொடுப்பது இசையந்தாதி. அவை தொடுக்குங்காற் கட்டளையடிக்கண் உரியசைச்சீரினை அசையெனக் கொள்ளற்க. இவை பிறசொப்பாற்படுத்துத் தளைகோடலின் அடியிறுதிக்கட் கடியாறு மழகளிறென வந்தவழி, ஆறு களிறு என்னும் இரணடுரியசையும் நிரையசையாக இயற்றப்பட்டன. ஆயினும் இயற்கை நிரையசையோடு தொடுக்கப்படா ; இரண்டசையும் ஒருசொல்லாயினன்றே அந்தாதியாகாமையினென்பது. இறுதிச்சீர் முதற்சீரொடு சேரிற் சீரந்தாதியாம். உதாரணம். "குன்றச் சாரற் குதித்தன கோண்மா - மாவென மதர்த்தன கொடிச்சி வாண்கண்" என்பது அசையந்தாதி. "தரைபூஞ் சாரற் றழூத்த முல்லை - முல்லை சான்ற கற்பி னல்லோா" என்பது சீரந்தாதி. இது கட்டளையடிக்கண் வருங்கால் அசையந்தாதி முந்நூற்றிருபத்தைந்தாம்.

அவை ஆசிரியத்துள் இரண்டு நேர்பசைச்சீர்க்கும் ஒரெழுத்துத் தேமா விறகுதி எலாமையின் ஒழிந்த நேர்முதற்சீர் பதினென்றும் உறழ்ந்த அடி நூற்றுமுப்பத்திரண்டனுள் ஒருசீர்க்கு முதனிலத்தொன்றும் இறுதிநிலத்தொன்றுமென இவ்விரண்டானும் முதனிலமிரண்டும் இறுதிநிலமொன்றுமென மும்மூன்றாக முப்பத்துமூன்றகற்றி ஒரோசீர்க்கு ஒன்பதொன்பதாகப் பெற்றதொடை தொண்ணூற்றொன்பது. இனி நிரைமுதற்சீருள் நிரையசைச்சீரிரண்டும் ஒழித்து ஒழிந்த பதின்மூன்றும் உறழ்ந்த அடி நூற்றுமுப்பத்திரண்டனுள் முதனிலத்தொன்றுவன இவ்விரண்டாக இருபத்திரண்டுநிலங்களைய ஒவ்வொன்று பத்தாகப் பெற்ற தொடை நூற்றொருபதாக ஆசிரியத்துள் அசையந்தாதி இருநூற்றொன்பதாயின.

வெண்பாவினுள் அசையந்தாதி வருங்கால் நேர்பசைச்சீரிரண்டும் ஓரெழுத்துத் தேமாவும் நிரைமுதற்சீர் பதின்மூன்றுமெ

ணப் பதினைறொழித்து ஒழிந்த நேர்முதற்சீர் பதினொன்றும் உறழ்ந்த அடி எழுபத்தெட்டனுள் ஒரோவோர்சீர்க்கு இரண்டாக முதனிலந்தோறுங் களைந்தவழி இருபத்திரண்டொழித்துப் பெற்ற வெண்டொடை ஐம்பத்தாறும்.

கலிப்பாவினுள் நிரைமுதற்சீர் ஒழித்து ஒழிந்த நேர்முதற்சீர் பன்னிரண்டனுனுந் தொடை அறுபதாம். ஆக மூன்றுபாவிற்கும் அசையந்தாதி முந்நூற்றிருபத்தைந்தாயினவாறு கண்டுகொள்க. "நேர்பசைச்சீர் நுந்தையொழித் தேனைப் பதினொரு - நேராதி முன்பினிரண் டொன்றகற்றிச் - சீராக- நீங்கிய வாறாக நிரைமுதல் பத்தாக - வீங்கிரு நூற்றொருப தென்" எனவும் "நேர்முத லொன்பதியற்சீ ருரிவெண்சீ - ராகியினி யிவ்விரண் டாங்கொழிப்ப - நேரொடு - வெண்பாசீ நுந்தை நிரைமுதல் வீழ்த்தசை - யந்தாதி யைம்பத்தா றும்" எனவும் "நேரசை யந்தாதி யன்றிக கலிக்கியையா வாகலி னுங்கறுப தாம்." எனவும் "அவ்வகை யந்தாதி முந்நூற் றிருபத்தைந் - திவ்வகை முப்பாற் கியற்று." எனவும் இவ்வுரைச்சூத்திரங்களான் அசையந்தாதி முந்நூற்றிருபத்தைந்தும் ஆயினவாறு அறிந்துகொள்க.

இனிச்சீரந்தாதி நூற்றறுபத்துநான்கு. அவை ஆசிரியத்து வருங்கால் நேர்பசைச்சீரிரண்டுந் தேமாவிரண்டுமென நான்கனுனுந் தத்தம முதனிலந்தொடங்கி ஒரோவொன்று அவ்வாறாக நாலாறிருபத்து நான்காம். இனி நிரைமுதற் சீருள் நிரைபசைச்சீ ரிரண்டும் புளிமாவு மென மூன்றொழித்து ஒழிந்த பத்துச்சீரானும் வருங்கால் அவை உறழ்ந்த அடி பன்னிரண்டனுள்ள் முதனிலமூன்றும் பெருகிய நிலத்திரண்டுமாக வைத்தது ஒழித்து ஒரோவொன்று எவ்வேழாக எழுபதாம். அகவற்றொடை தொண்ணூற்று நான்காம்.

இனி வெண்பாவினுள் வருங்கால் நேர்பசைச்சீரிரண்டுந் தேமாவிரண்டும் நிரைமுதல் வெண்சீரிரண்டும் நிரைமுதல் நிரையீறாகவிற் கணவிரி எட்டுமாகச் சீர் பதினன்கும் ஒழித்து ஒழிந்த சீர் பதின்மூன்றனுனும் பெற்ற அடி தொண்ணூறும். அவற்றுள் வரகும் அரவும் புளிமாவும் என்னும் மூன்றும் பெற்ற அடி பத்தொன்பதாகலின் அவற்றுள் வரகிற்குப் பெருகியநிலத்து மூன்றும், அரவும் புளிமாவுஞ் சுருங்கிய நிலத்தும் பெருகியநிலத்தும் ஒரோவொன்றாக நான்குமாக எழுமொழித்து ஒரோவொன்று நான்காகப்பெற்ற அடிபன்னிரண்டாம், காருருமு மாவருவாய் என்னும் இரண்டனுனும்

பெற்ற அடி பன்னிரண்டனுள் முதனிலத்து மும்மூன்றாக ஆறெழுத்துப்பெற்றதொடை இருமூன்றாம். பாதிரியேழும் மாசெல்வாயுமென எட்டனும் பெற்ற அடி ஐம்பத்தொன்பதாகலின் அவற்றுள் ஈரெழுத்துப்பாதிரி மூன்றுஞ் சுருங்கிய நிலத்து ஒரோவொன்றும் பெருகியநிலத்து இவ்விரண்டுமாக மும்மூன்றொன்பதும், ஒழிந்த மூவெழுத்துப்பாதிரி நான்கும் மாசெல்வாயுமென ஐந்துஞ் சுருங்கியநிலத்து இவ்விரண்டாகப் பத்துமெனப், பத்தொன்பதுங் களைந்து பெற்ற தொடை நாற்பதாமெனக் கொள்க. ஆகக் களையும் நிலம் முப்பதிரண்டு ஒழித்து ஒழிந்ததொடை வெண்பாவிற்கு ஐம்பத்தெட்டாயின.

இனிக் கலிப்பாவினுள் வெண்சீர் நான்கனும் பெற்ற அடி இருபஃதாகலின் அவற்றுள் மாசெல்வாய் உறழ்ந்த அடி ஐந்தினும் ஏறியநிலத்திரண்டும் புலிவருவாய் உறழ்ந்த அடி ஐந்தினுஞ் சுருங்கிய நிலத்திரண்டும் ஒழிந்த மாவருவாய் புலிசெல்வாய்கள் இரண்டுமே முன்னும் பின்னும் ஒரோவொன்றாக நான்காகும்; ஆக எட்டுக்களைய ஒரோவொன்று மும்மூன்றாகப் பெற்றதொடை பன்னிரண்டாம், ஆக மூன்றுபாவிற்குஞ் சீரந்தாதி நூற்றறுபத்துநான்காம்.

"வண்டொன்று நேரமா விரண்டு வலியதுபின் - னொன்றெ டச்சீரந்தாதிக் கேழாம் - நேராதி - பதுமம் புளியா வரகிரண்டும் வெள்ளைக்கா - மொத்த கலிக்குரிச்சீர் நான்கு" எனவும், "நிரைநிரை பத்தெவ்வேழா மூன்று மிரண்டு - முதனில னீக்கிமூன் றாக - வக வலி - னேராதி நான்கு மெழுவாய் நிலந்தொடங்கி - யாறுகு மந்தாதிச் சீர்" எனவும் "ஆக வகவற்சீரந்தாதி - நால்வகை யாக நவிற்று." எனவும், "வரகு பெருநிலத்து மூன்றகற்றி மற்றை - யரவு புளிமா வரகிரண்டு மாற்றி - முதனிலத்துக் காருருமு மாவருவாய் மும்மூன் - றெனவுரை யந்தாதிக் கீண்டு." எனவும். "ஈரெழுத்துப் பாதிரி மூன் றீரருகு மோரிரண்டாய் - மூவெழுத்துப் பாதிரிக்கு முன்னிரண்டாய் - மாசெல்வா - யொன்றற்கு மவ்வா றொழித்துரைப்ப நாற்பஃதாம் - வெண்டொடைச்சீரந்தாதி வேறு." எனவும் "விரித்தசீரந்தாதி வெண்டொடை யைம்ப - தெனப்படு மெட்டுமே விட்டு" எனவும் "மாசெல்வா யீற்றும் புலிவருவாய் மற்றிடத்து - மேனை யிரண்டு மிரண்டிடத்து - மாக - விரண்டிரண்டு நீக்கிச்சீரந்தாதி துள்ளற் - கமைந்த தொடைநான்மூன் றாம்." எனவும் "பாத்தோறும் வந்தசீரந்தாதி பாற்படுப்ப - நூற்றோ டறுபத்து நான்கு" எனவும் இவ்வாற்றானே சீரந்தாதியா மாறுணைத்துக் கொள்க. "அந்தாதி யோரிரண்டுமாகத் தொடைநானூற் - றெண்பான்மே லொன்பா னெனல்."

இனி விட்டிசைத்தொடை கூறுங்கால் எழுத்தினானும் எழுத்தில் ஓசையானும் விட்டிசைத்தல் இருவகைப்படும். "அ உ மறியா மறிவி லிடைமகனே - நொஅலைய னின்னாட்டை நீ." என்பதெழுத்தினானாகியது. விட்டிசையின் இறுதியடி வல்லொற்றடுப்பின் விட்டிசை வல்லொற்றெதுகையென்பாரும் உளர். ஆண்டு வல்லொற்றெதுகை யாமாறுகாமையின் அது வேண்டுவதன்று. வேண்டினும் விட்டிசையெனவே அடங்குமென்பது. "தளன்று தாமிசைப்ப தாகியே தண்ணுமைகேட் - டௌன் றெழுந்தார் பலர்." என்பது குறிப்புவிட்டிசை. இவை கட்டளையடிக்கண் வருங்கால் ஒரோவொன்று நூற்றறுபத்து நான்காகி முந்நூற்றிருபத்தெட்டாம். அவை வருங்கால் நேபசைச் சீரிரண்டும் ஓரெழுத்துத் தேமாவும் போதுபூவிரண்டும் ஒழித்தொழிந்த தேமாவும் பாதிரியிரண்டும் ஒன்றிக் கலிப்பாவிற்குத் தொடை நாற்பஃதாகவும் இரண்டு விட்டிசையுந் தொகுப்பப் பூமருதிரண்டும் நேர்முதல் வெண்சீரிரண்டுமாக ஒன்பதுசீரும் பற்றி விட்டிசைக்குமெனவுங் கொள்க. அவற்றை அகவற்றொடை ஒரோவொன்றெழுபதாகவும் வெண்டொடை ஒரோவொன்றைம்பத்து நான்காகவுங் கலிப்பாவிற்குத் தொடை நாற்பஃதாகவும் இரண்டு விட்டிசையுந் தொகுப்பத் தொடை முந்நூற்றிருபத் தெட்டாயினவாறு கண்டுகொள்க. இவை ஆசிரியத்துப் பதினான்கும் வெண்பாவினுளொன்பதுமாக இருபத்துமூன்று நிலங்களைந்து பெற்றன.

"நேர்பிரண்டு நேர்பு முதலிய சீர்நான்கு - மோரெழுத்துத் தேமாவும் விட்டிசைக் கொன்றாவா - மேனை நிரைமுதற் சீர்களு மிவ்வாறே - யாகா தனவென் றறி." எனவும், "அகவற்கேழ் சோராதி யொன்பதும்வெண் பாவிற் - குளவென் றுரைக்கப் படும்." எனவும் "வெள்ளையு ளொன்ப தகவலி னீரேழாய்க் - கொள்ள விருபத்து மூன்றாகுந் - துள்ளலுட் - போரேறு பாதிரி பூமருது மாசெல்வாய் - மாவருவா யெட்டும் வரும்." எனவும் "அகவற் கெழுபதா மைம்பத்து நான்கா - நிகரற்ற வெள்ளைக்குத் துள்ளல் - புகரற்ற - நாற்பதாய் விட்டிசை நூற்றறு பத்துநான் - கேற்பதா மோரொன் றெனல்." எனவும். "இருவிட் டிசைமுந்நூற் றேரொருபத் தெட்டா - வருவித்துக் கோடல் வழக்கு." எனவும் இவற்றைப் பதநெகிழ்த்துணைக்க. "விகற்பமா றந்தாதி விட்டிசைநான் கேற்றி - யிசைத்தவீ ரைந்து தொடையாற் - றொடைத்தொகை - மூவா யிரத்தோடு முந்நூற்று முப்பத்தாறுமா றறிந்து கொளல்." "இருபத் திரண்டு மிவைபத்து மாக - வருவித்தமுப்பத் திரண்டா - ஞெ(?)பத்தின் - மூவா யிரத்தொரு நூற்றை

ம்பத் தாறைந்நூற் - றேடோனாம் பத்திரண் டேடற்று" எனவிவை உ ணாச் சூத்திரம். ஆகத்தொடை மூப்பத்திரண்டனுற்பெற்றன பதின் மூவாயிரத் தெழுநூற்றெட்டு. (௯௧)

சகஉ. சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற்
சொல்லியற் புலவரது செந்தொடை யென்ப.

இது மேற் செந்தொடையாமெனக் கூறியதுணர்த்துகின்ற து. எய்தாததெய்துவித்ததூஉமாம். (இ - ள்.) மேற்கூறப்பட்ட தொடை எல்லாவற்றோடும் ஒவ்வாது வரின் அதனை இயற்கைச் சொல்லாற் செய்யுள் செய்யும் புலவரது செந்தொடையென்று சொ ல்லுப ஆசிரியர். எ - று. எனவே, விகாரப்படச் செய்யுள் செய்யுஞ் செந்தொடை இன்றுதென்றானும். அது "இருங்கழி மலர்ந்த வள் ளிதழ் நீலம் - புலாஅஅறு மறுகிற் சிறுகுடிப் பாக்கத்தின் - மீன்வே ட்டுவர் ஞாழலொடு மலையு - மெல்லம் புலம்ப நெகிழ்ந்தன தோளே." எனவும் "செயிரறு முகந்துறை பிதிரப் படுதிரைப் - பராரைப் புன்னை வாங்குசினை தேம்ப." எனவும் வரும். "பூத்த வேங்கை வியன் சினை யேறி - மயிலின மகவு நாட - னன்னுதற் கொடிச்சி மனத்த கத் தோனே" என்பதும் அது. இயலினென்றதனான் இரண்டடி யாற் றொடை பெற்று நின்று இரண்டடியெதுகையாகியவை தம் மூட் டொடுக்குங்காற் செவ்வனதொடுப்பினும அதனைச் செந்தொடை யென்றது இரண்டடியெதுகையென்றும் இனி ஓரடி இடையிட் டுத்தொடுத்தவழியுந் தொடர்ந்த அடி இரண்டுஞ் செந்தொடை யாமாயினும் மூன்றாமடி எதுகைபடத் தொடுத்தன் மாத்திரை யானே அதனை இடையிட்டெதுகையென்றுங் கொள்ளப்படும், என்னை? அவ்வெதுகை ஆண்டுச் சிறந்தமையினென்பது. அவை முன்னர்க்காட்டுதும்.

"முன்பொழுது முன்சொல்லுந் தூரியமா மங்கிலையே - பின் பொழுது பின்செல்லு நெய்தலா - னன்பிலவே - கொல்யானை வேகப் போர்க் கோற்கோதை மாறேற்ற - பல்யானை மன்னர் பறை" என வரும். இஃது இவ்விரண்டடிகளது கூட்டத்துக் கண்ணன்றி வாரா வாயினுங் கட்டளையடிச்கு அகப்பட்டு தொடையோடுங் கூறினர். கட் டளையடிக்கண் வருந் தொடையே சிறந்தனவென்று கொள்ளினுங் கொள்ளற்கவென்பான் ஒழிந்த தொடையுள்ளுமென்று கூட்டித்தொ டைகூறினுனென்பது. இனிச்செந்தொடை கட்டளையடிக்கட் தொ டையாங்கால் ஓரெழுத்துத்தேமா ஒழிந்து ஒழிந்த சீரெல்லாவற்றினு

ம் வருமென்பது. இம்மூவகை அடியினானும் பெற்ற தொடையெல்லா ந் தொகுப்பத் தொடை ஐஞ்ஞூற்றுநாற்பத்தொன்பதாம். அவற்றொ டும் இரண்டடியெதுகை இரண்டும் இடையீடுங் கூட்டத் தொடை ஐஞ்ஞூற்றைம்பத்திரண்டாம். "நந்தையில் செந்தொடை யைஞ் ஞூற்று நாற்பான்மே- லொன்பானை யோரிடையிட் டோரிரட்டி -வ ந்த வெதுகை யிரண்டென வைத்தைஞ்ஞூற் - றைம்பத் திரண்டென் றறி." என்பதுவாச்சூத்திரம். ஆக முப்பத்துமூன்று தொடையும் அ றுநூற்றிருபத்தைந்து அடியுட் களைவன களைந்து பெற்றதொடைவிரி யெல்லாந் தொகுப்பப் பெற்ற தொடை பதின்மூவாயிரத்தெழுநூற் றைந்துடன் இரண்டடியெதுகை யிரண்டும் இடையீடொன்றுங் கூட் டத் தொடை பதின்மூவாயிரத் தெழுநூற் றெட்டாயினவாறு கண்டு கொள்க. "தொடையின் பகுதி முழுவதூஉஞ் சொன்மற் - றடியி னறுநூற் றிருபத்தைந் தாயி - னடிய திலக்கண மாமதுவென் றஞ்சிப் பிறதொடைமூன் றேற்றினர் பின்" இவ்வாறு தொடை கூறப்பட் ட தொடைப்பகுதியெல்லாம் அவ்வச்சூத்திரங்கடோறும் எடுத்தோ தாது கட்டளையடிக்கும் அல்லாவடிக்கும் பொதுவகையாற் கூறி வந் தானாசிரியனாயினும் "மெய்பெறு மரபிற் றொடைவகை" என்னுந் தொ டைச் சூத்திரத்திற்கேற்பதாம். அவற்றை அவ்வச்சூத்திரங்களுட் போலக் கூறிவந்ததாமென்றது. முறகூறிய முப்பத்து மூன்று தொ டையினையும் அறுநூற்றிருபத்தைந்தடியோடு மாறியக்கால் இருபதி னாயிரத் தறுநூற்றிருபத்தைந்து தொடையாகற்பாலனவாம். அன்ன வை தொடைக்குந் தளைக்குமாகாதன களைந்து கொள்ளப் பதின்மூ வாயிரத் தெழுநூற்றைந்தாயினவென்பது. ஆறாயிரத்துத் தொள்ளா யிரத் திருபது நிலங்களையப்பட்டன. இங்ஙனம் இவைகளைந்து பெற்ற தொடையோடும் இரண்டடியெதுகை இரண்டும் இடையீடொன்றுங் கூட்டத் தொடை பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டாயின. (௪00)

௪௧௩. மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூற்
றொன் பஃதென்ப வுணர்ந்திசி னோரே.

இது மேற்கூறிய தொடையுள் ஒருசிரான்வரையறையுடை மையின் அவற்றை அடிக்கட்போலத் தொகுத்தோதுகின்றது. விரி த்ததூஉந் தொகுத்ததூஉமாம். என்னை? கட்டளையடியோடுபட்ட தொடைவிகற்பம் முற்கூறிய சூத்திரங்களுட் பெற்றமையானும் அ

வற்றையும் ஈண்டுத் தொகுத்துக்கூறினமையாலுமென்பது. (இ-ள்.) மெய்பெறு மரபிற் றொடைவகை = கேட்டார்க்குத் தொடைப்பாடு வெளிப்படும் இலக்கணத்தவாகிய தொடைக்கூறுபாடு: தாமே என்பது பிரித்துச்கூறியவாறு ; ஐயீராயிரத்தாறைஞ்ஞூற்றுடு = பதின் மூவாயிரத்தோடு: தொண்டுதலையிட்ட பத்துச்குறை எழுநூற்றொன்பஃது = எழுநூற்றெட்டு. எ-று. தொடைப்பகுதி பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டென்று சொல்லுப ஆசிரியரென்பது இதன்பொழிப்பு. மெய்பெறுமரபினிவையெனவே, விளங்கத்தோன்றாதனவுந் தொடையுளவென்பதாம். அவை இணை கூழை மேற்கதுவாய் கீழ்க் கதுவாய் கடையிணை கடைக்கூழை இடைப்புணர்ப்பின எனச்சொல் லுப. பிறவும் வேறுபடுத்துக் கூறுவார் கூறுவனவெல்லாம் இதனானே தழீஇக்கொள்ளப்படுமென்பது. தொடைவகையென்பது கட்டளையடி யோடு வருமெனப்பட்ட மூப்பத்துமூன்று தொடையும் பிறவாற்றான் வருமெனப்பட்ட இரண்டடியெதுகையென இருகூற்றனவுமென்ற வாறு. ஐயீராயிரத்தாறைந்நூற்றுடு என்பது உம்மைத்தொகை. தொண்டு தலையிட்ட என்பது ஒன்பானையகப்படும் மொழியாகவுடை யவென்றவாறு. அது செய்தவென்னும் பெயரெச்சமாகலின் எழு நூற்றொன்பதென்னும் பெயர்கொண்டு முடியும். எனவே எழுநூ ற்றொருபத்தெட்டாமென்றஞ்சிப் பத்துக்குறை எழுநூற்றொன்பது என்றானென்பது. எனவே, ஆண்டு நின்ற ஒன்பானோடுந் தொ ண்டுதலையிட்ட ஒன்பானையுங் கூட்ட எழுநூற்றெட்டாயினவென் பது. அஃதே கருத்தெனின், பதின்மூ வாயிரத் தெழுநூற் றெட்டெ ன-மொழியப் பட்டன தொடைநெறி வகையே என அமையும் ; இவ் வாறு அரிதும் பெரிதுமாகச் சூத்திரஞ்செய்ததென்னையெனின், அங்ஙனமே அதனை ஞாபகப்படச் செய்தான் ஆசிரியன் ஒருகார ணம் நோக்கி. என்னை? இத்தொடைகளை அடியொடுமொறுங்காற் கு றைக்கப்படுவன உளவென்பதூஉம் அவை தொண்டு தலையிட்ட ஐ ந்துபத்தளவும் ஆறுமுதலாகக் களையப்படுமென்பதூஉங் கோடற்கென் பது. ஒன்பதென்று இருகாற்சொல்லிய வதனான் அங்ஙனங் குறைக் கப்படு நிலங்கள் ஒன்பது பகுதியவாமெனக் கொள்க. அவையா வன, ஐம்பத்தொன்பது ஐம்பத்தாறு நாற்பத்தைந்து நாற்பது முப்பத் தொன்பது முப்பத்திரண்டு முப்பத்தொன்று இருபத்துமூன்று ஆறு என ஒன்பதுபகுதியாற் குறைவனவாயின. இங்ஙனம் ஐம்பத்தொன் பது நிலத்தினவாகலாற் தொண்டுதலையிட்ட பத்தென்றானெனவும் ஒ ன்பதுந் தொண்டுமென இருகாற் கூறியவதனான் அங்ஙனங் களையுநில ம் ஒன்பஃதெனவுங் கொள்ளப்பட்டது. “பாயபதினொ யிரமென் றில

ளையீ-ராயிர மென்று ளதனுனுர் - தூயதன்றிப் - பத்துங் குறைத்த ப யத்தாலும் ஒன்பதென் - றுய்த்துக் கொளற்பாற் றொருங்கு" என வும் "ஓரொன்ப தேற்றியு மோரொன்ப திட்டொாத்து - மீரொன் பதுமிகுத்தா னிங்கிவற்று - ளோரொன்ப - தைம்பான்மே லேறவு மைந்தந்த மாய்க்குறைத - லொன்பான் வகைத்தென்று மோர் ந்து" எனவும் "ஆறென்றுன் மூவா யிரமென்று தாங்கதனு - லாறந் த மாங்குறையு மாறு" எனவும் "ஐம்பத்தொன் பானேழெட் டை யொன் பதுநாற்பஃ - தொன்பா னுடைமுப்பஃ தெண்ணூன்கு முப்பத் தொன் - றென்பா னிருபத்து மூன்று றெனக்குறைப்பு - வொன்பான் பகுதி யுள" எனவும் இவ்வுரைச் சூத்திரங்களான் அவை குறைக்கப்படு மாறறிந்து குறைக்க. இவற்றுள் ஒன்பது நிலங் கழியப்படும் மோனை முதலாயின தொடை ஐந்தற்கும் ஓரெழுத்துத்தேமா உரித்தென்றிரா யின், அதனை நுந்தை நுந்தையென்று இருகாற் தொடுக்கவேண்டும், தொடுத்தவழி அடிமோனையுந் தலையாகெதுகையும் அடியெதுகையும் மூன்றுமெழுத்தொன்றெதுகையுமென நான்கு தொடை பெறப்படு மாகலின், அவற்றுள் அதனை என்ன தொடையென்றுமோவெனின், செய்யுள் செய்த ஆசிரியன் பலதொடைப்படச்செய்து வைத்தவழி, அவற்றுட் சிலகளைந்து ஒன்று கோடற்குக் காரணமின்மை யின் அவையனைத்துங் கோடுமென்பது. அல்லாதார் முதனின்ற தொடையேகொண்டொழிகவென்ப. அதுகுற்றம். என்னை? "செ ங்காற் பைந்தினை யிதண மேறிப் - பைங்காற் சிறுகிளி கடிவோ டந்தை" என்றவழி எதுகையும் முரணும் வந்தவழி இவற்றுண் முதற்கண் இன்னதொடை இறுதிக்கண் இன்னதொடையென்று துணியலாகாமையின் அது நிரம்பாதாகலான் அது வந்ததொடை யெல்லாவாற்றானும் விரித்துத் தொடைகூறுதல் அமையுமென்பது. என்போலவோவெனின் எழுத்தும் அசையுஞ் சீரும் அடியும் அ ங்ஙனம் முதல் வந்ததனுன் எண்ணுந் தொகையும் பெயருங்கொடு த்து வழங்காதவாறு போலவென்பது. அல்லதூஉந், தொடைகளெ ல்லாந் தம்மையுணரும் மாத்திரையானே தனித்தனிவருதல் இலக் கணமென்பதூஉம் இல்லையென உணர்க. என்னை? பல உறுப்பு க்கொண்டதோர் செய்யுளென்றமையின். இனி, ஓரெழுத்துத் தேமா முதற்கணிற்ப அடியிறுதிக்கண்ணும் இயைபு வருதலின் அச்சீர் நின்றுறழ்ந்த அடிக்கண் இயைபுவருதற்கு ஆராய்ச்சியின்றெ ன்பது. ஒழிந்த தொடைக்குரியவல்லவெனப்பட்டசீருள் அவை வா ராமையும், உரியவெனப்பட்டு அவற்றுள் அவைவருமாறும் முறையிற் கொண்டு உதாரணங் கண்டுகொள்க. இனி, இக்காலத்துள் ஆசிரிய

ருள் ஒருசாரார் தொண்டுதலையிட்ட பத்துச்குறை யெழுநூற்றொன்றுமெனப் பாடந்திரிப்பாரும் இன்னொருசாரார் எழுநூற்றொன்றுமென்ப பாடந்திரிப்பாரும் உளர். ஒருபகுதியார் ஒன்றுமென்பன முற்றுவினையென்ப. மெய்பெறுமரபிற் றொடைவகை பத்துக்குறை யெழுநூறென்னும் எண்ணினோடு ஒன்றுமெனக்கூட்டுப. பதின்மூவாயிரத்தறுநூற்றுத்தொண்ணூற்றொன்பது என்பது அவர்கருத்து. ஒன்றுமென்பதனை எண்ணுப்பெயர் முற்றுமைப்படுத்ததென்பாரும் அதுவே கூறுப. அவரறியார். அவ்வாறு சூத்திரஞ் செய்வது ஆசிரியர் கருத்தன்று. அல்லதூஉம் ஒன்பதென்ப வுணர்ந்திசினோரே என்பது பழம்பாடமாகலானும் அஃதமையாதென்பது. அவ்வாறுகொள்வார்க்குந் தொடை பதின்மூவாயிரத்தறுநூற்றுத்தொண்ணூற்றொன்பதாகலும் பிழைக்குமெனமறுக்க. என்னை? அறுநூற்றிருபத்தைந்தடியினையுந் தமக்குப்பொருந்துமாற்றான் இருபத்திரண்டு தொடையோடும் பெருக்குங்கால் அவர்க்கும் ஓரடிக்கண்ணே தொடைகோடல்வேண்டுமாகலானும் அங்ஙனங் கொள்ள இரட்டைத்தொடை முதலாயின அறுநூற்றிருபத்தைந்தாகாமையானுமென்பது. (௪0௯)

௪௧௪. தெரிந்தனர் விரிப்பின் வரம்பில பல்கும்.

இது மேற்கூறிய தொடைக்காவதோர் புறனடை. (இ-ள்.) அறுநூற்றிருபத்தைந்து அடியோடு மாறிப்பெற்ற தொடை பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டெனப்பட்டன. மேலினி அவ்வடி ஒன்றன்கண்ணேயன்றி ஒன்றிநிற்ப நின்றவடி அறுநூற்றிருபத்துநான்கனையுந் தந்து தந்து தடுமாற வந்து தோன்றுந் தொடைவிகற்பமும் இருசீரடிமுதலாக எண்சீரடியீறாகக் கிடந்த அடிவேறுபாட்டின்கணெல்லாம் இத்தொடைகளைக்கூட்டவும் பிறவிகற்பத்தொடைகளைக் கூட்டவும் வருந் தொடைப்பகுதி வரையறையின்றிப் பலவாம். எ-று. வரையறை உடையனவற்றுக்கன்றி வரையறைகூறுதல் பயமின்றாகலின் ஒழிந்த விகற்பமெல்லாங் கூறியநிலங் கூறிற்றிலனென்பதூஉம் "மெய்பெறு மரபிற் றொடைவகை" எனப்பட்டன வரையறையுடைமையின் அதுகூறினனென்பதூஉஞ் சொல்லினான் இச்சூத்திரத்தானென்பது.

இனி ஐந்துதொடை விகற்பத்தொடை பலவற்றோடுங் கூட்டவும் பிறவாற்றான் விரிப்பவும் வரம்பிலவாமென்பாருமுளர். அவை எவ்வாறு விரிப்பினும் வரம்பிலவல்லவெனமறுக்க. வரம்பிலவென்பது வரையறை கூறப்படாவென மேலுரைத்ததே உரை. (௪0௨)

சகடு. தொடைவகை நிலையே யாங்கென மொழிப.

இதுவுமது. மேல் ஒருசாரான் வரையறையுடைமையிற் கூறப்பட்டனவென்புழி ஒழிந்தன வரையறையின்மையிற் கூறப்படாதெனவுங் கூறினுனேக் கண்ட மாணுக்கன் வரம்பில்லன தொடுக்கப்படாகொல்லென ஐயுற்றுனை அவையுந் தொடுக்கப்படுங் கண்டாயெனக் கூறினமையின் ஐயம் அறுத்ததெனவும் அமையும். (இ - ள்.) தொடையது பகுதி வழக்கே அவ்விரண்டுமென்ப. எ-று. எனவே, அப்பகுதியுளொன்று தெரித்திலமென்பது இதன்கருத்து. ஆய்கென்றதனான் மேற்பகுத்த இரண்டிடமுங் கொள்க. (௧௦௬)

சகசு. மாத்திரை முதலா வடிநிலை காறு
நோக்குதற் காரண நோக்கெனப் படுமே.

நிறுத்தமுறையானே நோக்குணர்த்துகின்றது. நாற்சொல் வழக்கினைப் பாவிற்படுப்பது மரபென்றான். எனவே, ஆண்டு நோக்கியுணரப்படுவதொன்றின்றிச் செய்யுளுள்ளும் வழக்கியல்பினவாகி வெள்ளைமையுமாய்க் காட்டுவனவாயின. அவ்வாறன்றி நோக்கென்பதோர் உறுப்புப்பெறினே அது செய்யுளாவதாகலான் அதுகூறுகின்றானென்பது. (இ - ள்.) மாத்திரையும் எழுத்தும் அசைநிலையுஞ் சீரும் முதலாக அடிநிரம்புந்தொடையும் நோக்குடையவாகச் செய்தல் வன்மையாற் பெறப்படுவது நோக்கென்னும் உறுப்பாவது. எ-று. கேட்டார் மறித்துநோக்கிப் பயன்கொள்ளுங் கருவியை நோக்குதற் காரணமென்றானென்பது. அடிநிலைகாறுமென்பது ஓரடிக்கண்ணேயன்றியுஞ் செய்யுள் வந்த அடி எத்துணையாயினும் அவைமுடிகாறுமென்றவாறு. வரலாறு ;-"முல்லை வைந்நுதி தோன்ற வில்லமொடு பைங்காற் கொன்றை மென்பிணி * * * படர்ந்தே." எனவரும். இப்பாட்டின் ஓசைமுதலியனவெல்லாங் கேட்டாளை மீட்டுந்தன்னை நோக்கி நோக்கப் பயன்கொள்ள நிற்கும் நிலைமை தெரிந்துகொள்க. இனி, அடிநிலைகாறுமென்றதனாற் செய்யுண்முழுவதும் எவ்வகையுறுப்புங் கூட்டி நோக்கியுணருமாறுங் கூறுதும். முல்லையென்பது முதலாகக் கானமென்பதிறுக நாற்சொல்லியலான் யாப்பு வழிப்பட்டதாயினும் பருவங்காட்டி வற்புறுக்குந் தோழி பருவங் தொடங்கியதணையேகாணென்று வற்புறுத்தினுளென்பது நோக்கியுணரவைத்தானென்பது. "உதுக்காண் டோன்றுங் குறும்பொறைநாடன்" என்னுந்துணையுந் தலைமகனது காதன்மிகுதிகூறி வற்புறுத்தினுளென்பது நோக்கியுணரவைத்தான். ஒழிந்த அடிநிலைகாறும் பிரி

ந்தகாலம் அணித்தெனக் கூறி வற்புறுத்தினானென்பது நோக்கி யுணரவைத்தானெனப்படும். என்னை? முல்லையென்றது வைகறு தியென்றதனான் அவை அரும்பியது அணித்தென்பது பெறப்பட்டது. சின்னாள் கழியின் வைகறுதியாகாது மெல்லென்னுமாகலின் இல்லமுங் கொன்றையும் மெல்லென்ற பிணியவிழ்ந்தனவென்றான் முல்லைக்கொடி சரிந்தது துணை அவை முதல் கெடாது முல்லையரும்பிய காலத்து மலர்ந்தமையின். இரலை மருப்பினை இரும்பு திரித்தன்ன மருப்பென்றதூஉம் நீர்தோய்ந்தும் வெயிலுழந்த வெப்பந் தணிந்தில இரும்பு முறுக்கிவிட்டவழி வெப்பம் மாறுவிட்டவாறுபோல வெம்பாநின்றன பின்னுமென்றவாறு. "பரலவலடைய விரலை தெறிப்ப" எனவே பரல்பயிருழிதோறுந் தெளிந்துநின்ற நீர்க்கு விருந்தினமாகலாற் பலகாலும் நீர்பருகியும் அப்பரல் அவலினது அடைகளைவிடாது துள்ளுகின்றனவென அதுவும்பருவந் தொடங்கினமை கூறியவாறாயிற்று. "கருவி வானங் கதழுறை சிதறி" என்பதூஉம் பலவுறுப்புங் குறைபடாது தொக்குநின்ற மேகந் தனது வீக்கத்திடைக் காற்றெறியப்படுதலின் விளைந்து துளிசிதறினவென அவற்றையும் புதுமைகூறினான். எனவே, இவையெல்லாம் பருவந் தொடங்கியதென்றமையின் வற்புறுத்துதற்கு இனமாயிற்று. "குரங்குளைப் பொலிந்த கொய்சுவற்புரவி" என்பது கொய்யாத உளை பல்கியுங் கொய்த உளை பலகாலுங் கொய்யவேண்டுதலுமுடைய குதிரையென்றவாறு. எனவே, தனதுமனப் புகழ்ச்சி, கூறியவாறு. அத்துணை மிகுதியுடைய குதிரை பூட்டினவாரொலி விலக்காது மணியொலி விலக்கி வாராநின்றான் அங்ஙனம் மாட்சிமைப்பட்ட மான்றேரனுதலானென்றவாறு. அதற்கென்னை காரணமெனின் "துணையொடு வதியுந் தாதுண் பறவை" எனவே பிரிவஞ்சியென்றவாறு. மணிநாவொலி கேட்பின் வண்டு வெருவுமாகலின் அதுகேளாமை மணிநாவினை இயங்காமையாப்பித்த மாண்வினைத்தேரனுகி வாராநின்றானென இவையெல்லாந் தலைமகள் வன்புறைக்கேதுவாயின. "கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது - நெடும் பெருங் குன்றத்த மன்ற காந்தள்" தெய்வ மலை ஆகலான் அதனுண் மன்ற காந்தளைத் தெய்வப்பூவெனக் கூறி அவை போதவிழ்ந்தாற் போல அவர் புணர்ந்தகாலத்துப் புதுமணங் கமழ்ந்த நின்கைத்தொடிகள் அவை அரியவாகிப் பிரிந்தகாலத்துப் பொன்றுவடிவொத்து மணங் குறைபட்டதுணையேயால் அவர் பிரிந்துசெய்த தன்மையினென இதுவும் வன்புறைக்கே உறுப்பாயிற்று. இவ்வாறே பலவும் நோக்கி யுணர்தற்குக் கருவியாகிய சொல்லும் பொருளும் எல்லாம் மாத்திரை

முதலா அடிநிலைகாறுமென அடங்கச்கூறி நோக்குதற்காரணம் நோக்கென்றானென்பது. மாத்திரைமுதலாயினவும் தத்தம் இலக்கணத்திற் றிரியாது வந்தமையின் அவையும் அவ்விலக்கணம் அறிவார்க்கு நோக்கிப் பயன் கொள்ளுதற்கு உரியவாயினவாறு கண்டுகொள்க. எனப்படுமென்றதனான் இவ்வாறு முழுவதும் நோக்குதற்குச் சிறப்புடையவெனவும் இவையிடையிட்டு வந்தன சிறப்பிலவெனவுங் கொள்ளப்படும். பிறவும் அன்ன. (௧௦௪)

சகஎ. ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே.

நோக்கே பாவேயென நிறுத்தமுறையானே நோக்குணர்த்திப் பாவுணர்த்தியவெழுந்தான் அதனை இத்துணைப் பெயர்வேறுபாட்டதெனவும் பொருட்குரிமையவும் அடிக்குரிமையவுமாமாறுஞ் செய்யுட்கு வரையறைவகையான் உரியவாறும் ஒரோசெய்யுட்கண் ஒரோவுறுப்புப்பற்றி வருங்கால் அவ்வுறுப்புக்கள் இத்துணையடியவாகுமெனவும் எல்லாங் கூறுவான் தொடங்கினமையின் அவற்றுள் இது பெயர்வேறுபாடும் அஃது இனைத்தென விரியும் உணர்த்துகின்றது. இவ்வுறுப்பு வேறுபாட்டானே, உறுப்பியலாகிய செய்யுளும் இவ்வாறு பெயர்கொள்ள வைத்தானென்பது. (இ - ள்.) ஆசிரியப் பாவும் வஞ்சிப்பாவும் வெண்பாவுங் கலிப்பாவுமென நாற்கூற்றது பாக்களவற்றுவிரி. எ - று. வகையென்றதனான் உறுப்பாகிய செய்யுளின் வேறுபட நோக்கி உணரப்படும் இவ்வுறுப்பெனவும் இவற்றுள் வழக்கிற்குரியன செய்யுட்கு வந்தனவும் வழக்கிற்கேயுரியவாகிக் கூறுபடுவனவும் ஒன்றொன்றனோடு விராய்ப் பிறக்கும்பகுதியுமெல்லாங் கொள்ளப்படும். பாக்கூற்றுவிரி நான்கெனவே, பாவினை உறுப்பாகவுடைய செய்யுட்கு வரையறைகூறிற்றிலனென்பது பெற்றாம். என்னை? அவற்றுப் போதுங்கால் அவற்றது பெயர்வேறுபாடும் அச்சூத்திரங்களான் அறிதுமென்பது. என்றார்க்கு இவை நான்கேயன்றிப் பாவாமாறு கூறானோவெனின் இவையின்றித் தூக்குப் பிறவாமையின் இப்பாவிலக்கணமும் நோக்கோத்தினுட் கூறினுகலான் ஆண்டோதியவாறே அமையுமென்பது. இக்கருத்தேபற்றிப் "பாவென மொழியினுந் தூக்கினது பெயரே" என்றார் இந்நூலின் வழிநூல் செய்த ஆசிரியருமென்பது. உதாரணம்; "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை - யலங்குகுலை யீந்தின் சிலம்பிபொதி செங்காய் - துகில்பொதி பவள மேய்க்கு - மகில்படு கள்ளியங் காடிறந் தோரே" என்பது ஆசிரியப்பா உறுப்பாகி வந்த செய்யுள். "வஞ்சியில்புகழ்

வயங்குவெண்மீன் - றிசைதிரிந்து தெற்கெய்தினும்" என்பது வஞ்சிப்பா உறுப்பாகி வந்த செய்யுள். "வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்த்தனபோ - லேரிய வாயினு மென்செய்ய - கூரியவேற் - கோட்டியானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங் - கோட்டுமணங் கொள்ளா முலே." என்பது வெண்பாவுறுப்பு வந்த செய்யுள். "அரிதாயவறனெய்தி" என்பது கலிப்பாவுறுப்பு வந்தது. பிறவும் அன்ன. இவை இன்ன அடியான் வந்தனவென்பது எனனையறியுமாறெனின், அதுவன்றே தூக்குப் பயம்படுகின்ற இடமென்பது. மூன்றுபாவினை நாற்சீரானும் வஞ்சிப்பாவினை இருசீரானும் முச்சீரானுந் தூக்குக்கொண்டு இத்தூக்காமாறு உணர்ந்துகொள்க. ஆசிரியம் வெண்பாக் கலி வஞ்சியெனச் சிறப்புமுறையாற் கூறாததென்னையெனின், அது "முந்து மொழிந்ததன் றலைதடு மாற்றே" என்பாருமுளர். வஞ்சிப்பா முதற்கூறாமையின் அற்றன்றென்பது. மற்றென்னை கருதியதெனின் ஆசிரியம் வெண்பாவென்று ஓதினவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் உரிமையின் அவையேபோறலுஞ் சிறப்புடையவென்றுகொள்வானுயினும் அற்றன்று. இவை செய்யுளிலக்கணமாகலான் அவை நான்கும் ஒத்த இலக்கணத்த செய்யுளென்றற்கு இம்முறையான் ஓதினனென்பது. இனி ஒருசாரார் இந்நான்கனையும் ஒன்று மூன்றாக விகற்பித்துக் கூறுப. என்னை? ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை என்றாற்போல. அற்றன்று ; ஓரெழுத்துமுதல் ஐயெழுத்துச் சீரளவும் உயர்ந்த சீரான்வருஞ் செய்யுட்கு ஒன்று ஒன்றனின் வேறுபட்டொலிக்கும். அவ்வேறுபாடுதோறும் பாவேறுபடா. என்னை ? "எழுத்தளவெஞ்சினுஞ் சீர்நிலைதானே - குன்றலு மிகுதலு மில்லென மொழிப" என்றமையினென மறுக்க. அல்லதூஉம் அங்ஙனம் வேறுபாடுகொள்ளின் ஓரோவொன்று ஐந்தாகலுந் தூங்கலோசை ஆறும் ஏழுமாகலுமுடைய வென்பது. (கoறு)

சகஅ. அங்நிலை மருங்கி னறமுத லாகிய
மும்முதற் பொருட்கு முரிய வென்ப.

இது பாவினைப் பொருட்குரியவாற்றான் வரையறை கூறுவான் தொடங்கிப் பொருட்குரிமை பொதுவகையான் உணர்த்துகின்றது. இது பொருளதிகாரமாகலின் இங்ஙனங் கூறுகின்றான். (இ-ள்.) அங்நிலைமருங்கின் = அம் மேலைச்சூத்திரத்துத் தோற்றுவாய் செய்யப்பட்ட செய்யுளினிடத்து: அறமுதலாகிய மும்முதல் = அறம்பொருளின்பமென்பன : அறமுதற்பொருளெனவே அவையும் அவற்றது நிலையின்மையும் அடங்கும் ; பொருட்கும் உரியவென்ப = அப்பொருட்கெ

ல்லாம் உரிய நான்குபாவும். எ-று. அந்நிலைமருங்கினெனவே, அவை மும்முதற்பொருட்கு உரியவாங்காற் செய்யுளிடத்தன்றித் தாமாக உரிமை பூணாவென்பது. வீடென்பது செய்யுளுள் வாராதோவெனின் அறமுதலென்பது புறப்பாட்டெல்லையாகக் கூறினனென்பார் நான்குபொருளுந் தழீஇயுரைப்ப. இனியொருசாரார் மும்முதற் பொருட்கும் உரியவென்பதனை எச்சப்படுத்திக்கொள்ப. அற்றன்று, உலகிற பொருண்மூன்றனையுங் கூறுவான் அவற்றை மும்முதற் பொருளென்றான், அவையின்றி வீடுபெறுமாறுவேறின்மையின் வீடும் ஆண்டுக் கூறினனென்பது. அல்லாதார் வீடென்னும் பொருண்மை செய்யுட்கண் வாராமையின் அதுகூறானென்ப. அங்ஙனங் கருதின் அறமுதற்பொருளுஞ் செய்யுட்கண் வாராவெனமறுக்க. (கoசு)

சகக. பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரி யப்பா வெண்பா வென்றாங்
காயிரு பாவினு ளடங்கு மென்ப. (கoஎ)

சஉo. ஆசிரிய நடைத்தே வஞ்சி யேனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப. (கoஅ)

இவை இரண்டுசூத்திரமும் உரையியைபுநோக்கி உடனெழுதப்பட்டன. மேற் பாவினது விரி நான்கென்றமையின் தொகையுமுண்டென்பது பெற்றாம். அவை தொகுக்குங்கால் இரண்டாகித் தொகுமென்பதூஉம், அங்ஙனம் இரண்டாமிடத்தும், யாதானுமொன்றடக்கி இரண்டாகா முதற்பாவென நாட்டப்படுவன இவையெனவும், அவைமுதலாகத் தோன்றி, ஆண்டடங்குவன இவையெனவும் உணர்த்துகின்றது. (இ-ள்.) மேற் பாக்கண் விரிந்த பகுதியை உண்மைத்தன்மை நோக்கித் தொகுப்பின் ஆசிரியமும் வெண்பாவுமேயாம். அவற்றுள் ஆசிரியத்து விகற்பமாகித் தூங்கலோசை விரிந்தடங்கும், வெண்பாவின் விகற்பமாகிக் கலிப்பா விரிந்தடங்கும், அங்ஙனம் அடங்கி இரண்டாகும் பாவின்வகை. எ-று. "வீடுபேறு விழைந்துநெடிதிருந்து" என அகவற்சீரான் வஞ்சித்தூக்குப் பிறந்தது. மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் என வெண்பாவினுட் கலிப்பாபிறந்தது. பிறவும் அன்ன. இனி, ஒருசாரார் வஞ்சிப்பாவினுங் கலிப்பா பிறக்குமாதலின் அதுகூறிற்றிலரம்பாதென்ப. என்னை? "விளங்குமணிப் பசும்பொன்னின் - விசித்தமைத்துக் கதிர்கான்ற" என்னும் இரண்டு வஞ்சியடியும் ஒரு கலியடியாகச் சொல்லப்படுமென்பது அவர்கருத்து. அற்றன்று. அவையிர

ண்டுமாதற்கோர் கட்டளையிலவாம். அன்னது கட்டளையழிந்த கலிப் பாவேயெனினும் வஞ்சியடியாதற்கு ஒருகாரணம் இல்லை, நலைகுலு க்கி வலிய சொல்லினுந் தன்சீரின்மையினென மறுக்க. அல்லதூஉம் ஒன்று ஒன்றனோடு ஒக்குங்காற் பிறப்பித்ததனோடு பிறந்தது ஒப்ப வேண்டுமென மறுக்க. "வயலாமை யிழுக்குண்டும் வரண்டும்பின் மலர்மலைந்தும்" என்றக்காற் கலிப்பாவாகச் சொல்லியவழியும் அத் தூங்கலோசையோடு ஒத்தல்வேண்டும் அதனின் அது பிறந்ததாயி னென மறுக்க. அல்லதூஉம் அவ்விரண்டடியுங் கூட்டியவழி அகவ லோசையாதலே வலிது. என்னை? தன்றளை விராய் வந்தமையி ன். பண்புறவென்றதனன் ஆசிரியப்பாவும் வெண்பாவும் இயல்பென வும் ஒழிந்தன விகாரமெனவுங் கொள்க. எனவே, வெண்பாவெ ன்றதனான் மூன்றுபாவினுந் துள்ளியகலியோசையும் ஒருவகையான் வெண்பாநெறித்தேயாம் இலக்கணக்கலியோசையன்றாயினுமென்பது கொள்க. (௧௦அ)

௪௨௧. வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே.

இது மேற்கூறிய மும்முதற் பொருட்கண் ஒருசாரானவற் றை வாழ்த்துதல் என்பதோராறும் உண்மையின் அப்பகுதி நான்கு பாவிற்கும் உரித்தென்கின்றது. நால்வகைப்பட்டது பாவாகலின் அப்பாவினை நான்கென்றான். வாழ்த்தியலென்னுது வகையென்றத னன் மேற்கூறிய மும்முதற்பொருளின் அறுவகையும் பெரும்பான் மையெனப்படுமென்பதூஉம் அங்ஙனம் வாழ்த்துங்காற் தனக்குப்பய ன்படுதலும் படர்க்கைப்பொருட்குப் பயன்படுதலுமென இருவகையா ன் வாழ்த்துமென்பதூஉம் முன்னிலையாக வாழ்த்துதலும் படர்க்கை யாக வாழ்த்துதலும் என இருவகைப்படுமென்பதூஉம் எல்லாங்கொ ள்க. அங்ஙனம் வாழ்த்தப்படும் பொருளாவன;—கடவுளும் முனிவ ரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் மழையும் நாடுமென்பன. அவற் றுட் கடவுளை வாழ்த்துஞ் செய்யுள் கடவுள்வாழ்த்தெனப்படும். ஒழி ந்தபொருள்களை வாழ்த்திய செய்யுள் அறுவகை வாழ்த்தெனப்படுமெ ன்பது. "மாநிலஞ் சேவடி யாகத் தூய்நீர் - வளைநரல் பௌவ முடுக் கையாக - விசும்பு மெய்யாகத் திசைகை யாகப் - பசுங்கதிர் மதியமொ டு சுடர்கண் ணாக - வியன்றன வெல்லாம் பயின்றகத் தடக்கிய - வேத முதல்வ னென்ப-தீதற விளங்கிய திகிரி யோனே." என்பது தெய்வவா ழ்த்து. "யாழ்கெழு மணிமிடற் றந்தணன் - றாவிற் றிணிழற்ற வீர்ந்தன் றாளுலகே." என்பதும் அது. முன்னையது தனக்குப் பயன்பட வாழ்த்தியது, பின்னரது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது. பிற

வாறு. யார்க்கும்வரையாதொன்றதனை எச்சப்படுத்துச் சிலர்க்குரையப்படுமென்பது கொள்க. என்னை? பார்ப்பார்கூற்றுத் தலைமகனுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்பினல்லது பிறர்கேளா. அறிவர்கூற்றுந் தலைமகளுந் தோழியுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்டற்குரியா.

புறத்திணைக்கண்ணும் பொதுவியற்கரந்தையோர்க்கும் பார்ப்பார்கிளவி இயலாவெனவும் அறிவர்கிளவி ஏற்குமெனவும் பிறவுமின்னோரன்ன கொள்க. யாப்பொடுபுணர்ந்தென்பது அகப்பொருளும் புறப்பொருளுமாக யாக்கப்படுஞ் செய்யுளெல்லாவற்றோடும் பொருந்துமென்றவாறு இவர்கிளவி வரையப்படாதெனவே அவர்வாயிலாகிய வழித் தலைமகள் வாயின்மறுத்தலிலளென்பதூஉம் புறத்திணைத்தலைவர்க்கும் அவ்வாறே வழிநிற்றல் வேண்டுமென்பதூஉங் கூறியவாறாயிற்று, என்னை? அறிவரெனப்படுவார் மூன்றுகாலமுந் தோன்ற நன்குணர்ந்தோரும் புலனன்குணர்ந்த புலமையோருமாகலானும் இனிப் பார்ப்பாரும் அவ்வாறே சிறப்புடையராகலானும் அவர்வழிநிற்றல் அவர்க்குக் கடனாகலானுமென்பது. (ககஅ)

ருகக. ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங்
கருமநிகழ்ச்சி யிடமென மொழிப.

இதனுள் இடமெனப்பட்ட உறுப்புணர்த்துகின்றது. (இ-ள்.) பலவும் ஒருவழிப்பட்டு ஓரிலக்கணத்தான் முடியுங் கருமநிகழ்ச்சியை இடமென்று கூறுப. எ-று. இடமெனினுங் களமெனினும் ஒக்கும். ஒருசெய்யுட்கேட்டால் இஃது இன்னவிடத்து நிகழ்ந்ததென்று அறிதற்கேதுவாகியதோர் உறுப்பினை இடமென்றானென்பது. ஒருநெறிப்படுதலென்பது ஒருவழிப் பலவுந்தொகுத்தல். ஓரியலெனபது அவற்றுக்கெல்லாம் இலக்கணமொன்றாதல். அஃதாவது, காட்சியும் ஐயமுந் துணிவும் புணர்ச்சியும் பிரிவச்சமும் வன்புறையுமென்று இன்னோரன்ன எல்லாம் ஒருநெறிப்பட்டு இயற்கைப்புணர்ச்சியென்னும் ஓரிலக்கணத்தான் முடியுமென்பது, கருமநிகழ்ச்சியென்பது காமப்புணர்ச்சியென்னுஞ் செயப்படுபொருணிகழ்ச்சி. அஃது இடமெனப்பட்டது. இது வினைசெய்யிடம் நிலமாயின முன்னர்த் திணையெனப்பட்டன காலம் முன்னர்ச் சொல்லுதும். "எறுவ சிறாஅ ரேமமுற நண்ப" என்னும் பாட்டுங் "கேளிர் வாழியோ கேளிர் நாளுமென் - னெஞ்சுபிணிக் கொண்ட வஞ்சில் லோதிப் - பெருந்தோட் குறுமகள் சிறுமெல் லாக - மொருநாள் புணரப் புணரி னரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே," என்னும் பாட்டும் பாங்கற்கூட்ட

மே இடனாக ஒருவழிப்பட்டன. என்னை நின்வேறுபாடு எற்றினானாயிற்றென்று வினவிய பாங்கற்கு இதனினானாயிற்றென்று உரைத்ததூஉம் அதற்குப் பாங்கன் கழறினானை எதிர்மறுத்ததூஉமென இரண்டும் பாங்கற்கூட்டத்துப் பட்டு ஓரியலான் முடிந்தன. அவை மேற்கூறியவகையானே கண்டுகொள்க. (௧௯௯)

௫௧௨. பரத்தை வாயி லெனவிரு கூற்றுங்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்பய னிலவே.

இது பயனில் கூற்றுணர்ற்று. (இ - ள்.) பரத்தையும் வாயில்களுமென்னும் இரண்டு வேறுபாட்டின்கண்ணும் எழுந்த கிளவி கிழத்தி கேட்பாளாகக் கருதிச் சொல்லாக்காற் பயமில. எ-று. கிழத்தியைச் சுட்டுதலெனவே பாங்காயினார் கேட்பச் சொல்லினும் அமையுமென்பதாயிற்று. "செறிதொடி தெளிரப்ப வீசிச் சிறிதிவ - ணுலமந்து வருகஞ் சென்மோ தோழி" என்றச்காற தலைவிக்குப் பாங்காயினா கேட்பச் சொல்லிக்கூறல்வேண்டுமென்பது. வாயில்களுந் தலைமகளை ஊடல்காப்ப அல்லது சொல்லாராகலாற் தலைமகள் கேட்பாளாகச் சொல்லவேண்டுமென்பது. சுட்டாச்கிளப்பும் பயனிலவென்றதனான் வாயில்கள் கூறுவனவுங் கிழத்திக்குப் பாங்காயின தோழிகேட்பச் சொல்லினும் அமையும். அவற்றுக்குச்செய்யுள் "ஒருயிர் மாதராகலி - னிவளுந் தோரா துடன்றன மன்னே" இது கிழத்திகேட்ப வாயில்கள்கூறியது. தோழிகேட்பச் சொல்லியதூஉமாம். (௨௦௦)

௫௧௩. வாயி லுசாவே தம்முளு முரிய.

(இ. - ள்.) மேனின்ற அதிகாரத்தாற் தலைமகளைச சுட்ட, ஒருவரொருவர்க்குரைப்பார்போல வாயில்கள் தம்முட்கூறவும் அமையும், அவையுந் தலைமகள் கேட்பள். எ-று. அதற்குச்செய்யுள். "தண்ணந் துறைவன் கொடுமை - நம்மு னாணிக் காப்பா டும்மே." என்பது பாணர்க்குரைத்தது. உம்மை எதிர்மறை. கேட்குநள் அவளென்றவாறன்றித் தம்முட் தாங் கேட்டல் சிறுபான்மையெனக்கொள்க. (௨௦௧)

௫௧௪. ஞாயிறு திங்க ளறிவே நாணே
கட்லே கானல் விலங்கே மரனே
புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
யவையல பிறவு நுவலிய நெறியாற்
சொல்லுந போலவுங் கேட்குந போலவுஞ்
சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்.

இது கேளாதன சில பொருள்கேட்பனவாகப் பொருளியலுள் வழுவமைக்கப்பட்டனவற்றை இலக்கணவகையாற் கூறினவுங் கேட்குநவும் ஆகற்கண்ணும் ஆராய்கின்றுனென்பது. (இ - ள்.) ஞாயிறுந் திங்களும் அறிவும் நாணுங் கடலுங் கானலும் விலங்கும் மரனும் பொழுதும் புள்ளும் நெஞ்சும் இன்னோரன்னபிறவும் மேற் பொருளியலுட் "செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" என்று பொதுவகையாற் கூறியவாற்றுன் அவைதாஞ் சொல்லுவனபோலவுங் கேட்பனபோலவுஞ் சொல்ல அமையும். எ - று. ஈண்டுக் கூற்றும் உடன்கூறினுன் மேலிவற்றை வரையறுத்துக் கூற்றிற்கு உரியவென்றிலனாகலின். புலம்புறுபொழுதென்பது மாலையும் யாமமும் எற்பாடுங் காருங் கூதிரும் பனியும் இளவேனிலும் போல்வன. பிறவுமென்றதனற் புல் புதல் முதலியன கொள்க. அவற்றுட் சிலவருமாறு. "கதிர்பகர் ஞாயிறே கல்சோதி யாயி - னவனை நினைத்து நிறுத்தென் கை நீட்டித் - தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத் - துயி திரியா மாட்டிய தீ." என்றாற்போல்வன கண்டுகொள்க. (உ0உ)

ருகரு. இறப்பே நிகழ்வே யெதிர தென்னுந்
திறத்தியன மருங்கிற் றெரிநதன ருள்ளப
பொருணிகழ் வுணாபபது கால மாகும.

இது காலமுணர்த்துகின்றது. (இ - ள்.) மூன்றுகாலத்தினையும் நிகழுகின்ற நிகழ்ச்சி அச்செய்யுட்டோன்றச் செய்யிற் காலமென்னும் உறுப்பாம். எ - று. பொருணிகழ்ச்சியைக் காலமென்றதென்னை? காலமென வேறுபொருள் இல்லதுபோலவெனின், அஃது ஈண்டாராய்ச்சியின்று நியாயநூலாராய்ச்சியென்க. "வில்லோன் காலன கழலே" என்னும் பாட்டினுள் வில்லோனுந் தொடியோளும் பொருளெனப்படும். "வேய்பயி லழுவ முன்னி யோரே" என்பது அப்பொருணிகழ்ச்சியான் இறந்தகாலமெனப்படும். அப்பாட்டிற்குச் சிறந்தார் அவராகலின் அவரே பொருளாயினரென்பது. "மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே" என்பது நிகழ்காலம். "பகலும் பெறுவையிவ டடமென் றோளே" என்பதெதிர்காலம். புறத்திற்கும் இவ்வாறே இன்றியமையாதென்பது. பெரும்பொழுது சிறுபொழுதென்பன ஈண்டுத் திணையெனப்பட்டடங்கின. என்னை? முதலுங் கருவும் உரிப்பொருளுங் கூட்டித் திணையாகலின். (உ0௩)

ருகசு. இதுநனி பயக்கு மிதனு னென்னுந்
தொகைநிலைக் கிளவி பயனெனப் படுமே.

இது முறையானே பயனென்னும் உறுப்புணர்த்துகின்றது. (இ-ள்.) இது மிகவும் பயக்கும் இதனுனெனத் தொகுத்துச்சொல்லப் படுபொருள் பயனென்னும் உறுப்பாம். எ-று. "மாறாக் காதலர் மலை மறந் தனரோ * * * மாறே." என்னும் பாட்டுத் தோழி தூதுவிடுவா ளாதற் பயன்பட வந்தது. இவ்வாறெல்லாப் பாட்டும் பயனுறுப்பா கவன்றி வாராவென்க. இவை புறத்திற்கும் ஒக்கும். (௨0௫)

௬கஎ. உய்த்துணர் வின்றித் தலைவரும் பொருளான்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்.

மெய்ப்பாட்டுறுப்புணர்த்துகின்றது. (இ-ள்.) உய்த்துணர்ச்சியின்றி அவ்விடத்துவந்த சொல்லப்படும்பொருள் தானேவெளிப்பட்டாங்குக் கண்ணீரரும்பல் மெய்ம்மயிர்சிலிர்த்ததல் முதலாகிய சத்துவம் படுமாற்றான் வெளிப்படச்செய்வது மெய்ப்பாடென்னும் உறுப்பாம். எ-று. கவிப்பொருளுணர்ந்தால் அதனானே சொல்லப்படுபொருள் உய்த்து வேறுகண்டாங்கு அறிதலை மெய்ப்பாடென்றான், அது தேவருலகங்கூறினும் அதனைக் கண்டாங்கறியச்செய்தல் செய்யுளுறுப்பாம் என்றவாறு. அவை "மையற விளங்கிய மணிமருளவ்வாய்தன் - மெய்பெறாஅ மழலையின் விளங்குபூணனைத்தர" என்றாற்போல வருவன. தலைவரும் பொருளானெனவே நோக்குறுப்பாதல். உணர்ந்த பொருள் பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடென்பது இதன்கருத்து. இக்கருத்தினாற் கவி கண்காட்டுமெனவுஞ் சொல்லுப. (௨0௬)

௬கஅ. எண்வகை யியனெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின ததுவே.

இஃது எய்தியதிகந்துபடாமைக்காத்தது. (இ-ள்.) இதுவும் மேற்கூறப்பட்ட மெய்ப்பாடே பிறிதிலக்கணத்தனவென்று கொள்ளற்க. எ-று. எனவே, "நகையே யழுகை யிளிவரன் மருட்கை - யச்சம் பெருமிதம் வெகுளி யுவகை" எனவும் அவை நந்நான் காமெனவும் மெய்ப்பாட்டியலுட் கூறியவாறெல்லாம் பிறவாற்றான் வேறுபடுவெனவுங் கொள்ளப்படுமென்றவாறு. (௨0௭)

௬ககூ. சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்
புல்லிய கிளவி யெச்ச மாகும்.

இஃது எச்சங் கூறுகின்றது. (இ-ள்.) கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தோடு பொருந்திய கிளவி எச்சமெ

ன்னும் உறுப்பாம். எ-று. முடிவுகொளியற்கையெனவே செய்யுளின் கண்ணதன்றிப் பின்கொணர்ந்து முடிக்கப்படுமென்பது பெற்றாம். உதாரணம். "செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த * * * காந்தட்டே" எனச் செய்யுண்முடிந்தவழியும், இவற்றான் யாங் குறையுடையம் அல்லவென்று தலைமகற்குச்சொன்னளேல் அது கூற்றெச்சமாம். என்னை? அவ்வாறு கூறவுஞ் சிதைந்ததின்மையின். தலைமகட்குச் சொன்னளேல் அதுகுறிப்பெச்சம். என்னை? அது காண்பாயாகிற் காணெனத் தலைமகளை இடத்துய்த்துநீக்கிய குறிப்பினளாகி அது தான் கூறாளாகலினென்பது. (உOஎ)

௫உO. இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரியரென் றவ்விடத் தவரவர்க் குரைப்பதை முன்னம்.

இது முன்னமென்று கூறப்பட்ட உறுப்புக்கூறுகின்றது. (இ-ள்.) யாதோரிடத்தானும் யாதானுமொருமொழி தோன்றியக்கால் இம்மொழி சொல்லுதற்குரியாருங் கேட்டற்குரியாரும் இன்னோரென்று அறியுமாற்றான் அங்ஙனம் அறிதற்கு ஓரிடம் நாட்டி அவ்விடத்துக் கூறுவார்க்குங் கேட்பார்க்குமேற்ற செய்யுட்களாகச் சொல்லுவது முன்னம். எ-று. இவரிவர்க்குரியரென்று அறியான் செய்யுட்கேட்டானெனவும் அவ்விடத்தவரவர்க்குரைக்கவென்றான் ஆசிரியனெனவுங் கொள்க. என்றென்பது எனவென்பதுபோலச் சொல்லினெச்சமாதலும் வினையெச்சமாதலும் உடைமையின் இஃது "எனவெனெச்சம் வினையொடு முடிமே" என்பதோர் வினையெஞ்சிநிற்கும். அவ்வினை தான் எச்சமாகலான் உரைப்பதையென்னும் வினைகொண்டுமுடியுமென்பது. "யாரிவ னெங்கூந்தற் கொள்வா னிதுவுமோ - ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" என்றக்கால் இம்மாற்றஞ் சொல்லுகின்றாள் தலைவியெனவுஞ் சொல்லப்பட்டான் தலைமகனெனவும் முன்னத்தான் அறியப்படுத்தலின் இது முன்னவுறுப்பாயிற்று. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். இவையெல்லாம், அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகக் கூறுகின்றானென்பது. (உOஅ)

௫உக. இன்பமு மிடும்பையும் புணர்வும் பிரிவு
மொழுக்கமு மென்றிவை யிழுக்குநெறி யின்றி
யிதுவா கித்திணைக் குரிப்பொரு ளென்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை யென்ப.

இது பொருள்வகை கூறுகின்றது. (இ-ள்.) இன்பமுந் துன்பமும் புணர்தலும் பிரிதலும் ஒழுக்கமுமெனப்பட்ட இவை

இழுக்காதவாற்றான் இத்திணைக்கு இதுபொருளென்று ஆசிரியனோதிய உரிப்பொருளன்றி அவற்றுக்கெல்லாம் பொதுவாகப் புலவனாற் செய்யப்படுவது பொருட்கூறெனப்படும். எ - று. வகையென்றதனாற் புலவன்றான் விரித்தல் வகைத்துப் பொருளென்றுகொள்க. அஃதன்றிச் செய்யுள்செய்தலாகாதென்பது இதன்கருத்து. அவை "பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித் - தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ" என்றாற்போலச் செய்யுள்செய்தவன் தானே வகுப்பனவெல்லாங்கொள்க. இது பாலைப்பாட்டினுள் வந்ததாயினும் முல்லை முதலாயவற்றுக்கும் பொதுவாமென்பது. பொதுமையென்பது எல்லாவுரிப்பொருட்கும் ஏற்கப் பலவேறு வகையாற்செய்தல். (உ0௯)

௫௨௨. அவ்வ மாக்களும் விலங்கு மன்றிப்
பிறவவண் வரினுந் திறவதி னாடித்
தத்த மியலின் மரபொடு முடியி
னத்திறந் தானே துறையெனப் படுமே.

இது துறையென்னுமுறுப்புணர்த்துகின்றது. (இ - ள்.) ஐவகைநிலத்திற்கும உரியவெனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்தவாறன்றிப் படைத்துச்செயினும் அவ்வத்திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்றுமுறைமையும் பிறழாமைச் செய்யின் அது மாாககமெனப்படும். எ - று. மார்க்கமெனினுந் துறையெனினும் ஒக்கும். "ஊர்க்கா னிவந்த பொதும்பரு ணீர்க்கால்." என்னுங் கலியினுட் "கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு - கழுமமுடித் துழுத கண்கூடு கூழை" என நெய்தற்றலைமகள்போலக் கூறி அவளை மருதநிலத்துக் கண்டான்போல "ஊர்க்கா னிவந்த பொதும்பருள்" எனவுஞ் சொல்லிப் பின்னர்க் குறிஞ்சிப் பொருளாகிய புணர்தலுரிப்பொருளான் முடித்தான்; அவ்வாறுமயங்கச்செயினுங் குறிஞ்சித் துறைப்பாற்படச் செய்தமையின் அத்துறையுறுப்பான் வந்ததென்பது. இதுவும் மேலைப் பொருள்வகை போலப் புலவராற்செய்துகொள்ளப்படுவதாகலான் அதற்குப் பின் வைத்தானென்பது. மற்று "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" என்பதனான் இது முடியாதோவெனின், அது கருப்பொருண் மயங்குதற்குக் கூறினான், இது மக்களையன்றித் தலைவனுந் தலைவியும் மயங்குமாறும் நான்குதிணையும் ஒன்றொன்றனோடு மயங்குமாறுங் கூறி அது புலவராற்செய்துகொள்வதோர் உறுப்பெனவும் ஓதிவந்த இலக்கணத்தன்றாயினும் அது பெறுமெனவுங் கூறினானென்பது. (உ௧0)

ருஉஙு. அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையி
மியன்றுபொருண் முடியத் தந்தன ருணர்த்தன் [னு
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்.

இது மாட்டென்னும் உறுப்புணர்த்துகின்றது. (இ-ள்.) பொருள்கொள்ளுங் கால் அகன்று பொருள்கிடப்பச்செய்யினும் அணுகிக்கிடப்பச் செய்யினும் இருவகையானுஞ் சென்று பொருள்முடியுமாற்றாற் கொணர்ந்துரைப்பச் செய்தலை மாட்டென்னும் உறுப்பென்று சொல்லுவார் செய்யுள் வழக்கின். எ - று. இதுவும் நால்வகைப் பொருள்கோளன்றி வேறு புலவரதுசெய்கை. அது "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும் - வாரிருங் கூந்தல் வயங்கிழை - யொழிய வாரேன் வாழியென் னெஞ்சே" என நின்றது. பின்னர் "வேலினும் வெய்ய கானமவன் - கோலினுந் தண்ணிய தடமென் றோளே" எனச் செய்ததாகச சென்றுபொருள் கோடலின் அஃது அகன்று பொருள் கிடப்பினும் இயன்று பொருண்முடிய உரைப்பதாம். "திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத - ரிறந்து படிற்பெரிதா மேதம்" என்பது அணுகியநிலையெனப்படும். மாட்டுதலென்பது கொளுத்துதல். (உகச)

ருஉச. மாட்டு மெச்சமு நாட்ட மின்றி
யுடனிலை மொழியினுந் தொடர்நிலை பெறுமே.

இது மேற்கூறியவற்றுள் ஒருசாரனவற்றுக்குப் புறனடை. (இ - ள்.) மேற்கூறிய எச்சமும் மாட்டும் இன்றியும் அச்செய்யுளுட்கிடந்தவாறே அமையச்செய்யவும் பெறுஞ் செய்யுள். எ-று. எச்சமும் மாட்டும் என்றது மாட்டு முற்கூறியதென்னையெனின், எச்சம் முதலாகிய ஐந்து உறுப்பும் இவ்விதி பெறுமென்று கோடற்கு எதிர்சென்று தழீஇயினானென்பது. உதாரணம் "வாரா ராயினும் வரினு மவர்நமக் - கியாரா கியரோ தோழி - என்னு மினள்கொ லென்னு தோரே" என்பது எச்சமின்றிவந்தது. "தாமரை புரையுங் காமர் சேவடி" என்பது முன்னமின்றி வந்தது. "மருந்தெனின் மருந்தே" என்பது பொருளின்றி வந்தது. "ஈயற்புற்றத் தீர்ம்புறத் திறுத்த" என்பது துறைவகையின்றி வந்தது. "யானே, யீண்டையேனே" என்பது மாட்டின்றி வந்தது. இடைநின்ற மூன்றனை இலேசினாற் கொண்டு இரண்டினை எடுத்தோதினான் இவை இரண்டும் அவற்றது துணையின்றி அமையாச் சிறப்பினவல்ல என்றற்கென்பது. (உகஉ)

௫௨௫. வண்ணந் தாமே நாலைந் தென்ப.

இது முறையானே ஈற்றுநின்ற வண்ணம் இத்துணைப்பகுதித் தென்கின்றது. (இ - ள்.) வண்ணம் இருபது வகைப்படும். எ - று. வண்ணமென்பது சந்தவேறுபாடு. நால் பலவாகி வேறுபடினும் அவை ஈண்டடங்குமென்பதூஉம் அவ்வேறுபாட்டானெல்லாஞ் சந்தவேற்றுமை செய்யவென்பதூஉங் கூறியவாறு. அது நுண்ணுணர்வுடையார்க்குப் புலனாமென்பது. (உகஙு)

௫௨௬. அவைதாம், பாஅ வண்ணந் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ண மெல்லிசை வண்ண
மியைபு வண்ண மளபெடை வண்ண
நெடுஞ்சீர் வண்ணங் குறுஞ்சீர் வண்ணஞ்
சித்திர வண்ண நலிபு வண்ண
மகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ண
மொழுகு வண்ண மொரூஉ வண்ண
மெண்ணு வண்ண மகைப்பு வண்ணந்
தூங்கல் வண்ண மேந்தல் வண்ண
முருட்டு வண்ண முடுகு வண்ணமென்
றாங்கன மறிப வறிந்திசி னோரே.

இது மேற்கூறப்பட்ட வண்ணங்களது பெயர்வேறுபாடு கூறுகின்றது. (இ - ள்.) மேற்சொல்லிய நாலைந்து வண்ணமும் இவ்விருபது பெயர்வேறுபாட்டினவென்று சொல்லுப அவற்றை உணர்ந்த ஆசிரியர். எ - று. இது முறையாயினவாறென்னையெனின் இது வரலாற்றுமுறைமையென்றற்கு ஆங்கனம் அறிப அறிந்திசினோரென்றானென்பது. அவையாமாறு சொல்லுகின்றான். (உகச)

௫௨எ. அவற்றுட், பாஅ வண்ணஞ்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்.

இது நிறுத்த முறையானே பாஅவண்ண முணர்த்து.(இ - ள்.) பாஅவண்ணமென்பது நூற்பா வண்ணம். எ - று. எற்றுக்கு? நூற்பாற்பயிலுமென்றமையின். இது சொற்சீரடித்தாகி வருமென்பது. இதனுட்பயிலுமெனவே அந்நூற்பாவினுளல்லது அகவலுள் இத்துணைப் பயிலாதென்பது. இது "வடவேங்கடந் தென்குமரி" எனவும் "எழுத்தெனப்படுவ, அகரமுத, னகர விறுவாய் முப்பஃ தென்ப."

எனவும். "அவற்றுள், அஇஉ,எஒ என்னு மப்பா லைந்தும்" எனவும் பயின்றுவரும். "பெரிய கட்பெறினே" என்பது சொற்சீராசிரியவுட் பயிலாதுவந்தது. சொற்சீரடியென்றது சொற்சீரொன்றுன் அடியொடு தொடராதுஞ் சொற்சீர் வருமாதலினென்பது. அவை "நன்றுபெரிதாகும்" என்றாற்போல வேறாகி நிற்பன. இவை கலியுள்ளும் பரிபாடலுள்ளுஞ் சொற்சீர்வருமென மேற்கூறினாகலின், அவற்றுள்ளுஞ் சந்தவேற்றுமைப்பட்டன பாஅவண்ணமேயாமென்பது. (உகரு)

ருஉஅ. தாஅவண்ணம்,
மிடையிட்டு வந்த வெதுகைத் தாகும்.

(இ - ள்.) இடையீடுபடத் தொடுப்பது தாஅவண்ணம். எ - று அவை பொழிப்பும் ஒரூஉவுமாகலின் எதுகையென வரைந்து கூறினானென்பது. அடியிடையிட்டு வருவது தொடைவேற்றுமையாவதல்லது வண்ணவேற்றுமையாகாதென்பது. ஒருசெய்யுளுட் பல அடிவந்தால் அவை எல்லாம் இடையிட்டுத் தொடுத்தல்வேண்டுமோவெனின், வேண்டா, அவைவந்தவழித் தாஅவண்ணமெனப்படுமென்பது. எனவே, இவ்வண்ணவகைகளெல்லாஞ் செய்யுண்முழுவதுமே பெறுவனவாகக் கொள்ளக்கிடந்தனவல்ல இவற்றை உறுப்பென்ற தன்மையாற் கந்தருவ நூலார் வண்ணங் கூறியவாறுபோல ஒருசெய்யுளுட் பலவும் வரப்பெறுமென்பதாம் அவை "உலகு முவப்ப வலனேர்பு திரிதரு" எனவும், "உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை" எனவும் வரும். பிறவும் அன்ன. (உகசு)

ருஉகூ. வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயிலும்.

(இ - ள்.) வல்லிசைவண்ணம் வல்லெழுத்துப் பயின்றுவரும். எ-று. வல்லெழுத்துப் பயின்றுவருதலான அப்பெயராத்தாயிற்று. "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்" எனவும், "முட்டாட் டாமரைத் துஞ்சி" எனவும் வரும். பிறவும் அன்ன. (உகஎ)

ருங0. மெல்லிசை வண்ண மெல்லெழுத்து மிகுமே.

(இ - ள்.) மெல்லெழுத்து மிகுவது மெல்லெழுத்துவண்ணம். எ - று. ஒருசெய்யுண்முழுவதும் ஓரினத்தெழுத்தே பயிலச்செய்தால் இன்னாதாதலின் இவை உறுப்பெனப்பட்டு இடையிட்டு வருமென்றானென்பது அவ்வாறு செய்யின் அவை மிறைக்கவியெனப்படும். ஒழிந்த எழுத்திற்கும் இஃதொக்கும். "பொன்னி னன்ன புன்னை நுண்டாது" என மெல்லெழுத்துப் பயின்றவாறு. (உகஅ)

ருகக. இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே.

(இ - ள்.) இடையெழுத்து மிகுவது இயைபுவண்ணம். எ-று. "அரவினதிர வுரீஇய வரகு கதிரின்" என இடையெழுத்து மிக்குவந்தமையின் இயைபுவண்ணமாயிற்று. மென்மையன்மைக்கு இடைநிகர்வாகிய எழுத்தான் வருதலின் இயைபுவண்ணமென்றார். (உகக)

ருகஉ. அளபெடை வண்ண மளபெடை பயிலும்.

(இ- ள்.) இரண்டளபெடையும் பயிலச் செய்வன அளபெடைவண்ணமாம். எ - று. "மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்" என்பது அளபெடைவண்ணம். "கன்ன் டண்ண்ணெனக் கணடிங் கேட்டும்" என்பதும் அது. (உஉ0)

ருகங. நெடுஞ்சீர் வண்ண நெட்டெழுத்துப் பயிலும்.

(இ - ள்.) நெட்டெழுத்துப் பயின்றுவருவது நெடுஞ்சீர்வண்ணம். எ - று. அது "மாவாராதே மாவாராதே" என்பது. நெடிதாய் வருவது நெடுஞ்சீரெனப்பட்டது. (உஉக)

ருகச. குறுஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்.

(இ - ள்) குற்றெழுத்துப் பயில்வது குறுஞ்சீர்வண்ணம். எ-று. "குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி" எனவரும். (உஉஉ)

ருகரு. சித்திர வண்ண,
நெடியவுங் குறியவு நேர்ந்துடன் வருமே.

(இ - ள்.) சித்திரவண்ணம் நெட்டெழுத்துங் குற்றெழுத்தும் ஒப்பவிராஅய்ச் செய்யப்படுவது. எ - று. அது "சார னாடநீவர லாறே." எனவரும். சித்திரவண்ணமென்பது பலவண்ணம் படச் செய்வதாகலின் அப்பெயர்த்தாயிற்று. (உஉங)

ருகசு. நலிபு வண்ண மாய்தம் பயிலும்.

(இ - ள்.) ஆய்தம் பயின்று வருவது நலிபுவண்ணமாம். எ - று. அது "அஃசாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை" எனவும் "னஃகான் றஃகா னன்க னுருபிற்கு" எனவும்வரும். நலிபென்பது, ஆய்தம். (உஉச)

ருகஎ. அகப்பாட்டுவண்ண,
முடியாத் தன்மையின் முடித்தன மேற்றே.

(இ - ள்.) அகப்பாட்டுவண்ணமென்பது இறுதியடி இடையடி போன்று நிற்பன. எ-று. அவையாவன முடித்துக்காட்டும் ஈற்றசை ஏகாரத்தானன்றி ஒழிந்த உயிரீற்றானும் ஒற்றீற்றானும் வருவன. அவை "தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன * * * உண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்" எனவும், "கோடுயர் வெண்மண லேறி - யோ டுகலன் காணுந் துறைவன் றோழி." எனவும் "ஆணமில் பொருளெம க் கமர்ந்தனை யாடி" எனவும். "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யா ரே." எனவும் இவை ஆசிரிய ஈற்றன. "குளிறு குரலருவிக் குன் றத் திதண்மேற் - களிறு வருவது கண்டு - வெளிலென்ன - லாயினன் பின்னை யணங்கிற் றுயிரளித்துப் - போயினன் யாண்டையான் போ ம்." என இதனுள் இறுதியடி முடியாத்தன்மையின் முடிந்ததாகலின் அகப்பாட்டுவண்ணமாயிற்று. "கொடியுவணத் தவணரோ" எனக் கலிப்பாவின் அரோவந்து பின்முடியாத்தன்மையின் முடிந்தது. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என்பனவற்றான் ஆசிரியம் இறுமென வரைய றுப்பாருண்மையின் அவ்வச்சொல்லானே அவை முடிந்தனவென்று கொள்வலெனின், அங்ஙனம் வரையறையிலவென்பது மேற்காட் டிய உதாரணங்களால் அறிந்தாமாகலின் அக்கடா வண்ணமென வரையறுப்பார் மேற்றெனவிடுக்க. (உஉரு)

ருஙஅ. புறப்பாட்டு வண்ண,
முடிந்தது போன்று முடியா தாகும்.

(இ - ள்.) புறப்பாட்டுவண்ணமென்பது இறுதியடிப்புறத்த தாகவுந் தான் முடிந்ததுபோல நிற்றல். எ-று. "இன்ன செய்திநீ முன்னிய வினையே - முன்னீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே" என்புழி ஈற்றயல் முன்னிய வினையேயென முடிந்தது போன்று முடியாதாயிற்று. (உஉசு)

ருஙகூ. ஒழுகு வண்ண மோசையி னொழுகும்.

(இ - ள்.) முற்கூறிய வகையானன்றி ஒழுகியலோசையாற் செல்வது ஒழுகுவண்ணம். எ - று. ஒழிந்தனவும் ஒழுகுமாயினும் அவை வேறுவேறிலக்கணமுறையின என்பது. "அம்ம வாழி தோ ழி காதல - ரின்பனி மென்றோ வாடை யோடு - புன்கண் மாலை யன் பின்று நலிதலின்" எனவரும். (உஉ

ருசு0. ஒரூஉ வண்ண மொரீஇத் தொடுக்கும்.

(இ - ள்.) யாற்றொழுக்குப்போலச் சொல்லியபொருள் பிறி தொன்றனை அவாவாமை அறுத்துச்செய்வது ஒரூஉவண்ணம். எ-று.

ஒரீஇத்தொடுத்தலென்பது எல்லாத்தொடையும் ஒரீஇச் செந்தொடை யாற் றொடுத்தலென்பாரும் உளர். செந்தொடையுந் தொடையாக லான் அற்றன்றென்பது. அது. "யானே, யீண்டை யேனே யெ ன்னல திலனே - யானு நோயொடு கான லஃதே - துறைவன் றம் மூ ரானே - மறையல ராகி மன்றத் தஃதே." எனவரும். "சிறிய கட் பெறினே," என்பதும் அது. யாப்புப் பொருளுணர்க்கியவாறு போல இது பொருளுணர்க்காது ஓசையே கோடலானும் அடியிறந்து கோடலானும் யாப்பெனப்படாது. (உஉஅ)

ருசக. எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும்.

(இ - ள்.) எண்ணுப் பயில்வது எண்ணுவண்ணம். எ - று. இது அடியெண்ணுப்பயிறலான் எண்ணுவண்ணமெனக் காரணப பெயராயிற்று. அவை "நன்னற வியள நறும்பூ ணத்தி - துன்னருங கடுந்திறற் றோற்றங் காட்டினளே" என்றாற்போல்வன. "நுதலுந் தோளுந் திதலை யல்குலும்" என்பதும் அது. (உஉகூ)

ருசஉ. அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்.

(இ - ள்.) அறுத்தறுத்துப்பயில்வது அகைப்பு வண்ணம். எ - று. இது விட்டுவிட்டுச் சேறலின் அகைப்புவண்ணமென்னும்பெ யர்பெற்றது. "வாரா ராயினும் வரினு மவர்நமக் - கியாரா கியரோ தோழி" என்புழி ஒருவழி நெடில்பயின்றும் ஒருவழிக் குறில்பயின் றும் அறுத்தொழுகிய அகைப்புவண்ணமாம். (உஙo)

ருசங. தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்.

(இ - ள்.) தூங்கல்வண்ணந் தூங்கலோசைத்தாகிவருவது. எ - று. வஞ்சியென்பது, வஞ்சிக்குப்போல இதுவும் அற்றுச் சேறலு டைத்தென்பது. "யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின் - றானூட யானுணர்த்தத் தானுணர்ந்தான்" எனநின்ற தொடர்நிலைக்க ண்ணே அத்தூங்கல்கண்டுகொள்க. இக்கருத்தறியாதார் கலிப்பா வினுள் வஞ்சிப்பாப் பிறக்குமெனவும் வஞ்சியுட் கலிப்பாப் பிறக்கு மெனவும் மயங்குப. (உஙக)

ருசச. ஏந்தல்வண்ணஞ்,
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்.

(இ - ள்.) சொல்லிய சொல்லானே சொல்லப்படும்பொருள் சி றப்பச்செய்வது ஏந்தல்வண்ணம். எ - று. ஏந்தலென்பது மிகுதல்,

ஒருசொல்லே மிக்குவருதலின் ஏந்தல்வண்ணமென்றாயிற்று. அது "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்" எனவரும். (உகஉ)

ருசரு. உருட்டு வண்ண மராகந் தொடுக்கும்.

இ - ள். உருட்டிச் சொல்லப்படுவது அராகமாகலின் அராகந் தொடுப்பது உருட்டுவண்ணமாம். எ - று. "உருமுரறு கருவிய பெருமழை தலைஇய" எனவும் "எரியுரு வுறழ விலவ மலர" எனவும் வரும். இது நெகிழாது உருண்டவோசையாகலிற் குறுஞ்சீர்வண்ண மெனப்படாது உருட்டுவண்ணமெனப்படுமென்பது. (உகக)

ருசசு. முடுகுவண்ண

மடியிறந் தோடி யதனோ ரற்றே.

(இ - ள்.) முடுகுவண்ணமென்பது அராகந்தொடுத்த அடி யோடு பிற அடிபடத்தொடர்ந்தோடுவது. எ - று. அது. "நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇத் - தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக - வேய்புரை மென்றோட் பசலை யு மம்பலும்" எனவரும். இவற்றைக் கொச்சகம் அராகமெனவுஞ் சொற்சீரடியும் முடுகியலடியுமெனவும் பரிபாடற்கு வேறுபடுத்தோதி னான் இவ்வேறுபாடு நோக்கியென்பது. (உகச)

ருசஎ. வண்ணந் தாமே யிவையென மொழிப.

இது புறனடை. (இ-ள்.) வண்ணமென்பன சந்தமாதலான் அச்சந்தவேற்றுமை செய்வன இவையல்லதில்லை. எ-று. நான்குபாவி னோடும் இவற்றை வைத்துறழவும் அவைமயங்கிய பொதுப்பா இரண் டினோடும் உறழவும் நூற்றிருபதாகலும் உயிர்மெய் வருக்கமெல்லா வற்றோடும் உறழ்ந்து பெருக்கின் எத்துணையும் பலவாகலும் இனிப்பி றவாற்றாற் சிலபெயர் நிறீஇ அவற்றால் உறழ்ந்து பெருக்க வரையறை யிலவாகலும் உடையவாயினும் இவ்விருபது வகையானல்லது சந்த வேற்றுமை விளங்காதென்பது கருத்து. (உகரு)

ருசஅ. வனப்பிய றானே வகுக்குங் காலைச்

சின்மென் மொழியாற் றாய பனுவலோ

டம்மை தானே யடிநிமிர் பின்றே.

இது தொகைச் சூத்திரத்துள் "ஆறுதலையிட்ட வந்நாலைந்தும்" எனக் கூறுசெய்து நிறீஇப், பின்னர் எட்டுறுப்புக் கூறினானன்றே? இவை அவற்றோடொத்த இலக்கணத்த அன்மையான, என்னை? அ

லை ஒரோசெய்யுட்கே ஓதிய உறுப்பாகலானும் இவை பலசெய்யு ளுந்திரண்டவழி இவ்வெண்வகையும்பற்றித் தொடுப்பதாமெனக் கூற ப்பட்டதாகலானுமென்பது. இவற்றை வனப்பென்று கூறப்படுமாறெ ன்னை அச்சூத்திரத்துப் பெற்றிலமாகலினெனின், வனப்பென்பது, பெ ரும்பான்மையும் பல உறுப்புந்திரண்டவழிப் பெறுவதோர் அழகாகலி ன் அவ்வாறுகோடும். அதனாற் பலசெய்யுளும் உறுப்பாய்த்திரண்டு பெ ருகிய தொடர்நிலையதே வனப்பென்னும் பெயர்ப்பகுதிவகையான் ஏ ற்பதென்பது. அஃதேல் இவ்வெட்டுந் தனிவருஞ்செய்யுட்கண் வந்தா ல் அழகு செய்யாவோவெனின், அவைபோல் இவைசெய்யுட்குமாகும் என்றற்கன்றே அவ்விருபத்தாறுறுப்போடும் இவற்றை ஓரினப்படு த்து ஓதியதென்பது. அஃது இயைபிற்கொப்ப வாராதென்பது மு ன்னர்ச் சொல்லுதும். இதனானே முன்னையுறுப்புக்கள் தொடர் நிலைசெய்யுட்கு வருமென்பதூஉங்கொள்க. அல்லாக்கால், மாத்திரை முதலாகிய ஒரோவுறுப்பான் அழகுபிறவாதாகிய செல்லும் இவற் றையே வனப்பென்று ஒரோசெய்யுட்கே கொள்ளினென்பது. இங்ஙு னம் இருபத்தாறும் எட்டுமென வகுப்பவே அவை அகமென்பன, த னிநிலைச்செய்யுண் முற்கூறப்படா, இத்தொடர்நிலைச்செய்யுட்கு மு ற்கூறுமென்பது. இனி இவற்றைச் சூத்திரத்தான் வனப்பென்னு ங் குறியெய்துவிக்கவேண்டுவானுகச் சூத்திரத்தை, வனப்பிய றானே வகுக்குங் காலைச் - சின்மென் மொழியாற் றாய பனுவலின், என்ப து பாடமாக உரைத்தானென்க. அதுவும் அறிந்தவாறேகொள்க.

(இ-ள்.) சிலவாயமெல்லியவாய சொல்லோடும் இடையிட்டு வ ந்த பனுவலிலக்கணத்தோடும் அடிநிமிர்வில்லது அம்மையாம். எ-று. அடிநிமிராதென்வே அம்மையென்பது முழுவதும் ஒருசெய்யுளாகல் வேண்டும். வேண்டவே அஃது உறுப்பன்றாகிய செல்லும். அதனை உறுப்பெனல் வேண்டுமாதலான் அடிநிமிராதெனப்பட்ட செய்யுள் உறுப்பாக அவை பலதொடர்ந்து முடிந்து ஈண்டுச் செய்யுமென்பது. சிலவாகவென்பது எண்ணுச்சுருங்குதல். மெல்லியவாய்ச் சிலவாய சொற்கள், எழுத்தினான் அகன்றுகாட்டாது சிலவெழுத்தினான்வருவ து. அடி நிமிராதென்றது ஐந்தடியின் ஏறாதென்றவாறு.

தாயபனுவலோடென்றது அறம்பொருளின்பமென்னும் மூன் றறகும் இலக்கணஞ்சொல்லுப, வேறிடையிடை அவையன்றியுந் தா ய்ச் செல்வதென்றவாறு. அஃதாவது பதினெண்கீழ்க்கணக்கெனவு ணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோசெய்யுள் வந் தவாறும் அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும் அறம்

பொருளின்பமென அவற்றுக்கு இலக்கணங்கூறியபாட்டுப் பயின்றுவருமாறுங் கார்நாற்பது களவழிநாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டுகொள்க. "பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து - மருவர வெண்ணிச் செயல்" என்பது இலக்கணங் கூறியதாகலிற் பனுவலோடென்றான். "மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண் - பலர்காணும் பூவொக்கு மென்று." என இது இலக்கியமாகலாற் தாயபனுவலெனப்பட்டது. இவை தனித்துவரினும் அவ்வனப்பெனப்படும். தாவுதலென்பது இடையிடுதல். இவ்விருவகையுஞ் செய்யுளெனப்படும். அம்மையென்பது குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையென்றாயிற்று. அதனுள் உறுப்பாகிய பாட்டுக்கடோறும் மாத்திரையுறுப்பு முதலாகிய உறுப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும் இவ்வனப்பினுள் ஏற்பன பலவும் வருமாறும் அறிந்துகொள்க. (உ௩௬)

௫௪௧. செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பி
னவ்வகை தானே யழகெனப் படுமே.

இஃது இரண்டாமெண்ணுமுறைமைக்கணின்ற அழகுணர்-த்தும். (இ - ள்.) திரிசொற் பயிலாது செய்யுட் பயின்றுவரும் மொழிகளாற் சீருறுத்துப் பொலிவுபட்ட யாப்பின்பொருள அழகு. எ-று. அவ்வகையென்றதனால் அவை வேறுவேறு வந்து ஈண்டிய தொகைநிலைச்செய்யுளென்றவாறு. அவையாவன நெடுந்தொகைமுதலாகிய தொகையெட்டுமென்றவாறு. அழகு செய்யுண் மொழியென்றதென்னையெனின் அது பெரும்பான்மையாற் கூறினான். அம்மொழியானே இடைச்சங்கத்தாருங் கடைச்சங்கத்தாரும் இவ்விலக்கணத்தாற் செய்யுள் செய்தார் இக்காலத்துச் செய்யினும் விலக்கின்றென்பது. மற்று மூவடிமுடிப்பது முதலாயின அம்மையெனப்படுமோ அழகெனப்படுமோவெனின் தாயபனுவலின்மையின் அம்மையெனப்படாவென்பது. இவற்றுள்ளும் ஓரோ செய்யுட்கண்ணே மாத்திரைமுதலாகிய உறுப்பும் ஏற்றவகையான் வருவன அறிந்துகொள்க. ஒழிந்தனவற்றிற்கும் இஃதொக்கும். (உ௩எ)

௫௫0. தொன்மைதானே
உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே.

இது தொன்மையுணர்-த்தும். (இ - ள்.) தொன்மையென்பது உரைவிராய்ப் பழைமையவாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது. எ-று. அவை பெருந்தேவனாராற் பாடப்பட்ட பாரதமுந் தகடூர் யாத்திரையும் போல்வன. (௩௩அ)

௫௩௧. இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியா னடிநிமிர்ந் தொழுகினுந்
தோலென மொழிப தொன்மொழிப் புலவர்.

இது முறையானே தோலென்னும் வனப்புணர்த்து. அஃது இருவகைப்படும். கொச்சகக்கலியானும் ஆசிரியத்தானுஞ் செய்யப்படுவன. "யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" என்றவழித் தேவபாணியுங் காமமும் பொருளாகவன்றியுங் கொச்சகக்கலி வருமென்றுணர்கலான் அவ்வை மேல்வருதல் ஈண்டுக் கொள்ளப்பட்டது. (இ-ள்.) இழுமென் மொழியான் விழுமியது நுவலினும் = மெல்லென்றசொல்லான் அறம்பொருளின்பம்வீடென்னும் விழுமிய பொருள் பயப்பச்செய்யினும்: அவைசெய்த காலத்துள்ளன கண்டிலம்; பிற்காலத்து வந்தன கண்டுகொள்க. பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும் = ஆசிரியப் பாட்டான் ஒருகதைமேற் றொடுக்கப்படினும்: அவையும் பொருட்டொடர்நிலை. தோல் என மொழிப தொன்மொழிப் புலவர் = தோலென்று சொல்லுப புலவர். எ-று. தொன்மொழியென்றார் பழைய கதையைச் செய்தல்பற்றி. இது முன்வருஞ் சூத்திரத்தானும் பெறுதும். (௨௩௯)

௫௩௨. விருந்தே தானும்
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே.

(இ - ள்.) விருந்துதானும் புதிதாகத் தொடுக்கப்படுந் தொடர்நிலைமேற்று. எ - று. தானுமென்ற உம்மையான் முன்னைத் தோலெனப்பட்டதூஉம் பழைய கதையைப் புதிதாகச் சொல்லியதாயிற்று. இது பழங்கதைமேற்றன்றிப் புதிதாகச் சொல்லப்படுதல் நோக்குதல் உடைமையின் உம்மையான் இறந்ததுதழீஇயினுனென்பது. புதுவது கிளந்த யாப்பின் மேற்றென்றதென்னையெனின், புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பலசெய்யுளுந் தொடர்ந்துவரச் செய்வது. அது முத்தொள்ளாயிரமும் பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமெனவுணர்க. கலம்பகம் முதலாயினவுஞ் சொல்லுப. (௨௪௦)

௫௩௩. ஞகாரை முதலா னகாரை யீற்றுப்
புள்ளி யிறுதி யியைபெனப் படுமே.

இஃது இயைபுணர்த்து. (இ - ள்.) ஞணநமனயரலவழள வென்னும் பதினொரு புள்ளியீற்றினுள் ஒன்றனை இறுதியாகச்

செய்யுஞ் செய்யுள் பொருட்டொடராகவுஞ் சொற்றொடராகவுஞ் செய்வது இயைபெனப்படும். எ - று. இயைபென்றதனானே பொருளும் இயைந்து சொல்லும் இயைந்துவருமென்பது கருத்து. சீத்தலைச்சாத்தனாராற் செய்யப்பட்ட மணிமேகலையுங் கொங்கவேளாராற் செய்யப்பட்ட தொடர்நிலைச்செய்யுளும் போல்வன. அவை னகார ஈற்றான் இற்றன. மற்றையீற்றான் வருவனவற்றுக்கும் ஈண்டிலக்கணம் உண்மையின் இலக்கியம் பெற்றவழிக்கொள்க. இப்பொழுது அவை வீழ்ந்தனபோலும். பரந்தமொழியான் அடிநிமிர்ந்தொழுகிய தோலொடு இதனிடை வேற்றுமையென்னையெனின், அவை உயிரீற்றவாதல் பெரும்பான்மையாகலான் வேறுபாடுடைய சொற்றொடரான் வருதலுமுடையவென்பது. சொற்றொடரென்பது அந்தாதி எனப்படுவதென்றதனான் உயிரீற்றுச் சொற்றொடர் சிறுபான்மையென்பது கொள்க. (உசக)

ருருச. சேரி மொழியாற் செவ்வி திற்கிளந்
தோதல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே.

இது புலனுமாறுணர் - ற்று. (இ - ள்.) சேரிமொழியென்பது பாடிமாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணாமைப் பொருட்டொடரானே கொடுத்துச் செய்வது புலனென்று சொல்லுவர் புலன் உணர்ந்தோர். எ - று. அவை விளக்கத்தார் கூத்துமுதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வனவென்பது கண்டுகொள்க. (உசஉ)

ருருரு. ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா வைந்தடி யொப்பித்
தோங்கிய மொழியா னுங்கன மொழுகி
னிழைபி னிலக்கண மியைந்த தாகும்.

இறுதிநின்ற இழைபிலக்கணமுணர் - ற்று. (இ - ள்.) ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது = வல்லெழுத்துப் பயிலாது: குறளடி முதலா ஐந்து அடி ஒப்பிதது = இருசீரடி முதலாக எழுசீரடியளவும் வந்த அடி ஐந்தனையும் ஒப்பித்து: ஒப்பித்தலென்பது பெரும்பான்மையான் நாற்சீரடி படுக்கப்பட்டென்றவாறு. ஓங்கிய மொழியான் = நெட்டெழுத்தும் அந்நெட்டெழுத்துப்போல் ஓசை எழும் மெல்லெழுத்தும் லகாரளகாரங்களும் உடைய சொல்

லான்: ஆங்கனம் ஒழுகின் = இவையுஞ் சேரிமொழியாற் செவ்வி திற்கிளந்து தேர்தல் வேண்டாது பொருள்படச் சென்று நடப்பின்: இழைபின் இலக்கணம் இயைந்ததாகும்=இழைபென்று சொல்லப் படும் இலக்கணத்தது. எ-று. அவையாவன கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறைமார்க்கத்தனவென்பது. இவ ற்றுக்குச் காரணந் தேர்தல்வேண்டாது பொருள் இனிது விளங்கல் வேண்டுமென்றது அவினயத்திற்கு உரியவாதல் நோக்கியென்பது. மற்றிதனை வெண்டுறைச் செய்யுட்குமுன் வைப்பினெனின், இஃ திசைப்பாட்டாகலின் இனிவருகின்றது இசைத்தமிழாகலின் அதற் குபகாரப்பட்ட இதனை இறுதிக்கண் வைத்தானென்பது. (உசங)

ருடுச. செய்யுண் மருங்கின் மெய்பெற நாடி
யிழைத்த விலக்கணம் பிழைத்தன போல
வருவ வுளவெனினும் வந்தவற் றியலாற்
றிரிவின்றி முடித்த றெள்ளியோர் கடனே.

இஃது இவ்வோத்திற்கெல்லாம் புறனடை கூறுகின்றது. (இ-ள்.) செய்யுளிடத்துப் பொருள்பெற ஆராய்ந்து தந்திரஞ்செ ய்யப்பட்ட இலக்கணத்தின் வழிஇயினபோன்று பின்னொன்று வருவனவுளவேன் முற்கூறப்பட்ட இலக்கணத்தோடு திரியாமல் மு டித்துக் கோடல் அறிவுடையோரது கடன். எ-று. அவை எண் சீர் முதலாயின வரிற் கழிநெடிலடிப்பாற் சார்த்திக்கோடலும் ஏது. முதலியது முதுமொழியோடு பாட்டிற்கு இயைபின்றியுந் தொடர்பு படுப்பனவும் யாப்பென்னும் உறுப்பின்பாற்கோடலும் பிறவும் ஈண் டோதாதன உளவெனின் அவையுமெல்லாஞ் செய்யுளிலக்கணமுடி பாகுமென்றவாறு. (உசச)

செய்யுளியன் முற்றிற்று.

ஒன்பதாவது

## மரபியல்.

௫௪௭. மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்
பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையுங்
கன்றும் பிள்ளையு மகவு மறியுமென்
றொன்பதுங் குழவியோ டிளமைப் பெயரே.

என்பதுசூத்திரம். இவ்வோத்து என்னபெயர்த்தோவெனி ன், மரபியலென்னும் பெயர்த்து. இதனானே ஓத்து நுதலியதூஉம் மரபு உணர்த்துதலென்பது பெற்றாம். மரபென்ற பொருண்மை என்னையெனின், கிளவியாக்கத்து மரபென்று வரையறுத்து ஓதப்ப ட்டனவுஞ் செய்யுளியலுண் மரபென்று வரையறுத்து ஓதப்பட்டன வுமன்றி, இருதிணைப்பொருட்குணனாகிய இளமையும் ஆண்மையும் பெண்மையும்பற்றிய வரலாற்றுமுறைமையும், உயர்திணை நான்கு சா தியும்பற்றியமரபும், அஃறிணைப் புல்லும் மரனும் பற்றிய மரபும், அவைபற்றிவரும் உலகியன்மரபும் நூன்மரபுமென இவையெல்லாம் மரபெனப்படுமென்பது. மற்றுப் பொருள்களின் இளமைபற்றி வ ரும் மரபுகூறினான் மூப்புப்பற்றி வரும் மரபுகூறானோவெனின், அது வரையறையின்மையிற் கூறானென்பது. மற்று மேலை ஓத்தினோடு இவ்வோத்திடை இயைபென்னையெனின், முன்னர் வழக்கிலக்கணங் கூறியதன்பின் செய்யுளிலக்கணஞ் செய்யுளியலுட் கூறினான், அவ் விரண்டற்கும் பொதுவாகிய மரபு ஈண்டுக் கூறினமையின் இது செ ய்யுளியலோடு இயைபுடைத்தாயிற்று. மற்று வழக்கிலக்கணஞ் செ ய்யுட்கும் பொதுவாகலின் இங்ஙனம் இரண்டற்கும் பொதுவாகிய மரபினையுஞ் செய்யுளியலின்முன் வைக்கவெனின், அவ்வாறு வழ க்குஞ் செய்யுளுமென்று இரண்டுமெல்லாத நூலிற்கும் ஈண்டு மரபு கூறினமையின் இது செய்யுளியலின்பின் வைக்கப்பட்டது.

இவ்வோத்தின் முதற்சூத்திரம் என்னுதலிற்றோவெனின் எ ல்லாப்பொருளின்கண்ணும் இளமைக்குணம்பற்றி நிகழுஞ் சொல் இ வையென்று வரையறுத்துக் கூறுகின்றது. (இ - ள்.) மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்=விலக்கருஞ் சிறப்பிற்றாகிய மரபில க்கணங் கூறின்: பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும் கன்றும் பிள் ளையும் மகவும் மறியும் என்று ஒன்பதும் குழவியோடு இளமைப்பெ

யர் = குழவியோடு இவையொன்பதும் இளமைப்பெயர். எ - று. மேலன எட்டுங் குழவியுமென இளமைப்பெயர் ஒன்பதாயின. குழவியோடொன்பதென்னது ஒன்பதுங்குழவியோடென மயங்கக்கூறியவதனாற் போத்தென்பதும் இளமைப்பெயரெனவும் பிறவும் வருவன உளவாயினுங் கொள்ளப்படும். இவற்றையெல்லாம் மேல் வரையறுத்து இன்னபொருட்கு இன்னபெயர் உரித்தென்பது சொல்லும். மாற்றருஞ் சிறப்பின்என்றதனானே இவை ஒருதலையாகத் தத்தம் மரபிற் பிறழாமற் செய்யுள்செய்யப்படுமென்பதூஉம், ஈண்டுக் கூறுதீனவாயின வழக்கொடுபட்ட மரபு பிறழவுஞ் செய்யுளின்பம்படின் அவ்வாறுசெய்யவென்பதூஉங் கூறியவாறாயிற்று. "அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப் - பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பரிதி" எனவும் "நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென் - றன்னை கூறினள் புன்னையது நலனே" எனவும் வரும் அவற்றுட். பரிதியஞ்செல்வனைப் பருகுங் காலும் என்றலும் புன்னைமரத்தினை நுவ்வையென்றலும் மரபன்மையின் வழக்கினுண் மாற்றுதற்கு உரியவாமென்பது கருத்து. "நிலவுக் குவித்தன்ன வெண்மணல்" எனவும் "இருமணித் தன்ன வேனங் காணின்" எனவும் "இறாஅற் றன்ன விரும்பல் கூந்தல்", எனவும் வருவனவும் அவை. (க)

௫௫அ. ஏறு மேற்றையு மொருத்தலுங் களிறுஞ்
சேவுஞ் சேவலு மிரலையுங் கலையு
மொத்தையுந் தகரு முதளு மப்பரும
போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும
யாத்த வாண்பாற் பெயரென மொழிப.

(இ - ள்.) ஆண்பாற்பெயர் இவ்வெண்ணப்பட்ட பதினைந்தும். எ - று. பிறவுமென்றதனான் ஆணென்றும் விடையென்றும் வருவன போல்வனவுங் கொள்க.

இவற்றை வரையறைகூறும்வழி உதாரணங் காட்டுதும். யாத்த ஆண்பாற்பெயர் என்றதனாற் போத்தென்பது இளமைப்பெயராமாயினும் இங்ஙனம் ஆண்பாற்குச் சிறந்தவருமாறுபோலச் சிறவாது அதற்கென்பதுகொள்க. (உ)

௫௫௯. பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணு
மூடு நாகுங் கடமையு மளகு
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவு
மந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே.

(இ - ள்.) கூறப்பட்ட பதின்மூன்று பெயரும் பெண்மைப் பெயர். எ - று. கடமையென்பதோர் சாதிப்பெயர் உண்டேனும் அதுவன்று, ஈண்டெண்ணப்பட்டது பெண்மைமேற்றென்று கொள்க. அந்தஞ் சான்ற என்பது முடிபமைந்தன இவையென்றவாறு. எனவே, ஆணென்பது பெண்பெயராதலும் பெண் ஆணென்பன ஒருசார் புல்லிற்கும் சேர்தலுங் கொள்க. என்னை? ஆனேறென்பது ஆவி னுள் ஏறெனப்படுதலின். ஆணென்பது ஆண்பாற்குப் பொதுவாகலி ன் அது முடிபமையாதெனப்பட்டது. அது மேற்காட்டுதும். ஆண் மை பெண்மை புல்லிற்கின்மையின் அவையும் முடிபுடையன ஆகா வாயினுங் காயாப் பனையை ஆண்பனையென்றுங் காய்ப்பனவற் றைப் பெண்பனையென்றும் வழங்குப. இவையெல்லாம் வழக்காகலிற் செய்யுளுள் வருமாறு அறிந்து கொள்ளப்படும். இவற்றுக்கு மேல் வ ளையறைகூறும்வழி உதாரணங் காட்டுதும். (ங)

ருகூ0. அவற்றுட்,

பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை.

இது நிறுத்தமுறையானே இளமைப்பெயருள் முற்கூறிய பா ர்ப்பினைக கூறுவான் அதனோடொப்புமைகண்டு பிள்ளைப்பெயருங் கூ றுகின்றது. (இ - ள்.) இவ்விரண்டும் புள்ளிளமைக்குரிய. எ - று. இவையெல்லாம இக்காலத்து வழக்கினுள் அரியவாகலிற் சான்றோர் செய்யுளுட் காணப்படும். அல்லன வழக்கின்மேற் காட்டுதும. "மேற்காட் டிருந்த பார்ப்பினங்கள்' எனவும் "இல்லிறைப் பள்ளி தம் பிள்ளையொடு வதியும்" எனவும் "பைதற் பிள்ளைக் கிளிபயிர்ந் தாங்கு" எனவும் இவை பருந்தும் ஊர்க்குருவியுங் கிளியுமென்னும் பறவைமேல் வந்தன. பிறவும் அன்ன. புள்ளுக்குலம் பலவாகலான் இச்சூத்திரத்துள் அடங்கிய மரபு எத்துணையும் பலவாதனோக்கி மு தற்சூத்திரத்துட் பார்ப்பினை முறகூறினானென்பது. (ச)

ருகூக. தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன.

(இ - ள்.) பார்ப்பும் பிள்ளையுந் தவழ்பவற்றிற்கும் உரிய. எ - று. அவை ஆமையும் உடும்பும் ஓந்தியும் முதலையும் முதலாயி ன. ஆமையும் முதலையும் நீருள்வாழினும் நிலத்தியங்குங்காற் தவழ் பவையெனப்படும். உதாரணம் "யாமைப் பார்ப்பி னன்ன - காமங் காதலர் கையற விடினே" எனவுந் "தன்பார்ப்புத் தின்னு மன்பி ன் முதலை" எனவுந் தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வனொடு - பிள்ளை தின்னு முதலைத்தவ ரூரே" எனவும் வரும். தாமுமென்றதனான் ஊ

வனநடப்பனவுஞ் சிறுபான்மை பிள்ளைப்பெயர்க்கு உரியனகொள்க. அது பிள்ளைப்பாம்பென ஊர்வனமேல் வந்தது. "பிள்ளை வெருகிற் கல்கிளை யாகி" என நடப்பனமேல் வந்தது. மூங்காப்பிள்ளை என்பதும் ஈண்டே கொள்ளப்படும். பார்ப்பும் அவ்வாறு வருவன உளவேற், கொள்க. இதுவுந் தவழுஞ் சாதிக்கெல்லாம் பொதுவாகிய பரப்புடைமையின் இரண்டாவது வைத்தானென்பது. (ரு)

ருசுஉ. மூங்கா வெருகெலி மூவரி யணிலொ
டாங்கவை நான்குங் குட்டிக் குரிய.

இதுமேல் எடுத்தோத்தானும் இலேசானும் அதிகாரப்பட்ட தவழ்வனவும் நடப்பனவும் பற்றிக் குட்டியென்னும் பெயரினையு முறையன்றிக் கூறுகின்றது. (இ - ள்.) குட்டியெனப்படுவன இவை நான்கும். எ - று. அவை மூங்காக்குட்டி வெருக்குக்குட்டி எலிக்குட்டி அணிற்குட்டியெனவரும். மூவரியணிலென்றதனான் ஒழிந்தமூன்றுந் தம்முள் ஒருபிறப்பினவாம், இவையொருநிகரனவே என்பதுகொள்க. ஆங்கவை நான்கும் என்றதனாற் றத்துவனவற்றுக்குங் குட்டிப்பெயர் கொடுக்கப்படும். தவளைச்குட்டியெனவரும். மேல் ஊர்வனவற்றுக்குந் தவழ்வனவற்றிலக்கணம் எய்துவித்தமையாற் பாம்புக்குட்டியென்பதுங் கொள்க. மற்றுக் கீரியும் நாவியும்போல்பவற்றையுங் குட்டியென்றுரோவெனின், அவை பிள்ளையென்றலே பெரும்பான்மையாகலின் உரியவென்றதனாற் சிறுபான்மை குட்டியென்பதுங்கொள்க. மூங்காவின் விகற்பமென்பாருமுளர். (சு)

ருசுங. பறழெனப் படினு முறழாண் டிலவே.

(இ - ள்.) மேற்கூறிய நான்கும் பறழெனவும்படும். எ - று. இவை இக்காலத்து வீழ்ந்தன. மற்று முற்கூறிய நான்கினையும் இப்பெயரானே முற்கூறுக, முதற்சூத்திரத்துள் ஓதியமுறைமைக்கேற்பவெனின், அற்றன்று அவற்றுக்கு இப்பெயர் சிறுபான்மையென்பான் பிற்கூறினானென்பது. உறழாண்டில்லையென்ற மிகையானே "கைம்மை யுய்யாக் காமர் மந்திக் - கல்லா வன்பறழ்க் கிளைமுதற் சேர்த்தி" என்பதுங்கொள்க, (எ)

ருசுச, நாயே பன்றி புலிமுய லென்று
மாயுங் காலைக் குருளை யென்ப,

இது முறையானே நான்காம் என்னுமுறைமைக்கணின்ற குருளையாமாறுணர் - ற்று. (இ - ள்.) நாயும் பன்றியும் புலியும் மு

யதும் என நான்குங் குருளையென்று சொல்லப்படும். எ - று. "திற வாக் கண்ண சாய்செவிக் குருளை" எனவும் "விழியாக் குருளை மென்முலை சுவைப்பச் - குழிவயிற் றுஞ்சுங் குறுந்தாட் பன்றி" எனவும் "இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை" எனவுங் "குருளை கோட்பட லஞ்சிக் குறுமுயல் - வலையிற் றப்பாது மன்னுயி ரமைப்ப" எனவும் வரும். ஆயுங்காலையென்றதனாற் "சிறுவெள் ளரவி னவ்வரிக் குருளை" என்பதுங்கொள்க. (அ)

ருகரு. நரியு மற்றே நாடினர் கொளினே.

(இ - ள்.) நரியுங் குருளையெனப்படும். எ - று. "பிணந்தின் பெண்டிர்க்குக் குருளை காட்டிப் - புறங்காட் டோரி புலவுத் தசைபெறூஉம்" எனவரும். நாடினர்கொளினேயென்றதனானே "வெயிலாடு முசுவின் குருளை யுருட்டுங் - குன்ற நாடன் கேண்மை" என்றாற்போல முசுவிற்குங் குருளைப்பெயர் கொடுக்க. (க)

ருகசு. குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்.

(இ - ள்.) மேற்கூறிய ஐந்திணையுங் குட்டியென்றும் பறழென்றுங் கூறுதல்வரையார். எ - று. அவை நாய்க்குட்டி பன்றிக்குட்டி புலிக்குட்டி முயற்குட்டி நரிக்குட்டி என வழக்கினுள்வந்தன. "பாகிப் பரப்பிற் பறழொடு வதிந்த" எனவும் "வயமா னெறிந்த வன் பறழ் தழீஇ" எனவும் "புலிப்பற ழன்ன பூஞ்சினை வேங்கை" எனவும் "பதவுமேயல் பற்றி முயற்பற ழோம்புஞ் - சீறூ ரோனே நன்னுதல்" எனவும். "நரிப்பற ழுகவர நாய்முலை சுரக்கும்" எனவும் முறையானே வந்தன. நாயெனச் செந்நாய் நீர்நாய் முதலாயினவும் அடங்குமென்பது. மூவரியணிலென்றவழிச் சொல்லப்பட்டவாறும் உய்த்துணர்க. பிறவும் அன்ன. (கல)

ருகஎ. பிள்ளைப் பெயரும் பிழைப்பாண் டில்லை
கொள்ளுங் காலை நாயலங் கடையே.

(இ - ள்.) மேற்கூறிய ஐந்துசாதியுள்ளும் நாயொழிந்து ஒழிந்தநான்கற்கும் பிள்ளையென்னும் பெயர்க்கொடையும் உரித்து. எ - று. இவை செய்யுட்கண் வருவழி கண்டுகொள்க. கொள்ளுங்காலையென்றதனான் முற்கூறிய நாய்முதலாகிய நான்கும் விலக்கி நரிப்பிள்ளையென்பதே கோடலும் ஒன்று. (கக)

ருகஅ. யாடுங் குதிரையு நவ்வியு முழையு
மோடும் புல்வா யுளப்பட மறியே.

(இ - ள்.) இவ்வைந்து சாதியின் இளமைப்பெயர் மறியெனப்படும். எ - று. அவை "மறித்துருத் தொகுத்த பரிப்புற விடையன்" எனவும் "உள்ளில் வயிற்ற வெள்ளை மறி" எனவும் யாட்டின் மேல்வந்தன. மறிக்குதிரையெனவும் மறிநாகிற்றெனவுஞ் சொல் லுதலின் இது குதிரைக்கும் உரித்தாயிற்று. "நவ்வி நான்மறி கவ்விக் கடன்கழிக்கும்" எனவும் "மறியாடு மருங்கின் மடப்பிணை தழீஇ" எனவுந் "தெறித்துநடை மரபிற்றன் மறிக்கு நிழலாகி" எனவும் இவை நவ்வியும் உழையும் புல்வாயும் முறையானே மறியென்னும்பெயர் எய்தியவாறு அவ்வச்செய்யுளுட்கண்டுகொள்க. நவ்வியும் உழையும் புல்வாயுள் அடங்குமன்றே அவற்றை மூன்றாக ஓதியதென்னை? நாயென்றதுபோல அடங்காதோவெனின், மாவென்பது குதிரையும் ஆனையும் புலியுஞ் சிங்கமும் முதலாயவற்றுக்கெல்லாம் பெயராகலின் அவ்வாறு ஓதாமென்பது. ஓடும்புல்வாயென்றதனானே மடனுடையன நவ்வியெனவும் இடைநிகரன உழையெனவுங் கொள்க. எட்டாம் முறைமைக்கண் ஓதிய மறியினை ஐந்தாம்வழிக் கூறியவதனானே "செவ்வரைச் சேக்கை வருடை மான்மறி" என்றது போல்வன கொள்க. (கஉ)

டுசாக. கோடுவாழ் குரங்குங் குட்டி கூறுப.

(இ - ள்.) கோட்டினையே வாழ்க்கையாகவுடைய குரங்குங் குட்டியென்று கூறப்படும். எ - று. கோடுவாழ் குரங்கெனவே குரங்கின் பிறப்புப்பகுதியெல்லாங் கொள்க. அவை குரங்குக்குட்டி முசுக்குட்டி ஊகக்குட்டியென்பன. உம்மை இறந்ததுதழீஇயிற்றாதலான் மேற்கூறிய யாடுமுதலாகிய ஐந்துசாதிக்குங் குட்டியென்னும்பெயர் கூறப்படுமென்பது. அவை யாட்டுக்குட்டி குதிரைக்குட்டி நவ்விக்குட்டி உழைமான்குட்டி புல்வாய்க்குட்டி எனவரும். (கங)

டுஎ0. மகவும பிள்ளையும் பறழும் பார்ப்பு
மவையு மன்ன வப்பா லான.

(இ - ள்.) மேலைச்சூத்திரத்தெடுத்தோதிய குரங்கிற்குக் குட்டியென்னும் பெயரேயன்றி மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்புமெனப்பட்ட இந்நான்கும் குட்டியென்னும்பெயர்போல அக்குரங்கின் பகுதிக்கு உரியவாம். எ - று. "உயர்கோட்டு மகவுடை மந்தி போல" எனவுங் "குரங்குப்பிள்ளை" எனவும் "வரையாடு வன்பறழ்த் தந்தை" எனவும் "ஏற்பன வேற்பன வுண்ணும் - பார்ப்புடை மந்திய

மலையிறந் தோரே" எனவும் வரும். அன்னவென்பதனான் முன்னைய வற்றோடொக்கும் மிகுதி குறைவு இலவென்பதாம். "வெயிலாடு முசு வின் குருளை யுருட்டும்" என இலேசினாற் கூறிப்போந்தமையின் ஈண்டு அதுகூறிலனாயினான். அன்றி, அஃது இத்துணைப் பயிலாமை யானுமென்க. எழாமுறைநின்ற மகவினை ஈண்டு வைத்தான் அதிகா ரப்பட்ட பெயர்க்குரிமையானென்பது. (கச)

ருஎக. யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு மானோ டைந்துங் கன்றெனற் குரிய.

(இ - ள்.) ஐந்தாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற கன் றென்னும் பெயர்க்கு இவை உரிய. எ - று. அவை யானைக்கன்று குதிரைக்கன்று கழுதைக்கன்று கடமைக்கன்று ஆன்கன்று எனவ ரும். "கன்றுடை மடப்பிடிப் பூசல் பலவுடன் - வெண்கோட் டியானை விளிபடத் துழவும்" என்பது யானைக்கன்று. "கன்றுபுகு மா லை நின்றோ ளெய்தி" என்பது ஆன்கன்று. பிறவும் அன்ன உள வேற் கொள்க. இனி உரியவென்றதனானே மான்கன்று குதிரைக குட்டியென்பனவுஞ் சொல்லுப. (கரு)

ருஎஉ. எருமையு மரையும வரையா ராண்டே.

(இ - ள்.) எருமையும் மரையுங் கன்றெனப்படும். எ - று. அவை எருமைக்கன்று மரைமான்கன்று என்பனவழக்கு. "கன்று டை மரையா துஞ்சுங் - குன்ற நாடற் கண்ட வெங்கண்ணே" எனவரும். வரையாரெனவே அவையெல்லாம்போலாது சிறுவர வின என்பது பெற்றாம். (கசு)

ருஎங. கவரியுங் கராமு நிகரவற் றுள்ளே.

இஃது அவற்றோடு மாட்டெறிந்தது. (இ - ள்.) கவரியுங் கராமுங் கன்றெனப்படும். எ - று. கவரிமான்கன்று கராக்கன்று எனவரும். அவற்றுள்ளேயென்பது முற்கூறிய எழுனுண் முதனி ன்ற யானையோடொக்குமென்றவாறு. இதன்பயம் "குஞ்சரம் பெ றுமே குழவிப் பெயர்க்கொடை" எனவருகின்றபெயருய் இவற்று க்கெய்துவித்தலாயிற்று. அது முன்னர்ச் சொல்லுதும். இவை யெல்லாந் தம்மினொத்த வரவின அன்மையின் வேறுவேறு சூத்தி ரஞ் செய்கின்றவாறாயிற்று. (கஎ)

ருஎச. ஓட்டக மவற்றோ டொருவழி நிலையும்.

(இ - ள்.) சிறுபான்மை ஒட்டகமுங் கன்றெனப்படும். எ-று. அது ஒட்டகக்கன்று எனவரும். ஒருவழியென்றதனுனே வெற்றினும் இது சிறுபான்மையெனவுணர்க. (க௮)

௫எ௫. குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை

(இ - ள்.) ஒழிந்துநின்ற குழவிப்பெயர் குஞ்சரத்திற்கு உரிய. எ - று. அது "ஒய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி" என வரும். நிகரவற்றுள்ளென மேற் குஞ்சரததோடொக்குமெனப்பட்ட கராத்தின்குழவியுங் கவரிக்குழவியும் வந்தவழிக்கண்டுகொள்க. (க௯)

௫எ௬. ஆவு மெருமையு மவைசொலப் படுமே.

(இ - ள்.) ஆவும் எருமையும் அவைபோலக் குழவிப்பெயர்க்கொடை பெறும். எ - று. குஞ்சரம் ஆணும் பெண்ணுமென இருகூறனவாகலான் அவையென்றான். மேகன்மேல் வருங்காலும் இஃதொக்கும். "மக்கட் குழவி யெனவந் தனரே - நோவே மாருத லறிந்துஞ் - சேயர் தோழி செய்ந்நாட் டோரோ" என்பது ஆன்குழவி. "மோட்டெருமை முழுக்குழவி - கூட்டுநிழற் றுயில்வதியும்" என்றது எருமைக்குழவி. (உ௦)

௫எஎ. கடமையு மரையு முதனிலை யொன்றும்.

(இ - ள்.) இவையும் அப்பெயர்க்கு உரிய. எ - று. குஞ்சரம்போலக் குழவிப்பெயர்பெறுமென்பான் முதனிலையொன்றுமென்றானென்பது. அவை வந்துழிக் கண்டுகொள்க. (உக)

௫எ௮. குரங்கு முசுவு மூகமு மூன்று
நிரம்ப நாடி னப்பெயர்க் குரிய.

(இ - ள்.) இம்மூன்றுங் குழவியென்னும் பெயர்க்கு உரிய. எ - று. நிரம்பநாடினென்பது மூன்றுபெயரும் ஒருபிறப்பின்பகுதியாகலின் அம்மூன்றற்கும் ஒப்பவருமென்றவாறு. இக்கருத்தானே "கோடுவாழ் குரங்கு" என்றவழி இம்மூன்றுங் கொண்டாமென்பது. இவற்றுக்கு உதாரணங் காணாமையிற் காட்டாமாயினும், இலக்கணம் உண்மையின் அமையுமென்பது. (உஉ)

௫எ௯. குழவியு மகவு மாயிரண் டல்லவை
கிழவ வல்ல மக்கட் கண்ணே.

(இ - ள்.) குழவியும் மகவுமென்னும் இரண்டுமல்லது மக்கட்கணின்ற இளமை தமக்கு வேறுபெயருடையவல்ல. எ - று. ஆணி

ளமையும் பெண்ணிளமையுமென இரண்டாகலின் அவற்றை அவை யெனப் பன்மைகூறினான். "காவல குழவிகொள் வாரி னோம்புமதி" எனவும் "மான்றேற் பள்ளி மகவொடு முடங்கி" எனவும் வரும். கிழவவல்லவென்ற மிகையானே ஆண்பிள்ளை பெண்பிள்ளையெனப் பிள்ளைப்பெயரும் மக்கட்பாற்படுவன கொள்க. (உ௩)

௫அ௦. பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
கொள்ளவு மமையு மோரறி வுயிர்க்கே.

(இ - ள்.) பிள்ளை குழவி கன்று போத்தென்னும் நான்கும் ஓரறிவுயிரின் இளமைப்பெயர். எ - று. ஓரறிவுயிரொன்பன முன்னோர்ச் சொல்லப்படும். ஓரறிவுயிரொன்பது பண்புத்தொகை. கமுகம் பிள்ளை தெங்கம்பிள்ளை எனவும் "வீழி றாழைக் குழவித் தீநீர" எனவும் பூங்கன்று எனவும் போத்துக்கால் எனவும் வரும். வீழிறாழை யெனப்பட்டது தெங்கு, போத்துக்காலென்பது கரும்பு. ஓரறிவுயிர்க்குக் கொள்ளவும் அமையும் என்னும் உம்மையை எச்சப்படுத்துப் பிறவழியுங் கொள்ளப்படும். அவை குழவிவேனில் குழவித்திங்கள் குழவிஞாயிறு எனவும் "பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்து" எனவும், "புலிப்போத் தன்ன புல்லணற் காளை" எனவும் இவையும் இளமைக்குறிப்பினவாகலிற் காட்டப்பட்டன மற்று ஓரறிவுயிரண்டுக் கூறியதென்னையெனின், குழவிப்பெயர் அதிகாரப்பட்டமையானென்பது. மற்றுப் புல்லும் மரனும் உயிரெனப்படுமோவெனின் அவற்றையுயிரொன்றன் மரபுபட்ட வழக்காகலின் அம்மரபுங் கோடற்குக் கூறினான், மரம் உய்ந்ததென்பவாகலின். (உ௪)

௫அக. நெலலும் புலலு நேரா ராண்டே.

இஃது எய்தியதுவிலக்குகின்றது. (இ - ள்.) அந்நான்கு பெயரானும் நெல்லும் புல்லுஞ் சொல்லப்படா. எ-று. மற்றுப் "புறக்கா ழனவே புல்லென மொழிப" எனுமாகலான் மேற்காட்டிய கமுகு முதலாகிய புல்லும் விலக்குண்ணும் பிறவெனின், அற்றன்று; புல்லென்பது பலபெயரொருசொல்லாகலான் நெல்லென்னும் இனத்தானே வேறுபடுத்துப் புல்லென்பது உணவின்மேற் கொள்க. (உ௫)

௫அஉ. சொல்லிய மரபி னிளமை தானே
சொல்லுங் காலை யவையல திலவே.

இதுபுறனடைச்சூத்திரம். (இ - ள்.) சொல்லிய மரபின் இளமை="பாடலுட் பயின்றவை நாடுங் காலை" எனவும் "பாடல் சான்ற புலனெறி வழக்கு" எனவும் அகத்திணையியலுட் கூறிய புலனெறி

வழக்கிற்ருகிய இளைமை : சொல்லுங் காலை அவையலது இல = அவற்றுக்கு இலக்கணங்கூறுங்கால் வேறுபலவின்றிவரும் இங்ஙனம் வரையறைப்பட்டன இன்றி. எ - று. இளமையும் அவையலதிலவெனவே அதற்கு மறுதலையாகிய முதுமையாயின் அவையலதிலவென்பதோர் வரையறைப்படுத்து இலக்கணங்கூறப்பட்டதாவென்பது கருத்து சொல்லுங்காலையென்றதனாற் சொல்லாத இளமைப்பெயருங்கொள்க. அவை "நன்ருட் பூத்த நாகிள வேங்கை" எனவும் நாருவளை எனவும் "கணைக்கோட்டு வாளைச் சமஞ்சூன் மடாகு" எனவும் "எருமை நல்லான் கருநாகு பொருஉம்" எனவும் வரும். இவற்றுள் ஓரறிவுயிர் முதலாக ஐந்தறிவுயிரளவும் நாகென்னும் இளமைப்பெயர் வரையறையின்றிச் சென்றது. வண்டென்பதற்கும் ஒக்கும், அது விரவுப்பெயராகலின். (உசு)

ருஅரு. ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே
யிரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே
யைந்தறி வதுவே யவற்றொடு செவியே
யாறறி வதுவே யவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.

இது மேல் அதிகாரப்பட்ட ஓரறிவுயிர் உணர்த்தும்வழி அவ்வினத்தனவெல்லாங் கூறுதல் நுதலிற்று. (இ - ள்.) ஒன்றறிவதென்பது ஒன்றனையறிவது அஃதாவது உற்றறிவதெனவும், இரண்டறிவதென்பது அம்மெய்யுணர்வினேடு நாவுணர்வுடையதெனவும், மூன்றறிவுடையது அவற்றோடு நாற்றவுணர்வுடையதெனவும், நான்கறிவது அவற்றோடு கண்ணுணர்வுடையதெனவும், ஐந்தறிவது அவற்றோடு செவியுணர்வுடையதெனவும், ஆறறிவுடையது அவற்றோடு மனவுணர்வுடையதெனவும், அம்முறையானே நுண்ணுணர்வுடையோர் நெறிப்படுத்தினர். எ - று. இது முறையாதற்குக் காரணமென்னையெனின், எண்ணுமுறையாற் கூறினுரென்பது. அல்லதூஉம், எல்லாவுயிர்க்கும் இம்முறையானே பிறக்கும் அவ்வவற்றுக்கோதிய அறிவுகளொன்றற்கு அம்முறையாற் கூறினுரொன்பது. என்னை அதுபெறுமாறெனின், நேரிதினுணர்ந்தோர்நெறிப்படுத்தினரென்பதனாற் பெறுதும். மற்று ஒன்றுமுதல் ஐந்திறுகிய பொறியுணர்வு மனமின்றியும் பிறப்பனபோல வேறுகூறியதென்னையெனின், ஓரறிவுயிர்க்கு மனமின்

மையின் அங்ஙனங் கூறினுரென்பது. அதற்கு உயிருண்டாயின் மனமின்ருமோவெனின், உயிருடையவாகிய நந்துமுதலாகியவற்றுக்குச் செவிமுதலாகிய பொறியின்மை கண்டிலேயோவென்பது. அவ்வாறே ஒழிந்தவற்றிற்கும் மனவுணர்வில்லையென்பாரும் மனமுண்டென்பாருமென இருபகுதியர். அவையெல்லாம் வல்லார்வாய்க் கேட்டுணர்க. அல்லதூஉம் பொறியுணர்வென்பதாமே உணரும் உணர்ச்சி. அங்ஙனம் உணர்ந்தவழிப் பின்னர் அவற்றை மனஞ் சென்று கொள்ளுமென்பதென்னையெனின், மனம் ஒன்றினைநினையாநிற்க மற்றொன்று கட்புலனுயக்கால் அதனைப் பொறியுணர்வுகொள்ள அதன்வழியே மனந் திரிந்து செல்லுமாகலின். என்னை ? மனனுணர்வு மற்றோர்பொருட்கண் நின்றகாலத்துப் பிறபொருட்கட் சென்றதெனப் படாதன்றே? பின்னர் அதனை அறிவித்தது பொறியுணர்வாகலான் அவை தம்மின்வேற்றுமையுடையனவென்பது. அல்லதூஉந் தேனெய்யினை நாவின்பொறி உணர்ந்தவழி இன்புற்றுங் கண்ணுள்வார்த்து மெய்யுணர்வுணர்ந்தவழித் துன்புற்றும், நறிதாயின மான் மதத்தினை மூக்குணாவுணர்ந்தவழி இன்புற்றுங் கண்ணுணர்ந்தவழி இன்பங்கொள்ளாமையும் வருதலின் அவை பொறியுணர்வெனப்படும். மனவுணர்வும் ஒருதன்மைத்தாகல்வேண்டுமோவெனின், ஐயுணர்வின்றிக் கனுப்போலத் தானேயுணர்வது மனவுணர்வெனப்படும். பொறியுணர்வு மனமின்றிப் பிறவாதெனின் முற்பிறந்தது மனவுணர்வாமாகவே பொறியுணர்வென்பது ஓரறிவின்ருகியே செல்லுமென்பது. அற்றன்றியும் ஒருவனுறுப்பிரண்டு தீண்டியவழி அவ்விரண்டும் படினும் ஒருகணத்துள் ஒருமனமே இருமனப்பட்டு அவ்வுறுப்பிரண்டற்கும் ஊற்றுணர்வு கெடாது கவர்ப்ப வாங்கிக் கைக்கொண்டு மீளுமென்பது காட்டலாகாமையானும் அஃதமையாதென்பது. (உஎ)

ருஅச. புல்லு மரனு மோரறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இது முறையானே ஓரறிவுடையனவுணர் - ற்று. (இ - ள்.) புறக்காழனவாகிய புல்லும் அகக்காழனவாகிய மரனும் ஓரறிவுடைய. பிறவும் அக்கிளைப் பிறப்பு உள்ளன. எ - று. கிளைப்பிறப்பென்பது கிளையும் பிறப்புமென்றவாறு. கிளையென்பன புறக்காழும் அகக்காழுமின்றிப் புதலுங் கொடியும் போல்வன. பிறப்பென்பன மக்களானும் விலங்கானும் ஈன்ற குழவி ஓரறிவின ஆகிய பருவமும் எஞ்ஞான்றும் ஓரறிவினவேயாகிய என்பில் புழுவுமென இவை. இவை வேறுபிறப்பெனக் கொள்க. மற்று இவற்றுக்கு அறிவில்லை

பிறவெனின், பயிலத்தொடங்காற் புலருமாகலின் ஓரறிவுடையவெ ன வழக்குநோக்கிக் கூறினான் இது வழக்குநூலாதலின். அஃதேல் இவை உணர்ச்சியாயின் இன்பதுன்பங் கொள்ளுமோவெனின் அ தற்கு மனமின்மையின் அது கடாவன்றென்பது. (உஅ)

௫அ௫. நந்து முரளு மீரறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இது முறையானே ஈருணர்வுடையனவுணர்த்து. (இ-ள்.) நந்தும் முரளும் ஈரறிவாகிய ஊற்றுணர்வும் நாவுணர்வுமுடையன. பிறவும் அக்கிளைப் பிறப்பு உள. எ-று. இவை சுவைகோடலும் பிறி தொன்று தாக்கியவழி அறிதலுமுடைமையின் மெய்யுணர்வோடு நாவுணர்வுமுடையனவென்றவாறு. இவற்றுக்குக் கிளையென்பன இளி ஞ்சிலும் முற்றிலும் முதலாகிய கடல்வாழ் சாதியும் பிறவுமெனக்கொ ள்க. பிறப்பென்பன முற்கூறியவாறே கொள்ளப்படும். (உகூ)

௫அசு. சிதலு மெறும்பு மூவறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

இது மூவறிவினகூறுகின்றது. (இ-ள்.) சிதலும் எறும்பும் ஊற்றுணர்வும் நாவுணர்வும் மூக்குணர்வுமுடைய. அவற்றுக் கிளையும் பிறப்பும் அவ்வாறே மூவறிவுடைய. எ-று. இவை உற்றுணர்ந்துமீடலும் நாச்சுவைகோடலும் மெய்யுள்வழி மோந்தறிதலுமென மூன்றறிவினையுடையவாறு கண்டுகொள்க. இவற்றுக்குக் கண்ணுஞ் செவியுமின்மை எற்றான் அறிதுமெனின், ஒன்று தாக்கியவழியன்றி அறியாமையிற் கண்ணிலவென்பதறிதும். உரப்பியவழி ஓடாமையிற் செவியிலவென்பதறிதும். இவற்றின் கிளையென்பன ஈயன் மூதா போல்வன. பிறப்பென்பன முற்கூறியவாறே மக்கட்குழவியும் விலங்கின்குழவியும் இம்மூன்றுணர்வாகிய பருவத்தனவும் அட்டைமுதலாகியவுமெல்லாங் கொள்க. (௩0)

௫அஎ. நண்டுந் தும்பியு நான்கறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே.

நண்டுந் தும்பியும் நான்கறிவினவெனவும் அந்நாலறிவினை யுடைய கிளையும் பிறப்பும் வேறுளவென்பதூஉங் கூறியவாறு. (இ-ள்.) நண்டிற்குந் தும்பிக்குஞ் செவியுணர்வொழித்து ஒழிந்த நான்கு உணர்வும் உள. அவற்றுக் கிளையும் பிறப்பும் பிறவும் உள. எ-று. மெய்யுடைமையின் ஊற்றுணர்வும் இரைகோடலின் நாவுணர்வும் நாற்றங்

கோடலின் மூக்குணர்வுங் கண்ணுடைமையிற் கண்ணுணர்வுமுடைய வாயின. நண்டிற்கு மூக்குண்டோவெனின், அஃது ஆசிரியன் கூறலான் உண்டென்பதுபெற்றும். இவற்றுக்குக் கிளையென்பன வண்டுந் தேனீயுங் குழவியும் முதலாயின. பிறப்பென்பன நான்கறிவுடைய பிறசாதிகளென முற்கூறியவாறேகொள்க. (கக)

ருஅஅ. மாவு மாக்களு மையறி வினவே
பிறவு முளவே யக்கிளைப பிறபபே.

இஃது ஐயறிவுடையன கூறுகின்றது. (இ - ள்) ஐயறிவுடையன விலங்கும் அவை போல்வன ஒருசார மாககடங்களுமாம். அக்கிளைப்பிறப்புப் பிறவும் உள. எ - று. மாவென்பன நாற்கால்விலங்கு. மாககளெனப்படுவார் மனவுணர்ச்சியில்லாதார். கிளையென்பன எண்கால்வருடையுங் குரங்கும்போல்வன. எணகாலவாயினும் மாவெனப்படுதலின் வருடைகிளையாயிற்று. குரஙகு நாற்காலவாகலிற் கிளையாயிற்று. பிறப்பென்பன கிளியும் பாம்பும் முதலாயின. மற்றுப் பாம்பிற்குச் செவியுங் கண்ணும் ஒன்றேயாகிக கட்செவியெனப்படுமாகலின் ஐயறிவில்லை பிறவெனின், பொறியென்பன வடிவுநோககின அல்லவாகலின் ஒன்றே இரண்டுணர்விற்கும் பொறியாமென்பது. கிளியென்பது பறவையாகலின் அதனை வேறோதுகவெனின், முன்னையவற்றிற்கும் பறவையென்றோதியதிலனுகலான் அவ்வச்சூத்திரங்களானே எல்லாம் அடங்குமென்பது. மற்றுப் புல்லும் மரனும் முதலாக இவ்விரண்டு பிறப்பெடுத்தோதி ஒழிந்தனவற்றையெல்லாம் பிறவுமுளவெனப் புறனடுத்ததென்னையெனின், அவைவரையறையிலவாகலின் அங்ஙனங்கூறினன். அல்லதூஉம் மக்களும் புள்ளும் விலங்கும் முதலாயின ஓரறிவினவென்றும் ஈரறிவினவென்றும் எண்ணி வரையறுக்கப்படாமையானும் அவ்வாறுகூறினனென்பது. (கஉ)

ருஅக. மக்க டாமே யாறறி வுயிரே
பிறவு முளவே யக்கிளைப பிறப்பே.

இஃது ஆறறிவுயிர்கூறுகின்றது. (இ - ள்.) மக்களெனப்படுவார் ஐம்பொறியுணர்வேயன்றி மனமென்பதோர் அறிவும் உடையர். அக்கிளைப் பிறப்பு வேறும் உள. எ-று. முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற்பட்டு அறிவொடுபுணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்களெனப்படும். அவ்வாறு உணர்வினுங் குறைவுபட்டாரைக் குறைந்தவகை அறிந்து முற்கூறிய சூத்திரங்களானே அவ்வப் பிறப்பினுட் சேர்த்திக்கொள்ள வைத்தானென்பது. அவை ஊமுஞ் செவிடுங் குருடும்போல்வன. கிளையெனப்படுவார் தேவருந் தானவரும் முதலாயினர். பிற

ப்பெண்ற ஈனுற் குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையனவெனப் படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராயடங்குமென்பது. தாமேயெனப் பிரித்துக் கூறினமையான் நல்லறிவுடையாரொன்றதற்குச் சிறந்தாரொன்பதுங் கொள்க. (ககூ)

ருகூo. வேழக் குரித்தே விதந்து களிறென்றல்
கேழற் கண்ணுங் கடிவரை யின்றே.

மக்கடாமே ஆறறிவுயிரெனப் பிரித்துக் கூறினமையால் ஆண்பால் அதிகாரப்பட்டதுகண்டு மற்றை விலங்கினுள் ஆண்பாற்குரியன கூறிய தொடங்கியவாறு. நிறுத்தமுறையாற் கூறுது களிற்றினை முற்கூறினன் அப்பொருள் விலங்கினுட் சிறந்தமையானென்பது. ஏறும் ஏற்றையும் பயின்ற வரவினவாகலின் முதற்சூத்திரத்துண் மூற்கூறிருனென்பது. (இ - ள்.) யானைக்கு விதந்து களிறென்றலுரித்து; கேழற்கண்ணுஞ் சிறுபான்மைவரும். எ - று. விதந்தென்ற விதப்பினுற் களிறென்பது சாதிப்பெயர்போலவும் நிற்குமென்பது. அஃதாவது யானையென்னுஞ் சாதிப்பெயரினைக் களிறென்னும் பெயர்வந்து சிறப்பித்தாற் "கடுங்களிற் றொருத்தல்" என்றும் ஆகுமென்பது. "இரலைமானேறு" என்பதும் அதனுற்கொள்க. பன்றிக்கும் இவ்வாறு வருவனவுளவேற் சொள்க. கேழற்பன்றி என்பதனைக் களிற்றுப்பன்றியென்றுஞ் சொல்லுப. (கச)

ருகூக. புல்வாய் புலியுழை மரையே கவரி
சொல்லிய கராமோ டொருத்த லொன்றும் (கரு)

ருகூஉ. வார்கோட் டியானையும் பன்றியு மன்ன. (கசா)

ருகூங. ஏற்புடைத் தென்ப வெருமைக் கண்ணும்.

இவை உரையியைபுநோக்கி உடனெழுதப்பட்டன. (இ-ள்.) இவை ஒன்பதுபெயரும் ஒருத்தலென்னும் பெயருக்கு ஒன்றும். எ-று. இவற்றைப் பெரும்பான்மை சிறுபான்மைபற்றி மூன்றுசூத்திரத்தான் ஓதினுனென்பது. உதாரணம், "காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்" என யானை ஒருத்தலென்றுயிற்று. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க. (கஎ)

ருகூச. பன்றி புல்வா யுழையே கவரி
யென்றிவை நான்கு மேறெனற் குரிய. (கஅ)

ருகூரு. எருமையு மரையும் பெற்றமு மன்ன. (கசு)

ருகூசா. கடல்வாழ் சுறவு மேறெனப் படுமே. (சo)

இம்மூன்றுசூத்திரத்தான் ஓதிய எட்டுச்சாதியின் ஆண்பாலும் ஏறெனப்படும். எ - று. "காற்றுச்சுவ டொற்றிக் கடிபுனங் கவரு- மேற்றிளம் பன்றியி னிருளை வெரூஉம்" எனவும் "வெருளேறு பயிரு மாயகண்" எனவும் "பொரிமலர்ந் தன்ன பொறியமை மடமா-திரிமருப் பேற்றொடு தேரதேர்க் கோடும்" எனவும் "ஏற்றிளங் கவரியெ ரியென வெருவப் - பூத்த விலவத்துப் பொங்க ரேறி" எனவும் "எற்றெருமை நெஞ்சம் வடிப்பி னிடந்திடு" எனவும் "வரிமரற் பரவைம்மாயேறு கொறிகரும்" எனவும் "புலம்பயிர்க் குந்த வண்ண னல்லேறு" எனவுஞ் "சுறவே றெழுதிய மோதிரந் தொட்டு" எனவும் வரும். பிறவும் அன்ன. (௪௰)

௫௯௭. பெற்ற மெருமை புலிமரை புல்வாய்
மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே. (௪௧)

௫௯௮. நீர்வாழ் சாதியு ளறுபிறப் புரிய. (௪௨)

௫௯௯. மயிலு மெழாலும் பயிலத் தோன்றும். (௪௩)

(இ - ள்.) போத்தென்னும்பெயர் இப்பதின்மூன்றுசாதியின் ஆண்பாற்குமுரியது. எ - று. மற்றிவையெல்லாமென்றதனாற் பன்றியும் ஒந்தியும் முதலாயினவுங் கொள்ளப்படும். நீர்வாழ்சாதியுள் அறுபிறப்பென்பன சுறவும் முதலையும் இடங்கரும் கராமும் வராலும் வாளையுமென இவை. பயிலத்தோன்றுமென்றதனானே நாரைமுதலியனவுங்கொள்க. மற்றிவை பயிலத்தோன்றுமெனிற் சூத்திரம் வேறு செய்ததென்னை முதற்சூத்திரத்துள் எண்ணுக பிறவெனின், இவை பறவையுட் பயிலத்தோன்றுமாகலின் வேறோதினனென்க 'எறிபோத்து உழுபோத்து எனவும் எருமைப்போத்து எனவும் "புலிப்போத்தன்ன புல்லணற் காளை" எனவும் மரைப்போத்து எனவுங் "கவைத்தலை முதுபோத்து மறிக்கு நிழலாகும்" எனவும் வரும். எல்லாமென்றதனாற் பன்றிப்போத்தெனவும் வரும். "முதலைப் போத்து முழுமீ னாரும் - பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்து" எனவும் "வாளை வெண்போத் துணீஇய" எனவும் நீர்வாழ்சாதியுட்சிலவருமாறு. "மயிற்போத தூர்ந்த வயிற்படை நெடுவேள்" எனவும் "போத்தோடு வழங்கா மயிலு மெழாலும்" எனவும் வந்தவாறு. பயிலவென்றதனால் "நாரைப்போத் தயிரையாரும்" எனவும் ஒழிந்தனவும் இவ்வாறேகண்டு கொள்க. மற்று முதலையும் இடங்கரும் கராமுந் தம்மின்வேறெனப்படுமோவெனின் "கராஅங் கலித்த குண்டு கண்கழி-யிடங்கருங் குட்டத் துடன்றொக் கோடி- யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங் - கடுமுர

ண் முதலைய நெடுங் கிளைஞ்சி" எனவேறெனக் கூறப்பட்டனவென் பது. இனிச் செம்போத்தென்பதும் ஈண்டுக் கொள்ளாமோவெனின், அது பெண்பாற்கும் பெயராகலின் ஒருபெயரோ பண்புகொள்பெயர ன்றென்பதுணர்க. (சங)

சூ00. இரலையுங் கலையும் புல்வாய்க் குரிய. (சச)

சூ0க. கலையென் காட்சி யுழைக்கு முரித்தே (சரு)

சூ0உ. நிலையிற் றப்பெயர் முசுவின் கண்ணும். (சசூ)

இவைமூன்றுசூத்திரமும் எண்ணியமூன்றுசாதிக்கும் இரலை யுங் கலையுமென்னும் ஆண்பாற் பெயர் இன்னவாறுரியவென்கின் றன. (இ - ள்.) இரலையுங் கலையுமென்பன புல்வாய்க்குரிய; அவற் றுட் கலையென்பது உழைக்குரித்து; அக்கலையென்பது முசுவிற்கு வருங்கால் உழைக்குப்போலச் சிறுவரவிற்றன்றி வரும். எ - று. "புல்வா யிரலை நெற்றி யன்ன" எனவும் "கவைத்தலை முதுகலை கா லினொற்றி" எனவுங் "கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை" எ னவும் "மைபட் டன்ன மாமுக முசுக்கலை" எனவும் வரும். முசுவி ற்கு நிலைபெற்றதெனவே அத்துணைநிலைபேறின்றிக் குரங்கிற்கு வரு வனவுங் கொள்க. அது "கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்று" என வருமாற்றான் அறிக. (சஎ)

சூ0ங. மோத்தையுந் தகரு முதளு மப்பரும்
யாத்த வென்ப யாட்டின் கண்ணே.

(இ - ள்.) இக்கூறப்பட்ட நான்குபெயரும் யாட்டிற்குரி ய. எ - று. அவை "வெள்யாட்டு மோத்தை" எனவுந் "தகர்ம ருப் பேப்பப்பச் சுற்றுபு திரிந்த" எனவும், "உதளெடுந் தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்" எனவும் வரும். அப்பரென்பது இ க்காலத்து வீழ்ந்தது போலும். யாத்தவென்றதனாற் கடாயென்ப தும் யாட்டிற்குப் பெயராகக் கொள்க. அது "நிலைக்கோட்டு வெ ள்ளை நரல்செவிக் கடாஅய்" எனவரும். இனிக் குரங்கினை அப்ப ரென்றலுங் கொள்க. (சஎ)

சூ0ச. சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு
மாயிருந் தூவி மயிலலங் கடையே.

(இ - ள்.) பறப்பனவற்றுள் ஆண்பாற்கெல்லாஞ் சேவற்பெய ர் உரித்து; அவற்றுள் மயிற்காயின் அஃதாகாது. எ-று. "காமர் சே வ லேமஞ் செப்ப" எனவும் "வளைக்கட் சேவல் வாளாது மடியின்"

எனவுந் "தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்" எனவுங் "கானங் கோழிக் கவர்குரற் சேவல்" எனவும் "உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்" எனவும் வரும். பிறவும் அன்ன. மாயிருந் தூவிமயில் லென்றதனுன் அவை தோகையுடையவாகிப் பெண்பால் போலுஞ் சாயலவாகலான் ஆண்பாற்றன்மை இலவென்பது கொள்க. எனவே, செவ்வேள் ஊர்ந்த மயிற்காயின் அதுவும் நேரவும்படுமென்பது. (சஅ)

கூ0ரு. ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லா
மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப.

(இ - ள்.) ஏற்றையென்னுஞ்சொல் ஆற்றலொடு கூடிய ஆண்பாற்கெல்லாம். உரித்து. எ—று. அவை "குறுக்கை யிரும்புலிக் கொள்வ லேற்றை" எனவுஞ் "செந்நா யேற்றை கம்மென வீர்ப்ப" எனவுங் "கொடுந்தாண் முதலைக் கொள்வ லேற்றை" எனவும் வரும். இக்கருத்தினனே "பிணர்மோட்டு நந்தின் பேழ்வா யேற்றை" எனவும் "புன்றாள் வெள்ளெலி மோவா யேற்றை" எனவுங் கூறினர். அவையும் அப்பெயரானே வழங்குதல் ஆற்றலுடையவாகத் தோன்றும். எல்லாமென்றதனற் சிறுபான்மை ஆற்றல் இல்லாதனவுங் கொள்க. அது "சுடுகாட்டு ளேற்றைப் பனை" என்பது போன்று வருவன. பிறவும் அன்ன. (சகூ)

கூ0சு. ஆண்பா லெல்லா மாணெனற் குரிய
பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய
காண்ப வவையவை யப்பா லான.

இது மேற்கூறிய ஆண்பாற்பெயர்க்கும் இனிவரும் பெண்பாற்பெயருக்கும் புறனடை. (இ - ள்.) ஆணென்னுஞ்சொல் எல்லாச் சாதியுள் ஆண்பாற்கும் உரித்து; பெண்ணென்னுஞ்சொல் எல்லாச்சாதியுட் பெண்பாற்கும் உரித்து; வழக்கினுள் அவ்வாறு காணப்படும் அவை. எ - று. அவை ஆண்யானை பெண்யானை ஆண்குரங்கு பெண்குரங்கு ஆண்குருவி பெண்குருவி என்றாற்போல்வன. இவை காணப்படுமெனவே இத்துணை விளங்கவாராது சிறுவரவினன் வருவனவுமுள இருபாலுமல்லாதனவென்பது. ஆணலி பெண்ணலி எனவும் ஆண்பனை பெண்பனை எனவும் வரும். பிறவும் அன்ன. (ரு0)

கூ0எ. பிடியென் பெண்பெயர் யானை மேற்றே.

இது முறையானே மூவொன்றும் எண்ணுமுறைமைக்கணின்ற பெண்மைப்பெயர் கூறிய தொடங்கி ஆண்பாலிற் களிறு முற்கூறியவாறு

போலப் பிடியினை மூற்கூறியது. (இ-ள்.) பிடியென்னும் பெயர் யானைக்கண்ணது. எ-று. அது "பிடியடி மூருக்கிய பெருமாப் பூசல்" எனவரும். பெயரொன்றதென்னையெனின், அவை தொடங்குகின்றதென்பது அறிவித்தற்கென்பது. (௫௪)

௬௦௮. ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை
பெட்டை யென்னும் பெயர்க்கொடைக் குரிய.

(இ-ள்.) ஒட்டகமுங் குதிரையுங் கழுதையும் மரையாவும் பெட்டையென்னும் பெயர்பெறும். எ-று. ஒட்டகப்பெட்டை குதிரைப்பெட்டை கழுதைப்பெட்டை மரையான்பெட்டை எனவரும்.()

௬௦௯. புள்ளு முரிய வப்பெயாக் கென்ப.

(இ-ள்.) எல்லாப்புள்ளும் பெட்டையென்னும் பெயரான் வழங்குதற்குரிய. எ-று. அவை கோழிப்பெட்டை மயிற்பெட்டை யெனவரும். பிறவும் அன்ன. (௫௧)

௬௧௦. பேடையும் பெடையு நாடி னொன்றும.

(இ-ள்.) பேடையும் பெடையுமென்னும் இரண்டும் முன்னர்நின்ற புள்ளிற்கு ஒன்றும். எ-று. அவை குயிற்பேடை அன்னப்பெடை எனவரும். நாடினென்றதனுற பெட்டையென்பது வழக்கினுட்பயிலாவென்பது. (௫௪)

௬௧௧. கோழி கூகை யாயிரண் டல்லவை
சூழுங் காலை யளகென லமையா. (௫௫)

௬௧௨. அப்பெயாக் கிழமை மயிற்கு முரித்தே. (௫௬)

(இ-ள்.) கோழியுங் கூகையும் மயிலுமென்பனவற்றுக்கு அளகென்னும் பெயர் உரியது. எ-று. "மனையுறை யளகின் வாட லொடு பெறுகுவிர்" என்பது கோழி. பிறவும் அன்ன. (௫௬)

௬௧௩. புல்வாய் நவ்வி யுழையே கவரி
சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே.

(இ-ள்.) பிணையென்னும் பெண்பெயர்க்குரியன இவைநான்கும். எ-று. "அலங்கல் வார்கழை யுதிரனென் ஞேக்கிக் கலை பிணை விளிக்குங் கானத் தாங்கண்" எனவுஞ் "சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை" எனவுஞ் "சிறுதலை நவ்விப் பிணையிற் றிரிந்த நெறிகோட்டு" எனவுங் "கவரி மான்பிணை நரந்தங் கனவும்" எனவும் வரும். சொல்வாய் நாடிற் பிணையெனப்படுமே என்பது பிணையென்னுஞ் சொற்பொருளினை உண்மைநோக்கிற் பிரியாது பிணையும்

பிறசாதிக்குஞ் சேவறகுஞ் செல்லுமாயினும் மரபுநோக்கப் பிணையெ ன்றற்குச் சிறப்புடையன இவை யென்றவாறு. (௫௭)

௬௧௪. பன்றி புல்வாய் நாயென மூன்று
மொன்றிய வென்ப பிணவின் பெயர்க்கொடை.

(இ - ள்.) இவை மூன்றுசாதியும் பிணவென்னும்பெயர்க்கு ரியன. எ - று. "நெடுந்தாட் செந்தினைக் கெழூந்த கேழல் - குறுந்தா ட்பிணவொடு குறுகல் செல்லாது" எனவுங் "குறியிறைக் குரம்பைக் குறத்தி யோம்பிய - மடநடைப் பிணவொடு கவர்கோட் டிரலை" என வும் "நாய்ப்பிண வொடுங்கிய கிழநரி யேற்றை" எனவும் "முள்ளெ யிற் றம்பிணப் பசித்தெனப் பசுங்கட் - செந்நா யேற்றைக் கேழ றூக்க" எனவும் வரும். ஒன்றியவென்றதனான் "ஈருயிர்ப் பிணவின் வய ப்பசி களைஇயர்" எனப் புலிக்குங் கொள்க. பிறவும் அன்ன. (௫௮)

௬௧௫. பிணவ லெனினு மவற்றின் மேற்றே.

(இ - ள்) பிணவலென்பதூஉம் அம்மூன்றற்கும் உரித்து. எ - று. "இரியற் பிணவ றீண்டலின்" என்பது பன்றி, "நான்மு லைப் பிணவல் சோகலி தாஞெழித்து" என்பதும் அது. ஒழிந்தன வும் அன்ன. (௫௯)

௬௧௬. பெற்றமு மெருமையு மரையு மாவே.

இது மேல் அந்தஞ்சான்றதென்னும் இலேசினனே ஆவென் பது தழீஇக்கொண்டமையின் அஃது இன்னுழியாகா என்கின்றது. (இ - ள்.) ஆவென்னும் பெயர் பெற்றமும் மரையும் எருமையும் பெ றும். எ - று. அவை "புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி" எனவு ஞ் "சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா" எனவும் "மரையா மரல்கவர மாரி வறப்ப" எனவும் வரும். (௬௦)

௬௧௭. பெண்ணும் பிணவு மக்கட் குரிய.

(இ - ள்.) பெண்ணும்பிணவும் உயர்திணைப்பெண்மைக்குரிய. எ - று. பெண்ணென்பது "பெண்பா லெல்லாம் பெண்ணெனற் கு ரிய" என்றமையின் ஈண்டுக்கூறுதல் மிகையாம்பிறவென்னின், அற் றன்று; அச்சூத்திரம் அஃறிணையதிகாரமாகலின் ஈண்டு விதந்தோதி ற்றென்பது. ஒன்றெனமுடித்தலென்பதனான் உயர்திணை ஆணென் பதும் ஈண்டே கொள்ளப்படும். "பெண்கோ ளொழுக்கங் கண்டுகொ ள நோக்கி" எனவும். "ஈன்பிண வொழியப் போகி" எனவும் வரும். "ஆண்கடனுடைமையிற் பாண்கடனாற்றி" என ஆணென்பது உயர்திணை

க்கண்வந்தது. பிறவும் அன்ன. பிணாவென்னும் ஆகாரவிறுதி வன்கணமன்மையிற் குறியதன் இறுதிச்சினைகெட்டு உகரம்பெறாது நின்றது. மக்கட்குரியவெனவே, உரியவன்றித் "துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தென" எனப் புலிமுதலியனவற்றிற்குங்கொள்க. ()

சாகஅ. எருமையு மரையும் பெற்றமு நாகே. (சாஉ)

சாகக. நீர்வாழ் சாதியு ணந்து நாகே. (சாங)

(இ - ள்.) இந்நான்கற்கும் நாகென்னும்பெயர் உரித்து. எ - று "எருமை நல்லான் கருநாகு பெறூஉம்" எனவும், "உடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ - யூர்வயிற் பெயரும் பொழுதின்" எனவும், "நாகிள வளையொடு பகன்மணம் புகூஉம்" எனவும் வரும். (சாங)

சாஉ0. மூடுங் கடமை யாடவை பெறும்.

(இ - ள்.) இவ்விருபெயரும் யாட்டிற்குரிய பெண்மைப் பெயர். எ - று. இவை இப்பொழுது வழக்கினுள் அரிய. (சாச)

சாஉக. பாட்டி யென்ப பன்றியு நாயும். (சாரு)

சாஉஉ. நரியு மற்றே நாடினர் கொளினே. (சாசா)

(இ - ள்.) பாட்டியென்று சொல்லப்படுவன பன்றியும் நாயு மரியும். எ - று. பிறவும் அன்ன. (சாசா).

சாஉங. குரங்கு முசுவு மூகமு மந்தி.

(இ - ள்.) இம்மூன்று சாதிப் பெண்பாலும் மந்தியென்னும் பெயர்பெறும். எ - று "கைம்மை யுய்யாக் காமர் மந்தி" எனவுங் "கருமுக மந்தி செம்பி னேற்றை" எனவும் வரும். ஊகத்துக்கும் இஃதொக்கும். (சாஎ)

சாஉச. குரங்கி னேற்றினைக் கடுவ னென்றலு
மரம்பயில் கூகையைக் கோட்டா னென்றலுஞ்
செவ்வாய்க் கிளியைத் தத்தை யென்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலுங்
குதிரையு ளாணினைச் சேவ லென்றலு
மிருணிறப் பன்றியை யேன மென்றலு
மெருமையு ளாணினைக் கண்டி யென்றலு
முடிய வந்த வவ்வழக் குண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே.

இது மரீஇவந்து முடிந்த மரபுணர்த்திற்று. (இ - ள்) ஆண்குரங்கினைக் கடுவனென்றலும், மரப்பொதும்பினுள் வாழுங் கூகையைக் கோட்டானென்றலுஞ், செவ்வாய்க் கிளியைத் தத்தையென்றலும், வெருகினைப் பூசையென்றலும், ஆண்குதிரையைச் சேவலென்றலும், இருணிறப் பன்றியை எனமென்றலும், எருமையேற்றினைக் கண்டியென்றலும், அவ்வாறு முடிந்த வழக்குண்மையிற் கடியப்படா கடப்பாடு அறிந்தோர்க்கு. எ - று. "கடுவனு மறியு மக் கொடியோ னையே" ஆண்குரங்கு. இதனைக் கடியலாகாதெனப்பட்ட இழுக்கென்னையெனின், மக்கட்கும் வெருகிற்கும் அக்காலத்துப் பயின்றனபோலுமாதலின். கூகையைக் கோட்டானென்றலும் வழக்காதலான் அமையும், மரம்பயில் கூகையென்றதென்னையெனின் மரக்கோடு விடாமையிற் கோட்டானென்னும் பெயர்பெற்றதென்றற்கு. தத்தையென்பது பெருங்கிளியாதலிற் சிறுகிளிக்கும் அப்பெயர்கொடுத்தலமையுமென்றவாறு. செவ்வாய்க்கிளியென்றதனைச் சிறுகிளிமேற்கொள்க. வெய்வாய் வெருகென்றதனாற் படப்பை வேலியும் புதலும் பற்றி விடக்கிற்கு வேற்றுயிர்கொள்ளும் வெருகினை இல்லுறை பூசையின் பெயர்கொடுத்துச் சொல்லலும் அமையுமென்றவாறு. குதிரையைச் சேவலென்றல் இக்காலத்தரிதாயிற்று. அதுவுஞ் சிறகொடு சிவணாதாயினும் அதனைக் கடுவிசை பற்றிப் பறப்பதுபோலச் சொல்லுதல் அமையுமென்பது கருத்து. எருமையேற்றினையுங் கண்டியென்பபோலும். அது காணலாயிற்றில்லை. அதனை இலக்கணவகையானுடைய பெயரென்றலுமாம். இதுபொழுதின்றென்பது. கடனறிந்தோரென்றதனான் வழக்கினுஞ் செய்யுளினும் அவை வந்தமையிற் கடப்பாடறிவோர்க்குக் கடியலாகாதென்றவாறு. இன்னும் இப்பரிகாரத்தாலே சோழியை வாரணமென்றலும் வெருகினை விடையென்றலும் போல்வன பலவுங்கொள்க அவை "கான வாரண மீனுங்-காடாகி விளியு நாடுடை யோரே" எனவும் "வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ" எனவும் "வெருக்கு விடையன்ன வெருணோக்குக் கயந்தலை" எனவும் வரும். (கூஅ)

கூ௯. பெண்ணு மாணும் பிள்ளையு மவையே.

இதுவுமது. பெண் ஆணென்பன இருதிணைப்பெண்மைக்கும் ஆண்மைக்கும் பொதுவென்பன முற்கூறினான், மேல் ஒன்றற்குரிய பெயர் மரீஇவந்து பிறிதொன்றற்காயவழியுங் கடியலாகாதெனநின்ற அதிகாரத்தான் இவையும் அவ்வாறே திரியினுங் கடியலாகாதென்றவாறு. (இ - ள்.) பெண்ணும் ஆணும் பிள்ளையுமென வாளாது

சொல்லியவழி உயர்திணைக்கேற்றன மரீஇவந்த மரபு. எ - று. மகக்குழவியென்பனமேலவெனின், அவை அத்துணைப்பயின்றில உயர்திணைக்கென்பது. எடுத்தோதிய மூன்றும் ஆயின. வாளாதே பெண் வந்ததென்றவழி அஃறிணைப்பொருளென்பது உணரலாகாது, பெண் குரங்கு வந்தது என விதந்தே கூறல்வேண்டுமென்பது. பெண்பிறந்தது ஆண்பிறந்தது பிள்ளைபிறந்தது என அடையடாது சொல்லியவழி உயர்திணைக்கேயாம். அஃறிணைக்காயின் அற்றன்றென்பது. (சுகூ)

சுஉசு. நூலே கரகம் முக்கோல் மணையே
யாயுங் காலை யந்தணர்க் குரிய.

இஃது உயர்திணை நான்குசாதியும் பற்றிய மரபு உணர்த்துவான் முறையானே அந்தணர்க்குரிய மரபுபட்டுவருங் கலப்பைவேறுபாடுணர் - ற்று. (இ - ள்.) முந்நூலுங் குண்டிகையும் முக்கோலும் யாமைமணையும் போல்வன அந்தணர்க்கு உரிய. எ - று. ஆயுங்காலையென்றதனாற் குடையுஞ் செருப்பும் முதலாயினவும் ஒப்பன அறிந்துகொள்க. உதாரணம்;—"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ - லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும்" எனவும் "தண்டொடு பிடித்த தாழ்கமண்டலத்துப் - படிவ வுண்டிப் பார்ப்பன மகனே." எனவும் வரும். இன்னும் ஆயுங்காலையென்றதனான், ஒருகோலுடையார் இருவரவர், அவர் துறவறத்து நின்றாராகலின் உலகியலின் ஆராயப்படாரென்பது. முக்கோலுடையார் இருவருட் பிச்சைகொள்வானும் பிறனடியிருந்து ஊணதுண்பானும் உலகியலின் நீங்காமையின் அவரையே வரைந்தோதினானென்பது. மற்று அரசர்க்கும் வணிகர்க்கும் உரியநூலினை ஈண்டு வரைந்தோதினதென்னையெனின், ஒருகோலுடையான நூல்களைவாருதலின் அவனுஞ் சிறுபான்மை அந்தணனெனப்படுமென்பது கோடற்குங் கரகமும் மணையும் உடையனென்றற்குமென்பது. நூலினை முற்கூறினான் பிறப்புமுறையானுஞ் சிறப்புமுறையானுமென்பது. இனிக் குடுமியுங் குசையும் போல்வன கூறிற்றிலன், அது முன்னரும் பின்னரும் வருதலானும் மன்னரும் வணிகரும் பெறுதலானுமென்பது. (எ0)

சுஉஎ. படையுங் கொடியுங் குடையு முரசு
நடைநவில் புரவியுங் களிறுந் தேரு
தாரு முடியு நேர்வன பிறவுந்
தெரிவுகொள் செங்கோ லரசர்க் குரிய.

இது முறையானே அரசர்க்குரியன கூறுகின்றது. (இ - ள்.) கொடிப்படையுங் கொடியுங் குடையும் முரசுங் குதிரையும் யானையுந் தேருந் தாரும் முடியும் பொருந்துவன பிறவும் அரசர்க்குரிய. எ - று. பிறவும் என்றதனாற் கவரியும் அரியணையும் அரண்முதலாயினவுங் கொள்க. தெரிவுகொள் செங்கோல் அரசனென்றதனானே செங்கோல் கொளப்பட்டது. தாரெனவே போர்ப்பூவுந் தார்ப்பூவும் அடங்கின. படையென்புழி நடைநவில் புரவியுங் களிறுந் தேரும் அடங்கா வோவெனின் அடங்கும். அவைநோக்கிக் கூறினானல்லன். அவை பட்டஞ்சாத்தியவாதல் நோக்கிக் கூறப்பட்டன. அஃதேற் தேர்கூறி யதென்னையெனின், அதுவும் அவைபோல அரசர்க்கே உரியதென் றுளதென்றற்கும் அதுபூண்ட குதிரையும் அவர்க்கேயுரியவென்றுள வென்றற்குங் கூறினானென்பது. இக்கருத்தினாற்போலும் நடைந வில்புரவியெனச் சிறப்பித்து அதனை முற்கூறியதென்பது. எல்லா வற்றினுஞ் சிறந்ததாதலான் முடி பிற்கூறப்பட்டது. தெரிவுகொள் செங்கோல் அரசனென்பதனான் அரசனெல்லாந் தந்நாட்டு நன்றுந் தீதும் ஆராய்ந்து அதற்குத் தக்க தண்டஞ் செய்தற்கு உரிமையும் அதுவெனக்கொள்க. (எக)

சஉஅ. அந்த ணாளர்க் குரியவு மரசர்க்
கொன்றிய வரூஉம பொருளுமா ருளவே.

இது மேலதற்கோர் புறனடை. (இ - ள்.) அந்தணாளர்க்கு உரியவென மேல் ஓதப்பட்டனவற்றுண் முந்நூலும் மணையும்போல் வன அரசசாதிக்குரியவாகியும் வரும். எ - று. பொருளுமாருளவெ ன்றதனான் அந்தணாளர்க்குரியனவற்றுள் வேள்விக்கலப்பையொன் றிவருதல் பெரும்பான்மையென உணர்க. ஈண்டு அவற்றை விதந் தோதினான் ஒழிந்த புலனெறிவழக்கினுட் பயிலாமையினென்பது. "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமு - மைவகை மரபி னரசர் பக்கமு - மிருமூன்று மரபி னேனோர் பக்கமும்" பற்றி யாகைப்பொ ருள் பிறத்தலின் அவற்றைப் புறத்திணையியலுட் கூறினான். ஆயி னும் ஈண்டுத் தழீஇக்கொள்ளப்படும் மாபுவகையானென்பது. என் போலவெனின், "அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு." என நூன்மரபி னுள் ஓதிய மூவகைச்சுட்டினை இடைச்சொலோத்தினுள் ஓதானாயி னன் அதுபோலவென்பது. "கொன்று களம்வேட்ட ஞான்றை" எனவும் "அடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய" எனவும் அரசர்க் கு வேள்விகூறினவாறு. பிறவும் அன்ன. (எஉ)

கூஉகூ. பரிசில்பா டாண்டிணைத் துறைக்கிழ மைப்பெ
நெடுந்தகை செம்ம லென்றிவை பிறவும [யர்
பொருந்தச் சொல்லுத லவர்க்குரித் தன்றே.

இஃது ஐயம் அறுத்தது; அந்தணாளர்க்குரியன அரசர்க்குமு ரியன உளவெனக் கேட்ட மாணாக்கன் அரசர்க்குரியனவும் அந்தண ர்க்குரியசொல்லென்று ஐயுறுமற் காத்தமையின். இஃது எய்தன்மே ற் சிறப்புவிதியெனினும் அமையும். என்னை? ஈண்டு ஓதப்பட்டவை அரசர்க்குரியவென்பது கொள்ளவைத்தமையின். (இ - ள்.) பரிசி ல்=பரிசில்கடாநிலையும் பரிசில்விடையும் போல்வன: பாடாண் டிணைத்துறைக்கிழமைப்பெயர்=பாடாண்டிணைக்குரிய கைக்கிளைப் பொருள்பற்றியுங் கொடைத்தொழில்பற்றியும் பெறும்பெயர்: அவை காளை இளையோன் என்பன போல்வன; அவையும் நெடுந்தகை செ ம்மலென்பன முதலாயினவும் இவைபோல்வன பிறவும் புணர்ந்துணா வகையாற் சொல்லினல்லது சாதிவகையாற் கூறுதல் அந்தணர்க்குரித் தன்று. எ - று. பரிசில்கடாநிலையும் பரிசில்விடையும் போல்வன கூறியுங் கைக்கிளைப்பொருள் கூறியுங் கொடைத்தொழில் கூறியும் அவற்றுக்கேற்ப எடுத்தோதிய பெயர்கூறியும் அந்தணரைத் தன்மை வகையாற் செய்யுள்செய்யப் பெறுமென்பது கருத்து. புணர்ந்துணா வகையான் அவையாமாறு;—"என்னுணப் பல்வேட்டு மண்ணுணம் புகழ்பரப்பியும்" எனவரும். கொடுத்தற்றொழில் வேள்விக்கால்த்த தென வரையறுத்தலிற் பொருந்தக்கூறுதல் அவர்க்குரித்தன்றென் றானன்பது. பாடாண்டிணைத்துறைப்பெயரொன்றோது கிழமைப்பெ யரொன்றதென்னையெனின், அவை ஐந்திணைப்பெயராகி வருங்காலு ம் அவர்க்குரியவல்லவென்றற்கு. எனவே, அரசர்க்காயின் இவை யெல்லாம் உரியவென்பவாயிற்று. மற்றுப் பாடாண்டிணைக்குரியவல் லவென 'மற்றைநதிணைக்கிழமைப்பெயர் உரியவாம் பிறவெனின்; அஃது "இடையிரு வகையோ ரல்லது நாடிற் - படைவகை பெறார்" என மேற்கூறி விலக்குமென்பது. (எகூ)

கூஙO. ஊரும் பெயரு முடைத்தொழிற் கருவியும்
யாருஞ் சார்த்தி யவையவை பெறுமே.

இது மேற்கூறிய அந்தணர்க்கும் அரசர்க்கும் உரியனவற்றொ டு ஒழிந்த சாதியோர்க்கும் ஒப்பன உடன்கூறுகின்றது (இ - ள்.) நான்குசாதியாரும் பிறந்த ஊரும் அவர்தம்பெயரும் அவர்சாதிக்கு உரித்தென்றற்கேற்ற கருவியும் யாருஞ் சார்த்தப்பட்டன அவை பெ

று. எ - று. இம்மூன்றும் வரையறுத்துச் சொல்லப்படா எல்லாச் சாதியார்க்கும் ஒப்பச்செல்லுமென்பது கருத்து. எற்றுக்கு? இவை சாதிபற்றி வேறுபடாப் பொருளாகலின். ஊரும் பெயருமென்பன, உறையூர் ஏணிச்சேரி முடமோசி பெருங்குன்றூர்ப்பெருங்கௌசிகன் கடியலூருருத்திரங்கண்ணன் என்பன அந்தணர்க்குரியன; உறையூர்ச்சோழன் மதுரைப்பாண்டியன் என்பன அரசர்க்குரியன; காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணன் மதுரை அறுவைவாணிகன் இளவேட்டன் என்பன வணிகர்க்குரியன; அம்பாகிழான்நாகன் வல்லங்கிழான்மாறன் எனபன வேளாளர்க்குரியன. இனி உடைத்தொழிற் கருவியெனபன, அந்தணாளர்க்குச் சுருவையுஞ் சமிதைகுறைக்குங் கருவியும் முதலாயின; அரசர்க்குக் முடியுங் கூழும் அமைச்சும் நட்பும் முதலாயின; வணிகர்க்கு நாவாயும் மணியும் மருந்தும் முதலாயின; வேளாளர்க்கு நாஞ்சிலுஞ் சகடமும் முதலாயின. பிறவும் அன்ன. அவையெல்லாம் அவரவர்செய்யுட்குரியவென்பது. (எச)

சுகூக. தலைமைக் குணச்சொல்லுந் தத்தமக் குரிய
நிலைமைக் கேற்ப நிகழ்த்துப வென்ப.

இதுவும் அது. (இ - ள்.) அந்நான்குசாதியார் தலைமைக்குணம்படச் சொல்லுஞ் சொல்லும் அவரவர்க்குரிய நிலைமைக்கேற்ப நிகழ்த்தவும்படும். எ - று. அந்தணர் தலைமைக்குணங் கூறுங்காற் பிரமனோடு கூறியும் அரசரை மாயனோடு கூறியும் வணிகரை நிதியின்கிழவனோடு கூறியும் வேளாண்மாந்தரை வருணனோடு கூறியுந் தலைமைக்குணச்சொல் நிகழ்த்தப்படும். அவையெல்லாம் அவரவர்செய்யுளுட் கண்டுகொள்க. (எரு)

சுகூஉ. இடையிரு வகையோ ரல்லது நாடிற்
படைவகை பெறாஅ ரென்மனார் புலவர்.

மேல் நான்கு வருணத்தாரையும் உடன் கூறிவந்தான் இது முதலுங் கடையும் ஒழித்து இடைநின்ற இருவருணத்தார்க்கும் ஆவதோர் புறனடைகூறுகின்றது. (இ-ள்.) அரைசரும் வணிகருமல்லது படைப்பகுதிபெறார். எ - று. படைப்பகுதியென்பன வேலும் வாளும் வில்லும் முதலாயின. நாடினென்பதனான் ஒருசார் அந்தணரும் படைக்குரியரென்பதுகொள்க. அவர் இயமங்கியாருந் துரோணனுங் கிருபனும் முதலாயினாரெனக்கொள்க. வேளாண்மாந்தர்க்கும் இஃதொக்கும். இவை விகாரமெனவும் எடுத்தோதிய வருணங்கட்கே இஃது இயல்பெனவுங்கொள்க. (எசு)

௬௩௩. வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை.

இது வணிகர் மரபுகூறுகின்றது. (இ - ள்.) வணிகர்க்குத் தொழிலாகிய வாணிகவாழ்க்கை உள்ளுறையாகச் செய்யுள்செய்தல் பெரும்பான்மையுமாம். எ - று. அவையும் அவர்செய்யுளிற்காணப்படுமாறு அறிந்துகொள்க. (௭௭)

௬௩௪. மெய்தெரி வகையி னெண்வகை யுணவின்
செய்தியும் வரையா ரப்பா லான.

இன்னும் வணிகர்க்கே உரிய தொழில்கூறுகின்றது. (இ - ள்.) பொருளைத் தெரியும் வகையான் எண்வகைக் கூலமுஞ் செய்து விளைத்தலும் அவர்கடன். எ - று. அவையும் அவர் படைத்தோர் உபகாரப்படுமாதலின் வரையப்படாதென்றவாறு. எண்வகையுணவென்பன பயறும் உழுந்தும் கடுகுங் கடலையும் எள்ளுங் கொள்ளும் அவரையுந் துவரையுமாம். (௭௮)

௬௩௫. கண்ணியுந் தாருமெண்ணின ராண்டே.

இதுவும் அது. இவையும் வணிகர்க்குரியன. எ - று. கண்ணியென்பன ஆடும் பூ. தாரென்பது ஒருகுடிப்பிறந்தார்க்குரித்தென வரையறுக்கப்படுவதாயிற்று எனைப்பகுதியுமெனவே அவரவர்க்குரிய வாறுமுற் பலவாகியவும். அவை வந்தவழிக் கண்டுகொள்க. (௭௯)

௬௩௬. வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்ல
தில்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.

இது வேளாண்மாந்தர்க்குக் கூறப்படுந் தொழில்கூறுகின்றது. (இ - ள்.) வேளாண்மாந்தர் பலவகைப்பட்ட தொழிலினரேனும் உழுந்தொழிலே பெரும்பான்மைத்தாகலான் அதனையே சிறப்பித்துச் சொல்லுதல் மரபு. எ - று. உழுதுண்டுவாழ்வாரென்பதே இதன்பொருளாயிற்று. மற்றுப் பார்ப்பியன் முதலாகிய நால்வகைத் தொழிலும் வாகையுட் கூறினமையின் இச்சூத்திரமும் மேலைச் சூத்திரங்களும் மிகையாம் பிறவெனின், அற்றன்று; பார்ப்பியலும் அரசியலும் வாணிகத்தொழிலுமாகிப் பொதுப்படநின்ற ஓதலும் வேட்டலும் ஈதலும் இவர்க்கு ஒத்தசிறப்பினவாகலானும் அவருள் வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் ஒத்தசெய்தியெனவாகிய உழவுத் தொழிலும் நிரைகாத்தலும் வாணிகமுமென்பன அவற்றின் ஒத்தசிறப்பினவன்றி அவற்றுள்ளும் ஒரோவொன்று ஒரோவருணத்தார்க்கு உரியவாமாகலானும் ஈண்டு அவை விதந்துகூறினனென்பது. நிரைகாவ

லும் உழவுதொழிலும் வணிகர்க்கும் வேளாளர்க்குந் தடுமாறுதல்போ லாது வாணிகவாழ்க்கை வேளாண்மாந்தர்க்குச் சிறுவரவிற்றெனவும் உழுதுண்டல் வணிகர்க்குச் சிறுவரவிற்றெனவும் எவ்வகைக்கூலத் தொடு பட்டதே பெருவரவிற்றெனவுங் கூறினன் இச்சூத்திரங்களா னென்பது. இதனது பயம் புலனெறிவழக்கினுள் இவர்க்கு இவை சிறந்தமரபென்றலாயிற்று. (அ0)

சூ௩௭. வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும
வாய்ந்தன ரென்ப வவர்பெறும் பொருளே.

இது நான்காம் வருணத்தார்க்கோர் புறனடை. (இ - ள்.) வேந்தர் கொடுப்பின் வேளாண்மாந்தர்க்குப் படைக்கலமுங் கண்ணி யும் பெறும்பொருளாகச் சொல்லப்படும். எ - று. வேந்துவிடுதொழி லென்பது வேந்தனாற் கொடுக்கப்படுந் தண்டத்தலைமையாகிய சிறப் புச்காரணத்தானென்றவாறு. அகத்திணையியலுள் "உயர்ந்தோர்க்கு ரிய வோத்தி னான" என்புழிக் கூறப்பட்டதெனின், வேளாளரையொ ழித்து ஒழிந்தோரைநோக்கிற்று அச்சூத்திரமென்பது. மேற்கூறியவ ற்றையும் மரபுபற்றி ஈண்டு வரையறைகூறுகின்றவாறெனக் கொள்க. அவையும் அவரவர் பாட்டுச்களுட் கண்டுகொள்க. (அக)

சூ௩அ. அந்த ணாளர்க் கரசு வரைவின்றே.

இஃது எல்லாவற்றிலுஞ் சிறுவரவிற்றாகி அரசர்க்குரிய தொ ழில் அந்தணர்க்குரியவாகலின் ஈண்டுப் போதந்து கூறுகின்றது. (இ - ள்.) அரசர் இல்வழி அந்தணரோ அவ்வரசியல்பூண்டொழுக லும் வரையப்படாது. எ - று. மக்களைத்தின்ற மன்னவர்க்குப் பின் னை மறையோரான் அரசுதோற்றப்பட்டாற்போலக் கொள்க. (அஉ)

சூ௩௯. வில்லும் வேலுங் கழலுங் கண்ணியுந்
தாரு மாரமுந் தேரும் வாளு
மன்பெறு மரபி னேனோர்க்கு முரிய.

இது முடியுடைவேந்தரல்லாக் குறுநிலமன்னர்க்குரியனகூறு கின்றது. (இ - ள்.) இவ்வெண்ணப்பட்டனவெல்லாங் குறுநிலமன் னர்க்கு உரியன. எ - று. மன்பெறும்மரபின் ஏனோரெனப்படுவோர் அரசுபெறுமரபிற் குறுநிலமன்னர் எனக்கொள்க. அவை பெரும் பாணாற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காணப்படும். (அ௩)

சூ௪0. அன்ன ராயினு மிழிந்தோர்க் கில்லை.

இஃது எய்தியதிகர்துபடாமைக் காத்தது. (இ - ள்.) மன்ன வாபோலுஞ் செல்வத்தராகி இழிகுலத்தோர் நாடாள்வோராயினும் அவர்க்கு இவை கூறலமையாது. எ - று. "மன்பெறு மரபினேனோர்" எனவே, அரசர் வைசியரன்றிக் கீழ் அமையாவாயிற்று. (அ௪)

௯௭௪க. புறக்கா ழனவே புல்லென மொழிப
வகக்கா ழனவே மரமென மொழிப.

இது மரங்களை எழுந்ருமாற்றுககள் மாபுகூறி இனி ஓரறிவுயிர்க்கு இன்னவாறு சொல்லுதன் மரபென்பதுணர் - ற்று. (இ - ள்.) புறத்துக் காழ்ப்புடையனவற்றைப் புல்லெனவும் அகத்துக் காழ்ப்புடையனவற்றை மரமெனவுஞ் சொல்லுப. எ - று. புறக்காழனவெனவே அகவழி வெளிறென்பதறியப்படும். அவை பனையுந் தெங்குங் கமுகும் முதலாயின புல்லெனப்படும், இருப்பையும் புளியும் ஆச்சாவும் முதலாயின மரமெனப்படும். இங்ஙனம் வரையறைகூறிப் பயந்ததென்னை? புறத்தும் அகத்துங் கொடிமுதலாயின காழ்ப்பின்றியும் அகின்மரம்போலவன இடையிடை பொய்ப்பட்டும் புல்லும் மரனும் வருவன உளவாலெனின், இரண்டிடத்தும் ஏகாரம் பிரித்துக்கூறின மையானும் எனமொழிப என்று இருவழியுஞ் சிறப்பித்து விதந்தமையானுஞ் சிறுபான்மை அவையும் புலனும் மரனுமென அடங்குமென்பது. "இரும்பனம் புல்லின் பசுந்தோட்டுக் குடம்பை" எனவும் "யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவின்" எனவும் வரும். "நிலாவினிலங்கு மணன் மருகிற் - புலாலஞ் சேரிப் புல்வேய் குரம்பை" எனப் புறக்காழும் அகக்காழும் அல்லன புல்லெனப்பட்டனவென்பது. அது பனையோலையுமாகலிற் புறக்காழுடைய பனையுமாமென்பது. உதி மரக்கிளவியுமாமென்பதஞ் சிறுபான்மை. பிறவும் அன்ன. (அ௫)

௯௭௪௨. தோடே மடலே யோலை யென்றா
வேடே யிதழே பாளை யென்றா
வீர்க்கே குலையென நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்.

இது முறையானே புறக்காழனவற்றைச் சொன்மரபுணர்த்து. (இ - ள்.) எண்ணப்பட்ட வாய்பாடும் பிறவும் புல்லுறுப்பினைச் சொல்லும் வாய்பாடு. எ - று. பிறவுமென்றதனாற் குருத்தை நுங்கு துகும்பு போர்த்தையென்றற்றொடக்கத்தனவுங்கொள்க "இரும்பனை வெண்டோடு மிலைந்தோ னல்லன்" எனவும் "மாவென மடலுமூர்ப"

எனவுந் " துகடபு காட்சி யவையத்தா ரோலே" எனவும் வரும். ஒழிந்தனவுங் கொள்க. "வண்டோட்டு நெல்லின் வாங்குகதிர்க் கழனி" என்பதும் அது. நேர்ந்தனபிறவும் என்பது "கேட்டாரை உடம்படுவிப்பன பிறவுமென்றவாறு. "வெண்டோட்டுப் பெண்ணை வளர்ந்த நுங்கின்" எனவும் "பனைநுகும் பன்ன சினைமுதிர் வராலொடு" எனவும் வரும். பிறவும் அன்ன. (அ௬)

௬௪௩. இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே யரும்பே
நனையுள் ளுறுத்த வனையவை யெல்லா
மரனொடு வருஉங் கிளவி யென்ப.

இஃது அகக்காழனவற்றுப்பினைச் சொல்லும் மரபுணர்த்து. (இ - ள்.) எண்ணப்பட்டனவும் பிறவுமெல்லாம் மரத்துறுப்பினைச் சொல்லும் வாய்பாடு. எ - று. அனையவையெல்லாமென்ற புறனடையானே புல்லுந் தழையும் பொங்கரும் முதலாயின கொள்க. அவை "தேய மடைவயிற் றேக்கிலே குவைஇ" எனவும் "முறிமேய யாக்கை" எனவும் "யாஅ வொண்டளி ரரச்கு விதிர்த்தன" எனவுந் "தோடுதோய் மலிர்நிறை யாடியோர்" எனவும் "மேக்கெழும் பெருஞ்சினை யிருந்த தோகை" எனவுங் "சொய்தழை யகைகாஞ்சித் துறையணி நல்லூர" எனவும் "நனைத்த செருந்தி" எனவும் "அண்டர் மகளிர் தண்டழை யுடீஇய - மரஞ்செல மிதித்த மாஅல் போல" என்றாற்போல வருவனவுமெல்லாங் கொள்க. மேலைச்சூத்திரத்துப் புல்லொடுவருமெனச் சொல்லினரொனவும் இச்சூத்திரத்து மரனொடுவருஉங் கிளவியெனவும் மிகைபடக் கூறியதென்னையெனின், அம்மிகையானே எடுத்தோதிய புறக்காழனவும் அக்ககாழனவுமன்றி அவற்றொடு தழீஇக்கொள்ளப்படுவனவுமெல்லாம் இவற்றுக்குரியவென்பது கொள்க. அவை ஊகம்புல்லுஞ் சீழகம்புல்லும் பஞ்சாய் முதலியனவும் புழற்கால் ஆம்பல் முதலியனவும் புல்லெனப்பட்டடங்கியவற்றின்பெயரும் பெறுமென்பது. பிடாவுங் காயாமுதலிய புதலும் பிரம்புமுதலாகிய கொடியும் மரமெனப்பட்டவற்று உறுப்பின்பெயர் பெறுமென்பது. அவை ஊகந்தோடு சீழகந்தோடு எனவும் பிடவிலை காயாம்பூ முல்லைப்பூ எனவும் வரும். பிறவும் அன்ன. மற்றுப் பிறப்புமுறையாற் தளிர் முற்கூறாது இலை முற்கூறியதென்னையெனின், புல்லினுள் ஒருசாரன இலையெனவும் பூவெனவும்படுமென அதிகாரங்கோடற்கென்க. அவை "ஈத்திலை வேய்ந்த வேய்ப்புறக் குரம்பை" எனவும் ஆம்பலிலை தாமரையிலை எனவும் ஆம்பற்பூ தாமரைப்பூ எனவும் வ

ரும். பிறவும் அன்ன கொள்க. இன்னும் இவ்விலேசானே புல்லிற்கு ரியன மரத்திற்கு வருவனவுங் கொள்க. அவை "ஈன்றவடிநிலைபோ லீர்பெய்யுந் தளிரொடும்" என ஈர்க்கென்பது மாவிலைமேல் வந்தது. பிறவும் அன்ன. (அஎ)

௬௪௪. காயே பழமே தோலே செதிளே
வீழோ டென்றாங் கவையு மன்ன.

இது மேற்கூறிய இரண்டற்கும் பொதுவுறப்புணர்த்து. (இ-ள்.) இவையும் அவ்விருதிறற்கு மொக்கும். எ-று. உதாரணம் தெங்கங்காய் கமுகங்காய் எனவும் வேப்பங்காய் மருதங்காய் எனவுங் காயென்பது அவ்விரண்டற்கும் வந்தது. பழமென்பதற்கும் இஃதொக்கும். பனந்தோல் வேப்பந்தோல் பனஞ்செதிள் வேப்பஞ் செதிள் தாழைவீழ் இத்திவீழ் என இவையும் இருபாற்குரியவாயின. மற்று இவையெல்லாம் வரையறையின்றிச் செல்லுமாயிற் புறக்காழ் அகக்காழனவென வரையறுத்துப் பயந்ததென்னையெனின், அவ்விருபகுதியுள் அடங்கக்கூறியவெல்லாம் புல்லெனவும் மரமெனவும் படாவென்றற்கும் அவற்றுறுப்பு ஒத்தவாற்றாற் புல்லின்கண்ணும் மரத்தின்கண்ணும் பெறுவரவினவாமென்றற்குமென்பது. (அஅ)

௬௪௫. நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்துங்
கலந்த மயக்க முலக மாதலி
னிருதிணை யைம்பா லியனெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல வேண்டுமே.

இஃது உலகியலெல்லாம் மரபிற்றிரியாமையின் அதன்சிறப் புணர்த்தி அதற்குக் காரணமுங் கூறுகின்றது. (இ-ள்.) நிலனுந் தீயும் நீருங் காற்றும் ஆகாயமுமென்னும் ஐம்பெரும் பூதமுங் கலந்த கலவையல்லது உலகமென்பது பிறிதில்லாமையின் அவற்றைச் சொல்லுமாறு சொல்லாது இருதிணைப்பொருளென வேறுபடுத்தும் ஐம்பாலென வேறுபடுத்தும் வழங்குகின்ற வழக்கெல்லாம் மரபிற் றிரியாத சொல்லொடு தழீஇ வரல் வேண்டும். எ-று. இதன்கருத்து நிலம்வலிது தீவெய்து நீர்தண்ணென்றது வளியெறிந்தது விசும்பு அகலியது என அஃறிணைவழக்கினவாயினும் இவை கலந்தவழியும் அவ்வாய்பாட்டான்வழங்காது உயர்திணைவாய்பாடு வேறாகவும் அஃறிணைவாய்பாடு வேறாகவும் அவைதம்முட்பகுதியாகிய ஐந்துபாற்சொல்லும் வெவ்வேறாகவும் வழங்குகின்ற வழக்கிற்குக் காரணம் மரபல்லது பிறிதில்லையென்றவாறு. எனவே, மரபினை வலியுறுத்தவாறு.

மற்று நிலம் நீர் தீ வளி ஆகாயமென ஒன்று ஒன்றனுள் அடங்குமுறை யாற்கூறுதல் செய்யாது மயங்கக் கூறியதென்னையெனின், அவை கலக்குங்கால் ஓரோபொருளின்கண்ணும் அம்முறையானே நிற்குங் கொலென்று கருதினுங் கருதற்க, மயங்கிநிற்குமென்றற்கு அவ்வாறு கூறினானென்பது. (௮௯)

௬௪௬. மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான.

இது மரபினையே வற்புறீஇயது. (இ - ள்.) வழக்கினகத்து வரலாறுமுறைமை பிறழாது வருதலே தக்கது, மற்றுச் செய்யுள்செய்த சான்றோர் அதற்கேற்ற வகையாற் செய்யப்பெறுவராகலின். எ - று. அவர்க்கு இம்மரபுவேண்டுவதன்று கொலென்று கருதினுங் கருதற்க "மரபேதானு, நாற்சொல் லியலான் யாப்புவழிப் பட்டன." என்றதனான் மரபுவழிப்படுங்காலென்பான் மரபுவழிப்பட்ட சொல்லினானென்றானென்பது. ஆண்டுக்கூறிய மரபு உலகியலாகலான் அவ்வுலகியல் அவ்வாறாதற்குக காரணம் யாண்டுக் கூறிச் செய்யுட்கும் அதுவே காரணமெனக் கூறினானென்பது. இதனதுபயன், செஞ்ஞாயிறென்பது வழக்கன்றாயினும் உண்மைநோக்கி அதனைச் செய்யுள்செய்யுஞ் சான்றோர் அவ்வாறு வழங்கினாற்போல உயர்திணைப் பொருளையும் ஐம்பெரும்பூதங்கள் அஃறிணையான் வழங்குதலுண்மை நோக்கி அவ்வாறுஞ் சொல்லப்பெறுபகொலென்று ஐயுற்றானை ஐயம் அறுத்தவாறு. அஃறிணைப்பாற்கும் இஃதொக்கும். அல்லதூஉம் இன்ன செய்யுட்கு இன்னபொருளுரித்தெனவும் இனைப்பஃதியாற் பெயர்பெறுமெனவும் மரபுபற்றியே சொல்லப்படுமென்றற்கும் இனி நிறைமொழி மாந்தர் மறைமொழிபோல்வன சில மிறைக்கவி பாடினாருளரென்பதே பற்றி அல்லாதாரும் அவ்வாறு செய்தல் மரபென்றற்கும் இதுகூறினானென்பது. அவை சக்கரஞ் சுழிகுளங் கோமூத்திரிகை ஏகபாதம் எழுகூற்றிருக்கை மாலைமாற்று என்றாற்போல்வன. இவை மந்திரவகையானன்றி வாளாது மக்களைச் செய்யுள் செய்வார்க்கும் அவனைந்திணைச்கும் மரபன்றென்பது கருத்து. அல்லாதார் இவற்றை எல்லார்க்குஞ் செய்தற்குரியவென இழியக்கருதி அன்னவகையான் வேறுசில பெய்துகொண்டு அவற்றிற்கும் இலக்கணஞ்சொல்லுப. அவை இத்துணையென்று வரையறுக்கலாகா. என்னை? ஒற்றை இரட்டை புத்தி வித்தாரமென்றாற்போல்வன பலவுங் கட்டிக்கொண்டு அவற்றானே செய்யுள் செய்யினுங் கடியலாகாமையின், அவற்றிற்கு வரையறைவகையான் இலக்கணங்கூறலாகாவென்பது.

ஐயைதன் கையு ளிரண்டொழித்தெடேனம்பான்மேற் பெய்தார்
பிரிவுரைத்த லில்லையால்." எனவும் "கோடாப் புகழ்மாறன் கூட
லனையாளை - யாடா வடகி லுளுங்காணேன்" எனவுஞ் சொல்லுவார்
சொல்லுவனவற்றுக்கெல்லாம் வரையறையின்மையின் அவற்றுக்கு
இலக்கணங்கூறா பன்னாத்திப்பாற் படுப்பினல்லதென்பது. (௬0)

௬௪எ. மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்.

இது மேற்போன வழக்கிற்குஞ் செய்யுட்கும் வருகின்ற இல
க்கணத்திற்கும் பொது (இ - ள்) மரபினை நிலைதிரிந்துச் சொல்லுப
வெனின், உலகநதுசசொல்லெல்லாம் பொருணிறர்து பிறிதுபிறிதாகு
ம். எ - று. செவிப்புலனாய ஓசைகேட்டுச் கட்புலனாய பொருளுண
ாவதெல்லாம் மரபுபறமாக அல்லது யற்றிலவேயென்றவாறு. (௬௧)

௬௪அ. வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான.

இது வழக்கினுள்ள மரபினைப் பிழைதநுக் கூறுவனவும் உள
வென்பதுணாற்று. (இ - ள்.) வழக்கென்று சொல்லப்படுவது உ
யர்ந்தோர் வழங்கிய வழக்கே. என்னை? உலகத்து நிகழ்ச்சியெல்
லாம் அவரையே நோக்கினமையின் எ - று. அவரையே நோக்கு
தலென்பது அவராணையான் உலகநிகழ்ச்சி செல்கின்றதென்றவாறு.
எனவே, உயர்ந்தோரெனப்படுவார் அந்தணரும் அவர்போலும் அறி
வுடையோருமாயினரென்பது. (௬௨)

௬௪௯. மரபுநிலை திரியா மாட்சிய வாகி
யுரைபடு நூறா மிருவகை யியல
முதலும் வழியுமென நுதலிய நெறியின.

இது மேற்கூறப்பட்ட மரபு வழக்கிற்கேயன்றி இலக்கணஞ்
செய்வார்க்கும் வேண்டுமெனவும் அவ்விலக்கணம் இனைப்பகுதித்தெ
னவுங் கூறுகின்றது. (இ - ள்.) மரபுநிலையிற் திரியாமை நமக்குக்
குணனாக உடையவாகி எல்லாராலும் உரைக்கப்படும் நூல் இரண்டி
லக்கணத்தவாகும் முதனூலெனவும் வழிநூலெனவுங் கருதிக்கொ
ள்ளும் அடிப்பாட்டான் எ - று. "மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தா
கும்" என்பதனை இதற்குமேல் எய்துவித்தானன்றே அதனான் மரபு
நிலை திரியாமையே நமக்குத் தகுதியாவதெனவும் இவ்விருவாற்றா
னும் ஒன்றனைச் செய்தலே மரபெனவுங் கூறியவாறு. நுதலிய நெறி
யென்றதென்னையெனின், இன்னதேமுதனூல் இன்னதேவழிநூலெ

ன்பதோர்வரையறையில்லை ஒருநூல்பற்றி ஒருவன் வழிநூல் செய்தவ ழி [illegible]த்து ஒருநூல் பிறந்ததாயின் அது வழிநூலெனப்பட்டு முன்னை வழிநூலே முதனூலெனப்படுமெ ன்றற்கென்பது. இதனைச் சார்புநூலென்றுமோவெனின் வழிநூலா ஞ் சார்புநூலுமாகலின் அங்ஙனங்கூறுறையினன். எற்றுக்கு? சாபு நூலினைப் பற்றி ஒருநூல் பிறந்தவழிச் சார்பின்சார்பெனக் கூறல்வே ண்டுவதாகலானும் அதனைச்சார்ந்து தோன்றிற் சார்பென்னுஞ் சொல் லை மும்முறைசொல்லியும் அதன்பின் தோன்றிய நூற்கு நான்முறை சொல்லியும் எண்ணிகத்தோடுதலாறுமென்பது. மற்று இரண்டா மென்னுமுறைமைக்கணின்ற நூலினையே வழிநூலெனக்கொண்டு மூன்றாவது தோன்றியநூலே சார்புநூலாகவும் அதன்பின்னர் நூல் செய்யப்பெறாரெனவுங் கொள்ளாமோவெனின், முதனூலிற்கிடந்த பொருளை ஓர் உபகாரப்பட வழிநூல்செய்த ஆசிரியன் செய்தக்காற் சார்புநூலெனப் பின்னர் ஓர் ஆசிரியன் நூல்செய்ததனாற் பயந்ததெ ன்னையெனக. என்றார்க்கு வழிநூலும் பிற்காலத்தரிதாமாயின் அ தனையும் எளிதாகச் செய்தலன்றே இதனாற் பயந்ததெனின், அது தானும் பின்னொருகாலத்து அரிதாமாயின் அதனையும் எளிதாகச்செய் வானல்லனோவென்றுமறுக்க. இவ்வாறாய் சிவேண்டாவென்றற்கன் றே இவ்விருவகையானும் வருதலே மரபென்பானுயிற்றென்றொழிக. ஒன்றன்வழியேயன்றியுந் தாந்தாம் அறிந்தவாற்றானும் நூல்செய்யப் பெறாரோவெனின், அது மரபன்று; அதுநோக்கியன்றே "மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும்" என்ற விதி நூலிற்கும் எய்துவித்துப் பு குந்ததென்பது. என்னை பிறிதுபிறிதாகுமாறெனின், ஒருபொருட்க ணேனை மாறுபட்ட இலக்கணங் கூறின் அவ்விரண்டும அதற்கிலக்க ணமாகாது. என்போல? மாணிக்கமணியினைச் செவ்வண்ணம் முதலா யின சில இலக்கணங்கூறிய நூல் கிடப்பக் கருவண்ணமுதலாயினவும் அதற்கிலக்கணமென்று ஒருவன் எதிர்நூலென்பதோர் நூல் பிற்கா லத்துச் செய்யுமாயின் அது அதன் இலக்கணமெனப்படாதாகலானெ ன்பது. மற்றுக் காலந்தோறும் வழக்கு வேறுபடுதலின் வழக்குநூ லும் வேறுபட அமையும்பிற எனின், "வழக்கெனப் படுவ துயர்ந் தோர் மேற்றே - நிகழ்ச்சி யவர்கட் டாக லான" என்றமையானும் அங்ஙனங் காலந் தோறும் ஓரோர்நூல் செய்யின் வழக்கல்லது எ ஞ்ஞான்றும் அவ்விலக்கணத்தாற் பயமின்றாகியே செல்லுமாகலானு ம் அது பொருந்தாதென்பது. அல்லதூஉம் முற்காலத்து வழங்கி வந்ததனை வழுவென்று களைபவாயினன்றே பிற்காலத்துப் பிறந்த வழக்கு இலக்கணமெனத் தழீஇக்கொள்வதென்க. இந்நூல் இலக்

கணர்தினை இவ்வோத்தின் இறுதிக்கண் வைத்தான் வழக்குஞ் செ
ய்யுளுமென்று விதந்து புகுந்த இரண்டிலக்கணமும் முடித்தல்லது
அவற்றைக் கூறும் இலக்கணங் கூறலாகாமையினென்பது. இக்கருத்
தறியாதார் செய்யுளியலினை ஒன்பதாம் ஓத்தென்ப. அல்லதூஉம் இந்
நூலிலக்கணம் வழக்கிற்குஞ் செய்யுட்குமேயன்றி அங்ஙனமாகாப் பொ
ருண்மேவும் படலம் முதலாயவற்றிற்கு இலக்கணஞ்செய்யுங்காலும்
நியாயஞ்செய்யினுந் தமிழ்நூலதற்கிலக்கணம் எவ்வாற்றானும் இதுவே
யென்றற்கும் ஈண்டுக் கூறினானென்பது. எனவே, பிறபாடைநூ
ல்களாயின் இம்மரபு வேண்டுவதன்றாயிற்று. மற்று முதனூலினை
இன்னதென்பது துணிந்து உணராரோவெனின் அதுவன்றே இனி
க்கூறுகின்றதென்பது. (௯௩)

௯௫o. வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

மேல் ஒன்றற்கு முதனூலாகியும் ஒன்றற்கு வழிநூலாகியும்
வந்து தடுமாறுமென்றான், இனி அவ்வாறன்றி ஒன்றே முதனூலா
கவுஞ் சிறுபான்மை உண்டென்கின்றது. (இ - ள்.) செய்வினையி
ன் பயன் துவ்வாது மெய்யுணர்வுடையனாகிய முன்னோனாற் செய்யப்
பட்டதே ஒருதலையாக முதனூலாவது. எ - று. எனவே, மேலை
ச்சூத்திரத்து முதனூலும் வழிநூலுமெனப்பட்டன முதனூலும் இனை
யும் போலத் தடுமாறுமென்பதூஉம் இதுவாயிற் றடுமாறாது என்று
ன்றும் முதனூலாமென்பதூஉம் பெற்றாம்.

வினையென்பன இருவினை. இன் நீக்கத்துக்கண்வந்தது. வி
ளங்கிய அறிவென்பது முழுதும் உணரும் உணர்ச்சி. அறிவினென நி
ன்ற இன் சாரியை. இன்ன அறிவினோடு கூடிய முனைவன் அறிவின்
முனைவனெனப்படும். முன்னோனை முனைவனென்பது ஓர்சொல்வி
ழுக்காடாம். முன்னென்பதனை முனையென்பவாகலின்.

மற்று வினையினென்ற வேற்றுமை நிற்பதன் நிலையும் நீங்கு
வதன் நீக்கமுங் கூறுமாகலின் ஒருகாலத்து வினையின்கணின்று ஒ
ருகாலத்து நீங்கினான்போலக் கூறியதென்னையெனின், அற்றன்
று; வினைப்பயன் தொடரப்பாற்றுள்ளம் இலனென்பதன்றி அவர்
க்குச் சில செய்கையுளவென்பது பல்லோர்க்கும் உடம்பாடாகலி
ன், அவ்வினைக்கணின்றே, போகமும் பாவமும் மெய்யுணர்வுபற்றித்
தெறப்பட்ட வித்துப்போலப், பிறப்பில்பெற்றியனாகி நீங்குமாகலின்
அவ்வாறுகூறல் அமையுமென்பது. என்னை? குற்றங் கெடுத்து மு

ற்ற உணர்ந்தோருங் கெடுப்பதோர் குற்றமின்றி முழுதுணர்ந்தோரு ம் எல்லாம் பிறர்க்குறுதியாகிய ஆகமஞ்செய்யினுந் துறக்கம் முத லாகிய பயன்றரப்பாரல்லராகலின். இனி முனைவனாற் செய்யப்படு வதோர் நூலில்லையென்பார் அவன்வழித் தோன்றிய நல்லுணர்வுடை யார் அவன்பாற் பொருள்கேட்டு முதனூல்செய்தாரெனவும், அம்மு னைவன் முன்னர் ஆகமத்துப் பிறந்ததோர் மொழியைப்பற்றி அனை த்துப்பொருளுங்கண்டு பின்னர் அவற்றவற்றுக்கு நூல்செய்தார் அ வரெனவும், அவ்வாகமத்தினையே பிற்காலத்தாரும் ஒழுக்கம் வேறுப டுந்தோறும் வேறுபடுத்து வழிநூலுஞ் சார்புநூலுமெனப் பலவுஞ் செய்தாரெனவுங் கூறுப. அவை எவ்வாற்றானும் முற்ற உணர்ந்தோ ர் செய்த நூலன்மையின் அவைதேறப்படா. அல்லதூஉம் அவை தமிழ்நூலன்மையின் ஈண்டு ஆராய்ச்சியிலவென்பது.

மற்று மேலைச்சூத்திரத்து நுதலிய நெறியானே முதலும் வழி யுமாமெனவே, எல்லார்க்கும் முதல்வனாயினான் செய்தது முதனூ லேயாமென்பது பெறுதுமாகலின் ஈண்டு இச்சூத்திரங் கூறியதென் னையெனின், தாமே தலைவராவாரும் அத்தலைவரை வழிப்பட்டுத் த லைவராயினாரும் பலராகலிற் தாமே தலைவராயினார் நூல் செய்யின் முதனூலாவதெனின், அற்றன்று; தாமேதலைவராயினார் முற்கால த்துத் தமிழ்நூல் செய்திலராகலிற் தலைவர்வழிநின்று தலைவனாகிய அகத்தியனாற் செய்யப்பட்டதும் முதனூலென்பது அறிவித்தற்கும், பிற்காலத்துப் பெருமானடிகள் களவியல்செய்தாங்குச் செய்யினும் பிற்காலத்தானும் முதனூலாவதென்பது அறிவித்தற்கும், அங்ஙன ம் வினையினீங்கி விளங்கிய அறிவினான் முதனூல்செய்தானென் பது அறிவித்தற்கும் இதுகூறினானென்பது. எனவே, அகத்தியமே முதற்காலத்து முதனூலென்பதூஉம் அதன்வழித்தாகிய தொல்கா ப்பியம் அதன் வழிநூலென்பதூஉம் பெறாும்.

என்றார்க்கு முந்துநூலெனப்பட்டன முற்காலத்து வீழ்ந்த னவெனக்கூறித் தொல்காப்பியர் அகத்தியத்தோடு பிறழவும் அவ ற்றுவழிநூல்செய்தாரென்றக்கால் இழுக்கென்னையெனின், அது வே தவழக்கோடு மாறுகொள்வார் இக்காலத்துச் சொல்லினும் இறந்தகா லத்துப் பிறபாசாண்டிகளும் மூன்றுவகைச் சங்கத்து நான்குவருணத் தொடு பட்டசான்றோரும் அதுகூறாரென்பது. என்னை? கடைச்சங்க த்தாருட் களவியற்பொருள்கண்ட கணக்காயனார்மகனார் நக்கீரர் "இ டைச்சங்கத்தார்க்குங் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்கா ப்பியம்" என்றாராகலானும், பிற்காலத்தார்க்கு உரையெழுதினோரு

ம் அதுகூறிக் கரிபோக்கினாராகலானும், அவர் புலவுத்துறந்த நோன்புடையாராகலாற் பொய்கூறாராகலானுமென்பது. இங்ஙனங் கூறுக்கால் இதுவும் மரபுவழுவென்று அஞ்சி அகத்தியர்வழித்தோன்றிய ஆசிரியரெல்லாருள்ளுந் தொல்காப்பியனாரே தலைவரென்பது எல்லா ஆசிரியருங் கூறுமென்பது. எங்ஙனமோவெனின், "கூறிய குன்றினு முதனூல் கூட்டித் - தோமின் றுணர்ந்த தொல்காப் பியன்றன் - னாணையிற் றமிழறி ந்தோர்க்குக் கடனே." இது பல்காப்பியப் புறனடைச் சூத்திரம். "வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்-தாங்கா நல்லிசைத் தமிழக்கு விளக் காகென - வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புக - ழானாப் பெருமை யகத்திய னென்னு - மருந்தவ முனிவ னாக்கிய முதனூல் - பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர் - நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்" என்பதனால் அகத்தியர் செய்த அகத்தியத்தினை முதனூலென்பதும் அவர் வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ் ஆனாப்பெருமையுடையாரெனவும் அவராற்செய்யப்பட்ட முதனூல் பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோருட் தலைவராயினார் தொல்காப்பியனாரெனவும் பன்னிருபடலத்துப் புனைந்துரைவகையாற் பாயிரச்சூத்திரத்துள் உரைக்கப்பட்டது. இனிப், பன்னிருபடலம்முதனூலாக வழிநூல்செய்த வெண்பாமாலை ஐயனாரிதனாரும் இதுகூறினார். என்னை? "மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்-தென்மலை யிருந்த சீரசால் முனிவரன் - றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த - துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற் - பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த" எனப் பாயிரஞ் செய்தற்கு உடம்பட்டமையினென்பது.

இவற்றானெல்லாம் அகத்தியமே முற்காலத்து முதனூலென்பதூஉந் தொல்காப்பியம் அதன்வழிநூலென்பதூஉம் அதுதானும் பனம்பாரனார் "வடவேங்கடந் தென்குமரி" எனக் குமரியாற்றினை எல்லையாக்க கூறிப் பாயிரஞ்செய்தமையிற் சகரர் வேள்விக்குதிரை நாடித்தொட்ட கடலகத்துப் பட்டுக் குமரியாறும் பனைநாட்டோடு கெடுவதற்கு முன்னையதென்பதூஉம் அவ்வழக்குநூல் ஈண்டுப் பற்றியல்லது மூன்றுவகைச் சங்கத்தாருஞ் செய்யுட்செய்திலரென்பதூஉம் ஆசிரியரும் அவர்போல்வாரும் அவர்வழி ஆசிரியருஞ் செய்யுள்செய்த சான்றோருஞ் சொல்லாதன சொல்லப்படாவென்பதூஉம் அவருடம்படாதன சொல் உளவென்று எதிர்நூலென ஒருவன் பிற்காலத்து நூல்செய்யுமாயிற் தமிழ்வழக்கமாகிய மரபினோடுந் தமிழ்நூலோடும் மாறுபட நூல்செய்தானாகுமென்பதூஉம் இனித் தமிழ்நூலுள்ளுந் தமது மதத்துகேற்பன முதனூல் உளவென்று இக்காலத்துச் செய்

துகாட்டினும் அவை முற்காலத்து இலவென்பது முற்கூறியவந்த வகையான் அறியப்படுமென்பதூஉம் பாட்டுந் தொகையும் அல்லாதன சிலகாட்டிக்கொண்டு மற்று அவையுஞ் சான்றோர்செய்யுளாயின வழூவில் வழக்கமென்பார் உளராயின் இக்காலத்துள்ளும் ஒருசாரார்க் கல்லது அவர்சான்றோரெனப்படாரென்பதூஉம் இங்ஙனங் கட்டளை செய்யவே காலந்தோறும் வேறுபடவருவ வழிவழக்கும் இழிசினர் வழக்கும் முதலாயினவற்றுக்கெல்லாம் நூல்செய்யின் இலக்கணமெல்லாம் எல்லைப்படாது இகந்தோடுமென்பதூஉம் இறந்தகாலத்து நூலெல்லாம் பிறந்த பிறந்த வழக்குப்பற்றிக குன்றக்கூறலென்னுங் குற்றந்தங்குமென்பதூஉம் ஒன்றாகப் புறனடுத்தது ஒருசூத்திரஞ்செய்தது போத அமையினன்றி ஒழிந்த சூத்திரங்களெல்லாம் மிகையாமென்பதூஉமெல்லாம் புறமென்பது. (௬௪)

சூ௬௫. வழியெனப் படுவ ததன்வழித் தாகும.

இது வழிநூலாமாறுணர்த்துகின்றது. (இ-ள்.) நுதலியறியானன்றி வழிநூலென்றற்குச சிறப்புடையது அம்முதனூல்வழிப் பிறந்த வழிநூல். எ-று. அது தொல்காப்பியம். மற்றுப் பல் காப்பியம் முதலியனவோவெனின், அவை வழிநூலே, தொல்காப்பியத்தின்வழித் தோன்றினவென்பது. என்னை? "கூறிய குன்றினு முதனூல் கூட்டித் - தோமின் றுணர்ந் தொல்காப் பியன்ற - னாணையின் றமிழறிந் தோர்க்குக் கடனே" என்பவாகலானும் இவ்வாசிரியர்பல்காப்பியர் பல்காயனார்முதலாயினோரை அவ்வாறு கூறாராக லானுமென்பது. என்றார்க்குத், தொல்காப்பியங் கிடப்பப் பல்காப்பியனார் முதலியோர் நூல்செய்ததெற்றுக்கெனின், அவரும் 'அவர் செய்த எழுத்துஞ் சொல்லும் பொருளுமெல்லாஞ் செய்திலர், செய்யுளிலக்கணம் அசத்தியத்துப் பரந்துகிடந்ததனை இவ்வாசிரியர் சுருங்கச்செய்தலின் அருமைநோக்கிப் பகுத்துக்கூறினாராகலானும் அவர் தந்திரத்துக்கேற்ப முதனூலோடுபொருந்த நூல்செய்தாராகலானும் அமையுமென்பது. பிற்காலத்துக் காக்கைபாடினியாருந் தொல்காப்பியரோடு பொருந்தவே நூல்செய்தாரென்பது. மற்று "வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத் -தென்றிசை யுள்ளிட் டெஞ்சியமூன்றும் - வரைமருள் புணரியோடு கரைபொருது கிடந்த - நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண் - யாப்பின திலக்கண மறைகுவன் முறையே." எனத் தெற்குக் குமரியன்றிக் கடலெல்லையாகியகாலத்துச் சிறுகாக்கைபாடினியார் செய்தநூலினையும் அதன் வழிநூலென்றுமோவெனின், ஈண்டுக்கூறிய பொருளெல்லாந் தழுவுமாற்றாற்

செய்தது ஆராயின் அது வழிநூலாதற்கு இழுக்கென்னையென்க. இனிச் சில குன்றக்கூறினர் தொகுத்து நூல்செய்தாராகலினென் பாரும் உளர். ஒழிபொருளவாயினது தொகையெனப்படாமையின் அங்ஙனங் கூறுதல் வழிநூலிலக்கணமன்றென்பது. (கரு)

கூருஉ. வழியி னெறியே நால்வகைத் தாகும்.

இது வழிநூல் இனைத்துவகைத்தென்கின்றது. (இ-ள்.) மேல் வழிநூலெனப்பட்டது நான்குவகையாற் செய்யப்படும். எ-று. இதன்பயன் ஒருநூலுள் ஒன்றல்லது பல வாராவெனவும் ஆகலானே நான்குவகைய வழிநூலெனவும் முதனூலாயின் ஒன்றேயா மெனவுங் கூறியவாறாயிற்று. அவையாவன மேற்கூறுப (கசு)

கூருக. தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலொ டனைமர பினவே.

இந்நான்கு வகையுங் காரணமாகச் மேற்கூறிய நால்வகை வழி நூலும் பெறலாம். எ-று. தொகுத்தலென்பது முதனூல் விரிந்த தனைச் செல்வாழ்நாட் சிற்றறிவின் மாக்கட்கு அறியத் தொகுத்துக் கூறல். விரித்தலென்பது முதனூலிற் றொகுத்துச் கூறப்பட்டு விளங் காது நின்றதனை விளங்குமாற்றான் விரித்துக் கூறல். தொகைவிரியெ ன்பது அவ்விருவாறும்பற்றித் தொகுத்து முன்னின்றதனை அந்நிறுத்த முறையானே பின்விரித்துக் கூறுதல். மொழிபெயர்த்தென்பது பிற பாடையாற் செய்யப்பட்ட பொருளைத் தமிழ்நூலாகச் செய்வது. அதுவுந் தமிழ்நூல் உள்வழி யாற்கு மாபாயமன்றவாறு. அதர்ப்பட வென்பது நெறிப்படவென்றவாறு. நெறிப்படுதலென்பது அவ்வா று மொழிபெயர்த்துச் செய்யுங்கால் அது கிடந்தவாற்றானே செய் யப்படும். தொகுத்தும் விரித்துந் தொகைவிரியாகவுஞ் செய்ததனாற் பயமில்லைத் தமிழர்க்கும் ஆரியர்க்குமென்பது. மொழிபெயர்த்தென வே, பொருள்பிறழாமை பெற்றும். வழக்குநூலுள்ளும் மொழிபெய ர்த்து யாக்கப்படுவன உளவோவெனின், அற்றன்று, அது வே ண்டுமே? வேதப்பொருண்மையும் ஆகமப்பொருண்மையும் நியாய நூற்பொருண்மையும் பற்றித் தமிழ்ப்படுக்குங்கால் அவற்றிற்கும் இது வே இலக்கணமென்றற்கு மொழிபெயர்த்தலையும் இவற்றுக்கட் கூ றினானென்பது. இனிப், படர்ந்துபட்ட பொருண்மையவாகிய மாபு ராணம் பூதபுராணமென்பன செல்வாழ்நாட் சிற்றறிவின் மாக்கட்கு உபகாரப்படாமையிற் றொகுத்துச் செய்யப்பட்டு வழக்குநூலாகிய தொல்காப்பியம் இடைச்சங்கம் முதலாக இன்றுகாறும் உளதாயிற் றெனக்கொள்க. (கஎ)

௬௫௪. ஒத்த சூத்திர முரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
யீரைங் குற்றமு மின்றி நேரிதின்
முப்பத் திருவகை யுத்தியொடு புணரி
னூலென மொழிப நுணங்குமொழிப புலவர்.

இஃது எல்லாநூற்கும் ஆவதோர் இலக்கணமுணர - ற்று.
(இ - ள்.) ஒத்த சூத்திரத்தினை உரைநடாத்தல்வேண்டினவழிப் பிறந்த காண்டிகையும் அக்காண்டிகையானும் விளங்காத காலத்து அதனையும் விளங்கக்கூறும் உரைவிகற்பத்துமாகிப் பத்துவகைக் குற்றமுமின்றி நுண்பொருளவாகிய முப்பத்திருவகை உத்தியொடு பொருந்திவரின் அதனை நூலென்றுசொல்லுப நுணணிதின் உணாரது ணாக்கும் புலவர். எ - று. ஒத்தசூத்திரமென்றதனான் நூலின்வேறாகிய இருவகைப் பாயிரமுஞ் சூத்திரத்தோடு ஒத்த இலக்கணத்தவென்பது கொள்க உரைப்பினென்றதனான் "உணணின் றகன்ற உரையொடு பொருந்தி" வருதலே நூலிலக்கணமெனச்செய்யுளியலுட் கூறிப்போந்தாம்; அங்ஙனம் வேறாகிப் பொருந்திவாருமெனப்பட்ட உரையின்றிச் சூத்திரத்தானே பொருள் நிகழ்ந்த காலமும் உண்டென்பதாம். இதனதுபயம், உரையுங் காண்டிகையுமின்றிச சூத்திரத்தானே சொற்படுபொருள் உரைத்தலுமுண்டு, அஃது அவற்றையொழிய ஆகா இக்காலத்தென்றலாயிற்று.

உரைப்பினென்னும் வினையெச்சங் கிளத்தலென்பதனேடு முடியும். வகையென்றதனன் உரையெனப்பட்டது தானும் அக்காண்டிகையினை மெய்ப்படக்கிளந்ததேயாகலின் அவ்விரண்டுஞ் செய்யுளியலுட் கூறிவந்த உரைவிகற்பமேயென்பதுணர்த்தியவாறு. அஃதேற் காண்டிகையென்றாற்போல இதற்குப்பெயர் வேறுகூறுதேவெனின் வேண்டியார் வேண்டியவாறு "மறுதலைக்கடா மாற்றமும்" எல்லையின்றி இந்தவருவனவெல்லாம் உரையுள் எழுதப்பட்டாமையின் அதுவுங் காண்டிகைப்பகுதியேயென்பது அறிவித்தற்கு வேறு பெயர் கூறாது மெய்ப்படக் கிளந்த வகையென்றேபோயினனென்பது. மற்று இல்லதற்கும் இலக்கணஞ்சொல்லுவார்போல ஈரைங்குற்றமுமின்றியென்றதென்னையெனின் அவற்றை எதிர்மறுத்துக்கொள்ளும் பத்துவகைக் குணமுங் கோடற்குத் தந்துகூறினனென்பது. அவை "எதிர்மறுத் துணரின் றிறத்தவு மவையே" என்புழிச் சொல்லுதும். அல்லாதூஉம் இவைகூறியவதனனே பிறிதொருபொருள் கொள்ளப்படும் இடங்களும் உள, அவைநோக்கி அங்ஙனங்கொண்

ளாதனவுந் தொகுத்து உடன்கூறினனென்பது. அவையும் அவற்றுவிரிசூத்திரத்துட் கூறுதும். ஈரைங்குற்றமுமென்ற உம்மையை எச்சப்படுத்துப் பிறவுங் குற்றம் உளவென்பதுங் கொள்க. அவை முதனூலோடுமாறுகோடலும் யாப்பினுட்சிதைதலும் போல்வன. அவை முன்னர்ச்சொல்லுதும். நேரிதினென்றதனான் முதல்வன் செய்த நூலாயினும் வழிநூலாயினும் அவ்வழிநூலின் முடியநூலுந் தெரிந்துணரும் நுண்ணுணர்வினோர்க்கே முப்பத்திருவகை உத்தியும் புலனாமென்பதனைச்சொல்க. அவையும் முன்னர்ச்சொல்லுதும். வகையதாகியென்பது புணரியென்பதனோடு முடிந்தது. புணரியென்பது மொழிபவென்பதனோடு முடிந்தது.

ஒத்தசூத்திரத்தினை உரைகோடாத்தல்வேண்டிக் காண்டிகைப் பொருளினை விளங்கச்சொல்லும் உரைவிகற்பத்ததாகியெனவே சூத்திரமுங் காண்டிகையும் உரையுமென மூன்றும் அவற்றொடு குற்றமின்மையும் உத்திவகையுங் கூட்ட நூலிலக்கணம் ஐந்தாயின. இதனது பயம், இவற்றது விரிசூத்திரங்களான் உய்த்துணரவால் எடுத்தோதித் தொகுத்துக்காட்டலாயிற்று. மற்றுக் குற்றத்தினை இடைவைத்து உத்திவகையினை ஈற்றுக்கண்வைத்ததென்னையெனின், ஈரைங் குற்றமுமின்றி வரும் இலக்கணம் முதனூற்கண் இல்லையென்பது "முதல்வன்கண்" என்புழிச்சொல்லுமாகலின், அவைபோல முதனூற்கண் உத்திவகையும் வாரா, சிறுவரவினவென்றற்கென்பது.

இனி, ஒத்தவென்றதனாற் பொதுப்பாயிரமுஞ் சிறப்புப்பாயிரமுஞ் சூத்திரமுந் தம்மின்வேறென்றலும் அவ்விருவகைப்பாயிரவுரையுஞ் சூத்திரவுரையும் வேறெழுதப்படுமென்றலுஞ் சூத்திரவுரையுட் பாயிரவுரை மயங்கிவருவன உளவென்றலும் அவ்விருவகையுரைக்கும் வேறாயினும் அவ்வுரைசெய்தான்பெயர் கூறுதன் முதலாகிய பாயிரவுரை கூற அமையுமென்றலுஞ் சூத்திரந்தானே பாயிரமில்லாதவழிப் பாயிரம்போல நான்முகத்தது நிற்குமென்றலும் அங்ஙனம் நின்றவழிப் பொதுப்பாயிரமுஞ் சிறப்புப்பாயிரமும் உரைவகைத்தாற்பெய்துரைத்தலும் அவ்விருவகைப்பாயிரமுஞ் செய்தார் இன்றொன்றலுமென்று இன்னோரன்ன கோடலாயிற்று. இவையெல்லாஞ் சூத்திரத்தோடு ஒத்த இலக்கணமேயாதலின் ஒத்தவென்னும் மாட்டேற்றானடங்கின.

அவை வருமாறு, "வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்" என்னும் பொதுப்பாயிரமும் "வடவேங்கடந் தென்குமரி" என்னுஞ் சிறப்புப்பாயிரமும் ஒழிந்த சூத்திரங்கள்போல நூற்பாவகவலாகி நூலி

ன்வேறாகி இன்றியமையாவாயின. அவற்றிற்குச் சூத்திரவுரையோடு மயங்காமல் வேறுரையும் ஆண்டெழுதப்பட்டன. "எழுத்தெனப்படுப" என்னுஞ் சூத்திரத்தினை நிறீஇ என்பதுசூத்திரமெனவும் இவ்வதிகாரம் என்னபெயர்த்தோவெனவும் இவ்வதிகாரம் யாதனை நுதலியதெனவும் அவற்றிற்கு விடைகூறலும் இவ்வதிகாரம் எனைப்பகுதியான் உணர்த்தினனெனவுங் கூறி ஒழிந்த ஒத்திற்கும் இவ்வாறே சூத்திரவுரையோடு பாயிரவுரை மயங்கச் சொல்லியவாறும் அவற்றவற்றுட் கண்டுகொள்க. இனி, இவ்வுரைசெய்தார் யாரோவென்ற வழி மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனென உரையெழுதினான் பெயர் கூறுதலுஞ் சூத்திரஞ்செய்தான்பெயர் கூறுதலோடு ஒத்தஇலக்கணத்ததாயிற்று. "அன்பி னைந்திணைக் களவெனப் படுவ- தந்தண ரருமறை மன்ற லெட்டனுட் - கந்தருவ வழக்க மென்மனார் புலவர்" என்பது பாயிரமின்றித் தானே நூன்முகத்துநின்று இருவகைப் பாயிரவுரையும் பெய்து உரைக்கப்பட்டது. "வடவேங்கடந்தென்குமரி" என்னுஞ் சிறப்புப்பாயிரஞ்செய்தார் பனம்பாரனாரெனவும் "வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்" என்னும் பொதுப்பாயிரஞ்செய்தான் ஆத்திரையன்பெயராசிரியனெனவும் பாயிரஞ்செய்தான்பெயர் கூறியவாறு. என்பதுபாயிரம் என்றுதலிற்றேவெனப் பாயிரவுரைக்கு முகவுரைவந்தவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன. (கூஅ)

கூ௫௫. உரையெடுத் ததன்முன் யாப்பினுஞ் சூத்திரம்
புரைதப வுடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விடுத்தலும் விலக்கலு முடையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் படுமே.

இஃது ஐயம் அறுத்தனுதலிற்று; என்னை? மேற்கூறிய சூத்திரம் உரைபெறுங்காற் காண்டிகையும் உரையும் வேறுவேறு பிறக்கக்கண்ட மாணாக்கன் ஒழிந்தனவும் ஒன்றொன்றனை ஒழித்துவருங் கொலென்று ஐயுற்றாற்குக் காண்டிகையும் உரையுமே சண்டாய் ஒன்று ஒன்றனை ஒழிந்துவருவனவென்று ஐயம் அறுத்தமையின். மேலதற்கே புறனடையெனவும் அமையும். (இ - ள்.) உரையெடுத்து அதன்முன் யாப்பினும் = காண்டிகையினை விளக்குங்கருத்தினானும் அக்கருத்தின்றியும் அசசூத்திரத்திற்கு உரைதொடர்ந்தெழுதினும்; சூத்திரத்தினை அதுவென்று சுட்டினான் "முற்படக் கிளத்தல் செய்யுளு ளுரித்து" என்பதனானெனவுணர்க.

சூத்திரம் புரை தப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும் = அச்சூத்திரத்திற்கு இடையின்றிக் காண்டிகை பொருந்தச்செய்யினும்;

